

ஒட்டக்கூத்தர் இயற்றிய

# உத்தரகாண்டம்

இரண்டாம் பகுதி

உரையாசிரியர்

செ. வேங்கடராமச் செட்டியார்




அண்ணாமலைப் பல்கலைக் க

# இராமாயணம்

ஒட்டக்கூத்தர் இயற்றிய

# உத்தர காண்டம்

(இரண்டாம் பகுதி)

உரையாசிரியர்
வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார்



அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
1986

# பொருளடக்கம்

—o—

# முதற்பகுதியின் பொருளடக்கம்

—o—

# முன்னுரை

நல்லோரைக் காக்கவும் அல்லோரை யொறுக்கவும் திருமால் புரிந்த அவதாரங்களுள் இராமாவதாரமும் கண்ணனவதாரமும் பூரண அவதாரங்களாக அடியார்களால் போற்றிப் புகழப்பெறும். அவற்றுள் இராமாவதாரத்துள் காணலாகும் சிறப்புறு செயல்களைச் செப்புவதே இராமாயணமாகும். அது, பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம், உத்தரகாண்டம் எனும் ஏழு காண்டங்களை யுடையது. முதல் ஆறு காண்டங்களைக் கம்ப நாட்டாழ்வாரும், ஏழாவதாகிய உத்தரகாண்டத்தினை ஒட்டக்கூத்தரும் பாடியுள்ளனர் என்பர்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வெளியிடப் பெறும் செப்பதிப்பு வரிசையில் இறுதியதாகிய ஏழாவது காண்டத்தின்-உத்தர காண்டத்தின் - முதற் பகுதி வரையில் முன்பு வெளி வந்துள்ளமை தமிழ்நாடு நன்கறியும். இப்போது உத்தர காண்டத்தின் இரண்டாம் பகுதியாகிய இறுதிப் பகுதி வெளி வருகிறது. இப்பகுதியுள் பன்னிரண்டாம் படலமாகிய 'சீதை வனம்புகு படலம்' தொடங்கிப் பதினேழாம்படலமாகிய 'சந்திர கேது நகர்ப்படலம்' முடியவுள்ள ஆறு படலங்களைப் பாட பேதங்களுடனும் சிறந்த உரையுடனும் குறிப்பு விளக்கங்களுடனும் காணலாம். இப்பகுதி வெளிவருவது காரணமாகத் தமிழில் அமைந்த இராமாயணம் முழுமையும் இப்பதிப்பமைப்பில் நிறைவு பெறுகின்றது; இவ்வாற்றான் தன் மகிழ்ச்சியினைத் தமிழ் நலம் பேணும் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தமிழ்ப் பெருமக்களுக்குப் புலப்படுத்திக் கொள்கிறது.

முன் வந்துள்ள இராமாயணப் பகுதிகள் போலவே இப்பகுதியும் உரைச்சிறப்பும் பதிப்புநேர்த்தியும் கொண்டுள்ளது. பல்கலைக்கழக மானியக் குழுவின் உதவியுடன் உத்தரகாண்டம் முழுமைக்கும் உரை வரைந்தவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை விரிவுரையாளராகப் பணியாற்றிய வித்துவான் திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்கள் ஆவர்; அவர்கள்

நல்ல உரைச்சித்தர். முன்பும் இராமாயணத்தின் சில பகுதி களுக்குச் சிறந்த உரை வரைந்த அநுபவங் கொண்டவர். உத்தர காண்டத்தைப் பொறுத்தவரையில் அதன் முதல் உரை யாசிரியராக விளங்கும் திரு. வேங்கடராமச் செட்டியார் அவர் களுக்குத் தமிழ் கூறும் நல்லுலகத்தின் நன்றி உரியது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் பைந்தமிழ் நலம் பேணும் சிறப்புறு கல்வித் திருக் கோயிலாகும். தமிழ்நாட்டின் நல் வாழ்வும் முன்னேற்றமும் தம் செம்மனத்தகத்தே கொண்டு செட்டிநாட்டரசர் பெருங்கொடைவள்ளல் டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் நிறுவிய அண்ணாமலைப் பல்கலைக்கழகம் ஆல்போல் தழைத்தோங்கி நிற்கிறது; இவ்வாறு தொடர்ந்து ஓங்கி யொளிரக் காரணராக விளங்கியவர்கள் அவர்களுக்குப்பின் இணைவேந்தராக அமைந்த செட்டி நாட்டரசர் டாக்டர் ராஜா சர் முத்தையவேள் ஆவார்கள். பல்கலைக்கழக வளர்ச்சிக்கு உறுதுணையாக விளங்கிய அவர்களுக்குப்பின், அவர்கள்தம் மைந்தர் மேதகு டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்கள் பல்கலைக்கழக நிறுவனர்-இணைவேந்தராகப் பொறுப் பேற்றுப் பல்கலைக்கழக முன்னேற்றத்தில், சிறப்பாகத் தமிழ்த் துறை முன்னேற்றத்தில் கண்ணும் கருத்துமாக இருந்து வருகிறார்கள். இவர்களுக்கெல்லாம் கல்வியுலகம் கடமைப் பட்டுள்ளது; சிறப்பாகத் தமிழ்ப் பெருமக்கள் பெரிதும் கடமைப் பட்டுள்ளனர்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக அமைந்து அதன் நல்வளர்ச்சியில் உண்மைநாட்டங் கொண்டுள்ள பேராசிரியர் உயர்திரு சை. வே. சிட்டிபாபு அவர்களுக்கு மிகவும் நன்றியுடையோம்.

பல்கலைக் கழக மானியக்குழுவும் தமிழ்நாடு அரசும் இந்த இராமாயணப் பதிப்பிற்கு நிதியுதவி தந்துள்ளன. இந்நிதி யுதவிக்குப் பல்கலைக் கழகத்தின் நன்றி உரியது.

வழக்கம் போலவே இந்த அருமையான நூலினையும் தமிழ் நாடு வரவேற்றுப் போற்றுமாக.

**டாக்டர் ஆறு. அழகப்பன்**
**தமிழ்த்துறைத் தலைவர்**

# உத்தர காண்டத்தின் தனித்தன்மை

அமிழ்தினும் இனிய தமிழ்மொழியில் சிறப்பாகப் புகழப் படும் பெருங்காப்பியம் இராமாயணம் ஆகும். இராமாயணத்தை இயற்றியருளிய பெரும் புலவர் கம்பர் என்ற கவிச்சக்கரவர்த்தி யாவர். கம்பர் தம் இராமாயணத்தைப் பால காண்டம் முதல் யுத்தகாண்டம் ஈருகவுள்ள ஆறு காண்டங்களில் நிறைவு செய்திருக்கின்றார். யுத்தகாண்டத்தின் இறுதியில் விடை கொடுத்த படலம் என்ற படலம் உள்ளது. அதில் சுக்கிரீவன் அனுமன் வீடணன் முதலியோர்க்குப் பரிசில்கள் கொடுத்து இராமன் விடை கொடுத்து அனுப்பிய செய்தி கூறப்பட்டுள்ளது.

'பரதனை யிளைய கோவைச் சத்துருக்கனனைப் பண்டை
விரதமா தவனைத் தாயர் மூவரை மிதிலைப் பொன்னை
வரதனை வலங்கொண்டேத்தி வணங்கினர் விடையுங்
கொண்டே
சரதமா நெறியும் வல்லோர் தத்தம பதியைச் சார்ந்
தார்'.

என்ற பாடலில் அனுமன் முதலிய அனைவரும் இராமன் முதலியோரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு தத்தம் ஊரை அடைந்த செய்தியைக் காணலாம். அவர்கள் எல்லாம் விடை பெற்றுச் சென்ற பின்னர் இராமன், தன் தம்பிமாரோடு உலக முழுவதும் மனுநெறி முறையால் செங்கோல் செலுத்திச் சீதேவியும் பூதேவியும் வருந்தாமல் மகிழக் காப்பாற்றினான் என்று இராமன் அரசு செய்ததையும் விளக்கி இராமாயணத்தை நிறைவு செய்து விட்டார் கம்பர். உத்தரகாண்டம் அவரால் பாடப்படவில்லை. எனவே கம்பராமாயணம் என்பது ஆறு காண்டங்களோடு நிறைவு பெற்றது எனலாம். 'கதை செறி காண்டம் ஏழு' என்று தொடங்கும் பாடலில் பன்மை பற்றிய வழக்கால்' வரமிகு கம்பன் சொன்னதாகக் கூறப்பட்டுள்ளது' அவ்வளவே.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த கம்பரால் பாடப் படாமையால் உத்தரகாண்டம் தமிழில் மொழிபெயர்க்காமலே யிருந்தது. பின்பு பன்னிரண்டாம் நூற்றாண்டில் 1163 வரையில் வாழ்ந்திருந்த ஒட்டக் கூத்தர் என்ற உயர்புலவர், தமிழ்ப்புலமை நிரம்பப் பெற்றுப் பெரு நூல் செய்யும் ஆர்வத்தினராய்க் கம்பரால் விடப்பட்ட உத்தர காண்டத்தை வான்மீகியின் நூலின்படி மொழிப் பெயர்த்து இயற்றினார். கலைமகளின் பேரருள் ஒட்டக் கூத்தர்க்கு வாய்த்தமையால் அவர் உத்தர காண்டத்தை நன்கு பாடி முடித்தார். இவர்க்கு வாணிதாசன் என்ற பெயரும் சோழ மண்டல சதகத்தில் சொல்லப்படுகின்றது. அவர் இயற்றிய உத்தரகாண்டத்தின் சிறப்பே அவரைச் சோழன் அவைக்களப் புலவர் ஆக்கியது என்னலாம். தக்கயாகப்பரணியும் மூவருலாவும் பிறவும் அவரால் பின்பு பாடப்பட்டவையேயாம் என்பது ஆராய்ச்சியாளர்தம் கருத்தாகும்.

உத்தரகாண்டத்தின் தொடக்கத்தில் உள்ள பாடல்களை நோக்கினால் அவை புலமைத் தொடக்கத்தில் பாடப்பட்டவை என்பது புலனாகும். பொருட்செறிவும் சொல்லழகும் இனிய நடையும் இன்றிச் சாதாரண நடையில் அமைந்துள்ளன. பாடிப் பாடிப் பழகிய நிலையில் பின்பு செய்த பாடல்கள் இனிய சொல் லழகும் நடையழகும் பொருட் செறிவும் உள்ளனவாகக் காணப் படுகின்றன.

உத்தரகாண்டம் ஒரு தனி நூல் என்று கருதுமாறு அதன் பாயிரம் அமைந்துள்ளது. மேலும் அனுமப்படலத்தில் சுக்கிரீவன் அங்கதன் அனுமன் வீடணன் முதலியோர்க்குப் பரிசில் கொடுத்து அவரவர் ஊர்கட்கு விடை கொடுத்தனுப்பிய செய்தி கூறப் பட்டுள்ளது. யுத்த காண்டத்தில் உள்ள விடை கொடுத்த படலத்தை நோக்கின் இது கூறியது கூறலாக அமைதல் தெளி வாகும். எனவே, இராமாயணத்தின் முதல் ஆறு காண்டங் களிலும் உத்தரகாண்டம் வேறுபட்ட தனித்தன்மையுடையது என்பது தெளிவு உத்தரகாண்டத்தில் சொல்லப்படும் நிகழ்ச்சி கள் முந்தைய ஆறு காண்டத்துச் சொல்லப்பட்டுள்ள நிகழ்ச்சி களுக்கு உரம் ஊட்டுவனவாக — பெருமை சேர்ப்பனவாக

உள்ளன எனலாம். இராமனது அரசாட்சியின் சிறப்பு பேசப் படுவது உத்தரகாண்டத்தில்தான். காதல் மனைவியினும் நாட்டு மக்களின் கருத்தே சிறந்தது என ஆட்சி செய்த இராமன் சிறப்பு உத்தரகாண்டத்தால்தான் நன்கு புலப்படுகிறது. ஏகதார விரதனாகிய இராமன் காமவெறி பிடித்த இராவணனைக் கொன்றது மிக்க பொருத்தமுடையதே என்பதை உத்தரகாண்டத்தைப் படிக்காதவர்கள் அவ்வளவாக நம்பமாட்டார்கள். உத்தர காண்டத்தில்தான் இராவணன் காமவெறியால் செய்த முறை யற்ற செயல்கள் பல விவரிக்கப் பெறுகின்றன.

**இராவணன் காமவெறியால் செய்தவை**

இராவணன் அருந்தவம் செய்து பெற்ற பெரு வரங்களால் செருக்குற்றுச் செய்யத்தகுவது அறியாது காமுகனாக மாறி விடுகின்றான். "எனைத்துணையராயினும் என்னாம் தினைத்துணையும், தேரான் பிறனில் புகல்" (திருக்குறள்- 114) என்ற குறளுக்கு பொருத்தமான எடுத்துக்காட்டு ஆகின்றான். தவத்தால் பெற்ற பெருமையெல்லாம் காமத்தால் இழக்கும் இழிநிலை இங்குத்-தெளிவாகின்றது.

திருமாலை நோக்கித் தவஞ்செய்து கொண்டிருக்கும் வேதவதி என்னும் தவமகள், தன் தந்தையின் விருப்பமும் தன் விருப்பமும் இதுவெனத் தெளிவுபடுத்திப் 'பாம்பணையில் துயிலும் பரமனை-என்னுயிரை என் துணையை - நாராயணனைக் கணவனாக வரித்தேன் யான்' என்று சொல்லவும் அவள் சொல்லைப் பொருட்படுத்தாது, இராவணன் தன் பெருமையைப் பெரிதும் புகழ்ந்து தன்னை மணக்குமாறு கேட்பதும் அந்தத் தவமகளின் மலரனைய கரத்தைப் பற்றுவதும் எவ்வளவு பெரிய கொடுஞ் செயல்கள்! திக்கு விசயத்திற்குப் புறப்பட்ட இராவணன் முதலில் பெற்றது வேதவதியின் சாபமேயாகும். "ஏடா! பிரமன் தந்த வரத்தின் செருக்கால் கூடாத சொற்களைச் சொல்லிக் கூசாது என்னைத் தீண்டினாய்; இனி உனக்கும் இலங்கைக்கும் உறவினர்க்-கும் கேடு உண்டாகத் தோன்றுவேன்" என்று சொல்லிவிட்டுத் தீயில் மூழ்கினாள். அவளே பின்பு சீதையாகப் பிறந்து இராமனை மணந்து கானகம் புகுந்து இலங்கையில் சிறையிருந்து இராவண-னும் இலங்கையும் அழியக் காரணமாகின்றாள்.

அதற்குப் பின் விண்ணுலகத்தை வெல்ல எண்ணிய இராவணன் அளகாபுரிக்கு அருகில் சேனையோடு தங்கியிருக்கும் போது பகலவன் மறைய நிறைமதியின் நிலவொளியில் அரம்பை தன் கொழுநன் நளகூபரனை நோக்கி அழகு செய்து கொண்டு போவதைப் பார்த்து விடுகின்றான். அவள் பேரழகினை இருபது கண்களால் பருகிக்கொண்டு 'யார் நீ?' என்கின்றான். அவள் தன் பெயரையும் தன் கணவன் பெயரையும் சொல்லிச் செல்லும் போது இராவணன் அவள் மேல் விழுந்து அணையப் புகுகின்றான். அப்போது அவள் நடுங்கிக் கொண்டு 'நெறியல்லாத செயலைச் செய்யாதீர்' என்று தொழுது, 'குபேரன் மகனாகிய நளகூபரன் முறையால் நின்மைந்தனே; ஆதலால் நீர் எனக்குக் குரு' என்று சொல்லியும் கேளாது அவளை வலியப் பற்றிப் போக விடத்தினைப் பருகுகின்றான். மெல்லியலாகிய அரம்பை யானையால் கலக்கப்பட்ட தாமரைத்தடம் போல உருச்சிதைந்து, அவனை வெறுத்து, 'இனி, இவ்வுலகில் மாதர் தம் சிந்தையுடன் பாடின்றி எவரைத் தீண்டினாலும் அவர் தம் கற்புக்கனலால் வெந்து வீழ்வாய்' எனச் சபித்து விட்டுத் தன் கணவனிடம் சென்று இதனைச் சொல்கின்றாள். நளகூபரன் வெகுண்டு, இனி, இராவணன் பிறன் மனைவியரைத் தீண்டினால் அவன் பொன் முடிகளோடு தலையெல்லாம் பொடியாகி வீழ்க' எனச் சபிக்கின்றான்.

வருணன் மைந்தரோடு போர் செய்து வெற்றி பெற்ற பின்னர் இலங்கைக்குச் செல்லும் வழியில் அந்தணர் கன்னியர் அசுர மகளிர், கந்திருவப் பெண்டிர் முதலிய பெண்டிரை இராவணன் காண்கின்றான். கண்ட அளவில் அவர்களைத் தனக்குரியவராக்க எண்ணி அவர்கள் பூனைவாய் அகப்பட்ட கிளி போலவும் புலிவாயில் அகப்பட்ட மான் போலவும் நடுங்க அந்தப் பெண்டிரையெல்லாம் தன் புட்பக விமானத்தில் ஏற்றிக் கொண்டு இலங்கையை எய்துகின்றான். அப்பெண்டிரின் தாய் மார்கள் கன்றையிழந்த பசுவினைப் போலக் கதறிக்கொண்டு, எங்கள் புதல்வியரை நடுங்கச் செய்தலால் அவ்விராவணன் இலங்கை நகர் பாழாக முடியுடனே தலையற்று வீழ்க' என்று சபிக்கின்றார்கள்.

இந்நிகழ்ச்சிகளையெல்லாம் நோக்கும் போது இராவணன் திக்கு விசயத்தில் மருத்தன் முதலியவர்களை வென்ற வெற்றியினும் அவன் காம எண்ணத்தால் பெற்ற சாபங்களே மிகுதியென்பது விளங்கும். இராவணன் கடுந்தவம் செய்து பெருவரங்களைப் பெற்ற செருக்கினால் – வலிமையால் – தன்னை நிகர்ப்பவர் இல்லையென்ற எண்ணத்தால் செய்யத்தகாத செயல்கள் மிகப்பலவாகும். உலக மாதாவாகிய சீதையை விரும்புதற்கு முன்னரே பெண்டிர் பலரிடம் தகாத முறையில் தன் ஆசையை நிறைவேற்றிக் கொண்டுள்ளான். தீவினையைச் செய்து பழகிய அவன் எளிய நெஞ்சமே சீதையையும் காமுறச் செய்தது என்ற அடிப்படையுண்மை இந்தத் திக்கு விசயத்தால் நன்கு புலனாகிறது. வேதவதி முதலியோர் இராவணனுக்கு இட்ட சாபங்கள் சீதையை அவன் தொடாமல் காப்பாற்றின எனலாம்.

கன்னியரையும் கற்புடை மங்கையரையும் கொணர்ந்த புட்பகம் தரையில் இறங்கியவுடன் வீடணன் சென்று அதில் பெண்டிர்கள் கண் கலங்கிப் புலம்பிக் கொண்டிருப்பதைக் காண்கின்றான். இது கூடாது என்பதை இராவணனுக்குச் சொல்லியதோடு இத்தகைய தீச் செயலின் பயனாகவே தம் சிறிய அன்னை கும்பிநசி மது என்பவனால் கவரப்பட்டாள் என்பதைக் கூறுகின்றான். இப்படியெல்லாம் தனக்குரியரல்லாத பெண்டிரிடம் தகாது செய்த இராவணன் ஏகதார விரதனாகிய இராமனால் கொல்லப்பட்டது பொருந்துவதே என்ற எண்ணம், இந்த உத்தர காண்டத்து நிகழ்ச்சிகளால் உண்டாகும் என்பது தெளிவு.

### உத்தர காண்டத்தால் புலப்படும் இராமனது பெருஞ்சிறப்பு

காத்தற் கடவுளாகிய திருமாலே இராமனாக வந்து அவதரித்து இராவணனை வென்றபின் அயோத்திக்கு அரசனாய் ஆட்சி செய்த நிலையினையே இராமராச்சியம் என்று புகழ்ந்து கூறுவர். அந்த அரசாட்சியின் சிறப்பைப் பரதன் கூறுகின்றான். அதனைப் பார்க்கின்ற பொழுது பதிற்றுப்பத்தில் வரும்:

பிறர் பிறர் நலியாது வேற்றுப் பொருள் வெஃகாது
மையிலறிவினர் செவ்விதி னடந்து தம்
அமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்
மூத்த யாக்கையொடு பிணியின்றி கழிய'
ஊழி யுய்த்த வுரவோ ரும்பல் (பதிற்றுப் 22)

எனப் பல்யானைச் செல்கெழு குட்டுவனுடைய ஆட்சியைப் பற்றிப் பாலைக் கௌதமனார் பாடிய பாடற் பகுதி நினைவிற்கு வருகின்றது' அவன் ஆட்சியில் ஒருவரை ஒருவர் வருத்துவதில்லை; பிறர்க்குரிய பொருளைத் தமக்கு உரிமையில்லாத வேற்றுப் பொருளை - விரும்புவதில்லை: குற்றமில்லாத அறிவினையுடையவர்களாய்ச் செம்மையான நெறியில் நடந்து தம்முடைய விரும்பத் தக்க மனைவியரைப் பிரியாமல் இருந்து இல்லறம் நடத்தித் தாம் உண்ணும் பொழுது பிறர்க்கும் பகுத்துக் கொடுத்துப் பின்பு தாம் உண்டு, மக்கள், வயது முதிர்ந்து பழுத்த உடம்போடு நோயேயில்லாமல் உயிர் பிரியுமாறு ஊழிக்காலம் வரையில் அரசு செலுத்திய அறிவு வலிமையுடையோர் தம் வழித்தோன்றலே'' என்று புகழ்கின்றார் பாலைக் கவுதமனார்.

இவ்வடிகளை ஊன்றி நோக்குவோம். மக்களுக்குள் வருகின்ற வேறுபாடுகள் எல்லாம் பிறர் பிறரை நலிவதாலும், பிறர் பொருளை விரும்புவதாலுமே வருகின்றன என்பதும் அக்காரணங்கள் இல்லையாகவே ஒருவருக்கொருவர் பகையின்றி நட்புணர்ச்சியுடன் வாழ்ந்தார்கள் என்பதும் புலனாகும். இதனால் அவன் நாட்டில் நீதிமன்றங்களுக்கு வேலையில்லையாயது. வழக்குகள் காரணமாக மக்களுக்குக் காலம் வீணாகவில்லை. எனவே, தம் காலத்தை அறிவின் வளர்ச்சிக்காகச்செலவழித்தனர். குற்றமற்ற அறிவினைப் பெற்றார்கள். அவ்வறிவின் பெருமையால் செம்மை நெறியில் நடந்து கொண்டார்கள். தத்தம் விரும்பத்தக்க மனைவியரைப் பிரியாமல் இல்லறம் நடத்தி' இரந்து வந்தவர்க்குப்பகுத்துக் கொடுத்து; பின் தாம் உண்டு நெடிது வாழ்ந்தார்கள். நோய் வாய்ப் பட்டு இறப்பவர் எவரும் இலர். இதனால் அங்கு மருத்துவ நிலையங்களுக்கே வேலையில்லையாயது என்பன தெளிவாகின்றன.

இவ்வாறே இராம இராச்சியத்தின் பெருமையைப் பரதன் விவரிக்கின்றான். இராமன் ஆட்சியில் அம்பு முதலிய ஆயுதங்களால் யார்க்கும் மரண பயம் வருவதில்லை. கொடிய சிங்கமும் யானையும் பகையின்றி வாழ்ந்தன. வேங்கைப்புலி பசுவினையும் மானையும் நட்பாகச்சார்ந்து நட்புணர்ச்சியுடன் பழகி வாழ்ந்தன. நீரினாலும் நெருப்பினாலும் சாகின்றவர்கள் எவரும் இலர். காற்றும் உயிர்களின் உடம்பிற்கு இன்பமாக வந்து வீசும். கடுமையாக வீசித்துன்புறுத்துவதில்லை. இராமன் ஆட்சியில் தந்தையிருக்க மகன் இறப்பதில்லை. பெண்டிர் விரும்பியாங்கு ஆண்மக்களைப் பெற்று மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். ஆண் மகவு இன்றி வருந்துபவர் இல்லை.

இதுதான் பரதன் வியந்து கூறும் இராமனது ஆட்சிச் சிறப்பு. இத்தகைய ஆட்சியில் ஓரந்தணன் தன் மகன் மரணம் அடைந்தது கண்டு கலங்காமல் தன் மனையாளுடன் இராமன் அரண்மனைக்கு வந்து இறந்த மகவினைக்கிடத்தி முறையிடுகிறான். இராமன் தன்னாட்சியில் முறையற்ற செயல் ஏதேனும் நிகழ்ந்திருக்க வேண்டும் என்று கருதி ஒற்றர்களை நாற்றிசையிலும் தேடிப்பார்க்குமாறு ஏவுகிறான். ஒரு வனத்தில் சம்புவன் என்பவன் தலைகீழாகத் தவஞ் செய்து கொண்டிருப்பது கண்டு இராமனுக்குக் கூறுகின்றனர். நான்காம் வருணத்தவன் தவம் செய்யும் ஒழுக்கத்தை மேற்கொள்ளலாகாது. சம்புவன் நான்காம் வருணத்தவன் ஆதலின் தன் பிறப்பிற்கு ஏலாத செயலை மேற்கொண்டது குற்றம். அக்குற்றம் நீங்க அவனை இராமன் கொன்றுவிடுகின்றான். அரண்மனையில் இறந்து கிடந்த பார்ப்பனன் மகன் உயிர் பெற்று எழுந்து விடுகிறான். இது அக்காலத்து அரசியல் நடைமுறையாகும்.

### இராமன் நாட்டு மக்கள் கருத்தை மதித்து மனைவியை வனம்புகச் செய்தல்

மக்களுக்காகவே மன்னவன் என்ற மாண்புறு கொள்கை நிலைபெற இராமன் செய்துள்ள செயல் யாரும் வியக்கும் இயல்பினதாகும். இராமன் சீதையைக் கண்டு காதல் கொண்டு வில்லையும்

முரித்து மணந்து கொண்டவன். பிரிதலில்லாப் பெருங்காதலன். அரசைத்தம்பிக்கு கொடுத்துவிட்டு அயோத்தி நீங்கி வனம்புகுந்த காலத்தும் சீதையைப் பாராட்டி விளித்து வனத்திலுள்ள இனிய காட்சிகளையெல்லாம் காட்டுகின்றான். சீதையை அழைக்கும் முறையிலேயே தன் காதல் உள்ளம் நன்கு புலப்பட, "அருந்ததியனையாளே! அமிழ்தினும் இனியாளே! எழுதரு மெழிலாளே! அகில்புனை குழல் மாதே! அன்னமென்னடையாய்! அணங்கினும் இனியாய்! வாள் புரை விழியாய்! என்றெல்லாம் விளித்துச் சீதையோடு இனிதின் விளையாடியவன் இராமன்.

சித்திரகூட மலையில் உள்ள பலவகையான இயற்கைக் காட்சிகளைச் சீதைக்குக் காட்டும்போது ஒவ்வொருகாட்சிக்கும் ஒவ்வொரு வகையாகச் சீதையை விளிக்கின்றான்.

'வாளும் வேலும் விட்டளாயின அனையகண் மயிலே!'
'குருதி வாளெனச் செவ்வரி பரந்த கட்குயிலே!'
'உவரிவாயன்றிப் பாற்கடல் உதவிய அமுதே!'
'இழைந்தநூ லினை மணிக்குடஞ் சுமக்கின்றதென்ன
குழைந்த நுண்ணிடைக்குவியிள வனமுலைக் கொம்பே!'
ஆடுகின்ற மாமயிலினும் அழகிய குயிலே!'
'வில்லி வாங்கிய சிலையெனப் பொலிநுதல் விளக்கே!'
ஒருவில் பெண்மையென்றுரைக்கின்ற வுடலினுக்குயிரே!
'சீலம் இன்ன தென்றருந்ததிக் கருளிய திருவே!'
"நினைந்தபோதினும் அமுதொக்கும் நேரிழை!
"மடந்தை மார்களில் திலகமே!
"குழவு நுண்டுளை வேயினுங் குறிநரம் பெறிவுற்று
எழுவு தண்டமிழ் யாழினும் இனிய சொற்கிளியே!"
"தெரிவை மார்க்கொரு கட்டளையெனச் செய்த
திருவே!".

என்றெல்லாம் தன் காதல் தோன்ற சீதையின் கண்முதலிய உறுப்புக்களைப் பற்றியும் பண்பு நலன்களைப் பற்றியும் கற்பின் சிறப்புப் பற்றியும் விவரித்து விளித்தவன் தான் இராமன்.

சீதை இராவணனால் கவரப்பட்ட பின்பு அவள் பிரிவாற்றாமையால் இராமன் வருந்திய வருத்தம் சிறிதன்று காரினை நோக்கியும், மயிலையும் பூங்கொடியையும் மானையும் கொன்றை மரத்தினையும் முல்லையையும் இந்திர கோபத்தையும் விடையையும் மின்னலையும் மன்மதனையும் நோக்கியும் இராமன் இரங்கிக் கூறும் சொற்களை நோக்கினால் சீதையின் பால் அவன் வைத்த காதலின் பெருமை நன்கு புலப்படும்.

இத்தகைய காதல், சீதையின் பால் கொண்டிருந்த இராமன் இராவணனைக் கொன்றபின் சீதையைக் கண்டபோது காதல் எட்டுணையும் காட்டாது இராவணனுக்குரிய இலங்கையில் சீதை இதுகாறும் இருந்ததையே தவறாகக் கொண்டு வெகுண்டு கூறியதும், சீதையின் கற்பில் மாசு இல்லை என்பதை உலகம் அறியத் தீப்புகுந்து காட்ட வேண்டும் என்று கூறியதும் 'அவ்வாறே சீதை எரிபுகுந்து தூயவள் என்பதை நிறுவிக்காட்டிய பின்பும் அங்கியங்கடவுளும் பிர னும் உருத்திரனும் அவள் தூய்மையைப் பற்றிச் சான்று கூறிய பின்பே அவளை மனைவியாக ஏற்றுக் கொண்டதும் நோக்கும் போது இராமனுக்குக் கற்பில் கருத்தூற்றம் பொதும் உண்டு என்பது தெளிவாகும்.

இவ்வளவு பெரிய சோதனைக்குப் பின்னரே சீதையை அரசியாகக் கொண்டு அயோத்தியில் ஆட்சி புரிகின்றான் இராமன். யாவரும் போற்றத் தக்க இராமன் ஆட்சியில் நாட்டு மக்களுக்கு ஒரு குறையிருந்தது. அது யாதெனின்? தீவினை நயந்து செய்யும் இராவணனது இலங்கையில் சிறையிருந்த சீதையை அயோத்தி அரசியாகச் செய்தது பொருத்தம் இல்லை என்பதேயாகும். நாட்டு மக்களின் இத்தகைய கருத்தை இராமன் அறிந்த போது பெரிதும் வருந்துகின்றான். சீதையின் கற்பில் எள்ளளவும் மாசில்லை என்பதை அவன் உள்ளம் அறியும். பல்லாண்டு பழகிய இராமனுக்கு சீதையின் கற்பில் சிறிதும் ஐயம் இல்லை. ஆயினும் தன் நாட்டு மக்களை அவ்வாறு நம்பச் செய்ய இயலாது நாகரிகமும் அன்று. அரசனுக்குக் காதல் மிக்க மனைவியினும் நாட்டு மக்களே உயிராவர்; ஆதலின் குற்றமற்ற சீதையைத்—தன்குலம் விளக்கும் கருவினைக் கொண்டுள்ள சீதையை—வனத்தில் விடுத்து

நாட்டு மக்களின் குறையைப் போக்குவதே கடமை; என்ற உணர்ச்சி மேலிட்டுத் தன் உயிரினுமினிய சீதையை—பிரிய கில்லாச் சீதையை வனத்தில் விடச் செய்கின்றான். இதனால் நல்லரசன் ஆட்சி இத்தகையது என்பதைக் காட்டிக் காதல் மனைவியினும் நாட்டு மக்கள் கருத்தையே பெரிதென மதித்த இராமனது சீரிய கொள்கையை உலகிற்கு எடுத்துக் காட்டுவது உத்தரகாண்டத்தின் தனித் தன்மையாகும். இங்கு இங்கிலாந் தின் அரச குடும்பத்தில் பிறந்து எட்டாம் எட்வர்டு சக்கரவர்த் தியாய்ப் பட்டம் ஏற்க தகுதியுடைய வின்சர் கோமகன் காதலி யையே சிறப்பாக மதித்து தன்னாட்டினை—அரசாட்சியை—மதி யாது விடுத்த நிலையினையும் இங்கு நினைவு கூறின் இராமன் பெருமை புலப்படும்.

அடியார்க்கு நல்லார் உரையில் உத்தர காண்டம்

ஒரு நூலின் பெருமையும் பழமையும் புலப்படுவது அந் நூலினை எடுத்தாளும் புலவர்களாலேயாம். பன்னிரண்டாம் நூற் றாண்டில் வாழ்ந்த ஒட்டக்கூத்தரால் இயற்றப் பெற்ற உத்தர காண்டம்' பதினஞ்சாம் நூற்றாண்டில் வாழ்ந்து சிலப்பதிகாரம் என்னும் செந்தமிழ்க் காப்பியத்திற்கு உரை வரைந்த அடியார்க்கு நல்லார் என்ற பெரும் புலவரால் உரையில் மேற் கோளாக எடுத்தாளப் பட்டுள்ளது என்பது அவ் உத்தர காண் டத்தின் பெருமையை—பழமையை மலைவிளக்காக்கியது எனலாம்.

இராவணன் சிற்றன்னையாகிய கும்பிநசி என்பவளை மது என்னும் அசுரன் ஆளற்றம் பார்த்துக் கவர்ந்து சென்ற செய் தியை வீடணன் வாய்க்கேட்டுச் சினமிக்கு நால்வகைப் படை யோடும் அம்மதுவின்மேல் போர்க்குப் புறபபட்டு வந்த இராவணனை வணங்கிக் கும்பிநசி புலம்பிச் சொல்லும் கருத்தும் பாராட்டுதற்குரிய கருத்தாக அமைந்துளது. இராவணன் வரத்தாலும் வலிமையாலும் படை பலத்தாலும் மிக்கவன்; அவன் போர்க்கு வந்தால் தன்னை இராக்கத மணமுறையில் மணந்து கொண்ட மது என்னும் தன்கொழுநன் மாண்டு

போதல் உறுதி; இதைத் தெளிந்த கும்பிநசி இராவணன் திருவடியில் வீழ்ந்து அழுது கொண்டு சொல்கின்ருள்:—

"மக்களிழந்த இடும்பையினும் மனையாளிழந்த இடும்பையினும் மிக்க இடும்பை வேல்வேந்தே! விதவை யிடும்பையெனவிளம்பத் தக்க அதனுல் என் கழுத்தில் தாலி நீ தந்தருள்".

(திக்கவிசயப - 38)

என்பது அவள் வேண்டுகோளாகும். நம் நாட்டுப் பெண்டிர் கணவனுக்குப் பின்பு இருந்தால் அவர்கள் அனுபவிக்கும் அவல நிலையை இப்பாடல் நன்கு புலப்படுத்துகின்றது. இப்பாடலின் கருத்தாழத்தை யறிந்த அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரப் பதிகத்தில் 'ஆரஞர்' உற்ற வீர பத்தினி என்ற அடியின் உரையில் 'ஆரஞர்' — பெரியவருத்தம்; ஆவது கணவனை இழத்தல்; என்று விளக்கம் கூறிவிட்டு, 'மக்களிழந்த விடும்பையினும்' என்று தொடங்கும் இப்பாடலை மேற்கோளாகக் காட்டியுள்ளார் என்பது நினைவில் கொள்ளத்தகும். இதனுல் அடியார்க்கு நல்லார் காலத்திலேயே இவ்வுத்தர காண்டம் புலவர் போற்றும் புகழ்படைத்திருந்தமையும், இப்பாடலின் அருமை அறிஞர்களால் உணரப்பட்டிருந்தமையும் நன்கு புலப்படும்.

## உலகியல் விளக்கும் உத்தரகாண்டம்

### மணமகன் தேர்வு

இராவணன் பிறப்புப் படலத்தில் ஒரு பெண்ணுக்குக் கணவனுக வருபவன் என்ன என்ன வகையில் சிறப்புடையவனுக இருக்க வேண்டும் என்று குலத்துளோரும் தந்தையும் தாயும் மணமகளும் எதிர்பார்ப்பார்கள் என்பதை ஒட்டக்கூத்தர் மிகப் பொருத்தமாகச் சிந்தித்துச் சொல்கின்ருர். ஒவ்வொருவர் மனமும் ஒவ்வொரு வகையில் எதிர்பார்க்கும். ஒருகுலத்துப் பெருமக்கள் அந்தப் பெண்ணை மணப்பதற்கு வருபவன் நல்ல

குலத்துப் பிறந்தவனாக இருக்க வேண்டும் என்று எண்ணுவார்களாம். மணமகனின் கல்வியைப் பற்றியோ செல்வநிலை பற்றியோ, அவனழகும் இளமையும் பற்றியோ குலத்துளோர் சிந்திக்க மாட்டார்களாம். அவர்கள் நோக்கமெல்லாம் மாப்பிள்ளை நல்ல குடிப்பிறப்புள்ளவனாக இருக்கவேண்டும் என்பதுதானும்.

ஆனால், பெண்ணின் தந்தையோ தன் மகளை மணக்க வருகின்றவன் கல்வியறிவு நிரம்பியவனாக இருக்கவேண்டும் என அக்கல்வியறிவு ஒன்றினையே நோக்குவானும், மணமகனது குலம், செல்வம் அழகு பற்றி ஒன்றும சிந்திக்க மாட்டானும் ஆனால் பெண்ணைப் பெற்ற தாயுள்ளமோ, தன் பெண்ணுக்குக் கொழுநனாக வருகின்றவன் கொழுத்த செல்வமுடையவனாக இருக்க வேண்டும் என்றே விரும்புமாம். மணமகனின் குலம் பற்றியோ கல்வி நலம் பற்றியோ, அழகு பற்றியோ அத்தாயுள்ளம் சிந்திப்பதில்லையாம். ஆனால் மணமகளோ, தன்னை மணக்க வரும் கொழுநன் இளமையும் எழிலும் உடையவனாக இருக்க வேண்டும் என்ற ஒரே நோக்கம் உடையவளாக இருப்பாளாம். குலமும் கல்வியும் செல்வமும் பற்றி மிகுதியாகச் சிந்திக்கவே மாட்டாளாம்.

மணமகனைத் தேர்ந்தெடுப்பதில் குலத்தோரும் தந்தையும் தாயும் மணமகளும் கொள்ளும் மனநிலையை நன்காராய்ந்து ஒருவரோடு ஒருவர் வேறுபட்ட கருத்தினராயேயிருப்பர் என்பதை:-

குலம் வேண்டும் என்றிருப்பர் குலத்துள்ளார் கல்வியினுற் குறையா ஞானப்
பலம் வேண்டும் என்றிருப்பர் தந்தைமார் பரந்த பெருஞ்செல்வமுள்ள
தலம் வேண்டும் என்றிருப்பர் தாய்மார்கள் யவ்வனமும் அழகும சார்ந்த
நலம் வேண்டும் என்றிருப்பர் நாறுகுழல் கன்னிமார் நலத்தின் மிக்கார்
(இராவணன் பிறப்பு - 60)

என ஆசிரியர் ஒட்டக்கூத்தர் நன்கு தெளிவாக்கியுள்ளார். மண மகனுக்குக் குலநலமும் கல்விநலமும் செல்வநலமும் இளமையழகு நலமும் ஆகிய நான்கும் இருந்தாலொழிய இந்த நால்வகை யினரையும் மனநிறைவு செய்யவியலாது என்பது தெளிவு. மண்டோதரியைப் பெற்றமயன் இந்த நால்வகையாரின் மன நிலையை நினைத்தே, இவ்வாறு சொல்கின்றான். இந்த நால்வகைச் சிறப்பும் நிரம்பிய மணமகன் இவ்வுலகத்தில் கிடைத்தல் அரிது ஆதலின், பெண்ணைப்பெற்றவர் அடையும் பெருந்துயரையும் பேசுகின்றான்.

—"இந்நான்கும் உடையாரைக் கிடையாதிவ் வுலகந் தன்னில்
பெண்பெறுகை தனைப்போலப் பெரியதுயர் தானுண்டோ பேசுங்காலே"

என மயன் மனநொந்து கூறியிருப்பது இக்காலத்து வாழ் வோர்க்கும் பொருந்திய சொல்லாக அமைந்துள்ளது காணலாம். ஒரு பெண்ணைப் பெற்றவனே இப்படிச் சொல்வானாயின் பலரைப் பெற்றவர் துயரம் சொல்லில் அடங்குமோ?

பெண்ணின் பெருமை

ஆண் மகனாகப் பிறந்தவர்கள் பிறந்த வீட்டுக்கு மட்டுமே விளக்கம் தருவார்கள்: ஆனால், பெண்ணாகப் பிறந்தவர்கள் பிறந்த குடியும் புக்க குடியும் விளக்கமுறச் செய்வார்கள் என் பார்கள். இந்நூலாசிரியர் அதற்கு மேலும் ஒன்று கூட்டிச் சொல்கின்றார். "பெண் பிறக்கத் தந்தை குலமும் தாய்க்குலமும்-புக்ககுலமும் இவை விளங்கும்" எனச் சுமாலி தன் மகள் கைகசியைப் பார்த்துக் கூறியதாகச் சொல்கின்றார். பெண்ணுக்குத் தந்தை மரபும் தாயின் மரபும் வெவ்வேறு ஆதலின், அவ்விரு மரபும் ஒரு பெண்ணின் ஒழுக்கத்தால் பெருமை பெறும் என் பதை இங்கு விளக்கி, ஆண் மகனைக் காட்டிலும் பெண்ணாகப் பிறந்தவளின் பெருமையைச் சிறப்பித்துக் காட்டியுள்ளார் ஒட்டக்கூத்தர்.

சுவர்க்க நரகக் காட்சி

இராவணன் எமனோடு போர் செய்யச் செல்கின்ற பொழுது எமலோகத்தில் உள்ள சுவர்க்க நரகக் காட்சிகளையும் காண்கின்றான். பெண்ணாசை நீங்கினவர்களும். உடம்பின் நிலைமையை உணர்ந்து அறங்களைச் செய்தவர்களும் நல்ல நெறியில் வாழ்க்கையை நடத்தினவர்களும் சுவர்க்கத்தில் இனிமையாக வீற்றிருப்பதைக் காண்கின்றான், பூதானம் கோதானம் போன்ற தானங்களைச் செய்தவர்கள், பசிப்பிணி தீர அன்னதானம் செய்தவர்கள் சுவர்க்கத்தில் வீற்றிருக்கின்றார்கள். தவமுனிவர் தங்க மடம் கட்டிக்கொடுத்தும் மறைநூலுணர்ந்த அந்தணர்க்கு மனைகளைக் கட்டிக்கொடுத்தும் வேனிற் காலத்தில் மக்கள் தாகம் தணியுமாறு தண்ணீர்ப் பந்தல் வைத்தும் குளிர்காலத்தில் துறவியர்க்குப் போர்வையினைக் கொடுத்தும் விருந்தினர் தங்க இடமளித்தும் உதவுகின்ற புண்ணியவான்கள் சுவர்க்கத்தில் அழகிய மணி மண்டபத்தில் இனிதாக வீற்றிருத்தலைக் காண்கின்றான்.

நீதிமன்றத்தில் வழக்குரைக்க வருபவரிடம் பணம் பறித்து உண்டவர்களும் பொய்வழக்கை மன்றத்தில் உரைத்தவர்களும் தன் மனைவியோடு மனம் ஒன்றி வாழாமல் தனக்கு வரும் பழியும் பாவமும் பாராமல் பிறர்மனைவியரை விரும்பிக்கூடி மகிழ்பவர்களும் உயிரைக் கொன்று அதன் உடம்பைத் தின்றவர்களும், பிறர்குற்றம் கூறுபவர்களும், நன்றி மறந்தவர்களும் நரகத்தில் கிடந்து துன்புற்று நடுங்குவதையும் இராவணன் காண்கின்றான். பசுவதை சிசுவதை முதலிய பெரிய பாவத்தைச் செய்தவர்கள் அங்குத் துன்பத்தால் பதைபதைப்பதையும் இறைவன் திருநாமத்தைச் சொல்லாத பாவிகள் தங்கள் வாய் வழியாகப் புழுக்களைச் சொரிந்து கொண்டு நரகத்தில் கலங்குவதையும் காண்கின்றான்.

எமன் உலகக்காட்சியை இராவணன் காண்கின்ற முறையில் நமக்குப் புலவர் கூறும் முறைமை சிறப்பாக உள்ளது. உத்தர காண்டத்தில் இத்தகைய காட்சிகளைக் காட்டுதல் மக்கட்கு நலமிகப் பயக்கும் என்று கருதி ஒட்டக்கூத்தர் இங்ஙனம் காட்டுகின்றார் எனலாம்.

உத்தரகாண்டத்தில் இராமன் அசுவமேதயாகம் செய்ததும் அந்த யாகத்திற்குக் குசலவர்கள் வந்து இராமன் கேட்குமாறு வான்மீகியின் இராமாயணப் பாடல்களைப் பாடியதும் பாடியவர்கள் தம்மக்களே என்பதையுணர்ந்த இராமன் வான்மீகிக்குத் தூதுவனை அனுப்பிச் சீதையை வரவழைத்ததும் அச்சீதை மீண்டும் உறுதியான கற்புள்ளவள் என்பதைக் காட்டவேண்டும் என இராமன் கூறியபடி தன்கற்பினை நிறுவிப்பின் பூமி தேவியின் அணைப்பில் மறைந்ததும் ஆகிய நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன.

இறுதியில் சந்திரகேதுநகர்ப்படலத்தில் இராமன் தன்னரசைத் தன் மக்கள் குசலவர்களுக்குக் கொடுத்துவிட்டுத் தானும் தம்பியரும் நாட்டுமக்களுமாகச் சரயுவில் மூழ்கி வைகுந்தம் அடைதலுமாகிய நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன. இராமன் வரலாறு உத்தரகாண்டத்தில் நன்கு நிறைவுறுகின்றது. அவன் பழைய தெய்வ வடிவில் வைகுண்டம் எய்துகின்றான்.

உத்தரகாண்டத்தில் வரும் செய்யுட்களின் அழகும் சந்தமும். இனியநடையும் புலவர்களின் உள்ளங்கவர்வனவாகும். உவமைகள் உருவகங்கள் தற்குறிப்பேற்றங்கள் போன்ற அணிகள் நன்கு அமைந்துள்ளன. நகைச்சுவை முதலிய சுவைகளும் நிரம்பியுள்ளன. இராமாயணத்தில் உத்தர காண்டமே பெருமை மிக்க காண்டம்– தெய்வத் தன்மை மிக்ககாண்டம் என்பது மேலோர் கருத்தாகும்

————

# 12. சீதை வனம்புகு படலம்

## முன்னுரை

இராமன், சீதையைப் பற்றி நாட்டு மக்கள் கூறிய பழிச் சொற்களைக் கேள்விப்பட்டு வெகுண்டு இலக்குவனை அழைத்து நிகழ்ந்தது கூறி, 'உடனே சீதையைத் தேரில் ஏற்றிச் சென்று வனத்தில் வான்மீகியின் தவக்குடிலுக்கு அருகில் விட்டு வருக' என அனுப்ப, அவ்வாறே சீதை இலக்குவனுடன் வனத்தில் புகுந்த செய்தியைக் கூறுவதாகலின் இப்படலம் சீதை வனம்புகு படலம் எனப்பெயர் பெறுகின்றது. சில ஏடுகளில் தேவி வனம் புகு படலம் எனவும் இப்படலப் பெயர் காணப்படுகின்றது.

## படலப் பொருட் சுருக்கம்

### புட்பகம்

முனிவர்களும் முடிமன்னர்களும் வானரர்களும் வீடணனும் இராமனிடம் விடைபெற்றுக் கொண்டு தத்தம் ஊர்கட்குச் சென்ற பின்பு, பூமியைத் தாங்கும் ஆதிசேடன் தன் பாரம் நீங்கியது என மகிழுமாறு, அரச பாரத்தைத் தாங்கி நடாத்தும் இராமன் உச்சி வேளையில் செய்தற்குரிய வழிபாட்டைச் செய்து முடித்துவிட்டுத் தன் தம்பியரோடு அமுது செய்துகொண்டு மகிழ்ந்து இருந்தபோது வானத்தில் ஒரு சொல் எழுந்தது; "புனைமணிப் பூணினாய்! யான் புட்பகம்; எனக்குக் குபேரன் முன்பு சொன்ன சொற்களைக் கேட்பாயாக! "தசரத இராமனால் இராவணன் இறப்பது உறுதி. அவன் இறக்கும் வரையில்

அவ்விராவணனிடத்தில் சென்று நின்றால் ஆன தொண்டினைச் செய்க! அவ்விராவணன் இறந்தால்தான் என் சிந்தை நோய் தீரும்'' எனத் தூயவனாகிய குபேரன் எனக்கு முன்பு சொன்ன வாறே இப்போது முடிந்தது. யான் போய் அக்குபேரனைக் கண்டு வருகின்றேன் என்று புட்பக விமானம் விண்ணில் நின்று கூறக் கேட்ட இராமன், ஆச்சரியப்பட்டு 'மிகவும் நல்லது' என்று சொல்லி மணமிக்க மலர்களைக் கொண்டு அப்புட்பக விமானத் தைப் பூசித்துவிட்டு 'போ' எனக் கட்டளையிடுகின்றான். உடனே புட்பகம் மனம்போல விரைந்து செல்கின்றது.

## பரதன் புகழ்ச்சி

இந்த அற்புதத்தைக் கண்ட பரதன் இராமனைத் தொழுது தூய்மையுடையவனே! இந்தப் பெரிய தேசத்தை பாதுகாக்க நீ, அரசேற்ற பின்பு நிகழ்ந்த அற்புதங்களை எண்ணினால் அவை எல்லையில்லாதனவாம். இவ்வுலகத்து எவ்விடத்தும் அம்பு முதலிய கொடிய ஆயுதங்களால் யார்க்கும் மரணம் ஏற்படவில்லை. சிங்கத்தால் யானைக்கு அச்சம் இல்லை. வேங்கைப்புலி பசுவையும் மானையும் சார்ந்து நட்புச் செய்து கொள்கின்றது. நீராலும் நெருப்பாலும் யாரும் உயிர்துறப்பதில்லை. தாம் இருப்பத் தம் புதல்வர் மரணம் எய்துவதை யாரும் காண இயலாது. இந் நாட்டில் நோயால் வருந்துவோர் யாரும் இல்லை. நோயின்றி மூத்துள்ள முதியவர்களையும் எமன் உயிர்கவர நெருங்குவதில்லை. கணவனை இழக்கின்ற பெண்டிரும் இல்லை. காற்றும் உயிர்களின் உடம்புக்கு இன்பம் உண்டாகுமாறு மெல்லென வந்து வீசுகின் றது. பெண்டிர் ஆண் மக்களை மிகுதியாகப் பெறுகின்றனர். இம் மண்ணுலகில் உள்ள அரசகுமாரரும் அவர்தம் பெண்டிரும் எல்லாம், 'இராமனே அரசு செய்து இவ்வுலகம் முழுவதையும் காப்பானாக' என உறுதியாகக் கூறுகின்றார்கள் எனப் பரதன் கூறக்கேட்ட இராமனும் மன மகிழ்ந்து வீற்றிருக்கின்றான்.

## இராமன் இயற்கை எழிலில் ஈடுபடுதல்

கதிரவன் மறைகின்றான். இராமன் மாலைச் சந்தி வழிபாடு செய்ய விரும்பிய சிந்தையனாய் அரசவையை விடுத்துச் செல்

கின்றான். வெண்டிங்கள் தோன்றுகின்றது. பங்குனித்திங்கள் தொடங்குகின்றது. மரங்களெல்லாம் பழுத்த இலைகளை உதிர்த்து விட்டுப் புதிய தளிர்களைக் கொண்டுள்ள தோற்றம் பழைய போர்வையை அகற்றிவிட்டுப் புதிய அழகிய போர்வையைப் போர்த்துக் கொண்டுளதுபோல் தோன்றுகின்றது. இளமரங்களையுடைய சோலையின் எழில் வண்ணங்களையெல்லாம் பொருந்த நோக்கி, மனத்தகத்தே தேக்கிக்கொண்ட இராமன் தன் மனைவி சீதைக்குக் காட்டுகின்றான்.

## இயற்கை எழிலைச் சீதைக்குக் காட்டுதல்

மின்னலைப் போன்ற இடையினையுடையவளே! அன்னம் நினது மென்னடையைக் கண்டு தோற்று அஞ்சி வெளியில் நிற்கவும் நாணிப் பூம்பொழிலில் மறைந்து கொள்கின்றது. மயில் நின் சாயலுக்குத் தோற்று, இனி, உயிர் தாங்கியிருக்க மாட்டோம் என்று நெருப்பில் வீழ்வதுபோலச் சிவந்த மலர்களையுடைய அசோக மரத்தின்மேல் வீழ்கின்றதைப் பார்ப்பாயாக! என இங்ஙனம் பற்பல காட்சிகளைக் கண்டு காட்டித் தாமரைத் தடாகத்தின் கரையிலுள்ள பளிங்கு மண்டபத்தில் தென்றலிளங் காற்றுத் தன்னைச் சேவிப்பது போல மெல்லென வீசாநிற்கச் சீதையோடு இனிதாக வீற்றிருக்கின்றான்.

பொன்போன்ற மேனியையுடைய திருமகளோடு பாற்கடலில் பாம்பணையில் பண்டு தானிருக்கும் தன்மைபோலத் தோன்றி மறைந்திடாத மின்னலோடு கூடிப் பூமியில் படிந்து விளங்கும் கருமுகில்போலச் செந்நிறம் வாய்ந்த மேனியையுடைய சீதையைச் சிவந்த மலர்போன்ற கைகளால் இராமன் அணைத்துக் கொண்டு மகிழ்கின்றான்.

## நாடகம் காணுதல்

பின்பு நாட்டியத்தைக் கண்டவர்கள் திகைக்கும்படி நாடக மகளிர், தாளம் முதலிய வாத்தியங்களை தழுவி மூவகையான சதிகளையும் தப்பில்லாமல் தனித்தனியேக் காட்டிக் கொண்டு அபி

நயிக்கின்ற கைகளின் வழிக் கண்ணும் கண்ணின் வழி மனமும் கலக்கும்படி செய்து கொண்டு விண்ணுட்டு அரசமகளிர் நாணி நிற்குமாறு நடனம் ஆடுகின்றனர். மாகதர்கள் ஏத்துகின்றனர். அவர்தம் நாடகத்தை நயந்து கண்டும், பாடல்களைப் பண்ணுடன் கேட்டும் சீதையும் இராமனும் அம்மலர்ப்பொழிலில் நாள் தோறும் விளையாடி மகிழ்ந்து தங்கியுள்ளனர்.

## சீதை கருக்கொள்ளுதல்

இராமனேடு சீதை இவ்வாறு மகிழ்ச்சியில் திளைத்திருந்த பொழுது, சீதைக்குக் கண்களில் பசலைநிறம் உண்டாகின்றது. மேனிவெளுக்கின்றது. கைவளைகள் சரிந்து வீழ்கின்றன. வயிற்றில் கருப்பம் உண்டாயிற்று என்பதை எல்லோர்க்கும் எடுத்துரைப் பது போல முலை முகம் கறுக்கின்றன.

இராமன், சீதை கருப்பமுற்றுள்ளாள் என்பதற்கேற்ற இலக்க ணம் எல்லாவற்றையும்பொருந்த நோக்கிச் சீதையையும் நோக்கி 'நீ மனத்தில் விரும்பியிருப்பது என்னை?' என்று கேட்க, சீதை சொல்லுதற்கு நாணுபவளாய்ச் சிரிக்க, இராமன் விடாது பின்னும் பலமுறை கேட்டபின் சொல்கின்ருள்.

"பெருந்தவ முனிவர்கள் கங்கையில் நீராடிவிட்டு காலையிலும் மாலையிலும் வழிபாடு செய்கின்றவர்களாய்ப் பொலிவுடைய முந்நூல் புரளும் மார்பினராய்ப் புனைந்த மரவுரியும் முருக்கேறிய செஞ்சடையுமுடையவர்களாய் வாழ்கின்ற ஆச்சிரமத்தை அடைந்து அம்முனிவர்கட்கு ஏவல் செய்து ஒருநாள் தங்கிட விரும்புகின்றது என் உள்ளம்" என்பது அவள் பணிவான சொற் கள். அதுகேட்ட இராமன், 'உனக்கு முனிவர்களின் இருப் பிடங்களை நாளைக்குக் காட்டுவேன்' என்று சொல்லிச் சீதையை அரண்மனையில் விடுத்து, விசயன், பத்திரன், தந்தவக்கிரன், சுமா கதன், அராஞ்சி, காளியன் முதலியோர் சொல்கின்ற பரிகாச கதைகள் கேட்டு அவர்களை இனிதே பாராட்டிவிட்டு "இந்தப் பரிகாசக் கதைகள் கிடக்கட்டும், அரசர்கள் இரவும் பகலும் எக் காலத்தும் இடைவிடாது கேட்கத்தக்கனவாய் நம் நாட்டிலும் நகரத்திலும் உள்ள மக்கள் தமக்குள் பேசிக் கொள்கின்ற அந்தக்

கதையைச் சொல்லுங்கள்' என்று இராமன் கேட்க, அவர்கள் சொல்கின்றார்கள்.

காற்று வீசுகின்ற பெருங்கடலை மலைகளைக் கொண்டு அடைத்து அணைகட்டிச் சென்று இலங்கையில் புகுந்து, அரக்கர் குலத்தை அடியோடு அழித்துத் தேவேந்திரன் தலைதூக்கும் வண்ணம் அவன் பகைவனான இந்திரசித்தினைக் கொன்று, இராவணனுடைய பத்துத்தலைகளையும் அறுத்துத் தரையில் உருட்டிய அழகிய வில்லையுடைய இராமனுக்கு எதிராவார் இல்லை என்று உலகத்தோர் சொல்கின்றனர்' என்கின்றனர்.

அதுகேட்ட இராமன் அவர்களை நோக்கி, "அரசராக இருக்கும் நாங்கள் இந்நாட்டிலும் நகரத்திலும் பிறக்கின்ற நன்மை தீமைகளைக் கேட்டுத் தீமையை நீக்கி நல்லனவற்றைச் செய்வோம்; ஆதலின் நீவிர்கேட்ட இந்த இரண்டையும் சொல்லுங்கள். நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சுதல் வேண்டா" என்று சொல்ல, அவர்கள் இராமனை நோக்கி நின்மல! இந்தப்பெரிய நாட்டில் உள்ளவர்கள் என்ன பேசிக் கொள்கின்றார்கள் என்றால் "நம் மன்னவனாகிய இராமன் மானக்குறைவை மனத்தினால் நினைத்தும் பாராதவனாய், இராவணனால் கவரப்பட்டுப் பன்னிரண்டு மாதங்கள் வரையில் இலங்கையில் சிறையிலிருந்த சீதையைத்தன் பட்டத்தரசியாகக் கொண்டு வாழ்தல் பெரிய குற்றமாகும் என்று பேசுகின்றனர்" என்று உண்மையைச் சொல்லுகின்றனர்.

இவ்வாறு அவர்கள் யாவரும் தம்முள் ஒத்துச் சொன்ன கடுஞ்சொல் இராமன் மனத்தைத் தாக்கியதால் இதயத்தில் வேல் பாய்ந்தாற்போல வருந்திச் சிந்தை தளர்கின்றான். தன் தம்பியர்களை அழைக்கின்றான். அவர்களைத் தனியிடத்தில் வைத்து இந்த மானபங்கத்தைத் தெளிவாகச் சொல்கின்றான். "என்னுயிரும் வலியும் துணைவரும் நீங்கள்; என் செல்வம் நீங்கள்; என் தவமும் நீங்கள்; என் உடன்பிறந்தவர்களும் நீங்கள்; என் அரசும் இன்பமும் நீங்களே ஆவீர்கள். என்பழி உம்பழி என்புகழ் உம்புகழ்; அங்ஙனம் ஆனபின்பு யான் ஒளிக்காமல் இங்கு ஒன்று சொல்வேன். நீங்கள் அனைவரும் கேளுங்கள். தீமையே புரியும் இராவணன் வைத்த சிறையிலிருந்த சீதை என் கருத்துப்படி சிவந்த தீயில் மூழ்கி முனிவர்க்கும் தேவருக்கும்

என் மனத்துக்கும் தூயவளாகவே இருந்தாள். ஆயினும், உலகத் தவர் சொல்கின்ற பெரிய பழிதனைக் கேட்டு என் உள்ளம் மெலி கின்றது; உலகத்தவர்க்கு ஒத்தது ஆகாமல் போனுல் உண்மை நிகழ்ச்சியே ஆயினும் அதனுல் பயன் என்ன?

"உலகத்தில் உள்ளவர்கள், இல்லாத பொருளை உளது என்றுஒருமித்துச் சொல்வாராயின் உள்ளதாகவே கொள்ளப் படும்; அதுபோலவே, உள்ளதாகிய ஒருபொருளை இல்லை என்று உலகத்தவர் ஒருமித்துச் சொல்வாராயின், இல்லையாகிவிடும். இது உலகியற்கை. ஆதலால், அச் சீதையை அரிய தவமுனிவர் களின் தவக்குடிலுக்கு அருகில் கொண்டுபோய் விட்டுவிடுவோம். இது, யான் சிந்தித்துத் துணிந்த காரியமாகும். இனி, இதற்கு வேருக எண்ணக் கூடியது ஒன்றும் இல்லை" என்கின்றுன்.

இவ்வாறு இராமன் சொன்னதைக் கேட்ட தம்பிமார்கள் தாம் செய்வது ஒன்றும் அறியாமல், தீயவளாகிய கைகேயி, சீதை யும் இராமனும் காட்டிற்குப் போகவேண்டும் என்று உறுதி பூண்டுநின்ற அன்றையினும் மிகக் கலங்கி உள்ளத்தில் எழுகின்ற துயரத்தை யுடையவர்களாகி, 'இது எவ்வகையானும் விலகு தற்கு அரிது' என்று இடிவிழப்பட்டவர் போலச் செயல் அற்றுத் துன்புற்று இருந்தனர். 'உலகம் மூன்றையும் கலக்குவேன்' என்று நினைத்தால் அதனைக்கணத்தில் விரைந்து முடிக்கும் ஆற்றலுடைய இலக்குவனை நோக்கி, இராமன், இவ்விடத்துணிந்த காரியத்தை விலக்கி நிறுத்தலாம் என்று கருதும் எண்ணத்தை விடுத்து விட்டுக் கொடிய வினைகள் வேரோடும் பரியுமாறு செய்கின்ற வலிய தவத்தினைச் செய்யும் முனிவர் வாழ்கின்ற வனத்தில் சீதையை விடுப்பாயாக!

சீதைக்கு முனிவர் தவ வனத்தைக் காட்டுவதற்கு முன்னமே இசைந்துள்ளேன்; ஆதலின் அவள் சொல்லியவண்ணமும் செய் கின்றவன் ஆகின்றேன் என்று சுமந்திரனுக்குக்கூறி, அவன் ஓட்டு கின்ற குதிரைகள்பூட்டிய தேர்மேல் சீதையைஏற்றி நம் தந்தைக் குத் தோழராகிய வான்மீகியின் தவவனத்தின்கண் இவளை விடு வாயாக! என இராமன் உறுதியுடன்சொல்லக் கேட்ட இலக்கு வன் எழுந்து கொடிய துயரத்தோடு பண்பினையுடைய சுமந்தர

னுக்கு நிகழ்ந்ததைச் சொல்லித் தேரினை விரைந்து செலுத்தச் செய்து சீதையின் மாளிகையிற் புகுந்து அவள் திருவடிகளை வணங்க, இன்று பயணத்திற்கு என்ன காரணம் எனச் சீதை வினவ, இலக்குவன் 'மன்னவனுகிய இராமன் உனக்குப் பெரிய தவமுனிவர்கள் வாழ்கின்ற வனத்தைக் காட்டுமாறு சொன்னுன்' என்றுனுகச் சீதை மகிழ்ச்சியடைந்து வனத்திலுள்ள முனிவர் மகளிர்க்கு முத்தாரம் முதலிய அணிவகைகள் நவமணிகள் புடைவை வகைகள் முதலியவற்றை ஆராய்ந்து எடுத்துக் கொண்டு 'தேர்மேலேறுக' என இலக்குவன் கூறினவுடன் ஏறினுள்.

கடல் வயிறு கிழியச் செல்லும் கப்பல்போலப் பெரிய மணிகள் கட்டியுள்ள தேர் நிலம் சுவடுபட வனத்தை நோக்கிச் செல்லா நிற்க, சீதை வலக்கண் துடிக்கப் பெற்று, அதனுல் வயிறு எரிந்து உள்ளமும் உடம்பும் நடுங்காநிற்க, இலக்குவனை விளித்து 'எனக்கு ஏற்பட்ட தீய நிமித்தமாகிய இதனுல் என்ன விளையப் போகின்றது என்பதை யான் அறியேன்; விலக்கற்கு அரிதாய விதிவிளைக்கின்ற விளைவை இவ்வுலகில் யார் அறிய வல்லார்?

'இந்தத்தீய நிமித்தத்தால் தாம் உறப்போகும் துயரம் இன்னது என்பதைப் பெண்டிர் அறிய மாட்டார்கள்; என்னைச் சார்ந்த இந்தத் தீயநிமித்தத்தால் மாமியார்க்கும் சிறந்த உற வினர்க்கும் வளமிக்க அயோத்தியில் வாழ்கின்ற மக்களுக்கும் சிறிதும் தீமை நிகழாமல் இருக்கவிடுக; தெய்வமே!'' என்று கடவுளை நினைத்துக் கைதொழுதாள். இதை அறிந்த இலக்குவன் உள்ளத்தில் எழுந்த பெருந் துயரமுடையவனுய் நீ சொன்ன இந்தத் தீய நிமித்தத்தால் நம் உறவினர்கள் துயரம் அடைய மாட்டார்கள். இனிதாகவே இருப்பார்கள்'' என்று சொல்லு தலும் சிதை துயரம் தணிந்திருந்தாளாக அவர்கள் தேர் தென் திசை நோக்கிச் சென்றது. கோமதி நதியினை அடைந்தவுடன் அன்றிரவு அங்குத் தங்கி, மறுநாள் கங்கையை அடைந்தார்கள்.

கங்கையைக் கண்ட அளவில் இலக்குவன் கண்களில் நீர் அரும்பிடவும், உள்ளத்தில் எரிந்து பொங்கிய துயரம் புலப்படாத படி அகத்தே வருந்தா நிற்க, அது கண்ட சிதை "இலக்குவா! இங்கு நீ இவ்வாறு துன்புறக் காரணம் என்ன? சொல்லுக''

என்று வினவ, இலக்குவன் வாய்விட்டுக் கதறி அழுதுவிடுகிருன். அது கண்ட சீதை இலக்குவனை நோக்கி, 'தூய்மையுடைய இந்தக் கங்கையாற்றைக் கண்டவர்கள் எல்லாம் வணங்கி மனமகிழ்ந்து நீராடுவார்கள். அங்ஙனமிருக்க, நீ இக்கங்கையைக் கண்டவுடன் துன்புறக் காரணம் என்ன? உலகத்தில் உனக்குத் துன்பம் விளைக்கின்றவர்களுமில்லையே' என்று வினவ, இலக்குவன், 'என் தலைவனுகிய இராமனை இதுவரையில் பிரிந்தறியாதேன்; இரண்டு நாட்கள் பிரிவுண்டாக நான் பிரிந்து விட்டேன்; அந்தத்துயரத்தால் தான் துன்புற்றேன், என்று சொல்லச் சீதை "இலக்குவா! நல்ல தவ முனிவர்களை நெருங்கி அவர்தம் திருவடிகளை வணங்கித் தீவினையை அறுத்துக் கொண்டு, அணிகலன்களையும் புடைவைகளையும் என்தோழிமார்க்கும் அவர்களைப் பெற்ற தாய்மார்க்கும் கொடுத்துவிட்டு, இன்று ஒருநாள் மட்டும் இங்குத் தங்கியிருந்து நாம் மீள்வோம்: நாயகன் பிரிவால் துயருருதே" என்று சொல்கின்ருள்.

இலக்குவன் துன்பத்தை அடக்கிக் கொண்டு கங்கையாற்றைக் கடந்து தென்கரையைச் சேர்ந்து உலக மன்னவனுகிய இராமன் தேவியை வலஞ்செய்து வணங்கி, "ஏழுலகையும் ஆளுதற்குரிய தகுதியுடையவளே! இராமன் கட்டளையிட்டனுப்பிய காரியங்கள் எல்லாவற்றையும் உண்மையானபடி சொல்கின்றேன்" எனக் கண்ணீர்வாரச் சொல்லலானுன்.

இராமன் மானமாகிய கொடியவேல் தன்மார்பில் தைத்தலால் வாடிய முகத்தனுய் நீடிய பெருமூச்சுடையவனுய் விரைவில் அழைக்க வந்து கூடிய தம்பிமார்மூவரில் என்னைக் குறிப்பிட்டு இந்தச் சொற்களைச் சொல்லலானுன். "உலகத்தார் உள்ளது என்று சொன்னது உள்ளதாகும். உலகத்தார் இல்லை என்னச் சொன்னது இல்லையாகும். இந்நிலையை யுணர்ந்து பார்க்கும் போது உலகத்தவர் உள்ளது என்று கூறும் ஒன்றை ஒருவன் இல்லை என்று சொல்வானுயின், உலகத்தார்க்கு அவன் பேயாகத் தோன் வான். உண்மை சொல்வதால் பயன் ஒன்றும் இல்லை. "சீதையைக் கவர்ந்து சென்று இராவணன் சிறையில்வைத்திருக்கவும் அதை நோக்காது காதலால் அவளை மீட்டுக்கொண்டு

வந்து இராமன் அவளோடு வாழும் வாழ்க்கையினும் சாதலே நன்று" என்று உலகோர் சொல்கின்றார்கள். ஆதலால், சீதையைத் தூயவள் என்று சோதனை மூலம் அறிந்து வைத்தும் அசுத்த முடையவளே என்று அவளை நீக்கி விட்டோம்".

என்று இராமன் சொல்ல, நாங்கள் யாவரும் அவனுக்கு எதிர் மொழி சொல்வதற்கு அஞ்சிநின்று அவ்விடத்து நடுங்கா நிற்க, அந்த நெடுந்தகையாகிய இராமன் என்னைப்பார்த்து 'சுமந்திரனை அடைந்து தேரினைப் பயணத்திற்குத் தகுதியுடையதாகப் பண்ணச் செய்துவிட்டு, இன்றைக்குச் சீதையைத்தன் தேரில் ஏற்றி, நகரங்களையும் நாடுகளையும் கடந்து சென்று, காட்டை அடைந்து தன் உயிர்விடுத்துப் புகழ்கொண்ட தந்தை தயரதச் சக்கரவர்த்திக்கு இனிய உயிர் நண்பனாகிய வான்மீகி முனிவன் தங்கியுள்ள பன்னக சாலையின் பக்கத்தில் விடுவாயாக என்று கூறினான். அவன் ஏவலை மறுக்க அஞ்சி இன்று உனைக் கொண்டு வந்தேன்' என்று இலக்குவன் கூறினவுடன், கனலில் காய்ந்த இரும்புச் சலாகையைக் காதில் நுழைப்பது போன்று செவியில் அச்சொல் நுழைந்ததும் சீதை மயங்கி வீழ்ந்தாள்.

பின்பு, தரையில் கிடந்து புரளுவாள்; அந்தத் துயர் பொறாது எழுந்து மீண்டும் வீழ்வாள். இருகைகளாலும் வயிற்றில் அடித்துக் கொள்வாள். துயர் வெள்ளத்தில் அழுந்திக் கிடப்பாள். அவள் உயிர்பிரிந்தது என்று தேவர்களும் கலங்கினர். சீதையின் துயர் நிலைகண்ட இலக்குவன் அலறி வீழ்ந்தான்.

சீதை, பின்னும் பட வேண்டிய துன்பங்கள் மிஞ்சியிருப்பதால் உயிர் அரிதிற்பெற்றுக் கண்விழித்து வாய்விட்டுப் புலம்பத் தொடங்கினாள். "அம்மாவோ! அப்பாவோ! ஆருயிர்த் தோழியர்களே! தாசரதியார் செய்த இக்கொடிய செயலைக் கேள்விப் பட்டபோது என்னபாடு படுவீர்களோ? என்னே, இவ்வுலகத்தில் தீயில் புகுந்து கற்பினை நிலை நாட்டிய யானோ இத்துயரம் படுதற்குரியேன்? இவ்வுலகில் நெய்யாலே நெருப்பை அவிப்பது போலப் பழியாலே பழியை மறைப்பது இது காறும் காணாத ஒன்று. காகுத்தனிடத்தில்தான் இந்த விபரீதத்தைக் கண்டேன். இந்தச் சொல் தம் செவிப்படின் என் மாமியார் உய்யார்.

தன் மனைவியாகிய என்னை யாருமில்லாக் காட்டில் விடச் சொன்ன இராமபிரானோ, அல்லது அவர் சொல்லுக்கு இசைந்து இக்காட்டில் என்னை விட்ட இலக்குவனோ, அயோத்தியில் உள்ள மகளிர் சிரிக்குமாறு இன்னும் சாகாமல் இருக்கின்ற யானோ, நெஞ்சு வலிமையுடையார் யார்? பெண்ணாகப் பிறந்தவர்களில் யான் பட்ட இப்பெருந்துயரம் யார்பட்டார்கள்? உலகப் பழிக்கு அஞ்சி இராமன், தனி ஒருத்தியாக யான் கதறத் தனிக் காட்டில் விடச் செய்தான்; மனுவின் குலத்தில் பிறந்தார்க்கு இதுதான் மனுநெறியோ?

கைகேசியின் அன்பு மனம் வன்பு மனமாக வேறுபடுமாறு கற்பித்த கூனியைப் போல் மடந்தையரோ, மைந்தரோ, யாரோ, என் காதலனை இக்காரியம் செய்யுமாறு கற்பித்திருக்கின்றார்கள்". என்று சொல்லிக் கொண்டு, காட்டிலுள்ள குன்றுகளும் மரங்களும் விலங்குகளும் நடுங்கி உளம் உருகவும் வனதேவதைகள் மன முடைந்து கண்ணீர் சோரவும், சீதை கதறி அழுகின்ற அப்போது இலக்குவன் ஒருவாறு தெளிந்து சீதையை நோக்கி, "உத்தமியே! கேள்; வினைப்பயன் என்பது விண்ணவர்க்கும் வெலற்கரிது என்றால் மானிடர்கள் வெல்லவல்லரோ? உலகமுழுதாண்ட நளன் வினையால் மனைவியைக் காட்டில் விட்டு மடையனாய் வருந்த வில்லையா? அரிச்சந்திரன் தன்மனைவியையும் மைந்தனை யும் விற்றுவிட்டுத் தானும் புலையனுக்கு அடிமையாகி இடுகாடு காத்திருந்தது விதியினால் அல்லவோ? முன்செய்த நல்வினையால் இராமனைக் கணவனாகப் பெற்றாய்; பின்செய்த தீவினையால் அவனைப் பிரிந்தாய்; இவ்வினைத் துயர் நீங்க நின்செயல்எல்லாம் தவச்செயலாகவே இருக்க முயல்க. இராமனை எப்போதும் கருத்தில் வைத்துத் தவஞ் செய்க" என்று கூறிய இலக்குவனை நோக்கிச் சீதை சொல்கின்றாள்:

"நின்தமயனை யான் நிழல்போலப் பிரியாமலிருந்து முன்பு வணங்கப் பெற்ற தவமுனிவர்கள் இப்போது என்னைத் தனித் திருக்கக் கண்டு, உன்னுடைய காதலன் உன்னைப் பிரியக்காரணம் என்ன? என்று கேட்டால் யான் என்சொல்வேன்?

இந்தத் துன்ப நிகழ்ச்சியெல்லாம் என் பழவினையால் விளைந்தது; உலகமுழுதுடைய நின்தமையன் பிழையும் அன்று. உலகோர் பிழையும் அன்று; என்பதை அவர்க்குச் சொல்லுக; யான் பூப்படைந்து நான்கு மாதங்கள் ஆகின்றன. உலகத்தின் வாயை மூடமுடியாது; என்னை வனத்தில் புகுத்தியதின் விளைவு என்னவாக முடியுமோ? யான் அறியேன். என் மேனியை உற்று நோக்கு'' எனச் சீதை சொல்ல, இலக்குவன் தன் உள்ளத்தில் கலந்த துயரத்தால் மனம் கலங்கித் தரையில் வீழ்ந்து கிடந்து அழுது அலறி இதுகாறும் இல்லாமல் இன்றைக்கு இச் சொல்லைக் கேட்க யான் என்ன பாவம்செய்தேனோ? உன் கணவன் உன் கைபிடித்த அன்று முதல்இன்றுவரை உன்னடி பணிந்து நின்று பொழுதினும் நின் மேனியைக் கண்டறியேன்; இன்றுதான் உன்னைக் காணவல்லலேனோ? என்று கூறிக் கொண்டு தன் துன்பத்தை அடக்கிக் கொண்டு சீதையின் மலரடி பணிந்து கொண்டு கங்கையைக் கடந்து அயோத்தி நோக்கிப் புறப்பட்டான்.

இன்னும் இலக்குவன் போவானோ? மீள்வானோ என நினைந்து சீதை பார்த்துக் கொண்டிருந்து 'பொன்னின் மணித்தேர் காணேன்; போய் மறைந்தான் இலக்குவனும்; என்னை அறவே கைவிட்டு விட்டார்கள்; ஓ விதியே! இலங்கையில் சிறையில் நெடுங்காலமிருந்து புலம்பி அழுது யான்பட்ட பெருந்துயரம் போதாமல் உலகில் விளங்கும்படி பழியைப் பூட்டித் தனியே கானில் விடச்செய்து தடுத்தற்கரிய துயரை விளைத்துவிட்டாயே! என்மேல் குற்றமான பழியைச் சுமத்தி, 'இந்தப் பிறப்பில் உன்னை ஒழிய பிறமாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்று வரம்தந்த காதல் மிக்க கணவனை மனம் கலங்கச் செய்து, என்னைக் காட்டில் விடச் செய்து வேதனை நோய் மிகத்தந்த விதியே! இனி, என்ன என்ன செய்வாயோ?

கண்ணோட்டமில்லாமல் இராமன் எனைக் காட்டில் விடக்கண்டிருந்தும் இம்மண்ணுலகத்தவர் அவ்விராமன் கொடுமையைப் பற்றி ஒன்றும் வாய்திறவாது இருந்தவர்கள், என்னைப் பார்த்து 'மானமில்லாதவள்-தகுதிகெட்டவள்' என்று பழிக்கச் செய்தாய்; ஓ விதியே! தாமரை மலர்போன்ற கண்ணையுடைய இராமன் மனத்தைக் கலக்கித் தன் உறவினர் சொல்லையும் கேட்காதபடி

செய்து விட்டுத் துன்பம் இடையறவு படாமைக்குக் காரணமான கொடிய வினையையுடைய எனக்கு ஒருநாளும் மீட்சியில்லாக் காட்டைத்தந்த ஓ விதியே!

துக்கவமாகிய கணவன் கோபித்துத் தன்மனைவியைக் கைவிட்டு நீக்கிவிட்டால் அவளைப் புக்ககத்தில் உள்ள மற்றவர்களும் ஏற்றுக் கொள்ளாமல் கைவிட்டு விடுவார்கள். பிறந்த வீட்டிற்குச் சென்றாலோ, அவர்களும் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். அயலார் வீட்டிற்குச் சென்றாலோ, அவர்கள் அந்தக்கணத்தில் பழி போடுவார்கள். நீக்கற்கரிய தீவினையுடைய யான், புகுதற்கு இம்மூன்றிடத்தினும் வேறான ஓரிடத்தைக் காண்கிலேன். என் செய்வேன்? இந்தத் துன்பமெல்லாம் தீர என் உயிர்தான் போகாதோ? என வெறுத்துக் கதறுகின்ற பொழுது வான்மீகியின் சீடர்கள் சீதை அழுகின்ற இடத்திற்கு வந்து சேர்கின்றார்கள். அழுகின்ற சீதையைக் கண்டு மனமிரங்கித் தவமுனிவராகிய வான்மீகியை அணுகித் தொழுது, 'முனிவர் பெருமானே? ஓவியத்திலும் எழுதிக்காட்ட வியலாத அழகினையுடைய ஒரு நங்கை தேவர் உலகிலிருந்து வழுவி வீழ்ந்தவளோ? அல்லது மண்ணுலகில் இருப்பவளோ? அறியோம். ஒரு துணையுமின்றித் தெய்வமே துணையாக இருகண்ணீர் அருவிசோரத்தரையில் விழுந்து அழுகின்றவளுக்கு அருள் செய்தல் உங்கட்குப் பொருந்தும் என்று வேண்டிக் கொண்டார்கள், என்பது இப்படலப் பொருளாகும்.

## ஒட்டக்கூத்தர் வான்மீகியோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில் இராமன் ஒருநாள் பிற்பகலில் தம்பிமாரோடு இருந்து உரையாடிக் கொண்டிருந்தபோது விண்ணில் ஓர் இனிமையான ஒலிகேட்கின்றது, தன் பெயரைச் சொல்லி அழைத்து "யான் கைலாசத்திலிருந்து திரும்பிவந்த புட்பக விமானம். மலர்ந்த முகத்துடன் என்னைப் பார்த்தருள்க. தேவரீருடைய கட்டளையைப் பெற்றுக் குபேரருக்கு அடிமை செய்ய நான்போய்ச் சேர்ந்தேன். அவர் என்னிடம் இவ்வாறு சொன்னார்: "புருடோத்தமனாகிய இராமன், எவராலும் வெல்லுதற்கரிய இராவணனை வென்றமையால் அவ்விராமனால் சொந்தமாக்கிக் கொள்ளப்பட்டாய் ஆனாய்; ஆதலால் நீ அவருக்கே ஊர்தியாகுக. உன்னிடம் யான் கட்டளையிடுகின்றேன். அதுதான் என் மனத்தில் கொண்டிருந்த விருப்பம் என்று சொல்லியனுப்பி விட்டார்.

குபேரனது கட்டளையைப் பெற்றுத் தேவரீருடைய சந்நிதிக்கு வரலானேன்; என்னை அருள் நோக்கோடு ஏற்றுக் கொள்க.'' என்று புட்பகம் கூறியதாகவும் இராமன் உதவி வேண்டும்போது நினைக்கின்றேன்; அப்போது வா என்று சொல்லி அனுப்பிய தாகவும் உள்ளது.

ஒட்டக்கூத்தர் இதைச் சிறிது மாற்றிக் கூறியுள்ளார். நண் பகல் வழிபாடு முடித்து இராமன் தம்பியரோடு உணவு கொள்ளும் போது விண்ணில் புட்பகம் தன்னைப் பற்றிக் கூறிக் கொண்டதாகவும், குபேரன் முன்பு எனக்குச் சொன்ன சொற் களைக் கேள் என்று தொடங்கித் தசரத இராமனால் இராவணன் இறப்பது உறுதி. அவன் இறக்கும் வரையில் நின்னால் ஆன தொண்டினைச் செய்க. அவன் இறந்தால் நான் என் சிந்தை நோய் தீரும்: எனக் குபேரன் எனக்குச் சொன்னவாறே முடிந்தது. யான் போய் அந்தக் குபேரனைக் கண்டு வருகின்றேன். என்று புட்பகம் கூறக்கேட்ட இராமன் அப்புட்பகத்தை மலர் கொண்டு பூசித்து விட்டுப் 'போ' என விடை கொடுத்தனுப்பிய தாகவும் புட்பகம் விரைந்து சென்றதாகவும் கூறியுள்ளார்.

வான்மீகி கூறியதுபோல் குபேரன் புட்பகத்தை இராமனிடம் சென்று பணிபுரியச் சொன்னதும் அதை அறிந்த இராமன், 'உதவி வேண்டும் போது நினைக்கின்றேன். அப்போது வா' என்று சொல்லி அனுப்ப அவ்விமானம் விரைந்து மறைந்த செய்தியும் ஒட்டக்கூத்தர் கூறியுள்ளபடி. இராமன் புட்பகத்தைப் பூசித்தல் அவன் தலைமைக்கேலாதது போல் தோன்றுகின்றது.

2. வான்மீகத்தில்:- புட்பகம் இவ்வாறு இராமனுடைய கட்டளையை ஏற்றுச்சென்ற நிகழ்ச்சியைக்கண்ட பரதன் வியப்பு மேலிட்டவனாய் இராமனுடைய ஆட்சியைப் பற்றிப் புகழ்ந்து கூறுகின்றான். இராகவரே! உங்கள் ஆட்சி தொடங்கி ஒரு மாதம் நிறைவு பெறுகின்றது. இவ்வாட்சியில் மானிடர்களுக்கு எப் பொழுதும் ஆரோக்கியமே. பிராணிகளுக்கும் அதிக வயது முதிர்ந் தும் மரணம் வருவதில்லை. பெண்டிர் குழந்தைகளைச் சுகமாய்ப் பெறுகின்றார்கள். மக்கள் எல்லாம் செல்வமுடையவராகவே விளங்குகின்றார்கள். நாட்டில் உள்ளவர்களும் நகரத்தில் உள்ள வர்களும் மனமகிழ்வு மிகப் பெருக இனிதாக வாழ்கின்றார்கள். இந்திரன் இனிப்பான தண்ணீரைச் சரியான காலத்தில் பொழி

கின்ருள். எக்காலத்திலும் எத்திசையிலிருந்து வரும் காற்றும் உடம்பிற்குச் சுகம் தருவதாகவே வீசுகின்றது.

நாட்டிலும் நகரத்திலும் உள்ள மக்கள், 'இத்தகைய மன்னராட்சி நிரந்தரமாக இருக்கவேண்டும் என்று ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்கின்ருர்கள். துறவிகளின் குறைகளையும் தீர்த்து வைப்பதால் அவர்கள் மன நிறைவு கொண்டு விளங்குகின்ருர்கள்'' என்று பரதன் கூறக்கேட்ட இராமன் மிக்க மகிழ்ச்சியுற்றிருந்தான்' எனக் கூறப்படுகின்றது.

ஒட்டக்கூத்தர்:- பரதன் கூறியவற்றில் சில புதிய செய்திகளைச் சேர்த்துக் கூறுகின்ருர். "இவ்வுலகத்து எவரிடத்தும் அம்பு முதலிய ஆயுதங்களால் யார்க்கும் மரணம் ஏற்படவில்லை கொடிய சிங்கத்தால் யானைக்கு அச்சமில்லை. வேங்கைப்புலி பசுவையும் மானையும் சார்ந்து நட்புக் கொண்டு வாழ்கின்றது. நீராலும் நெருப்பாலும் யாரும் உயிர் துறக்கவில்லை. தாம் உயிருடன் இருக்கும் போது தம்மக்கள் மரணம் எய்தவில்லை. கணவனை இழக்கின்ற பெண்டிரும் இல்லை. பெண்டிர் ஆண் மகவைப்பெறுகின்ருர்கள்''. என்ற கருத்துக்கள் வான்மீகத்தில் இல்லாதவை. இவை ஒட்டக்கூத்தரின் கற்பனையாகவே இருக்கின்றன. இயல்பான நிகழ்ச்சிகளாகவும் இல்லை.

3. வான்மீகத்தில்:- இராமனும் சீதையும் வேனிற்காலத்தில் அழகுமிக்க மலர்வனத்தில் தங்கியிருந்தபோது இராமன் சீதையைக் கையால் பற்றிக்கொண்டு புண்ணியம் தருவதும் இனிப்பாயிருப்பதுமாகிய மைரேயகம் என்னும் மதுவைப் பருகச் செய்ததாகவும், இராமன் பணியாளர் கொணர்ந்த சுவை மிகுமாறு பக்குவப் படுத்தப்பட்ட மாமிச உணவையும் பழங்களையும் உண்டு மகிழ்ந்ததாகவும் உள்ளது.

ஒட்டக் கூத்தர் இந்த நிகழ்ச்சிகளைக் கூருது விடுத்தது நாகரிகமாக உள்ளது.

4. வான்மீகத்தில்:- இராமனுல் விலக்கப்பட்ட ய்தியை இலக்குவனுல் அறிந்த சீதை துன்புறும் நிகழ்ச்சி இயல்பாக விவரிக்கப் பெறுகின்றது. மிக்க ஆசையுடன் போற்றி வளர்க்கப்பட்ட இந்த உடம்பு துக்கமே வடிவெடுத்து வந்ததென இப்பொழுது

காணப்படுகின்றது; பிரமனுல் துக்கத்திற்கென்றே நிச்சயமாகப் படைக்கப்பட்டிருக்கின்றேன். எந்தப் பாவத்தையும் சிந்தையாலும் செய்தறியாத யான் என் கொழுநரால் துறக்கப்பட்டிருக்கின்றேன். இதைப்பார்க்கும்போது முன்னைப் பிறப்பில் மனைவியோடு கூடியிருந்த ஒருவனை யான் பிரித்துத் துன்புறுத்தியிருப்பேனே? என்று எண்ணுகின்றேன். இலக்குவ! என்கணவரால் கைவிடப்பட்ட யான் இந்தக் கங்கைக் கரையில் உயிரை விட்டுவிடலாம். ஆனுல், என் கணவரது அரச பரம்பரை பழிக்கப் படுமேயென்ற எண்ணத்தால் யான் அதைச் செய்திலேன்.

இப்போது உலகத்தார் கூறும் பழிமொழிக்கு எவ்வளவு வருந்துகின்றேனே, அவ்வளவு என் உடம்பைப்பற்றி வருந்தவில்லை. ஒரு பெண்ணுக்குக் கணவனே தெய்வம்; கணவனே உறவு; கணவனே குரு; ஆதலால் கணவனுடைய காரியந்தான் என்னுயிரினும் சிறந்தது. உலகவர்தம் நீதி நெறிக்குக் குற்றம் வாராதபடி பார்த்துக்கொள்வதே சிறந்தது. அதனுல் உண்டாகும் புகழ் ஒப்புயர்வில்லாதது. "தேவரீருக்கு இந்த அறந்தான் எதற்கும் மேலானது" என்று யான் கூறியதாக என்கணவருக்கு விண்ணப்பம் செய்க" எனச் சீதை கூறியதாக உள்ளது.

இந்தச் சிறந்த கருத்துக்களை ஒட்டக்கூத்தர் கூறவில்லை; ஆனுல், வான்மீகி கூருத கருத்துகள் சிலவற்றை இவர் கூறியுள்ளார், 'கணவனுல் கைவிடப்பட்ட பெண்டிரைக் கணவன் வீட்டாரும் வெறுத்து ஒதுக்கிவிடுவார்கள். பிறந்த வீட்டிற்கும் சென்றுலோ, அவர்களும் வாழாத பெண்டு என்று ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். இவ்விருதிறந்தாரும் அல்லாத அயலார் வீட்டுக்குச் சென்றுலோ, அந்தக்கணத்தில் அவர்கள் பழிபோடுவார்கள். இந்த மூவிடந்தவிர வேறும் ஓரிடம் இருப்பதாகத் தெரியவில்லை' என்ற கருத்துக்கள் கணவனேடு வாழும் மகளிர்க்கு நல்லவழி காட்டியாக அமைந்துள்ளன.

5. வான்மீகத்தில்:- சீதையை வனத்தே விடுத்துத் திரும்பிய இலக்குவன், சுமந்திரனேடு பேசுகின்றுன். "சீதையைப் பற்றிப் பட்டினத்து மக்கள் பிதற்றிய சொற்களைக் கொண்டு புண்ணியவானுகிய ஒருவன் பழிதரத்தக்க இச் செயலைச் செய்வானு? தனியாகச் சீதையை காட்டில் விடுவது அதிகமான துன்பத்தைத்

தருஞ்செயலாகும்,'' என இலக்குவன் கூறக்கேட்ட சுமந்திரன் சொல்கின்றான், ''இலக்குவ! சீதையைப் பற்றிய இச்செய்தி முன்னமே முனிவர்களால் தீர்க்க தரிசனமாக (தொலை நோக்காக)க் கண்டு சொல்லப்பட்டது. இதைப்பற்றி எண்ணி நீ மனதைப் புண்ணாக்கிக் கொள்வது பயன் இல்லாத செயலாகும்.

முன்பு ஒருகாலத்தில் தயரதச் சக்கரவர்த்தியாரோடு ஏகாந்தமாயிருந்த போது சொல்லியதைக் கேட்டறிந்த நான், தலையெழுத்து எவராலும் மாற்ற முடியாது என்பதை எடுத்துக் காட்டுடன் சொல்கிறேன். அத்திரிமுனிவரின் புதல்வர் துருவாசர் வசிட்டருடைய தவக்குடிலில் தங்கியிருந்தபோது ஒருகதையின் முடிவில் துருவாசரைப் பார்த்து, 'அடியேனுடைய அரச மரபு எவ்வளவு காலம் விளங்கும்? இராமன் எவ்வளவு ஆயுள் வரையில் நீடிப்பான்? மற்ற புதல்வர்களும் எவ்வளவு நாள் வரையில் இருப்பார்கள்? இராமனுக்குப் புதல்வர் எத்தனை பேர்? அவர்களுக்கு எவ்வளவு ஆயுள் உண்டு? என்று தயரதன் வினவ, துருவாசர் சொல்கின்றார். ''தேவாசுர யுத்தத்தில் அசுரர்கள் தேவர்களால் அடித்து ஓட்டப்பட்டவர்களாய் பிருகுமுனிவரின் மனைவியிடம் அடைக்கலம் புகுந்தார்கள். அச்சம் நீங்கி அவ்விடத்தில் வசித்து வந்தார்கள். அது கண்ட திருமால், கோபம் கொண்டு துட்டர்களுக்கு ஆதரவு தந்த பிருகு முனிவரின் மனைவியைச் சக்கரத்தால் கொன்று விட்டார். அது கண்ட பிருகு முனிவர் வெகுண்டு, ''திருமாலே! கோபத்தால் மெய்மறந்து கொல்லத் தகாத என் மனைவியைக் கொன்றனை; ஆதலின், நீ மானிட உலகில் பிறந்து அவ்விடத்தில் பலவாண்டு வரை மனைவியைப் பிரிந்து வாழக்கடவாய்'' என்று சபித்துவிட்டு பின்பு திருமாலின் பெருமையை நினைந்து முன் செய்த குற்றத்திற்கு இரங்கலானார். மற்றை முனிவர்களிடம் தன்னைச் சாபத்திலிருந்து காப்பாற்ற வேண்டினார்.

அவர்கள் பிருகு முனிவரைப் பார்த்து, ''இரவினும் பகலினும் நீ நாராயணனையே தோத்திரம் செய்து அடைக்கலம் புகுக'' என்கின்றனர். அவ்வாறே செய்து வந்த பிருகு முனிவரின் முன் திருமால் தோன்றினார். ''உன்மொழி வீணாகப் போகாது, நான் அதற்கு உடன்படுகின்றேன். என்னைப் பற்றிய பாபத்திலிருந்து நீ விடுபடுகின்றாய். இனி, அதுபற்றிக் கவலை வேண்டா

நீர் சத்தியமாய்ச் சொல்லிய வாக்கு உலக உபகாரத்தின் பொருட்டு என்னால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியதே'' என்று சொல்லிச் சென்றார்.

''தயரத! பிருகுவின் சாபம் பெற்ற திருமால் நும் புதல்வ வராய் அவதரித்துள்ளார். இராமர் பிருகு முனிவரின் சாபப் பயனையும் அனுபவிப்பார். இராமர் அயோத்திக்கு அரசராய் நெடுங்காலம் —பதினோராயிரம் ஆண்டு— இருப்பார். பிறகு பிரமலோகம் செல்வார். இராமருக்குச் சீதையினிடத்தில் இரு பிள்ளைகள் அயோத்திக்கு வெளியில் பிறப்பார்கள். அவர்கட்கு முடி சூட்டுவார்'' எனத் துருவாச முனிவர் சொல்லி மோனம் மேற்கொண்டார். தயரதர்க்கு முன்பு முனிவர் கூறிய இச் செய்திகளை யான் உடனிருந்து கேட்டேன். இவை விதிப்படி நடந்தே தீரும். எனவே, சீதை இராமர் இவர்களைப் பற்றி ஏதும் துன்புறாது உறுதி மேற்கொள்க எனச் சுமந்திரன் கூறி முடித்தான். இலக்குவன் கேட்டு அமைதியுற்றான்: என வான் மீகத்தில் உள்ளது.

ஒட்டக்கூத்தர் இந்தப் பழைய நிகழ்ச்சி பற்றி யாதும் கூற வில்லை. சுமந்திரன் பேச்சே இங்கு இல்லை. சுமந்திரன் கூறியது இரகசியச் செய்தியாதலின் அது இரகசியமாகவே இருக்கட்டும் எனக் கூறாது விடுத்தார்போலும். ஒட்டக்கூத்தர் இதனைக் கூறி யிருந்தால் இந்தத் துன்ப நிகழ்ச்சிகட்குப் பழைய வினையே காரணம் என்பதை அறிந்துகொள்ள ஏதுவாயிருக்கும். தெய்வத் தையும் வினை விடுவதில்லை என்ற உண்மை தெளிவாகும்.

6. வான்மீகத்தில்:— சீதை தன்னைக் காட்டில் விடுத்துப் பிரியும் இலக்குவனிடம் இராமனுக்குச் சொல்லும்படி கூறி யனுப்பிய செய்திகள் கற்பினுக்கு அணியான சீதையின் பெரு மையை எடுத்துக் காட்டுவனவாம். ''இலக்குவ! கணவரால் கைவிடப்பட்ட யான் கங்கையில் மூழ்கி என்னுயிரை விடுப்பேன். ஆனால் என் கணவருடைய அரச பரம்பரை பழிக்கப்படுமே என்ற அச்சத்தால் அதனைச் செய்திலேன். இலக்குவ! மன்னரின் ஆணைப்படி நீ செய்ய வேண்டியதைச் செய்து முடிப்பாயாக. மாமியார் எல்லோர்க்கும் நான் நலம் பற்றி விசாரித்ததாகச் சொல்லுக. மன்னவர்க்குத் திருவடிகளில் என் தலை தாழ்த்தித்

தண்டனிட்டுக் கை கூப்பி வணங்கி யான் சொல்கின்றபடி சொல்லுக.

"யான் வணங்கும் தெய்வமே! உழவுப் பூமியினின்றும் உதித்தவளாய் அந்தக் கரண சுத்தியுள்ளவளாய் உளமார்ந்த பத்தியினுல் என்றுமே நும்மைத் தியானம் செய்து கொண்டு எக்காலத்திலும் நும் நலத்தையே விரும்புகின்றவளாய் யான் இருந்தது நும் உள்ளத்திற்குத் தெரிந்திருக்கும்.

உத்தமரே! நாட்டு மக்களிடத்தில் உண்டான பழிச்சொல் லுக்கு அஞ்சியதால் யான் கைவிடப்பட்டேன். தேவரீருக்கு நாட்டு மக்களின் பழிச் சொல்லால் குற்றம் வந்திடுமாயின், அக் குற்றம் என்னுலும் தீர்த்து விடப்படவேண்டியதே; எனக்குத் தாங்கள்தானே பரமகதி! மன்னர் எப்பொழுதும் அறநெறியில் மாருத பற்றுள்ளவர் என்று நாட்டு மக்களால் கொண்டாடப் படவேண்டியதுதான். முன்னேர்களிடத்தில் எப்படியோ, அப் படியே நாட்டு மக்களிடத்தும் தாங்கள் நடந்து கொள்ள வேண் டியதுதான். நாட்டுமக்கள் நீதி நெறிக்குக் குற்றம் வராதபடி பார்த்துக் கொள்ள வேண்டியதே. அதனுல் உண்டாகும் புகழ் ஒப்புயர்வற்றது. தங்கட்கு இந்தத் தருமம்தான் எதற்கும் மேலானது. யானும் இப்பொழுது நாட்டு மக்களின் பழிச் சொல்லுக்கு வருந்தும் அளவுக்கு என்னுடம்பைப் பற்றித் துன் பப்படவில்லை. "பெண்டிர்க்குக் கணவனே தெய்வம்; கணவனே உறவு; கணவனே குரு; ஆதலால், கணவரது காரியந்தான் உயிரினும் சிறந்த அருமைப்பாடுடையது".

இலக்குவ! இந்தக் கருத்துகளை நும்தமையனுக்குச் சொல்லுக.

சீதை இராமனுக்குச் சொல்லுமாறு இலக்குவனிடம் கூறிய இக்கருத்துக்களை ஒட்டக்கூத்தர் தம் உத்தரகாண்டத்தில் கூற வில்லை. சீதையின் பெருமையெல்லாம் புலப்படும் இவ்வுயரிய கருத்துக்களை ஏனே சொல்லாமல் விட்டார் என்று வருந்த வேண்டியுள்ளது.

## வான்மீகி கூறுதிருந்தும் ஒட்டக்கூத்தர் கூறியவை

இராமன் கைவிட்டான் எனத் துன்புறும் சீதையைப்பார்த்து இலக்குவன் கூறுகின்றான்:-

"உத்தமியே! வினைப்பயனை வெல்லுதல் விண்ணவர்க்கும் அரிது. மானிடர் அவ்வினையை வெல்ல இயலுமா? உலகிற்கு ஒரு தலைவனாய்த் தன் ஆணைச்சக்கரத்தை நடத்தி மலையனைய யானை மேல் மதிக்குடைக்கீழ் வாழ்ந்த நளன் பின்பு வினைவயத்தால் தன் நிலை கெட்டு இருதுபன்னன் என்பானுக்கு மடைத் தொழில் செய்து வருந்தினனே!

தன்னிகரில்லாத பெருமையுடைய அரிச்சந்திரன் தன் மைந்தனையும் மனைவியையும் விட்டு முன்பு செய்த தீவினையால் பறையனுக்கு அடிமையாகி இடுகாடு காத்துக் கொண்டு நின்றான்.

எனவே, முழுதும் உணர்ந்த பெரியோர்கள் இன்பதுன்பங்களை யெய்தியபோது, இவையெல்லாம் முன் பற்றி விடாத வினைப் பயன் என்பர். முன் செய்த நல்வினையால் இராமனைக் கணவனாகப் பெற்றுப் பின்செய்த தீவினையால் அவனைப் பிரிந்திட்டீர்கள்: இரு வினைகள் என்னதான் செய்யமாட்டா? இனி, நீர் இந்தத்துயர் உறுதபடி நும் செயல் எல்லாம் இராமனை நோக்கிச் செய்யும் நெடுந்தவமாகவே இருக்கட்டும்."

என இலக்குவன் கூறியதாக ஒட்டக்கூத்தர் கூறியுள்ளார். இங்குக்கூடிய நளனது சரிதமும் அரிச்சந்திரன் சரிதமும் வான்மீகத்தில் காணப்படாதவையாகும்.

## சீதை வனம்புகு படலத்தின் பொருட் சிறப்பு
## இராமன் ஆட்சிச்சிறப்பு

இப்படலத்தில் பரதன் இராமனுடைய ஆட்சியில் நடைபெறும் அற்புதச் செயல்களைக் கண்டு வியந்து கூறும் பகுதி சிறப்பானது எனலாம்.

அம்பு முதலிய ஆயுதங்களால் மக்களுக்கு மரணமில்லை; சிங்கத்திற்கும் யானைக்கும் பகையில்லை. புலி பசுவோடும் மானோடும் நட்பு செய்து வாழ்கின்றது. நீரினாலும் நெருப்பினாலும் யாரும் சாவதில்லை. தந்தையிருக்க மகன் இறப்பதில்லை. நோய் யார்க்கும் வருவதில்லை. நோயே யில்லாமல் மிகவும் மூத்தவர்க்கும் எமன் செய்யும் துன்பம் இல்லை. மகளிர் கணவனை இழந்து வாழ்வதில்லை; மகளிர் ஆண்மக்களை மிகுதியாகப் பெறுகின்றார்கள். ஆண்மகவு இன்றி வருந்துவோர் இல்லை. இவை இராமன் அறத்தின் அடிப்படையில் ஆட்சி செய்வதால் நிகழ்கின்றன என்பது சிந்தனைக்குரிய சிறப்புடையதாகும்.

## இயற்கை வருணனை

இலையுதிர் காலத்தில் பழுத்த இலைகள் தரையில் விழப் புதிய தளிர்கள் தோன்றுவது மரங்கள் பழைய போர்வையை எடுத்துவிட்டுப் புதியபோர்வையைப் போர்த்திக் கொண்டது போலவுள்ளது. கோங்கமரங்கள் பொன்னிற மலர்களால் நிறைந்திருக்கும் தோற்றம் பொன்னாடை போர்த்தியது போலத் தோன்றுகின்றது. முருக்க மரங்கள் சிவந்த மலர்களோடு விளங்குவது சிவந்த போர்வையைப் போர்த்திக் கொண்டதுபோலக் காணப்படுகின்றது என்றாற்போன்ற வருணனைகள் மனங்கவரும் மாண்புடன் திகழ்கின்றன.

## சந்திரன் உதயம்

'பிரிந்தவர்க்கு ஆலமாகிப் பிரிவிலார்க்கு அமிழ்தமாகி விரிந்த வெண்ணிலவை வீசி வெண்மதி தோன்றிற்று' என்பது நிலவின் தோற்றத்தைப் பற்றிக் கூறியுள்ள அழகான கருத்தாகும். இச் செய்யுட் பகுதியின் சொல்லமைப்பும் இனிய ஓசையும் கற்போர் உள்ளங்கவரும் இயல்பின. இளங்கோவடிகள் அந்திமாலைச் சிறப்புச் செய்காதையில் கூறியுள்ள "கூடினால் பால் நிழலாய்க் கூடார்பால் வெய்யதாய்க், காவலன் வெண்குடைபோல் காட்டிற்றே மாதவிக்கும் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து, போதவிழ்க்கும் கங்குற் பொழுது" என்ற வெண்பாவினை நினைப்பிக்கின்றது காணலாம்.

இராமன் சீதையோடு பூம்பொழிலில் புகுகின்றான். அவர்கள் வரவைக் கண்டு அன்னம் பூஞ்சோலையில் மறைகின்றது. மயிலும் அசோக மரத்தில் ஏறி அமர்கின்றது. இக்காட்சியைச் சீதைக்குக் காட்டித் தற்குறிப்பேற்றமாக இராமன் கூறும் பகுதி உள்ளங்கவரும் உயர்வுடையதாக உள்ளது.

மென்னடை அன்னம் துன்னுமலர்ப் பொழிலில் புகுந்த தற்குக் காரணம் சீதையின் நடை, அன்னத்தின் நடையினும் மிக்க அழகுடையதாகலின் அவள் நடைக்குத்தோற்று அஞ்சி வெளியிடத்தில் நிற்க நாணித்தான் எனச் சீதையின் நடையழகினைச் சிறப்பித்துக் கூறுகின்றான். மயில் சீதையின் சாயலுக்குத் தோற்றுவிட்டமையால் உயிர்தாங்கி யிருக்கமாட்டேன் என்று நெருப்பில் மூழ்குவது போலச் சிவந்த மலர்கள் நிறைந்த அசோக மரத்தில் சென்று வீழ்கின்றதாம். இக்காட்சிகளைச் சீதைக்குக் காட்டித் தற்குறிப்பேற்றமாக இராமன் கூறியுள்ளான். அன்னத்தையும் மயிலையும் காட்டுவான்போல அவை சீதையின் நடைக்கும் சாயலுக்கும் தோற்றுப் பூம்பொழிலில் மறைவதாகவும் தீப்புகுவதாகவும் சொல்லிக்காட்டிச் சீதையின் நடையையும் சாயலையும் புகழ்வது காணலாம். இப்பகுதி, சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகியின் அழகைப் பாராட்டுமிடத்துக் கூறிய

"மாயிரும் பீலி மணிநிற மஞ்ஞைநின்
சாயற் கிடைந்து தண்கா னடையவும்
அன்ன நன்னுதல் மென்னடைக் கழிந்து
நன்னீர்ப் பண்ணை நளிமலர்ச் செறியவும்
(சிலப் - மனையறம் - 53-56)

என்ற பகுதியை நினைப்பிக்கின்றது நினையலாம். இளங்கோவடிகள் காட்டிய மயில் கண்ணகியின் சாயலுக்குத் தோற்றுத் தாழ்ந்த காட்டை அடைந்தது. ஆனால் ஒட்டக் கூத்தர் காட்டிய மயிலோ சீதையின் சாயலுக்குத் தோற்று உயிர்வாழ விருப்பமின்றித் தீயில் மூழ்குகின்றது. இதனால் இளங்கோவடிகளைக் காட்டிலும் ஒட்டக் கூத்தர் ஒருபடிமேலே சென்றிருக்கின்றார் என்பது புலனாகும்.

## அணி அமைப்பு

மன்மதன் அம்பு எய்யும் செயலை ஒட்டக் கூத்தர் உருவக அணி பொருந்தக் கூறியுள்ளார். அது மிகச்சிறப்புடன் விளங்கு கின்றது. வேடர்கள், விலங்கு வேட்டைக்குப் போகும்போது புதரிலுள்ள விலங்குகள் தப்பி ஓடாவண்ணம் வலையினைவிரித்துக் கட்டுதலும் வலையில் தப்பிச் செல்லும் விலங்குகளின் மேல் நாய்களை ஏவிக் கவ்வச் செய்தலும் விலங்குகளைப் போலக் கூப் பிட்டு அவற்றை வலையில் விழச்செய்தலும் அம்பினுல் எய்தலும் வழக்கமாகும். வேடர்களின் இந்தச் செயல்களையெல்லாம் மன் மதனுகிய வேடன் செய்து, பிரிந்த மைந்தரையும் மலரம்புகளால் எய்தான் என உருவகத்தாலும் சிலேடையாலும் திறம்பெறச் சொல்கின்ருர் ஆசிரியர். பிரிந்த காதலர்க்கு வெண்ணிலவும் தென்றலும் துன்பம் செய்வனவாதலின் வெண்ணிலவை வலை யாகவும் தென்றலை நாயாகவும் உருவகம் செய்கின்ருர். வேள் தன் என்ற இருசொற்களை வேடன் எனச் சிலேடைவகையால் உருவகஞ் செய்து நயம்பட அமைத்துள்ளார். பிரிந்த அன்றிற் பெடையின் இரக்க ஒலி பிரிந்தார்க்குப் பெருந்துன்பஞ் செய்வ தாகலின் பிரிந்தாரை வருத்தும் மன்மதன் அவ்வன்றிலைத் திசை தொறும் கூவுமாறு செய்கின்ருன். இவற்ருல் எல்லாம் மெலிவுற்ற காதலர்கள் மலர் அம்புகளால் நையுமாறு எய்கின்ருன் எனத் திறம்படக் கூறியிருப்பது புலவர்கட்கு நல்விருந்தாக அமை கின்றது. அழகுமிக்க அப்பாடல்

> பிரிந்த காளையரை மாதரைக் கொல்வான் பேரவோர்
> வழியிலாவண்ணம்
> விரிந்த வெண்ணிலவாம் வலையினை வீச வெண்கதிர்த்
> திங்களையேவிப்
> புரிந்து வெங்கொலை செய் தென்றல் நாய் விட்டுப்
> பூங்கணைவேடன் வாயம்பு
> தெரிந்தனன் அன்றில் பெடையினை எட்டுத் திசை
> தொறும் கூப்பிடச்செய்து.

என்பதாகும். இயல்பாகச் சந்திரன் நிலவு வீசுவதையும் தென்றல் அசைவதையும் அன்றில் கூவுவதையும் மன்மதன் ஏவலால் நிகழ்

வதாகத் தற்குறிப்பேற்ற அணியும் அமையக் கூறியுள்ளார். வெண்ணிலவாம் வலை; தென்றல் நாய் என்பன உருவக அணி. (பூங்கணை) வேடன் என்பது பிரிமொழிச் சிலேடையணி. இவ்வாறு பலவணிகள் சேர்ந்து வந்தமையால் இச்செய்யுளில் சங்கீரண அணி அமைந்துளது எனலாம். இவ்வாறு பலவகையான அணிகளையும் பொருத்தமான இடங்களில் அமைத்து அழகு செய்துள்ளார் ஒட்டக்கூத்தர்.

இராமன் சீதைக்குப் பொழிலின் எழிலைக்காட்டிக் கூறும் பாடல்கள் கற்பனை நயமும் கவிநயமும் பொருந்திப் புலவர்க்கு அமுதென்னுமாறு அழகுமிக்கு மிளிர்கின்றன.

சீதையை வனத்திற்கு அழைத்துச் சென்ற இலக்குவன் தனக்கு இராமன் இட்ட கட்டளையைப் புலப்படுத்தியவுடன் சீதையின் நிலையைப் புலப்படுத்தும் பாடல்கள் துன்பத்தின் எல்லையைக் காட்டுவனவாகவுள்ளன.

மண்பிறந்த பின்பிறந்த மறிகடல்சூழ் வையகத்துப்
பெண்பிறந்தார் யான்பட்ட பெருந்துயரம் ஆர்பட்டார்?

என்று சீதை கூறிப்புலம்பும் பகுதி ஊனையும் உயிரையும் உருக்கும் இயல்பினதாதல் காணலாம்.

துன்புறும் சீதைக்கு ஆறுதல் கூறும் இலக்குவன் சொற்கள் மிக உயர்ந்த கருத்து நிறைந்த கருவூலமாகத் திகழ்கின்றன. அவற்றுள் இன்பதுன்பங்கள் வருங்கால் அவற்றால் மனம் ஒருபால் கோடாது இவையெல்லாம் வினைப் பயன் என அமைதியாக இருத்தல் வேண்டும் என்று கூறுகின்ற பாடல் சிறப்புடன் விளங்குகின்றது. அது,

இன்பத்தி லிறு மாந்து தோணுேக்கி யின்பமறத்
துன்பத்தி லழுந்துவார் தொல்லுலகி லறியாதார்;

இன்ப துன்பங்களவை எய்தியபோது, இவையெல்லாம் முன்பற்றி விடாத வினைப்பயன் என்பார் முழுதுணர்ந்தோர் என்பதாகும் இதில் அறியார் செயலும் அறிந்தவர் செயலும் வினைப் பயன்

நுகருங்கால் எவ்வாறிருக்கும் என்பதைத் தெளிவாக்கியுள்ளமை காணலாம். இனி, விதியை விளித்துக் கூறும் சீதையின் சொற்களில் உருக்கமும் உண்மையும் நிறைந்து காணப்படுகின்றன. அவற்றுள் கணவனால் புறக்கணிக்கப் பெற்ற பெண்ணைப் புக்ககத்தாரும் பிறந்தகத்தாரும் அயலகத்தாரும் புறக்கணித்து விடுவர். இந்த மூவிடங்கள் தவிர வேறு ஓர் இடம் காண்கிலேன் என்று சீதை வருந்துவதைக் கூறும் செய்யுள் பெண்ணுலகம் சிந்தித்துத் திருந்துதற்கு உரிய செய்யுளாகும்.

இவ்வாறு பற்பல சிறந்த கருத்துக்கள் சீதை வனம்புகு படலத்தில் நிறைந்துள்ளன என்பது ஊன்றி நோக்கி யுணரலாம்.

## இராமன் திருவமுது செய்தல்

695 தீங்கறு குணத்தோ ரேகச்
சேடனென் சிரத்தின்பாரம்
நீங்கிய தெனத்தான் போற்ற
நெடுங்கட லவனிப் பாரம்
தாங்கிய வீர னுச்சிச்
சந்தியி னியமந் தான்செய்
தாங்குயிர்த் தம்பி மாரோ
டமுதுசெய் திருந்த காலை

**தீங்குஅறு குணத்தோர் ஏகச் சேடன், என் சிரத்தின் பாரம்
நீங்கியது எனத்தான் போற்ற, நெடுங்கடல் அவனிப்பாரம்
தாங்கியவீரன், உச்சிச் சந்தியின் நியமம்தான் செய்து
ஆங்கு உயிர்த் தம்பிமாரோடு அமுது செய்து இருந்த காலை.**

பொ:- குற்றமற்ற குணத்தோர்களாகிய முனிவர்களும் முடிமன்னர்களும் சுக்கிரீவன் முதலாய வானரர்களும் வீடணனும் தத்தம்ஊர்க்கு விடைபெற்றுச் செல்ல ஆதிசேடன், 'என் தலைகளால் தாங்கியபூமிபாரம் நீங்கியது' என்று கூறிப்போற்றும்படி நீண்ட கடலால் சூழப்பட்ட பூபாரத்தைத் தாங்கி அரசு நடாத்தும் இராமன் உச்சிக்காலத்தில் செய்ய வேண்டிய பூசை நியமத்தைத் தான் செய்துவிட்டுத் தன் உயிர் போன்ற பரதன்,

இலக்குவன்,சத்துருக்கன் என்ற தம்பியார்களோடு ஒக்க இருந்து திருவமுது செய்து விட்டு இளைப்பாறி இருந்தபோது.

கு:-'கட்டுரையெழுந்தது' எனவரும் செய்யுளோடு முடியும்,குளகம். தீங்கறு குணத்தோர் என்றது முனிவர் முதலியவர்களை. ஏக,வீரன் உச்சிச் சந்தியின் நியமம் செய்து என்றது செயவெனெச்சம் காரணகாரியத் தொடர்பின்றி இது நிகழ இது நிகழ்ந்தது என்பது பட வந்ததாகும். இராமன் அரசேற்றுக் கொண்டு அற நெறியில் அரசு செய்து கொண்டு வருவதால் பூமியைத் தாங்கும் ஆதிசேடனுக்குப் பூபாரம் இல்லையாயது. எனவே, அவன், 'என் சிரத்தின் பாரம் நீங்கியது' என இராமனைப் போற்றுகின்றான். ஆதிசேடன் அவ்வாறு போற்றுமாறு அறநெறியில் அரசு செய்து பூபாரத்தைத் தாங்கியுள்ள இராமன் உச்சிக்காலச் சந்தியா வந்தனத்தைச் செய்து விட்டுத் தம்பியரோடு அமுது செய்து விட்டு இளைப்பாறி யிருந்த பொழுது வானத்தில் ஓர் சொல் கேட்டது; என வருஞ்செய்யுளில் முடியும். ஆதிசேடன் ஆயிர முடிகளால் தாங்கிய பூபாரத்தை இருதோள்களால் தாங்கிய அருமை புலப்படுத்த, இராமனை 'அவனிப்பாரம் தாங்கியவீரன்' எனச் சிறப்பித்தார். உச்சிச் சந்தியின் நியமம் என்றது சூரியன் உச்சிவானில் நிற்கும் நண்பகற்பொழுதில் செய்யத்தக்க வழி பாட்டினை; அவ்வழிபாட்டைச் செய்தபின்னரே உணவருந்தல் முறையென்பது இங்குப் புலப்படுத்தியவாறு, இனி இருந்த என் பதைத் துணைவினையாகக் கொண்டு உணவருந்தும் பொழுதே வானத்து ஒருரை கேட்டது எனலும் ஆம். (1)

## புட்பகவிமானத்தின் வேண்டுகோள்

696 கனமிடை வானத் திந்தக்
கட்டுரை யெழுந்த தோங்கிப்
புனைமணிப் பூணி னாயான்
புட்பக மெனக்குப் பண்டு
தனபதி உரைத்த கேட்டி
தசரத ராமன் தன்னால
கனைகழ லரக்கர் கோமான்
…ணமை.

கனம் மிடை வானத்து இந்தக் கட்டுரை எழுந்தது ஓங்கி;
'புனைமணிப் பூணினாய்' யான் புட்பகம் எனக்குப் பண்டு
தனபதி உரைத்த கேட்டி! தசரத ராமன் தன்னால்
கனைகழல் அரக்கர் கோமான் காலன்வாய்ப் படுதல் திண்ணம்.

பொ: மேகங்கள் நெருங்கியுள்ள வானத்தில் இந்த உறுதியான சொல் ஓங்கி எழுந்தது. "மணிகளைக் கொண்டு புனைந்த அணி கலன்களையணிந்த இராமபிரானே! யான் புட்பகம்; எனக்குக் குபேரன் முன்பு சொன்ன சொற்களைக் கேட்பாயாக! தசரதன் மகனாகிய இராமன் என்பவனால் ஒலிக்கின்ற கழலிணையணிந்த இராவணன் இறப்பது உறுதி.

கு: கனம்-மேகம், கனம்மிடைதல் வானத்திற்கு அடை. கட்டுரை என்றது உறுதியான சொல்லினை. கட்டுரை ஓங்கி யெழுந்தது என இயையும். உரையின் ஒலி நன்கு கேட்குமாறு ஓங்கி எழுந்தது என்க. அயோத்தியில் அரசர்க்கரசனாய் முடி சூடியுள்ள இராமன் தன் தகுதிக்கேற்ப மணிகள் பதித்துச் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்து கொண்டுள்ளான் ஆதலின், அவனைப் 'புனை மணிப் பூணினாய்' என விளித்தது புட்பகம். தனபதி-குபேரன். உரைத்த என்பது அன்சாரியை இல்லாது வந்த அகரவீற்று வினைமுற்று. இங்கு வினையாலணையும் பெயராய் நின்றது. உரைத்தன வற்றைக் கேட்பாயாக என்பது பொருள். கேட்டி—முன்னிலையேவல். தசரதராமன் என்றது தசரதனுக்கு மகனாகிய இராமன் என்னும் பொருளில் வந்தது. அரக்கர் கோமான் என்றது அரக்கர்களுக்குப் பெருந்தலைவனாகிய இராவணனை. காலன் வாய்ப்படுதல் என்றது, இறத்தலைப் பிறிதொரு சொல்லால் புலப்படுத்தியவாறு. (2)

697 ஆயவன் றன்பால் நின்று
லாவது செய்தி யந்தத்
தீயவன் பொன்ற வேயென்
சிந்தைநோய் தீரு மென்றத்
தூயவ னெனக்கு முன்பு
சொன்னதே முடிந்த தின்று.

போயவன் றன்னைக் கண்டு
வருகின்றேன் புவன நாதா.

'ஆயவன் தன்பால் நின்னால் ஆவது செய்தி! அந்தத்
தீயவன் பொன்றவே என் சிந்தை நோய் தீரும்; என்றுஅத்
தூயவன் எனக்கு முன்பு சொன்னதே முடிந்தது இன்று;
போய் அவன் தன்னைக்கண்டு வருகின்றேன்; புவனநாதா!

பொரு : அந்த இராவணனிடத்தில் சென்று நின்னால் ஆன தொண்டினைச் செய்க! அந்தக் கொடியவனாகிய இராவணன் இறந்தால்தான் என்சிந்தை நோய் தீரும்; என்று அந்தத் தூயவனாகிய குபேரன் எனக்கு முன்பு சொன்னதே இப்போது முடிவுற்றது. உலகத்தலைவனே! யான் போய் அக்குபேரனைக் கண்டு வருகின்றேன்.

கு: குபேரனிடத்திருந்த புட்பக விமானத்தை இராவணன் கவர்ந்த ஞான்று, புட்பக விமானம் குபேரனிடம் சென்று தன் னிலையைச் சொல்லித்துயருற்றபோது, குபேரன் சொன்னதை இப்போது இராமனிடம் சொல்கின்றதாகக் கொள்ள வேண்டும். ஆயவன் என்றது, இராவணனை. 'நின்னாலாவது செய்தி' என்றது, குபேரன் புட்பகத்திற்குச் சொன்னது. விருப்பமில்லாமை புலப் படச்சொன்னது. பொன்றுதல்-இறத்தல். இராவணன் இறந்தால்-தான்தன் சிந்தை நோய் தீரும் என்று குபேரன் அன்று கூறினான். அவன் சொல்லியபடி இப்பொழுது இராவணன் நின்னால் இறந் தான். இராவணன் இறந்தபின்பு யான் குபேரனிடம் சென்று கண்டு வருகின்றேன் என்றது, புட்பகம் குபேரனிடம் சென்று சேர்ந்தபோது, அவன் 'இராவணனை வென்ற இராமனுக்கே நீ ஊர்தியாவாயாக' என்று சொல்லியனுப்பியதாக வான்மீகம் கூறும் கருத்தையுட்கொண்டதாகும். போயவன் தன்னைக் கண்டு வருகின்றேன் என்றது குபேரன் ஏவலின்படி நின் ஊர்தியாக இருக்க வந்திருக்கின்றேன் என்னும் கருத்தினது. புவனம்-உலகம். இராமன் அயோத்திக்கு மட்டும் தலைவனல்லன்-உலகமுழுமைக்கும் நாதனும் தன்மையுடையவன் என்னும் கருத்துப் புலப்படப் புவனநாதா! என விளித்தது என்னலாம். (3)

## புட்பகம் இராமன் சொன்னபடி மீளுதல்

698 என்றது கூறக்கேட்ட விராகவன்
வியந்து சால
நன்றென விசைந்து கந்த
நறுமலர் கொடுபூ சித்துப்
பொன்றிகழ் விமானந் தன்னைப்
போவென விடுத்த லோடும்
சென்றது தனக்கு வேண்டுந்
திசையின்மேற் சிந்தை யென்ன.

**என்று அது கூறக்கேட்ட இராகவன், 'வியந்து சால நன்று' என இசைந்து கந்த நறுமலர் கொடு பூசித்துப் பொன்திகழ் விமானம் தன்னைப் 'போ' என விடுத்தலோடும் சென்றது, தனது வேண்டும் திசையின்மேல்; சிந்தை என்ன-**

பொ:- என்று அந்தப் புட்பக விமானம் சொல்லக் கேட்ட இராமன் ஆச்சரியப்பட்டு 'மிகவும் நல்லது' என்று இசைந்து சொல்லி, மணமிக்க மலர்பல கொண்டு அப்புட்பகத்தைப் பூசித்து விட்டுப் பொன்னால் செய்யப்பட்டு விளங்குகின்ற அவ்விமானந் தன்னைப் பார்த்துப் 'போ' எனக் கட்டளை யிடுதலோடும், அவன் கட்டளைப்படி தனக்கு விருப்பமான திசையில் மனம்போன்ற வேகத்துடன் சென்றது.

கு:- புட்பகம் உயிருள்ள மக்களைப் போலப் பேசியதால் இராமன் வியப்பெய்தினான். கந்தம், நறு என்ற இரண்டுமே மணம் என்னும் பொருளைக் குறித்த சொற்கள்; மிக்க மணம் என்று பொருள் கொள்ளலாம்; மீமிசைச்சொல். ரகுவின் மரபில் பிறந்தவன் ஆதலின் இராகவன் எனப் பெயர் பெற்றான் இராமன். தனக்கு வேண்டும் திசையின்மேல் சிந்தையென்னச் சென்றது என இயையும். வான்மீகத்தில் புட்பகத்தைப் 'போ' என்று சொன்ன இராமன் மீண்டும் 'சித்தர்கள் பொருட்டு யான் நினைந்த போது வருக' என்று சொன்னதாகவும் 'அப்படியே யாகுக' என்று சொல்லி விமானம் மறைந்ததாகவும் உள்ளது.

## பரதன் வியந்து கூறுதல்

699 அந்தவற் புதத்தைக் கண்ட
பரதனுச் சரிய மெய்திச்
சுந்தர வில்லி தன்னைத்
தொழுதிவை சொல்லுந் தூயோய்
இந்துமா நிலத்தைக் காக்க
விறைவனீ யிசைந்த பின்பு
வந்தவற் புதங்க ளெண்ணில்
வரம்பிலை யென்று கூறும்.

**அந்தவற் புதத்தைக் கண்ட பரதன் ஆச்சரியம் எய்திச்,**
**சுந்தர வில்லிதன்னைத் தொழுது இவை சொல்லும்; தூயோய்!**
**இந்த மாநிலத்தைக் காக்க இறைவன்நீ, யிசைந்த பின்பு**
**வந்த அற்புதங்கள் எண்ணில் வரம்புஇலை' என்று கூறும்.**

பெ:- புட்பகவிமானம் வந்து பேசியதும், இராமன் அதனைப் பூசித்துப் 'போ' என்றவுடன் போனதும் ஆகிய அற்புதத்தைக் கண்ட பரதன் ஆச்சரியம் அடைந்து, அழகிய வில்லையுடைய இராமனைத் தொழுது இவற்றைச் சொல்லுகின்றான். தூய்மையுடையவனே, இந்தப் பெரிய தேசத்தைக் காப்பதற்கு அரசனாக நீ உடன்பட்ட பின்பு நிகழ்ந்த அற்புதச் செயல்களை எண்ணினால் அவை எல்லையில்லாதனவாம், என்று மேலும் கூறுவான்.

கு:- அற்புதம் என்பது முன் எங்கும் நிகழாதது நிகழ்வது. இராவண வதத்திற்குப் பின் விற்பிடித்துச் செய்ய வேண்டிய போர் இல்லாமையால் இராமன் வில் அழகுப்பொருளாக மட்டுமே விளங்குகிறது என்பார், 'சுந்தரவில்லி' என்றார். சுந்தர-அழகு. வில்லையுடையவன் வில்லி எனப்பட்டான். சொல்லும், கூறும் என்பன செய்யும் என்னும் வாய் பாட்டு வினைமுற்றுகள். உள்ளும் புறமும் தூய்மையாக விளங்குபவன் ஆதலின் இத்தகைய அற்புதங்கள் நிகழ்கின்றன என்ற கருத்துப்பட 'தூயோய்! என இராமனை விளித்தவாறு இறைவன் 'நீ இந்த மாநிலத்தைக் காக்க இசைந்த பின்பு என இயையும். அரசன், கடவுள், இவ்விரு பொருளும் புலப்பட இறைவன் என்ற இச்சொல் அமைந்துள்ளது.

எல்லாவுலகங்கட்கும் கடவுளாகிய நீ இந்த மாநிலத்ததைக் காக்க அரசனுய் இசைந்த பின்பு என்று பொருள் கொள்ளுதல் பொருத்த மாகும். வரம்பு-எல்லே. எண்ணத் தொலேயாத அற்புதங்கள் இராமனுட்சியில் நிகழ்கின்றன என்றவாறு (5)

## பரதன் சொன்ன அற்புதங்கள் 6 - 8

700 அத்திரா திகளாற் சாக்கா
டில்லே வாளரி யால்யானேச்
சத்துரு வில்லே வேங்கை
யாவொடு மானேச் சார்ந்து
மித்திர மாகு நீரா
னெருப்பினுல் வீவோ ரில்லே
புத்திரர் மரணங் காண்பா
ரில்லேயிப் புவனத் தெங்கும்.

அத்திராதிகளால் சாக்காடு இல்லே; வாள் அரியால் யானேச்
சத்துரு இல்லே; வேங்கை, ஆவொடு மானேச் சார்ந்து
மித்திரம் ஆகும்; நீரான் நெருப்பினுல் வீவோர் இல்லே;
புத்திரர் மரணம் காண்பார் இல்லே; இப்புவனத்து எங்கும்.

பொ: இவ்வுலகத்து எவ்விடத்தும் அம்பு முதலிய ஆயுதங்களால் யார்க்கும் மரணம் ஏற்படவில்லே. கொடிய சிங்கத்தால் யானேக்குப் பகையச்சம் இல்லே. வேங்கைப்புலி பசுவையும் மானேயும் சார்ந்து நட்புச் செய்து கொள்ளும். நீராலும் நெருப்பாலும் உயிர்துறப்போர் இல்லே. தாமிருக்கத் தம்புத்திரர் மரணம் எய்துவதைக் காண்பவர் இல்லே.

கு: இப்புவனத்தெங்கும் சாக்காடில்லே. சத்துருவில்லே. மித்திரமாகும். வீவோர் இல்லே புத்திரர் மரணம் காண்பார் இல்லே என இயையும். அத்திரம் அம்பு முதலிய ஆயுதங்கட்குப் பொதுப்பெயராய் வந்தது. போர் செய்வோர் இன்மையால் அம்பு முதலியவற்ருல் சாவோர் இலராயினர். சத்துரு-பகைமை அரி-சிங்கம். அரியால் யானேச் சத்துருவில்லே என்றது, சிங்கத்தால் யானேக்கும் பகையச்சம் இல்லே என்னும் கருத்தினது. வேங்கைப் புலி பசுவுக்கும் மானுக்கும் பகையாய்க் கொல்லும் தன்மையது.

இப்போது அது ஆவினையும் மானினையும் சார்ந்து வலிய நட்புப் பூண்டொழுகுகின்றது என்றவாறு. மித்திரம்-நட்பு. ஆற்று நீரிலும் குளத்து நீரிலும் மூழ்கியிறப்போரும் ஊர்சுடு பெருநெருப்பில் அகப்பட்டு வெந்து வீழ்வோரும் இல்லை என்றது, நீரும் நெருப்பும் இராமனது ஆணையில் அடங்கி நடக்கின்றன என்றவாறு. தந்தை யிருக்கப் புதல்வனை எமன் பற்றுவதில்லை. இவையாவும் இராமனது ஆட்சியின் சிறப்பால் நிகழ்வனவாம் என்றவாறு. (6)

701 நோயுறு வார்க ளில்லை
நோயுறாதற மூத்தோர்ச் [redacted]
காயும்வெங் கூற்ற மில்லைக்
கணவனை யிழப்போ ரில்லை
வாயுவு முடலுக் கின்ப
மாகவந் தசையா நிற்கும்
ஆயிழை யார்க ளெல்லா
மாண்மகப் பெறுகின்றார்கள்.

நோய் உறுவார்கள் இல்லை, நோயுறாது அற மூத்தோர்க்கும் காயும் வெங்கூற்றம் இல்லை; கணவனை இழப்போர் இல்லை; வாயுவும் உடலுக்கு இன்பமாகவந்து அசையா நிற்கும்; ஆயிழையார்கள் எல்லாம் ஆண்மகப் பெறுகின்றார்கள்.

பொ: இந்நாட்டில் நோய் உறுபவர்கள் யாருமில்லை. நோயடையாமல் மிகவும் மூத்துள்ள முதியோர்க்கும் கோபிக்கின்ற கொடிய எமன் உயிர்கவர வருவதில்லை. கணவனை இழக்கின்ற பெண்டிரும் இல்லை. காற்றும் உயிர்களின் உடலுக்கு இன்பம் உண்டாகுமாறு வந்து மெல்லென அசையும். ஆராய்ந்து அணிந்த அணிகலன்களை அணிந்த பெண்டிர் எல்லாம் அதிகமாக ஆண் மக்களைப் பெறுகின்றார்கள்.

கு: நம் நாட்டில் உள்ளவர்கள் யாவரும் நோயின்றியன்ற யாக்கையராக உள்ளனர் என்றவாறு. நோயேயடையாமல் நீண்ட ஆயுளோடு வாழ்ந்து மிகவும் மூத்த முதியவர்கட்கும் உயிரைக் கவர வருகின்ற எமனில்லை. மாக்கள் மூத்த யாக்கையொடு நோயின்று கழிய (பதிற்றுப்பத்து 22-10) என்பது இங்கு

ஒப்ப நோக்கத்தகும். யாக்கை பழுத்த நிலையில் தானே அழிவ தல்லது எமனால் உயிர் கவரப்பெற்று அழிவதில்லை என்றவாறு. மனைவியிருக்கக் கணவன் இறப்பதில்லை என்பார் கணவனை இழப் போர் இல்லை என்றார். பெருங்காற்று வீசி மக்களுக்குத் துன்பம் விளைக்காது எப்போதும் மெல்லிய பூங்காற்று வீசி மக்கள் உடலுக்கு இன்பம் பெருக்கும் இயல்பினன் வாயுதேவனும் என்ற வாறு. நோயுறுமைக்குக் காரணம் புலப்படுத்தியவாறு ஆயிழை யார்கள் என்றது. கணவனோடு வாழும் மங்கல மடந்தையர்களை அவர்கள். பிள்ளைப்பேறு இல்லாமலிருப்பதோ அல்லது பெண் மக்களையே பெறுதலோ இல்லாமல் அதிகமாக ஆண்மக்களைப் பெறுகின்றார்கள் என்பார். ஆயிழையார்கள் எல்லாம் ஆண்மகப் பெறுகின்றார்கள் என்றார். (7)

701 மண்ணுல குள்ள மன்னர்
மைந்தர்கள் மங்கை மார்கள்
எண்ணிடு மெண்ண மெல்லா
மிராமனே யரசு செய்திக்
கண்ணகன் ஞாலங் காக்க
வென்றுகட் டுரைப்ப ரென்ன
அண்ணலு மதனைக் கேட்டாங்
ககமகிழ்ந் திருந்த காலை.

மண் உலகு உள்ள மன்னர் மைந்தர்கள் மங்கைமார்கள் எண்ணிடும் எண்ணம் எல்லாம் 'இராமனே அரசு செய்துஇக்

---

7. அ. ஆழ்வார் திருநகரிப் பதிப்பில் காணப்படும் மிகைப் பாடல்.

திங்கள்மும் மாரிபெய்யும் செகதல முழுதும் வாரி
பொங்கிமென் மேலுமோங்கிப் பொன்மழை நாளும் பெய்யும்
தங்கிய வுயிர்கள் யாவும் தழைத்தின்பம் மேவும் என்றும்

இப்பாடல் நடையாலும் கருத்தாலும் பிற்காலத்ததாகத் தெரி கின்றது.

**கண்அகல் ஞாலம் காக்க' என்று கட்டுரைப்பர் என்ன'**
**அண்ணலும் அதனைக் கேட்டு ஆங்கு அகம் மகிழ்ந்து இருந்த**
**காலை.**

பொ:- மண் உலகத்துள்ள அரச குமாரர்களும் அவர்கள் பெண்டிரும் எண்ணுகின்ற எண்ணம் எல்லாம் (யாவை எனின்?) "இராமனே அரசு செய்து இந்த இடமகன்ற உலகம் முழுவதையும் காப்பானாக என்று உறுதியாகக் கூறுவார்கள்" என்று பரதன் சொல்ல, பெருமை பொருந்திய இராமனும் அவன் சொல்லியது கேட்டு அங்கு மனம் மகிழ்ந்து வீற்றிருந்த பொழுது.

கு:- கதிரோன் வீழ என வரும் செய்யுளில் முடியும்; குளகம் மன்னர் மைந்தர்கள் மன்னர் மங்கையர் எனக் கூட்டுக. உலகம் காத்தலில் பங்கு கொள்ளுதற்குரியோர் அவரேயாதலின் 'இராமனே அரசு செய்க' என்று அவர்கள் கூறுவதைச் சிறப்பாக இங்கும் கூறலாயினன் பரதன் என்க. 'காக்க' என்பது வியங்கோள் வினைமுற்று. கட்டுரைத்தல் - உறுதி கூறுதல். நாட்டு மக்கள் தன் ஆட்சியின் சிறப்புப் பற்றிப் பேசுவதைக் கேட்ட இராமன் அகமிக மகிழ்தல் இயல்புதானே! (8)

## செங்கதிர் மறைவும் வெண்டிங்கள் தோற்றமும்

702 சரிந்துவெங் கதிரோன் வீழத்
தராபதி சந்தி செய்யப்
புரிந்தசிந் தையனுய்ப் போகப்
பூங்குழன் மடவார் தம்மைப்
பிரிந்தவர்க் கால மாகிப்
பிரிவிலோர்க் கமிழ்த மாகி
விரிந்தவெண் ணிலவை வீசி
வெண்மதி தோன்றிற் றன்றே.

**சரிந்து வெங்கதிரோன் வீழத் தராபதி சந்தி செய்யப்**
**புரிந்த சிந்தையனுய்ப் போகப் பூங்குழல் மடவார் தம்மைப்**
**பிரிந்தவர்க்கு ஆலம் ஆகிப் பிரிவிலோர்க்கு அமிழ்தம் ஆகி**
**விரிந்த வெண்ணிலவை வீசி வெண்மதி தோன்றிற்று அன்றே.**

பொ:- வெப்பமிக்க கதிர்களையுடைய சூரியன் விண்ணி லிருந்து மேல்கடலில் வீழ, தரைக்கு அதிபதியாகிய இராமன் மாலைச்சந்தி வழிபாடு செய்ய விரும்பிய சிந்தையனாய் அரசவையை விடுத்துச் செல்ல, பின்பு மலரணிந்த கூந்தலையுடைய பெண் டிரைப் பிரிந்து மைந்தர்க்கு நஞ்சாகிப் பிரியாதவர்க்கு அமிழ்தம் போன்றதாகி விரிந்த வெண்மையான நிலவை வீசிக் கொண்டு வெண்டிங்கள் தோன்றிற்று.

கு:- சரிந்து வீழ என இயையும், சூரியன் மாலையில் மேல் கடலில் வீழ்வதாகச் சொல்வது கவிமரபு. தராபதி - தரைக்கு நாயகனாகிய இராமன். சந்தி செய்தலாவது - மாலை அந்தியில் சந்தியாவந்தனம் செய்தல். புரிதல்-விரும்புதல். சூரியன் மறைந்த அளவில் இராமன் அரசவை விட்டு நீங்கிச் சந்தியாவந்தனம் செய்யச்சென்றானாகச் சந்திரன் உதயம் செய்தான் என்றவாறு, சந்திரன் உதயத்தால் மக்களுக்கு நிகழும் இன்ப துன்பங்களை விளக்குவாராய்ப் "பிரிந்தவர்க்கு ஆலமாகிப் பிரிவிலோர்க்கு அமுத மாகி வெண்மதி தோன்றிற்று" என்றார். தலைவியரைப் பிரிந்த மைந்தர்க்கு நஞ்சாகி வருத்துவதும் பிரியாது உடனுறையும் பேறுபெற்றவர்க்கு இன்பத்தை மிகுதிப்படுத்துவதால் அமிழ்தம் போன்றதாய் மகிழ்விப்பதும் சந்திரன் இயல்பு என்பார்.

"கூடினார் பால் நிழலாய்க் கூடார் பால் வெய்யதாய்க்
காவலன் வெண்குடை போற் காட்டிற்றே-கூடிய
மாதவிக்குங் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து
போதவிழ்க்குங் கங்குற் பொழுது"

— (சிலப். அந்திமாலைச்)

என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (9)

## மன்மதன் அம்பு எய்தல்

703 பிரிந்த காளையரை மாதரைக் கொல்வான்
பேரவோர் வழியிலா வண்ணம்
விரிந்தவெண் ணிலவாம் வலையினை வீச
வெண்கதிர்த் திங்களை யேவிப்

புரிந்துவெங் கொலைசெய் தென்றனாய் விட்டுப
பூங்கணை வேடன்வா யம்பு
தெரிந்தன னன்றிற் பெடையினை யெட்டுத்
திசைதொறுங் கூப்பிடச் செய்து.

பிரிந்த காளையரை மாதரைக் கொல்வான் பேரவோர் வழியிலா வண்ணம்
விரிந்த வெண்ணிலவாம் வலையினை வீச வெண்கதிர்த் திங்களை ஏவிப்
புரிந்துவெங் கொலைசெய் தென்றல் நாய் விட்டுப் பூங்கணை வேடன் வாய்அம்பு
தெரிந்தனன் அன்றில் பெடையினை எட்டுத் திசைதொறும் கூப்பிடச் செய்து.

பொ: மலராகிய கணையினையுடைய மன்மதனாகிய வேடன், தலைவியரைப் பிரிந்த காளையர்களையும் கணவரைப் பிரிந்த மாதரையும் கொல்லும் பொருட்டு, அவர்கள் யாரும் தப்பிப் பேர்ந்து செல்ல ஒரு வழியில்லாதபடி விரிந்த வெண்ணிலவாகிய வலையினை வீசும்படி வெண்கதிர்களையுடைய சந்திரனை ஏவி விட்டு, விரும்பிக் கொலை செய்கின்ற தென்றல் காற்றாகிய வேட்டைநாயை அவிழ்த்துவிட்டு அன்றிற் பெடைகளை எட்டுத் திசைகளிலும் சென்று கூப்பிடுமாறு செய்துவிட்டுத் தன் அம்பு களை ஆராய்ந்து எய்வானானான்.

கு: வேடர்கள் முயல் வேட்டைக்குப் போகும் போது புதரி லுள்ள முயல்கள் தப்பி ஓடாவண்ணம் வலையினைவிரித்துக் கட்டு தலும் வலையில் தப்பிச் செல்லும் முயல்களை வேட்டை நாய்களை ஏவிக் கவ்வச்செய்தலும் விலங்குகளைப் போலக் கூப்பிட்டு அவற்றை வலையில் வீழச் செய்தலும் அம்பினால் எய்தலும் வழக்கமாகும். வேடர்களின் இந்தச் செயல்களையெல்லாம் மன்மதனாகிய வேடன்செய்து பிரிந்த மைந்தரையும் மாதரை யும் மலரம்புகளால் எய்தான் என உருவகத்தாலும் சிலேடை யாலும் திறம்பெறச்சொல்லுகின்றார் ஆசிரியர். பிரிந்தார்க்கு வெண்ணிலவும் தென்றலும் துன்பம் செய்வன வாதலின் அவற்றை வெண்ணிலவாம் வலையினை விச வெண்கதிர்த் திங்களை

யேவி என வெண்ணிலவை வலையாகவும் தென்றலை நாயாகவும் உருவகம் செய்தார். வேள் தன் என்ற இருசொற்களை வேடன் எனச் சிலேடையால் நயம்பட அமைத்துள்ளார். பிரிந்த பெடை அன்றிலின் இரக்க ஒலி பிரிந்தார்க்குப் பெருந்துன்பம் செய்வது ஆகலின், பிரிந்தாரை வருத்தும் மன்மதன் அவ்வன்றிலைத் திசை தோறும் கூவுமாறு செய்கின்றான். இவற்றால் எல்லாம் மெலிவுற்ற காதலர்கள் மலரம்பால் நையுமாறு எய்யலானான் மன்மதன் என்பது நயமிக்கதாகவுள்ளது. (10)

## இராமனும் சீதையும் போகம் நுகர்தற்குரிய பங்குனித் திங்கள்

704 அங்கவை நிகழுங் காலையி லாழி
யண்ண லு மவனியிற் பிறந்த
மங்கையு மாறிக் கண்வலைப் பட்டு
மனங்களின் மாறினர் புகுந்து
கங்குலும் பகலும் பிரிவில ராகிக்
காதல்வெள்ளத் திடை யழுந்திப்
பங்கமில் போக நுகருநாள் வந்து
புகுந்தது பங்குனித் திங்கள்

அங்கு அவை நிகழுங்காலையில் ஆழி அண்ணலும் அவனியிற் பிறந்த
மங்கையும் மாறிக் கண்வலைப் பட்டு மனங்களின் மாறினர் புகுந்து
கங்குலும் பகலும் பிரிவிலராகிக் காதல் வெள்ளத்திடை அழுந்திப்
பங்கம் இல் போகம் நுகரும்நாள் வந்து புகுந்தது பங்குனித் திங்கள்

பொ:- அங்கு அத்தகைய நிகழ்ச்சிகள் நிகழும்போது ஆணைச் சக்கரத்தையுடைய இராமனும் நிலத்திற் பிறந்த சீதையும் கண் வலையில் மாறி அகப்பட்டுப் பின்பு ஒருவர் உள்ளத்தில் ஒருவர் மாறிப் புகுந்தனராய் இரவும் பகலும் பிரிதல் இல்லாமல்

காதலாகிய வெள்ளத்தில் அழுந்திக் குறைவில்லாத போகத்தை நுகரும் காலத்துப் பங்குனித் திங்கள் வந்து தோன்றியது.

கு: ஆழி அண்ணல் என்பதற்கு, இராமனின் முன்னைய தெய்வ நிலையை நினைந்து சக்கரப்படையுடைய திருமாலின் அமிச மான இராமன் எனப்பொருள் கூறலும் ஆம். அவனியிற் பிறந்த மங்கை என்றது வேள்விச்சாலை உழும்போது நிலத்திலிருந்து படைச்சால் வழியாகத் தோன்றினவள் சீதை என்பதை யுணர்த்தியது. உழுகின்ற கொழுமுகத்தின் உதிக்கின்ற கதிரினொளி, பொழிகின்ற புவி மடந்தை யுருவெளிப்பட்டெனப் புணரி, எழுகின்ற தெள்ளமுதோ டெழுந்தவளும் இழிந் தொதுங்கித் தொழுகின்ற நன்னலத்தும் பெண்ணரசி தோன்றி னுள் (பால கார்முகப் 17) என்றது காணலாம். இராமன் கண் வலையில் சீதையும் சீதையின் கண்வலையில் இராமனும் மாறி மாறி அகப்பட்டனர் என்றவாறு. மாறிக் கண்வலையில் அகப்பட்டது போலவே ஒருவர் மனத்தில் மற்றொருவர் மாறிப்புகுந்து கொண்டனர் என்றவாறு. இருவருமாறிப் புக்கிதயம் எய்தினர் (பால, 60) என முன்னர் வந்துள்ளது காணலாம். அழுந்தும் வினைக்கேற்பக் காதலை வெள்ளமாக உருவகம் செய்தார். பங்கம்-குறைவு. பங்குனித் திங்கள் வந்து புகுந்தது என இயையும். இதனுல் இராமனும் சீதையும் காதல் வெள்ளத்தில் அழுந்திய காலம் மாசித்திங்களின் இறுதி என்று உய்த்துணரலாம். பங்குனித்திங்கள் மன்மதனுக்கு ஏற்ற காலம் என்பதை, ‘பாசறைப் பரிவுதீர்க்கும் பங்குனிப் பருவம் செய்தான்’ என்பதால் (சீவக. 851) உணரலாம். (11)

## இலையுதிர் பருவத்தின் இயல்பு

705 கழிந்துவீழ் பழுத்த விலையின வாகிக்
காண்டொறுங் கவினுறத் தழைத்த
பழம்படாம் நீக்கிப் புதுப்படாம் போர்த்த
பான்மைபோற் பாதவமெல்லாம்

றொபழிந்ததேன் மலராற் பொன்னிற வாடை
போர்த்தன போன்றன கோங்கம்
செழும் படாஞ் சிவந்த போர்த்தன வொப்பத்
திகழ்ந்தன செம்மலர்ப் பலாசம்.

**கழிந்துவீழ் பழுத்த இலையின ; ஆகிக் காண்தொறும் கவின் உறத் தழைத்த**
**பழம்படாம் நீக்கிப் புதுப்படாம் போர்த்த பான்மைபோல், பாதவம் எல்லாம்**
**பொழிந்ததேன் மலரால்பொன்னிற ஆடை போர்த்தன போன்றன கோங்கம்;**
**செழும்படாஞ் சிவந்த போர்த்தன ஒப்பத் திகழ்ந்தன செம்மலர்ப் பலாசம்.**

பொ:- மரங்கள் எல்லாம் பழைய போர்வையை நீக்கிவிட்டுப் புதிய போர்வையை போர்த்திக் கொண்டிருக்கும் தன்மைபோல் கழிந்து தரையில் வீழ்கின்ற பழுத்த இலைகளையுடைய வாகிப் பார்க்குந்தோறும் அழகுறத் தழைத்தன. கோங்க மரங்கள், பொழிந்த தேனையுடைய பொன் மலர்களைக் கொண்டுள்ளமை யால் பொன்னுடை போர்த்திக் கொண்டுள்ளன போலத் தோன்றின. சிவந்த மலர்களையுடைய முருக்கமரம், சிவந்த செழுமையான போர்வையைப் போர்த்திக் கொண்டாற்போல விளங்கின.

கு: மரங்கள் பழுத்த இலைகள் உதிரப்பெற்ற தோற்றம் பழம் படாம் நீக்கியது போலவும், பின்பு அவை கவினுறத் தழைத் திருந்த தோற்றம், புதுப்படாம் போர்த்துக் கொண்டது போல வும் இருந்தன என்க. கழிந்து வீழ்பழுத்த இலையினவாகி என்றது, பழுத்த இலை கழிந்து வீழப் பெற்றனவாகி என்னும் கருத்தினது. கோங்க மரம் பொன்னிறமலர்களைப் பூக்கின்றது. மரம் முழுமை யும் மலர்களாகவே காணப்படுகின்றது. இலையென்பது இலை யாயது. பொன்னிற மலர்களே நிறையப் பூத்துள்ள தோற்றம் பொன்னுடை போர்த்ததுபோலக் காட்சி தருகின்றது. முள் முருக்க மரம் சிவந்த மலர்களை மிகுதியாகப் பூத்துள்ள தோற்றம் சிவந்த போர்வை போர்த்திக் கொண்டுள்ளது போலக் காணப்

படுகின்றது என்பன தற்குறிப்பேற்ற அணியாகும், படாம்-போர்வை; துணி. பாதவம்-மரம். பலாசம்-முருக்கமரம். சிவந்த செழும்படாம் என இயையும். முதலிரண்டடிகளிலும் பங்குனியில் மரங்கள் இலைகளையுதிர்த்து விட்டுத் தளிர்க்கும் தன்மையைப் பொதுவகையாகக்கூறிப் பின்னிரண்டடிகளில் கோங்கம், முருக்க மரம் இவற்றின் சிறப்பியல்பினைப் புலப்படுத்தியுள்ளார் எனலாம். (12)

## பன்மலர் நறுத்தேனை வண்டுகள் பருகல்

706 பொன்னரி மாலை தூக்கின கொன்றை
புன்குகள் வெண்பொரி சொரிந்த
நன்னுத லாரை நெடும்பகற் பிரிந்து
நாடொறு நினைந்த நாயகர் தம்
மன்னவ ரோடு கூடியின் கலவி
யமிழ்தினை யருந்துமா போலப்
பன்மலர் தோறுங் குடைந்துதே னினங்கள்
பருகின பசுநறுந் தேறல்.

**பொன்னரி மாலை தூக்கின கொன்றை, புன்குகள் வெண்பொரி சொரிந்த
நன்னுதலாரை நெடும்பகல் பிரிந்து நாள்தொறும் நினைந்த நாயகர் தம்
அன்னவரோடு கூடி இன்கலவி அமிழ்தினை அருந்துமாபோலப்
பல்மலர்தோறும் குடைந்து தேன் இனங்கள் பருகின பசுநறுந் தேறல்:**

பொ:- கொன்றை மரங்கள், பொன்னரி மாலை போன்ற பொன்னிற மலர்க் கொத்துக்களைத் தொங்கவிட்டன. புன்க மரங்கள், வெண்பொரி சொரிவது போல வெண்மலர்களைச் சொரிந்தன. நல்ல நெற்றியையுடைய தலைவியரை நெடுநாட்கள் பிரிந்து நாள்தொறும் நினைந்து வருந்திய தலைவர்கள் வந்து தம்மையொத்த அன்புடைய தலைவியரோடு கூடி இனிய கலவி இன்பமாகிய அமிழ்தினை அருந்துமாறு போல, வண்டினங்கள்,

பலமலர்கள் தொறும் சென்று குடைந்து பசுமையான நறுமண முடைய தேனைப் பருகின.

கு:- கொன்றைமலர் பொற்காசு போன்ற வடிவும் நிறமும் உடையவாதலானும், மாலைபோலக் கொத்துக் கொத்தாகப் பூக்கும் இயல்பினது ஆதலாலும், கொன்றை மலர்ந்தன என்பார் பிறிது மொழிதல் எனும் அலங்காரம் பற்றிப் 'பொன்னரி மாலை தூக்கின கொன்றை' என்றார். கொன்றை பூப்பது கார்காலம் என்பது மரபேயாயினும் எந்நிலமருங்கிற் பூவும் புள்ளும் அந்நிலம் பொழுதொடு வாராவாயினும் வந்த நிலத்தின் பயத்தவாகும் (தொல். பொருள் அகத்)என்ற விதிபற்றிப் பங்குனியில் பூத்ததாக இவ்வாசிரியர் கூறுகின்றார் எனலாம். புன்கின மலர் வடிவானும் நிறத்தானும் நெற்பொரிபோன்றது ஆதலின் அந்தப் பிறிது மொழிதல் என்னும் அணியே பற்றி வெண்பொரி சொரிந்த எனக் கூறினர். இவ்விரண்டு மரங்களும் மணவணி நாளைக் காட்டுவது போலப் பொன்னரி மாலை துக்கியும் வெண்பொரி சிதறியும் அரகு செய்தன என்பது கருத்து. பங்குனித் திங்களுக்கு முன் மலராத மலர்களைநினைத்து வருந்தியிருந்த வண்டுகள் அப்பருவம் வந்தவுடன் பூத்த பல்வகை மலர்களில் ஊதித் தேனையருந்தி மகிழ்ந்திருந்த இயல்பை விளக்க, பிரிந்து வருந்தியிருந்த தலைவர்கள் மீண்டு வந்து தம்மை யொத்த அன்புடைய தலைவியரோடு கூடிக் கலவியாகிய அமிழ் தினை அருந்துமாறுபோல என உவமையாக்கினர். தேன், ஒரு வகை வண்டு. பசுமை புதுமையினையும் நறுமை மணத்தினையும் உணர்த்தின. தேறல்-தேன். நெடும்பகல் பிரிதலும் நினைதலும் வண்டுக்கும் பொருத்துக. (13)

## இராமனும் சீதையும் பூம்பொழில் புகுதல்

707 அண்ணலு மமிழ்திற் பிறந்தவா யிழையு
மணிகொள்பூம் பொழிலினை யணைந்தார்
தண்ணறும் புன்னை சண்பகஞ் செருந்தி
சந்தனஞ் சந்திபூந் தாழை

எண்ணருங் குருந்து பாடல மாதி
யெழிலிள மரமிடை நெருங்கி
விண்ணவர் கோமான் கற்பகச் சோலை
மேதினி யிழிந்ததொத் துளதை.

அண்ணலும் அமிழ்திற் பிறந்த ஆயிழையும் அணிகொள்பூம் பொழிலினை அணைந்தார்
தண்நறும்புன்னை சண்பகம் செருந்தி சந்தனம் சாதிபூந் தாழை
எண்ணருங் குருந்து பாடலம் ஆதி எழில்இள மரமிடை நெருங்கி
விண்ணவர் கோமான் கற்பகச் சோலை மேதினி யிழிந்ததொத் துளதை

பொ:- பெருமையுடைய இராமனும் அமிழ்தொடு பிறந்த திருமகளின் அமிசமான சீதையும் அழகு பொருந்திய மலர்ப் பொழிலினை அடைந்தார்கள். (அப்பொழிலில்) குளிர்ந்த நறுமண முடைய புன்னையும் சண்பகமும் செருந்தியும் சந்தனமும் சாதி மர மும் பூவினையுடைய தாழையும் எண்ணுதற்கியலாத குருந்தும் பாதிரியும் முதலிய அழகுமிக்க இளைய மரங்கள் நடுவே நெருங்கப் பெற்று விண்ணவர் தலைவனாகிய இந்திரனது கற்பகச் சோலை பூமியில் இறங்கிவிட்டது போன்று விளங்குகின்றதை.

கு:- அண்ணல் என்றது இராமனை. ஆயிழை என்றது சீதையை. ஆய்ந்தெடுத்த அணிகலன்களை யணிந்தவள் என வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகப் பொருள் கொள்க. பூம்பொழிலினை ஒத்துளதை-மண்டபத்தினதை அணைந்தார் என முடிக்க. புன்னை முதலிய மரங்களோடு தாழையும் மரமாகக் கூறப் பட்டது பன்மை பற்றி யென்க. புறக்காழனவாய்ப் புல்லெனப் படுவது தாழை என்பது நினைக. பூம்பொழிலின் எழில் மிகுதி புலப்பட 'விண்ணவர் கோமான் கற்பகச் சோலை மேதினி யிழிந்த தொத்துளதை' என்றார். இங்கு "இங்கிதக் களிப்பினவெய்தி யாடும் பூம்பொழில், செங்கணிந்திரன்னகர்ச் செல்வமென்ன தன்னதே" (சீவகசிந் - நாமகளிலம்பகம்-116) என்பது ஒப்பு நோக்கத் தகும். தாழையில் பலவகையிருத்தலின் பூந்தாழை என அடைதந்து பொருள் விளக்கம் செய்தவாறு. பாடலம் - பாதிரி. (14)

## பூம்பொழிலின் பொலிவு

708 தாவு மேழ் புரவி பூணுமோ ராழித்
தேரவன் சார்வரு மதனைக்
காவியுஞ் செய்ய கமலமுந் தங்கள்
கண்களுக் கஞ்சிநீ ரொளிப்பத்
தேவியுந் தானுஞ் சேயிழையாருஞ்
செழுந்துறை படிந்துநீ ராடும்
வாவியும வாவிக் கரைதொறும் விளங்கு
மணியறை மண்டபத் தினதை.

தாவும் ஏழ்புரவி பூணும் ஓராழித் தேரவன் சார்வரும் அதனை;
காவியும் செய்ய கமலமும் தங்கள் கண்களுக்கு அஞ்சிநீர் ஒளிப்பத்
தேவியும் தானும் சேயிழையாரும் செழுந்துறை படிந்து நீர்ஆடும்
வாவியும், வாவிக் கரைதொறும் விளங்கும் மணி அறை மண்டபத்தினதை.

பொ:- தாவிச் செல்லும் இயல்புள்ள ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட ஒரு சக்கரத்தையுடைய தேரையூர்கின்ற சூரியன் சார்தற்கு இயலாத தன்மையுடையதை; கருங்குவளை மலரும் செந்தாமரை மலரும் தங்கள் கண்களுக்குப் பயந்து நீரில் ஒளித்துக் கொள்ளும்படி தேவி சீதையும் தானும் மற்றைய செம்மையான அணிகலன்களை அணிந்த பெண்டிரும் செழுமையான துறையில் படிந்து நீராடுதற்குரிய வாவியும், அந்த வாவியின் கரைதொறும் விளங்குகின்ற பளிக்கறையோடு கூடிய மண்டபத்தையுடையதை.

கு:- சூரியனுக்கு ஏழ் குதிரை பூட்டப்பட்ட ஓராழித்தேருண்டு என்பது புராண மரபு. சூரியன் கிரணங்கள் நுழைய முடியாதபடி நெருங்கிய மரஞ்செடி கொடிகளையுடைய பொழில் என்பார் "ஓராழித் தேரவன் சார்வருமதனை" என்றார். 'வெயில் நுழைவறியாக்குயினுழை பொதும்பர்'(பெரும்பாணாற்றுப்படை 376) என்பது இங்கு நினையத்தகும். சீதையும் இராமனும் வாவிக்குள் நீராடின போது சீதையின் கண்களுக்கு அஞ்சிக் குவளைமலரும் இராமனது

கண்களுக்கு அஞ்சிச் செங்கமல மலர்களும் நீரில் ஒளிந்து கொள்ளும் எனத்தற்குறிப்பேற்ற அணி அமைய அவ்விருவர்கண்களையும் புகழ்ந்து கூறியவாறு. நீராடும் போது நீர் நிலையில் அலைகள் மேலெழும்போது நீர்ப்பூக்களாகிய குவளையும் செந்தாமரையும் நீரில் அழுந்துகின்ற இயல்பான செயலுக்குக் காரணம் கற்பித்துக் கூறினமையின் இது தற்குறிப்பேற்றவணியாகும். வாவி-குளம் குளக்கரையில் பளிக்கறையோடு கூடிய மண்டபம் உள்ளது என்ற வாறு. மணியறை என்றது பளிக்கறையை. கற்பகச்சோலை மேதினியிழிந்த தொத்துளதை எனவும் ஒராழித்தேரவன் சார் வருமதனை எனவும் மணியறை மண்டபத்தினதை எனவும் வந்த இரண்டனுருபேற்ற சொற்களைப் பூம்பொழிலினை என முன்வந்த சொல்லோடு சேர்த்து, அணைந்தார் என்ற பயனிலை யோடு முடிக்க. (15)

## இராமன் பொழிலின் எழிலைச் சீதைக்குக்காட்டல்

709 இன்னதன் மையதா மிளமரக் காவி
னெழிலெலா மிரவிதன் குலத்து
மன்னவ னிராமன் மலர்க்கணு னோக்கி
வனப்பெலா மனமுறக் கண்டு
அன்னமென் னடைநுண் மின்னிடை மருங்கு
லணிதிகழ் மேகலை யல்குல்
கன்னலுந் தேனுங் கலந்தன மொழியாய்
காணெனக் காட்டின னெல்லாம்.

இன்ன தன்மையது ஆம் இளமரக்காவின் எழில் எலாம் இரவி தன் குலத்து
மன்னவன் இராமன் மலர்க்கணால் நோக்கி வனப்பு எலாம் மனம் உறக்கண்டு
'அன்னம் என்நடை நுண்மின் இடை மருங்குல் அணிதிகழ் மேகலை அல்குல்
கன்னலும் தேனும் கலந்தன மொழியாய்! காண' எனக் காட்டினன் எல்லாம்

பொ: இந்தத் தன்மையினையுடைய இளமரங்கள் நிறைந்த சோலையின் அழகு எல்லாவற்றையும் சூரிய குலத்துப் பிறந்த

மன்னவனாகிய இராமன், தன் செந்தாமரை மலர் போன்ற கண்ணினால் நோக்கி, அந்த அழகு எல்லாவற்றையும் மனத்தில் பொருந்தச் செய்து கொண்டு அன்னத்தின் நடையே என்று சொல்லத்தக்க மெல்லிய நடையும் நுட்பமான மின்னலும் தோற்கத்தக்க இடையினையும் அணியாகத் திகழ்கின்ற மேகலை யணிந்த அல்குலையும், கருப்பஞ்சாறும் தேனும் கலந்தாற் போன்று இனிக்கும் மொழியையும் உடையவளே! காண்பாயாக! என விளித்து எல்லாவற்றையும் காட்டினன்.

கு: முதிர்ந்து பட்டுப்போன மரங்கள் அச்சோலையில் இல்லை என்பார், 'இளமரக்கா' என்றார். சூரியன் நுழைந்து பார்க்க வியலாத அச்சோலையின் அழகு அனைத்தையும் அச்சூரியன் குலத்துப் பிறந்த இராமன் நுழைந்து பார்க்கின்றான் என இராமனது சிறப்புப் புலப்படுத்தியவாறு. மலர்க்கண் எனப் பொதுவகையாற் கூறினும் இங்கு இராமன் கண்ணுக்குவமை யாகத் தகுவது செந்தாமரை மலரே ஆதலின், 'செந்தாமரை மலர் போன்ற கண்' எனப் பொருள் கூறலாயிற்று. கண்ணால் நோக்குதலும் மனமுறக் காண்டலும் என வேறு வேறு கூறியவா றென்னையெனின்? வாயிற்காட்சி மானதக் காட்சியெனும் பாகு பாடு புலப்படக் கூறியதென்க. மேலும் சீதைக்குக் காட்டவேண் டும் என்னும் கருத்தினன் ஆகலின், இராமன், தன் கண்களால் கண்டு கண்டவற்றையெல்லாம் மனதில் பதித்துக் கொள்கின்றான் எனக் கொள்க. சீதையின் நடையும் இடையும் அணியும் மொழி யும் பற்றிப் புகழ்ந்து விளித்துக் காட்டினன் என்க. மின்னிடை மருங்குல் என்புழி இடை-இடைதல், தோற்றல். கன்னல்-கரும்பு, அது இங்கு ஆகுபெயராய்க் கரும்பின் சாற்றினையுணர்த்தியது. கலந்த இன்மொழி என்க. அகரம் தொகுத்தல். (16)

## அன்னமும் மயிலும்

710 மென்னடை யன்ன நின்னடைக்கஞ்சி
வெளியிடை நின்றிட வெள்கித்
துன்னுடை மலர்பூஞ் சோலையின் மறையத்
தோகைநின் சாயலுக் கிடைந்து
தன்னிடை கெட்டோ மினியுயிர் தாங்கோ

மௌனத்தழன் முழுகுவ போல
மின்னிடைப் பூணுய் விரிமல ரசோகின்
மேற்சென்று வீழ்வன காணுய்.

மெல்நடை அன்னம் நின்நடைக்கு அஞ்சி வெளியிடை
நின்றிட வெள்கி,
துன்னுடை மலர்பூஞ் சோலையின் மறையத் தோகைநின்
சாயலுக்கு இடைந்து
தன்னிடை கெட்டோம் இனி உயிர் தாங்கோம் எனத்தழல்
முழுகுவ போல
மின்னிடைப் பூணுய் விரிமலர் அசோகின் மேற்சென்று வீழ்வன
காணுய்.

பொ: மின்னலைப்போன்ற நுண்ணிடையில் அணிந்த அணி கலனையுடையவளே! மெல்லென நடக்கும் நடையினையுடைய அன்னப் பறவை நினது நடைக்குத் தோற்று அஞ்சி வெளியிடத்தில் நிற்கவும் நாணி, நெருங்குதலையுடைய மலர்கள் நிறைந்த பூஞ்சோலைக்கண் புகுந்து மறைந்து கொள்ளவும், மயில் நின் சாயலுக்குத் தோற்றுச் சீதை தன்னிடத்துச் சாயலுக்குத் தோற்றோம் ஆதலின், இனி உயிர் தாங்கியிருக்க மாட்டோம் என்று நெருப்பில் மூழ்குவதுபோல விரிந்த செம்மலர்களையுடைய அசோக மரத்தின் மேற் சென்று வீழ்கின்றவற்றைப் பார்ப்பாயாக.

கு: இடைப்பூண் என்றது இடையில் அணியும் மேகலை முதலியவற்றை. பூணுய் என்றது விளி. காணுய் என்பது ஏவல் சீதையும் இராமனும் வருவது கண்டு அன்னப்பறவை சோலையிற் புகுவதையும் மயில் பறந்துசென்று செம்மலர் அசோகமரத்தில். அமர்வதையும் கண்ட இராமன், அவற்றின் இயல்பான செயல்கட்குத் தற்குறிப்பேற்றமாக வேறு காரணம் கற்பித்துக் கூறினமையின் இது தற்குறிப்பேற்ற அணியாகும். அன்னத்தையும் மயிலையும் காட்டுவான்போல அவை சீதையின் நடைக்கும் சாயலுக்கும் தோற்றுப் பொழிலில் மறைவதாகவும் தீப்பாய்வதாகவும் சொல்லிக் காட்டிச் சீதையின் நடையையும் சாயலையும்

புகழ்ந்து கூறியவாறு. அசோகு செம்மலர்களையுடையதாகலின் அது தீப்போலத் தோன்றும். அதனிடை அமர்ந்த மயில் தழலில் மூழ்குவது போலத் தோன்றும் என்க. மறைய வீழ்வன காணாய் என்புழிச் செயவெனெச்சம் காரண காரியத் தொடர்பின்றி இது நிகழ, இது நிகழ்ந்தது எஃபதுபட வந்தது. வெள்குதல்-நாணுதல். துன்னுடை-நெருங்குதலுடைய தோகை சினை ஆகு பெயராய் மயிலை உணர்த்தியது. தன்னிடை-சீதைதன்னிடை. தோற்றவர் பின் உயிர் தாங்கியிராமல் எரிபுகுந்து மாய்தலும் உண்டாகலின், மயில் செம்மலரசோகில் அமர்ந்த தோற்றம் மானத்தால் தழலில் முழுகுவது போலக் காட்சியளித்தது என்றவாறு. (17)

## புதுமலர் நாடும் பொறிவரி வண்டு

711 உள்ளபோ தினிதுண் டிலாதபோ தவரோ
டுறவுவிட் டுறுமிடந் தேடும்
ஒள்ளிய ரல்லா ருறவுபோ னெடுநா
ளுயர்தரு மலர்மது வுண்டு
மெள்ளவம் மரப்பூ மாறிட விட்டு
வேறொரு பூமரந் தேடிக்
கள்ளவிழ் கோதை கமழ்குழ லணங்கே
களிவண்டு போவன காணாய்!

உள்ளபோது இனிது உண்டு இலாதபோது அவரோடு
உறவுவிட்டு உறும்இடம்தேடும்
ஒள்ளியர் அல்லார் உறவுபோல், நெடுநாள் உயர்தரு மலர்மது
உண்டு
மெள்ள அம்மரம் பூமாறிட விட்டு வேறுஒரு பூமரம் தேடி,
கள்அவிழ் கோதை கமழ்குழல் அணங்கே! களிவண்டு போவன
காணாய்!

பொ:- தேனோடு மலர்ந்த மலர்மாலை கமழ்கின்ற கூந்தலையுடைய தெய்வப் பெண் போன்றவளே! செல்வம் உள்ளபோது அச் செல்வரோடு இருந்து இனிதாக உண்டு, செல்வம் இல்லாத

போது அவரோடு உறவு கொண்டாடுதலை விட்டுச் செல்வம் பொருந்தியவரைத் தேடுகின்ற அறிவில்லாரது உறவுபோல, நெடு நாளாக உயர்ந்த மரம்பூத்த மலரில் உள்ள தேனைப்பருகியிருந்து அம்மரம் மெள்ள மலர்தல் நின்றவுடன் அம்மரத்தைவிட்டு வேறொரு மலர் மரத்தை தேடிக் கொண்டு களிப்பு மிக்க வண்டுகள் போவதைக் காண்பாயாக.

கு:- மரங்கள் எல்லாம் ஒரே காலத்துப் பூத்தல் இல்லை. கார் காலத்துப் பூக்கின்ற கொன்றை மரம் வேனிற்காலத்துப் பூத்த லில்லை. வேனிற்காலத்துப் பூக்கும் பாதிரி கார்காலத்துப் பூத்த லில்லை. ஒரு மரம் பூத்திருந்தபோது அம்மரத்தில் ஆர்வத்தோடு தங்கி நெடுநாள் வரையில் தேனருந்திய வண்டு அம்மரம் பூப்பது மாறியவுடன் பூத்துள்ள வேறு மரத்தைநாடிச் செல்கின்றது கண்ட இராமன் அதனைச் சீதைக்குக் காட்டிக் கூறியவாறு. பூமாறிய மரத்தை விட்டுப் பூத்த மரத்தைத் தேடிச் செல்லும் வண்டுக்குச் செல்வமுள்ளபொழுது உடனிருந்து இனிதுண்டு செல்வம் நீங்கிய- வுடன் அவரைவிட்டு வேறு செல்வமுடையவரைத் தேடிச் செல்லும் அறிவிலாதாரை உவமையாக்கியவாறு. உறுமிடம் என்றது செல்வமுறும் இடத்தை. ஒள்ளியர்-அறிவுடையார். களி வண்டு -தேனுண்டமையால் களிப்புமிக்க வண்டு. இந்த வண்டு- களின் செயலைக்காட்டி மக்களில் பண்பில்லாமல் இவ்வண்டு போன்றோரும் உளர் என்பதை நினைப்பித்தவாறு. கள்ளுண்டு களிக் கும் வண்டினைக் காட்டும் இராமன் சீதையின் கூந்தலிலும் தேனூறு மலர்கின்ற மலர்மாலையிருப்பதையுணர்த்தும் முறையால் விளித் துள்ள நயம் காண்க. "நிறைந்தோர்த்தேடு நெஞ்சமொடு குறைந் தோர் பயனின்மையின் பற்றுவிட்டொரூஉம் நயனில் மாக்கள் போல வண்டினம் சுனைப்பூநீத்துச் சினைப்பூப்படர-" (அகநா-71) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (18)

## பளிக்கறையின் பாங்கு

712 தூங்கலை யானை விட்ட திவிரூப
ணருநிதி யுடையனே லுவக்கும்
மங்கையர் மனப்போல் வாழையி னீழல
வந்துற மரகத மாதிப்

பொங்கிய செருந்திப் பூவுறப் பொன்னும்
நீலமாய்ப் பூவைவீ பொருந்தப்
பங்கய மடுப்பச் செம்மணி யாகும்
பளிக்கறை பைந்தொடி பாராய்!

ஐங்கணை யானை விட்டு அதிவிருபன் அருநிதி உடையனேல்
உவக்கும்
மங்கையர் மனம்போல் வாழையின் நிழல் வந்துற மரகதம் ஆகிப்
பொங்கிய செருந்திப் பூவுறப் பொன்னும், நீலமாய்ப் பூவைவீ
பொருந்தப்
பங்கயம் மடுப்பச் செம்மணி யாகும் பளிக்கறை பைந்தொடி
பாராய்!

பொ:- பசுமையான வளையணிந்தவளே! தாமரை முதலிய மலர்க்கணை ஐந்தினையுடைய மன்மதனை விடுத்துப் பிறரைப்பார்க்கும்போது அதிக அழகு இல்லாதவன் ஆயினும் அவன் கிடைத்தற்கு அரிய செல்வத்தையுடையனேல் அவனை மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளும் பரத்தையரின் மனம், சார்பவர்க் கேற்ப வேறுபடுதல் போல, வாழையிலையின் நிழல் வந்து பொருந்த மரகத மணியாகிப் பின்பு செருந்தியின் மிக்க மலர்கள் பொருந்துதலால் பொன்னாகிக் காயாம்பூ பொருந்தும்போது நீலமணி யாகிச் செந்தாமரையின் நிழல்படச் சிவந்த மாணிக்கம் ஆகின்ற பளிங்கினாலாகிய அறையைப் பார்ப்பாயாக.

கு: சார்ந்ததன் வண்ணமாதல் பளிங்குக்கு இயல்பு. பளிங்கினாலாய அறையில் வாழையின் நிழல் வீழும்போது அப்பளிக்கறை மரகத மணிபோலப் பச்சையாகவும் செருந்தியின் பொன்னிறப் பூக்களின் நிழல் படும்போது பொன்னைப் போல மஞ்சள் நிறமாகவும் காயாமரத்தின் நீலப்பூப் பொருந்தும்போது நீலமணி போன்று நீலநிறத்தை யுடையதாகவும் செந்தாமரையின் நிழல் படும்போது செம்மணிபோன்று சிவந்தும் சார்ந்ததன் வண்ணமாய்க் காட்சியளிக்கிறது. இந்தப் பளிக்கறைக்கு உவமையாகப் பரத்தையரின் மனத்தைக் கூறியிருப்பது பொருத்தமானதாகும். தன்னைச் சார்ந்தவர் எத்தகையரேனும் அவரவர்க்கும் அன்புடையவர்போல நடிக்கும் இயல்பு பரத்தையர்க்கு உண்டு.

ஐங்கணையான் என்றது மன்மதனை; மன்மதனுக்கு மாறாக குரூபி ஆயினும் அவ்வழகை நோக்காமல் அவன் செல்வம் உடையவனு என்பதை அறிந்து உடையவனேல் அவனை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டு மகிழ்விக்கும் மங்கையர் என்றது பொருட் பெண்டிரை. அடுத்தது காட்டும் பளிங்குபோல் (706) என வள்ளுவர் கூறிய உவமையை இப்பாடலால் விவரித்தவாறு. ஐங்கணை-தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலம் என்பன.

## கொக்கின் தவநிலை

713 பொருகய னயனப் புரிகுழ லாளே
பொய்த்தவ வேடத்தின் மறைந்து
விரிகட லுலகில் வேண்டிய வண்ணம்
வெவ்வினை செய்பவ ரென்னத்
திரிதரு மீனைத் தப்பறக் கொத்தித்
தின்றிடு முபாயமீ தென்று
கருதிய கொக்கு மெய்சலி யாது
கண்முகிழ்த் திருப்பன காணாய்.

**பொருகயல் நயனப் புரிகுழலாளே! பொய்த்தவ வேடத்தின் மறைந்து**
**விரிகடல் உலகில் வேண்டியவண்ணம் வெவ்வினை செய்பவர் என்ன,**
**திரிதரும் மீனைத் தப்புஅறக் கொத்தித் தின்றிடும் உபாயம்ஈது என்று**
**கருதிய கொக்கு, மெய்சலியாது கண்முகிழ்த்து இருப்பன காணாய்!**

பொ: போர்செய்கின்ற இருகயல் மீனைப்போன்ற கண்களையும் பின்னிய கூந்தலையும் உடைய சீதையே! விரிந்த கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில் பொய்யான தவவேடத்தைத் தாங்கி அவ்வேடத்தில் மறைந்து கொண்டு வேண்டியபடி பாவங்களைச் செய்பவரைப்போல, இயல்பாக மகிழ்ந்து திரிகின்ற மீன்களைத் தப்பாமல் கொத்தித்தின்பதற்குரிய உபாயம் இதுதான் என்று கருதிய கொக்கு உடம்பு அசையாமல் கண்மூடி இருக்கும் காட்சியைக் காண்பாயாக.

கு: "தவமறைந் தல்லவை செய்தல் புதல் மறைந்து வேட்டு வன் புரட்சிமிழ்த்தற்று (குறள்-274) என்ற குறளை நினைந்து பொய்த்தவ வேடத்தின் மறைந்து வேண்டியவண்ணம் வெவ் வினை செய்பவர் என்றார். வேடநெறிநில்லாது வேடத்திற்கு மாறான பாவங்களைச் செய்பவர் என்றவாறு. பொறியடங்கி நிற்கும் நல்லோர் வேடத்தில் மறைந்து நின்று பொறிவழி செல் லும் புல்லியோரை, ஓடுமீன் ஓடஉறுமீன் வருமளவும் வாடி யிருக்கும் கொக்கிற்கு உவமை கூறியவாறு". கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன் குத்தொக்க சீர்த்த விடத்து (குறள்-490) என வள்ளுவர் கொக்கின் இயல்பை விளக்கியுள்ளமையும் 'மீன்கோடற்கிருக்கும் வழி அது வந்தெய்துந்துணையும் முன்ன றிந்து தப்பாமற் பொருட்டு உயிரில்லது போன்றிருக்குமாகலா னும், எய்திய வழிப் பின் தப்புவதற்கு முன்பே விரைந்து குத்துமாகலானும்' என்று பரிமேலழகர் விளக்கியுள்ளமையும் காணலாம். வேண்டிய வண்ணம் வெவ்வினை செய்தலாவது, பிறர்க்குரிய மகளிரைத் தன் வயத்ததாக்குதல். தவவேடம் பூண்டு அவஞ்செய்யும் புல்லர்களைப் போலக் கொக்குத் தவத்தி ருப்பவர்போல அசையாது அமர்ந்து, மீன் நெருங்கிய வழி அது தப்பிப் போகாமல் கொத்திக் கொலை புரியும் கொடுமை யது என்பது புலப்படுத்தியவாறு. மெய்சலியாமையும் கண் முகிழ்த்தலும் தவவேடத்தோர்க்கும் கொக்கிற்கும் பொதுத் தன்மை. சலியாமை-அசையாமை. முகிழ்த்தல்-மூடுதல். மீனைப் பற்றிய செயலைக்கூறும் இராமன் பொருகயனயனப் புரிகுழலாளே எனச் சீதையை விளித்தது பொருந்திய விளியாதல் காணலாம். ஐம்பாலில் குழல் என்பதும் ஒன்று. அதன் இயல்பு புலப்படப் புரிகுழல் என்றான் என்றலும் ஒன்று. (20)

## வண்டுகள் மொய்க்கும் செங்கமலம்

714 அடிமல ரரம்பை குறங்கக லல்கு லரவு
மின் னிடையணி யமைத்தோள்
இடைநிரைத் தரளப் பவளவாய் வேற்க
ணெழினுதல் விரைகம ழோதி

வடிவினிற் செய்ய மங்கையன்றேளே
வண்டுகள் மொய்த்தசெங் கமலம
கடுவினைக் கொல்ல னுலைக்கரி மூடு
கனலினை நிகர்ப்பது காணுய்.

அடிமலர்; அரம்பை குறங்கு; அல்குல் அரவு; மின்இடை; அணி அமைத்தோள்;
இடைநிரைத் தரளப் பவளவாய்; வேற்கண்; எழில்நுதல்; விரைகமழ் ஓதி;
வடிவினிற் செய்ய மங்கை அன்னுளே! வண்டுகள மொய்த்த செங்கமலம்,
கடுவினைக் கொல்லன் உலைக்கரிமூடு கனலினை நிகர்ப்பது காணுய்!

பொ:- மலர்போன்ற பாதங்களையும் வாழைத்தண்டு போன்ற தொடைகளையும் பாம்பின் படம்போன்ற அகல் அல்குலையும் மின்னலைப் போன்ற இடையினையும் அழகிய மூங்கில் போன்ற தோள்களையும் நடுவே வரிசையான முத்துக்களைக் கொண்டுள்ள பவளக் கிண்ணம் போன்ற வாயினையும் வேல்போன்ற கண்ணினையும் அழகு மிக்க நெற்றியினையும் மணங்கமழ்கின்ற கூந்தலினையும் கொண்டு வடிவத்தால் செந்திருவை ஒத்தவளே! வண்டுகள் மொய்த்துள்ள செந்தாமரை மலரின் தோற்றம், கடுமையான தொழிலினையுடைய கொல்லனது உலைக்களத்தில் கரியால் மூடப்பட்டுள்ள கனலை ஒத்துத் தோன்றுவதைக் காண்பாயாக.

கு:- அடிமலர் அல்குலரவு என்பவை உருவகமாகக்கொள்ளத்தக்கனவே எனினும் ஏனையவை அரம்பை குறங்கு, மின்னிடை, அமைத்தோள், பவளவாய், வேற்கண் என்பன உவமையாக அமைந்துள்ளமையால் அவற்றையும் மலரடி எனவும் அரவல்குல் எனவும் மாற்றி உவமையாகவே கொள்ள நேர்ந்தது. பவளக் கிண்ணம் என்னும் கருத்தால் இடைநிரைத்தரளப் பவளவாய் என்றூர். பவழம்போன்ற வாயில் முத்துப்போன்ற வரிசையான பற்கள் அமைந்த தோற்றம் முத்துக்களை நிரல்படவைத்த பவழக் கிண்ணம்போன்றது என்க. பவளம் என்றது ஆகுபெயராய்ப் பவளச் கிண்ணத்தையுணர்த்தியது. அரம்பை-வாழை. குறங்கு-தொடை.

அமை-மூங்கில். தரளம்-முத்து விரை-வாசனை. ஓதி-கூந்தல். அடி முதல் ஓதிவரையில்உள்ள உறுப்புக்களைத்தனித்தனியே சிறப்பித்து விட்டு அவள் முழு வடிவிற்கும் உவமை கூறுவராய் 'வடிவினில் செய்ய மங்கையன்னாளே!' என்றார். செய்யமங்கை-திருமகள்; செந் தாமரை மலர் கனலைப் போன்று சிவந்து காட்ட, அம்மலர்மேல் மொய்த்துள்ள கருவண்டுகளின் தோற்றம் கரித்துண்டுகள் போலக் காட்சியளிக்கின்றது என்க. செருந்தியின் மலர்த்தாங்குஞ் செடியி தழின சோகம் பொருந்திய களிவண்டிற் பொதிவன பொன்னூது மிருந்தையினை முதீயொத்து எழுவதொ ரியல்பாராய் (அயோத்-வனம்புகு-8) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (21)

## இராமன் சீதையோடு பளிங்கு மண்டபத்தில் இருத்தல்

715 வெங்கதிர் நுழையா விரிபொழி லுள்ள
வேறுவே றாகிய விசேடம்
செங்கயற் கண்ணாய் காணெனக்காட்டிச்
செறிகழற் சேவடி யிராமன்
பங்கய வாவிப் பளிக்குமண் டபத்துப்
பசுநறுந் தென்றல் சேவிப்ப
மங்கையர் வாழ்த்த மாகத ரேத்த
மடந்தையோ டினிதுவீற் றிருந்தான்

'வெங்கதிர் நுழையா விரிபொழில் உள்ள வேறுவேறு ஆகிய விசேடம்
செங்கயற் கண்ணாய்! காண்' எனக் காட்டிச் செறிகழல் சேவடி இராமன்,
பங்கய வாவிப் பளிக்கு மண்டபத்துப் பசுநறும் தென்றல் சேவிப்ப,
மங்கையர் வாழ்த்த மாகதர் ஏத்த மடந்தையோடு இனிது வீற்றிருந்தான்.

பொ: நெருங்கிய வீரக்கழலினை யணிந்த சிவந்த பாதங்களை யுடைய இராமன் சீதையை நோக்கி, 'சிவந்த கயல்மீன்போன்ற கண்ணையுடையவளே! சூரியனுடைய வெம்மையான கதிர்கள்

நுழைய இயலாத செறிவான விரிந்த பொழிலில் உள்ள வேறுவேறு வகையான சிறப்புக் காட்சிகளைக் காண்பாயாக! என இவ்வாறே காட்டிவிட்டுத் தாமரை பூத்துள்ள தடாகத்தின் கரையுள்ள பளிங்கினலான மண்டபத்தில் இளமையான நறுமணமுள்ள தென்றல் தன்னைச் சேவிப்பதுபோல மெல்லென வீசாநிற்க, மங்கையர்கள் வாழ்த்தவும் மாகதர் என்போர் ஏத்தவும் சீதையோடு இனிதாக வீற்றிருந்தான்.

கு: பொழிலின் செறிவு மிகுதிபுலப்பட வெங்கதிர் நுழையாமை கூறினர். "வெயினுழை பறியாக் குயில் நுழைபொதும்பர்" (பெரும்பாணுற்றுப்படை-374) விசேடம் என்றது. சிறப்பான காட்சிகளை சீதையின்செவ்வரி படர்ந்த கண்ணுக்கு உவமையாக வேண்டிச் செங்கயலை உவமை கூறினர். கருங்கயலை நீக்குதலில் இது இனமுள்ளடையாகும். வாவி–நீர்நிலை – தடாகம். தண்மை வேண்டி வாவிக்கரையில் அமைந்த பளிங்கு மண்டபம் என்க. பசுநறும் தென்றல் என்புழிப் பசுமை இளமையையும் நறுமை மணத்தையும் உணர்த்தின. தென்றல் மெல்லென மேனியைத் தைவரல்போல வீசுதலின் 'சேவிப்ப' எனச் சிறப்பித்தார். வாழ்த்தலும் ஏத்தலும் அரசர்க்குரியவாய்ப் பண்டுதொட்டுச் செய்துவரும் வழிபாடுகள். மாகதர் என்போர் இருந்து ஏத்துவோர். மடந்தை என்றது சீதையை. பருவம் குறித்ததாகவும் கொள்ளலாம். துன்பம் சிறிதும் இன்றி இருந்தான் என்பார், இனிது இருந்தான் எனவும் பிறர்க்கில்லாச் சிறப்போடு அமர்ந்திருந்தான் என்பார் வீற்றிருந்தான் எனவும் கூறினர். வீறு, பிறிதொன்றிற்கில்லாத சிறப்பு(22)

## இராமன் சீதையை அணைத்தல்

716 பொன்னிற மேனிப் பூமக ளோடும்
பொருதிரைப் பாற்கட னடுவண்
பன்னக வணைமேற் பண்டுதா னிருக்கும்
படியெனத் தோன்றிமாய்ந்திடாத
மின்னெடுங் கூடி மேதினி படிந்து
விளங்குகார் மேகமா மென்னச்
சென்னிற மேனிச் சீதையைத் தனது
செம்மலர்த் திருக்கையா லணைத்து.

பொன்னிற மேனிப் பூமகளோடும் பொருதிரைப் பாற்கடல் நடுவண்
பன்னக அணைமேல் பண்டுதான் இருக்கும்படி எனத் தோன்றி, மாய்ந்திடாத
மின்னெடுங் கூடி மேதினி படிந்து, விளங்கு கார்மேகமாம் என்னச்,
செந்நிற மேனிச் சீதையைத்தனது செம்மலர்த் திருக்கையால் அணைத்து.

பொ:- பொன்னிறம் போன்ற மேனியையுடைய திருமகளோடும் மோதுகின்ற அலைகளையுடைய திருப்பாற்கடல் நடுவே, பாம்பணைமேல் முன்புதான் பள்ளிகொண்டிருக்கும் தன்மையெனக் காணப்பட்டு, மாய்ந்துபோகாத மின்னலொடும் கூடிப் பூமியில் படிந்து விளங்குகின்ற கரியமேகமாம் என்னும் படிச் செந்நிறம் வாய்ந்த மேனியையுடைய சீதையைத் தன் சிவந்த மலர் போன்ற அழகிய கையால் அணைத்துக்கொண்டு.

கு:- குளகம். மேல் சங்கிதம் இனிது கொண்டாடி...விளையாடு நாளில் என இருபத்தாருவது செய்யுளில்முடியும். கரியனாகிய இராமன் செந்நிறச் சீதையோடு இருக்கும் தோற்றம், இருவகை எண்ணங்களையெழுப்புகின்றது. ஒன்று, முன்பு பாற்கடல் நடுவே பாம்பணையில் திருமகளோடு இருக்கும் நிலையை நினைப்பிப்பது. மற்றொன்று, நொடியில் அழிந்துபோகும் இயல்பான மின்னலைப் போல் மாய்ந்து போகாத ஒருமின்னலோடும் கூடிப் பூமியில் படிந்து விளங்குகின்ற கார்மேகத்தை நினைப்பிப்பது. இவ்விரு திற எண்ணங்கள் தோன்றுமாறு இராமன் சீதையுடன் பளிக்கறையில் அமர்ந்திருந்தான் என்க. பன்னகம்-பாம்பு. 'மாய்ந்திடாத மின்' என்றது, இல்பொருளுவமையாய்ச் சீதையைச் சுட்டிநின்றது. மலையில் படிந்திராமல் மேதினி படிந்து விளங்கு கார்மேகம் என்பதும், இல்பொருளுவமையாய் இராமனை உணர்த்தியது. இதனை அபூத உவமை யென்பர். செந்நிறம் என்றது, எதுகை நோக்கிச் சென்னிறம் எனத் திரிந்து நின்றது. செம்மலர்த்திருக்கை என்றது உவமையணி. சீதையையணைத்த இராமனது கையின் சிறப்புப் புலப்படச் 'செம்மலர்த் திருக்கை' என்றார். இராமன் மேனி கரியதேயாயினும் அவன் முகமும் கண்ணும் வாயும் கையும் காலும் சிவந்திருக்கும் ஆதலின் 'செம்மலர்த்திருக்கை' என அவன்

கையைச் சிறப்பித்தார். இனிச் சீதையின் மேனிச் சிவப்பு அணைத்த கையிலும் பரவிச் செம்மலர்த் திருக்கையாயிற்று எனக் கொள்ளலும் ஆம். (23)

## நாடக மகளிரின் ஆடல் காணுதல்

717 செய்வகை யறியார் கண்டவர் திகைப்பத்
திருந்திய தாளவாத் தியங்கள்
தய்வரும் வண்ணம் மூவகைச் சதியுந்
தப்பறத் தனித்தனி காட்டிக்
கய்வழிக் கண்ணுங் கண்வழி மனமுங்
கலந்திடக் கற்பக நாட்டுத்
தெய்வமங் கையர்க ணாணினர் நிற்பச்
சேயிழை யார்நட மாட.

செய்வகை அறியார் கண்டவர்திகைப்பத், திருந்திய தாளவாத் தியங்கள்
தய்வரும் வண்ண மூவகைச் சதியுந் தப்பறத் தனித்தனி காட்டிக்
கய்வழி கண்ணும் கண்வழி மனமும் கலந்திடக், கற்பக நாட்டுத்,
தெய்வ மங்கையர்கள் நாணினர் நிற்பச், சேயிழையார் நடம் ஆட

பொ:- (நாட்டியத்தைக்) கண்டவர்கள், தாம் செய்யும் திறம் இன்னதென்று அறியாதவர்களாய்த் திகைத்து நிற்கவும், திருத்தமான தாளம் முதலிய வாத்தியங்கள் தழுவும்படி மூவகையான சதிகளையும் தப்புதல் இல்லாமல் தனித்தனியே காட்டிக்கொண்டு (அபிநயிக்கின்ற) கைகளின் வழிக் கண்ணும் கண்களின் வழி மனமும் கலக்கும்படி செய்து கொண்டு கற்பக மரங்களையுடைய வானநாட்டில் உள்ள தெய்வமகளிர் (இவ்வளவு அழகாக நாமும் நடிக்க வியலாதே என்று) நாணி நிற்கவும் சிவந்த அணிகலன்களை அணிந்த நடன மாதர் நடனம் ஆடாநிற்க.

கு:- நடனம் கண்ட மண்ணுலகத்தோர் செய்வகையறியாது திகைத்து நிற்கவும், தெய்வமங்கையர்கள் நாணி நிற்கவும், சேயிழையார் மூவகைச் சதியும் தப்பறக் காட்டிக் கலந்திட நடம் ஆட என்க. இதனால் இராமனும் சீதையும் கண்டு மகிழுமாறு நடன

மாதர்கள் ஆடிய நடனத்தின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. அறியாராய்த் திகைப்ப என முற்றெச்சமாக்குக. தாளம் மத்தளம் யாழ் முதலிய இசைக்கருவிகள் எல்லாம் அடங்கத் தாள வாத்தியங்கள் என்றார். வாத்தியங்கள் தைவருதலாவது நடன மகளிரின் சதிகள் அவ்வாத்தியங்களின் வரையறையான ஒலிகளைத் தழுவும் படி நடித்தல். தைவரல்-தழுவுதல். தைவரும் கைவழி என்பன, எதுகை நோக்கித் தய்வரும் கய்வழி எனப் போலியாய் வந்தன. சதி-தாள வொற்றுக்கேற்ப அடிகளைப் பெயர்த்தல். மூவகைச் சதியாவன:- ஆரோகணம், அவரோகணம், சமநிலை என்பன. இவற்றைத் தனித்தனியே அறியுமாறு நன்கு நடித்துக். காட்டினர் என்க. நடிக்குங்கால் கைகளை அபிநயக்கும்போது கை வழியே கண்ணும் கண்ணின் வழியே மனமும் கலக்குமாறு நடிப்பர் என்றவாறு. 'கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமும் செல்ல ஐய நுண்ணிடையாராடும் மாடக வரங்கு (பால-மிதிலைக்-9) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். சேயிழையார் என்றதால் நடிக்கும் மகளிர் செவ்வணியணிந்து நடிக்கும் இயல்பைப் புலப்படுத்தவாறு. (24)

## மாகதர் பாடல்

718 எழுவகை யிசைக்கா ரணமுடைப் பண்ணுக்
கிசைந்தன தாளவாத் தியங்கள்
தழுவிட வைத்துச் சராசர முருகத்
தாளத்தின் வழியுரு வெடுத்து
விழிபுரு வந்தோண் மிடறுகள் சரித்து
வேறுபா டுருவகை யிசைநூல்
வழுவுத லின்றி வங்கியம் வீணை
மயங்கிட மாகதரேத்த,

**எழுவகை இசைக் காரணம் உடைப் பண்ணுக்கு இசைந்தன தாளவாத்தியங்கள்,**
**தழுவிட வைத்துச் சராசரம் உருகத் தாளத்தின்வழி உருவு எடுத்து**

விழிபுருவம் தோள் மிடறுகள் சரித்து வேறுபாடு உருவகை
இசைநூல்
வழுவுதல் இன்றி வங்கிய வீணை மயங்கிட மாகதர் ஏத்த.

பொ: சரிகமபதநி என்கின்ற எழுவகையான இசைக் காரணங்களையுடைய பண்ணுக்குப் பொருத்தமாகவுள்ள தாளம் முதலிய வாத்தியங்கள் தம் பாடலொடு தழுவுமாறு வைத்து, இயங்குவனவும் நிற்பனவுமாகிய இவ்வுலக உயிர்கள் எல்லாம் உருகுமாறு, தாள ஒற்றின் வழியே பாடலாகிய உருவினை எடுத்து, கண்ணும் புருவமும் தோளும் மிடறும் அசைவுற்று வேறுபடாதபடி, இசைநூல் இலக்கணம் சிறிதும் தப்பாதபடி, குழலொலியும் வீணை யொலியும் கலக்குமாறு மாகதர் என்போர் பாடி ஏத்தா நிற்க.

கு: எழுவகை இசைக்காரணம் என்றது குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் என்பன. இவை சரிகமபதநி எனக் குறிக்கப் பெறும். சரம், இயங்குவன; அசரம்-நிற்பன. சராசரம் என்பது வடமொழித் தீர்க்கசந்தியாகப் புணர்ந்து நின்றது. உரு என்றது இசைப்பாட்டினை. இசை பாடும்போது விழியும் புருவமும் தோளும் மிடறும் இயல்பின் வேறுபட்டு விழி செருகுதலும் புருவம் ஏறுதலும் தோள்தூக்குதலும் மிடறுவீங்கலும் குற்றங்களாகும் அக்குற்றங்கள் நிகழாத வண்ணம் பாடினர் என்க. வங்கியம் என்றது குழலினை. குழலொலியும் வீணையொலியும் மிடற்றுப் பாடலோடு கலக்க மாகதர் முறையாகப் பாடி ஏத்தினர் என்க. "வயிறது குழிய வாங்க லமுமுகங்காட்டல் வாங்குஞ், செயிரறு புருவ மேறல் சிரநடுக்குதல் கண்மூடல், பயிரறு மிடறு வீங்கல் பையென வாயங்காத்தல், எயிறது காட்டலின்ன உடற்றொழில் குற்றம் என்ப" (பரஞ்சோதி திருவிளையாடல் விறகு விற்ற-29) என உடல் தொழில் குற்றங்கள் ஓதப்பட்டிருத்தல் காணலாம். இசை நூல் வழுவுதல் என்றது இசை நூலில் சொல்லப் பட்ட குற்றங்கள். (25)

## இசைகேட்டபின் மலர்கொய்தல் முதலியன நிகழ்த்தல்

719 அன்னசங் கீத மினிதுகொண் டாடி
யிருந்து யாடையா பரணம்

மன்னவ னிராமன் மாகதர்க் களித்து
மாதொடுங் கோயிலின் வைகிப்
பன்மலர் பறித்து நீர்விளை யாட்டிற்
படிந்து பின் னமுதினி துண்டு
நன்னுத லாளுந் தானுமப் பொழிலி
னுடொறு மாடுறு நாளில்.

அன்ன சங்கீதம் இனிது கொண்டாடி, இருந்தி ஆடை ஆபரணம்
மன்னவன் இராமன் மாகதர்க்கு அளித்து மாதொடும் கோயிலினில் வைகிப்
பல்மலர் பறித்து நீர்விளையாட்டில் படிந்துபின் அமுது இனிது உண்டு
நல்நுதலாளும் தானும் அப்பொழிலின் நாள்தொறும் ஆடுறும் நாளில்

பொ:- அவ்வகையான சங்கீதத்தைக் கேட்டுக் கொண்டாடி மாகதர்க்குப் பெருஞ்செல்வத்தையும் ஆடைகளையும் ஆபரணங் களையும் மன்னவனாகிய இராமன் கொடுத்து விட்டுப் பின்பு, சீதையொடும் தனக்கென் வகுத்த கோயிலில் தங்கியிருந்து பல மலர்களைப் பறித்தும் நீர் விளையாட்டில் படிந்தும் பின்பு அமுதினை இனிதாக உண்டும் நல்ல நெற்றியையுடைய சீதையும் தானும் அந்தப் பொழிலில் நாள்தொறும் விளையாடும் நாட்களில்.

கு: மாகதர் இருந்து ஏத்துவோர். மாகதரின் சங்கீதத்தைக் கேட்டுப் பாராட்டி அவர்க்குப் பரிசிலாகப் பெரும்பொருளும் ஆடையும் ஆபரணமும் அளித்து அனுப்பிவிட்டு இராமன் சீதை யோடு தனக்குரிய பொழிலில் உள்ள கோயிலில் தங்கியிருந்து பூக் கொய்தல் நீராடல் உண்டாட்டு ஆகியவற்றை நிகழ்த்திக்கொண்டு மகிழ்ச்சியாக இருக்கும் நாளில் என்றவாறு. குளகம்: வருஞ் செய்யுளில் முடியும்.

இந்தச் சீதையின் திருமணங்காணவந்த அயோத்திநகர் மக்கள் வழியில் மலர்கொய்தும் நீர்விளையாடியும் உண்டாடியும் மகிழ்ந்த செய்தியைக் கம்பர் பூக்கொய்படலம், நீர்விளையாட்டுப் படலம், உண்டாட்டுப்படலம் என மூன்று படலங்களாய்

விரித்துக் கூறியுள்ளார். ஆனால் இராமனும் சீதையும் அவற்றைச் செய்ததை ஒரேயடியில் சுருக்கமாகக் கூறியுள்ளார் ஒட்டக் கூத்தர்.
(26)

## சீதை கருவுறுதல்

720 விழிபெரும் பசலை பூத்தது மேனி
வெளுத்தது மெல்லியன் முன்கை
தழுவிய சரிகள் சரிந்தன கர்ப்பம்
தரித்தது சான்றவர்க் கெல்லாம்
மொழிவன போல முலைகள்பால் பாய
வம்முகங் கறுத்தன வாக
எழுதருஞ் சீதைக் கிவ்வகை யான
விலக்கணம் பலவு முண் டான.

விழிபெரும் பசலை பூத்தது; மேனி வெளுத்தது; மெல்லியல் முன்கை
தழுவிய சரிகள் சரிந்தன; கர்ப்பம் தரித்தது; சான்றவர்க்கெல்லாம் மொழிவன போல முலைகள் பால் பாய அம்முகம் கறுத்தன ஆக; எழுதருஞ் சீதைக்கு இவ்வகை ஆய இலக்கணம் பலவும் உண்டான.

பொ: கண்களில் பெரிய பசலை நிறம் உண்டாயிற்று. மேனியின் பொன்னிறம் மாறி வெளுத்தது; மெல்லிய இயல்பையுடைய முன்கைகளைத் தழுவியிருந்த வளைகள் சரிந்து வீழ்ந்தன; வயிற்றில் கருப்பம் உண்டாயிற்று என்பதைச் சான்றோர்கட்கு எல்லாம் சொல்லுவன போல, முலைகள் பால் பரவ அவற்றின் அழகிய முகங்கள் கறுத்தன ஆக; ஓவியனாலும் எழுதுதற்கு அரிய பேரழகையுடைய சீதைக்கு இவ்வகையான இலக்கணம் பலவும் உண்டாயின.

கு: பசலை என்பது கருவுற்றோர்க்கும் காதலரைப் பிரிந்தோர்க்கும் வரும் நிறவேறுபாடு. அந்நிறவேறுபாடு முதலில் தெரிவது கண்களில் ஆதலின், 'விழிபெரும் பசலை பூத்தது' என்றார். சரி-கை வளை. சரிகள் சரிந்தன என்ற சொல்நயம் காண்க. சீதையின் முலை முகம்கறுத்த நிகழ்ச்சி அவள் கருப்பம் தரித்ததைச் சான்றவர்க்

கெல்லாம் சாற்றுவது போல இருந்தது எனத் தற்குறிப்பேற்ற அணி பெறக் கூறியவாறு. 'எழுதருஞ் சீதை' என்பதனோடு, "ஆதரித்தமுதில் கோல் தோய்ந்து அவயவம் அமைக்குந்தன்மை யாதெனத் , திகைக்கு மல்லால் மதனர்க்கும் எழுதவொண்ணுச் சீதை'' (பால மிதிலை-:) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். கருவுற்றோர்க்குரிய இலக்கணம் சில சொன்னாராகலின் "இவ் வகையான இலக்கணம் பலவும் உண்டான'' என்றார். மேல் நாடொறும் ஆடுறு நாளில் எனக் கூறி இச்செய்யுளில் சீதை கருப்பம் தரித்ததைச் சொல்லியுள்ளார். இராமனும் சீதையும் களவியற் களித்தனர் என்பதை வெளிப்படக் கூறுமல் ஆடுறு நாளில் என்ற சொல்லால் குறிப்பால் புலப்படவைத்த நாகரிகம் போற்றுதற்குரியதாகும். (27)

## விருப்பம் யாதென இராமன் வினவுதல்

721 அன்னவள் கர்ப்ப விலக்கண மெல்லா
மமைவுற நோக்கி யவ்வழியே
மன்னவ னிராமன் மங்கையை நோக்கி
மனத்திடை வேண்டிநீ யிருப்ப
தென்னென வியம்ப நாணினள் சிரிப்ப
விராகவன் பின்னையும் பலகால்
சொன்னபின் வேண்டி யிருப்பதீ தென்று
தூய்மொழி யாளிவை சொல்லும்.

அன்னவள் கர்ப்ப இலக்கணம் எல்லாம் அமைவு உறநோக்கி அவ்வழியே
மன்னவன் இராமன் மங்கையை நோக்கி, மனத்திடை வேண்டி நீ இருப்பது
என்? என இயம்ப, நாணினள் சிரிப்ப இராகவன் பின்னையும் பலகால்
சொன்னபின் வேண்டி இருப்பது ஈது என்று தூய்மொழியாள் இவை சொல்லும்.

பொ:- மன்னவனாகிய இராமன், அந்தச் சீதை கருப்பமுற்று ளாள் என்பதற்கேற்ற இலக்கணம் எல்லாவற்றையும் பொருந்த

நோக்கி, அம்முறையே சீதையையும் நோக்கி விட்டு "நீ மனத்திடை வேண்டியிருப்பது என்" என்று வினவ, சீதை சொல்லுதற்கு நாணினவளாய்ச் சிரிக்க, இராமன் பின்பும் பலமுறை கேட்ட பின், தூய்மையான மொழிபேசும் சீதை, 'வேண்டியிருப்பது இது என்பதை இச்சொற்களால் சொல்லுவாளானாள்.

கு:- கருப்பமுற்ற மகளிர் விரும்பியதை நிறைவேற்றுவிட்டால் பிறக்கும் குழந்தைக்குக் குறைபாடு நேரும் என்பர். அதனால் இராமன் சீதையின் கருவுற்ற குறிகளை நோக்கியுணர்ந்து பின் சீதையை நோக்கி மனத்திடை வேண்டியிருப்பது என்னை? என வற்புறுத்தி வினவலானான். தன் விருப்பத்தைச் சொன்னால் இராமன் என்ன நினைப்பானோ என்ற எண்ணத்தால் நாணிச் சிரிக்கலானாள். இராமன் விடாது வற்புறுத்தினமையால் சீதை சொல்லத் தொடங்கினாள் என்க. தூய்மொழியாள் என்புழி மொழிக்குத் தூய்மையாவது உள்ளத்திலுள்ளதை உள்ளவாறே சொல்லுதல்; உள்ளத்தால் பொய்யாது மொழிதல். (28)

## சீதை தன் விருப்பம் இதுவெனல்

722 துங்கமா தவத்தோர் கங்கையாந் தீர்த்தத்
துறையிடைக் குளித்தந்தி தொழுவோர்
பொங்குநூல் புரளு மார்பினர் புனைந்த
வற்கலை புரிந்த செஞ்சடையர்
அங்கவர் வாழு மாச்சிர மத்தை யடைந்
தவர்க் கேவல்செய் தொருநாள்
தங்கிட வேண்டி யிருப்பனென் றுரைப்பத்
தசரத ராமனீ துரைப்பான்.

"துங்க மாதவத்தோர் கங்கையாம் தீர்த்துறையிடைக்
குளித்து அந்தி தொழுவோர்
பொங்குநூல் புரளும் மார்பினர், புனைந்த வற்கலை, புரிந்த
செஞ்சடையர்,
அங்கு அவர் வாழும் ஆச்சிரமத்தை அடைந்து அவர்க்கு
ஏவல் செய்து ஒருநாள்
தங்கிட வேண்டி இருப்பன்" என்று உரைப்பத் தசரத ராமன்
ஈது உரைப்பான்.

பொ:- 'தூய்மையான பெருந்தவத்தோர்' கங்கையாகிய தீர்த்தத் துறையில் குளித்து விட்டுக் காலையந்தியிலும் மாலையந்தியிலும் வழிபாடு செய்கின்றவர்களாய்ப் பொலிவுடைய முந்நூல் புரளுகின்ற மார்பினராய் புனைந்த மரவுரியையும் முறுக்கிய செஞ்சடையையும் உடையவராய் அவ்வனத்தில் அம்முனிவர் வாழ்கின்ற ஆச்சிரமத்தை அடைந்து அம்முனிவர்கட்கு ஏவல் செய்து ஒரு நாள் தங்கிட விரும்பியுள்ளேன் என்று சீதை சொல்ல, தசரதன் மகனாகிய இராமன் இதைச் சொல்வானானான்.

கு:- துங்கம்-தூய்மை; வலிமையும் ஆம். வற்கலை-மரவுரியாகிய ஆடை; இது முனிவர்புனையத் தகுவது. சடை புரியுண்டு கிடக்கும் இயல்பு புலப்படப் புரிந்த செஞ்சடையர் என்றார். நீர் பலகால் மூழ்குதலின் செந்நிறம் ஏறிய சடையென்பது புலப்படச் செஞ்சடை என்றார். ஆச்சிரமம்-தவக்குடில். காட்டில் வாழ நேர்ந்த பதினான்காண்டுகள் முனிவர்களோடு பழகிய பழக்கம், சீதைக்குக் கருவுற்றுள்ள இக்காலத்து அவர்களோடு ஒருநாள் தங்கிட வேண்டும் என்ற விருப்பத்தையுண்டாக்கியது என்னலாம். சித்திரகூட மலையில் உள்ள காட்சிகளை இராமன் காட்டிக் கூறும்போது

வளைகள் கரந்தனில் பெய்தன வனையகைம் மயிலே
அளவில் மூப்பினர் அருந்தவர்க் கருவிநீர் கொணர்ந்து
துளைகொள் தாழ்தடக் கைபெருத்துருத்தியிற் நூக்கிக்
களப மால்கரி குண்டிகை சொரிவன காணாய்

என்று முனிவர்க்கு விலங்கும் பணிபுரியும் காட்சியைக் காட்டினமையாலும் வளைகளை அணிந்த நின் கைகள் இம்முனிவர்க்குப் பணிசெய்யும் பேறு பெறவில்லை. வளையணியாது ஒருகையையுடைய யானை பணிசெய்வதைப் பார் என்ற குறிப்புத் தோன்ற அங்கு விளித்திருத்தலாலும் சீதைக்கு அப்பொழுது முனிவர் பணிசெய்யும் விருப்பம் தோன்றியிருந்தது என்னலாம் (29)

## இராமன் பரிகாசக் கதைகள் கேட்டல்

123 நாளைநா ளுனக்கு நற்றவத் தோர்க
ளிருப்பிடங் காட்டுது மென்று
நீள்குழ லாளைக் கோயிலில் விடுத்து

நீலமா முகில்புரை நிறத்தோன்
வாளணி விசயன், பத்திரன் தந்த
வக்கிரன் சுமாகதன் சுராஞ்சி
காளியன் முதலோர் சொற்பரி காசக்
கதைகள்கேட்டினிது கொண்டாடி.

"நாளை நாம் உனக்கு நற்றவத்தோர்கள் இருப்பிடம் காட்டுதும்' என்று
நீள் குழலாளைக் கோயிலில் விடுத்து, நீலமா முகில்புரை நிறத்தோன்
வாளணி விசயன், பத்திரன் தந்தவக்கிரன் சுமாகதன், சுராஞ்சி,
காளியன் முதலோர் பரிகாசக் கதைகள் கேட்டு இனிது கொண்டாடி

பொ:- "உனக்கு நல்ல தவசிகளின் இருப்பிடங்களை நாம் நாளை காட்டுவோம்" என்று சொல்லி, நீண்ட கூந்தலையுடைய சீதையை அரண்மனையில் விடுத்து, நீலநிறமுள்ள பெரியமேகம் போன்ற நிறத்தையுடையவனுகிய இராமன், வாளைப்பிடித்துள்ள விசயன், பத்திரன், தந்தவக்கிரன், சுமாகதன், சுராஞ்சி காளியன் முதலோர் சொல்கின்ற பரிகாசக் கதைகளைக்கேட்டு மகிழ்ந்து அவர்களை இனிது பாராட்டிவிட்டு.

கு: குளகம். வருஞ்செய்யுளில் முடியும். நீள்குழலாள் என்றது சீதையை. முகில்புரை நிறத்தோன் என்றது இராமனை. விகடக் கதைகள் சொல்லிப் பழகியுள்ளவர்கள் விசயன், பத்திரன், தந்தவக்கிரன், சுமாகதன், சுராஞ்சி, காளியன் என்ற அறுவராவர். அவர் சொன்ன நகைச்சுவையூட்டும் கதைகளைக் கேட்ட இராமன் அந்தக் கதை சொன்னவர்களைப் பாராட்டிப் பேசினுன் என்றவாறு. பரிகாசம்-விளையாட்டு. விகடம். (30)

### நகர மக்களின் கருத்தைக் கூறுமாறு கேட்டல்

724 இக்கதை கிடக்க விறைவர்க ளென்று
மிடைவிடா திராப்பகல் கேட்ப
தக்கந நாட்டி னகரியிற் சனங்க
டய்மிலிப் பொழுதுதா முரைக்கும்

அக்கதை யுரைமி னென்றுவாள் சங்கோ
டாழிவிற் கதையிவை யொழிந்து
மொய்க்குமா புகழோடயோத்திவீற் றிருந்தோன்
மொழிந்திட வவரிவை மொழிவார்.

"இக்கதை கிடக்க இறைவர்கள் என்றும் இடைவிடாது இராப்பகல் கேட்ப,
தக்கநம் நாட்டில் நகரியில் சனங்கள் தம்மில் இப்பொழுது தாம் உரைக்கும்
அக்கதை உரைமின்" என்று வாள்சங்கோடு ஆழிவில் கதை இவை ஒழிந்து
மொய்க்கும் மாபுகழோடு அயோத்திவீற் றிருந்தோன் மொழிந்திட அவர் இவை மொழிவார்

பொ: 'இந்தப் பரிகாசக் கதை கிடக்கட்டும், அரசர்கள், இரவும் பகலும் எக்காலத்து இடைவிடாது கேட்கத்தக்கன வாய. நமது நாட்டிலும் நகரத்திலும் உள்ள தகுதிமிக்க சனங்கள் தமக்குள் தாம் இப்பொழுது பேசிக்கொள்ளும் அக்கதையைச் சொல்லுங்கள் என்று வாள், சங்கு, சக்கரம், வில், கதை இவற்றை விடுத்து, நெருங்குகின்ற பெரும்புகழோடு அயோத்தியில் வீற்றிருப்போனுகிய இராமன் சொல்ல, அவர் இவற்றைச் சொல்லுவாரானுர்.

கு: விளையாட்டுக் கதைகளால் பெரும் பயனின்மையின் இக் கதை கிடக்க என்றும், அரசராவார் இடைவிடாது எப்போதும் கேட்கத்தக்கனவாய, – சனங்கள் தம்மில் தாமுரைக்கும் அக்கதை ஆட்சிக்குப் பெரும்பயன் தருமாதலின் அக்கதையுரைமின் என்றும் கூறினுன் இராமன். இவ்வாறு மக்கள் மனக்கருத்தறிய விரும்பியவன், மனித வேடத்தானுயினும் முன்பு தெய்வ நிலையில் தான் தரித்திருந்த பஞ்சாயுதங்களையும் விடுத்துவிட்டு, வேடத்திற் கேற்ப நெருங்கிய புகழோடு அயோத்தியில் வீற்றிருப்பவனுகிய இராமன் என்று அவன் தெய்வ நிலையை நினைப்பித்து அவன் சொல் கருத்து மிக்க சொல் என்பதைப் புலப்படுத்தியவாறு. மொய்க்கும் மாபுகழ்-மேலும் மேலும் நெருங்குகின்ற பெரும் புகழ். இதனுல் புகழுக்குக் கேடுவரும் செயலை விரும்பமாட்டான் என்பதும்

புலப்படுத்தியவாறு. வாள் முதலிய ஐம்படைகளை விடுத்துப் பல் புகழ் மொய்க்க வாழ்கின்றவன் என மண்ணுலக வாழ்வின் சிறப்பினை எடுத்துக் காட்டியவாறும் ஆம். இறைவர்கள்-அரசர்கள். தக்க சனங்கள் எனவும் இராப்பகல் கேட்பவாய அக்கதை எனவும் இயையும். (31)

## கதை சொன்னோர் சொன்னது

725 வந்தெறி கடலை மலைகளா லடைத்து
மதிலிலங் காபுரி யழித்து
வெந்திற லரக்கர் குலத்தைவே ரறுத்து
விண்ணவர் கோன்றலை யெடுப்ப
இந்திரசித்தைக் கொன்றிரா வணனை
யீரைந்து தலையறுத் துருட்டும்
சுந்தர வில்லிக் கெதிரிலை யென்று
சொல்லுவர் தொல்லுல குள்ளோர்.

'வந்து எறி கடலை மலைகளால் அடைத்து, மதில் இலங்காபுரி அழித்து
வெந்திறல் அரக்கர் குலத்தை வேர் அறுத்து விண்ணவர் கோன் தலைஎடுப்ப,
இந்திரசித்தைக் கொன்று இராவணனை ஈரைந்து தலை அறுத்து உருட்டும்
சுந்தர வில்லிக்கு எதிர்இலை' என்று சொல்லுவர் தொல் உலகு உள்ளோர்

பொ:- காற்று வீசுகின்ற கடலை மலைகளைக் கொண்டு அடைத்து மதிலால் சூழப்பட்ட இலங்கை மாநகரை அழித்து, கொடிய வலிமையுடைய அரக்கர் குலத்தை அடியோடு அறுமாறு செய்து, தேவர் தலைவனான இந்திரன் தலைதூக்கும் வண்ணம் அவன் பெரும் பகைவனான இந்திரசித்தனைக் கொன்று இராவணனது பத்துத் தலைகளையும் அறுத்துத் தரையில் உருட்டிய அழகிய வில்லையுடைய இராமனுக்கு எதிராவார் இல்லை என்று பழமையான உலகத்துள்ளோர் சொல்லுவர். (என்றனர்)

கு: வந்து-காற்று. கடலில் அலைவீசுவது காற்றால் ஆதலின் அலையெறிகடலை 'வந்தெறிகடல்' என்றார். அடைத்து அழித்து அறுத்து, கொன்று அறுத்து என்பன வினையெச்ச அடுக்கு. அவை உருட்டும் என்ற பெயரச்ச வினையொடு முடிந்தன. உருட்டும் என்ற பெயரெச்சம் வில்லி என்ற பெயரோடு முடிந்தது. தொல்லுல குள்ளோர் சொல்லுவர் என்றனர் என ஒரு சொல் வருவித்து முடிக்க. வீடணன் இருக்கும்போது வெந்திறலரக்கர் குலத்தை வேரறுத்து என்றது எங்ஙனம் பொருந்தும் எனின்? வீடணன் அரக்கனேயாயினும் வெந்திறல் அரக்கன் அல்லனாகலின் பொருந்தும் என்க. எதிரிலை என்றது எதிர்ப்போர் இல்லை எனவும் ஒப்பாவோர் இல்லை எனவும் இருபொருள்பட நின்றது. (32)

## இராமன் தெளிவுறுத்தல்

726 ஆங்கவ ரிவ்வா றுரைத்திடக் கேட்ட
வரசர்கோ னவர்களை நோக்கி
நாங்களிந் நகரி னாட்டினிற் பிறக்கு
நன்மையுந் தீமையுங் கேட்டுத்
தீங்கவை யகற்றிச் சிறந்தன செய்துஞ்
செப்புமிவ் விரண்டு நீர் கேட்ட
நீங்களொன் றுக்குங் கூசலீ ரென்ன
நின்மல கேட்டியென் றுரைப்பார்

அங்கு அவர் இவ்வாறு உரைத்திடக் கேட்ட அரசர்கோன் அவர்களை நோக்கி
"நாங்கள் இந்நகரில் நாட்டினில் பிறக்கும் நன்மையும் தீமையும் கேட்டுத்
தீங்கவை அகற்றிச் சிறந்தன செய்தும்; செப்பும் இவ்விரண்டும் நீர் கேட்ட
நீங்கள் ஒன்றுக்கும் கூசலீர்" என்ன, நின்மல!'கேட்டி' என்று உரைப்பார்:

பொ: அவ்விடத்து அவர்கள் இவ்வாறு இராமன் புகழையே பாராட்டிச் சொல்ல அதுகேட்ட இராமன் அவர்களை நோக்கி அரசராக இருக்கும் நாங்கள், இந்த நகரத்திலும் நாட்டிலும் பிறக்கின்ற

நன்மையையும் தீமையையும் கேட்டு, தீங்காயுள்ளவற்றை நீக்கி நல்லனவாக உள்ளவற்றை செய்வோம்; ஆதலின் நீர் கேட்ட இந்த இரண்டையும் சொல்லுங்கள். நீங்கள் ஒன்றுக்கும் கூசுதல் வேண்டா என்று சொல்ல, அவர்கள் இராமனை நோக்கி நின்மல! கேட்பாயாக, எனச் சொல்லத் தொடங்கினர்கள்.

கு: ஆங்கு அசை எனலும் ஆம். அரசர்கோன் என்றது இராமனை. அரசனுக்குரிய நீதிபற்றிப் பேசுதற்குரியவனே என்பது புலப்பட அப்பெயரால் கூறினர். நாங்கள் என்றது அரச குலத்தினரையெல்லாம் உளப்படுத்திக் கூறியது. மக்களுக்குப் பிறக்கின்ற நன்மையையும் தீமையையும் கேட்டுணர்ந்து தீங்கினைத் தீர்த்துவிட்டு நல்லன செய்வோம்; எனவே நீர்கேட்டன தீங்கேயாயினும் நன்மையையே யாயினும் இரண்டினையும் உள்ளவாறு கூறலாம் என்றவாறு. நீர்கேட்ட இவ்விரண்டும் செப்பும் என இயையும். செப்புமின்! என்பது செப்பும் என மருவியது எனலாம். செப்பும் என்று முன்னிலையிலும் செய்யும் என் முற்று வருதல் பிற்கால வழக்கு எனலும் ஒன்று. கூசுதல்-நாணிப் பின்வாங்குதல். தீயதேயெனினும் கூறுங்கள் என்பான் ஒன்றுக்குங் கூசலீர் என்முன். இயல்பாகவே மலமாசு நீங்கினவன் என்ற கருத்தால் நின்மல என விளித்தனர். அவன் தெய்வ நிலையை நினைந்து இங்ஙனம் விளித்தனர் என்க. 'கேட்டி' என்பது முன்னிலை ஒருமை வினைமுற்று. (33)

## உலகவர் உரைக்கும் பழிமொழி இதுவெனல்

727 மன்னவ னிராமன் மானபங்கத்தை
மனத்தினுல் நினைக்கிலன் வானோர்க்
கின்னல்செய் தொழுகு மிராவணன்
கொடுபோ யிடைவிடா தீரறுதிங்கள்
தன்னெடு நகரில் தனிச்சிறை வைத்த
தையலைத் தாரமாய்க் கொண்டு
பின்னையும் வாழ்கை பேரிழுக்கென்று
பேசுவர் பெருநிலத் துள்ளோர்.

மன்னவன் இராமன் மானபங்கத்தை மனத்தினால் நினைக்கிலன்; வானோர்க்கு
இன்னல் செய்து ஒழுகும் இராவணன் கொடுபோய் இடைவிடாது ஈராறு திங்கள்
தன்நெடுநகரில் தனிச்சிறை வைத்ததையலைத் தாரமாய்க் கொண்டு
பின்னையும் வாழ்கை பேர் இழுக்கு' என்று பேசுவர் பெருநிலத்து உள்ளோர்.

பொ: இந்தப் பெரிய நாட்டில் உள்ளவர்கள் நம் மன்னவனாகிய இராமன் மானக்குறைவை மனத்தினால் நினைத்தும் பாராதவனாய்த் தேவர்க்குத் துன்பம் செய்து ஒழுகுகின்ற இராவணன், கவர்ந்துகொண்டு போய் இடைவிடாமல் பன்னிரண்டு மாதங்கள் வரையில் தனது நெடிய இலங்கை மாநகரில் (அசோகவனத்தில்) தனித்திருக்கும்படி சிறையில் வைத்திருந்த சீதையைத் தன் மனைவியாகக் கொண்டு பின்பும் வாழ்தல் பெரிய குற்றமாகும் என்று பேசுவர்.

கு: இராமன் வற்புறுத்தியபின்பு முன்கதை சொல்லி மகிழ்வித்தவர்கள் இப்பழிமொழியையும் கூறினர். பெருநிலத்துள்ளோர் என்றது இராமனது ஆட்சிக்குட்பட்ட கோசல நாட்டு மக்களை. இல்லறம் வழுவாது ஒழுகும் நம் நாட்டுக்குரிய மன்னவன் ஆகிய இராமன், இராவணனால் கவரப்பட்டு ஓராண்டு காறும் இலங்கையில் சிறைவைக்கப்பட்டிருந்த சீதையைக் கொண்டுவந்து பின்னும் மனைவியாகக் கொண்டு வாழ்தல் பெரிய குற்றமாகும் என்று பேசுகின்றனர் என நாட்டவர் கூறும் பழிமொழியைக் கூறியவாறு. மானபங்கம்-மானக்குறைவு. பெருமைக்கு இழிவு. குடிமக்களில் ஒருவர் இங்ஙனம் ஒழுகினால் பலரறியாமையின் அது பெருங்குற்றமன்று; குடிமக்களுக்கு ஒழுக்கநெறியைக் காட்டி வாழவேண்டிய மன்னவனாகவுள்ள இராமன் இங்ஙனம் வாழ்தல் பெரியதோர் இழுக்காகும் என்றபடி. இது மானத்திற்குக் குறைவு என்பதை மனத்தினால் நினைந்திருப்பின் இவ்வாறு ஒழுகமாட்டான் என்பார். மனத்தினால் நினைக்கிலன்' என்றும் நல்லோன் நாட்டில் இருந்தவள் அல்லள் என்பார், வானோர்க்கு இன்னல் செய்தொழுகும் இராவணன் தன்னெடு நகரில் சிறைவைத்த தையலை

என்றும், ஒருநாள் இருநாள் அல்ல என்பார், இடைவிடா தீரறு திங்கள் என்றும், இராவணன் கருதியதைச் செய்தற்கேற்ற தனி நிலையில் இருந்தாள் என்பார், தனிச்சிறை வைத்த தையலே என்றும் கூறினர். (34)

## இராமன் தான் கேள்விப்பட்டவற்றைத் தம்பியர்க்குரைத்தல்

728 ஒத்தவ ரிவ்வா றுரைத்திடு வெஞ்சொ
லுள்ளுற நெஞ்சினிலொளிர்வேல்
தைத்தது போல வுளைந்துதன் சிந்தை
தளர்ந்தபின் மானபங் கத்தன்
வித்தக ராய் தம்பியர்க் கூவி
வேறிடத் திருந்துதான் கேட்ட
குத்திர மெல்லாந் தெரிவுற வுரைப்பா
னவர்தமக்கி யிவை யிவை கூறும்

ஒத்து அவர் இவ்வாறு உரைத்திடு வெம்சொல் உள்ளுற நெஞ்சினில் ஒளிர்வேல்
தைத்தது போல உளைந்துதன் சிந்தை தளர்ந்தபின் மானபங்கத்தன்
வித்தகர் ஆய தம்பியர்க்கூவி வேறிடத்து இருந்து தான் கேட்ட
குத்திரம் எல்லாம் தெரிவுற உரைப்பான் அவர்தமக்கு இவை இவை கூறும்

பொ: (நகைச்சுவைக் கதைகளைச் சொன்ன) அவர்கள் தம்முள் ஒத்து இவ்வாறு சொன்ன கொடுஞ்சொல் மனத்தில் தாக்கியதால் இதயத்தில் ஒளிவீசுகின்ற வேல் தைத்தது போல வருந்தித் தனது சிந்தை தளர்ந்தபின்பு மானக்குறைவு உடையவனாய்ச் சதுரப்பாடுடைய தன் தம்பியர்களை அழைத்துத் தனியிடத்தில் இருந்து தான் கேள்விப்பட்ட இழிவுகளையெல்லாம் தெளிவாகச் சொல்வானாய் அத்தம்பியர்க்கு இவை இவை சொல்லுவானானான்.

கு: அவர் இவ்வாறு ஒத்து உரைத்திடு வெஞ்சொல் என இயையும். அவர் என்றது கதை சொல்லி மகிழ்வித்திருந்தவர்களை.

அவர்கள் எல்லோரும் ஒருமித்துக்கூறிய வெஞ்சொல் என்பார் 'ஒத்து உரைத்திடு' என்ருர். சொல்வது பொய்யாயின் அவர்கள் ஒத்துரைத்தல் இயலாது ஆதலின், ஒத்துரைத்த சொல் உண்மை யாதல் உறுதி என்றவாறு. வெஞ்சொல் உள்ளூறுதலால் உளைந்து எனக் காரணப்பொருளதாக்குக. உளைதல்-வருந்துதல். நெஞ்சு, என்றது இதயத்தினை. மானம்-பெருமை. பங்கம்-குறைவு. மானக்குறைவுடையவனாய் தம்பியரைக்கூவி இருந்து கேட்ட குத்திரம் எல்லாம் உரைப்பானாய்க் கூறும் என இயையும். குத்திரம்-இழிவு. (35)

729 என்னுயிர் நீங்க ளென்வலி நீங்க
ளென்னுறு துணைவரும் நீங்கள்
என்னிதி நீங்க ளென்றவ நீங்க
ளென்பிரா தாக்களு நீங்கள்
என்னர சின்ப நீங்களே யாகு
லென்பழி யுப்பழி புகழும்
அன்னதே யாகு மானபின் யானிங்
கறைகுவ னனைவருங் கேண்மோ,

என்உயிர் நீங்கள், என்வலி நீங்கள் என்னுறு துணைவரும் நீங்கள் என்நிதி நீங்கள், என்தவம் நீங்கள், என்பிராதாக்களும் நீங்கள் என் அரசு இன்பம் நீங்களே ஆனுல், என்பழி உம்பழி புகழும் அன்னதே யாகும்; ஆனபின் யான் இங்கு அறைகுவன் அனை வரும் கேண்மின்!

பொ:- என் உயிரும் நீங்கள், வலியும் நீங்கள் துணைவரும் நீதியும் தவமும் அண்ணன்மாரும் அரசும் இன்பமும் நீங்களே; ஆனுல், எனபழியும் உம்பழியேயாகும். என்புகழும் உம்புகழே யாகும் அப்படியான பின்பு யான் இங்கு ஒளிக்காமல் சொல்வேன். நீங்கள் அனைவரும் கேளுங்கள்.

கு: உரிமையன்பு தோன்ற 'என் உயிர் நீங்கள், என்வலி நீங்கள்: என்ருற்போலத் தனித்தனியே விரித்துக் கூறியவாறு. பிராதாக்கள்- அண்ணன்மார்கள், முன்னோர்கள் எனலும் ஆம்.

உயிர் வலி முதலிய பொருள்களெல்லாம் நீங்கள் ஆனுல் எஞ்சி யுள்ள பழியும் புகழும் நுமவாதல் சொல்ல வேண்டுமோ என்பார், புகழும் அன்னதே என்ருர். என்பழியும் என்புகழும் உம்முடை யனவே யாதலின் பழியாயினவற்றை மறைக்காமல் வெளிப்படை யாகச் சொல்கிறேன் என்றவாறு. என்பழி உம்பழி என்றதனுல் சொல்லப் போவது என்பழியே என்பது குறிப்பால் புலப்படுத்திய வாறு. அனைவரும் என்புழி உம்மை முற்றும்மை தம்பியர் மூவரையும் உணர்த்தியவாறு. (36)

730 தீயவா ளரக்கன் சிறையிடை யிருந்த
சீதைசெந் தீயிடை மூழ்கி
ஏயுமா தவர்க்கு மிமையவ ராஞே
ரியாவர்க்கு மென்மனத் துக்கும்
தூயளா யிருந்தா ளாயினு முலகோர்
சொல்லிடும் பெரும்பழி தனைக்கேட்
டோயுமென் னுள்ள முண்மையாற் பயனென்
னுலகுளோர்க் கொத்திடா தொழியின்.

தீயவாள் அரக்கன் சிறையிடை இருந்த சீதை செந் தீயிடை மூழ்கி
ஏயும் மாதவர்க்கும் இமையவர் ஆஞேர் யாவர்க்கும் என்மனத் துக்கும்
தூயளாய் இருந்தாள்; ஆயினும், உலகோர் சொல்லிடும் பெரும்பழி தனைக்கேட்டு
ஓயும் என் உள்ளம், உண்மையால் பயன்என்? உலகுளோர்க்கு ஒத்திடாது ஒழியின்.

பொ: தீமையே புரியும் வாள் ஏந்திய இராவணன் வைத்த சிறையில் இருந்த சீதை என் கருத்துப்படி சிவந்த தீயில் மூழ்கி, பொருந்திய பெருந்தவ முனிவர்க்கும் எல்லாத் தேவர்கட்கும் என் மனத்துக்கும் தூயவளாகவே இருந்தாள்; ஆயினும், உலகத்தவர் சொல்கின்ற பெரிய பழிதனைக் கேட்டு என் உள்ளம் மெலிகின்றது. உலகத்தவர்க்கு ஒத்ததாகாது போனுல் உண்மை நிகழ்ச்சியே யாயினும் அதனுல் பயன் என்?

கு: தீய அரக்கன்; வாள் அரக்கன் என அரக்கனுக்கு அடை-யாக்குக. சிவன் தந்த வாளையுடையவனுதல் புலப்பட வாள் அரக்-கன் என்ருர். சீதை இராவணன் வைத்த சிறையில் தங்கினுள் ஆதலின் அவளை அப்படியே ஏற்றுக் கொள்ளல் முறையன்று; தீயில் மூழ்கித் தன் கற்புடைமையை நிறுவினுலன்றி ஏற்றுக் கொள்ள இயலாது என்று இராமன் கூறியபடி சீதை செந்தீயிடை மூழ் கினுள். அப்போது முனிவர்க்கும் தேவர்கட்கும் இராமன் மனத் திற்கும் சீதை தூயகற்புடையவளே என்பது புலனுயிற்று. ஆனுல் இப்போது உலகவர், அரக்கன் பால் சிறையிருந்தவளை மீண்டும் இராமன் மனைவியாக ஏற்றுக் கொண்டது பெரும்பிழை' எனப் பேசிக் கொள்கின்ருர்கள் என்பதைக் கேள்விப்பட்ட இராமன் உள் ளம் மெலிகின்றது. உலகு ஏற்றுக் கொள்ளாதபோது உண்மை நிகழ்ச்சியே யாயினும் அதனுல் பயனில்லை என்ற உண்மையை இராமன் தன் தம்பியர்க்குச் சொல்கின்ருன். காலம் இடையிட்ட வற்றையும் தம் ஞானக்கண்ணுல் அறியவல்லவர் தவமுனிவர் ஆத லின் "மாதவர்க்கும்" என்றும், இமையா நாட்டமுடைமையின் திரி பின்றிப் பொருள்களைக் காண வல்லவர் ஆதலின் 'இமையவரா ஞேர் யாவர்க்கும்' என்றும், சீதையின் கற்புடைமையைத் தீயினுல் சோதித்தறிந்தமை புலப்பட என் மனத்துக்கும் என்றும் முறை தெரிந்தோதியவாறு. ஒய்தல்-வலிமையிழத்தல்: மெலிதல் (37)

731 ஓதநீர் வேலை யுலகுளோ ரில்ல
துளதெனி லுள்ளதா முள்ள
தியாதொரு பொருளை யில்லையென்
றுரைக்கி லில்லையா மீதுலகியற்கை
ஆதலா லவளை யருந்தவத் தோர்க
ளாச்சிர மத்தயல் விடுத்து
மீதுநான் துணிந்த காரிய மினிவே
றெண்ணுவ தொருபொரு ளில்லை.

ஓதநீர் வேலை உலகு உளோர், இல்லது உளது எனில் உள்ளது ஆம்; உள்ளது யாதொரு பொருளை இல்லை என்று உரைக்கில் இல்லையாம்; ஈது உலகியற்கை.

ஆதலால்; அவளை அருந்தவத்தோர்கள் ஆச்சிரமத்து அயல் விடுத்தும்,
ஈது நான் துணிந்த காரியம்; இனி வேறு எண்ணுவது ஒரு பொருள் இல்லை.

பொ: அலைகளையுடைய நீரால் நிறைந்த கடலால் சூழப்பட்ட உலகத்தில் உள்ளவர்கள், இல்லாத ஒருபொருளை உளது என்று ஒருமித்துச் சொல்வாராயின் உள்ளதாகவே கொள்ளப்படும்; உள்ளதாகிய ஒருபொருளை இல்லை என்று அவ்வுலகத்தவர் ஒருமித்துச் சொல்வாராயின் இல்லையாகிவிடும். இது உலக இயற்கை. ஆதலால் அச் சீதையை அரிய தவ முனிவர்களின் ஆச்சிரமத்துக்கருகில் கொண்டுபோய் விட்டுவிடுவோம். இது நான் சிந்தித்துத் துணிந்த காரியம் ஆகும். இனி, இதற்கு வேறாக எண்ணக்கூடியது ஒன்றும் இல்லை.

கு: 'இவ்வகை இராமன் இயம்பிட' என்வருஞ்செய்யுளில் தொடரும்; குளகம். உலகத்து இயல்பை விளக்க இராமன், உலகுளோர் இல்லது உளது எனின் உள்ளதாம். என்வும், உள்ளதொரு பொருளை இவ்வுலகத்துள்ளோர் இல்லை என்று சொல்லின் இல்லையாகும் எனவும் கூறியவாறு. சீதை கற்புடையவள் என்பதில் இராமனுக்குச் சிறிதும் ஐயமில்லை எனினும், உலகத்தோர் இராவணனிடம் சிறையிருந்தவள் என்ற காரணம் பற்றிப் பழியுடையவளாகக் கூறுவாராயின் அவர்தம் கருத்தை யேமதித்துச் சீதையை அருந்தவ முனிவர்களின் ஆச்சிரமத்தைச் சார்ந்த இடத்தில் விட்டுவிடுவோம் என்கின்றான் இராமன். உலகவர் பழித்த சீதையின் பெயரையும் சொல்ல மனம் இலனாய் அவளை எனச் சுட்டுப் பெயரால் கூறினான். முனிவர் ஆச்சிரமத்தில் விடுதல் அவர்கட்குச் சுமை வைத்ததாகும் என்ற கருத்தால் 'ஆச்சிரமத்தயல் விடுத்தும்' என்றான். விடுத்தும் என்பது இங்கு எதிர்காலமுணர்த்தும் உளப்பாட்டுத்தன்மைப் பன்மையாகும். தம்பியர் வேறு முடிவைக் கூறலாகாது என்ற கருத்தால் ஈதுநான் துணிந்த காரியம் எனவும், வேறு எண்ணுவதொரு பொருள் இல்லை எனவும் கூறினான். (38)

## இராமன் சொல்லைக் கேட்ட தம்பியர் நிலை

732 இவ்வகை யிராமனியம்பிடக் கேட்ட
வின்னுயிர்த் தம்பிய ரொன்றும்
செவ்வகை யறியார் தீயகை கேசி
சீதையு மிராமனும் வனம்போம்
அவ்வகை யுற்ற வன்றையிற் கலங்கி
யகத்தெழுந் துயரின ராகி
எவ்வகை யாலு மிதுவிலக் கரிதென்
றிருந்தன ரிடிவிழுந் தென்ன.

இவ்வகை இராமன் இயம்பிடக் கேட்டே இன் உயிர்த் தம்பியர் ஒன்றும்
செவ்வகை அறியார், தீய கைகேசி, சீதையும் இராமனும் வனம்போம்
அவ்வகை உற்ற அன்றையின் கலங்கி அகத்து எழும் துயரினர் ஆகி
எவ்வகையாலும் இது விலக்கரிது என்று இருந்தனர் இடிவிழுந் தென்ன.

பொ: இவ்வாறு இராமன் சொல்ல அச்சொல்லைக் கேட்ட இனிய உயிர் போன்ற தம்பிமார்கள், தாம் செய்வது ஒன்றும் அறியாராய், தீயவளாகிய கைகேசி சீதையும் இராமனும் காட்டிற்குப் போகும்படி யுறுதி பூண்டு நின்ற அன்றையினும் மிகக் கலங்கி உள்ளத்தில் எழுகின்ற துயரத்தையுடையவராகி இது எவ்வகையாலும் விலக்குதற்கு அரிது என்று இடிவிழப் பட்டவர் போலச் செயலற்றுத் துன்புற்றிருந்தனர்.

கு: செய்வகை என்பது எதுகைநோக்கிச் செவ்வகை யென விகாரமாயிற்று. கைகேசி யுற்ற அன்றையின் என இயையும். சீதையும் இராமனும் வனம்போம் அவ்வகை தீய கைகேசியுற்ற அன்றையின் என மாறிக் கூட்டலும் ஆம். வனம்போம் அவ்வகை யுறுதல் என்றது வனம் போதல் வேண்டும் என்பதில் உறுதி பூண்டு நிற்றலை. அன்றையின் என்புழி இன் உருபு உறழ்ச்சிப்

பொருளது. அன்றையினும் மிகக் கலங்கி என்க. கைகேயியின் மன உறுதி போன்றதே அவளால் வளர்க்கப் பெற்ற இராமனது மன உறுதியும் ஆதலின், 'எவ்வகையானும் இது விலக்கரிது' என்று செயலற்றிருந்தனர் என்றவாறு. தம்மேல் இடிவிழப் பெற்றவர் செயலிழந்து துயருறுவது போலப் பரதன் முதலோர் செய்வதறியாது துன்புற்றனர் என்றவாறு. இராமன் சொல் இடிபோன்றது, அச் சொல்லைக்கேட்ட அவன் தம்பியர் இடிவிழப் பட்டவர் போன்றனர் என்றவாறு. விழுந்து என்பது செயப்பாட்டுப் பொருளில் வந்தது. விலக்குதல் – தடுத்தல். (39)

## இலக்குவனை நோக்கி இராமன் மீண்டும் கூறல்

733 கலக்குவ னுலக மூன்றையு மென்று
கருதுமேற் கணத்தினின் முடிக்கும்
இலக்குவன் றன்னை யிராகவன் நோக்கி
ஈங்கு யான் துணிந்தகா ரியத்தை
விலக்குவ மென்னுஞ் சிந்தையை விட்டு
வெவ்வினை வேரொடும் பறிய
மலக்குவன் றவத்து முனிவர்வாழ் வனத்து
மடந்தையை விடுதிகே ளின்னும்

**கலக்குவன் உலகம் மூன்றையும் என்று கருதுமேல் கணத்தினில் முடிக்கும்**
**இலக்குவன் தன்னை இராகவன் நோக்கி ஈங்கு யான் துணிந்த காரியத்தை**
**'விலக்குவம்' என்னும் சிந்தையை விட்டு வெவ்வினை வேரொடும் பறிய**
**மலக்கு வன் தவத்து முனிவர் வாழ் வனத்து மடந்தையை விடுதி, கேள் இன்னும்,**

பொ: உலகம் மூன்றையும் கலக்குவேன் என்று நினைத்தால் அதனைக் கணநேரத்தில் விரைந்து முடிக்கும் ஆற்றலையுடைய இலக்குவனை இராமன் நோக்கி, இவ்விடத்து யான் துணிந்த காரியத்தை விலக்கி நிறுத்தலாம் என்று கருதும் எண்ணத்தை விடுத்து

விட்டு, கொடிய வினைகள் வேரொடும் பறியுமாறு தள்ளுகின்ற வலிய தவத்தினைச் செய்யும் முனிவர் வாழ்கின்ற வனத்தில் சீதையை விடுப்பாயாக! இன்னும் கேள்.

கு: இலக்குவனது ஆற்றலைப் புலப்படுத்த வேண்டி, உலகு மூன்றையும் கலக்குவன் என்று கருதுமேல் கணத்தினில் முடிக்கும் இலக்குவன் என்றார். சீதையின்மேல் பழிசொன்ன மண் உலகத்தை மட்டும் அன்று உலக மூன்றையும் கலக்குவேன் என்று கருதினால் அதனைக் கண நேரத்தில் செய்து முடிக்கும் ஆற்றலுடையவன் என்றது. அவன் அவ்வாறு கருதும் இயல்புடையதனால் நோக்கி என்க. இராமனைக் காட்டிற்கு ஏகச் செய்த கைகேசியை வெறுத்து விண்ணாட்டவர் மண்ணவர் விஞ்சையர் நாகர் மற்றும், எண்ணாட்டவர் யாவரும் நிற்க எவ்வர் மூவராகி, மண்ணூட்டுநர், காட்டுநர், வீட்டுநர், வந்தபோதும் பெண்ணாட்ட மொட்டேன் னினிப் பேருலகத்து மன்னே (அயோத்தி நகர்நீங். 122) என மூவுலகத் தாரையும் முடிக்கும் எண்ணத்தோடு கூறியிருத்தல் காண்க. மலக்குதல்-தள்ளுதல். கொடியவினைகள் வேரொடும் பறியு மாறு தள்ளுகின்ற ஆற்றலையுடையது தவம் என்றவாறு. இதனால் சீதையின் கொடிய வினையே உலகத்தவர் பழிக்கும் நிலையை யுண்டாக்கியது. அவள் வினைகள் தவிர்தற்குத் தக்கவிடம் முனிவர் வாழிடமாகிய வனமே, பிறிதில்லை என்பது கூறியவாறு. மெல்லிய லாளாகிய சீதையை வனம்புகச் செய்வது கொடுமைபோலத் தோன்றினாலும் முடிவில் அவளுக்குத் தீவினை தீர்தலாகிய நன்மையே விளைக்கும் என்றவாறு. மடந்தை என்பது பருவம் குறியாது பெண்பால் என்பதுபட வந்தது. (40)

731 கல்விசேர் முனிவர் தவவன மவட்குக்
காட்டுவா னிசைந்தனெ னவளும்
சொல்லிய வண்ணஞ் செய்குவென் னென்றே
யுணர்ந்திடு சுமந்திரற் குணர்த்தி
சில்லுளைப் புரவித் தேர்மிசை யேற்றிச்

சீதையைச் செறிபுக ழையர்
நல்லுயிர்த் தோழ ருயவான் மீகி
நற்றவஞ் செய்வனத் துய்த்தி.

கல்விசேர் முனிவர் தவ வனம் அவட்குக் காட்டுவான் இசைந்தனென் அவளும்
சொல்லிய வண்ணம் செய்குவென் என்றே உணர்ந்திடு சுமந்திரற்கு உணர்த்தி
சில்லுளைப் புரவித் தேர்மிசை யேற்றிச் சீதையைச் செறிபுகழ் ஐயர்
நல்லுயிர்த் தோழன் ஆய வான்மீகி நற்றவம் செய்வனத்து உய்த்தி.

பொ: எல்லாக் கல்வியும் சேர்தற்கு இடனுயுள்ள முனிவர் வாழ்கின்ற தவவனத்தை அவட்குக் காட்டுவதற்கு இசைந்துள்ளேன். அதனுல் அவள் சொல்லிய வண்ணமும் செய்வேன் ஆகின்றேன்; என்று நெறியுணர்ந்த சுமந்திரனுக்கு உணர்த்தி, அவன் ஓட்டுகின்ற சிலவாகிய பிடரியிலேயுடைய குதிரைகள் பூட்டப் பெற்ற தேர்மேல் சீதையை ஏற்றி நெருங்கிய புகழையுடைய நம் தந்தையின் நல்லஉயிர்த்தோழனுகிய வான்மீக முனிவன் நல்ல தவத்தைச் செய்கின்ற வனத்தின்கண் விடுவாயாக.

கு: முனிவர், கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர் ஆதலின், இங்கு அவர் கல்விசேர் முனிவர் எனப்பட்டார். எல்லாக் கல்வியும் நிறைந்த முனிவர் என்றவாறு. இராமன், சீதை கருவுற்றிருந்த நிலையில் அவள் விருப்பம் யாதென வினவியபோது சீதை முனிவர் தவ வனத்தைக் காண விரும்பிய நிகழ்ச்சி, "துங்க மாதவத்தோர் கங்கையர்ந் தீர்த்தத்துறை அங்கவர் வாழும் ஆச்சிரமத்தை அடைந்தவர் ஏவல் செய்தொருநாள் தங்குதல் வேண்டியிருப்ப தென்றுரைப்ப" (29) என முன்வந்துள்ளமையால் அறியலாம். இராமன்காட்டுவான் இசைந்தமை: நாளை நாம் உனக்கு நற்றவத்தோர்கள் இருப்பிடம் காட்டுதும்" (31) என்ற இராமன் கூற்றுல் அறியலாம். அவளும் என்புழி உம்மையை, சொல்லிய வண்ணமும் செய்குவேன் எனப் பிரித்துக் கூட்டுக. ஊரவர் பழிக்கு அஞ்சிக் காட்டிற்கு அனுப்புவது அவள் விரும்பிய

வண்ணமும் செய்வதாகின்றது எனத் திறம்படக் கூறியவாறு. சுமந்திரன் முன்னமே வனம்புகும் வழியையுணர்ந்தவன் என்பான் உணர்ந்திடு சுமந்திரன் என்றான். சீதையைத் தனியாக வனம் புகுத்தற்குச் சுமந்திரன் வருந்துவான் ஆதலின் அவள் விரும்பிய வண்ணம் செய்கின்றேன் என்பதை அவனுக்கு உணர்த்தி, அவன் தேரின்மேல் ஏற்றி வான்மீகி நற்றவம் செய்யும் வனத்தில் விடுவாயாக என இலக்குவனுக்குக் கட்டளையிட்டவாறு. செறிபுகழ் ஐயர் என்றது நெருங்கிய புகழையுடைய தந்தையை. தயரதனுக்கு நல்லுயிர்த்தோழனாகி விளங்குபவன் வான்மீகி என்பது இதனால் புலப்படுத்தியவாறு. (41)

## இலக்குவன் தேரொடு சீதை மனைவாயிலில் நிற்றல்

735 என்றட லிராம னியம்பிடக்கேட்ட
விலக்குவ னெழுந்துவெந் துயரால்
தன்றுணை யில்லாச் சுமந்திரற் குணர்த்தித்
தடமணித்தேர்கடி தியற்றிப்
பொன்றிகழ் மணிப்பூண் சீதை மாளிகையிற்
புகுந்துபொன் னடியிணை வணங்க
இன்றொருப் பாடெனென வவளியம்ப
இலக்குவ னீதியிம்பினனால்

என்று அடல் இராமன் இயம்பிடக் கேட்ட இலக்குவன் எழுந்து வெந்துயரால்
தன் துணை இல்லாச் சுமந்திரற்கு உணர்த்தித் தடமணித்தேர் கடிது இயற்றிப்
பொன்திகழ் மணிப்பூண் சீதை மாளிகையில் புகுந்து பொன் அடியிணைவணங்க
இன்று ஒருப்பாடு என் என அவள் இயம்ப, இலக்குவன் ஈது இயம்பினனால்

பொ: என்று வலிமை மிக்க இராமன் சொல்லக் கேட்ட இலக்குவன் எழுந்து கொடிய துயரத்தோடு தனக்கு நிகரில்லாத பண்பினையுடைய சுமந்திரனுக்கு நிகழ்ந்ததைச் சொல்லிப் பெரிய மணிகள் கட்டிய தேரினை விரைந்து செலுத்தச் செய்து பொன்னில்

ஒளி மணி பதித்த அணிகலனை யணிந்த சீதையின் மாளிகையில் புகுந்து அந்தச் சீதையின் அழகிய திருவடிகளை வணங்க, இன்று பயணத்திற்கு ஒருப்படுகின்றது என்ன காரணம் எனச் சீதை வினவ, இலக்குவன் இதனைச் சொன்னான்.

கு: துயரால் என்புழிஆல் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. துயரோடு உணர்த்தி என்க. சுமந்திரனது சிறப்புணர்த்த வேண்டித்தன் துணையில்லாச் சுமந்திரன் என்றார்; ஒப்பற்றவன் என்றவாறு. கடிதியற்றி என்றது, சுமந்திரனை விரைந்துவிடச் செய்து என்றவாறு. திகழ்மணி-ஒளி மணி. பொன்னிடை ஒளிமணி பதித்த அணிகலன் அணிந்த சீதை என்றது, பொன் னிடைப்பதித்த மணிபோல இராமனது மனத்திடைப் பிரியா சீதை என்னும் குறிப்பினது. பொன்னடி என்றது, பொன்போற் சிறந்த திருவடி என்றவாறு ஒருப்பாடு என்பது, பயணத்திற்கு ஒருப்பட்டது என்னும் பொருளது. (42)

## சீதை மகிழ்ந்து பரிசிற்பொருளோடு தேரேறுதல்

736 மன்னவனுனக்கு மாதவத்தோர்கள் வாழ்வனங்
காட்டிட வுரைத்தான்
என்னலு மெழுந்தவுவகைய ளாகி
யின்னுயிர்த் தோழியர்க் கிசைந்த
மின்னொளி யார முதலவா பரணம்
விளங்குசீர் நவமணி யாடை
இன்னவை பிறவுந் தெரிந்துகொண் டிளையோ
னேறெ‌ன வேறினா ளிரதம்.

மன்னவன் உனக்கு மாதவத்தோர்கள் வாழ்வனம் காட்டிட
உரைத்தான்
என்னலும் எழுந்த உவகையள் ஆகி இன் உயிர்த்தோழியர்க்கு
இசைந்த மின்னொளி ஆரம் முதல ஆபரணம் விளங்குசீர்
நவமணி ஆடை
இன்னவை பிறவும் தெரிந்து கொண்டு "இளையோன் ஏறு" என
ஏறினாள் இரதம்

பொ: மன்னவனாகிய இராமன் உனக்குப் பெரிய தவ முனிவர்கள் வாழ்கின்ற வனத்தைக் காட்டுமாறு சொன்னான் என்று இலக்குவன் சொன்னவுடன், உள்ளத்தெழுந்த மகிழ்ச்சியினை யுடையளாகி வனத்திலுள்ள இனிய உயிர்போன்ற தோழியர்க்குப் பொருத்தமான மின்னொளி வீசுகின்ற முத்தாரம் முதலிய ஆபரணம், விளங்குகின்ற சிறப்பினையுடைய நவமணிகள், புடைவை வகைகள், இவைபோல்வனவாகிய பிறவற்றையும் ஆராய்ந்து எடுத்துக் கொண்டு, தேர்மேல் ஏறு என்று இலக்குவன் கூறியவுடன் ஏறினாள்.

கு: தமையன் என உறவுப் பெயராற் கூறாது, மன்னவன் என்றது மன்னவன் ஆணை மறுக்கவியலாது என்னுங் குறிப்பினது ஆகும். முன்னமே தவவனம் காணும் ஆர்வமுடையவள் சீதையாதலின் இலக்குவன் கூறியவுடன் கிளர்ந்தெழுந்த உவகையள் ஆயினள் என்க. வனத்திலுள்ள முனிவர் பன்னியர் முன்னமே தனக்குப் பழக்கமுள்ள தோழியர் ஆதலின் அவர்கள் விரும்பத் தக்க ஆபரண முதலியவற்றை அவர்க்குக் கொடுக்க வேண்டி உடன் கொண்டு சென்றார் என்றவாறு. ஆரம்-முத்துமாலை. சிறப்புக் கருதி முத்துமாலை முன்னர்க் கூறப்பட்டது. நவமணி-ஒன்பது வகையான இரத்தினங்கள். அவை-கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம், மாணிக்கம் முத்து, வயிரம், வைடூரியம் என்பன. ஆடை என்பது முனிவர் பன்னியர் உடுக்கத்தக்க துணிவகைகளை. தெரிந்து கொண்டு என்றது அவர்கட்கு எது ஏற்புடைத்து என ஆராய்ந்து எடுத்துக்கொண்டு என்றவாறு- தெரிந்துகொண்டு இரதம் ஏறினாள் என இயையும். இளையோன் ஏறு என என்றது, இடைப்பிறவரல். சொல்லெச்சமாக வருவிக்கப்பட்ட சீதை என்னும் தோன்றா எழுவாய் உவகையளாகித் தெரிந்து கொண்டு இரதம் ஏறினள்! என முடியும். (43)

## தேரில்செல்லும் தீய நிமித்தத்தால் கவலை

737 சலக்கடல் கிழியச் சென்றிடுங் கலம்போற்
றடமணித் தேர்செலத் தையல்
வலக்கணுந் துடித்து வயிறெரி யுற்று
மனமுந்தன் மேனியு நடுங்க

இலக்குவ வெனக்குத் துர்க்குறி யிதனு
லென்வினை வென்றுநா னறியேன்
விலக்கரி தாய விதியது விளைக்கும்
விளைவையார் மேதினியறிவார்

**சலக்கடல் கிழியச் சென்றிடும் கலம்போல் தடமணித் தேர் செலத் தையல்,**
**வலக்கணும் துடித்து வயிறு எரிவுற்று மனமும் தன்மேனியும் நடுங்க,**
**இலக்குவ! எனக்குத் துர்க்குறி இதனுல் என்விளைவு என்று நான் அறியேன்;**
**விலக்கரிதாய விதியது விளைக்கும் விளைவையார் மேதினி அறிவார்?**

பொ: நீர் நிறைந்த கடல் வயிறு கிழியுமாறு செல்லும் கப்பல் போலப் பெரிய மணிகள் கட்டியுள்ள தேர் நிலம் சுவடு பட வனத்தை நோக்கிச் செல்லாநிற்க, சீதை வலதுகண் துடிக்கப் பெற்று அதனுல் வயிறு எரிவுற்று உள்ளமும் உடம்பும் நடுங்காநிற்க, "இலக்குவ! எனக்கு ஏற்பட்ட தீய நிமித்தமாகிய இதனுல் என்ன விளையப் போகின்றது என்பதை யான் அறியேன்; விலக்கற்கு அரிதாகிய விதி விளைக்கின்ற விளைவை இவ்வுலகில் யார் அறிய வல்லவர்கள்?"

கு: பாற்கடல் முதலியவற்றை விளக்க 'சலக்கடல்' என்ருர். கடல் சலம் கிழிய என மாற்றிக் கூறலும் ஆம். கடலில் கப்பல் செல்லும்போது அது செல்லும் வழியிலுள்ள கடல்நீர் கிழிவது போலத் தோன்றுதலின் இங்ஙனம் கூறினர். தரை கிழியச் செல்லும் தேர்க்குக் கடல்நீர் கிழியச் செல்லும் கப்பல் உவமை. தேர் ஓட்டும் சுமந்திரன் திறமையை இதனுல் புலப்படுத்தியவாறு. மேடு பள்ளங்கள் நிறைந்த காட்டு வழியில் செல்லுந் தேர் நீர் வழிச் செல்வது போன்று இனிதாகச் செல்லுமாறு சுமந்திரன் செலுத்தினன் என்க. வலக்கணும் என்புழி உம்மை அசை நிலை. துடித்து என்பது துடித்தலால் எனப் பொருள் படுதலின் காரணத்தின் கண் வந்த வினையெச்சம்; 'மழைபெய்து நெல் விளைந்தது' என்புழிப்போல. வயிறு எரிதலும் மனமும் மேனியும் நடுங்குதலும்

வலக்கண் துடித்தலால் உண்டான காரியங்கள். துன்னிமித்தங்கள் அல்ல; துர்க்குறியதனுல் என ஒருமையாற் சுட்டியிருத்தலும் காண்க. பெண்டிர்க்கு வலக்கண் துடித்தல் தீய நிமித்தமாகும். உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா ஆதலின், விலக்கரிதாய விதி என்ருர். விதி விளக்கும் விளைவை யார் மேதினியறிவார்? என்றது வேற்றுப் பொருள் வைப்பணி. (44)

## சீதை தன்னைச் சார்ந்தோர்க்குத் தீமையில்லாதிருக்கத் தெய்வத்தைத் தொழுதல்

738 தாமுறு துயரந் தையல ரறியார்
சார்ந்தவித் துர்க்குறி யதனுல்
தூமன முடைய வென்கணவற்குந் துனியிலென்
கொழுந்த மாருக்கும்
மாமியர் தமக்கும் வான்கிளை தனக்கும்
வளநக ரத்தில்வாழ் வோர்க்கும்
தீமையொன் றின்றி நன்மையாய் விடுக
தெய்வமே யென்றுகை தொழுதாள்

**தாம்உறு துயரம் தையலர் அறியார், சார்ந்த இத் துர்க்குறி அதனுல் தூமனம் உடைய என்கணவற்கும் துனியில் என் கொழுந்த மாருக்கும்**
**மாமியர் தமக்கும், வான்கிளை தனக்கும் வளநகரத்தில் வாழ் வோர்க்கும்**
**தீமை ஒன்று இன்றி நன்மையாய் விடுக தெய்வமே என்று கை தொழுதாள்.**

பொ:- இந்தத் தீய நிமித்தத்தால் தாம் உறப்போகும் துயரம் இன்னது என்பதை பெண்டிர் அறியமாட்டார்கள். என்னைச் சார்ந்த இந்தத் தீநிமித்தத்தால் தூய மனமுடைய என் கணவர்க்கும் வெறுப்பில்லாத என் கொழுந்தர்களுக்கும் மாமியர்க்கும் சிறந்த உறவினர்கட்கும் வளமான அயோத்தியில் வாழ்கின்ற மக்களுக்கும் சிறிதும் தீமை நிகழாமல் நன்மையாக இருக்க விடுக தெய்வமே! என்று கடவுளை நினைந்து கைதொழுதாள்.

கு:- சார்ந்த இத்துர்க்குறியதனுல் தாமுறுதுயரம் என முன்னும், துர்க்குறியதனுல் என் கணவர் முதலோர்க்குத் தீமை ஒன்று இன்றி எனப் பின்னும், சென்றியைந்து பொருள் தந்து தாப்பிசைப் பொருள்கோளாய் நின்றது. இடைநிலை விளக்கு எனலும் ஆம். தையலர் இத்துர்க்குறியதனுல் தாமுறு துயரம் அறியும் தரத்தர் அல்லர்! எனவே சீதை தனக்குறு துயர் பற்றிக் கவல்வதினும் தன்னைச் சார்ந்தோர் தீமையுறுவரோ எனப் பெரிதும் வருந்தினளாதலின், 'தீமையொன்றின்றி நன்மையாய் விடுக தெய்வமே' எனத் தெய்வத்தை வேண்டிக் கொண்டாள் என்ற வாறு. துனி-வெறுப்பு. கணவன் உடன்பிறந்தாரைக் கொழுந்தர் எனல் மரபு. கொழுந்தமார் என்றது மரூஉ முடிபு. கிளை-என்றது உறவினரை. தன் நகரத்தில் வாழும் மக்களுக்கும் தீமை நிகழலாகாது என்ற சீதையின் அருள் நோக்கும் இங்கு நினைக்கத்தகும். தெய்வமே தீமை தீர்த்துக் காத்தற்குரியது என்பது கருத்து. (45)

739 அன்னவக் குறிக வாயிழை கூற
வகத்தெழுந் துயரனு யிளையோன்
சொன்னவிக் குறியா னங்கிளை யானோர்
துயரின்றிச் சுகத்தினி திருப்பர்
என்னலு மெழுந்த வுவகைய ளாகி
யிருந்துய ரொழித்தவ ணிருப்பப்
பொன்மணி நெடுந்தேர் தென்றிசை நோக்கிப்
போயது துயவர்ப் பொறுத்து

**அன்ன அக்குறிகள் ஆயிழைகூற அகத்து எழுந்துயரனுய் இளையோன்**
**"சொன்ன இக்குறியான் நம்கிளையானோர் துயர் இன்றிச் சுகத்து இனிது இருப்பர்"**
**என்னலும் எழுந்த உவகையள் ஆகி இருந்துயர் ஒழித்து அவண் இருப்பப்**
**பொன்மணி நெடுந்தேர் தென்திசை நோக்கிப் போயது துயவர்ப் பொறுத்து.**

பொ: வலக்கண் துடித்தல் முதலிய அக்குறிகளைச் சீதை சொல்ல, உள்ளத்தில் எழுந்த துயரமுடையவளாய் இளையவனாகிய இலக்குவன் "நீ சொன்ன இந்தத் தீய நிமித்தத்தால் நம் உறவினர்களெல்லாம் துயரம் இல்லாமல் சுகத்தில் இனிதாக இருப்பார்கள் என்று கூறுதலும் மேற்பட்ட மகிழ்ச்சியுடையவளாகிப் பெரிய துயரத்தை நீக்கிச் சீதை அங்கு இருப்ப, அழகிய மணிகட்டிய நெடியதேர் தூயவர்களாய அவ்விருவரையும் தாங்கிக் கொண்டு தென்திசையை நோக்கிப் போனது.

கு: இங்கு அக்குறிகள் என்று பன்மையாற் கூறியது வயிறு எரிதல் உள்ளமும் உடம்பும் நடுங்குதல் போன்றவற்றையும் நிமித்தமாகக் கருதிப் போலும். துன்பம் வரும்போது இத்தகைய நிகழ்ச்சிகளும் தீய நிமித்தங்களாய் நிகழ்வதுண்டு போலும். சீதைக்கு வரப்போகும் பெருந்துயரையே அவள் வலக்கண் துடித்தல் முதலிய நிமித்தங்கள் அறிவிக்கின்றன என்பதை யுணர்ந்த இலக்குவன் அதனைக் கூறாது, 'இக்குறியால் நங்கிளையானோர் துயரின்றிச் சுகத்தினிதிருப்பர்' என ஒழிந்ததை யுணர்த்தினனாகச் சீதை அவ்வளவிற்கே பெருந்துயரொழிந்திருந்தாள் என்றவாறு. எடுத்த மொழி இனஞ்செப்பலும் உரித்தே என்ற விதியால் சீதையே துயருறப் போகின்றாள் என்பதை உய்த்துணர்ச்சியால் அவள் உணர்ந்து கொள்ளவில்லை. தூயவர் என்றது, இலக்குவனையும் சீதையையும். பொறுத்தல்-தாங்குதல். தேர் பொறுத்துத் தென்திசை நோக்கிப் போயது என இயையும். (46)

## சீதை முதலானோர் கங்கையைச் சேர்தல்

740 மாமதி முகத்தின் மறுவறு கற்பின்
மங்கையும் வருவன வெண்ணாறும்
தூமதி யமைச்சன் சுமந்திரன்
றானுந்துயருறு மனத்திளையோனும்
கோமதி யென்னு நதியினைக் குறுகிக்
கொடுங்கதிர் மேல்கடல் குறுகத்
தாமதில் வைகிப் பிற்றைநா ளுச்சி
தடம்புனற் கங்கையைச் சார்ந்தார்.

மாமதி முகத்தின் மறுவறு கற்பின் மங்கையும் வருவன எண்ணும்
தூமதி அமைச்சன் சுமந்திரன் தானும், துயர்உறு மனத்து
இளையோனும்,
கோமதி என்னும் நதியினைக் குறுகிக் கொடுங்கதிர் மேல்கடல்
குறுகத்
தாம் அதில் வைகிப் பிற்றைநாள் உச்சி தடம்புனல் கங்கையைச்
சார்ந்தார்.

பொ:- சிறந்த சந்திரனைப் போன்ற முகத்தினையும் குற்றமற்ற கற்பினையும் உடைய சீதையும் எதிர்காலத்தில் வரத்தக்கன வற்றை எண்ணி அறிகின்ற தூய அறிவினையுடைய அமைச்சனாகிய சுமந்திரனும் துயரம் பொருந்திய மனத்தினையுடைய இலக்கு வனும் கோமதி என்னும் பெயரினையுடைய நதியினை அடைந்து வெப்பத்தால் கொடிய சூரியன் மேல்கடலை அடைந்தமையால் அந்தக் கோமதிநதிக் கரையில் தாம் தங்கியிருந்து மறுநாள் நண்பகலில் பெரியபுனலையுடைய கங்கையாற்றை அடைந்தார்கள்.

கு:- சீதையின் முகத்தழகையும் அகத்தழகையும் புலப்படுத்த வேண்டி 'மாமதிமுகத்தின்' எனவும் 'மறுவறு கற்பின்' எனவும் சிறப்பித்தவாறு. மறு-குற்றம். மங்கை என்றது, பருவப் பெயராய் நில்லாது பெண் என்னுந் துணையாய் நின்றது. மந்திரிக்கழகு வரு பொருளுரைத்தல் ஆதலின், 'வருவனவெண்ணும் தூமதி அமைச் சன்' என்றார். தூமதி-தூய அறிவு. அமைச்சன் சுமந்திரன் என்பது பொதுப்பெயரும் சிறப்புப் பெயரும் இணைந்து நின்று இரு பெயரொட்டாய் நின்றது. சீதையை வனத்தில் தனித்து விடப் போகின்றோமே என்ற துயரம் இலக்குவன் மனத்தை வாட்டிக் கொண்டிருப்பதை யுணர்த்தவே 'துயருறு மனத்திளை யோனும்' என்றார். இம்மூவரும் கோமதி நதியை அடையும் போது சூரியன் மறைந்தான் என்றவாறு. மேல்கடல் குறுகுதல் என்றது சுத்தமித் தலை. இரவில் வழிச்செலவு கூடாமையின் கோமதி நதிக்கரையில் இரவைக் கழித்துவிட்டு மறுநாள் கங்கையை அடைந்தார் என்ற வாறு. அதில் வைகி என்றது கோமதி நதிக்கரையில் தங்கி என்ற வாறு. இதுவிடாத இலக்கணை. கோமதி நதியில் தங்கினர் என்றது இந்த நதியினை விடாது நிற்கும் கரையினை யுணர்த்தி நிற்றலின் என்க. கங்கையின் கண் இடைச்சேரி என்றாற்போல்வது இது.

உச்சி என்றது உச்சிப் போதினை. காலையில் கோமதி நதியிலிருந்து புறப்பட்டு நண்பகலில் கங்கையைச் சேர்ந்தார்கள் என்க.

(47)

## இலக்குவன் கதறுதல்

741 கங்கையைச் சென்று காண்டலு மிளையோன்
கண்கணீ ரரும்பிடக் காந்திப்
பொங்கிய துயரம் புறப்படா வண்ண
மடக்கிட வுண்ணின்று பொரும
இங்குநீ யிங்ங னிடருறு வானே
னிலக்குவ வியம்புதி யென்று
மங்கையீ துரைப்ப மறுமொழி கொடாது
வாய்விட்டுக் கதறிடுங் காலே.

**கங்கையைச் சென்று காண்டலும் இளையோன் கண்கள் நீர் அரும்பிடக் காந்திப்**
**பொங்கிய துயரம் புறப்படா வண்ணம் அடக்கி உள்நின்று பொரும, 'இங்கு நீ இங்ஙன் இடர் உறுவானேன்' இலக்குவ! இயம்புதி, என்று மங்கை ஈது உரைப்ப, மறுமொழி கொடாது வாய்விட்டுக் கதறிடுங்காலே.**

பொ: கங்கையாற்றைப் போய்க்கண்ட அளவில் இலக்குவன் கண்களில் நீர் அரும்பிடவும் உள்ளத்தில் எரிந்து பொங்கிய துயரம் புறப்படாதபடி அகத்தே வருந்தாநிற்க அதுகண்ட சீதை, 'இலக்குவ! நீ இங்கு இவ்வாறு துன்புறுவானேன்? சொல்லுக' என்று இதனை சொல்ல, இலக்குவன் அதற்கு மறுமொழி கொடுக்காமல் வாய்விட்டுக் கதறி அழுதிடும் பொழுது.

கு:- குளகம். காந்துதல்-எரிதல். பொருமுதல் உள்ளுக்குள் வருந்துதல். மங்கை, 'இலக்குவ- நீ இங்கு இங்ஙன் இடருறுவானேன் இயம்புதி! யென்று ஈது உரைப்ப' எனக் கொண்டு கூட்டுக. மங்கை என்பது பருவம் குறியாது சீதையைக் குறித்து நின்றது. கங்கைக் கரையில் சீதையைத் தனித்துவிட வேண்டியுளதே என்ற இரக்க நினைவினால் இலக்குவன் முன்பு துயரம் புறப்படாவண்ணம்

அடக்கி உள்ளுக்குள்ளே வருந்தினவன், சீதை 'இடருறுவானேன்' என்று வினவியவுடன் துன்பம் பொறுக்கலாது வாய்விட்டுக் கதறலானான் என்க. (48)

## சீதையின் வினாவும் இலக்குவன் விடையும்

742 துயவிந் நதியைக் கண்டவ ரெல்லாந்
தொழுதுவந் தாடுவர் தூயோய்
நீயிட ருறுவ தென்னுல கத்தி
னினையிடர் செய்பவ ரில்லை
நாயகன் றன்னைப் பிரிந்தறி யாதே
னாளிரண் டுண்டுநான் பிரிந்தேன்
ஆயவன் றன்னை நினைந்துறு துயரென்
றறைந்திட வாயிழை யுரைப்பாள்

தூய இந்நதியைக் கண்டவர் எல்லாம் தொழுது உவந்து ஆடுவர்; தூயோய்!
நீ இடர் உறுவது என்? உலகத்தில் நினை இடர் செய்பவர் இல்லை;
"நாயகன் தன்னைப் பிரிந்து அறியாதேன், நாள் இரண்டு உண்டு; நான் பிரிந்தேன்,
ஆயவன் தன்னை நினைந்து உறுதுயர்" என்று அறைந்திட ஆயிழை உரைப்பாள்.

பொ:- தூய்மையுடைய இலக்குவ! தூய்மையுடைய இந்தக் கங்கையாற்றைக் கண்டவர்கள் எல்லாம் வணங்கி மனமகிழ்ந்து நீராடுவார்கள்; அங்ஙனமிருக்க நீ இந்நதியைக் கண்டவுடன் துன்புறுவதற்குக் காரணம் என்ன? உலகத்தில் உனக்குத் துன்பம் விளைக்கின்றவர்களும் இல்லையே; (என்று சீதை வினவ, இலக்குவன்,) "என் நாயகனாகிய இராமனை இதுவரையில் பிரிந்தே அறியாதேன்; இரண்டு நாட்கள் பிரிவுண்டாக நான் பிரிந்துவிட்டேன்; அந்த என் நாயகனை நினைந்துற்ற துயரந்தான்" என்று சொல்லச் சீதை சொல்வாள்.

கு: தூய ஒழுக்கமுடையவன் இலக்குவன். ஆதலின், அவனைத் 'தூயோய்' என விளித்தவாறு. தூய்மையற்ற கொடியவர்கள் இந்தக் கங்கையைக் கண்டால் தம் கெட்ட ஒழுக்கத்தை நினைந்தேனும் கதறும் நிலை உண்டாகும். அந்நிலையும் நினக்கு இல்லையே யென்பாள் தூயோய் என விளித்தாள் என்க. கங்கையைக் கண்டவர்கள் எல்லாம் அதன் தெய்வத்தன்மையை நினைந்து வணங்கிப் பின் அதில் மூழ்கி மகிழலாயிருக்க நீ இந்நதியைக் கண்டவுடன் துன்புறுவது ஏன்? என வினவினாள். ஒருகால் கங்கைக் கரையில் நின்னைத் துன்புறுத்துவோர் உளராயின் அவர்களை நினைந்து துன்புறலாம். ஆனால் உலகத்தில் நினையிடர் செய்பவர் யாருமே இல்லாதபோது நீ இடர் உறுவது என்னை? என இயைத்துப் பொருள் காண்க. இச்செய்யுள் நாடக அமைப்புடையது. எனவே சீதை இவ்வாறு வினவ, இலக்குவன் இவ்வாறு கூறினான் என எழுவாய் இல்லாமல் நேர்க்கு நேர் பேசுமாறுபோல் அமைந்துள்ளது. சீதையைத் தனியே விடுத்துச் செல்ல இருக்கும் துன்பநிலையை எண்ணி வருந்துகின்ற இலக்குவன் அதனை நேரே சீதையிடம் சொல்லக்கூசி, 'இராமனைப் பிரிந்தறியாத யான் இரண்டு நாளாகப் பிரிந்திருக்க நேர்ந்தமையால், அவனை நினைந்து துயருற்றேன்' எனப் பொய்யான காரணத்தைச் சொன்னான் இலக்குவன் என்க.

(49)

## இடருறேல் என இலக்குவனுக்குச் சீதை இயம்பல்

743 நன்றிவித் தாகு நல்லொழுக் குடைய
நற்றவ முனிவரை யெல்லாம்
சென்றடி பணிந்து தீவினையறுத்துத் திகழொளி
யாடை யாபரணம்
என்றுணைத் தோழி மார்கட்கு மவரை
யீன்றெடுத் தோர்கட்கு முதவி
இன்றொரு நாளு மிருந்துநா மீடு
மிலக்குவ விடருறே லென்றாள்.

நன்றி வித்து ஆகும் நல் ஒழுக்கு உடைய நல்தவ முனிவரை எல்லாம்
சென்று அடிபணிந்து, தீவினை அறுத்துத், திகழ் ஒளி ஆடை ஆபரணம்
என் துணைத் தோழி மார்கட்கும் அவரை ஈன்று எடுத்தோர்க்கும் உதவி,
இன்று ஒருநாளும் இருந்து நாம் மீள்தும் இலக்குவ இடர் உறேல் என்றாள்.

பொ: "இலக்குவ! அறத்திற்குக் காரணமாகிய நல்லொழுக்கத்தையுடைய நல்ல தவ முனிவரையெல்லாம் நெருங்கி அவர்தம் திருவடிகளைப் பணிந்து (அப்புண்ணியத்தால்) தீவினையை அறுத்துக் கொண்டு, விளக்கமான ஒளியையுடைய உயர்ந்த புடைவைகளையும் அணிகலன்களையும் எனக்குத் துணையாகிய தோழிமார்கட்கும் அவர்களைப் பெற்று வளர்த்த தாய்மார்கட்கும் கொடுத்து இன்று ஒருநாள் மட்டும் இங்குத் தங்கியிருந்து நாம் மீள்வோம்; நாயகன் பிரிவால் இடருறாதே" என்று சீதை சொன்னாள்.

கு:- இலக்குவன் சொன்னதை உண்மையெனக் கொண்டு சீதை 'இன்று ஒருநாளிருந்து விரைந்து மீள்வோம் நாயகன் பிரிவு நீடிக்குமோ என நினைந்து வருந்தாதே' எனச் சொன்னாள். "நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்கமென்று மிடும்பை தரும்' (திருக்குறள்-138) என்ற குறளை முதலடி நினைப்பிக்கின்றது காணலாம். நன்மை எல்லாவற்றினும் சிறந்த நன்மையாகிய வீடு பேற்றிற்குரிய தவத்தைச் செய்யும்முனிவர் ஆதலின் 'நற்றவமுனிவர்' எனப்பட்டார். சென்று என்பது இங்கு 'நெருங்கி' என்னும் பொருளது. நற்றவ முனிவர் அடி பணிந்த புண்ணியத்தால் நம் தீவினைகளாகிய பந்தங்களை அறுக்கலாம் என்பாள் 'அடிபணிந்து தீவினை யறுத்து' என்றாள். தீவினைகள் உயிர்க்குக் கட்டு ஆதல் நினைந்து 'அறுத்து' என்ற வினையாற் கூறினாள். ஆடை 'ஆபரணங்களின் சிறப்புப் புலப்படுத்த' திகழ்ஒளி ஆடை ஆபரணம் என்றாள். முன்பு தான் வனத்தில் தங்க நேர்ந்தபோது உயிர் ஒன்றாய் நட்புச் செய்து கொண்ட தோழியர் என்பாள் 'என் துணைத் தோழிமார்கள்' என்றாள். பருவத்தால் தனக்கு ஒப்பான தோழியர் எனலும் ஆம். உதவுதல்-கொடுத்தல். முனிவர்

மகளிர்க்கு உதவி செய்யும் இன்று ஒருநாள் மட்டும் பொறுத்துக் கொள்; நாளையே திரும்பலாம் என்றவாறு. (50)

## இலக்குவன் சீதையை வணங்கிச் சொல்லத் தொடங்குதல்

744 இன்னவா சகங்க ளேந்திழை யியம்ப
விலக்குவ னிடரையுள் ளடக்கி
நன்னதி தன்னநா வாயினிற் கடத்தக்
கடந்துபோயத் தென்கரை நண்ணி
மன்னவ னிராமன் றேவியை முறையால்
வலஞ்செய்து மலரடி வணங்கி
என்னுரை கேட்டி யேழுல குடையா
யெனவவ ளியம்பென வியம்பும்.

இன்னவாசகங்கள் ஏந்திழை இயம்ப, இலக்குவன் இடரை உள் அடக்கி,
நல்நதிதனை நாவாயால் கடத்தக் கடந்து போய்த் தென்கரை நண்ணி,
மன்னவன் இராமன் தேவியை முறையால் வலம் செய்து மலர்அடி வணங்கி,
என்உரை கேட்டி, ஏழ் உலகு உடையாய் என, அவள் இயம்பு என, இயம்பும்.

பொ:- இத்தகைய சொற்களைச் சீதை சொல்ல, இலக்குவன் துன்பத்தை உள்ளே அடக்கிக் கொண்டு, நல்ல கங்கையாற்றினை நாவாயால் ஓடக்காரன் கடத்தக் கடந்து சென்று தென் கரையைச் சேர்ந்து உலக மன்னவனாகிய இராமன் தேவியை வலம் செய்து பின் அவள் மலர்போன்ற திருவடியை வணங்கி, 'ஏழுலகையும் ஆளுதற்குரிய உரிமையுடையவளே! என் சொல்லைக் கேட்பாயாக'! என்று கூறச் சீதை 'சொல்' என்றவுடன் இலக்குவன் சொல்லுவான்.

கு: ஏந்திழை என்றது, ஏந்திய ஆபரணத்தையுடையவள் எனப்பொருள்படும். வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. நன்னதி என்றது கங்கையை. நாவாய்-ஓடம். கடத்தக் கடந்து என்றதனால் ஓடக்காரன் கடத்தத் தாம் கடந்து எனப்பொருள் கொள்க. தன் அண்ணன் மனைவி என்ற உரிமை மட்டுமன்றி மன்னவன் மனைவி யென்ற மதிப்பிற்கு ஏற்ப முறையால் வலம் செய்து வணங்கிக் கூறுகின்றான் இலக்குவன் என்க. ஏழுலகிற்கும் தலைவனாகிய இராமன் தேவி ஆனமையின் ஏழுலகுடையாய்! எனச் சீதையை விளிக்கலானான். ஏழுலகுடைய நீ இனி ஏதுமின்றித் தனித்துயர் எய்தவேண்டியுளது என்ற குறிப்பும் இங்குக்கொள்க. மலரடி-உவமைத்தொகை. கேட்டி என்பது முன்னிலையேவல். (51)

745 கடுந்துயர் மேற்கொண் டேறக்
கண்ணினீர் வெள்ளஞ் சோர
ஒடுங்கிய வலியன் சோதி
யுலந்திடு முகத்த னஞ்சி
நடுங்கிய மனத்த னீரி னாத்தழு
தழுத்து மெல்லப்
பிடுங்கிய மொழியன் மங்கைக்
கிவையிவை பேச லுற்றான்.

**கடும் துயர் மேற்கொண்டு ஏறக், கண்ணின்நீர் வெள்ளம் சோர,**
**ஒடுங்கிய வலியன் சோதி உலந்திடு முகத்தன் அஞ்சி,**
**நடுங்கிய மனத்தன், நீர்இல் நாத் தழுதழுத்து மெல்லப்**
**பிடுங்கிய மொழியன் மங்கைக்கு இவைஇவை பேசல் உற்றான்.**

பொ:- (இலக்குவன் உண்மை கூறத் தொடங்கும்போது) கடுமையான துயரம் முன்னையினும் மேற்பட்டு ஏற, கண்களில் கண்ணீர் வெள்ளம் சோர, ஒடுங்கிய வலிமையயுடையவனாய் ஒளி மாழ்கிய முகத்தையுடையவனாய், அஞ்சி நடுங்கிய மனத்தை யுடையவனாய், நீரில்லாது வறண்ட நாக்குத் தழுதழுத்தமையால் மெல்ல மெல்லப் பிடுங்குவது போன்று தடைபட்டு வரும் சொல்லை யுடையவனாய்ச் சீதைக்கு இன்ன இன்ன செய்தியைச் சொல்லத் தொடங்கினன்.

கு:- முன்னைத் துயரினும் நேரே சீதையிடம் சொல்லும் துயரம் பெரிதாய் முறுகுதலின் 'கடுந்துயர் மேற்கொண்டேற' எனவும் அது காரணமாகக் கண்ணீர் பெரிதும் பெருகின்றென்பார் 'கண்ணினீர் வெள்ளஞ்சோர' எனவும் கூறினர். வலியன், முகத்தன், மனத்தன் மொழியன் என்பன குறிப்பு முற்றுக்கள் எச்சப் பொருளில் வந்து பேசலுற்றான் என்ற வினையோடு முடிந்தன. ஒடுங்கிய வலியன் என்றது வலியொடுங்கினவன் என்னும் பொருளது. இலக்குவனுடைய ஒளிவாய்ந்த முகம் இப்போது ஒளியின்றி யிருண்டு தோன்றியதென்பார், 'சோதி யுலந்திடு முகத்தன்' என்றார். சொல்லத்தொடங்கும்போது இலக்குவன் உடம்பிலும் உள்ளத்திலும் தோன்றிய மாறுபாடுகளை-மெய்ப்பாடுகளை நன்கு புலப்படுத்தியிருப்பது காணலாம். வறண்ட நா என்பார், நீர்இல்நா என்றார். தழுதழுத்தல் என்பது, நாவிற்குச் சொல்லும் ஆற்றலின்றிக் குழறுதல். எளிதாக வெளிவர வேண்டிய சிறு சொல்லும் பெருமுயற்சியால் வெளிப்படுத்த வேண்டியிருந்தது என்பார், 'மெல்லப் பிடுங்கிய மொழியன்' என்றார். (52)

746 உத்தம குணத்தோய் கேட்டி
யுலகமா தாவே கேட்டி
சுத்தனுஞ் சனகன் வேள்வி
தோன்றிய தூயோய் கேட்டி
வித்தக னிராம னேவி
விட்டகா ரியங்க ளெல்லாம்
தத்துவ மான வண்ணஞ்
சாற்றுவெ னென்று சாற்றும்.

'உத்தம குணத்தோய் கேட்டி; உலக மாதாவே கேட்டி;
சுத்தனும் சனகன் வேள்வி தோன்றிய தூயோய்! கேட்டி;
வித்தகன் இராமன் ஏவி விட்ட காரியங்கள் எல்லாம்
தத்துவம் ஆன வண்ணம் சாற்றுவென்' என்று சாற்றும்.

பொ:- உத்தமமான குணமுடையவளே! கேட்பாயாக; உலகத்திற்கு எல்லாம் தாயாக விளங்குபவளே! கேட்பாயாக! தூய

வணங்கிய சனகனது வேள்வியில் பிறந்த தூய்மையுடையவளே! கேட்பாயாக; சதுரப்பாட்டினையுடைய இராமன் கட்டளையிட்டு அனுப்பிய காரியங்கள் எல்லாவற்றையும் உண்மையானபடி சொல்லுவேன்;' என்று சொல்லிச் சொல்லுவானானான்.

கு:- உத்தமம்-தலைமை. சீதையின் குணத்திற்கும் அவள் தன் தாய்மைக்கும் தூயகுடிப் பிறப்பிற்கும் ஏலாதனவற்றைச் சொல்ல வேண்டியிருத்தலின் உத்தம குணத்தோய், உலகமாதாவே, சனகன் வேள்வித் தோன்றிய தூயோய், எனவும் விளித்தவாறு. மூன்று விளிகளும் சீதையென்னும் ஒரு பொருள் குறித்து வந்தவை. ஒருபொருட் பலபெயர். சனகன் மலமாசு நீங்கிய தூய ஞானியாதலின் சுத்தனுஞ் சனகன் என்றான். வித்தகன்-சதுரப் பாடுடையவன். தத்துவம் என்றது, உண்மை என்ற பொருளில் இங்கு ஆளப் பட்டுளது. (53)

## இராமன் ஏவலை இலக்குவன் சொல்லியது

747 வாடிய முகத்தன் வெய்ய
மானவேன் மருமத் தூன்ற
நீடிய வுயிர்ப்பன் றான்முன்
னினைத்தகா ரியத்தின் மேலே
ஓடிய மனக்கா குத்த
னொல்லையி னழைப்ப வந்து
கூடிய தம்பி மாரி னெனைக்
குறித் தினைய கூறும்.

வாடிய முகத்தன் வெய்ய மானவேல் மருமத்து ஊன்ற
நீடிய உயிர்ப்பன் தான்முன் நினைத்த காரியத்தின் மேலே
ஓடிய மனக்காகுத்தன் ஒல்லையின் அழைப்ப வந்து
கூடிய தம்பிமாரின் எனைக் குறித்து இனைய கூறும்

பொ:- கொடிய மானமாகிய வேல் தன்மார்பில் தைத்தலால் வாடிய முகத்தனாய், நீடிய பெருமூச்சுடையவனாய்த் தான் முன்பு நினைத்திருந்த காரியத்தின்மேலே சென்ற மனத்தையுடைய இராமன், விரைவில் அழைக்க, வந்து கூடிய தம்பிமார் மூவரில், எனைக் குறிப்பிட்டு இத்தன்மையான சொற்களைச் சொல்வானான்.

கு:- மானத்தை வேலாக உருவகஞ் செய்தவாறு. உருவகத்திற் கேற்ப மருமத்து ஊன்றுதல் கூறினர். மருமம்-மார்பு. ஊன்றுதல்-தைத்தல். மானத்திற்குக் குறைவுவரும் செய்தியைக் கேட்டு இராமன் வருந்தியதையே மானவேல் மருமத்தூன்றியதாகக் கூறினன். மானக்குறைவான சொல்லைக் கேட்டவுடன் இராமன் வாடிய முகத்தனாய் நீடிய உயிர்ப்பினாய் நினைத்த காரியத்தை முடிக்கக் கருதித் தம்பிமாரை அழைத்தான் என்பான். 'முன் நினைத்த காரியத்தின்மேலே ஓடிய மனக்கருத்தன் ஒல்லையின் அழைப்ப' என்றான் ஒல்லை-விரைவு. கருத்தன் மரபில் தோன்றியவன் என்ற காரணம் பற்றி இராமன் காகுத்தன் எனப்பட்டான்; தத்திதாந்த நாமம் என்பர். (54)

748 உலகத்தா ருள்ள தென்ற
துள்ளதா மொலிநீர் வேலை
உலகத்தா ரில்லை யென்ற
தில்லையா முணருங் காலை
உலகத்தா ருள்ள தென்ற
தில்லையென் றுரைக்கு மாயின்
உலகத்தார்க் கவன்பே யாகு
முண்மையாற் பயனொன் றில்லை.

உலகத்தார் உள்ளது என்றது உள்ளதாம்; ஒலிநீர் வேலை
உலகத்தார் இல்லை என்றது இல்லையாம்; உணருங்காலை
உலகத்தார் உள்ளது என்றது இல்லையென் றுரைக்கு மாயின்
உலகத்தார்க்கு அவன்பேய் ஆகும்; உண்மையால் பயன்ஒன்று
இல்லை.

பொரு:- உலகத்தார் 'உள்ளது' என்று சொன்னது உள்ளதாகும். ஒலியையுடைய நீர் நிறைந்த கடலால் சூழப்பட்ட உலகத்தார் 'இல்லை' என்றது இல்லையாகும். இந்நிலையை உணர்ந்து பார்க்கும் போது உலகத்தவர் 'உள்ளது' என்று கூறும் ஒன்றை ஒருவன் இல்லை என்று சொல்வான் ஆயின் உலகத்தார்க்கு அவன் பேய் ஆகிவிடுவான். உண்மை சொல்வதால் பயன் ஒன்றும் இல்லை.

கு:- இராமன் தனக்குக் கூறியதை இலக்குவன் சீதைக்கு வாங்கிக் கூறியது இது. உலகத்தவர் உள்ளது என்று கூறு வாராயின் பொய்யும் மெய்யாகும்; அவர் இல்லை என்று கூறு வாராயின் மெய்யும் பொய்யாகும். ஆதலின் உண்மையால் பயன் ஒன்றில்லை என்றான். உலகத்தவர் உள்ளது என்றுகூறியதை ஒருவன் மறுத்துஇல்லை என்று சொல்வானாயின் அவன் உலகத் தார் கண்ணுக்குப் பேயாகத் தோன்றுவான் என்றவாறு. "உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத் தலகையா வைக்கப்படும்" (திருக்குறள் - 850) என்ற குறளைப் பின்பற்றியே இச் செய்யுளின் பிற்பகுதி அமைந்திருத்தல் காணலாம். (55)

749 சீதையைக் கொடுபோய் வெய்யோன்
சிறையிடை வைப்ப மீட்டுக்
காதலா லவளைக் கொண்டு
காகுத்தன் வாழும் வாழ்வின்
சாதலே யழகி தென்று
சாற்றுவர் தரணியுள்ளோர்
ஆதலா லசுத்தை யென்றே
யறிந்துவைத் தவளை நீத்தோம்.

"சீதையைக் கொடுபோய் வெய்யோன் சிறையிடை வைப்ப மீட்டுக்
காதலால் அவளைக் கொண்டுகாகுத்தன் வாழும் வாழ்வின்
சாதலே அழகிது" என்று சாற்றுவர் தரணியுள்ளோர்;
ஆதலால் அசுத்தை என்றே அறிந்து வைத்து அவளை நீத்தோம்

பொ:- 'சீதையைக் கவர்ந்து சென்று கொடியவனாகிய இராவணன் சிறையில் வைத்திருக்கவும் காதலால் அவளை மீட்டுக் கொண்டு வந்து இராமன் அவளோடு வாழும் வாழ்க்கையிலும் சாதலே அழகிது" என்று உலகில் உள்ளோர் சொல்கின்றார்கள்; ஆதலால் சீதையைத் தூயவள் என்று சோதனை மூலம் அறிந்து வைத்தும் அசுத்தமுடையவளே என்று அவளை நீக்கிவிட்டோம்.

கு: குளகம். 'உலகவர் சொல்லையே உயர்வாகக் கருதி; தூயவள் என்று அறிந்தும் சீதையை தூய்மையற்றவள் என நீக்கி விட்டோம்' என இராமன் கூறியதையே இலக்குவன் இங்குக் கூறு கின்றான். வெய்யோன்-கொடிய இராவணன்- விரும்பினவன் என்ற பொருளும் இதற்குண்டு. விரும்பிச் சிறையில் வைத்த இராவணன் சீதையைத் தூய்மையாக இருக்கவிட்டிரான் என்ற நம்பிக்கையால் உலகவர் இங்ஙனம் கூறுவாராயினர். காகுத்தன் எனத் தன்னைப் பிறன் போல் கூறியவாறு அசுத்தை - அசுத்தமானவள் ஐ பெண்பால் விகுதி. அறிந்து வைத்தும் என்ற உம்மை விகாரத் தால் தொக்கது. 'தீயில் மூழ்கச் செய்து தூயவளாதலை அறிந்து வைத்தும் தரணியுள்ளோர் சொல்லுக்கு மதிப்புக் கொடுத்து அசுத்தை என்று சீதையைத் துறந்துவிட்டோம்' என்று கூறிய வாறு.

(56)

750 என்றவ னியம்ப வெல்லோ
மெதிர்மொழி கொடுக்க வஞ்சி
நின்றவ ணடுங்க வந்த
நெடுந்தகை யென்னை நோக்கி
துன்றிய மணித்தேர் தன்னைச்
சுமந்தரற் பண்ணச் சொல்லி
இன்றவ னோடு நீயவ் வேந்திழை
தனைத்தே ரேற்றி.

என்று அவன் இயம்ப எல்லோம் எதிர்மொழி கொடுக்க அஞ்சி நின்றுஅவண் நடுங்க, அந்த நெடுந்தகை என்னை நோக்கி, 'துன்றிய மணித்தேர் தன்னைச் சுமந்தரற் பண்ணச் சொல்லி இன்று அவனோடும் நீ அவ் ஏந்திழை தனைத் தேர்ஏற்றி'

பொ:- என்று இராமன் சொல்ல, நாங்கள் யாவரும் அவனுக்கு எதிர் மொழி சொல்வதற்கு அஞ்சி நின்று அவ்விடத்து நடுங்கா நிற்க, அந்த நெடுந்தகையாகிய இராமன் என்னைப் பார்த்து, சுமந்திரனை அடைந்து நெருங்கிய மணிகளையுடைய தேரைப் பயணத்திற்கு உரியதாகப் பண்ணச் செய்துவிட்டு இன்றைக்கு அந்தச் சுமந்தரனோடும் நீ அந்தச் சீதையைத் தேரில் ஏற்றி.

கு: குளகம். எல்லோம் என்றது இராமனுக்குத் தம்பியராகிய நாங்கள் எல்லோரும் என்றவாறு. உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று. இராமன் சொல்லை எதிர்க்க நினைத்தும் நினைத்தபடி எதிர்மொழி கொடுக்க அஞ்சி நடுங்கினேம் என்றவாறு. நெடுந்தகை என்றது, வடிவத்தாலும் பண்பினாலும் நெடியவனாகிய இராமனை. சுமந்திரனைத்தேர் பண்ணச் சொல்லி இன்று அவனோடும் நீ அவ்வேந்திழைத்தனைத் தேரேற்றி என்றது, இராமன் இலக்குவனை நோக்கிக் கூறியவை. ஏந்திழை என்றது, உடம்பில் தாங்கிக் கொண்டுள்ள அணிகலன்களையுடைய சீதையை; வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஏற்றி என்ற வினையெச்சம், வருஞ்செய்யுளில் "கடந்துபோய் அடவிநண்ணி, வான்மீகி வைகும் பன்னக சாலையின்பாற் பாவையை விடுதி' என முடியும். (57)

751 நன்னெறி நகரு நாடுங்
கடந்துபோ யடவி நண்ணித்
தன்னுயிர் தன்னைவிட்டுத் தடம்புகழ்
கொண்ட வையன்
இன்னுயிர்த் தோழ னாய வெழில்
கொள்வான் மீகி வைகும்
பன்னக சாலை யின்பாற்
பாவையை விடுதி யென்றான்.

நல்நெறி நகரும் நாடும் கடந்துபோய் அடவி நண்ணித்
தன்னுயிர் தன்னை விட்டுத் தடம்புகழ் கொண்ட ஐயன்
இன்னுயிர்த் தோழனாய எழில்கொள் வான்மீகி வைகும்
பன்னக சாலையின்பால் பாவையை விடுதி என்றான்.

பொ:- 'நல்ல வழியையுடைய நகரங்களையும் நாட்டையும் கடந்துசென்று காட்டை அடைந்து தன் உயிரை விடுத்துப் பெரிய புகழைக் கொண்ட தந்தை தயரதச் சக்கரவர்த்திக்கு இனிய உயிர் நண்பனாகிய அழகிய வான்மீகி முனிவன் தங்கியுள்ள பன்னகசாலையின் பக்கத்தில் பாவை போன்றவளாகிய சீதையை விடுவாயாக' என்று கூறினான்.

கு:- நகரத்தில் வழிகள் நன்கு செப்பனிடப்பட்டிருக்குமாதலின் அதனை 'நன்னெறி நகர்' என்றார். நாடும் காடும் செப்பஞ் செய்யாத வழிகளையுடையன என்பது 'எடுத்தமொழி இனம் செப்பலும் உரித்தே' என்ற விதியால் புலப்படவைத்தவாறு. (வாய்மை காக்க வேண்டித்) தன்னுயிர் விடுத்துப் புகழ்கொண்ட ஐயன் என்றது, தயரதனை. வான்மீகி தயரதனுக்குத் தோழன் என்பது முதனூலாகிய வான்மீகத்தும் கூறப்பட்டுளது. பன்னசாலை என்றது தழையால் வேயப்பட்ட ஆசிரமத்தை. பாவை என்பது உவமை ஆகுபெயராய்ச் சீதையை யுணர்த்தியது. (58)

## இலக்குவன் சொல்லைக் கேட்டுச்சீதை தளர்ந்து வீழ்தல்

752 என்றவ னியம்ப வண்ண
லேவலை மறுக்க வஞ்சி
இன்றுனைக் கொண்டு போந்தே
னென்றிவை யிளையோன் சொல்லக்
கன்றிய கனலி னூடு காய்ந்த
நா ராசஞ் சீதை
தன்றுணைச் செவியி லேறத்
தரணியிற் றளர்ந்து வீழ்ந்தாள்.

என்று அவன் இயம்ப, 'அண்ணல் ஏவலை மறுக்க அஞ்சி
இன்று உனைக்கொண்டுபோந்தேன்' என்று இவை இளையோன் சொல்ல,
கன்றிய கனலினூடு காய்ந்த நாராசம் சீதை
தன் துணைச் செவியில் ஏறத் தரணியில் தளர்ந்து வீழ்ந்தாள்.

பொ:- என்று இராமன் சொல்ல, 'பெருமைமிக்க அவ் இராமனது ஏவலை மறுத்தற்கு அஞ்சி, இன்று உன்னைக் கொண்டு வந்தேன்' என்று இச்சொற்களை இலக்குவன் சொல்ல அச்சொல் கனன்று எரிகின்ற நெருப்பில் காய்ந்தஇரும்புக்கம்பி சீதையின் இருசெவிகளிலும் ஏறியது போன்றதாக, அவள் தரையில் தளர்ந்து வீழ்ந்தாள்.

கு: அண்ணல்-பெருமையுடையவன்; இராமன். ஏவல்-கட்டளை. சொல்ல 'அச்சொல்' என வருவித்து 'ஏற' என்பதற்கு ஏறியது போன்றதாக எனப்பொருள் கொள்க. இனி அச்சொல்லாகிய நாராசம் என வருவித்து உருவகம் ஆக்கினும் அமையும். இதனை மாட்டேறில்லா உருவகம் என்பர். துணைச்செவி என்றது இரு செவிகளை; கன்றிய கனல் என்றது பழுத்த நெருப்பினை. பழுத்த நெருப்பில் வைத்துக் காய்ச்சிய இரும்புக் கம்பியைச் செவியில் நுழைத்தால் உளதாகும் துன்பம்; இலக்குவன் சொல்லால் சீதைக்கு உண்டாயது என்பது கருத்து. (59)

## சீதையின் துயர்நிலை

753 விழுந்தனள் புரளு மந்த வெந்
துயர் பொறுக்க மாட்டா
தெழுந்தன டிரிய வீழு
மிருகையால் வயிற்றை யெற்றும்
அழுந்திடுந் துயர வெள்ளத்
தனையவ ளாவி காணார்
கழிந்தனள் சீதை யென்று
கலங்கினார் கடவு ளோர்கள்

**விழுந்தனள் புரளும்; அந்த வெந்துயர் பொறுக்க மாட்டாது**
**எழுந்தனள் திரிய வீழும்; இருகையால் வயிற்றை எற்றும்;**
**அழுந்திடும், துயர வெள்ளத்து அனையவள் ஆவி காணார்**
**கழிந்தனள் சீதை என்று கலங்கினர் கடவுளோர்கள்.**

பொ:- தரணியில் விழுந்தவளாகிய சீதை அத்தரையிலே புரளுவாள்; அந்தக்கொடிய துயரைப் பொறுக்க மாட்டாமல் தரையிலிருந்து எழுந்து மீண்டும் வீழ்வாள்; தன் இருகைகளாலும் வயிற்றை மோதுவாள்; பிறகு துயரமாகிய வெள்ளத்திலே அழுந்திக் கிடப்பாள்; அவ்வாறு அசைவற்றுக் கிடக்கின்ற சீதையின் உடம்பில் உயிர்ப்புக்குரிய அடையாளம் காணாதவராய்ச் சீதை இறந்துவிட்டாள் என்று தேவர்களும் கண்கலங்கினார்கள்.

கு:- விழுந்தனள் என்பது வினையாலணையும் பெயர். புரளும், வீழும், எற்றும், அழிந்திடும் என்பன செய்யும் என் வாய்பாட்டு முற்றுக்கள்; பெண்பாலை யுணர்த்தி நின்றன. எழுந்தனள்-முற்றெச்சம். எழுந்து என்பதே பொருள். கைகளால் வயிற்றில் அடித்துக் கொள்ளுதல் துன்பக்காலத்து மகளிர் இயல்பு. புரண்டும், எழுந்தும், விழுந்தும், வயிற்றிடையெற்றியும் துன்பத்தைப் புலப்படுத்திக் கொண்டிருந்தவள் பெருந்துன்பத்தால் அசைவின்றி மூச்சற்றுக் கிடந்தனள் என்பார், 'துயர வெள்ளத்து அழுந்திடும்' என்றார். அவ்வாறு மூச்சற்றுக் கிடக்கின்ற சீதையின் நிலையைக் கண்ட இமையா நாட்டமுடைய தேவர்களும் உயிர்ப்பைக் காணமல் சீதை இறந்ததாகவே எண்ணிக் கண் கலங்கினர் என்றவாறு. கடவுளோர்கள் என்றது தேவர்களை. இராவணாதியரால் தமக்கு வந்த பெருந்துயரைப் போக்கிய இராமன் மனைவி இங்கு இறந்து படுவது தகுமோ என்று நன்றி யறிந்த நெஞ்சத்தால் தேவர்கள் கண்கலங்கினர் என்க. (60)

## சீதை வாய்திறந்து புலம்புதல்

754 அன்னவ ளவத்தை கண்டாங்
கிளையவ னலறி வீழ்ந்தான்
பின்னையும் படுவ சாலப
பெருகவுண் டாத லாலே
யின்னுயி ரரிதிற் பெற்றாங்
கிருகணும் விழித்து மன்னர்
மன்னவ னிராமன் றேவி
வாய்விட்டுப் புலம்ப லுற்றாள்.

**அன்னவள் அவத்தை கண்டு ஆங்கு இளையவன் அலறி வீழ்ந்தான்;**
**பின்னையும் படுவ சாலப் பெருக உண்டு ஆதலாலே,**
**இன்னுயிர் அரிதில் பெற்று ஆங்கு இருகணும் விழித்து மன்னர்**
**மன்னவன் இராமன்றேவி வாய்விட்டுப் புலம்பல் உற்றாள்.**

பொ:- அச்சீதையின் துயர்நிலை கண்டு அங்கு நின்ற இலக்குவன் அலறி வீழ்ந்தான். மன்னர் மன்னனாகிய இராமன்

தேவியாகிய சீதை, பின்னும் படக்கடவனவாகிய துன்பங்கள் மிகுதியாக இருக்கின்றன ஆதலால், இனிய உயிர்ப்பினை அரிதாகப் பெற்று அவ்விடத்து இருகண்களையும் விழித்துப் பார்த்து வாய் திறந்து அரற்றத் தொடங்கினாள்.

கு: அவத்தை-துன்பநிலை. சீதையின் துயர்நிலையைக் கண்ட இலக்குவன் பொறுக்கவியலாத துன்பத்தால் தானும் அலறி வீழ்ந்தான் என்றவாறு. மூச்சற்றுக் கிடந்த சீதை மீண்டும் உயிர்ப்புப் பெற்றதற்குக் காரணம் கூறுவராய்ப் 'பின்னையும் பருவ காலப் பெருகவுண்டாதலாலே யின்னுயிர் அரிதிற் பெற்று' என்றார். இந்த நிலையில் சீதை யிறந்திருந்தால் பின்படப் போகும் துன்பங்கள் எல்லாம் இல்லையன்றோ? என்ற இரக்க வுணர்ச்சியால் இங்ஙனம் கூறினார். பின்படும் துன்பங்களாவன: இராமனைப் பிரிந்து வான்மீகியின் ஆசிரமத்தில் தனித்து இருந்து வருந்துதலும், மக்களைப்பெற்று அவர்களை வளர்த்தலில் படும் அல்லலும் வளர்ந்தபின் அசுவமேதயாகத்தில் மீண்டும் தன்னைச் சோதிக்க நினைத்ததால் உறும் அல்லலும் போல்வன. உயிர் அரிதிற் பெறுதலாவது, மூச்சு வரப்பெறுதல். மூச்சற்றோர் முன்பு மூச்சுத் தடுமாறி சுவாசித்தலும் பின்பு கண்திறந்து பார்த்தலும் பின்பு தன் துன்பநிலை நினைவுக்குவரப் புலம்புதலும் இயல்பு நிகழ்ச்சிகளாதல் காணலாம். (61)

755 அன்னேயோ வையாவோ வாருயிர்த்
தோழியர்காள்
தன்னேரி லாதவென்றித் தாசரதி யார்செய்த
இன்னாத விச்செயலைக் கேட்டபோ
தென்படுவீர்
என்னேயிவ் வுலகத்தில் யானோவிங்
கிவைபடுவேன்.

**அன்னேயோ! ஐயாவோ! ஆருயிர்த் தோழியர்காள்!**
**தன்னேர் இலாத வென்றித் தாசரதியார் செய்த**
**இன்னாத இச்செயலைக் கேட்டபோது என்படுவீர்?**
**என்னே! இவ்வுலகத்தில் யானோ இங்கு இவை படுவேன்?**

பொ:- அம்மாவோ! அப்பாவோ! அரிய உயிர்போன்ற என் தோழிமார்களே! தனக்கு நிகரில்லாத வெற்றியையுடைய தசரத குமாரராகிய இராமபிரானுர் செய்த கொடிய இந்தச் செயலை நீங்கள் கேள்விப்பட்டபோது எத்தகைய துன்பம் அடைவீர்கள்? என்ன ஆச்சரியம்! இராமபிரானின் ஆட்சிக்குட்பட்ட இவ்வுலகத்தில் அவர் மனைவியாகிய யானே இவ்வனத்தில் இத்தகைய துன்பங்களைப் படுதற்குரியேன்?

கு:- அன்னை என்ற சொல் விளியில் அன்னே என்று திரிந்து பின்பு ஓகாரம் பெற்று 'அன்னேயோ' எனவாயிற்று. ஐயன் என்பது விளியில் ஐயா எனத்திரிந்து பின்பு ஓகாரம் பெற்று 'ஐயாவோ' எனவாயிற்று. இராவணாதியரைக் கொன்ற வென்றி தனக்கு இணையில்லாதது ஆகலின் 'தன்னேரிலாத வென்றித் தாசரதியார்' என்றாள். தசரதன் மகன் என்ற பொருளையுடைய தாசரதியார் என்றது. தத்திதாந்தநாமம் என்பர் வடநூலோர். இராமபிரான் வெற்றிக்கு இச்செயல் இழுக்குத்தரும் என்ற குறிப்பால் 'தன்னேரிலாத வென்றித் தாசரதியார்' என்றார். முன்பு தசரதன் இராமனைக் காட்டிற்கோட்டிய செயலோடு ஒத்த செயலே இது என்ற குறிப்பால் 'தாசரதியார்' என்றாள். 'மகனறிவு தந்தையறிவு' என்பது பொருத்தமே என்றவாறு. துன்பக்காலத்து முந்து நினைக்கத்தகுவார் அம்மையும் அப்பனுமே ஆதலின் அவர்களை முற்கூறினாள். இச்செயலைக்கேட்டபோது பெருந்துயர்படுவீர் என்ற எண்ணத்தால் என்பகுவீர் என்றாள். இவ்வுலகத்தில் யானே, என்ற சொற்கள் பொருட்செறிவுடையவை. இங்கு என்றது தவ வனத்தை. இவைபடுதற்குச் சிறிதும் இயைபிலாதேன் என்பாள் 'யானே இங்கிவை படுவேன்' என்றாள். (62)

756 பய்யார்வெம் பணத்துலகிற் பழியாலே
பழிமறைத்து
நெய்யாலே நெருப்பவிக்கை நீணிலத்திற்
கண்டறியேன்
கய்யார்வெஞ் சிலைதரித்த காகுத்த னிடைக்
கண்டேன்
உய்யாரென் மாமிமா ரிவ்வுரை தஞ்
செவியுறவே.

பய்யார் வெம்பணத்து உலகில் பழியாலே பழிமறைத்து,
நெய்யாலே நெருப்பு அவிக்கை நீள்நிலத்தில் கண்டு அறியேன்;
கய்யார் வெஞ்சிலைதரித்த காகுத்தன் இடைக்கண்டேன்;
உய்யார் என் மாமிமார் இவ்வுரைதம் செவியுறவே.

பொ:- ஆதிசேடனுடைய நச்சுப்பை பொருந்திய படத்தின் மேல் உள்ள உலகத்து ஒருபழிச் செயலால் மற்றொரு பழியை மறைத்து, நெய்யாலே நெருப்பை அவிப்பது போன்ற செயலை இந்தப் பெரிய உலகத்தில் கண்டதில்லை. ஆனால் கையில் நிறைந்த கொடியவில்லைத் தாங்கியுள்ள இராமபிரானிடத்தில் கண்டேன். இந்தச்சொல் தம் செவிகளில் பட்டால் என் மாமியார் உயிரோடு வாழ்ந்திருக்கமாட்டார்கள்.

கு:- பை, கை என்பன எதுகை நோக்கிப் பய், கய் எனப் போலியாக வந்தன. பணம்-படம். ஆதிசேடன் தன் ஆயிரந் தலைகளால் இப்பூமியைத் தாங்குகின்றான் என்ற புராண மரபு பற்றிப் "பய்யார் வெம்பணத்து உலகில்" என்றார். பாம்பின் படத்தில் நஞ்சுப்பை மறைந்திருந்தாலும் அது எல்லோராலும் அறியப்பட்டிருத்தல் போல ஒருபழியால் மறைக்கும் மற்றொரு பழியும் உலகவரால் அறியப்படும் என்பது புலப்பட வேண்டிப் 'பய்யார் வெம்பணத்துலகில்' என்றாள். பழியாலே பழிமறைத்தல் நெய்யாலே நெருப்பு அவிப்பது போன்ற பயனில் செயல் என்பாள், நெய்யாலே நெருப்பவிக்கை நீணிலத்திற் கண்டறியேன் என்றார். பழியாலே பழிமறைத்தலும் நெய்யாலே நெருப்பு அவித்தலும் ஒருதன்மைய என்றவாறு.

நெருப்பை நெய்யால் அவித்தால் அது அவிதற்கு மாறாக ஓங்கி எரிதல் போல பழியாலே மறைத்த பழியும் மறையாது மிகப் பரவும் என்றவாறு. "நெய்யால் எரிநுதுப்போம் என்றற்றால் கௌவையால் காமம் நுதுப்பே மெனல்" (குறள் 1148) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். உலகத்தோர் சிறையிருந்த சீதையோடு வாழ்தலினும் இராமன் உயிர் விடலாம் என்றாராயின் இராமன் தான் சோதித்த கற்பின் திண்மையை எடுத்துச் சொல்லி விளக்குவதை விடுத்து ஒரு பழியும் அறியாத சீதையை வனத்தில் விடுதல் பெரும் பழியைத் தரும் என்பதை அறியாமல்

இந்தப் பயனில்லா முயற்சியைச் செய்துள்ளான் என்றவாறு. கையில் வில் தரித்தமையால் இப்பழியை மறைக்க முடியாது என்பாள், "கய்யார் வெஞ்சிலை தரித்த காகுத்தன்" என்று வியந்து கூறியவாறு. (63)

757 கன்னெஞ்ச ராயென்னைக் காட்டில்விடச்
சொன்னவரோ
வன்னெஞ்ச ராயதனுக் கிசைந்துவிட
வந்தவரோ
நன்னெஞ்ச முடைநகரில் நங்கைமார்
நகைசெய்ய
இன்னஞ்சா காதிருந்த யானேநெஞ்
சார்வலியார்

கல்நெஞ்சராய் என்னைக்காட்டில் விடச் சொன்னவரோ?
வல்நெஞ்சராய் அதனுக்கு இசைந்து விட வந்தவரோ?
நல்நெஞ்சம் உடை நகரில் நங்கைமார் நகைசெய்ய
இன்னம் சாகாது இருந்த யானே நெஞ்சு ஆர்வலியார்?

பொ: கல்லைப் போன்ற வலிய நெஞ்சத்தை யுடையவராய்த் தன் மனைவியாகிய என்னை (யாரும் இல்லாத) காட்டில் விடச் சொன்ன இராமபிரானே, (அல்லது) வலிய நெஞ்சையுடையவராய் அவர் சொல்லுக்கு இசைந்து என்னைக் காட்டில் விடுதற்கு வந்தவராகிய இலக்குவனே, அல்லது நல்ல நெஞ்சமுடைய அயோத்தி நகரத்தில் உள்ள பெண்டிர் சிரிக்குமாறு இதனை யறிந்துவைத்தும் இன்னும் சாகாமலிருந்தயானே, நெஞ்சுவலிமையுடையார் யார்?

கு:- விடச்சொன்னவரோ, விடவந்தவரோ, யானே நெஞ்சு வலியார் யார்? என இயையும். விடச் சொன்ன இராமன் வலிமைமிக்க நெஞ்சினன் என முன்னர்க் கருதினவள், பின்பு அவன் சொன்னாலும் அவன் சொல்லுக்கு இசைந்து விடவந்த இலக்குவனும் வன்னெஞ்சனே என்ற முடிவிற்கு வந்தாள். பின்பு தன்னிலையை நினைத்துப் பார்த்தபோது அவ்விருவரும் அவ்வாறு

துணிந்ததை யறிந்தபின்னும் உயிரைவிடாது இருக்கின்ற தானும் நெஞ்சுரத்தில் அவர்களிற் குறைந்த வளல்லள் என்னும் உண்மை புலனுயிற்று. எனவே நெஞ்சுவலியார் யாரோ என ஐய வாய் பாட்டாற் கூறுகிருள். அங்ஙனம் கூறினுலும் மூவரில் ஒவ் வொருவரும் நெஞ்சு வன்மையுடையவரே என்பது புலப்படுத்திய வாருயிற்று. ஏதிலார் குற்றம்போல் தன் குற்றமும் காணும் சீதையின் தகுதி இங்குப் புலப்படுதல் காணலாம். ஓகாரங்கள் ஐயவினுப் பொருளன. நெஞ்சுவலி என்பது நெஞ்சத்தின் வன்மையை யுணர்த்தியது. (64)

758 பண்பிறந்த சொன்மடவார் பழித்தென்னை
நகைப்பார்களோ
எண்பிறந்த வன்னெஞ்ச னிராகவனென்
றியம்புவரோ
மண்பிறந்த பின்பிறந்த மறிகடல்சூழ்
வையகத்துப்
பெண்பிறந்தார் யான்பட்ட பெருந்துயர
மார்பட்டார்.

பண்பிறந்த சொல் மடவார் பழித்து என்னை நகைப்பர்களோ,
எண்பு இறந்த வல்நெஞ்சன் இராகவன் என்று இயம்புவரோ?
மண்பிறந்த பின் பிறந்த மறிகடல் சூழ் வையகத்துப்
பெண்பிறந்தார் யான்பட்ட பெருந்துயரம் ஆர்பட்டார்?

பொ:- இசைநூலில் சொல்லப்படுகின்ற பண்ச பிறத்தற்குக் காரணமான சொல்லினையுடைய அயோத்தி நகரத்துப் பெண்டிர் என்னிலையை நினைந்து இகழ்ந்து சிரிப்பார்களோ? அல்லது, எண்ணத்தைக் கடந்த வன்மை மிக்க நெஞ்சினையுடையன் இராமன் என்று அவரைப் பழித்துக் கூறுவார்களோ? அலைகள் மடங்கி வீசுகின்ற கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில் மண் எனும் பெண் பிறந்த பின்பு பிறந்த பெண்ணுகப் பிறந்தவர் களில் யான்பட்ட பெருந்துயரத்தை யார் பட்டிருக்கின்ருர்கள்?

கு:- பண் என்பது, குறிஞ்சிப்பண் போன்ற இசையை. பிறந்த சொல் - பிறத்தற்குக்காரணமான சொல் எனக் காரணப்

பொருளில் வந்த பெயரெச்சமாக்குக. எனவே இம்மடவார்தம் சொல்லிலிருந்தே பண்பிறந்தது என அவர் சொல்லின் இனிமைச் சிறப்புப் புலப்படுத்தியவாறு. இனி, அப்பெண்டிர்தம் சொல்லில் பண்ணின் இனிமை அமைந்திருக்கும் என்ற கருத்தால் 'பண்பிறந்த சொல்' என்றார் எனலும் ஆம். என்னைப் பழித்து என இயையும். கணவனால் விலக்கப்பட்டவள் என்று என்னைப் பழித்துச் சிரிப் பார்களோ என்றவாறு. வன்னெஞ்சம் இவ்வளவு கடினமான தாக வும் இருக்கும் என இதுகாறும் யாரும் எண்ணியிருக்கவே முடி யாத அளவு வன்னெஞ்சன் இராகவன் என்பார், 'எண்பு இறந்த வன்னெஞ்சம்' என்றார். எண்பு-எண்ணுதல்; தொழிற்பெயர். இறத்தல்-கடத்தல். செந்தழலில் மூழ்குவித்து அறிந்துகொண்ட பெருங்கற்பினளாகிய சீதையைத் தனியே வனத்துறையச் செய்த வன்னெஞ்சன் யாரும் எண்ணிப் பார்க்க வியலாத வன்னெஞ்சம் என்றவாறு. பழித்தென்னை நகைப்பார்களோ என்று தன்னைப் பற்றி நினைத்தவள் தன் கணவனைப் பற்றிய பெருமதிப்பால் 'வன்னெஞ்சனென்றியம்புவரோ' என்று மட்டும் கூறினாள். மண் பிறந்த பின் பிறந்த கடல் எனக் கடலுக்கு அடையாக்கலும் ஆம். ஆதாரமாகிய மண் முன்னும் ஆதேயமாகிய கடல் பின்னும் தோன்றுதல் முறைதானே. மண்ணையும் பெண்ணுகக் கூறும் மரபு பற்றி 'மண்பிறந்த பின் பிறந்த பெண் பிறந்தார்' என்றார். உலகம் தோன்றிய நாள் தொட்டுப் பெண்ணாகப் பிறந்தவர்கள் என்னைப் போலப் பெருந்துயர் உற்றவர்கள் இல்லை என்றவாறு. (65)

759 கனிமனத்துக் காகுத்தன் கடலுலகிற்
பழிக்கஞ்சித்
தனியொருத்தி யான்கதறத் தனிக்காட்டில்
விடுவித்தான்
பனியகற்று மாதித்தன் பயந்தெடுத்துப்
பழிப்பற்ற
மனுகுலத்திற் பிறந்தார்கட் கிவையோதான்
மனுநெறியே.

கனி மனத்துக் காகுத்தன் கடல் உலகின் பழிக்கு அஞ்சித்
தனி ஒருத்தி யான் கதறத், தனிக்காட்டில் விடுவித்தான்
பனி அகற்றும் ஆதித்தன் பயந்து எடுத்துப் பழிப்பு அற்ற
மனுகுலத்தில் பிறந்தார்கட்கு இவையோதான் மனுநெறியே.

பொ:- கனிந்த மனத்தினை யுடைய இராமன், கடல்சூழ்ந்த உலகத்தோர் சொல்லும் பழிக்காக அஞ்சித் தனி ஒருத்தியாக யான் கதறுமாறு (யாருமில்லாத) தனிக்காட்டில் விடச் செய்தான்; பனியைப் போக்குகின்ற சூரியன் பெற்று வளர்த்தமையால் பழிப்பு இல்லாத மனுகுலத்தில் பிறந்தவர்கட்கு மனுநெறி இவைதாமோ?

சூ:- இராமன் இதுகாறும் இருந்த நிலையை நினைந்து 'கனி மனத்துக் காகுத்தன்' என்றாள். கனிந்த மனம்-கனிவுள்ள மனம் விரிக்கலாம். என்னிடத்தில் பழித்தற்குரிய பிழையில்லாத வழியும் உலகவர் சொல்லும் பழிக்காக அஞ்சி, யான் தனித்துக் கதறியழத் துணையில்லாத காட்டில்விடச் செய்தது சூரியன் முதலாக வருகின்ற மனுகுலத்திற்கு இழுக்காகும் என்பாள், 'ஆதித்தன் பயந்தெடுத்துப் பழிப்பற்ற மனுகுலத்திற் பிறந்தார்க்கு இவை யோ தான் மனுநெறியே' என இடித்துக் கூறினாள். 'ஆதித்தன் குல முதல்வன் மனுவினை யார் அறியாதார்' என்றார், பாலகாண்டத்து. ஆதித்தன் தன் செங்கதிர்களால் பனியை யகற்று வானே அன்றி அதற்கு அஞ்சமாட்டான்; அவன் குலத்திற் பிறந்த இராமன் உலகவரின் ஐயத்தைத் தன் செஞ்சொல்லினால் போக்குதற்குரியவன் அங்ஙனம் செய்யாது என்னைத் தனிக் காட்டில் விடுவது சூரியன் மரபுக்கேற்ற செயல் அன்று என்பதைக் குறிப்பால் உணர்த்தியவாறு. (6௯)

760 கய்கேசி மனந்திரியக் கற்பித்த கனியைப்போல்
மய்யார்கண் மடவாரோ மைந்தரோ
மண்ணூறுலகில்
அய்யோவென் காதலனை யாரோவிக்
காரியத்தைச்
செய்வாயென் றிப்பொழுது சிந்தையுறக்
கற்பித்தார்

கய்கேசி மனம் திரியக் கற்பித்த கூனியைப் போல்
மய்யார்கண் மடவாரோ, மைந்தரோ, மண் உலகில்
அய்யோ என் காதலனை யாரோ இக் காரியத்தைச்
செய்வாய் என்று இப்பொழுது சிந்தை உறக் கற்பித்தார்?

பொ:- கைகேசியின் அன்பு மனம் வன்பு மனமாய் வேறுபடு மாறு கற்பித்த கூனியைப் போல, மைதீட்டிய கண்ணை யுடைய பெண்டிரோ, அல்லது மைந்தர்களோ, யாரோ, இந்த மண்ணுலகில் ஐயோ! என் கணவனை 'இக்காரியத்தைச் செய்வாயாக' என்று இப்பொழுது சிந்தையில் பொருந்துமாறு கற்பித்துள்ளார்கள்.

கு: கய், மய் என்பன எதுகை நோக்கி வந்த போலிகள்; கை, மை என்பனவே உண்மையுருவம். கற்பித்தார் என்பது முற்று. இனி முற்றுக்காமல், வினையாலணையும் பெயராக்கி அப்பெயர்க்குப் பயனிலையாக மண்ணுலகில் என் காதலனை இக்காரியத்தைச் செய்வாய் என்று இப்பொழுது சிந்தையுறக் கற்பித்தார் கூனியைப் போல் மடவாரோ? மைந்தரோ? ஆரோ? அறியேன் என வருவித்து முடித்தலும் ஆம். என்னிடத்துப் பெருங்காதலுடைய இராமன் இப்பொழுது என்னைத் தனியேவனத்திற்கு அனுப்பியது பிறர் கற்பனையினுல்தான் என்றவாறு. அய்யோ என்பது இரக்கக் குறிப்பு உணரநின்றது. இப்பொழுது என்றது, முன்பெல்லாம் அத்தகைய கருத்தினன் அல்லன் என்பது புலப்படுத்தியது. (67)

760 என்றினைய பலபன்னி யிருகண்ணீர்
நதிபெருகக்
குன்றுகளு மரங்களுமக் கொடுமிருகங்
களுக்குலைந்து
நின்றுருக வனதெய்வ நெஞ்சழிந்து
கண்பனிப்பக்
கன்றியநெஞ் சுடைச்சீதை கதறுகின்ற
வக்காலை.

என்று இனைய பலபன்னி, இருகண்ணீர் நதிபெருகக்,
குன்றுகளும் மரங்களும் அக்கொடு மிருகங்களும் குலைந்து
நின்று உருக, வனதெய்வம் நெஞ்சு அழிந்து கண்பனிப்பக்,
கன்றிய நெஞ்சுடைச் சீதை கதறுகின்ற அக்காலை.

பொ: என்று இத்தன்மையான பல சொற்களைப் பலமுறை சொல்லிக் கொண்டு இரு கண்களிலும் கண்ணீர் ஆறுபோலப் பெருகவும், அங்குள்ள உயிரில்லாத குன்றுகளும், -ஓரறிவுடைய மரங்களும்,அந்தக் கொடிய விலங்குகளும் உளம் நடுங்கி உருகவும், வனதேவதைகள் நெஞ்சு உடைந்து கண்ணீர் சோரவும், வருந்திய நெஞ்சத்தையுடைய சீதை கதறி அழுகின்ற அப்போது.

கு:- கண்ணீராகிய நதி என்பது உருவகம். உயிரில்லாத குன்றுகளும் ஓரறிவுடைய மரங்களும் ஐயறிவு இருந்தும் கொடிய தன்மையுடைய விலங்குகளும் சீதையின் துயரைக் கண்டு உளம் நடுங்கி நின்று உருகின என முறைப்படுத்திக் கூறியவாறு. வனதெய்வம் என்றது வனதேவதைகளை. மக்களினும் சிறந்த தகுதி பற்றித் தனியே பிற்கூறியவாறு. வனதெய்வ மன்றிப் பிறர் யாரும் அங்கு இல்லை என்பதும் புலப்படுத்தியவாறு. பெருக, உருக, பனிப்ப, கதறுகின்ற காலை என இயையும். குளகம்; வருஞ் செய்யுளில் முடியும். (68)

## இலக்குவன் சீதைக்கு ஆறுதல் கூறுதல்

762 இளையவனு மொருவண்ண மிடர்க்கடலைக்
கடந்தேறி
உளைவுறுசிந் தையினளுக் குத்தமிதே
ளெனவுரைக்கும்
விளைவுறுவல் வினைப்பயனை விண்ணவர்க்கும்
வெலற்கரிதால்
வளைபயில்சூழ் கடலுலகின் மானிடரோ
விலக்குவார்.

இளையவனும் ஒருவண்ணம் இடர்க்கடலைக் கடந்து ஏறி,
உளைவுறு சிந்தையினளுக்கு 'உத்தமிகேள்', என உரைக்கும்;
"விளைவுறு வல்வினைப்பயனை விண்ணவர்க்கும் வெலற்கு அரிதால்,
வளைபயில்சூழ் கடல் உலகின் மானிடரோ விலக்குவார்?"

பொ:- இலக்குவனும் ஒருவாறு துன்பமாகிய கடலைக் கடந்து எழுந்து 'உத்தமி! கேள்' என விளித்து வருந்துகின்ற சிந்தையையுடையசீதைக்குச் சொல்வான். விளைந்து பயன் அளிக்கும் வலிய வினையின் பயனை வெல்லுதல் தேவர்கட்கும் அரிதாகும்; ஆயின் சங்குகள் பொருந்திய கடல் சூழ்ந்த இம்மண்ணுலகத்தில் வாழ்கின்ற மனிதர்களோ விலக்க வல்லவர்கள்?

கு:- இடர்க்கடல் என்றது, துன்பத்தின் மிகுதி புலப்படுத்த வந்த உருவகம். கடந்தேறி என்றது, பெருந்துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு எழுந்து என்னும் பொருளது. உளைதல்-பெரிதும் வருந்துதல். 'உத்தமி கேள்' எனச் சிந்தையினளுக்கு உரைக்கும் என இயையும். 'உற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா' என்பதைஇங்கு விளக்கியவாறு. வினைப்பயனை வெலற்கு விண்ணவர்க்கும் அரிது என இயையும். விண்ணவர்க்கும் என்புழி உம்மை உயர்வு சிறப்பினது. கடல்சூழுலகின் என இயையும். விண்ணுலகில் வாழ்கின்ற விண்ணவர்க்கரிதாகிய செயலை மண்ணுலகில் வாழ்கின்ற மனிதரோ செய்யவல்லார்? என வினவி அமைதி கூறியவாறு. மானிடராகிய நாம் வினைப்பயனை வெல்ல வல்லேம் அல்லேம் என்றவாறு. (69)

நளன்

763 உலகுக்கு நாயகனு யோராழி தனை நடத்தி
மலையொக்கு மதகளிற்றின் மதிக்குடைக்கீழ்
வாழ்ந்த நளன்
நிலைகெட்டு நேரிழையை நெடுங்கானத்
திடைவிட்டு
வலையொத்த வினைப்பயத்தால் மடையனாய்
வருந்தினனே.

உலகுக்கு நாயகனாய் ஓராழி தனை நடத்தி;
மலையொக்கும் மதகளிற்றின் மதிக்குடைக்கீழ் வாழ்ந்த நளன்,
நிலைகெட்டு நேரிழையை நெடுங்கானத்து இடைவிட்டு
வலையொத்த வினைப்பயத்தால் மடையனாய் வருந்தினனே

பொ:- உலக முழுமைக்கும் தலைவனாய் ஒப்பற்ற ஆணைச் சக்கரத்தை நடாத்தி மலைபோன்ற மதயானையின்மேல் சந்திரனைப் போன்ற ஒற்றை வெண்கொற்றக் குடைக்கீழ் வாழ்ந்து கொண்டிருந்த நளன், பின்தன் நிலைமை கெட்டுப் பொருத்தமான அணிகலன் அணிந்த தன் மனைவி தமயந்தியை நெடிய காட்டில் விடுத்துவிட்டு வலையைப் போன்ற வினையின் பயனால் மற்றொரு மன்னனுக்குச் சமையற்காரனாக இருந்து வருந்தினான் அன்றோ?

கு:- ஓராழி என்றது ஆணைச்சக்கரத்தை. மலையை ஒக்கும் களிறு; மதக்களிறு எனத் தனித்தனி இயையும். மதிக்குடை உவமைத்தொகை. முழுமதி போன்ற வெண்குடை என்றவாறு. நிலைகெட்டு என்றது சூதாட்டத்தினால் முன்னிலைமை கெட்டு என்க. நேரிழை என்றது பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்த் தமயந்தியை யுணர்த்தியது. நேரிழை-நேரிதான அணிகலன். சிலந்தியொடு பின்னிக் கிடக்கின்ற வலைபோன்று உடனுற்றகின்ற வினையின் பயனால் மடையனாய் மாறி வருந்தினான் என்றவாறு. மடையன்-அட்டில் தொழில் செய்கின்ற தவசிப்பிள்ளை. இருதுபன்னனுக்கு நளன் சமையற்காரனாகவும் தேர்ப்பாகனாகவும் இருந்தான் என்பது நளன் கதையால் தெரியலாம். சிலந்தி தன் வாய் நூலால் ஆகிய வலையின் அகப்பட்டு நிற்பதுபோல; மக்களுயிரும் தான் செய் வினைகளில் அகப்பட்டு அவ்வினைப்பயனை நுகரும் என்றவாறு. (70)

## அரிச்சந்திரன்

764 தன்னேரி லாதவரிச் சந்திரன்றன் மைந்தனையும்
மின்னேரி லாதவிடை மெல்லியலை யும்விற்று
முன்னேசெய் விதியாலே புடைப்பறையற்
காளாகி
என்னேதா னிடுகாடு காத்தங் கினிதிருந்தான்.

**தன்நேர் இலாத அரிச்சந்திரன் தன் மைந்தனையும்
மின்நேர் இலாத இடை மெல்லியலையும் விற்று
முன்னே செய் விதியாலே முடைப்பறையற்கு ஆளாகி
என்னேதான் இடுகாடு காத்து அங்கு இனிது இருந்தான்.**

பொ:- தனக்கு நிகரில்லாத பெருமையுடைய அரிச்சந்திரன் தன் மகனையும், மின்னலும் ஒப்பாக முடியாத இடையினையுடைய மெல்லியலாகிய தன் மனைவி சந்திரமதியினையும், விற்றுவிட்டு, முன்னே செய்த வினைப்பயனாகிய விதியினால் முடைநாற்றமுடைய பறையனுக்கு அடிமையாகி இடுகாட்டினைக் காத்துக் கொண்டு அங்கு இனிதாக இருந்தான்; என்னே வியப்பு!

கு:- முன்னே ஒருவன் செய்தவினையே பின்பு விதியாக வந்து அவனுக்கு ஊட்டுகின்ற இயைபு நோக்கிக் காரணத்தைக் காரியமாக்கி உபசரித்தவாறு. விதி ஒருவனால் செய்யப்படுவதன்று; வினையே செய்யப்படுவது. பறையன் புலால் உண்பவனாதலின் முடைநாற்றம் அவனுக்குக் கூறப்பட்டது. ஆள் என்றது அடிமையையுணர்த்தியது. புலையனுக்கு அடிமையானது பற்றி வெறுக்காமல் மகிழ்ந்திருந்தான் என்பார், இனிதிருந்தான் என்றார். 'என்னேதான்' என்றது, இறுதியில் இயைத்துப் பொருள் கொள்க. பிணங்களைப் புதைக்கும் இடம் இடுகாடு எனவும் சுடும் இடம் சுடுகாடு எனவும் வழங்கும். (71)

## உணர்ந்தோர் செயல்

76. இன்பத்தி லிறுமாந்து தோணேக்கி யின்பமறத்
துன்பத்தி லழுந்துவார் தொல்லுலகி லறியாதார்.
இன்பத்துன் பங்களவை யெய்தியபோ திவையெல்லாம்
முன்பற்றி விடாதவினைப் பயனென்பார் முழுதுணர்ந்தோர்

இன்பத்தில் இறுமாந்து தோள்நோக்கி, இன்பம் அறத்,
துன்பத்தில் அழுந்துவார் தொல்உலகில் அறியாதார்,
இன்பத்துன் பங்களவை எய்தியபோது இவை எல்லாம்
முன்பற்றிவிடாத வினைப்பயன் என்பார் முழுது உணர்ந்தோர்.

பொ:- பழமையான உலகத்தில் அறியாதவர்கள், இன்பம் வந்தபோது அவ்வின்பத்தில் இறுமாந்து தம் தோளை நோக்கி மகிழ்ந்திருந்துவிட்டு, அந்த இன்பம் அற்றவுடன் துன்பத்தில் அழுந்தி வருந்துவார்கள்; முற்றுமுணர்ந்த பெரியோர்கள், இன்பத் துன்பங்கள் தமக்கு வந்தபோது (மகிழ்தலும் அழுதலுமின்றி) இவை எல்லாம் முன்பு உயிரைப் பற்றிநின்று விடாத வினைகளின் பயனே என்று இரண்டற்கும் ஒத்த நிலையில் இருப்பார்கள்.

கு:- இறுமாப்பு-செருக்கு. இன்பத்தில் இறுமாந்து இருக்கும் பொழுது தம் தோள்களைமாறி மாறிப் பார்த்துத் தம் தோள் வலியால் வந்த இன்பமாக நினைந்து மகிழ்வர் என்றபடி. மணிவாசகர் கூறிய 'தோள் நோக்கம்' என்ற விளையாட்டும் இத் தகைய மகிழ்ச்சி நிலையில் எழுந்த விளையாட்டே என்பது இதனால் தெளிவாகின்றது. "இன்பத்துள் இன்பம் விழையாதான் துன் பத்துள் துன்ப முறுதலிலன்" (திருக்குறள்–629) என்ற கருத்தை இப்பாடல் வற்புறுத்துகின்றது. இன்பத்தில் தோணோக்கி இறுமாந்து மகிழ்ந்து, இன்பம் நீங்கிய வழித் துன்பத்தில் அழுது மாழ்குதல் எளியவர் செயலாதலையும் இன்பமும் துன்பமும் நாம் செய்து கொள்பவையல்ல; வினைவழி வருவன என்பதை உணர்ந்து இன்பத்தில் மகிழ்தலும் துன்பத்தில் அழுதலும் இல்லாமல் ஒரு தன்மையராக இருத்தல் பெரியவர்செயலா தலையும் புலப்படுத்தியவாறு. (72)

## தவஞ்செய்க எனல்

766 முன்செய்த நல்வினையான் முகில்வண்ணன்
றனைப்பெற்றுப்
பின்செய்த தீவினையா னலவனை நீ பிரிவுற்றாய்

என்செய்யா விருவினைக ளிவ்விடர்நீ
யுருவண்ணம்
நின்செய்யுஞ் செயலெல்லா நெடுந்தவமே
செய்யென்றான்.

**முன்செய்த நல்வினையால் முகில்வண்ணன் தனைப்பெற்றுப்**
**பின்செய்த தீவினையால் அவனை நீ பிரிவுற்றாய்;**
**என்செய்யா இருவினைகள்! இவ்விடர் நீ உருவண்ணம்**
**நின்செய்யும் செயல் எல்லாம் நெடுந்தவமே; 'செய்'; என்றான்.**

பொ:- "நீ முன்பிறப்பில் செய்த நல்வினையால் முகில் வண்ணனாகிய இராமனைக் கணவனாகப் பெற்றுப் பின்பு இப்பிறப்பில் செய்த தீவினையால் அக்கணவனைப் பிரிந்தாய்; இரு வினைகள் என்ன தாம் செய்யமாட்டா! இந்தப் பிரிவுத் துன்பத்தை நீ உருவண்ணம் நீ செய்தற்குரிய செயல் எல்லாம் நெடிய தவமேயாகும்; ஆதலின் அத்தவத்தையே செய்க" என்று இலக்குவன் கூறினான்.

கு:- இராமனைச் சீதை கொழுநனாகப் பெற்று வாழ்ந்தது முன்செய்த நல் வினையால் என்பதும், அவ்விராமனைப் பிரிந்தது பிறந்தபின் செய்த தீவினையால் என்பதும், அப்பிரிவுத் துன்பத்தைச் செய்யும் தீவினை தேயச் செய்தற்குரிய செயல் பெருந்தவமே என்பதும் கூறித் 'தவம் செய்க' எனச் சீதைக்குச் செவியறிவுறுத்தவாறு. இங்கு இலக்குவன் சீதைக்கு ஞானகுருவாக விளங்குகிறான் எனலாம். நீ செய்யும் செயல் என எழுவாயாக நிற்க வேண்டிய சொல், எதுகை நோக்கி வேற்றுமைக்கேற்ற செய்கை பெற்று நின் எனத் திரிந்து நின்றது. இனி, 'நின் செயலெல்லாம் செய்யும் நெடுந்தவமே' என மாற்றிக் கூறலுமாம். வினைகளின் ஆற்றலை வியந்து 'என்செய்யாஇருவினைகள்' என்றான். எல்லாம் செய்ய வல்லன இருவினைகள் என்றவாறு. இருவினை என்றது நல்வினை தீவினைகளை. "வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவ மீண்டு முயலப்படும்" (திருக்குறள் - 365) என்ற அருளுரையின்படி தவத்தால் சீதைக்கு வேண்டிய இராமனைப் பெறலாம் என விளக்கியவாறு. உயிர்கள் உறும் இன்பத்திற்குக் காரணம் நல்வினை; துன்பத்திற்குக் காரணம் தீவினை என்பது

ஒப்ப முடிந்த உண்மையாகலின் இராமனைப்பிரிந்து துன்புறும் சீதை பின்செய்த தீவினையுடையவளே என்பது அருத்தாபத்தி யளவையால் புலப்படுத்தியவாறு. அத்தீவினை யாதெனச் சீதையே உய்த்துணர்ந்து கொள்ள வேண்டும். (73)

## சீதை செய்ய வேண்டிய தவம் இது எனல்

76 மாதவர்க ளடிபேணி மற்றவர்கள் விதிமுறையே
ஓதியநல் வழிவழுவா துபவசித்து நின்னுடைய
காதலனை யெப்போதுங் கருத்திடைவைத்
துயர்தவஞ்செய்
ஈதுனக்குக் கருமமென விளையோனுக்
கவளுரைப்பாள்.

''மாதவர்கள் அடிபேணி, மற்று அவர்கள் விதிமுறையே
ஓதிய நல்வழி வழுவாது உபவசித்து, நின்னுடைய
காதலனை எப்போதும் கருத்திடை வைத்து உயர்தவம் செய்;
ஈது உனக்குக் கருமம்'' என, இளையோனுக்கு அவள் உரைப்பாள்.

பொ: பெருந்தவமுனிவர்களின் திருவடிகளைப் போற்றி, அம் முனிவர்கள் விதி முறைப்படி ஓதியருளும் நல்வழியில் வழுவுதல் செய்யாது உபவாசம் இருந்து நின்னுடைய காதலனாகிய இராமனை எப்போதும் கருத்தில் இருத்தி உயர்ந்த தவத்தைச் செய்வாயாக; இதுவே உனக்குச் செய்யத்தக்க கருமம்; என இலக்குவன் சொல்லச் சீதை அவ்விளையவனாகிய இலக்குவனுக்குச் சொல்கின்றாள்.

கு: அடிபேணுதல் என்பது, மாதவர் அடிகளை வணங்கிப் போற்றுதல். மாதவர்கள் சொல்லும் நல்வழியில் வழுவுதல் இன்றி விரதத்தை மேற்கொள்க எனவும், அவ்விரத காலத்தில் இராமனை இடைவிடாது கருத்தில் வைத்துத் தவம் செய்க எனவும் கூறிய இலக்குவனுக்குச் சீதை சொல்லலுற்றாள் என்றவாறு. 'ஈதுனக்குக் கருமம்' என்றது இதுவே நின்னிலைக்கேற்ற தவம்

என்பது விளக்கியவாறு. உபவசித்தல் - உபவாசம் இருத்தல். உபவாசம் என்பது உண்டியைக் குறைத்து உற்றநோய் நோன்றல்.
(74)

## சீதை கூறுவது

768 நின்னுடைய தமையனை நா னிழல்போலப்
பிரியாதேன்
அன்னவனு நானுஞ்சென் றடிபணிந்த
வருந்தவர்கள்
உன்னுடைய காதலனின் றுனைப்பிரிந்த காரணந்
தான்
என்னுரைநீ யென்றபொழு தியானவருக்
கென்னுரைப்பேன்.

நின்னுடைய தமையனை நான் நிழல்போலப் பிரியாதேன்;
அன்னவனும் நானும் சென்று அடிபணிந்த அருந்தவர்கள்
உன்னுடைய காதலன் இன்று உனைப்பிரிந்த காரணந்தான்
என்? உரை நீ என்ற பொழுது யான் அவருக்கு என் உரைப்பேன்!

பொ: (இலக்குவனை நோக்கி) நின்னுடைய அண்ணனை நான் நிழலைப்போலப் பிரியாதிருந்தவள்; அவரும் நானும் சென்று அடி பணியப் பெற்ற ஆரிய தவமுனிவர்கள், "உன்னுடைய காதலன் இப்பொழுது உனைப் பிரிந்த காரணந்தான் என்ன? நீ சொல்" என்று கேட்ட பொழுது யான் அவர்கட்கு என்ன சொல்வேன்!

கு:-ஒருவர் உடம்பினிழல் அவ்வுடம்போடே செல்வதுபோலச் சீதை பிரியாது இராமனுடன் செல்லும் இயல்பினள் என்பதைப் புலப்படுத்தியவாறு. 'அடிபணிந்த அருந்தவர்கள்' என்ற பெயரெச்சம், செயப்படுபொருட் பெயரைக் கொண்டு முடிந்தது; 'உண்ட சோறு' என்பதுபோல. பிரியாது நிழல்போலத் தொடர்ந்திருந்த என்னைப் பார்த்து முனிவர்கள் இப்போது யான் இராமனைப் பிரிந்து வந்திருப்பதைக் கண்டு 'உன்னுடைய காதலன் இன்று உனைப்பிரிந்த காரணம்தான் என்ன' என்று கேட்பார்களே அவர்கட்கு யான் என்ன விடை சொல்வது! என வருந்திக் கூறிய வாறு.
(75)

769 பின்னுமவள் கூறுவாள் பேருலக முழுதுடை
யான்
தன்னுடைய பிழையல்ல தாரணியோர் தப்பல்ல
என்னுடைய வினையாலே யிச்செயல்கள் விளைந்த
தென்று
உன்னுடைய தமையனுக்கின் றிளையானே
யுணர்த்துதியால்.

பின்னும் அவள் கூறுவாள் பேருலகம் முழுது உடையான்
தன்னுடைய பிழை அல்ல; தாரணியோர் தப்பு அல்ல;
என்னுடைய வினையாலே இச்செயல்கள விளைந்தது என்று
உன்னுடைய தமையனுக்கு இன்று இளையானே உணர்த்துதியால்.

பொ: மேலும்சீதை சொல்லுவாளாய், இளையானே! பெரிய உலகம் முழுவதையும் தனக்குச் சொந்தமாக உடையவனுகிய இராமன்தன் பிழையும் அன்று; தரணியில் உள்ளோர் தப்பும் அன்று; யான் அனுபவிக்கும் இச் செயல்கள் என்னுடைய பழ வினையாலே விளைந்தது என்று உன்னுடைய அண்ணனுக்கு நீ இப்போது சொல்லுவாயாக.

கு:- பேருலக முழுதுடையான் என்றது, இராமனை. உலகு முழுதுடையவன் அவ்வுலகத்துள் ஒருத்தியாகிய என்னைக் காவாது துறந்ததும், அவன் துறத்தற்குக் காரணமாய்த் தாரணி யோர் சொல்லிய பழியும் யான் படும் அல்லலுக்குக் காரணம் அன்று; என் பழவினையே காரணம் என்பதை நின் தமையனுக்குச் சொல்லுக என்றவாறு. இராமன் சீதையை வனத்திடைவிடு தற்குத் தாரணியோர் சொல்லே காரணமாயினும் அதுதானும் தன் வினையால் விளைந்ததே எனச் சீதை தன் பிழையாக ஏற்றுக் கொண்டவாறு. "வானேர்க்கு இன்னல் செய்து ஒழுகும் இராவணன் கொடுபோய் இடைவிடாது ஈரறு திங்கள், தன்னெடு நகரில் தனிச் சிறைவைத்த தையலைத் தாரமாய்க் கொண்டு, பின்னையும் வாழ்கை பேரிழுக்கு" என்று பேசுவர் பெருநிலத் துள்ளோர் (34) எனத் தாரணியோர் பழிமொழி கூறியது கேட்ட இராமன் சீதையை வனத்திடைவிட இலக்குவனை அனுப்பினன் என்பது இங்கு நினையலாம். (76)

789 நிறைந்தகட லுலகுரைக்கு நெடும்பழிக்குத்
தானஞ்சித்
துறந்தனன்வெங் கனற்குளித்துத் தூயோளா
யிருந்தேனைப்
பிறந்தபழி யெனத்துறக்கப் பெருமாயை
யிடிலெனக்குச்
சிறந்ததுதற் பிரிவென்று செப்பினா ளென
வுரைத்தி.

"நிறைந்தகடல் உலகு உரைக்கும் நெடும்பழிக்குத் தான் அஞ்சித், துறந்தனன்; வெங்கனல் குளித்துத் தூயோளாய் இருந்தேனைப்! பிறந்தபழி எனத்துறக்கப் பெருமாயை இடில் எனக்குச் சிறந்தது தற்பிரிவு என்று செப்பினாள்" என உரைத்தி!

பொ: வெம்மைமிக்க கனலில் மூழ்கிக் காட்டித் தூயவளாக எல்லோராலும் மதிக்கப்பட்டிருந்த என்னை, நீர் நிறைந்த கடலால் சூழப்பட்ட உலகத்தில் உள்ளோர் சொல்லும் நெடிய பழிக்குத் தான் அஞ்சித் துறந்தான்! என்னைத் துறப்பதற்காகவே பிறந்தன பழிமொழி எனப் பெரிய பொய்யை ஏறிட்டுக் கூறினால், எனக்குத் தன்னைப் பிரிவதே சிறந்தது எனச் சொன்னாள் என்று உன் தமையனார்க்குச் சொல்வாயாக.

கு: கனலில் மூழ்கிக் கற்பில் தூயவள் என்பதைக் காட்டிய சீதையைத் தண்கடல் சூழ்ந்த உலகத்தவர் அறியாது சொல்லிய பழிக்கு அஞ்சித் துறந்தது பொருந்தாது என்றவாறு. தண்கடல் சூழ்ந்த உலகத்தவர் சொல்வது. வெங்கனலில் மூழ்கிக் காட்டியது போன்ற அருமையும் உறுதியும் உடையதன்று என்பதை இராமபிரான் அறியாது துறந்தனரே என்பது குறிப்பிட்டவாறு. துறக்கப், பிறந்த பழி எனப் பெருமாயையிடில் என இயையும் துறக்கவேண்டும் என்ற எண்ணமுடைய இராமபிரான் பிறந்த. பழி எனப் பெரிய பொய்யைச் சான்றாகக் காட்டினால் அவ் வெண்ணம் உடைய அவர் தம்மைப் பிரிதலே எனக்குச் சிறந்தது எனச் சீதை கூறியது தன் வெறுப்புணர்ச்சியைப் புலப்படுத்தவே யாகும். இதனை இராமபிரானுக்கே சொல்லும்படி இலக்குவனை

வேண்டியது சீதையின் சினத்துணிவினைக் காட்டுவதாகும். பெருமாயையிடில்-பெரிய பொய்யை ஏறிட்டுக் காட்டினல். தற்பிரிவு. இராமன் தன்னைப் பிரிதல். 'உரைத்தி' என்பது முன்னிலை ஏவல். (77)

77 இளையோய்நான் ருதுவாகி யீரிரண்டு திங்களுள
வளையாழி யுலகத்தை வாய்மூட வொண்ணுது
விளைவேதாய் முடியுமோ வென்றறியே னென் மேனிதனை
உளையாத சிந்தையனு யுற்றுநோக் கெனவுரைத் தாள்

இளையோய்! நான் ருதுவாகி ஈரிரண்டு திங்கள்உள
வளை ஆழி உலகத்தை வாய்மூட ஒண்ணுது;
விளைவு ஏதாய் முடியுமோ என்று அறியேன்; என்மேனிதனை
உளையாத சிந்தையனுய் உற்றுநோக்கு என உரைத்தாள்.

பொ:- "இளையவனே! நான் பூப்பு அடைந்து நான்கு மாதங்கள் ஆயின! கடலால் வளைக்கப் பெற்ற பெரிய உலகத்தின் வாயை மூட முடியாது! என்னை வனத்தில் புகுத்தியதன் விளைவு என்னவாக முடியுமோ என யான் அறியேன்; கருவுற்றிருத்தலால் வேறுபட்டுள்ளஎன் மேனிதனை வருந்தாத சிந்தையனுய் உற்று நோக்குவாயாக" என்று சொன்னுள்.

கு: 'ருதுவாகி யீரிரண்டு திங்களுள' என்றது கருப்பமாகி நான்கு மாதங்கள் ஆயின என்னும் கருத்தினது. ஆழி-கடல். ஆழி, வளை உலகம்' என இயையும். 'உலைவாயை மூடலாம் ஊர் வாயை மூட முடியாது' என்ற பழமொழியைநினைப்பித்து 'வளை யாழி யுலகத்தை வாய்மூட வொண்ணுது. என்ருள் 'உலகின் பெருமை புலப்பட' 'வளையாழி யுலகம்' என்ருள் இக்காட்டில் தனியே கருவுயிர்ப் பேனே? அல்லது மண்ணில் மறைவேனே. என்பாள்? விளைவு ஏதாய் முடியுமோ என்றறியேன், என்ருள். தன்கருவுற்ற மேனியை நோக்கினுல் இலக்குவன் 'இந்நிலையில் வனத்தில் விட்டுச் செல்கின்ருேமே என' வருந்தாமல் இருக்க முடியாது என்ற கருத்தால் 'உளையாத சிந்தையனுய் உற்றுநோக்கு' என்ருள்.

உலகத்தினது வாயை மூட வொண்ணது என அது முதற் காயின் சினைக்கையாகும். என்ற விதியால் அமைத்துக் கொள்க. உற்று நோக்குதல்-மேனி வேறுபாட்டினை ஊன்றி நோக்குதல். உளைதல் - வருந்துதல். (78)

## இலக்குவன் நொந்து கூறியது

772 என்றினைய வவள்கூற விருகண்க ணீர்சொரிய
வன்றிறலோன் மனங்கலங்கி வாய்விட்டுக்
கிடந்தலறி
யின்றிந்த வுரைகேட்க வென்னகுறை
செய்தேனென்
றென்றியவெந் துயரினையோ னுறுதுயராட்
கிவையுரைத்தான்.

என்று இனைய அவள் கூற, இருகண்கள் நீர்சொரிய,
வன்திறலோன் மனம் கலங்கி வாய்விட்டுக் கிடந்து அலறி,
இன்று இந்த உரை கேட்க என்னகுறை செய்தேன் என்று
ஒன்றிய வெந்துயர் இளையோன் உறுதுயராட்கு இவை
உரைத்தான்.

பொ: என்று இத்தன்மையான சொற்களை அந்தச் சீதை சொல்ல, வலிய திறமையோனுகிய இலக்குவன் தன்னுள்ளத்துக் கலந்த துயரத்தால் மனம் கலங்கித் தரையிற் கிடந்து வாய் திறந்து அழுது அலறி (இதுகாறும் இல்லாமல்) இன்றைக்கு இந்தச் சொல்லைக் கேட்க யான் என்ன பாவம் செய்தேன்? என்று எண்ணி, மிக்க துயரையுடைய சீதைக்கு இவற்றைச் சொன்னுன்.

கு: வன்திறலோனுகிய இளையோன் என இயையும். வெந் துயரால் மனம் கலங்கி என மூன்ருவது விரிக்க. கிடந்து என்றமையால் கிடத்தற்கு இடமாகிய தரை வருவிக்கப் பட்டது; சொல்லெச்சம். குறை என்றது இங்குப் பாவத்தை. என்ன பாவம் செய்தேன் எனத் தனக்குள் வினவியவாறு. இராமன் மட்டுமே பார்த்தற்குரிய சீதையின் திருமேனியை நோக்குமாறு தன்னைநோக்கிச் சொன்னமையால் இலக்குவன் இங்ஙனம்

பெருந்துயருறுவானுனன். இன்று இந்த உரை கேட்க என்றமையால் அவ்வுரைஎன்றும் இதுவரையில் கேட்டறியாத உரையென்பது புலனுகும். துயரம் வேறு தான் வேறு என்றில்லாமல் துயர்மயமாய் ஒன்றுபட்டிருந்த இலக்குவன் என்பார், 'ஒன்றிய வெந்துயர் இளையோன்' என்முர். (79)

773 கன்றிய சிந் தையிறுயுன் கணவனுனைக் கைப்
பிடித்த
அன்றுமு லின்றளவு முன்னுடைய வடிபணிந்து
நின்றபொழு தினுந் தூயோய் நின்மேனி கண்
டறியேன்
இன்றுதா னுனைக்காண வல்லனே வெனவுரைத்
தான்.

கன்றிய சிந்தையினுய்! உன்கணவன் உனைக்கைப்பிடித்த
அன்றுமுதல் இன்று அளவும் உன்னுடைய அடிபணிந்து
நின்ற பொழுதிலும் தூயோய்! நின்மேனி கண்டறியேன்;
இன்றுதான் உனைக்காண வல்லனே? என உரைத்தான்.

பொ:- வருந்திய சிந்தையுடையவளே! தூய்மையுடையவளே! உன்கணவன் உன்னைக் கைப்பற்றி மணந்து கொண்ட அன்று முதல் இன்று வரையில் உன்னுடைய திருவடிகளைப் பணிந்து நின்ற போதும் (நின்திருவடியை யன்றி) நின்மேனியை நிமிர்ந்து பார்த்தறியேன்; அத்தகைய யான் இன்றைக்குத்தான் உன் மேனியைப் பார்க்க வல்லவன் ஆவேனே? என்று சொன்னுன்.

கு:- கன்றுதல்-வருந்துதல்; வெதும்புதல் எனினும் அமையும். கன்றிய சிந்தையினுய்! என்பது சீதையின் துன்ப நிலையையும் தூயோய்! என்றது அவள் கற்பொழுக்கத்தின் தூய்மையையும் சுட்டி நின்றன. அண்ணன் மனைவியைத் தாயாகக் கண்டவன் இலக்குவனுதலின் சீதையின் திருவடி கண்டதன்றி அவள் வடிவழகைக் கண்டிலன் என்பதைப் புலப்படுத்தியவாறு. இன்னும் உன்மேனியைக் காணேன் என்பான், இன்றுதான் உன்னைக் காண வல்லனே? என வினவினுன். ஓகாரம் எதிர்மறைப் பொருளது; காணவல்லேனல்லேன்; என்றவாறு. (80)

## சீதையை விடுத்து இலக்குவன் செல்லுதல்

774 வருதுயரந் தனையடக்கு மங்கைமல ரடிபணிந்து
கருதிவினை யறவுலகோர் சென்றுடுங் கங்கை
யெனும்
பெருநதியைக் கடந்தவளைப் பின்பார்த்துப்
பின்பார்த்துப்
பொருமியவெந் துயரிளையோன் போயினனன்
னகர்நோக்கி.

வருதுயரம் தனை அடக்கி மங்கைமலர் அடிபணிந்து
கருதிவினை அற உலகோர் சென்று ஆடும் கங்கைஎனும்
பெருநதியைக் கடந்து, அவளைப் பின்பார்த்துப் பின்பார்த்துப்,
பொருமிய வெந்துயர் இளையோன் போயினன், நல்நகர் நோக்கி

பொ:- பொருமிய கொடுந்துயரினையுடைய இலக்குவன், மேன்மேலும் பொங்கி வருகின்ற துயரத்தை அடக்கிக் கொண்டு, சீதையின் தாமரை மலர் போன்ற திருவடிகளைப் பணிந்து கொண்டு, உலகத்தோர் தம் வினையற வேண்டும் என்று கருதிச் சென்று நீராடுதற்குரிய கங்கை என்கின்ற பெரிய நதியைக் கடந்து, அந்தச் சீதையின் துயர்நிலையை நினைந்துப் பின்னே திரும்பிப் பார்த்து திரும்பிப் பார்த்துக் கொண்டு (பிரியமனமின்றிப்) பிரிந்து அயோத்தி யென்னும் நல்ல நகரை நோக்கிப் போயினான்.

கு:- பொருமுதல் மனத்துக்குள்ளேயே தேம்புதல். இளையோன் அடக்கி, பணிந்து கடந்து பின் பார்த்துப் பார்த்து நல் நகர் நோக்கிப் போயினன் என இயையும். முன்னேக்கிச் செல்லும் இலக்குவன் சீதையின் துன்பநிலைக்கு இரங்கி அவளைப் பின் திரும்பிப் பார்த்துக் கொண்டே நகர் நோக்கிப் போனான் என்றவாறு. பின்பார்த்துப் பின்பார்த்து என்ற அடுக்குப் பலமுறை பார்த்தலையுணர்த்தியது. உலகோர் வினையறக் கருதிச் சென்றுடும் கங்கை என இயையும். கங்கை நதியின்தென்கரையில் சீதையை விடுத்து அக்கங்கையைக் கடந்து வடகரையை யடைந்து

அயோத்திநகர் நோக்கிச் செல்கின்ற இலக்குவன் பிரியகல்லாது சீதையைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றான் என்க. (81)

## இலக்குவன் தேர் மறையக் கண்டு சீதை கதறுதல்

775 இன்னமிவர் போவாரோ மீள்வாரோ வென
நினைந்து
தன்னுடைய கண்பனிப்பச் சானகிதான்
பார்த்திருந்து
பொன்னின்மணித் தேர்காணேன் போய்
மறைந்தா னிளையோனும்
என்னையறக் கைவிட்டா ரெனக் கதறத்
தொடங்கினாள்.

இன்னம் இவர் போவாரோ மீள்வாரோ என நினைந்து
தன்னுடைய கண்பனிப்பச் சானகிதான் பார்த்திருந்து
பொன்னின் மணித் தேர்காணேன்; போய் மறைந்தான் இளை
யோனும்;
என்னை அறக் கைவிட்டார் எனக்கதறத் தொடங்கினாள்.

பொ:- (இலக்குவன் போவதைக் கண்டு) இன்னும் இளைய பெருமாள் போவாரோ (அல்லது என்துயர் துடைக்க) மீள் வாரோ, என்று நினைந்து 'சீதை தன்னுடைய கண்களில் நீர்வரப் பார்த்திருந்து பின்பு "பொன்னின் இயன்ற மணிகட்டிய தேரைக் காணவில்லை; எனவே இளையோனும் போய் மறைந்து விட்டான்; என்னை அடியோடு கைவிட்டு விட்டார்கள்"; என்று தெளிந்து வாய்விட்டுக் கதறத் தொடங்கினாள்.

கு: பின்பார்த்துப் பின்பார்த்துச் சென்ற இலக்குவன் நிலையைக் கண்டசீதை, பாகனோடு அவன் மீண்டும் வரலாம் என்ற சிறிய நம்பிக்கையுள்ளவளாய் அவன் தேர்செல்லும் வழியையே நோக்கிக் கொண்டிருந்தவள், அத்தேர் மறைந்தவுடன் முன் கொண்ட நம்பிக்கையிழந்து தன்னை முழுவதும் கைவிட்டு விட்டார்கள் என்பது தெளிந்து கதறத் தொடங்கினாள் என்றவாறு.

ஒகாரம் ஐயப்பொருளன. கண்பனிப்ப-கண்களில் நீர் துளிப்ப. இளையோனும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது. ஆதார மாகிய தேர் மறைந்தமையால் அதில் அமர்ந்த இளையோனும் மறைந்தான் என்றவாறு. இராமன் ஆணைவழியே இலக்குவன் நடந்தானுகலின் அவ் இராமனையும் உளப்படுத்திப் பன்மையாற் கூறியவாறு. (82)

### சீதை விதியை விளித்துக் கூறியது

776 இலங்கையிலே நெடுங்கால மிருஞ்சிறையி
லேயிருந்து
புலம்பியழு தியான்பட்ட பொங்குதுயர்
போதாமல்
தலங்குலவு பழிபூட்டித் தனிக்கானில் விடுவித்து
விலங்கரிய துயர் விளைத்தாய் விதியேயோ!
விதியேயோ!

இலங்கையிலே நெடுங்காலம் இருஞ்சிறையிலே இருந்து
புலம்பி அழுது யான்பட்ட பொங்குதுயர் போதாமல்,
தலம்குலவு பழிபூட்டித் தனிக் கானில் விடுவித்து
விலங்கரிய துயர் விளைத்தாய் விதியேயோ! விதியேயோ!

பொ: ஏ விதியே! விதியே! இலங்கையில் பெரிய சிறையில் நெடுங்காலம் இருந்து புலம்பி அழுது யான்பட்ட பெருந்துயரம் போதாது என்று உலகில் விளங்கும்படி பழியைச் சுமத்தித் தனியே காட்டில் விடச்செய்து தடுத்தற்கரிய துயரை விளைத்து விட்டாயே.

கு: இருஞ்சிறை என்றது கொடுமையில் பெரிதாகிய சிறையை. நெடுங்காலம் என்றது முந்நூறுநாட்களை. பொங்குதுயர்-பெருகிய துயர். தலம் என்றது உலகத்தை. பழிபூட்டி என்றது பழியைச் சுமத்தி என்றவாறு. கனலில் மூழ்கிக் கற்பினைப் புலப்படுத்திய தன்மேல் உலகவர் சொல்லும் பழியினைச் சுமத்தியதும் தனிக் கானில் விடச் செய்ததும் விதியின் செயலே என்பதுணர்ந்து அவ்விதியையே விளித்து அரற்றியவாறு; அங்குப்பிறர் யாரும்

இன்மையின். விலங்கரிய துயர்-தடுத்து நிறுத்துதற்கு அரிய துயர். விட்டது இலக்குவன்; விடுவித்தது விதி என்று உண்மை தெளிந்து புலம்பியவாறு. இராமன் மேலும், அவன் ஆணையை நிறைவேற்றிய இலக்குவன் மேலும் குற்றமில்லை என்பது குறிப்பு. இலங்கையில் சிறையிருந்து பட்ட பெருந்துயர்க்கும் இவ்விதியே காரணம் என்பது புலப்பட அதனையும் இணைத்துக் கூறினாள். (83)

777 ஏதமுறு பழிபூட்டி யிப்பிறப்பி லுனையொழிய
மாதரையென் மனத்தாலுந் தொடே னென்று
வரந்தந்த
காதலனை மனங் கலக்கிக் காட்டிலெனை
விடுவித்து
வேதனைநோய் மிகத்தந்த விதியேயோ
விதியேயோ.

ஏதம் உறு பழியைச் சுமத்தி, "இப்பிறப்பில் உனைஒழிய
மாதரை என் மனத்தாலும் தொடேன்" என்று வரம்தந்த
காதலனை மனம் கலக்கிக் காட்டில் எனை விடுவித்து
வேதனை நோய் மிகத் தந்த விதியேயோ! விதியேயோ!

பொ: என்மேல் குற்றமான பழியைச் சுமத்தி, "இந்தப் பிறப்பில் உன்னை ஒழிய பிறமாதரை என் மனத்தாலும் தொடேன்" என்று வரம்தந்த காதல் மிக்கவனாகிய இராமனை மனம் கலங்கச் செய்து என்னைக் காட்டில் விடச்செய்து வேதனை நோய் மிகுமாறு தந்த விதியே! ஓ விதியே! இனி என்னென்ன செய்வாயோ!

கு: பொய்யான பழி என்பாள், 'ஏதமுறு பழி' என்றாள். "இப்பிறப்பிலுனை யொழிய மாதரையென் மனத்தாலும் தொடேன் என்று வரம்தந்த காதலனை" என்றது "இந்த விப்பிறவிக்கிரு மாதரைச் சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம் தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்" (சுந்தர-சூளாமணிப்படலம் 34) என்றுமுன் அனுமனிடம் கூறியதை இங்கு விதியினிடம் கூறியவாறு. இதனால், இராமனுடைய காதல் மிகுதியைப் புலப்படுத்தி அத்தகைய காதலுள்ளத்தையும் கலக்கி என்னைக் காட்டில் 'விடச் செய்த விதியே! இனி என்னென்ன செய்வாயோ! என்பது இசை யெச்சமாக வருவிக்கப்படும். (84)

778 கண்ணறக்கா குத்தனெனைக் காட்டில்விடக்
கண்டிருந்தும்
மண்ணகத்தா ரவன்கொடுமை வாய்திறவார்
மானமிலாப்
பண்ணறைச்சி யென்றென்னைப் பழிதூற்றப்
பண்ணுவித்தாய்
விண்ணவர்க்கும் வெலற்கரிய விதியேயோ
விதியேயோ.

கண் அறக் காகுத்தன் எனைக் காட்டில்விடக் கண்டிருந்தும்
மண்ணகத்தார் அவன்கொடுமை வாய்திறவார், மானம் இலாப்
பண்ணறைச்சி என்றுஎன்னைப் பழிதூற்றப் பண்ணுவித்தாய்!
விண்ணவர்க்கும் வெலற்கு அரிய விதியேயோ! விதியேயோ!

பொ:- தேவர்க்கும் வெல்ல வியலாத ஓ விதியே! ஓ விதியே! இராமன் கண்ணோட்டமில்லாமல் என்னைக் காட்டில்விடக் கண்ணால் கண்டிருந்தும் இந்த மண்ணுலகத்தவர் அந்த இராமன் கொடுமையைப் பற்றி ஒன்றும் வாய்திறவாதிருந்தவர்கள் என்னை மானமிலாத - தகுதிகெட்டவள் என்று பழிதூற்றுமாறு செய்வித்தாய்.

கு:- கண் என்றது, கண்ணோட்டத்தை. மனைவி என்ற உரிமையில்லையாயினும் பெண்ணென்ற இரக்க நெஞ்சத்தாலேனும் என்னைக்காட்டில் விடாமல் இருந்திருக்கலாம்; அந்தக் கண்ணோட்டமும் இன்றித் தனியே காட்டில் விட்டதைக் கண்டிருந்தும் அவ்விராமன் கொடுமையைப் பற்றி வாய்திறவாதிருந்த மண்ணுலகத்தோர் ஒருகுற்றமும் செய்யாத என்னை, 'மானம் இல்லாதவள், பண்பு கெட்டவள்' என்று பழி தூற்றுவது உன் வலிமையாலன்றோ என்பாள், 'என்னைப் பழிதூற்றப் பண்ணுவித்தாய்' என்றாள். இராமன் கொடுமையைக் கண்டும் அவனைப் பழிக்காமையால் மண்ணுலகத்தோரின் மாண்பு புலனாகின்றது. அந்த மாண்புடையோர் என்னைப் பழிதூற்றுமாறு நீயே தூண்டினாய்; என விதியின் மேல் குற்றம் சார்த்திக் கூறியவாறு. வாய்திறவார் என்றது ஒன்றும் கூறாமையைக் குறிப்பிட்டவாறு. பண்-தகுதி. அறைச்சி-அற்றவள். பொறியறை, கண்ணறை என்பன

போலப் பண்ணறைச்சி என்பது ஏசும் மொழியாகும். பண்ணு வித்தாய் என்பது பிறவினைமுற்று. 'உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா' ஆதலின் விண்ணவர்க்கும் வெலற்கு அரிய விதியேயோ! என்றாள். (85)

779 தாளார்செந் தாமரைக்கட் டாசரதி
யார்மனத்தைக்
கேளானே ருரையென்றுங் கேளாத வகைகலக்கிக்
கோளான திடையருக் கொடுவினையே
னுக்கொருநாள்
மீளாத வனந்தந்த விதியேயோ விதியேயோ.

தாளார் செந்தாமரைக்கண் தாசரதியார் மனத்தைக்
கேள்ஆனோர் உரை என்றும் கேளாத வகை கலக்கிக்
கோள்ஆனது இடை அருக் கொடுவினையேனுக்கு ஒருநாள்
மீளாத வனம் தந்த விதியேயோ! விதியேயோ!!

பொ:- தண்டில் பொருந்திய தாமரை மலர் போன்ற கண்ணையுடைய இராமபிரான் மனத்தைத் தன் உறவினர் சொல்லும் சொல்லாயிற்றே என்றும் கேளாதபடி கலக்கிவிட்டுத், துன்பமானது இடையறவு படாமைக்குக் காரணமாகிய கொடிய வினையையுடைய எனக்கு ஒருநாளும் மீட்சியில்லா காட்டைத் தந்த ஏ விதியே! ஏ விதியே!

கு:- நாளத்திலிருந்து பறித்த அளவில் பொலிவு குறைதலின் அது இராமன் கண்ணுக்கு உவமையாக மாட்டாமையின் 'தாளார் செந்தாமரைக்கண்' என்றார். தாள் என்றது, மலரைத் தாங்கி நிற்கும் தண்டினை. ஆர்தல்-பொருந்துதல். நீர்நிலையில் நாளத்தில் மலர்ந்துள்ள தாமரை மலரைப் போன்ற பொலிவுமிக்க கண் இராமனது கண் என்றவாறு. தாசரதி-தசரதன் மகனாகிய இராமன். மனத்தைக் கலக்கி என இயையும். கேள்-உறவு. பகைவரும் நொதுமலாளரும் சொல்லும் சொல்லைக் கேளாமையும் உறவினர் சொல்லும் சொல்லைக்கேட்டு நடத்தலும் இயல்பு. ஆனால் உறவினர் சொல்லும் சொல்லாயிற்றே என்றும்

கேளாத படி இராமன் மனத்தைக் கலக்கியது விதியே என்ற வாறு. கோள் - துன்பம். கோளானது இடையறுக் கொடுவினை என்றது, துன்பம் இடையறுமைக்கு ஏதுவாகிய கொடிய வினை என்றவாறு. ஒருநாளும் என்ற உம்மை விகாரத்தால் தொக்கது. மீண்டும் அழைத்துக்கொள்ளும் குறிப்பு இலக்குவன் சொல்லில் இல்லை யாதலின் 'ஒருநாள் மீளாத வனம் தந்த' என்றாள். இராமனது மனத்தைக் கலக்கியதும் வனந்தந்ததும் விதியின் விளையாட்டே என்றவாறு.

(86)

780 தக்ககண வன்சீறித் தன்னைக்கை விட்டகன்றாற்
புக்ககத்தார் கைவிடுவர் பிறந்தகத்தார்
போற்றார்கள்
அக்கணமே பழிபிடுவ ரன்னியர்க ளருவினையேன்
மிக்கொரிடங் காண்கிலேன் விதியேயோ
விதியேயோ.

தக்க கணவன் சீறித் தன்னைக் கைவிட்டு அகன்றால்,
புக்ககத்தார் கைவிடுவர்;பிறந்தகத்தார் போற்றார்கள்;
அக்கணமே பழிஇடுவர் அன்னியர்கள்; அருவினையேன்
மிக்கஓர் இடம் காண்கிலேன்; விதியேயோ! விதியேயோ!

பொ: தக்கவனாகிய கணவன் கோபித்துத் தன் மனைவி தன்னைக் கைவிட்டு நீங்கினால் அவளைப் புக்ககத்தில் உள்ள மற்றவர்கள் ஏற்றுக் கொள்ளாமல் கைவிட்டுவிடுவார்கள்; பிறந்த வீட்டிற்குச் சென்றாலோ அவர்களும் போற்றி ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்; அயலார் வீட்டிற்குச் சென்றாலோ அவர்கள் அந்தக் கணத்திலே பழி போடுவார்கள்; ஓ விதியே! நீக்கற்கரிய தீவினையையுடைய யான் புகுதற்கு இம் மூன்றினும் வேறான ஓர் இடத்தைக் காண்கிலேன்; (என்செய்வேன்?).

கு: எல்லாத்தகுதிகளும் நிறைந்த கணவன் என்பார், 'தக்க கணவன்' என்றார். காரணமின்றிச் சீறாதவன் என்பது புலப் படுத்தியவாறு. கணவனால் புறக்கணிக்கப்பட்ட பெண்ணைப் புக்ககத்தாரும் பிறந்தகத்தாரும் அயலகத்தாரும் புறக்கணித்து விடுவர். ஆதலின் இம்மூன்றகங்களினும் வேறாய் மிக்கிருக்கும் ஓரகம் இல்லையாதலின் 'மிக்கொரிடம் காண்கிலேன்' என்றாள். 'மிக்க ஓரிடம்' என்பது தொகுத்தலும் குறுக்கலும் பெற்று

மிக்கொரிடம்' எனவாயிற்று. அன்னியர்-அயலார். கணவனுல் கை விடப்பட்ட மனைவியின் பொதுவான இழிநிலையைக் கூறித் தன்னிலையையும் சீதை புலப்படுத்தியவாறு. அருவினை என்றது, யாராலும் நீக்குதற்கு அரிய வினை. தான் செய்த தீவினையே இங்ஙனம் சொலற்கரும் துன்பம் தருகின்றது என்பது சீதையின் கருத்து ஆதலின் 'அருவினையேன்' எனத் தன்னைக் குறிப்பிடுகின்ருள். (87)

## வான்மீகியின் மைந்தர் அங்கு வருதல்

781 இன்னபல வும்பன்னி யிடருறுவா ளிடர்தீர
என்னுயிர்தான் போகாதோ வெனக்கதறு மக்காலை
வன்னியினுந் தூயோனும் வான்மீகி மைந்தர்கடாம்
நன்னுதலா ளழுமோசை வழிவந்து நணுகுற்ருர்.

இன்னபலவும் பன்னி இடர் உறுவாள், 'இடர்தீர,
என்உயிர்தான் போகாதோ?' எனக்கதறும் அக்காலை,
வன்னியினும் தூயோனும் வான்மீகி மைந்தர்கள்தாம்,
நன்னுதலாள் அழும்ஓசை வழிவந்து நணுகுற்ருர்.

பொ: இவைபோன்ற பலவற்றையும் சொல்லித் துன்புறுகின்ற சீதை, 'இந்தத் துன்பம் எலாந்தீர எனது உயிர்தான் போகாதோ?' என வெறுத்துக் கதறுகின்ற பொழுது, நெருப்பினும் தூயவனுகிய வான்மீகியின் மைந்தர்கள், நல்ல நெற்றியையுடைய அந்தச் சீதை அழுகின்ற ஓசை வரும்வழியை ஓர்ந்து வந்து நெருங்கினுர்கள்.

கு: இடருறுவாள் கதறும் அக்காலை என இயையும். இடர் உறுகின்ற சீதை என வினைப்பெயராக்குக. உயிர் நீங்கின பின் இவ்வுடம்பைப் பற்றிய துயர் இலதாகும் என்ற நம்பிக்கையால் 'இடர்தீர என்னுயிர்தான் போகாதோ' என்று கதறுவாளாளுள். வன்னி-அங்கியங்கடவுள். உலகிலுள்ள அழுக்குகளை எல்லாம் எரித்துத் தூய்மை செய்வது நெருப்பு ஆதலின் அவனைத்

தூய்மைக்கு எடுத்துக் காட்டாகக் கூறினர். 'வன்னியினும் தூயோன் வான்மீகி' என்றது உறழ் பொருவாகும். 'தாயினுஞ் சாலப் பரிந்து நீ' (திருவாசகம்-பிடித்த பத்து) என்புழிப்போல. வான்மீகி மைந்தர்கள் என்றது, அம்முனிவரின் சீடர்களே. 'நன்னுதலாள்' என்பது சுட்டின்பொருள்பட வந்த குறிப்புப் பெயர்; அவள் என்பதே கருத்து. ஓசைவழி வருதலாவது - ஓசைவரும் திசையையே பற்றி வருதல். (88)

## அழுகின்ற சீதையைக் கண்ட மைந்தர் வான்மீகியிடம் சொல்லுதல்

782 அழுமவளைக் கண்டிரங்கி யருந்தவனைக் கடிதணுகித்
தொழுதவர்கள் சொல்லுவார் சுரருலகு தனினின்றும்
வழுவிவிழுந் தாளோவிம் மண்ணுலகி லுள்ளாளோ
எழுதரிய மேனியாள் யாவளோ வென்றறியோம்.

அழும் அவளைக் கண்டு இரங்கி அருந்தவனைக் கடிது அணுகி,
தொழுது அவர்கள் சொல்லுவார், 'சுரர்உலகு தனில் நின்றும்
வழுவி விழுந்தாளோ, இம்மண்ணுலகில் உள்ளாளோ,
எழுதரிய மேனியாள் யாவளோ என்று அறியோம்'.

பொ: அழுகின்ற சீதையைக் கண்டு மனம் இரங்கி, அரிய தவத்தினையுடைய வான்மீகியை அணுகித் தொழுது அம்மைந்தர்கள் சொல்வார்கள்: ஓவியத்திலும் எழுதுதற்கு அரிய மேனி வனப்பினை உடையவள் - தேவர் உலகில் நின்றும் வழுவி விழுந்தவளோ, அல்லது இந்த மண்ணுலகில் இருப்பவளோ, யாவளோ? என யாம் அறியோம்.

கு: சீதையின் அழகைக் கண்டு வியந்து கூறுகின்றனர்களாதலின் 'எழுதரிய மேனியாள்' என முதலிற் சிறப்பித்துப் பின் தேவமகள் எனக் கருதற்குரியவள் என்பார், 'சுரர் உலகு தனினின்றும் வழுவி விழுந்தாளோ' என்றனர். தேவ மகள் தரையில் வரக்காரணம்

கூறுவார்போல் 'வழுவிவிழுந்தாளோ' என்றார். விழுந்தாளோ, உள்ளாளோ, யாவளோ, என்புழி ஓகாரங்கள் மூன்றும் ஐயப் பொருளன. முன்சொன்னதில் பின் சொன்னது உறுதியுடைத்து ஆதலின், இம்மண்ணுலகில் உள்ளாளோ என்பதே உண்மையாதல் தெளிவு. விண்ணுலகத்தாளோ? மண்ணுலகத்தாளோ? எனத் துணிய மாட்டாமையின் 'யாவளோ? அறியேம்' எனக் கூறினர். இச்செய்யுள் வருஞ்செய்யுளைநோக்கி நிற்றலின் குளகம். (89)

783 ஒருவரிலாக் கானகத்தே யுள்ளுறுசோ
கத்தாளோர்
தெரிவையொரு துணையின்றித் தெய்வமே துணை
யாகி
இருகணினீர் நதிபெருக விருந்துவிழுந்
தழுகின்றாட்
கருள்புரிய வுனக்கடுக்கு மருந்தவத்தோ
யெனவுரைத்தார்.

**ஒருவர் இலாக் கானகத்தே உள்உறு சோகத்தாள் ஓர்
தெரிவை, ஒருதுணைஇன்றித் தெய்வமே துணையாகி,
இருகணினீர் நதிபெருக, இருந்து விழுந்து அழுகின்றாட்கு
அருள்புரிய உனக்கு அடுக்கும்; அருந்தவத்தோய்! என
உரைத்தார்.**

பொ: ''அரிய தவத்தையுடைய முனிவரே! ஒருவரும் இல்லாத காட்டில் உள்ளத்தில் பொருந்திய சோகத்தையுடைய ஒரு பெண்டு, ஒருதுணையும் இல்லாமல் தெய்வமே துணையெனக் கொண்டு, இருகண்களிலும் கண்ணீராகிய ஆறு பெருக இருந்து தரையில் விழுந்து அழுகின்றவளுக்கு அருள்செய்ய உமக்குப் பொருந்தும்'' என்று சொன்னார்கள்.

கு: ஒருவரும் என்ற உம்மை விகாரத்தால் தொக்கது. தெரிவை என்றது, இங்குப் பருவம் குறியாது பெண்டு என்னும் துணையாய் நின்றது. ஒருதுணையும் இன்றி என உம்மை விரிக்க. 'தெய்வமே துணையாகி' என்றது, தெய்வத்தையே துணையாகக் கொண்டு என்றவாறு. தெய்வம் என்பது இங்கு விதியை உணர்த்தியது. 'விதியையோ' எனப்பன்முறை சொல்லி அழுதமை

அறிந்தாராகலின் இங்ஙனம் கூறினர். 'திக்கற்றோர்க்குத் தெய்வமே துணை' என்ற பழமொழியைப் புதுக்கிய வாருகவும் கொள்ளலாம். துறவியாகிய உங்களுக்கே அப்பெண்டுக்கு அருள்புரியும் உரிமையுண்டு என்பார், 'அழுகின்றாட்கு அருள் புரிய வுனக்கடுக்கும்' என்ருர். துறவிற்கு அருள் சிறப்புரிமையுடையது என்பது நினைப்பித்தவாறு. (90)

## வான்மீகி சென்று சீதையைத் தேற்றுதல்

784 அங்கவ ருடனே சென்றங் கழுகையோ யாது நெஞ்சில்
தங்கியசோக மாருச் சானகி தன்னைத் தேற்றி
இங்குநீ யிருந்து சோகித் தென்பய னிடரை விட்டு
மங்கைநீ கேட்டி யென்று மாதவ னுரைப்ப தானுன்.

அங்கு அவருடனே சென்று, அங்கு அழுகை ஓயாது நெஞ்சில்
தங்கிய சோகம் மாருச் சானகி தன்னைத் தேற்றி,
இங்குநீ இருந்து சோகித்து என்பயன்? இடரைவிட்டு
மங்கைநீ கேட்டி! என்று, மாதவன் உரைப்பது ஆனுன்.

பொ:- மாதவனுகிய வான்மீகி, அங்குவந்து சொன்ன அம்மைந்தருடனே சென்று அவ்வனத்தில் அழுகை ஓயாது-மனத்தில் பொருந்திய சோகம் மாருமல்-இருக்கின்ற சீதையைத் தேற்றி, மங்கையே! நீ இங்கு இருந்து அழுது என்ன பயன்? உன் மனத் துயரை விடுத்து, யான் சொல்வதை நீ கேட்பாயாக! என்று உரைக்கலானுன்.

கு: அங்கு அவர் என்றது அங்கு வந்து சொன்ன மைந்தரை. வாய்திறந்து அழுகின்ற அழுகையும் மாறவில்லை; அழுகைக்குக் காரணமாய் நெஞ்சில் தங்கிய சோகமும் மாறவில்லை என்பது புலப்பட 'அழுகையோயாது நெஞ்சில் தங்கிய சோகம் மாருச் சானகி' என்ருர். ஓயாது சோகம் மாருது இருக்கும் சானகி என ஒரு சொல் வருவித்து முடிக்க. மாருது என்பது ஈறுகெட்டு மாரு

என வந்தது. ஓயாது, மாறுது என்பன வினையெச்ச அடுக்கு. இங்கு என்றது, யாருமில்லாத காடாகிய இங்கு என்றவாறு. கேட்டி என்பது இகரவீற்று முன்னிலையேவல். (91)

## வான்மீகி தன் தவக்குடிலுக்கு வருகெனல்

785 அனகனு மிராமன் றேவி யென்றுநீ யமலை
யென்றும்
சனகன்மா மகணீ யென்றுஞ் சமாதியி லுணர்ந்
தேன் றக்க
உனையவன் காட்டில் விட்டா னல்லனென்
னுழையே விட்டான்
எனநினை யாங்கள் வைகு மிடத்திலெம்மோடு
போதி.

அனகனும் இராமன் தேவி என்றும் நீ அமலை என்றும்
சனகன் மாமகள்நீ என்றும் சமாதியில் உணர்ந்தேன்; தக்க
உனை அவன் காட்டில் விட்டானல்லன்; என் உழையே விட்டான்
எனநினை; யாங்கள் வைகும் இடத்தில் எம்மோடு போதி.

பொ: தூயவனாகிய இராமன் தேவி என்பதையும், நீ தூயவள் என்பதையும், சனகனுடைய சிறந்தமகள் என்பதையும் யோக சமாதியிலிருந்து உணர்ந்துகொண்டேன்; தகுதியுடைய உன்னை அவன் காட்டில் விடவில்லை; என்னிடத்தே தங்குமாறுதான் விட்டான்; என நினைப்பாயாக! நாங்கள் தங்கியுள்ள இடத்திற்கு எம்மோடு வருவாயாக.

கு: அனகன்-பாவமற்றவன்-தூயவன்; அமலை-மல அழுக்கு நீங்கிய தூயவள். முனிவர்கள் ஐயமுற்றபோது யோகசமாதி யிலிருந்து உண்மையுணர்தல் இயல்பு. வான்மீகியிடம் மைந்தர் வந்து 'ஒரு பெண்டு தனியே அழுதுகொண்டிருக்கிறாள்' என்றவுடன் முனிவர் யோக சமாதி கூடி, அழுகின்றது யார்? என்ற உண்மை யைத் தெரிந்து கொண்டார் என்க. தக்கவுனை என்றது, பழிப் பற்றுத் தகுதியுடன் விளங்கும் உன்னை, என்றவாறு. 'என்னுழையே விட்டான்' என்பதும் சமாதியால் அறிந்துகொண்டே முனிவர்

கூறுகின்ருர். "வான்மீகி வைகும் பன்னக சாலையின்பாற் பாவையை விடுதி" (59) என முன்பு இலக்குவனிடம் இராமன் கூறியுள்ளது நினைக. என்னுழையே விட்டான் என நினை; எனவும், யாங்கள் வைகும் இடத்தில் எம்மோடு போதி எனவும் சீதையை உரிமை யோடு ஏவியவாறு. இடத்திற்கு என்பது உருபுமயக்கமாய் இடத்தில் என நின்றது. போதுதி என்பது போதி என மருவிற்று. (92)

786 எங்களாச் சிரமத் தெல்லை யிவ்விடத் தெல்லை
யில்லா
மங்கையர் தவவே டத்தைத் தாங்கிமா தவஞ்
செய் வோர்கள்
அங்கவ ருன்னைக் கண்டா லகமகிழ்ந் துடனே
கொண்டு
தங்களாச் சிரமத் தேபோய்த் தாங்குவர் தளர
லென்ருன்.

எங்கள் ஆச்சிரமத்து எல்லை இவ்விடத்து எல்லை இல்லா
மங்கையர் தவவேடத்தைத் தாங்கி மாதவம் செய்வோர்கள்;
அங்கு அவர் உன்னைக் கண்டால் அகமகிழ்ந்து உடனே கொண்டு
தங்கள் ஆச்சிரமத்தே போய்த் தாங்குவர்; தளரல்! என்ருன்.

பொ:- "எங்கள் ஆச்சிரமத்து எல்லையாகிய இவ்விடத்தில் அளவில்லாத பெண்டிர் தவவேடம் தாங்கிப் பெருந்தவம் செய்கின்றவர்களாகவுள்ளார்கள்; அவர்கள் உன்னைக் கண்டுவிட்டால் மனமகிழ்ந்து உன்னை தங்கள் ஆச்சிரமத்திற்கு உடனே கொண்டு போய்ப் பாதுகாப்பார்கள்; எனவே மனந்தளராதே" என்ருன்.

கு:- ஆடவராகவுள்ள முனிவர் ஆச்சிரமத்தில் ஒருபெண் தனித்துத் தங்குவது எப்படி என நினைத்துத் தளர்கின்ற சீதையின் நிலையையுணர்ந்து வான்மீகி இதைக் கூறினுர் என்க. பெண் துணைக்குக் குறைவில்லையென்பார், 'எல்லையில்லா மங்கையர் தவவேடத்தைத் தாங்கி மாதவஞ் செய்வோர்கள்' என்ருர். மங்கையர் தவஞ்செய்வோர்களாக உள்ளார்கள் என வேண்டுஞ் சொல் வருவித்து முடிக்க. இனி தவஞ்செய்வோர்களாக எல்லை

யில்லா மங்கையர் உளர் என மாற்றி முடிக்கினும் அமையும். இப்பொருளுக்கும் உளர் என்ற சொல் வருவிக்க வேண்டும். தங்களாச்சிரமத்தே உடனே கொண்டு போய்த் தாங்குவர் என இயையும். தளரல் என்பது மகனெனல் என்புழிப் போல அல்லிற்று வியங்கோள்; எதிர்மறைப் பொருளது. (93)

## வான்மீகி சீதையைத் தன் தவச்சாலைக்குக் கொண்டு போதல்

787 துங்கமா தவனிவ் வாறு சொல்லிடக் கேட்ட தூயாள்
அங்கவ னல்ல றீர்க்கு மடியிணை வணங்கி நிற்ப
மங்கையை யுடனே கொண்டம் மாதவ னோமத் தூமம்
தங்கிய முகட்டுப் பன்ன சாலையை வந்து சார்ந் தான்.

துங்க மாதவன் இவ்வாறு சொல்லிடக் கேட்ட தூயாள்,
அங்கு அவன் அல்லல் தீர்க்கும் அடியிணை வணங்கி நிற்ப,
மங்கையை உடனே கொண்டு அம்மாதவன் ஓமத் தூமம்
தங்கிய முகட்டுப் பன்ன சாலையை வந்து சார்ந்தான்.

பொ :- தூய்மையுடைய வான்மீக முனிவர் இவ்வாறுசொல்லக் கேட்ட தூயவளாகிய சீதை, அவ்விடத்துத் தன் துன்பத்தைத் தீர்க்கின்ற அம்முனிவன் இணையடிகளை வணங்கி நிற்ப, அவள் குறிப்புணர்ந்த அம்முனிவன், அந்தச் சீதையைத் தன்னுடனே அழைத்துக் கொண்டு ஓமப்புகை தங்கியுள்ள முகட்டினையுடைய பன்னசாலைக்கு வந்து சேர்ந்தான்.

கு:- துங்கம்-தூய்மை. முனிவர் சொல்லிற்கு உடன்பட்டமைக்குக் காரணம் அச்சீதையின் தூய்மையே என்பது தோன்ற அவட்குத் 'தூயாள்' என்று பெயர் கூறினர். அங்கு அல்லல் தீர்க்கும் அவன் அடியிணை என இயையும். அவனடியிணை வணங்கியது, முனிவர் சொல்லை ஏற்றுக் கொண்ட குறிப்பினையுணர்த்தவேயாம். அக்குறிப்பினையுணர்ந்தே முனிவர் அவளை யுடன்கொண்டு பன்னசாலையைச் சார்ந்தார் என்க. தன் இனிய அன்புறு

சொற்களால் சீதையினல்லல் தீர்த்தவன் முனிவனேயாதல் தெளிவு. மங்கை என்பது இங்குப் பருவம் குறியாது பெண்டு என்னுந் துணையாய் நின்றது. ஓமத்தூமம்-யாகப்புகை. வான்மீக முனிவரின் ஆச்சிரமத்தில் முத்தீ வேள்வி நடந்துகொண்டே யிருப்பதால் அந்தப் பன்னசாலையின் முகட்டில் ஓமப் புகை நீங்காது தங்கியிருக்கும் என்க. பன்னசாலை-தழையாலானகுடில். முகடு-பன்னசாலையின் மேன்முகடு. (94)

## சீதையைக் கண்ட தவமகளிர் பேச்சு

788 சீதையைக் கண்ட மாதர் தெரித்திர ராகி
யுள்ளோர்
மாதனம் பெற்ருற்போல மகிழ்ந்தவள் வடிவைக்
கண்டு
தீதறு நலத்தின் மிக்க திருமக ளிவளோ
வென்பார்
வேதனை யுள்ளே யுண்டிம்மெல்லிய லாளுக்
கென்பார்.

சீதையைக் கண்ட மாதர், தெரித்திரராகியுள்ளோர்
மாதனம் பெற்ருற்போல மகிழ்ந்து, அவள் வடிவைக் கண்டு,
'தீது அறு நலத்தின் மிக்க திருமகள் இவளோ?' என்பார்,
வேதனை உள்ளே உண்டு இம்மெல்லியலாளுக்கு என்பார்.

பொ :-(வான்மீகரின் தவப்பள்ளியில்) சீதையைக் கண்ட தவமகளிர், வறுமையுற்றிருந்தவர்கள் பெருஞ்செல்வத்தைப் பெற்ருற்போல மகிழ்ந்து, அவள் வடிவழகைக் கண்டு, 'குற்றமே யில்லாத அழகில் மிக்கு விளங்கும் இவள் திருமகள் தானே?' என்று கூறுவார்கள். 'இந்த மெல்லியலாளுக்கு உள்ளத்தே வேதனை உண்டு' என்று அவள் முகக் குறிப்பால் அகத்தை ஆராய்ந்து சொல்லுவார்கள்.

கு:- மாதர் என்றது, தவக்குடிலில் தவஞ் செய்யும் தவ மகளிரை. தரித்திரர் என்பது மோனை நோக்கித் 'தெரித்திரர்'

என்று வந்தது; போலி. தெரித்திரராகியுள்ளோர்-வறியவராக உள்ளவர். மாதனம் - பெருஞ்செல்வம். வறியவர் பெருஞ் செல்வம் கிடைக்கப் பெற்றால் எப்படி மகிழ்வார்களோ அப்படி மகிழ்ந்தனர் தவமகளிர் சீதையைக் கண்டு என்ற வாறு. மாதர் மகிழ்ந்து என இயையும். மகிழ்ந்து வடிவைக் கண்டு இவள் திருமகள்தானே என்பார் என்க. அழகைக் கெடுக் கின்ற மறு ஏதும் இல்லாத பேரழகுடையவள் என்பார். 'தீதறு நலத்தின்மிக்க இவள், என்றார். இவள் திருமகளோ என இயையும். நாம் காண்கின்ற இவள், நூல்வழியுணர்ந்த திருமகளோ? என வியந்து வினவியவாறு. வேதனை - துன்பம். இந்தப் பேரழகுடைய ளாயினும் அகத்தில் மகிழ்ச்சியில்லை என்பார், 'வேதனையுள்ளே யுண்டு' என்றார். 'இம்மெல்லியலாட்கு' எனச் சுட்டிக் காட்டிக் கூறியவாறு. மெல்லியலாள்-மெல்லிய தன்மையுடையவள். வருஞ் செய்யுளில் முடியும்; குளகம். (95)

## ஐயுற்றுப் பேசும் மகளிர்க்கு வான்மீகி விளக்கம் கூறத் தொடங்கல்

789 தாங்கருஞ் சினத்தால் விண்ணோர் சபிப்பவீழ்ந் தாளோ வென்பார்
ஆங்கவ ரிந்த வண்ண மையுறு கின்ற காலை
ஈங்கிவள் பிறப்பும் பேரு மிவள்கண வன்றன் பேரும்
நீங்கள் கேள் மின்க ளென்று நெடுந்தவ முனிவன் கூறும்.

தாங்கரும் சினத்தால் விண்ணோர் சபிப்ப வீழ்ந்தாளோ? என்பார்,
ஆங்கு அவர் இந்த வண்ணம் ஐயுறுகின்ற காலை,
"ஈங்கு இவள் பிறப்பும் பேரும் இவள் கணவன்தன் பேரும்
நீங்கள் கேண்மின்கள்" என்று நெடுந்தவ முனிவன் கூறும்.

பொ: (முகக்குறிப்பால் அகக் குறிப்புணர்ந்த தவமகளிர்) இவள், தேவர்கள் தடுத்தற்கரிய கோபத்தால் சபிப்பத் தரையில் வீழ்ந்தவளோ? என்று கூறுவார்; அங்கு அத்தவமகளிர் இவ்வாறு பலவகையாக ஐயுற்றுப் பேசும் பொழுது, நெடுந்தவ முனிவனாகிய

வான்மீகி "இங்கு வந்துள்ள இவள் பிறப்பும் பெயரும் இவளுடைய கணவன் பேரும் நீங்கள் கேளுங்கள்" என்று சொல்லுவானானன்.

கு: தாங்கருஞ்சினம்-தடுத்தற்கரிய கோபம். சபித்தல்-சாபங் கொடுத்தல். விண்ணோர் தாங்கருஞ் சினத்தால் சபித்தலால் வீழ்ந்தாளோ என இயையும். திருமகளிவளோ எனவும் விண்ணோர் சபிப்ப வீழ்ந்தாளோ எனவும் ஐயுற்றுக் கூறினமை யால் அவர்கள் ஐயம் திர வான்மீகி, "இவள் பிறப்பும் பேரும் இவள் கணவன் தன் பேரும் கேண்மின்கள்" எனச் சொல்லலானான் என்க. "சுரருலகு தனினின்றும் வழுவிவிழுந்தாளோ மண்ணுல கிலுள்ளாளோ? யாவளோ" என முன்னர் வான்மீகியின் சீடர்கள் ஐயுற்றுக் கூறியதும் காண்க. நெடுங்காலம் தவம்செய்த முனிவர் என்பார், 'நெடுந்தவமுனிவன்' என்றார். முனிவர்களில் நெடிய வடிவினனாகிய முனிவன் எனலும்ஆம். (96)

### வான்மீகி அவள் வரலாறு கூறுதல்

790 மனுகுலம் விளங்கத் தோன்றி மறிகடல் மலையால் கட்டித்
தனுவினா லிலங்கை செற்ற தசரத ராமன் றேவி
துனியறு சனகன் பெற்ற தூயவள் சீதை யென்பாள்
இனையவள் கணவனானேன் றுறந்திட வீங்கு வந்தாள்.

மனுகுலம் விளங்கத் தோன்றி மறிகடல் மலையால் கட்டித்
தனுவினால் இலங்கை செற்ற தசரத ராமன் தேவி;
துனியறு சனகன் பெற்ற தூயவள்; சீதைஎன்பாள்;
இனையவள் கணவனானேன் துறந்திட ஈங்கு வந்தாள்.

பொ: இவள், மனுவின் குலம் விளக்கம் பெறத் தோன்றி, அலைகள் மறித்து வீசும் கடலை மலைகளால் அடைத்து அணைகட்டிப் புகுந்து வில்லினால் இலங்கையை அழித்த தசரதராமனுக்குத் தேவி ஆவாள்; யார் மேலும் கோபம் இல்லாத சனகன் பெற்ற

ஆயமகள்; சீதை என்னும் பெயருடையவள்; தன் கணவன் துறந்தமையினால் இங்கு வந்துளாள்.

கு: "இவள் பிறப்பும் பேரும் இவள்கணவன் பேரும்-கேண்மின்கள்" என்று தொடங்கிய முனிவர், இறுதியிற் றியகூ கணவன் பேரையே முதற்கண் கூறுகின்றார்; அது எல்லோராலும் அறியப்பட்ட பெயராகலின். மற்ற மன்னர்கள் மனுகுலம் என்பதால் விளக்கம் பெற்றனர்; இராமனே மனுகுலம் விளக்கம் பெறத் தோன்றினவன் என அவன் சிறப்புப் புலப்படுத்தியவாறு. கடலிலங்கையைச் சேனையோடு அடைந்த அருமை புலப்பட வேண்டி 'மறிகடல் மலையால் கட்டி' என்றார். இலக்குவனும் வீடணனும் சுக்கிரிவனும் எழுபது வெள்ள வானர சேனையும் இருந்தாலும் இலங்கையை யழித்ததில் முதன்மை இராமனது வில்லுக்கே உண்டு என்பது தோன்ற 'தனுவினாலிலங்கை செற்ற' என்றார். விளக்கம் தோன்றத் 'தசரதராமன்' என்று தந்தைபெயரோடு சேர்த்துக் கூறினார். இராமன் என்ற பெயர் பிறர்க்கும் இருத்தல் நினைந்து. இதனால் கணவன் பேர் கூறினார். சனகன் பெற்ற தூயவள் என்பதால் பிறப்பும்; 'சீதை என்பாள்' என்றமையால் பேரும் கூறியவாறு. துனி-கோபம்; வெறுப்பு. துனியறு சீதைஎனக் காட்டலும் ஆம். ஆனேன் என்பதும் கணவனோடுசேர்ந்து எழுவாய் ஆயது. கணவனானேன் என்பது உலக வழக்கு. (97)

## இலக்குவன் இராமனைப் பணிந்து செய்ததையுரைத்தல்

791 மாதவத் தோனங் கிவ்வகை யுரைப்ப மங்கையர்
அனைவரு மகிழ்ந்து
சிதையைப் போற்றச் சுமந்திரனோடு மிளையவன்
றிருநகர் புகுந்து
நாதனைப் பணிந்து செய்ததை யுரைப்ப
நாட்டுளோர் சொல்பழி கேட்டு
வேதனை யுற்ற வன்றினு மிக்க வேதனையுற்றனன
வீரன்.

மாதவத்தோன் அங்கு இவ்வகை உரைப்ப, மங்கையர் அனைவரும் மகிழ்ந்து
சீதையைப் போற்றச்; சுமந்திரனோடும் இளையவன் திருநகர் புகுந்து,
நாதனைப் பணிந்து செய்ததை உரைப்ப, நாட்டுஉளோர் சொல்பழி கேட்டு
வேதனை உற்ற அன்றினும் மிக்க வேதனை உற்றனன் வீரன்.

பொ:- பெருந்தவ முனிவனாகிய வான்மீகி அவ்விடத்து இவ்வகையாகச் சொல்ல, தவ மடந்தையர் அனைவரும் மகிழ்ந்து சீதையைப் போற்றிக் காவாநிற்க; இளையவனாகிய இலக்குவன் சுமந்திரனோடும் போய் அழகிய அயோத்தி நகரில் புகுந்து, உலகநாதனாகிய இராமனைப் பணிந்து செய்ததைச் சொல்ல, வீரனாகிய இராமன் நாட்டில் உள்ளவர்கள் சொல்லும் பழி மொழி கேட்டு வேதனைப் பட்ட அன்றைய நாளினும் மிகுதியாக மன வேதனைப் பட்டான்.

கு: சீதை வனம் புக்க செய்தியைச் சொல்லி முடித்துவிட்டு, இலக்குவன் வனத்தில் சீதையை விட்டுத் திரும்பி அயோத்தியையடைந்து இராமனை வணங்கி ஏவலை நிறைவேற்றிய செய்தியைக் கூற, இராமன் மிக்க வேதனையுற்றமையைத் தெரிவித்துவாறு. சீதையைக் காணும்பேறு பெற்றமையால் தவமடந்தையர் அனைவரும் அக மகிழ்ந்து அவளைப் பேணிப் போற்றி நின்றார் என்று சீதை வனம்புகு செய்தியை முடிக்க. திருநகர் என்றது அயோத்தியை. நாதன் என்றது இராமனை. நாட்டவர்பழித்துரை கேட்ட அன்றைய வேதனையிலும் அன்புறுசீதை வனத்திடை விடப்பட்டாள் என்பது கேட்டு இன்றைய வேதனைமிகப் பெரிதாயிற்று இராமனுக்கு என்றவாறு. உரைப்ப என்ற செயவெனெச்சம் உற்றனன் என்ற பிற கருத்தாவின் வினைகொண்டு முடிந்தது. (98)

## விதியை நோவதே பொருந்தும் என இலக்குவன் சொல்ல இராமன் தெளிதல்

792 துதிபழி யிரண்டுங் கேட்டது சொல்லுமுலகையு
மதன்வழி யொழுகும்
மதியையு நோவ வடாதுமா சனகன் மகளையு
நோவவிங் கடாதால்
அதிகுண வதியா யழலினுந் தூய வவளையு
முன்னையும் பிரித்த
விதியினை நோவ வடுக்குமென் றிளையோன்
விளம்பித் தேறினன் வீரன்.

"துதிபழி இரண்டும் கேட்டது சொல்லும் உலகையும் அதன் வழி
ஒழுகும்
மதியையும் நோவ அடாது; மாசனகன் மகளையும் நோவ இங்கு
அடாதால்;
அதிகுண வதியாய் அழலினும் தூய அவளையும் உன்னையும் பிரித்த
விதியினை நோவ அடுக்கும்" என்று இளையோன் விளம்பித்
தேறினன் வீரன்.

பொ: "புகழ் பழி இரண்டும் தான் கேட்டதைக் கேட்டவாறே (நேரில் காணுமல்) சொல்லும் உலகத்தையும் அவ்வுலகத்தோர் வழியே ஒழுகுகின்ற மதியையும் நொந்து கொள்ளுதல் பொருந்தாது; சிறந்த சனகன் மகளாகிய சீதையையும் இங்கு நொந்து கொள்ளுதல் பொருந்தாது; மிக்க குணவதியாய் நெருப்பினும் தூயவளாகிய சீதையையும் உன்னையும் கூடியிராமல் பிரித்த விதியினை நொந்து கொள்ளுதல் பொருந்தும்" என்று இலக்குவன் சொல்ல வீரனுகிய இராமன் துன்பத்தினின்று தேறினுன்.

கு: உலகத்தின் இயல்பை உண்மையால் நோக்கின் நேரில் பாராமலே புகழ்தலும் இகழ்தலும் கேள்வி மாத்திரையால் சொல்லும் இயல்பினது இவ்வுலகம். அவ்வுலகத்தின் வழியே சென்றது நும்மதி; நும்மதியின் வழியே தூயவளாகிய சீதை

வனத்தில் விடப்பட்டாள். நும்மதியையோ அல்லது சீதையையோ நொந்து கொள்வது பொருந்தாது. நெருப்பினும் தூயவளாய சீதையையும் காதல்மிக்க உன்னையும் பிரிந்திருக்கச் செய்த விதியைத்தான் நொந்து கொள்ளலாம் என்பது இலக்குவன் அறிவுரை. மதியினும் வலியது விதியே என்பது தெளிவாதலின் இங்ஙனம் கூறினன். சீதையின் பிரிவால் பெரிதும் வருந்துகின்ற இராமனைத் தெளிவித்தவாறு. கேள்வியளவிலே புகழ்தலும் இகழ்தலும் செய்கின்ற உலகத்தார் வார்த்தை உண்மையாக மதிக்கத் தக்கதன்று; அவ்வார்த்தையைக் கேட்டுக் கனலில் மூழ்கித் தன் கற்புடைமையைக் காட்டிய சீதையை வனத்திடை விடுத்தது பெருந்தவறு; ஆனால் இதைச் செய்வித்தது விதியே என அமைதி கூறியவாறு. சீதையும் வனத்தில் விதியையே நோக்கி நொந்து கொண்டதும் இங்கு நினையலாம். (99)

சீதை வனம்புகு படலம் - முற்றும்.

---

# 13. இலவணன் வதைப் படலம்

## முன்னுரை

மதுவின் மகனாகிய இலவணன் என்னும் அசுரனைச் சத்துருக்கன் வதைத்தது பற்றிக் கூறும் பகுதியாகலின் இது இலவணன் வதைப்படலம் எனப் பெயர் பெற்றது. சிலசுவடிகளில் கையடைப் படலம் எனவும் சிலசுவடிகளில் இராச நீதிப்படலம் எனவும் இப் படலப் பெயர் காணப்படுகின்றது. இலவணனைக் கொல்லும் பணியைச் சத்துருக்கன் கையில் ஒப்புவித்த காரணத்தால் கையடைப் படலம் எனப்பெயர் பெற்றது போலும். இராமன் அரச நீதிகளை இலக்குவனுக்குச் சொல்லும் பகுதி இப்படலத்தின் முற்பகுதியில் இருத்தலால் இராச நீதிப்படலம் எனப் பெயர் பெறுதல் இயல்பே.

## படலக் கதை

இராமன் இலக்குவனை விளித்து நம் நாட்டின் நடப்பினை நாள் தோறும் ஆராய்ந்து முறை செய்வதுதான் அரச தருமம். நாம் அதனை முயன்று காப்போம் ஆக. கோபம் கொண்ட மனத்தை யுடையவனாகிச் செங்கோலை விட்டுக் கொடுங்கோல் ஆட்சி செய்து ஆறில் ஒன்று கொள்ளாமல் அதிகமாக வரி வாங்கியும் அறமல்லாதவற்றை அகற்றாமலும் வாழ்வோனது நாட்டில் வாழ்வோர் மூடர்கள் ஆவர். தண்டிக்கப் படவேண்டிய குற்றவாளிகளைத் தண்டிக்காமல் விடுத்து, தண்டிக்கப் படாதோராகிய நல்லவர்களைத் தண்டிக்கின்ற கொடுங்கோல் மன்னன் இப் பிறப்பில் பழியை அடைந்து மறுமையில் எம தருமனால் தண்டிக்கப்படுவான்.

## நிருகன் கதை

மன்னவன் நாட்டின் நடப்பினைக் கவனித்து ஆட்சி செய்ய வேண்டும். மற்ற சிறப்புகள் எல்லாம் பெற்றிருந்தும் நாட்டின் நடப்பைக் கவனியாதிருந்து கெட்டான் நிருகன். கோடிக் கணக்கான பசுக்களைத் தானம் செய்தான் நிருகன். ஒருமறையோனுக்குக் கொடுத்த பசு யிரண்டு வந்து அரசனது பசு மந்தையில் சேர்ந்து விடுகின்றது. அவ்வாறு மீண்டு வந்த பசுவை வேருெரு மறையவனுக்குக் கொடுக்கின்ருன். மன்னனிடம் முன் தானமாகப்பெற்ற பசுவைக்காணுது அம்மறையோன் பலவிடங்களிலும் தேடுகின்ருன்.

ஓரிடத்தில் அப்பசுவைக் காண்கின்ருன். இரண்டாம் முறை அப்பசுவைத் தானமாகப் பெற்றவன் வீட்டில் அது இருந்தது. இப்பசுவை யான் நிருகன்பால் தானமாகப் பெற்றேன். இது என்னுடையது என்ருன் முன்பு தானம் பெற்றவன். 'யான் நிருகனிடம் தானமாகப் பெற்றது இது; எனக்கே சொந்தம்;' எனப்பின்பு தானமாகப் பெற்றவனும் சொன்னுன். இருவர் கூறுவதும் உண்மை. தமக்குள் முடிவு பெருது இந்த வழக்கை அரசனிடம் சொல்லச் சென்ருர்கள்: மன்னவன் அரண்மனை வாயிலில் இருவரும் பன்னெடுங்காலம் காத்துக் கிடந்தார்கள். மன்னவன் வெளியில் வந்து முறையிடு என்ன என்று கேளாது இருந்தமையால் கோபங்கொண்டு அவனை ஓணுன் ஆகுமாறு சபித்தார்கள். ஓணுன் அச்சத்தால் வெளியில் நில்லாது மறைவிடத்தில் ஒடுங்கியிருத்தல் போல இந்த நிருகனும் குடிகள் முறையீட்டைக் கேளாது அரண்மனைக்குள் ஒடுங்கியிருத்தலின் ஓணுன் ஆகுமாறு சபித்தார்கள்.

சாபம் கொடுத்த மறையவர்கள் சாபவிடுதலையையும் கூறினுர்கள். ஒரு கிணற்றில் ஓணுன் தலை கீழாகத் தொங்கிக் கொண்டு இரண்டு யுகங்களைக் கழித்த பின்பு துவாபர யுகத்தில் அவதரிக்கும் கண்ணனுடைய செந்தாமரைக் கண்ணுல் பார்க்க இச்சாபம் நீங்கும் என்பது அவர் குறித்த சாப விடு: அவர்கள் கொடுத்த சாபத்தின் படி நிருகன் ஓணுன் ஆகி ஆழ்கிணற்றில் வீழ்ந்தான்.

## நிமியின் கதை

நாட்டினை நாள் தொறும் கவனியாத அரசன் பெற்ற கேடு இது என இராமன் சொல்லக் கேட்ட இலக்குவன் என்ன அற்புதம் இது என வியந்து கூற, இராமன் மீண்டும் ஒருகதையைக் கேள் எனச் சொல்கின்றான். நிமி என்னும் மன்னவன் மனுவின் குலம் விளங்க இவ்வுலகத்தில் தோன்றிய பன்னெடுங்காலம் இந்தப் பூமியை ஆட்சி செய்துவிட்டுப் பின்பு அரசைத் துறந்து காட்டில் புகுந்து தன் வினைகெட அரிய தவத்தைச் செய்கின்றான். 'தீர்க்க சத்தியாகம்' என்ற வேள்வியைச் செய்ய எண்ணி, அத்திரி முனிவர், பிருகுமுனிவர், ஆங்கிரா முனிவர், வசிட்ட முனிவர் என்னு நட்பு மிக்க முனிவர்களை அணுகி அந்த வேள்வியை நடத்தும் பொருட்டு அழைத்திட, வசிட்ட முனிவர், தம்மை இந்திரன் யாகஞ்செய்ய முன்னமே நியமித்துக் கொண்டது கூறி 'அந்த வேள்வியை முடித்தபின் நின்னிடம் வருகின்றேன்' எனச் சொல்ல, நிமி, கோதம முனிவனைக் கொண்டு வேள்வியை நடத்தாநிற்க. இந்திரனது வேள்வியை முடித்து வந்த வசிட்டன் கோதமனைக் கொண்டு செய்கின்ற நிமியின் வேள்வியைக் கேட்டு வெகுண்டு அவன் வேள்வி செய்யும் திறத்தினைக் காணச் சென்ற போது நிமி துயில் கொண்டிருந்தானாக, வசிட்டன் வெகுண்டு, 'நிமி உயிர் பிரிவானாக' எனச் சபித்தான். அதை அறிந்த நிமி, தன்வரவையறியாமல் யான் துயில் கொண்டிருக்க, என்னைச் சபித்த இச்சாபம் தன்னையும் சார்வதாக என்று எதிர் சபித்தான்.

இவ்வாறு இருவரும் விரோதமாகி நிகழும் நாளில் வசிட்டன் ஆவி பிரமனை அடைந்து, 'நிமியின் சாபத்தால் பிரிவரும் உடம்பை விட்டேன். அதைப் பெறும் வழி அருள்க' என வேண்ட, பிரமன், 'ஊர்வசி மேல் வைத்த காதலால் வருணன் விட்ட வீரியத்தைச் சார்ந்துக் கும்பமாகிய தெய்வயோனியில் புத்தரனாகப் பிறப்பாய் நீ போ' என்றான். பிரமன் சொற்படி மீண்டும் கும்பத்தில் தோன்றினான் வசிட்டன். இவ் வரலாறு கேட்டு வியப்பெய்திய இலக்குவன், 'நிமியின் ஆவி எங்குப் பிறந்தது; வேள்வி என்னாயிற்று? என்பதையும் சொல்லுக' என வேண்ட, இராமன் சொல்கின்றான்: தூய சாபத்தால் ஆவி பிரிந்த நிமியின் உடலை அன்புமிக்கவரால்

ஆடை ஆபரணங்கள் கொண்டு அலங்கரிக்கச் செய்துவிட்டு, ஐயாயிரம் ஆண்டுகள் வரையில் வேள்விக்குரிய செயல்களில் குறைவு இன்றித் தூய்மைமிக்க முனிவர்கள், அந்த நிமி முன்பு தொடங்கிய தீர்க்க சத்தியாகத்தைச் செய்து முடித்தனர். அப்போது தேவர்கள் வந்து குழுமி, அந்த நிமியின் ஆவியை அழைத்து, உன் வேள்வியால் யாம் சிந்தை மகிழ்ந்தோம். எம்பால் ஒருவரம் வேண்டிப் பெறுக எனக் கூற, நிமி, 'இந்த உலகத்தவர் கண்களில் யான் நின்று உலாவுகின்ற இந்த வரத்தைத் தந்திட வேண்டும்' என்று வேண்டிக் கொள்ளத் தேவர்கள் 'தந்தோம்' என்று சொல்லிவிட்டுத் தமக்குரிய இடங்களை அடைந்தார்கள். முனிவர்கள் ஒருமகன் பிறக்கவேண்டி நிமியின் உடலை தீக்கடைகோல் கொண்டு கடையச் சனித்தவன் ஆதலால் 'சனகன்' என்று அவன் பெயர் சொல்லி, 'இனித்தரணியை ஆள்க' என அவர்கள் கூற இந்த உலகத்தை ஆண்டான் என்று இராமன் சொல்லிவிட்டு மீண்டும் கூறுகின்றான்.

தவத்தாலும் கல்வியாலும் உணர்வாலும் உண்மையாலும் உயர்ந்தனர் ஆயினும் கோபத்தால் இப்படிப்பட்ட துன்பத்தையடைந்தார்கள். எனவே புறப்பகை வென்றவர்க்கும் அகப்பகையாகிய கோபத்தை வெல்லுதல் அரிது. கோபத்தீயினை ஒக்கும் உட்பகை உலகில் வேறில்லை.

## யயாதி கதை

இலக்குவ! நகுடன் மகன் யயாதி என்னும் மன்னன் நாட்டு மக்களிடம் அன்பு பூண்டு அவர்கள் நலியாமல் காப்பாற்றியவன். சிவனிடம் பேரன்பு பூண்டவன். சன்மிட்டைக்கும் சுக்கிரன் மகள் தெய்வயானிக்கும் கணவன். தருமத்தில் பற்றுள்ள யயாதிக்குச் சன்மிட்டையின் வயிற்றில் பூரு என்பவன் பிறந்தான். தெய்வயானியின் வயிற்றில் யது என்பவன் பிறந்தான். பூருவும் யதுவும் வளர்கின்றபோது ஒருநாள் யது என்பவன் அழுது கொண்டு தாயிடம் சென்று, 'அன்னையே! மன்னன் யயாதி சன்மிட்டையின் மகனாகிய பூருவையே பாராட்டி, உன்மகன் என்னும் வெறுப்பினால் என்னை அதட்டி அச்சுறுத்தித் துரத்துகின்றான். இந்த நிலையில் உயிர் வாழ்வதை விட மயிர் நீப்பின் வாழாத கவரி மான்போல நாம் மாய்தலே நல்லது' என்றான்.

அவன் சொல்லியதைக் கேட்ட தெய்வயானி மகனை அழைத்துக் கொண்டு தந்தை சுக்கிரனிடம் சென்று அழுது கொண்டு, 'தந்தையே! மன்னவன் யயாதியின் சிந்தை சன்மிட்டையின்மேல் செல்லுதலால் அவள்மகனைக் கண்டால் அவனை அன்போடு அணைத்துக் கொள்கின்றான். என்மகனைக் கண்டால், வெறுத்து துரத்துகின்றான். இத்தகைய துன்பநிலையில் நாங்கள் இனி உயிர் வாழ விரும்பவில்லை. எரியில் வீழ்ந்து இறக்கின்றோம்' என்று கூறினாள். தன்மகள் கண்கலங்கிச் சொன்னது கேட்டவுடன் சுக்கிரன் பெருங்கோபங் கொண்டு அந்த மாற்றாளிடம் அன்பாய்த் தெய்வயானிக்குத் துன்பத்தைச் செய்கின்ற யயாதி தன் இளமை நீங்கிப் பெண்டிர் கண்டு சிரித்தற்குரிய மூப்பினையடைவானாக எனச்சபிக்கின்றான்.

சுக்கிரன் கொடுத்த சாபத்தால் யயாதிக்குக் கால்கள் தளர்ந்து, உடம்பு வில்லைப் போல வளைந்து, தோல் சுருங்கித் தலை மயிர் வெளுத்து, நெஞ்சு வலியோடு இருமிக் கண்ணீர் விட்டு நாக்குழறிப் பற்கள் அசைந்தாடுகின்ற மூப்பு அப்பொழுதே தோன்றியது. யயாதி மனங்கலங்கித் தன்மகன் யதுவினை அணுகி, என்பால் வந்துள்ள இந்த மூப்பினை நீ ஏற்றுக் கொண்டு என் வருத்த நோயைத் தீர்ப்பாயானால் என் சிந்தையில் எண்ணியவற்றையெல்லாம் நிறைவு செய்துவிட்டு நல்லறங்களைச் செய்து விட்டு நீ கொண்டமூப்பை மீண்டும் யான் பெற்றுக் கொள்கின்றேன்' என்று வேண்டினான்.

யயாதியின் சொல்லைக் கேட்ட யது தந்தையைப் பார்த்து, 'எந்தையே! உன் அருமைமைந்தன் பூருவையுடன் கொண்டு உண்ணும் அன்றைக்கு யானும் உடன் உண்ணுதற்கு உரிமையில்லையெனத் துரத்தினாய்; இன்றைக்கு மட்டும் இந்த மூப்புத் துன்பத்தை நீக்க எனக்கு உரிமையுண்டோ?' என வினவுகின்றான். தன் கருத்தை ஏற்றுக் கொள்ளாது மறுத்த யதுவினை விடுத்துச் சென்று ஞானத்தவனாகிய பூருவை அழைத்து யயாதி, 'என் முதுமையினைப் பெற்றுக் கொண்டு என்துன்பத்தைத் தீர்க்க வல்லாயோ?' என வினவுகின்றான். புத்திரன் என்பவன் தன் குலத்திலுள்ளோர் அனைவரையும் நரகத்தில் வீழாமல் காப்பவனே என்ற ஆன்றோர் சொல்லை மெய்ப்பிப்பாயாக! என வேண்டுகின்றான்.

யயாதியின் சொல்லைக் கேட்ட பூரு, தந்தை துயரைத் தீர்க்கும் பேறு தனக்குக் கிடைத்தமைக்கு மகிழ்ந்து அத் தந்தையின் மூப்பைப் பெற்றுக் கொண்டு இளமையைத் தருகின்றான். இளமையைப் பூருவினிடம் பெற்ற யயாதி யது என்பவனை நோக்கி 'நீ மண்ணவரும் விண்ணவரும் இகழுமாறு நினக்குப் பிறக்கும் மகனோடு நரகம் அடைவாயாக' எனச் சபித்து விட்டுத் தன் கருத்து முற்றியபின் பூருவுக்கு முடி சூட்டி விட்டுத்தவத்தினைச் செய்யக் காடடைந்தான்.

இலக்குவ! கடுங்கோபம் உள்ளவர்கள் இவ்வாறு துன்புறு வார்கள் என்று விளக்க இலக்குவன் வியந்து பாராட்டுகின்றான்.

இராமன், மறுநாள் காலையில் சந்தியாவந்தனம் செய்து அந்தணர்கட்குப் பொன்னும் நிலமும் பசுவும் கொடுத்து விட்டு வீற்றிருந்தபோது முனிவர்கள் வருகின்றனர். அவர்களை முறைப் படி பூசித்து விட்டு, இப்போது உங்களுக்குத் தீங்கு ஒன்றும் இல்லையே என்று வினவ, அம்முனிவர்கள், மதுவின் மகனாகிய இலவணன் என்பவன் சிவபிரானால் கொடுக்கப்பெற்ற திரிசூலப் படையைத் தந்தை கொடுக்கப் பெற்று உலக முழுவதையும் அழித்துக் கொண்டு வனத்தில் தங்கியுள்ள எம் போன்ற தவமுனிவர்களைத் தவம் செய்யாதபடி கொடுமை செய்கின்றான். எங்கட்கு இடையூறு நேர்ந்தால் இந்த அயோத்தி நகர்க்கு வருவதன்றி வேறு புகலிடம் உண்டோ? என முறையிடு கின்றார்கள்.

முனிவர்களின் சொல்லைக் கேட்ட இராமன், 'முனிவர்க்குத் தீமை செய்யும் இலவணனை எமனுலகிற்கு அனுப்புவேன்; நீங்கள் அஞ்சாது போய் உங்கள் தவநிலையில் நில்லுங்கள்' என்று சொல்லி அனுப்பிவிட்டு, அந்த இலவணனைக் கொல்லும் திறனை எண்ணித் தன் தம்பிமாரை நோக்கி, 'இந்தக் கொடிய இலவணனைக் கொல்பவர் யாரோ?' என வினவியபோது இலக்குவன் எழுந்து சொல்கின்றான்: 'என்னை அனுப்பினால் அந்த இலவணனுக்குத் துணையாக யார்வரினும் அப்பாவியைக் கொல்வேன்' என்கின்றான்.

உடனே பரதன் எழுந்து, 'இலக்குவன் பதினான்கு ஆண்டுகள் நின்னோடு காட்டில் தங்கி உன்னை இரவும் பகலும் கண்ணுறங்காது காத்து வந்துள்ளான். அதிகாயன் இந்திரசித்து என்பாரோடு போர் செய்து நொந்துள்ளான். அந்த நோவினை நீ சிந்திக்க வேண்டும். இலவணனைக் கொல்ல என்னை ஏவினால் யான் அவனைக் கொன்று இந்தத் துன்பத்தைத் தீர்ப்பேன்' என்று கூறுகின்றான்.

அடுத்துச் சத்துருக்கன் எழுந்து, 'அரசர்க்கு அரசே! பரதன் நீ காடு புகுந்த செய்தி யறிந்து நின்னைக் கொணர்ந்து முடி சூட்டி மகிழ எண்ணியும் நின்னுடம்பாடு இன்மையால் நின் பாதுகையைப் பெற்றுக் கொண்டு அயோத்திக்குள் புகாமல் நந்திக் கிராமத்திலிருந்து மரவுரியுடுத்துச் சடைமுடி தாங்கிக் கண்ணீர் விட்டுக்கொண்டு நின்னையே நினைந்து பதினான்காண்டு தவஞ் செய்து வருந்தியவன். அத்தகைய பரதனை ஏவலாமோ? என்னை அனுப்பினால் அந்த இலவணனை விண்ணுலகேற்றி முனிவர் துயரைத் தீர்ப்பேன்' என்று கூறுகின்றான். சத்துருக்கன் கூறியது கேட்ட இராமன் மகிழ்ந்து 'போர்க்களத்தில் உன்னை எதிர்ப்பவர் இம்மூவுலகத்துமில்லை. நீசென்று அந்தக்கொடிய இலவணனைக் கொன்று தூயமுனிவர்களின் மனத்துயரைத் தீர்ப்பாயாக!' என்று கூறினான். உடனே எழுந்து இராமனை வலம் வந்து சத்துருக்கன் வணங்கி நின்றபோது, இராமன் தன்னிருதோள்கள் ஆரத் தழுவிக்கொண்டு யானையும், தேரும், குதிரையும், காலாளும் ஆகிய நால்வகைப் படைகளையும் கொடுத்து வழியனுப்புகின்றான்.

சத்துருக்கன் நால்வகைப் படையோடு தேர்மேல் ஏறிக் கொண்டு புறப்பட்டுக் கோசலை நாட்டைக் கடந்து கங்கை நதியில் நீராடி வான்மீகி தவம்புரியும் காட்டையடைகின்றான். அங்கு வான்மீகி செய்த உபசாரங்களைப் பெற்றுக் கொண்டு அங்குத் தங்கியிருந்த பொழுது அவ்விரவில் சீதை இருசெல்வர்களைப் பெற்றெடுத்த செய்தியறிந்த வான்மீகி முனிவர் அவ்விரு பிள்ளைகளையும் அன்போடு பற்றிப் பார்க்கின்றார். அப்பிள்ளைகளின் உடம்பு இலக்கணங்களைக் கூர்ந்து நோக்கி அக்குழந்தைகளைப் பூத பசாசங்கள் அணுகாவண்ணம் மந்திரங்களைச் சொல்லிக்

குசலவங்களால் அக்குழந்தைகளைத் துடைத்துப் போற்றினர். அதனால் குசலவர்கள் எனப் பெயர் பெற்றார்கள் அவ்விரு பிள்ளைகளும்.

சீதைக்குப் பிள்ளைகள் பிறந்தார்கள் என்பதை வான்மீகி முனிவர் கூறக்கேட்ட சத்துருக்கன், அயோத்தியிற் பிறவாது புள்ளொலி மிக்க காட்டிற் பிறந்திருக்கின்றார்கள். அயோத்தியில் பிறந்திருந்தால் மக்கள் மகிழ்ந்து என்ன ஆரவாரம் செய்வார்கள்! என்று நினைந்து வருந்தினன். பின்பு தேரிலேறி இலவணன் இருக்கும் திசையைத் தேடி விரைந்து செல்கின்றான். யமுனை நதிக்கரையில் முனிவர்களை வணங்கி அவர் உபசாரங்களை ஏற்றுக்கொண்டு அவரோடு தங்கி இலவணனைப் பற்றி முனிவர்களிடம் வினவ, அவர்கள் அந்த அரக்கனுடைய வலிமையும் வரலாறும் எடுத்துக்கூறிச் சிவபிரான் கொடுத்த சூலம் அவன்கையில் இல்லாத காலத்தில் அவனோடு போர்தொடங்கினல் அந்த இலவணன் நின்னால் கொல்லப்படுவான் என்றுகூறச் சத்துருக்கன் கேட்டு மதுபுரத்து மதில்வாயிலில் போய் சேனை சூழ நிற்கின்றான். சிவன் சூலம் கையிலிருக்கத் தன்னுயிர்க்கு ஈறில்லை எனச் செருக்கும் இலவணன் வெளியில் உலாவி விட்டுக் கையில் சூலமின்றி அந்த மதுபுரியை நெருங்கி அங்கு சேனையோடு நிற்கின்ற சத்துருக்கனைக் காண்கின்றான். உடனே வெகுண்டு சத்துருக்கனை நோக்கி நீயார்? நின்பேர் என்னை? இங்கு ஏன் வந்தாய் என வினவுகின்றான். அவ்வினாக்களுக்குப்பதில் சொல்லக் கேட்டு இலவணன் மேலும் வெகுண்டு என் தமயன் இராவணனைக் கொன்ற இராமன் தம்பி நீ என்னிடம் அகப்பட்டுக் கொண்டாய். உன்னுயிரைக் கொல்வேன்; உங்கள் மரபில் பிறந்த மாந்தாதா என்னால் அழிந்ததை யறிந்திருந்தும் இங்கு வந்துள்ளாய். அவன் வழியில் வந்தோர்க்கு அறியாமை என்பது வழிவழி வந்த அவலம் போலும்! என்கின்றான்.

சத்துருக்கன் சினமிகக் கொண்டு வில்லினை வளைத்து நாணேற்றி வஞ்சனாகிய இலவணனது நெஞ்சதிர, விண்ணதிர வில்நாணினை எறிகின்றான். அது கண்டு பொறுத இலவணன் அருகிலிருந்த மராமரத்தைப் பறித்து சத்துருக்கன் மேல் எறிகின்றான். சத்துருக்கனும் தன்கூரிய அம்புகளால் அம்மரத்தைத்

துண்டங்களாக்குகின்றான். அரக்கன் மீண்டு வேறொருமரத்தைப் பெயர்த்தெறிய அதனையும் பல துண்டங்களாக்கிவிட்டு இலவணன் மார்பிலும் பலஅம்புகளை யெய்கின்றான்.

குன்று போன்ற இலவணன் உடம்பில் குருதி சொரியவும் உயர்ந்த மரங்களை ஒன்றின் மேல் ஒன்றாகச் சத்துருக்கன் மேல் எறிகின்றான். அம்மரங்களை யெல்லாம் அம்பினால் துணிந்து வீழ்த்தான் சத்துருக்கன். பின்பு மந்தரமலைபோன்ற மரத்தைப் பெயர்த்துச் சத்துருக்கன்மேல் வீசுகின்றான் அரக்கன். மரம் தன் மேல் வீசத்தளர்ந்து தரையில் வீழ்ந்தான் சத்துருக்கன். அதைக்கண்ட இலவணன் இவனை ஒழித்துவிட்டோம் என்ற மகிழ்ச்சியில் சூலத்தையெடுத்துவர முயலவில்லை. அறம் துணை செய்யச் சத்துருக்கன் உறங்கிஎழுந்தவன்போல உணர்ந்து எழுந்தான். சினமிக்க சிங்கம்போல எழுந்த சத்துருக்கன் சிறந்த தெய்வக்கணைகளை மனத்தால் பூசித்து அந்த வஞ்சகன் மேல் சென்று உயிர் கவர்ந்து வருகென எய்கின்றான்.

சத்துருக்கன் விடுத்த அம்பு ஊழித்தீப் போலச் சினந்து விரைந்து சென்று இலவணன் உயிரைக் கவர்ந்து மீண்டும் சத்துருக்கன் கையில் வந்து சேர்ந்தது. தேவர்கள் மகிழ்ச்சியினால் மலர் மாரி சொரிய, அந்தணர்கள் ஆசி கூறச் சத்துருக்கன் மதுபுரியில் உள்புகுந்து அங்குப் பொன்னொளியன்ற மாட கூட கோபுரங்களையெல்லாம் பார்க்கின்றான். இலங்கை நகர்க்கும், இந்திரன் நகர்க்கும், அளகாபுரிக்கும் இந்த மதுபுரியின் அழகு வருமோ என்று பாராட்டிக் கொண்டு சிறந்த மணிமண்டபத்தை அடைகின்றான். அழகிய மகளிர் பல்லாண்டு பாடிச்சாமரைவீச அத்தரணி மண்டபத்தில் சிங்காசனத்தில் மகிழ்ச்சியுடன் அமர்ந்தான் சத்துருக்கன் என்பது இப்படலத்துக்கூறப்படும் பொருளாகும்.

## ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

**1. வான்மீகத்தில்:-** பசுவைத் தானமாகத் தன் பால் பெற்ற இரு அந்தணர்களும் கொடுத்த சாபத்தால் ஓணான் ஆன நிருகன் தன் அமைச்சர்களை அழைத்து இளவரசனாகிய வசு என்பவனுக்கு முடிசூட்டும்படி செய்துவிட்டுத் தனக்குச்

சுகமாக வசிக்க ஒரு குகையைச் சிற்பிகளைக் கொண்டு அமைக்கச் சொல்லி அதில் தங்கிச் சாபத்தை அனுபவிக்கின்றான் என வான்மீகம் கூறுகின்றது.

ஒட்டக்கூத்தர் இவற்றைச் சொல்லவில்லை. ஒருவன் ஆனவுடன் ஒரு கிணற்றில் தலைகீழாக வீழ்ந்து தொங்கிக் கொண்டே இரண்டு யுகங்களைக் கழித்ததாகக் கூறியுள்ளார். ஒட்டக்கூத்தர் கூறுவதே இயல்பாக இருப்பது போலத் தோன்றுகின்றது.

**2. வான்மீகத்தில்:-** இராமன் இலவணனைக் கொல்லச் செல்பவர் யார்? என்று வினவியபோது பரதனே எழுந்து தான் சென்று இலவணனைக் கொன்று வருவேன் எனக் கூறியதாக உள்ளது.

**ஒட்டக்கூத்தர்:-** இராமன் கேட்டபோது எழுந்து இலவணனுக்கு மூவுலகத்தோரும் துணையாக வந்தாலும் யான் சென்று இலவணனைக் கொன்று வருவேன் எனக் கூறியதாக உள்ளது. இது ஒட்டக்கூத்தரின் புதிய படைப்பே. வான்மீகி இதைக் கூறவில்லை.

**3. வான்மீகத்தில்:-** சத்துருக்கன் எழுந்து யானே சென்று இலவணனைக் கொன்று வருகின்றேன் என்று சொன்னதும் அதற்கு உடம்பட்ட இராமன் மேலும் மதுபுரியில் இலவணனைக் கொன்ற பின்பு அந்த நகரத்தில் நீ மன்னவனாய் ஆட்சி செய்க. அதற்கு முடிசூட்டுவிழா இங்கு நினக்குச் செய்கின்றேன் எனக் கூறச் சத்துருக்கன் அஞ்சி, அண்ணன் பரதனைப் போகவொட்டாது தடுத்த பாவத்திற்கு இது தண்டனைபோலும் என வருந்துகின்றான். அப்போது இராமன் தன் ஆணையையேற்றுக் கொள்ள வற்புறுத்தி அயோத்தியில் வசிட்டர் முதலிய அந்தணர் களைக் கொண்டு மதுபுரிக்கு மன்னவனாகச் சத்துருக்கனுக்கு முடிசூட்டி யனுப்பியதாக உள்ளது.

**ஒட்டக் கூத்தர்:-** சத்துருக்கனுக்கு இராமன் அயோத்தியில் மதுபுரி மன்னவனாக முடிசூட்டி அனுப்பிய செய்தியைச் சொல்லவில்லை. இலங்கைக்குச் செல்லு முன்பே வீடணனுக்கு இலங்கை மன்னனாக முடிசூட்டு விழா நடத்திய இராமன்

சத்துருக்கனுக்கும் மதுபுரியை அடைவதற்கு முன்னமே — இலவணனைக் கொல்லுதற்கு முன்னமே சத்துருக்கன் வீரத்தை யறிந்து அயோத்தியில் முடிசூட்டு விழாச் செய்து மதுபுரி மன்னவனாகவே சத்துருக்கனை அனுப்பிய செய்தி வான்மீகத்தில் கூறியிருப்பது பொருத்தமாக — அழகாக அமைந்துள்ளது. இத்' தகைய நிகழ்ச்சியை "கொள்ளார் தேஎம் குறித்த பக்கம்' எனத்துறைகூறி விவரிக்கின்றார் தொல்காப்பியர். ஒட்டக்கூத்தர் இதனைக் கூறாது விடுத்தது ஏனோ? அறியோம்.

## படலப் பொருட் சிறப்பு

இலவணன் வதைப் படலத்தில் முற்பகுதியில் இராமன் இலக்குவனுக்கு அரசநீதிகளை விளக்கும் முறை சிறப்பாக அமைந்துளது; இவ்வுலகினில் அரச நீதியை நடத்திக்காட்டவே அவதரித்த இராமன் சொல்லும் நீதிகள் மக்கள் தலைவர்களும் ஏற்றுக் கொள்ளக் கூடிய சிறப்புடையவாகும்.

> தண்டிக்கப் படுவோர் தம்மைத் தண்டியா தொழிந்து விட்டுத்
> தண்டிக்கப் படாதோர் தம்மைத் தண்டிக்குந்தரணி மன்னன்
> எண்டிக்கும் பரந்து மூடுமிரும் பழியெய்தித் தீயோர்த்
> தண்டிக்கும் தருமனாலே தண்டிக்கப்படும்பி னென்றான்.

என்று இராமன் கூறுவது எக்காலத்துக்கும் யார்க்கும் பொருந்தும் நீதியாதல் காணலாம். நிருகன் எனும் மன்னவன் நன்கு அரசு செலுத்தித் தானங்கள் பல செய்து சிறக்க வாழ்ந்தானாயினும் தான் தானமாகக் கொடுத்த பசுவொன்று மீண்டும் தன் பசுக்களோடு சேர்ந்ததையறியாமல் மீண்டும் வேறோர் அந்தணனுக்குத்தானம் கொடுக்க நேர்ந்தது அரசனுடைய தவறு இல்லை. அவன் வேண்டுமென்று செய்திலன். எப்படியோ நிகழ்ந்து விட்ட சிறு தவறு. இது காரணமாக முன்தானம் பெற்றவனும் அப்பசுவையே இரண்டாவதாகத் தானம் பெற்றவனும் தம்முள் சண்டையிட்டுக் கொண்டு நிருகனிடம் வந்து பல நாட்கள் காத்திருந்தும் அவன் அது பற்றி விசாரிக்காது அரண்மனை யகத்திலேயே இருந்து விட்டான். இதைப் பொறாத அந்த அந்தணர் இருவரும் நிருகனை ஓணானாகப் போகுமாறு சபித்து

விடுகின்றார்கள். இரண்டுயுகங்கள் கழித்து இவ்வுலகில் அவதரிக்கின்ற கண்ணனுடைய அருட்பார்வை பட்டதும் நிருகன் பழைய வடிவையடைவான் என்பது அவர்கள் கூறிய சாப வீடு.

இந்தக் கதையைப் பார்க்கும் போது நிருகன் செய்த குற்றம் சிறிது. அவன் அனுபவிக்கும் துன்பமோ இரண்டுயுகங்கள். இதை நோக்கின் கொடுமையாகவே படுகின்றது. இந்தக் கதையை இராமன் சொன்னது அரசன் மக்களின் முறையீட்டைக் கவனித்து உடனே நீதி வழங்கவேண்டும் என்பதை வற்புறுத்தவே என்பதை யுளங்கொண்டு அமைய வேண்டியுளது.

சினத்தினுல் வருங்கேட்டினை விளக்க நிமி, வசிட்டர்களின் வரலாறும் இருவரில் ஒருவர் சினத்தைப் பொறுத்துக் கொண்டு வாழ்வு பெற்றமைக்குச் சுக்கிரன் யயாதி வரலாறுகளும் இராமனுல் சொல்லப்படுகின்றன. இவையெல்லாம் மன்னவனின் மனநிலை அறத்தால் திருத்தமுற வேண்டும் என்பதை விளக்க வந்தவையே ஆம்.

இலவணனை வதைக்கச் செல்லும் சத்துருக்கன் வான்மீகியின் தவக்குடிலில் தங்கியிருந்த இரவில் சீதை மக்களிருவரை யீன்றாள் என்பதை வான்மீகி முனிவர் சொல்லக் கேட்டவுடன் அவன் சிந்தனையில் எழுந்த எண்ணங்களைப் பற்றி ஒட்டக் கூத்தர்,

பிள்ளைகள் சானகி வயிற்றில் பிறந்தார்களென முனிவர் சொல்லக் கேட்டாங்கு
உள்ள மகிழ்சத்துருக்க னுன்னுவா னுயர் மாடத்தயோத்தி யென்னும்
ஒள்ளியமா நகரியிடை யுற்பவிக்கப் பெறுதுவகை யொலி யொன் றின்றிப்
புள்ளொலியே மிகுகாட்டில் பிறந்தார்கள் பொன்னகரிற் பிறந்தாராயின்.
பொய்யாத வேதியர்க்குப் பூதானங் கோதான முதல பண்ணிக்
கய்யார நிதிவீசிக் காகுத்தன் காளையர்கள் பிறந்தா ரென்று

மைய்யார்பூம் பொழினகரி மகிழ்வெய்தி மணிமுரச மறைந்து நின்று
நெய்பாடலாற் சனங்களென் படுமோ வின்றென்று நினைந்து நைந்தான்.

என விவரிக்கின்றார். இத்தகைய நிலையில் யாருடைய உள்ளந் தான் வருந்தாது? அயோத்தி அரண்மனையில் பிறக்க வேண்டிய பிள்ளைகள் வனத்தில் ஆசிரமத்தில் பிறந்தமையால் ஒரு சிறப்புமின்றி இருக்கின்ற நிலையையுணர்ந்த சத்துருக்கன் அரண்மனையில் பிறந்திருந்தால் என்னென்ன நிகழ்ந்திருக்கும் என்பதை எண்ணிப் பார்க்காமலிருக்க வியலுமா?

சீவகன் பிறந்தபோது அவன் தாய் விசயை சொல்லியழுத
''அரும் பொற்பூணும் ஆரமும் இமைப்பக் கணியரகன் கோயில்
ஒருங்கு கூடிச் சாதகஞ்செய் தோகையரசர்க் குடன்போக்கிக்
கருங்கைக்களிறும் கம்பலமும் காசுங்கவிகள் கொளவீசி
விரும்பப் பிறப்பாய் வினைசெய்தேன் காண விஃதோ ஒ பிறக்குமா''
(சீவகசிந்தா—308)

என்ற பாடலும்.

வெவ்வாயோரி முழவாக விளிந்தா ரீமம் விளக்காக
ஒவ்வாச் சுடுகாட்டுயரரங்கினிழல் போனுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்குமிகுந்திரங்கிக் கூகை குழறிப் பாராட்ட
இவ்வாறாகிப் பிறப்பதோ விதுவோ மன்னர்க் கியல் வேந்தே
(சீவக—309)

வென்ற பாடலும் இங்கு ஒப்பு நோக்கத் தகுவனவாகும்.

இனிச் சத்துருக்கன் விட்ட அம்பு இலவணன் மார்பகத்தைப் பிளந்து சென்று செய்த செயலை,

பெண்ணுருவிற் பாகன்பால் பெறுசூலப் பெருவலியாற் பெருகும் பாவம்
உண்ணிருமியா வவிணனுர முருவுயுயர் வரைக ளுருவியோடி
மண்ணுருவி மண்ணின் கீழ்மாநாக ருல குருவி மறித்து மீண்டு
திண்ணிய தோட் சத்துருக்கன் செங்கையில்
வந்திருந்தந்தத் தெய்வவாளி.

என்றசெய்யுளால் ஒட்டக் கூத்தர் புலப்படுத்துகின்றார். இப் பாடல், பாலகாண்டத்துக் குலமுறைகிளத்து படலத்தில் விசுவாமித்திரன் இராமன் அம்பினைப் பற்றிக்கூறுகின்ற,

அலையு ருவக்கடலுருவத் தாண்டகை தனிண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை நீ யுருவ நோக்கெய
உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் னுரனுருவி
மலையுருவி மர முருவி மண்ணுருவிற் றுருவாளி; (26)

என்ற பாடலோடு ஒத்த அழகினதாகக் காணப்படுதல் காணலாம்.

இப்படலத்தில் சத்துருக்கனின் வீரப் பெருமை விளக்கப் படுகின்றது. இராமாயணக் கதை முழுவதுமாகப் பார்க்கும் பொழுது சத்துருக்கனைப் பற்றிய செய்தி அதிகமாகவில்லை. அந்தக் குறையை இந்த இலவணன் வதைப்படலம் நீக்கி விடுகின்றது. இராமனைப் போன்ற வீரம் சத்துருக்கனுக்கும் உண்டு என்பதைக் காட்டும் படலமாக இது அமைந்து அழகு செய்கின்றது.

---

## 13. இலவணன் வதைப்படலம்

### முறைசெயும் அரச தருமத்தை இலக்குவனுக்கு இராமன் கூறுதல்

793 நிறைகட லவனி பார நீக்கிய நெடும்பொற்
றிண்டோள்
இறையவ னிராம னன்போ டிளவலை யெய்த
நோக்கி
நறைகமழ் தாரோய் நாட்டி னடப்புநா டோறு
நாடி
முறைசெய்கை யிராச தன்ம மதனைநா முயறு
மென்றான்.

நிறைகடல் அவனி பாரம் நீக்கிய நெடும்பொன் திண்தோள்
இறையவன் இராமன், அன்போடு இளவலை எய்த நோக்கி,
நறைகமழ் தாரோய்! நாட்டின் நடப்பு நாள்தோறும் நாடி,
முறைசெய்கை இராச தன்மம்; அதனைநாம் முயல்தும் என்றான்.

பொ: நீர்நிறைந்த கடலால் சூழப்பட்ட பூமியின் பாரத்தை (கொடியோரை அழித்தலால்) நீக்கிய நெடிய அழகிய திண்ணிய தோளையுடைய இறைவனாகிய இராமன், தன் தம்பி இலக்குவனை அன்போடு உற்றுப்பார்த்து, 'மணம் கமழ்கின்ற மலர்மாலையை அணிந்த இலக்குவ! நாட்டின் நடப்பினை நாள்தோறும் ஆராய்ந்து பார்த்து முறைசெய்து குடிகளைக் காப்பாற்றுதல் அரச தருமம் ஆகும்; அந்த அரச தருமத்தை நாம் முயன்று நடத்துவோம்' என்று கூறினான்.

கு:- அவனிபாரம் என்றது கொடியோரைத் தாங்குதலால் பூமிக்கு உளதாகும் சுமை. இராமன், இராவணன் முதலிய கொடியோரை யழித்தமையால் பூமியின் பாரத்தைப் போக்கினான் என்பார், 'அவனிபாரம் நீக்கிய நெடும் பொற்றிண்டோள் இறையவன் இராமன்' என்றார். கொடியோரை யழித்தற்குத் தோள் வலியே துணையானமை தோன்ற அதனைச் சிறப்பித்தார். இறையவன் இராமன் என்றது, கடவுளாகிய இராமன் அரசனாகிய இராமன்

என்ற இருபொருளும் தோன்ற நின்றது. இரண்டும் அவனுக்கு ஏற்புடையவே. எய்தநோக்குதல் பொது நோக்கானன்றிச் சிறப்பு நோக்கால் பார்த்தால் அந்த நோக்கமே சொல்ல வேண்டுவது உளது என்னும் குறிப்புணர்த்துவதாகும். உடம்பை அழகு செய்யும் மணமலர்மாலை போல உலகுக்கு அழகு செய்வது அரசதருமமே என்ற குறிப்புப் புலப்பட 'நறைகமழ் தாரோய்' என விளித்தார். முறைசெய்தலாவது, யாவர்க்கும் ஒப்ப அரச நீதியைச் செலுத்துதல். (1)

## 794 கொடுங்கோல் மன்னர் ஆட்சி இதுவெனல்

சீறிய மனத்த னாகிச் சிறந்த செங்கோலை விட்டுக்
கூறுவெம் பழியி னாடு குலைந்திடக் கொடுங்கோ
லோச்சி
ஆறிலொன் றிறைகொள் ளாதே யல்லவை
யகற்றி டாதே
ஏறிறை கொள்வோ னாட்டி லிருப்பவர் மூட
ரென்றான்.

சீறிய மனத்தன் ஆகிச் சிறந்த செங்கோலை விட்டுக்
கூறுவெம் பழி இல் நாடு குலைந்திடக் கொடுங்கோல் ஓச்சி,
ஆறில் ஒன்று இறைகொள்ளாதே அல்லவை அகற்றிடாதே
ஏறுஇறை கொள்வோன் நாட்டில் இருப்பவர் மூடர் என்றான்.

பொ: 'எப்போதும் குடிகளைச் சீறுகின்ற மனத்தையுடையவனாகிச் சிறப்புடைய செங்கோல் முறையைக் கைவிட்டு, சொல்லுதற்குரிய கொடிய பழியே இல்லாத நாடு நடுங்குமாறு கொடுங்கோல் ஆட்சி நடத்திக் கொண்டு, இறைப் பொருள் ஆறில் ஒன்று கொள்ளாமலும், தீயனவற்றை நீக்காமலும், அதிக இறைப் பொருள் கொள்கின்ற கொடுங்கோல் அரசனது நாட்டில் இருப்பவர்கள் மூடர்களே' என்று கூறினான் இராமன்.

கு: மேலைச் செய்யுளில் முறையரசு செய்ய முயலுவோம் என்ற இராமன் இங்குக் கொடுங்கோல் ஓச்சும் மன்னவன் ஆட்சியின் இழிவினைப் புலப்படுத்துகின்றான். சீறுதல் - கோபித்தல்.

அன்பால் அணைக்க வேண்டிய குடிமக்களைச் சீறி அகற்றும் கொடியவனாகி என்பார், 'சீறிய மனத்தனாகி' என்றார். குடிகளைத் தழுவி நிற்கும் சிறந்த செங்கோல் ஆட்சியை வெறுத்துவிட்டு என்பார், 'சிறந்த செங்கோலைவிட்டு' என்றார். ஒருவகையாலும் குறைபாடு இலாத நாடு என்பார், 'கூறுவெம் பழியில் நாடு' என்றார். வெம்பழி-கொடியபழி. பழியில்லாத நாடு இன்பமிக்க நாடாக இருப்பதே இயல்பாகவும் கொடுங்கோல் மன்னனால் நடுங்கி வாழ நேர்கின்றது என்பார், 'குலைந்திடக் கொடுங்கோலோச்சி' என்றார். இறை—அரசிறை: வரி. ஒருகுடிக்கு வரும் வருவாயில் ஆறில் ஒரு கூறு அரசன் வாங்குவதே பழைய நெறியாகவும் அதைவிடுத்து, வருவாயில் பெரும்பங்கினை வரியாக வாங்கிக் கொண்டு தீயன வற்றையும் அகற்றாமல் கொடுங்கோல் ஓச்சும் கொடியவனாட்டில் நல்லொழுக்கமுடைய அறிஞர்கள் வாழமாட்டார்கள் என்பார், 'இருப்பவர் மூடர்' என்று கூறினான். மூர்க்கரை மூர்க்கரே முகப்பாராகலின் மூடர் தவிரப் பிறர் அங்கு வாழார் என்றவாறு (2)

## இதுவுமது

795 தண்டிக்கப் படுவோர் தம்மைத் தண்டியா
தொழித்து விட்டுத்
தண்டிக்கப் படாதோர் தம்மைத் தண்டிக்குந்
தரணி மன்னன்
எண்டிக்கும் பரந்து மூடு மிரும்பழி யெய்தித்
தீயோர்த்
தண்டிக்குந் தருமனாலே தண்டிக்கப் படும்பி
னென்றான்.

தண்டிக்கப் படுவோர் தம்மைத் தண்டியாது ஒழித்துவிட்டு,
தண்டிக்கப் படாதோர் தம்மைத் தண்டிக்கும் தரணி மன்னன்,
எண்திக்கும் பரந்து மூடும் இரும்பழி எய்தித் தீயோர்த்
தண்டிக்கும் தருமனாலே தண்டிக்கப்படும்பின் என்றான்.

பொ:- தரணியில் தண்டிக்கப்பட வேண்டிய குற்றவாளிகளைத் தண்டிக்காமல் விட்டுவிட்டுத் தண்டிக்கப்படாதோராகிய நல்லவர்களைத் தண்டிக்கின்ற கொடுங்கோல் மன்னன் இம்மையில் எட்டுத்

திசையிலும் பரவி மூடுகின்ற பெரிய பழியை அடைந்து, மறுமையில் தீயவர்களைத் தண்டிக்கும் எமதருமனால் தண்டிக்கப் படுவான்; என்று கூறினன்.

கு:- கொடுங்கோல் மன்னரின் செயலும் பயனும் கூறிய வாறு. தண்டிக்கப்படவேண்டியவர்களைத் தண்டியாது விடும் மன்னன் அக்கொடியவர் சார்பினனாதலும் அத்தீச் சார்பால் தண்டித்தற்குரிய ரல்லாதாரைத் தண்டித்தாற் குரியனாதலும் தெளிவுபடுத்தியவாறு. இந்தத் தகுதியில் செயலால் அவன் இம்மையில் பெரும்பழியையும் மறுமையில் எமதண்டனையையும் எய்துவான் என்பது விளக்கியவாறு. இவ்வுலகில் அக்கொடுங்கோல் மன்னனைத் தண்டிப்போர் இலராகலின் பின் எமதருமனால் தண்டிக்கப்படுவான் என்றான். பின் என்றது மறுமையை.

தண்டிக்கத் தக்கத் தீயோர்களை அரசன் தண்டித்தால் தீயவர்கள் நாட்டில் வளர்ச்சி பெறாது ஒடுங்குவர். போற்றத்தக்க நல்லோர் தண்டிக்கப்பட்டால் நல்லோர் ஒடுங்கித் தேய்வர். தருமன் என்ற பெயர்க்காரணம் புலப்படத் 'தீயோர்த் தண்டிக்கும் தருமன்' என்றான். நாட்டில் தீயோரைத் தண்டியாது வளரவிட்ட தீயவன் மன்னவனே ஆகலின் அவன் பின் தருமனால் தண்டிக்கப் படுவது உறுதி என்றவாறு. (3)

## நாட்டின் நடப்பை அறியாது கெட்ட நரபதி

796 அடற்பெருங் களிறு திண்டே ரடுபரி காலா
டுன்னும்
கடற்படை யுடையோன் மிக்க கருணையோன்
காத லோடும்
இடர்க்கடல் வறியோ ரேற விருநிதி யீவோ
நாட்டில்
நடப்பறி யாது கெட்ட நரபதி யுளன்கே
ளென்றான்.

'அடல்பெருங் களிறு திண்தேர் அடுபரி காலாள் துன்னும்
கடல்படை உடையோன் - மிக்க கருணையோன் - காதலோடும்
இடர்க்கடல் வறியோர் ஏற இருநிதி ஈவோன் - நாட்டில்
நடப்பு அறியாது கெட்ட நரபதி உளன்; கேள்' என்றான்.

பொ:- வலிமையுடைய பெரிய யானைகளும் திண்ணிய தேர்களும் கொல்லும் குதிரைகளும் காலாளும் நெருங்கியுள்ள கடல் போன்ற சேனையையுடையவனாகவும், மிக்க கருணையுடையவனாகவும், வறுமைத் துன்பமாகிய கடலை வறியவர்கள் கடந்து இன்பக்கரை ஏறுமாறு அன்போடும் பெரிய செல்வத்தை யீவோனாகவும் இருந்தும், நாட்டில் நாள்தோறும் நடக்கின்ற நடைமுறையைக் கவனியாமையால் கெட்ட மன்னவன் இருக்கின்றான்; அவன் வரலாற்றைக் கேள்! என்று இராமன் சொல்லத் தொடங்குகின்றான்.

கு:- அடல்-வலிமை. குதிரை மேலுள்ள வீரர்களே அன்றிக் குதிரையும் தன் கால்களால் பகைவரைக் கொல்லுதல் உண்டு ஆதலின் 'அடுபரி' எனச் சிறப்பித்தார். 'குதிரை மறம்' எனப் புறப்பொருள் வெண்பாமாலை இதனைக் கூறும். ஒரு மன்னவன் புகழுடன் வாழ்தற்கு நால்வகைப் படை வலியும் கருணையும் ஈகையும் இன்றியமையாதனவாம். இவற்றை யெல்லாம் பெற்றிருந்தும் நாட்டின் நடப்பினை நாள்தோறும் ஆராயாமையால் கெட்ட மன்னவனும் உளன் என்பதை இலக்குவன் அறியக் கூறியவாறு. 'கேள்' என்றது, ஏவல். அந்த நரபதியின் வரலாற்றினைக் கேள் என்றவாறு. நடப்பறியாது - நடைமுறையை அறியாத காரணம் ஒன்றினால். ஆக்கத்திற்கு உரிய காரணங்கள் பலவிருந்தும் நாட்டின் நடப்பையறியாத ஒரு காரணம் பற்றியே அழிதல் உண்டு என்பது கூறியவாறு. 'காதலோடு ஈவோன்' என இயையும். இடரைக் கடலாக உருவகம் செய்தற்கேறபச் செல்வம் பெற்று இன்புறுதலைக் கரை ஏறுவதாகக் கூறினர். இன்பக்கரையேற என உருவகஞ் செய்யாமையால் இது ஏகதேச உருவகம் என்னலாம். 'ஏற' என்ற குறிப்பினால் இன்பக்கரை என்பது வருவிக்கப்படுகின்றது. (4)

## நிருகன் வரலாறு

797 கொற்றவ னிருகன் கோடி கோடியாக்
கொடுக்குங் காலை
நற்றவ மறையோ னுக்கு நல்லதோர் பசுவை
நல்க
மற்றது தப்பி மன்னன் மாநிரை வந்து கூட
உற்றதை யறியான் மற்றோ ருயர்மறை
யோனுக் கீந்தான்.

**கொற்றவன் நிருகன் கோடிகோடி ஆக் கொடுக்கும் காலை,**
**நற்றவ மறையோ னுக்கு நல்லதுஓர் பசுவை நல்க,**
**மற்றது தப்பி, மன்னன் மாநிரை வந்துகூட,**
**உற்றதை அறியான் மற்றோர் உயர் மறையோனுக்கு ஈந்தான்.**

பொ:- அரசனாகிய நிருகன் என்பவன் கோடி கோடிப் பசுக்களைத் தானம் கொடுக்கும்போது நல்ல தவத்தையுடைய ஒரு வேதியனுக்கு நல்லதாகிய ஒரு பசுவை தானமாகக் கொடுக்க, அந்தப் பசு அவனிடத்தில் இல்லாமல் தப்பித்து வந்து நிருகனுக்குரிய பெரிய பசுநிரையோடு சேர்ந்து வாழ, அவ்வாறு அப்பசு தப்பிவந்தது என்பதை அறியாதவனாய் அதனை வேறு ஒரு சிறந்த வேதியனுக்குத் தானமாகக் கொடுத்தான்.

கு:- நிருகன் என்பது மன்னவன் பெயர். அவன் கோடிக் கணக்கான பசுக்களை அந்தணர்க்குத் தானம் செய்து கொண்டிருக்கின்றான். ஓர் அந்தணனுக்குக் கொடுத்த பசு அவனிடம் நில்லாமல் மீண்டும் அரசனுடைய பசுநிரையில் வந்து சேர்ந்து விடுகின்றது. அதனை யறியாத அரசன் அப்பசுவை மீண்டும் ஓரந்தணனுக்குத் தானமாகக் கொடுத்தான் என்றவாறு. கோடி கோடி என்ற அடுக்குப் பன்மை குறித்து வந்தது. பலகோடி என்றவாறு. மற்று அசை. அறியானாய் ஈந்தான் என முற்றெச்சம் ஆக்குக. 'மற்றோர்' என்புழி 'மற்று' பிறிது என்னும் பொருளில் வந்தது. தானம் பெற்றவன் வீட்டுத் தீனியைவிட முன்னைய அரசன் வீட்டுத் தீனியே சிறப்பாக இருப்பது இயல்பாதலின்

அந்தச் சுவை மிகுதி கருதி அப்பசு மீண்டும் அரசன் நிரையில் சேர்ந்தது என்னலாம். பழக்கமிகுதியாலும் இது நிகழ்வதுண்டு. (5)

793 முன்பது தானம் பெற்ற முப்புரி நூலன் கெட்ட
தன்பசுத் தன்னைக் காணுன் றரணியி லெங்குந் தேடிப்
பின்பது தானம் பெற்ற பெருந்தவன்மனையிற் கண்டீ
தென்பசு வென்ற லோடு மிருவரும் விவா தம் பண்ணி.

முன்பு அது தானம் பெற்ற முப்புரி நூலன், கெட்ட
தன்பசுத் தன்னைக் காணுன் தரணியில் எங்கும் தேடிப்
பின்பு அது தானம் பெற்ற பெருந்தவன் மனையில் கண்டு ஈது
என்பசு என்றலோடும் இருவரும் விவாதம் பண்ணி.

பொ:- முன்னதாக அப்பசுவைத் தானம் பெற்ற மூன்று புரியுடைய பூணூல் அணிந்த அந்தணன் தன்னிடமிருந்து தப்பிப் போன தன் பசுவைக் காணுவதவனுய்ப் பூமியில் எவ்விடத்தும் தேடி, இரண்டாவதாக அப்பசுவைத் தானம் பெற்ற பெருந் தவசியாகிய அந்தணன் வீட்டில் இருக்கக் கண்டு, 'இது என்பசு' என்று அவனிடம் சொல்லுதலோடும் அது எனது; எனது என, இருவரும் அது பற்றி விவாதம் செய்து கொண்டு.

கு:- பண்ணி என்னும் வினையெச்சம் வருஞ் செய்யுளில் முடியும், குளகம். முப்புரி நூல் என்பது பூணூலை. 'ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண் இருபிறப்பாளர்' (திருமுருகாற்றுப்படை) என நக்கீரர் கூறியுள்ளது நினையலாம். 'கெட்ட தன்பசு' என்றது, தன்னிடத்திலிருந்து தப்பிச் சென்ற பசு என்றவாறு. தேடி என்னும் வினையெச்சம் கண்டு என்னும் வினையோடு முடிந்தது; தேடிக் கண்டு என்க. பின்பு அதுதானம் பெற்ற என்புழிப் பின்பு என்பது இரண்டாவது என்னும் பொருளது. இரண்டாவதாக அப் பசுவைத் தானம்பெற்ற

பெருந்தவன் மனையில் கண்டு என்க. விவாதம் பண்ணுதலாவது, அப்பசு ஒன்றினை இருவரும் உரிமை கொண்டாடி எனது; எனது எனச்சொற்போர் நிகழ்த்தல்.

799 (6)

மன்னவன் கோயில்வாயில் மறையவர் விரைந்து வந்து
பன்னெடுங் காலம் நின்று முறையிடப் பார்த்து வேந்தன்
என்னகா ரணநீர் வந்து முறையிட்ட தெனக்கே ளாத
அன்னவன் தன்னைக் கோம்பி யாகெனச் சபித்தா ரன்றே.

**மன்னவன் கோயில் வாயில் மறையவர் விரைந்து வந்து,**
**பல்நெடுங் காலம் நின்று முறையிடப், பார்த்து வேந்தன்**
**'என்ன காரணம் நீர் வந்து முறையிட்டது' எனக் கேளாத**
**அன்னவன் தன்னைக் கோம்பி ஆகெனச் சபித்தார் அன்றே.**

பொ :- வேதியர் இருவரும் மன்னவன் அரண்மனை வாயிலுக்கு விரைந்து வந்து பல நெடுநாட்களாக நின்று முறையிடவும், வேந்தன் அவர்களை வந்து பார்த்து 'நீர் வந்து முறையிட்டது என்ன காரணம்' என்று கேட்டலைச் செய்யாத (அரண்மனைக்குள் அடங்கியிருந்த) அம்மன்னவன்மேல் கோபங்கொண்டு அவனை 'ஓணான் ஆக' எனச் சபித்தார்கள்.

கு:- இருவரும் மன்னவன்பால் சென்று உரிமையை நிலை நிறுத்தும் வேகமுடைமை தோன்ற 'விரைந்து வந்து' என்றார். மன்னவன் கோயில் வாயிலில் நின்று 'முறையோ' என்று முறையிட்ட நாட்கள் பலவென்பார், 'பன்னெடுங்காலம் நின்று' என்றார். குடிகள் முறையிடும்போது அரசன் செய்ய வேண்டியமுறை இதுவென்பார், 'பார்த்து வேந்தன் என்ன காரணநீர் வந்து முறையிட்டது எனக் கேளாத' என்றார். கேளாத-கேட்டலாகிய முறையைச் செய்யாத. கோம்பி - ஓணான். ஓணான் அச்சத்தால் வெளியில் நில்லாது மறைவிடத்தில் ஒடுங்கியிருத்தல் போல, இம் மன்னவன் குடிகள் முறையிடவும் வெளியில் வந்து வினவாது

அரண்மனைக்குள் ஒடுங்கியிருந்த காரணம் பற்றி அவனை 'ஓணன் ஆக' என அந்தணர் சாபங் கொடுத்தனர் என்க. அன்று, ஏ அசைகள். (7)

## சாபத்தின் கடுமையும் சாப வீடும்

800 தாங்கருந் துயரமிக்கோர் கூவத்திற் றலைகீ
ழாகத்
தூங்கியீ ருகங்கள் சென்று துவாபர யுகத்திற்
றோன்றும்
சார்ங்கபா ணியன்றன் செய்ய தாமரைக் கண்
ணாற் பார்க்க
நீங்கிடுஞ் சாப மென்னு நெடுந்தவ முனிவர்
போனார்.

**தாங்கருந் துயரம் மிக்கு ஓர் கூவத்தில் தலைகீழாகத்**
**தூங்கி, ஈர்உகங்கள் சென்று, துவாபர யுகத்தில் தோன்றும்**
**சார்ங்க பாணியன் தன்செய்ய தாமரைக் கண்ணால் பார்க்க**
**நீங்கிடும் சாபம் என்னு நெடுந்தவ முனிவர் போனார்.**

பொ: தாங்குதற்கியலாத துயரம் மிகுந்து, ஒரு கிணற்றில் தலைகீழாகத் தொங்கிக் கொண்டு, இரண்டு யுகங்கள் கழியத் துவாபர யுகத்தில் அவதரிக்கப்போகின்ற கண்ணனுடைய சிவந்த தாமரை மலர் போன்ற கண்ணால் பார்த்தவுடன் இந்தச் சாபம் நீங்கிவிடும் என்று சொல்லிவிட்டு நெடிய தவமுனிவர் இருவரும் சென்றனர்.

கு:- கூவம்- கிணறு; சிறிய நீர்நிலை. தூங்குதல்- தொங்குதல். 'ஈருகங்கள்' சென்று துவாபர யுகத்தில் தோன்றும்' என்றமையால் திருகன் என்னும் மன்னவன் கிரேதா யுகத்தில் வாழ்ந்தவன் என்பது புலனாகும். நான்கு யுகங்களில் கிரேதா யுகம் திரேதா யுகம் என்ற இரண்டு யுகங்கள் கழிந்த பின்னர் துவாபர யுகமும் பின்பு கலியுகமும் பிறக்கும் என்பது புராண மரபு. சார்ங்கம்-வில் சார்ங்க பாணியன் என்றது, கண்ணனை. பாணி-கை. ஓணாகக் கிடக்கும் திருகனைக் கண்ணன் பார்த்த அளவில் அவன் ஓணன்

உருநீங்கி மனித உருத்தாங்குவான் என்றவாறு. திருமாலின் கண்கள் செந்தாமரை மலர் போன்றன வாதலின் 'செய்ய தாமரைக் கண்' எனச் சிறப்பித்தார். 'தாமரைக் கண்ணனுலகு என' வள்ளுவரும் கூறுதல் காணலாம். சாபம் கொடுத்த அந்தணர்களே சாபம் நீங்கும் காலத்தையும் குறிப்பிட்டுச் சென்றார்கள். சாபம் கொடுத்தற்குரிய தகுதியுடைமை புலப்பட நெடுந்தவ முனிவர் என அவ்வந்தணர்களைக் குறித்தார். (8)

801 போயிரு வருமக் கோவைப் புரையறு தவத்தின் மிக்க
தூயமா முனிவற் கீந்து தொன்றுகா ரியத்திற் போனார்
ஆயமன் னவனுங் கோம்பி யாகியாழ் கிணற்றில் வீழ்ந்தான்-
தேயநா டோறு நாடாத் திறன்மன்னன் கேடீ தென்றான்.

**போய் இருவரும் அக்கோவைப் புரைஅறு தவத்தின் மிக்க**
**தூயமா முனிவற்கு ஈந்து தொன்று காரியத்தில் போனார்;**
**ஆய மன்னவனும் கோம்பி ஆகி ஆழ்கிணற்றில் வீழ்ந்தான்;**
**தேயம் நாள்தொறும் நாடாத் திறல் மன்னன் கேடு ஈது என்றான்.**

பொ:- பசுவின் பொருட்டு விவாதித்த இரு வேதியர்களும் அரண்மனையிலிருந்து புறப்பட்டுப் போய் அந்தப் பசுவைக் குற்றமில்லாத தவத்தினால் சிறந்த தூய மாமுனி ஒருவர்க்குக் கொடுத்து விட்டுத் தம் பழைய வேலைக்குப் போனார்கள்; அந்த நிருகனாகிய அரசனும் ஓணான் ஆகி ஆழ்ந்துள்ள கிணற்றில் வீழ்ந்தான்; நாட்டின் நடப்பினை நாள்தொறும் ஆராயாத திறமையுடைய மன்னன் கேடு இதுவாகும்; என்று கூறினான்.

கு: அக்கோவை-அந்தப் பசுவை. புரை-குற்றம். பசுவினால் இருவர்க்கும் விவாதம் உண்டாயது; அது அரசனால் தீர்க்கப்படவில்லை. எனவே, விவாதத்திற்குரிய அப்பசு இருவரில் யாரிடம் இருந்தாலும் பகையுளதாகும் என்று கருதி, வேறு ஒரு முனிவர்க்குத் தானமாக அளித்தார். [illegible] காரியம்-முன்பு

செய்து கொண்டிருந்தபணி. தேயத்தை நாள்தொறு ஆராயாத அரசன் கேட்டிற்கு எடுத்துக் காட்டு நிருகன் வரலாருகிய இது என்றவாறு. நாட்டின் நடப்பை நாடாத மன்னனைத் திறல் மன்னன் என்றது குறிப்பு மொழியாகும். "நாடொறும் நாடி முறை செய்யா மன்னவன், நாடொறும் நாடு கெடும்" (திருக்குறள் 553) என்ற வள்ளுவர் வாய்மொழியை நிருகன் கதை கொண்டு விளக்கியவாறு. நிருகன் தன்பால் முறை வேண்ட வந்த இருவரையும் கண்டு விசாரித்திருப்பின் அவ்விரு வேதியரும் நிறைமனத்தோடு சென்றிருப்பர்; இத்தகைய கொடிய சாபத்தையும் கொடுத்திருக்கமாட்டார்கள். அவர் முறையீட்டிற்குச் செவி சாய்க்காத காரணத்தால் இருயுகங்கள் வரையில் ஓணுய் அல்லல் பெரிதுற்ருன் அரசன் என்பது இக்கதையினுல் புலனுகும். (9)

## கதைகேட்ட இலக்குவன் வியந்திட இராமன் மீண்டும் ஒரு கதை சொல்லுதல்

802
தன்னெதி ரிலாத வென்றித் தசரத ராமனுடிச்
சொன்னவக் கதையை யுன்னுந் தோறுமாச் சரிய மெய்தி
என்னவற் புதமோ வென்ருங் கிளையவ னியம்பத் தூயோன்
இன்னமற் புதமா யுள்ள தொருகதை யியம்பக் கேணீ.

தன்எதிர் இலாத வென்றித் தசரத ராமன் நாடிச்
சொன்ன அக்கதையை உன்னும் தோறும் ஆச்சரியம் எய்தி,
என்ன அற்புதமோ! என்று ஆங்கு இளையவன் இயம்ப, தூயோன்
இன்னம் அற்புதமாயுள்ளது ஒருகதை இயம்பக் கேள்நீ.

பொ: தனக்கு எதிரி இல்லாத வெற்றியையுடைய தசரத ராமன் ஆராய்ந்து சொன்ன அக்கதையைக் கேட்டு நினைக்கும் தோறும் ஆச்சரியம் அடைந்து 'என்ன அற்புதம்' என்று இலக்குவன் சொல்ல, இராமன், 'இதற்கு மேலும் அற்புதமுடைய தாகிய ஒருகதையை நீகேள்' என்று சொல்லத் தொடங்குகின்ருன்.

கு: யாராலும் வெல்ல முடியாத இராவணனை வென்றமையின் இராமன் தன்னெதிரிலாத வென்றியன் ஆனான். தசரத ராமன் என்பது தசரதனுக்குமகனாகிய இராமன் என்றவாறு. பரசுராமனையும் பலராமனையும் விலக்க இந்த அடை மொழியுடன் கூறினர். அற்புதமோ என்புழி ஓகாரம் அசைநிலை. 'என்ன அற்புதம்!' என்பதே இலக்குவன் பாராட்டு. தூயோன் என்றது, இராமனை. தூயோன் 'கேள்நீ' எனச் சொல்லலுற்றான் என வருவித்து முடிக்க. இது நாடகப் பாங்கில் அமைந்தது எனலும் ஆம். (10)

## நிமியின் கதை

803 மன்னவ னிமியென் பான்சீர் மனுகுலம் விளங்கத்
தோன்றிப்
பன்னெடுங் கால மிந்தப் பார்முழு தாண்டு
பாரைப்
பின்னவன் துறந்து சென்று பெருவனங் குறுகித்
தன்ம
மன்னவன் வினைகள் பாற வருந்தவஞ் செய்யு
நாளில்.

**மன்னவன் நிமி என்பான் சீர் மனுகுலம் விளங்கத் தோன்றிப்**
**பன்நெடுங்காலம் இந்தப் பார் முழுது ஆண்டு, பாரைப்**
**பின் அவன் துறந்து சென்று பெருவனம் குறுகித் தன்மம்**
**அன்னவன் வினைகள் பாற அருந்தவம் செய்யும் நாளில்.**

பொ: மன்னவனாக இருந்த 'நிமி' என்பவன் சிறப்பு மிக்க மனுவின் குலம் விளக்கம் பெறுமாறு பிறந்து, சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற நெடுங்காலம் வரையில் இந்தப் பூமி முழுவதையும் அரசாண்டு அவன் பின்பு அந்தப் பூமியை ஆளும் அரச பதவியைத் துறந்து, பெரிய காட்டை அடைந்து அறத் தெய்வம் போன்றவனாய் வினைகள் நீங்க அரிய தவத்தைச் செய்யும் நாளில்.

கு: நிமி என்பவன் மனு குலத்தில் பிறந்த மன்னவன் 'மனு குலம் விளங்கத் தோன்றி' என்றமையால் நிமியின் தோற்றத்தால் மனுவின் குலம் பெருமை பெற்று விளங்கியது என்பதைப் புலப்படுத்தியவாறு. பன்னுதல்–சிறப்பித்துச் சொல்லப்படுதல்' பாரைத் துறத்தலாவது, பாரையாளும் அரச பதவியைத் துறத்தல். தன்மம் அன்னவன் என்றது, நிமி என்பவன் 'அறத்தினது உருவம் போன்றவனாய்' என்னும் கருத்தினது. வினைகள் என்றது நல்வினை தீவினை ஆகிய இருவினைகளை. பாறுதல்–விரைந்து நீங்குதல். தவத்தினால் இருவினைகள் மெலியும் ஆதலின் 'வினைகள் பாற' என்றார். ஐம்பொறிகளடங்க உணவை விடுத்து மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் வேனிலில் நெருப்பிடை நிற்றலும் ஆகிய செயல்களை மேற்கொண்டு செய்யப்படும் அருமையுடைத்தாதலின் 'அருந்தவம்', என்றார். (11

804 சத்துரு கால னாகித் தரணியைக் காத்தோன் றீர்க்க
சத்திர யாகஞ் செய்யச் சமைந்துமா தவத்தின் மிக்க
அத்திரி பிருகு தூய வங்கிரா வசிட்ட னென்னும்
மித்திர முனிவர் தம்மை விளித்திட வசிட்டன் சொல்வான்.

**சத்துரு காலன் ஆகித்தரணியைக் காத்தோன், தீர்க்க**
**சத்திர யாகம் செய்யச் சமைந்து, மாதவத்தின் மிக்க–**
**அத்திரி பிருகு தூய அங்கிரா வசிட்டன் என்னும்**
**மித்திர முனிவர் தம்மை விளித்திட, வசிட்டன் சொல்வான்**

பொ:- பகைவர்களுக்கு எமனாகி அழித்துப் பூவுலகத்தைத் தானே ஆண்டு காப்பாற்றிய நிமி, தீர்க்க சத்திர யாகம் என்கின்ற வேள்வியைச் செய்வதற்கு ஒருப்பட்டுப் பெரிய தவத்தில் மிக்க அத்திரி முனிவர், பிருகு முனிவர், தூய்மையுடைய அங்கிரா முனிவர், வசிட்ட முனிவர் என்னும் நட்புமிக்க முனிவர்களை அந்த யாகம் நடத்தும் பொருட்டு அழைத்திட வசிட்ட முனிவன் சொல்கின்றான்.

கு:- சத்துருகாலன்-பகைவர்கட்கு எமன் போன்றவன். இந்தப் பெயரால், நிமி பகைவரை யழித்துத்தானே ஆண்ட பெருமையன் என்பது புலனாகின்றது. 'தீர்க்க சத்திர யாகம்' என்பது அவ் வேள்வியின் பெயர். நிமி செய்ய இருக்கின்ற யாகத்தை நடத்தி வைக்க அத்திரி முதலிய முனிவர்களை அழைத்தானாக, வசிட்டன் வரவியலாத நிலையைப் புலப்படுத்துகின்றான். அவன் சொல்லியது வருஞ்செய்யுளில் வரும். குளகம். (12)

## வசிட்டன் கோபம்

805 என்னைமன் னவனே வானோ ரிறை மகஞ் செய்ய வெண்ணி
முன்னமே வரித்தா னந்த வேள்வியை முடித்து நின்பால்
பின்னையான் வருகின் றேனென் றம்முனி பேசப் பேணி
மன்னுகோ தமனைக் கொண்டு மகத்தினை நடத்துங் காலை.

என்னை, மன்னவனே! 'வானோர் இறைமகம் செய்ய எண்ணி முன்னமே வரித்தான்; அந்த வேள்வியை முடித்து நின்பால் பின்னை யான் வருகின்றேன்' என்று அம்முனி பேசப் பேணி, மன்னு கோதம னைக்கொண்டு மகத்தினை நடத்தும் காலை.

பொ:- 'மன்னவனே! வானோர்க்கு அரசனாகிய தேவேந்திரன் வேள்விசெய்ய எண்ணி என்னை முன்னமே நியமித்துவிட்டான்; அந்த வேள்வியை முடித்துவிட்டுப் பின்பு யான் நின்னிடம் வருகின்றேன்' என்று அந்த வசிட்ட முனி சொல்ல அக்கருத்தைப் போற்றி (அம்முனிவரை விடுத்து) நிலைபெற்ற கோதம முனிவனைக் கொண்டு தீர்க்கசத்திர யாகத்தினை நடத்திக் கொண்டிருந்தபோது.

கு:- வானோர் இறை என்றது, தேவேந்திரனை. வரித்தல்-நியமித்தல். முன் நியமித்த இந்திரன் வேள்வியை முன்பு செய்தலே தக்கது என்ற நியதியை மேற்கொண்டமையால் வசிட்டரைப் போன்றினான் என்க. அவனை விடுத்துக் கோதமனைக் கொண்டு

தான் நினைத்த வேள்வியைச் செய்து கொண்டிருக்கும்போது. என்ற எச்சம் வருஞ்செய்யுளில் முடியும். குளகம். (13)

## வசிட்டன் வந்து பார்த்துச்சீறுதல்

606 மாறிலா வானோர் மன்னன் மகத்தினை முடித்து ஞானம்
தேறுகோ தமனைக் கொண்டு செய்கின்ற வேள்வி கண்டு
சீறிய வசிட்ட னந்தத் திறத்தினைக் காண்பான் செல்ல
மாறிலாத் துயில னாக, மாமுனி சீற்ற மிக்கான்.

**மாறுஇலா வானோர் மன்னன் மகத்தினை முடித்து, ஞானம்**
**தேறு கோதமனைக் கொண்டு செய்கின்ற வேள்வி கண்டு,**
**சீறிய வசிட்டன் அந்தத் திறத்தினைக் காண்பான் செல்ல,**
**மாறு இலாத் துயிலன் ஆக; மாமுனி சீற்றம் கொண்டான்.**

பொ: மாறுபாடு இல்லாத தேவர்கட்கு அரசனாகிய தேவேந்திரனது வேள்வியைமுடித்துவிட்டு, ஞான நூல்களை அறிந்து தெளிந்துள்ள கோதம முனிவரைக் கொண்டு செய்யப்படுகின்ற வேள்வியை அறிந்து கோபித்த வசிட்டன் அந்த வேள்விசெய்த திறத்தினைக் காண்பதற்காகச் செல்ல, நிமி விழிப்பு என்ற மாறுதல் இல்லாத தூக்கமுடையவனாகியுறங்கிக் கிடக்க, பெருந்தவ முனிவராகிய வசிட்ட முனிவர் பெருஞ் சீற்றம் கொண்டார்.

கு: மாறு இலா வானோர் என்றது தேவர்தம் இயல்பினை விளக்கியவாறு. பகையற்ற தகையுடையார் என்றவாறு. 'ஞானம் தேறு கோதமன்' என்றமையால் ஞானநூல்களைக் கற்றுத் தெளிந்த கோதமமுனிவன் எனப் பொருள் கூறப்பட்டது. வசிட்டன் **தான்** செய்ததுபோலக் கவுதமர் செய்திருப்பாரா என்ற பார்க்கவே வசிட்ட முனிவர் நிமியின் வேள்விச் சாலைக்குச் சென்றார். 'மாறிலாத்துயிலன்' என்றது, துயிலும் நிலையிலிருந்து விழிப்பு நிலையில் மாறுதல் இல்லாது பேருறக்கத்தை யுடையவனாக என்றவாறு. தன்னை வரவேற்காதுபுறக்கணிக்கின்றான் நிமி; என்ற எண்ணத்தில் வசிட்டர் சீற்றம் கொண்டார் என்க. (14)

## வசிட்டன் சாபம்

807 என்னைமுன் வரித்துப் போன யான்வரு
வதற்கு முன்போர்
அன்னியன் றன்னைக் கொண்டிங் கருமக
நடாத்துகின்ற
மன்னவன் றனைநான் காண வந்திடப் புறப்ப
டாதோன்
தன்னுடல் விடுக வாவி யெனமுனி சபித்தா
னன்றே.

'என்னைமுன் வரித்துப் போனயான், வருவதற்கு முன்பு, ஓர்
அன்னியன் தன்னைக்கொண்டு, இங்கு அருமகம் நடாத்துகின்ற
மன்னவன் தனைநான் காண வந்திடப், புறப்படாதோன்
தன் உடல் விடுக ஆவி' என முனி சபித்தான் அன்றே.

பொ:- 'என்னை முன்பு நியமித்துவிட்டு, விண்ணுலகம் சென்ற யான் வருவதற்கு முன்பு ஓர் அயலவனைக் கொண்டு இவ்விடத்து அரிய யாகத்தை நடாத்துகின்ற மன்னவனை நான் காணும் பொருட்டு வரவும், உள்ளகத்திருந்து புறப்படாத அரசன் தன் உடம்பை உயிர் விட்டு நீங்குக' என்று வசிட்ட முனி சபித்தான்.

கு:- வரித்தல்-நியமித்தல். நிமி வசிட்டனை அழைத்தது உண்டு. நியமிக்கவில்லை .இந்திரன் வேள்வியைமுடித்து வருவதாகச் சொல்லிச் சென்ற வசிட்டன் வருந்துணையும் காத்திராமல் அதே தகுதியுடைய கோதமனைக் கொண்டு அவ்வேள்வியைச் செய்கின்றான் நிமி. தன்னை அழைத்த அளவில் வரித்ததாகக் கொண்டு தன்னை விடுத்துக் கோதமனைக் கொண்டு வேள்வி செய்த மன்னவன் மேல் சீற்றமிகுகின்றான்; சபிக்கின்றான் வசிட்டன். ஓர் அன்னியன் என்றது கோதமனை. தகுதிமிக்க வசிட்டர் தன்னைக் காண வருவதை யறிந்து அன்புடன் வரவேற்க வேண்டியிருக்க, வெளியில் புறப்படாமல் நிமி மனையகத்து அடங்கியிருக்கும் நிலை செத்தார் நிலையை யொத்ததாதலின், நிமியின் ஆவி அவன் உடலைவிட்டுப் போவதாக எனச் சாபம் கொடுத்

தான் வசிட்டன் என்க. 'உடல் விடுக ஆவி' என்றது, 'அவன் சாவானாக' என்னும் கருத்தினது. அன்று, ஏ அசைநிலை. (15)

## நிமி வசிட்டனைச் சபித்தல்

808 அன்னவன் சபிக்கக் கேட்ட வரசர்கோ னழலிற் பொங்கித்
தன்வர வறியேன் பாயல் சார்ந்துநித் திரை யான் பண்ண
என்னையந் நியாயத் தாலே சபித்தவிச் சாப மன்னோன்
தன்னையுஞ் சார்க வென்று சபித்தனன் றவத்தின் மிக்கான்.

அன்னவன் சபிக்கக் கேட்டஅரசர்கோன், அழலில் பொங்கித்
'தன்வரவு அறியேன் பாயல் சார்ந்து நித்திரையான் பண்ண,
என்னை அந்நியாயத்தாலே சபித்த இச்சாபம், அன்னோன்
தன்னையும் சார்க' என்று சபித்தனன் தவத்தின் மிக்கான்.

பொ:- அந்த வசிட்ட முனிவன் சபிக்க அதனைக் கேள்வியுற்ற தவத்தின் மிக்கவனாகிய நிமி என்னும் மன்னர் மன்னன் நெருப்புப் போலக் கோபித்து, "தனது வரவினை அறியாது பாயலில் கிடந்து யான் நித்திரை செய்துகொண்டிருக்க, நியாயம் அற்ற முறையில் என்னைச் சபித்த இந்தச் சாபம், அந்த வசிட்டனையும் சார்வதாக" எனச் சபித்தான்.

கு:- அரசர்கோன் என்றது, நிமியை, 'தவத்தின் மிக்கோனாகிய அரசர்கோன்' என இயையும். 'சினமென்னும் சேர்ந்தாரைக்கொல்லி' எனச் சினத்தை நெருப்பாகக் கூறும் மரபு பற்றி 'அழலிற் பொங்கி' என்றார். பொங்குதல்-கோபம் மிகுதல். விழித்திருந்து வசிட்டனை வரவேற்காதிருந்திருந்தால் சபித்தல் நியாயமாகும்; நித்திரையில் இருக்கும்போது வரவேற்கவில்லை எனச் சபித்தல் அநியாயமாகும் என்பான், 'என்னை அந்நியாயத் தாலே சபித்த' என்றான். இச்சாபம் அன்னோன் தன்னையும்

சார்க வென்றது, வசிட்டன் ஆவியும் உடம்பை விடுவதாக என்னும் கருத்தினது. மண்ணுளும் மன்னவனுக்கும் சபிக்கின்ற ஆற்றலுண்டோ? என்ற ஐயுறுதிருக்க 'தவத்தின் மிக்கான்' எனச் சிறப்பித்தார். தவத்தின் மிக்கவன் நிமியாதலின் சபிக்கும் ஆற்றல் பெற்றிருந்தான் என்க. 'தன்வரவறியேன்' என்பது முற்றெச்சமாய் 'நித்திரைபண்ண' என்ற வினையோடு முடிந்தது. அநியாயம் செய்தவனைத் தண்டித்தல் மன்னவனுக்கு மாண்பாகலின் வசிட்ட முனிவனைச் சபித்தது முறையேயாகும் என்றவாறு. (16)

## பிரமனை வசிட்டன் உடம்பு வேண்டுதல்

809 இருவரும் விரோத ராகி யியங்குநாள் வசிட்ட
முவி
தெரிவரும் பெருமை மிக்க திசைமுகன் றன்னை
நண்ணி
ஒருவருந் தன்னை யொவ்வா வுயர்தவ நிமிசா
பத்தால்
பிரிவரு முடலம் விட்டேன் பெறும்படி யன்ணீ
யென்ருன்.

இருவரும் விரோதர் ஆகி இயங்கும் நாள், வசிட்டன் ஆவி,
தெரிவரும் பெருமை மிக்க திசைமுகன் தன்னை நண்ணி,
"ஒருவரும் தன்னை ஒவ்வா உயர்தவ நிமி சாபத்தால்
பிரிவு அரும் உடலம் விட்டேன்; பெறும்படி அருள்நீ" என்ருன்.

பொ:- நிமியும் வசிட்டனும் மாறுபட்டவர்களாகி இயங்கிக் கொண்டிருக்கும் நாளில், வசிட்டனது ஆவி, யாராலும் தெரிய அரிய பெருமையிற் சிறந்த பிரமனை அணுகி, "ஒருவரும் தனக்கு நிகரில்லாத உயர்ந்த தவத்தினையுடைய நிமி என்பவனின் சாபத்தால் பிரிதற்கு அரிய உடம்பை விட்டுவிட்டேன்; அவ்வுடம்பை மீளவும் பெறும்படி நீ அருள் செய்க" என்று கேட்டுக் கொண்டான்.

கு:- திசைமுகன்-நான்முகன்; பிரமன். பிரமன் பெருமை இணைத்தென அறிதற்கு அரியது என்பார், 'தெரிவரும் பெருமை மிக்க திசைமுகன்'. என்றார். நிமியின் சாபம் தன்னைச் சார்ந்தமையால் நிமியின் பெருமையை யுள்ளவாறுணர்ந்து "ஒருவரும் தன்னை ஒவ்வா உயர்தவ நிமி" எனப் புகழ்கின்றான் வசிட்டன். உடம்பின் அருமை புலப்படுத்த "பிரிவு அரும் உடலம்" என்றான் நெடிது இருக்க வேண்டிய உடம்பு என்றவாறு. உலகத்துயிர்கட்கு அவரவர் வினைக்கேற்ற உடம்பைப் படைத்துத் தருபவன் பிரமன் ஆதலின் அவனால் தனக்கும் உடம்பு படைத்துத் தரவியலும் என்ற கருத்தால் 'பெறும்படி யருணீ' என்று வேண்டினான். நண்ணரி என்ற வினையெச்சம் என்றான் என்ற வினைகொண்டு முடியும். (17)

## பிரமன் வசிட்டனைக் கும்பயோனியில் பிறப்பித்தது

810 ஒத்தவர் தம்மை யில்லா வுருப்பசி நிமித்த மாக
மித்திர வருணர் விட்ட வீரியந் தன்னை யெய்திக்
குத்திர யோனி யில்லாக் கும்பமாந் தெய்வ யோனிப்
புத்திர னாக வந்து தோன்றி போ நீ யென்றான்.

**ஒத்தவர் தம்மை இல்லா உருப்பசி நிமித்தம் ஆக,**
**மித்திர வருணர் விட்ட வீரியம் தன்னை எய்திக்,**
**குத்திர யோனி யில்லாக் கும்பமாம் தெய்வ யோனிப்**
**புத்திரன் ஆக வந்து தோன்றுதி போநீ என்றான்**

பொ:- 'தன்னை ஒத்த அழகியரை இல்லாத பேரழகியாகிய ஊர்வசி காரணமாக, மித்திரனும் வருணனும் விட்ட வீரியம் தன்னை எய்தி இழிவான கருப்பையில்லாத கும்பமாகிய தெய்வக் கருப்பையில் புத்திரனாக வந்து நீ தோன்றுவாய் போ' என்று பிரமன் சொன்னான்.

கு: உருப்பசி-ஊர்வசி; தேவதாசி. அவள் தன்னொப்பாரை யில்லாத பேரழகி என்பார், 'ஒத்தவர் தம்மையில்லா உருப்பசி' என்றார். நிமித்தம்-காரணம். மித்திர வருணர் என்றது உம்மைத்

தொகை; கபில பரணர் என்பதுபோல. வீரியம்-வந்து. ருத்திர யோனி என்றது இழிந்ததாகிய கருப்பையினை. கும்பம்-குடம். மல மூத்திரங்கள் நிறைந்த உடம்பினுள் உள்ள கருப்பையில் தங்காமல் அந்தக் குற்றங்கள் இல்லாத குடமாகிய தெய்வக் கருப்பையில் புத்திரனாகப் பிறப்பாய் என பிரமன் கூறினான் என்க. பிரமன் தோன்றா எழுவாய். ஊர்வசியை முதலில் நட்புச் செய்து கொண்டவன் மித்திரன். அவன் உடன் பட்டு ஊர்வசியை நீராட அனுப்புகின்றான். அவள் நீராடும்போது வருணன் பார்த்து அவளை வரிக்க விரும்புகின்றான். ஆனால் ஊர்வசி, தன்னை மித்திரன் முன்னமே கண்டு மனைவியாக்கிக் கொண்டமையால் வருணனை மணத்தல் முறையன்று என்பதைத் தெரிவிக்கின்றாள். அதைக் கேட்ட வருணன் தன் வீரியத்தை ஒரு குடத்தில் விடுகின்றான். அவன் செயலை அறிந்த ஊர்வசி அவன்மேல் காதல் கொள்கின்றாள். அவள் மனநிலையை யுணர்ந்த மித்திரன் அவளை மண்ணுலகில் பிறக்குமாறு சபிக்கின்றான் என்ற வரலாறுபின்பு கூறப்படுகின்றது. மித்திரன் ஊர்வசியை காதலியாக வரித்தும் அவளை நீராட விட்டு விட்டமையால் அவன் தன் வீரியத்தை முன்னமே ஒரு குடத்தில் விட்டான். அந்த வீரியத்தில் அகத்தியன் தோன்றினான். பின்பு அக்குடத்தில் வருணன் விட்ட வீரியத்திலிருந்து வசிட்டன் தோன்றினான். அகத்தியனும் வசிட்டனும் கும்பயோனிகளே என அறிக.

(18)

## வருணன் ஊர்வசியின் கண்வலைப்படுதல்

811 மலரயன் விடுப்ப மாமுனி யாவி மறிகட லெய்திட வருணன்
நிலையிடை நின்று மித்திரன் செலுத்த நீள்குழ லரம்பைய ரோடு
சலவிளை யாட்டிற் றாழ்ந்தநெஞ் சினளா முருப்பசி தடநெடுங் கண்ணும்
வலையிடைப் பட்டு மயங்கிய மனத்தன் வருணன்மற் றவட்சிவை யுரைத்தான்.

மலர்அயன் விடுப்ப மாமுனி ஆவி, மறிகடல் எய்திட, வருணன்
நிலையிடை நின்று மித்திரன் செலுத்த நீள்குழல் அரம்பையரோடு
சலவிளை யாட்டில் தாழ்ந்த நெஞ்சினளாம் உருப்பசி தடநெடுங் கண்ணும்
வலையிடைப்பட்டு மயங்கிய மனத்தன் வருணன் மற்று அவட்கு இவையுரைத்தான்.

பொ: தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் இவ்வாறு சொல்லி விடுக்கச் சிறந்த வசிட்ட முனிவரின் ஆவி அலைகள் மடங்கி வீசும் கடலை அடையவும், வருணனுக்குரிய நிலைக்களமாகிய கடற்கரையில் நின்று மித்திரன் உடன்பட்டுச் செலுத்த நீண்ட கூந்தலையுடைய அரம்பையர்களோடு நீரில் விளையாடும் விளையாட்டில் பற்றுக் கொண்ட நெஞ்சினளாகிய ஊர்வசியின் பெரிய நெடிய கண்ணாகிய வலையிடையகப்பட்டு மயங்கிய மனத்தனாகிய வருணன் அந்த ஊர்வசிக்கு இவற்றைச் சொன்னான்.

கு: மாமுனி ஆவி என்றது, வசிட்ட முனிவரின் ஆவியை. வசிட்டமுனிவரின் நுண்ணுடம்பையே இங்கு ஆவி என்றார் எனக் கொள்ளலாம். 'ஆவி-கடல் எய்திட' என்றதனால் கடல் தெய்வமாகிய வருணனை அவ்வாவி அடைந்தமை பெறப்படும். 'வருணன் நிலையிடை நின்று மித்திரன் செலுத்த' என்றது, வருணனுக்குரிய கடற்கரையிடத்து நின்று கொண்டு மித்திரன் என்பவன் ஊர்வசியை நீர்விளையாட்டிற்கு அனுப்ப என்றவாறு. மித்திரனின் காதலியாம் உரிமை பெற்று நீர்விளையாடச் சென்ற ஊர்வசி அரம்பையரோடு ஆடும் நீர் விளையாட்டில் பற்றுமிகக் கொண்டு நெடிது நீராடிக் கொண்டிருக்கையில் அவளுடைய கண் வலையில் அகப்பட்டுக் காதல் கொண்ட வருணன் அவட்குச் சொன்னதை வரும் செய்யுளில் காணலாம். தாழ்தல் என்பது பற்றுக் கொள்வதையுணர்த்துகின்றது. சலம்-நீர். வடசொல் திரிபு. (19)

## வருணனது காதலை ஊர்வசி மறுத்தலும் அவன் வீரியம் விடுத்தலும்

812 உன்னையான் வரித்தே னென்றவ னுரைப்ப வுருப்
பசி கூறுவா ளுயர்ந்தோய்
முன்னமே யென்னை மித்திரன் கண்டு வரித்தனன்
முறைகெட வந்து
பின்னைநீ வரித்தல் பிழையென வுரைப்பப் பெரு
கிய காமவெங் கனலால்
தன்னுட லுருகி வீரியம் விழத் தையலுக்
கவனிவை யுரைக்கும்.

'உன்னை யான் வரித்தேன்' என்று அவன் உரைப்ப, உருப்பசி
கூறுவாள், "உயர்ந்தோய்!
முன்னமே என்னை மித்திரன் கண்டு வரித்தனன் முறைகெட
வந்து
பின்னைநீ வரித்தல் பிழை" என உரைப்ப, பெருகிய காமவெங்
கனலால்
தன் உடல் உருகி வீரியம் விழத் தையலுக்கு அவன் இவை
உரைக்கும்.

பொ:- 'உன்னையான் என்காதலியாக நியமித்துக் கொண்டேன்' என்று வருணன் சொல்ல, ஊர்வசி சொல்லுவாள்: உயர்ந்தோனே! மித்திரன் என்னை முன்னமே கண்டு தன் காதலியாக நியமித்துக் கொண்டான், அவனுக்குப்பின் முறை கெடுமாறு வந்து நீ நின் காதலியாக நியமித்துக் கொள்ளுதல் பிழையாகும்' எனச் சொல்ல, அவள்பால் பெருகிய காமமாகிய கொடிய நெருப்பினல் தன்னுடம்பு உருகி வீரியம் தானே வீழ்ந்திட, ஊர்வசிக்கு அவ்வருணன் இவற்றைச் சொல்வானுனன்.

கு:- வரித்தல்-நியமித்துக் கொள்ளுதல். முன்னே ஒருவன் தன்னை வரித்த பின்பு வேறொருவர் வரித்தற்கு உடம்படுதல் பிழையாகும் என்பதை ஊர்வசி தெளிவுபடுத்தினள். மறுக்க

மறுக்குப் பெருக்கங் கொள்வது, காமத்தியற்கையாதலின், பெருகிய காமவெங்கனலால் வருணனது உடலுருகி வீரியத்தை வீழ்த்தியது. வீரியம்-விந்து. காமத்தைக் கனலாக உருவகம் செய்தவாறு. தையல் என்றது, ஊர்வசியை. (20)

## வருணன்பால் பற்றுக்கொண்ட ஊர்வசியை மித்திரன் சினத்தல்

813 மின்னிடை மடவா யென்னுட லுருகி வீழ்ந்தவீ
ரியத்தினைக் கும்பம்
தன்னிடை யிடுகின் றேனென மகிழ்ந்து வருணன்
மேற் றாழ்ந்தசிந் தையளாய்
அன்னமென் னடையாண் மித்திரன் றன்னை
யணுகிட வாலமதென்ன
வன்னியா மென்னக் கனன்றசீற் றத்தான்
மற்றவ ளுக்கிவையுரைத்தான்.

'மின்இடை மடவாய்! என்உடல் உருகி வீழ்ந்த வீரியத்தினைக்
கும்பம்
தன்னிடை இடுகின்றேன்' என மகிழ்ந்து வருணன்மேல்
தாழ்ந்த சிந்தையளாய்,
அன்னம் என் நடையாள் மித்திரன் தன்னை அணுகிட, ஆலம்
அது என்ன,
வன்னிஆம் என்னக் கனன்ற சீற்றத்தான் மற்று அவளுக்கு
இவை உரைத்தான்.

பொ:- 'மின்னலை ஒத்த நுண்ணிய இடையையுடைய இளநங்கையே! என் உடம்பு அன்பால்உருகி வீழ்ந்த விந்தினைக் குடத்தின் கண் இடுகின்றேன்' என்று வருணன் கூற, அன்னமே என்று சொல்லத்தக்க மென்னடையையுடைய ஊர்வசி மகிழ்ந்து, தன்னை விரும்பிய வருணன்மேல் பற்றுக் கொண்ட சிந்தையை யுடையவளாய் மித்திரனை அணுக, (அவள் உளக்குறிப்பினை யுணர்ந்த மித்திரன்) பாற்கடல் தோன்றிய ஆலகாலம் போலவும், நெருப்புப் போலவும் வெம்புகின்ற கோபத்தையுடையவனாய் அவ்வூர்வசிக்கு இவற்றைச் சொன்னான்.

கு: மடவாய்! என்றது, அவள் இளமை நலத்தைச் சிறப்பித்து விளித்த விளியாகும். வருணன் உடலுருகுதற்குக் காரணம் ஊர்வசியின் இளமையழகே என்ற குறிப்பும் இவ்விளியால் புலனுகும். தன்மேல் வைத்த காதலால் உடல் உருகி வீரியம் வீழ்த்தினுன் வருணன் என்பதை யுணர்ந்த ஊர்வசி அவன்மேல் காதல் கொண்ட கருத்தினள் ஆனுள் என்றவாறு. மித்திரன்பால் சென்ருளாயினும் அவள் உள்ளம் வருணன்மேல் பதிந்துவிட்டது. இதை உணர்ந்த மித்திரன் உளம் வெதும்பிச் சீறுகின்றுன். கண்டோர் இவள் அன்னமே என்று எண்ணத்தக்க மென்னடையுடையாள் ஊர்வசி யென்பார், "அன்னம் என் நடையாள்" என்ருர். இந்த நடையும் அவள் காதற் குறிப்பை யுணர்த்தியது என்றவாறு. மித்திரன் கோபமிகுதியைப் புலப்படுத்த வேண்டி அழித்தலைச் செய்யும் ஆலத்தையும் அனலையும் உவமை கூறியவாறு. இது பல்பொருளுவமை. மித்திரன் சொன்னது வருஞ் செய்யுளில் காணலாம். (21)

### மித்திரன் ஊர்வசியைச் சபித்தல்

814 முன்னமே கண்டு நின்னையான் வரிக்க
முறைமையீ தன்றென வுணராய்
அன்னியன் றனைக்கண் டன்புபட் டனைநீ
யாதலா லறிவிலா தாளே
பொன்னுல கிழிந்து புவியிடை நீபோய்ப்
புதன்மகன் புரூரவா வென்னும்
மன்னவன் றனக்கு மனைவியாய் நெடுநாள்
வைகுதி யென்றவன் சபித்தான்.

"முன்னமே கண்டு நின்னை யான் வரிக்க முறைமை ஈது அன்று என உணராய்,
அன்னியன் தனைக்கண்டு அன்புபட்டனைநீ ஆதலால் அறிவு இலாதாளே!
பொன்னுலகு இழிந்து புவி இடை நீபோய்ப் புதன்மகன் புரூரவா என்னும்
மன்னவன் தனக்கு மனைவியாய் நெடுநாள் வைகுதி" என்று அவன் சபித்தான்.

பொ: "அறிவு இல்லாதவளே! யான் நின்னை முன்னமே கண்டு என்காதலியாக நியமித்திருப்பவும், நீ இது முறைமை அன்று என்று உணராமல் அன்னியன் ஒருவனைக் கண்டு ஆசைப் பட்டாய்; ஆதலால், இந்தப் பொன்னுலகத்திலிருந்து இறங்கிப் பூமியில் நீபோய்ப் புதனுக்கு மகனாகிய புரூரவா என்ற மன்னவனுக்கு மனைவியாய் நெடுநாள் தங்கியிருப்பாயாக" என்று அந்த மித்திரன் சாபம் கொடுத்தான்.

கு: முன்னர் வரித்தவனிருப்ப அவனல்லாத பிறனை விரும்புதல் முறைமையன்று, என்றுவிடுக்க வேண்டியிருக்க நீ அது செய்திலை என்பான், "முறைமை யீதன்றென வுணராய் அன்னியன் றனைக் கண்டன்புபட்டனை" என்றான். இது அறிவுடையார் செய்யும் செயல் அன்று என்பது புலப்பட "அறிவிலாதாளே" என விளித்தான். இன்ப உலகமாகிய பொன்னுலகத்தை விட்டு இறங்கி இன்பமும் துன்பமும் கலந்த மண்ணுலகத்தில் மன்னவன் மனைவியாய் நெடுங்காலம் வாழ்தலே இந்தத் தவற்றுக்குத் தண்டனையாகும் என்பான், "புரூரவா என்னும் மன்னவன் தனக்கு மனைவியாய் நெடுநாள் வைகுதி" என்று சபித்தான். சபித்தல்-சாபம் கொடுத்தல். மன்னவன் மனைவியாதலும் நெடுநாள் வைகுதலும் வரமாக வன்றோ அமைகின்றது? எனின் இன்பமே நிலவும் பொன்னுலகில் வாழ்ந்தோர்க்கு துன்பம் நிறைந்த மண்ணுலகில் வாழ்தல் நரகத்துன்பம் போன்றது ஆதலின் அது சாபமேயாகும் என்க. இனி முன்னொருவனை வரித்துப் பின்னொருவனை விரும்புதல் பொன்னுலகிற்கேலாததாய் மண்ணுலகில் நிகழும் செயலாக இருத்தலின் அம்மண்ணுலக வாழ்க்கை பெறுதலே ஊர்வசிக்குப் பொருந்தும் என்ற கருத்தால் அங்ஙனம் சபித்தான் என்றலும் ஆம். (22)

## கும்பத்தில் அகத்தியனும் வசிட்டனும் பிறத்தல்

815 அன்னவீ ரியத்தை யமரர்கள் வகுத்த
குடத்திடை வருணனுங் கிடவும்
மின்னிடை யாளைக் கண்டு மெய்யுருகி
மித்திரன் வீழ்த்த வீரியத்தை

முன்னமே கும்பத் திடுகையான் முன்பு
முழுதுண ரகத்தியன் பிறந்தான்
பின்னைவா ருணத்தை யிடுகையாற் பின்பு
பிறந்தனன் பெருந்தவ வசிட்டன்.

அன்ன வீரியத்தை அமரர்கள் வகுத்த குடத்திடை வருணனுங்கு இடவும்
மின் இடையாளைக் கண்டு மெய் உருகி மித்திரன் வீழ்த்த வீரியத்தை
முன்னமே கும்பத்து இடுகையால், முன்பு முழுது உணர் அகத்தியன் பிறந்தான்,
பின்னை வாருணத்தை இடுகையால் பின்பு பிறந்தனன் பெருந்தவ வசிட்டன்.

பொ: வருணன் அந்த விந்துவினைத் தேவர்கள் வகுத்த குடத்தில் இடவும் (வசிட்டன் முன்பு தோன்றுமல்) மித்திரன், மின்னலைப் போன்ற இடையுடையாளைக் கண்டு உடல் உருகி வீழ்ந்த விந்துவினை அக்கும்பத்து முன்னமே இடுதலால், முழுதும் உணர்ந்த அகத்தியன் முன்பு பிறந்தான்; வருணன் வீரியத்தைப் பின்பு இடுதலால் பெருந்தவமுடைய வசிட்டன் பின்பு பிறந்தான்.

கு: ஊர்வசியைக் கண்டு காதல் கொண்ட மித்திரன் வருணன் என்ற இருவரும் உடலுருகி வீரியத்தைக் குடத்தில் விட்டனர். மித்திரன் வீரியம் முன் விடப்பட்டமையால் அக்குடத்தில் முன்பு அகத்தியன் பிறந்தான். வருணன் வீரியம் இரண்டாவதாக விடப்பட்டமையால் வருணன் விந்துவில் வசிட்டன் பின்பு பிறந்தான் என்றவாறு. வருணன் அமரர் வகுத்த குடத்தில் வீரியத்தை விட்டளவில் அவ்வீரியத்தின் காரியமாக முன்பு வசிட்டன் தோன்றுமைக்குக் காரணம் கூறுவாராய் 'வருணனுங்கிடவும் மித்திரன் முன்னமே கும்பத் திடுகையால் முன்பு அகத்தியன் பிறந்தான் என்றார். அமரர் வகுத்த குடமாதலின் இருவர் வீரியங்களையும் ஏற்று முனிவர்களை முறையே பெற்றது என்றவாறு. வாருணம்-வருணனின் வீரியம்; இது தத்திதாந்த நாமம் என்பர், நான்முகன் வரம் பெற்ற வசிட்டன் ஆவி, வருணனுக்குரிய கடலை அடைந்து வருணனின்

உடம்பில் பரவி பின்பு அவ்வருணனது வீரியமாய்க் குடத்தில் விழுந்து வசிட்டனுகப் பிறந்தது எனத் தொடர்பு படுத்திக் கொள்க.

(23)

## வசிட்டன் வரலாறுகேட்ட இலக்குவன் நிமியின் வரலாற்றை விரும்ப இராமன் சொல்லுதல்

816 என்றுல கேழு முடையவ னெதிர்ந்த
விராக்கதர் குலத்தைவே ரறுத்து
வென்றிகொள் வீரன் விளம்பிய
கதையைக் கேட்டலு மிகவியப்பெய்தி
அன்றுடல் பிரிந்த வந்நிமி யாவி
செய்ததும் வேள்வியா னதுவும்
ஒன்ருெழி யாம லுரைத்தியென் றிளையோ
னுரைத்திட வுத்தம னுரைக்கும்.

என்று உலகு ஏழும் உடையவன் - எதிர்ந்த இராக்கதர் குலத்தை வேர்அறுத்து
வென்றிகொள் வீரன் - விளம்பிய கதையைக் கேட்டலும் மிகவியப்பு எய்தி,
அன்று உடல் பிரிந்த அந்நிமிஆவி செய்ததும் வேள்வி ஆனதுவும்
ஒன்று ஒழியாமல் உரைத்தி! என்று இளையோன் உரைத்திட உத்தமன் உரைக்கும்.

போ: என்று, உலகு ஏழினையும் தனக்கு உரிமையாக உடையவனும், எதிர்ந்த அரக்கர்களின் குலத்தை வேரறுத்து வெற்றி கொண்ட வீரனும், ஆகிய இராமன் சொன்ன கதையைக் கேட்டலும், மிக்க வியப்படைந்து இலக்குவன், (வசிட்டன் ஆவி பிரிந்த) அன்றே உடலில் நின்றும் பிரிந்த அந்த நிமி என்பவன் ஆவி செய்ததையும் அவன் வேள்வி முற்றுப் பெற்றதையும் ஒன்று விடாது உரைப்பாயாக! என்றுகேட்டுக் கொள்ள, உத்தமனாகிய இராமன் சொல்லுவான்.

கு: உலகேழுடையவன்– இராக்கதர் குலத்தை வேரறுத்து வென்றிகொள் வீரன் என்பன இராமன் என்னும் ஒருபொருள்மேல்

வந்த பலபெயர். அன்று என்றது, வசிட்டன் ஆவி உடல்பிரிந்த நாளைக்குறித்தது. ஒருவர்க்கொருவர் சபித்துக்கொண்ட வசிட்டனும் நிமியும் ஒரே நாளில் உடம்பைவிட்டநிகழ்ச்சியை நினைப்பித்தவாறு. வசிட்டன் ஆவி பிரமனையடைந்து வேண்டி மீண்டும் உடலைப் பெற்றுப் பிறந்தகதையைக் கேட்டவுடன் நிமியின் ஆவியும் அப்படி வேறுடம்பைப் பெற்றதா? என அறிய அவாவுதல் இயல்புதானே. எனவே, 'அந்நிமி செய்ததும் வேள்வியானதும் ஒன்றொழியாமல் உரைத்தி' என இலக்குவன் இராமனைக் கேட்கலாயினன் என்க. உத்தமன்-தலைமையானவன்-இராமன். (24)

817 தீயசா பத்தாற் சேதனம் பிரிந்த
நிமியுடல் சிறந்தநல் லடியார்
ஆயவ ராலே யாடையா பரண
முதலகொண் டலங்கரிப் பித்துச்
சேயவா கியவை யாயிரத் தாண்டு
செய்தியிற் குறைபடா வண்ணம்
தூயமா முனிவ ரந்நிமி முன்னாட்
டொடங்கிய வேள்வியை முடித்தார்.

தீய சாபத்தால் சேதனம் பிரிந்த நிமிஉடல், சிறந்த நல் அடியார் ஆயவராலே ஆடை ஆபரணம் முதலகொண்டு அலங்கரிப்பித்து சேய ஆகிய ஐயாயிரத்து ஆண்டு செய்தியில் குறைபடா வண்ணம், தூயமா முனிவர் அந்நிமி முன்னாள் தொடங்கிய வேள்வியை முடித்தார்.

பொ: வசிட்டனது தீய சாபத்தினால் அறிவுமயமான ஆவி பிரிந்த நிமியின் உடம்பினை அவனுக்குச் சிறந்த நல்ல பணியாளர்களாலே ஆடை ஆபரணம் முதலியவற்றைக் கொண்டு அலங்கரிக்கச் செய்து, மிகச் சேய்மையான காலமாகிய ஐயாயிரம் ஆண்டுகள் வரையில் வேள்விக்குரிய செயல்களில் குறைபாடு உண்டாகாதபடி தூய்மைமிக்க சிறந்த முனிவர்கள் அந்த நிமி, முன்பு தொடங்கிய வேள்வியைச் செய்து முடித்தார்கள்.

கு: தீய சாபம் என்றது வசிட்டன் முறைதவறிக் கொடுத்த கொடிய சாபத்தை. உறங்கிக் கொண்டிருந்த நிமி தன்னை வரவேற்கவில்லை எனச் சினந்து வசிட்டன் இட்ட சாபம் தீய சாபமாதல் தெளிவு. சேதனம்-அறிவு; இங்கு அறிவு மயமான ஆவியைக் குறித்து நின்றது. சிறந்த நல்லடியார் என்றது, அந்த நிமிக்குச் சிறந்த பணியாளர்களை. முனிவர்கள் தூய்மை மிக்கவராதலின் நிமியினுடம்பைத் தாம் தொடாது அவன் பணியாளரைக் கொண்டே அலங்கரிக்கச் செய்தார்கள் என்க. அலங்கரிப்பித்தற்கு வினைமுதல் முனிவர்கள்; அலங்கரித்தற்கு வினைமுதல் நல்லடியார். நிமியின் ஆவி பிரிந்தாலும் அவன் உடலை அலங்கரித்து வைத்து அலங்கரித்த உடம்பை அவனெனவே எண்ணி அவ்வுடம்பின் முன்னிலையில் அவன் முன்பு தொடங்கிய வேள்வியை முனிவர்கள் ஐயாயிரம் ஆண்டுகள் வரையில் செய்து முடித்தார்கள் என்றவாறு. முனிவர் என்றது, கோதம முனிவர் முதலிய முனிவர்களை. ஐயாயிரம் ஆண்டு என்றது நெடிய காலம் ஆதலைப் புலப்படுத்த, 'சேயவாகிய ஐயாயிரத்தாண்டு' என்றார். அது பெருவேள்வியாதலின் செய்தியில் குறைபடாது செய்தற்கு அத்தனை ஆண்டுகள் ஆயின போலும். (25)

818 அந்தவே லையில்வந் தமரர்கள் கூடி
யந்நிமி யாவியை யழைத்துச்
சிந்தையா முவந்தோ மொருவரம் வேண்டிக்
கொள்கெனத் தேவர்கள் செப்ப
இந்தமா நிலத்தோர் கண்களில் யானின்
றியங்கிட விவ்வரமெனக்குத்
தந்திட வேண்டுமெனவவர் தந்தோ மென்றுதா
முறைவிடஞ் சார்ந்தார்.

அந்த வேலையில் வந்து அமரர்கள் கூடி, அந்நிமி ஆவியை அழைத்துச்
"சிந்தையாம் உவந்தோம்: ஒருவரம் வேண்டிக் கொள்"கெனத் தேவர்கள் செப்ப,

"இந்த மாநிலத்தோர் கண்களில் யான் நின்று இயங்கிட இவ்வரம் எனக்குத்
தந்திட வேண்டும்" என, அவர்தந்தோம் என்று தாம் உறைவிடம் சார்ந்தார்.

பொ: வேள்வி முடியும் அந்த வேளையில் அமரர்கள் அங்குவந்து கூடி, அந்த நிமியின் ஆவியை அழைத்து, "(இந்த வேள்வியால்) யாம் சிந்தை மகிழ்ந்தோம்; எங்களிடம் ஒருவரம் வேண்டிக் கொள்க" என்று சொல்ல, "இந்தப் பூமியில் உள்ளவர்கள் கண்களில் யான் நின்று உலவுகின்ற இந்த வரத்தை எனக்குத் தந்திட வேண்டும்" என்று நிமியின் ஆவி கேட்க, அந்தத் தேவர்கள் 'தந்தோம்' என்று சொல்லிவிட்டுத் தாம் தங்கியிருக்கும் பொன்னுலகத்தைச் சேர்ந்தார்கள்.

கு: வேலை-வேளை; சமயம். வேள்வியில் கொடுக்கும் அவியுணவை யுண்ணத் தேவர்கள் அங்கு வந்து கூடி அவியை யுண்டு மகிழ்ந்து அவ்வேள்வியினைச் செய்த நிமியின் ஆவியை அழைத்து இங்ஙனம் சொல்லி வரம் கொடுத்துச் சென்றார்கள் என்றவாறு. இந்த வேள்வி முடியும் வரையில் நிமி மக்கள் கண்களில் படாது அருவாக இயங்கிக் கொண்டிருந்தமை பெறப்படும். அவியுண்ட தேவர்கள் நிமியின் ஆவியை அழைத்து, 'ஒருவரம்கேள்' என வற்புறுத்தியதும் நிமி வேண்டிய வரத்தைக் கொடுத்ததும் அவர்தம் நன்றியுடைமையைப் புலப்படுத்தும். இயங்குதல்-போக்குவரவு புரிதல். உறைவிடம் என்றது, பொன்னுலகத்தை. பூமியில் உள்ள மக்கள் கண்களில் எல்லாம் உலவிக் கொண்டு நிலவுதற்கு நிமி ஆசைப்பட்டான்; அவ்வாறே வரம் அளித்தனர் தேவர்கள். காற்று வடிவாக நிமி உலகவர்கண்களில் உலவுகின்ற பொழுது வரும் இளைப்பை மாற்றுதற்காக மக்கள் கண் இமைப்பார்கள் என்ற விளக்கமும் தேவர்கள் தந்ததாக வான்மீகம் கூறும். (26)

819 முனித்தலை வோர்க ளந்நிமி யுடலை முரணுடை யரணியாற் கடையச்
சனித்தவன் றன்னைச் சனிக்கிகையி னாலே சனகனென் றவவர்பெயர் சாற்றி.

இனித்தர ணியைத்தாங் கென்றவர் கூற விவ்வுல
காண்டன் னென்றே
தனிச்சிலே தரித்தோ னுரைசெய்து பின்னுந்
தம்பியைக் குறித்திவை சாற்றும்.

முனித்தலேவோர்கள் அந்நிமி உடலே முரணுடை அரணியில் கடையச்
சனித்தவன் தன்னேச் சனிக்கையினுலே சனகன் என்று அவர் பெயர் சாற்றி,
இனித் தரணியைத் தாங்கு என்று அவர்கூற இவ்வுலகு ஆண்டனன் என்றே
தனிச்சிலே தரித்தோன் உரைசெய்து, பின்னும் தம்பியைக் குறித்து இவை சாற்றும்.

பொ: வேள்வியைச் செய்த முனிவரர்கள் அந்த நிமியின் உடம்பை வலிமையுடைய தீக்கடைக் கோலினுல் கடைய அவ்வுடம்பில் தோன்றியவனே உடம்பிலிருந்து தோன்றிய காரணத்தால் சனகன் என்று அவர்கள் பெயர் சொல்லி 'இனி நீ இவ்வுலகை அரசாள்க' என்று அவர் கூற இந்த உலகத்தை ஆண்டனன் என்றே ஒப்பற்ற வில்லேத் தாங்கியுள்ள இராமன் சொல்லி,மேலும் தம்பியைநோக்கி இவற்றைச் சொல்வானுனன்.

கு: முனித்தலேவோர்கள் என்றது, முனிவர்களில் தலேயானவர்களே. அரணி-தீக்கடைகோல். வடிவோடு இயங்கும் வரத்தைத் தேவர்கள் கொடுத்தார்களாயினும் நிமியின் உடம்பிலிருந்தே அந்த வடிவம் வரவேண்டும் என்ற கருத்தால் அவன் உடம்பைத் தீக்கடைகோலினுல் கடைய, அந்த உடம்பிலிருந்தே அவ்வுடம்பு போன்ற ஒருவடிவத்தோடு நிமி தோன்றினுன். அவன் பழைய உடம்பிலிருந்து தோன்றினமையால் அவனுக்கு, சனகன் என்று வேறு பெயர் கொடுத்து இவ்வுலகை ஆள்க என முனிவர்கள் சொல்ல அங்ஙனமே ஆண்டான்; என்றவாறு, சனித்தல்-தோன்றுதல். 'சனிக்கையினுல் சனகன்' என்றது, அது காரணப் பெயராதலே உணர்த்தியவாறு. தரணியைத் தாங்கு என்றது, 'அரசாள்க' என்னும் கருத்தினது. வில்லினுக் கிராமன் என்ற மிகுவுகமுடை-

யனுதலின் 'தனிச்சிலை தரித்தோன்' என்று இராமனைக் குறிப்பிட்டார். தனிச்சிலை-ஒப்பற்ற வில். (27)

## இராமன் சினத்தின் சிறுமையை விளக்குதல்

820 ஒள்ளிய தவத்தால் கல்வியா லுணர்வா
லுண்மையா லுயர்ந்தன ரேனும்
எள்ளிய குற்ற மிலா தவரேனும்
வெகுளியா லிப்படி பட்டார்.
தெள்ளிய வீரச் சிலையினுய் புறத்துத்
திறற்பகை வெல்லலாஞ் சினமாம்
உள்ளுறு பகையை வென்றவ ரிந்த
வுலகத்தி லொருவருமில்லை.

ஒள்ளிய தவத்தால் கல்வியால் உணர்வால் உண்மையால் உயர்ந்தனரேனும்,
எள்ளிய குற்றம் இலாதவரேனும், வெகுளியால் இப்படி பட்டார்;
தெள்ளிய வீரச் சிலையினுய்! புறத்துத் திறற்பகை வெல்லலாம் சினமாம்
உள்ளுறு பகையை வென்றவர் இந்த உலகத்தில் ஒருவரும் இல்லை.

பொ: நிமியும் வசிட்டனும் சிறந்த தவத்தாலும் கல்வியாலும், ஞான உணர்ச்சியாலும் உண்மையொழுக்கத்தாலும் உயர்ந்தனர் ஆயினும், இகழ்ந்து கூறத்தக்க வேறு குற்றங்கள் இல்லாதவர் ஆயினும், வெகுளி என்ற ஒன்றினுல் இப்படிப்பட்ட நிலைமையை அடைந்தார்கள்; தெளிவான வீரவில்லைத் தாங்கியவனே! புறத்தே எதிர்த்து நிற்கும் திறனையுடைய பகையை வென்றுவிடலாம். ஆனுல், சினமாகிய உள்ளுறு பகையை வென்றவர்கள் இந்த உலகத்தில் இல்லை.

கு: ஒள்ளிய-சிறந்த. தவமும் கல்வியும் உணர்ச்சியும் உண்மையொழுக்கமும் இருந்தும் வெகுளியை அடக்கவியலவில்லை. அவர்பால் வேறு எந்தக் குற்றமும் இல்லாதிருந்தும் இவ்வெகுளி ஒன்றே அவர்களை இந்த இழிநிலைக்கு ஆளாக்கியது என்றவாறு.

இப்படிபட்டார் என்றது, இந்த சூழ்நிலையை அடைந்தார்கள் என்றவாறு. வீரச்சிலையினுய் என்ற விளி, புறப்பகையை வில்லினுல் வெல்லலாம் ஆனுல் சினமாகிய அகப்பகையை வெல்லவியலாது என்ற குறிப்புத் தோன்ற நின்றது. சினப்பகையை வெல்லாதவர்கள் நிமியும் வசிட்டனும் மட்டுமல்ல இந்த உலகத்தில் எவருமே வென்றதில்லை; என்று கூறி நிமிக்கும் வசிட்டனுக்கும் பெருமை குறையாமல் செய்தவாறு. "சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு நிலத்தறைந்தான் கைபிழையாதற்று" என்ற குறள் சினத்தின் கொடுமையைக் கூறுதல் காணலாம். (28)

821 மூங்கிலிற் பிறந்த முழங்குத் மூங்கின் முதலற
முருக்குமாப் போலத்
தாங்கருஞ் சினத்தீ தன்னுளே பிறந்து தன்னுறு
கிளையெலாம் தகிக்கும்
ஆங்கதன் வெம்மை யறிந்தவர் கமையா
லதனையுள் ளடக்கவு மடங்கா
தோங்கிய கோபத்தீயினை யொக்கு மூட்பகை
யுலகில்வே றுண்டோ.

**மூங்கிலிற் பிறந்த முழங்குதீ மூங்கில் முதல்அற முருக்குமாப் போலத்,**
**தாங்கரும் சினத்தீ தன்னுளே பிறந்து தன்னுறு கிளை எலாம் தகிக்கும்;**
**ஆங்கு அதன் வெம்மை அறிந்தவர் கமையால் அதனை உள் அடக்கவும் அடங்காது;**
**ஓங்கிய கோபத் தீயினை ஒக்கும் உட்பகை உலகில் வேறு உண்டோ?**

பொ: மூங்கில்களின் உராய்ப்பினுல் தோன்றிய முழக்கம் செய்கின்ற தீ தனக்குப் பிறப்பிடமான மூங்கில் அடியோடு அறுமாறு அழிப்பதுபோலத், தாங்குதற்கு அரிய சினமாகிய தீ தன் உள்ளத்தே தோன்றித் தன்னேடு தொடர்புடைய கிளைஞர்களையெல்லாம் வெதுப்பும். அந்தச் சினத்தின் வெப்பத்தை நன்கு அறிந்தவர்கள் தம்பொறுமையால் உள்ளத்தே அடக்கவும்

அடங்காது: ஓங்குகின்ற கோபமாகிய நெருப்பினை ஒக்கின்ற உட்பகை உலகத்தில் வேறு இருக்கின்றதோ? இல்லை.

கு: மூங்கிற்புதரில் காற்றால் கொணர்ந்து சேர்க்கப் பெற்ற நுண்மணல் அந்த மூங்கிலின் உராய்ப்பினால் நெருப்பைக் கக்கும். அந்தச் சிறிய நெருப்புப் பொறியே பெருந் தீயாய் வளர்ந்து, அந்த மூங்கிற் புதர் அடியோடு அழியுமாறு தீய்த்துவிடும், இயல்பை விளக்கியவாறு. முதலறவேரோடு கெட. முருக்குதல்–அழித்தல். சினத்தீ என்றது உருவகம். "சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும் ஏமப்புணையைச் சுடும்" (திருக்குறள்) என்ற வள்ளுவர் வாய்மொழியை இங்கு விளக்கிய வாறு. மூங்கில் புதர் எரியும்போது ஓசையெழுதல் ஆகிய இயல்பு புலப்பட 'முழங்குதீ' என்றார். மூங்கில் புதரில் ஓரிடத்துத் தோன்றிய தீ அப்புதரிலுள்ள மற்றைய மூங்கிலையெல்லாம் எரித்து விடுதல் போலத் தன்னுள்ளத்தே பிறந்த இனத்தீ தன்னை மட்டும் அழிப்பதே அன்றித் தன் உறவினர்களையும் அழித்துவிடும் என் உவமையை விரித்துரைக்க. தகித்தல்-வெதுப்புதல்; கொளுத்துதல். ஆங்கு-அசை கமை–பொறுமை. அடங்காது என்பது எதிர்மறைமுற்று. கொடுமையால் ஓங்கிய கோபத்தீ என்க. உண்டோ என்ற வினா ஓகாரம் எதிர்மறைப் பொருளதாய் இல்லை என்னும் கருத்தை உணர்த்தியது. சினம் உள்ளத்தே தோன்றுவதாகலின் உட்பகை என்றார். ஏனைக்காமம் லோபம் மோகம் மதம் மாச்சரியம் ஆகிய குற்றங்களினும் சினம் கொடுமை மிக்கது என்றவாறு. (29).

## இராமன் இலக்குவனுக்குப் பிறிதொரு கதையும் சொல்லுதல்

822 மனத்தினல் வாக்கால் வாய்ந்த செய்கையான் மாசிலாதாய்
சினத்தினான் மிக்கோர் பண்டு செய்தவக் கதையை யெல்லாம்
உனக்குநா னுரைப்பென் யாவு முணர்ந்துகே ளென்று வாசப்
புனத்துழாய் மாலை மார்ப னிக்கதை புகல லுற்றான்.

"மனத்தினுல் வாக்கால் வாய்ந்த செய்கையால் மாசு இலாதாய்!
சினத்தினுல் மிக்கோர் பண்டு செய்த அக்கதையை எல்லாம்
உனக்குநான் உரைப்பென்; யாவும் உணர்ந்துகேள்'' என்று வாசப்
புனத்துழாய் மாலை மார்பன் இக்கதை புகலல் உற்ருன்.

பொ:- 'மனத்தாலும் வாக்காலும் காயத்தினுல் செய்யப்படுகின்ற செயலினுலும் குற்றம் அற்றவனே! கோபத்தால் மிக்கிருப்பவர்கள் பண்டைக் காலத்துச் செய்த அக்கதையை எல்லாம் உனக்கு நான் சொல்வேன்; யான் சொல்லுகின்றதை யெல்லாம் உள்ளத்தால் உணர்ந்து கேட்பாயாக! என்று வாசனையுடைய-காட்டில் வளர்கின்ற-துளபமாலையணிந்த மார்பினனுகிய-இராமன் இந்தக் கதையைச் சொல்லத் தொடங்கினுன்.

கு:- இலக்குவன் மனவாக்குக் காயங்களினுல் செய்யப்படும் குற்றம் யாதும் இல்லாதவன் என்பார், 'மனத்தினுல் வாக்கால் வாய்த்த செய்கையால் மாசிலாதாய்,' என்ருர். தீயனவற்றைச் சிந்தியாமலும் தீயனவற்றைப் பேசாமலும் தீயனவற்றைச் செய்யாமலும் இருப்பவன் இலக்குவன் ஆதலின் இவ்வுலகியலைக் கேட்டுச் சிந்தித்தறியான் என்றவாறு. 'சினமிக்கோரைச் சினத்தினுல் மிக்கோர்' என்ருர். உணர்ந்துகேள் என்றது, மனம் பொருந்தக் கேள் என்னும் பொருளது. இராமன் திருமாலின் அமிசமானவன் ஆதலின் 'புனத்துழாய் மாலைமார்பன்' எனப் பட்டான். துளசி மாலை திருமாலுக்கே உரியது. (30)

## யயாதி கதை

823 மன்னவ னகுட னென்பான் வாசவன் மகமுஞ் செயதான்
அன்னவன் புதல்வன் ருதை யனையவன் றவத்தி மிக்கோன்
பன்னெடுங் காலந் தன்னைப் பார்மன்னர் முறைசே விப்ப
இந்நகர்க் கிறைவனுகி யிருந்தவன் யயாதி யென்போன்.

மன்னவன் நகுடன் என்பான், வாசவன் மகமும் செய்தான்;
அன்னவன் புதல்வன் தாதை அனையவன்; தவத்தின் மிக்கான்;
பல்நெடுங் காலம் தன்னைப் பார்மன்னர் முறைசேவிப்ப
இந்நகர்க்கு இறைவன் ஆகி இருந்தவன், யயாதி என்போன்.

பொ:- நகுடன் என்று பெயர் சொல்லப்படுகின்ற மன்னவன், இந்திரன் ஆதற்குரிய பரிமகம் நூறும் செய்தவன்; அவன் புதல்வன்; தந்தையைப் போன்ற பெருமையுடையவன்; தவத்தில் சிறந்தவன், பல நெடிய காலம் வரையில் தன்னைப் பூமியில் உள்ள அரசர்கள் வணங்கிட இந்த நகரத்திற்கு அரசனாகி இருந்தவன்; யயாதி எனப் பெயர் சொல்லப்படுபவன்.

கு: நகுடன் மகன் யயாதி; அவன் தந்தையைப் போன்ற பெருமையும் தவமிகுதியும் உடையவனாய்ப் பார்மன்னர் வணங்க இந்த அயோத்திக்கு அரசனாக இருந்தவன் என்பது கருத்து. வாசவன்-இந்திரன். அவனுக்குரிய மகம் என்றது, இந்திரனாதற் காகச் செய்யப்படுகின்ற நூறு அசுவமேத யாகத்தை. சேவித்தல்-வணங்குதல். (31)

824 பார்க்கவன் கண்ணா யுள்ளோன் பகையறக்
கனைந்து காத்தோன்
பார்க்கவன் றவத்தை யென்றும் பண்ணுவான்
விண்ணோர் தன்மை
பார்க்கவன் னந்த யாகம் பண்ணுவோன்
சன்மிட் டைக்கும்
பார்க்கவன் பயந்த தெய்வ யானிக்கும் பதியா
யுள்ளோன்,

பார்க்கவன் கண்ணாய் உளளோன், பகைஅறக் களைந்து காத்தோன்
பார்க்கவன் தவத்தை என்றும் பண்ணுவோன், விண்ணோர்
தன்மை
பார்க்க, வன்அனந்த யாகம் பண்ணுவான், சன்மிட்டைக்கும்
பார்க்கவன் பயந்த தெய்வ யானிக்கும் பதியாய் உள்ளோன்.

பொ:- சுக்கிரனைக் கண்ணுகக் கொண்டுள்ளவன், பூமியைப் பகை நலியாமல் களைந்து காப்பாற்றினவன், சிவனை நோக்கிச் செய்யும் தவத்தை எக்காலத்தும் செய்கின்றவன், தேவர்கள் தன்மையைப் பார்க்க வேண்டி வலிய எண்ணிறந்த யாகங்களைச் செய்கின்றவன்; சன்மிட்டைக்கும் சுக்கிரன் பெற்ற தெய்வ யானிக்கும் கணவனுக உள்ளவன்.

கு:- பார்க்கவன் என்ற சொல்லே நான்கடியிலுவருமாறு தொடுத்தமையால் இது யமகம் என்னும் சொல்லணியின்பாற் படும். பார்க்கவன்-சுக்கிரன், சிவன். 'விண்ணோர் தன்மை பார்க்க வன் அனந்த யாகம் பண்ணுவோன்' என்றது, அவியுண்ண வருகின்ற தேவர்களின் தன்மையைப் பார்க்க வேண்டி வலிய பல யாகங்களைச் செய்பவன் என்னும் கருத்தினது. அனந்தம்-முடிவில்லாதது; என்றது, எண்ணிறந்த என்றவாறு. தெய்வயானி என்றது, பெயர். சுக்கிரன் புதல்வி. பதி-கணவன். முதலடியிலும் நான்காமடியிலும் வந்த பார்க்கவன் என்பன சுக்கிரனைக் குறிக்கும். இரண்டாமடியில் வந்த பார்க்கவன் சிவபிரானையுணர்த்தியது. மூன்ருவது, பார்க்கவன் எனப் பிரிபடும். யாகத்தின் கடுமை புலப்பட 'வன்' எனவும் பன்மை புலப்பட 'அனந்த' எனவும் சிறப்பித்தவாறு. (32)

825 தன்மிட்ட ஞய வந்த யயாதிக்குத்
தடமென் கொங்கைச்
சன்மிட்டை வயிற்றிற் பூருச்
சனித்தனன் றயித்தி யர்க்குக்
கன்மிட்ட ஞகிக் காக்கும்
கவிமகள் வயிற்றிற் காசில்
பொன்விட்டு விளங்கும் பூஞு
யதுவெனும் புதல்வன் வந்தான்.

**தன்மிட்டன் ஆயஅந்த யயாதிக்குத் தடமென் கொங்கைச் சன்மிட்டை வயிற்றில் பூருச் சனித்தனன்; தயித்தியர்க்குக்**

கன்மிட்டன் ஆகிக் காக்கும் கவிமகள் வயிற்றில் காசுஇல்
பொன்விட்டு விளங்கும் பூணு! யது எனும் புதல்வன் வந்தான்.

பொ: குற்றம் அற்ற பொன் ஒளிவிட்டு விளங்குகின்ற அணி கலன்களையுடைய இலக்குவ! தருமத்தில் பற்றுள்ளவனாகிய அந்த யயாதி என்பானுக்குப் பெரிய மெல்லிய நகில்களையுடைய சன்மிட்டை என்பவள் வயிற்றில் பூரு என்பவன் பிறந்தான் அரக்கர்களுக்கு உரிய எல்லாக் காரியங்களையும் கருத்துடன் பார்க்கின்றவனாய் அவர்களைக் காக்கின்ற சுக்கிரன் மகளாகிய தெய்வயானியின் வயிற்றில் யது எனும் புதல்வன் பிறந்தான்.

கு: 'தரும-இட்டன்' தன்மிட்டன் என ஆயிற்று. இஷ்டன் என்பது இட்டன் எனத் தமிழில் திரிந்தது. சனித்தல்-பிறத்தல் வடசொல் திரிபு. தயித்தியர்-அரக்கர். கவி-சுக்கிரன். கவிமகள் தெய்வயானி. பூணுஎன்றது இலக்குவனை நோக்கிய விளி யயாதியின் இருமனைவியரில் சன்மிட்டை வயிற்றில் பூருவும் தெய்வயானி வயிற்றில் யதுவும் பிறந்தனர் என்றவாறு. (33)

## யதுவின் அழுகை

826 இருவரும் வளருங் காலை யதுவெனும் பேரோன்
வெள்ளம்
சொரிதரு கண்ணி னீரன் றோன்றிய கோபத்
தீயன்
வருபெரு துயரன் றாயை வல்விரைந் தெய்தி
யந்தத்
தெரிவையர் திலகமான சேயிழைக் கினைய
செப்பும்.

இருவரும் வளரும் காலை யதுஎனும் பேரோன், வெள்ளம்
சொரிதரு கண்ணினீரன்-தோன்றிய கோபத்தீயன்
வருபெரு துயரன் தாயை வல்விரைந்து எய்தி அந்தத்
தெரிவையர் திலகமான சேயிழைக்கு இனைய செப்பும்.

பொ: பூருவும் யதுவும் ஆகிய இருவரும் வளர்ந்துவரும் பொழுது யது என்பவன் வெள்ளமாகச் சொரிகின்ற கண்ணீரை யுடையவனாய் உள்ளத்தே தோன்றிய கோபத்தீயையுடையவனாய் வளர்கின்ற பெரிய துயரத்தையுடையவனாய் மிகவிரைந்து சென்று தன்தாயை அடைந்து அந்தப் பெண்டிரில் திலகம் போன்ற வளாகிய செப்பமையான அணிகலன்களை அணிந்த தெய்வ யானிக்கு இத்தன்மையான சொற்களைச் சொல்லலானான்.

கு: கண்ணினீரன், கோபத்தீயன், துயரான் என்பன குறிப்பு முற்றெச்சங்கள். எய்தி என்ற வினைகொண்டு முடிந்தன. யது, நீரனாய், தீயனாய், துயரனாய்த் தாயை எய்தி என்க. வெள்ள மாய்ச்சொரி தரு கண்ணீரன் என்க. கோபத்தீ என்றது, உருவகம். தெரிவையர்-பெண்டிர். பெண்டிருள் சிறந்தாள் என்பார் 'தெரிவையர் திலகம்' என்றார். சேயிழை என்பது செம்மையான அணிகலன்களை யணிந்தவள் எனப் பொருள்பட்டுப் பண்புத் தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய்த் தெய்வயானியைக் குறித்தது. (34)

## யது தன் தாய்க்குச் சொல்லியது

827 தன்மமொன் றிலாச் சிந்தைத் தயித்தியர் தலைவ
னானோன்
தன்மக டனைக்கொண் டாடி யவள்மகன்
றனையே போற்றி
உன்மக னென்னுங் கோபத் தாலெனை யுரப்பா
நிற்கும்
துன்மதி மன்னன் றூயோய் கேளெனப் பின்னும்
சொல்லும்.

**தன்மம் ஒன்று இலாத சிந்தை தயித்தியர் தலைவன் ஆனோன்**
**தன்மகள் தனைக்கொண்டாடி அவன் மகன தனையே போற்றி,**
**உன்மகன் என்னும் கோபத்தால் எனை உரப்பா நிற்கும்;**
**துன்மதி மன்னன் தூயோய்! கேள் எனப் பின்னும் சொல்லும்.**

பொ: தூய்மையுடைய அன்னையே! துர்ப்புத்தியையுடைய மன்னன் யயாதி, தருமம் சிறிதும் இல்லாத சிந்தையனாகிய அசுரர் அரசன் இடபபன்மன் தன் மகளாகிய சன்மிட்டையைக் கொண்டாடி, அவள் மகனாகிய பூருவையே பாராட்டி, உன்மகன் என்னும் வெறுப்பினால் என்னை அதட்டி அச்சுறுத்துகின்றான் இன்னும் கேள் என்று பின்னும் சொல்கின்றான்.

கு: தயித்தியர்-அசுரர். இடபபன்மன் என்பவனையே. தயித்தியர் தலைவன்ஆனேன் என்றான். அவன் மனநிலையைப் புலப்படுத்து முகத்தால்தன்மம் ஒன்றிலாத சிந்தைத் தலைவன் என்றான். ஒன்று என்பது இங்குச் சிறிது என்னும் பொருளது. தன்மம் ஒன்றிலாத சிந்தைத்தயித்தியர் எனத் தயித்தியர்க்கும் அடையாக்கலாம். யயாதி அரசன் மகளாகிய சன்மிட்டையைக் கொண்டாடுதலும் அவள் மகன் புருவைப் பாராட்டுதலும் அந்தணர் பாவையாகிய தேவயானியை வெறுத்தலும் அவள் புதல்வன் யதுவை வெறுத்தலும் அவன் புத்தி மாறுபாட்டால் வந்தனவே யென்பான், 'துன்மதி மன்னன்' என்றான். நன்மதியனா யின் இங்ஙனம் செய்யான் என்பது கருத்து. உரப்புதல்-அதட்டு தல்; அச்சுறுத்தல். ஆழ்கிணற்றில் இருந்தவளின் அல்லல் நீக்கும் அருள்உள்ளத்தால் கைகொடுத்துத் தூக்கிய யயாதியே தனக்குக் கணவன் எனக் கொண்டு மணந்த தூய கற்பினையும் தூய்மைமிக்க அந்தணர் குலத்தளாதலையும் நினைந்து 'தாயோய்' எனத் தன் தாய் தெய்வயானியை விளித்தான் யது. யயாதி உண்ணும்போது புருவையுடன் கொண்டு உண்டானாக, யது அவனைப் பார்த்து உடனுண்ணத் தொடங்குப்போது யயாதி அவனை அதட்டித் துரத்தி விட்டான் அதுவே யதுவின் கோபத்திற்குக் காரணம். இதனைப் பின்பு யயாதிக்கு யது, "எந்தாய்! உன் தனக்குரியமைந்தன் தன்னை நீயுடன் கொண்டு உண்ணும் அன்றெனக் குரிமையில்லையாகியது டனே யுண்ண' என்று கூறுவதால் உணரலாம். (35)

828 போதமில் யயாதிக்குற்றுப் புகுந்தவிப் பாவந்
தீர்த்தா
யார்திநீ யானு மிந்த வருந்துயர் தீர்ந்தே னுவன்

மாய்தலே நமக்கு நன்று மானத்தாற் கவரிமாக்
கள்
சாதலைக் கண்டு தேறாய் தளர்ந்தொரு மயிருக்
காக.

போதம் இல் யயாதிக்கு உற்றுப் புகுந்த இப்பாவம் தீர்த்தாய்
ஆதி, நீ; யானும் இந்த அருந்துயர் தீர்ந்தேன் ஆவன்;
மாய்தலே நமக்கு நன்று; மானத்தால் கவரிமாக்கள்
சாதலைக் கண்டு தேறாய்! தளர்ந்து ஒரு மயிருக்காக.

பொ: (இந்த நிலையில்) நமக்கு மாய்தலே நன்று; அப்படி நாமிருவரும் மாண்டால் அறிவில்லாத யயாதிக்குப் பொருந்தப் புகுந்த இந்தவஞ்சனையாலாய பாவத்தை நீ தீர்த்தாய் ஆவாய்; யானும் வெறுக்கும் தந்தையிடம் வாழ்கின்ற பெருந்துயரைத் தீர்ந்தேன் ஆவேன்; கவரிமான்கள் ஒரு மயிர் நீத்தற்காகத் தளர்ந்து மானத்தால் சாதலைக் கண்டு மானம் காக்கச் சாதல் நன்று என்பதைத் தெளிவாயாக.

கு: வெறுக்கும் கணவனிடம் நீயும் வாழ வேண்டாம்; வெறுக்கும் தந்தையிடம் யானும் வாழ வேண்டுவதில்லை. இறப்பேம்; என்றவாறு. மனமறிய மணந்த மனைவியையும் அவள் வயிற்றுப் பிறந்த மகனையும் வெறுத்து வாழும் யயாதிக்கு நாம் வாழ்ந்தால் அவன் வெறுப்பினுல் விளையும் பாவம் பெருகும். நாம் மாண்டு போனுல் அவன் பாவம் வளராது ஆதலின், நீ யயாதிக்குற்றுப் புகுந்த விப்பாவம் தீர்த்தாய் ஆதி என்றும், வெறுக்குந் தந்தையிடம் வாழும் பெருந்துயரை யானும் தீர்ந்தேனுவேன் என்றும் கூறினுன். போதம்-அறிவு. மானம் கெடவந்தபோது உயிர் விடுதல் நல்லது என்பதற்கு எடுத்துக் காட்டாகவே மயிர்நீப்பின் வாழாக் கவரிமான் சாதலைக் காட்டினுன். 'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னுர், உயிர்நீப்பர் மானம் வரின்' (திருக்குறள்) என்று தெய்வப்புலவர் திருவள்ளுவர் கூறிய கருத்தினை இங்கு வாங்கிக் கூறியவாறு. 'கவரிமாக்கள் ஒரு மயிருக்காகத் தளர்ந்து மானத்தால் சாதலைக் கண்டு தேறாய்' எனக் கொண்டு கூட்டுக.

நம்செயலே தக்கது என்பதைக் கவரிமான் செயலைக் கண்டு தெளி வாயாக' என்று தாயை யது தெளிவித்தவாறு. மானத்தால் மாய் தலே நமக்கு நன்று என்று மாற்றினும் பொருந்தும். (36)

829 ஆயவ னினைய கூற வாயிழை யழன்று பொங்கித்
தூயநற் பவளச் செவ்வாய் துடித்திடக் கண்ணீர் சோரச்
சேயினை யுடனே கொண்டு செறிபுகழ்த் தந்தை தன்பால்
போயவ னடியில் வீழ்ந்து பொருமிநின் றழுது சொல்லும்.

ஆயவன் இனைய கூற, ஆயிழை அழன்று பொங்கித்
தூய நற்பவளச் செவ்வாய் துடித்திடக் கண்ணீர் சோரச்,
சேயினை உடனே கொண்டு, செறிபுகழ்த் தந்தை தன்பால்
போய், அவன் அடியில் வீழ்ந்து பொருமிநின்று அழுது சொல்லும்.

பொ: அந்த யது என்பவன் இத்தன்மையான சொற்களைச் சொல்ல, ஆராய்ந்தெடுத்த அணிகலன்களை அணிந்த தெய்வ யானி மனம் வெதும்பிக் கோபித்து, தூய்மையான நற்பவளம் போன்று சிவந்த வாய் துடித்திடவும் கண்ணீர் பொழியவும் தன் மகனை யுடன் அழைத்துக் கொண்டு நெருங்கிய புகழையுடைய சுக்கிரனாகிய தந்தையிடத்திற்குப் போய் அத்தந்தையின் திரு வடியில் வீழ்ந்து தேம்பிக் கொண்டு நின்று வாய்விட்டு அழுது சொல்லுவாள்.

கு: ஆயிழை என்பது, வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பலவகை அணிகலன்களிலிருந்து இதுவே நல்லது என்று ஆராய்ந்து எடுத்து அணிந்துகொண்ட அணிகலன் களையுடையவள் என்று பொருள்படும். அழலுதல்-மனம்வெதும்பு தல். பொங்குதல்-சினம் மேலிடுதல். தூய செவ்வாய் - நல் பவளச் செவ்வாய் எனத் தனித்தனி இயையும். என்றும் கோபத்தால் துடித்தறியாத செவ்வாய் என்பார் 'தூய நற்பவளச் செவ்வாய் துடித்திட' என்றார். கோபத்தால் செவ்வாய் துடித்தது; கோபத் தோடு கூடிய துன்பத்தால் கண்ணீர் சோர்ந்தது என்க.

அவமதிக்கப்பட்ட மகனை யுடன் கொண்டு சுக்கிரனுகிய தந்தையைத் தொழுது அழுது சொல்கின்ருள் என்க. (37)

830 சிந்தை சன் மிட்டை மேலே செல்கையான் மன்ன னன்ருள்
மைந்தனைங் கண்டாற் கையால் வரவழைத் திறுகப் புல்லி
எந்தைகே ளென்னைக் கண்டா லென்னவென் மகனைக்காயும்
இந்தவெந் துயருக் காற்ருே மெரியிடை வீழ்து மென்ருள்.

"சிந்தை சன்மிட்டைமேலே செல்கையால் மன்னன்அன்ருள்
மைந்தனைக் கண்டால், கையால் வரவழைத் திறுகப் புல்லி
எந்தை! கேள்! என்னைக் கண்டால் என்ன என் மகனைக் காயும்;
இந்த வெந்துயருக்கு ஆற்ருேம்; எரியிடை வீழ்தும்' என்ருள்.

பொ: 'என்தந்தையே! கேட்பாயாக! மன்னனது சிந்தை சன்மிட்டையின்மேல் செல்லுதலால் அவள் மகனைக் கண்டால் அவனை அருகில் வருமாறு அழைத்து அழுத்தி அணைத்துக் கொண்டு என் மகனைக் கண்டால் என்னைக் கண்டாற்போலக் கோபிக்கின்ருன்; இந்தக்கொடிய துன்பத்திற்கு ஆற்றமாட்டோம்; எரியில்வீழ்ந்து இறக்கின்ருேம்' என்று கூறினுள்.

கு: சிந்தை சன்மிட்டைமேலே செல்லுதல் என்றது, சன்மிட்டைமேல் பெருங்காதல் கொண்டிருத்தலால் என்னும் பொருளது. அன்னுள் மைந்தன்-அந்தச் சன்மிட்டையின் மகன் பூரு. மைந்தனைக் கண்டதும் அருகில் வர அழைத்தலும் மார்பில் அணைத்துக் கொள்ளுதலும் அன்பால் நிகழும் நிகழ்ச்சிகளாம். ஒருமகனைப் புல்லிக் கொண்டு மற்றொரு மகனைக் காய்தல் பொறுத்தற்கரிய துயரைத்தருகின்றது என்பாள், 'இந்த வெந் துயருக்காற்ருேம் எரியிடை வீழ்தும்' என்று கூறினுள். புல்லி என்ற வினையெச்சம் காயும் என்ற முற்று வினையைக் கொண்டு முடிந்தது. பூருவைப் புல்லுதலும் யதுவைக் காய்தலும் யயாதி ஒருவன் செய்லே யாதலின் புல்லி என்னும் செய்தெனெச்

சத்திற்குக் காயும் என்பது வினைமுதல் வினையாயிற்று. தன்மகனை மன்னவன் காய்தற்கு உவமையாக 'என்னைக் கண்டாலென்ன என் மகனைக் காயும்' எனத் தன்னைக் கண்டு மன்னவன் காய்தலையே உவமை கூறித் தன்னையும் தன் மகனையும் மன்னவன் வெறுத்தலை ஒருங்கே புலப்படுத்தினுள் தெய்வயானி என்க. இவ்வுலகில் துன்பம் பொறுக்கவியலாத நிலையில் எரிபுகுந்து இறத்தல் இயல்பு. அன்பு காட்ட வேண்டிய கணவனாலும் தந்தையாலும் வெறுக்கப் பட்ட மனைவியும் மகனும் இவ்வுலகிடை வாழ்ந்து பெறுவதோர் பயனின்மையின் 'எரிபுகுந்து இறக்கின்றேம்' என்று மகனையும் உளப்படுத்திக்கூறினுள் தெய்வயானி. (38)

831 குழன்றபூங் குழலா ணெஞ்சு கொதித்திவை
கூற வெள்ளிக்
கழன்றது சிந்தை போத மழிந்தது சிவந்து
கண்கள்
சுழன்றன புருவ நின்று துடித்தன தூய
நல்லோர்க்
கெழுந்தது கோபமென்றால் யாரது தடுக்க
வல்லார்

குழன்றபூங் குழலாள் நெஞ்சு கொதித்து இவைகூற, வெள்ளிக்கு கழன்றது சிந்தை; போதம் அழிந்தது; சிவந்து கண்கள், சுழன்றன; புருவம் நின்று துடித்தன; தூய நல்லோர்க்கு எழுந்தது கோபம் என்றால் யார் அது தடுக்கவல்லார்?

பொ: சுருட்டி முடித்த பொலிவுடைய கூந்தலையுடைய தெய்வயானி மனம் கொதித்து இவற்றைச் சொல்லக் கேட்ட வெள்ளிக்கு சிந்தை வெதும்பியது; அறிவு அழிந்தது; கண்கள் கோபத்தால் சிவந்து சுழன்றன; புருவம் உயர்ந்து நின்று துடித்தன; தூய்மையுடைய நல்லவர்கட்கு எழுந்தது கோபம் என்றால் அதைத் தடுக்க வல்லார் யாருளர்? (யாருமில்லை).

கு: குழன்ற குழல் என்றது சுருட்டி முடித்த கூந்தலை. பூங் குழல்-பொலிவுமிக்க கூந்தல்; பூவைச் சூடிய கூந்தல் எனினும்

அமையும். மகளின் கோபவேகம் சுக்கிரனையும் பிடித்து ஆட்டி விட்டது என்பார், 'சுழன்றது சிந்தை' என்றார். கோபம் மேற் படும்போது அறிவு மறைவது இயல்பாதலின் போதம்அழிந்தது என்றார். போதம்-அறிவு. கண்கள் சிவந்து சுழலுதலும் புருவம் மேலுயர்ந்து துடித்தலும் வெகுளியின் மெய்ப்பாடுகளாகும்.

'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயுங் காத்தலரிது' (திருக்குறள்-29) என்ற திருக்குறளும், 'துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய குன்றின் முடிவின்கண் நின்ற முனிவரது வெகுளி தான் உள்ளது கணமேயாயினும் வெகுளப்பட்டாரால் தடுத்தலரிது' என்ற பரி மேலழகர் உரையும், 'அநாதியாய் வருகின்றவாறு பற்றி ஒரோவழி வெகுளி தோன்றிய பொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்கு மாதலின் கணமேயும் என்றும், நிறைமொழி மாந்தராகலின் காத்தல் அரிது என்றும் கூறினார்' என்ற அவர் விளக்ககமும், இங்கு ஒப்பு நோக்கத்தக்கன. (39)

## வெள்ளியின் சாபம்

832. அவ்வழி வெள்ளி கோபித் தந்தமாற் றுட்டிக் கன்பாய்ச்
செவ்வகை யறியான் சிந்தை கலங்கவித் தெய்வ யானிக்
கிவ்வகை யிடரைச் செய்த யயாதியி னிளமை நீங்கி
நவ்விநேர் விழியார் கண்டு நகைசெய்மூப் படைக வென்றான்.

அவ்வழி வெள்ளி கோபித்து, 'அந்த மாற்றுட்டிக்கு அன்பாய்ச்
செவ்வகை அறியான், சிந்தைகலங்க இத் தெய்வ யானிக்கு
இவ்வகை இடரைச் செய்த யயாதிதன் இளமை நீங்கி
நவ்விநேர் விழியார்கண்டு நகைசெய்மூப்பு அடைக' என்றான்.

பொ: அவ்வாறு வெள்ளி கோபித்து, 'நடுவு நிலைமையை அறி யாதவனாய், அந்த மாற்றுட்டிக்கு அன்புமிக்கவுடையனாய், இந்தத்

தெய்வ யானிக்குச் சிந்தை கலங்க இத்தகைய துன்பத்தைச் செய்த யயாதி என்பவன், தன் இளமை நீங்கி மான் போன்ற விழியினை யுடைய பெண்டிர்கண்டு இகழ்ந்து சிரித்தற்குரிய முதுமையை அடைக' எனச் சபித்தாள்.

கு: வெள்ளி-சுக்கிரன். மாற்றுரட்டி-சகக்கிழத்தி. மனைவியர் இருவரில் ஒருத்திக்கு அன்பு செய்து மற்றொருத்திக்கு வன்பு செய்வது நடுவு நிலைமை யன்று ஆதலின், யயாதி 'செவ்வகை யறியான்' எனப்பட்டான். செவ்வகை என்றது, செப்பம்-நடுவுநிலைமை என்னும் பொருளது. அறியான் என்பது, முற்றெச்சம். அறியானும் இடரைச் செய்த யயாதி என இயையும். இவ்வகையிடர் என்றது, எரிபுகுந்து மாய்தல் வேண்டும் எனத்துணியும் வகைசெய்த அன்பின்மை. இளமையின்பம் பெறுநசையால் ஒருத்திக்கு அன்பு செய்வனுதலின் அவன் இளமை நீங்கப் பெற்று மூப்பு அடைக எனச் சபிக்கலானுன். முதுமையின் இழிவு புலப்பட 'நவ்வி நேர் விழியார் கண்டு நகைசெய்மூப்பு' என்றார். நவ்வி-மான். முதலாகுபெயராய் மானின் கண்ணை யுணர்த்தியது. மானின் கண்போன்ற கண்ணை யுடையாராய் இளமை யழகைப் பார்த்து மகிழ்தற்குரிய பெண்டிர், முதுமையைக் கண்டுழி எள்ளிநகையாடுதல் இயல்பாதலின் இங்ஙனம் கூறினான். (40)

## யயாதி மூப்பு அடைதல்

833 தளர்ந்துதாள் பிணங்கி வெள்ளி சாபத்தாற்
சாபம் போல
வளைந்துமெய் திரைந்து கேசம் பஞ்சுபோல்
வெளுத்து நெஞ்சம்
உளைந்துளைந் திருமிக் கண்ணீ ரொழுகிநாக் குழ
றிப் பற்கள்
துளங்கிடு கடிய மூப்புத் தோன்றியது யயாதிக்
கன்றே.

**தளர்ந்து, தாள்பிணங்கி, வெள்ளிசாபத்தால் சாபம்போல வளைந்து, மெய் திரைந்து, கேசம் பஞ்சுபோல் வெளுத்து;**



**நெஞ்சம்**

உளைந்து உளைந்து இருமிக், கண்ணீர் ஒழுகி, நாக்குழறி, பற்கள் துளங்கிடு கடிய மூப்புத் தோன்றியது யயாதிக்கு அன்றே.

பொ: சுக்கிரன் கொடுத்த சாபத்தால், யயாதிக்குக் கால்கள் தளர்ந்து பின்னி உடம்பு வில்லைப் போல வளைந்து, (உடம்பெல்லாம்) தோல் சுருங்கித் தலை மயிர் பஞ்சுபோல் வெளுத்து, நெஞ்சு வருந்தி இருமி, அவ்வருத்தமிகுதியால் கண்ணீர் ஒழுகி, நாக்குப் பேசமுடியாமல் குழறி, பற்கள் அசைந்து ஆடுகின்ற கடுமையான மூப்புத் தோன்றியது அப்பொழுதே.

கு: வெள்ளி சாபத்தால் யயாதிக்கு மூப்புத் தோன்றியது அன்றே என இயையும். அன்றே-அப்பொழுதே. முதுமையின் தன்மைகள் பலவற்றைத் தொகுத்து உணர்த்தினமையால் இச் செய்யுள் குணத்தன்மையணி ஆகும். தாள்தளர்ந்து பின்னுதலும் உடம்பு வில்லைப்போல வளைதலும், தோல் சுருங்குதலும் தலை மயிர் வெளுத்தலும் நெஞ்சம் உளைந்து இருமுதலும் கண்ணீர் ஒழுகுதலும் நாக்குழறுதலும் பற்கள் ஆட்டங்கொடுத்தலும் மூப்பு என்னும் பண்பின் கண் தோன்றும் பலவகைத் தன்மைகள் ஆதல் காணலாம்: தளர்ந்து, பிணங்கி, வளைந்து திரைந்து வெளுத்து உளைந்து, இருமி, ஒழுகி, குழறி, என்ற செய்து என் எச்சங்கள் துளங்கிடு மூப்பு என்ற வினைத்தொகையில் உள்ள துளங்கிடுகின்ற என்ற பெயரெச்ச வினை கொண்டு முடிந்தன. 'காலங்கரந்த பெயரெச்சம் வினைத்தொகை' என்பது வினைத் தொகையின் இலக்கணமாதல் நினைக. சாபத்தாற் சாபம் போல என்புழிச் சாபம் இருபொருளில் ஆளப்பட்டது இது மடக்கு என்னும் அணி. 'தோன்றியதி யயாதி' என்புழி யவ்வரக்குற்றியலுகரம் குற்றிய லிகரமாயிற்று.

(41)

### யயாதி தன் மூப்பினையேற்க யதுவை வேண்டுதல்

831 இந்தமூப் பால்ய யாதி யதுவினை நோக்கி
யென்பால்
வந்தவிம் மூப்பைக் கொண்டென் வருத்தநோய்
தீர்த்தியேலென்

சிந்தையி லெண்ண மெல்லாந் தீர்ந்துநல் லறங்
கள் செய்து
மைந்தனீ கொண்ட மூப்பை மறித்துநான்
கொள்வ னென்றான்

இந்த மூப்பால் யயாதி யதுவினை நோக்கி என்பால்
வந்த இம் மூப்பைக் கொண்டு என்வருத்த நோய் தீர்த்தியேல் என்
சிந்தையில் எண்ணம் எல்லாம் தீர்ந்து நல் அறங்கள் செய்து
மைந்தன் நீ கொண்ட மூப்பை மறித்துநான் கொள்வன் என்றான்.

பொ: (சுக்கிரனின் சாபத்தால் வந்த) இந்த முதுமையால் வருந்தி யயாதி, தன்மகன் யதுவினை நோக்கி, 'என்னிடத்தில் வந்துள்ள இந்த முதுமையை நீ பெற்றுக் கொண்டு எனது வருத்த நோயைத் தீர்ப்பாயானால், என் சிந்தையில் எண்ணிய எண்ணமெல்லாவற்றையும் நிறைவேற்றிவிட்டு நல்ல அறங்களை செய்து விட்டு என்மைந்தனாகிய நீ கொண்ட மூப்பினை நான் மீட்டுக்கொள்கின்றேன், என்று கேட்டான்.

கு: யதுவின் தாய்ப்பாட்டனாகிய சுக்கிரன் சாபத்தால் வந்த மூப்பினைத் தாங்குதற்கு இயைபுடையவனாதலின் யயாதி, யதுவினை முதலில் வேண்டினான். என்பால் வந்த என்றது, இயல்பாக வயது முதிர்ச்சியால் வந்ததன்று, இடையில் சாபத்தால் வந்தது என்னும் குறிப்புத் தோன்ற நின்றது. இம்மூப்பை என்றது தன் மூப்பின் வடிவத்தைச் சுட்டிக் காட்டிக் கூறியது. சிந்தையில் எண்ணமெல்லாம் என்றது, இளமையில் துய்க்கத் தக்கனவாகவும் செய்யத்தக்கனவாகவும் அவன் எண்ணியிருந்த பல எண்ணங்களை. மூப்பு வந்தமையால் அவை யாவும் செயல்படாது ஒழியும் ஆதலின், அவற்றை நிறைவேற்றவே தன்மகனுடைய இளமையை யயாதி கேட்கின்றான். நீ கொண்ட மூப்பை நின்பால் திரும்பிப் பெறுதற்கு உரிமையுடையேன் என்பது தோன்ற "மைந்தனீ கொண்ட மூப்பை மறித்துநான் கொள்வன்" என்று கூறினான்.

(42)

## மைந்தர் கடமை இதுவெனல்

835 நைந்தடி யற்ற வால
நடுங்கிவீழ் கின்ற தென்று
வந்துவீ ழூன்றி வீழா
வகைநிலைப் பிக்கு மாபோல்
மைந்தர்க டமக்கு நல்ல
வறிவினுன் மகிழ்ந்து சேர்ந்து
தந்தையைத்தளரா வண்ணந் தாங்குதல்
தவத்தி னன்றால்.

**நைந்து அடி அற்ற ஆலம் நடுங்கி வீழ்கின்றது, என்று வந்து வீழ் ஊன்றி, வீழாவகை நிலைப்பிக்கு மாபோல், மைந்தர்கள் தமக்கு, நல்ல அறிவினால் மகிழ்ந்து சேர்ந்து தந்தையைத் தளரா வண்ணம் தாங்குதல், தவத்தின் நன்றால்.**

பொ: வயது முதிர்ச்சியால் அடி நைந்து அற்றுப் போன ஆலமரம் நிலைக்கும் வலிவற்று நடுங்கி வீழ்கின்றது என்றுணர்ந்து அம்மரத்தின் விழுது வந்து தோன்றித் தரையில் ஊன்றி அம்மரம் விழாதபடி நிலைக்கச் செய்தல்போல, மைந்தர்கள் தமக்கு நல்ல அறிவினால் தந்தையின் தளர்ச்சியை யறிந்து அதனைப் போக்க மகிழ்ந்து வந்து சேர்ந்து அத்தந்தையைத் தளரா வண்ணம் தாங்குதல் தவம் செய்தலினும் நல்லது ஆகும்.

கு: நைதல்-உரமற்றுமெலிதல்: வீழ்-விழுது. நிலைப்பித்தல் பிறவினை. நிலைத்தல் ஆலமரத்திற்குத் தன்வினை. நிலைப்பித்தல் வீழின் பிறவினை. இதுஉவமையணி, ஆலின் அடி மரம் தளர்ந்து நைந்தபோது அம்மரத்தின் விழுதுகள் அம்மரம் வீழாது தாங்குவதுபோலத் தந்தை தளர்வுற்றபோது மைந்தர்கள் மகிழ்ந்து சேர்ந்து அத்தந்தை தளரா வண்ணம் தாங்குதல் தவஞ் செய்வதிலும் சிறப்புடையதாகும் என்றவாறு. "சிதலைதினப்பட்ட ஆலமரத்தை மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக் குதலைமை தந்தைக்கண் தோன்றில்தான்பெற்ற, புதல்வன் மறைப்பக் கெடும் (நாலடியார் 197) தாங்குமிடம் ... வுறை தோன்

மரங்களென்ன ஓங்குகுலம் நையவத னுட்பிறந்த வீரர் தாங்கல் கடன்'' (சீவகசிந்: 498) என்பன இங்கு ஒப்புநோக்கத்தக்கன. மைந்தர்கள் தமக்கு நன்று என இயையும். தவத்தின் நன்று என்பது உறழ்பொரு. ஆல், அசை. (43)

836 புத்திர னாவோ னீதி பொருந்தித்
தன் குலத்தி னுள்ளோர்
அத்தனை வரையுந் தீய
வருநர குறுமற் காத்துச்
சுத்தமாங் கதியி னுய்ப்போ னென்று
சொல் வார்க டூயோர்
இத்தைநீ யுணர்ந்தென் மூப்பா
மிடும்பையைத் தீர்த்தியென்றான்

'புத்திரன் ஆவோன் நீதிபொருந்தித் தன் குலத்தின் உள்ளோர்
அத்தனைவரையும் தீய அருநரகு உறுமல் காத்துச்
சுத்தம் ஆம் கதியின் உய்ப்போன், என்றுசொல்வார்கள் தூயோர்;
இத்தை நீ உணர்ந்து என்மூப்பாம் இடும்பையைத் தீர்த்தி என்றான்

பொ:- "ஒரு தந்தைக்குப் புத்திரன் எனப்படுவோன் நீதியொடு பொருந்தி வாழ்ந்து, தன்குலத்தில் உள்ளோர் அனைவரையும் தீயதான-பொறுத்தற்கரிய-நரகத்தில் வீழாமல் காப்பாற்றித் தூய்மையான நல்ல கதியில் செலுத்துபவன்'' என்று தூயோர்கள் சொல்லுவார்கள்; இதனை நீ உணர்ந்து எனது மூப்பாகிய துன்பத்தைத் தீர்ப்பாயாக என்றுவேண்டினான்.

கு: புத்திரன் என்பதற்கு 'நரகத்தில் வீழாமல் காப்பவன் என்று பொருள் கூறுவார்கள். புத்து—நரகம். அனைவரையும் என்றசுட்டுப்பெயர் 'அத்தனைவரையும்' என விரிவு பெற்றது; அவ்வனைத்தும் என்பது 'அன்றியனைத்தும்' எனவருதல்போல. நரகின் கொடுமை தோன்ற, தீய, அரு என ஈரடை கொடுத்துக் கூறினர். அருமை என்றது துன்பம் பொறுத்தற்கு அருமையை யுணர்த்தியது. காத்தல்-தடுத்துக்கரையேற்றுதல். சுத்தமாம் கதி என்றது, துன்பிடைவிரவாத தூய இன்பமயமான துறக்க முதலிய கதிகளை.

உய்த்தல்-செலுத்துதல். பகீரதன் தரையிடைக் கொணர்ந்த கங்கையால் அவன் குலத்தோர் அனைவரும் துறக்கம் பெற்ற நிகழ்ச்சி இங்கு நினைக்கலாம். இதை என்பது இத்தை என விளித்தல் விகாரம்பெற்றது. 'இத்தை விளைவித்தல் மலம்' என்று உண்மை விளக்கத்தில் வருதல் காணலாம். 'தீர்த்தி' என்பது ரவல்வினை. இடும்பை-துன்பம். 'இடும்பைக் கிடும்பைப் படுப்ப ரிடும்பைக் கிடும்பைப் படாதவர் (திருக்குறள்) என்று வருதல் காணலாம். (44)

## யதுவின் விடை

807 என்றவன் விளம்பக் கேட்ட யதுவிது விளம்பு மெந்தாய்
உன்றனக் கரிய மைந்தன் றன்னைநீ யுடன் கொண்டுண்ணும்
அன்றெனக் குரிமை யில்லை யாகுலத் துடனே யுண்ண
இன்றெனக் குரிமை யுண்டே யிவ்விடர் நீக்க வென்றான்

என்று அவன் விளம்பக் கேட்ட யது இது விளம்பும்:
"உன் தனக்கு அரிய மைந்தன் தன்னைநீ உடன்கொண்டு உண்ணும்
அன்று எனக்கு உரிமை இல்லை, ஆகுலத்துடனே உண்ண;
இன்று எனக்கு உரிமை உண்டே இவ்விடர் நீக்க? என்றான்.

பொ:- என்று யயாதி சொல்லக் கேட்ட யது, இதனைச் சொல்வான்:- 'என்தந்தையே! உனக்கு அருமையான மைந்தனாகிய பூருவை உடன் கொண்டு உண்ணும் அன்றைக்கு யானும் ஆரவாரத்துடனே உண்பதற்கு உரிமையில்லை; இன்றைக்கு மட்டும் இந்த மூப்புத்துன்பத்தைநீக்க எனக்கு உரிமை உண்டோ? என்று வினவினான்.

கு:- அவன் என்றது, யயாதியை. எந்தாய்! விளி. மைந்தர் இருவரில் பூருவின்பால் மிக்க நேயந்தனாய் யயாதி ஒழுகினமையின் 'உன்றனக் கரிய மைந்தன்' என அவனை யது குறிப்பிட்டான். தந்தை மைந்தரை யுடன் கொண்டு ஒருகலத் துண்ணுதல் உண்டு. இதனை, ''அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள், சிறுகை யளாவிய கூழ்'' (திருக்குறள்-64) என்ற வள்ளுவர் வாக்கால் உணரலாம். பூருவுடன் உண்ண யயாதி உண்ணுகின்ற போது யதுவும் அவ்வாறு உடனுண்ண நெருங்கிய நிலையில் அவனை நெருங்க விடாது அதட்டித்துரத்தினான் ஆதலின், 'ஆகுலத்துடனே யுண்ண அன்று எனக்கு உரிமையில்லை, என்றான். ஆகுலம்- ஆரவாரம், 'ஆகுல நீரபிற' (திருக்குறள்-34) என்புழியும் இப் பொருளில் அச் சொல் வழங்கப்பட்டிருத்தல் காணலாம். 'உரிமை உண்டே' என்புழி, ஏகாரம் வினாப் பொருளது. இன்பந்துய்த்தற் குரிய மைந்தனே இத்துன்பத்தைத்துடைக்கவும் உரிமை யுடையவன் என்பது யதுவின் உட்கோள். (45)

## யயாதி பூருவை வேண்டுதல்

838 ஈதவ னியம்பத் தன்சொன்
மறுத்திட யயாதி போய்நற்
போதன னாய மைந்தன் பூருவை
யழைத்துக் கொண்டு
கோதறு குணத்தோய் நீயென்
கொடியமூப் பதனைக் கொண்டென்
வாதையை மைந்த தீர்க்க
வல்லையோ வென்னச் சொன்னான்.

ஈது அவன் இயம்பித் தன் சொல் மறுத்திட, யயாதி போய் நல் போதனன் ஆய மைந்தன் பூருவை அழைத்துக் கொண்டு 'கோது அறு குணத்தோய்! நீ என் கொடிய மூப்பு அதனைக் கொண்டு என் வாதையை மைந்த! தீர்க்க வல்லையோ? என்னச் சொன்னான்.

பொ:- யது இதனைச் சொல்லித்தன் கருத்தை மறுத்திட, யயாதி அவனைவிடுத்துச் சென்று, நல்ல ஞானத்தன் ஆகிய மைந்தன் பூருவை அழைத்து உடன் கொண்டிருந்து "குற்றமற்ற குணத்தையுடையவனே! என்மைந்தனே! நீ எனது கொடுமையான முதுமையைப் பெற்றுக்கொண்டு என் துன்பத்தைத் தீர்க்க வல்லையோ?" என்று வினவினான்.

கு: நற்போதனைய மைந்தன் நல்ஞானமுடைய மகன். போதம்-ஞானம், போதனன்-ஞானத்தையுடையவன். கொண்டு என்றது உடன் அமர்த்திக் கொண்டு என்னும் பொருளது. கோது-குற்றம். மைந்த என்ற விளியினையும் குணத்தோய் என்ற விளிக்குப் பின் இயைக்க. வாதை – துன்பம் 'வல்லை' முன்னிலைக் குறிப்புப் பெயர் அது வினை வேற்று 'வல்லையோ' என வாயிற்று. வலிமையுடையையோ? என்பதுபொருள். (46)

**பூரு யயாதியின் முதுமையையேற்றுக் கொள்ளுதல்**

839 இன்னவை யியம்பப் பூரு வென்னிடர் தீர்த்தி யென்று
மன்னவன் கூறப்பெற்று வாழ்ந்தன னன்றே மண்ணில்
என்னையொப் பவரா ரென்று யயாதிதன் மூப்பைக் கொள்ளத்
தன்னிள மையினைப் பெற்ற தராபதி யதுவை நோக்கி.

இன்னவை இயம்பப் பூரு, 'என் இடர் தீர்த்தி' என்று
மன்னவன் கூறப் பெற்று வாழ்ந்தனன் அன்றே மண்ணில்!
என்னை ஒப்பவர் ஆர்? என்று, யயாதிதன் மூப்பைக் கொள்ளத்,
தன் இளமையினைப் பெற்ற தரர்பதி யதுவை நோக்கி.

பொ: யயாதி இத்தகைய சொற்களைச் சொல்ல, பூரு, 'என் துன்பத்தைத் தீர்ப்பாயாக', என்று (எல்லோரின் இடரையும்

தீர்க்கவல்ல) மன்னவன் சொல்ல, யான் பெற்று மண்ணுலகில் நெடிது வாழ்ந்துவிட்டேன் அல்லவா! இனி என்னை ஒத்த தவமுடையார் யார்? என்று கூறிக் கொண்டே யயாதியின் முதுமையை யேற்றுக் கொள்ளப் பூரு தன் இளமையைப் பெற்ற தரைக்கு அதிபனாகிய யயாதி யதுவை நோக்கி;

கு: குளகம். நோக்கி என்னும் வினையெச்சம் வருஞ்செய்யுளில் சபித்து என்ற வினையோடு முடியும். தந்தையென்ற உரிமையினும் மன்னன் என்ற பதவியுயர்ந்த தாதலின், 'மன்னவன் கூறப்பெற்று வாழ்ந்தனன் மண்ணில்' எனக் கூறினான். குடிமக்கள் இடரை யெல்லாம் தீர்க்கவல்ல பேரரசன் தன்மைந்தனிடம் வந்து 'என்னிடர் தீர்த்தி' என்று சொல்லப் பெறுதல் பூருவுக்குப் பெரும் பேருகத் தோன்றுதலின், 'கூறப்பெற்று வாழ்ந்தனன், அன்றே மண்ணில்' எனவும் 'என்னை ஒப்பவரார்' எனவும் மகிழ்ந்து கூறலானான். இத்தகைய பெரும்பேறு மற்றையோர்க்கு வாய்க்கவில்லை யாதலின் 'என்னை ஒப்பவரார்' என மகிழ்ச்சிச் செருக்கோடு கூறலானான். அவ்வாறு சொல்லிக்கொண்டே மூப்பினை வாங்கிக் கொண்டான் என்பார், 'என்னா யயாதிதன் தன் மூப்பைக் கொள்ள' என்றார். தன்னிளமையென்றது, பூரு தன்இளமை என்னும் பொருளது. தராபதி என்பது வடநூல்முடிபு. (47)

840 நீசுர ரோடு மண்ணோ
 ரிகழநின் மைந்த னேடும்
ஆசுர நரகஞ் சார்வா
 யாகெனச் சபித்துச் செற்றோர்
கூசுர முடைய கோமான்
 கொடுவினை யறுப்பான் கோலி
மாசுர மடைந்தான் மற்றை
 மைந்தனை மகுடஞ் சூட்டி.

நீ சுரரோடு மண்ணோர் இகழ நின் மைந்த னோடும்
ஆசுர நரகம் சார்வாய் ஆகெனச் சபித்துச் செற்றோர்
கூசு உரமுடைய கோமான் கொடுவினை அறுப்பான் கோலி
மாசுரம் அடைந்தான்; மற்றை மைந்தனை மகுடம் சூட்டி.

பொ: 'யதுவே நீ விண்ணவரும் மண்ணவரும் இகழுமாறு நினக்குப் பிறக்கும் மைந்தனோடு அசுரத்தன்மை வாய்ந்த கொடிய நரகத்தை அடைவாயாக, என்று சபித்துவிட்டுப் பகைவர்கள் நெருங்கிப் போர் செய்யக் கூசுதற்கேற்ற பெரியவலிமையுடைய யயாதி என்னும் அரசன் மற்றை மைந்தனாகிய பூருவை மணிமுடி சூட்டிவிட்டுத் தவத்தினைச் செய்து தன் கொடிய இருவினைகளை அறுத்தற்காகப் பெரிய காட்டை அடைந்தான்.

கு: பூருவால் கொடுக்கப் பெற்ற இளமையைப் பெற்ற யயாதி தான் அரசனாய்ச் செங்கோலோச்சி எண்ணிய இன்பங்களைத் துய்த்துவிட்டுப் பேரறங்களைச் செய்து விட்டு பல்லாண்டுக்குப் பின்பு தன் சொல்லை மறுத்த யதுவினைச் சபித்துவிட்டுத் தன் சொற்படி இளமையைக் கொடுத்த பூருவுக்கு மீண்டும் இளமை யைக் கொடுத்துவிட்டுத் தன் முதுமையைப் பெற்றுக் கொண்டு அவனை அரசனாக்கிவிட்டு வினையறத்தவஞ் செய்தற் பொருட்டுப் பெருவனம் அடைந்தான் என விரித்துரைத்துக் கொள்க. வெள்ளி யின் சாபத்தால் யயாதி முதுமை யுற்ற ஞான்று சிறுவனாக இருந்த யது, மீண்டும் யயாதி முதுமை பெற்றுக் கொண்டு தவ வனம் அடையும்போது மைந்தனோடு வாழ்ந்திருந்தான் ஆதலின் 'நின்மைந்தனோடு ஆசுரநரகம் சார்வாய்' எனச் சபிக்கலானான். தந்தை சொல்லைக் கேளாதவன் என்று விண்ணவரும் மண்ண வரும் யதுவை இகழ்வர் என்றது இம்மைப் பயனையும் 'நரகம் சார் வாய்' என்றது மறுமைப் பயனையும் குறிப்பிட்டவாறு. இதனால் தந்தை சொற்கேளாதவர் இருமையினும்இடருறுவர் என்பதுகூறப் பட்டது. ஆசுர நரகம் என்றது, கொடிய அசுரர்கள்வீழ்தற்குரிய அருநரகத்தை. கோலி-தவம் செய்து. செற்றார் கூசு உரம் உடைய கோமான் என்றது யயாதியை. தன் மகனது இளமையைப் பெற்ற நிலையில் பகைவர்கள் நெருங்கவியலாது பின்னிடைதற்கேதுவான வலிமையுடையவனாக யயாதி இருந்தான் என்றவாறு. சபித்து, சூட்டி, கோலி, வினையறுப்பான் மாசுரம் அடைந்தான் என இயையும். (48)

## கதை சொன்ன இராமன் சந்தியாவந்தனம் செய்தல்

841 ஒன்றிய கோபத் தோர்கள் இவ்வகை கெடுத லுண்மை
என்று கார் வண்ணன் கூற விளையவன் வியந்து சால
நன்றிது வெனக் கொண் டாட நாயிறு கடலின் மூழ்க
வென்றிகொள் வீரன் சந்தி விதிமுறை முடித்த பின்பு.

'ஒன்றிய கோபத் தோர்கள் இவ்வகை கெடுதல் உண்மை' என்று, கார்வண்ணன் கூற, இளையவன் வியந்து 'சால நன்றுஇது' எனக் கொண்டாட, நாயிறு கடலின் மூழ்க, வென்றிகொள் வீரன் சந்தி விதிமுறை முடித்த பின்பு.

பொ: கோபத்தோடு ஒன்றிவிட்டவர்கள் இவ்வாறு கெடுதல் உண்மையாகும் என்று மேகம் போன்ற வண்ணத்தையுடைய இராமன் சொல்ல, இளையவனாகிய இலக்குவன் ஆச்சரியமடைந்து, 'இந்நிகழ்ச்சி மிகவும் நன்றாகவுள்ளது' என்று கொண்டாடா நிற்க, சூரியன் மேலைக்கடலில் மூழ்கவும் வெற்றிகொண்ட வீரனாகிய இராமன் மாலையில் செய்ய வேண்டிய சந்தியாவந்தனத்தை விதிப் படி செய்து முடித்தபின்பு.

கு: பின்பு என்ற வினையெச்சம் அமளி நண்ணி, என்று மேலைச் செய்யுளில் முடியும். குளகம். யதி தன் கோபத்தினால்கெட்டது கூறிவிட்டுக் கோபத்தின் கேட்டைப் பொதுவகையால் புலப்படுத்த 'ஒன்றிய கோபத்தோர்கள் இவ்வகை கெடுதல் உண்மை' என்று இராமன் கூறுவானானான். கொண்டாட, மூழ்க, என்ற செயவெ னெச்சங்கள் முடித்தபின்பு என்ற பிறவினைகொண்டு முடிந்தன. ஞாயிறு என்பது நாயிறு எனப் போலியாக வந்தது. நாயிறு கடலின் மூழ்க என்றது, மாலை தோன்ற என்னுங் கருத்தினது. வென்றிகொள் வீரன் என்றது அரக்கரை வென்ற இராமனை. சந்தி. என்றது சந்தியா வந்தனத்தை. இங்குச் செய்தது மாலைச் சந்தி

விதிமுறை என்றது வேதத்தில் விதித்த முறைப்படி என்றவாறு. முடித்தபின் என்ற வினையெச்சம் புகரம்பெற்றுப் பின்பு என வாயிற்று. (49)

## இராமன் பள்ளி கொண்டு எழுதல்

842 அவ்விர வமளி நண்ணி யாசையு மண்ணும் விண்ணும்
கவ்விர வியமை வண்ணக் காரிருள் கலங்கி யோட
வெவ்விர வியுமவ் வேலை மிசைவர வேத மென்னப்
பொய்விர வியசொல் லில்லாப் புரவலன் பள்ளி நீங்கி.

அவ்இரவு அமளி நண்ணி ஆசையும் மண்ணும் விண்ணும்
கவ்விரவிய மைவண்ணக் கார்இருள் கலங்கி ஓட,
வெவ் இரவியும் அவ்வேலை மிசைவர வேதம் என்னப்,
பொய்விரவிய் சொல்இல்லாப் புரவலன் பள்ளி நீங்கி.

பொ: அந்த இரவு ஐந்து மூன்றடுக்கிய அமளியில் படுத்துறங்கித் திசைகளும் மண்ணுலகமும் விண்ணும் கவ்விக் கலந்த மையின் வண்ணம் போன்ற கரிய இருள் உள்கலங்கி ஓடுமாறு, வெப்ப மிக்க சூரியனும் கிழ்கடல்மேல் உதயமாகிவர, வேதத்தைப் போலப் பொய்கலந்த சொல்லைச் சொல்லியறியாத இராமனாகிய அரசன் அந்தப் படுக்கையினின்றும் நீங்கி.

கு: அமளி என்றது பஞ்சணை விரித்த படுக்கையை. அமளி நண்ணி என்றது, 'படுக்கையில் படுத்துறங்கி' என்னும் கருத்தினது 'நண்ணி' யென்ற வினையெச்சம் நீங்கி என்னும் வினைமுதல் வினை கொண்டு முடிந்தது. கவ் என்றது கவ்வுதலாகிய தொழிலை. கவ்விரவிய மை என்றது கவ்விக் கலந்த மை போன்ற என்ற வாறு. இது இல்பொருளுவமை. காரிருளுக்கு உவமையாகவந்தது. காரிருள் கலங்கியோட,இரவியும் மிசைவர, புரவலன் பள்ளி நீங்கி

என இயையும். இரவியின் வெம்மை புலப்பட வெவ்விரவி என்றார் வேலை-கடல். சூரியன் கீழ்கடலில் உதிப்பதாகக்கூறுவது மரபு. 'பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்கு' என்பது திருமுருகாற்றுப் படை. இராமன் பொய் சொல்லாதவன் என்பதற்கு உவமையாக வேதத்தைக்கூறியது, அது பொய்கலவாதது என்பது புலப்பட வேண்டி. பள்ளி நீங்கி என்றது துயிலெழுந்து என்னும் பொருளது. (50)

## காலைச் சந்தி முடித்து முனிவர்களை வரவேற்றல்

843 சந்திகா ரியங்க ளெல்லாஞ்
சமைந்தபின் னழைப்பச் சார்ந்த
அந்தணர்க் கம்பொன் பூமி
யானிரை யாதி யாய
இந்திரை கொழுந னீந்தாண்
டிருந்தபின் முனிவ ரெல்லாம்
வந்தன ரென்னச் சொல்ல
வாயிலோய கொணர்தி யென்றான்.

சந்திகாரியங்கள் எல்லாம் சமைந்தபின் அழைப்பச், சார்ந்த
அந்தணர்க்கு அம்பொன், பூமி, ஆன்நிரை, ஆதி ஆய
இந்திரை கொழுநன் ஈந்து ஆண்டு இருந்த பின், முனிவர் எல்லாம்
வந்தனர் என்னச் சொல்ல, 'வாயிலோய்! கொணர்தி' என்றான்.

பொ: காலைச் சந்தியில் செய்யவேண்டிய காரியங்கள் எல்லாவற்றையும் செய்து முடித்தபின் (தானம் கொடுக்க) அழைக்க வந்து அடைந்த அந்தணர்களுக்கு அழகிய பொன்னும் நிலமும் பசுநிரையும் முதலியவற்றைத் திருமகள் மணாளனாகிய இராமன் ஈந்துவிட்டு அங்கு அமர்ந்தபின்பு (வாயிற்காவலன்) 'முனிவர்கள் எல்லாம் வந்துள்ளனர்' என்று சொல்ல, (அவனை நோக்கி) 'வாயிற்காவலனே! அவர்களை அழைத்து வருவாயாக' என்று கூறினன்.

கு: சந்தி காரியங்கள் என்பவை, துயிலெழும்போது கடவுளைத்தொழுது எழுதலும் காலைக்கடன் கழித்துப் பல்துலக்கி வாய்பூசி நீராடி வேதவிதிப்படி சந்தியா வந்தனம் செய்தலும் ஆயவற்றை. நாள் தொறும் காலையில் அந்தணர்க்குத் தானம் கொடுக்கும் பழக்கமுடையவன் ஆதலின், அவன் வாயிலில் அந்தணர்கள் வந்து நெருங்கி நிற்பார்கள் என்பதும் இராமன் அழைத்ததும் சென்று பொன்னும் பூமியும் ஆவும் ஆகிய தானங்களைப் பெறுவார்கள் என்பதும் புலப்படுத்தியவாறு. நாள்தொறும் தானம் கொடுத்தற்கு உரியவன் என்பது புலப்பட, 'இந்திரை கொழுநன்' என்றார். இந்திரை - திருமகள். திருமகள் மணாளன் ஆகலின், ஈதற்குச் சொல்வானேன் என்றவாறு. அந்தணர் என்போர் ஊரிலிருந்து வேதமோதி முத்தீ வளர்ப்பவர் என்றும் முனிவராவார் காட்டிலிருந்து தவஞ்செய்பவர் என்றும் வேறுபாடு காண்க. 'கொணர்தி' என்பது முன்னிலையேவல். (51)

## முனிவர் நலம் வினவுதல்

844 பொருத்திகழ் வாயில் காப்போன்
போயவண் விடுப்பப் புக்க
விருத்தரா முனிவர் தம்மை விதிமுறை
யருச்சித் தேதும்
அருத்திமா தவத்துக் கிப்போழ்
தழிவொன்று மில்லையே யென்று
திருத்திகழ் மார்பன் கூறச்சிதைவிலா
தவர்கள் சொல்வார்.

பொருத்திகழ் வாயில் காப்போன் போய் அவண் விடுப்பப், புக்க விருத்தராம் முனிவர்தம்மை விதிமுறை அருச்சித்து, 'ஏதும் அருத்தி மாதவத்துக்கு இப்போழ்து அழிவு ஒன்றும் இல்லையே' என்று
திருத்திகழ் மார்பன் கூறச் சிதைவு இலாதவர்கள் சொல்வார்.

பொ: தனக்குத்தானே ஒப்பாகத் திகழ்கின்ற வாயிலைக் காப்பவன் சென்று அவ்வாயிலில் போகுமாறு விடுப்பப் புகுந்த மூத்துள்ள முனிவர்களை விதிப்படி அருச்சனை செய்து விட்டு, விருப்பத்தோடு செய்கின்ற நும் பெரிய தவத்திற்கு இப்போது ஏதும் கெடுதி நேரவில்லையே? என்று திருமகள் விளங்கும் மார்பினனாகிய இராமன் வினவ,குற்றமற்றவர்களாகிய அம்முனிவர்கள் சொல்லலானார்கள்.

கு: பொரு—ஒப்பு. இங்கு வேறுவமை கூறவியலாததாய்த் தனக்குத்தானே ஒப்பான அழகினையுடையதாய் விளங்கும் வாயிலின் சிறப்புப் புலப்படப் 'பொருத்திகழ்வாயில்' என்றார். உற்ற நோய் பொறுத்துச் செய்யும் தவ வலிமையால் பல்லாண்டு சழிந்து முதியோராய்த் திகழும் முனிவரரை 'விருத்தராமுனிவர்' என்றார். மூத்தோரைக் கண்டவழி மலர்கொண்டு அருச்சித்துப் போற்றும் சிறப்பையே, 'விதிமுறை அருச்சித் தேத்தி' என்றார். அருத்தி மாதவம் என்றது, விருப்பத்தோடு செய்யும் தவத்தினை. முன்பு இராவணன் முதலிய அரக்கரால் மாதவத்திற்கு அழிவு இருந்துகொண்டிருந்தது; அது போக்கிய பின் இப்போழ்து அத்தகைய அழிவுகள் ஏதும் நிகழவில்லையே என வினவியவாறு. முனிவர்கள் இராமனை நாடுதல் இத்தகைய இடையூறுகள் நேர்ந்த வழியே நிகழும் என்ற எண்ணத்தால் இங்ஙனம் வினவினான். அழிவு-கெடுதி. திரு-திருமகள். சிதைவு-குற்றம். (52)

## முனிவர்கள் இலவணனது கொடுமை மொழிதல்

845 மன்னவர் மன்னு முன்னாண் மதுவெனுந் தானவேந்தன்
தன்னெதி ரிலாத வீரன் றருமமுந் தயாவு மில்லோன்
பின்னிய சடையோ னீயப் பெறுவலித் திரிசூ லத்தன்
அன்னது கைய தாக அழிவிலா வாயுப் பெற்றான்.

மன்னவர் மன்ன! முன் நாள் மது எனும் தான வேந்தன்—
தன் எதிர் இலாதவீரன்-தருமமும் தயாவும் இல்லோன்—
பின்னிய சடையோன் ஈயப் பெறுவலித் திரிசூலத்தன்—
அன்னது கையது ஆக, அழிவுஇலா ஆயுப் பெற்றான்.

பொ: அரசர்க்கு அரசனாகிய சக்கரவர்த்தியே! முன்னைய நாளில் மது என்னும் பெயருடைய அசுரவேந்தன், தனக்கு எதிர் இல்லாத வீரன்; தருமமும் தயாவும் இல்லாதவன்; பின்னிய சடையோனாகிய சிவன் கொடுக்கப் பெற்ற வலிய மூவிலைச் சூலத்தையுடையவன்; அச்சூலம் கையிலிருத்தலால் யாராலும் அழிக்கப்படாத ஆயுளைப் பெற்றிருந்தான்.

கு: தானவேந்தன் என்றது அசுரர்க்கு அரசன் என்றவாறு. அவ்வசுரனின் இயல்புகளைப் பின் மூன்றடிகளாலும் பேசுகின்றார்கள். அவன் வீரத்தில் நிகரற்றவன்; அவனிடத்தில் இல்லாதன தருமமும் அருளுமே என்பார் தருமமும் தயாவும் இல்லோன் என்றார். சிவபிரானுக்குச் சிறப்பான அடையாளம் சடையேயாதலின் அவனைப் பின்னிய சடையோன் எனக் குறிப்பிட்டார். சிவன் ஈயப் பெற்ற வலிமைமிக்க சூலத்தையுடையவன் என அவன் ஆயுதம் கூறியவாறு. மூவிலைபோன்று மும்முனைகளையுடைய சூலம் என்பார், 'திரிசூலத்தன்' என்றார். சிவன் கொடுத்த சூலத்தைத் தன் கையில் கொண்டுள்ளமையால் பிறராயுளை முடிப்பதையன்றிப் பிறரால் அழிக்கப்படாதவன் என்பார், 'அழிவிலா ஆயுப் பெற்றான்' என்றார். ஆயு-ஆயுள். வாழ்நாள். தானவேந்தன்; வீரன் தருமமும் தயாவும் இல்லோன், திரிசூலத்தன். அழிவிலா ஆயுப் பெற்றான் என்க. அழிவிலா ஆயுப் பெற்றிருத்தற்குக் காரணம் கூறுவாராய் 'அன்னது கையதாக' என்றார். (53)

## இல்வணன் இயல்பு

846 ஆயவன் றன்க்குக் கும்பி
நசிவயிற் றவதா ரஞ்செய்
தீயவன் றேவராதி திரிபுவ
னத்துள் ளோர்க்கும்

சாய்விலா வென்றி வீரன்
றயாவொடுந் தருமத் தோடும்
ஏய்விலா வஞ்ச நெஞ்ச
னிலவண னென்னும் பேரோன்.

ஆயவன் தனக்குக் கும்பிநசிவயிற்று அவதாரம் செய்
தீயவன்; தேவர்ஆதி திரிபுவனத்து உள்ளோர்க்கும்
சாய்வுஇலா வென்றி வீரன்; தயாவொடும் தருமத்தோடும்
ஏய்வுஇலா வஞ்ச நெஞ்சன் இலவணன் என்னும் பேரோன்.

பொ: அந்த மது என்பவனுக்குக் கும்பிநசி வயிற்றில் பிறந்த கொடியவன்; தேவர் முதலிய மூவுலகத்தோர்க்கும் தோல்வியுறாத வெற்றி வீரன்; அருளோடும் தருமத்தோடும் இசைவு இல்லாத வஞ்ச நெஞ்சத்தன்; இலவணன் என்னும் பெயரையுடையவன்

கு: அவதாரம் என்ற சொல் மேல்நிலையினின்று கீழ் இறங்கி வருகின்ற தெய்வப் பிறவிகட்கே வழங்கும் சொல்லாகும்; இங்கு இகழ்ச்சிக்குறிப்புத் தோன்ற 'அவதாரம் செய்தீயவன்' என்றார். திரிபுவனம் - மூவுலகம். தேவர் மனிதர் நாகர் என்ற மூவுலகத்துள்ள முத்திறத்தோர்க்கும் பின்னிடாதவன் என்பார், 'சாய்விலா வென்றி வீரன்' என்றார். தயா என்பது வடசொல்; திரிபின்றி வந்தது; அருள்என்னும்பொருளது. அவன் வஞ்ச நெஞ்சத்திற்குச் சிறிதும் இயைபு இல்லாதவை அருளும் அறமுமே ஆகும் என்றவாறு. அருளும் அறமும் அவன் நெஞ்சில் புகா என்றவாறு. சாய்வு-தோல்வி. ஏய்வு–இயைபு. இந்த அறுசீரா-சிரியவிருத்தம் முதலிரண்டடி ஒரெதுகையாகப் பின்னிரண்டடி வேறெதுகையாக வந்துள்ளன. (54)

## இலவணனுக்கு மது தன் சூலத்தைக் கொடுத்தது

847 அன்னவன் கொடுமை கண்டு
மதுமுன்ன ரரன்பாற் பெற்ற
இந்நெடுஞ் சூல நின்கை
யிருக்கவே யிமையோ ரேனும்

உன்னொடும் பொருவான் மூளி
லுலைவரென் றுரைத்துப் போற்றித்
தன்னெதி ரிலாத தந்தை
கொடுத்திடத் தன்கைக் கொண்டான்.

அன்னவன் கொடுமை கண்டு மதுமுன்னர் அரன்பால் பெற்ற
இங்நெடுஞ் சூலம் நின்கை இருக்க வேறு இமையோரேனும்
உன்னொடும் பொருவான் மூளில் உலைவர் என்று உரைத்துப்
போற்றித்
தன் எதிர்இலாத தந்தை கொடுத்திடத் தன்கைக் கொண்டான்.

பொ: அந்த இலவணனது கொடுமையைக் கண்டு, தனக்கு நிகரில்லாத தந்தையாகிய மது, 'முன்புநான் சிவனிடம் பெற்ற இந்த நெடிய சூலம் நினதுகையில் இருக்கும் போது, தேவர்களே யாயினும் உன்னோடு போர் செய்ய மூண்டு எழுவாராயின், அழிவார்கள்' என்று அச்சூலத்தின் பெருமையைச் சொல்லிப் பாராட்டிக் கொடுத்திடத் தன்கையில் கொண்டிருக்கின்றான்.

கு: தன்னெதிரிலாத தந்தை மது என இயையும். இமையோரேனும் என்புழி உயர்வு சிறப்பும்மை. இமையோரேனும் உலைவர் என்றமையால் மானிடர் அழிவது சொல்லாமலே அமையும். பொருவான் - போர் செய்யும் பொருட்டு. மூளுதல்- ஒருப்பட்டெழுதல். கொடுமையில் தனக்கு எதிராவார் இலாத வன் என அவன் கொடுமை மிகுதி புலப்படுத்தியவாறு. உலைதல்- அழிதல். சிவபிரான் தனக்குக் கொடுத்த சூலத்தை மது, தன் மகனுக்குக் கொடுத்து அவன் கொடுமைக்கு ஊக்கம் ஊட்டினான் என்றவாறு. (55)

## இலவணன் முனிவர் தவத்திற்கு இடையூறு செய்வதைச் சாற்றுதல்

848 அங்கது கைக்கொண் டிந்த
வவனியை யடங்க நூறித்
தங்குமா தவத்தோர் தம்மைத்
தவஞ்செயா வண்ணஞ் செய்தான்

இங்கெமக் கிடையூ றுற்ற
லிந்நகர் வருவ தன்றிப்
பொங்கர வணையாய் வேறு
புகலிட முண்டோ வென்றார்.

'அங்கு அது கைக்கொண்டு இந்த அவனியை அடங்க நூறித்,
தங்கு மாதவத்தோர் தம்மைத் தவஞ்செயா வண்ணம் செய்தான்
இங்கு எமக்கு இடையூறு உற்றால் இந்நகர் வருவது அன்றிப்
பொங்கு அரவணையாய் 'வேறு புகலிடம் உண்டோ?' எனறார்.

பொ:- இன்பம் பொங்குகின்ற பாம்பணையில் பள்ளி கொள்வோனே! அவ்விடத்துத் தந்தை கொடுத்த அச்சூலத்தைத் தன் கையில் கொண்டு, இந்த உலக முழுவதையும் அழித்து, வனத்தில் தங்கியுள்ள பெரிய தவமுனிவர்களைத் தவஞ்செய்யாதபடி செய்து விட்டான்; இவ்வுலகத்தில் எங்கட்கு இடையூறு நேர்ந்தால், இந்த அயோத்தி நகர்க்கு வருவதன்றி இதற்கு வேறாக அடைக்கலம் புகுதற்கோர் இடம் உண்டோ' என்று கூறினார்கள்.

கு: பழைய பரநிலையை நோக்கி, 'பொங்கரவணையாய்'! என விளித்தனர். துன்பம் வாராமல் காத்தற்குரியவன் திருமாலின் அவதாரமாக விளங்கும் இராமனே; என்பது குறிப்பு. நூறுதல்-அழித்தல். தங்குதல் என்ற வினையால் தங்குமிடமாகிய வனம் வருவிக்கப்பட்டது. உலகத்தை அழித்ததோடு ஒருதீங்கும் செய்யாது தவம்புரியும் மாதவர்களைத் தவஞ்செய்யாது தடுத்துக் கொடுமை செய்கின்றான் என்றனர். இச் செய்யுளின் பின் னிரண்டடி, பாலகாண்டத்தில் கையடைப்படலத்தில் கோசிகன்; "இவ்வயோத்தி யென்னும் பொன்னகரமல்லாது புகலுண்டோ இகல் கடந்த புலவுவேலோய்" எனத்தயரதனை நோக்கிக் கூறுவதை ஒத்து விளங்குவதைக் காணலாம். புகலிடம்-அடைக்கலம் புகுதற்குரிய இடம். (56)

849 ஆங்கவ ருரைத்த சொற்கேட்
டருந்தவ முனிவர்க் கெல்லாம்
தீங்குசெய் தீயோன் றன்னைத்
தென்புலத் துய்ப்பென் றிண்ணம்

நீங்கள்போ யஞ்சா துங்க
ணிலைகளி னின்மி னென்று
தேங்கமழ் தாரோன் தீயோன்
தனைக் கொலுந்திறஞ் சிந்தித்தான்.

ஆங்கவர் உரைத்த சொல்கேட்டு அருந்தவ முனிவர்க்கு எல்லாம்
தீங்கு செய் தீயோன் தன்னைத் தென்புலத்து உய்ப்பென் திண்ணம்;
நீங்கள்போய் அஞ்சாது உங்கள் நிலைகளில் நின்மின் என்று
தேங்கமழ் தாரோன், தீயோன் தனைக்கொலும் திறம் சிந்தித்தான்.

பொ; அவ்விடத்து அம்முனிவர்கள் சொன்ன சொல்லைக் கேட்டு, 'அரியதவத்தைச் செய்கின்ற முனிவர்கட்கு எல்லாம் தீங்குகளைச் செய்கின்ற தீயவனுகிய இலவணனை எமனுலகிற்கு அனுப்புவேன்; இது திண்ணம்; நீங்கள் அஞ்சாது போய்உங்கள் தவநிலையில் நில்லுங்கள்' என்று சொல்லிவிட்டு தேன்மணம் கமழும் துளபமாலையணிந்த இராமன், அந்தத் தீயவனைக் கொல்லும் திறன் எவ்வாறு எனச் சிந்திக்கலானுன்.

கு: தவமாகிய நற்கருமம் செய்கின்ற முனிவர் என்பார், 'அருந்தவ முனிவர்' என்றுர். தீயோன் என்றது இலவணனை. நிலைகள் என்றது தவநிலைகளை; தவக்குடில்கள் எனலும் ஆம். உய்த்தல் - செலுத்துதல் தென்புலம் என்றது, எமனுலகத்தை. அது தென்திசையது ஆதலின் 'தென்புலம்' என்றுர். தேங்கமழ் தார் என்றது துளபமாலையை. எண்ணித் துணிய வேண்டுதலின், 'கொலுந்திறம் சிந்தித்தான்' என்றுர். (57)

**தம்பியரை நோக்கி இலவணனைக் கொல்வார் யாரெனல்**

850 இன்னுயிர்த் தம்பி மாரை
யிருகணு லினிது நோக்கி
மன்னுயி ரடங்கக் கொன்று
மாதவர்க் கிடரைச் செய்தோன்

தன்னுயிர் தன்னை வாங்கித்
தருமவர் யாரோ வென்ன
என்னுரை கேட்டி யென்று
இலக்குவ னினைய சொன்னான்.

இன் உயிர்த்தம்பி மாரை இருகணால் இனிது நோக்கி
'மன்னுயிர் அடங்கக் கொன்று, மாதவர்க்கு இடரைச் செய்தோன்
தன் உயிர் தன்னை, வாங்கித் தருமவர் யாரோ? என்ன
'என் உரை கேட்டி' என்று இலக்குவன் இனைய சொன்னான்.

பொ: தனது இனிய உயிர் போன்ற தம்பிமார் மூவரையும் இருகண்களாலும் இனிதாகப் பார்த்து நிலைபெற்ற உயிர்கள் எல்லாவற்றையும் கொன்று, பெருந்தவ முனிவர்கட்குத் துன்பத்தைச் செய்தவன் உயிரை வாங்கித் தருபவர் யார்? என்று வினவ, இலக்குவன், என் சொல்லைக் கேட்பாயாக என்று இத்தன்மையான சொற்களைச் சொல்வானானான்.

கு: தன் உயிர் போன்ற அருமையும் உரிமையும் உடைய பரதன் முதலானவர்களை. இராமனது நிறையருளுக்குப் பாத்திர மாயினர் என்பார், 'இருகணால் இனிது நோக்கி' என்றார். மன்னுயிர் நிலைபெற்ற உயிர். அடங்கக் கொல்லுதலாவது உயிர்கள் எல்லாவற்றையும் அவை நின்ற உடம்பினின்று பிரியும்படி தாக்குதல். மாதவர்க்கு இடரைச் செய்தவன் உயிரை வாங்குதல் அறமாதலின், அவ்வாறு வாங்குபவர் உம்மில் யார்? எனத் தம்பியர் மூவரை நோக்கி வினவ, இலக்குவன் சொல்லுவானானான் என்க. தம்பியர் வீரவுணர்ச்சியை ஆராய்வானாய் இராமன் இங்ஙனம் வினவினான். (58)

## இலக்குவன் சொல்வது

851 மூவகை யுலகி லுள்ள
முனிவர்தா னவர்க ளாதி
யாவரு மவனுக் காகி
யென்றொடும் பொருவ ரேனும்

ஏவினை யாகி லென்னை
யிலவண னென்னு மந்தப்
பாவகா ரியையான் கொல்வே
னென்றலும் பரதன் கூறும்.

"மூவகை உலகில் உள்ள முனிவர் தானவர்கள் ஆதி யாவரும், அவனுக்கு ஆகி என்னெடும் பொருவரேனும் ஏவினை ஆகில் என்னை, இலவணன் என்னும் அந்தப் பாவ காரியை யான் கொல்வென்' என்றலும், பரதன் கூறும்

பொ: விண்ணும் மண்ணும் பாதலமும் ஆகிய மூவுலகத்தில் உள்ள முனிவர்கள், தானவர் முதலிய அனைவரும் அவனுக்குத் துணையாகி வந்து என்னெடும் போர்செய்தாராயினும் என்னை ஏவினுல் இலவணன் என்கின்ற அந்தப் பாவமே செய்கின்ற பாவியை யான் கொல்லுவேன் என்றுகூறுதலும் பரதன் சொல்கின்ருன்.

கு: இப்போது பகையாகியுள்ள முனிவர்களும் அவர்கட்கு நண்பராகித் தம்தவ வலிமையை அவனுக்குத் துணையாக அனுப்பவரேனும் என்பான், முனிவரையும் உடன் எண்ணினுன் தானவர்—அசுரர். 'யான் ஒருவன் எதிர்த்து நிற்க, மூவுலகத் தோரும் இலவணனுக்குத் துணையாக வந்தாலும் கொல்லாமல் விடேன்' என்றவாறு. பாவகாரி-பாவத்தைச் செய்பவன்; பாவி. ஏவுதல்-அனுப்புதல்
(59)

## பரதன் சொல்வது

852 துங்கமா முடியோய் நாயேன்
சொல்லுவ துண்டு கேட்டி
வெங்கடுங் கானத் தேபோய்,
மென்கனி சருகு மூலம்

223 அங்கவை யமுது செய்தற்
கமைந்தன னாண்டீ ரேழும்
கங்குலும் பகலு முன்னைக்
கண்ணுறங் காது காத்து.

துங்க மாமுடியோய்! நாயேன் சொல்லுவது உண்டு; கேட்டி!
வெங்கடும் கானத்தே போய், மென்கனி சருகு மூலம்
அங்கு அவை அமுது செய்தற்கு அமைந்தனன் ஆண்டு ஈரேழும்,
கங்குலும் பகலும் உன்னைக் கண் உறங்காது காத்து.

பொ: வலிய பெரிய முடியையுடையவனே! நாய்போன்ற கீழ்மையேனாகிய யான் சொல்லத்தகுவது ஒன்றுஉளது; அதனைக் கேட்பாயாக! வெப்பமிக்க கடுமையான காட்டிற்குச் சென்று மென்மையான கனியும்உலர்ந்த சருகும் கிழங்கும் ஆகிய் வற்றையே அங்கு உண்டு பதினான்கு ஆண்டுகாறும் இரவும் பகலும் கண்ணுறங்காது உன்னைக் காத்து இருத்தற்கு அமைந்தான் இலக்குவன்.

கு: துங்கம்-வலிமை; தூய்மையும் ஆம். கேட்டி என்பது ஏவல்வினை. வெம்மையும் கடுமையும் உள்ள கானகத்தே நடந்து போதலும் கனியும் சருகும் கிழங்கும் உணவாக உண்ணுதலும் பதினான்காண்டுகாறும் கண்ணுறங்காது நின்னைக் காத்தவனும் ஆகிய பெரிய செயல்களைச் செய்து அமைந்தவன் இலக்குவன் என அவன் பணியின் கடுமையும் பெருமையும் புலப்படுத் தியவாறு. குதிரைகள் பூட்டிய தேரில் செல்ல வேண்டியவன் நடந்து காட்டைக் கடத்தலும் அமுதனைய அறுசுவையுண்டி யுண்ணுதற்குரியவன் கனியும் சருகும் உண்ணுதலும் ஐந்து மூன்றடுக்கிய அமளிமிசை உறங்க வேண்டியவன் கண்ணுறங் காது பதினான்கு ஆண்டுகள் காத்தலும் கடுமையான செயலாதல் காண்க. போய், கண்ணுறங்காது காத்து அமுது செய்தற்கு அமைந்தனன் என இயையும். (60)

853 வந்தெதிர் பொருத மாய
வரக்கரை மடிய நூறி
அந்தக புரத்தி லேற்றி
யடலதி காய ளேடும்
இந்திர சித்தைக் கொன்றங்
கிராவணற் கிடரைச் செய்து
நொந்தன னிளையோ னந்த
நோவைநீ நோக்கல் வேண்டும்.

வந்துஎதிர் பொருத மாய அரக்கரை மடிய நூறி,
அந்தக புரத்தில் ஏற்றி, அடல் அதிகாயனோடும்
இந்திர சித்தைக் கொன்று, அங்கு இராவணற்கு இடரைச் செய்து
நொந்தனன் இளையோன்; அந்தநோவை நீ நோக்கல் வேண்டும்.

பொ: தன்னோடு எதிர்த்துவந்து போர்செய்த வஞ்சனைமிக்க அரக்கரை மடியுமாறுஅழித்து எமன் உலகிற்கு ஏற்றிவிட்டு, வலிமை மிக்க அதிகாயனோடு இந்திர சித்தினைக் கொன்று, அவ்விலங்கையில் இராவணனுக்குப் போரில் துன்பத்தைச் செய்து, நொந்திருக்கின்றான் இளையவனாகிய இலக்குவன்; அவன் பட்ட அந்த நோயை நீ நோக்குதல் வேண்டும்.

கு: எதிர்வந்து பொருத என இயையும். மாயம்-வஞ்சனை. நூறுதல்-அழித்தல். அந்தகன்-எமன். அந்தகபுரம் என்றது எமலோகத்தை. அரக்கரைக் கொன்றதையே எமபுரத்தில் ஏற்றியதாகக் கூறினான். அடல்-வலிமை. அதிகாயன், இந்திரசித்து இருவரும் சகோதரர்கள் ஆதலின் சேர்த்துக் கூறினான். இடர்-துன்பம். இளையோன் நொந்தனன் எனமாற்றுக. முன்னமே இத்தகைய அருஞ்செயல்களைச் செய்து வருந்தியவன் இலக்குவன்; அவன் பட்ட நோயை நினைத்துப் பார்த்தால் அவனை மீண்டும் போர்க்கு அனுப்புதல் முறைமையன்று என்பது விளங்கும் என்றவாறு. பரதனுக்கும் இளையவன் இலக்குவன் ஆதலின், அவனை இளையோன் எனப் பரதன் கூறினான். (61)

854 பலபல வுரைத்தென் வெய்ய
பாதக வரக்கன் பத்துத்
தலைகளு மிரட்டி தோளுஞ்
சரத்தினிற் றடிந்த வீரச்
சிலைவலோ யென்னை யேவிற்
றீவினை களையே செய்யும்
இலவணன் றன்னை நான்கொன்
றிவ்விடர் தீர்ப்பெ னென்றான்.

பலபல உரைத்து என்? வெய்ய பாதக அரக்கன் பத்துத் தலைகளும் இரட்டி தோளும் சரத்தினில் தடிந்த வீரச் சிலைவலோய்! என்னை ஏவின் தீவினைகளையே செய்யும் இலவணன் தன்னை நான் கொன்று இவ்விடர் தீர்ப்பென் என்றான்.

பொ: 'பலப்பல சொல்லிப் பயன் என்னை? (சுருங்கச் சொல்கின்றேன்) கொடிய பாதகனாகிய இராவணனுடைய பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் அம்பினால் குறைத்த வீர மிக்க வில் வீரனே! என்னை ஏவினால் தீவினைகளையே செய்கின்ற இலவணனை நான் கொன்று முனிவர்களின் இந்த இடரைத் தீர்ப்பேன்' என்றான்.

கு: இலக்குவன் முன்னமே அரக்கர் பலரைக் கொன்று தன் வீரங் காட்டியிருத்தலாலும் இராமனும் அவ்வாறே இராவணனை அம்பினால் தலைகளையும் தோள்களையும் குறைத்தவன் ஆதலாலும், இலவணனைக் கொல்ல இதுகாறும் போர்புரியாத யான் செல்லுதலே பொருத்தம் என்பான், "வெய்ய பாதக அரக்கன் பத்துத்தலைகளும் இரட்டிதோளும் சரத்தினிற் றடிந்த வீரச் சிலைவலோய்!" என இராமனை விளித்தான் பரதன். தடிதல்-குறைத்தல். பத்துத் தலைகளும் என முன்னர்க் கூறினமையின் இரட்டி என்றது, அந்தப் பத்தின் இரட்டியாகிய இருபதினையே குறித்தது. சரம்-அம்பு. தீவினைகளையே என்புழி ஏகாரம் பிரிநிலை. நல்வினை சிறிதும் செய்யாதவன் என்பது புலப்படுத்தியவாறு. இவ்விடர் என்றது முனிவர்கள் கூறிய இடரை. இலவணனைக் கொன்ற பின்

அவனாலாகிய இடர் சிறிதும் உளதாகாது ஆதலின், 'கொன்று இவ்விடர் தீர்ப்பென்' என்று கூறினன். (62)

## சத்துருக்கன் சொல்வது

855 இன்னவை பரதன் கூற
விளைய சத்துருக்கன் சொல்லும்
மன்னவர் மன்ன நீபோய்
வனம்புகு வார்த்தை கேட்டு
நின்னையிவ் வரசு செய்யப்
பணித்துநீ மறுப்ப நின்றன்
பொன்னடி நிலையைக் கொண்டு
போந்தனன் சிரத்து வைத்து.

இன்னவை பரதன் கூற, இளைய சத்துருக்கன் சொல்லும்:
மன்னவர் மன்ன! நீபோய் வனம்புகு வார்த்தை கேட்டு
நின்னை இவ்வரசு செய்யப் பணித்து நீ மறுப்ப, நின்தன்
பொன்னடி நிலையைக் கொண்டு போந்தனன் சிரத்து வைத்து.

பொ: இந்தச் சொற்களைப் பரதன் சொல்ல, அவனுக்கு இளையவனாகிய சத்துருக்கன் சொல்லுவான்:- அரசர்க்கு அரசனே! நீ சென்று காடுபுகுந்த செய்தியைக் கேட்டுக்(காட்டிற்கு வந்து) நின்னை இந்த அரசு செய்யுமாறு வேண்டிக் கொண்டு, பின்பு நீ மறுத்ததால் நின் அழகிய பாதுகைகளைப் பெற்றுத் தலையில் வைத்துக் கொண்டு வந்தான்.

கு: இராமன் பல மன்னர்களுக்கும் மன்னனாய்ச் சக்கரவர்த்தியாய் விளங்கினான் என்பது புலப்பட 'மன்னவர் மன்ன' என இராமனை விளித்தான். வனம்புகு வார்த்தை என்ற வினைத்தொகையை வனம்புக்கவார்த்தை என இறந்த காலத்தால் விரிக்க. இவ்வரசு என நேரில் சுட்டிக் கூறினான், அயோத்தியில் இருந்து கூறுதலின். பணித்தல் இங்கு வேண்டிக்கோடலை உணர்த்தியது. மறுப்ப என்றது, மறுத்தலால் கொண்டு எனக்காரணப் பொருளில் வந்த வினையெச்சம். பொன்னடி நிலை என்றது

இராமனது பாதுகைகளை. கொண்டு என்றது பெற்றுக் கொண்டு என்னும் பொருளது. சிரத்து வைத்துப் போந்தனன் என இயையும். (63)

856 அரசிலா வயோத்தி யெய்தி
யரசுநாஞ் செய்தோ மென்றே
நரர்பழி யிடுவ ரென்று
நந்திநற் கிராம நண்ணி
மரவுரி யுடுத்து வார்ந்த
சடையனுய்க் கண்ணீர் மாறுப்
பரதனை யேவ லாமோ
பார்புகழ் பைம்பொற் பூணுய்!

'அரசு இலா அயோத்தி எய்தி அரசு நாம் செய்தோம்' என்றே
நரர் பழி இடுவர்; என்று நந்தி நல்கிராமம் நண்ணி,
மரவுரி உடுத்து, வார்ந்த சடையனுய்க் கண்ணீர் மாறுப்
பரதனை ஏவல்ஆமோ?' பார்புகழ் பைம்பொன் பூணுய்!

பொ: உலகமெலாம்புகழ்கின்ற பசுமையான பொன்னுலியன்ற அணிகலன்களையுடையவனே! 'உரிமையுள்ள அரசன் இல்லாத அயோத்தியை அடைந்து தாம் அரசு செய்தோம்' என்று மக்கள் நம்மேல் பழிபோடுவார்கள் என்று கருதி, அயோத்தியை விடுத்து நந்திக் கிராமம் என்கின்ற நல்ல சிற்றுரை அடைந்து மரவுரியை யுடுத்துக் கொண்டு பின்னுல் தொங்கும் நீண்ட சடையையுடையவனுய்க் கண்ணீர் மாருமல் சொரிந்துகொண்டு தவஞ்செய்த பரதனைப் போர்க்கு அனுப்புதல் தக்கது ஆமோ?

கு: 'பார்புகழ் பைம்பொன் பூணுய்' என்றது இராமனை நோக்கிய விளி. தயரதனுக்குப் பின் அரசுரிமைக்குரிய இராமன் கானம்புக்க நிலையை நினைந்து, 'அரசிலா அயோத்தி' எனப் பட்டது. கைகேசியின் வரத்தால் பரதன் அரசுரிமையைப் பெற்ருனுயினும் அதனை விரும்பாது, கானகம் சென்று இராமனை அரசுசெய்யுமாறு அழைக்கவும் அவன் வர உடன்படாத நிலையில் அவன் பாதுகைகளைப் பெற்றுவந்து நந்திக் கிராமத்தில் அப்பாதுகைகளுக்கே பட்டம் சூட்டி அவற்றின் கீழிருந்து தவம்

புரிந்து கொண்டு அரசியலையும் கவனித்துக் கொண்டு வந்த நிலையை விளக்க, 'மரவுரியுடுத்து வார்ந்த சடையனுய்க் கண்ணீர் மாருப் பரதன்' என்று கூறினுன். நரர் என்றது மக்கள் தொகுதியை. அண்ணன் அனுமதியில் அரசு செய்யினும் மக்கள் சொல்லும் பழி மொழிக்கு அஞ்சி அயோத்திபுகாது நந்திக் கிராமத்தில் தவம்புரிந்தான் பரதன் என்பது புலப்படுத்தியவாறு. மரவுரி என்றது மரப்பட்டையினுல் ஆய ஆடையை. வார்தல்—நீளுதல். எப்போதும் இராமனை நினைந்து கண்ணீர் விடும் பரதன் இயல்பு புலப்பட வேண்டிக் 'கண்ணீர் மாருப் பரதன்' என்ருர். ஏவல்-போர் செய்யப் போமாறு அனுப்புதல். முன்னமே தவத்தால் இளைத்த உடம்பினனுகிய பரதனைப் போர்க்கு அனுப்புதல் தகாது என்பான், 'பரதனை ஏவலாமோ?' என்ருன். (64)

857 எஞ்சலில் கீர்த்தி பூண்ட
　　விளையவ னியம்பும் பின்னும்
அஞ்சன வரைபோன் மேனி
　　யழகனே யருளி லாத
வஞ்சன்மே லென்னை யேவின்
　　வானுல கவனை யேற்றி
நெஞ்சிடர் முனிவர் நீங்க
　　நிறுத்துவெ ன்னறத்தை யென்ருன்.

எஞ்சல்இல் கீர்த்தி பூண்ட இளையவன் இயம்பும் பின்னும்;
அஞ்சனவரைபோல் மேனி அழகனே! அருள் இலாத
வஞ்சன்மேல் என்னை ஏவின் வான்உலகு அவனை ஏற்றி,
நெஞ்சுஇடர் முனிவர் நீங்க நிறுத்துவென் அறத்தை என்ருன்.

பொ: குறைவு இல்லாத கீர்த்தியைப் பூண்டு கொண்டுள்ள இளையவனுகிய சத்துருக்கன் மீண்டும் சொல்லுவான்:- 'மையினுல் இயன்றமலைபோன்ற மேனி அழகினையுடையவனே'. அருளே இல்லாத வஞ்சகனுகிய இலவணன்மேல் என்னை ஏவினுல் அவனைக் கொன்று விண்ணுலகு ஏறச் செய்து விட்டு, முனிவரர் தம் மனத்துன்பம் நீங்க, தருமத்தை நிலை நிறுத்துவேன்' என்று கூறினுன்.

கு: இளையவன் என்றது மூவர்க்கும் இளையவனாகிய சத்து ருக்கனை. எஞ்சுதல்-குறைதல். அஞ்சனம்-மை. 'அஞ்சனவரை போல் மேனியழகனே!' என்றது, இல்பொருள் உவமை. மையினால் இயன்ற மலையாண்டும் இன்மை தெளிவு. இராமன் அஞ்சன மலை போன்ற கருமையும் அழகும் உடையவன் என்ற வாறு. அருளிலாத வஞ்சன் என்றது, இலவணனை. அவன்பால் இல்லதும் உள்ளதும் கூறுவார் அருள் இலாத வஞ்சன் என்றார். அருளுக்கு இவன்பால் இடமில்லை; அதற்கு மாறாகிய வஞ்சனைக்கு இடமுண்டு என்றவாறு. வானுலகென்றது வீர சுவர்க்கத்தை. சத்துருக்கனால் கொல்லப்படின் இலவணன் வீர சுவர்க்கம் புகுதல் தப்பாது என்றவாறு. முனிவர் நெஞ்சிடர் நீங்க என இயையும். மறமே நயந்து செய்துவந்த இலவணனை ஒழித்திடின் அறம் நிலைபெறும் என்பான், 'திறுத்துவென் அறத்தை' என்றான். (65)

858 வளைதனுக் கையின் வாங்கி
வானவ ரெனினும் வெம்போர்
விளைகளத் தெதிர்ப்ப ராயின்
வெற்றிகொள் வீரப்பொற்றோள்
இளையசத் துருக்க னிவ்வா
றியம்பிட விராமன் கேட்டுக்
கிளரொளிப் பவளச் செவ்வாய்
திறந்திவை கிளத்த லுற்றான்.

வளைதனுக் கையில் வாங்கி வானவர் எனினும், வெம்போர் விளைகளத்து எதிர்ப்பாராயின், வெற்றிகொள் வீரப்பொன்தோள் இளையசத்துருக்கன், இவ்வாறு இயம்பிட, இராமன் கேட்டு, கிளர்ஒளிப் பவளச் செவ்வாய் திறந்து இவை கிளத்தல் உற்றான்.

பொ: கொடிய போர்விளைகின்ற போர்க்களத்து எதிர்ப் பார் ஆனால் தேவர்களே எனினும் வளைந்த வில்லைக் கையில் வாங்கிக் கொண்டு போர் செய்து வெற்றிக்கொள்ளுதற்குரிய வீரம் நிறைந்த அழகிய தோள்களையுடைய இளையவனாகிய

சத்துருக்கன் இவ்வாறு சொல்லிட, இராமன் கேட்டுக் கிளர்ந் தெழுகின்ற ஒளியையுடைய பவளம் போன்று சிவந்த வாயினைத் திறந்து இவற்றைச் சொல்லலானான்.

கு: தனு-வில். அதன் இயல்பு புலப்பட வளைதனு என்றார். எதிர்த்தவர் தேவரேயாயினும் வெற்றிகொள்ளும் தோள்கள் என்பார், 'வெற்றிகொள்வீரப் பொற்றோள்' என்றார். வானவ ரெனினும் வெற்றி கொள் என இயையும். களத்து எதிர்ப்பா ராயின் வானவர் எனினும் தனுக்கையில் வாங்கி வெற்றி கொள் வீரப் பொற்றோள் சத்துருக்கன் என இயையும். இராமன் வாய் திறந்து பேசும் அழகில் ஈடுபாடு கொண்டு 'கிளரொளிப் பவளச் செவ்வாய் திறந்து இவை கிளத்தலுற்றான்' என்றார். கிளத்தல்- சொல்லுதல். இளைய சத்துருக்கன் என்ற அடை வெண்டிங்கள் என்றாற்போல இனமில் அடை. (66)

## இராமன் சொல்வது

859 முனைக்களத் தெதிர்ப்பி னிந்த
மூவுல கத்தி னுள்ளோர்
உனக்கெதிர் நிற்கு மாற்ற லுடையரோ
வுயர்பொற் றோளாய்
சினத்திற லசுரன் தன்னைத்
தென்புலத் தேற்றித் துயோர்
மனத்திடர் தீர்த்தி யென்றான்
மனுகுலத் துற்ற வள்ளல்.

'முனைக்களத்து எதிர்ப்பின் இந்த மூவுலகத்தின் உள்ளோர்
உனக்கு எதிர்நிற்கும் ஆற்றல் உடையரோ உயர்பொன் தோளாய்!
சினத்திறல் அசுரன் தன்னைத் தென்புலத்து ஏற்றித், துயோர்
மனத்து இடர் தீர்த்தி' என்றான் மனு குலத்து உற்ற வள்ளல்.

பொ: மனுகுலத்தில் பிறந்த வள்ளலாகிய இராமன், உயர்ந்த அழகிய தோள்களையுடையவனே! நீ போர்க்களத்தில்எதிர்த்தால், இந்த மூன்று உலகத்தில் உள்ளவர்கள் உனக்கு எதிர்நிற்கும் வலிமையையுடையவர்களோ? (அல்லர்) எதிர்த்தவரை அழிக்கும்

சினமும் திறமையும் உடைய இலவணன் என்னும் அசுரனை நீ எமனுலகத்தில் ஏற்றிவிட்டுத் தூய்மையுள்ள முனிவர்களின் மனத்துயரைத் தீர்ப்பாயாக' என்று கூறினன்.

கு: முனைக்களம் என்றது, போர்க்களத்தை. 'வானவரெனினும் வெற்றிகொள்' என மேற்கூறப்பட்டமையால் இங்கு வானவரே அன்றி மூவுலகத்தோரும் சத்துருக்கனுக்கு எதிர்நிற்கும் ஆற்றலுடையரல்லர் என்று இராமன் கூறினன். உயர் பொற்றோளாய்! என்ற விளி சத்துருக்கனை நோக்கியது. இலக்குவனும் பரதனும் சத்துருக்கனும்போர் ஆர்வமுடையராய்க் கூறிய சொற்களை ஆராய்ந்து சத்துருக்கன் சொன்னதையே சிறப்புடையதாக எடுத்துக் கொண்டு அவனைப் போர்க்கு அனுப்பிய நடுவுநிலைமையை நினைந்து 'மனுகுலத்துற்ற வள்ளல்' என இராமனைச் சிறப்பித்தவாறு. இதனல் மனு குலத்தின் நடுவுநிலைமை புலப்படுத்தியபடி. இராமன் தன் வீரமுடைமைபுலப்ப இலவணனைக் கொன்று புகழ்பூணுது இளையவனுகிய சத்துருக்கனை ஏவிய வள்ளல்தன்மை நினைந்து இராமனை 'வள்ளல்' என்றார். (67)

## சத்துருக்கன் மகிழ்ச்சி

860 இன்னவை யிராமன் கூற
விலவணன் றன்னைக் கொல்ல
என்னையே யேவப் பெற்றே
னெனவெழுந் துவகை யோடும்
மன்னவன் றன்னை மும்மை
வலஞ்செய்து வணங்கி நிற்பத்
தன்னிரு தோள்க ளாரத்
தழுவின னகில நாதன்.

இன்னவை இராமன் கூற, 'இலவணன் தன்னைக் கொல்ல என்னையே ஏவப் பெற்றேன்'; என எழுந்து உவகை யோடும் மன்னவன் தன்னை மும்மை வலம் செய்து வணங்கி நிற்பத், தன் இரு தோள்கள் ஆரத் தழுவினன் அகில நாதன்.

பொ: இத்தன்மையானவற்றை இராமன் சொல்ல, சத்துருக்கன், 'இலவணனைக் கொல்ல என்னையே ஏவும் பேற்றினைப் பெற்றேன்' என்று எழுந்து, மகிழ்ச்சியோடும் இராமனாகிய மன்னவனை மும்முறை வலம் செய்து வணங்கி நிற்ப, அகில வுலகிற்கும் தலைவனாகிய இராமன் தன் இரண்டு தோள்கள் நிறைவு பெறத் தழுவிக் கொண்டான்.

கு: 'இலவணனைக் கொல்லுதற்கு யானே செல்வேன்' என்று ஆர்வத்தோடு எழுந்து சொன்ன மூவரில் இலக்குவனுக்கும் பரதனுக்கும் அப்பேறு கிடைக்காமல் தனக்கு கிடைத்தமையால் 'என்னையே ஏவப் பெற்றேன்' என்று சத்துருக்கன் உவமைமிக்கு எழுந்து இராமனை வலஞ்செய்து வணங்கலானான் என்றவாறு. மும்மை என்றது மூன்று என்னும் பொருளது; 'தெரிமாண்டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' (பரிபாடற்றிரட்டு) என்புழிப் போல. தோள்களின் விருப்பம்நிறைவு பெறத் தழுவினான் என்பார், 'தோள்களாரத் தழுவினான்' என்றார். 'தலையாரக்கும் பிட்டு' (திருநாவுக்கரசர் தேவாரம்) என்பது நினைக. அகிலம்- எல்லாவுலகங்களும். (68)

## இராமன் சத்துருக்கனுக்கு அணியும் ஆடையும் வழங்கல்

861 அலகிலா மாவுந் தேரு
மடுகளிற் றினமு மாற்றல்
தொலைவிலாப் பெரும்ப தாதித்
தொகுதியுஞ் சூழ வேவி,
விலையிலா மணியு முத்து
மென்னுரைத் துகிலும் பூணும்
மலைகுலா வியதோ ளாற்கு
வழங்கினன் கருணை வள்ளல்.

அலகுஇலா மாவும் தேரும் அடுகளிற்று இனமும் ஆற்றல்
தொலைவுஇலாப் பெரும்பதாதித் தொகுதியும் சூழ ஏவி,
விலைஇலா மணியும்முத்தும் மெல் நுரைத் துகிலும் பூணும்
மலைகுலாவிய தோளாற்கு வழங்கினன் கருணை வள்ளல்.

பொ: அளவில்லாத குதிரைகளும் தேரும் கொல்லுகின்ற யானைக் கூட்டமும் வலிமை குன்றாத பெரிய காலாட்படையும் சூழ்ந்து செல்லுமாறு அனுப்பிவிட்டுக் கருணை நிறைந்த வள்ளலாகிய இராமன், மலைபோன்று விளங்குகின்ற தோள்களையுடைய சத்துருக்கனுக்கு விலைமதிப்பறியாத மணிகளையும் முத்துகளையும் மெல்லிய பால்நுரைபோன்ற ஆடைகளையும் வழங்கினான்.

கு: அலகு-அளவு. மா என்பது, பலபொருள்பயக்கும் சொல்லாயினும் தேரும் களிறும் ஆகிய சார்பினால் குதிரை என்ற பொருளைத்தந்தது. அடுகளிறு-வினைத்தொகை. கொல்லும் யானை என்றவாறு. அடுதல்-கொல்லுதல். ஆற்றல் தொலைவிலாப் பெரும் பதாதி என்றது, எத்துணைநாள் போர் செய்தாலும் வலிமை குன்றிப் போகாத பேராற்றலையுடைய காலாட்படை என்றவாறு. சூழ ஏவி என்றது சத்துருக்கனைச் சூழ்ந்து கொண்டு போமாறு அனுப்பி என்னும் பொருளது. கருணை வள்ளல் ஏவி வழங்கினன் என இயையும். மணியும்முத்தும் விலைவரம்பு அறியப் பெறாதவை என்பார், 'விலையிலா மணியும் முத்தும்' என்றார்' ஆடையின் மென்மையும் வெண்மையும் புலப்பட, 'மெல்நுரைத்துகிலும்' என்றார். நுரை என்றது பால்நுரையை. இலவணனோடு போர் செய்யத் தன்னை நியமித்தவுடன் சத்துருக்கன் தோள்கள் மகிழ்ச்சியால் பூரித்தமை தோன்ற 'மலைகுலாவிய தோளாற்கு' என்றான். 'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொள் திண்டோள்' (பால. பூக்கொய்படலம்) என்பது இங்கு நினையலாம். வரம்பின்றிக் கொடுத்தான் என்பார், 'வழங்கினன்' என்றும் வழங்குதற்குரிமையுடையவன் என்பார் 'கருணை வள்ளல்' என்றும் கூறினார். (69)

## சத்துருக்கன் போர்க்குப் புறப்படுதல்

862 பரதனைப் பதினு லாண்டு
பரமனைக் காவல் பூண்ட
விரதனை விளங்கு சோதி
வெய்யவன் குலத்தோர்க் கென்றும்

வரதனும் வசிட்டன் றன்னை
வணங்கியவ் வஞ்சன் றன்னைச்
சரதநான் கொல்வெ னென்று
சமைந்துசத் துருக்கன் போனான்.

பரதனைப் பதினால் ஆண்டு பரமனைக் காவல்பூண்ட
விரதனை, விளங்கு சோதி வெய்யவன் குலத்தோர்க்கு என்றும்
வரதனும் வசிட்டன் தன்னை வணங்கி அவ்வஞ்சன் தன்னைச்
சரதம் நான் கொல்வென் என்று சமைந்து சத்துருக்கன் போனான்.

பொ: பரதனையும், பதினான்காண்டு இராமனாகிய பரமனைக் காவல் செய்து கொண்டிருந்த விரதமுடையவனாகிய இலக்குவனை யும், எங்கும் விளங்குகின்ற ஒளியையுடையவனாகிய சூரியன் மர பில் தோன்றியவர்கட்கு எக்காலத்தும் வரந்தரும் குருவாகிய வசிட்டனையும் வணங்கிக் கொண்டு, 'அந்த இலவணனாகிய வஞ் சகனை நான் நிச்சயமாகக் கொல்வேன்' என்று உறுதிபூண்டு சத்துருக்கன் புறப்பட்டுப் போனான்.

கு: மேல் இராமனை மும்முறை வலம் வந்து வணங்கி வந்தமை கூறப்பட்டதாகலின், இங்குப் பரதனையும் இலக்குவனையும் வசிட்டனையும் வணங்கி விடைபெற்றுப் புறப்பட்டமை கூறினார். பரமன் என்றது, திருமாலின் அவதாரமாகத் தோன்றிய இராமனை. பதினான்காண்டுகள் ஊணும் உறக்கமுமின்றி விரதமேற் கொண்டிருந்தவன் இலக்குவனாதலின் அவனை விரதன் எனக் குறிப் பிட்டார். வெய்யவன் குலம் என்றது சூரிய குலத்தை. வரதன்-வரத்தைத் தருதற்குரிய குரு. அவ்வஞ்சன் என்றது, இலவணனை. சரதம்- நிச்சயம்; சத்தியம் எனலும் ஆம். சமைதல்-ஒருப்படுதல்; உறுதிபூணுதல். (70)

## சத்துருக்கன் தேரேறுதல்

863 எண்ணிலாக் கரிபரிதே ரிடை நெருங்கும்
படையிவற்றை யெழுகென் றேவித்
தண்ணிலா விடுமுறுவத் றையலர்பல்
லாண்டிசைப்பத் தனது மேனி

வெண்ணிலா வொளி வீச வெள்ளிமலை
பொன்மலைமேல் விளங்கல்போல
மண்ணுலா வியபுகழான் மாமணித்தே
ரேறினான் வானோர் வாழ்த்த.

எண் இலாக் கரிபரிதேர் இடை நெருங்கும் படை இவற்றை எழுகென்று ஏவி,
தண்நிலா விடும் முறுவல் தையலர் பல்லாண்டு இசைப்பத் தனது மேனி
வெண் நிலா ஒளிவீச வெள்ளிமலை பொன்மலைமேல் விளங்கல் போல,
மண்உலாவிய புகழான் மாமணித்தேர் ஏறினான், வானோர் வாழ்த்த.

பொ: மண்ணுலகம் முழுமையும் பரவிய புகழையுடைய சத்துருக்கன், எண்ணிக்கை யில்லாத யானையும் குதிரையும் தேரும் நடுவே நெருங்குகின்ற காலாட்படையும் ஆகிய இவற்றைப் புறப்படுக என்று கட்டளையிட்டுவிட்டுக் குளிர்ந்த நிலவு வீசுகின்ற பற்களையுடைய பெண்டிர் பல்லாண்டுபாட, தன்னுடைய மேனி, வெள்ளிய நிலவின் ஒளியினை வீச வெள்ளிமலை பொன்மலை மேல் ஏறிவிளங்குதல் போலப் பெரிய மணிகள் பதித்த தேரின்மேல் தேவர்கள் வாழ்த்த ஏறினான்.

கு: காலாட்படையின் இயல்பு தோன்ற 'இடை நெருங்கும் படை' என்றார். யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை இவற்றின் நடுவே நெருங்குகின்ற காலாட்படை என்றவாறு. 'எழுக என்று ஏவி' என்புழி அகரம் தொகுத்தல் விகாரம். புறப்படுக என்று கட்டளையிட்டு என்றவாறு. பல்லாண்டு இசைக்கும் பெண்டிர் சிரித்த முகத்தோடு இசைப்பதால் அவர் பற்கள் தண்ணிலவு போன்று ஒளிவீசின என்றார். சத்துருக்கன் மேனி முத்துருவமுடையது ஆகலின் அது வெண்ணிலவு வீசலாயிற்று. வெள்ளிமலை போல் விளங்குகின்ற சத்துருக்கன் பொன்மலை போன்ற தேரில் ஏறினான் என்க. வெள்ளிமலை பொன்மலைமேல் விளங்கல் போலத் தேரேறினான் என்றது இல்பொருளுவமை. உலாவுதல்-பரவுதல். புகழான் என்றது சத்துருக்கனை. வானோர் வாழ்த்த ஏறினான்; என இயையும். (71)

## வான்மீகியின் வனம் நண்ணுதல்

864 ஆனகதுந் துபிமுழங்க வணிமுரச
முகிலனைய வமலை பொங்க
வானகமு மண்ணகமும் வளர்பெருந்தூ
ளியின் மறைய மலர்பூஞ்சோலைத்
தேனகுபங் கயப்பழனத் திருநாடு
கடந்துபோய்த் தெய்வக் கங்கைக்
கானதியிற் களித்தாடிக் கலைமுனிவான்
மீகிதவக் கானங் கண்டான்.

ஆனக துந்துபி முழங்க, அணிமுரச முகில் அனைய அமலை பொங்க
வானகமும் மண்ணகமும் வளர்பெருந் தூளியின் மறைய மலர்
பூஞ்சோலை;
தேன்நகு பங்கயப் பழனத் திருநாடு கடந்துபோய்த் தெய்வக்
கங்கைக்
கானதியில் களித்து ஆடிக் கலைமுனி வான்மீகி தவக்கானம்
கண்டான்.

பொ: போர்ப்பறை முழங்கவும், அழகிய முரசத்தினது மேக நாதம் போன்ற ஒலிமிகவும், வான்உலகும் மண்ணுலகும் சேனை செல்வதால் உண்டாகி வளர்கின்ற பெரிய தூளியில் மறையவும், மலர்களையுடைய பூஞ்சோலைகளையும், தேன்பொங்குகின்ற தாமரைகள் நிறைந்த வயல்களையும் உடைய கோசலம் ஆகிய திருநாட்டை கடந்து சென்று தெய்வத்தன்மை வாய்ந்த கங்கையாகிய காட்டு வழியில் ஓடுகின்ற நதியில் உளம் களித்து நீராடி விட்டுக் கலையெலாமுணர்ந்த வான்மீகி முனி தவம் செய்கின்ற காட்டினைக் கண்டான்.

கு:- ஆனக துந்துபி-போர்ப்பறை. அமலை-ஒலி. முரச வமலை என இயையும். முகில்என்றது, ஆகுபெயராய் மேகத்தில் உண்டாகும் இடியோசையையுணர்த்தியது. சேனை செல்லுங்கால் உளதாகும் துகளின் பெருக்கில் விண்ணுலகும் மண்ணுலகும் மறையும் என்றதால், தூளியின் மிகுதியையும் சேனையின் பெருக்கத்தையும்

பெற வைத்தவாறு. சோலையும் பழனமும் நிறைந்த திருநாடு என்க. திருநாடு என்றது, இங்குக் கோசல நாட்டை. கங்கையாகிய நதி என்க. கான்வழி செல்லும் அதன் இயல்பு புலப்படக் கானதி எனமுர். வான்மீகி முனி என இயையும். கலையுணர்ந்த முனிவனுகிய வான்மீகி எனக் கிடந்தவாறே பொருள் கூறலும் ஆம். கங்கையாற்றின் கவினுறு தோற்றத்தைக் கண்டவுடன் அதில் நீராடிக் களிக்க எண்ணுதல் இயல்பு. (72)

## சீதையின் பிள்ளைப் பேறு

865 அங்கமுனி யடிவணங்கி யவன்செய்த
பூசனைகொண் டன்று தங்க
மங்கைசன கன்பயந்த மடப்பாவை
யவ்விரவில் வயிறு வாய்ப்பச்
செங்கமல விழிச்செவ்வாய்ச் சிறுவர்பிறந்
தாரிருவ ரென்று செப்பப்
பங்கமிலா முனியெழுந்து பரிவோடு
பிள்ளைகளைப் பற்றிப் பார்த்தான்.

அங்கு அமுனி அடி வணங்கி, அவன் செய்த பூசனை கொண்டு, அன்று தங்க,
மங்கைசனகன் பயந்த மடப்பாவை அவ்விரவில் வயிறு வாய்ப்ப,
செங்கமல விழிச் செவ்வாய்ச் சிறுவர் பிறந்தார் இருவர் என்று செப்ப,
பங்கம்இலா முனி எழுந்து பரிவோடு பிள்ளைகளைப் பற்றிப் பார்த்தான்.

பொ: அவ்விடத்து அந்தவான்மீக முனிவரின் திருவடி வணங்கி, அம்முனிவன் செய்த உபசாரங்களை யேற்றுக் கொண்டு, அன்று அங்குத் தங்கியிருக்க, சனகன் பெற்ற மங்கையாகிய இளமையுடைய பாவை போன்ற சீதை, அந்த இரவில் வயிறு ஈனுதற்குரிய பருவம் நிரம்பியமையால் சிவந்த கமல மலர் போன்றகண்களையும்,சிவந்த வாயினையும் உடைய சிறுவர் இருவர் பிறந்தார் என்று அங்குள்ளோர் சொல்லக் கேட்டுக் குற்றம் இல்லாத

வான்மீக முனி எழுந்து போய் அன்போடு அப்பிள்ளைகளைக் கையால் பற்றிப் பார்த்தான்.

கு: அங்கு அம்முனி என்பது தொகுத்தல் விகாரம் பெற்றது. பூசனை என்றது உபசாரங்களை. சனகன் பயந்த மடப்பாவையாகிய மங்கை என இயைத்தலும்ஆம். வயிறு வாய்ப்ப என்றது, வயிறு ஈனுதற்குரிய பருவம் வாய்த்ததாக என்னும் பொருளது. சிறுவர் இருவர் பிறந்தார் என மாறுக. விழியும் வாயும் சிவந்திருந்தமை யால் செங்கமல விழிச் செவ்வாய்ச் சிறுவர் எனச் சிறப்பித்தார். செப்பியது அங்குள்ள தவப் பெண்டிர் என உய்த்துணரலாம். குழந்தை பிறந்தவுடன் ஈனில்லுக்குச் செல்லலாமோ? என்பார்க்கு விடையாகப் 'பங்கமிலாமுனி' என வான்மீகியைச் சிறப்பித்தார். பங்கம்-குற்றம். குற்றமற்ற முனிவன் ஆதலின் அங்குச் சென்றதும் பிள்ளைகளைப் பற்றிப் பார்த்ததும் தவறாகாது என்றவாறு. பரிவு-அன்பு. (73)

## முனிவன் பிள்ளைகளின் அழகுகண்டு மகிழ்தல்

866 மைவண்ணத் தாமரைக்கண் மன்னனிரா
மன்றன்னை வந்துகண் டோர்க்
கெவ்வண்ண மவனிருக்கு மிலக்கணங்க
ளவைபலவு மிலங்கித் தோன்றி
அவ்வண்ணத் தவ்வுருவா யவதரித்த
பிள்ளைகளை யருளி னோக்கிச்
செய்வண்ண மறியாது சிந்தை மகிழ்ந்
தவதரித்தோர்க் கினைய செய்தான்.

மைவண்ணத் தாமரைக்கண் மன்னன் இராமன்தன்னை வந்து கண்டோர்க்கு
எவ்வண்ணம் அவனிருக்கும் இலக்கணங்கள், அவை பலவும் இலங்கித் தோன்றி
அவ்வண்ணத்து அவ்வுருவாய்அவதரித்த பிள்ளைகளை அருளின் நோக்கிச்
செய்வண்ணம் அறியாது சிந்தைமகிழ்ந்து அவதரித்தோர்க்கு இனைய செய்தான்.

பொ: மைபோன்ற வண்ணத்தினையும் தாமரை மலர் போன்ற கண்ணிணையும் உடைய மன்னனாகிய இராமன் தன்னை வந்து காண் போர்க்கு அவன் இருக்கும் இலக்கணங்கள் எவ்வண்ணம் தோன்றுமோ அவ்விலக்கணங்கள் பலவும் விளங்கித் தோன்றப் பெற்று அந்த வண்ணத்தோடு அந்தஉருவே யாகி அவதரித்துள்ள பிள்ளைகளை அருளினால் நோக்கிச் செய்யும் வண்ணம் யாது என அறியாதபடி மனம் மகிழ்ந்து, அவதாரம் செய்துள்ள அப்பிள்ளைகளுக்கு இத்தன்மையானவற்றைச் செய்தான்.

கு: இராமனைக் கண்டோர்க்கு அவனிருக்கும் இலக்கணங்கள் எவ்வண்ணம் தோன்றுமோ அவ்வண்ணமே அவ்விலக்கணங்கள் பலவும் விளங்கித் தோன்றப் பெற்று, அவ்விராமன் வண்ணமும் உருவும் உடையவர்களாய் அவதரித்த பிள்ளைகள் என்க. இராமன் வண்ணமும் உருவும் இலக்கணங்களும் அவன் பிள்ளைகளிடத்தில் அப்படியே விளங்கித் தோன்றின என்றவாறு. வண்ணம்என்றது நிறத்தினை. உரு என்றது வடிவ அமைப்பினை. இலக்கணம் என்றது அவயவ அமைப்புகளை. இராமன் போலவே காணப்படும் பிள்ளைக் கண்ட மகிழ்ச்சி மிகுதி புலப்பட 'செய் வண்ணமறியாது சிந்தை மகிழ்ந்து' என்றார். மகிழ்ச்சி மிகுதியாலும் துன்ப மிகுதியாலும் செய்வதறியாதுபோதல் இயல்பு. செய் வண்ணம் என்புழி ஆகிடையிட்ட வெதுகை வந்துளது. அவதரித் தோர்-பிறந்தவர். உயர்ந்தவர் பிறப்பை அவதாரம் என்றல் மரபு. (74)

## மந்திரமோதி காப்புச் செய்தல்

867 சீதைதன் திருவயிற்றிற் றிருவவதா
ரஞ்செய்த சிறுவர் தம்மை
பூதபசா சுகண்முதலா னவைவந்து
பொருந்தாமற் புரைதீர் காட்சிக்
கோதறுமந் திரங்கள்சொலிக் குசலவங்க
ளாற்றுடைத்துக் குறிக் கொண்டார்கள்
ஆதலினு லம்மைந்தர் குசலவர்க
ளெனப்பெயரா யினரே;

சீதைதன் திருவயிற்றில் திருஅவதாரம் செய்த சிறுவர் தம்மை
பூத பசாசுகள் முதலானவை வந்துபொருந்தா வண்ணம் புரைதீர் காட்சிக்
கோது அறு மந்திரங்கள் சொலிக் குசலவங்களால் துடைத்துக் குறிக்கொண்டார்கள்
ஆதலிஞல் அம்மைந்தர் குசலவர்கள என்றுபேர் ஆயிஞரே.

பொ: சீதையின் சிறந்த வயிற்றில் திருவவதாரம் செய்த அந்தச் சிறுவர்களைப் பூதங்கள் பசாசுகள் முதலியவை வந்து அணுகாதபடி குற்றம் நீங்கிய அறிவிஞல் செய்யப்பட்ட குற்றமற்ற மந்திரங்களைச் சொல்லித் தருப்பையாலும் பசுவின் வால்மயிராலும் துடைத்துக் குறிக்கொண்டு காக்கப்பட்டார்கள்; ஆதலால், அந்த மைந்தர்கள் குசலவர்கள் என்ற பேர் உடையவர் ஆயிஞர்கள்.

கு: குழந்தை பிறந்தவுடன் பூதங்களும் பசாசுகளும் புதிய குருதியுண்ணும் ஆர்வத்தால் அணுகுவது இயல்பு. அது பற்றியே வாயிலில் பேய்க்குப் பகையாகிய வேப்பிலே செருகுதலும் வெண்சிறு கடுகு அப்புதலும் செய்தல் மரபு. வான்மீகி முனிவராதலின், குற்றமில்லாத ஞானத்தால் செய்த மந்திரங்களைச் சொல்லித் தருப்பைப் புல்லாலும் பசுவின் வால் மயிராலும் அக்குழந்தைகளை நீவிப் பூத பசாசங்கள் அணுகாமல் காப்புச் செய்தார் என்க. குறிக் கொண்டார்கள் என்பது, குறிக் கொண்டு காப்புச் செய்யப்பட்டார்கள் என்று செயப்பாட்டுப்பொருளில் வந்தது. குசம்-தருப்பை. லவம்-பசுவின் வால் மயிர். குசத்தால் துடைக்கப்பட்ட பிள்ளை குசன் என்றும், லவத்தால் துடைக்கப்பட்ட குழந்தை லவன் என்றும், பெயர் பெற்றன. குசலவர் என்பது கபிலபரணர் என்பது போல உம்மைத் தொகை. (75)

## சீதை பிள்ளைகளைப் பெற்றதைச் சத்துருக்கன் அறிந்து மகிழ்தலும் வருந்தலும்

868 பிள்ளைகள்சா னகிவயிற்றிற் பிறந்தார்க
ளெனமுனிவன் பேசக் கேட்டாங்
குள்ளமகிழ் சத்துருக்க னுன்னுவா
னுயர்மாடத் தயோத்தி யென்னும்

ஒள்ளியமா நகரியிடை யுற்பவிக்கப்
பெருதுவகை யொலியொன் றின்றிப்
புள்ளொலியே மிகுகாட்டிற் பிறந்தார்கள்
பொன்னகரிற் பிறந்தா ராயின்.

பிள்ளைகள் சானகிவயிற்றில் பிறந்தார்கள் எனமுனிவன் பேசக்
கேட்டு ஆங்கு
உள்ளம் மகிழ் சத்துருக்கன் உன்னுவான்: உயர்மாடத்து அயோத்தி
என்னும்
ஒள்ளிய மாநகரியிடை உற்பவிக்கப் பெருது உவகை ஒலிஒன்று
இன்றிப்,
புள்ளொலியே மிகுகாட்டில் பிறந்தார்கள் பொன்னகரில்
பிறந்தார் ஆயின்.

பொ: சானகியின் வயிற்றில் பிள்ளைகள் பிறந்தார்கள் என வான்மீகி முனிவன் சொல்லக் கேட்டு அவ்விடத்து மனமகிழ்கின்ற சத்துருக்கன் நினைக்கின்றான்:- உயர்ந்தோங்கிய மாடங்களையுடைய அயோத்தி என்கின்ற ஒளி வாய்ந்த பெரிய நகரத்தில் பிறக்கப் பெருது, மகிழ்ச்சி ஒலி சிறிதும் இல்லாமல் பறவைகளின் ஒலியே மிக்குள்ள காட்டில் பிறந்திருக்கின்றார்கள்; அழகிய அயோத்தி நகரில் பிறந்திருப்பார் ஆயின்,

கு:– சீதைக்குப் பிள்ளைகள் பிறந்தார்கள் என்பதில் மகிழ்ச்சியும் காட்டில் பிறந்தமை பற்றி நெகிழ்ச்சியும் கொண்டான் சத்துருக்கன் என்க. உற்பவிக்க என்பது பிறக்க என்னும் பொருளுடைய வடசொல். காட்டிற் பிறந்த இவர்கள் நாட்டில் பிறந்திருந்தால் என்ன நிகழ்ந்திருக்கும் என்ற சத்துருக்கன் கற்பனை வரும் செய்யுளில் வரும். குளகம். (76)

## சத்துருக்கனின் கற்பனை

869 பொய்யாத வேதியர்க்குப் பூதானங்
கோதான முதல பண்ணிக்
கய்யார நிதிவீசிக் காகுத்தன்
காளையர்கள் பிறந்தா ரென்று

மய்யார்பூம் பொழினகரி மகிழ்வெய்தி
மணிமுரசு மறைந்து நின்று
நெய்யாட லாற்சனங்க ளென்படுவ
ரின்றென்று நினைந்து நைந்தான்.

'பொய்யாத வேதியர்க்குப் பூதானம் கோதானம் முதல பண்ணிக்,
கய்யார நிதிவீசிக் காகுதன் காளையர்கள் பிறந்தார் என்று
மய்யார் பூம்பொழில் நகரி மகிழ்வு எய்தி, மணிமுரசம் அறைந்து நின்று,
நெய்யாடலால் சனங்கள் என்படுவர் இன்று' என்று நினைந்து நைந்தான்.

பொ: 'இராமனுக்குப் பிள்ளைகள் பிறந்தார்கள் என்று கரிய மேகந் தவழும் பூம்பொழில்கள் சூழ்ந்த அயோத்தியில் உள்ளோர் மகிழ்ச்சி அடைந்து பொய்யுரையாத வேதியர்கட்குப் பூதானம் கோதானம் முதலிய தானங்களைச் செய்து அவர்கள் கைநிறைய செல்வத்தைக் கொடுத்து நகர் அறிய அழகிய முரசு அறைவித்து நிற்பச்சனங்கள் நெய்யாடலால் என்ன மகிழ்ச்சியடைவார்கள் இன்றைக்கு' என்று நினைந்து சத்துருக்கன் வருந்தினன்.

கு: நகரி மகிழ்வெய்தி என்புழி இடவாகு பெயராய் நகரத்து மக்களையுணர்த்தியது. வேதம் ஓதி விளக்கம் பெற்ற தம்பேரறிவால் பொய்பேசாமல் மெய்யே பேசுவார்கள் வேதியர் என்பார், 'பொய்யாத வேதியர்' என்றார். பூமியைத் தானமாகக் கொடுப்பது பூதானம். பசுவைத் தானமாகக் கொடுப்பது கோதானம். கை, மை என்பன எதுகை நோக்கிக் கய், மய் எனப் போலியாய் வந்தன. ககுத்தன் மரபில் பிறந்தமையால் இராமன் காகுத்தன் எனப்பட்டான். காளையர் என்பது பருவங்குறியாமல் இங்குப் பிள்ளைகள் என்னும் பொருளில் வந்தது 'நகரி காளையர்' கள் பிறந்தார் என்று மகிழ்வு எய்திப் பூதானம் கோதானம் முதல பண்ணி நிதி வீசி முரச மறைந்து நின்பச் சனங்கள் நெய்யாடல் என்படுவர் என இயையும், முரச மறைந்து என்பது செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது. நின்ப என்பது நின்று எனத்திரிந்து நின்றது; வானின் றுலகம் வழங்கி வருதலால்

(திருக்குறள்) என்புழிப் போல. அரசனுக்குக் குழந்தை பிறந்தால் நாட்டவர் யாவரும் நெய்யாடல் செய்து மகிழ்தல் இயல்பு. நெய்யாடல் என்பது நெய்தேய்த்துக் கொண்டு நீராடுதல். (77)

## சத்துருக்கன் புறப்பாடு

870 ஏதமிலாக் குணத்திஞே னிவ்வண்ண
நினைந்திருப்ப விருள்கை வாங்கிப்
போதுவிடிந் தறியாமற் புறப்பட்டாங்
குதயத்திற் பொலிந்து தோன்ற
மாதவரை யடிபணிந்து மன்னவனை
யடிவணங்கி மணிப்பொற் றேரின்
மீதிவர்ந்து மேற்றிசையைக் குறித்துவழி
மேற்கொண்டு விரைந்து போஞன்.

ஏதம் இலாக் குணத்திஞேன் இவ்வண்ணம் நினைந்திருப்ப, இருள், கை வாங்கிப்,
போதுவிடிந்து அறியாமல் புறப்பட்டு ஆங்கு உதயத்தில் பொலிந்து தோன்ற,
மாதவரை அடிபணிந்து, மன்னவனை அடிவணங்கி, மணிப்பொன் தேரின்
மீது இவர்ந்து மேல்திசையைக் குறித்துவழி மேற்கொண்டு விரைந்து போஞன்.

பொ: குற்றமற்ற குணத்தையுடையவனுகிய சத்துருக்கன் இவ்வாறு பல நினைந்து கொண்டிருக்க, இருளைக் கதிர்களாகிய கையினுல் வாங்கிச் சூரியன் விடிந்தும் அதனை அறியாமலிருந்து. பின்பு, அச்சூரியன் உதயமலையில் நன்ருகப் பொலிந்து தோன்ற (அறிந்து) புறப்பட்டு, அங்குள்ள வான்மீகி முதலிய பெருந்தவ முனிவர்களை அடிபணிந்து, பின்பு மன்னவனுகிய இராமனை மனத்தால் அடிவணங்கிக் கொண்டு, மணிகள் பதித்த பொன்னுலியன்ற தேரின் மீது ஏறி மேற்குத் திசையை நோக்கி வழி மேற்கொண்டு விரைந்து சென்ருன்.

கு: ஏதமிலாக் குணத்தினேன் என்றது சத்துருக்கனை. இராமன் பிள்ளைகள் அயோத்தியில் பிறந்திருந்தால் என்ன என்ன நிகழும் என்பதை நீள நினைந்திருப்பவே போது விடிந்தும் அறியாமல் இருந்து பின்பு அப்போது உதயமலையில் பொலிந்து தோன்றிய பின் உணர்ந்து அங்குப் புறப்பட்டு மாதவரை அடிபணிந்து, மன்னவனை அடிவணங்கித் தேரின்மீது இவர்ந்து மேற்றிசையைக் குறித்து விரைந்து போனான் என இயையும். போது-சூரியன். நீண்ட நினைவில் இருந்தமையால் இருள் புலர்ந்ததையறியாமலிருந்து உதய மலைமேல் சூரியன் புறப்பட்ட பின் சத்துருக்கன் புறப்பட்டான் என அவன் நினைவு மிகுதியைப் புலப்படுத்தியவாறு. உதயத்திற் பொலிந்து தோன்றப் புறப்பட்டு என இயையும். மாதவரை நேரே சத்துருக்கன் பணிந்ததை 'அடிபணிந்து' எனவும் இராமனை நினைந்து வணங்கியதை அடிவணங்கி எனவும் வேறுபடுத்திக் கூறியதாகக் கொள்ளலாம். இவர்தல்—ஏறுதல். குறித்தல் இங்கு நோக்குதலையுணர்த்தியது. வழிமேற் கொண்டு என்றது பயணமாதலை. சத்துருக்கன் சீதைக்குப் பிள்ளைகள் பிறந்தார்கள் என்பதைக் கேள்விப்பட்டானேயன்றி நேரில் சென்று வான்மீகிப் பார்த்தது போலப் பார்க்கவில்லை என்பது தெளிவு. (78)

## சத்துருக்கன் யமுனைக் கரையில் தங்குதல்

871 ஏறுபுகழ்ச் சத்துருக்க னேழுநா
ளிடைதங்கி யமுனை யென்னும்
ஆறுகடந் தக்கரையி னருந்தவரை
யடிவணங்கி யவர்க ணெஞ்சம்
ஊறியவன் பொடுசெய்த பூசனைகொண்
டுண்மகிழ்ந்தங் குவந்து நல்லோர்
கூறியமாக் கதையிரவு கொண்டாடி
யவரோடுங் கூடத் தங்கி.

ஏறுபுகழ்ச் சத்துருக்கன் ஏழுநாள் இடைதங்கி, யமுனை என்னும்
ஆறுகடந்து அக்கரையின் அருந்தவரை அடி வணங்கி, அவர்கள் நெஞ்சம்
ஊறிய அன்பொடு செய்த பூசனை கொண்டு உள்மகிழ்ந்து அங்கு உவந்து நல்லோர்
கூறிய மாக்கதை இரவு கொண்டாடி அவரோடும் கூடத் தங்கி.

பொ: மேன்மேல் ஏறிய புகழையுடைய சத்துருக்கன் இடையில் ஏழுநாள் தங்கி யமுனை என்கின்ற ஆற்றினைக் கடந்து அக்கரையில் உள்ள அரிய தவமுனிவர் தம் அடிகளை வணங்கி, அவர்கள் நெஞ்சில் சுரக்கின்ற அன்போடு செய்த உபசாரங்களை ஏற்றுக் கொண்டு உள்ளத்தே மகிழ்ந்து, அந்த நல்லோர்கள் சொல்லிய பெரிய கதைகளை இரவு கேட்டுக் கொண்டாடி அவர்களோடும் அங்குத் தங்கியிருந்து.

கு: குளகம். புகழ் ஒருவன் இறக்கும் வரையில் ஏறிக் கொண்டே போகும் இயல்பினதாகலின் இங்கு ஏறுபுகழ்ச் சத்துருக்கன் என்றார்; வினைத்தொகை. வான்மீகியின் தவக் குடிலிலிருந்து புறப்பட்ட சத்துருக்கன் இடையிடையே ஏழுநாள் தங்கிப்போய் எட்டாம் நாள் யமுனையைக் கடந்து சென்று அக்கரையில் உள்ள முனிவர்களை வணங்கினான் என்க. முனிவர்களையடிவணங்கினவன் இராமனுக்குத் தம்பி என்பதை அறிந்தவுடன் அவர்கள் நெஞ்சில் அன்பு சுரக்கின்றது. அந்த அன்பினால் உணவு முதலியன தந்து உபசரிக்கின்றார்கள். பூசனை என்றது உபசாரங்களை. ஊறிய அன்பு—சுரக்கின்ற அன்பு. உபசரிப்புகளுக்குப் பிறகு அந்த நல்ல முனிவர்கள் பெரிய கதைகளைச் சொல்லி மகிழ்விக்கின்றார்கள். அக்கதைகளைக் கேட்டுக் கொண்டு அவர்களைப் பாராட்டிக் கொண்டு அவரோடு தங்கியிருந்தான் சத்துருக்கன்.

(79)

## சத்துருக்கன் இலவணன் சூலத்தைப் பற்றி முனிவரை வினவுதல்

872 சந்தியவந் தனைசெய்து தபோதனரோ
டினிதிருந்த சமயத் தந்த
அந்தணரை யடிவணங்கி யடலரக்கர்
குலத்தினைவே ரறுத்துவந்த
சுந்தரவில் லிக்கிளையோன் சொல்லுவா
னிலவணன்கைச் சூலஞ்செய்யும்
வெந்தொழிலு மவன்வலியும் விரித்துரைமி
னெனவவரும் விளம்ப லுற்றார்.

சந்திய வந்தனை செய்து தபோதனரோடு இனிதிருந்த சமயத்து, அந்த
அந்தணரை அடிவணங்கி, அடல் அரக்கர் குலத்தினைவேர் அறுத்துவந்த
சுந்தரவில்லிக்கு இளையோன் சொல்லுவான்: 'இலவணன் கைச் சூலம் செய்யும்
வெந்தொழிலும் அவன் வலியும் விரித்துஉரைமின்!' என அவரும்' விளம்பல் உற்றார்.

பொ: காலைச்சந்திக்கண் செய்யத்தக்க வழிபாட்டினைச் செய்து தவமுனிவரோடு இனிதாக அமர்ந்திருந்த சமயத்தில், வலிய அரக்கர்தம் குலத்தினை வேரோடு அழித்து மகிழ்ந்த அழகிய வில்லினையுடையவனாகிய இராமனுக்கு இளையவனாகிய சத்துருக்கன், அந்த முனிவரை அடிவணங்கிச் சொல்லுகின்றவன், இலவணன் கையில் உள்ள சூலம் செய்கின்ற கொடிய தொழிலையும் அவ்வசுரனது வலிமையும் பற்றி விரித்துச் சொல்லுங்கள்! என்றுகேட்க, அம்முனிவர்களும் சொல்லுகின்றார்கள்.

கு: சந்திய–காலைச் சந்திக்கண்; அ. குறிப்புப் பெயரெச்ச விகுதி. இடப் பொருளது. வந்தனை-வழிபாடு. இதனைச் சந்தியா வந்தனம் என்பர். சுந்தரவில்லி என்றது இராமனை. 'அடலரக்கர்

குலத்தினை வேரறுத்துவந்த சுந்தரவில்லிக்கு இளையோன்' என்ற சிறப்பால் சத்துருக்கனும் இராமன் போலவே இலவணனை அழிக்கும் ஆற்றலுடையவனே என்பது புலப்படுத்தியவாறு. அவ் வாற்றலுடையவனாக இருந்தும் இலவணன் கைச்சூலம் பற்றியும் அவன் வலிமைபற்றியும் வினவியது 'வலியறிதல்' என்ற போர்த் துறை நோக்கியேயாகும். "வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும், துணை வலியும் தூக்கிச் செயல்" (திருக்குறள் 471) என்றது நோக்குக. வேரறுத்து வந்த எனப் பிரித்தலும் ஆம் (80)

## முனிவர்கள் சொல்லியது

### மாந்தாதா

873 மனுகுலமா நுங்குலத்து வந்துதித்தோன்
மாந்தாதா வென்னு மன்னன்
குனிசிலையைக் கைவாங்கிக் குரைகடல்சூழ்
குவலயத்திற் கூர்வேல் மன்னர்
இனியொருவர் பிழைத்தோர்க ளிலையென்னச்
குலத்தோடுந் தொலைத்துப்பின்னை
தனியொருசக் கரநடத்தித் தரணிமுழு
துங்காத்த தடந்தோள் வீரன்.

மனுகுலமாம் நும் குலத்து வந்து உதித்தோன் மாந்தாதா என்னும் மன்னன்
குனிசிலையைக் கைவாங்கிக் குரைகடல்சூழ் குவலயத்தில் கூர்வேல் மன்னர்
இனிஒருவர் பிழைத்தோர்கள் இலை என்னக் குலத்தோடும் தொலைத்துப் பின்னை,
தனிஒரு சக்கரம் நடத்தித் தரணி முழுதும் காத்த தடந்தோள் வீரன்.

பொ: மனுகுலமாகிய உங்கள் குலத்தில் வந்து பிறந்தோனாகிய மாந்தாதா என்னும் அரசன், வளைந்த வில்லைக் கையில் கொண்டு ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்ட நிலவுலகில்; கூரிய வேலைத் தாங்கிய மன்னரில் உயிர் பிழைத்தோர்கள் இனி ஒருவரும் இல்லை; என்னுமாறு அவர்களைக் குலத்தோடும் அழித்துப் பின்பு தனிச்சக்கரவர்த்தியாக ஆணைச் சக்கரம் நடத்தி உலக

முழுவதையும் காப்பாற்றி அரசாண்ட பெரியதோளையுடைய வீரனுவான்.

கு: மாந்தாதா தரணி முழுதுங் காத்த தடந்தோள் வீரன் என இயையும். குனிசிலை-வளைந்த வில். வாங்குதல் இங்குக் கொள்ளுதலை யுணர்த்தியது. வாங்கித் தொலைத்து நடத்திக் காத்தவீரன் என்க. குவலையம்-நிலவட்டம். பிழைத்தோர்கள் இனி ஒருவர் இலை என மாற்றுக. அரசகுலத்துப் பிறந்த ஒருவரும் இல்லையாம்படி அடியோடு அழித்து என்றவாறு. உலகிலுள்ள குடிகளுக்கு இடையூறு சிறிதும் இல்லாதபடி காத்தவன் மாந்தாதா என்க. உலகு முழுதும் காத்தற்கேற்ற தோள்வலி யுண்மை தோன்றத் 'தடந்தோள் வீரன்' எனச் சிறப்பித்தார். மன்னர்களை யெல்லாம் வென்று தன்னடிப் படுத்தினவன் என்பது கருத்து. (81)

874 செறிமணிமா முடிமன்னர் திறைகொணர்ந்து
சென்றுபுகப் பெறுது தூங்கும்
குறுகரிய பெருங்காவற் கோபுரவா
யிலையுடைய குலவு செல்வன்-
தறுகணுடை வன்னெஞ்சன் றரியலர்பாற்
பேராற்றிற் றண்ணீர்த்தாகத்
துறுபுலியும் புல்வாயும் மொருதுறையி
னீருண்ணவுலக மாண்டான்.

செறிமணி மாமுடி மன்னர் திறைகொணர்ந்து சென்று புகப் பெறுது தூங்கும்
குறுகரிய பெருங்காவல் கோபுர வாயிலையுடைய குலவு செல்வன்;
தறுகணுடை வன்னெஞ்சன் றரியலர்பால்; பேராற்றில் தண்ணீர்த் தாகத்து
உறுபுலியும் புல்வாயும் ஒருதுறையில் நீர்உண்ண, உலகம் ஆண்டான்.

பொ:நெருங்கிய மணிகள் பதித்த பெரிய முடியையுடைய மன்னர்கள் திறைப் பொருளைச் சுமந்து கொண்டுவந்து உள்சென்று புகஇடம் பெறுது காத்துக் கொண்டிருக்கும் அணுகுதற்கு அரிய பெரிய காவலினையுடைய கோபுரவாயிலை யுடைய விளக்கமுடைய

செல்வன்; பகைவரிடத்தில் அஞ்சாமை கொண்ட வலிய நெஞ்சத்தையுடையவன்; பெரிய ஆற்றில் தண்ணீர்த் தாகத்தினால் வந்த புலியும் மானும் பகைமையின்றி ஒரே துறையில் நீர் உண்ணுமாறு உலகத்தை ஒற்றுமைபட ஆண்டவன்.

கு: திறை என்றது சிற்றரசர்கள் சக்கரவர்த்திக்குச் செலுத்த வேண்டிய வரிப் பொருள். திறைகொணர்ந்தோர் பலரிருத்தலின் உடனே புகப் பெருது காத்திருந்தலையே இங்குத் தூங்குவதாகக் கூறினர். தூங்குதல்-காலம் தாழ்த்தல். தூங்கும் கோபுரவாயில் என இயையும். தூங்குதற்கிடனுகிய கோபுரவாயில் என நிலப் பெயர் கொண்டு முடிந்த பெயரெச்சமாகப் பொருள் விரிக்க. யாரும் நினைந்தவண்ணம் புகவியலாத பெருங்காவலையுடைய கோபுரவாயில் என்க. தூரியலர்-பகைவர், பகைவரிடத்துத் தறுக ணுடை வன்னெஞ்சன் எனவே நட்டோர்பால் அன்புள்ள மென்னெஞ்சனுதல் புலப்படும். தண்ணீர்த்தாகத்து உறுதல், புலிக்கும் புல்வாய்க்கும் பொது வலிவும் மெலிவும் உடையபுலியும் புல்வாயும் ஒருதுறையில் நீர் உண்ண ஆண்டான் என்றது, வலியோர் மெலியோரைத் தாக்காது ஒன்று பட்டிருக்க ஆண்டான் என்னும் கருத்தினது. மாந்தாதாவின் ஆணைச் சிறப்பு இதனுல்கூறப் பட்டது. செல்வன், வன்னெஞ்சன் உலகம் ஆண்டான் என்க. செல்வன், வன்னெஞ்சன் என்பன, ஒருபொருள் மேல் வந்த பல் பெயர். (82)

875 இன்னபெரு வலியுடையோ னிந்திரனைப்
போர்வெல்வா னெழுந்து செல்ல
அன்னவன்றன் கருத்தறிந்த வமரர்கோ
னுரை செய்வா னளவி லாற்றல்
மன்னவமண் ணுலகத்துன் வழியொழுகா
வலியோன்மேற் செல்ல மாட்டாய்
என்னை யமர் வென்றுநீ யென்னுலகங்
கோடலுனக் கியல்போ வென்றான்.

இன்ன பெருவலியுடையோன், இந்திரனைப் போர்வெல்வான்
எழுந்து செல்ல,
அன்னவன் தன் கருத்து அறிந்து அமரர்கோன் உரைசெய்வான்;
அளவில் ஆற்றல்
மன்னவ! மண்ணுலகத்து உன்வழி ஒழுகா வலியோன்மேல் செல்ல
மாட்டாய்,
என்னை அமர்வென்று நீ என் உலகம் கோடல் உனக்கு
இயல்போ? என்றான்.

பொ:- இத்தகைய பெரிய வலிமையுடைய மாந்தாதா இந்திரனைப் போரில் வெல்வதற்காகப் படையுடன் எழுந்து செல்ல, அந்த மாந்தாதாவின் கருத்தினை அறிந்து தேவேந்திரன் சொல்லுவான்: "அளவில்லாத ஆற்றலையுடைய மன்னனே! மண்ணுலகத்தில் உன் வழி நடவாத வலியவன்மேல் செல்ல மாட்டாத நீ என்னைப் போரில் வென்று என் உலகத்தைக் கைக்கொள்ளுதல் உனக்கு ஏற்ற இயல்புதானோ? என்று வினவினான்.

கு: மண்ணுலகத்தில் நின் சொல்வழி நடவாத வலியவன் இருக்க, அவனை வென்று வழிப்படுத்துவதே முறையாகவும், அதனைச் செய்யாது, சேய்மையிலுள்ள விண்ணுலகம் கைக்கொள்ள நினைப்பது பொருந்தாது என்பான், 'என்னுலகம் கைக்கோடல் இயல்போ?' என வினவினான். மாட்டாயாகிய நீ என இயையும். அளவிலாற்றலிருந்தும் மண்ணுலகத்தில் வலியோனொருவனை அடக்கி வழிப்படுத்த இயலாதவன் ஆயினை என்ற இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற அளவிலாற்றல் மன்னவ! என விளித்தான். வழியொழுகலாவது அவன் சொல்வழி ஒழுகுதல். மண்ணுலகில் ஒருவனை வெல்ல வியலாதவன், விண்ணவரில் இந்திரனை வெல்லுதலும் அவன் விண்ணுலகத்தைக் கைக்கொள்ளுதலும் இயலாவென்பது புலப்படுத்தியவாறு. (83)

### மாந்தாதாவின் வினா

876 தேவர்கோ னிவை செப்பத் திரைகடல்சூ
பூவனிதனைத் திருத்தி யாண்ட
மாவலித் தோள் மணிமவுலி மாந்தாதா
விவையுரைக்கு மண்ணினின்மன்னர்

யாவருமென் வழியொழுக வெனக்கெதிரா
யென்வழிவா ராத தீயோன்
பூவலயத் தெவனவன்பேர் புகறியெனப்
புரந்தரனும் புகற லுற்ருன் .

தேவர்கோன் இவை செப்பத், திரைகடல்சூழ் அவனிதனைத், திருத்தி ஆண்ட
மாவலித்தோள் மணிமவுலி மாந்தாதா இவையுரைக்கும்- 'மண்ணில் மன்னர்
யாவரும் என்வழி ஒழுக, எனக்கு எதிராய் என்வழி வாராத தீயோன்
பூவலயத்து எவன்? அவன்பேர் புகல்தி' எனப்புரந்தரனும் புகல்தல் உற்ருன்.

பொ: தேவர்க்கு அரசனுகிய இந்திரன் இவற்றைச் சொல்ல, அலைகடல் சூழ்ந்த இவ்வுலகத்தைத் திருத்தி ஆட்சி செய்த பெரிய வலிமை மிக்க தோளையும், மணிகள் பதித்த முடியையும் உடைய மாந்தாதா இவற்றைச் சொல்லுவான்: 'மண்ணுலகத்தில் உள்ள மன்னர் யாவரும் என் வழி ஒழுகாநிற்கவும் எனக்கு எதிராக என் வழியில் வாராததீயவன் இந்தப் பூவுலகத்தில் எவன் உளன்? அவன் பேர் யாது? சொல்லுக' என்று வினவ, தேவேந்திரனும் சொல்லலுற்ருன்.

கு: முன்பு திருந்தாதிருந்த மண்ணுலகத்தைத் தன் வலிமையால் திருத்தி ஆட்சி செய்தவன் மாந்தாதா ஆதலின், அவன் ஆட்சியில் ஒருவன் அவன் வழி நடவாது மாறுபட்டிருக்கின்ருன் என்பது அவனுக்கே வியப்பாயிற்று. அதனுல் இங்ஙனம் வினவினுன். பூவலயம்-பூமிவட்டம். புகல்தி என்பது, முன்னிலை ஏவல். புரந்தரன்-தேவேந்திரன். அத்தீயோன் பெயர் தெரிந்திருப்பின் அழித்திருப்பேன் என்னும் கருத்தினனுய் 'அவன் பேர் புகறி' என வினவலானுன். (84)

## இந்திரன் சொல்லுவது

877 மண்ணுலகில் வலிமிக்க மதுவென்னுந்
தானவர்கோன் பயந்தமைந்தன்
நண்ணரிய வரணுடைய மதுபுரியை
யாள்கின்றான் ஞால மொன்றிப்
பண்ணரிய பாதகத்தோன் பாருலகிற்
பல்லுயிர்கள் பதைப்பக் கொன்றோன்.
எண்ணுறுதிண் படையுடையோ னிலவணனென்
பவனுலகி லெதிரிலாதோன்.

மண் உலகில் வலிமிக்க மது என்னும் தானவர்கோன் பயந்த மைந்தன்-
நண்ணரிய அரண்உடைய மதுபுரியை ஆள்கின்றான் ஞாலம் ஒன்றிப்,
பண்அரிய பாதகத்தோன் பார்உலகில் பல்லுயிர்கள் பதைப்பக் கொன்றோன்-
எண் உறுதிண் படையுடையோன் இலவணன் என்பவன் உலகில் எதிர்இலாதோன்.

பொ:- மண்ணுலகத்தில் வலிமை மிக்க மது என்னும் பெயரையுடைய அசுரர் தலைவன் பெற்ற மைந்தன் - யாரும் நெருங்குதற்கு அரிய அரணினையுடைய மதுபுரியை மண்ணுலகத்தில் இருந்து ஆட்சி செய்கின்றான்; யாரும் செய்யாத பாதகங்களைச் செய்கின்றவன்; பூமியில் பல உயிர்கள் பதைக்குமாறு கொன்றவன்; யாரும் மதிக்கத்தக்க திண்ணிய சூலம் ஆகிய படையையுடையவன்-இலவணன் என்ற பெயரையுடையவன்; உலகத்தில் எதிர் நிற்போரை இல்லாத பெருவீரன்.

கு:- தானவர்-அசுரர். மைந்தன் ஞாலமொன்றி மதுபுரியை ஆள்கின்றான்; என இயையும். மைந்தன், ஆள்கின்றவன்; பாதகத்தோன் -கொன்றோன் -படையுடையோன்- இலவணன் என்பவன் எதிரிலாதோன் என்பன ஒருபொருள் மேல் வந்த பலபெயர்கள். இலவணன் தந்தை வழி ஆற்றலைப்புலப்படுத்த 'வலிமிக்க மது

வென்னும் தானவர்கோன் பயந்த மைந்தன்' என்றும், அவன் ஆட்சிக்குரிய நகரின் அரண்வலி புலப்படுத்த 'நண்ணரிய அரணு டைய மதுபுரி' என்றும், அவன் மண்ணுலகில்தான் உளன் என்பது புலப்படுத்த 'ஞாலமொன்றியாள்கின்ருன்' என்றும் அவன் கொடுமை புலப்படுத்த 'பண்ணரிய பாதகத்தோன், பல்லுயிர்கள் பதைப்பக் கொன்ருேன்' என்றும் அவன் படைவலி புலப்படுத்த 'எண்ணுறுதிண் படையுடையோன்' என்றும் அவன் வலிமை மிகுதி புலப்படுத்த, 'எதிரிலாதோன்' என்றும், அவன் பெயர் இன்னது என்பது புலப்படுத்த இலவணன் என்பவன் என்றும் கூறினன். எண்ணுதல்-மதித்தல். அவன் கைச்சூலத் தையே இங்ஙனம் எண்ணுறுதிண்படை எனக் குறிப்பிடுகின்ருன்.

(8)

## மாந்தாதா இலவணனுக்குத் தூது அனுப்புதல்

878 சீரார்தே வருக்கரச னென்றினைய
செப்பியசொல் செவியிற் காய்ந்த
நாராச மெனநுழைய நன்னிறத்து
மானவே னடுங்கத் தைப்பப்
பாராளு மன்னவனும் பதைபதைத்துப்
போக்கொழிந்து பாரின் மீண்டு
பேராத தழற்றறுகட் பெருங்கோபன்
றூதுவனுக் கினையபேசும்.

சீரார் தேவருக்கு அரசன் என்று இனைய செப்பியசொல்
செவியிற் காய்ந்த
நாராசம் என நுழைய, நல்நிறத்து மானவேல் நடுங்கத் தைப்பப்,
பாராளும் மன்னவனும் பதைபதைத்துப் போக்கு ஒழிந்து
பாரில்மீண்டு,
பேராத தழல்தறுகண் பெருங்கோபன் தூதுவனுக்கு இனைய பேசும்.

பொ:- சிறப்புப் பொருந்திய தேவருக்கு அரசனுகிய இந்திரன், என்று இவ்வாறு சொல்லிய சொற்கள் செவியில் நெருப்பில் காய்ந்த இரும்புச் சலாகை நுழைவதுபோல நுழையவும் மானம் என்னும் வேல் நல்ல மார்பகத்தில் நடுங்குமாறு தைப்பவும்,

மண்ணுலகை ஆள்கின்ற மாந்தாதா என்ற மன்னவனும் பதை பதைத்து இந்திரன் மேல் போர்க்குப் போவதை நிறுத்திவிட்டுப் பூமியில் இறங்கிப் பின்னிடாத நெருப்புப் போன்ற அஞ்சாமை யுடைய பெருங்கோபனைத் தூதுவனுக்கு இத்தகையவற்றைச் சொல்லுவான்.

கு:- தன்னாட்சியில் தன்சொல் வழிப்படாத ஒரு தீயோனும் இருக்கின்றான் என்ற சொல் மாந்தாதாவின் செவிக்கு இன்னாத தாக இருந்தது என்பார், 'செவியில் காய்ந்த நாராசம் என நுழைய' என்று கூறினார். மேலும் அச்சொல் மார்பில் நுழைந்த வேலைப் போல. அவனுக்கு அலக்கண் செய்து என்பார், 'நன்னிறத்து மானவேல் நடுங்கத்தைப்ப' என்றார். மான வேல் என்றது மானமாகிய வேல் என உருவகம் செய்யப்பட்டது. செவியில் காய்ந்த நாராசம் நுழையவும் மார் பில் மானமாகிய வேல் தைப்பவும் மன்னவன் பதைபதைத்து இந்திரன்மேல் போர்க்குப் போதலை ஒழித்துப் பூமிக்குத் திரும்பிப் பெருங்கோபனைத் தூதுவனுக்குச் சில சொல்கின்றான் என்க. அவன் வீரம்புலப்படப் பேராத என்றும், அவன் பெருங்கோபத்தின் இயல்பு புலப்படத் 'தழல் பெருங்கோபன்' என்றும், அவன் அஞ்சாமை புலப்பட, தறுகட்பெருங்கோபன் என்றும் கூறினார். பெருங்கோபனைப் பேசும் என இயையும். (86)

## தூதுவனை இலவணன் வாளால் வெட்டுதல்

879 இன்னுயிருக் கிடர்செய்யு மிலவணனுக்
கிவ்வண்ண முரைத்தி யென்ன
உன்னுயிர்நீ வேண்டுதியே லுயர்தவத்தோர்க்
கிடர்செய்யா தொழிகவென்று
மன்னுயிரைக் கொல்கையினித் தவிர்கென்று
மதுபுரம்புக் கவனவ் வண்ணம்
சொன்னபொழு தன்னவனைச் சுடர்வாளி
னலெறிந்தான் றுன்று தோளான்

இன்னுயிருக்கு இடர் செய்யும் இலவணனுக்கு இவ்வண்ணம்
உரைத்தி: என்ன,
"உன்உயிர்நீ வேண்டுதியேல் உயர்தவத்தோர்க்கு இடர்செய்யாது
ஒழிக' என்றும்,
மன்உயிரைக் கொல்கைஇனித் தவிர்கென்றும், மதுபுரம்புக்கு
அவன் அவ்வண்ணம்
சொன்னபொழுது, அவனைத்தன் சுடர்வாளினுல் எறிந்தான்-
துன்று தோளான்.

பொ: இனிய உயிர்கட்குத் துன்பத்தைச் செய்கின்ற இலவணன் என்பவனுக்கு இவ்வண்ணம் "உன் உயிரை நீ விரும்பினுல் உயர்ந்த தவமுனிவர்கட்குத் துன்பத்தைச் செய்யாது இருப்பாயாக; என்றும், நிலை பெற்ற உயிர்களைக் கொல்லுதலை இனிவிடுக என்றும் உரைப்பாயாக" என்று சொல்ல, அத்தூதுவன் மதுபுரத்தில் புகுந்து அவ்வண்ணமே சொன்ன போது, நெருங்கிய தோள்களையுடைய இலவணன் அத்தூதுவனை ஒளிமிக்கவாளினுல் வெட்டினுன்.

கு: இலவணனுக்கு இவ்வண்ணம் 'தவத்தோர்க்கு இடர் செய்யாதொழிக' என்றும், 'மன்னுயிரைக் கொல்கை இனித்தவிர்க' என்றும் உரைத்தி என்ன, அவன் மதுபுரம்புக்கு அவ்வண்ணம் சொன்னபொழுது 'அன்னவனைத் துன்றுதோளான் சுடர் வாளினுல் எறிந்தான்' எனக்கொண்டு கூட்டுக. 'உன் உயிர்நீ வேண்டுதியேல்' என்றமையால், இந்தக் கட்டளை நிறைவேற்ருது போனுல் உன்னுயிர் உடம்பைவிட்டு நீக்கப்படும் என்பது குறிப்பு. மாந்தாதா கூறிய சொல்லை இலவணனிடம் தூதுவன் சொன்ன பொழுது இலவணன் தன்வாளினுல் வீசிக் கொன்ருன் என்ற வாறு. வாள்வீசுதற்குரிய தோளினுற்றல் புலப்படத் 'துன்று தோளான்' என்ருர். துன்றுதல்-நெருங்குதல். வலிமை துன்று தோளான் என ஒருசொல் வருவித்து முடிக்க. (87)

## மாந்தாதா மதுபுரம் நண்ணுதல்

880 தூதன்வரக் காணுது தோன்றியவெங்
கோபத்தாற் றுடித்த நெஞ்சன்
மாதவருக் கிடர்செய்து மண்ணுலகி
னுயிரெல்லாம் வாரித்தின்னும்
பாதகன்கைச் சுடர்வாளாற் பட்டானே
வென்றுபல நினைந்து பார்க்கு
நாதனடற் படைசூழ நன்மாட
மதுபுரத்தை நண்ணுங் காலை.

தூதன் வரக் காணுது, தோன்றியவெம் கோபத்தால்துடித்த நெஞ்சன்-
'மாதவருக்கு இடர் செய்து மண்உலகின் உயிர்எல்லாம் வாரித் தின்னும்
பாதகன் கைச்சுடர் வாளால் பட்டானே?' என்று பலநினைந்து, பார்க்கு
நாதன், அடல்படை சூழ, நல்மாட மதுபுரத்தை நண்ணும் காலை.

பொ: மண்ணுலகிற்குத் தலைவனுகிய மாந்தாதா, தான் அனுப்பிய தூதன் திரும்பி வரக் காணுமையால், தோன்றிய கொடிய கோபத்தினுல் துடித்த நெஞ்சினனுய், 'பெருந்தவ முனிவர்கட்குத் துன்பம் செய்து மண்ணுலகில் உள்ள உயிரினங்களை யெல்லாம் வாரித்தின்கின்ற பாதகனுகிய இலவணனது கையில் உள்ள சுடர்மிக்க வாளினுல் இறந்துபட்டானே?' என்று பலவாறு நினைத்துத்தன் வலிமைமிக்க நால்வகைப் படைகள் சூழச் சென்று நல்ல மாடங்களையுடைய மதுபுரத்தை அடையும் பொழுது,

கு: பார்க்குநாதன்-மண்ணுலகிற்குத் தலைவனுகிய மாந்தாதா. நெஞ்சனுய நினைந்து என இயையும். 'மாதவருக்கு இடர் செய்து' என்றமையால் மாதவர்களைத் தின்னவில்லை என்பது புலனுகும். 'மண்ணுலகில் உயிரெல்லாம் வாரித்தின்னும்' என்றமையால் மக்களை மட்டுமன்றி ஏனை உயிரினங்களையும் வாரித்தின்முன்

என்பது பெறப்படும். உயிர் என்றது, ஆகுபெயராய் உயிர்நின்ற உடம்பினைக் குறித்து நின்றது. நித்தியமாய் அருவாய் நிற்கின்ற உயிரினை வாருதலும் தின்னுதலும் கூடாமையறிக. 'நண்ணுங் காலை' என்பது வருஞ் செய்யுளில் முடியும்; குளகம். (88)

## மாந்தாதா மேல் இலவணன் சூலம் விடுதல்

881 ஆங்கவனு நம்மிடத்தி லஞ்சாதே
வந்தடைந்தா னாரோவென்று
தாங்கரிய பகைச்சூலந் தானையொடு
தலைப்படலுந் தரைக்கு மன்னன்
பூங்கணைமா மழைபொழியப் புன்முறுவல்
செய்தவனும் பொருமை யெய்தித்
தேங்கமழ்தார் மன்னன்மிசைச் சிவனளித்த
திருச்சூலம் திரித்துவிட்டான்.

ஆங்கவனும் நம்மிடத்தில் அஞ்சாதே வந்துஅடைந்தான்; ஆரோ? என்று,
தாங்கரிய பகைச்சூலத் தானையொடு தலைப்படலும், தரைக்கு மன்னன்,
பூங்கணைமா மழைபொழியப் புன்முறுவல் செய்து அவனும் பொருமைஎய்தித்
தேங்கமழ்தார் மன்னன் மிசைச் சிவன் அளித்த திருச்சூலம் திரித்துவிட்டான்.

பொ: அந்த மதுபுரத்தில் உள்ள இலவணனும், 'நம்மிடத்தில் அஞ்சாமல் வந்து அடைந்தவன் யாரோ?' என்று ஐயுற்று தடுத்தற்கு அரிய பகைமிக்க சூலமாகிய சேனையோடும் அங்கு வந்து சேர்தலும், மண்ணுலகிற்கு மன்னவனாகிய மாந்தாதா, பொலிவுடைய அம்பு மழை பொழியக் கண்டு அந்த இலவணனும் புன்னகை புரிந்து பொறுமையிழந்து, தேன்கமழ்கின்ற மாலை அணிந்தஅந்த மன்னன் மாந்தாதாவின்மேல் சிவன் கொடுத்த சிறந்த சூலத்தைச் சுழற்றி விட்டான்.

கு: 'நம்மிடத்தில் அஞ்சாதே வந்தடைந்தான் ஆரோ' என்றது, இலவணன் தனக்குள் ஐயுற்றுச் சொல்லிக் கொண்டது. தாங்குதல்-தடுத்தல். இலவணனிடம் சூலமல்லது வேறுசேனை இன்மையால் சூலத்தையே சேனையாக மதித்திருந்தான் என்பார், 'சூலத் தானையொடு' என்றார். தலைப்படல்-அடைதல். தரைக்கு மன்னன் என்றது, மாந்தாதாவை. பூங்கணை என்றது, பொலிவு மிக்க அம்பு. பெரிய அம்பு மாரியைச் சொரிந்தான் என்பார், 'பூங்கணை மாமழை பொழிய' என்றார். இனி, இலவணனுக்கு இவன் விட்ட அம்பு மழை மலர்மாரி போலத் துன்பமேதும் செய்திலது என்ற கருத்துப் புலப்பட 'பூங்கணை மாமழை பொழிய' என்றார் எனலும் ஆம். சிவனளித்தது என்ற பெருமை தோன்ற திருச்சூலம் என்று அடைகொடுத்துச் சிறப்பித்தவாறு. திரித்தல்-சுழற்றுதல். (89)

### சூலம் மாந்தாதாவை அழிப்பது

832 ஏழிற்பே ருலகமெல்லா மிப்பொழுதே
முடியுமென விமையோ ரஞ்ச
ஊழித்தீக் கிளர்ந்ததென வுலகமெலா
மெரிபரப்பி யோடிச் சென்றங்
காழித்தேர் மன்னவனை யவன்சேனை
யொடுமுருக்கி யளவிலாற்றற்
பாழித்தோ ளிலவணன்றன் பாணிமிசைப்
பண்டுபோ லிருந்த தன்றே.

ஏழின் பேர் உலகம் எல்லாம் இப்பொழுதே முடியும் என
இமையோர் அஞ்ச,
ஊழித்தீக் கிளர்ந்தது என உலகம் எலாம் எரிபரப்பி ஓடிச்
சென்று அங்கு
ஆழித்தேர் மன்னவனை அவன்சேனையொடும் முருக்கி அளவில்
ஆற்றல்
பாழித்தோள் இலவணன்தன் பாணிமிசைப் பண்டுபோல்
இருந்தது அன்றே.

பொ: ஏழ் ஆகிய பெரிய உலகம் எல்லாம் இப்பொழுதே அழிவெய்து முடிந்து விடும் என்று இமையாநாட்டம் கொண்ட தேவர்கள் அஞ்சாநிற்க, ஊழிக்காலத்தில் தோன்றும் வடவைக் கனல் கிளர்ந்து எழுந்தது என்று சொல்லுமாறு உலகம் முழுவதிலும் எரியைப் பரப்பிக் கொண்டு ஓடிச் சென்று அங்குள்ள சக்கரத்தையுடைய தேரினையுடைய மன்னவனாகிய மாந்தாதாவை அவன்சேனையோடு சேர்த்து அழித்துவிட்டு அளவில்லாத ஆற்றலை யுடையவனாகிய வலிய தோளினையுடைய இலவணன் தன் கையில் முன்போலவே இருந்தது.

கு: அன்று, ஏ அசைநிலை. ஏழிற்பேருலகம் என்றது, ஏழாகிய பெரிய உலகம் என்னும் பொருளது. இன் தவிர்வழிச் சாரியை. இலவணன் சூலம் செல்லும் இயல்பைக் கண்டு தேவர்கள், ஏழு உலகங்களும் இப்பொழுதே முடியும் என்று அஞ்சினார்கள் என்க. சூலம் எரிபரப்பிச் செல்லும் தோற்றத்தைக் கண்டவர்கள் 'ஊழித்தீக் கிளர்ந்தது' என்று எண்ணுமாறு சென்றது என்பது தற்குறிப்பேற்றவணி. மாந்தாதாவையும் அவன் சேனையையும் நொடியில் அழித்தது என்றவாறு. அளவிலாற்றல் இலவணன்; பாழித்தோள் இலவணன் எனத் தனித்தனி இயையும். பாழி—வலிமை. பாணி—கை. மாந்தாதாவினையும் அவன் சேனையையும் அழித்தமையால் சூலத்திற்கு யாதும் குறைபாடு வரவில்லை யென்பார் 'பண்டுபோல் இருந்தது' என்றார். (90)

## முனிவர், இலவணனைக் கொல்லும் வழி யிதுவெனல்

883 பொய்யிருக்கு மனத்தவுணன் போர்வலியீ
தென்றுரைத்துப் புகல்வார் பின்னும்
மெய்யிருக்குஞ் சொன்முனிவர் விரிசடையோ
னிடைப்பெற்ற வெய்ய சூலம்
கய்யிருக்கின் வெலற்கரியான் கையிராக்
காலத்தை யறிந்து காதில்
நெய்யிருக்குஞ் சுடர்வேலாய் நிச்சயநின்
கைப்படுமந் நீச னென்றார்.

பொய்யிருக்கும் மனத்துஅவுணன் போர்வலிஈது; என்று
உரைத்துப் புகல்வர் பின்னும்,
மெய்இருக்கும் சொல்முனிவர், விரிசடையோனிடைப் பெற்ற
வெய்யசூலம்
கய்யிருக்கின் வெலற்கு அரியான்; கையிராக்காலத்தை அறிந்து
காதில்
நெய்இருக்கும் சுடர்வேலாய்! நிச்சயம் நின்கைப்படும் அந்நீசன்;
என்றார்.

பொ: உண்மையே விளங்கும் சொல்லையுடைய முனிவர்கள், 'பொய் தங்கிய மனத்தையுடைய இலவணனுடைய போர் வலிமை இத்தகையது'; என்று சொல்லிவிட்டுப் பின்னும் சொல்கின்றார்கள்: "நெய் பூசப்பட்டிருக்கும் ஒளிவாய்ந்த வேலையுடையவனே! பின்விரிந்த சடையையுடைய சிவபிரான்பால் பெற்ற கொடிய சூலம் கையில் இருந்தால் வெல்லுதற்கு அரியவனே; ஆனால், அச்சூலம் கையில் இல்லாத சமயத்தை அறிந்து போர் செய்தால் அந்த நீசன் நிச்சயம் நின்கையால் இறந்து படுவான்" என்று கூறினார்கள்.

கு: பொய்பேசாத இயல்பினர் முனிவர் என்பார், 'மெய்யிருக்கும் சொல் முனிவர்' என்றார். இலவணன் அம்முனிவர் ஒழுக்கத்திற்கு மாறுபட்டவன் என்பது தோன்ற, 'பொய்யிருக்கும் மனத்து அவுணன்' என்றார். சிவன் தந்த சூலம் கையில் இல்லாத காலத்தை அறிந்து போர் செய்தால் சத்துருக்கன் அவனைக் கொல்லுதல் நிச்சயம் என்றவாறு. நீசன்—ஒழுக்கமில்லாத இழிசனன். காதுதல்—போர் செய்தல். கை என்பது எதுகை நோக்கிக் 'கய்' எனப் போலியாய் வந்தது. வேலுக்கு நெய் பூசுதல் உண்டு ஆதலின் 'நெய்யிருக்கும் சுடர்வேலாய்' என விளித்தார். இதனால் இதுகாறும் போர்ப் பயிற்சியில்லாத வேல் என்ற குறிப்பும் இதனால் புலப்படும். "இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டிக், கண்டிரணோன்காழ் திருத்தி நெய்யணிந்து கடியுடை வியனகரவ்வே" (புறநா. 95) என்ற ஔவையார் பாடல் இங்கு நினையத்தகும். (91)

## சத்துருக்கன் மதுபுரத்தின் வாயிலில் நிற்றல்

884 என்றுதிரு மறைமுனிவ ரிலவணன்றன்
வலியெல்லா மியம்பக் கேட்டு
வன்றிறற்போர்ச் சத்துருக்கன்
மதுபுர மாநகரம் வழிக்கொண் டந்தக்
குன்றனையோ னுயிரலைப்பப் புறப்பட்டா
னெனச்சாரர் கூறக்கேட்டுச்
சென்றனனந் நகரெய்திச் செழுமதில்வா
யிலினின்றான் சேனைசூழ.

என்று திருமறை முனிவர் இலவணன்தன் வலிஎல்லாம் இயம்பக் கேட்டு,
வன்திறல்போர்ச் சத்துருக்கன் மதுபுரமாம் மாநகரம் வழிக் கொண்டுஅந்தக்
குன்று அனையோன் உயிர் அலைப்பப் புறப்பட்டான் எனச்சாரர் கூறக் கேட்டுச்,
சென்றனன் அந்நகர் எய்திச் செழுமதில் வாயிலின் நின்றான் சேனை சூழ.

பொ: என்று, சிறந்த வேதமறிந்த முனிவர்கள், இலவணன் தன் வலிமையை எல்லாம் சொல்ல, வலிமையும் திறமையும் உடையனாய்ப் போரினைச் செய்யவல்ல சத்துருக்கன் கேட்டு, மது புரம் என்கின்ற அந்தப் பெரிய நகர்க்குச் செல்லும் வழியில் புறப்பட்டு, 'அந்த மலைபோன்ற தோற்றமுடைய இலவணன் உயிர்களைக் கொல்லுதற்குப் புறப்பட்டு விட்டான்' என்று வழிச் செல்வோர் சொல்லக் கேள்விப்பட்டுச் சென்று, அந்த மதுபுரத்தை அடைந்து செழுமையான மதிலின் வாயிலில் தன்சேனை சூழ நின்றான்.

கு: மறை-வேதம். மறைகளை ஓதியுணர்ந்த முனிவர் என்பார் 'மறைமுனிவர்' என்றார். வழிக்கொள்ளுதல்-புறப்படுதல். சாரர் என்றது, அங்குப் போக்கு வரவு புரிவோரை; வழிப் போக்கர் எனலும் ஆம். 'அந்தக் குன்றனையோன் உயிரலைப்பப்

புறப்பட்டான்' என்றது சாரர் கூற்று. உயிரலைத்தல் என்றது கொலைபுரிதலை. உயிர்களைக் கொல்லுதற்கு இலவணன் புறப்பட்டான் என்பதைக் கேள்விப்பட்டுச் சென்று, எய்திச், சேனை சூழ, வாயிலின் நின்றான் என இயையும். சென்றனன் என்பது முற்றெச்சம்; சென்று என்பதே பொருள். (92)

## இலவணன் சத்துருக்கனைக் காணுதல்

885 மன்னுயிர்க்குக் காலனாய் மண்ணுலகி
னுயிரெலாம் வளைந்து கொன்று
மின்னுயிர்க்கும் விரிசடைவெள் விடையுடையோ
னருஞ்சூல மென்கைத் தாக
என்னுயிர்க்கோ ரீறுமிலை யெனநினையு
மிலவணன்ற னகரியெய்தித்
தன்னுயிர்க்குக் காலனாய் நின்றவிறற்
சத்துருக்கன் றன்னைக் கண்டான்.

மன்உயிர்க்குக் காலனாய், மண்உலகின் உயிர்எலாம் வளைந்து கொன்று,
'மின்உயிர்க்கும் விரிசடை வெள்விடையுடையோன் அருஞ்சூலம் என்கைத்தாக,
என்உயிர்க்கு ஓர் ஈறும் இல்லை' என நினையும் இலவணன்தன் நகரி எய்தித்
தன்உயிர்க்குக் காலனாய் நின்ற விறல் சத்துருக்கன் தன்னைக் கண்டான்.

பொ: நிலைபெற்ற உயிரினங்கட்கெல்லாம் எமனாய், மண்ணுலகில் உள்ள உயிரினங்கள் எல்லாவற்றையும் (தப்பாமல்) வளைந்து கொண்டு கொன்று, 'மின்னலைப் போலும் விரிந்த சடையையும் வெள்ளை எருதையும் உடையவனாகிய சிவபிரான் கொடுத்த அரிய சூலம் என் கையில்இருக்க, என்னுயிர்க்கு ஒரு முடிவு காலமும் இல்லை' என்று நினைந்து கொண்டுள்ள இலவணன், தன்னுடைய நகரத்தை அடைந்து தன்னுடைய உயிர்க்கு எமனாக நின்று கொண்டுள்ள வெற்றியுடைய சத்துருக்கனை வாயிலில் கண்டான்.

கு: மண்ணுலகில் உள்ள உயிரினங்களையெல்லாம் வாரியுண்ணும் இயல்புடையவனாதலின் 'மன்னுயிர்க்குக் காலனாய்' என்றார். வேறு எமன் வேண்டா; இவனே எமனாக உள்ளான் என்பது கருத்து. உயிரெலாம் வளைந்துகொன்று என்றது, இவன் பற்றியுண்ணப் புகுங்கால் அவை தப்பிப் போகாவண்ணம் வளைந்து கொண்டு கொல்லுதலை. மின் உயிர்த்தல் என்பது மின்னலைப் போலுதல். 'மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை யணிந்தவனே' என்பர் ஆரூருடை நம்பி (7ஆம் திருமுறை). உயிர்க்கும் என்றது, இங்கு உவம உருபு. சடையும் விடையும் உடையோன் எனச் சிவபிரானுக்கு அடையாளம் கூறியவாறு. பெறுதற்கரிய சூலம் என்பார், 'அருஞ்சூலம்' என்றார். கைத்து-கையின் கண்ணது; குறிப்பு வினைமுற்று. பிறவுயிர்க்குத் தான் எமனாதலன்றித் தன்னுயிர்க்கு ஒரு எமனில்லை என்று செருக்கியிருந்த இலவணன், தன்னகரத்திலே தனக்கு ஒரு எமன் இருப்பான் என எதிர்பாராத நிலையில் சத்துருக்கனைக் கண்டான் என்பார், 'தன்னகரியெய்தித் தன்னுயிர்க்குக் காலனாய் நின்ற விறல் சத்துருக்கன்றன்னைக் கண்டான்' என்றார். தனக்கு உரிமையில்லாத பிறவிடத்தில் தன்னைக் கொல்ல எமன் வரலாம்; ஆனால் தனக்கே உரிமையுள்ள காவலமைந்த தன்னகரத்தில் இப்படி ஒரு எமன் வருவான் என அந்த இலவணன் எதிர்பார்த்திலன் என்பதைப் புலப்படுத்தியவாறு. (93)

### சத்துருக்கனை வந்த காரணம் வினவுதல்

886 தன்னுடைய நகர்வாயிற் றனுதராய்ப்
போர்செய்யச் சமைந்து நிற்கும்
மன்னுடைய மகனின்ற வலிகண்டு
வாய்மடித்து வஞ்சன் கூறும்
என்னுடைய காவலழித் தஞ்சாதே
யென்னகரில் வந்தாய் யாரை
உன்னுடைய பேரேது நீவந்த
காரணமென் னுரைத்தி யென்றான்.

தன்னுடைய நகர்வாயில் தனுதரனுப் போர்செய்யச் சமைந்து நிற்கும்
மன்னுடைய மகன் நின்ற வலிகண்டு, வாய்மடித்து, வஞ்சன் கூறும்:-
'என்னுடைய காவல் அழித்து அஞ்சாதே என்நகரில் வந்தாய்! யாரை?
உன்னுடைய பேர் ஏது? நீவந்த காரணம்என்? உரைத்தி' என்ருன்.

பொ: தன்னுடைய நகரத்தின்வாயிலில் வில்லே ஏந்திய வனுய்ப் போர்செய்தற்கு ஆயத்தனுய் நிற்கின்ற அரச குமாரனுகிய சத்துருக்கன் நின்றிருக்கும் வலிமையான தோற்றத்தைக் கண்டு வெகுண்டுவாய்மடித்துக்கொண்டு வஞ்சனுகிய இலவணன் சொல்லுவான்: 'என்னுடைய காவலேயெல்லாம் பயன்படாமல் அழித்துவிட்டுச் சிறிதும் அஞ்சாமல் என் நகரத்திற்குள் வந்த நீ யார்? உன்னுடைய பேர் யாது? நீ இங்குப் போர்க் கோலத் துடன் வந்த காரணம் யாது? சொல்;' என்று வினவினுன்.

கு: பிறர் யார்க்கும் உரிமையில்லாமல் தனக்கு மட்டுமே உரிமையுள்ள நகரம் என்பது புலப்படத் 'தன்னுடைய நகர்' என்ருர். வாய்-வாயில். தனுதரன்-வில்லேத் தரித்தவன். வளேத்த வில்லோடு நிற்பது, போர்க்கு ஆயத்தமாக நிற்பதாக அறிவிப்ப தாகும் என்றபடி. சமைந்து-ஆயத்தமாகி. சத்துருக்கன் தசரத சக்கரவர்த்தியின் புதல்வன் என்ற தகுதிக்கு ஏற்ப வீறுகொண்டு நின்றமை புலப்பட 'மன்னுடைய மகனின்ற வலிகண்டு' என்ருர். வாய்மடித்தல் என்பது, கோபக்குறிப்பாக வாயிதழை மடித்துப் பல்லால் கடித்தல். வஞ்சன் என்றது இலவணனே. அவன் இயல்பு குறித்தபெயர். மூவுலகத்தாரும் அஞ்சுதற்குரிய என்காவல் என்பது தோன்ற 'என்னுடைய காவல்' என்றும் அதை அழித் ததோடு அஞ்சாமல் என் நகரத்தில் துணிவோடு வந்த நீ யார்? என்பான், அஞ்சாதேயென்னகரில் வந்தாய் யாரை' என்றும் கூறினுன். உரைத்தி - சொல்லுவாய்; ஏவல். (94)

## சத்துருக்கன் சொன்னது

887 தயரதன்றன் றனயன்யான் சத்துருக்க
னெனும் பெயரா மிராமன்றம்பி
புயலனைய கருமனத்தோய் போர்வேண்டி
வந்தனென்யான் போர்தாராது
பெயர்வரிதிங் குனக்கென்னப் பெருகியவெங்
கோபத்தாற் பெயரா தோங்க
மயல்புரியு மனத்தவுணன் மற்றவனைக்
குறித்தினைய மாற்றஞ் சொன்னான்.

தயரதன்தன் தனயன்யான்; சத்துருக்கன் எனும்பெயராம்;
இராமன் தம்பி;
புயல்அனைய கருமனத்தோய்! போர்வேண்டி வந்தனன்யான்;
'போர்தாராது
பெயர்வு அரிது இங்கு உனக்கு' என்னப் பெருகிய வெங்
கோபத்தால் பெயராது ஓங்க,
மயல்புரியும் மனத்து அவுணன் மற்றவனைக் குறித்து இனைய
மாற்றம் சொன்னான்.

பொ: யான் தயரதன் மகன்; சத்துருக்கன் எனும் பெயர் எனக்கு உரியதாகும்; இராமன் என்னும் பெருமகனுக்குத் தம்பி முறையினன். கரியமேகம் போன்று கருத்த மனத்தை யுடையவனே! நின்னோடு போர் செய்ய விரும்பி வந்தேன் யான்; எனக்குப் போர் தாராமல் பெயர்ந்து போதல் இங்கு உனக்கு இனி அரிதாகும்; என்று வளர்ந்த பெரிய கோபத்தால் நிலைபெயராது ஓங்கி நிற்க, மயக்கம் செய்யும் மனத்தினனாகிய இலவணன், சத்துருக்கனைக் குறித்து இந்தச் சொல்லைச் சொன்னான்.

கு: மேலைச் செய்யுளில் இலவணன் வினவிய வினாக்களுக்கு முறையே விடைசொல்வானாய் இங்ஙனம் கூறினான் சத்துருக்கன். யாரை என்ற வினாவுக்கு விடையாகத் 'தயரதன்தன் தனயன்' என்பதும் 'இராமன் தம்பி' என்பதும் கூறப்பட்டது. உன்னுடைய

பேரேது? என்ற வினவிற்கு விடையாகச் 'சத்துருக்கன் எனும் பெயராம்' என்பதும் நீவந்த காரணம் என்? என்ற வினவிற்குப் 'போர்வேண்டி வந்தனன்' என்பதும் விடையாகக் கூறப் பட்டன. புயல் என்றது, கருக்கொண்ட மேகத்தை. மனம் பாவ எண்ணங்களால் கருத்துள்ளது என்பான் 'புயலனைய கரு மனத்தோய்' என விளித்தான். பெயர்வு - பெயர்தல். தொழிற் பெயர். மயல்புரிதல்-மயக்கத்தைச் செய்தல். இனி மயக்கத்தை விரும்புதல் எனினும் ஆம். பெயராது கோபத்தால் ஓங்க என இயைத்தலும் ஆம். மாற்றம்—மறுமொழி. (95)

## இலவணன் சொன்னது

888 என்னுடைய முன்னவனு 'மிராவணனை
யிருங்கிளையோ டெய்து கொன்ற
உன்னுடைய முன்னவனு மிராகவனென்
றிருந்தவனை யுணர்ந்தி லாதேன்
என்னுடைய பழம்பகைவன் றம்பிநீ
யென்னிடைவந் தகப்பட் டாயின்
றுன்னுடைய வுயிர்கொள்வ லெனவுரைத்துப்
பின்னுமீ துரைக்க லுற்றான்.

'என்னுடைய முன்னவனும் இராவணனை இருங்கிளையோடு எய்து கொன்ற
உன்னுடைய முன்னவனும் இராகவன் என்று இருந்தவனை உணர்ந்தி லாதேன்;
என்னுடைய பழம்பகைவன் தம்பிநீ என்னிடைவந்து அகப்பட்டாய் இன்று!
உன்னுடைய உயிர்கொள்வல்' என உரைத்துப் பின்னும் ஈது உரைக்கல் உற்றான்

பொ: 'என்னுடைய அண்ணனாகிய இராவணனைப் பெரிய சுற்றத்தோடு அம்பு எய்து கொன்ற உன் அண்ணனாகிய இராகவன்' என்று பெயர் கொண்டிருந்தவனை உணராதிருந்தேன். (உணர்ந்திருப்பின் அவனை அப்போதே கொன்றிருப்பேன்).

என்னுடைய பழைய பகைவனாகிய இராகவன் தம்பியாகிய நீ என்னிடத்தில் வந்து அகப்பட்டுக் கொண்டாய்; இன்றைக்கு உன்னுடைய உயிரைக் கொள்வேன்' என்று சொல்லிவிட்டு மேலும் இதனைச் சொல்லலுற்றான்.

கு: இராவணனுக்குச் சிற்றன்னையாகிய கும்பீநசியின் புதல்வனாதலின் இலவணனுக்கு இராவணன் அண்ணன் முறையினன் ஆகின்றான். முன்னவன்—அண்ணன். இருங்கிளை—பெரிய சுற்றம். எய்து என்ற வினையால் அம்பு என்ற செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. இராகவன் என்றிருந்தவனை என்பது, பொருட்படுத்தாத நிலையை விளக்கவந்தது. 'உணர்ந்திலாதேன்' என்றது உணர்ந்திருப்பின் இன்னது செய்வேன் என்னும் நினைவையுணர்த்தியது. தன் அண்ணனைக் கொன்றவன் ஆதலின் இராகவனை 'என்னுடைய பழம்பகைவன்' என்றான். வந்து அகப்பட்டாய் என்றது யான் தேடிச் செல்ல வேண்டாது நீயே வந்து அகப்பட்டுக் கொண்டாய் என்னும் கருத்தினது. உயிர் கொள்வல் என்றது உன் உயிரை உன்னுடம்பிலிருந்து பிரித்துவிடுவேன்; கொல்வேன் என்னும் கருத்தினது. (96)

## இதுவுமது

889 தெவ்வழிக்குஞ் சிலைதரிந்த திறலுடைய
மாந்தாதா சேனை யோடென்
கைவ்வழிவந் தகப்பட்டுக் கனலாகி
யொழிந்தமைநீ கழறக் கேட்டும்
உய்வழியொன் றறியாம லுயர்சேனை
யதனொடுமென் னுழைவந்துற்றாய்
அவ்வழியிற் பிறந்தோருக் கறியாமைவழி
வந்த வவல மென்றான்.

தெவ் அழிக்கும் சிலைதரிந்த திறலுடைய மாந்தாதா சேனையோடு என்
கைவ்வழிவந்து அகப்பட்டுக் கனலாகி ஒழிந்தமைநீ கழறக்கேட்டும்

உய்வழி ஒன்று அறியாமல் உயர்சேனை யதனொடுமென்
உழைவந்து உற்றாய்
அவ்வழியில் பிறந்தோருக்கு அறியாமை வழிவந்த அவலம்
என்றான்.

பொ: பகையை யழிக்கின்ற வில்லையேந்திய திறமை மிக்க மாந்தாதா தன்சேனையோடும் என்கையில் வந்து அகப்பட்டுக் கொண்டு, கனலாகி அழிந்து ஒழிந்ததை நீ பிறர் சொல்லக் கேட்டிருந்தும், நீ உய்யும் வழி ஒன்று அறிந்து பிழைத்துக் கொள்ளாமல், உயர்ந்த சேனையோடும் என்னிடத்தில் வந்து அடைந்தாய்; அந்தச் சூரியன் வழியில் பிறந்தோர்க்கு அறியாமை யென்பது வழிவழி வந்த துன்பம் போலும்! என்று கூறினான்.

கு: மாந்தாதா என் வலியறியாது பகைத்துவந்து என்னிடம்அகப்பட்டுக் கொண்டு வெந்து சாம்பலானது போலவே, நீயும் என்வலியறியாது என்னோடு போர் செய்ய வந்து அகப்பட்டுக் கொண்டாய்; ஆதல்ன், மாந்தாதா போலவே நீயும் கனலாகிவெந்து அழிய வேண்டியதே என்பது குறிப்பு. அவ்வழி என்றது சூரியன் மரபினை. மாந்தாதா பட்டதைக் கேட்டறிந்தும் சத்துருக்கன் போர்க்கு வந்தது மரபால் வந்த அறியாமையாகிய துன்பமே என அவன் மரபையும் பழித்துக் கூறியவாறு. அறிவிருந்தால் இவ்வாறு வலியறியாது வந்தழிதல் நிகழாது என்பது குறிப்பு. உய்வழி என்றது இடையின எதுகை என்று கொள்க. பிழைத்திருக்கும் வழி என்பது பொருள். தெவ்-பகைமை. சிலைவில், கழறுதல்-சொல்லுதல். முனிவர் சொல்லக் கேட்டறிந்ததைக் குறித்ததாகக் கொள்ளலாம். கேட்டும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு. கேட்டதற்குப் பயன் உயிர் பிழைக்கும் வழியில் நடத்தலன்றோ? அந்நெறிக்கு மாறாக என்னை எதிர்த்தல் பொருந்துமோ? என்றவாறு, உழை-பக்கம். அவலம்-துன்பம். (97)

## சத்துருக்கன் நாணொலி யெழுப்புதல்

890 திண்ணசுர னிவ்வண்ணஞ் செப்பியசொற்
செவிநுழையச் சீற்றம் பொங்கிச்

கண்ணெரிகான் றிடவூழிக் கனலென்னக்
கடலால காலமென்ன
மண்ணதிர மண்சுமந்த மாநாகந்
தலையதிர வஞ்ச ரனஞ்சத்
தெண்ணதிர விண்ணதிர விருஞ்சிலையை
நாரணறிந்தா னிராமன் நம்பி.

திண்அசுரன் இவ்வண்ணம் செப்பியசொல் செவிநுழையச்
சீற்றம் பொங்கிக்,
கண்எரி கான்றிட, ஊழிக்கனல் என்ன, கடல் ஆலகாலம் என்ன,
மண்அதிர, மண்சுமந்த மாநாகம் தலை அதிர வஞ்சன் நெஞ்சத்து
எண்அதிர, விண்அதிர, இருஞ்சிலையை நாண் எறிந்தான்
இராமன்தம்பி.

பொ: திண்மையுடைய இலவணன் என்னும் அசுரன் இவ்வாறு சொன்ன சொற்கள் செவியில் நுழைந்தளவில் கண்கள் நெருப்பைக் கக்க, ஊழிக்காலத்துக் கனல் போலவும் கடலில் எழுந்த ஆலகாலம் போலவும் சீற்றம் பொங்கி, மண்ணுலகம் நடுங்கவும் மண்ணைச் சுமந்த பெரிய ஆதி சேடன் என்னும் பாம்பு தலை நடுங்கவும் வஞ்சனுகிய இலவணனது மனத்திருந்த எண்ணம் நடுங்கவும், விண்ணுலகம் நடுங்கவும் பெரிய வில்லின் நாணினை எறிந்து ஒலியெழுப்பினன் - வில்லினுக்கு ஒருவன் எனப்புகழ் பெற்ற இராமனுடைய தம்பி சத்துருக்கன்.

கு: ஊழிக்கனலென்னக் கடலால என்னச் சீற்றம் பொங்கி எனக் கொண்டு கூட்டுக. அன்றிக் கண்ணெரி கானுதற்கு உவமையாக்கினும் அமையும். சீற்றம் பொங்கி நாணெறிந்தான் என இயையும். அதிர்தல்-நடுங்குதல். அதிர என்ற சொல் பன்முறை வரத் தொடுத்தமையால் இது சொற்பின் வருநிலையணி எனப்படும். மாநாகம்தலை யதிர என்புழி நாகமும் தலையும் முதலும் சினையும் ஆகிய ஒற்றுமையுண்மையின் அதிர்தல் இரண்டிற்கும் ஒக்கும். வஞ்சனை என்றது, இலவணனை-எண். எண்ணம். அது அதிர்தலாவது எண்ணிய எண்ணம் நிறைவேறுது போலும் எனத் தடுமாறல். சத்துருக்கன் என்றது இராமன் தம்பி என்றது, வில்லாற்றல் இராமனுக்கு இருப்பது போலவே சத்துருக்கனுக்கும் உண்டு என்னும் குறிப்புப் புலப்பட வேண்டியே யாம். (98)

## இலவணன் வீசிய மரத்தைச்சத்துருக்கன் அம்பினுல் அழித்தல்

891 இவ்வண்ண நாணெறிய வெயிறுகடித்
திருகையோ டிருங்கை யெற்றி
மைவ்வண்ண மனத்தவுணன் மலையனைய
மராமரம்மண் குலுங்க வாங்கி
உய்வண்ண மரிதிதற்கென் றும்பர்நடுங்
கிடவுரவோ னுரத்து வீசக்
கைவ்வண்ணச் சிலையினையோன் கணைகளா
லம்மரத்தைக் கண்டங் கண்டான்.

இவ்வண்ணம் நான்எறிய எயிறுகடித்து இருகையோடு இருங்கை எற்றி,
மைவ்வண்ண மனத்து அவுணன் மலையனைய மராமரம்மண்குலைய வாங்கி,
உய்வண்ணம் அரிதுஇவற்கு என்ற உம்பர் நடுங்கிட உரவோன் உரத்து வீசக்,
கைவ்வண்ணச்சிலை இளையோன் கணைகளால் அம்மரத்தைக் கண்டம் கண்டான்.

பொ: இவ்வாறு வில் நாணினை எறிந்து ஒலியெழுப்ப. மை போன்று கருத்த மனத்தையுடைய இலவணன் பற்களைக் கடித்துப் பெரிய கையோடு கையைத்தட்டி, மலை போன்ற வெண் கடம்ப மரத்தை மண் நடுங்குமாறு பிடுங்கி, 'இந்தச் சத்துருக்கனுக்கு உய்யும் வகை இல்லை என்று தேவர்கள் பார்த்து நடுங்கிட'. வலியோனாகிய சத்துருக்கனது மார்பில் வீசக், கையில் தாங்கிய அழகிய வில்லையுடைய சத்துருக்கன் அம்புகளால் அந்த மரத்தைத் துண்டு துண்டாக விழுமாறு செய்தான்.

கு: வில்நாணின் ஒலியே இலவணனது கோபத்தை எழுப்பிப் பற்களை நெறு நெறுவெனக் கடிக்குமாறும், கையோடு கைதட்டி ஒலியெழுப்புமாறும் மராமரத்தைப் பிடுங்கியெறியுமாறும் செய்தது என்க. 'இருகையோடு இருங்கையெற்றி', என்புழி இரு,

இரும் என்பன பெரிய என்னும் பொருளில் வந்தன; நான்கு கையுடையவனல்லன். 'கையோடு கையெற்றி' என்பதே பொருள். எற்றுதல்-அடித்தல்; மோதுதல். கோபத்தில் கைதட்டி ஆரவாரித்தல் இயல்பு. 'மைவ்வண்ண மனத்தவுணன்', என்றது, இருண்ட மனத்து அவுணன் என்னும் பொருளது. 'குன்றிமூக்கிற் கரியாருடைத்து' (திருக்குறள்) எனவும், 'கூறின் மலிமனம் போன்று இருளா நின்ற கோகிலமே' (திருக்கோவையார்) எனவும் மனத்திற்கும் கருமை கூறப்பட்டிருத்தல் காணலாம். உரவோன் என்றது வலியவனாகிய சத்துருக்கனே. உரம்-மார்பு. 'உரவோன் உரத்துவீச் கண்டங் கண்டான் என்புழி மடக்கனி அமைந்திருத்தல் காணலாம். கண்டம்-துண்டு. கண்டான்-செய்தான். (99)

192 உற்றபெரு வெகுளித்தீ யுடனெழுந்த
வாளரக்க னோங்க லன்ன
மற்றொருமா மரம்பிடுங்கி மண்ணடுங்க
விண்ணடுங்க வலியின் வீசக்
கொற்ற நெடுஞ் சிலையுடையோன்
கொடுங்கணையால் அம்மரத்தைக் கூறு
செய்து
செற்றமிகு மவனுரத்துச் செழுங்கணைகள்
பலசொரிந்தான் றேவர் வாழ்த்த.

உற்றபெரு வெகுளித் தீயுடன் எழுந்த வாள்அரக்கன் ஓங்கல்
அன்ன
மற்றொரு மாமரம் பிடுங்கி, மண்நடுங்க, விண்நடுங்க, வலியின்
வீசக்,
கொற்றநெடுஞ் சிலையுடையோன் கொடுங்கணையால் அம்மரத்தைக்
கூறுசெய்து,
செற்றம் மிகும் அவன்உரத்துச் செழுங்கணைகள் பலசொரிந்தான்-
தேவர் வாழ்த்த.

பொ: தனக்கு உண்டான பெரிய கோபமாகிய தீயுடன் எழுந்த கொடிய அரக்கனாகிய இலவணன் மலைபோன்ற மற்றொரு பெரிய மரத்தைப் பிடுங்கி மண்ணுலகத்தோர் நடுங்கவும்

விண்ணுலகத்தோர் நடுங்கவும் வலிமையோடு வீச, வெற்றிமிக்க நீண்ட வில்லையுடையவனாகிய சத்துருக்கன் கொடுமையான அம்பினால் அந்த மராமரத்தைத் துண்டங்கள் செய்துவிட்டுக் கோபமிக்க அவ்வரக்கனது மார்பில் செழுமையான அம்புகள் பலவற்றைச் சொரிந்தான்; தேவர்கள் வாழ்த்துமாறு.

கு: வெகுளித்தீ என்றது உருவகம். வாள் என்றது இங்குக் கொடுமையை. வாள் ஏந்திய அரக்கன் எனலும் ஆம். முன்னர் மராமரம் எறிந்தவன் மீண்டும் மற்றொரு மராமரத்தைப்பிடுங்கி வீசினான் என்பார், 'மற்றொரு மராமரம் பிடுங்கி ....வலியின்வீச' என்றார். மாமரம் என்பதற்குப் பெரிய மராமரம் எனப்பொருள் கொள்க. இலவணன் வீசிய மரம் சத்துருக்கனை என்ன செய்யுமோ என்ற அச்சத்தால் மண்ணவரும் விண்ணவரும் நடுங்கினர் என்க. மண் விண் என்பன இடவாகுபெயராய் அங்கு வாழும் மக்களையும் தேவரையும்குறித்து நின்றன. கொற்றம்-வெற்றி. சிலையுடையோன் என்றது சத்துருக்கனை. கூறு செய்தல்-துண்டித் தல். செற்றம் - பெருங்கோபம். உரம்-மார்பு. சத்துருக்கன் சொரிந்த கணைகள் இலவணனைக் கொல்வனவாக எனத் தேவர் கள் வாழ்த்தினர் என்க. தேவர் வாழ்த்தச் சொரிந்தான் என மாற்றி முடிக்க. (100)

## இதுவுமது

893 குன்றனைய வாளவுணன் குருதிநீ
ருடல்சொரியக் கொதித்து மண்டி
ஒன்றின்மே லொன்றாகி யுயர்மரங்க
ளோவாது செல்ல வீச
வன்றிறலோன் விற்கையில் வளைந்தபடி
யேநிற்க வயிர வாளி
துன்றுமழை பொழிந்தவுணன் றுரந்தமரா
மரமடங்கத் துணித்து வீழ்த்தான்

குன்று அனைய வாள் அவுணன், குருதிநீர் உடல்சொரியக் கொதித்து மண்டி,
ஒன்றின் மேல் ஒன்றாகி உயர்மரங்கள் ஓவாது செல்ல வீச,

வன்திறலோன் வில்கையில் வளைந்தபடியே நிற்க, வயிர வாளி
துன்றுமழை பொழிந்து அவுணன் துரந்த மராமரம் அடங்கத்
துணித்து வீழ்த்தான்.

பொ: மலைபோன்ற தோற்றத்தையுடைய கொடிய அரக்கன் உடல் இரத்தத்தைச் சொரிய, உளம் கொதித்து நெருங்கி, ஒன்றின் ஒன்றாய் உயர்ந்துள்ள மரங்களை ஒழியாது செல்லுமாறு வீச, வலிமையும் திறமையும் உடைய சத்துருக்கன் வில்லைக் கையில் வளைந்தபடியே நிற்க, வயிரம் போன்ற அம்புகளை நெருங்கும் மழையாகப் பொழிந்து, இலவணன் வீசிய மராமரங்கள் எல்லாவற்றையும் துணித்து வீழ்த்தினான்.

கு: இலவணனுடைய பெரிய தோற்றம் புலப்படக் 'குன்றனைய வாள் அவுணன்' என்றார். உடல் குருதிநீர் சொரிய என இயையும். மண்டி-நெருங்கி. ஒன்றினுக்குமேல் ஒன்று உயர்ந்து நிற்கும் மராமரங்கள் என்க. அரக்கன் வீசிய மரங்களில் முன் வீசியவற்றினும் பின் வீசியன உயர்ந்தனவாக இருப்பவை என்பார், 'ஒன்றின்மேல் ஒன்றாகியுயர்ந்த' என்றார். ஓவாது— ஒழியாது; நீங்காது. மேலும் மேலும் அம்புகளைச் சொரிய வேண்டுதலின் 'விற்கையில் வளைந்தபடியே நிற்க' என்றார். வயிரவாளி என்றது, வலிமையில், வயிரம் போன்ற அம்பினை. மழையாகப் பொழிந்து என்பார், 'துன்றுமழை பொழிந்து' என்றார். துரத்தல் — வீசுதல். அடங்க— முழுவதையு . (101)

## சத்துருக்கன் தளர்ந்து வீழ்தல்

894 அராவணைமேற் றுயில்நீங்கி யயோத்திமா
நகரெய்தி யவனி காத்த
இராகவன்றன் றிருச்சரத்தா லிரவிமா
மகன்றேற வெய்த வேழு
மராமரமொன் றுருப்பதனை மந்தரமா
மன்னதனை வஞ்சன் வாங்கித்
தராதலஞ்சே ருயிர்நடுங்கச் சத்துருக்கன்
மிசையெறியத் தளர்ந்து வீழ்ந்தான்.

அராவணைமேல் துயில்நீங்கி, அயோத்திமா நகர் எய்தி அவனி காத்த
இராகவன்தன் திருச்சரத்தால் இரவிமாமகன் தேற எய்த ஏழு
மராமரம்ஒன்று ஒப்பதனை — மந்தரமாம் அன்னதனை — வஞ்சன் வாங்கித்
தராதலம்சேர் உயிர்நடுங்கச் சத்துருக்கன் மிசை எறியத் தளர்ந்து வீழ்ந்தான்.

பொ: ஆதிசேடனாகிய அணைமேல் அறிதுயில் நீங்கி, அயோத்தி மாநகரை எய்தி இவ்வுலகத்தைக் காத்த இராகவனுடைய சிறந்த அம்பினால் சூரியன் மகனாகிய சுக்கிரீவன் தெளிவடையுமாறு ஏழுமராமரம் ஒன்றுமே ஒப்பாகத்தக்கதை-மந்தரமலைபோன்றதாகிய மராமரத்தை வஞ்சகனாகிய இலவணன் பிடுங்கித் தரையில் உள்ள உயிர்கள் எல்லாம் நடுங்கச் சத்துருக்கன் மேல் வீச, அவன் தளர்ந்து தரையில் வீழ்ந்தான்.

கு: அரா-பாம்பு. இங்கு ஆதிசேடனைக் குறித்தது. இலவணன் வீசிய மராமரத்திற்கு உவமையாகத் தக்கது இராகவன், சுக்கிரீவன் தெளியுமாறு எய்த மராமரமே என்பது விளக்கியவாறு. அடுத்து அதற்கு உவமையாவது பாற்கடல் கடைந்த மந்தரமலையே என்பார், 'மந்தரமா மன்னதனை' என்றார். வஞ்சன் என்றது, வஞ்ச நெஞ்சனாகிய இலவணனை. தராதலம் என்றது, வடசொற்றொடர் அப்படியே ஆளப்பட்டது. முன் வீசிய மராமரங்களையெல்லாம் தன் அம்பினால் துண்டித்து அழித்த சத்துருக்கன் இந்தப் பெரிய மரத்தை அவ்வாறு செய்ய வியலாது அம்மரம்பட்டுத் தளர்ச்சியுற்றுத் தரையில் வீழ்ந்தான் என்றவாறு. (102)

## சத்துருக்கன் உணர்ந்தெழுதல்

895 இறந்தனனிங் கிவனென்று விலவணனென்
பகையறுத்தே னென்று நின்றான்
சிறந்தவலித் தன்சூலஞ் சென்றுவாங்
கிடவேதுஞ் சிந்தை செய்யான்

அறங்கைகொடுத் தெடுத்தளிப்ப வாதிநா
யகன்றம்பி யமளி நீங்கி
உறங்கியெழுந் தானென்ன வுணர்ந்தெழுந்தா
னுயர்வானத் தும்பர் வாழ்த்த.

இறந்தனன் இங்கு இவன் என்று இலவணன்: 'என் பகை
யறுத்தேன்' என்று நின்றான்!
சிறந்தவலித் தன்சூலம் சென்று வாங்கிட ஏதும் சிந்தை
செய்யான்;
அறம்கை கொடுத்து எழுந்து அளிப்ப, ஆதிநாயகன் தம்பி
அமளி நீங்கி,
உறங்கி எழுந்தான் என்ன, உணர்ந்து எழுந்தான் — உயர்
வானத்து உம்பர் வாழ்த்த.

பொ: இங்குள்ள இச்சத்துருக்கன் இறந்தனன் என்று கருதி, 'எனது பகையை அறுத்துவிட்டேன்' என்று மகிழ்ந்து, இலவணன் சிறந்த வலிமையுடைய தனது சூலத்தை அரண்மனைக்குச் சென்று எடுத்துவர ஏதும் நினையானாய் நின்றான்; தருமம் கை கொடுத்து உதவிட, ஆதிநாயகனாகிய இராகவன் தம்பியாகிய சத்துருக்கன் உறங்கிப்பின் படுக்கைவிடுத்து எழுந்தான் என்று சொல்லுமாறு உணர்ச்சி பெற்று, உயர்ந்த வானுலகத்துள்ள தேவர்கள் வாழ்த்துமாறு எழுந்தான்.

கு: சிந்தை செய்யானாய் நின்றான் என முற்றெச்சமாக்கி முடிக்க. மராமரத்தினால் சத்துருக்கனை வென்றுவிட்டோம் என்ற மகிழ்ச்சியால் இலவணன் தன் சிறந்த சூலத்தை எடுத்துவர நினைக்கவில்லை. மராமரத்தால் தாக்குண்டு மயங்கி வீழ்ந்த சத்துருக்கன் மீண்டும் உணர்வு பெற்று எழுந்தது தருமத்தின் துணையால் என்பார், 'அறங் கைகொடுத்தெடுத்தளிப்ப' என்றார். சத்துருக்கனின் தருமசிந்தனை புலப்பட வேண்டி 'ஆதிநாயகன் தம்பி' என்றார். அமளி என்றது, படுக்கையை. உணர்ச்சி பெற்ற விரைவினை யுணர்த்த, 'உறங்கியெழுந்தானென்ன உணர்ந்தெழுந்து' என்றார். (103)

## உணர்ச்சிபெற்ற சத்துருக்கன் தெய்வக்கடுங்கணை விடுதல்

896 சினச்சிங்க மெனவெழுந்தங் கினித்தெய்வக்
கணைதொடுப்ப னெனச்சிந் தித்துப்
புனற்சந்த மலர்கந்தப் புகைதீப
முதலாய வுபசா ரங்கள்
மனத்தாலே வகுத்திந்த வஞ்சனுயிர்
கொண்டென்பால் வருதி யென்று
வினைப்பாவி மேற்றெய்வ வெங்கணையை
வின்னாணிற் றொடுத்து விட்டான்.

சினச்சிங்கம் எனஎழுந்து அங்கு 'இனித்தெய்வக்கணை
தொடுப்பன்' எனச் சிந்தித்துப்
புனல் சந்தம் மலர் கந்தம் புகைதீபம் முதலாய உபசாரங்கள்
மனத்தாலே வகுத்து, 'இந்த வஞ்சன் உயிர் கொண்டு
என்பால் வருதி' என்று
வினைப்பாவிமேல் தெய்வ வெங்கணையை வில்நாணில் தொடுத்து
விட்டான்.

பொ: கோபமிக்க சிங்கம் போல அங்கு எழுந்து, 'இப்போது தெய்வ ஆற்றல் மிக்க அம்பைத் தொடுப்பேன்' என்று சிந்தித்து, நீரும் சந்தனமும் பூவும் வாசனைப் புகையும் தீபமும் முதலிய கொண்டு தெய்வத்திற்குச் செய்யும் உபசாரங்களை மனத்தினால் சங்கற்பம் செய்து முடித்து, 'இந்த வஞ்சகன் ஆகிய இலவணன் உயிரைக் கவர்ந்து கொண்டு என்னிடம் வருவாயாக' என்று தீவினையை விரும்பிச் செய்கின்ற பாவியாகிய அரக்கன் மேல் தெய்வத்தன்மையுடைய கொடிய அம்பினை வில்நாணில் தொடுத்து விடுத்தான்.

கு: தளர்ந்து விழுந்த சத்துருக்கன் மீண்டும் எழுந்த பொழுது, சினமிக்க சிங்கம் போல வீரவுணர்ச்சியோடு எழுந்தான் என்பார், 'சினச்சிங்கமென வெழுந்தங்கு' என்றார். இனி— இப்போது. பூசனைக்குரிய பொருள்களையெல்லாம் மானசிகத்தால்

கொணர்ந்து வழிபாடு செய்தான் என்பார், 'புனற்சந்தம் மலர் கந்தப்புகை தீபம் முதலாய உபசாரங்கள் மனத்தாலே வகுத்து' என்றூர். சந்தம்-சந்தனம், கந்தப்புகை என்றது வாசனைப் புகையை. நீராட்டிச் சந்தனம் பூசி மலர்சூட்டி, வாசனைப் புகையையும் தீபவொளியையும் காட்டிச் செய்யும் உபசாரங்கள் என விரித்துரைத்துக் கொள்க. மனத்தாலே வகுத்தல் சங்கற்ப மாத்திரையால் செய்தல். இவ்வாறு செய்தலும் போரில் மரபு. வகுத்தல்—வகைபடச் செய்தல். ஆட்டுதலும் பூசுதலும் சூட்டுதலும் காட்டுதலும் ஆகிய வகைபடவந்த செயல்களைச் செய்தல். 'இந்த வஞ்சனுயிர் கொண்டு என்பால் வருதி' என்றது, அம்புக்கு இட்ட கட்டளை. வினைப்பாவி என்புழி, வினையெனப் பொதுவகையால் கூறினும், தீவினை விழைந்து செய்த பாவி என்பதே கருத்தாகக் கொள்க. (104)

## சத்துருக்கனது அம்பு கண்டு தேவர் நடுக்கம்

897 விட்டபடை யாலமென வெவ்வூழித்
தீயென்ன விரிந்து பொங்க
அட்டதிசை யும்பாரு மருவரையு
மம்பரமு மநந்தனேடு
நட்டமுறு மன்றேநா மினிப்போக
விடங்காணே மென்று நாகர்
கெட்டனர்க ளுண்ணடுங்கிக் கேடிலான்
முகற்கினைய கிளத்த லுற்றூர்.

விட்ட படை ஆலம்என, வெவ்வூழித்தீ என்ன, விரிந்து பொங்க
அட்டதிசையும் பாரும் அருவரையும் அம்பரமும் அநந்தனேடும்
நட்டம் உறும் அன்றே? நாம்இனிப் போக இடங்காணேம் என்று நாகர்
கெட்டனர்கள் உள்நடுங்கிக்கேடுஇல் நான்முகற்கு இனைய கிளத்தல் உற்றூர்.

பொ: 'சத்துருக்கன் வில்நாணில் வைத்து விட்ட அம்பு பாற்கடலில் எழுந்த நஞ்சு போலவும் கொடிய ஊழித்தீயினைப் போல

வும் விரிந்து பரவ அதைக்கண்டு எட்டுத்திசைகளும் பூமியும் ஏறுதற்கு அரிய மலையும் ஆகாயமும் ஆதிசேடனோடும் அழியும் அன்றோ? நாம் இனிப் போதற்கு இடங்காணோம், என்று தேவர்கள், நிலைகெட்டவராய், மனம் நடுங்கிக் கொண்டு, அழிவில்லாத பிரமதேவனுக்கு இத்தன்மையைச் சொல்லத் தொடங்கினார்கள்.

கு: விட்டபடை என்றது, சத்துருக்கன் விட்ட அம்பினை. அம்பின் விரைவும் கடுமையும் புலப்பட சூலத்தினையும் ஊழித் தீயையும் உவமை கூறினார். அம்பு ஆலகாலம் போலவும் ஊழித்தீப் போலவும் விரிவடைந்து பரவ அதுகண்டு திசையும் நிலனும் மலையும் விண்ணும் பாதலத்துள்ள ஆதிசேடனோடு எல்லாம் அழிய வேண்டி வருமன்றோ என்று தேவர்கள் சிந்தித்துப் பிரமனிடம் முறையிடுகின்றனர் எனக. அம்பரம்-ஆகாயம். அநந்தன்-பூமியைத் தாங்கும் ஆதிசேடன். நட்டமுறுதல்-அழிதல். 'இந்த அழிவினைத் தடுக்க நாம் செல்லுதற்குரிய இடம் வேறு கண்டிலம்' என்று தேவர்கள் நடுங்கிப் பிரமனிடம் சென்று சொல்கின்றனர் எனக. கெட்ட தேவர்க்கு உதவும் இயல்புடைமை புலப்படக்' 'கேடில் நான்முகற்கு' எனச் சிறப்பித்தவாறு. நாகர்-தேவர்கள். கிளத்தல்-சொல்லுதல். 'கெட்டனர்களாய் உள்நடுங்கி' என முற்றெச்சமாக்கி முடிக்க. (105)

## பிரமன் சொல்லியது

898 ஊழிக்காற் றெடுங்கூடி யூழித்தீப்
பரந்ததுல கெங்கு மென்ன
ஏழிற்பே ருலகமெலா மீன்றவிறை
யிவைவிளம்பு மெதிரி லாத
ஆழித்தே ரிலவணன்ற னுருயிர்கொள்
வானூழி யண்ண றம்பி
பாழித்தோட் சத்துருக்கன் விடுதெய்வப்
படையிதுநீர் பதற லென்றான்,

ஊழிக்காற் ளெடுங்கூடி ஊழித்தீப் பரந்தது உலகுளங்கும எனன,
ஏழின்பேர் உலகம் எலாம் ஈன்ற இறை இவைவிளம்பும்:-எதிர் இலாத
ஆழித்தேர் இலவணன்தன் ஆருயிர்கொள்வான், ஆழிஅண்ணல் தம்பி-
பாழித்தோள் சத்துருக்கன் விடுதெய்வப் படைஇது நீர் பதறல் என்றான்.

பொ: 'கடையூழிக் காலத்து வீசும் ஊழிக்காற்றோடு ஊழித் தீயும் கூடிப் பரவியது உலகு எங்கும்,' என்று தேவர்கள் பிரமனுக்குச் சொல்ல, ஏழ் என்ற எண்ணிக்கினையுடைய பெரிய உலகம் எல்லாவற்றையும் படைத்த பிரமன் இவற்றைச் சொல்லுவான்- "தனக்கு எதிர்நிற்பாரை யில்லாத சக்கரத் தோடுங்கூடிய தேரினையுடைய இலவணனது அரிய உயிரைக் கொள்வதற்கு ஆணைச் சக்கரத்தையுடைய அண்ணலாகிய இராமன் தம்பி-வலிய தோள்களையுடைய சத்துருக்கன் விட்ட தெய்வப் படையாகும் இது; நீங்கள் அதுபற்றி நடுக்கங் கொள்ள வேண்டியதில்லை என்று சொன்னான்.

கு: சத்துருக்கன் விட்ட அம்பு என்பதையுணராத தேவர்கள் பிரமனிடம் சென்று, ஊழித்தீயோடு ஊழிக்காற்றும் சேர்ந்து உலகு எங்கும் பரவியது என்செய்வது? என முறையிடப் பிரமன் அவர்கள் அச்சம் நீங்கச் சொல்கின்றான்: இராமன் தம்பி சத்துருக்கன், இலவணன் உயிரைக்கொள்வதற்காக விட்ட தெய்வப்படை இது; அது பற்றி நடுங்க வேண்டா என்றான். தீயும் காற்றும் சேர்ந்தால் உலகம் அழிதல் திண்ணம் என்றவாறு. ஏழுலகங்களையும் படைத்தவன் பிரமனே ஆதலின் அவனை, 'ஏழிற்பேருலக மெலாம் ஈன்ற இறை', என்றார். இலவணன் வீரமும் வலியும் புலப்பட 'எதிர்இலாத, ஆழித்தேர் இலவணன்' என்றார். 'வான்' வினையெச்ச விகுதி. ஆழி அண்ணல் என்றது இராமனை. ஆழி - ஆணைச்சக்கரம். இனி, இராமனுடைய தெய்வ நிலையை நினைந்து 'சக்கரப்படையுடைய அண்ணல்' எனப் பொருள் கூறலும் ஆம். பாழி-வலிமை. பதறல் - நடுங்காதீர்கள்; எதிர்மறைச் சொல். (106)

## சத்துருக்கன் படை இலவணனைக் கொன்றுவிட்டுத் திரும்புதல்

399 பெண்ணுருவிற் பாகன்பாற் பெறுசூலப்
பெருவலியாற் பெருகும் பாவம்
உண்ணிருமி யாவவுண னுரமுருவி
யுயர்வரைக ளுருவி யோடி
மண்ணுருவி மண்ணின்கீழ் மாநாக
ருலகுருவி மறித்து மீண்டும்
திண்ணியதோட் சத்துருக்கன் செங்கையில்வந்
திருந்ததத் தெய்வ வாளி.

பெண்ணுருவின் பாகன்பால் பெறு சூலப் பெருவலியால் பெருகும் பாவம்

உள்நிருமியா அவுணன் உரம்உருவி உயர்வரைகள் உருவி ஓடி, மண்உருவி, மண்ணின்கீழ் மாநாகர் உலகுஉருவி, மறித்து மீண்டும்

திண்ணியதோள் சத்துருக்கன் செங்கையில் வந்து இருந்தது அத்தெய்வ வாளி.

பொ: பெண்ணுருவினளாகிய உமையை இடப்பாகத்தில் கொண்டுள்ளவனாகிய சிவன்பால் பெற்ற சூலப்படையின் பெரிய வலிமையால் பாவச் செயல் பெருகும் என்பதை உள்ளத்தில் கொள்ளாத இலவணன் என்கின்ற அவுணனது மார்பினைத் துளைத்து விட்டு, உயர்ந்த மலைகளைத் துளைத்துக் கொண்டு ஓடி, மண்ணுலகத்தைத் துளைத்துப் பின் மண்ணுலகிலுள்ள பெரிய நாகர் உலகத்தையும் துளைத்துவிட்டுத் திரும்பித் திண்ணிய தோள்களையுடைய சத்துருக்கனது சிவந்த கையில் மீண்டும் வந்து தங்கியது அந்தத் தெய்வத்தன்மை வாய்ந்த அம்பு.

கு: பெண்ணுருவிற்பாகன்-சிவன். உமையாகிய பெண்ணினைக் கொண்டுள்ள இடப் பாகத்தையுடையவன் என்க. 'பெண்ணுரு ஒரு திறனாகின்று' (புநறா.1) என்பதும் 'பாகம் பெண்ணுருவானாய் போற்றி' (திருவாசகம்) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தக்கன.

சிவன்பால் பெற்ற சூலத்தின் பெருவலி கொண்ட செருக்கால் 'நாம் செய்யும் செயலால் பாவம் பெருகும்' என்பதைஎண்ணிப் பார்க்காத இலவணன் என்பார், 'பெறுசூலப் பெருவலியால் பெருகும் பாவம் உன்னிருமியா அவுணன், என்றார். நிருமித்தல்-நினைத்தல். உள்-உள்ளத்து. பாவம் பெருகும் என்பதை எண்ணாத இலவணன் என்றவாறு. உரம்-மார்பு. இலவணன் மார்பைத் துளைத்த அம்பு அதனோடு அமையாது மலையையும் மண்ணையும் பாதலத்தையும் துளைத்துக்கொண்டு சத்துருக்கன் கையில் வந்து தங்கியது என்றவாறு. "தாடகைதன் உரமுருவி, மலையுருவி, மரமுருவி; மண்ணுருவிற்றுருவாளி" (பால. குலமுறை.26) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும்.

( 07)

## இலவணன் இறந்தபின் மதுபுரியுள் நுழைந்து பார்த்தல்

900 விண்ணவர்பூ மழைபொழிய வேதியரா
சிகள்கூற வேலை சூழ்ந்த
மண்ணவர்கள் மகிழ்ந்தாட வள்ளலிரா
மன்றம்பி மதுகையென்னும்
ஒண்ணகரி யுள்புக்காங் கொளிபெறுமா
மணிச்சோதி யொன்று யோங்கும்
திண்ணிலைய பொன்மாட கூடகோபு
ரமெல்லாந் தெரியக் கண்டான்.

**விண்ணவர் பூமழைபொழிய, வேதியர் ஆசிகள்கூற, வேலை சூழ்ந்த**
**மண்ணவர்கள் மகிழ்ந்துஆட, வள்ளல் இராமன்தம்பி, மதுகை என்னும்**
**ஒள்நகரி உள்புக்கு ஆங்கு ஒளிபெறும் மாமணிச்சோதி ஒன்றாய் ஓங்கும்**
**திண்நிலைய பொன்மாடகூட கோபுரம் எல்லாம் தெரியக் கண்டான்.**

பொ: விண்ணில் உள்ள தேவர்கள் மகிழ்ச்சியினால் கற்பக மலர்மாரி சொரியவும், வேதமுணர்ந்த அந்தணர்கள் சத்துருக்கனுக்கு ஆசிகள் சொல்லவும், கடல்சூழ்ந்த மண்ணுலகத்தவர்கள்

மகிழ்ச்சி கொண்டுஆடவும், வள்ளலாகிய இராமனுக்குத் தம்பி சத்துருக்கன், மதுபுரி என்கின்ற ஒளிவாய்ந்த நகரத்தில் உள் புகுந்து அங்கு ஒளிபெற்று விளங்கும் சிறந்த மணிகளின் சோதி யெல்லாம் ஒன்ருய்த் திரண்டு உயர்ந்துள்ள திண்ணிய நிலையினை யுடைய பொன்னுலியன்ற மாடங்களையும் கூடங்களையும் கோபுரங் களையும் எல்லாம் தெளிவாகப் பார்த்தான்.

கு: மதுகை என்பது மதுபுரி என்பதன் சுருக்கப்பெயர். வேலை-கடல். மதுபுரியில் உள்நுழைந்து பார்த்த சத்துருக்கன் அங்கு ஒளிமிக்க பொன்னுலியன்ற மாட கூட கோபுரங்களை யெல்லாம்விளக்கமாகப் பார்த்தான் என்றவாறு. இராவணனை வதைத்துத் தேவர்களுக்கு உதவி செய்த வள்ளல் இராமன்; அவன் தம்பியாகிய சத்துருக்கனும் அவன் போலவே இலவணன் என்னும பெரும்பாவியைத் தொலைத்துத் தேவர்க்கும், முனிவர்க் கும் உதவி செய்தான் என்ற கருத்துப் புலப்படவே 'வள்ளலி ராமன் தம்பி' என்ருர். (108)

## மதுபுரியைக் கண்ட சத்துருக்கனின் வியப்பு

901 இலங்கைமா நகருக்கு மிந்திரன்ற
னகருக்கு மெழில்கொள் சோதி
அலங்கன்மா முடித்தனத னணிநகர்க்கு
மிந்நகர்போ லழகுண் டாமோ
நலங்குலா வியவிந்த நகரியினை
நாம்புகழ்வ தெங்ங னென்று
தலங்குலா வியசீர்த்திச் சத்துருக்க
னொளிமணிமண் டபத்தைச் சார்ந்தான்.

**இலங்கை மாநகருக்கும் இந்திரன்தன் நகருக்கும், எழில்கொள் சோதி**
**அலங்கல் மாமுடித்தனதன் அணிநகர்க்கும், இந்நகர்போல் அழகு உண்டாமோ?**
**நலங்குலாவிய இந்த நகரியினை நாம்புகழ்வது எங்ஙன்? என்று**
**தலம் குலாவிய சீர்த்திச் சத்துருக்கன் ஒளிமணி மண்டபத்தைச் சார்ந்தான்.**

பொ: இலங்கை என்ற பெரிய நகர்க்கும் இந்திரனுடைய அமராவதி நகர்க்கும் அழகு பொருந்திய ஒளிமிக்க மாலை அணிந்த சிறந்த முடியையுடைய குபேரனுடைய அழகிய அளகாபுரிக்கும் இந்நகரத்தைப் போன்ற அழகு உண்டாகுமோ? நலம்பல பெற்று விளங்கும் இந்த மதுபுரி என்னும் நகரத்தை நாம் புகழ்ந்து சொல்வது எவ்வாறு? என்று எண்ணிக் கொண்டு உலகமெலாம் பரவிவிளங்கும் மிக்கபுகழினையுடைய சத்துருக்கன், ஒளிமிக்க மணிகள் பதித்த மண்டபத்தை அடைந்தான்.

கு: இராவணன் ஆண்ட இலங்கை நகரினும் இந்திரன் ஆளும் அமராவதி நகரினும் குபேரன் ஆளும் அளகாபுரியினும் மதுபுரி சிறப்பான அழகும் செல்வமும் பெற்று விளங்குதலால், 'இந்நகர் போல் அழகு உண்டாமோ?' என்று புகழ்ந்த சத்துருக்கன், மேலும் புகழ இயலாமை நினைந்து, 'நலங்குலாவிய விந்த நகரி யினை நாம் புகழ்வது எங்ஙன்?' என்று கூறலானான். 'நாம்புகழ்வ தெங்ஙன்' என்றுகூறியே அதன் புகழை வெளிப்படுத்திவிட்டான் எனலாம். தலம் என்றது மண்ணுலகத்தை. குலாவுதல்-விளங்குதல். கீர்த்தி மிகுபுகழ் என்றது நினைக. (109)

## சத்துருக்கன் மதுபுரி அத்தாணி மண்டபத்தில் அரியணையில் அமர்தல்

902 தய்யலர்பல் லாண்டிசைப்பச் சாமரைகள்
பணிமாறத் தாள மோங்கும்
தெய்வமா வின்னிசைகள் செவிநுழைய
மாகதர்க டிரண்டு போற்ற
மெய்யெலா மாபரணம் விரிசோதி
யால்விளங்க விண்ணோர் வாழ்த்தப்
பொய்யிலா வுள்ளத்தான் பொங்கணைமேல்
வீற்றிருந்தான் புடவி வாழ.

**தய்யலர் பல்லாண்டு இசைப்ப, சாமரைகள் பணிமாற, தாளம் ஓங்கும்**
**தெய்வமா இன்இசைகள் செவிநுழைய மாகதர்கள் திரண்டு போற்ற,**

மெய்எலாம் ஆபரணம் விரிசோதியால் விளங்க விண்ணோர்
வாழ்த்த,
பொய்யிலா உள்ளத்தான் பொங்கு அணைமேல் வீற்றிருந்தான்
புடவிவாழ.

பொ: பெண்டிர் பல்லாண்டு சொல்லவும், வெண்சாமரைகளை இருபுறமும் நின்று பெண்டிர் வீசவும், தாளச்சிறப்புடைய தெய்வத்தன்மையுடைய சிறந்த இன்னிசைப் பாடல்கள் தன் செவியில் நுழையவும், மாகதர்கள் திரண்டு அமர்ந்து ஏத்தவும், உடம்பெலாம் அணிந்துள்ள அணிகலன்கள் வீசுகின்ற ஒளியால் அந்த மண்டபமே விளக்கம் பெறவும் தேவர்கள் வாழ்த்தவும் பொய் இல்லாத உள்ளத்தையுடைய சத்துருக்கன் அழகு பொங்கும் அரியணைமேல் இவ்வுலகம் வாழ வீற்றிருந்தான்.

கு: தையலார் என்பது, எதுகை நோக்கித் தய்யலார் எனப் போலியாக வந்தது. தையலார் என்பதைச் சாமரைகள் பணி மாறுதற்கும் இன்னிசைகள் இசைத்தற்கும் எழுவாயாகக் கொள்க. செவிநுழைய என்றது பாடும் மகளிரின் இன்னிசைகள் தன் செவியில் நுழைய என்பதே கருத்தாதலின் தெய்வமாவின்னிசைகளைத் தையலார் பாடினர் என்பது போதரும். மாகதர் என்போர் இருந்தேத்துவோர். போற்றுதல்-ஏத்துதல். மெய் என்றது உடம்பினை. சத்துருக்கன் பகைவென்ற தகைக்கேற்ப நகைகள் பலவற்றை உடம்பில் அணிந்து கொண்டான் என்க. விரிசோதி-விரிகின்ற பேரொளி என வினைத்தொகையாக்கி விரிக்க. பொய்யிலாவுள்ளத்தான் என்றது மெய்ம்மையே விரும்புகின்ற உள்ளத்தையுடைய சத்துருக்கனை. பொங்குதல் என்றது அழகு மிக்கிருத்தல். அணையென்றது அரசு வீற்றிருத்தற்குரிய அரியணையை. வீற்றிருத்தல்-பிறர்க்கில்லாத சிறப்போடு அமர்தல். சத்துருக்கன் அரியணையில் இருந்தது உலகம்வாழ்தற்காகவே என்பார், புடவிவாழ வீற்றிருந்தான் என்றார். (110)

இலவணன் வதைப் படலம் முற்றிற்று.

# 14. சம்புவன் வதைப்படலம்

## முன்னுரை

இறந்த பார்ப்பனக் குழந்தையை எழுப்புதற்காகக் காட்டில் தலைகீழாகத் தவங்கிடந்த சம்புவன் என்பவனை இராமன் வதை செய்தது பற்றிக் கூறும் படலம் ஆகலின் இது சம்புவன் வதைப் படலம் என்று பெயர் பெறுகின்றது. சில ஏடுகளில் சம்பு வதைப் படலம் எனவும் இப்படலப் பெயர் காணப்படுகின்றது.

சத்துருக்கன் அவ்வாறு மதுபுரியில் பன்னிரண்டு ஆண்டுகள் அரசனாக இருந்துவிட்டுப் பின்பு தனது பெரிய சேனையை அங்கு நிலை பெற வைத்து விட்டுத் தனக்கேயுரிய சிறிய சேனையும் தானு மாகத் தனக்கு மன்னனாகிய இராமனுடைய திருவடிகளை வணங்கும் பொருட்டுப் புறப்பட்டு, வழியில் வான்மீகியின் தவக் குடிலை அடைகின்றான். அங்கு வான்மீகிமுனிவர் 'நாங்கள் எண்ணிய எண்ணத்தை முடித்தனை' என்று பாராட்டி உபசரித்து அன்புசெய்ய இரவு அங்குத் தங்கியிருந்து பொழுது புலர்ந்ததும் புறப்பட்டு அயோத்திநகரை அடைந்து இராமனை வணங்கு கின்றான்.

தன்திருவடியை வணங்கிய தம்பி சத்துருக்கனைத், தழுவிக் கொண்டு 'அன்று உறங்கா வில்லி யாகிய இலக்குவனால் இராவணனைக் கொன்றேன்பகை தவிர்த்தேன். இன்று உன்னால் இலவணனைக் கொன்று பெரும் பகையை முடித்தேன்' எனப் பாராட்டுகின்றான். சிலநாள் கழிந்ததும், மதுபுரியில் நின் பெரிய சேனையையும் அளவில்லாத செல்வத்தையும் வைத்துவிட்டு இங்குக் காலம் தாழ்த்தல்நன்னெறி யன்று; இன்றே புறப்பட்டுச் செல்க என வழியனுப்புகின்றான். சத்துருக்கன் இராமன் சொன்னபடியே புறப்பட்டுப் பொன்னுலகம் போன்ற மதுபுரியை அடைந்து அரசு புரிந்து வருகின்றான்.

தம்பி சத்துருக்கன் சென்றபின்பு இராமன் அரசு புரிகின்ற போது ஒருநாள், நரைத்தலையுடைய ஓரந்தணன் தன் மனைவி யோடும் மிக்க துயரமுடையவனாய் இறந்த தன்மகனை மடியிலே வைத்துக் கொண்டு இராமனது அரண்மனை வாயிலில் கதறி

அழும் பொழுது, தன்மைந்தனை இழந்து மனம் கலங்கிய வேதியன் மனைவி உயிர் நீங்கினவள் போல மிகவும் வருந்திப் பல சொல்லியழுகின்றாள்: என்னைக் கை விட்டுச் சென்ற நீ கடினசித்தம் உடையவனோ? உன்னைத் தொடர்ந்து வாராமல் இங்கு இருக்கின்றேனாகிய யான் கடினசித்தம் உடையவளா? தன்னைச் சொல்லிக்கூப்பிடவும் ஏதும் விசாரிக்காத மன்னர் மன்னனாகிய இராமன் கடினசித்த முடையவனோ? யார் கடின சித்த முடையவர் என்று அழுகின்றாள்.

பற்பல துன்பங்கட்கும் கொள்கலமாயினேன் யான்; உயிர்களை யெல்லாம் கொன்றுதின்கின்ற பாவி எமன் என்னைக்கொண்டு போக மாட்டேன் என்கின்றான். வலிய சிந்தையை யுடைய இராமன் என்துன்பத்தினைப் பார்க்காதவனாக உள்ளான்: என இவ்வாறு சொல்லி அழுது பார்ப்பினி ஆறாத்துயர் அடைகின்றாள். இறந்த பிள்ளையின் தந்தையாகிய வேதியனும் அவ்வாறே பல சொல்லி அழுது 'என்மகனே! என் நெஞ்சில் பெரிய நெருப்பை மூட்டிவிட்டு என்னை அடியோடு கைவிட்ட உன்னைப் போல யான் வன்னெஞ்சனாக இருக்கவியலவில்லை. உன்னைத்தொடர்ந்துயானும் வருகின்றேன்' எனக்கதறுகின்றான்.

தனக்குத் துன்பம் வரல்வேண்டா என்று நினைக்கின்றவன் பிள்ளை பெறாதிருப்பானாக! பிள்ளைபெறாத மலடனுக்கு இன்று யான்படும் கலக்கம் இல்லையன்றோ? எனக்கு இறுதிக் காலத்தில் நீ செய்ய வேண்டிய நீர்க்கடனை உனக்கு நான் செய்வேனோ? உன்னைப் பின் தொடர்ந்து வருகின்றேன்' என இவ்வாறு பல சொல்லிப் பின், 'இராமனுக்குப் பழி உண்டாக, யானும் மனைவியும் இறக்கின்றோம்' என்று சொல்லும் பொழுது; இராமன் இவர்கள் பேச்சையெல்லாம் கேட்டுச் செய்வதறியாமல் வருந்தித் தன் அமைச்சர்களை அழைத்து அமைச்சர்களும் தம்பி யரும் தானுமாக வாயிலில் வந்து புலம்புகின்ற வேதியனுக்கு மறுமொழி சொல்ல வியலாது வருந்தியிருந்த போது நாரத முனிவர் முதலிய முனிவர் கூட்டாய் அங்கு வருகின்றனர். இராமன் அவர்களை முறைப்படி பூசித்து வரவேற்ற போது இராமனது மனத்துயரையறிந்த நாரத முனிவர், இந்த இராச் சியத்தில் இதற்கு முன்பு நிகழாத ஒரு நிகழ்ச்சி நடந்துள்ளது'

அதுவே இந்த அந்தணச் சிறுவன் மரணமுற்றதற்குக் காரணம் என்பதைக் கூறுகின்முன்.

முதல் வருணத்தார் செய்தற்குரிய தவத்தை நான்காம் வருணத்தவன் செய்கின்முன். அதனுல் வந்த கேடே இது எனத் தெளிவிக்க இராமன் தெளிந்து, மகனையிழந்து வருந்தும் பெற்றேரிடம் சென்று தேற்றி இறந்தபிள்ளையை தைலத் தோணியில் இட்டுவைக்குமாறு இலக்குவனுக்குச் சொல்லிவிட்டுப் புட்பகத்தில் ஏறிக் கொண்டு மேற்றிசை நோக்கி விரைகின்முன். மேற்கு வடக்குக் கிழக்கு ஆகிய மூன்று திசைகளிலும் குறிக் கொண்டு தேடிப் பார்த்து விட்டுத் தென்திசையில் அன்னம் திளைக்கும் தாமரைத் தடாகத்தின் பக்கத்தில் தலைகீழாய்க் கால்மேலாய்த் தவஞ் செய்கின்ற நான்காம் வருணத்தவனைக் காண்கின்முன் இராமன்.

ஆலமரத்தில் தொங்குகின்ற வாவல்களைப் போலத் தலை கீழாய்த் தொங்கிக் கொண்டிருக்கின்றவனைக் கருணைமிக்க இராமன் பார்த்து 'நீ வேதியனே? அரசனே? வணிகனே? சூத்திரனே? வாக்கினுல் பொய்கூருது இவ்விடத்து உன்னைப்பற்றிய எல்லா விளக்கங்களையும் உள்ளபடி சொல்லுக' என்று வினவ அவன் சொல்கின்முன்:- 'யான் சூத்திர வருணத்தில் பிறந்தவன். சம்புவன் எனப்படுவேன். யான் தவஞ் செய்யும் காரணம் இவ்வுடம்பொடு தேவர்கள் தங்கியுள்ள பொன்னுலகத்தை அடையவேண்டும் என்ற எண்ணமேயாம்' என்று கூறுகின்முன். உடனே கருமுகில்போன்ற இராமன் உடைவாளை உருவி ஓங்கி அந்தச் சம்புவன் தலை பூமியில் விழுமாறு எறிகின்முன்.

இராமன் செயலைக்கண்ட தேவர்கள் இராமன் மேல் மலர் மாரி சொரிந்து 'இராம! வருணத்தின்வரம்பை அழித்துவிட்டுத் தவஞ்செய்து நின்கையால் மாய்ந்த சம்பு புண்ணியம் செய்த வர்கள் செல்லும் பொன்னுலகம் புகமுடியாது. நீ கருதும் ஒருவரத்தைக் கேட்டுப் பெற்றுக் கொள்க' என்றனர். இராமனும், 'இறந்துவிட்ட அந்தணச் சிறுவன் உயிர்பெற வேண்டும்' என வேண்டினன். 'சம்பு என்பவன் நின்னுல் இறந்தவுடன் அந்தணச் சிறுவன் உயிர் பெற்று எழுந்தான்' என்றனர்.

பின்பு தேவர்களும் இராமனும் சேர்ந்து அகத்தியமுனிவர் தவக்குடிலை அடைந்துவணங்கினர்கள். தேவர்கள் வணங்கி விடைபெற்றுச் சென்றபின் இராமனுக்கு அகத்தியர், சிறப்பு மிக்க ஆபரணங்களைக் கொடுக்கின்றார். இராமன், இந்த ஆபரணத்தை யார் தந்தனர்? என வினவ அகத்தியர் சொல்கின்றர்:- யான் அமைதியாகத் தவம் செய்வதற்குத் தக்கவிடத்தைத் தேடிய போது சிங்கம் முதலிய விலங்குகளும் பறவைகளும் வாழாததும் மானுடர்களே இல்லாததும் ஆகிய ஒரு தேன் நிறைந்த மலர்ச் சோலையை அடைந்தேன். அந்தக் காட்டில் தாமரை மலராகிய அணையில் அன்னம் தன் பெண் அன்னத்தோடு அன்புடன் உறங்குதற்கு இடமானதும் தன்னுடைய நதிகளைத் தழுவியுள்ள ஆழ்கடல் போன்றதும் ஆகிய பொலிவுள்ள தடாகத்தைக் கண்டேன். அந்தத் தடாகத்தின் பக்கத்தில் யாரும் இல்லாத தூய்மையான ஓர் ஆசிரமத்தைக் கண்டு அதில் இரவு முழுதும் கழித்து, பொழுது விடிந்ததும் அங்கு ஒருபிணம் இருக்கக் கண்டேன். அந்தக் காலை நேரத்தில் அரம்பை மாதர்கள் ஆடிடவும் நிலைபெற்ற பெருந்தவமுடைய முனிவர்கள் சூழ்ந்துவரவும் மாகதர்கள் நெருங்கியிருந்து ஏத்திடவும் தும்புருநாரதர் 'என்னபோ' எனயாவரும் வியந்து பாராட்டும் வண்ணம் எவ்விடத்தும் பாடிடவும் இந்திரன் முதலிய தேவர்கள் போற்றிடவும் விண்ணுலகத்திலிருந்து ஒருமன்னன் சிறந்த தேரின்மேல் இந்த மண்ணுலகத்தில் இறங்கி ஆசிரமத்தைச் சாரவந்து அந்தச் சவத்தினைத் தன் வயிறுற உண்டு பெயர்ந்து அண்மையிலுள்ள பொய்கையின் நீரைக்கையால் மொண்டு குடித்துவிட்டு வாய் பூசித் தேரில் ஏறப் புகும் போது யான் சென்று 'தேவ! இந்தப் பிணத்தை நீ தின்றிடக் காரணம் என்ன? என்பதைச் சொல்லுக' எனக்கேட்க அத்தேவன், சொல்கின்றான்:- வைதருப்ப நாட்டின் மன்னவனாகிய சுகேதன் என்பவனது மூத்தமனைவியின் வயிற்றில் பிறந்தேன். சுவேதை பெற்ற காரணத்தால் சுவேதன் எனப் பெயர் பெற்றேன். என்தந்தை விண்ணுலகடைந்த பின்பு ஆயிரம் ஆண்டுகள் இவ்வுலகத்தை ஆண்டேன். என்தம்பி சுரதனுக்கு என் அரசினை அளித்துவிட்டு அகப்பகையும் புறப்பகையும் அறுத்து இந்த வனத்தில் மூவாயிரம் ஆண்டுகள் மனத்தை ஒருமைப் படுத்தி அரிய தவத்தைச் செய்து பிரமஉலகமடைந்தேன். அடைந்தும் தீர்த்தற்கரிய தாகமும் பசியும் என்னை வருத்தாநிற்கப்

பிரமன் திருவடிகளில் வீழ்ந்து இவற்றைச் சொன்னேன். யான் உண்பது எதனை?என வினவினேன். பிரமன், 'உன் பற்றுள்ளத்தால் இரப்பவர்க்கு இட்டு உண்ணுமல் உன்வயிற்றையே வளர்த்ததனுல் பசி நோய் உன்னைப் பற்றியது. மரங்கள்நிறைந்த அவ்வனத்தில் உன்பிணத்தை நீயே பசிதீரத்தின்ன மாளாது; அதுவளரும். நீ சென்று நாள் தொறும் தின்பாயாளுல் ஒருநாளில் அகத்திய முனிவரைக் காண்பாய்; அப்பொழுது உன்பசியும் தாகமும் போகும் என உரைத்தான்.

அன்றுமுதல் இன்றளவும் அசுத்தமான இப் பிணத்தை தின்று திரிந்தேன். என்பசியைத் தீர்ப்பாயாக! என்று என்னை வேண்டினன். அவன் வேண்டுகோட்கு இரங்கி அவன் பசியைத் தீர்த்தேன். சுவேதனுகிய அத்தேவன் 'உய்ந்தேன்' என்று மகிழ்ந்து இந்த ஆபரணத்தை எனக்குக் கொடுத்து விட்டு விமானமேறிப் போய் விட்டான், என அகத்திய முனிவர் அவ்வாபரணம் வந்த வரலாற்றைக்கூற, இராமன் வியப்பு எய்தி 'இந்த வனத்தில் விலங்கும் பறவையுங்கூட இல்லாதது ஏன்' என வினவுகின்ருன்.

'தண்டன் என்று மனுகுலத்தில் பிறந்த மன்னன் தருமம் தயவு ஒன்றும் இல்லாத கொடியன்; அவன் தன்குல குருவாகிய வெள்ளி தவஞ் செய்து கொண்டிருந்த வனத்தை அடைந்து வண்டுகள் மொய்க்கும் மலர்கள் நிறைந்த சோலையில் உள்ள தவக்குடிலில் சுக்கிரன் மகளைக் கண்டு காமத்தால் தன்வயம் இழந்து கலங்குகின்ற மனமுடையவனுய்ச் சொல்கின்ருன். செந்தாமரை மலர்மேல் வீற்றிருக்கின்ற திருமகளோ? அல்லது தேவர் உலகிலிருந்து இறங்கிவந்த தேவமாதோ? அல்லது மண்ணுலகத்திலேயே பிறந்து வளர்ந்த மணிவிளக்குப் போன்றவளோ? இவள்யாரோ? அறியவியலவில்லையே என்று மனத்தில் துன்பம் நிறைந்தவனுய் அவளை அணுகி, 'எழுதற்கரிய எழிலுடையவளே! உன்னைப்பெற்றவர் பெயரோடு உன்பெயரையும் சொல்லுக' என வினவ, அவள், வெள்ளியின் மகள்; சரை என்பது தன் பெயர் என்பதை அறிவிக்கின்ருள். இதையறிந்தும் தண்டன் அவளைப் புல்ல நெருங்குகின்ருன். அதைக்கண்ட சரை, 'என்தந்தை சீறினுல் ஏழுலகும் வெந்து பொடியாகும். இந்த இடத்தில் நில்லாமல் இப்போதே போய்விடு' என்று கூறவும் அவள்

சொல்லைக் கேளாமல் காமன் கரத்தால் மிகநொந்து வந்து சரையின் கூந்தலைப் பற்றி வலிதிற் புணர்ந்து அங்கு அவன் போய்விட்டான்.

சரை துன்பத்தோடு தவக்குடிலை அடைகின்ருள். தந்தை வெள்ளி மிக்க பரியோடு அங்குவந்து மகள் சரையின் சோர்வு கண்டு 'தூய்மையான சொல்லையுடையவளே! உன்னைத் துன் புறுத்தியவனைச்சொல்' என்று கேட்க, சரை நிகழ்ந்ததைக் கூறு கின்ருள். அவள் சொல்லைக் கேட்டவுடன் பெருங் கோபங் கொண்டு வெள்ளி, என்மகளுக்குத் தீராத் துன்பத்தைத் தந்த வனுகிய தண்டனது வளமிக்கநாடும் தானும் தன்சுற்றத்தோடும் சேனையோடும் வெந்து சாம்பலாய்ப் போக' எனச் சாபம் கொடுக்க எல்லாம் சாம்பலாயின. அவனுடைய நாடுதான் இந்தத் தண்டகம் என்ற காடாகியது. மனிதரும் விலங்கும் பறவையும் இல்லாமல் தவம் செய்கின்ற முனிவர் மட்டும் நெருங்கியிருத்தலால் சனத்தானம் என்ற பெயரையும் பெற்றது என்று அகத்திய முனிவர் கூறினுர்.

அகத்திய முனிவரை வணங்கி வாழ்த்துப் பெற்று இராமன் தன் புட்பகத் தேரில் ஏறிக் கொண்டு அயோத்தி அடைகின்ருன். நகரமக்கள் மகிழ்ந்து எதிர்கொண்டு வரவேற்க நகரில் புகுகின்ருன் : என்பது இப்படலத்துக் கூறப்படும் வரலாருகும்.

## ஒட்டக் கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. வான்மீகத்தில்:- இராமன் ஆட்சியில் தந்தையிருக்க அந்தணச் சிறுவன் இறந்தமைக்குக் காரணம் சொல்கின்ற நாரதர். நான்கு யுகங்களிலும் தவஞ்செய்யுமுரிமை யார்யார்க்கு இருக்கும் என்பதை விவரிக்கின்ருர். சிருதயுகத்தில் தவஞ்செய்யுமுரிமை அந்தணர்க்கு மட்டுமே உண்டு. திரேதாயுகத்தில் அந்தணர்க்கும் அரசர்க்கும் தவஞ்செய்யும் உரிமை உண்டு. துவாபர யுகத்தில் மூன்ரும் வருணத்தவராகிய வைசியரும் தவம் செய்ய உரிமை பெற்றவராகின்றனர். கலியுகத்தில் நான்காம் வருணத்தவராகிய சூத்திரரும் தவஞ்செய்ய உரிமையுண்டு.

முதல், இரண்டு யுகங்களிலும் அந்தணரும் அரசரும் தவஞ் செய்யும் உரிமையுடையவராய் இருந்தனர். இருதிறத்தார்க்கும் சமமான பலனைத்தந்தது. அப்போது மக்கள் அதிகமான வேறு பாட்டைக் காணவில்லை. அப்பொழுது நான்கு வருணத்தார்க்கும் ஆசாரபேதங்களை விதியாய் மேலோர்கள் விதித்தார்கள். மூன்றும் யுகமாகிய துவாபர யுகத்தில் தவம்புரிதல் வைசியர்களுக்கும் உரியதாகிவிடுகின்றது. முதல் மூன்று யுகங்களிலும் முறையே தவம்புரிதல் மூன்று வருணத்தார்க்கும் உரியதாய் விடுகின்றது. இந்த மூன்று யுகங்களில் சூத்திரன்மட்டும் தவம் செய்தற்கு உரியனல்லன். அவன் மேல் மூன்று வருணத்தார்க்கும் பணி செய்தலையே மேற்கொள்ள வேண்டியவன். கலியுகத்தில் சூத்திரனாய்ப் பிறந்தவனும் தவம்புரியும் நிலையுண்டாகலாம். திரேதா யுகத்தில் சூத்திரன் தவஞ்செய்தல் பெரிய குற்றமாகும். "இராம! உன் ஆட்சிக்குட்பட்ட இடத்தில் ஒருசூத்திரன் கடுந்தவம்புரிகின்றான். அக்காரணத்தினால்தான் இந்த அந்தணச் சிறுவன் தந்தையிருக்கவும் அகால மரணம் அடைந்திருக்கின்றான். ஆறிலொரு கடமை பெற்றுக் கொண்டு குடிகளைக் காக்கின்ற அரசன், இத்தகைய பாவமான செயல் தன்னாட்டில் நிகழப்பார்த்திருக்கலாகாது. நுமது நாட்டில் எவ்விடத்து அந்தச் சூத்திரன் தவம்புரிகின்றான் என்பதைத்தேடிக் கண்டு வேண்டிய தண்டனையைச் செய்தருள்க. இங்ஙனம் நீ செய்வாயானால் அந்தச் சிறுவனுக்கு உயிர்ப்பு உண்டாகும். தருமத்தின் உயர்வு விளங்கும். மக்களுக்கு நீண்ட ஆயுள் உளதாம்." என நாரதமுனிவர் இராமனுக்கு விளக்கம் தந்ததாகவுள்ளது.

ஒட்டக் கூத்தர் வருண தருமங்களைப்பற்றி இவ்வளவு விரிவாகக் கூறவில்லை. வருணதருமத்தைமீறி சூத்திரன் தவஞ் செய்கின்றான். அவனைத் தண்டித்தால் இச்சிறுவன் உயிர் பெற்றெழுவான் என்ற கருத்துளது.

2. வான்மீகத்தில்:- அங்கு சம்புவன் தண்டிக்கப்பட்ட இடத்திற்கு வந்திருந்த தேவர்கள் எல்லாம் அகத்திய முனிவரைப் பார்த்து

விட்டுப் போவதாகச் சொல்லி விமானங்களில் சென்று அகத்திய முனிவரின் பூசையைப் பெற்றுக் கொண்டுதம் விண்ணுலகடைந் தார்கள். பின்பு இராமனும் புட்பகத்தில் ஏறிக்கொண்டு அகத்திய முனிவரின் தவக்குடிலை அடைந்ததாக உள்ளது.

ஒட்டக் கூத்தர் அம்முறையையே மாற்றி தேவர்கள் அழைக்க அவர்களோடே இராமன் அகத்தியரைப் பார்த்ததாக வும் பின்பு தேவர்கள் முனிவரின் பூசையைப் பெற்றுக் கொண்டு விண்ணுலகம் சென்றதாகவும் விண்ணவர் போய பின் அகத்திய முனிவர் இராமன் செயலைப் பாராட்டித் தங்க ஆபரணம் கொடுத்த தாகவும் கூறுகின்றார். தேவர்களோடு சேர்ந்து இராமனும் சென்ற தாகக் கூறுவது அவன் அவதார நிலைக்கு ஏற்றதாகவில்லை. வான் மீகத்தில் உள்ள முறையே பொருத்தமாகவுள்ளது.

3. வான்மீகத்தில்:- அகத்திய முனிவரிடம் ஒளிமிக்க ஆபரணத்தைப் பெற்றுக் கொண்ட இராமன், அந்த ஆபரணம் எப்படிக் கிடைத்தது என்ற வரலாற்றை வினவ முனிவர், திரேதா யுகத்தில் நூறு யோசனை தொலைவு விலங்குகளும் பறவைகளும் இல்லாத ஒருகாடு இருந்தது. மனிதர்களையே காணவியல அந்தக் காட்டில் தவம் இயற்றிக் கொண்டிருந்த யான் அந்தக் காட்டினைச் சுற்றிப் பார்ப்பதற்காக எங்கும் அலைந்து திரிந்தேன். அந்தக் காட்டில் பழங்களும் கிழங்குகளும் நிறைந்த உவவளங் களின் அமைப்பை மனத்தில் நினைப்பதற்கே இயலாதிருந்தது.

அந்தக் காட்டினிடையில் ஒருயோசனை அளவு பரப்புடை யதும் அன்னங்களாலும் காரண்டங்களாலும் சக்ரவாகங் களாலும்அழகுபெற்றுத் தாமரை நெய்தல் இவைகளால் நிறை யப்பெற்றுப் பாசியேயில்லாத அழகிய ஒரு பொய்கையைக் கண்டேன். அப்பொய்கையின் அருகில் ஒருதவக்குடில் இருந்தது. அதில் தவமுனிவர் யாருமில்லை. அவ்விடத்தில் கோடைக் காலத்தில் ஓரிரவை யான் கழித்தேன்: என்று கூறுகிறார். இங்குக் காலமும் இடமும் வரையறை செய்து கூறுவது போல ஒட்டக் கூத்தர் கூறவில்லை. பொதுவகையால் மட்டுமே கூறியுள்ளார். நூறு யோசனைப் பரப்புள்ள காட்டினையும் சோலையாகக் கூறியுள்ளார்.

4. வான்மீகத்தில்:- சுவேதன் எனும் மன்னனுடைய வரலாறு கூறும்போது சுவேதன் மூவாயிரம் ஆண்டு கடுந்தவம் செய்து பிரமன் உலகைபெற்றுத் தெய்வநிலையெய்திய பின்னும் பசியும் தாகமும் தன்னை வருத்துவது ஏன்? என்று பிரமனை வினவ பிரமன் சொல்கின்றான். "நீதவஞ் செய்யும் உடம்பினை வெறுக்காமல் அதை நன்கு பாதுகாத்துக்கொண்டே தியானம் செய்தாய். தியானத்தின் பலனை என்னுலகைப் பெற்றாய். ஆனாலும் உடம்பினை வெறுக்காமல் அதனைப் போற்றிக் கொண்டிருந்தமையால் தெய்வ வடிவு பெற்ற பின்னும் பசியும் தாகமும் உன்னை வருத்துகின்றன. நீதவஞ்செய்த விடத்து விட்ட நின்னுடம்பின் தசை நல்லநிலையில் இருக்கின்றது. அதனை யுண்டு அங்குள்ள பொய்கையில் தண்ணீர் குடித்து நின்பசிதாகங்களைப் போக்கிக் கொள்க. தன் பிணத்தைத் தானே தின்னும் இந்த இழிநிலை தீர்வது எப்போது என நீ வினவிறல் நீ நின்பிணத்தைத் தின்னும் போது ஒருநாள் அகத்திய முனிவர் வந்து பார்ப்பார்: அவர் அருளால் அந்தப்பிணம் மறையும்; நின்பசியும் தாகமும் நீங்கும்" எனச் சொல்லி யனுப்பியதாக உள்ளது.

ஒட்டக்கூத்தர், இக்கருத்தைச் சிறிது மாற்றிக்கூறியுள்ளார். சுவேதன் தவத்தால் பிரமஉலகைப் பெற்றும் பசிதாகம் தீராதிருப்பதற்குக் காரணம், சுவேதன் மன்னவனுயிருந்தபோது கொண்டிருந்த பற்றுள்ளமே என விளக்குகின்றார்.

"இரப்போருக் இட்டுணுதேயுள்வயிரும்
பறியைத்தூர்த்து வளர்த்ததனுல் பசிநோய் நின்னைப் பற்றிய
தால்"

எனபிரமன் கூறியதாகக் கூறுகின்றார். இதுவான்மீகத்தோடு வேறுபட்ட கருத்தே ஆயினும் இரப்பவர்க்கு இட்டு உண்ணுத லோபி, தவஞ் செய்து தெய்வவுடம்பு பெற்றவழியும் அந்த லோபத்தால் பாதிக்கப்படுவான் என்ற உண்மையை விளக்குவதாக அமைந்துள்ளது என நிறைவு கொள்ளலாம்.

5. வான் மீகத்தில்:- தண்டன் வரலாறு கூறும்போது வெள்ளியின் மகள் சரை என்பவளை தவவனத்தில் கண்ட தண்டன் என்னும் காமுகன் அவளை வலிதிற் பற்றும் போது சரை. 'என்பால் அன்பிருந்தால் என்தந்தையை அணுகிக் கேளுங்கள். அவர்

விரும்பி அளிக்கலாம். அவர் அளித்த பின் அன்றி என்னைத் தொடலாகாது'' எனத்தடுத்ததாக உள்ளது. ஒட்டக்கூத்தர் இச்சீரிய கருத்தைக் கூறாது விட்டுள்ளார்.

## படலப் பொருள் சிறப்பு

சம்புவன் வதைப்படலத்தில் குழந்தையின் அருமை புலப்படுத்து ஒட்டக் கூத்தர் கூறியுள்ள இடம் சுவைத்துப் படிக்கத்தக்க சிறப்புடையது. தந்தையிருக்க மகன் இறந்தது அரசின் குற்றமே என்ற கருத்தால் முதிய அந்தணனும் அவன் மனைவியும் இறந்த தம் குழந்தையை எடுத்துச் கொண்டு வந்து இராமனுடைய அரண்மனை வாயில் வைத்துக் கொண்டு புலம்பும் தாயின் அன்பு மொழிகளைப் பார்க்கலாம்.

"மணியே! யென்றன் மாசறுசோதி வடிவுக்கோர்
அணியே! யென்றனுருயிரே! ஆரமிழ்தே!

இவ்வாறு தன்மகனின் அருமையைப் புலப்படுத்திய தாய் அக் குழந்தையின் உறுப்புகளில் அணிந்த அணிகலன்களை யெல்லாம், பாதாதிகேசமாக விளக்கிக் கூறுகின்றாள்.

பதங்களி லார்க்கும் பன்மணி யார்க்கும் படியில்லாச்
சதங்கையும் ஒண்பொற்றண்டையுமம் பொன்னரை ஞாணும்
விதம்பல வாகும் ஐம்படையும் மெய்யழ கெல்லாம்
பொதிந்த கழுத்துங்காறையும் அாலாப் புனை பூணும்.
பட்டமும் நெற்றிப் பன்மணி முத்தின் படர்சோதிச
சுட்டியுமம் பொற்றோடு மிலங்கென் றுனையே யோ
எட்டனையும் சார்பில்லவன் நாட்டினிடை வந்தாய்
கட்டிய சுற்றிக் காப்பிட வாராய் களிறேயோ.

என்ற பாடல்களில் சதங்கையும் தண்டையும் அரை ஞாணும் ஐம்படைத்தாலியும் கழுத்துக் காறையும் பிற பொன்னாபரணங்களும், நெற்றிப் பட்டமும் முத்தின் சுட்டியும் பொற்றோடும் குழந்தையின் அணிகளாகக் கூறப்பட்டுள்ளன. சதங்கை என்ற காலணியைச் சொல்லும் போது அதன் இயல்பு விளங்கும்படி பதங்களில் கட்டியிருக்கும் சதங்கை எனவும் பலமணிகளும்

ஆரவாரிக்கும் ஒப்பில்லாச் சதங்கை எனவும் இருபொருள் விளங்க ஆர்க்கும் என்ற சொல்லை ஓரிடத்தும் பெய்துள்ள திறம் கண்டு மகிழ்தற்குரியது.

இப்படியெல்லாம் குழந்தைபால் வைத்த அன்பினால் பலப் பல கூறும் தாய் உலக முழுதாளும் மன்னன் இராமனையும் தன் மனம் போல வைகின்றாள்.

'எட்டனையுஞ் சார்பில்லவன்'

"மண்ணறு சீருமானமுமங்க வசைபூண்டோன்
கண்ணறையன் காருத்தன்.

'வன்றின் சிந்தை மன்னவன்'

என்றெல்லாம் மனம் நொந்து கூறியுள்ளதைக்காணும் போது இராமன் ஆட்சியில் குடிமக்களுக்குள்ள உரிமையை யறிகின்றோம். அரசியலில் தன்னை முழுமையாக ஈடு படுத்திக் கொண்டு நல்லரசன் ஆட்சிக்கு எடுத்துக் காட்டாக விளங்கிய இராமனது ஆட்சியில் இப்படி ஒருபெண்பால் பழிக்கின்ற நிலை எப்படி யுண்டாயிற்று என்பதை நோக்கின், தன் கணவன் இருக்க மகன் இறந்தது, அரசியலில் நேர்ந்த குற்றத்தினால் தான் என அவள் தெளிவாக அறிந்திருந்ததுதான் என்பதும் அத்தெளிவினாலேயே இவ்வாறு துணிந்து இராமனைப் பழித்தாள் என்பதும் அறியலாம். இந்த நிலை கருதியே சிலப்பதிகாரத்தில் சேரன் செங்குட்டுவன் 'பிழையுயிர் எய்தில் பெரும் பேரச்சம்' என்று அரசர் குடியில் பிறந்தோர்க்கு வரும் அச்சத்தை விளக்கியிருத்தல் காணலாம். நாட்டில் எங்கோ ஓரிடத்தில் ஓருயிர் மாண்டால் அது அரசன் காரணத்தால் நிகழ்ந்தது என உலகம் கருதும் என்பது கருத்து.

இறந்த பிள்ளையின் தந்தையாகிய வேதியன் தன்மனைவியின் புலம்பலைக் கேட்டுத் துன்பம் மிக்கவர்ந்து கூறுகின்ற நிலை புத்திர சோகத்தின் உச்சநிலையைக் காட்டுகின்றது. வேதியன் தனக்கு நேர்ந்த துன்பநிலை பிறர்க்கும் வரலாகாது என்ற எண்ணத்தால் சொல்லும் சொற்கள் யாரும் உளங்கொளத்தக்க உயர் சொற்களாகத் திகழ்கின்றன.

"தனக்கு நோய் வேண்டாதான் சந்ததி பெற்றிடா
தொழிக தளர்வுமிக்கு
மனத்து நோய் தான் பெருக மலடனுக்கின்றியாம் படுமிம்
மையலுக்க மில்லை'

எனக் காரணகாரியத்தோடு விளக்குகின்றான். குழந்தை பெறாத மலடனுக்குப் பிள்ளையைப் பெற்றுப் பறிகொடுத்து மனத்து நோய் பெருகக் கலங்கும் இக்கலக்கம் வாராது ஆதலின் 'தனக்குத் துன்பம் வரவேண்டாம் என நினைக்கின்றவன் மகனைப் பெறாதிருப்பானாக' என்று தன் துன்பநிலையைப் புலப்படுத்துகின்றான். மேலும் இந்திரசித்து இறந்து கிடப்பதைக் கண்ட இராவணன் கூறுவது போல்

"எனக்கு நீ செயவிருந்த நீர்க்கடனை யின்னிற்பின்னிருந்து
பிள்ளாய்
உனக்கு நான் செய்வேனோ செய்யேன் காண் உனைத்
தொடர்ந்து வருகின்றேனே" – என்பதும்

'இராமனுக்கே பழியாக விறக்கின்றோ மிருவருமே' என்பதும் வேதியனின் துன்பமிகுதியையும் துணிவையும் காட்டுதல் காணலாம்'

சம்புவனைக் கொன்றது ஏன்?

இந்தத்துன்ப நிலையையுணர்ந்த இராமன் தம்பியரோடு மந்திரிகளையும் அழைத்து இத்துயர் தீர்ப்பது எப்படி என்பதைத் துன்பவுணர்வோடு சிந்திக்கும் பொழுது முனிவர் கூட்டத்துடன் வந்த நாரதமுனிவன் துணிந்து இராமனுக்குச் சொல்கின்ற சொற்கள் சிந்திக்கத்தக்கவை. நால் வருணாச்சிர தருமங்களை முறையாக விளக்கிவிட்டுச் சூத்திரனொருவன் தன் வருணத்திற்கு ஒவ்வாத தவத்தைத் தலைகீழாய் நின்று செய்கின்றான். சூத்திரன் செய்யும் தவத்தால் உண்டான தவறே இந்த அந்தணச்சிறுவன் அகால மரணம் உய்தக்காரணமாயது என்பதை விளக்கிவிட்டு, அவனைத் தண்டித்தால் இந்தப் பிள்ளை உயிர் பெற்றெழுவான் என்றும் கூறினான்.

செய்வதறியாது திகைத்த இராமன் இப்பொழுது நாரத முனிவரின் சொற்களால் தெளிந்து புட்பகத்தேரேறி வடதிசை முதலிய திசைகளில் எல்லாம் தேடி இறுதியில் தென்திசையில் ஒரழகிய பொய்கையின் கரையில் ஒருமரத்தில் வவ்வால் போலத் தலைகீழாய்த் தொங்கிக் கொண்டு தவஞ்செய்வானைப் பார்க்கின்றான். அவனை விளித்து நீ என்ன வருணத்தினைச் சேர்ந்தவன் ?

உண்மையைச் சொல் என்று இராமன் வினவுகின்றான். தவஞ்செய்வோன் "யான் சூத்திர வருணத்தில் பிறந்தவன்; சம்புவன் என்பது என்பெயர். இவ்வுடம்போடு சுவர்க்கம் புகும் எண்ணத்தால் இத்தவம் செய்கின்றேன்" என்கின்றான். உடனே இராமன் வாளை உறையிலிருந்து உருவி அவன் தலையை வெட்டி வீழ்த்துகின்றான். அங்கு இறந்த பிள்ளை எழுந்துவிடுகின்றான்.

இது பொருத்தமுடைய நிகழ்ச்சிதானா? வருணங்களின் தருமத்தை மீறிச்சூத்திரன் தவஞ் செய்தது பிழையாகுமோ? பிறக்கும் பொழுது எல்லோரும் சூத்திரர்களே என்பதும் பின்பு அவரவர்கள் செய்யும் செயல்களால் வருணம் புலனாகின்றது என்பதும் பிறக்கும்போதே யாரும் அந்தணனாகப் பிறப்பதில்லை என்பதும் வேதமுடிதபன்றோ அந்தணர் குலத்தில் பிறந்தவன் செயலால் வணிகன் ஆகலாம். மண்ணியல் சிறுதேரில் (மிருச்ச கடிகாவில்) சாருதத்தன் என்ற. அந்தணன் செயலால் வணிக னாகமாறியதை அறிகின்றோம். அரசனாக இருந்த கௌசிகன் தவத்தால் அந்தணன் ஆகியுள்ளான். வேதங்களும் இம்முறை யையே கூறுகின்றன. சூத்திரனாக உள்ள சம்புவன் தவம் செய் தமையால் யார்க்கும் தீங்கு செய்யவில்லையே. அவனுயிர்சுவர்க்கம் பெற உடம்பை வருத்தித்தவஞ் செய்தல் பிழையாகுமா?

இராமன் சம்புவனை விசாரித்து அறிந்த பின் இந்தத்தவம் 'இந்தத்திரேதாயுகத்தில் சூத்திர வருணத்திற்கு ஏலாதது. நீ தவத்தை விட்டுவிடு' எனக் கூறியிருந்தாலும் குற்றமில்லை. தவம் செய்வது கொலையால் தண்டித்தற்குரிய குற்றமாகுமா? என்று சிந்திக்கவேண்டியுளது. கலியுகமாக இருந்தால் தவம்புரிதல் சூத்திரர்க்கும் ஆகும் என்பது நாரதமுனிவரின் விளக்கம். யுக மாற்றத்தால் இப்படித் தவம் புரிந்த புண்ணியச் செயல் கொலை யால் தண்டித்தற்குரிய பாவச் செயலாயிற்றே என்று எண்ணி இரங்க வேண்டியுளது. இப்படி இரங்குவதும் கலியுகத்தின் செயல் போலும்.

---

# 14. சம்புவன் வதைப் படலம்

## சத்துருக்கன் மதுபுரியை விட்டுப் புறப்பட்டு வான்மீகியின் தவக்குடிலை அடைதல்

### வேறு

903 அன்னதன் மையனு யாறிரண் டாண்டவ்
வணிநக ரரசுவீற் றிருந்து
தன்னெடும் படையை யங்குவைத் ததற்பின்
றானையுந் தலைவருந் தானும்
மன்னவ னிராமன் மலரடி பணிவான்
வல்வினை யெனும்விலங் கறுத்து
நன்னெறி கண்ட காட்சிவான் மீகி
நலங்கொளாச் சிரமத்தை நண்ணி.

அன்ன தன்மையனாய் ஆறிரண்டு ஆண்டு அவ் அணிநகர் அரசு வீற்றிருந்து
தன்நெடும்படையை அங்குவைத்ததன்பின் தானையும் தலைவரும் தானும்
மன்னவன் இராமன் மலரடி பணிவான், வல்வினை எனும் விலங்கு அறுத்து,
நன்நெறி கண்ட காட்சி வான்மீகி நலங்கொள் ஆச்சிரமத்தை நண்ணி.

பொ: அந்தத் தன்மையனாய் பன்னிரண்டு ஆண்டுகள்வரையில் அந்த மதுநகரில் அரசனாக வீற்றிருந்து, தனது பெரும்படையை ஆட்சியில் அங்கு நிலைபெற வைத்துவிட்டுப் புன்பு தனக்கேயுரிய சிறிய சேனையும் தலைமையாகப் பொருந்திய தானுமாக, தனக்கு மன்னனாகிய இராமனுடைய தாமரை மலர்போன்ற திருவடிகளைப் பணியும் பொருட்டு, வலிய இருவினைகளாகிய விலங்கினை அறுத்து விட்டு வீட்டு நெறியைக் கண்ட அறிவுக் காட்சியனாகிய வான்மீகியின் நலன் பொருந்திய தவக்குடிலை அடைந்து.

கு: குளகம். பன்னிரண்டு ஆண்டுகள் என்பது ஒருவன் ஒரு பொருளிடம் தனக்கு உரிமை பெறுதற்குரிய கால அளவு ஆதலின் சத்துருக்கன் வென்று கொண்ட மதுபுரியில் பன்னிரண்டு ஆண்டுகள் ஆட்சி செலுத்தி, அது தனக்கேயுரிமையுடையது என்பதை

நிறுவிய பின்பு,தன் பெரும்படையை அவ்வாட்சிப் பொறுப்பில் நிறுத்திவிட்டுத் தன் சிறிய சேனையோடு தன் மன்னவனாகிய இராமனைக் கண்டு வணங்க அயோத்திக்குத் திரும்பும் வழியில் வான்மீகியின் தவக்குடிலை அடைந்து என்றவாறு. இராமன் அனுமதி பெற்றுச் சென்று இலவணனை வென்று மதுபுரத்தை ஆண்ட சத்துருக்கனுக்கு மன்னவன் இராமனேயாதலின் 'மன்னவன் இராமன்' என்றார். நல்வினையும் உயிர்க்குத் தளையே யாதலின் அதனையும் அடக்கி 'வல்வினையெனும் விலங்கறுத்து' என்றார். இது வான்மீகிக்கு அடை. இருவினைகளை இறைவன் அருளால் நீக்கிவிட்டு, முத்திக்கு வழியாகிய ஞானநெறியைக் கண்டு அந்த ஞானநெறியில் ஒழுகும் ஞானி வான்மீகி என்றவாறு. நன்னெறி என்பது நன்மையாக விளங்கும் வீட்டுக்குரிய வழி என்றவாறு. கண்ட என்பது அந்நெறியே தனக்குரிய நெறியென்று கண்டுகொண்ட என்னும் பொருளது. காட்சி என்பது ஞானக்காட்சியினை. நண்ணி, கேட்டு, நண்ணி பணிந்தான் என வருஞ் செய்யுளில் முடியும். (1)

## சத்துருக்கன் அயோத்தியை அடைந்து இராமனைப் பணிதல்

904 வண்ணவொண் சிலைக்கை யிளையவன் றன்னை
வரன்முறை பூசித்து நாங்கள்
எண்ணிய வெண்ண முடித்தனை யென்ன
வெழின்முனி யியம்பியவ் விரவில்
புண்ணிய கதைக ளுரைத்தவை கேட்டுப்
புலர்ந்தபின் பூம்பொழி லயோத்தி
நண்ணி நன்னகரி யெதிர்கொளப் புகுந்து
நாயகன் றிருவடி பணிந்தான்.

வண்ண ஒண்சிலைக்கை இளையவன்தன்னை வரன்முறை பூசித்து, நாங்கள்
எண்ணிய எண்ணம் முடித்தனைஎன்ன எழில்முனி இயம்பி அவ் விரவில்

புண்ணிய கதைகள் உரைத்தன கேட்டுப் புலர்ந்தபின் பூம்பொழில்
அயோத்தி
நண்ணி, நல்நகரி எதிர்கொளப் புகுந்து நாயகன் திருவடி
பணிந்தான்

பொ: வண்ணம்பூசப்பெற்ற ஒளிவாய்ந்த வில்லையேந்திய கையையுடைய இராமனுக்கு இளையவனாகிய தன்னை, மேலான முறையில் உபசரித்து, 'நாங்கள் எண்ணிய எண்ணத்தை முடித்து விட்டாய்,' என்று அழகிய வான்மீகமுனிவன் சொல்லிவிட்டு அந்த இரவில் அவர் சொல்லிய புண்ணிய கதைகளைக் கேட்டு விட்டு விடிந்தபின்பு, மலர்ப்பொழில்கள் சூழ்ந்த அயோத்தி நகரத்தை அடைந்து அந்த நகரம் எதிர்கொள்ளப் புகுந்து தனக்குத் தலைவனாகிய இராமன் திருவடிகளைப் பணிந்தான்.

கு: இளையவன் என்றது இராமனுக்குத் தம்பி என்னும் கருத்தினது. சிலை-வில்; வில்லேந்திய கையையுடைய சத்துருக்கன் என்றவாறு. இளையவனாகிய தன்னைப் பூசித்து இயம்பி, இரவில் உரைத்தன கதைகள்கேட்டுப்' புலர்ந்தபின் அயோத்தி நண்ணிப் புகுந்து நாயகன் திருவடி பணிந்தான் என்க. பூசித்து இயம்பி உரைத்தன என்புள வான்மீகியின் வினைகள். கேட்டு (ப் புலர்ந்த பின் அயோத்தி) நண்ணிப் புகுந்து பணிந்தான் என்பன சத்துருக்கன் வினைகள். உரைத்தன வாகிய புண்ணிய கதைகள் என இயையும். (2)

## இராமன் சத்துருக்கனைத் தழுவிப் பாராட்டுதல்

905 தன்றிரு வடிதாழ் தம்பியை யெடுத்துத்
தடக்கையா லுயிருறத் தழுவி
வென்றிகொள் வீரன் விளம்புவா னுறங்கா
வில்லிதன் றனுவலி யாலே
யன்றிரா வணற்கொன் றரும்பகை யறுத்தே
னலைகடல் சூழுல குய்ய
இன்றில வணற்கொன் றிப்பகை யுன்னு
லிறுத்தனெ னினிப்பகை யிலையே.

தன்திருவடி தாழ்தம்பியை எடுத்துத் தடக்கையால் உயிர்உறத் தழுவி
வென்றிகொள் வீரன் விளம்புவான்:- உறங்காவில்லிதன் தனு வலியாலே
அன்று இராவணன் கொன்று அரும்பகை அறுத்தேன்; அலைகடல் சூழ்உலகுஉய்ய,
இன்று இலவணற்கொன்று இப்பகை உன்னால் இறுத்தனென்-- இனிப்பகை இலையே.

பொ: தன் திருவடியை வணங்கிய தம்பி சத்துருக்கனைப் பெரிய கைகளால் தூக்கி உயிர்பொருந்தத் தழுவிக் கொண்டு, வெற்றி கொண்ட வீரன் சொல்லுகின்றான்: உறங்காத வில்லியாகிய இலக்குவனாலே அன்று இராவணனைக் கொன்று அரிய பகையை அறுத்தேன். இன்று உன்னால் அலைகடல் சூழ்ந்த நிலவுலகு உய்ய இலவணனைக்கொன்று இந்தப்பகையை முடித்தேன்; ஆதலால் இனிப் பகை இல்லை.

கு: தடக்கையால் எடுத்து என இயையும். தடக்கை-வளைந்த கை எனலும் ஆம். எடுக்குங்கால் கைகள் வளைதல் இயல்புதானே! தழுவுதல் உடம்பேயாயினும் அன்பின் மிகுதியால் உயிரும் பொருந்தத் தழுவினான் இராமன் என்க. வென்றிகொள் வீரன் என்றது இராமனை. இலவணனை வென்றவன் சத்துருக்கனே ஆயினும் அவ்வெற்றி ஏவுதல் கருத்தாவாகிய இராமனையே சாரும். ஆதலின் வென்றிகொள் வீரன் என்று இங்கு இராமனைச் சிறப்பித்தவாறு. அங்ஙனமன்றிப் பழைய இலங்கை வெற்றியையே நினைந்து இங்ஙனம் கூறினான் எனலும் ஆம். உறங்கவில்லை என்றது இலக்குவனை. பதினான்காண்டு உறங்காதிருந்தான் இலக்குவன் என்பதை உத்தரகாண்டத்தால் அறியலாம். இராமன் இலக்குவனால் இராவணனையும் சத்துருக்கனால் இலவணனையும் வென்றான்; என்றது சிற்றன்னையாகிய சுமந்திரையின் மக்களே தன் வெற்றிக்குக் காரணம் என்பது புலப்படுத்தியவாறு. இறுத்தல்-முடித்தல், உன்னால் இலவணற்கொன்று இப்பகை இறுத்தனன் என இயையும். (3)

## இராமன் சத்துருக்கனை மதுகைநகர்க்குப் போக்குதல்

906 இன்னன பலவு மிளையவன் வலியே
யிராப்பக லினிதுகொண் டாடித்
தன்னருள் பொழியுந் தாமரைக் கண்ணன்
றம்பிசத் துருக்கனை நோக்கி
நின்னெடும்படையு மளவிலா நிதியு
மங்குவைத் திங்குநீ யிருத்தல்
நன்னெறி யன்றின் றென்றுல கெவைக்கு
நாயகன் போகென நவின்றான்.

இன்னன பலவும் இளையவன் வலியே இராப்பகல் இனிது
கொண்டாடித்
தன்னருள் பொழியும் தாமரைக் கண்ணன், தம்பி சத்துருக்கனை
நோக்கி,
''நின்னெடும்படையும் அளவு இலா நிதியும் அங்குவைத்து
இங்கு நீ இருத்தல்
நன்னெறி அன்று இன்று என்று' 'உலகுஎவைக்கும் நாயகன்
போகென நவின்றான்.

பொ: இதுபோன்ற பலவற்றையும் சொல்லித் தம்பி சத்துருக்கன் வலிமையையே இரவும் பகலும் இனிதாகக் கொண்டாடி விட்டு உலகங்கட்குத் தலைவனும் தனது அருளைப் பொழிதற்கு இடமாகக் கொண்ட தாமரை மலர்போன்ற கண்ணையுடையவனுமாகிய இராமன், தன் தம்பி சத்துருக்கனைப் பார்த்து, 'நின் பெரிய சேனையையும் அளவு இல்லாத செல்வத்தையும் அந்த மதுபுரியில் வைத்துவிட்டு, இங்குக் காலம் தாழ்த்திருத்தல் நல்ல நெறியன்று; என்றும் இன்று போவாயாக என்றும் சொன்னான்.

கு: உலகெவைக்கு நாயகன்—தன்னருள் பொழியும் தாமரைக் கண்ணன், சத்துருக்கனை நோக்கி, 'நின்னெடும்படையும் நிதியும் அங்கு வைத்து நீ, இங்கிருத்தல் நன்னெறியன்று என்று இன்று போகென, நவின்றான் என இயையும். என்று, என்பன எண்ணிடைச் சொற்கள். என்றும் எனவும் நவின்றான் என்க.

ஈரிடத்தும் உம்மை விகாரத்தால் தொக்கது. உலகெவைக்கும் நாயகனுதலின் மதுபுரி மன்னனின்றியிருத்தலைப் பொருளாய் இங்ஙனம் சொன்னான் என்னும் கருத்துப் புலப்பட "உலகெவைக்கும் நாயகன்'' என்றார். (4)

## சத்துருக்கன் இராமன் கட்டளைப்படி மதுகைநகர் புகுதல்

907 தேனகு துளபத் தார்திக ழண்ணல்
செப்பிய சென்னிமேற் சேர்த்தி
மானபூ டணனை வலஞ்செய்து பணிந்து
மற்றைமுன் னோரையும் வணங்கி
ஆனக முரச மாதிய முழங்க வடற்
பெருந் தானைதற் சூழ
வானவர் கோமான் மாநக ரொக்கு
மதுகைமா நகரியுட் புக்கான்.

தேன்நகு துளபத்தார் திகழ்அண்ணல் செப்பிய சென்னிமேற் சேர்த்தி,
மானபூடணனை வலம் செய்து பணிந்து மற்றைமுன்னோரையும் வணங்கி,
ஆனகமுரசம் ஆதிய முழுங்க, அடல் பெருந்தானை தற்சூழ,
வானவர் கோமான் மாநகர் ஒக்கும் மதுகை மாநகரியுள் புக்கான்.

பொ: தேன் விளங்குகின்ற துளபமாலை அணிந்த விளக்க மிக்க இராமன் சொல்லியவற்றைத் தலைமேற் கொண்டு, மானத்தையே அணிகலனாகக் கொண்டவனாகிய அந்த இராமனை வலம் கொண்டு வணங்கி, மற்றைய அண்ணன் மாரையும் வணங்கிக் கொண்டு, பெரிய முரசம் முதலிய வாத்தியங்கள் முழங்கவும், வலிய பெரிய சேனை தன்னைச் சூழ்ந்து வரவும், இந்திரனுடைய அமராவதிநகர் போன்ற மதுகைமாநகர்க்குள் சத்துருக்கன் புகுந்தான்.

கு: 'சத்துருக்கன்' தோன்றா எழுவாயாக வருவிக்கப் பட்டது. 'தேனகு துளபத்தார்திகழ் அண்ணல்' என்றதும், 'மானபூடணன்' என்றதும், இராமனை. 'செப்பிய' என்பது வினையாலணையும் பெயராய்ச் செப்பியவற்றை என்ற பொருள் தந்தது. 'சென்னிமேற்சேர்த்தி' என்றது, செப்பியவற்றிற்கு உடன்பட்டு என்னும் கருத்தினது. தலைமேற் கொண்டு என்றவாறு. பிறிதணி வேண்டாது இராமன் மானத்தையே அணியாகக் கொண்டவன் என்பார், மானபூடணனை எனஅர். பூஷணம் என்னும் வடசொல் பூடணம் எனத் திரிந்து வந்தது. மற்றை முன்னோரை என்றது, பரதனையும், இலக்குவனையும். அடல்-வலிமை. 'வானவர் கோமான் மாநகர்' என்றது, அமராவதி என்னும் பொன்னகரினை. சத்துருக்கன்' சேர்த்தி, வலஞ்செய்து, பணிந்து, வணங்கி, முழங்க, சூழ, மதுகைமா நகரியுள் புக்கான் என இயையும். (5)

## இராமன் அரண்மனை வாயிலில் அந்தணர் அழுகை

908 இளையவ னேக விராகவ னயோத்தி
யிருந்தர சாள்கின்ற வேல்லை
விளைபெரு மூப்பின் வெண்ணரைத்
தலையோர் வேதியன்றாரத்தி னோடும்
வளர்பெருந் துயரான் மரித்ததன மகனை
மடியிலே வைத்துயிர்க் குலெல்லாம்
களைகணு யுள்ள காவலன் கோயில்
வாயிலிற் கதறிடுங் காலை.

இளையவன் ஏக இராகவன் அயோத்தி இருந்து அரசு ஆள்கின்ற ஏல்லை,
விளைபெரு மூப்பின் வெள்நரைத்தலை ஓர் வேதியன், தாரத்தினோடும்,
வளர்பெரும் துயரான் மரித்ததன் மகனை மடியிலே வைத்து உயிர்க்குஎல்லாம்
களைகணுய் உள்ள காவலன் கோயில் வாயிலில் கதறிடும் காலை

பொ: தன் இளையவனாகிய சத்துருக்கன் மதுகை நகர்க்குச் செல்ல, இராமன் அயோத்தியில் இருந்து அரசாள்கின்ற பொழுது, முதிர்ந்த பெரிய முதுமையினால் வெள்ளிதாய் நரைத்த தலையை யுடைய ஓர் வேதியன், தன் மனைவியோடு வளர்ந்த பெரிய துயரத்தையுடையவனாய் இறந்த தன் மகனை மடியில் வளர்த்திக் கொண்டு, உயிர்கட்கெல்லாம் ஆதரவாக உள்ள காவலனாகிய இராமனது அரண்மனை வாயிலில் கதறி அழும்போது.

கு: குளகம். கதறிநிங்காலை மடவாள் இவை இவை விளம்பும் என வரும்செய்யுளில் முடியும். ஏல்வை-பொழுது. மூப்பினால் நரைத்தலையுற்ற ஓர் வேதியன் என்க. வேதியன்-வேதம் ஓதும் பார்ப்பான். வெண்ணரை என்றது மீமிசைச்சொல். வெண்மை யெனினும் நரையெனினும் ஒக்கும். தாரம்-மனைவி. மரித்தல்-இறத்தல். வளர் பெருந்துயரால் என்றது தந்தையிருக்க மக னிறத்தல் நிகழக்கூடாத நிகழ்ச்சி யாதலின் அது பற்றி வளர்ந்த பெருந்துயர் என்றவாறு. மடியிலே வைத்தல் என்றது தரையில் அமர்ந்த நிலையில் தொடைமிசை கிடத்துதல். களைகண்-ஆதரவு. காவலன் என்றது இராமனை. உயிர்க்கெல்லாம் களைகணாய் உள்ளவன் காவலனே ஆதலின் முறையின்றி யிறந்த தன்மகனை அக்காவலனது கோயில் வாயிலில் வைத்துக் கதறலானான். (6)

## அந்தணன் மனைவி கதறியழுதல்

909 மைந்தனை யிழந்து மனமறுக் குற்று
மயங்கிய மறையவன் பாரி
இந்திரி யங்கள் தன்னிலை கலங்கி
யிறந்தன எிவளென மடவார்
சிந்தைவெந் துயரா னெந்துகை குலைப்பச்
சேயிழை யொருவகை தெளிந்து
வெந்துய ராற்ற தேயுடல் வெதும்பி
வெய்துயிர்த் திவையிவை விளம்பும்.

மைந்தனை யிழந்து மனம் மறுக்குற்று மயங்கிய மறையவன் பாரி
'இந்திரியங்கள் தன்னிலை கலங்கி இறந்தனள் இவள்என' மடவார்,
சிந்தை வெந்துயரால் நொந்து கைகுலைப்பச் சேயிழை ஒருவகை
தெளிந்து
வெந்துயர் ஆற்றுதே உடல் வெதும்பி வெய்து உயிர்த்து, இவை
இவை விளம்பும்.

பொ: தன்மகனை இழந்து மனம் கலங்கி மயக்கமுற்ற வேதியனின் மனைவி, கண் முதலிய ஐந்து பொறிகளும் தத்தம் நிலையினின்றும் கலங்கியதால் இவள் இறந்தனள் என்றுகண்ட பெண்டிர்கள் சிந்தையில் தோன்றிய கொடிய துயரால் நொந்து கை அசைத்துக் குறிப்புக்காட்டப் பின்பு, செம்மையான அணி கலன்களை அணிந்த அந்தப் பார்ப்பனி ஒருவகையாகத் தெளி வடைந்து, கொடிய துயரைப் பொறுக்க முடியாமல் உடல் வெதும்பி வெப்பமாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டு இவ்விவற்றைச் சொல்லுவாள்.

கு:- பாரி-மனைவி. மயங்கியபாரி என இயையும். மறையவன் என்பது பாரிக்கு அடையாக இடைநின்றது. இந்திரியங்கள் என்றது, மெய்வாய் கண் மூக்குச் செவி என்ற அறிதற்கருவி யாகிய ஐந்தினையும். தன்னிலை கலங்குதலாவது, தத்தமக்குரிய புலங்களைக் கொள்ளாமை:- கண் ஒன்றையும் காணுமை, செவி யொன்றையும் கேளாமை முதலியன. "புலனைந்தும் பொறி கலங்கி நெறிமயங்கி" என்பது தேவாரம். கலங்கி என்பது கலங்கியதால் எனக் காரணப் பொருளில் வந்த வினையெச்சம். அப்பார்ப் பனியைக் கண்ட மடவார் 'இறந்தனள் இவள்,' என்று கருதி, வெந்துயரால் சிந்தை நொந்து கைகுலைப்ப என்க. கை குலைத்தல் ஆவது, இனிப் பயனில்லை என்றும் குறிப்புத் தோன்ற கையசைப்பது. சேயிழை என்பது செம்மையான அணிகலன்களை அணிந்த பார்ப்பனி என்று பொருள்பட்டுப் பண்புத்தொகை புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாக நின்றது. வெய்துயிர்த்தல்-வெப்பமாகப் பெருமூச்சு விடுதல். இது பெருந்துன்ப நிலையையுணர்த்தும் அறிகுறியாகும். (7)

## பார்ப்பனி சொல்லிப் புலம்பியது
### வேறு

910 மணியே யென்றன் மாசறு
சோதி வடிவுக்கோர்
அணியே யென்ற னுருயி
ரேயென் னழகாவுன்
பணியே திந்நா ளேக
வுனக்குப் பழிபாராய்
பிணியே தந்தா யீங்கிது
வோநான் பெறுபேறே

மணியே! என்தன் மாசறு சோதி! வடிவுக்கு ஒர்
அணியே! என்தன் ஆர்உயிரே! என் அழகா! உன்
பணி ஏது இந்நாள் ஏக உனக்குப் பழிபாராய்;
பிணியே தந்தாய்; ஈங்கு இதுவோ நான் பெறு பேறே?

பொ: மாணிக்கமே! எனது குற்றமற்ற சோதியே; வடிவுக்கு ஒரு அணிகலன் போன்றவனே! எனது அரிய உயிரே! என் அழகனே! இந்த நாளில் செல்ல உன் பணி எதுவோ? உனக்கு வரும் பழியைப் பாராயாய் எனக்கு நோயைத் தந்தாய், இவ்விடத்து நான் பெறும் பேறு இது தானே?

கு: குலமணியாய் வந்து பிறந்தவன் என்பாள் 'மணியே' என்றும் தனக்கு விளக்கமாகத் தோன்றினவன் என்பாள். "மாசறுசோதி" என்றும், வடிவுடைய குழந்தைகளுக்கெல்லாம் ஓர் அணிகலன் "போன்றவள் என்பாள், 'வடிவுக்கோர் அணியே' என்றும் என் உயிரினும் சிறந்தாய் என்பாள். 'ஆருயிரே' என்றும் என் பொலிவிற்கு காரணமானவன் என்பாள், "என்அழகா" என்றும் தந்தையிருக்க இளமையில் செல்லத்தக்க பணிதான் உண்டோ என்பாள், 'உன்பணியேது இந்நாளேக' என்றும், 'பெற்றதாய்க்குப் பிரிவுநோய் தருவதால் உனக்கு வரும்பழியைப் பாராமல் பிணி தந்தாய்' என்பாள், உனக்குப் பழி பாராய் பிணியே தந்தாய், என்றும் உன்னைப் பெற்றதால் யான் பெறும் பேறு இத் துன்பந்தானே? என்பாள். ஈங்கு இதுவோ நான் பெறு பேறே என்றும் கூறினள். 'மடவாள் தனக்கு விளக்கம் தகைசால்

புதல்வர்' (நான்மணிக் கடிகை) என்பது பற்றித் தன் மகனை 'மாசறு சோதி' என்று குறித்தாள். தந்தையிருக்கவும் மகன் இளமையில் இறத்தல் அங்கு விரைந்து செய்ய வேண்டிய பணியுளது போலும் என்றவாறு. பிணி என்றது, பிரிவாற்றாமை யாகிய நோயை. பிள்ளையைப் பெற்றதால் ஒரு தாய் பெறும் பேறு இருமையுலகத்தும் இன்பமாக இருக்கவும் யான் உன்னைப் பெற்றதால் பெறும் பேறு இத்துன்பந்தானோ என்று புலம்பிய வாறு.

(8)

## இதுவுமது

911 முன்னைச் சன்மத் திட்டுடை
யேனாய் முதல்வா நான்
உன்னைப் பெற்றுப் போற்றி
வளர்த்தின் றுனை விட்டேன்
என்னைப் போலப் பாவிக
ளுண்டோ வினையில்லாய்
பொன்னைப் பெற்றுத் தப்ப
முடித்தேன் பொறியற்றேன்.

முன்னைச் சன்மத்து இட்டுடையேனாய் முதல்வா! நான்
உன்னைப் பெற்றுப் போற்றி வளர்த்து இன்று உனைவிட்டேன்;
என்னைபோலப் பாவிகள் உண்டோ? இணைஇல்லாய்!
பொன்னைப் பெற்றுத் தப்ப முடித்தேன், பொறி அற்றேன்.

பொ: என்குலமுதல்வா! முன்னைப் பிறவியில் ஏற்பவர்க்கு இட்டு அப்புண்ணியத்தை யுடையேனாய் உன்னைப் பிள்ளையாகப் பெற்றுப் போற்றி வளர்த்துவிட்டு, இன்றைக்கு (அப்புண்ணியம் அற்றமையால்) உன்னை இறக்க விட்டுவிட்டேன். இணையில்லா தவனே! என்னைப் போலப் பாவிகள் உலகத்து உண்டோ? அறிவற்றவளாகிய யான் பொன்னைப் பெற்றுவைத்தும் அதை இறுக்கமாக முடித்துப் போற்றாமல் அது தப்பிப் போமாறு தளர முடித்துவிட்டேனே!

கு: சன்மம்-பிறப்பு, வடசொல். இட்டுடையேன் என்றது ஏற்பவர்க்கிட்டு அதன் பயனுய புண்ணியத்தையுடையேனுய் என்றவாறு. உன்னைப் பெறுதற்கும் சிலநாள் போற்றி வளர்த்தற்கும் காரணம் யான் முன்னைப் பிறப்பில் செய்த புண்ணியமே என்றவாறு. பெற்றும் வளர்த்தும் போற்ற இருந்த புண்ணியம் இன்று இல்லையாயது என்பாள், இன்று உனை விட்டேன் என்றுள். பெறுதற்கரிய பொன்னைப் பெற்று வைத்தும் அதைப் பாதுகாத்து முடிக்காமல் அது நழுவி விழுமாறு தப்பமுடித்தவர் போல யான் பெறுதற்கரிய உன்னைப் பெற்றும் பாதுகாக்கும் திறமில்லாமல் இன்று விட்டு விட்டேனே என்று பிறிது மொழிதலணிபடக் கூறியவாறு. பொறி-அறிவு. அறிவிருந்தால் அங்ஙனம் செய்யமாட்டேன் என்றவாறு (9)

## குழந்தையின் அணிகலன்கள்

912 பதங்களி லார்க்கும் பன்மணி
யார்க்கும் படியில்லாச்
சதங்கையு மொண்பொற் றண்டையு
மம்பொன் னரைஞாணும்
விதம்பல வாகு மைம்படை
யும்மெய் யழகெல்லாம்
பொதிந்த கழுத்தும் காறையு
மல்லாப் புனை பூணும்.

பதங்களில் ஆர்க்கும் பன்மணி ஆர்க்கும் படி இல்லாச்
சதங்கையும், ஒண்பொன் தண்டையும், அம்பொன் அரை ஞாணும்,
விதம்பல ஆகும் ஐம்படையும் மெய் அழகு எல்லாம்
பொதிந்த கழுத்தும் காறையும் அல்லாப்புனை பூணும்.

பொ: பாதங்களில் கட்டியிருக்கும் பல மணிகள் ஆரவாரிக்கும் ஒப்பில்லாத சதங்கையும் ஒளிவாய்ந்த பொன்னுல் செய்த தண்டை என்னும் அணியும் அழகிய பொன்னுல் செய்யப்பட்ட அரைஞாணும் பலவகையாகச் செய்யப்பட்ட ஐம்படைத் தாலியும்

உடம்பின் அழகெல்லாம் நிறைந்துள்ள கழுத்தும் அதில் அணிந்த காறை என்ற அணியும் இவையல்லாத அழகிய பொன்னுல் புனைந்த மற்றைய ஆபரணங்களும்.

கு: குளகம். பதம்-பாதம். ஆர்க்கும் என்ற சொல் இருமுறை இருவகைப் பொருளில் மடக்காக அமைந்துள்ளது. 'பதங்களில் ஆர்க்கும்' என்புழி ஆர்த்தல், கட்டுதல் என்னும் பொருளிலும், 'பன்மணி ஆர்க்கும்' என்புழி ஆர்த்தல் ஆரவாரித்தல் என்ற பொருளிலும் வழங்கப்பட்டுள்ளது. பதங்களில் ஆர்க்கும் சதங்கை, பன்மணி ஆர்க்கும் சதங்கை, படியில்லாச் சதங்கை எனத் தனித் தனியே சதங்கைக்கு அடையாய் நின்றன. படி-ஒப்பு. தண்டை என்பதும் சதங்கை போலக் காலில் அணியும் அணியாகும். அரைஞாண் அரையில் கட்டும் பொன்னுல் ஆய கயிறு. ஐம்படை என்றது, ஐம்படைத் தாலியை. சங்கு, சக்கரம் வில் கதை வாள் என்ற திருமாலின் ஐந்து வகைப் படைகள் வடிவாகச் செய்யப் பட்ட பொன்னுலியைக் குழந்தைகளின் பாதுகாப்புக்காக மார்பில் அணியும் ஒரு வகை அணி. 'தாலியைம் படைத்தழுவு மார்பிடை (கம்பர். பால. நகரப்.) என வருதல் காணலாம். இவ்வாறு ஐந்து விதமாகச் செய்யப்பட்டிருத்தல் நோக்கி 'விதம்பலவாகும் ஐம்படை'என்ருர். பலவிதமாகும் என மாற்றுக. கழுத்தின் அமைப்பில் உடம்பின் அழகெல்லாம் அமைந்துள்ளமை கருதி மெய்யழகெல்லாம் பொதிந்த கழுத்தும் என்ருர். காறை என்றது பொன்னுல் செய்யபட்டுக் கழுத்தில் அணியும் அணிகலன் மற்றைய அணிகலன்களையெல்லாம் தொகுத்து, 'அல்லாப் புனைபூணும்' எனக் கூறியுள்ளார். (10)

## இதுவுமது

913 பட்டமும் நெற்றிப் பன்மணி
முத்தின் படர்சோதிச்
சுட்டியு மம்பொற் ருேடு
மிலங்கென் றுனையேயோ

எட்டனை யுஞ்சார் பில்லவ
னாட்டி னிடை வந்தாய்
சுட்டிய சுற்றிக் காப்பிட
வாராய் களிறேயோ.

யட்டமும் நெற்றிப் பல்மணிமுத்தின் படர்சோதிச்
சுட்டியும், அம்பொன்தோடும், இலங்கு என் துணையேயோ!
எட்டனையும் சார்பு இல்லவன் நாட்டினிடை வந்தாய்!
சுட்டிய சுற்றிக் காப்பிட வாராய்! களிறேயோ!

பொ: நெற்றிப்பட்டமும், நெற்றியில் தொங்கும் பலமணிகளாலும் முத்தினாலும் செய்யப்பட்டுப் படர்கின்ற ஒளியையுடைய சுட்டியும், அழகிய பொன்னாலியன்றதோடும் அணிந்து விளங்கும் என் துணையே! எள்ளளவும் ஒருபக்கம் சாராமல் நடுவு நின்று முறை செய்யும் இராமன் ஆளும் நாட்டில் பிறந்தவனே! பெரியோர்களால் சுட்டப் பெற்ற மஞ்சள் நீர் முதலியவற்றை உனக்குச் சுற்றி அதிலிருந்து சிறிது எடுத்து நினக்குக் காப்பாக இட ஓ! இளங்களிறே வருவாயாக!

கு: நெற்றி என்பது, நெற்றிப்பட்டமும் என முன்னும், நெற்றிச் சுட்டியும் எனப் பின்னும் இயைந்து இடைநிலை விளக்காய் நின்றது. பன்மணி முத்தின் சுட்டி, படர் சோதிச் சுட்டி எனத் தனித்தனி இயையும். பன்மணியாலும் முத்தினாலும் இயன்றதாய்ப் பக்கமெலாம் பரவுகின்ற ஒளியையுடைய சுட்டி என்க. தோடு என்பது காதணி. எள்ளளவும் ஒருபக்கம் சார்ந்து பேசாமல் நடுவுநின்று முறை செய்பவன் இராமன் என்பாள் 'எட்டனையுஞ் சார்பில்லவன்' என்றாள். அத்தகையோன் ஆளும் நாட்டில் பிறந்தவர்கள் அகால மரணம் எய்துதல் இயல்பல்லவே என்றகுறிப்புத் தோன்றச்'சார்பில்லவன் நாட்டினிடை வந்தாய்' என்றாள். கண்ணேறு கழிக்கும் முறையில் குழந்தைகளுக்கு மஞ்சள் நீர் முதலியவற்றைச் சுற்றுதலும் அந்நீரில் ஒருதுளி எடுத்து நெற்றியில் காப்பாக இடுதலும் இயல்பு. அதற்காக வருக என அழைத்தவாறு. அன்பு மிகுதியினால் குழந்தையைக் களிறு என அழைத்தல் உண்டு. சேய்மை விளியில் ஏ, ஓ என்று இரண்டும் உருபாக வந்தன. (11)

914 மண்ணுறு சீரு மானமு மங்சு
வசை பூண்டோன்
கண்ணறை யன்கா குத்த
னெனுதிக் கடன்ஞாலம்
புண்ணுறு தீயின் புத்திர
சோகந் தனைமாற்றிப்
பண்ணறை தாய்தான் செத்தில
ளென்றே பழிதூற்றும்

மண்உறு சீரும் மானமும் மங்க, வசைபூண்டோன்
கண்ணறையன் காகுத்தன் எனுது, இக்கடல் ஞாலம்;
புண்உறு தீயின் புத்திர சோகம் தனை மாற்றிப்
பண்ணறை தாய்தான் செத்திலள் என்றே பழிதூற்றும்.

பொ: 'மண்ணுலகம் முழுமையும் பரவியுள்ள சிறப்பும் மானமும் மங்கிப்போகப் பழியைப் பூண்டவனுகிய இராமன், கண் இல்லாதவன்' என்று இந்தக் கடல் சூழ்ந்த உலகம் சொல்லாது; புண்ணில் பொருந்தும் தீயைப் போல வருத்துகின்ற புத்திர சோகத்தை மாற்றிக் கொண்டு பண்பு இல்லாத தாய் தான் சாவாமல் இருக்கின்ருள் என்றே என்னைப் பழிகூறும்.

கு: சீர்-புகழ் முதலிய சிறப்புகள். மங்குதல்-தேய்தல். வசை-பழி. வசை பூண்டோன் என்றது, மக்கள் மூத்த யாக்கை யொடு நோயின்று கழிய''(பதிற்றுப்பத்து) என்பதற்கேற்ப மூப்பு வருமுன்னே இளமையிலேயே ஒருவன் இறத்தற்கேதுவான ஆட்சி செய்து பழியை மேற்கொண்டவன் இராமன் என்றவாறு. இராமன் ஆட்சியில் உள்ள குறைபாடு காரணமாக இளங் குழந்தை இறந்தால் இராமனைப் பழிப்பதே முறையாயினும் ஞாலம் அவனைப் பழித்துக் கூருமல், ஒருபாவமும் அறியாத தன்னைநோக்கி புத்திர சோகத்தால் மாய்ந்து போகாமல் பண்பில்லாத தாய்தான் அந்தச் சோகத்தை மாற்றிக் கொண்டு சாகாமல் இருந்தாள் எனத்தன்னையே பழிதூற்றும் எனத்தாய் பழிக்கு அஞ்சிக்கூறியவாறு. கண்ணறையன்-கண்ணோட்டம் இல்லாதவன். பண்ணறை தாய் என்றது பண்பு கெட்ட தாய்

என்றவாறு. புத்திர சோகம் தாங்கமாட்டாமல் இறப்பதே தாயின் இயல்பாகவும் இவள் அந்தச் சோகத்தின் கடுமையை மாற்றிக் கொண்டு சாவாமலிருக்கின்றுளே எனத்தன்னையே பழிக்கும் என்றவாறு. (12)

915 என்னைக் கைவிட் டேகிய
நீயோ வெழின் மைந்தா
உன்னைக் கைவிட் டுன்னொடும்
வாரா துழல்வேனே
தன்னைச் சொல்லிக் கூப்பிட
வேதுந் தகவில்லா
மன்னர்க் கெல்லா மன்னவ
னேவுள் வலியாரார்.

என்னைக் கைவிட்டு ஏகிய நீயோ? எழில்மைந்தா!
உன்னைக் கைவிட்டு உன்னொடும் வாராது உழல்வேனே?
தன்னைச் சொல்லிக் கூப்பிட ஏதும் தகவுஇல்லா
மன்னர்க் கெல்லாம் மன்னவனேஉள் வலியார் யார்?

பொ: அழகுடைய மகனே! மனவலியுடையோர் என்னைக் கைவிட்டுச் சென்ற நீயோ? அல்லது, உன்னைக் கைவிட்டும் உன்னோடு தொடர்ந்து வாராமல் உடம்போடு நின்று உழல்கின்ற யானோ? அல்லது, தன்னைப் பெயர் சொல்லிக் கூப்பிடவும் ஏதும் கூருமல் தகுதியின்றி அடங்கி யிருக்கின்ற அரசர்க்கு அரசனுகிய இராமனே? யார்?

கு: ஒவ்வொரு வகையில் இங்குக் கூறப்பட்ட மூவரும் மனவலி மிக்கவர்களே ஆவர் என்றபடி. அன்னையைக் கைவிட்டுச் சென்ற மைந்தன் மனவன்மை பெற்றவனே. அவனினும் தன் மகனைப் பிரிந்தும் அவனோடு தொடர்ந்து உயிர்விடாது உடம்போடு உழல்கின்ற தாய் அவனைக் காட்டிலும் மனவலி படைத்தவள்ஆவள். அவளைக் காட்டிலும் தன்னரண்மனை வாயிலிலிருந்து, கூப்பிடவும் ஏன் என்று வினவாது இருக்கின்ற மன்னர்க் கெல்லாம் மன்னவன் மிக்க மனவலிமை பெற்றவன் என்பது

வைப்பு முறையால் விளக்கிய வாருகவும் கொள்ள இடமுண்டு. உழலுதல்-உடம்போடு நின்று வருந்துதல். உள்வலியார் உள்ளத்தின் வன்மையுடையவர்; கடின சித்தம் உடையவர். தகவு-பெருமைப்பண்பு. நடுவுநிலைமையும் ஆம். (13)

916 ஒன்றுந் துன்பக் கொள்கல
மானே னுயிரெல்லாம்
கொன்றுண் பாவிக் கூற்றுவ
னென்னைக் கொடுபோகான்;
வன்றிண் சிந்தை மன்னவ
னென்னோ வினை யுன்னுன்
என்றென் றிவ்வா றேந்திழை
யாரு விடருற்ருள்.

ஒன்றும் துன்பக் கொள்கலம் ஆனேன்; உயிர்எல்லாம்
கொன்று உண்பாவிக் கூற்றுவன் என்னைக் கொடுபோகான்;
வன்திண் சிந்தை மன்னவன் என்நோவினை உன்னுன்,
என்று என்று இவ்வாறு ஏந்திழை ஆருஇடர் உற்ருள்.

பொ: பலவகையாக வந்து ஒன்றுபடுகின்ற துன்பங்களையெல்லாம் ஏற்றுக் கொள்ளுதற்குரிய கலம் ஆயினேன் யான்; உயிர்களை எல்லாம் கொன்று தின்கின்ற பாவியாகிய கூற்றுவன், என்னைக் கொண்டு போகமாட்டேன் என்கின்றுன்; வலியதிண்ணிய சிந்தையையுடைய மன்னவன் இராமன், என் நோவினை நினைத்துப் பார்க்காதவனுக உள்ளான்: என்று என்று இவ்வாறு தாங்கிய அணிகலன்களையுடைய பார்ப்பனி ஆறாத்துயர் அடைந்தாள்.

கு: துன்பக் கொள்கலன் என்றது, துன்பங்களையெல்லாம் ஏற்றுக் கொள்கின்ற பாத்திரத்தை. "இடும்பைக்கே கொள்கலன் கொல்லோ குடும்பத்தைக் குற்ற மறைப்பான் உடம்பு" (திருக்குறள்-1030) என்புழி இச்சொல் இப்பொருளில் ஆளப் பட்டிருத்தல் காணலாம். பாவிக் கூற்றுவன் உயிர்கள் எல்லாவற்றையும்கொன்றுண்கின்ற தன்மையனுயிருந்தும் என்னுயிரைக் கொண்டு போகமாட்டேன் என்கின்ருன்; என்றது தான்

சாகாமைக்குக் காரணம் யானலன்; கூற்றுவனே என அவன்மேல் குற்றம் சார்த்தியவாறு. "தவத்துறை மக்கள் மிகப் பெருஞ் செல்வர், ஈற்றிளம் பெண்டிர் ஆற்றாப் பாலகர், முதியோ ரென்னான் இளையோ ரென்னான் கொடுந் தொழிலாளன் கொன்றனன் குவிப்ப" (மணிமேகலை ) எனச் சீத்தலைச் சாத்தனார் கூற்றுவனின் கொடுந்தன்மையைக் கூறியிருத்தல் காணலாம். மன்னவன் தன்னேவினை யுன்னியிருந்தால் வாயிலுக்கு வந்து என்னுற்றாய்? என வினவி யிருப்பான் என்ற எண்ணத்தால் பார்ப்பனி மன்னவ னென்னேவினை யுன்னான் என்றாள். ஆறு இடர்-ஆறாதுன்பம் - தணியாத அல்லல். ஏந்திழை என்பது வினைத் தொகைப் புறத்து பிறந்த அன்மொழித்தொகையாய்ப் பார்ப்பனியையுணர்த்தியது. (14)

## வேதியன் அழுகை
## வேறு

917 வேதியனுந் தன்பாரி மேதினியில்
வீழ்ந்துகிடந் தலறு மந்த
மாதுயர்கண் டாற்றாது மறுகிய நெஞ்
சினனாகி மாண்ட மைந்தன்
மீதுவிழுந் துரைமறந்து வெய்துயிர்ப்பொன்
றில்லாது மெலிந்து சாலப்
போதிடர்கூ டத்தெளிந்து பொருமித்தன்
வாய்விட்டுப் புலம்பலுற்றான்.

வேதியனும் தன்பாரி மேதினியில் வீழ்ந்துகிடந்து அலறும் அந்த மாதுயர்கண்டு, ஆற்றாது மறுகிய நெஞ்சினன் ஆகி, மாண்ட மைந்தன்
மீதுவிழுந்து உரை மறந்து வெய்துயிர்ப்பு ஒன்று இல்லாது மெலிந்து சாலப்
போதுஇடர்கூடத் தெளிந்து பொருமித் தன் வாய்விட்டுப் புலம் பலுற்றான்.

பொ: மகனை சாக்கொடுத்த வேதியனும் தன் மனைவி தரையில் விழுந்து கிடந்து அலறுகின்ற அந்தப் பெரிய துயரைக் கண்டு ஆற்றாமல் கலங்கிய நெஞ்சினனாகி, இறந்தமைந்தன் மீது

வீழ்ந்து, சொல்லையும் மறந்து, வெப்பமாக மூச்சு விடுதல் சிறிதும் இல்லாமல் மெலிவடைந்து, நெடிது நேரம் துன்ப மிக்கவனாக இருந்து பின்பு தெளிவடைந்து தேம்பித் தன்வாய் விட்டுப் புலம்பத் தொடங்கினான்.

கு: வேதியனும் என்ற உம்மை, பார்ப்பனியே யன்றி என்னும் பொருளதாய் இறந்தது தழுவி நின்றது. மேதினி-தரை. மறுகுதல் - கலங்குதல். உயிர்ப்பு ஒன்று இல்லாது என்புழி ஒன்று என்பது 'சிறிய என்னும் பொருளில் வந்தது. சாலப்போது- நெடிதுநேரம். இடர்கூட-துன்பம் மிக்கவனாக. பின்பு தெளிந்து என ஒரு சொல் வருவிக்க. பொருமுதல்-உள்ளுக்குள் தேம்புதல். வாய்விட்டு-வாய்திறந்து. முன்பு உள்ளுக்குள் பொருமியவன் பின்பு வாய்விட்டுப் புலம்பினான் என அவலத்தின் படி முறையை விளக்கியவாறு. புலப்புதல், இங்கு அழுதல் என்னும் பொருளில் வந்தது. நெஞ்சுரமுடைய வேதியனும் தன்பாரியின் துயர்கண்டு நெஞ்சு கலங்கிப் புலம்பினான் என அவலத்தின் இயல்பைப் புலப்படுத்தியவாறு. (15)

918 கன்னெஞ்ச ராயுள்ளோர் காளையரைத்
தாமிழந்து கதறு நிற்பர்;
மென்னெஞ்ச ராயுள்ளோர் வெந்துயரம்
பொறுக்கலராய் விடுவராவி
என்னெஞ்சி லெரிமூட்டி யென்னையறக்
கைவிட்ட வுன்னைப் போல
வன்னெஞ்ச னேயானு மைந்தனே யுனைத்
தொடர்ந்து வருகின் றேனே.

கல்நெஞ்சராய் உள்ளோர் காளையரைத் தாம்இழந்து கதறு நிற்பர்;
மெல்நெஞ்சராயுள்ளோர் வெந்துயரம் பொறுக்கலராய் விடுவர் ஆவி
என்நெஞ்சில் எரிமூட்டி என்னை அறக்கைவிட்ட உன்னைப் போல
வன்நெஞ்சனே யானும் மைந்தனே உனைத் தொடர்ந்து வருகின்றேனே.

பொ: கல்மனம் படைத்தவர்கள் தாம் தம் புதல்வர்களை இழந்து கதறி அழுவார்கள். மெல்லிய நெஞ்சினை யுடையவர்கள் அக்கொடிய துயரத்தைப் பொறுக்க மாட்டாதவராய் உயிரை விட்டிடுவார்கள்; என்மகனே! என் நெஞ்சில் துன்ப நெருப்பை மூட்டிவிட்டு என்னை அடியோடு கைவிட்ட உன்னைப்போல யானும் வன்னெஞ்சனோ? (இல்லை.) ஆதலால் உனைத் தொடர்ந்து யானும் வருகின்றேன்.

கு: காளையர் என்றது இங்குக் காளை போன்ற புதல்வரை. கதறுவதோடு நின்றுவிடுவார்கள்; உயிரைவிடமாட்டார்கள் என்றவாறு. கல்நெஞ்சன் — கல்லைப்போன்று உறுதியான வன்னெஞ்சர். மென்னெஞ்சர் என்றது துன்பம் தாங்காத மெல்லிய நெஞ்சினைப் பெற்றவர்களை. இவர்கள் புத்திர சோகத்தால் உயிரையே விடுவார்கள் என்றவாறு. 'என்னெஞ்சில் எரிமூட்டி' என்றது வேதியன் நெஞ்சில் பிரிவு என்கின்ற எரியை வளர்த்து விட்டு என்றவாறு. அறக்கைவிட்ட-அடியோடு கைவிட்டு விட்ட.. 'யானும் உன்னைப் போல வன்னெஞ்சனே' எனவும், யானும் உனைத் தொடர்ந்து வருகின்றேனே எனவும் முன்னும் பின்னும் இயைந்து பொருள் பட்டுத் தாப்பிசைப் பொருள் கோளாக நிற்கும். யானும் என்புழி உம்மை இறந்தது தழீய எச்சவும்மையாகும். உனைத் தொடர்ந்து எமனுலகிற்கு யானும் வருகின்றேன் என்றது இறந்துபடுகின்றேன் என்றவாறு. (16)

919 தனக்குநோய் வேண்டாதான் சந்ததிபெற்
றிடாதொழிக தளர்வு மிகக
மனத்துநோய் தான்பெருக மலடனுக்கின்
றுயாம்படுமிம் மறுக்க மில்லை
எனக்குநீ செயவிருந்த நீர்க்கடனு னின்னிற்பி
னிருந்து பிள்ளாய்
உனக்குநான் செய்வேனோ செய்யேன்கா
ணுனைத்தொடர்ந்து வருகின் றேனே.

தனக்குநோய் வேண்டாதான் சந்ததி பெற்றிடாதொழிக; தளர்வு மிக்கு
மனத்து நோய் தான் பெருக, மலடனுக்கு இன்று யாம்படும் இம் மறுக்கம் இல்லை;
எனக்குநீ செய இருந்த நீர்க்கடன் நான் நின்னின் பின்இருந்து, பிள்ளாய்!
உனக்குநான் செய்வேனோ? செய்யேன் காண்; உனைத் தொடர்ந்து வருகின்றேனே.

பொ: என்பிள்ளாய்! தனக்குத் துன்பம் வரல்வேண்டா என்று நினைக்கின்றவன், பிள்ளை பெறாதிருப்பானாக! பிள்ளை பெறாத மலடனுக்கு, தளர்ச்சி மிகுந்து மனநோய் பெருகிட இன்று யாம் படுகின்ற இந்தக் கலக்கம் இல்லையன்றோ? எனக்கு இறுதிக் காலத்தில் நீ செய்தற்கு இருந்த நீர்க்கடனை நான் நினக்குப் பின்பு உயிர்வாழ்ந்திருந்து உனக்கு நான் செய்வேனோ? செய்யேன்; உன்னைப் பின் தொடர்ந்து வருகின்றேன்.

கு: பிள்ளை என்பது விளியேற்றுப் பிள்ளாய் என்று நின்றது. மகவுபெற்றால் துன்பப் படுதல் என்பது உறுதியாதல் புலப்படத் 'தனக்கு நோய் வேண்டாதான் சந்ததி பெற்றிடா தொழிக' என்றான். மதலையைப் பெற்றதனால் தான் துன்பப் படுதலை நிறுவி, மகப் பெறாதனுக்கு இத்தகைய துன்பம் இன்மையை எடுத்துக்காட்டி விளக்குவானாய் 'மலடனுக்கின்று யாம்படும் இம்மறுக்கம் இல்லை' என்றான். மகப் பெற்றானுக்கு வரும் துன்ப இயல்பைப் புலப்படுத்த வேண்டி, 'தளர்வுமிக்கு மனத்துநோய் தான் பெருக, இன்று யாம்படும் இம்மறுக்கமில்லை என்றான். மறுக்கம்-கலக்கம், மலடன் - மகவுபெறாதவன். மகன் தந்தையின் இறுதிக்குப் பின் நீர்க்கடன் செய்யும் முறைமையை உரிமையாகப் பெற்றவன் ஆதலின், எனக்கு நீ செயவிருந்த நீர்க் கடன்' என்றான். எனக்கு மகன் செய்தற்குரிய நீர்க்கடனை மகனாகிய நின் மரணத்திற்குப்பின் தந்தையாகிய யான் இருந்து செய்யப் போவதில்லை. உன்னைப் பின் தொடர்ந்து நீ புக்கஉலகத்திற்கு நானும் வருகின்றேன்; எனத்தன் பிரிவாற்றாமை தோன்றக் கூறியவாறு. "நேரிழை யொருத்தி நீரால் எனக்கு நீ செய்யத் தக்க கடனெலாம் ஏங்கி ஏங்கி உனக்கு நான் செய்வதானேன், என்னின் யார் உலகத்துள்ளார்" (யுத்த-இராவணன் சோகப்-39)

என இராவணன் இந்திரசித்தின் மரணத்திற்குப்பின் கூறுவது இங்கு ஒப்பு நோக்கத்தகும். 'மலடனுக்குத் தளர்வுமிக்கு மனத்து நோய்தான் பெருக இன்று யாம்படும் இம் மறுக்கமில்லை' என இயையும். (17)

920 கண்ணிலான் பெற்றிழந்தா னெனவுன்னைப்
பெற்றிழந்து காந்திப் பொங்கும்
புண்ணுளே நாராசம் புகுத்தனைய வித்துயரம்
பொறுக்க லாற்றேம்
மண்ணிலாப் பெரும்பாவத் தெங்களுக்கு
மகனாக வென்ன பாவம்
பண்ணினாய் மகனேயென் பழிப்பற்ற பேரழகா
பகர்ந்திடாயே.

கண்இலான் பெற்று இழந்தான் எனஉன்னைப் பெற்று இழந்து
காந்திப் பொங்கும்
புண்ணுளே நாராசம் புகுத்தனைய இத்துயரம் பொறுக்கல்
ஆற்றேம்;
மண்இலாப் பெரும் பாவத்து எங்களுக்கு மகனாக என்ன பாவம்
பண்ணினாய்? மகனே! என் பழிப்பு அற்ற பேரழகா
பகர்ந்திடாயே.

பொ: கண் இல்லாத ஒருவன் நடுவே கண்ணைப் பெற்றிருந்து, பின்பு இழந்தவனைப் போல, உன்னைப் பிள்ளையாகப் பெற்று இப்போது இழந்து வெதும்பிப் பொங்கும் புண்ணினுள்ளே காய்ச்சிய இரும்புச் சலாகையைப் புகுத்தினாற்போன்ற இந்தத் துயரத்தைப் பொறுக்க முடியாதவர்களாக இருக்கின்றோம்; மண்ணுலகத்தில் இல்லாத பெரிய பாவத்தைச் செய்துள்ள எங்களுக்குப் பிள்ளையாகப் பிறத்தற்கு என்ன பாவம் பண்ணினாய்? மகனே! என் பழிப்பு இல்லாத பேரழகனே! சொல்வாயாக!

கு: கண் இல்லாதவன் இறுதிவரையில் கண்ணிலாதவனாகவே இருந்தால் கண்ணிலாமை பற்றிய துன்பம் அவ்வளவாகத் தெரியாது; இடையே கண்ணைப் பெற்றுக் கண்ணின் நலன்களை

அநுபவித்து அறிந்த பின்பு கண்ணையிழந்தால் அது பெருந்துயர் தருவதாகும்; அதுபோலவே பிள்ளையே பிறவாதிருந்தால் பிள்ளையின் அருமை தெரியாமல் இருந்திருக்கும்; பிறந்து பிள்ளையின் இனிமைகளை அனுபவித்துணர்ந்தபின்பு அப்பிள்ளையை யிழப்பது ஆறுத்துயர் தருவது என்றவாறு. பிள்ளையைப் பெற்றிழந்தமைக்கு வேறுமோர் உவமை கூறுவாராய் 'காந்திப் பொங்கும் புண்ணுளே நாராசம் புகுத்தனைய இத்துயரம்' என்றார். காந்துதல்-வெதுப்புதல். புண்ணின் கடுமை புலப்படக் 'காந்திப் பொங்கும் புண்' என்றார். நாராசம்-இரும்புச் சலாகை. காந்திப்பொங்கும் நாராசம் என இயைத்தலும் ஆம். 'வெந்த தோர் புண்ணின்கூர் வேல் கொண்டு நுழைப்பான் போல்' (கலித்தொகை நெய்தற்கலி—3) என்பது இங்கு ஒப்பு நோக்கத் தகும். 'எண்ணிலா வருந்தவத் தோனியம்பிய சொல் மருமத்தி னெறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும்புழையில் கனனுழைந் தாலென' (பால-கையடைப்-328) என்பதும் "கண்ணிலான் பெற்றிழந்தானென வுழந்தான் கடுந்துயரம் காலவேலான்" என்பதும் இங்கு எண்ணுவது மிகவும் பொருத்தமாகும். (18)

921 தேசற்ற தீவினையேன் திருவுடையோர்
பிள்ளைகளைப் பெற்று வாழ
ஆசைப்பட் டாவிதளர்ந் தருந்தவங்கள்
செய்துநா னநேக காலம்
ஏசற்றே னேசறவு கெடவந்தா
யென்றிருந்தே னெங்கே போனாய்
மாசற்ற மணியேயென் மறுவற்ற
வடிவுடையாய் மைந்த ரேறே.

**தேசு அற்ற தீவினையேன், 'திருவுடையார் பிள்ளைகளைப் பெற்று வாழ, ஆசைப்பட்டு ஆவி தளர்ந்து அருந்தவங்கள் செய்து நான் அநேக காலம் ஏசற்றேன்; 'ஏசறவு கெடவந்தாய்' என்றிருந்தேன்; எங்கே போனாய்? மாசு அற்ற மணியே! என்மறுவு அற்ற வடிவுடையாய்! மைந்தர் ஏறே!**

பொ: புண்ணியப் பயனாகிய செல்வத்தையுடையவர்கள் பிள்ளைகளைப் பெற்று வாழாநிற்க, அவர்களைப் பார்த்து, ஒளியற்ற தீவினையை யுடைய யான், (அவர்களைப் போல் பிள்ளைப் பேற்றையடைய) ஆசைப்பட்டு ஆவிதளர அரிய தவங்களைச் செய்து அனேக காலம் நான் வருத்தமுற்றேன்; என் வருத்தம் கெடுமாறு வந்து பிறந்தாய், என்றிருந்தேன். குற்றமற்ற மணியைப் போன்றவனே! என் மறுவு இல்லாத வடிவுடையவனே! மைந்தர்கட்கெல்லாம் தலைமையானவனே! நீ எங்கே போனாய்?

கு: தேசு—ஒளி. தீவினைக்கு அடை. இருள்சேர் தீவினையாதலின் தேசற்றதாயிற்று. திருவுடையோர் என்றது, எல்லாச் செல்வங் களும் நிறைந்தவர்களை. அவர்கள் முன்னைப் புண்ணியத்தால் மக்களைப் பெற்று வாழ்வது கண்டு அவர்களைப் போல நாமும் மக வினைப் பெற்று வாழ வேண்டும் என்று தீவினையேன் ஆசைப்பட் டது பொருந்தாது என்பது புலப்படுத்தியவாறு. அருந்தவங்கள் என்றது, மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்குதல் முதலியன. விரதங்களால் உடம்பும் உயிரும் தளர்தல் இயல் பாதலின் 'ஆவிதளர்ந்து அருந்தவங்கள் செய்து' என்றார். அநேக காலம் ஏசற்றேன் என்றது, நெடுங்காலம் வருந்தினேன் என்றவாறு. ஏசறவு—வருத்தம். தவம் செய்து வருந்தினமைக்குப் பயனாக நீ பிறந்தாய் என்று மகிழ்ந்திருந்தேன். அம்மகிழ்ச்சி கெட மணியே! ஏறே!எங்கே போனாய்! என இரங்கியவாறு. மாசற்ற மணி என்றது கழுவப்பட்ட சாணைபிடிக்கப்பட்ட மணியினை. அவன் வடிவில் ஒருசிறு மறுவும் இல்லை என்பது புலப்பட 'மறுவற்ற வடிவுடையாய்' என்றான். மைந்தர்களுள் ஏறு போன்றவன் என அவன் வலிமையையும் தோற்றமும் பற்றிக் கூறியவாறு.

(19)

922 தள்ளாடு மேனியனாய்த் தனயனைத்தா
னிழந்தாவி தளர்கின் றேனைக்
கொள்ளாத கூற்றுவனுங் கொடுபோகா
னினியுனக்குத் தோழ னாகி

உள்ளார்க ளொடுதெருவில் விளையாடி
யுடம்பலசி யுறங்கி னாயோ
பிள்ளாய்நீ யெழுந்திரா யிதுவென்ன
பேருறக்கம் பேசி டாயே.

தள்ளாடும் மேனியனைத் தனயனைத்தான் இழந்து ஆவி தளர்கின்றேனைக்
கொள்ளாத கூற்றுவனும் கொடுபோகான்; இனி உனக்குத் தோழர் ஆகி
உள்ளார்களொடு தெருவில் விளையாடி உடம்பு அலசி உறங்கினாயோ?
பிள்ளாய்! நீ எழுந்திராய்! இது என்ன பேர் உறக்கம் பேசிடாயே!

பொ: நிலையின்றித் தள்ளாடுகின்ற உடம்பையுடையவனாய் மகனை இழந்து உயிர் தளர்கின்ற என்னை உயிர் கொள்ளாத எமனும் கொண்டு போகமாட்டான்; இப்போது; பிள்ளையே! உனக்குத் தோழர்களாயுள்ளவர்களோடு தெருவில் விளையாடியதனால் உடம்பு வருந்தி அவ்வருத்தத்தால் உறங்கிவிட்டாயோ? நீ எழுந்திடுவாயாக! இதுவென்ன பேருறக்கம்? சொல்வாயாக!

கு: தள்ளாடுதல்-உடம்பு செவ்வன் நில்லாது நடுக்கமுற்று அசைதல். தனயனைத்தான் என்புழித் தான் அசைநிலை. உயிர்கொள்ளாத கூற்றுவனும் ஆவிதளர்கின்றேனை இப்போது கொண்டு போகான் என்க. மேனிதள்ளாடி ஆவிதளர்கின்ற என்னைக் கொண்டு போதல் கூற்றுவனுக்கு எளிதாக இருக்கவும் அவன் இப்போது கொண்டுபோகாதிருக்கின்றான் என்பது கருத்து. இனி-இப்பொழுது. விளையாடிய இளைப்பால் உறங்குதல் இயல்பாதலின், 'உனக்குத் தோழராக உள்ளார்களொடு தெருவில் விளையாடி யுடம்பலசி யுறங்கினாயோ?' என வினவினான். பிள்ளை என்பது விளியேற்றுப் பிள்ளாய்! என்றாயது. அலசுதல்-வருந்துதல் எழுந்திராய் என்பதற்கு 'எழுந்திருக்க மாட்டேன்' என்கின்றாய்; எனப்பொருள் கூறலும் ஆம். தந்தையெழுப்பவும் எழாமல் உறங்குகின்ற இது என்ன பேருறக்கம் என்று துன்ப மிகுதியால் வினவி அழுங்குதல். பேசிடாய்-பேசுக. (20)

923 கொஞ்சியவுன் சொற்கேட்டு குழற்
குடுமியும் பின்னுங் கண்டு சால
நெஞ்சுகுளிர்ந் தினிதிருந்தேன் நெடுந்தவத்தோர்
விதிமுறைநின் னரையிற் கட்டும்
முஞ்சியுநற் கோவணமு முப்புரிநூ
லுந்தோளும் விளங்கித் தோன்ற
வஞ்சனேன் மைந்தாநீ மறையோதி
வரக்காணப் பெற்றிலேனே.

கொஞ்சிய உன்சொல் கேட்டுக் குழற் குடுமியும் பின்னும் கண்டு சால
நெஞ்சு குளிர்ந்து இனிதுஇருந்தேன்; நெடுந்தவத்தோர் விதி முறை நின் அரையில் கட்டும்
முஞ்சியும் நல் கோவணமும் முப்புரிநூலும் தோளும் விளங்கித் தோன்ற,
வஞ்சனேன் மைந்தா! நீ மறை ஓதி வரக் காணப் பெற்றிலேனே!

பொ: மைந்தா! கொஞ்சியபடி பேசுகின்ற உன் சொல்லைக் கேட்டும் குழலைவாரி முடித்த குடுமியையும் பின்னலையும் கண்டும் மிகவும் மனம் குளிர்ந்து இனிதிருந்தேன்: நெடிய தவத்தினையுடையவர்களாகிய ஆசிரியர்கள்சொல்லும் விதி முறைப்படி நினது அரையில் கட்டியுள்ள நாணற்கயிறும், நல்ல கோவணமும், முப்புரி நூலாகிய பூணூலும் அதைத் தாங்கியுள்ள தோளும் விளங்கித் தோன்ற நீ, வேதம் ஓதி வர, வஞ்சகனுகிய யான் காணப் பெற்றிலேனே!

கு: கொஞ்சிய சொல் என்றது, எழுத்து நிரம்பாத மழலைச் சொல்லை. குழந்தைப் பருவத்தில் கூந்தலைக் குடுமியாகக் கட்டுதலும் பின்னித் தொங்கவிடுதலும் இயல்பு ஆதலின், இவ்விரண்டும் புலப்படக் 'குழற் குடுமியும் பின்னுங் கண்டு' என்முர். பின்-சடைப்பின்னல். மைந்தா! உன் கொஞ்சிய சொல் கேட்டும் குடுமியும் பின்னும் கண்டும் நெஞ்சு குளிர்ந்து இனிதிருந்தேன்; ஆனல் அரையிற் கட்டும் முஞ்சியும் கோவணமும் முப்புரி நூலும் தோளுமாகத் தோன்ற மறையோதி வருதலை வஞ்சனேன் காணப் பெற்றிலேன் என்றவாறு. பச்சிளம்

பருவத்துப் பேச்சும் அழகும் கேட்டும் கண்டும் அனுபவித்த நான், பள்ளிப் பருவத்துப் பேச்சும் கோலமும் கேட்கவும் காணவும் பெற்றிலேனே என ஏங்கியவாறு. கொஞ்சிய சொல்லுக்கு வேறாக மறைபயிலும் சொல்லும், குடுமிக்கும் பின்னலுக்கும வேறாக நாணற்கயிறும் கோவணமும் பூணூலும் தோளும் என்க. மறைஓதி வர என்றதனுல் மாணக்கர் பள்ளியினின்றும் வருங்கால் மறையோதிக் கொண்டே வருதலும் புலப்படும். யான் வஞ்சனேன் ஆகலின் மறை ஓதிவரும் காட்சியைக் காணப்பெற்றிலேன் எனத் தன் சிறுமையெடுத்தியம்பியவாறு. முஞ்சி நாணற்புல்லாகிய அரை ஞாண். இது வேதமோதும் பிரமசாரிகள் அணிந்தற் குரியது. (21)

924 தராதலத்தி லிதற்குமுனம் தந்தையர்க்கு
முன்தனயர் மரித்தா ரில்லை
புராதனத்த தல்லாத புத்திரசோ
கத்தாலே புலம்பு மிந்தப்
பிராமணிக்கும் பிழைப்பரிது பெரும்பிடை
யால்யாறும் பிழைக்கமாட்டேன்
இராமனுக்குப் பழியாக விறக்கின்றே
மிருவருமே யென்னுங் காலே.

தராதலத்தில் இதற்குமுனம் தந்தையர்க்குமுன் தனயர் மரித்தா ரில்லை
புராதனத்தது அல்லாத புத்திரசோகத்தாலே புலம்பும் இந்தப்
பிராமணிக்கும் பிழைப்புஅரிது: பெரும்பிடையால் யானும் பிழைக்கமாட்டேன்;
இராமனுக்குப் பழியாக இறக்கின்றேம் இருவருமே என்னும் காலே.

பொ: பூமியில் இதற்கு முன்னம் தந்தையர்க்கு முன்பு புதல்வர் இறந்திலர்; பழைமையானது அல்லாத (புதுமையான) புத்திர சோகத்தாலே புலம்பிக் கொண்டிருக்கின்ற இந்தப் பார்ப்பனிக்கும் இனி உயிர் பிழைத்தல் அரிதாகும்; யானும் பெரிய துன்பத்தால் உயிர் பிழைக்கமாட்டேன்; இந்நாட்டு

மன்னவனாகிய இராமனுக்குப் பழி உண்டாகுமாறு நாங்கள் இருவருமே இறக்கின்றோம் என்று சொல்லும்பொழுது.

கு: குளகம். தராதலம்-தரையிடம், வடசொல் திரிபுஇன்றி வந்தது. மரித்தல் - இறத்தல். இதற்கு முனம் என்றது இராமன் ஆட்சிக்கு முற்பட்ட காலத்தை. "மக்கள் மூத்தயாக்கையொடு நோயின்று கழிய" (பதிற்றுப்பத்து-) என்று சொல்லுதற்கேற்ப மக்கள் மூத்த யாக்கையொடு கழிதலின் தந்தையர்க்கு முன் தனயர் இறத்தல் நிகழாதிருந்தது என்றவாறு. புராதனத்தது-பழைமையானது. புத்திரனை இழந்தமையால் வருஞ்சோகம் புத்திரசோகம் எனப்பட்டது. நாட்டில் புத்திரசோகம் என்பது புதுமையாக நிகழ்ந்தது என்பான், 'புராதனத்தல்லாத புத்திர சோகம்' என்றான். பிராமணனுக்குப் பெண்பால் பிராமணி எனப் பட்டாள்; பார்ப்பனி என்றவாறு. பிழைப்பு-உய்தி, அரிது என்பது இங்கு இன்மை யுணர்த்தியது. பீடை-துன்பம். மகன் இறப்பும் மனைவியிறப்பும் பற்றி வருதலின் பெரும் பீடையாயிற்று. மகனோடு தாயும் தந்தையும் இறந்தலால் இராமனுக்குப் பழியாகும் என்றது இராமனாட்சியில் நிகழ்ந்த தவறுதலால் தந்தையிருக்க மகன் மாண்டான் என்ற முறை பற்றியாகும். 'இருவருமே இறக்கின்றோம்' என இயையும். உம்மை முற்றுப் பொருளது. (22)

## மகனையிழந்தோர் துயர்மொழிகளை இராமன் கேட்டு வருந்துதல்

325 விழுகண்ணீர் மெய்நனைப்ப வேதியன்றன்
பாரியொடும் விம்மி வாய்விட்
டழுகின்ற காரணமு மருமகனை
யிழந்ததுயர் பொறுக்க லாற்றார்
மொழிகின்ற வாசகத்தின் கொடுமைகளு
மருந்துயரு முழுதுங் கேட்டுக்
கழிகின்ற நெஞ்சினனாய்க் கையறவு
கொண்டிருந்தான் கருணை நாதன்.

விழுகண்ணீர் மெய்நனைப்ப வேதியன், தன் பாரியொடும் விம்மி வாய்விட்டு
அழுகின்ற காரணமும் அருமகனை இழந்ததுயர் பொறுக்கல் ஆற்றார்
மொழிகின்ற வாசகத்தின் கொடுமைகளும் அருந்துயரும் முழுதும் கேட்டுக்
கழிகின்ற நெஞ்சினனாய்க் கையறவு கொண்டிருந்தான் கருணை நாதன்.

பொ: வேதியன், தன் கண்களிலிருந்து விழுகின்ற கண்ணீர் உடம்பை நனைக்கத் தன் மனைவியொடும் தேம்பி வாய்திறந்து அழுகின்ற காரணமும், தன் பெறுதற்கரிய மகனை இழந்த துயரத்தைப் பொறுக்க முடியாதவர்களாய்ச் சொல்கின்ற வாசகத்தின் கொடுமைகளையும் ஆற்றுதற்கரிய துயரையும் முழுவதும் கேட்டுக் கருணைநாதனாகிய இராமன் மாய்ந்து போகின்ற நெஞ்சினையுடையவனாய்ச் செயலற்ற நிலைமையை மேற்கொண்டிருந்தான்.

கு: கண்ணீரின் மிகுதி புலப்பட 'விழுகண்ணீர் மெய் நனைப்ப' என்றார். விம்முதல்-தேம்புதல். வாய்விட்டழுதல் என்றது, உள்ளத்தே விம்முகின்ற நிலையை மாற்றித் துன்ப ஒலி புறத்தே புலப்படுமாறு அழுதலை. அழுகின்ற காரணமும் என்றது அழுதற்குக் காரணமான மகனையிழந்த நிகழ்ச்சியும் என்றவாறு. பெறுதற்கரிய மகனை இழந்ததாலாய துயர் பொறுக்கலாற்றார் மொழிகின்ற வாசகம் என்றது, 'இறக்கின்றோம் இருவருமே' என்றாற் போன்ற வாசகங்களை. வாசகத்தின் கொடுமையாவது, 'இராமனுக்குப் பழியாக இறக்கின்றோம்' என்பது. கழிகின்ற நெஞ்சம் என்றது, நைந்து அழியும் நெஞ்சத்தினை. கையறவு-செயலற்ற நிலை. கருணையுடையநாதன் ஆதலின் கழிகின்ற நெஞ்சினனாய்க் கையறவு கொண்டிருந்தான் என்பது புலப்படச் செய்தவாறு. நாதன் - தலைவன். கருணை என்றது நெருங்கிய தொடர்பு இல்லாதார் மாட்டுக் கொள்ளும் மன நெகிழ்ச்சி. (23)

## மகவையிழந்த மறையவற்கு மறுமாற்றம் சொலமாட்டாது வருந்தும் இராமனிடம் முனிவர் கூட்டம் வருதல்

926 மந்திரிக டமைக்கூவி மற்றையருந்
தம்பியருந் தானும் வாயில்
வந்திருந்து புலம்புகின்ற மறையவற்கு
மறுமாற்றஞ் சொலமாட்டாது
நொந்திருந்த வேலைமறை நுண்பொருடேர்
நாரதனே முதலா வுள்ள
இந்திரிய சித்தரா மிருடிகண
மிறைவன்முன மிமைப்பின் வந்தார்

மந்திரிகள் தமைக்கூவி மற்றையரும் தம்பியரும் தானும் வாயில்
வந்து இருந்து புலம்புகின்ற மறையவற்கு மறுமாற்றம் சொல
மாட்டாது
நொந்திருந்தவேலை மறைநுண்பொருள்தேர் நாரதனே முதலா
உள்ள
இந்திரிய சித்தராம் இருடிகணம் இறைவன் முனம் இமைப்பின்
வந்தார்.

பொ: மந்திரிமார்களை அழைத்து அம்மந்திரிமாரும் தன் தம்பியரும் தானுமாக வாயிலில் வந்து, அங்கு இருந்து புலம்புகின்ற வேதியனுக்கு மறுமொழி சொல்லவியலாது வருந்தியிருந்த பொழுது, வேதங்களின் நுண்ணியபொருளை அறிந்த நாரத முனிவன் முதலாகஉள்ள ஐம்பொறிகளையும் வென்றடக்கிய முனிவர் கூட்டத்தார் இராமனுக்கு முன்பாக விரைவில் வந்து சேர்ந்தார்கள்.

கு: கூவி-அழைத்து. மற்றையரும் என்றது, கூவப் பெற்ற மந்திரிமாரையே குறிக்கும். வாயில் என்றது, அரண்மனை வாயிலை. வந்து என்பது இராமன் முதலாயினோர் வினை. இருந்து என்பது மறையவனது வினை. தந்தையிருக்க மைந்தன் இறத்தல் இது காறும் நிகழா நிகழ்ச்சியாதலின் அந்தப் புத்திரசோகத்தால் புலம்புகின்ற மறையவனுக்கு மறுமாற்றம் சொல்லமாட்டாத

வருக இராமன் நொந்திருந்தான் என்க. வேலை-வேளை. மறை-வேதம். இந்திரியசித்தர்-மெய்வாய்கண் மூக்குச் செவி என்ற ஐம் பொறிகளையும் அடக்கியவர். இருடி என்பது தமிழ்க்கேற்ற திரிபு பெற்ற வடசொல். கணம்-கூட்டம். இங்குக் கூட்டத்தாரை உணர்த்தியது. 'இறைவன்' என்றது இராமனை. அரசன் மக்கட்கு இறை என்பது மரபாதல் தோன்ற இராமனை இங்கு 'இறைவன்' என்றார். பண்டைத் தெய்வநிலையை யுணர்ந்து அங்ஙனம் கூறினர் எனலும் ஆம். விரைவில் வந்தார் என்பார், 'இமைப் பின் வந்தார்' என்றார். இமைப் பொழுதில் வந்தார் என்க. (24)

## நாரதன் காரணங் கூறத் தொடங்குதல்

927 வந்தவரை யடிவணங்கி வரன்முறையாற்
பூசித்தங் கிருந்த மன்னன்
சிந்தையில்வெந் துயரறிந்து செழுமறைநா
ரதமுனிவ னினைய செப்பும்
இந்தவுன திராச்சியத்தி லிதற்குமுன்
னிலாததொன் றுண்டாய்த் தெய்வ
அந்தணபுத் திரமரண மிதுவந்த
காரணத்தை யறிவா யென்றான்.

வந்தவரை அடிவணங்கி, வரன்முறையால் பூசித்து அங்கு இருந்த மன்னன்
சிந்தையில் வெந்துயர் அறிந்து, செழுமறைநாரத முனிவன் இனைய செப்பும்;
இந்த உனது இராச்சியத்தில் இதற்குமுன் இலாததுஒன்று உண்டாய்த் தெய்வ
அந்தணபுத்திர மரணமது வந்த காரணத்தை அறிவாய்! என்றான்.

பொ: வந்தமுனிவர்களை அடிவணங்கி, மேல்தொட்டவரும் முறைப்படி அவரைப் பூசனைசெய்து அங்கு இருந்த இராமனது சிந்தனையில் உள்ள கொடிய துயரை அறிந்து கொண்டு, செழுமை யான வேதங்களையுணர்ந்த நாரத முனிவன், இத்தகைய சொற் களைச் சொல்லுவானானான். உனக்குரிய இந்த இராச்சியத்தில்

இதற்கு முன்பு இல்லாத ஒரு நிகழ்ச்சி உளதாகித் தெய்வத் தன்மை வாய்ந்த அந்தணன் மகன் மரணமானது வந்த காரணத்தை அறிந்து கொள்வாயாக என்று சொல்லலுற்றான்.

கு: வரல்முறை என்றது, பண்டு தொட்டு முனிவர்க்கு மன்னவன் செய்யத்தக்கதாக நிகழ்ந்துவரும் பூசனைகளை. பூசித்து அங்கு இருந்த மன்னன் என்றது இராமனை. அவன்முகக் குறிப்பால் அகத்துறு துயரை நாரதன் அறிந்து கூறலானான் என்றவாறு. இராச்சியம் என்றது வடசொல். இங்கு இராமன் ஆட்சிக்குரிய கோசலநாட்டைக் குறித்தது. இராசன் ஆட்சிக் குட்பட்டது இராச்சியம் என்றவாறு. உனதாகிய இந்த இராச்சியத்தில் என்க. இராமன் ஆட்சிக்குட்பட்ட நாட்டில் தந்தையிருக்க மகன் இறத்தல் நிகழலாகாது என்ற குறிப்பும் புலப் படும். நால்வகை வருணத்தில் முதன்மையும் தெய்வ வழிபாட்டு முறையும் உள்ள அந்தண குலத்தில் பிறந்த மகன் இறந்தான் என்பது புதுமையானது என்பான், 'தெய்வ அந்தண புத்திர மரணமது' என்றான். மரணமது என்பது பகுதிப்பொருள் விகுதி. யான் சொல்வதைக் கேட்டறிந்து கொள் என்பான், 'மரணமது வந்த காரணத்தை அறிவாய்' என்று கூறினான். (25)

### நாரதர் வருணதன்மம் முதலியவற்றை விளக்கல்

923 மாசில்பெரும் புகழினோய் தருமத்தின்
வகைகேட்டி வருணதன்மம்
ஆசிரிய தன்மம்வரு ணாச்சிரம
தன்மமென வருமித் தன்மம்
காசில்குணத் தன்மமொடுபொது தன்ம
மெனக்கழறி னார்கள் கற்றோர்
பேசியவித் தன்மத்தின் முதல்வருண
தன்மத்தைப் பேசக் கேட்டி.

மாசுஇல் பெரும்புகழிஞேய்! தருமத்தின் வகைகேட்டி; வருண
தன்மம்
ஆசிரியதன்மம் வருணுச்சிரம தன்மம் என வரும் இத்தன்மம்;
காசுஇல் குணத்தன்மமொடு பொதுநன்மம் எனக்கழறினுர்கள்
கற்ஞேர்;
பேசிய இத்தன்மத்தின் முதல் வருணதன்மத்தைப் பேசக்கேட்டி.

பொ: குற்றமற்ற பெரிய புகழையுடைய இராம! தருமத்தின் வகையைக் கேட்பாயாக! வருண தருமம், ஆசிரிய தருமம், வருணுச்சிரம தருமம் என வழங்கிவருகின்ற இந்தத் தருமங்களைக் குற்றமில்லாத குணதருமம் பொதுதருமம் என இருவகைப் படுத்திச் சொன்ஞர்கள் கற்றவர்கள்; கற்ஞேரால் பேசப்பட்ட இந்தத் தருமத்தில் முதலதாகிய வருண தருமத்தைச் சொல்லக் கேட்பாயாக.

கு: குற்றமில்லாத புகழுடையவனுக்கும் குற்றம் ஏற்பட்டதே என்னும் இரக்கம் தோன்ற 'மாசில்பெரும் புகழிஞேய்!' என்று இராமனை விளித்தான். வருணதருமம் ஆசிரிய தருமம் வருணுச்சிரம தருமம் என மூன்ருகக் கூறப்படும் தருமங்கள் சிறப்புத் தருமம் பொதுத் தருமம் என இருவகைப்படுத்தும் கற்ஞேர் கூறுவர் என்றவாறு. முதல்வருண தன்மம் என்றது அந்தணர் தருமத்தை. கேட்டி என்றது இகர வீற்று முன்னிலை வினை முற்று. (26)

## அந்தணர், அரசர் தருமம்

929 புண்ணிய சன்மத்தராம் பூசுரர்தன்
மஞ்சுருதி புகன்ற யாகம்
பண்ணுதல்பண் ணுவித்தல்பழ மறையோத
லோதுவித்தல் பரந்தநன்னூல்
சண்ணியதா னங்கோடல் கொடுத்தலெனக்
கட்டுரைத்தார் காவல்வேந்தர்க்
கெண்ணியதா னங்கொடுத்தல் யாகம்
பண்ணுதல் [illegible] சொன்ஞர்

புண்ணிய சன்மத்தராம் பூசுரர் தன்மம்: சுறுதிபுகன்ற யாகம்
பண்ணுதல், பண்ணுவித்தல், பழமறை ஓதல், ஓதுவித்தல், பரந்த நன்னூல்
கண்ணிய தானம் கோடல் கொடுத்தல் எனக்கூட்டுரைத்தார், காவல்வேந்தர்க்கு
எண்ணிய தானம் கொடுத்தல் யாகம் பண்ணுதலோதல் என்னச் சொன்னார்.

பொ: புண்ணியப் பிறவியினராகிய அந்தணர்க்கு உரிய தருமம்:- வேதம் சொன்ன யாகத்தைத்தான் பண்ணுதலும், பிறரைப் பண்ணச் செய்தலும், பழமையான வேதங்களைத் தான் ஓதுதலும், பிறரை ஓதுமாறு செய்தலும், விரிந்த நல்ல நூல்களால் கருதிச் சொல்லப்பட்ட தானங்களைத் தான் கொள்ளுதலும், பிறர்க்குத் தானம் கொடுத்தலும், ஆம்; என்று மேலோர் உறுதியாகச் சொல்லியுள்ளார்கள். நாட்டினைக் காவல் புரிகின்ற அரசர் தமக்கு உரிய தருமம்: தாம் கருதிய தானத்தைக் கொடுத்தலும் வேள்விகளைச் செய்தலும் ஓதுதலும் என்று சொன்னார்கள்.

கு: சன்மம், வடசொல் திரிபு; பிறப்பு என்பது பொருள். பூசுரர்-பூதேவர்; அந்தணர். தருமம் என்பதன் மரூஉ முடிபு தன்மம் என்பதாகும். அந்தணர்க்கு அறுதொழிலும் இங்குக் கூறப்பட்டன. 'அறுவகைப்பட்ட பார்ப்பன பக்கமும்' (தொல். புறத்திணையியல் 20) என்பர் தொல்காப்பியர். ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஏற்றல், ஈதல் என்பன பார்ப்பனர்க்குரிய அறுதொழில் என்றவாறு. 'ஐவகை மரபின் அரசர் பக்கமும்' எனத் தொல்காப்பியர் கூறியவற்றுள் ஈதல், வேட்டல், ஓதல் என்ற மூன்றுமே இங்குச் சிறப்புக் கருதிக் கூறினார் எனக் கொள்ளலாம். நன்னூல் என்றது வேதத்தை. கண்ணிய-கருதிக் கூறிய. இனிக் கண்ணியம் எனக்கொண்டு, பெருமையான எனப் பொருள் கூறலுமாம். (27)

## சூத்திரன் தவம் செய்வதனால் இந்தத் தவறு வந்தது என்றல்

930 கோத்திரத்துக் கொளல் விற்றல் கோக்
காத்தல் உழல்வேட்டல் வசியர் தன்மம்,
சூத்திரற்குந் தன்மமவர் சிச்சுருடை
யெனவுரைப்ப ரதுசெய்யாது
காத்திரத்தை யறவுலர்த்தித் தலைகீழாய்க்
கான்மேலாய்த் தனக்கு வாய்த்த
சாத்திரத்திற் சொல்லாத தவஞ்செய்வா
னல்வருமித் தவறே யென்றான்.

கோத்திரத்துக் கொளல்விற்றல் கோக்காத்தல் உழல்வேட்டல்
வசியர்தன்மம்;
சூத்திரற்குத் தன்மம்; அவர் சிச்சிருடை என உரைப்பர்; அது
செய்யாது
காத்திரத்தை அற உலர்த்தித் தலைக்கீழாய்க் கால்மேலாய்த்
தனக்கு வாய்த்த
சாத்திரத்தில் சொல்லாத தவம் செய்வானல் வரும் இத்தவறே
என்றான்.

பொ: 'பூமியில் விளையும் பொருள்களைக் கொள்ளுதலும் கொண்டவற்றை விற்றலும் பசுக்களைக் காப்பாற்றுதலும் உழுதலும் வேள்வி செய்தலும் வைசியர் தருமம் ஆகும்; 'சூத்திரர்கட்குத் தருமம் ஆவது மேற்கூறிய மூவருணத்தார்க்கும் பணிசெய்தல் என்று மேலோர் சொல்லுவர். அதனைச் செய்யாமல் உடம்பை முழுவதும் உலரச் செய்து, தலைகீழாகவும் கால் மேலாகவும் மாறிநின்று தனக்குரிய சாத்திரத்தில் சொல்லப் படாத தவத்தினைச் செய்பவனாகிய ஒருசூத்திரனால் வந்தது இத் தவறு' என்று கூறினான்.

கு: கோத்திரம்-பூமி. கோத்திரத்தினவாகிய பொருள்களை என்க. இது வினையாலணையும்பெயர். கொளல் விற்றல் என்பது வாணிபத்தினை விளக்கியவாறு. கோ-பசு. வைசியர் என்பது வசியர் என மருவிற்று. வணிகர்க்குரிய தொழில்களை:- 'உழுது

பயன் கொண்டொலிநிரை ஓம்பிப் பழுதிலாப் பண்டம் பகர்ந்து-முழுதுணர, ஓதி அழல் வழிபட்டோம்பாத வீகையான், ஆதி வணகர்க்கரசு' (புறப்பொ. வெ. மா. 164) எனக் கூறுவர் ஐயனரிதனர். உழுதல், பசுஓம்பல், வாணிபம், ஓதல், வேட்டல், ஈதல் என்ற அறுதொழிலும் வணிகர்க்குரித்தாக ஓதப்பட்டிருத்தல் காணலாம். இவற்றுள் நான்கினை மட்டும் இங்குக் கூறப் பட்டுள்ளன. வேளாண் வாகையில் 'மேல் மூவரும் மனம்புகல வாய்மையான் வழியொழுகின்று' (165) என ஐயனரிதனர் கருத் தோடொத்திருத்தல் காணலாம். சிசுருடை என்பது வடமொழித் திரிபு; ஏவல் செய்தல் என்னும் பொருளது. அது செய்யாது என்புழி அது என்பது ஏவல்புரிதலை. காத்திரம்-உடம்பு. இத்தவறு என்றது தந்தையிருக்க மகன் இறத்தலாகிய தவற்றினை. (28)

## நாரதன் சொன்னது கேட்ட இராமன் இலக்குவனுக்குச் சொல்லுதல்

931 அக்கிரமஞ் செய்தாரை விதிமுறையே
தண்டியா வரச ஞட்டில்
எக்கிரமங் களுங்கலங்கி மழைகுன்று
மிருந்தவத்துக் கருக னல்லன்
உக்கிரமாந் தவஞ்செய்கை காரணமா
யிம்மரண முண் டாய்த் தென்ன
விக்கிரமன் தன்மனத்தில் வெந்துயரம்
விட்டிளேயோற் கினைய சொன்ஞன்.

அக்கிரமம் செய்தாரை விதிமுறையேதண்டியா அரசன் நாட்டில்
எக்கிரமங்களும் கலங்கி மழைகுன்றும்; இருந்தவத்துக்கு
அருகன்அல்லன்
உக்கிரமாம் தவம் செய்கை காரணமாய் இம்மரணம்
உண்டாய்த்து என்ன;
விக்கிரமன் தன்மனத்தில் வெந்துயரம் விட்டு இளேயோர்க்கு
இனைய சொன்ஞன்.

பொ: 'முறையல்லாத செயலைச் செய்தவர்களை நீதிமுறைப் படி தண்டிக்காத அரசனுடைய நாட்டில் எல்லா முறைகளும் பிறழ்ந்து மழையும் குறையும்; பெரிய தவத்துக்கு உரியவனல்லாத சூத்திரன் கடுமையான தவம் செய்கின்ற காரணமாகவே இந்த மரணம் உண்டாயது' என்று நாரதன் சொல்ல, திருமாலின் அமிசமான இராமன் தன்மனத்திலிருந்த கொடிய துயரத்தை விட்டு இளையவனுக்கு இத்தன்மையானவற்றைச் சொன்னான்.

கு: கிரமம்-முறை. அக்கிரமம் என்றது முறையற்ற செயலை. நாட்டில் முறையற்ற செயலைச் செய்தவர்களை அரசன் தண்டிக்க வேண்டும். அரசன் தண்டிக்காவிட்டால் அவன் நாட்டில் எல்லா முறைகளும் பிறழும்; மழைவளங்குன்றும்; என்று கூறி இராமன் முறையறத்தவம் செய்யும் சூத்திரனைத் தண்டிக்க வேண்டும் என்பதை உணர்த்தியவாறு. அருகன்-அருகதை உள்ளவன். சூத்திரன் தவம் செய்யும் அருகதையில்லாதவன் என்றவாறு. உக்கிரம்-கொடூரம். இம்மரணம் என்றது தந்தையிருக்க மரண மடைந்துள்ள மகனுடலைச் சுட்டிக் கூறியவாறு. உண்டாய்த்து என்பது உண்டாயிற்று என்பதன் மரூஉ. "ஒன்றும் போதா நாயேனை யுய்யக் கொண்ட நின்கருணை யின்றேயின்றிப் போய்த் தோதான்" (திருவாசகம். குழைந்தபத்து) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். விக்கிரமன் என்றது திருமாலின் அமிசமான இராமனை. தந்தையிருக்க மகன் மரணம் நேர்ந்த காரணம் யாதெனப் பல்லாற்றான் ஆய்ந்து மனம் கலங்கியிருந்த இராமனுக்கு நாரதன் சொல் தெளிவுண்டாக்கியது ஆகலின் 'தன்மனத்தில் வெந்துயரம் விட்டு' என்றார். இளையோன் என்றது இலக்குவனை. (29)

## இராமன் புட்பகமேறிச் சூத்திரன் தவஞ்செய்யும் இடத்திற்குச் செல்லுதல்

932 நெஞ்சிடைவெந் துயராற்றாப் பாரிபொடு
மறையோனை நீபோய்த் தேற்றித்
துஞ்சிய மைந்தனைத் தயிலத் தோணியினி
லிடுவித்தி யென்னச் சொல்லிக்

கஞ்சநய னக்கனிவாய்க் கார்வண்ணன்
கதிரவன்ற னொளியிற் காட்டும்
விஞ்சொளிய புட்பகத்தின் மீதேறி
மேற்றிசையின் விரைவிற் போனான்.

நெஞ்சிடை வெந்துயர் ஆற்றாப் பாரியொடு மறையோனை, 'நீபோய்த் தேற்றித்
துஞ்சிய மைந்தனைத் தயிலத் தோணியினில் இடுவித்தி, என்னச் சொல்லிக்
கஞ்ச நயனக் கனிவாய்க் கார்வண்ணன் கதிரவன்றன் ஒளியின் காட்டும்
விஞ்சுஒளிய புட்பகத்தின் மீதுஏறி மேல்திசையின் விரைவில் போனான்.

பொ: நெஞ்சில் விஞ்சியுள்ள கொடிய துயரத்தை ஆற்றாது வருந்துகின்ற மனைவியோடு தங்கியுள்ள வேதியனைப் பார்த்துத் தெளிவித்து, 'நீ சென்று மனம் தெளிந்து இறந்த மைந்தன் உடம்பை தயிலத்தோணியில் இடச்செய்க' என்று சொல்லி விட்டுத் தாமரை மலர் போன்ற கண்களையும் கொவ்வைக்கனி போன்று சிவந்த வாயினையுமுடையவனாகிய மேகவண்ணத்து இராமன், சூரியன் ஒளிபோலக் காட்டுகின்ற மிக்க ஒளியினை யுடைய புட்பகவிமானத்தின் மேல் ஏறிக்கொண்டு மேற்குத் திசைநோக்கி விரைவில் சென்றான்.

கு: பாரியொடு மறையோனைத் தேற்றி என இயையும். துஞ்சுதல்-இறத்தல். தயிலத்தோணி- எண்ணெய்க்கடாரம். இடுவித்தி என்பது பிறவினை. இடச்செய்க என்னும் பொருளது. புட்பகத்தின் ஒளிச்சிறப்புப் புலப்படக் 'கதிரவன்றன் ஒளியின் காட்டும் விஞ்சொளிய புட்பகம்' என்றார். ஒளியின் என்புழி 'இன்' ஒப்புப் பொருளது. கார்வண்ணன் தேற்றி, (இடுவித்தி யென்னச்) சொல்லி, ஏறி, விரைவிற்போனான் என இயையும். விஞ்சுதல்-மிகுதல். (30)

## இராமன் தவஞ்செய்யும் சூத்திரனைத் தென்திசையில் காணுதல்

933 குடதிசையும் வடதிசையுங் குணதிசையுங்
குறிக்கொண்டு நாடிப் பின்பு
திடமிசையுங் காகுத்தன் றென்றிசைமேன்
மாதவனைத் தேடிச் செல்வான்
புடைபரந்த புண்டரிகப் பூவணைமேற்
பேடையொடு மன்னம் வைகும்
தடமருங்கு கான்மேலாய்த் தலைகீழாய்த்
தவஞ்செய்வோன் றன்னைக் கண்டான்.

குடதிசையும் வடதிசையும் குணதிசையும் குறிக்கொண்டு நாடிப் பின்பு
திடம் இசையும் காகுத்தன் தென்திசைமேல் மாதவனைத் தேடிச் செல்வான்-
புடைபரந்த புண்டரிகப் பூ அணைமேல் பேடையொடும் அன்னம வைகும்
தடம்மருங்கு கால்மேலாய்த் தலைகீழாய்த் தவம் செய்வோன் தன்னைக்கண்டான்.

பொ: மேற்கும் வடக்கும் கிழக்கும் ஆகிய திசைகளில் கருத்தோடு தேடிப்பார்த்துப் பின்பு மனோதிடம் பொருந்திய இராமன் தென்திசையில் பெரியதவம் செய்பவனைத் தேடிச் செல்கின்றவனாய், பக்கங்களில் விரிந்து பரந்த தாமரைப் பூவாகிய அணையின்மேல் பெண் அன்னத்தோடு ஆண் அன்னம் தங்கியுள்ள தடாகத்தின் பக்கத்தில் கால் மேலாகவும் தலைகீழாகவும் நின்று தவம் செய்பவனைக் கண்டான்.

கு: குறிக்கொண்டு நாடுதல் என்றது, கருத்தோடு தேடுதலை. திடம் என்பது இங்கு மனத்திட்பத்தை. மூன்று திசைகளில் தேடியும் கிடைக்கவில்லையே யென்னும் சலிப்பில்லாதவன் என்பது புலப்படுத்தியவாறு. காகுத்தன் என்பது, ககுஸ்தன் மரபில் பிறந்தவனாகிய இராமனுக்குத் தத்திதாந்தப் பெயர். தேடிச் செல்வானாய்க் கண்டான் என வினையெச்சப் பொருளதாக்குக. இனி,

'தேடிச் செல்வானாகிய காகுத்தன்' என மாறி முடித்தலும் ஆம். சூத்திரன் தவம் செய்யுமிடத்தின் இயற்கை வனப்பை இயம்ப வந்தவர், 'புடைபரந்த புண்டரிகப் பூவணை மேல் பேடையொடும் அன்னம் வைகும் தடமருங்கு' என்றார். இதனால் தவம் செய்யுமிடம் இன்பம் பெருக்கும் இயற்கையதாக இருந்தது என்று கூறித் தவஞ்செய்தற்கு ஏலாமை புலப்படுத்தியவாறு. தடம்-தடாகம். (31)

## இராமன் தவஞ்செய்வோனை எவ்வருணத்தோன்? என வினவுதல்

934 சிறைவாவ றூங்குகின்ற சேதியெனத்
தூங்குமவன் றன்னைச் சேர்ந்து
குறையாத பேரழகுக் கொண்டனிறக்
கருணைநெடுங் கோமான் கூறும்
மறையவனோ மன்னவனோ வைசியனோ
சூத்திரனோ வாக்காற் பொய்ம்மை
அறையாதிங் குனையுள்ள படியெல்லாம்
பகர்தியென வவனும் பன்னும்.

சிறைவாவல் தூங்குகின்ற சேதிஎனத் தூங்கும் அவன்தன்னைச் சேர்ந்து,
குறையாத பேரழகுக் கொண்டல் நிறக் கருணைநெடுங் கோமான் கூறும்:-
"மறையவனோ? மன்னவனோ? வைசியனோ? சூத்திரனோ? வாக்கால் பொய்ம்மை
அறையாது! இங்குஉனை உள்ளபடி எல்லாம் பகர்தி என" அவனும் பன்னும்.

பொ: சிறகுகளோடுங்கூடிய வாவல்கள் ஆலமரத்தில் தொங்குகின்ற செய்தியைப் போலத் தலைகீழாய்த் தொங்கிக் கொண்டிருக்கின்ற அவனை நெருங்கி, குறையாத பெரிய அழகையுடைய மேகவண்ணத்தனாகிய கருணைமிக்க இராமன் சொல்லுவான்: 'நீ வேதியனோ? அரசனோ? வணிகனோ? சூத்திரனோ? வாக்கினால்

பொய்பேசாது இவ்விடத்து உன்னைப் பற்றிய எல்லா விளக்கங் களையும் உள்ளபடி சொல்லுக' என்று வினவ, அவனும் சொல்லு வான்.

கு: 'சிறைவாவல் தூங்குகின்ற சேதியென' என உவமை கூறியதால் இவனும் ஒரு மரக்கிளையின் சார்பில் தலைகீழாய்த் தொங்கிக் கொண்டு தவஞ்செய்கின்றான் என்பது உய்த் துணரலாம். தூங்குதல்-தொங்குதல். தலைகீழாய்த் தொங்கும் இயல்பு வாவலுக்கே சிறப்பியல்பு ஆதலின் தலைகீழாய்த் தொங்கிக் கொண்டு தவம் செய்யும் சூத்திரனுக்கு அது பொருந்திய உவமையாயிற்று. கருணைநெடுங்கோமான் என்றது, இராமனை. உனையெல்லாம் உள்ளபடி பகர்தி என இயைக்க. பன்னுதல்-சொல்லுதல். பகர்தி என்பது முன்னிலை ஏவல். பொய்ம்மை அறையாது உள்ளபடி பகர்தி என்றது முன்னரே நாரதமுனிவன் சொல்லால் இவன் சூத்திரன் என்று உணர்ந்த தெளிவாலும் உறுதியாலும் கூறிய ஆணைமொழியாகும். நால் வருணத்துள் எவ்வருணத்தான் என்பதை உண்மையாகச் சொல் என்றவாறு. செய்தி என்பது சேதி என மருவிற்று. (32)

## இராமன் சம்புவனை வாளால் எறிதல்

935 தும்பை மலர்த் தொடையலினுய் சூத்திரயோ
னியில் வந்து தோன்றியுள்ளேன்
சம்புவனென் னப்படுவேன் தவஞ்செய்யுங்
காரணமிச் சரீரத்தோடும்
உம்பருறை பொன்னுலக முறவென்று
னுறைவானை யுருவி யோச்சிக்
கம்படியில் விழவெறிந்தான் கருமுகில்போற்
றிருமேனிக் கமல நாபன்.

"தும்பைமலர்த் தொடையலினுய்! சூத்திரயோனியில் வந்து தோன்றியுள்ளேன்; சம்புவன் என்னப்படுவேன்; தவம்செய்யும் காரணம் இச்சரீரத் தோடும்

உம்பர் உறை பொன்னுலகம் உற'' என்றான்; உறைவாளை உருவி ஒச்சிக்
கம்படியில் விழ எறிந்தான் - கருமுகில் போல் திருமேனிக் கமலநாபன்

பொ: "தும்பை மலர்கொண்டு தொடுத்த மாலையினை யுடையவனே! சூத்திர வருணத்தில் வந்து பிறந்துள்ளேன்; சம்புவன் என்று பெயர் சொல்லப்படுவேன்; யான் தவம் செய்கின்ற காரணம், எடுத்துள்ள இவ்வுடம்போடு தேவர்கள் தங்கியிருக்கின்ற பொன்னுலகத்தையடையவே'' என்று கூறினான். கரிய மேகம் போன்ற திருமேனியையும் தாமரை பூத்த உந்தியினையும் உடைய திருமாலின் அவதாரமாகிய இராமன், உறையிலிருந்த வாளினை உருவி, ஓங்கி அந்தச் சம்புவன் தலை பூமியில் விழுமாறு எறிந்தான்.

கு: அதிரப்போர் செய்யும் கருத்தினனாய் இராமன் தும்பை மாலை சூடி வந்தான் ஆதலின், அந்நிலைமை புலப்படத் 'தும்பை மலர்த் தொடையலினாய்' எனச்சம்புவன் விளித்தான். யோனி என்பது இங்கு வருணத்தை உணர்த்தியது. சம்பு எடுத்த உடம் போடு துறக்கம் புகும் கருத்தினோடு தவஞ்செய்தான் என்றவாறு. ''உடம்பொடுதுறக்க நகர் உற்றவரையொத்தார்'' (பால காண்டம் கடிமணப்படலம்) எனவும் ''தவஞ்செய்மாக்கள் தம் முடம்பு இடாஅது அதன்பயம் எய்திய அளவைமான'' (பொரு நராற்றுப்படை 91, 92) எனவும் வருவது கொண்டு உடம்பொடு துறக்கம் உறுவதும் உண்டு என உய்த்துணரலாம். உடம்பொடு பொன்னுலகம் அடையவே சம்பு தலைகீழாய்த் தவஞ்செய்தான் என்பது கருத்து. ஓச்சுதல்-ஓங்குதல். கம்-தலை. படி-தரை. தலை தரையில் விழுமாறு வாளை உருவி எறிந்தான் என்க. படைப்புக் குரிய பிரமனோடு மலர்ந்த உந்தித் தாமரையையுடைய திருமாலே இங்கு அழித்தற்கும் உரியவனானான் என்பார், அப் பெயரால் கூறினார். (33)

## தேவர்கள் இராமனை 'வரம்வேண்டிக்கொள்' எனல்

936 விண்ணவர்பூ மழைபொழிந்து வேதியரா
சிகள்கூற வேலை சூழ்ந்த
மண்ணதனி னிகழ்வருண தன்மத்தை
வரம்பழித்து நின்கை மாண்டோன்
புண்ணியஞ்செய் தோர்நண்ணும் பொன்னுலகும்
புகலரிது புரைதீர் நின்னுள்
கண்ணியதோர் வரம்வேண்டிக் கொள்ளென்னக்
கார்மேனிக் கண்ணன் கூறும.

விண்ணவர், பூமழைபொழிந்து, வேதியர்ஆசிகள் கூற, வேலை சூழ்ந்த
மண் அதனில் நிகழ்வருண தன்மத்தை வரம்புஅழித்து நின் மாண்டோன்
புண்ணியம் செய்தோர் நண்ணும் பொன்னுலகும் புகல்அரிது; புரைதீர் நின்உள்
கண்ணியதோர் வரம் வேண்டிக் கொள் என்னக் கார்மேனிக் கண்ணன் கூறும்.

பொ: (இராமன் சம்புவின் தலையை வெட்டி வீழ்த்தியவுடன்) வேதியர்கள் இராமனுக்கு ஆசிகள் சொல்ல, தேவர்கள் இராமன் மேல் மலர்மாரி பெய்துவிட்டு "(இராம!) கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் நிகழ்ந்து வருகின்ற வருணாச்சிரம தருமத்தின்வரம்பினை அழித்து விட்டு (த்தனக்கு ஏலாத தவத்தினைச் செய்து) நின் கையால் இறந்தவனாகிய சம்பு புண்ணியம் செய்தவர்கள் அடைதற்குரிய பொன்னுலகம் புகமுடியாது; குற்றமற்ற நின் உள்ளத்தில் கருதியதொரு வரத்தை வேண்டிக்கொள்' என்று கூற, மேகம் போன்ற மேனியினையுடைய இராமன் சொல்லுவான்

கு: 'வரம் வேண்டிக்கொள்' என்று இராமனை நோக்கிக் கூறியவர்கள் விண்ணவர்கள். விண்ணவர்கள் பூமழை பெய்து விட்டு இராமனை நோக்கி 'வரம்வேண்டிக் கொள்' என்றனர் என்க. வருணதன்மத்தை வரம்பழித்து என்றது, சூத்திர வருணத்தில் பிறந்த சம்பு அந்தணர் வருணத்திற்குரிய

தவத்தைச் செய்து என்றவாறு. தருமத்தையழித்தவன் தருமம் செய்தோர் நண்ணும் பொன்னுலகம் புகுதல் இயலாது என்றவாறு. அரிது இங்கு இன்மைப் பொருளது. 'மனக்கவலை மாற்றலரிது' (திருக்குறள்-கடவுள் வாழ்த்து) என்புழிப்போல. கண்ணிய-கருதிய. இராமன் கூறியது வரும் செய்யுளிற் காண்க. (34)

## இராமன் வேண்டிய வரம்

937 மறுகுபெருந் துயருடைய மறையவன்
சேயத்தலத்தின் மாண்டோ னாவி
பெறுவரம்வேண் டுவெனென்னப் பெருந்தவத்
தோன்பட வாவி பெற்ருனென்னச்
செறிவலியிந் திரனாதி தேவர்களுஞ்
சீதரனுந் தீய பாவம்
குறுகரிய மாதவருங் குறுமுனிவாழ்
தவவனத்தைக் குறுகினுரால்.

மறுகுபெருந் துயருடைய மறையவன் சேய் அத்தலத்தின் மாண்டோன் ஆவி
பெறுவரம் வேண்டுவென் என்னப் பெருந்தவத்தோன்பட ஆவி பெற்ருன் என்னச்
செறிவலி இந்திரன் ஆதி தேவர்களும் சீதரனும் தீய பாவம்
குறுகரிய மாதவரும் குறுமுனிவாழ் தவ வனத்தைக் குறுகினுரால்.

பொ: 'மனம் கலங்குகின்ற பெரிய துயரையுடைய வேதியன் மகன், அந்தத் தலத்தில் இறந்தவன் - உயிர்பெறும் வரம் வேண்டுகின்றேன்' என்று இராமன் கூறத் தேவர்கள், 'பெரிய தவம் செய்தவன் இறத்தலால் மறையவன் மகன் உயிர் பெற்று விட்டான்' என்று சொல்ல நெருங்கிய வலிமையுடைய இந்திரன் முதலிய தேவர்களும் இராமனும், தீயதாகிய பாவம் நெருங்காத பெரிய தவமுனிவர்களும் குறுமுனியாகிய அகத்தியர் வாழ்கின்ற தவவனத்தை அடைந்தார்கள்.

கு: மறுகுதல்-கலங்குதல். மாண்டோனுகிய மறையவன் சேய்ஆவி பெறுவரம் என மாற்றலும் ஆம். பெருந்தவத்தோன் என்றது, தலைகிழாய் வாவலைப்போல மரத்தில் தொங்கிக் கொண்டு தவஞ்செய்த அருமை புலப்பட வேண்டி என்க. இனி, இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றக் கூறியது எனலும் ஆம். சீ-திருமகள். திருமகளை மார்பில் தாங்கியிருப்பவன் என்ற காரணம் பற்றித் திருமால் சீதரன் எனப்பெயர் பெறுவான். மாதவத்தின் பெருமை புலப்பட வேண்டித் தீயபாவம் குறுகரிய மாதவர் எனச் சிறப்பித்தார். குறுமுனி-வடிவத்தால் குறுகிய அகத்திய முனிவன். குறுகுதல்-அடைதல். குறுகரிய மாதவரும் குறுகினர் என்புழி முரண்டொடை அமைந்துள்ளமை காணலாம். (35)

## தேவரும் முனிவரும் இராமனோடு அகத்தியர் ஆச்சிரமம் அடைதல்

938 மறைமிகநல் லறந்தழைக்க வாளவுணர்
குலமுழுது மறைந்து நாசம்
உறவெழுஞா லம்பிழைக்க வொருகுடங்கை
யால்வேலை யேழுமுண்ட
அறமுனிவ ளுச்சிரம மணுகினரா
லடலரக்கன் றலையீ ரைந்தும்
இறமுனியுஞ் சிலையோனு மிந்திரனே
முதலான விமையோர் யாரும்.

மறைமிக, நல்லறம்தழைக்க, வாள்அவுணர் குலமுழுதும் மறைந்து நாசம்
உறஎழுஞாலம் பிழைக்க, ஒருகுடங்கையால் வேலை ஏழும் உண்ட
அறமுனிவன் ஆச்சிரமம் அணுகினரால் அடல் அரக்கன் தலைஈரைந்தும்
இற, முனியும் சிலையோனும் இந்திரனே முதலான இமையோர் யாரும்.

பொ: வேதநெறி ஓங்கவும், தருமம் தழைக்கவும் கொடிய அவுணர்குல முழுவதும் மறைந்து ஒழியவும், ஏழுலகங்களும் உய்யவும் ஓர் உள்ளங்கையால் கடல் ஏழினையும் உண்ட தரும வடிவினனாகிய அகத்திய முனிவனது ஆச்சிரமத்தை அடைந் தார்கள். யாரெனின்? வலிமை மிக்க இராவணனது பத்துத் தலைகளும் இற்று வீழுமாறு கோபித்த வில்லையேந்திய இராமனும் இந்திரன் முதலான தேவர்களும்.

கு: அகத்தியன் கடல்நீரை யுண்டமையால் உண்டான நலங்களைக் கூறுவாராய் மறை மிக, அறந்தழைக்க அவுணர் நாசமுற, எழுஞாலம் பிழைக்க என்றார். அவன் உண்ணாதிருந் தால் மறைநெறி மறையும்; அறங்குன்றும்; அவுணர் வாழ்வர்; ஏழுலகும் உய்யாது என்றவாறு. குடங்கை-உள்ளங்கை. ஏழு கடல் நீரையும் ஓர் உள்ளங்கையில் வரச் செய்து உண்டவன் அகத்தியன் என அவன் ஆற்றல் மிகுதியை யுணர்த்தியவாறு. அறமுனிவன் என்றது தருமத்திற்குத் துணையாக நின்று பாவிகளை ஒழிக்கத் துணைபுரிந்தவன் என்றவாறு. இந்திரனுக்கு மாறான விருத்தராசூரன் அவ்விந்திரன் வச்சிரப்படைக்கு ஆற்றாது கடலில் மறைந்த ஞான்று அகத்திய முனிவன், கடல்நீரை யெல்லாம் உள்ளங்கையால் முகந்து உண்டு விருத்தராசூரனைக் காட்டிக் கொல்வித்தவன் என்ற வரலாற்றை நினைப்பித்தவாறு. அரக்கன் என்றது இராவணனை. அவன் தலை பத்தினையும் வில்வழி விட்ட அம்பினால் எறிந்தான் இராமன் ஆதலின், அரக்கன் தலையீரைந்தும் இறமுனியும் சிலையோனும் என அவனைக் குறிப் பிட்டவாறு. இற-இற்றுவிழ சிலை கோதண்டம். (36)

## தேவரும் முனிவரும் வணங்கிச் சென்றபின் இராமனோடு அகத்தியன் பேசுதல்

939 வாசவனே முதலானோர் மாதவத்தோர் விதி
முறையேன் மகிழ்ந்து செய்த
பூசனைகொண் டாங்கவர்கள் பொன்னுலகிற்
போயினபின் புரைதீ ருள்ளக்

கோசலநா டன்குணங்கள் கொண்டாடிப்
பூரித்துக் குசல வார்த்தை
பேசியினி திருந்ததற்பின் பெருந்தவத்தோ
னிவையிவையே பின்பு பேசும்.

வாசவனே முதலானேர் மாதவத்தோர் விதிமுறையே மகிழ்ந்து செய்த
பூசனைகொண்டு ஆங்கு அவர்கள் பொன்னுலகின் போயின பின் புரைதீர் உள்ளக்
கோசலநாடன் குணங்கள் கொண்டாடிப் பூரித்துக் குசல வார்த்தை
பேசிஇனிது இருந்ததற்பின் பெருந்தவத்தோன் இவைஇவையே பின்புபேசும்:

பொ: இந்திரன் முதலிய தேவர்களும் பெருந்தவமுனிவர்களும் விதிமுறையாக மகிழ்ச்சியுடன் செய்த பூசனைகளை யேற்றுக் கொண்டு அவ்விருதிறத்தாரும் பொன்னுலகிற்குப் போன பின்பு குற்றம் நீங்கிய உள்ளத்தினையுடைய கோசல நாடனாகிய இராமன் குணங்களைக் கொண்டாடி உளம்பூரித்து அவ்விராமனோடு நலம் விசாரிக்கும் வார்த்தைகளைப் பேசி இனிதே இருந்தபின்பு பெரிய தவத்தினனாகிய அகத்தியன் இந்த இந்தச் சொற்களைப் பின்பு பேசுவானானன்.

கு: வாசவன்-இந்திரன். தேவரும் முனிவரும் அகத்தியனைப் பூசனை செய்து போற்றிப் பொன்னுலகம் போயினர் என்றவாறு. புரை-குற்றம். குற்றம் என்பதையே நினைந்து பழகாத உள்ளம் என்பார், 'புரைதீர் உள்ளக் கோசலநாடன்' என்றார். கோசல நாடன் - இராமன். அவன் குணங்கள் பலவற்றைச் சொல்லிப் பாராட்டிவிட்டு அதனால் மனம் நிறைவு பெற்றார் அகத்தியர் என்பார், 'குணங் கொண்டாடிப் பூரித்து' என்றார். குசல வார்த்தை-நலம் விசாரிக்கும் சொற்கள். பெருந்தவத்தோன் என்றது அகத்தியனை. அவன் பேசியதை வருஞ்செய்யுளிற் காணலாம்.

(37)

## அகத்தியன் கூறியவை
### வேறு

940 கொற்ற வில்லி தனது கொடுத்தலின்
பெற்றொ ருத்தன் மகிழ்ந்துகொண் டாடிடப்
பெற்றதீகை பெறும்பல பாத்திரம்
உற்ற போதென வோதினர் வேதியர்.

"கொற்ற வில்லி! தனது கொடுத்தலின்
மற்றொருத்தன் மகிழ்ந்து கொண்டாடிடப்,
பெற்றது ஈகை; பெறும்பல பாத்திரம்
உற்ற போது", என ஓதினர் வேதியர்.

பொ: வெற்றிக்குரிய வில்லையுடைய இராம! தானம் பெறுதற்குரிய தகுதியாகிய வலிமையையுடைய பாத்திரம் தன்னை உற்றபோது, தனது பொருளைக் கொடுத்தலால், ஏற்போனாகிய ஒருத்தன் அப் பொருளைக் கண்டு மகிழ்ந்து கொண்டாடப் பெற்றதே ஈகை ஆகும்; என வேதம் உணர்ந்தோர் ஓதியுள்ளார்கள்.

கு: இராமனுக்கு ஒப்புசிறந்த அணிகலனைத் தானமாகக் கொடுக்க விரும்பும் அகத்தியன், ஈகையாவது எத்தகையது? என்பதை விளக்கியவாறு. தானம் பெறுதற்குரிய சிறந்த பாத்திரமானவன் தன்னை வந்து அடைந்தபோது, தான் அறநெறியான் ஈட்டிய பொருளை ஒருவன் கொடுக்கின்றான்; அப்பொருளையேற்றுக் கொண்ட ஒருத்தன் மகிழ்ந்து கொண்டாடப் பெற்றதே சிறந்த ஈகையாகும் என்றவாறு. வேதமும் இதுவே கூறும் எஃபான் 'என ஓதினர் வேதியர்' என வேதமுணர்ந்தோர் கூற்றாகக் கூறினான். ஏற்போன் விருப்பத்திற்குரிய பொருளைக் கொடுத்தால் ஏற்றவன் மகிழ்ந்து கொண்டாடுவான். அவ்வாறு கொண்டாடக் கொடுத்தலே ஈகை என்றவாறு. 'ஈத்துவக்குமின்பம்' என இதனைக் குறிப்பிடுவார் வள்ளுவர். கொடுத்த கொடையினால் பெற்றவர்க்கு வரும் முகமலர்ச்சி என்பார் மணக்குடவர். பெறும் பல பாத்திரம் என்றது, தானம் பெறுதற்குரிய தகுதி மிக்க பாத்திரத்தை. (38)

941 வான வர்க்கன்றி மண்ணுல கத்தில்வாழ்
மான வர்க்கும் வகுக்கவொண் ணாதது
தான வப்பகை யாகிய சார்ங்கிநீ
ஆன தற்பி னினக்கணி யாவது.

வானவர்க்கு அன்றி மண் உலகத்தில் வாழ்
மானவர்க்கும் வகுக்க ஒண்ணாதது;
தானவப் பகையாகிய சார்ங்கி நீ
ஆனதற்பின் நினக்கு அணியாவது.

பொ: வானுலகத்தில் உள்ள தேவர்கட்கே யன்றி மண்ணுல-கத்தில் வாழ்கின்ற மனிதர்கட்கும் உரியஅணி எனச் சொல்லொணாத சிறப்பினது; அரக்கர்க்குப் பகையாகிய சாரங்கம் என்னும் வில்லையுடையவன் நீ ஆன பின்பு நினக்கே அணிகலன் பூணத்-தகுவது.

கு: அணிகலனின் சிறப்புக் கூறுவாராய் வானவர்க்கேயன்றி மானவர்க்கும் வகுக்க வொண்ணாதது என்றார். வகுக்க ஒண்ணாதது என்பதற்குச் செய்ய முடியாதது எனப் பொருள் கூறலும் ஆம். தானவர் - அரக்கர். சார்ங்கத்தையுடையவன் சார்ங்கி எனப்-பட்டான். தானவரை அழிக்கும் வில்லையுடைய உனக்கே பொருத்தமான அணிகலன் இது என்றவாறு. மானவர்-மனிதர். தேவர்க்கும் மனிதர்க்கும் அணியவொண்ணாதது; இவ்வணிகலன், தானவப்பகையாகிய வில்லையேந்திய நினக்குப் பொருந்திய அணிகலன் ஆகும் என்றபடி. (39)

942 நீடு மாநிலத் தில்லது நீண்மறை
பாடு பங்கயத் தோனுல குள்ளது
தேடருஞ் சுடர்ச் செம்மணிப் பூணிது
கோடி யென்று கொடுத்தனன் கோதிலான்.

நீடும் மாநிலத்து இல்லது; நீள்மறை
பாடு பங்கயத்தோன் உலகு உள்ளது;
தேடரும் சுடர்ச் செம்மணிப் பூண்இது,
கோடி! என்று கொடுத்தனன் கோதிலான்.

பொ: 'பரந்துள்ள இந்தப் பெரிய நிலத்தில் யாண்டும் இல்லாதது; நீண்ட வேதங்களைப் பாடுகின்ற தாமரை மலரில் உள்ள பிரமன் உலகத்தில் உள்ளது; யாண்டுச் சென்றும் தேடிப் பெறுதற்கு அரிய சுடர்மிக்க செம்மணி பதித்த அணிகலன் ஆகும் இதனைக் கொள்வாயாக' என்று சொல்லிக் குற்றமற்றவனாகிய அகத்தியன் இராமன் கையில் கொடுத்தான்.

கு: நீடுதல் இங்குப் பரவியிருத்தலை உணர்த்தியது. பிரமன் எப்போதும் வேதம் பாடும் இயல்பினனாதல் புலப்பட 'நீண்மறை பாடு பங்கயத்தோன்'' என்றார். அந்த அணிகலனில் பதித்த செம்மணியின் ஒளி யாண்டும் பெறுதற்கு அரிது என்பார், "தேடருஞ்சுடர்ச் செம்மணிப்பூண்' என்றார். கோடி-கொள்ளுதி. பூணாகிய இதனைக் கொள்ளுதி என்றவாறு. கோது இலான் என்றது, அகத்தியரை. இருவகைப் பற்றாகிய கோது அகத்தியரிடம் இல்லை என்றவாறு. மிகச் சிறந்த செம்மணி பதித்த அணிகலன் தனக்கு எளிதாகக் கிடைக்கப் பெற்றும் அதனைத் தனக்கென்று வைத்துக் கொள்ளாது இராமனுக்குக் கொடுத்தமையாலும் இது உணரப்படும். 'கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன்று' (புறநா.) என்ற அடியை அடியொற்றியதாகக் 'கோடியென்று கொடுத்தனன்' என்பது அமைந்திருத்தல் காணலாம். பிரமனுலகத்திலிருந்து வந்தது என்பார், 'பங்கயத்தோனுலகுள்ளது' என்றார். (40)

## அந்த ஆபரணத்தைக் கண்ட இராமன் அது வந்தவாறு வினவுதல்

943 அந்த வாபர ணங்கண்ட வாழியான்
உந்து தீவினை யோய்முன் புனக்கிது
தந்து ளோன்றனைச் சாற்றெனத் தன்னிடை
வந்த காரண மாமுனி கூறுவான்.

அந்த ஆபரணம் கண்ட ஆழியான்,
உந்து தீவினையோய்! முன்பு உனக்கு இது
தந்துளோன் தனைச் சாற்று எனத் தன்னிடை
வந்த காரணம் மாமுனி கூறுவான்.

பொ: அந்தச் செம்மணி பதித்த சிறப்புடை அணிகலனைக் கண்ட இராமன், 'தீவினைகளை நீக்கிய முனிவ! உனக்கு இந்த அணிகலனைத் தந்தவன் தன்னைச் சொல்லுக!' என்று கேட்க, சிறந்த அகத்திய முனிவன் தன்னிடத்து அது வந்த காரணத்தைச் சொல்லுவானானான்.

கு: 'ஆழியான்' என்றது, ஆணைச்சக்கரத்தையுடையவன் என்ற காரணம் பற்றி இராமனுக்குப் பெயராயிற்று. தெய்வ நிலை நினைந்து கூறியதாகக் கொண்டு, 'சக்கரப்படையையுடைய திருமாலின் அவதாரமான இராமன்' எனப் பொருள் கூறலும் ஆம். 'தீவினையை யுந்தியோய்' என மாற்றிப் பொருள் கொள்க. உந்துதல்-தள்ளுதல்-நீக்குதல். முற்றுந் துறந்த முனிவர்க்குச் செம்மணி பதித்த சிறப்புடை அணிகலன் உரிமைப் பொருளாக இருத்தல் இயலாது. வேறு களவு முதலிய தீவினைகளைச் செய்து அவ்வணிகலனைப் பெறும் இயல்பு முனிவர்க்கு இருக்க இயலாது என்ற கருத்துத் தோன்றவே, 'உந்து தீவினையோய்!' என விளித்தவாறு. தீவினை நீங்கிய அகத்திய முனிவர்க்கு யாரேனும் அன்புடன் அளித்ததுவே என்ற துணிவினால் 'இது தந்துளோன்றனைச் சாற்று' என இராமன் வினவினான் என்க. (41)

## அகத்தியன் கூறுதல்

944 விரிந்த தானை விறலரக் கன்றலை
பருந்து நாயும் பகுந்துணப் பண்டுபோர்
புரிந்து ளாய்முன் புகுந்தது கேட்டியான்
அருந்த வஞ்செய வாமிடந் தேடுநாள்.

விரிந்த தானை விறல் அரக்கன் தலை
பருந்தும் நாயும் பகுந்து உணப் பண்டுபோர்
புரிந்துளாய்! முன்புகுந்தது கேட்டி! யான்
அருந்தவம்செய ஆம் இடம் தேடுநாள்.

பொ: விரிவான பெரிய சேனையையுடைய வெற்றி வாய்ந்த அரக்கனாகிய இராவணனது தலைகளைப் பருந்தும் நாயும் பகுந்துக் கொண்டு உண்ணுமாறு முன்பு போர் புரிந்துள்ள வீரனே!

முன்பு நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைக் கேட்பாயாக! யான் அரிய தவத்தினை அமைதியாகச் செய்வதற்கான நல்லிடத்தைத் தேடுகின்ற நாளில்.

கு: குளகம். ஆயிரம் வெள்ளத்தானையாதலின் 'விரிந்த தானை' என இராவணனது சேனையைக் குறிப்பிட்டவாறு. விறல்-வெற்றி. வெல்லுதற்கரிய விரிந்த சேனையும் வெற்றியையும் உடையனுயினும் இராவணனை எளிதில் வென்றவன் இராமன் என்பார், 'அரக்கன்தலை பருந்து நாயும் பகுந்துணப்பண்டுபோர் புரிந்துளாய்' என்றார். ஆமிடம்-தக்க இடம். (42)

945 சிங்க மாதிதி ரியச்சி யோனிகள்
தங்கி டாதது சார்புள் ளகன்றது
துங்க மானுடர் தோற்றமி லாததோர்
கொங்கு மாமலர்ச் சோலையைக் கூடினேன்.

சிங்கம் ஆதி திரியச்சி யோனிகள்
தங்கிடாதது; சார்புள அகன்றது;
துங்க மானுடர் தோற்றம் இலாதது ஓர்
கொங்கு மாமலர்ச் சோலையைக் கூடினேன்.

பொ: சிங்கம் முதலிய விலங்கினங்கள் தங்கப் பெருதது; அங்குச் சார்ந்து வாழும் பறவைகள் இல்லாதது, வலிமையுடைய மானிடர்கள் தோற்றமே இல்லாததுமாகிய ஒரு தேன் நிறைந்த மலர்ச்சோலையைச் சேர்ந்தேன்.

கு: திரியக்தி என்ற வடசொல்லின் திரிபாகத் திரியச்சி என்பது வந்தது. திரியக்தி என்பது விலங்கு என்னும் பொருளது. திரியச்சி யோனி என்றது விலங்குப் பிறவியாகப் பிறந்தன வற்றை. விலங்குகள் தங்காதது; பறவைகள் நீங்கப் பெற்றது, மானுடர் தோற்றமிலாதது என அந்தச் சோலையின் இயல்பைச் சிறப்பித்தவாறு. எனவே, விலங்கும் பறவையும் மானுடரும் இயங்காததாய் அமைதி மிக்கிருந்தது அந்தச்சோலை என்றவாறு. கொங்கு-தேன். கூடினேன் என்றது அடைந்தேன் என்னும் பொருளது. (43)

946 அன்ன கானகத் தம்புயப் பூவணை
அன்னம் பேடையொ டன்போ டுறங்குவ
தன்ன தங்க டழுவிய தாழ்கடல்
அன்ன பூந்தட வாவிகண் டேனரோ.

அன்ன கானகத்து அம்புயப் பூவணை
அன்னம் பேடையொடு அன்போடு உறங்குவ
தன்நதங்கள் தழுவிய தாழ்கடல்
அன்ன பூந்தட ஆவிகண்டேன் அரோ.

பொ: அத்தன்மையான காட்டில் தாமரை மலராகிய அணையில் அன்னம் தன்பெண் அன்னத்தோடு சேர்ந்து அன்போடு உறங்குதற்கு இடமானதும், தன்னுடைய நதிகளைத் தழுவியுள்ள ஆழ்ந்த கடல் போன்றதும் ஆகிய பொலிவுள்ள பெரிய தடாகத்தைக் கண்டேன்.

கு: முன்கூறிய காட்டில் விலங்கும் பறவையும் மக்களும் இல்லையாயினும் அக்காட்டின் நடுவிலுள்ள தடாகத்தில் தாமரை மலர்மேல் அன்னங்கள் உறங்கிக் கிடந்தன என்றவாறு. அன்னம் பேடையொடு கூடி உறங்கும் பூந்தட ஆவி தனக்குரிய நதிகளால் தழுவப் பெற்ற தாழ்கடல் ஒத்தது என்றவாறு. நதம்-மேற்கு நோக்கிச் செல்லும் ஆறு. இங்குப் பொதுப் பொருளில் வந்தது. ஆவி-தடாகம். அன்னந் திளைக்கும் அழகிய தடாகத்தைக் கண்டேன் என அகத்தியர் கூறுகிறார். தாழ்கடல்-ஆழ்ந்த கடல். கடலரசனுக்கு ஆறுகளை மனைவியராகக் கூறும் மரபும் உண்டு. அம்புயப்பூ-தாமரைப்பூ. பூவாகிய அணை என உருவகமாக்குக. உறங்குவ பூந்தடம், தாழ்கடல் அன்னபூந்தடம் எனத் தனித்தனி இயையும். அரோ-அசை. (44)

947 ஆய வாவி மருங்கிடை யாருமில்
தூய வாச்சிர மங்கண்டு துன்னிருள்
மேய வல்லதிற் றங்கிவி டிந்தபின்
காய மாய வொருசவங் கண்டனன்.

ஆய வாவி மருங்கிடை யாரும்இல்
தூய ஆச்சிரமம் கண்டு, துன்இருள்
மேய அல், அதில் தங்கி, விடிந்தபின்
காயம் ஆய ஒரு சவம் கண்டனன்.

பொ: அந்தத் தடாகத்தின் பக்கத்தில் யாரும் இல்லாத தூய்மையான ஒரு ஆச்சிரமத்தைக் கண்டு, நெருங்கிய இருள் பொருந்திய இரவு முழுவதும் அந்த ஆச்சிரமத்தில் தங்கியிருந்து, பொழுதுவிடிந்த பின்பு உயிரின்றி உடம்பு மட்டுமுள்ள ஒரு பிணத்தைக் கண்டேன்.

கு: யாரும் இல்லாத ஆச்சிரமம் தூய்மையாகவும் இருந்தமையால் இருள் நிறைந்த ஓரிரவு அந்த ஆச்சிரமத்தில் தங்கினுர் அகத்தியர் என்க. காயம்-உடம்பு. உயிர் இல்லாது உடம்பு மட்டுமே இருத்தலின் 'காயம் ஆய ஒரு சவம்' என்ருர். சவம்-பிணம். காயம்-உடம்பு. (45)

948 அன்ன காலை யரம்பைய ராடிட
மன்னு மாதவர் சூழ்தர மாகதர்
துன்னி யேத்திட தும்புரு நாரதர்
என்ன போவென வெங்கணும் பாடிட.

அன்ன காலை அரம்பையர் ஆடிட
மன்னும் மாதவர் சூழ்தர, மாகதர்
துன்னி ஏத்திட தும்புரு நாரதர்
என்ன போ என எங்கணும் பாடிட.

பொ: அத்தகைய காலையில் அரம்பை மாதர்கள் ஆடிடவும் நிலைபெற்ற பெருந்தவமுடைய முனிவர்கள் சூழ்ந்து வரவும், மாகதர்கள் நெருங்கியிருந்து ஏத்திடவும், தும்புரு நாரதர், 'என்ன போ' என யாவரும் வியந்து பாராட்ட எவ்விடத்தும் பாடிடவும்,

கு: குளகம். மாகதர் என்போர், அரசன்புகழை இருந்து ஏத்துவோராவர். துன்னி-நெருங்கியிருந்து. ஏத்துதல்-போற்றிப் பாடுதல். தும்புருவும் நாரதரும் பாடுவதைக் கேட்டவர்கள் அந்த

இசையில் ஈடுபாடு கொண்டவராய் வியந்து சொல்லும் போது 'என்ன போ' எனத் தம்மை மறந்து கூறுவார்கள் என்றபடி. (46)

949 இந்தி ராதி யிமையவர் போற்றிட
வந்து தோன்றினன் மாமணித் தேரின்மேல்
அந்த ரத்தோர் புமானத் தேரினின்
றிந்த மண்ணிலிழிந்திது செய்தனன்.

இந்திராதி இமையவர் போற்றிட,
வந்து தோன்றினன் மாமணித் தேரின்மேல்
அந்தரத் தோர்புமான்; அத்தேரின் நின்று
இந்த மண்ணில் இழிந்து இது செய்தனன்.

பொ: இந்திரன் முதலிய தேவர்கள் போற்றிட விண்ணுலகத்திலிருந்து ஒரு மன்னன் சிறந்த மணிகள் பதித்த தேரின்மேல் வந்து தோன்றினன். பின்பு அந்தத்தேரிலிருந்து இந்த மண்ணுலகத்தில் இறங்கி இந்தச் செயலைச் செய்தான்.

கு: அந்தரத்து ஓர் புமான் என்றது, விண்ணுலகத்தில் உள்ள ஓர் மன்னன் என்றவாறு. புமான்-மன்னன். மண் அண்மையதாதல் தோன்ற இந்த மண் என அண்மைச் சுட்டால் சுட்டிக் கூறினர். (47)

950 சார வந்தச் சவத்தினைத் தன்வயி
றார வுண்டு பெயர்ந்தணிப் பொய்கையில்
வாரி மொண்டு குடித்துவாய் பூசிநற்
றேரி லேறப் புகுதலும் சென்றியான்.

சார வந்து அச்சவத்தினைத் தன்வயிறு
ஆர உண்டு பெயர்ந்து அணிப் பொய்கையில்
வாரி மொண்டு குடித்து வாய்பூசி நல்
தேரில் ஏறப் புகுதலும் சென்றியான்.

பொ: ஆசிரமத்தைச் சார வந்து அந்தப் பிணத்தினைத் தன் வயிறுர உண்டு, பின் உண்பதனின்று பெயர்ந்து அழகிய பொய் கையில் நீரை கையால் மொண்டு குடித்து விட்டு, வாய் கழுவி விட்டு நல்ல தேரில் ஏறப்புக்க அளவில் யான் சென்று.

கு: குளகம். வாரி-நீர். வாய்பூசுதல் என்றது உண்டபின் வாய்கழுவுதலே. யான் சென்று என மாற்றுக. (48)

951 தேவ விச்சவந் தின்றிடக் காரணம்
நீவி ளம்புதி நின்பெய ரேதுநீ
யாவ னென்ன வெழின்மணிப் பூணினேன்
பாவ நாச வெனக்கிவை பன்னினன்.

தேவ! இச்சவம் தின்றிடக் காரணம்
நீ விளம்புதி! நின் பெயர் ஏது? நீ
யாவன்? என்ன, எழில் மணிப்பூணினேன்
பாவ நாச! எனக்கு இவை பன்னினன்.

பொ: தேவ! இந்தப் பிணத்தை நீ தின்றிடக் காரணம் என்ன என்பதைச் சொல்லுக. நீ யார்? நின் பெயர் ஏது? என்று யான் அத்தேவனைக் கேட்க, பாவத்தை அழிக்கவல்ல இராம! எழில் மிக்க மணிகள் பதித்த அணிகலன்களையுடைய அத்தேவன் எனக்கு இவற்றைச் சொன்னன்.

கு: 'பாவநாச' என்றது இராமனை நோக்கிய விளி. பிணந் தின்னுவோனின் சாபத்தை ஒழிக்க வல்லனாகிய அகத்தியன், இராமனை, 'பாவநாச!' என இப்போது கூறியது மிகப் பொருத்த மானதாகும். நின் மகத்துவம் நின்னோடு சேர்ந்த எனக்கும் வந்ததுபோலும் என்று குறிப்பிட்டவாறு. பன்னுதல்-சொல்லுதல். எழின்மணிப்பூணினேன் என்றது பிணந்தின்றவனை. (49)

## சுவேதன் தன் வரலாறு கூறுதல்
## வேறு

952 துங்க வரைத்தோள் வைதற்பன் சுகேத
னென்போன் றொல்லுலகோர்
தங்கு புவன மீன்றெடுத்ததாய் போல்
வளர்த்தோன் றனக்குரிய
மங்கை மாரின் மூத்தவடன் வயிற்றி
லுதித்தேன் சுவேதை யென
எங்கு நிகழ்பேர் மின்னனையா ளீன்றாள்
சுவேத னென்போனே.

துங்க வரைத்தோள் வைதற்பன் சுகேதன் என்போன் தொல் உலகோர்
தங்கு புவனம் ஈன்று எடுத்த தாய்போல் வளர்த்தோன்; தனக்குஉரிய
மங்கைமாரில் மூத்தவள்தன் வயிற்றில் உதித்தேன்; சுவேதை யென
எங்கு நிகழ்பேர் மின்அனையாள் ஈன்றாள் சுவேதன் என்போனே.

பொ: வலிமையான மலைபோன்ற தோள்களையுடைய வைதற்ப நாட்டினனாகிய சுகேதன் என்பவன், பழமையான உலகத்துள்ளோர் தங்கியுள்ள புவனத்தைப்பெற்றெடுத்த தாய் போல அன்போடு வளர்த்தவன்; தனக்கு உரிமைபூண்ட மனைவியரில் மூத்தவளின் வயிற்றில் உதித்தேன்; சுவேதை என்று எங்கும் பரவிய பெயரினையுடைய மின்னலைப் போன்றவள் என்னைப் பெற்றாள்; சுவேதன் எனப் பெயர் சொல்லப்படுவேன்.

கு: துங்கம்-வலிமை. விதர்ப்ப நாட்டினன்; சுகேதன் எனப் பெயர் பெற்றவன் என்க. அவன் தன்னாட்டு மக்கள்பால் காட்டிய அன்பினை யெடுத்துக் காட்ட வேண்டி 'புவனமீன்றெடுத்த தாய் போல் வளர்த்தோன்' எனச் சிறப்பித்தார். தந்தை சுகேதன்; தாய் சுவேதை. மகன் சுவேதன் என்க. என்போனே என்றது என்று பெயர் சொல்லப் படுவேன் என்றவாறு. சுதேவன் என்ற பெயரே வான்மீகத்தில் காணப்படுகின்றது. (50)

953 எந்தை வான மெய்தியபி னீரைஞ்
நூறாண் டெறிகடல்சூழ்
இந்த ஞால மினிதாண்டிங் கெல்லாப்
பகையு மறுத்தென்பின்
வந்த சுரதற் கரசளித்திவ் வனத்தின்
மூவா யிரத்தாண்டு
சிந்தை யொருங்கி யருந்தவங்கள் செய்து
காலத் தினையடைந்தேன்.

எந்தை வானம் எய்தியபின் ஈரைஞ்நூறாண்டு எறிகடல் சூழ்
இந்த ஞாலம் இனிது ஆண்டு இங்கு எல்லாப் பகையும் அறுத்து என்பின்
வந்த சுரதற்கு அரசு அளித்துஇவ் வனத்தின் மூவாயிரத் தாண்டு
சிந்தையொருங்கி அருந்தவங்கள் செய்து காலத்தினை அடைந் தேன்.

போ: என்தந்தை வாழ்வுநீத்து விண்ணுலகம் அடைந்த பின்பு ஆயிரம் ஆண்டுகள் அலைகடல் சூழ்ந்த இந்தப் பூவுலகத்தை இனிதாக ஆட்சிசெய்து இவ்விடத்துப் புறப்பகையும் அகப் பகையுமாகிய எல்லாப் பகையும் அறுத்து எனக்குப் பின்வந்த வணங்கிய என்தம்பி சுரதனுக்கு அரசினை அளித்துவிட்டு இந்த வனத்தில் மூவாயிரம் ஆண்டுகள் மனத்தை ஒருமைப்படுத்தி அரிய தவங்களைச் செய்து காலத்தின் பயனை அடைந்தேன்.

கு: புறப்பகை யறுத்துப் பழகிய சுவேதன் காம வெகுளி மயக்கம் என்கின்ற அகப்பகையையறுக்கும் ஆற்றலையும் வளர்த்துக் கொண்டமை புலப்படுத்த 'இங்கு எல்லாப்பகையும் அறுத்து' என்றான். அருந்தவம் என்றது, வேனிலில் நெருப்பு நிலை நிற்றலும் மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலுமாகிய செயல் களை மேற்கொண்டு பசியாலும் தாகத்தாலும் தன்னுயிர்க்கு வரும் துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு செய்யும் அருமை புலப்படவேண்டி. தவங்கள் செய்து காலத்தினை அடைதலாவது, தன் கருமமாகிய தவத்தினைச் செய்வதால் காலத்தின் பயனைத் தனக்கு உரித்தாக்குதல். (51)

954 இந்த வனத்தி னெடுங்காலம் யான்செய்
தவத்தா லெய்தரிய
அந்த ணாளன் பேருலக மடைந்து
மருந்தா கமும்பசியும்
வந்து நலிய மழைவண்ண
மாயோன்றனது திருவுந்தி
தந்த மலரோன் றன்னுடைய தாளில்
வணங்கி யிவைசொன்னேன்.

இந்த வனத்தின் நெடுங்காலம் யான்செய்தவத்தால் எய்தரிய அந்தணாளன் பேருலகம் அடைந்தும் அருந்தாகமும் பசியும் வந்துநலிய மழைவண்ண மாயோன் தனது திருவுந்தி தந்த மலரோன் தன்னுடைய தாளில் வணங்கி இவைசொன்னேன்.

பொ: இந்த வனத்தில் நீண்ட காலம் யான் செய்த தவத்தால் எய்துதற்கு அரிய பிரமலோகத்தை அடைந்தும், தீர்த்தற்கரியதாகமும் பசியும் வந்து என்னை வருத்தா நிற்க, யான் மேக வண்ணனாகிய திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றிய பிரமனது பாதங்களில் வீழ்ந்து வணங்கி இவற்றைச் சொன்னேன்.

கு: பசியும் தாகமும் தீர்த்துக் கொண்ட வனத்தையே சுட்டிக்காட்டி, 'இந்த வனத்தின்' என்றான். எய்தற்கரிய பேருலகம், அந்தணாளன் பேருலகம், எனத்தனித்தனி இயையும். தவத்தால் அடைந்தும் என்க. அந்தணாளன் என்றது பிரமனை. பேருலகம் என்றது அவன் வாழும் பிரமலோகத்தை. அருந்தாகம் அரும்பசி எனப் பின்னும் கூட்டுக. திருமாலின் உந்தியில் தோன்றிய தாமரையில் பிரமன் தோன்றினான் ஆதலின் 'மாயோன் தனது திருவுந்தி தந்த மலரோன்' என அவன் சொல்லப் பெற்றான். மழை பொழியும் மேகம் போன்ற வண்ணமுடையவன் திருமால் என்பார், 'மழைவண்ண மாயோன்' என்றார். மாயோன் என்றது, 'மாயைகளைச் செய்யவல்லவன்' என்ற காரணம் பற்றி வந்தது இனி, கரிய நிறத்தினன் என்ற பொருளில் கொள்ளலாம். இவை என்பது வரும் செய்யுளில் கூறப்படும். (32)

## பிரமன் விடை

955 பெறுதற் கரிய வ்வுலகம் பெற்றும்
பெருந்தா கமும் பசியும்
உறுதற் கென்கா ரணமினியானுண்ப
தேதென் றிட நெஞ்சில்
இறுகற் றனத்தா லிரப்போருக் கிட்டு
ணுதே யுன்வயிரும்
பறியைந் தூர்த்து வளர்ந்ததனுற் பசிநோய்
நின்னைப் பற்றியதால்.

பெறுதற்கு அரிய இவ்வுலகம் பெற்றும் பெருந்தாகமும் பசியும் உறுதற்கு என் காரணம்? இனி யான் உண்பது ஏது? என்றிட, நெஞ்சில்
இறுகல் தனத்தால் இரப்போருக்கு இட்டு உணுதே உன் வயிரும் பறியைத் தூர்த்து வளர்த்ததனுல் பசிநோய் நின்னைப் பற்றியதால்.

பொ: பெறுதற்கு அரிதாகிய இந்தப் பிரம உலகத்தை யான் பெற்றிருந்தும் பெரியதாகமும் பசியும் என்னிடம் உறுதற்கு என்ன காரணம்? இனி யான் உண்பது எதனை? என்று வினவ, (பிரமன்) உன் பற்றுள்ளத்தால் இரப்பவர்க்கு இட்டு உண்ணுமல் உன் வயிருகிய பறியை நிரப்பி வளர்த்நதனுல் பசி நோய் உன்னைப் பற்றியது.

கு: சிறந்த பிரம உலகத்தில் வாழப் பெற்றும் இவ்விடத்திற்கு ஏலாத பசியும் தாகமும் வருதற்கு காரணம் என்னை? என் பசி தாகங்கள் நீங்க யான் எதனை உண்ண வேண்டும்? என்று பிரமனை வினவ, அப்பிரமன் அதற்குக் காரணம் சொல்கின்ருன். நீ உலகத்து அரசனுய் ஆட்சி செய்த காலத்தில் இரப்பவர்க்கு ஈயாது நின்வயிற்றை மட்டும் நிரப்பிக் கொண்டு வாழ்ந்தாய். அந்த இவறல்தான் இந்தப் பசிக்கும் தாகத்திற்கும் காரணமாகும் என்று கூறிஞன். 'வயிரும்பறி' என்றது உருவகம். பறி-மீன் பெய்யுங்கருவி. மீன் பெய்வது போல உணவு பெய்தற்கு வயிறு

இடனுதல் பற்றி 'வயிரும் பறி' என உருவகம் செய்தவாறு. பிரமனுலகம் பெறுதற்குரிய தவம் செய்திருந்தும் பசிதாகம் இல்லாதிருத்தற்குரிய அன்னதானம் செய்யாமை தவறு என்பது புலப்படுத்தியவாறு. 'பாத்தூண் மரீஇயவனைப் பசியென்னும் தீப்பிணி தீண்டலரிது' (குறள்-227) என்பது இங்கு நினைத்தற் குரியது. (53)

## பிரமன் கூறும் கழுவாய்

956 பன்னு மறையின் பொருடெரிந்து
படைத்தோன் பின்னு மிவைபகரும்
பின்னுந் தருவா ரவ்வனத்துன்
பிணத்தை நீயே பசிதீரத்
தின்ன மாளா ததுவளருஞ்
சென்று தின்னிற் குண்டைமுனி
தன்னைக் கண்டா லுன்பசியுந்
தாக மும்போ மெனவுரைத்தான்.

பன்னும் மறையின் பொருள்தெரிந்து படைத்தோன் பின்னும் இவைபகரும்
"பின்னும் தருவார் அவ்வனத்து உன் பிணத்தை நீயே பசிதீரத் தின்ன மாளாது அதுவளரும், சென்று தின்னில் குண்டைமுனி தன்னைக் கண்டால் உன்பசியும் தாகமும் போம்" என உரைத்தான்.

பொ: பலகால் சொல்லிப் பழகுதற்குரிய வேதத்தின் பொருளைத் தெரிந்து உலகைப் படைத்தவனுகிய பிரமன், மேலும இவற்றைச் சொல்லலானுன்:- ஒன்ருேடொன்று பின்னிக் கிடக்கின்ற மரங்கள் நீண்டு வளர்ந்துள்ள அந்த வனத்தில் உன் பிணத்தை நீயே பசிதீரத் தின்பாயாக! நீ தின்னத்தின்ன அது மாளாது வளர்ந்துகொண்டே இருக்கும். நீ அங்குச் சென்று தின்னுங்கால் அகத்திய முனிவரைக் கண்டால் உன்பசியும் தாகமும் போய்விடும் என்று கூறினுன்.

கு: பன்னுதல்-பலகால் சொல்லுதல். வேதம் பலகாற் சொல்லிச் சொல்லிப் பயிலுதற்கு உரியதாதல் பற்றிப் 'பன்னு மறை' எனச் சிறப்பித்தார். படைத்தல் தொழில் செய்தற்கு வேதப் பொருள் தெரிதல் இன்றியமையாதது என்பார், 'மறையின் பொருள் தெரிந்து படைத்தோன்' என்றார். வார்தல்-நீண்டு வளர்தல். இனி ஆர் எனப் பிரிந்து 'நிறைந்த' எனப் பொருள் கூறலும் ஆம். மாளாது-குறையாது. தின்னத் தின்னக் குறைதற்கு மாறாக அது வளர்ச்சி பெறும் என்றவாறு. குண்டை-சட்டி. அகத்திய முனிவர் கலசத்தில் பிறந்தவர், கலசயோனி எனப் படுதலின் அவரைக் குண்டைமுனி என்றார். சட்டி, கலசம் என்பன ஒரு பொருட் சொற்கள். (54)

## பசிதீர்ந்த சுவேதன் நல்லாபரணம் ஈந்து சென்றான் எனல்

957 அன்று தொடங்கி யின்றளவும்
மசுத்த மான விப்பிணத்தைத்
தின்று திரிந்தே னென்பசியைத்
தீர்த்தி யென்றா னதுதீர்க்க
நன்று பிழைத்தே னெனவுவந்திந்
நல்லா பரண மெனக்கீந்து
வென்றி வீர விமானத்து விண்ணோர்
சூழ வவன்போனான்.

"அன்று தொடங்கி இன்றளவும் அசுத்தம் ஆன இப்பிணத்தைத் தின்று திரிந்தேன் என்பசியைத் தீர்த்தி" என்றான், அது தீர்க்க, "நன்று பிழைத்தேன்" எனஉவந்து இந்நல் ஆபரணம் எனக்கு ஈந்து

வென்றி வீர விமானத்து விண்ணோர் சூழ, அவன் போனான்.

பொ: 'பிரமன் சொன்ன நாளிலிருந்து இன்று வரையில் தூய்மையில்லாத இந்தப் பிணத்தைத் தின்று திரிந்தேன்; என் பசியைத் தீர்ப்பாயாக" என்று வேண்டினான். வெற்றி வீரனே! யான் அப்பசியைத் தீர்த்துவிட, 'நல்லது உய்ந்தேன்' என்று கூறி

மகிழ்ந்து இந்த நல்ல ஆபரணத்தை எனக்குக் கொடுத்துவிட்டுத் தேவர்கள் சூழ விமானத்தில் ஏறி அவன் போய்விட்டான்.

கு: அன்று என்றது, பிரமன் சொன்ன நாளை. தின்று திரிதல் என்றது, சூரியன் உதித்ததும் வருதலும் பிணத்தினைத் தின்னுதலும் பின்பு திரும்பிப் போதலுமாகத் திரிதலை. சுவேதன், 'தீர்த்தி' என வேண்டியபடி அகத்திய முனிவன் அவன் பசியைத் தீர்த்தான் என்க. பிழைத்தேன் என்றது உய்ந்தேன் என்னும் பொருளது. அவன் என்றது சுவேதனை. (55)

## இராமன் அகத்தியனை இவ்வனத்தில் உயிரினங்கள் வழங்காததேன் என வினவுதல்

958 இன்ன தாமிவ் வாபரண
மென்பால் வந்த வழியென்று
பன்னும் வேத மாமுனிவன்
பகரப் பரமன் வியப்பெய்தி
மன்னு மிருகம் பறவைநரர்
வழங்கா தொழித லிவ்வனத்தில்
என்ன நிமித்தத் தாலிதுநீ
யியம்பென் றியம்ப முனியியம்பும்.

**இன்னது ஆம் இவ் ஆபரணம் என்பால் வந்தவழி என்று பன்னும் வேத மாமுனிவன் பகர, பரமன் வியப்பு எய்தி, மன்னு மிருகம் பறவை நரர் வழங்காது ஒழிதல் இவ்வனத்தில் என்ன நிமித்தத்தால்? இது நீ இயம்பு என்று இயம்ப முனி இயம்பும்.**

பொ: இந்த ஆபரணம் என்னிடத்தில் வந்த வரலாறு இதுவாகும்; என்று பலகால் பயிலுதற்குரிய வேதங்களைப் பயின்ற சிறந்த அகத்திய முனிவன் சொல்ல இராமன் ஆச்சரியமுற்றுப் பின் இந்த வனத்தில் நிலைபெறுதற்குரிய விலங்கும், பறவையும் நரரும் இயங்காது ஒழிந்தது என்ன காரணத்தால்? இதனை நீ

சொல்லுக என்று இராமன் வேண்ட அகத்திய முனிவன் சொல்வான்.

கு: ஆபரணம் என்பால் வந்த வழி இன்னது ஆம் என மாற்றுக. 'பன்னும் வேதம்' என்றது, வேதம் பலகால் சொல்லுதற்குரிய சிறப்பினையுடையது என்று விளக்கியவாறு. பரமன் என்றது இராமனை; பழைய தெய்வநிலையறிந்து கூறியவாறு. மிருகம் - விலங்கு. நரர்-மனிதர்.வழங்குதல் என்றது இங்கு நடமாட்டத்தை. இயம்புதல் - சொல்லுதல். இச் சொல் மும்முறை வரத் தொடுத்ததால் சொற்பின் வருநிலையணி. (56)

## அகத்திய முனிவர் காரணம் கூறுதல்

959 தண்ட னென்போன் மனுகுலத்தோன்
றருமந் தயாவொன் றில்லாத
மிண்ட னவன்றன் புரோகிதனும்
வெள்ளி தவஞ்செய் வனநண்ணி
வண்டு பயில்பூம் பொழிலிடத்து
வளர்சீ ரந்த முனிமகளைக்
கண்டு காம பரவசனாய்க்
கலங்கு நெஞ்சன் கருதுவான்.

தண்டன் என்போன் மனுகுலத்தோன் தருமம் தயா ஒன்று இல்லாத
மிண்டன்; அவன்தன் புரோகிதனும் வெள்ளி தவம் செய்வன நண்ணி,
வண்டு பயில்பூம் பொழிலிடத்து வளர்சீர் அந்த முனிமகளைக்
கண்டு காம பரவசனாய்க் கலங்கு நெஞ்சன் கருதுவான்.

பொ: தண்டன் என்று பெயர் சொல்லப்படுவோன், மனுகுலத்தில் பிறந்தவன்; தருமம் தயவு ஒன்றும் இல்லாத திண்ணியன்; அவன் தன் குலகுருவாகிய வெள்ளி தவம் செய்துகொண்டுள்ள வனத்தை அடைந்து வண்டுகள் பயிலுகின்ற பூக்கள் நிறைந்த சோலையில் வளர்கின்ற சிறப்பினையுடைய அந்தச் சுக்கிர

முனிவன் மகளைக் கண்டு காமத்தால் தன்வயம் இழந்து பரவசனாகிக் கலங்குகின்ற மனமுடையவனாய்க் கருதுகின்றான்.

கு: புரோகிதன் – குலகுரு. தேனையுண்ண வண்டுகள் குறையாத தேனுள்ள மலர்களில் எப்போதும் தங்கும் இயல்பினது என்பது புலப்பட 'வண்டு பயில் பூம் பொழில்' என்றார். பொழிலிடத்து வளர்சீர் முனி மகள் என்பதால், பூம்பொழிலின் மணத்திலும் தண்மையிலும் பூங்காற்றிலும் வளர்ந்த முனிமகளின் அழகைப் புலப்படுத்தியவாறு. தண்டன் கருத்திற்குக் காரணம் முனி மகளின் அழகும் தனிமையும் பொழிலின் அழகும் துணைசெய்தன எனலாம். (57)

## தண்டனின் ஐயம்

960 செந்தா மரைமேற் றிருமகளோ
தேவ ருலகி னிழிந்துபுவி
வந்த தெய்வ மடமாதோ
மண்ணிற் பிறந்த மணி விளக்கோ
அந்தா மரை போன் முகத்தினு
ளாரோ வறிகி லேனென்று
சிந்தா குலமாய்த் தேர்மன்னன்
பின்னு மினைய சிந்தித்தான்.

**செந்தாமரைமேல் திருமகளோ? தேவர் உலகின் இழிந்துபுவி வந்த தெய்வ மடமாதோ? மண்ணிற் பிறந்த மணி விளக்கோ? அந்தாமரைபோல் முகத்தினுள் ஆரோ அறிகிலேன் என்று சிந்தாகுலமாய்த் தேர்மன்னன் பின்னும் இனைய சிந்தித்தான்.**

பொ: செந்தாமரை மலர்மேல் வீற்றிருக்கின்ற திருமகளோ? அல்லது தேவர் உலகத்திலிருந்து இறங்கிப் பூவுலகத்திற்கு வந்த இளமையான மாதோ? அல்லது மண்ணுலகத்திலேயே பிறந்து வளர்ந்த மணிவிளக்குப் போன்றவளோ? அழகிய தாமரை மலர் போன்ற முகத்தினையுடையவளான இவள் யாரோ? அறிய இயலவில்லையேயென்று மனத்தில் துன்பம் நிறைந்தவனாய்த் தேர்மேல் வந்த தண்டன் என்னும் அரசன் மேலும் இத்தன்மையான வற்றை சிந்தனை செய்தான்.

கு: அகப்பொருட்டுறையில் காட்சிக்குப் பின் நிகழும் ஐயத்தை இச் செய்யுள் உணர்த்துகின்றது. திருமகளோ, தேவருலகினில் மடமாதோ, மண்ணிற் பிறந்த மணிவிளக்கோ? தாமரைபோல் முகத்தினுள் ஆரோ? என வெள்ளியின் மகளைப் பார்த்துத் தண்டன் ஐயுறுதலைக் காணலாம். சிந்தாகுலம்– மனத்துன்பம். அவன் சிந்தித்தவை வருஞ்செய்யுளிற் காணலாம். (58)

## என் நெஞ்சு கவர்ந்தது எவ்வுறுப்போ எனல்

961 பஞ்சி னடியோ வணிகுறங்கோ?
பழிப்பில் பரந்தேந் தல்குலோ
வஞ்சி யிடையோ வனமுலையோ
தோளோ கழுத்தோ மதிமுகமோ
நெஞ்சு கவர்ந்த தென்னைத்தரள
நிரைத்த பவளச் செவ்வாயோ
நஞ்சு கலந்த வேல்விழியோ
நறுமென் குழலோ வறியேனே.

பஞ்சின் அடியோ? அணி குறங்கோ? பழிப்புஇல் பரந்துஏந்து அல்குலோ?
வஞ்சி இடையோ? வனமுலையோ? தோளோ? கழுத்தோ? மதிமுகமோ?
நெஞ்சு கவர்ந்தது என்னை தரள நிரைத்த பவளச் செவ்வாயோ?
நஞ்சு கலந்த வேல்விழியோ? நறுமென் குழலோ? அறியேனே.

பொ: என்னை நெஞ்சு கவர்ந்தது செம்பஞ்சு ஊட்டிய பாதமோ? அழகிய துடையோ? பழித்தற்குரிய குற்றம் சிறிதும் இல்லாது பரவி உயர்ந்த அல்குலோ? வஞ்சிக்கொடிபோன்ற இடையோ? அழகிய முலையோ? தோளோ? கழுத்தோ? சந்திரனைப் போன்ற முகமோ? முத்துக்களை வரிசையுறவைத்த பவளம் போன்ற சிவந்த வாயோ? நஞ்சு கலந்த வேலினைப் போன்ற கண்ணோ? நறுமண முடைய மெல்லிய கூந்தலோ? அறியேன் யான்.

கு: சுக்கிரன் மகளுடைய அடி முதல் முடிவரையில் உள்ள உறுப்புக்களைப் புகழ்ந்து கூறியவாறு. அடிமுதல் குழல்வரையில் உள்ள ஒவ்வோர் உறுப்பும் நெஞ்சு கவர்தற்குரியதே என்பான் 'எனை நெஞ்சு கவர்ந்தது எது என அறியேனே' என்று கூறினன். நிரைத்தல்-வரிசையுற வைத்தல். வரிசையான பற்களையுடைய சிவந்த வாய்க்கு முத்துக்களை வரிசையுற வைத்த பவளம் உவமையாம் என்றவாறு. மைதீட்டிய விழி நஞ்சுதீட்டிய வேல்போலக் கொல்லுதலின் நஞ்சு கலந்த வேல்விழியோ? என்றார். வேலில் நஞ்சு பூசுதல் உண்டு என்பது நினைக. கூந்தலின் இயற்கை மணம் புலப்பட 'நறுமென் குழலோ?' என்றார். கூந்தலுக்கு நறுமணமும் மென்மைத்தன்மையும் சிறப்பியல்புகளாகு . (59)

## தண்டன் வினுவுக்குச்சரை விடை கூறுதல்

962 என்று கலங்கி யவள்பால்வந்
தெழுத வரிய வெழிலுடை யோய்
ஒன்று தவத்தா லுனைப்பெற்றேன்
பேரோ டுன்பே ருரையென்ன
வென்றி வேற்க ணிவை விளம்பும்
வெள்ளி மகளுன் மேதினியில்
நின்ற புகழோய சரையென்ன
நிகழு மென்பேர் நிலத்தென்றாள்.

என்று கலங்கி அவள்பால் வந்து, எழுத அரிய எழில் உடையோய்!
ஒன்று தவத்தால் உனைப்பெற்றேன் பேரோடு உன்பேர் உரை என்ன,
வென்றிவேற்கண் இவை விளம்பும்:- வெள்ளிமகள் நான், மேதினியில்
நின்ற புகழோய்! சரை என்ன நிகழும் என்பேர் நிலத்து என்றாள்.

பொ: என்று உளம் கலங்கி அம்மங்கையின் அருகில் வந்து, ஓவியத்து எழுதுதற்கு அரிய எழில்மிக உடையவளே! மனம் ஒன்றுபட்டுச் செய்யும் தவத்தால் உன்னைப் பெற்றவன் பேரோடு உன் பேரையும் சொல் என்று கூற, வெற்றியையுடைய வேல் போன்ற கண்ணையுடைய சரையென்பவள் இவற்றைச்

சொல்வாள்:- உலகில் நிலைபெற்ற புகழையுடையோய்! நான் வெள்ளியின் மகள்; உலகத்தில் எனதுபேர் சரையென்ன வழங்கும் என்று கூறினாள்.

கு: அவன் தோற்றத்தால் அரசனுதலை உணர்ந்து கொண்ட சரை 'மேதினியில் நின்ற புகழோய்' என்றுவிளித்துப் புகழ்ந்த வாறு. இவ்வாறு விளித்ததால் பழிபடுவ செய்யான் என்பது உட்கோள். எழில்மிக்க இராமனை புகழும்போது 'ஓவியத்தெழுத வொண்ணாவுருவத்தாய்' (வாலிவதைப் — ) எனக் கூறுவது போல இங்குச் சரையை 'எழிதவரிய வெழிலுடையோய்' என விளித்தவாறு. ஒன்று தவம் என்றது பலதலையாகச் செல்லும் மனத்தினை ஒன்றுபடுத்திச் செய்யும் தவம் எனத் தவத்தின் இயல்பு புலப்படுத்தியவாறு. வேற்கண் என்றது ஆகுபெயராய் வேற்கண்ணையுடைய சரையை உணர்த்தியது. 'நிலத்து என்பேர் சரையென்ன' நிகழும் என இயையும். இத்தகைய அழகியைத் தவத்தாலன்றிப் பெறவிடலாது என்பான், 'ஒன்று தவத்தால் உனைப் பெற்றேன்' எனச் சிறப்பித்தான். வென்றி வேலுக்கு அடை. கண்ணுக்கும் அடையாக்கி தண்டனை வென்றிகொண்டது குறிப்பினும் அமையும். (60)

## தண்டன் சரையைக் கூடத் தலைப்படல்

963 கல்விற் செறிதிண் புயவேந்தன்
காம சரத்தா லேவுண்டு
புல்லுக் கவ்வி மான்றேற்கப
பொருவேல் விழியைப் பொதும்புகளில்
சொல்லுக் கஞ்சிக் கிளியொளிக்குந்
துடிநே ரிடையைத் தொழுதிரந்து
புல்லச் சென்று புகுமவனைப் பூவை
கண்டிங் கிவை புகன்றாள்.

கல்லின் செறி திண்புயவேந்தன் காமசரத்தால் ஏவுண்டு
புல்லுக் கவ்வி மான் தோற்கப் பொருவேல் விழியைப்
போதும்புகளில்
சொல்லுக்கு அஞ்சிக் கிளி ஒளிக்கும் துடிநேர் இடையைத்
தொழுதுஇரந்து
புல்லச் சென்று புகும் அவனைப் பூவைகண்டு இங்கு இவை
புகன்றாள்.

பொ: திரண்ட கல்லைப்போல நெருங்கிய தோள்களையுடைய தண்டன் எனும் வேந்தன், காமன் மலர் அம்புகளால் ஏவடபட்டு, மான் புல்லினைக் கவ்வித் தோற்குமாறு போர் செய்கின்ற வேல் போன்ற விழியை யுடையவளை-சொல்லுக்கு அஞ்சிக் கிளிகள் மரப்பொதும்புகளில் ஒளித்தற்குக் காரணமான உடுக்கைபோன்ற இடையையுடையவளை-தொழுது யாசித்து அணைக்கச் சென்று புகுகின்றவனைப் பூவை போன்ற சரை கண்டு இவ்விடத்து இவற்றைச் சொல்லலானாள்.

கு: காமுறுதற்கேற்ற உடற்கட்டுடைமை புலப்பட 'கல்லிற் செறிதிண்புயவேந்தன்' என்றார். காமசரம் என்றது, மன்மதனுடைய ஐங்கணைகளை. தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலம் என்பன அவை. சரையின் விழி அழகினைப் புலப்படுத்த வேண்டி மான் அவள் கண்ணழகிற்குத் தோற்றுப் புல்லைக் கவ்வியதாகக் கூறினார். தோற்றோர் புல்லைக் கவ்வுதல் மரபு. மான் இயல்பாகத் தனக்கு உணவாகிய புல்லை மேய்வது, சரையின் கண்ணழகிற்குத் தோற்றுப் புல்லைக் கவ்வியது போலக்காணப்பட்டது என்றவாறு. இது தற்குறிப்பேற்றவணி. கிளிகள் இயல்பாகப் பறந்து சென்று தமக்கு இருப்பிடமாகிய மரப்பொந்துகளில் புகுவதைச் சரையின் சொல்லுக்குத் தோற்றுப் பயந்து பொதும்புகளில் புகுந்ததாகக் கூறியதும் அவ்வணியேயாம். இடை யென்ற சினையின் பெயர் இங்குச் சரையென்னும் முதலை யுணர்த்தியது சினையாகுபெயர். 'புயவேந்தன் காமசரத்தால் ஏவுண்டு துடிநேரிடையைத் தொழுதிரந்து புல்லச் சென்று புகுமவனை' என இயையும். பூவை-நாகணவாய்ப்புள். பெண்டிர் சொல்லுக்குப் பூவையின் சொல்லை உவமை கூறுவதுண்டு. பூவை, உவமை ஆகுபெயராய்ப் பூவை போன்ற சரையையுணர்த்தியது. (61)

## தண்டனது அடாதசெயல்

964 எந்தை சீறி லேழுலகு மிமைப்பிற்
பொடியா மென்னுரைகொண்
டிந்த விடத்து நில்லாதே
யிப்போ தேநீ யேகென்ன
அந்த வவள்சொல் கொள்ளாதே
யநங்க சரத்தா லறநொந்து
வந்து மடவாள் குழல்பற்றி
வலிதிற் புணர்ந்தாங் கவன்போனான்.

எந்தைசீறில் ஏழ்உலகும் இமைப்பின் பொடியாம் என்உரை கொண்டு
இந்த இடத்து நில்லாதே இப்போதேநீ ஏகு என்ன,
அந்த அவள் சொல் கொள்ளாதே, அநங்க சரத்தால் அற நொந்து,
வந்து மடவாள் குழல்பற்றி வலிதின் புணர்ந்துஆங்கு அவன் போனான்.

பொ: 'என் தந்தை வெள்ளி கோபித்தால் இமை நேரத்தில் ஏழுலகும் பொடிப்பொடியாகிவிடும். என் சொல்லை ஏற்றுக் கொண்டு இந்த இடத்தில் நில்லாமல் இப்போதே நீ போய்விடு' என்று சொல்லவும், அவள் கூறிய அந்தச்சொல்லை ஏற்றுக் கொள்ளாமல் மன்மத பாணத்தால் மிகவும் வருந்தி, வந்து சரையின் கூந்தலைப் பற்றி அவள் விருப்பத்தை எதிர்பாராமலே வலிதின் புணர்ந்துவிட்டு அந்தத் தண்டன் போயினான்.

கு: வெள்ளியின் சீற்றத்துக்குரிய ஆற்றல் புலப்பட ஏழுலகும் பொடியாம் என்றும் அதன் விரைவு புலப்பட 'இமைப்பின் பொடியாம்' என்றும் கூறினார். தீய எண்ணமுடையவன் அங்கு இருப்பதும் பழியாம் ஆதலின் 'இந்த இடத்து நில்லாதே இப் போதே நீயேகு' என்றாள். சரையின் சொல்லை ஏற்றுக் கொள்ளாமைக்குக் காரணம் கூறுவானாய் 'அநங்க சரத்தால் அறநொந்து வந்து' என்றார். (62)

## சரை தந்தைபால் சொல்லுதல்

965 அன்ன தீயோ னேகவவ
ளலக்கணோடு மாச்சிரமம்
துன்ன மிகுவெம் பசியோடுந்
தந்தை தோன்றித் தூய்மொழியே
உன்னையிடர்செய் தவனைநீ யுரைத்தி
யென்ன வொளிதிகழும்
பொன்னின் மணிகள் பொலிந்திலங்கும்
பூணாள் புகுந்த படிபுகன்றாள்.

அன்ன தீயோன் ஏக, அவள் அலக்கணோடும் ஆச்சிரமம் துன்ன, மிகுவெம் பசியோடும் தந்தை தோன்றித் 'தூய்மொழியே! உன்னை இடர் செய்தவனை நீ உரைத்தி' என்ன ஒளிதிகழும் பொன்னின் மணிகள் பொலிந்து இலங்கும் பூணாள் புகுந்தபடி புகன்றாள்.

பொ: அந்தக் கொடியவன் போய்விட, சரை துன்பத்தோடும் ஆச்சிரமத்தை அடைய, மிகுதியான கொடிய பசியோடும் தந்தை வெள்ளி ஆச்சிரமத்தில் தோன்றி (மகளின் சோர்வு கண்டு) "தூய்மையான சொல்லையுடையவளே உன்னைத் துன்புறுத்தினவனைச் சொல்" என்று கேட்க, ஒளி விளங்குகின்ற பொன்னோடு மணிகள் பொலிவுற்று விளங்கும் அணிகலன்களையுடைய சரை நிகழ்ந்ததைச் சொன்னாள்.

கு: அலக்கண்-துன்பம். வெள்ளியின் கோபம் மிகுதற்கு வேறு மொரு காரணம் அமைந்தமை புலப்படுத்த 'மிகுவெம்பசியோடும் தந்தை தோன்றி' என்றார். மகளின் முகக் குறிப்புக் கண்டு, யாரோ இடர் செய்துள்ளார் என்பதை உய்த்துணர்ந்து 'உன்னையிடர் செய்தவனை நீயுரைத்தி' என்று வினவினான் வெள்ளி. பொன்னினும் மணியினும் பொலிவுறச் செய்த பூணே சரையின் அழகை மிகுதிப்படுத்தி இந்தத் தீங்கினை யுண்டாக்கியது என்ற குறிப்புத் தோன்ற 'பொன்னின் மணிகள் பொலிந்திலங்கும் பூணாள்' எனச் சரையைக் குறிப்பிட்டவாறு. (65)

## வெள்ளியின் சாபத்தால் தண்டன் நாடும் தானும் அழிதல்

966 அந்த வெள்ளி யனலென்ன
வாலகால விடமென்னச்
சிந்தை யெழுந்த பெருங்கோபன்
தீரா விடும்பை யென்மகட்குத்
தந்த தண்டன் வளநாடுந்
தானுங் கிளையுந் தந்திரமும்
வெந்து பொடியாய வீழ்கவென
வெல்லாம் பொடியாய் வீழ்ந்தனவே.

அந்த வெள்ளி அனல் என்ன, ஆலகால விடம் என்ன,
சிந்தை எழுந்த பெருங்கோபன், "தீரா இடும்பை என்மகட்குத்
தந்த தண்டன் வளநாடும், தானும் கிளையும் தந்திரமும்
வெந்துபொடியாய் வீழ்க" என, எல்லாம் பொடியாய் வீழ்ந்தனவே.

பொ: அந்த வெள்ளி மகள் சொன்னதைக் கேட்டவுடன் நெருப்புப் போலவும் ஆலகால விடம் போலவும் சிந்தையிலிருந்து எழுந்த பெருங்கோபமுடையவனாய், 'என் மகளுக்குத் தீராத் துன்பத்தைத் தந்தவனாகிய தண்டனது வளமிக்க நாடும் தானும் தன் சுற்றத்தாரும் சேனையும் வெந்துசாம்பல் பொடியாய் வீழ்க' என்று சாபம் கொடுக்க, எல்லாம் சாம்பற் பொடியாய் வீழ்ந்தன.

கு: வெள்ளியின் சிந்தையில் எழுந்த சினத்திற்கு உவமையாக அனலும் ஆலகால விடமும் சொல்லப் பட்டன. இதனால் அக்கடுங்கோபத்தின் ஆற்றல் மிகுதிபுலனாகும். இடும்பை-துன்பம். தீரா இடும்பை என்றது தண்டனால் கற்பழிக்கப்பட்ட நிலை. இந்தத் துன்பம் என்றும் தீராதது என்பது தெளிவு. தந்திரம்-சேனை. தவறு பெரிது செய்தவன் மன்னவனாதலின் அவன் நாட்டவரும் உறவினரும் அவன் போலவே தவறு செய்தற் குரியவரே ஆதலின் தண்டனும் அவன் நாடும் கிளையும் அழியச் சபித்தான் என்க. 'அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்' என்பது இங்கு நோக்கத்தகும். (64)

## தண்டகன் வனம் சன்மத்தானம் எனப் பேர்பெற்றமை: அகத்தியர் இராமனுக்குக் கூறல்

967 அவன்ற னாடித் தண்டகமா
மடவி யாகி யாரழலின்
சிவந்த வெள்ளி சாபத்தா
னரர்புள் மிருகஞ் சேர்வின்றித்
தவஞ்செய் முனிவர் நெருங்குதலாற்
சனத்தான மென்பேர்பெற்ற
துவந்து கருணை பொழிவிழியா.
யுற்ற திதுமுன் பெனவுரைத்தான்.

அவன்தன் நாடு இத்தண்டகமாம் அடவியாகி ஆரழலின்
சிவந்த வெள்ளி சாபத்தால் நரர்புள் மிருகம் சேர்வு இன்றித்
தவஞ்செய் முனிவர் நெருங்குதலால் சனத்தானம் என்பேர் பெற்றது
உவந்து கருணை பொழிவிழியாய்! உற்றது இது முன்பு என உரைத்தான்.

பொ: "அவனுடைய நாடு இந்தத்தண்டகம் என்கின்ற காடாகி நிறைந்த நெருப்புப் போலச் சிவந்த வெள்ளியின் சாபத்தால் மனிதரும் பறவையும் விலங்கும் சேர்தல் இல்லாமல் தவஞ்செய்கின்ற முனிவர்மட்டும் நெருங்கியிருத்தலால் சனத்தானம் என்கின்ற பெயரைப் பெற்றது; மகிழ்ந்து அருளைப் பொழிகின்ற விழியையுடையவனே! இது முன்பு நடந்தது" என்று சொன்னான் அகத்தியன்.

கு: தண்டகன் நாடு தண்டகாரணிய மாயது என்பார், அவன்தன் நாடு இத் தண்டகமாம் அடவியாகி என்றார். அடவி-காடு. வெள்ளி சின மிகுதி கொண்டான் என்பார் 'ஆரழலின் சிவந்தவெள்ளி' என்றார். சனத்தானம்-முனிவர்கள் தங்குமிடம். இராமனது விழியின் பெருமை கூறுவாராய்'உவந்து கருணை பொழி விழியாய்' என்றார். உற்றது என்றது, நிகழ்ந்தது என்றவாறு. (65)

## இராமன் அகத்திய முனிவரோடு தங்கித்துயின்று எழுதல்

963 குண்டை முனியிவ் வகைகூற
வெய்யோன் குடபாற் கடல்குளிப்ப
பண்டைமறைநூல் விதித்த விதிப் படியே
சந்தித் தொழின் முடித்து
வண்டு முரலுந் துழாய் முடியான்
வாய்த்த தவத்தோ னெடுந்துயில்கொண்
டெண்டி சாமண் டலமூடு மிருணீங்
கியபி னெழுந் திருந்து.

குண்டை முனி இவ்வகை கூற, வெய்யோன் குடபால் கடல் குளிப்ப,
பண்டை மறைநூல் விதித்த விதிப் படியே சந்தித் தொழில் முடித்து,
வண்டு முரலும் துழாய் முடியோன் வாய்த்த தவத்தோ னெடுந்துயில்கொண்டு
எண்திசாமண்டலம் மூடும் இருள்நீங்கியபின் எழுந்திருந்து.

பொ: கலசத்தில் பிறந்த அகத்தியமுனிவர் இவ்வாறு சொல்ல, சூரியன் மேலைக் கடலில் குளித்து மறைய, பழைய வேதநூல் விதித்த முறைப்படி சந்தியாவந்தனமாகிய வழிபாட்டுத் தொழிலை முடித்துக் கொண்டு, வண்டுகள் ஒலிக்கும் துளப மாலையணிந்த முடியையுடைய இராமன், வாய்ப்புமிக்க தவத் தோனாகிய அகத்தியனொடும் தங்கித்துயின்று எட்டுத்திசையுடன் கூடிய பூமண்டலத்தை மூடியிருக்கும் இருள் புலர்ந்தபின்பு துயிலில் இருந்து எழுந்து.

கு: குளகம். குண்டை-கலசம்; குடம். குண்டை முனியென்றது அகத்தியரை. வெய்யோன்-சூரியன். குடபாற்கடல்-மேலைக்கடல். சூரியன் கடலில் அத்தமிப்பது மூழ்குவதுபோலக் காணப் படுதலின் 'கடல்குளிப்ப' என்றார். மறைநூல்-வேதம். வேதத்தில்

விதித்துள்ளபடி சந்தியாவந்தனம் செய்தான் இராமன் என்றவாறு. சந்தித் தொழில் என்றது, இங்கு மாலையில் செய்யும் வழிபாட்டினை. முரலுதல்-ஒலித்தல். இச்சொல் மரபுச் சொல்லாய்ச் சங்கு, வண்டு இவற்றின் ஒலிகட்கேயுரிமை கொள்ளும். ஒன்னார்த்தெறலும் உவந்தாரை ஆக்கலும் ஆகிய பயன்கள் வாய்க்கப் பெற்ற தவம் எனலும் ஆம். அகத்திய முனிவர் ஆச்சிரமத்தில் இரவைக் கழித்தமை புலப்பட தவத்தோனொடுந் துயில்கொண்டு என்றார். திசா என்ற வடசொல் திரியாது வந்துளது. எண்திசா மண்டலம் என்றது எட்டுத்திசைகளோடு கூடிய பூமண்டலத்தை. இருள்நீங்கியபின் எனவே அருணோதயத்தில் என்பது பெறப்படும். எழுந்திருந்து என்பது ஒருசொல். (66)

## இராமன் அயோத்தி அடைதல்

969 சந்தி தொழுத தவத்தோன்றன்
சரண விணைக டாழ்ந்திறைஞ்சி
அந்த முனியா சிகள்கூற
வம்பொற்றேரின் மிசை யேறிச்
சிந்தை யுவந்து கொடிகட்டித்
தெருவு தோறு மலங்கரித்து
வந்துநகரி யெதிர்கொள்ள
வள்ள லயோத்தி நகர்புகுந்தான்.

சந்தி தொழுத தவத்தோன்தன் சரண இணைகள் தாழ்ந்து இறைஞ்சி,
அந்தமுனி ஆசிகள்கூற, அம்பொன் தேரின் மிசை ஏறிச்,
சிந்தை உவந்து, கொடிகட்டித், தெருவுதோறும்அலங்கரித்து
வந்து, நகரி எதிர்கொள்ள, வள்ளல் அயோத்தி நகர்புகுந்தான்.

பொ: வள்ளலாகிய இராமன் சந்தியாவந்தனம் செய்தெழுந்த அகத்தியமுனிவனுடைய இரு தாள்களையும் வீழ்ந்து வணங்கி, அந்த அகத்திய முனி ஆசிகள் சொல்லா நிற்க, அழகிய பொன்மயமான தேரின்மேல் ஏறிக் கொண்டு, நகர மக்கள் (இராமன்

வரவையுணர்ந்து) மனமகிழ்ந்து தெருக்கள் தோறும் கொடிகள் தோரணங்கள் முதலியவற்றைக் கட்டி அலங்கரித்து வந்து எதிர்கொண்டு அழைக்க அயோத்தி நகரில்புகுந்தான்.

கு: வள்ளல் என்றது, வேதநெறிக்கு மாறுகத் தவஞ்செய்த சம்புகனைவீழ்த்தி தந்தை இருக்கவும் இறந்தமகனை உயிர்ப்பித்த உதவி நினைந்து சொல்லிய புகழ்ச் சொல்லாகும். இராமன் சந்தி தொழுதபின் தன்போலவே காலைச்சந்தி வழிபாடு முடித்த அகத்தியமுனிவரின் பாதங்களை வணங்கி ஆசி பெற்று அயோத்திக்குப் புறப்பட்டான் இராமன் என்றவாறு. நகரி என்பது அயோத்தி நகர மக்களையுணர்த்தியது ஆகுபெயரான். இராமன் வருகையை ஒற்றரால் உணர்ந்த நகரமக்கள் மகிழ்ச்சிகொண்டு வீதிதோறும் அலங்கரித்து வந்து எதிர்கொள்ள இராமன் பெருமிதத்தோடு அயோத்தி நகரம் புகுந்தான் என்றவாறு. (67)

சம்புவன் வதைப் படலம் முற்றும்.

# 15. அசுவமேத யாகப்படலம்

## முன்னுரை

இராமன் தன் ஆட்சிக் காலத்தில் அசுவமேதயாகம் செய்ததைப் பற்றிக் கூறும் பகுதியாகலின் இது அசுவமேதயாகப் படலம் எனப் பெயர் பெறுகின்றது. சில ஏடுகளில் வேள்விப்படலம் எனவும் யாகப்படலம் எனவும் இப் படலப் பெயர் காணப் படுகின்றது.

## படலப் பொருள் சுருக்கம்

இராமன் ஒருநாள் வாயிற்காவலனிடம் தன் தம்பியரை அழைக்குமாறு சொல்கின்றான். வாயிற்காவலன் சென்று பரதன் முதலிய மூவர்க்கும் சொல்ல அவர்கள் விரைந்து வருகின்றார்கள். வந்த தம்பியரை இராமன் அருட்கண்ணால் குளிர நோக்கி 'என்னுயிர் அனையீர் உம்மால் இராஜசூயம் என்னும் பெருவேள்வியைச் செய்ய எண்ணியுள்ளேன்' என்கின்றான். இலக்குவன் எழுந்து அன்னையை நோக்கி நிற்கும் குழவி போல இவ்வுலகத்துயிர்கள் நின்னையே நோக்கி நிற்கின்றன. மேலும் அரசர்க்கு எல்லாம் நீ உயிராக இருக்கின்றாய். அத்தகைய அரசர்களோடு நீ கோபித்துப் போர் செய்து வென்று அவர்தம் செல்வத்தை வாரி வந்து இன்று இராயசூயம் செய்வதினும் அசுவமேதம் செய்தல் நன்று.

"அத்திரி முனிவனது எலும்பினால் விருத்தாசுரனைக் கொன்ற பெரும்பாவத்தை நீக்கித் துரகத வேள்வியினால் இளன் என்பவன் தனக்கு நேர்ந்த துன்பங்களைப் போக்கி ஆணாகவேயிருக்கச் செய்ததும் இந்த அசுவமேத யாகந்தான்; ஆதலால் பரிவேள்வி செய்தலே நன்று" என இலக்குவன் கூற, இராமன் இராஜசூயம் செய்வதை விடுத்து அசுவமேதமே செய்வோம் எனக் கூறியதோடு அசுவத்தின் இலக்கணமும் ஓதிக் குதிரையை, மந்திரம் வல்லோர் மந்திரச் செயலால் மந்திரித்து ஏவுகின்றான். பின்பு, முனிவர்கட்கு ஓலை அனுப்புகின்றான். அவ்வோலையில்,

'யான் சிந்தையில் அசுவமேதம் செய்ய எண்ணினேன். சிறந்த அந்தணரே எனக்குத் தெய்வம் ஆதலால் அகத்தியர் முதலிய தவமுனிவர்கள் எல்லாம் நைமிசாரணியத்தில் வந்து வேள்வியை முடித்துச் செல்ல வருக' என்று எழுதி விடுகின்றான்.

பின்பு இலங்கை மன்னவனாகிய வீடணற்கும் உயிரனைய சுக்கிரீவனுக்கும் அனுமனுக்கும் மற்றைய வலிமைமிக்க அரசர்க்கும் செம்மை நெறியில் பழகிய குகனுக்கும் அசுவமேத வேள்வி காண நைமிசாரணியத்திற்கு இந்த நாளில் வருக எனத் திருமுக அனுப்புகின்றான். மதுபுரியில் ஆட்சி செய்யும் சத்துருக்கனுக்கும் மற்றை முனிவர்கட்கும் தூது அனுப்புகின்றான். தூதுவர் மூலம் செய்தியறிந்த வீடணன் சுக்கிரிவன் அங்கதன் அனுமன் முதலியோர் அயோத்திக்கு வருகின்றனர். வந்தவர்களை அன்புடன் வரவேற்ற இராமன் அசுவமேதம் தொடங்க இன்னும் ஏழு நாட்களே உள்ளன என நாட்டிலும் நகரத்திலும் பறையறையச் செய்கின்றான்.

பின்பு இலக்குவனை அழைத்து, 'யாகசாலையில் அனுமன் முதலியவர்கள் தங்கியிருக்க மாடங்களும் குறைவில்லாமல் செய்க' என ஏவுகின்றான். அவ்வாறே இலக்குவன் நைமிசாரணியத்திற்குச் சென்று நிலத்தையுழுது ஒக்கச் செய்வித்து வேள்விச் சாலையைச் செய்வித்து விட்டு மலைபோன்ற மாடங்களையும் கூடங்களையும் கோபுரங்களையும் செய்விக்கின்றான். வேள்வி காண வந்தவர்கள் பசிதணிதற்குரிய பெருஞ் சோற்றுச் சாலையும் தாகந் தீரத் தண்ணீர்ப் பந்தலும் செய்வித்தான். கடைவீதி தோறும் வாழையும் கமுகும் கொடியும் கட்டி அலங்கரித்தும் காவணம் பரப்பியும் புதுமணல் பரப்பியும் அழகு செய்து விட்டு இராமனுக்குத் தெரிவிக்கின்றான்.

இராமன் மகிழ்ந்து ஆயிரகோடி பொன்னும் ஆயிரகோடி பசுக்களும் ஆயிரங்கோடி வண்டி அரிசியும் பயறும் எள்ளும் ஆயிரகோடி வண்டி காய்கறிகளும் மிளகும் நெய்யும் ஆயிரகோடி பொற்பாவைகளும் இவற்றையெல்லாம் கொண்டு பரதனும் இலக்குவனும் முன்னர்ப்போக விடை கொடுத்தனுப்பி விட்டு இன்று ஏழாம் நாள் அசுவமேத யாகம் தொடங்கப்படும் என்பதை மக்களுக்கு முரசறைந்து தெரிவிக்கச் செய்கின்றான்.

முரசொலி கேட்ட மக்கள் கடல்போல் திரண்டு வேள்வி காணத் திரள்கின்றார்கள். நிறைகுடமும் விளக்கும் ஏந்தி மங்கல மகளிர் செல்கின்றார்கள். பொற் பொடி கொண்டு கோலமிட்ட மாளிகைகள் தோறும் நிறைகுடம் வைத்தும் ஒளிபொருந்திய முத்து மாலைகளைத் தொங்கவிட்டும் மணமிக்க மலர்மாலைகளைத் தொங்கச் செய்தும் அலங்கரிக்கின்றார்கள்.

நெய்க்குடங்கள் தயிர்க்குடங்கள் வெண்ணெய்த்தாழிகள் இவற்றைக் காவடியில் வைத்துக் கொணர்கின்றாரும் தூய அரிசி நிரம்பிய வண்டிகளைக் கொணர்பவர்களும் கிழங்கு வகைகள், பழவகைகள், காய்வகைகள் சருக்கரை, பச்சைப்பயறு இவற்றைக் கொணர்பவர்களும் ஆனார்கள். இராமன் அமைத்த உணவுச் சாலைகள் தோறும் சனங்கள் வந்து அங்கு உண்டவர் உண்டு எஞ்சியுள்ள சோற்றினை உயர்ந்த மலைபோலக் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் சொரிபவர்களும், உண்டவர்களுக்குச் சந்தனமும் பூவும் தருகின்றவர்களும், மக்களுக்கு வீதிகளில் நின்று விநோதம் காட்டுபவர்களும், கோழிப்போர், தகரின்போர், காடைப்போர் இவற்றைச் செய்வாரும், பலவகையாலும் தம்மை அலங்கரித்துக் கொள்வாரும் ஆயினர். வள்ளல் இராமன் வந்தனனோ வந்திலனோ என அறியத்தூது விடுகின்றனர். அவ்வளவில் இராமன் இந்த மக்கள் நெருக்கத்தில் செல்லுதல் அரிதென்று அதை விலக்கி வழிவிடத்தன் கடல்போன்ற பெரிய படையை முதலில் விடுக்கின்றான். அந்தச் சேனையும் போக வழி காணாமல் நின்ற விடத்தே நிற்கலாயது. ஒருவாறு தேரும் யானையும் குதிரையும் காலாளும் ஆகிய படைகள் மக்கள் கூட்டத்தைப் பிளந்து கொண்டு மெல்லச் சென்றன. பின்பு மந்திரிகள் செல்கின்றனர். பின்பு வேள்விகாணும் ஆர்வம் மிக்க மக்கள் செல்கின்றனர். அழகுமிக்க ஆடல் மகளிரும் பாடுமகளிரும் செல்கின்றனர்.

பின்பு அந்தணர்கள் குண்டிகையும் தண்டும் குடையும் கொண்டு குடுமித்தலையோடு ஒதுங்கிச் செல்கின்றனர். சோதிடர்களும் வீணைவித்தகர்களும் அட்டமாசித்தி வல்லவர்களும் வேள்வி காணச் செல்கின்றார்கள். உடம்பு ஊனமுற்றவர்களும் கூனர்களும்

குறளர்களும் வேள்விகாணும் ஆர்வத்தில் விரைந்து செல்கின்றனர். பல்வகைப் பண்டங்களைச் சுமந்த வண்டிகள் செல்கின்றன. மகளிர் தேரிலும் பிடிமேலும் குதிரைமீதும் பல்லக்குமீதும் செல்கின்றார்கள். இவ்வாறு செல்லாநிற்க முன்சென்ற சேனைத்தலைவர்கள் கோமதி நதிக்கரையிலுள்ள நைமிசாரணியம் சேர்ந்தனர்.

இராமன் வேள்விசெய்யும் தன்தலைமைக்கேற்பத் தன்னை அலங்கரித்துக் கொள்கின்றான். செந்தாமரை மலர் போன்ற தன் சிவந்த பாதங்களில் வீரம் செறிந்த வீரக்கழல்களைக் கட்டிக் கொண்டு, பொன்னிறமுடைய பொன்னுடை பொலிவு பெறுமாறு தன்னுடம்பில் தரித்துக் கொண்டு, மணிகள் பதித்த கச்சினை அரையில் பொருந்தக் கட்டிக் கொண்டு, மின்னுகின்ற உடை வாளைக் கச்சோடு சேர்த்துக் கட்டிக் கொண்டு விளக்கம் சிறந்த உதரபந்தனத்தை ஒளிவீசுமாறு வயிற்றின்மேல் கட்டிக் கொண்டு, அஞ்சனத்தாலியன்ற மலைபோன்று அழகொடு விரிந்த மார்பில் முத்தாரத்தையும் பதக்கத்தையும் சேர்த்து அணிந்து கொண்டு, தோள்களில் வாகுவலயத்தையும் முன்கையில் மணிகள் பதித்த கடகத்தையும் அணிந்து கொண்டு தாமரை மலர் போன்று விளங்கும் முன்கை விரல்களில் மோதிரங்களையும் கடைச் செறிகளையும் அணிந்துகொண்டு, கழுத்தில் மணி வடத்தையும் அணிந்து கொண்டு, அவன் அழகிய முகங்களில் விளக்கமுண்டாகக்காதில் தோடுகளையும், தலையில் மணிமுடியையும் சாத்திக் கொண்டு புறப்பட்டுக் கோபுர வாயிலைக் கடக்கின்றான். அப்பொழுது மத்தளம், பேரி, வளை, கொம்பு முதலிய வாத்தியங்களின் ஒலி, முழுமதி கண்ட கடல்போல மிக்கு ஒலிக்கின்றன. மங்கையர் வாழ்த்த, மாகதரேத்த, அந்தணர் ஆசிகள் கூறக் கண்ட கண்ட இடங்களில் எல்லாம் சனங்கள் கைகூப்ப, இராமன் தேரில் ஏறுகின்றான். சங்கு தாங்கிய கையில் வில்லைஏந்தியவன் வந்தான் புவன மூன்றுடையான் வந்தான் எனப்பலவாகச் சின்னங்கள் ஒலிக்க மாடவீதியில் புகுகின்றான் இராமன். அவன் வருவதை யறிந்த பெண்டிர் தெருக்களில் மொய்த்துக் கொண்டு கண்ணனை

நன்கு காண்கின்றூர்கள். காதலால் பலப்பல கூறுகின்றூர்கள். இவர்களை யெல்லாம் கடந்து அயோத்திநகர் வாயில் கடந்து இராமன் ஏறிய தேர் செல்கின்றது. கோமதி நதிக்கரையில் உள்ள நைமி சாரணியம் சேர்கின்றது.

பின்பு காம்பீரர், கங்கர், கொங்கர், கருநாடர், சேதுமன்னர், குருமன்னர், சிங்களமன்னர் அவந்தி நாட்டு மன்னர், சனகர், துருக்கர், துளுவர் இவர்கள் எல்லோரும் சேனையோடு வந்து சேர்கின்றூர்கள். வீடணன் அமைச்சர்களும் சேனையும் சூழ வேள்வி காணவந்துற்ருன். குமுதன், சதவலி முதலிய வானரர்கள் சூழ எழுபது வெள்ளவானர சேனையோடு சுக்கிரீவன் வந்து சேர்கின்ருன்.

## முனிவர் வருகை

ஆசையற்ற தூய நெஞ்சத்தையுடைய அங்கிரா, அத்திரீ, காசிபன், கோசிகன், சமதக்கினி பரத்துவாசன் கோதமன், சாபாலி கண்ணுவன், தௌமியன், புலத்தியன், சுவத்தி, பிருகு முதலிய முனிவர்கள் பவித்திரமணிந்தகையினராய் காதில் தொங்குகின்ற குண்டலமுடையராய் உடம்பில் திகழ்கின்ற ஒளியையுடையராய் அரையில் உடுத்த மரவுரியை யுடையராய் பொய்பேசுவதில் பயிற்சியில்லாத நாவினையுடையராய் மெய்ப்பொருளில் செல்லு கின்ற தியானத்தை யுடையராய் இராமன் செய்யும் பெரு வேள்வி காண எழுந்த மகிழ்ச்சியுடையராய் வேதமாகிய நன்னூல் எல்லாம் உருக்கொண்டு நடந்து சொல்லுமாப்போல முந்நூல் விளங்கும் மார்பினையுடையவராய் வேள்வி செய்யும் நைமிசாரணியத்தில் புகுகின்றூர்கள்.

நாட்டிலுள்ள மக்கள் எல்லாம் செல்வமும் அணிகலனும் முதலியவற்றை எல்லாம் கொண்டு நைமிசாரணியத்தில் வந்து புகுந்தமையால் அந்த மன்னர் வாழும் நாடு காடாகி நலமிக்க நைமிசாரணியம் என்னும் காடு நாடாயிற்று என்று சொல்லு மாறு மக்கள் வந்து நெருங்கினூர்கள்.

இராமன், வந்து கூடிய முனிவர்களைத் தொழுது உபசரித்தும் தன்னை வணங்கும் மன்னர்களைத் தழுவி உபசரித்தும் மிக்க மகிழ்ச்சியோடு அவர்கட்கு இனிய கூறியும் மகிழ்ந்திருக்க, இலக்குவன், வந்த மன்னர்க்கும் பிறர்க்கும் அவர் அவர் தகுதிக் கேற்பமுன்னரே அமைத்தவீடுகளில் தங்கிமகிழுமாறுசெய்கின்றான். அந்தணர் முதலாக நீசர் கடையாக வந்த சனங்களுக்கு இலக்குவன் ஏவலால் சமைத்த உணவு வகைகளை ஏவலர் அன்போடு பரிமாறத் தத்தம் காதல் மனைவியர் ஊட்ட உண்ணுவன் போல உண்டு களித்தார்கள் மக்கள். பாலும் தயிரும் நெய்யும் பல சுவையுடைய கறி வகைகளையும் அன்னசாலைகள்தோறும் உண்ட மக்கள் மகிழ்ந்து இராமனைப் புகழ்ந்ததோடு கடல் சூழ்ந்த இவ்வுலகில் இந்த வேள்வி போன்ற வேள்வியைக் கண்டதில்லை என்று கூறுவாராயினர்.

## அரசர்கட்கு இராமன் அன்பளிப்பு

இராமன் வேள்வி காண வந்த அரசர்களுக்குப் பொன்னும் ஆடையும் ஆபரணங்களும் கொடுத்துவிட்டுச் சுக்கிரீவனுக்கும் அங்கதனுக்கும் இலங்கை மன்னவனாகிய விடணற்கும் அனுமனுக்கும் குகனுக்கும் படைத்தலைவர்கட்கும் சிறந்த மணிகள் பதித்த ஆபரணங்களையும் பொன்னையும் ஆடைகளையும் கொடுக்கின்றான்.

## வறியவர்க்கீதல்

பொருளற்ற வறியவர்கள் விரும்பிய எல்லாவற்றையும் வள்ளல் இராமன் வழங்குவான் என்று பறையறையும் ஓசையைக் கேட்டு மக்கள் பழுமரத்துவீழும் பறவைகள் போலவும் தேனில் வீழ்கின்ற வண்டுகள் போலவும் வந்து மொய்க்கின்றனர். அவர்கள் வருகை கண்டு மகிழ்ந்த இராமன், பொன்னை விரும்பினவர்க்குப் பொன்னையும் பூமி வேண்டினவர்க்குப் பூமியையும் நவமணிகளை விரும்பினர்க்கு நவமணிகளையும், கேட்டோர் கேட்டவற்றையெல்லாம் வாரி வழங்குகின்றான்!

உண்ணா நோன்புடைய ஒரு முனிவன்-ஆசையேயில்லாத தூயவன்-வருகின்றான். இராமனிடம் வந்து பொன்னும் பூமியும் எனக்கு எதற்கு? யான் உடுக்க மரவுரி வேண்டும் என்கின்றான்.

அவன் கருத்துணர்ந்த இராமன் மரவுரிகள் நிறைந்த ஒரு வண்டியையே அவனுக்குத் தருகின்றான். பின்பு ஒரு பெருந் தவ முனிவன் வேதமே உருவு கொண்டாற் போன்றவன். அவன் வந்து தன் கையில் தூக்குவதற்கு எளிதாக ஓர் கமண்டலம் வேண்டும் என்கின்றான். பொன்னில் மணிகள் பதித்துச் செய்த அழகிய கமண்டலத்தை இராமன் கொடுக்கின்றான். அதைப் பெற்றுக் கொண்டு மகிழ்ந்து அவன் உரையாடிக்கொண்டிருக்கும் போது ஓரந்தணன் வந்து 'புகழ்மிக்க இராம! இளையவளாகிய என்மனைவி சொன்ன வார்த்தை ஒன்றுண்டு. அதைக் கேட்பாயாக! 'வள்ளல் இராமனைக் கண்டால் பொன்னாலியன்ற அம்மனைக்காய் வேண்டும் எனக்கு என்பதைச் சொல் என்றாள்' என்கின்றான். அவன் விரும்பியபடி மணிகள் பதித்த பொன்னாலியன்ற அம்மனைக் காய்களைக் கொடுக்கின்றான் இராமன்.

தீமையான எதையும் நினையாத ஒரு சாது வேதியன். தன் மனைவிக்கு அஞ்சி நடப்பவன். அவன் தன் மனைவியிடம் சென்று இராமனிடம் யான் எதைக் கேட்க வேண்டும் என்று வினவுகின்றான். அவள் சொல்கின்றாள். 'நெஞ்சில் தூயனும் நிறை குணத்தி ராமனைக் கண்டால் அஞ்சிப் பல்லை இளித்துக்கொண்டு அசடனைப்போலத் தொலைவில் நில்லாதே; காற்றில் அகப்பட்ட பஞ்சினைக் காட்டிலும் பாழ்பட்டிருக்கின்ற நம் வறுமையைச் சொல்லிப் பலவற்றை வேண்டாதே; கஞ்சிக்குக் கலப்பயிறு வேண்டும் என்று கேள்' என்கின்றாள். அவள் சொல்லைக் கேட்டு வந்த அந்தணன் இராமனை நெருங்கி நின்றபோது அவன் வறுமையை இராமன் நினைந்து மலைபோன்ற தனக்குவியலையும் பசுக்களையும் கொடுக்க, அவன் மறுத்து விடுகின்றான். மறுப்பதற்குக் காரணமும் சொல்கின்றான். 'வீரர்க்குவீரனே! மழையைத் தட்டுப்பாடின்றிப் பெற்று வைத்தும் வேண்டிய நீரைப் பெறவியலாத மேட்டு நிலத்துப் பயிர்போல என் மனைவி வேண்டிய வெல்லாம் ஈகின்ற வள்ளலாகிய நின்னிடம் கஞ்சிக்கு கலப் பயிறு வேண்டினாள். அதைத் தவிர வேறு எதையும் வாங்க மாட்டேன் எதையேனும் யான் வாங்கிச் சென்றால் அவள் என்னோடு சேரமாட்டாள்; என்னைக் கண்டு சீறுவாள்' என்கின்றான்.

ஆசையில்லாத வேதியன் தன் மனைவி கூறியதை மறைக்காமல் இங்குச் சொன்னான் என்று இராமன் மனமகிழ்ந்து அவன் மனைவி வேண்டியபடி, கஞ்சிக்காக நெல் நூறாயிரம் கலமும் பயறு நூறாயிரங்கலமும் அளிக்கின்றான். பின்பு குற்றங்கள் நீங்கிய குணத்தவனாகிய ஓரந்தணன் வந்து தனக்குப் பஞ்ச கவ்விய கொள்ள ஒரு பசு வேண்டும் என்கின்றான், அவ்வாறே கொடுக்கின்றான் இராமன்.

வேதங்கட்குத் தலைவனாகிய இராமன் இவ்வாறு வேண்டினோர் வேண்டிற்றெல்லாம் வழங்கிக் கொண்டு பொழுது போக்கிக் கொண்டிருக்கின்ற நாளில் காவலாளர்கள் குதிரைக்குப் பின்பு போய் ஓராண்டினில் குதிரையை மீட்டுக் கொண்டு குறிப்பிட்ட நாளில் வந்து சேர்கின்றார்கள். வேதத்தில் விதித்துள்ளபடி பசுக்களையும் கங்கை நதி முதலிய நதிகளின் நீரையும் நாற்கடலின் நீரையும் விரைவாகக் கொணர்ந்தார்கள் பணியாளர்கள்.

குற்றமற்ற இலக்கணத்தையுடைய இருபத்தொரு சாண் நீளமுள்ள பாதிரி மரத்தால் செய்த வேள்வித்தூண் ஆறும் முருக்க மரத்தினால் செய்த வேள்வித்தூண் ஆறும் வில்வ மரத்தால் செய்த வேள்வித்தூண் ஆறும் தேவதாருவால் செய்த வேள்வித்தூண் இரண்டும் தக்கோலம் என்னும் செடியினால் செய்த வேள்வித்தூண் ஒன்றும் ஆக வேள்வித்தூண்கள் இருபத்தொன்றினைக் கொணர்ந்து சேர்த்தார்கள்.

திக்கடைகோல், முறம், கடு ரோகிணி என்னும் பூண்டு சோமரசம் வைக்கும் பாத்திரம், துடுப்பு, அகப்பை, மான்தோல், உரல் முதலிய வேள்விக்குரிய பாததிரங்கள் குறிப்பிட்ட நல்ல முகூர்த்தம் வந்தவுடன் வந்துசேர்ந்தன.

அசுவமேதம் செய்கின்றவர் மனைவியோடு இருந்து செய்தல் வேண்டும். சீதையை வனத்தில் விட்டமையால் என்செய்யலாம் என முன்பு துன்புற்றுப் பின்பு சீதையைப் போன்ற வடிவழகுடைய பொற்பாவை ஒன்று செய்துவர இராமன் ஏவியபடி அப்பொற்பாவையும் வந்து சேர்ந்தது. வேதியர்கள், வேதத்தில் சொன்னபடி முன்கூறிய இருபத்தொரு வேள்வித் தூண்களை யுரிய இடங்களில் நடுகின்றனர்.

கிழக்கில் எழுகின்ற சூரியனது தேரிற் பூட்டிய பச்சைக் குதிரைகள் இவை என்னுமாறு பதினாறு செழுமையான குதிரைகளைக் கொணர்ந்தபின்பு தேவர்கள் யாவரும் தொழும்படியாக உலக முழுவதும் இடத்தால் சுருங்கித் தோன்றுமாறு அவை ஓடுதற்கு உதவியாகத் திரண்ட பொன் பூணினால் குளம்பு கட்டினார்கள். பின்பு பதினாறு முனிவர்கள் அந்தப் பச்சைக் குதிரைகள் பதினாறும் விரைந்து செல்லும் ஆற்றல் பெறுமாறு அக்குதிரைகளின் பாதங்களில் ஓமங்களைச் செய்தார்கள்.

அவ்வாறு ஓமஞ்செய்தமையால் வலிமை பெற்ற அந்தப் பதினாறு குதிரைகளும் உலகம் முழுமையும் நடந்து சுற்றிவந்து மீண்ட பின்பு, இராமன் மகிழுமாறு பதினாறு வேள்வித் தூண்களில் அந்தப் பச்சைக் குதிரைகளைக்கட்டினார்கள். பின்பு முனிவர்கள் அக்குதிரைகளின் காதுகளில் மந்திரங்களைச் சொல்லி நின்று அவற்றை அரிந்தார்கள். அரிந்தவுடன் குதிரைகள் பூமி சிவக்குமாறு இரத்தத்தைச் சொரிந்தன. குதிரைகளின் தசையை அரிந்து வேள்வித்தீயில் அன்போடு அவியாகச் சொரிந்து தேவர்கட்கு அருத்தினார்கள்.

தேவர்களின் துன்பத்தைத் தீர்த்த இராமன், முன்பு செய்த பொன்னாலாகிய பாவையைத் தனக்குரிய தூய மனைவியாகச் சங்கற்பம் செய்து கொள்ளுமாறு செய்து பிரமனைப் போன்ற புரோகிதர்கள் சடங்கு செய்யுமுறையைக் காட்ட அந்தத்தவ முனிவர்களோடும் இராமன் அசுவமேத வேள்வியைத் தொடங்கினான். இராமன் இத்தகைய வேள்வியைச் செய்யும் நாளில் வான்மீகி முனிவர் தம்பால் பயிற்சி பெற்ற குசலவர்களை அழைக்க, அழகுமிக்க அப்பிள்ளைகள் இருவரும் வந்து வணங்கி நின்றனர்.

துன்பம் சிறிதுமில்லாத வான்மீகமுனிவர் "இராமனுடைய ஆற்றலைப் புனைந்து துதித்த பெருமையுடைய என் வடமொழிக் காப்பிய மாகிய மதுரமான இன்னிசைப்பாடலை அரசர்கள் கூடியுள்ள அந்த வேள்வி அவையில் சென்று நீங்கள் சொல்லுங்கள்" என்று கட்டளையிட்டார். வான்மீகியின் கட்டளைப்படியே இளமையான விடையைப் போன்ற குசலவர்கள் உழையும்

இளியும் விளரியும் தாரமும் குரலும் கைக்கிளேயும் துத்தமும் என்கின்ற பழமையான இசைக்கூறுகள் ஏழும் முறையால் தெரியும்படி பண்ணினுள் இழும் என்ற ஓசையோடு இசைக்கின்ற நரம்புகள் ஏழினையும் வார்க்கட்டில் கட்டி, முறுக்காணியை யுடைய யாழினைக் கையில் தாங்கிக் கொண்டார்கள்.

முதிர்ந்த பழம் போன்ற சிவந்த வாயினையுடையவர்களாய் காமனும் சாமனும் முனிவர் வேடங்கொண்டனரோ எனக் கண்டோர் சொல்லும்படி குளிர்ந்த மலர்களைச் சடைமுடியில் சாத்திக் கொண்டு வெண்மையான பூணூல் மார்பில் விளங்க அலங்கரித்துக் கொண்டார்கள். வான்மீகி முனிவரை வணங்கிக் கொண்டு அன்னை சீதையை வணங்கி விடைபெற்றுக் கொண்டு குளிர்ந்த தம் மலர்ச்சோலையை நீங்கிக் கற்கள் நிறைந்த பாலை வனத்தைக் கடந்து வாழைக்காடு சூழ்ந்துள்ள கங்கையாற்றை யடைகின்றார்கள். கங்கையாற்றின் வளங்களைக் கண்டு மகிழ்ந்து ஆரவாரத்தோடு அதனைக்கடந்து கரையேறி அடுத்துள்ள நைமிசாரணியத்தில் முனிவர்கள் சூழ அரசர் கூட்டம் இருந்த விரிந்த வேள்வித்தீயையுடைய வேள்விச்சாலையை அடைகின்றார்கள்.

அந்த வேள்விச் சாலையிலிருந்த வேந்தர்களும் முனிவர்களும் தேவர்களும் கேட்டு மனம் மகிழ்ந்திட இவ்வுலகத்தில் இராமனுடைய புகழைத் தன்னகத்தே கொண்டுள்ள இனிய இராமாயணப் பாடலை இசையில் வல்ல தும்புரு நாரதரும் தோற்குமாறு பாடினார்கள். இராமன் செய்யும் அசுவமேத வேள்வியைக் காணவந்த முனிவர்களும் மன்னர்களும் பொது மக்களும் குசலவர்கள் பாடுகின்ற தெய்வக் கானத்தைச் செவியில் கேட்டுப்பருகி, 'இந்த இசை நாம் இதற்கு முன்பு கேட்டறியாதது' என்று வியந்து கூறுகின்றார்கள்.

யாழினை இடது கையில் ஏந்திக் கொண்டு குசலவர்கள் பாடிய இன்னிசைப் பாடல்களைத் தம் செவியில் கேட்டு உருகுகின்ற சிந்தையினையுடைய மக்கள் இராமபிரானுக்குக் குசலவர்களின் பாடலினிமையை எடுத்துச் சொல்கின்றார்கள். கேள்வியுற்ற இராமன் ஏவலரை நோக்கி, 'அந்த அமுத இசை பாடும் மைந்தர்களை அழைத்து வருக' என்று ஏவியவுடன்

அவர்கள் சென்று அழைக்கின்றனர். குசலவர்கள் விரைந்து சென்று அரசர் அவையை அடைகின்றனர். குரல் முதலாகிய எழுவகை நரம்பும் கூடிய சீறியாழைக் கையில் வாங்கி அழகு மிக்க காப்பியமாகிய வான்மீகியின் பாடலைப் பாடிக்காட்டு கின்றனர். இது வரையில் யாரும் உணர்ந்திராத இராம காதையாகிய நூலினை வான்மீகி பகவான் சொன்ன வண்ணமே சொல்வோம் என்று தொடங்கிச் சிவபிரான் அம்பிகைக்குக் கூறியருளிய இராமாயணம் என்னும் திருக்கதையைச் சொல்லு தற்கு விசுவசேனரின் திருவடிகள் இரண்டும் சிறந்த துணையாகும் என்று சொல்லிக் கொண்டு பாலகாண்டம் முதலிய காண்டங்களைப் பாடுகின்றனர்.

பொன்னிறம் பொருந்திய சீதையின் புதல்வர்களாகிய குசலவர்கள் பாடிய இன்னிசைக் காப்பியம், தன் புகழே ஆதலால் முத்துவெண்குடைக் கீழ் உள்ள மன்னவனாகிய இராமன், மைந்தர்களின் திறமையை வியந்து மகிழ்ந்து, அவர்களை விழிகளால் பருகுவான்போல நோக்கி, 'இந்தப்பயன் பொருந்திய காப்பிய இன்னிசைப் பாடலைச் சொன்னவர்கள் யார்? நீங்கள் யார்?' என்று வினவுகின்றான்.

குசலவர்கள், 'நுமது பெரிய புகழினை நுட்பமான காப்பிய மாகச் செய்தவர் வான்மீகி முனிவர். அவன் சொல்லினைத்தலை மேற் கொண்டுள்ள நாங்கள் குசலவர்கள்' என்கின்றனர். அதைக் கேட்ட இராமன், நெடிய தன்னுருவை ஒக்கும் உருவத்தினராகிய குசலவர்கட்குப் பதினெண்கோடிப் பொன் கொடுமின் எனப் பணிக்கின்றான். இராமன் சொல்லைக் கேட்ட குசலவர்கள், பொருளின் தீமைகளைச் சொல்லி விளக்கி இப் பொருளுடை மையினும் வறுமையே நல்லது என்கின்றனர்.

குசலவர் சொல்லைக் கேட்ட இராமன் பொருளின் சிறப்புகளை எடுத்துக் கூறிப் பொருளை விடச் சிறந்தது இவ்வுலகில் இல்லை; ஆதலால் இந்தப்பொன் பதினெண் கோடியையும் பெற்றுக் கொள்ளுங்கள் என்று வேண்டுகின்றான். இராமன் சொல்லைக் கேட்ட குசலவர்கள்:- காய்கனி கிழங்குகளையுண்கின்ற முனிவர்க ளோடு வாழும் எங்களுக்கு நீங்கள் தருகின்ற காஞ்சனம் (பொன்)

காஞ்சிரங்காய் போலும் எங்களுக்கு என்கின்றனர். குசலவர்களின் பற்றற்ற உள்ளத்தை யறிந்த இராமன் குசலவர்களை நோக்கி, நீவிர் இன்னும் எம்மிடம் வருகின்றீர்களோ? என வினவுகின்றான். குசலவர்களும் 'நாளையும் வந்து பாடுகின்றோம்' என்று கூறிச் செல்கின்றனர்.

குசலவர்கள் நாள்தோறும் இப்படிப் பாடிச்செல்லும் நாளில் ஒருநாள் தூண்போன்று திரண்ட தோள்களையுடைய இராமன் குசலவர்கள் பாடும் இன்னிசைப் பாடல் கேட்டு மனமுருகி 'இவர் கள் திருமகளின் இயல்பினளான சீதை பெற்ற புதல்வர் தாம்' என்று அறிந்து கொண்டு தன்னையே ஒத்துள்ள அப்புதல்வர்களைத் தழுவிக்கொள்கின்றான். கற்புமிக்க சீதையின் நினைவு மேலோங்கு கிறது. 'அமிழ்து என்னும்படி சுவைமிக்க சொற்களையுடைய சீதையின் கற்பிற்கு அந்த அருந்ததியின் கற்பும் நாணும் என்பதை யான் அறிவேன் ஆயினும், இலங்கையில் அன்று தீயில் மூழ்கித் தேவர்கள் காணுமாறு செய்ததை இன்று அயோத்தியும் காணு மாறு செய்வேன்' என்று கருதி, குசலவர்களை அருளின் நோக்கி, 'நீங்கள் தவத்தில் சிறந்த வான்மீகி முனிவரிடம் செல்லுங்கள்' என்று அன்பால் தழுவிக்கொண்டு சொல்லி அனுப்பிவிட்டு, அவ் வாறே வேதியரையும் வேந்தரையும் விடைகொடுத்து அனுப்பி விட்டுத் தூதுவரை நோக்கி, வான்மீகி முனிவரை அன்புமிக்க சீதையோடு அழைத்துக் கொண்டு வருமாறு கூறிவிட்டுத் தன்னி. ருப்பிடம் புகுந்தான்.

சூரியன் மறைகின்றான். மாலை வருகின்றது. கரிய இருள் விண்ணையும் மண்ணையும் மறைக்கின்றது. உடனே வெண்டிங்கள் உலகிற்கு ஏற்றிய தீபமென்னும்படி தோன்றுகின்றது. இரவுகழி கின்றது. தாமரை மலருமாறு சூரியன் உதிக்கின்றான். இராமன் விழித்துக் காலைக்கடன்களைக் கழித்துவிட்டு வந்து அரண்மனைக் கோயிலிலுள்ள திருமாலைக் கண்டு அவன் திருவடிகளை வணங்கிக் கொண்டு பெருந்தவத்து அந்தணர் பெருநிதி பெறுமாறு தானம் செய்கின்றான். பின்பு வலிமைமிக்க மக்கள் திரள் தன் பக்கத்தில் சூழ்ந்திருக்கப் பொன்னால் செய்த சிங்காதனத்தில் ஏறி அமர்கின்றான். வான்மீகி வருகின்றார். அவர்க்குப் பின்பு கானில்

உள்ள தெய்வமும் கண்டு இரங்கும் வண்ணம் கண்கள் ஆறாக நீர் சொரியச் சீதை வருகின்றாள். அவளைக்கண்ட நகரமக்கள் எல்லாம் இவள் தன் கற்பினை நினையாமல் நம்மன்னன் துறந்து விட்டானே! பெண்ணாகப் பிறந்தவர்கள் இவளைப்போல் துயருற்ற வரில்லையென்று சொல்லித் தம் கண்களைக் கையால் மூடிக் கொண்டு வருந்தா நிற்க.........

சீதைவந்து முடிக்காமல் பின்புறம் விடுத்த பசுமையான கூந்தல் தன் பாதத்தைப் பொருந்தவும், வெண்மையான துகிலையுடுத்-துக் கொண்டவளாய் நாணத்தால் வளைந்த மேனியையுடையவ ளாய்க் கையால் எடுக்கலாம்படி படர்ந்த பசலையுடையவளாய் ஏங்குகின்ற மனத்தையுடையவளாய்த் தன்னை அடுத்துள்ள பெருந் துன்பத்தினளாய் அழுது கொண்டு நிற்கின்றாள்.

இராமன் வான்மீகி முனிவரை வரவேற்று வணங்குகின்றான். அம்முனிவரைச் சிறந்த இருக்கையில் இருக்கச் செய்துவிட்டுத் தானும் அமர்ந்த பின்பு சீதை உலர்ந்து வாடிய முகத்தினளாய் வேறு ஒன்றும் நோக்காமல் பூமியையே நோக்கி நிற்கின்றாள். வான்மீகி இராமனை நோக்கி சீதையின் கற்பு மண்ணுலகத்து மட்டுமன்றி விண்ணில் உள்ள அருந்ததியும் போற்றும் பெருமையது என்பதை யான் அறிவேன் என்கின்றார். வான்மீகியின் வாய்மொழி கேட்ட இராமன் அம்முனிவரை நோக்கி 'முனிவரே! நீர் அருளிய மொழி யைத் தேவர்களும் யானும் முன் அறிவோம். ஆயினும் கடல் சூழ்ந்த இவ்வுலகத்துள்ளோர் காண்டல் வேண்டும் என்பதே என் எண்ணம் என்று இராமன், நானிலத்து மக்களும் ஒருங்கி குழுமி யுள்ள சபை நடுவில் சொல்லிய சொல்லைக் கேட்டு நினைக்கும் தோறும் கிழியும் சிந்தையள் ஆகின்றாள்.

நாயகன் மகிழ்ந்து பாராட்டிய போதும் வெகுண்டு இகழ்ந்த போதும் ஒன்றுபட்ட மனத்தினளாய்த் தன் நிலை கெடாமல் நன் மையையே கைக்கொள்கின்ற கற்பினை இன்று ஒரு பொருளினால் சொல்லும் தரத்ததோ? மண்ணுலகிற்கு மேலுள்ள விண்ணில் விளங்கும் அருந்ததியும் போற்றிப் புகழ்ந்தது என்பதை அறிந்தி-

ருந்தும் குற்றமற்ற என் கற்பினை என்னுடன் கலந்து பழகிய காதலராகிய இராமபிரானே ஐயுறுவாராயின் வேறு சான்றும் இவ்வுலகில் உண்டோ? இவ்வுலகத்தவர் அறக்கொடும் பழியைச் சொல்வார் ஆயினர். என் வருந்தும் நெஞ்சினைப் பிறர்க்குப் பிளந்து காட்டுகின்றேன்' என்று சீதை சினமுதிர்ந்து பேசிய போது வான்மீகி 'சீறுதே' என்று சீதையை அமைதிப்படுத்தி, 'கணவன் சொன்னபடி ஐயத்தைத் தீர்ப்பாயாக' என்று கூறித் தன் கமண்டல நீரைக் கொடுக்கச் சீதை அந்நீரை வாங்கி ஆசமனம் செய்து கொண்டு, 'என்கணவன் செய்தன எல்லாம் எனக்கு இதமாம் என்று நினைந்தபின் கணவன் உடம்பைக் கண்டு ஆற்றுது போய் வீழ்ந்து, துன்புற்றுத் தன் துன்பம் தீர்த்த இராமனுடைய பாதங்களை வணங்கிப் பூமி தேவிக்குச் சொல்கின்றுள்.

'என்னைவருந்திப் பெற்ற நீ என்னுடைய கற்பும் விண்ணில் உள்ள அருந்ததியின் கற்பும் ஒருதன்மையது என்றால் எனக்கு இடம் கொடுத்து பிளவுபடுவாயாக'' என்பது அவள் வஞ்சினச் சொல்.

'மண்மகளே! விசுவாமித்திரன் வேள்வி காத்து மதிலையில் புகுந்து எனக்காகச்சிவதனுசினை முறித்து என்னைக் கைப்பிடித்த அழகுமிக்க காயாம்பூ மேனியனுகிய இராமனை யன்றி மற்றொருவனை யான் மனத்தால் வாக்கால் நினைக்காதவள் என்பது உண்மை யானால் எனக்கு ஒடுங்க இடம் கொடுப்பாயாக'

என்று சீதை கூறியவுடன் பூமிதேவி சீதை முன் தோன்று கின்றுள். சீதையைத்தன் மார்பகத்துத் தழுவிக் கொண்டு ஒளி பொருந்திய சூரியன் கதிர்கள் நுழைய வியலாத தரையைக் கிழித்துக் கொண்டு உள்ளே சென்று மறைகின்றுள். சீதையைக் காணுத இராமன், 'இதுகாறும் தீமையில்லாத நன்மையே என் பால் விளங்கியிருக்கிறது. அங்ஙனமாகவும் சீதை மறைந்ததாகிய இது நிகழ்வது என்ன காரணத்தால் என்று ஐயம் எய்திக் காதலியாகிய சீதை போன வழியையும் காணுதவாறு செய்த பூமிதேவி எத்தகையள்! என்று சீற்றத்தால் பொங்கிப் பேசு கின்றுன்.

'அகத்திய முனிவன் ஓர் உள்ளங்கையில் முகந்து கொண்ட கடல் அலைகளால் மோதிடக்கிடந்த இந்தப் பூமியானது, திருமாலின் ஓர் அடிக்கு இடம் போதாமல் குறைந்திருந்ததையும் ஆதிசேடன் என்னும் பாம்பின் ஆயிரம் பணமுடிகளின்மேல் கிடந்ததையும், பிரளய வெள்ளத்தில் ஆழ்ந்தபோது வராக மூர்த்தி தன் எயிற்றினுல் எடுத்தபோது அந்த எயிற்றின்மேல் கிடந்ததையும் எம் நாயகனுகிய திருமாலின் வயிற்றில் ஊழி யிறுதியில் கிடந்ததையும் மறந்துவிட்டது! எப்படி? கடல் பேரலை களை வீசும்படி செய்து அதட்டவும் வருணனைக்காண இயலாமை யால் பெரிய நெடிய என் வில்லை வளைத்து அம்பினை விட, அதனுல் படர்கின்ற தீ கொளுத்திய கடலில் ஒருதிடலா இன்று சீதையை மறைத்தது? பூமியை இந்தக்கடல் சேறு எழுமாறு பாதலத்தில் அழுந்திடக் காலால் மிதித்திடுவேன்; ஆனுல் அச் செயல் பாவியேனுகிய என் காதலி சீதையைப் பெரிதும் வருந்தச் செய்யும்; எனவே அதையான் செய்யமாட்டேன். இந்தப் பூமியைத் துண்டித்திடுவேன்', என்று சொல்லும்போது பிரமன் வந்து தோன்றுகின்ருன். துதிக்கின்ருன். "ஆகாய முதலிய ஐந்து பூதங்களால் இயன்ற இந்த பூவுலகத்தைப் போனகமாக விரும்பி யுண்டுவிட்டு ஓர் ஆலமரத்தின் பொன்னிறத்தளிரின்மேல் அறிதுயில் செய்துவிட்டு முன்னுளில் நின் திருவடியிலிருந்து உலக மூன்றையும் படைத்தவனே! உயர்வற உயர்ந்தவனே! நினக்கு யான்சில சொல்லவேண்டியுளது. அதனைச் சிறிதுகேட்பாயாக! நினது உருவம் மெய்ப் பொருளாகியும், இருண்டு தோன்றுகின்ற வானத்திற்கு அப்புறமாகியும் அவ்வானத்துள்ளே அடங்கியும் இருக்கும். மின் உள்ளே பிறந்து ஒளிர்தற்கு இடமாகிய மேகத்தைப் போல விளங்குகின்ற நின்னுள்ளே பிறந்து விளங்கு கின்ற நிலையில்லாத உடம்புடன் கூடிய உயிர்கள் எங்கும் நிறைந்த உன்னுள்ளே பிறந்து இறந்து ஒடுங்குவதல்லது. இங்கு என்னுலே பிறத்தலும் இறத்தலும் செய்கின்றன என்று கூறுதல் பொருந்துமோ? முன்னையநாளில் இராவணனைக் கொல்ல வேண்டும் என்று தேவர்கள் வந்து நின்னை இரந்து வேண்டிக் கொண்டதனுல் இந்த மண்ணுலகில் வந்து மானிடவடிவத்தில் தோன்றினுய். ஆதிக்கடவுளாகிய நீ உலகமுழுமையும் படைத்துக் காக்கத் தொடங்கிய போது நினது கொப்பூழில் பூத்த தாமரை

யின் மகரந்தம் பொருந்திய பொன்மயமான கொட்டையின் மீது நின்று உலகம் முழுமையும் விரிந்தது. ஆதலால் உன்கண் தோன்றிய இந்தப் பூமியிடத்துப் புகுந்த மங்கை நினது காதலுக் குரிய சீதை என்னும் மங்கையே ஆவள். ஆயினும் அவளை இனி நீ காண்பது உனது வைகுந்தமாகிய இடத்தில் தான் என்று சொல்லித்துதித்தான்.

தன் பரநிலையைப் பற்றிப் பிரமன் கூறியவுடன் இராமன் சினம் தணிந்தனன். சீதைபெற்ற குசலவர்களைத் தழுவிக்கொண்டு வேள்விச் சாலையில் புகுந்தனன். அசுவமேத வேள்வி நூறும் முடித்துக் கொண்டு உயர்ந்த யானைமேல் ஏறிக்கொண்டு அயோத்திக்குள் புகுந்தான். அயோத்தியில் தன் ஒற்றைவெண் கொற்றக்குடை நிழலில் இருந்து கொண்டு உலக முழுமையையும் பிறர்க்குப் பொது என்பது இல்லாமல் அரசர்கள் போற்றுமாறு தானே இனிதாகக் காத்து வருகின்றான் என்பது இப்படலப் பொருளாகும்.

## வான்மீகத்தோடு ஒட்டக் கூத்தர் வேறுபடும் இடங்கள்

**1. வான்மீகத்தில்:-** இராச சூயம் வேள்வி செய்ய விரும்பு கிறேன் என்று கூறிய இராமனை நோக்கிப் பரதன், அரசர்கள் இராமன் பால் வைத்துள்ள அன்பினையெடுத்துக் கூறி அவ்வன்பு கெட அரசர்களை வென்று அவர்கள் செல்வத்தைக் கொண்டு செய்யும் இராச சூய வேள்வியைக் காட்டிலும் அசுவமேத வேள்வி செய்தலே தக்கது என எடுத்துக் கூற இராமன் அப் பரதன் மொழிக்கு உடன்பட்டு இராச சூயத்தை விடுத்து அசுவ மேத வேள்வியே செய்யலாம் என்று முடிவு செய்ததாக உள்ளது

**ஒட்டக்கூத்தர்:** இராசசூயம் செய்வதினும் அசுவமேதம் செய்வதே நல்லது என இலக்குவன் கூறியதாகக் கூறுகின்றார். "இராசசூயம் தான்செய்ய உன்னினன் என்னலோடு முறக்க நீத் திரேழாண்டு தன்னை முன்காத்த வென்றித் தடஞ்சிலைத்தம்பி கூறும்" (4) என்கின்றார். இது வான்மீகத்திற்கு வேறுபட்ட கருத்தாகும்.

**2. வான்மீகத்தில்:** அசுவமேத வேள்வி செய்ய ஏற்றுக் கொண்ட இராமன், அசுவமேதத்தால் இந்திரன் விருத்திரா சூரனைக் கொன்று பிரமகத்தியை அசுவமேதத்தால் நீக்கியதையும் இளன் என்பவன், அசுவமேதத்தால் பெண்ணும் ஆணுமாக மாறிடும் சாபத்தில் நீங்கி ஆணுகவே ஆகிய சிறப்பையும் எடுத்துக் கூறிப் பரதன் கருத்தினையேற்றுக் கொண்டதாக வுள்ளது.

**ஒட்டக்கூத்தர்:** இந்திரன் விருத்திராசூரனைக் கொன்ற பழி நீங்கியகதையையும் இளன் என்பவன் சாபநீங்கிய கதையையும் இலக்குவனே சொல்லி அசுவமேதச் சிறப்பை விளக்கியதாகக் கூறுகின்றார்.

**3; வான்மீகத்தில்:-** நைமிசவனத்தில் அசுவமேத வேள்வி செய்தற்கேற்றவாறு அவ்விடத்தைப் பண்படுத்தி வருபவர்களின் தகுதிக் கேற்றவாறு தங்குதற்கு இடம் அமைக்குமாறு பரதனை நோக்கி இராமன் கூறியதாகவும் பரதனே யாகசாலையைப் பண் படுத்தித் தங்கு மிடங்களையும் அமைத்து இராமனுக்குக் காட்டிய தாகவுள்ளது. இலக்குவனைக் குதிரைக்குப் பாதுகாவலாக அனுப்பியதாகவும் உள்ளது.

**ஒட்டக்கூத்தர்:-** வேள்விச்சாலையைத் திருத்தித் தங்கு மிடங்களைக் கட்டுவித்தது இலக்குவனே எனக் கூறுகின்றார். இலக்குவனுக்கே இராமன் இந்தப் பணியைச் செய்யுமாறு கூறியதாகவும் உள்ளது.

**4: வான்மீகத்தில்:-** குசலவர்களை அழைத்துக் கொண்டு வால்மீகி அசுவமேத வேள்வி நடக்கு மிடத்தில் முனிவர்கள் தங்கியுள்ள இடத்தில் சென்று தங்கியிருந்தார் என்றும் அவர் தங்கியுள்ள இடத்தில் கனிகளும், கிழங்குகளும் நிறைந்த வண்டிகளை நிறுத்தியிருந்தார்கள் என்றும் உள்ளது. மேலும் வான்மீகி குசலவர்களை நோக்கி 'நீங்கள் இருவரும் முனிவர்கள் தங்கியுள்ள இடங்களிலும் மன்னர் மாளிகைகளிலும் சென்று இராமாயணத்தைப் பாட்டாய்ப்பாடி மகிழ்விக்க வேண்டும். உங்களுக்கு இளைப்பு என்பதே இல்லாமல் இங்குள்ள காய்

கனிகளையே அருந்துங்கள். இராமபிரான் உங்களை அழைத்துப் பாடச்சொன்னால் மிக இனிமையாகப் பாடிமகிழ்விக்க வேண்டும். பொருளில் ஆசை என்பது கூடாது. காய்கனியுண்கின்ற நமக்கு எதற்குப் பொருள்'' எனக்கூறி அவர்களை உற்சாகப் படுத்தி அனுப்பியதாகவுள்ளது. இராமன் நீங்கள் யார் என வினவினால் வான்மீகியின் சீடர்கள் என்று மட்டும் சொல்லுமாறு கூறியதாகவும் உள்ளது.

**ஒட்டக்கூத்தர்:-** வான்மீகி, வனத்திலுள்ள தன் தவக் குடிலில் இருந்து கொண்டே குசலவர்களை அசுவமேத வேள்வியில் சென்று பாடுமாறு அனுப்பியதாகவும், குசலவர்கள் வான்மீகியையும் அன்னை சீதையையும் வணங்கி விடைபெற்றுச் சென்றதாகவும் கூறுகின்றார். வால்மீகிமுனிவர் வேள்வி நடக்கும் இடத்திற்குச் சென்றதாகக் கூறவில்லை. பொருளில் ஆசை வைக்கலாகாது எனக்குசலவர்க்குச் சொல்லியதாகவும் இல்லை.

5. **வான்மீகத்தில்:-** இராமன் குசலவர் பாடுகின்ற இராமாயணப் பாடல்களை எங்கோ இருந்து சிறிது கேட்டருளி வியந்து, பின்பு அவர்பாடல்களை, நல்லறிவு நிரம்பப் பெற்ற பலவகைப் புலவர்களையும் ஒருங்கு கூட்டி. அவர்களிடையிலே பாடுமாறு செய்தானாக. குசலவர்கள் இருபது சருக்கங்களை எல்லோரும் வியக்கும் வண்ணம் பாடி முடிக்கின்றனர். முடித்தவுடன் இராமன் தம்பியரில் ஒருவரை அழைத்துச் செவிக்கினிய பாடல்களைப்பாடிய குசலவர்களுக்குப் பதினெட்டாயிரம் பொன்னும் அவர் வேண்டும் எல்லாவற்றையும் கொடுக்குமாறு கட்டளையிடுகின்றான். அவ்வாறே தங்க நாணயங்கள் பதினெண்ணாயிரத்தைக் கொடுத்தபோது குசலவர்கள் வாங்க மறுத்து விட்டார்கள். காட்டில் எளிதாகக் கிடைக்கின்ற பழங்களையும் கிழங்குகளையும் உண்டு மனநிறைவு கொண்டு வாழ்கின்ற நாங்கள், பொன் நாணயத்தாலும் பொன் கட்டியாலும் என்ன செய்யப் போகின்றோம்! என்றும் கூறினார்கள்: எனக் கூறுகின்றார்.

**ஒட்டக்கூத்தர்:—** இக்கருத்தைச் சிறிது மாற்றிக் கூறுகின்றார். பலவகையான புலமை பெற்ற அறிஞர்களை அவையில்

கூட்டி அந்த அவையில் குசலவர்களைப் பாடச் செய்ததாகச் சொல்லவில்லை. பாடிய குசலவர்களுக்குப் பரிசாகப் பதினெண் கோடிப் பொன் கொடுக்குமாறு இராமன் சொன்னதாகச் சொல்கின்றார். ஆயிரத்தைக் கோடியாக்கிப் புனைந்துரைக்கின்றார் என்று கொள்ள வேண்டியுள்ளது.

6. **வான்மீகத்தில்:—** குசலவர்கள் அசுவமேத வேள்விச் சாலையில் ஒரு நாளைக்கு இருபது சருக்கங்களாகப் பாடினதாக உள்ளது. இராமன் இந்தப் பாடல்களை யார் செய்தது எவ்வளவு பரிமாணம் உள்ளது? என வினவியதற்கு விடையாகக் குசலவர்கள் கூறுகின்றார்கள். ஐந்நூறு சருக்கங்கள் அடங்கிய ஆறு காண்டங்களை எங்கள் குரு வான்மீகி பகவான் செய்தருளியிருக்கின்றார். மேலும் தேவரீரதது முன்னைய சங்கேதத்தைப் பற்றியதாகிய உத்தர காண்டமும் செய்து முடிக்கப்பட்டுள்ளது என்கின்றனர். தேவரீர்கட்கு அவகாசம் இருந்து கேட்கத்திருவுள்ளம் இருக்குமானால் பாடிக்காட்டும் எங்களிடமிருந்து கேட்டருளலாம் என்கின்றார்கள்.

**ஒட்டக்கூத்தர்:—** இந்த விளக்கங்களையெல்லாம் விவரிக்கவில்லை. குசலவர்கள் பாடிய இராமகாதையை நூறு செய்யுட்களால் குட்டி இராமாயணம் என்னுமாறு பாடியுள்ளார். வான்மீகி அப்படிச் செய்யவில்லை. பாலகாண்ட முதலாகப் பாடினார்கள் என்று பொதுவகையாகவே கூறியுள்ளார். பொதுவகையாற் கூறியிருப்பதே பொருத்தமாகவுள்ளது. இராமாயணத்தில் ஒரு இராமாயணம் என்னுமாறு இடையில் மீண்டுங் கூறியிருப்பது ஒட்டக்கூத்தருக்குப் பொருத்தமாகத் தோன்றியிருக்கலாம்.

7. **வான்மீகத்தில்:—** வான்மீகியோடு வந்த சீதை இந்த அவையோர்க்கு முன் தன் கற்பின் தூய்மையைப் புலப்படுத்தவேண்டும் என்று இராமன் கூறியபோது சீதை, "நான் மனச்சான்றுடன் இராமபிரான் ஒருவரைத் தவிர வேறு எதற்கும் சிந்தையில் இடம் கொடுத்திலேன் என்பது உண்மையானால் பூமி தேவி எனக்கு இடங்கொடுக்கக்கடவள்" என மும்முறை கூறிச் சபதம் செய்தவுடன் உயர்ந்த இரத்தனங்கள் பதிக்கப்பெற்ற ஒளிமயமான சிங்காசனம் ஒன்று பூமியிலிருந்து வெளிப்பட்டது. பூமிதேவி அந்த சிம்மாசனம் வந்தவழியே வந்து

சீதையைத் தன் கைகளால் அணைத்து எடுத்து அந்தச் சிங்காசனத்தில் உட்காரவைத்துக் கொண்டு பூமியில் நுழைந்து மறைந்து விட்டதாக உள்ளது.

**ஒட்டக்கூத்தரில்:-** இராமன், தன் மனைவியான சீதை தன் கற்பின் தூய்மையை இந்த அவையோர் அறியப் புலப்படுத்த வேண்டும் என்று கூறியபொழுது, சீதை சினந்து, "அருந்ததியும் போற்றியது என் கற்பு என்பதை அறிந்திருந்தும் காதலன் ஐயுற்றால் எப்படி கற்பினை நிறுவுவது? உலகோர் அறக் கொடும்பழி கூறினார்கள். என் நெஞ்சினைப் பிளந்து காட்டுகின்றேன்" என்று கூறும் பொழுது வான்மீகி அச்சீதை சினந்தணியுமாறு தன் கமண்டல நீரைக் கொடுக்கின்றார். அந்நீரினை யுண்டு சீதை சினந்தணிந்து, சொல்கின்றாள். காயாம்பூவண்ணனாகிய இராமபிரானைத் தவிர வேறொருவனை மனத்தால் வாக்கால் நினைந்திலன் என்பது உண்மையானால் மண்மகளே! எனக்கு இடங்கொடு என வேண்டப் பூமிதேவி வந்து சீதையை மார்புறத் தழுவிக்கொண்டு தரையில் புகுந்து மறைந்ததாக உள்ளது. தரையிலிருந்து சிங்காதனம் வந்ததாகவோ அதில் சீதையை அமர்த்திக் கொண்டு சென்றதாகவோ இல்லை. சீதை தன்னெஞ்சினைப் பிளந்து காட்டுகின்றேன் என்று சொன்னதும் வான்மீகி தன் கமண்டல நீரைப் பருகத்தந்த நிகழ்ச்சியும் வான்மீகத்தில் இல்லாதவை.

8. **வான்மீகத்தில்:-** பூமிதேவி சீதையையெடுத்துக் கொண்டு மறைந்தது கண்ட இராமன் கோபமிக்கவனாய்ப் "பூமிதேவி! சீதையை எனக்குத் திருப்பிக்கொண்டு வந்துகொடு. கலப்பையைக் கொண்டு உழும்பொழுது பூமியிலிருந்து தோன்றினவள் சீதை ஆதலின் பூமிதேவியாகிய நீ எனக்கு மாமியார் ஆகின்றாய். அந்தச் சீதையை இங்குக் கொணர்ந்து தராவிட்டாலும் பாதாளத்திலோ சுவர்க்கத்திலோ நான் அவளோடு வாழ ஓரிடத்தையாவது கொடு! இல்லையானால் மலைகளையும் காடுகளையுமுடைய பூமி முழுவதையும் அழித்துவிடுவேன்" என்று கூறுகின்றான். அப்பொழுது பிரமதேவன் வந்து இராமனுடைய அவதார உண்மையையும் இனி நடைபெற வேண்டியதையும் சொல்லி அமைதியுறச் செய்கின்றான். மேலும் இதுகாறும்

குசலவர் மூலமாகக் கேட்டநின் வரலாறு போலவே இனி நடைபெற இருக்கின்ற நின்வரலாறும் வான்மீகியால் எழுதப்பட்டுள்ளது. அதையும் கேட்பாயாக! எனக் கூறிவிட்டுப் பிரமன் மறைகின்ருன். பின்பு உத்தரகாண்டத்தையும் குசலவர்கள் பாட அறிந்து இராமன் அந்தக் குசலவர்களோடு அயோத்தி புகுந்து நல்லாட்சி செய்கின்ருன் என்றுள்ளது.

**ஒட்டக்கூத்தரில் :-** இராமன் பூமிதேவி மேல் கோபங்கொண்டு கூறிய நிகழ்ச்சியை ஒட்டக்கூத்தர் அழகாக-விரிவாகக் கூறுகின்ருர். அகத்திய முனிவன் உள்ளங்கையில் முகந்து கொண்ட சிறுமையுடைய கடலின் நீர் அலைகள் மோத அலையுற்றுக் கிடந்த இந்தப் பூமி திருமால் விக்கிரமனுக வந்து அளந்த போது ஓரடிக்கு இடம்காணுது போயிற்று. ஆதிசேடன் என்னும் பாம்பு தன் தலையில் சுமந்துக்கிடந்ததும் எம் ஆதிவராக மூர்த்தியின் எயிற்றில் கிடந்ததும் திருமாலின் வயிற்றிடைக் கிடந்ததும் மறந்து போயிற்ரே? வருணனைக் காணவேண்டி யான் விட்ட அம்பினுல் கொளுத்தப்பட்ட கடலில் ஒரு திடர் போன்ற பூமியோ சீதையை மறைத்தது. இந்தப் பூமியை இந்தக் கடல் சேருமாறு பாதலத்து அழுந்திட மிதிப்பேன் ஆனுல் அச்செயல் சீதைக்கு வருத்தம் கொடுக்கும் ஆதலால் அதைச் செய்கிலேன். இக்கருத்துக்கள் வான்மீகி சொல்லாதவை. மேலும் பிரமன் இராமனுடைய அவதார உண்மையைச் சொல்லி இராமன் சினத்தைத் தணிவித்து 'நின் எதிர்கால வரலாருகிய உத்தர காண்டமும் வான்மீகியால் செய்யப்பட்டுள்ளது. அதையும் கேள்' என்று சொல்லிச் சென்ற நிகழ்ச்சி ஒட்டக்கூத்தரில் காணப்படவில்லை.

## அசுவமேத யாகப் படலத்தின் பொருள் சிறப்பு

அசுவமேத யாகப் படலத்தில் இராமபிரான் செய்யும் யாகத்தின் பெருமையும் யாகத்திற்குரிய பொருள்கள் வண்டிகளில் வந்து சேரும் சிறப்பும் யாகம் காண வந்தவர்களின் வகையையும் வந்தவர் தகுதிக்கு ஏற்பத் தங்குமிடங்களும் உணவுப் பொருள்களும் அமைத்துக் கொடுத்த அமைப்பும் யாகத்தில் தானம் பெற வந்தவர்களின் வெவ்வேறு வகையான விருப்பங்களும், அவர்கள்

விருப்பம் அறிந்து விரும்பியவற்றை வரம்பின்றிக் கொடுக்கும் இராமபிரானின் பெருமிதமும் அழகுற விளக்கம் பெற்றுள்ளன.

யாகம் காணச் செல்லும் பெண்டிரைக் கூறும்போது மெல்லியலாராகிய அவர்களுக்கேற்ப மெல்லோசையே மிக் கொலிக்குமாறு செய்யுள் செய்துள்ள திறம் போற்றுதற் குரியதாகவுள்ளது.

கஞ்சமலர் விஞ்சுகவின் அஞ்சிய முகத்தோர்
கொஞ்சுகிளி மென்சொலியர் கொங்கைகள் சுமந்தே
வஞ்சிபுரை நுண்ணிடை வருந்த வழிகாணு
மஞ்சர்கள் மனந் தொடர மங்கையர்கள் போனார். (49)

என்பது காணலாம். இச் செய்யுளில் கஞ்சமலர், விஞ்சுகவின் அஞ்சிய எனவும் கொஞ்சுகிளி மென்சொலியர் கொங்கைகள் சுமந்தே எனவும் வஞ்சிபுரை நுண்ணிடையர் வருந்த, எனவும் மஞ்சர்கள் மனந்தொடர மங்கையர்கள் எனவும் மெல்லெழுத்துகளே மிக்கு வருமாறு தொகுத்து அழகு செய்துள்ளமை காணலாம்.

தாமரைமலரினது மிக்க அழகும் அஞ்சுதற்கு காரணமான அழகு முகங் கொண்டவராய்க் கொஞ்சிப் பேசும் சொல்லினையுடைய கிளிபோன்று பேசுகின்ற சொல்லினையுடைய பெண்டிர் நகில்களைச் சுமந்து கொண்டு வஞ்சிக் கொடிபோன்ற நுண்ணிய இடை வருந்துமாறு சன நெருக்கத்தில் வழிகண்டு மங்கையர் போகின்றனர். அவர் அழகினைக் கண்டு மைந்தர்களின் மனம் அவர்களைத் தொடர்ந்து பின்செல்கின்றது; என்பது பொருள். பாடப்படும் பொருளுக்கேற்ப மெல்லோசை விஞ்சப் பாடியுள்ளது போலவே பாடப்படும் பொருளின் நடைக்கேற்பவும் செய்யுள் செய்கின்றார் ஒட்டக்கூத்தர்.

யாகசாலையைச் சென்றடைய குதிரைப் படைகள் செல்வதைக் கூறும்போது அக்குதிரைகள் செல்லுங்கால் எழுகின்ற ஒலியும் தம்செய்யுளில் புலப்படச் செய்துள்ள அருமை காணலாம். இராமபிரானுடைய செல்வச் சிறப்பிற்கேற்பக் குதிரைகள்

பொன்னாலியன்ற அணிகலன்களை அணிந்துள்ளன. அக் குதிரை ஓடும்போது அவ்வணிகலன்கள் ஒலிக்கின்றன. அந்தஒலி நமக்கும் புலப்படும்படி,

"கலின்கலி னெனுங்கவின் விளங்குகன கத்தார்
பொலன் கொள்புனை பூண்கள் புரைதீர்குரவனேவல்
விலங்குத லிலாதவரின் மேல்வருதம் நாதன்
புலன் செய்வழி யாகவழி போம்பரிகள் போன" (45)

என்று பாடுகின்றார். முதலடியைப் படிக்கும் போது குதிரைகள் ஓடுங்கால் உண்டாகும் ஒலியை நம்காதுகள் ஓர்த்தறிகின்றன. கலின்கலின் என்பது ஒலிக்குறிப்பு; கலீர் கலீர் என்பது போல. கலின் கலின் என்று ஒலிக்கின்ற அழகுவிளங்கும் பொன்னாலாகிய கிண் கிணி மாலை முதலிய அணிகலன்களைப் புனைந்து கொண்டுள்ள குதிரைகள் பாகன் குறிப்பறிந்து அவன் குறிப்பிடும் வழியில் ஓடின என்றவாறு. குதிரைப்பாகன் குறிப்பிட்ட வழியில் செல்லும் குதிரைகட்கு ஒட்டக் கூத்தர் ஓர் அரிய உவமையைக் கூறுகின்றார். குற்றம் இல்லாத ஆசிரியன் ஏவுகின்ற வழியினின்றும விலகாது நடக்கும் மாணாக்கர்களைப் போலக் குதிரைகள் பாகன் குறிப்பிடும் வழியில் சென்றன என்பது அவ்வுவமை. இவ்வுவமை இக்காலத்து மாணவர்கள் உளங்கொள வேண்டிய சிறப்பினதாகும். ஆசிரியன் குற்றமற்றவனாக இருந்து ஏவும் பணிகளை மாணாக்கர்கள், விலகிப் போகாமல் அவன் சொல்லிய வண்ணமே செய்வர் என்பது விளக்கியவாறு.

**ஒட்டக்கூத்தர்:** யமகம் திரிபு என்ற சொல்லணிகள் பொருந்தப் பாடித்தம் புலமை நலத்தைப் புலப்படுத்தியுள்ளார். ஒரு செய்யுளில் நான்கடியிலும் உள்ள முதற் சீர்கள் ஒத்துவரத் தொடுப்பது யமகம் எனப்படும். இந்தச் சொல்லணி அமைய

'இந்திர சாலமொக்கு மிடையினா ரெய்தப் பெற்றோர்க்கு
இந்திர போக மொக்கு மெழின் முலைத் தடந்தேரல் குல்
இந்திர கோப மொக்கு மிதழினா ரெதிர்ப்பட்டோருக்கு
இந்திர சாப மொக்கு மிருகுழை யெறியுங் கண்ணார். (80)

என்ற செய்யுளைப் பாடியுள்ளார். இச்செய்யுளில் நான்கடிகளிலும் 'இந்திர' என்ற ஒருசொல்லே அமைந்துளது, அது பின்வருஞ் சொல்லோடு சேர்ந்து நான்கடியினும் நான்கு வேறுபட்ட பொருளைத் தருகின்றது. இந்திரசாலம், இந்திரபோகம், இந்திர கோபம், இந்திரசாபம் என்பன, முறையே உள்ளது போலத் தோன்றி இலதாவது, இந்திரஉலகத்தில் அனுபவிக்கும் இன்பம், தம்பலப்பூச்சி, வானவில் என்ற நால்வகைப் பொருளைத் தருதல் காணலாம். இந்திரசாலம் - மாயவிளையாட்டு.

இந்திரசாலம், உள்ளது போலத் தோன்றி இலதாதல் போல உள்ளது போலத் தோன்றிக கண்டோர் இலது என முடிவுகட்டு மாறு மிக நுட்பமான இடையையுடையவர்களாய் தம்மை அடையப் பெற்றவர்கட்கு இந்திர உலகத்தில் அனுபவிக்கும் இன்பத்தினைப்போன்ற பேர் இன்பத்தினைத் தரவல்ல அழகிய நகில்களையும் பெரிய தேர்போன்ற அல்குலையும் தம்பலப் பூச்சி போன்ற வாயிதழினையும் உடையபெண்டிர் தம்மை எதிர்ப் பட்டோர்க்கு வானவில் போலத் தோன்றுமாறு முகத்தின் இருபுறமும் உள்ள இரண்டு குழைகளிலும் சென்று தாக்குகின்ற கண்ணினையுடையவரானர் மகளிர். கண்ணொளி குழைகளில் சென்று பாயும் போது வானவில்லைப் போன்று பலவண்ணங்களுடன் கண்ணொளி வளைந்து தோன்றும் என்க.

இனித் திரிபு என்னும் சொல்லணி ஒருசெய்யுளில் நான் கடியிலும் உள்ள முதற்சீர்கள் முதலெழுத்துந்தவிர மற்றையெ ழுத்துகள் ஒத்துவரத் தொடுப்பது ஆகும்.

திரிபு என்னும் இச்சொல்லணியை ஒட்டக்கூத்தர்,

'கானவரம்பை மாய்க்குங் கல்லத ரமுவ நீங்கி
வானவ ரம்பை மாதர் மணிபயில் குறங்கு போல
வானவ ரம்பை நீத்து மலரய னுலகு சேரும்
கானவ ரம்பை சூழுங் கடிமணல் கங்கை சேர்ந்தார். (149)

எனத்தூதலவர்கள் கங்கைக் கரையை அடைந்ததைக் குறிப் பிடும் போது அமைத்து அழகு செய்துள்ளார். இச்செய்யுளில் ஒவ்வோரடியிலும் முதலெழுத்துத்தவிர ஏனை எழுத்துகள்

முதலிருசீரிலும் ஒத்துவரத் தொகுத்திருத்தல் காணலாம். கானவர் அம்பை மாய்க்கும் எனவும் 'வான அரம்பை மாதர்' எனவும் 'வான வரம்பை நீத்து' எனவும் 'கான அரம்பை சூழும்' எனவும் பிரித்துப் பொருள்கொள்ள வேண்டும்.

குசலவர்கள் வான்மீகி முனிவர் பால் விடை கொண்டு இராமபிரான்செய்யும் அசுவமேத யாகத்தைக் காணச் செல்கின்றூர்கள். அவர் சென்ற காட்டுவழியின் கடுமைபுலப்படுத்த வேண்டிக் 'கானவர் அம்பை மாய்க்கும் கல்லதரமுவம் நீங்கி' என்கின்றூர். கானவராகிய வேட்டுவரின் அம்பு கூர்மை மிக்கதாக இருக்கும். அந்தக் கானவரின் அம்பினும் கூரிய கற்கள் நிறைந்த வழியில் குசலவர்கள் நடந்து சென்று பின்பு அவ்வழி முடிந்த பின் கங்கைபாயும் கவின்மிக்க இடத்தை அடைகின்றூர்கள். பாலைவனவழியில் பதித்துவைத்தாற் போன்ற கூரிய நுனியை யுடைய கற்கள் நடப்போரின் கால்விரல் நுனியைச் சிதைத்து விடும் என்பார்கள். அந்தக்கற்களின் கூர்மையைப் புலப்படுத்தவே கானவர் அம்பை மாய்க்கும் கல் என்கின்றூர். இங்குக்கல் அம்பை மாய்த்தலாவது அப்பும் தோல்வியுறுமாறு கூரியதாதல் அத்தகைய கூரிய கற்கள் நிறைந்த காட்டுவழியைக் கடந்து கங்கைபாயும் மருதநிலவழியை அடைந்தார்கள் என்றவாறு.

கற்கள் நிறைந்த காட்டு வழியை நடந்து கடந்த குசல வர்கள் வானுலகத்துள்ள அரம்பை மாதர்களின் மணிமேகலை அணிந்த தொடைகளைப் போல வனப்பும் செழுமையும் உடையவாய் வளர்ந்து வானுலகத்தின் எல்லையைக் கடந்து, தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனுலகத்தைச் சேர்கின்றவாய்க் 'காடாக வளர்ந்துள்ள வாழைகள் சூழ்ந்துள்ள விளக்கமான மணல் செறிந்த கங்கையைச் சேர்ந்தார்கள்' என்பது இப்பாட்டின் பொருள். திரிபு என்னும் சொல்லணியை இங்கு அழகுறப் புலப்படுத்தியுள்ள திறம் போற்றத்தகுவதாகும்.

இனி, இராமபிரான் வேள்வி செய்யும் வனத்திற்குப் புறப்படும் போது, செய்து கொண்ட அலங்காரம் பற்றிக் கூறுமிடம் மிகச் சிறப்பாக அமைந்துளது.

அஞ்சனவரைபோ லழகிய மார்பத்தாரமும் பதக்கமு மணிந்து
மஞ்சணி வாகு வலயம தணிந்து மாமணிக் கடகமுஞ் சாத்திக்
கஞ்சநன் மலர்போற் கைவிரலாழி கடைச்செறி
கவினுறச் சாத்தி
வஞ்சிபோ லிடையார் மாலுறக் கோலக்கழுத்தினின்
மணிவடஞ் சாத்தி. (68)

செந்துவர் வாயும் தாமரைக்கண்ணும் புருவமுநெற்றியுந்
திகழும்
சுந்தரவதனந் துலங்கிட விலங்குஞ் சுடர்மணித் தோடுகள்
சாத்தி
இந்திர நீலக்கற்றையை விழுங்கியிரவி மண்டிலங்கரு
வரைமேல்
வந்துதோன் றியது போன்றிடத் திகழ்வளரொளி மணிமுடி
சாத்தி. (69)

என்பன காணலாம். இங்கு இராமனுடைய மேனி எழிலும் அணி களின் அழகும் அவன் வாயும் கண்ணும் புருவமும் நெற்றியும் திகழ்கின்ற சுந்தரவதனமும், இந்திர நீலமணி போன்ற நிறத்தையுடைய அவன் குடுமி மறைய அணிந்த மணிமுடியின் அழகும் புலப்படுத்திய முறை, அப்பெருமானை இடைவிடாது நீடு நினைப் பதற்குரிய தியான சுலோகம் போலத் திகழ்வது காணலாம். மேலும் இந்திர நீல மணிபோன்ற அவன் குடுமியை மறைத்துக் கொண்டு மணிமுடி விளங்கும் தோற்றம், சூரிய மண்டிலம் கரிய மலைமேல் வந்து தோன்றியது போன்றது எனத் தற்குறிப் பேற்ற அணி அமையக் கூறியுள்ள திறம் நெஞ்சையுருக்கும் தன்மையது.

## இராமபிரானைக் காணும் மகளிர் பேச்சு

இவ்வாறு தன்னை அலங்கரித்துக் கொண்டு இராமன் தெரு-வில் வரக்கண்ட மகளிரின் பேச்சு இனிமைமிக்க பக்தர்களின் பேச்சுப்போன்று காணப்படுகின்றது.

வண்ணமா முகிலோ மையோ மரகத வடிவோ வள்ளல்
ஒண்ணிற மிவையொன்றுக வுருக்கிய வுருவோ வென்பார்
கண்ணிணை செவ்வாய் பாதங் கைத்தலங் கமலமென்பார்
புண்ணியஞ் செய்தாரிந்தப் புறக்கொடை தொழுவா
ரென்பார். (84)

என்று மகளிர் பேசும் பேச்சு இராமனது பேரழகில் ஈடுபாடுடைய பக்தர்கள் பேச்சாக-உருக்கமிக்க பேச்சாக மிளிர்தல் காணலாம்.

'சிறந்த சீர் முகமுங்கண்ணும் புருவமும் செய்ய வாயும்
நிறைந்தபூண் மார்பும் எங்கள் நெஞ்சுவிட்ட கலாது என்பார்'

என்ற அடிகளில் காணப்படும் அன்பு பக்தர்களின் பேரன்பாகத் திகழ்தல் காணலாம். இராமபிரான் தெருவில் நெருங்குகின்ற கூட்டத்தை அருட்கண்ணுல் பார்த்துச் செல்லுவது கண்ட சிலர், தம்மைக் காதலால் பார்த்ததாக எண்ணிப் பேசும்போது அப்பிரானின் உண்மைத் தன்மையுணர்ந்த பெண்டிர் சொல்லும் கருத்து நம்மையெல்லாம் வியப்பில் ஆழ்த்துவதாக உள்ளது.

பங்கயக் கண்ணுற் பற்றிப் பார்த்தனனம்மை யென்பார்;
அங்கவை பொது நோக்காகும் அவனியில் வந்து தோன்றும்
செங்கயற் கருங்கட் செவ்வாய்ச் சீதையைப் பார்த்த
கண்ணுல்
நங்களைப் பார்க்குமோதான் ஞாலநாயகன் இன்று என்பார்.

என்ற செய்யுள் எவ்வளவு சிறந்த கருத்தினதாகவுள்ளது காண்மின். இராமனுடைய பொது நோக்கினைக் காதற்சிறப்பு நோக்காகக் கருதிய மடவாரின் கருத்து மறுத்துக் கூறும் காரிகையின் அறிவுத்திறம் எவ்வளவு உயர்ந்துள்ளது காண்மின்! இராமனுடைய ஏகதார விரதமும் சீதையின் பேரழகும் இங்கு நுட்பமாகப் புலப்படுத்தியவாறு தெளியலாம்.

## தானம் கொடுத்தல்

இராமபிரான் வேண்டியவர் வேண்டியவாறு கொடுக்கும் அன்புள்ளத்தோடு தானம்செய்யும்தன்மையனுக நிற்கின்ருன். ஒரு முனிவர் வருகின்ருர்; பொன்னும் பூமியும் பொருள்களும் எனக்கு ஏன்? மரவுரி வழங்கு எனக் கேட்கின்ருர். ஒரு வண்டி நிறைய மரவுரிகளை ஏற்றி அனுப்புகின்ருன் இராமபிரான். ஒரு பொருளும் விரும்பாது கய்க்கு நொய்யதோர் கமண்டலம் வேண்டும் என்கின்ருர் ஒரு முனிவர். அவர் விரும்பிய கமண்டலத்தைப் பொன்னினுற் செய்து கொடுக்கின்ருன். ஓரந்தணர் தன் மனைவிக்குப் பொன்னுலாய அம்மனைக்காய் கேட்கின்ருர். அவ்வாறே கொடுக்கின்ருன்.

ஓரந்தணன் தன் மனைவிக்குப் பயந்தவன். அவள் சீறிய பொழுது கருடனைக் கண்ட பாம்புபோல் கலங்குபவன். அவள் அன்பு நோக்கினைப் பெறும் பொழுது மகிழ்ந்து வாழ்கின்றவன். மனைவி சொல்லைக் கடவாதவன். அந்த சாதுவேதியன் தன் மனைவியிடம் சென்று இராமனிடத்தில் யான் எதைத்தானமாகப் பெற வேண்டும் என்பதைச் சொல்லுமாறு கேட்கின்ருன், அவள் சொல்கின்ருள் :— 'நிறைகுணத்து இராமனைக் கண்டால் அஞ்சிப் பல்லை இளித்துக் கொண்டு தொலைவில் நில்லாதே; நம் வறுமையைச் சொல்லிப் பலவும் கேட்காதே. கஞ்சிக்குக் கலப்பயறு வேண்டும் என்று கேள்' என்று சொல்லி அனுப்புகின்ருள். அந்தச்சாது அவ்வாறே கேட்க இராமனிடம் வருகின்ருன். அவன் வறுமைத் தோற்றத்தைக் கண்டவுடனே இராமன் மலைபோன்ற பொற்குவியலையும் பசுநிரையையும் கொடுக்கின்ருன். அந்தச் சாது அந்தணன் 'இவையெல்லாம் எனக்கு வேண்டாம். காரணம் என்னவென்ருல் என் பாரியாள் கஞ்சிக்குப் பயறு வேண்டினுள். அதைத்தவிர வேறு ஒரு பொருளை யான் விரும்பமாட்டேன். நீர்கொடுக்கும் பொருளை யான் வாங்கிச் சென்ருல் அவள் என்னேடு சேரமாட்டாள்; சீறுவாள்' என்று உண்மையை அச்சத்தோடு சொல்கின்ருன். அவன் சொல்லைக் கேட்டு அவையிலுள்ள மக்களும் சிரிக்கின்ருர்கள்; இராமனும் சிரித்துக் கொண்டு நெல் நூருயிரங்கலமும் பயறு நூருயிரங்கலமும் கஞ்சிக்காகக் கொடுத்தனுப்புகின்ருன். இந்த நகைச்சுவைக்குரிய செயலும் அசுவமேத வேள்வியில் நடை பெறுகின்றது.

இராமன் வேள்வி தொடங்கி விட்ட செய்தியை, வான்மீகி வனத்திலிருந்து கேள்விப்பட்டுத்தன் மாணுக்கர்களாகிய குசலவர்களை அழைத்து அவ்வேள்வியில் சென்று இசையுடன் தாம் கற்பித்த இராம சரிதத்தைப் பாடுமாறு சொல்கின்ருர். குசலவர்களும் அவ்வாறே சென்று இராமாயண முழுமையையும் பாடிக் காட்டுகின்ருர்கள். அவர்கள் பாடிய கதையை ஒட்டக்கூத்தர் நூறுபாடல்களால் இராமாயணத்துள் குட்டி இராமாயணமாகப் பாடி முடித்துள்ளது கண்டோர் வியவாமலிருத்தல் இயலாது. இன்றியமையாத கருத்துகள் யாவும் அந்த இராமாயணச் சுருக்கத்தில் இடம் பெற்றுள்ளன.

இந்தக் குசலவர் பாடிய இசையொடு கூடிய இராமாயணத்தைக் கேட்ட இராமன் அவ்விளம்பிள்ளைகளைப் பாராட்டிப் பதினெட்டுக் கோடிப் பொன் கொடுக்கின்றார். கொள்ளெனக் கொடுத்து உயர்வைப் புலப்படுத்திய இராமன் பெருங்கொடையாகிய பதினெண் கோடிப் பொன்னையும் கொள்ளோம் என்று தம் உயர்வைக் காட்டி விடுகின்றார்கள் குசலவர்கள். "கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர் கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று', என்பது புறநானூறு காட்டும் உயர்வுகளை இங்கு இருதிறத்தாரும் காட்டி விடுகின்றனர். பதினெண்கோடிப் பொன்னை வாங்க மறுத்த குசலவர்கள், செல்வத்தைக் காட்டிலும் வறுமையே சிறந்தது என்பதைக் காரணத்துடன் விளக்குகின்றனர்:-

மன்னவர் வலிதின் வௌவா வளமனைக் கள்ளர் கொள்ளா
இன்னுயிர்க்கிறுதி செய்யா இழந்தபின் இரங்கல் வேண்டா
துன்னிய துயிலையொட்டா தோகையர் காதல் காட்டா
உன்னிய பொருளதீட்ட முடைமையின் இன்மை நன்றால்.

என்பது அவர்கள் விளக்கமாகும். அவர் சொல்லியதைக் கேட்ட இராமன் பொன்னின் உயர்வை எடுத்துக் காட்டுகிறான். இராமன் கூறிய சொற்களைக் கேட்ட குசலவர்கள் காய்கனி கிழங்குகளை உண்டு காட்டில் வாழ்கின்ற எமக்கு இந்தப் பொன்-காஞ்சனம்-காஞ்சிரங்காய்-(எட்டிக்காய்) போன்றது. எனவே எமக்கு வேண்டாம் என மறுக்கும் அவர் பற்றற்ற தன்மை வியத்தற்குரியதாகும்.

# 15. அசுவமேத யாகப்படலம்

## இராமன் வாயிற் காவலனை விளித்துச் சொல்லுதல்

970 மாத்திரைக் கடல்சூழ் மண்ணில்
மனுமுத லாய தன்மம்
சாத்திரப் படிதப்பாமற்
சரிப்பித்துச் சகலத் துக்கும்
நேத்திர மாகி நின்றோ
னெடுநிலை வாயில் காக்கும்
வேத்திரக் கரத்தோன் றன்னை
விளித்திவை விளம்ப லுற்றான்.

**மாத்திரைக் கடல்சூழ் மண்ணில் மனுமுதல் ஆய தன்மம்**
**சாத்திரப்படி தப்பாமல் சரிப்பித்துச், சகலத்துக்கும்**
**நேத்திரம் ஆகிநின்றோன், நெடுநிலை வாயில் காக்கும்**
**வேத்திரக் கரத்தோன் தன்னை விளித்து, இவை விளம்பலுற்றான்.**

பொ: பெரிய அலைகளையுடைய கடலால் சூழப்பட்ட மண்ணுலகத்தில் மனுவின் காலம் தொடங்கி உளதாய தருமம் சாத்திரப்படி தவறாமல் நடக்கச் செய்து எல்லாவுயிர்கட்கும் கண்ணாகி நின்ற இராமன், நெடிய நிலைகளோடு கூடிய வாயிலைக் காக்கின்ற பிரம்பைப் பற்றிய கையினையுடைய சேவகனை அழைத்து இவற்றைச் சொல்லத் தொடங்கினான்.

கு: மாத்திரை-பேரலைகள். மனு என்னும் மன்னவன் தன் காலத்தில் செய்த தருமம் மனு தருமம் எனப்பட்டது. சாத்திரம்-நூல். மனு நூலில் சொல்லியுள்ளபடி மக்களை நடக்கச் செய்து என்பார், 'சாத்திரப்படி தப்பாமல் சரிப்பித்து' என்றார். சரிப்பித்தல்-நடத்துதல். சகலத்துக்கும் என்றது, எல்லா உயிர்க்கும் என்றபடி. நேத்திரம்-கண். மக்களுக்கு மன்னவனே கண்ணாக நின்று

நன்றும் தீதும் காட்டிக் காக்கின்றவனுகலின், "சகலத்துக்கும் நேத்திர மாகி நின்றேன்" என இராமனைக் கூறினர். வாயிற் காவலர் கையில் பிரம்போடு நிற்றல் மரபாதலின் "வாயில் காக்கும் வேத்திரக் கரத்தோன்" என்றார். (1)

## இராமன் ஏவலை வாயிற்காவலன் சொல்லத் தம்பியர் வருதல்

971 எம்பியர் தம்மை யின்னே
கொணர்கென வியம்ப வந்த
அம்புயக் கண்ண னேவ
லாங்கவன் றலைமேற் சூடி
எம்பிரா னிராம னும்மை
யழைத்தன னென்ன வந்தத்
தம்பியர் தவிசி னின்றுந்
தாம்விரைந் தெழுந்து போந்தார்.

எம்பியர் தம்மை இன்னே கொணர்கென இயம்ப, அந்த அம்புயக் கண்ணன் ஏவல் ஆங்குஅவன் தலைமேல் சூடி, 'எம்பிரான் இராமன் நும்மை அழைத்தனன்' என்ன, அந்தத் தம்பியர் தவிசின் நின்றும் தாம்விரைந்து எழுந்து போந்தார்.

பொ: 'என் தம்பியரை இப்பொழுதே அழைத்து வருக' என இராமன் சொல்ல, அந்ததாமரைக் கண்ணனது ஏவலை அவ்வாயிற் காவலன் தலைமேற்கொண்டு சென்று அவர்களைக் கண்டு, 'எம் பெருமானுகிய இராமன் நும்மை அழைத்தனன்' என்று கூற, அந்தத் தம்பிமார்கள் இருக்கையினின்றும் விரைவாக எழுந்து வந்தார்கள்.

கு: எம்பியர்-என்தம்பியர். இன்னே-இப்பொழுதே. அம்புயக் கண்ணன் என்றது இராமனை. ஆங்கு அவன் என்றது வாயிற் காவலனை. தவிசு-இருக்கை - ஆசனம். அண்ணன் ஏவலை விரைந்து செய்யும் பண்பு தோன்ற, 'தம்பியர் தவிசினின்றும் தாம் விரைந்து எழுந்து போந்தார்' என்றார். போந்தார்-வந்தார். எம்பிரானுகிய இராமன் என இருபெயரொட்டாக்குக. (2)

972 தாமரைப் பெருங்கா னத்துத்
தையலோ டுறைந்த செய்ய
தாமரைத் தடங்க ணுரைத்
தண்ண றுஞ் சுரும்பு சாரும்
தாமரைக் காணு மாசை
தள்ளுறத் தம்பி மார்கள்
தாமரைக் கணத்தின் வந்து
சார்ந்தினி திருந்த காலை.

தாமரைப் பெருங் கானத்துத் தையலோடு உறைந்த செய்ய
தாமரைத் தடங்கணுரை-தண் நறுஞ் சுரும்பு சாரும்
தாமரைக்—காணும் ஆசை தள்ளுறத், தம்பிமார்கள்
தாம் அரைக்கணத்தின் வந்து சார்ந்து இனிது இருந்த காலை.

பொ: தாவுகின்ற மான்கள் திரிகின்ற பெரிய காட்டில் சீதையோடு தங்கியிருந்தவராகிய சிவந்த தாமரை மலர் போன்ற பெரிய கண்ணையுடையவரை-குளிர்ந்த நறுமணம் விரும்பும் சுரும்புகள் சார்தற்குரிய துளபமாலையுடையவராகிய இராம பிரானைக் காணும் ஆசை தள்ளத் தம்பிமார்கள் தாம் அரைக் கணத்தில் வந்து அடைந்து இனிதாக இருந்த பொழுது.

கு: குளகம். தா, மரை-தாவுகின்ற மான். தாமரைத் தடங்கணுரை-தாமரை மலர் போன்ற பெரிய கண்ணையுடைய வரை. தாமம்-மாலை. தண்ணறும் சுரும்பு சாரும் தாமரை என்றது, குளிர்ந்த நறுமணத்தை விரும்பும் வண்டுகள் தேனை நாடிச் சார்தற்கிடனாகிய துளபமாலை அணிந்த இராமரை. தம்பிமார்கள் தாம், அரைக்கணத்தில் வந்து எனப் பிரிக்க. இச் செய்யுள் யமகம் என்னும் சொல்லணி அமைந்தது. முதற்சீர் முழுமையும் நான்கடியிலும் ஒத்து வரத் தொடுப்பது யமகம் எனப்படும். முன்பு கைகேயியின் வரத்தின்படி பதினான்கு ஆண்டுகள் சீதையோடு காட்டில் தங்கி யிருந்தமை இங்கு நினைவித்தபடி. தாவுகின்ற மான் காரண மாகவே முன்பும் பிரிவு ஏற்பட்டதைக் குறிக்கவே 'தாவும் மரைப்பெருங்கானத்து' என்றார். தாமரைத் தடங்கணுரை,

சுரும்பு சாரும் தாமரை, என்பன ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியாய் இராமனைக் குறித்தன. (3)

## இராமன் இராசசூயம் பண்ண எண்ணினமை கூற இலக்குவன் சொல்லுதல்

973 அன்னதம் பியரை யண்ண
லருட்கண்ணாற் குளிர நோக்கி
என்னுயி ரனைய வும்மா
லிராசசூ யந்தான் செய்ய
உன்னின னென்ன லோடு
முறக்கநீத் தீரே ழாண்டு
தன்னைமுன் காத்த வென்றித்
தடஞ்சிலைத் தம்பி கூறும்.

அன்ன தம்பியரை அண்ணல் அருட்கண்ணால் குளிர நோக்கி "என்உயிர் அனைய உம்மால் இராசசூயந்தான் செய்ய உன்னினன்" என்னலோடும், உறக்கம் நீத்து ஈரேழ ஆண்டு தன்னைமுன் காத்த வென்றித் தடஞ்சிலைத் தம்பி கூறும்.

**பொ:** அவ்வாறு இனிதிருந்த தம்பிமாரைப் பெருமைமிக்க இராமன் அருள் நோக்கால் குளிர்ச்சியாகப் பார்த்து, 'என் உயிர் போன்ற உங்களால் இராசசூயம் என்னும் வேள்வியைச் செய்ய எண்ணினேன்' என்று சொன்னவுடன், பதினான்கு ஆண்டுகள் உறக்கத்தை ஒழித்துத் தன்னை முன்பு வனத்தில் காப்பாற்றிய வெற்றியையுடைய பெரிய வில்லையேந்திய தம்பி இலக்குவன் சொல்லுவான்.

**கு:** அண்ணல் என்றது இராமனை. தம்பிமாரை அருளிப் பார்த்தான் என்பார், 'அருட்கண்ணால் குளிரநோக்கி' என்றார். அருட்கண் என்றது இங்கு அருளொடு கூடிய நோக்கினை. தன் உள்ளங் குளிர நோக்குதலும் தன் தம்பியர் உள்ளங்குளிர நோக்குதலும் என்ற இரண்டும் இங்குக் கொள்ளப்படும். தம்பிமாரிடம் தனக்குள்ள அன்பின் எல்லை புலப்பட 'என்னுயிரனைய உம்மால்' என்று கூறினான் இராமன். இலக்குவன் காட்டில் உறைந்த

பதினன்கு ஆண்டும் உறக்கமில்லாமலிருந்து இராமனைக் காத்த வன் என்று அவன் தன்னலமின்மையும் இராமன்பால் பேரன் புண்மையும் புலப்படுத்தியவாறு. முன்பு அவ்வாறு காத்தவன் இப்போதும் தன்னலமின்றிக் காப்பான் என்பது புலப்படுத்திய வாறு. காத்தற்கேற்ற பண்பும் கருவியும் உடைமை புலப்பட "வென்றித் தடஞ்சிலைத்தம்பி" என்றார். (4)

## இலக்குவனின் அடக்கமான பேச்சு

974 சொற்பொரு டெரியா மைந்தன்
சொல்லிய குதலைச் சொற்கள்
பெற்றதாய்க் கினிய வாகும்
பெற்றிபோற் பெருஞ்சொ னன்னூல்
கற்றறி வொன்று மில்லேன்
கழறிடு மிந்தப் புன்சொல்
கொற்றவா வின்சொல் லாகக்
கொள்ளுதி யென்று கூறும்.

**'சொற்பொருள் தெரியா மைந்தன் சொல்லிய குதலைச் சொற்கள் பெற்றதாய்க்கு இனிய ஆகும் பெற்றிபோல், பெருஞ்சொல் நன்னூல் கற்றறிவு ஒன்றும் இல்லேன் கழறிடும் இந்தப் புன்சொல் கொற்றவா! இன்சொல்லாகக் கொள்ளுதி' என்று கூறும்.**

பொ: அரசே! சொல்லையும் சொல்லின் பொருளையும் தெரியாத பிள்ளை சொல்லிய மழலைச் சொற்கள் அப்பிள்ளையைப் பெற்ற தாய்க்கு இனியவாகத் தோன்றும் தன்மைபோல், பெரிய புகழினையுடைய நல்ல நூலைக் கற்ற அறிவு சிறிதும் இல்லாத யான் சொல்கின்ற இந்தப் புல்லிய சொல்லினை இனிய சொல் லாகக் கொள்வாயாக என்று சொல்வானானன்.

கு: சொற்பொருள் என்றது, இங்கு உம்மைத் தொகை. சொல்லையும் பொருளையும் தெரியாத மைந்தன் என்பது பொருள். குதலைச் சொல் - எழுத்து நிரம்பாத சொல்; பாலைப் பாச்சி என்றும் சோற்றினைச் சோச்சி என்றும் கூறுவது போல்வன.

'யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா, பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க், கருள்வந்தனவால் புதல்வர்தம் மழலை, என்வாய்ச் சொல்லுமன்ன'' (புறநா.92) என்ற ஔவை-யார் பாடற்பகுதி இங்கு ஒப்பு நோக்கத்தகும். பெருஞ்சொல் என்றது புகழ்ச்சொல்லினை. கற்ற அறிவு என்புழி அகரம் தொகுத்தல் விகாரம் பெற்றுக் கற்றறிவு என ஆயிற்று. கழறுதல்-சொல்லுதல். கொற்றவன்-அரசன். குழந்தையின் மழலைச் சொல் சொல்லும் பொருளும் விளங்காதாயினும் தாய்க்கு இன் சொல்லாய் மகிழ்வூட்டுதல் போலக் கற்ற அறிவு இல்லாத என் புன் சொல்லையும் இன் சொல்லாக ஏற்றுக் கொள்க என்றவாறு. இலக்குவனுக்கு இராமன் தாயினும் இனியான் என்பதும் இங்குக் குறிப்பிட்டவாறு. இது உவமையணி. (5)

975 பொன்னையே நோக்கி நிற்பர்
பொதுவிலை மகளிர் மாரி
தன்னையே நோக்கி நிற்குந்
தரணியிற் பைங்கூழ் தந்த
அன்னையே நோக்கி நிற்கு
மரும்பெறற் குழவி யண்ணல்
நின்னையே நோக்கி நிற்கு
நீணிலத் துயிர்க ளெல்லாம்.

பொன்னையே நோக்கி நிற்பர் பொதுவிலை மகளிர்; மாரி
தன்னையே நோக்கி நிற்கும் தரணியில் பைங்கூழ்; தந்த
அன்னையே நோக்கி நிற்கும் அரும்பெறல் குழவி; அண்ணல்!
நின்னையே நோக்கி நிற்கும் நீள்நிலத்து உயிர்கள் எல்லாம்.

பொ: பலர்க்கும் பொதுவான விலைமகளிர் அன்பினை நோக்காது பொன்னையே நோக்கி நிற்பார்கள். தரையில் பயிர்கள் மழையினையே எதிர்நோக்கி நிற்கும்; பெறுதற்கு அரிய பிள்ளை தன்னைப் பெற்ற அன்னையையே நோக்கி நிற்கும்; அதுபோல அண்ணலே! நீண்ட நிலத்தில் உள்ள உயிர்கள் எல்லாம் நின்னையே நோக்கி நிற்கும்.

கு: தமக்குப் பயன் தருதல் கருதிப் பொதுமகளிர் பொன்னையும், பயிர்கள் மழையையும், குழவி அன்னையையும் நோக்கி நிற்றல் போல உயிர்கள் எல்லாம் இராமனால் பெறும் பயன் கருதி அவனையே நோக்கி நிற்கும் என்றவாறு. இது பல்பொருளுவமையணி. அண்ணல் என்றது, பெருமையுடைய இராமனை. பொன்னைநோக்குவோரும் மழையை நோக்குவனவும் அன்னையை நோக்குவனவும் ஒருவரையறைக்குட்பட்டன; ஆனால், இராமனை நோக்கி நிற்பன எல்லா உயிர்களுமே என்று அவன் சிறப்புக் கூறியவாறு. (6)

976 அன்றியு மரசர்க் கெல்லா
மாவிநீ யவர்க ளோடு
கன்றிநீ பொருது வென்று
காவலர் தனங்கள் வாரி
இன்றுநீ யிராச சூயஞ்
செய்வதி லிறைவ சால
நன்றய மேதஞ் செய்கை
யதனையா னவிலக் கேட்டி.

அன்றியும் அரசர்க்கு எல்லாம் ஆவிநீ, அவர்களோடு
கன்றிநீ பொருது வென்று காவலர் தனங்கள் வாரி,
இன்றுநீ இராச சூயம் செய்வதில் இறைவ! சால
நன்று அயமேதம் செய்கை; அதனை யான் நவிலக் கேட்டி.

பொ: அரசே! அஃது அல்லாமலும் அரசர்கட்கு எல்லாம் உயிர் நீ ஆவாய்; உன்னையே உயிராகக் கொண்ட அவர்களோடு வெகுண்டு நீ போர்செய்து வென்று அந்த அரசர்தம் செல்வங்களை வாரிக் கொணர்ந்து இன்று நீ இராசசூயம் செய்வதைக் காட்டிலும், அசுவமேத வேள்வி செய்தல் மிகவும் நல்லது. அதைப்பற்றி யான் விரித்துச் சொல்லக் கேட்பாயாக.

கு: மன்வர்க்கெல்லாம் உயிர் போன்று விளங்கும் நீ அம்மன்னரோடு போர் புரிதலும் அவர்தம் செல்வங்களை வாரிக் கொணர்தலும் அப்பொருள்கொண்டு இராச சூயம் செய்தலும்

அவ்வளவு சிறப்புடையதன்று. இராசசூயம் என்ற வேள்வி செய்ய வேண்டுமாயின் அரசர்களை யெல்லாம் வென்ற பின்னரே செய்தல் வேண்டும் என்பது விதி. அயமேதம்-அசுவமேதம். அதனை என்றது, அந்த அசுவமேதத்தின் சிறப்பினை. நவிலுதல்-சொல்லுதல். கன்றுதல்-கோபித்தல். (7)

977 சத்தியைம் புலன்கள் வென்ற
தபோதன னுந்ததீசி
அத்தியாங் குலசத் தாலே யடல்விருத்
திரனைக் கொல்லத்
தொத்திய பாவந்தன்னுற் றுளங்கிய
சுரேசன் பண்டு
சுத்தனு னதுதான் பண்ணுந் துரகமே
தத்தா லென்ருன்.

"சத்தி யைம்புலன்கள் வென்ற தபோதனனும் ததீசி
அத்தியாம் குலசத்தாலே, அடல் விருத்திரனைக் கொல்லத்,
தொத்திய பாவம் தன்னுல் துளங்கிய சுரேசன், பண்டு
சுத்தன் ஆனது, தான்பண்ணும் துரக மேதத்தால்'' என்ருன்.

பொ: "ஆற்றல் மிக்க ஐம்புலன்களையும் வென்ற தவசியசி யாகிய ததீசி முனிவரின் முதுகு எலும்பு ஆகிய வச்சிரப் படையினுல் வலிமை மிக்க விருத்திராசுரனைக் கொன்றிடலால் தொடர்ந்த பிரமகத்தியினுல் நடுங்கிய இந்திரன், முன்பு அந்தப் பெரும்பாவத்திலிருந்து தப்பித் தூயவன்ஆனது எப்படியென்ருல்? தான் செய்த அசுவமேதத்தினுல்தான்'' என்று கூறினுன்.

கு: சத்தி-வலிமை; ஆற்றல். ஐம்புலன்கள் ஆவன மெய், வாய், கண், மூக்குச் செவி என்பவை. இவை ஐம்பொறிகள் எனப்படும். அறிதற்கருவிகள். இங்கு அவற்றிற்கு ஐம்புலன் என்று பெயர் கொடுத்தார். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலன்கள் மேல் செல்லும் ஐம்பொறிகளைச் செல்லாமல் தன்வயமாக நிறுத்துதலையே புலன்களை வெல்லுதல் என்பர்.

அவ்வியைபுகருதியே அவற்றைப் புலன்கள் என்றூர்போலும். அத்தி-என்பு. பொறியைர்தும் வென்ற ததீசி முனிவரின் முதுகெலும்பையே வச்சிர'மாகக் கொண்டு விருத்திரனை வென்ற இந்திரன் பின் அவனைக் கொன்ற பெரும் பாவத்தால் அச்சுறுத்தப் பெற்று நடுங்கினவன் அசுவமேதம் செய்து தூயவன் ஆனுன் என்று எடுத்துக் காட்டிக் கூறியவாறு. துரகம்-குதிரை. (8)

978 கொற்றவ னிளன்முன் சூலி
சாபத்தால் கொம்பன் ஞளாய்
மற்றவன் தேவி சொன்ன
வாக்கிறைல் மைந்த ஞகிப்
பொற்றெடி யாய திங்கள்
புதனுக்குப் புரூரவாவைப்
பெற்றபின் சர்பநீங்கப்
பெற்றதிப் பரிமே தத்தால்.

கொற்றவன் இளன் முன் சூலி சாபத்தால் கொம்பு அன்னளாய்
மற்றவன் தேவி சொன்ன வாக்கினுல் மைந்தன் ஆகிப்
பொற்றெடி ஆய திங்கள் புதனுக்குப் புரூரவாவைப்
பெறறபின் சாபம் நீங்கப் பெற்றது இப் பரி மேதத்தால்.

பொ: அரசனுகிய இளன் முன்பு சூலி பாணியனுகிய சிவ பிரான் சாபத்தால் பூங்கொம்பு போன்ற பெண்ணுகிப் பின்பு அப்பெருமான் தேவியான உமையம்மையின் வாக்கினுல் ஆண் ஆகிப் பின்பு பெண்ணுகிய மாதத்தில் புதன் என்பவனை மணந்து அவனுக்குப் புரூரவாவைப் பெற்ற பின்பு சிவபிரான் கொடுத்த சாபம் நீங்கப் பெற்றதும் இந்த அசுவமேத யாகத்தால்தான்.

கு: பாலிநாட்டுக்கு அரசனுகிய இளன் என்பவன் இமயமலைச் சாரலில் உள்ள பொழிலுக்குச் செல்கின்றுன். அங்குச் சிவபிரான் உமையம்மையோடு விளையாடித் தானும் பெண்வடிவம் கொண்டு மகிழ்ந்திருந்தார். அப்போது அங்கு வருகின்ற எவ்வுயிரும் பெண்ணுக மாற வேண்டும் என்று சாபம் கொடுத்திருந்தார்?

அந்தச் சாபத்தின் படி இளன் பெண்ணாக மாறிவிட்டான். இது சிவன் சாபத்தால் நிகழ்ந்தது என்பதை அறிந்த இளன் பார்வதியிடம் சென்று தன்னிலைகூறிச் சாபவிடை கேட்கின்றான். சிவபிரானிடத்துப் பாதியுரிமையுண்டு தனக்கு என அவ்வம்மை யார் கூறி, ஒரு மாதம் சிவன் சொற்படி பெண்ணாகவும் ஒரு மாதம் தன் சொற்படி ஆணாக மாறவும் செய்யலாம் என்று சாபத்தைத் தன்னுரிமையால் மாற்றினார். சிவன் கொடுத்த சாபப்படி பெண்ணாக இருந்த மாதத்தில் புதனை மணந்து புரூரவாவைப் பெற்ற பிறகு ஆணாக மாறியுள்ள மாதத்தில் திருமாலின் யோசனைப்படி அசுவமேதம் செய்து என்றும் ஆணாக இருக்கும் நிலையைப் பெறுகின்றான் இளன். எனவே சாபம் நீக்கும் பெருமையும் அசுவமேதத்திற்குண்டு என்பது இங்கு விளக்கியவாறு. வான்மீகத்தில் இந்த இளன் கதையை இராமன் கூறுவதாக உள்ளது. இங்கு இலக்குவன் கூறுவதாகவே உள்ளது. (9)

979 ஆதலா லயமே தத்தை
யழகிதென் றறிந்தேன் செய்கை
தீதிலாக் குணத்தோ யென்று
செப்பவுண் மகிழ்ந்து செப்பும்
ஆதியா யநந்த கோடி
முட்டையிட் டளவில் வேதம்
ஓதிய வன்னமான தன்னைத்தா
னுணர்ந்தி லாதான்.

ஆதலால் அயமேதத்தை அழகிது என்று அறிந்தேன்; செய்கை தீதுஇலாக் குணத்தோய்! என்று செப்ப, உள்மகிழ்ந்து செப்பும் ஆதியாய் அநந்த கோடி முட்டையிட்டு அளவில் வேதம் ஓதிய அன்னமான தன்னைத்தான் உணர்ந்திலாதான்.

பொ: தீமைகலவாத குணத்தையுடையவனே! பெரும் பாவத்தையும் பெருஞ்சாபத்தையும மாற்றுகின்ற ஆற்றல் அசுவ மேதத்திற்கு உண்டு என்பதை அறிந்தேன். ஆதலால், அந்த அசுவமேதம் செய்தலையே அழகிது என்று அறிந்துளேன்; என்று

இலக்குவன் சொல்ல, எல்லாவற்றிற்கும் காரணமாய்ப் பற்பல கோடி அண்டங்களாகிய முட்டைகளையிட்டு அளவில்லாத வேதங்களை ஓதிய அன்னப் பறவையாக இருந்த தன்னைத்தான் உணர்ந்து கொள்ளாத இராமன் இலக்குவன் சொல்லைக் கேட்டு மகிழ்ந்து சொல்லுவான்.

கு: இராமன் ஒன்றும் அறியாதவன் போல இருந்து இலக்குவன் சொல்லைக்கேட்டு மகிழ்ந்து சொல்லத் தொடங்குகின்றான் என்றவாறு. "அளவில் வேதம் ஓதிய அன்னமான தன்னைத்தான் உணர்ந்திலாதான்" என்றது, "அன்னமாய் அருமறைகள் அறைந்தாய்நீ" (ஆரணிய காண்டம் - விராதன் வதைப். 60) என முன்னரே சொல்லப்பட்ட கருத்தாகும். தன் உந்திக் கமலத்தில் தோன்றிய பிரமனுக்குத் திருமால் அன்னமாய் நின்று அருமறைகளைக் கற்பித்தமை புலப்படுத்தியவாறு. (10)

## இலக்குவன் சொல்லைக் கேட்ட இராமன் அசுவமேதமே செய்வோம் எனல்

980 வளைபயில் கடல்சூழ் மண்ணின்
மன்னரைச் செருவி லோட்டி
உளைவன செய்யும் வேள்வி
யொழிந்தன மென்று செப்பி
விளைபொரு ளுணர வல்லோய்
விளம்பிய வயமே தத்தின்
அளவறு பெருமை கேட்டோ
மதனையே செய்து மென்றான்.

வளைபயில் கடல்சூழ் மண்ணின் மன்னரைச் செருவில் ஓட்டி, உளைவன செய்யும் வேள்வி ஒழிந்தனம்' என்று செப்பி, விளைபொருள் உணர வல்லோய்! 'விளம்பிய அயமேதத்தின் அளவுஅறு பெருமை கேட்டோம்; அதனையே செய்தும்' என்றான்

பொ: 'சங்குகள் பொருந்தியுள்ள கடலால் சூழப்பட்ட மண்ணுலகில் உள்ள மன்னரை எல்லாம் போரில் பின்னிடச் செய்து அவர் வருந்துவனவற்றைச் செய்கின்ற இராசசூயம் என்னும் யாகத்தைச் செய்வதை விடுத்தோம்; என்று சொல்லி விட்டு, செய்யும் செயலால் விளைகின்ற நன்மை தீமைகளை உணர வல்ல இலக்குவ! நீ சொல்லிய அசுவமேதத்தின் அளவற்ற பெருமையையெல்லாம் கேட்டோம்; அந்த அசுவமேதத்தையே இனிச் செய்வோம்; என்று இராமன் கூறினன்.

கு: வளை-சங்கு. 'முத்துக்களை யீன்று உலகுக்கு உதவுகின்ற தன்றி எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாத சங்கு பயில்கின்ற கடல் சூழ் மண்ணில்' என்ற அடையினல் சங்கினைப்போல் நாமும் பிறர்க்கு வருத்தம் செய்கின்ற இராசசூயத்தை விடுத்து அசுவ மேதத்தையே செய்வோம் என்னும் கருத்துப் புலப்படுத்திய வாறு. உளைவன - வருந்துவனவாகிய போர். நாம் செய்யும் செயலால் விளைகின்ற நன்மை தீமைகளை முன்னமே உணர்கின்ற தன்மையுடையாய் என்பார், 'விளைபொருளுணர வல்லோய்!' என இலக்குவனை விளித்தார். "முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும் படுபயனும் பார்த்துச் செயல்" (திருக்குறள் - 676) என்பது இங்கு நோக்கத் தகும். அயம்-குதிரை. அதனையே என் புழி ஏகாரம் பிரிநிலைப் பொருளது. செய்தும் என்பது இலக்கு-வனையும் உளப்படுத்திக் கூறிய உளப் பாட்டுத்தன்மை வினைமுற்றாகும். (11)

## அசுவமேதத்திற்குரிய குதிரையை மந்திரித்து உலகில் திரியவிடல்

981 சந்திர னனைய கொற்றத்
 தனிக்குடை நிழற்றப் பாராள்
இந்திரை கொழுந னெல்லா
 விலக்கண முடைய மாவை
மந்திர வித்தோர் தர்மான்
 மந்திரிப் பித்தும் மாவைத்
தந்திரங் காக்க வேவித்
 தரணியிற் போக விட்டான்

சந்திரன் அனைய கொற்றத் தனிக்குடை நிழற்றப் பார்ஆள்
இந்திரை கொழுநன், எல்லா இலக்கணம் உடைய மாவை-
மந்திர வித்தோர் தம்மால் மந்திரிப் பித்து அம்மாவைத்
தந்திரம் காக்க ஏவித் தரணியில் போக விட்டான்.

பொ: பூரண சந்திரனைப் போன்ற ஒற்றை வெண் கொற்றக்குடை நீழல் செய்ய' அக்குடைக் கீழிருந்து பூவுலகத்தை ஆள்கின்ற திருவின்கேள்வனாகிய இராமன், எல்லா இலக்கணங்களும் நிரம்பியுள்ள குதிரையை - மந்திரத்தில் வல்லோர் தம்பால் மந்திரிக்கச் செய்து கொண்டு அவ்வாறு மந்திரிக்கப் பெற்ற குதிரையைத்தன் சேனை காத்து உடன் செல்ல ஏவிப் பூவுலகில் திரிந்து வரவிடுத்தான்.

கு: இந்திரை-இலக்குமி. சீதையைப் பிரிந்துள்ள நிலையிலும் இராமன் இலக்குமி மணாளனே என்ற கருத்தால் இங்ஙனம் கூறினார். மந்திர வித்தோர் என்றது, மந்திரத்தில் வல்லோரை. தந்திரம்-சேனை. எல்லா இலக்கணங்களும் நிரம்பியுள்ளதாயினும் பகைவரால் வெல்லப் படாதிருக்க மந்திரிக்க வேண்டியதாயிற்று. (12)

## அசுவமேதம் செய்ய முனிவர்கட்கு அழைப்பு விடுதல்

982 சிந்தையா லயமே தத்தைச்
செய்வதா நினைந்தேன் சீரார்
அந்தண ரெனக்குத் தெய்வ
மாதலா லகத்தி யாதி
நந்தலி றவத்தோ ரெல்லா
நைமிசா ரணியந் தன்னில்
வந்தது முடித்துப் போக
வருகவென் றழைத்து விட்டான்.

"சிந்தையால் அயமேதத்தைச் செய்வதா நினைந்தேன்; சீரார்
அந்தணர் எனக்குத் தெய்வம் ஆதலால் அகத்தியாதி
நந்தலில் தவத்தோர் எல்லாம் நைமிசாரணியம் தன்னில்
வந்து அது முடித்துப் போக வருக" என்று அழைத்து
விட்டான்.

பொ: "மனத்தால் அசுவமேத யாகத்தைச் செய்வதாக நினைந்தேன்: சிறப்புப் பொருந்திய அந்தணர்கள் எனக்குத் தெய்வம் ஆதலால், அகத்திய முனிவர் முதலிய குறைவு இல்லாத தவத்தினையுடையோர் யாவரும் நைமிசாரண்யத்திற்கு வந்து அந்த வேள்வியை முடித்துச் செல்வதற்கு வருக" என்று அழைத்துத் தூதுவர் மூலம் ஓலை எழுதிவிட்டான் இராமன்.

கு: அகத்திய முனிவர் முதலிய முனிவர்கட்கு இராமன் அனுப்பிய ஓலை வாசகமே இச் செய்யுளாகும். நினைத்ததை முடிப்பதற்குத் தெய்வத்தின் துணை வேண்டுமன்றே! எனக்குத் தெய்வம் சீரார் அந்தணரே ஆதலின், அகத்திய முனிவர் முதலிய முனிவர்கள் என் கருத்தை நிறைவேற்றும் முறையில் வந்து உதவி செய்து செல்க என்றவாறு. இராமன் இவ்வோலையில் முனிவர்கட்குக் கொடுத்திருக்கும் சிறப்புப் போற்றத் தகுவதாதல் காண்க. நந்துதல்-குறைதல். நைமிசாரணியம் என்பது தவத்தோர் தங்கி வேள்வி செய்தற்குரிய தூயவனமாகும். கோமதி நதிக்கரையில் இருக்கும் பெரியவனம். (13)

## வீடணன், சுக்கிரீவன் முதலியோர்க்கும் திருமுகம் அனுப்புதல்

983 நன்னெறி வேள்வி காண
நைமிசா ரணியந் தன்னில்
இன்னநாள் வருக வென்றுங்
கிலங்கைமன் னவற்கு மாவி
அன்னசுக் கிரீவனுக்கு மநுமற்கு
மடன்மன் னர்க்கும்
செந்நெறிக் குகற்கு மண்ண
றிருமுகஞ் செல்லவிட்டான்.

நல்நெறி வேள்வி காண நைமிசா ரணியம் தன்னில்
இன்னநாள் வருக என்றுங்கு இலங்கை மன்னவற்கும் ஆவி
அன்ன சுக்கிரீவனுக்கும் அநுமற்கும் அடல் மன்னர்க்கும்
செங்நெறிக் குகற்கும் அண்ணல் திருமுகம் செல்லவிட்டான்.

பொ: 'நல்ல நெறியாகிய வேள்வியைக் காணுதற்கு நைமிசாரணியத்தில் இந்த நாளில் வருக' என்று இலங்கை மன்னவனாகிய வீடணற்கும், தன்னுயிர் போன்ற சுக்கிரீவனுக்கும் அநுமனுக்கும் மற்றைய வலிமை மிக்க அரசர்கட்கும் செம்மை நெறி பழகிய குகனுக்கும் இராமன், திருமுகம் செல்லுமாறு விடுத்தான்.

கு: 'நன்னெறி வேள்வி' என்றது, புண்ணியச் செயலாகிய வேள்வி என்றவாறு. இனி, நன்னெறி என்றது, நன்மையுள் நன்மையாகிய முத்திக்கு வழி என்றதாகக் கொண்டு, முத்திக்கு நெறியாகிய வேள்வி எனப்பொருள் கூறலும் ஆம். ஆங்கு-அசை. இலங்கை மன்னவன் என்றது, வீடணனை. சுக்கிரீவன் வானர சேனைக்கு மன்னவனாய்த் தன் முயற்சிக்குத் துணை நின்றவனாகலின் 'ஆவியன்ன சுக்கிரீவன்' எனச் சிறப்பித்தவாறு. 'ஒன்றிய வுணர்வே யாயவோருயிர்த்துணைவ! உன்னை, இன்றியா னுளனாய் நின்றுன் றியற்றுவதியைவ தன்றால்'' (யுத்தகாண்டம்-மகுடபங்கப்படலம் -27) என்பது இங்கு நினைக்கத்தகும்.

அடல் மன்னர்க்கும் என்றது, ஐம்பத்தாறு தேயத்து மன்னவர்களை யெல்லாம் குறித்து நின்றது. 'செந்நெறிக் குகற்கும்' என்றது, செம்மை நெறியில் ஒழுகுகின்ற குகன் தனக்கும் என்றவாறு. இனி, எதுகைக்கேற்பச் 'சென்னெறிக்குகற்கும்' என்று பாடங்கொண்டு வனஞ் செல்லும் வழியில் கண்டு நட்புக் கொண்ட குகனுக்கும் என்று பொருள்கூறலும் ஆம். திருமுகம்-ஓலை;-கடிதம். (14)

---

14 - அ. மிகைப்பாடல்

வரன்மலி முனிவரை வானரேசனை, அரணுடை யனுமனை யங்க தன்றனைத்
தருநிகர் சத்துருக் கினனைத் தாவெனச், சுரமலி யவ்விடைத் தூதர்ப்போக்கினன்.

இச்செய்யுள் முன்னைப் பாடற் கருத்தையே கொண்டுளதாதலின் மிகைப்பாடலாயிற்று.

## முனிவர் முதலியவரை வரவழைக்கத் தூதரைப் போக்குதல்

### வேறு

984 வரமுள முனிவரை வானர சேனை
அரணுடை யனுமனை யங்க தன்றனை
தருநிகர் சத்துருக் கினனைத் தாவெனச்
சுரமலி யவ்விடைத் தூதர்ப் போக்கினான்.

**வரம்உள முனிவரை வானர சேனை**
**அரண்உடை அனுமனை அங்கதன்தனை**
**தருநிகர் சத்துருக்கினனைத் தா எனச்**
**சுரமலி அவ்விடைத் தூதர்ப் போக்கினான்.**

பொ: வரம்தரும் தன்மையுள்ள முனிவர்களையும் வானர சேனைக்கு அரணும் தன்மையுடைய அனுமனையும் அங்கதனையும் கற்பகத்தருவையொத்த கொடைத்தன்மையுடைய சத்துருக்கனைக் கொணர்க என்று பாலைவனங்கள் நிறைந்த அவ்வவ்விடங்களில் தூதுவர்களைப் போகச் செய்தான்.

கு: வரம், மேன்மையும் ஆம். வானரசேனைக்குப் பாதுகாவலாகவுள்ளவன் அனுமன் என்பார், 'அரணுடை அனுமனை' என்றார். சத்துருக்கன் தொலைவிலுள்ள மதுகை என்னும் நகரில் இருந்து அரசாள்கின்றான் ஆதலின் அவனுக்கும் தூது அனுப்பினான் இராமன். சுரம் - பாலைவனம். முனிவர், அனுமன், அங்கதன், சத்துருக்கன் என்போர் உள்ள அவ்வவ்விடங்கட்குப் பலதூதுவரை அனுப்பினான் என்க. தூதர்ப் போக்கினான் என்புழி இரண்டனுருபு தொக்கிருத்தலின் வல்லெழுத்து மிக்கது. (15)

## தூதுவர் சொற்படி வீடணன் முதலியோர் அயோத்தி அடைதல்

985 துணைதரு நெடும்பரித் தூதர் கூறலும்
முனிவரு மமரரு மூரித்தானையும்
வனைகழ லிளவலும் வான ரேசனும்
அனுமனு மரக்கனு மயோத்தி மேவினார்.

துனைதரு நெடும்பரித் தூதர் கூறலும்
முனிவரும் அமரரும் மூரித்தானையும்
வனைகழல் இளவலும் வான ரேசனும்
அனுமனும் அரக்கனும் அயோத்தி மேவினர்.

பொ: விரைந்து செல்கின்ற நெடிய குதிரைமேற்சென்ற தூதுவர் சென்று சொன்ன அளவில் முனிவர்களும் தேவர்களும் பெரிய சேனையு கழலணிந்த காலினையுடைய இளவல் சத்துருக்கனும் வானரத் தலைவனாகிய சுக்கிரீவனும் அனுமனும் வீடணனும் அயோத்தியை அடைந்தார்கள்.

கு: துனை-விரைவு. பரித்தூதர் என்றது, குதிரை மேற் சென்ற தூதுவரை. இளவல் என்றது சத்துருக்கனை. அவன் சேனை சூழ மதுபுரியிலிருந்து வந்துற்றான் என்க. மூரி-பெரிய, வலிய. அரக்கன் என்றது வீடணனை. (16)

## பரிமேதம் பற்றிப் பறையறையச் செய்தல்

986 பொருதிரைக் கடற்க ணீரும்
புண்ணிய நதியி னீரும்
தருகநீ ரென்று செய்ய
தாமரைத் தடங்க ணாதன்
துரகமே தப்பேர் வேள்வி
தொடங்குநா ளின்றே டேழு
சரதமா மென்று நாடு
நகரமுஞ் சாற்றச் சொன்னான்.

பொருதிரைக் கடற்கண் நீரும் புண்ணிய நதியின் நீரும்
தருகநீர் என்று செய்ய தாமரைத் தடங்கண் நாதன்
துரகமேதப்பேர் வேள்வி தொடங்கு நாள் இன்றோடு ஏழு
சரதமாம் என்றுநாடும் நகரமும் சாற்றச் சொன்னான்.

பொ: சிவந்த தாமரை மலர்போன்ற பெரிய கண்ணையுடைய இராமன், (வந்தவர்களிடம்) மோதுகின்ற அலைகளையுடைய கடலின் நீரையும் புண்ணிய நதிகளின் நீரையும் நீங்கள்

கொணருங்கள் என்று சொல்லிவிட்டு, (பறையறைவோரைப் பார்த்து) "அசுவமேத யாகம் தொடங்குநாள் இன்றோடு ஏழு நாளே யுள்ளது; இது உண்மையாகும்" என்று நாடும் நகரமும் அறியும்படி பறைசாற்றுமாறு சொன்னான்.

கு: பொருதிரை-ஒன்றோடு ஒன்று மோதுகின்ற அலைகள். நீர் என்றது, வந்தவர்களை நோக்கியது. துரகமேதம்-அசுவமேத யாகம். இன்றோடு ஏழு என்றது, அசுவமேதம் இன்றைக்கு ஏழாம் நாள் தொடங்கி நடைபெறும் என்றவாறு. சரதம்-உண்மை. சாற்றுதல்-பறைசாற்றுதல். (17)

## இராமன் இலக்குவனுக்குச் சொல்லத் தொடங்குதல்

987 மந்தர மலைமத் தாக
வாசுகி கயிற தாகச்
சந்திரன் றூண தாகத்
தடங்கட ருழி யாகச்
சுந்தரத் தோள்க ளாலே
சுதையெழக் கடைந்த தூயோன்
இந்திரன் பகைவற் கொன்ற
விளவலுக் கினைய சொன்னான்.

**மந்தர மலைமத்து ஆக, வாசுகி கயிறது ஆகச்**
**சந்திரன் தூணது ஆகத், 'தடங்கடல் தாழிஆகச்**
**சுந்தரத் தோள்களாலே சுதைஎழக் கடைந்த தூயோன்**
**இந்திரன் பகைவற்கொன்ற இளவலுக்கு இனைய சொன்னான்.**

பொ: மந்தரமலை மத்து ஆகவும், வாசுகி என்னும் பாம்பு கடை கயிறு ஆகவும், விண்ணில் உள்ள சந்திரன் தூண் ஆகவும், பெரிய கடல் தயிர் கடையும் தாழியாகவும், கொண்டு அழகிய தன் தோள்களாலே அமிழ்தம் எழுமாறு கடைந்த தூயவனாகிய இராமன், இந்திரன் பகைவனாகிய இந்திரசித்தினைக் கொன்ற இலக்குவனுக்கு இதனைச் சொன்னான்.

கு: திருமால் திருப்பாற்கடல் கடைந்தது பற்றிக் கூறிய வாறு. இராமன் திருமாலாய் இருந்தபோது நிகழ்ந்ததை

இராமன் மேலேற்றிக் கூறியவாறு. தாழி-வாயகன்ற மண் பாத்திரம். தேவர் பக்கத்திலிருந்து வாசுகி என்னும் கயிறு பற்றிக் கடைந்தவன் திருமால் என்பது புலப்படச் "சுந்தரத் தோள்களாலே சுதையெழக் கடைந்த தூயோன்" என்றார். சுதை என்றது இங்கு அமிழ்தத்தை. இந்திரன் பகைவன் என்றது இந்திரசித்தினை. அவனைக் கொன்றவன் இலக்குவன் என்க. இனைய என்றது, வருஞ் செய்யுளில் கூறுவனவற்றை. (18)

## இராமன் சொன்னது

988 சீலமா தவரும் யாமுஞ்
சிறந்தவோ மஞ்செய் யாக
சாலையு மநுமா னுக்குஞ்
சனகர்கோ னுக்குஞ் சார்ந்த
மாலைதாழ் முடிமன் னர்க்கும்
வானரப் படைவேந் தற்கும்
கோலவீ டணற்கு மாடங்
குறைவறச் சமைப்பி யென்றான்.

**சீல மாதவரும் யாமும் சிறந்த ஓமம் செய் யாக சாலையும், அநுமானுக்கும் சனகர்கோ னுக்கும், சார்ந்த மாலைதாழ் முடி மன்னர்க்கும் வானரப் படைவேந்தற்கும் கோல வீடணற்கும் மாடம் குறைவு அறச் சமைப்பி என்றான்.**

பொ: 'ஒழுக்கமிக்க பெருந்தவ முனிவர்களும் யாமும் சிறந்த ஓமங்களைச் செய்கின்ற யாகசாலையும், அநுமானுக்கும் சனகர் கோனுக்கும் இங்கு வந்த மாலையணிந்த முடியினை யுடைய அரசர்கட்கும், வானரப் படையின் வேந்தனாகிய சுக்கிரீவனுக்கும் அழகிய வீடணனுக்கும் மாடங்கள் குறைவில்லாமல் செய்விப்பா யாக' என்று சொன்னான்.

கு: யாகசாலையும் அனுமான் முதலியோர்க்கு மாடங்களும் ஒருகுறைவும் இல்லாமல் செய்விப்பாயாக என்றவாறு. அனுமான் தனக்குச் செய்த உதவியையெண்ணி அவனை முற்கூறியவாறு.

சீதையையின்றளித்த பெருமை சனகனுக்கு இருத்தலின் அடுத்து அவனைக் குறிப்பிட்டவாறு. பிறகு தன்னையொத்த அரசர்களையும் சுக்கிரீவனையும் வீடணனையும் முறையாற்கூறி அவர்கட்கெல்லாம் குறைவு இல்லாமல் மாடங்களைச் செய்விக்க என இராமன் இலக்குவனுக்குக் கட்டளை பிறப்பித்தவாறு. வானரப் படை வேந்தன் என்றது சுக்கிரீவனை. (19)

## இலக்குவன் யாகசாலை முதலியன செய்வித்தல்

989 நன்றென வவன்போந் தந்த
நைமிசா ரணிய நண்ணி
ஒன்றிய பலவேர் பூட்டி
யுழுதொக்க நிலஞ்செய வித்துத்
தன்றுணை யற்ற வேள்விச்
சாலையுஞ் சமைப்பித் தோங்கும்
குன்றுறழ் மாடகூட கோபுரஞ்
சமைப்பித் துப் பின்.

**நன்று என அவன்போந்து, அந்த நைமிசாரணியம் நண்ணி,
ஒன்றிய பல ஏர் பூட்டி உழுது, ஒக்கநிலம் செய்வித்து,
தன்துணை அற்ற வேள்விச் சாலையும் சமைப்பித்து ஓங்கும்
குன்று உறழ் மாடகூட கோபுரம் சமைப்பித்துப் பின்.**

பொ: இலக்குவன் தமையன் சொன்ன கட்டளையை 'நல்லது' என்று ஏற்றுக் கொண்டு வந்து அந்த நைமிசாரண்யத்தை எய்தி, ஒன்றுபட்ட தன்மையையுடைய பல ஏர்களைப்பூட்டி உழுது நிலத்தைச் சமன் செய்வித்து, தனக்கு உவமையில்லாத வேள்விச் சாலையும் செய்வித்து, உயர்ந்த குன்று போன்ற மாடங்களையும் கூடங்களையும் கோபுரங்களையும் செய்வித்துப் பின்பு,

கு: குளகம். இராமன் குறிப்பிட்ட நைமிசாரண்யம் என் பார் அந்த எனச் சுட்டினர். அது கோமதி நதிக்கரையில் உள்ளது என்பது முன்னரே அறிந்தது ஒன்று. மாறுபாடின்றி ஒருவழிச்

செல்லும் ஏர் என்பார், 'ஒன்றிய பல ஏர்' என்றார். ஏர் பல வாயினும் செல்லும் நெறி ஒன்று என்றவாறு. நிலம் ஒக்கச் செய்வித்து என மாற்றுக. மேடுபள்ளங்களின்றிச் சமன்செய்வித்து என்றவாறு. வேள்வியின் சிறப்புப் புலப்பட வேண்டித் 'தன் துணையற்ற வேள்வி' என்றார். செய்வித்து சமைப்பித்து என்ற இரண்டும் பிறவினைப் பொருள். மாட கூட கோபுரம் என்பன உம்மைத் தொகை. மன்னர் முதலியோர் தங்குதற்கு ஏற்ப மாடங்களும் கூடங்களும் கோபுரங்களும் செய்வித்தமை புலப் படுத்தியவாறு. மாடங்களின் உயர்வு புலப்பட 'ஓங்கும் குன்றுறழ் மாடம்' என்றார். இந்த அடை கூட கோபுரங்களுக்கும் இயையும். (20)

590 மணிமுடி மன்னர்க் கெல்லா
மாடகூ டங்கள் செய்வித்
தணியுடைச் சேனைக்கெல்லா
மகஞ்சமைப் பித்து வந்தோர்
தணிபெருஞ் சோற்றுச் சாலை
சார்ந்தவர் விடாயுங்கூடப்
பிணியறு தண்ணீர்ப் பந்தர்
முதலெலாஞ் சமையப் பண்ணி

மணிமுடி மன்னர்க்கு எல்லாம் மாடகூடங்கள் செய்வித்து
அணியுடைச் சேனைக்கு எல்லாம் அகம் சமைப்பித்து, வந்தோர்
தணிபெருஞ் சோற்றுச் சாலை, சார்ந்தவர் விடாயும் கூடப்
பிணியறு தண்ணீர்ப் பந்தர் முதல் எலாம் சமையப் பண்ணி.

பொ: மணிமுடி சூடிய மன்னர்கட்கு எல்லாம் மாடங்களும் கூடங்களும் செய்வித்து விட்டு, அணிவகுப்பினையுடைய சேனைக்கு எல்லாம் வீடுகள் செய்வித்துப் பின்பு, வேள்வி காண வந்தவர்கள் பசிதணிதற்குரிய பெருஞ்சோற்றுச் சாலையும் அங்குச் சார்ந்த வர்களின் தாகத்தோடு கூடப் (பிணியும்) அறுதற்கு ஏதுவாகிய தண்ணீர்ப் பந்தர் முதலிய எல்லாமும் பொருந்தச் செய்து.

கு: குளகம். வருபவரின் தகுதிக்கேற்பத் தங்கும் இடங்கள் அமையச் செய்தான் இலக்குவன் என்பார், 'மன்னர்க்கெல்லாம் மாடகூடங்கள் செய்வித்து அணியுடைச் சேனைக்கெல்லாம் அகம் சமைப்பித்து' என்றார். பசிதணி பெருஞ்சோற்றுச் சாலை என ஒரு சொல் வருவிக்க. தண்ணீர்ப்பந்தரில் உள்ள தண்ணீரின் சிறப்புப் புலப்பட 'விடாயுங்கூடப் பிணியறு தண்ணீர்ப்பந்தர்' என்றார். விடாய்-தாகம். தாகத்தோடு பிணியும் நீக்கத்தக்க நன்னீர் என்றவாறு. 'குறைவறச்சமைப்பி' என்றமையால் சோற்றுச் சாலையும் தண்ணீர்ப் பந்தரும் இலக்குவனால் செய்விக்கப் பட்டன. என்பது புலனாகும். (21)

991 ஆவண வீதி தோறு
மணிபெறு கதலி பூகம்
தூவணக் கொடியு நாட்டித்
தோன்றுதோன் றிடங்க ளெல்லாம்
காவணம் பரப்பி வெள்ளை
மணலிட்டுக் கலங்கா வாற்றல்
ஏவணச் சிலையோன் வந்தங்
கிராமனுக் கினைய சொன்னான்.

ஆவண வீதி தோறும் அணிபெறு கதலி பூகம்
தூவணக் கொடியும் நாட்டி, தோன்று தோன்று இடங்கள் எல்லாம்
காவணம் பரப்பி, வெள்ளை மணல்இட்டு, கலங்கா ஆற்றல்
ஏவணச் சிலையோன் வந்து அங்கு இராமனுக்கு இனைய சொன்னான்.

போ: கடைத்தெரு தோறும் அழகு பெறுதற்கு உரிய வாழை யும் கமுகும் தூய வண்ணங்களையுடைய கொடிகளும் நட்டுக் கண்ட கண்ட இடங்களில் எல்லாம பந்தல்களைப் பரப்பியும், புதிய வெண்மணல் கொணர்ந்து இட்டுப் பரப்பியும் எதற்கும் கலங்காத ஆற்றலையுடைய அம்பு விடுதற்குரிய வில்லையேந்திய இலக்குவன் வந்து அங்கு இராமனுக்கு இத்தன்மையான வற்றைச் சொன்னான்.

கு: ஆவண வீதி-கடைத்தெரு. அணி-அழகு. பூகம்-கமுகு. மங்கல நிகழ்ச்சிகளில் வாழையும் கமுகும் கொடியும் நடுதல் உண்டு என்பதை இன்றும் பார்க்கலாம். காவணம்-பந்தல். அது கால்கள் நட்டுத் தென்னங்கீற்றை மேல் பரப்புவதே என்பது புலப்படக் 'காவணம் பரப்பி' என்றார். வெள்ளை மணல் என்றது, 'புதுமணலை'. மங்கல நிகழ்ச்சிகளில் புதுமணல் பரப்புதல் இன்றும் உண்டு. சிலையோன் என்றது, இலக்குவனை. ஏ-அம்பு. ஏ அணச்சிலை என்றது, அம்பு விடுதற்குரிய வில் என்றவாறு. சொன்னதை வருஞ்செய்யுளில் காணலாம். (22)

992 அமைந்தது வேள்விச் சாலை
யண்ணலே யுனக்குக் கோயில்
சமைந்தது மன்னர்க் கெல்லாந்
தாவளஞ் சமைந்த தென்ன
நமன்றம ரிடத்து நண்ணார்
நண்ணிட நாகம் நாளும்
சுமந்தபூ பாரந் தீர்த்த
தூயவ னீது செய்தான்.

'அமைந்தது வேள்விச்சாலை; அண்ணலே! உனக்குக் கோயில் சமைந்தது; மன்னர்க்கு எல்லாம் தாவளம் சமைந்தது' என்ன, நமன் தமர் இடத்து நண்ணார் நண்ணிட நாகம் நாளும் சுமந்தபூ பாரம் தீர்த்த தூயவன் ஈது செய்தான்.

பொ: பெருமையுடைய அண்ணா! வேள்விச்சாலை அமைந்து விட்டது; உனக்கும் கோயில் அமைந்துவிட்டது; அரசர்க்கு எல்லாம் இருப்பிடங்கள் அமைந்துவிட்டன; என்று இலக்குவன் சொல்ல, பகைவர்களை எம தூதரிடத்து நண்ணச் செய்து நாள் தொறும் ஆதிசேடன் என்னும் பாம்பு சுமந்துகொண்டுள்ள பூமியின் பாரத்தைத் தீர்த்த தூயவனாகிய இராமன் இதனைச் செய்தான்.

கு: தாவளம் - இருப்பிடம். நமன்தமர் - எமதூதுவர்கள். நண்ணார்-பகைவர். நண்ணார் நமன்தமரிடத்து நண்ணிடப் பூபாரம் தீர்த்த தூயவன் என்றது, அல்லோரையழித்து நல்லோரைக் காத்தலையுணர்த்தியவாறு. நாகம் என்றது, ஆதிசேடனை. நாள்தொறும் ஆதிசேடன் சுமந்துகொண்டுள்ள பாரத்தை இராமன் தன் பகைவரை அழித்தமையால் குறைத்து என்றவாறு. நண்ணார் நண்ணிட என்புழிச் சொல்முரண் அமைந்துள்ளமை காண்க. பாவிகள் வாழ்வது பூமிக்குப் பாரமாகத் தோன்றும்; அப்பாவிகளை அழித்துப் பாரத்தைக் குறைத்தான் இராமன் ஆதலின் அவனைத் 'தூயவன்' என்றார். (23)

993 ஆயிர கோடி பொன்னு
மத்தொகை யமைந்த கோவும்
ஆயிரகோடி பார மரிசியும்
பயறு மெள்ளும்
ஆயிர கோடி பண்டி
கறிகளு மிளகு நெய்யும்
ஆயிர கோடி பொன்செய்
பாவையு மடங்கக் கொண்டு.

ஆயிரகோடி பொன்னும், அத்தொகை அமைந்த கோவும்,
ஆயிரகோடி பாரம் அரிசியும், பயறும், எள்ளும்,
ஆயிரகோடி பண்டி கறிகளும் மிளகும் நெய்யும்
ஆயிரகோடி பொன்செய் பாவையும் அடங்கக் கொண்டு.

பொ: ஆயிரகோடி பொற்காசுகளும், ஆயிரகோடி அமைந்த பசுக்களும், ஆயிரகோடி பாரம் அரிசியும் பயறு வகைகளும் எள்ளும், ஆயிரகோடி வண்டிக்காய்கறிகளும் மிளகும் நெய்யும், ஆயிரகோடி பொன்னால் செய்த பொற்பாவைகளும் அடங்கக் கொண்டு.

கு: குளகம். அத் தொகை என்றது, ஆயிரகோடியை. கோ-பசு. வேள்வியில் தானம் செய்யப் பொற்காசுகளும் நெய்யும் பாலும் தருதற்கு ஆயிரங்கோடி பசுவும் என்றவாறு. பாரம்

என்றது, இரண்டாயிரம் பலம் கனமுடையது. இக்காலத்து எடுத்தலளவையால் கூறின் எழுபது கிலோ எடையுள்ளது. பண்டி-வண்டி. பொன்னால் செய்த பாவைகள் ஆயிரங்கோடி என்றவாறு. அடங்கக் கொண்டு-முழுவதும் கொண்டு. அரிசியின் அளவிற்கேற்ற அளவுடைய பயறும் எள்ளும் காய்கறிகட்கேற்ற மிளகும் நெய்யும் கொள்க. (24)

## வேள்வி பற்றி முரசு அறையச் சொல்லல்

994 பரதனும் பதினு லாண்டு
பகலிரா வுறக்க நீத்த
விரதனு முன்னர்ப் போக
விடைகொடுத் தருளிப் பின்னர்ச்
சுரதன மாய வேள்வி
தொடங்குநா ளின்றோ டேழு
தரமுறு நாளதென்று தனிமுர
சறையச் சொன்னான்.

**பரதனும் பதினாலாண்டு பகல்இரா உறக்கம் நீத்த விரதனும் முன்னர்ப்போக விடை கொடுத்தருளிப் பின்னர்ச் சுரதனம் ஆய வேள்வி தொடங்கும் நாள் இன்றோடு ஏழு தரம் உறு நாளது என்று தனிமுரசு அறையச் சொன்னான்.**

பொ: பரதனும் பதினான்காண்டு பகலும் இரவும் உறக்கம் நீங்கியிருந்த விரதமுடையவனாகிய இலக்குவனும் முன்னே செல்லுமாறு அவர்க்கு விடைகொடுத்து அருளி விட்டுப் பின்பு, தேவர்களின் செல்வமாகிய அசுவமேத யாகம் தொடங்கும் நாள் இன்றோடு ஏழுச் சிறப்புடைய நாள்கள் ஆகும் என்று தனியே முரசறைந்து சொல்லச் சொன்னான்.

கு: பரதனும் இலக்குவனும் நைமிசாரணியத்திற்கு முன்னரே செல்லுமாறு அனுப்பிய இராமன், அசுவமேத யாகம் தொடங்க ஏழுநாட்கள் உள்ளன என்பதை மக்கட்குச் சொல்லி முரசறையச் சொன்னான் என்றவாறு. சுர்தனம் தேவர்களின்

செல்வம். தரமுறு நாள்-சிறப்பு மிக்க நாள். இப்படலத்தின் பதினேழாவது பாடலில் 'துரகமேதப் பேர்வேள்வி தொடங்கு நாள் இன்றேடேழு சரதமாம் என்று நாடும் நகரமும் சாற்றச் சொன்னன்'' என வந்துள்ளது. எனவே அது வாயினுல் சொல்லச் செய்ததாகவும் இப்பாடல் முரசறைந்து சொல்லச் செய்ததாகவும் வேறுபாடு காணலாம். (25)

## முரசறைதல் கேட்ட மக்கள் ஆரவாரம்

995 வென்றிகொ ளிராமன் வேள்வி
தொடங்கிட விதித்த நன்னாள்
இன்றுட னேழு நாளென்
றெறிபறை யறையக் கேட்டுக்
குன்றுயர் செம்பொன் மாடங்
குலவிய நகரு நாடும்
ஒன்றிய வேலை என்ன
வொலியது பெருகிற் றன்றே.

வென்றிகொள் இராமன் வேள்வி தொடங்கிட விதித்த நன்னாள்
இன்றுடன் ஏழுநாள் என்று எறிபறை அறையக் கேட்டுக்
குன்றுஉயர் செம்பொன் மாடம் குலவிய நகரும் நாடும்
ஒன்றிய வேலை என்ன ஒலியது பெருகிற்று அன்றே.

பொ: இராவணன் முதலியோரை வெற்றி கொண்ட இராமன் அசுவமேதவேள்வி தொடங்கிட விதித்துள்ள நல்ல நாட்கள் இன்றேடு ஏழு நாட்கள் ஆகும். என்று குறுந்தடி கொண்டு எறியப்படுகின்ற முரசு அறையக் கேட்டுக் குன்று போல் உயர்ந்த செம்பொன்னுல் செய்யப்பட்ட மாடங்கள் விளங்குகின்ற நகரத்தும் நாட்டும் ஏழும் ஒன்றுன கடல்களைப் போல ஒலி பெருகியது.

கு: அசுவமேதம் தொடங்கிச் செய்யும் நாட்கள் இன்று முதல் ஏழுநாட்கள் என்றவாறு. நாடும் நகரமும் என்பன இட வாகு பெயராய் அங்கு வாழும் மக்களையுணர்த்தின. குலவுதல்-விளங்குதல். குன்றுயர் மாடம், செம்பொன் மாடம் எனத்

தனித்தனி இயையும். உயர்மாடம் வினைத்தொகை. குன்று போல் உயர்ந்த மாடம் என்க. 'ஒன்றிய வேலை என்ன' என்றதால் ஏழுகடலும் ஒன்றுபட்டு ஒலித்தாற் போன்று நாட்டிலும் நகரத்திலும் ஒலிபெருகிற்று என்றவாறு. அன்று, ஏ, அசைநிலை. (26)

## வேள்வி காணச் செல்லும் பெண்டிர் நிறைகுடமும் விளக்கும் ஏந்திச் செல்லுதல்

### வேறு

996 குறைவொன் றில்லாக் கோசல
நாட்டிற் சனமெல்லாம்
இறைவன் வேள்வி காணவி
சைந்தோ ரெங்கெங்கும்
நிறைபொற் கும்ப முடனெய்
விளக்கு நின்றேந்தி
உறைசீர் மாடத் தொண்ணக
ரஞ்சென் றுறு வாரும்.

**குறைவு ஒன்று இல்லாக் கோசல நாட்டின் சனம்எல்லாம்,**
**இறைவன் வேள்வி காண இசைந்தோர் எங்கெங்கும்,**
**நிறைபொன் கும்பம், உடன் நெய்விளக்கு நின்றுஏந்தி,**
**உறைசீர் மாடத்து ஒண்ணகரம் சென்று உறுவாரும்.**

**பொ:** **குறைவு சிறிதும்** இல்லாத கோசல நாட்டின் மக்கள் **எல்லாம் இராமன்** செய்யும் அசுவமேதம் காண்பதற்கு உடன்பட்டுச் சென்ற **எல்லாரும்** எல்லாவிடங்களிலும் **நிறைந்த பொன்குடத்தோடு, நெய்விளக்கையும் கையில் ஏந்திக்** கொண்டு தங்குதற்குரிய சிறப்பினையுடைய மாடங்களையுடைய அயோத்தி நகருக்குச் சென்று அடைபவர்களும்.

கு: இறைவன் வேள்வியென்றது, இராமனால் செய்யப்படும் அசுவமேத வேள்வியை. புதியவர்களை வரவேற்க வேண்டி நகரின் பலவிடங்களிலும் நிறைகுடமும் நெய்விளக்கும் ஏந்திக் கொண்டு

பெண்டிர் சென்றனர் என்க. உறுவாரும், நடுவாரும் என்ருற் போல மேல் வருகின்றமுப்பத்தேழாவது செய்யுள் வரையில் வரும் எச்ச உம்மைகள் எல்லாம் முப்பத்தெட்டாவது செய்யுளில் ஓடவிடுவாருமாகி நண்ண என வருவிக்கின்ற 'ஆகி' என்ற வினையோடு முடியும். (27)

## வாழை முதலியன நடுதல்

997 கேதுவி ளங்குங் கேழ்கிளர்
செம்பொற் குலை வாழை
சோதிவி ளங்குந் தோரண
மெங்கு நடுவாரும்
வீதிக டோறும் வெண்மண
லெங்கும் விடுவாரும்
வேதிகை மாட வாயில்வி
தான மிடுவாரும்.

கேது விளங்கும் கேழ்கிளர் செம்பொன் குலை வாழை
சோதி விளங்கும் தோரணம் எங்கும் நடுவாரும்;
வீதிகள் தோறும் வெண்மணல் எங்கும் விடுவாரும்;
வேதிகை மாட வாயில் விதானம் இடுவாரும்.

பொ: கொடிபோல் விளங்குகின்ற செம்பொன் நிறம் விளங்கும் குலையோடு கூடிய வாழை மரங்களை நடுகின்றவர்களும்; ஒளிவிளங்குகின்ற தோரண கம்பங்களை எங்கும் நடுகின்றவர்களும்; வீதிகள் தோறும் எவ்விடத்தும் வெண்மணலைப் பரப்புகின்றவர்களும்; திண்ணையோடு கூடிய மாடங்களின் வாயில்களில் துணியினலாய மேல் விதானம் கட்டுகின்றவர்களும்.

கு: குளகம். முப்பத்தேழாவது செய்யுளில் 'ஆக' என்ற சொல்லோடு முடியும் கேது-கொடி. குலையோடு கூடிய வாழை மரத்தின் தோற்றம் கொடி போன்றது என்க. செம்பொன் கேழ்கிளர் என மாற்றுக. கேழ்-நிறம். செம்பொன்னின் நிறம் விளங்கும் பழங்கள் நிறைந்த குலையோடு கூடிய வாழைமரம் என்றவாறு. வாழையும் தோரணமும் எங்கும் நடுவாரும் என்க.

உம்மைத் தொகை. வெண்மணல் விடுதலாவது பரப்புதல். 'புது மணல் பரப்புமின்' (மணிமேகலை ) என்பது காண்க. வேதிகை- திண்ணை. மாடங்களின் வாயிலில் மேல்விதானம் கட்டி அழகு செய்தனர் என்றவாறு. விதானம் - மேற் கட்டுமுத்தின் தாமம்- முத்துமாலை. காவணம் - பந்தல். (28)

## 993 நிறை குடம் வைத்தல்

காலையுதித்த ஞாயிறு
போலக் கனகத்தால்
கோலநி ரைத்த மாளிகை
தோறுங் குடம்வைத்து
மேலொளி முத்தின் றாமநி
ரைத்து மிகுபைம்பூ
மாலைநி ரைத்தே காவண
மிட்டே மகிழ்வாரும்.

**காலை உதித்த ஞாயிறு போலக் கனகத்தால்**
**கோலம் நிரைத்த மாளிகை தோறும் குடம் வைத்து,**
**மேல்ஒளி முத்தின் தாமம் நிரைத்து மிகுபைம்பூ**
**மாலை நிரைத்தே காவணம் இட்டே மகிழ்வாரும்.**

பொ: காலையில் உதிர்த்த சூரியனைப் போலப் பொன்னால் கோலம் வரிசையாகப் போடப்பட்ட மாளிகை தோறும் நிறை

---

இச்செய்யுளுக்குப் பதிலாக 76 எண்ணுள்ள ஆழ்வார் திருநகரிப் பதிப்பில்

29—அ. சாலை யமைத்துச் சால்கள் பதித்துத் தரையெங்கும்
காலகள் நிரைத்துக் காவண மிட்டு மணல்விட்டு
மேலொடு செம்பொற் பட்டின் விதானித் திடுவாரும்
வாலொளி முத்தின் தரம நிரைத்து மகிழ்வாரும்

என்ற செய்யுள் காணப்படுகின்றது.

குடம் வைத்து அக்குடத்தின்மேல் ஒளி வீசும் முத்துமாலைகளை வரிசையாகப் போட்டு அதற்குமேல் மிக்க பசுமையான பூமாலைகளை வரிசையாகப் போட்டு அதற்குமேல் காவணம் இட்டே மகிழ்கின்றவர்களும்.

கு: மாளிகைகளின் முகப்பில் பொற்றுகள் கொண்டு உதய சூரியனைப்போலக் கோலங்களை வரிசையாகப் போட்டு நிறை குடம் வைத்து அக்குடத்திற்குமேல் முத்து மாலைகளை வரிசையாகப் போட்டு அதற்குமேல் பூமாலைகளை வரிசையாக இட்டு அதற்குமேல் அழகிய பந்தலையிட்டு மகிழ்கின்றவர்களும் என்ற வாறு. (29)

## நெய்க்குடம் முதலிய கொணர்தல்

999 சாலைக டோறுங் கோவலர்
நெய்பா றயிர்வெண்ணெய்
கோலநெ டுங்கா விற்கொணர்
வாருங் குறைவற்ற
வாலரி சித்திண் பண்டிகள்
கொண்டு வருவாரும்
மூலப லங்கள் காய்குள
முற்கந் தருவாரும்.

சாலைகள் தோறும் கோவலர் நெய்பால் தயிர்வெண்ணெய்
கோல நெடுங்காவில் கொணர்வாரும்; குறைவு அற்ற
வால்அரிசித் திண்பண்டிகள் கொண்டு வருவாரும்;
மூல பலங்கள் காய்குளம் முற்கம் தருவாரும்.

பொ: நெடுஞ்சாலைகள் தோறு இடையர்கள், நெய்க்குடம் பால்குடம், தயிர்க்குடம், வெண்ணெய்க்குடம் ஆகியவற்றை அழகிய காவடியில் வைத்து கொணர்பவர்களும் குறைவு இல்லாத வெண்மையான அரிசியை நிரப்பிய திண்ணிய வண்டிகளைக் கொண்டு வருபவர்களும், கிழங்கு வகைகள், பழவகைகள், காய் வகைகள், சருக்கரை, பச்சைப்பயறு இவற்றைக் கொணர் பவர்களும்.

கு: சாலை என்றது, போக்கு வரவுக்குரிய பெருவழியை. கோவலர்-இடையர். நெய் முதலியவற்றைக் குடங் குடமாகக் கொண்டு வரும்போது அவற்றைக் காவடியாகக் கட்டிக் கொணர்கின்றார்கள் என்றவாறு. காவடி என்பது நீண்ட மூங்கி லின் இருபுறமும் குடங்களைக் கட்டித் தொங்கவிட்டு அம் மூங்கி லின் நடுவினைத் தோளில் தாங்கி வருதற்குரியது. வால் அரிசி-வெள்ளை அரிசி. வெள்ளைச் சம்பா அரிசி. குறைவற்ற பண்டிகள் என இயையும். மூலம்-கிழங்குகள். பலம்-பழம். குளம்-சருக்கரை. வெல்லமும் ஆம். முற்கம்-பச்சைப்பயறு. இவற்றைத் தின்பண்ட மாகவும் நுகரலாம். (30)

1000 **உணவுச்சாலை**

வண்டா ரைம்பான் மங்கையர்
கண்ணு மனமுந்தாழ்
தண்டார் நாதன் சாலைக
டோறுஞ் சனம் வந்தங்
குண்டா ருண்டு மிக்கநல்
சோறு முயர்வெற்பின்
கண்டார் கண்ட கண்டிட
மெங்குஞ் சொரிவாரும்.

வண்டுஆர் ஐம்பால் மங்கையர் கண்ணும் மனமும் தாழ்
தண்தார் நாதன் சாலைகள் தோறும் சனம் வந்து அங்கு
உண்டார் உண்டு மிக்கநல் சோறும் உயர்வெற்பின்
கண்டார் கண்ட கண்டிடம் எங்கும் சொரிவாரும்.

பொ: வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய மங்கையர் தம் கண்ணும் மனமும் வீழ்தற்குரிய குளிர்ந்த மாலை அணிந்த நாதனாகிய இராமன் அமைத்த உணவுச் சாலைகள் தோறும் சனங்கள் வந்து அங்கு, உண்டார் உண்டு எஞ்சியுள்ள சோற்றினை உயர்ந்த மலை போலக் கண்டார் கண்ட கண்ட இடம் எல்லாம் சொரிபவரும்.

கு: ஐம்பால்-கூந்தல். கூந்தலில் உள்ள மணத்தை நுகர வண்டுகள் மொய்க்கின்றன என்பார், வண்டார் ஐம்பால் என்றார். மங்கையர் தம் கண்ணும் மனமும் விரும்பித் தங்கு நற்குரிய மாலையணிந்த மார்பினனாக இராமன் விளங்கினான் என்றவாறு. இதனால் இராமனுடைய பேரழகு புலப்படுத்தப்பட்டது. நாதன் சாலை என்றது அவனால் அமைக்கப்பட்ட உணவுச் சாலையை. சோறும் என்புழி உம்மை அசை. உண்டவர் விட்ட மிச்சில் சோறு மலைபோலக் குவியுமாறு கண்ட கண்ட இடங்களில் சொரிகின்றனர் என்றவாறு. (31)

1001 **மக்கள் உபசாரம்**

வந்தவ ரைச்சீர் மாநக
ருள்ளோர் மகிழ்வுற்றுத்
தந்தம னைக்கே கொண்டுபு
குந்தார் சனமெல்லாம்
சிந்தை யுவப்ப வின்னமிழ்
தாய தினிதூட்டிச்
சந்தன மப்பித் தண்ணுறு
மென்பூத் தருவாரும்.

வந்தவரைச் சீர் மாநகர் உள்ளோர் மகிழ்வுற்றுத்
தம்தம் மனைக்கே கொண்டு புகுந்தார்; சனம் எல்லாம்
சிந்தை உவப்ப இன் அமிழ்து ஆயது இனிது ஊட்டிச்
சந்தனம் அப்பித் தண்ணுறும் மென்பூத் தருவாரும்.

பொ: வேள்வி காண வந்தவர்களைச் சிறப்புமிக்க அயோத்தி நகரத்து உள்ளவர்கள் கண்டுமகிழ்ச்சியுற்றுத் தங்கள் தங்கள் வீடுகளுக்கே கொண்டு புகுந்தவர்களாய், வந்த சனம் எல்லாம் சிந்தை மகிழ இனிய அமிழ்து போன்ற உணவுவகைகளை இன் முகத்தோடு உண்பித்துப் பின் அவர்கள் உடம்பில் சந்தனக் குழம்பினை அப்பிக் குளிர்ச்சி பொருந்திய மெல்லிய பூவினைக் கையில் தருகின்றவர்களும்.

கு: வந்தவர்களை மாநகருள்ளோர் கண்டு மகிழ்வுற்று என ஒரு சொல் வருவித்து முடிக்க. முன்பு இராமபிரானுல் அமைக்கப் பட்ட பொது உணவுச் சாலை பற்றிக் கூறினர். இங்கு நகர மக்கள் வீடுகளுக்கு விருந்தினரை அழைத்துச் சென்று அவர்தம் சிந்தை மகிழ அமுதனைய உணவுகளை உண்பித்துச் சந்தனம் பூசி மணமிக்க மலரைக் கையில் கொடுத்து அனுப்புகின்ற உபசார நிலையை விவரிக்கின்ருர். இனிதூட்டுதல் என்பது, இன்முகத் தோடு கூடி இன்சொற்கள் சொல்லி யுண்பித்தலை உணர்த்தியது. விருந்துகளில் மூக்கில் முகர்ந்து மகிழ்ந்திட மணமலர் தருதலை இன்றுங் காணலாம். (32)

## வீரர் விளையாட்டு

1002 சூதன கொங்கைச் சோருமி
டைச்செந் துவர்வா யொண்
பேதையர் நெஞ்சம் பின்செல
வன்பிற் பிரிவாரை
வாதைசெ யும்போர் மாரனு
மஞ்சும் வடிவோர்மா
வீதிக டோறும் வீரர்வி
ஞேதம் பயில் வாரும்.

சூதுஅன கொங்கைச் சோரும்இடைச் செந்துவர்வாய் ஒண்
பேதையர் நெஞ்சம் பின்செல வன்பின் பிரிவாரை
வாதை செயும் போர் மாரனும் அஞ்சும் வடிவோர் மா
வீதிகள் தோறும் வீரர் விஞேதம் பயில்வாரும்.

பொ: சூதாடுகருவியை ஒத்த கொங்கையினையும் தளரும் இடையினையும் சிவந்த பவழம் போன்ற வாயினையும் மேனி ஒளி யினையும் உடைய பெண்டிர்தம் நெஞ்சம் பின் செல்லவும் அதற் கிரங்காது வன்போடு பிரிகின்ற தலைவர்களை கருப்புவில்வளைத்துச் சுருப்பு நாணில் அருப்புக்கணை தொடுத்துத் துன்புறுத்தும் மன் மதனும் அஞ்சிப் பின் வாங்கத்தகும் வடிவினையுடைய ஆணழகர் களாகிய வீரர்கள் பெரிய வீதிகள்தோறும் விஞேத விளையாட்டுச் செய்து காட்டுபவர்களும்.

கு: சூது என்பது, சூதாடு கருவியை - ஆகுபெயர். துவர்-பவழம். கொங்கையையும் இடையையும் வாயினையுமுடைய ஒண் பேதையர் என இரண்டனுருபும் உம்மையும் விரிக்க. ஒண் பேதையர் என்புழி ஒண் என்ற அடையால் மேனி ஒளியையும் சேர்த்துக் கூறியவாறு. பேதை என்பது இங்குப் பருவம் குறியாது பெண்டிர் என்னும் பொருள் பற்றி வந்தது. பேதையர் நெஞ்சம் பின் செல்லவும் அன்புடையார் பிரியாரன்றே. 'இவர் பிரிதலின் வன்பிற் பிரிவாரை' என்றார்.

வாதை-துன்பம். அழகிற் சிறந்தோன் மன்மதன் என்பது உலகறிந்தது ஒன்று. ஆகலின் அவனும் அஞ்சிப் பின் வாங்கற் குரிய பேரழகர் என்பார், 'மாரனும் அஞ்சும் வடிவோர்' என்றார். உம்மை உயர்வு சிறப்பு. விநோதம் என்பது மகிழ்வூட்டும் விளையாட்டினை. அது கோழிச் சண்டை, தகர்ப்போர், சிவற்போர் முதலியனவாதல் பின்னர்க் காணலாம். (33)

## கோழிப் போர் முதலியன

1003 கோழிப் போருங் கொண்டசி
னப்போர்த் தகர்முட்டும்
பூழிப் போரு மஞ்சுத
லின்றிப் பொருவாரும்
பாழித் திண்டோள் வீரர்ப
கற்கண் டிரவெல்லாம்
வீழிச் செவ்வா யார்கல
விப்போர் மிகுவாரும்

கோழிப் போரும் கொண்ட சினப் போர்த் தகர்முட்டும்
பூழிப் போரும் அஞ்சுதல் இன்றிப் பொருவாரும்
பாழித்திண்தோள் வீரர் பக்கற்கண்டு இரவு எல்லாம்
வீழிச் செவ்வாயார் கலவிப்போர் மிகுவாரும்.

பொ: கோழிச் சேவல் போரும், சினம் கொண்ட ஆட்டுக் கிடாய்ப் போரும் காடைப் போரும் சிறிதும் அஞ்சுதல் இல்லாமல் பொருகின்றவர்களும், வலிய திண்ணிய தோளினையுடைய வீரர் பகற்காலத்து இப்போர்களை யெல்லாம் கண்டு களித்து இரவு எல்லாம் விழிப்பழம் போன்ற செவ்வாயினை யுடைய மகளிரோடு கலவியாகிய போரினை மிகுதியாகச் செய்து வெல்லுவோரும்.

கு: சினங்கொண்ட போர் என இயையும். தகர்-ஆட்டுக் கிடாய். இப்போர்களைக் கோழிவென்றி, தகர்வென்றி, பூழ் வென்றி எனப் புறப்பொருள் வெண்பாமாலை பேசும். பூழ்-காடை. எதுகை நோக்கி இகச் சாரியைப் பெற்றுப் பூழிப் போர் என்று வந்தது. கோழியும் தகரும் பூழும் போர் செய்யுங்கால் அவற்றின் வெற்றியில் மகிழ்தலும் தோல்வியில் மெலிதலுமே வீரர் செயலன்றி அவற்றின் தாக்குதலால் அஞ்சுதகு நிலைமை வீரர்க்கு இல்லையாதலின் 'அஞ்சுதலின்றிப் பொருவாரும்' என்றார். பாழி-வலிமை. கோழி முதலியவற்றின் போரினைக் கண்டு பகலில் களித்த வீரர்கள் இரவில் மகளிரோடு கலவிப்போர் செய்து வெற்றி பெற்றார்கள் என்றவாறு. விழி, ஒருவகைச் செடி. இதன் பழம் சிவந்த நிறமுடையது. மகளிரை 'விழிச் செவ்வாயார்' என்றது, கலவியில் அதரபானத்திற் குரியார் என்பது குறித்தவாறு. மிகுவாரும் என்றது, கலவிப்போரில் வெல்வாரும் என்றவாறு. மிகுதல்- வெல்லுதல். "ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும் கூடலில் காணப்படும்" (குறள்: -) (34)

## மகளிர் தம்மை அலங்கரித்துக் கொள்ளுதல்

1004 கொஞ்சுகி ளிச்சொற் கோபவி தழ்த்
தாழ் குழலார்தம்
கஞ்சமு லைக்கோ லஞ்செய்வ
கண்டா டவர்தாழ
விஞ்சொளி நற்பூண் மேனிவி
ளங்கப் புனையாமென்
பஞ்சிய டிக்குப் பல்லணி
யெல்லா மணிவாரும்.

கொஞ்சு கிளிச் சொல்கோப இதழ்த் தாழ்குழலார்தம்
கஞ்சமுலைக் கோலம் செய்வ கண்டு ஆடவர்தாழ,
விஞ்சுஒளி நற்பூண் மேனி விளங்கப் புனையாமென்
பஞ்சி அடிக்குப் பல்அணி எல்லாம் அணிவாரும்.

பொ: கொஞ்சிப் பேசுகின்ற கிளி போன்ற சொற்களையும் தம்பலப்பூச்சி போன்ற வாயிதழையும் நீண்டு தாழ்ந்துள்ள கூந்தலையுமுடைய மகளிர், தங்களுடைய தாமரை மொட்டுப் போன்ற முலைக்குத் தொய்யில் முதலியவற்றால் அலங்காரம் செய்வதைக் கண்டு ஆண்மக்கள் மனம் விரும்பாநிற்கவும், (மேலும் அவர்களை வருத்த வேண்டி) மிக்க ஒளியையுடைய நல்ல பொன்னுபரணங்களைத் தம்மேனி விளக்கம் பெறப் பூண்டு கொண்டு பஞ்சுபோன்ற மெல்லிய அடிகட்குப் பல வகையான-பாடகம், தண்டை, கிண்கிணி போன்ற எல்லா அணிகளையும் அணிபவர்களும்.

கு: கோபம் - இந்திரகோபம்; இது தம்பலப்பூச்சி எனவும் சொல்லப்படும். இதழ் என்றது வாயிதழை. தாழ்குழல் என்புழிந் தாழ்தல். பின்புறத்தில் நீண்டு தொங்குதல் என்று கொள்க. கஞ்சம்-தாமரை. ஆகுபெயராய் அதன் அரும்பை யுணர்த்தியது. முலைக்கு உவமையாகத் தக்கது அவ்வரும்பே யாதல் நினைக. இனி, கஞ்சம்–கைத்தாளம் எனப் பொருள் கொண்டு தாளம் போன்ற முலை எனலும் ஆம். "தாளத் தனத்தியர்" (திருச்செந்திலந்தாதி) என வருதலும் காணலாம். ஆடவர் தாழ்தலாவது மனம் விரும்புதல். முலைக்கோலம் என்றது சந்தனக் குழம்பு கொண்டு மன்மதனுடைய கரும்பு வில் முதலியன எழுதுதல். விஞ்சுதல்-மிகுதல். அடிக்குப் பல்லணி என்றது, பாதங்களில் அணியத்தக்க பாடகம், கிண்கிணி, சதங்கை, காப்பு கொலுசு முதலியனவும் கால் விரல்களில் அணியத்தக்க மோதிர வகைகளும்ஆம். (35)

1005 படர்ந்திருள் கேசப்பாரமதிற்பன் மலர்பெய்தும்
தடந்திகழ் கொங்கைச் சந்த மணிந்துந் தகவில்
லோர்
வடந்திகழ் முத்தின் கோவைய ணிந்தும்
வலியின்றி
நுடங்குமி டைக்குண் ணோவுக ளேசெய்
திடுவாரும்.

**படர்ந்திருள் கேசப்பாரம் அதில் பன்மலர் பெய்தும்**
**தடம்திகழ் கொங்கைச் சந்தம் அணிந்தும் தகவுஇல்லோர்,**
**வடம்திகழ் முத்தின் கோவை அணிந்தும் வலிஇன்றி**
**நுடங்கும் இடைக்கு உள் நோவுகளே செய்திடுவோரும்.**

பொ: நடுவுநிலையில்லாதவர்களாகிய பெண்டிர் படர்ந்த இருள்போன்ற கூந்தல் பாரத்தில் பலவகையான மலர்களைச் சூடியும், மார்பிடமெல்லாம் நிறைந்து விளங்குகின்ற கொங்கையில் சந்தனக் குழம்பு அப்பியும், வடமாக விளங்குகின்ற முத்து மாலையை அணிந்தும், வலிமை இன்றி அசைகின்ற இடைக்கு உள்நோவினை உண்டாக்குவோரும்.

கு: படர்ந்த இருள் என்பது, அகரம் தொகுத்தல் விகாரம் பெற்று 'படர்ந்திருள்' எனவாயிற்று. கேசம்-கூந்தல். கேசப்பாரம் என்றது கூந்தற் பாரத்தை. கூந்தலே பாரமாய் இடைக்கு நோய் செய்யும் இயல்பினது; அதற்குமேலும் பலவகையான மலர்களைச் சூடி இடைக்கு உள்நோய் செய்கின்றனர்கள் என்றவாறு தகவு-நடுவு நிலைமை. நடுவுநிலைமை இல்லோராய் இருத்தலின் இவ்வாறு வலியின்றி நுடங்கும் இடைக்கு உள்நோய் செய்கின்றனர்கள் என்றவாறு. கூந்தலில் பன்மலர் பெய்தும், கொங்கையில் சந்தம் அணிந்தும் முத்தின் கோவையணிந்தும் வலியின்றி நுடங்கும் இடைக்கு உள்நோவுகளே செய்கின்றனர் என்றவாறு. பாரம் தாங்குவதால் உளதாகும் நோய், புறத்தே புலப்பட்டுத் தோன்றாது உள்நோயாகவே வருத்துதல் இயல்பாதல் அறிக. (36)

1006 ஆளிய ஞர்தம் மாருயிர்
கொள்வா னணிகைக்குக்
கோளறு முத்தங் கோவைகு
லைத்துத் தெரிவாரும்
காளையர் நெஞ்சங் கொள்ளம
னத்திற் கருவிக்கண்
வாளிக ளுள்ளே மையெனு
நஞ்ச மிடுவாரும்.

ஆளிஅனூர்தம் ஆருயிர்கொள்வான் அணிகைக்குக்
கோள்அறு முத்தம் கோவை குலைத்துத் தெரிவாரும்;
காளையர் நெஞ்சம் கொள்ள மனத்தில் கருவிக் கண்
வாளிகள் உள்ளே மைஎனும் நஞ்சம் இடுவாரும்.

பொ: சிங்கம் போன்ற ஆண்மக்களின் அரிய உயிரைக் கொள்ளும் நோக்கத்தோடு அணிதற்காக முன்னிருந்த முத்து மாலையை அறுத்துவிட்டு உதிர்ந்த முத்துக்களில் குற்றமற்ற முத்துக்களை ஆராய்ந்து பொறுக்குகின்றவர்களும்; காளைப்பருவ முடைய ஆண் மக்களின் மனத்தைக் கவர்ந்து கொள்ள வேண்டும் என்று மனத்தில் கருவிக்கொண்டு கண்களாகிய அம்புகளுக்குள்ளே மை என்கின்ற நஞ்சினைத் தீட்டுகின்றவர்களும்.

கு: ஆளி-சிங்கம். அனூர் தொகுத்தல் விகாரம் பெற்றது. முன்பு இருந்த முத்து மாலையில் சிறந்த முத்துக்களைப் பொறுக்கி எடுத்து அணிந்து கொண்டால் ஆடவர்கள் ஆசையினால் தம்மேல் உயிரையே விடத் தயாராயிருப்பார்கள் என்பார், 'ஆருயிர் கொள்வான் அணிகைக்கு' என்றார். அணிகை-அணிதல். கோவை குலைத்து என்றது, முன்பு கோவையாக இருந்த முத்துக் கோவையைச் சிதைத்து என்றவாறு. கோள்-குற்றம். தெரிதல்-ஆராய்தல். காளையர் என்றது காளைப் பருவமுடைய ஆடவரை. கண்வாளிகள் என்றது கண்களாகிய அம்புகள் என்றவாறு; உருவகம். கண்ணுக்கு மை தீட்டியவுடன் அந்தக் கண்ணழகில் ஈடுபட்டு ஆடவர் மனம்பெண்டிர் பாற் செல்லும் என்றவாறு. மையெனும் நஞ்சம் என்றது, மையென்று பெயர் வைத்துக்

கண்ணில் தீட்டியவுடன் அது நஞ்சமாய் ஆடவரை வருத்துதல் நோக்கிக் கூறியது. (37)

1007 மென்னுரை நுண்பட் டாடையின்
மேலே விரிசோதிக்
கனனிரை பைம்பொற் காஞ்சிய
ரைக்குப் புனைவாரும்
பொன்னுரை கல்லிற் பொற்பொடி
யாடிப் புனையாடி
இன்னுரை நல்லோர் தம்மெழில்
கண்டுண் மகிழ்வாரும்

மெல்நுரை நுண்பட்டாடையின் மேலே விரிசோதிக்
கல்நிரை பைம்பொன் காஞ்சி அரைக்குப் புனைவாரும்;
பொன் உரைகல்லின் பொன்பொடி ஆடிப் புனைஆடி
இன்உரை நல்லோர் தம் எழில் கண்டு உண் மகிழ்வாரும்.

பொ: மெல்லிய நுரை போன்ற நுண்ணிய பட்டாடைக்கு மேலே விரிகின்ற சோதியையுடைய நவமணிகள் வரிசையாகப் பதிக்கப் பெற்ற பசுமையான பொன்னாலியன்ற காஞ்சி என்னும் அணிகலனை இடைக்குப் புனைகின்றவர்களும்; பொன்னை உரைத்துப் பார்க்கின்ற கல்லினைப்போல முகத்திற்குப் பொன் பொடியைப் பூசிக் கொண்டு அலங்காரத்தைப் பார்க்கின்ற கண்ணாடியில் இனிய சொல்லையே பேசுகின்ற நல்ல பெண்டிர், தமது அழகைக் கண்டு உள்ளத்தே மகிழ்பவர்களும்.

கு: ஆடைக்கு நுரையை உவமை கூறுதல் உண்டு. நுண்ணிய பட்டுநூலால் செய்த ஆடையையே 'நுண்பட்டாடை' என்றார். விரிசோதிக் கல் என்றது, நவமணிகளை. காஞ்சி என்றது, இடையில் புடவைக்குமேல் அணிகின்ற ஒருவகை அணி. இதில் எட்டுக் கோவை மணிகள் அமைந்திருக்கும். முகத்திற்குப் பொற் பொடி பூசும் வழக்கம் பண்டுண்டு. அது பூசிய முகத்தின்தோற்றம் பொன்னுரை கல்போலும் என்றவாறு. இடையில் பட்டாடையும் காஞ்சியும் அணிந்து கொண்டு முகத்தில் பொற்பொடி பூசிக்

கொண்டு பெண்டிர் தம் அலங்காரத்தைக் கண்ணுடியில் பார்க்கின்றூர்கள். அதில் தம்மழகு சிறப்பாகத் தோன்றுவதால் உள்ளத்தே மகிழ்ச்சி கொள்கின்றூர்கள் என்க. (38)

1008 வள்ளலி ராமன் வந்தில
னேவந் தனனேவென்
றொள்ளிய ராய தூதரை
யோட விடுவாரும்
கள்ளவிழ் கோதைக் காரிகை
யாரிவ் வழிநண்ணப்
பள்ளிகொ ளாழிப் பைவிரி
நாகப் பரனிப்பால்.

வள்ளல் இராமன் வந்திலனே? வந்தனனே? என்று;
ஒள்ளியர் ஆயதூதரை ஓட விடுவாரும்;
கள்அவிழ் கோதைக் காரிகையார் இவ்வழி நண்ணப்;
பள்ளிகொள் ஆழிப் பைவிரி நாகப் பரன்இப்பால்.

பொ: வள்ளலாகிய இராமன் இன்னும் வந்திலனே? அல்லது வந்தனனே? என்று (பார்த்துவர) அறிவுமிக்க தூதுவரை ஓடுமாறு விடுகின்றவர்களும் ஆகத், தேனேடு மலர்கின்ற மாலையணிந்த மகளிர் இவ்வாறு நெருங்க, பாற்கடலில் படப் பையை விரித்திருக்கின்ற பாம்பின் மேல் பள்ளிகொள்கின்ற பரனுகிய இராமன் இப்பக்கத்தில்.

கு: தனக்குரிய அரசினைத் தம்பிக்குக் கொடுத்த வண்மையை நினைந்து 'வள்ளலிராமன்' என இங்குக் குறிப்பிட்டார் எனலாம். இரவலர்க்கு வரையாது கொடுக்கும் வண்மை நினைந்து கூறியதும் ஆகலாம். ஒள்ளியர்-அறிவின் மிக்கார். தோழியர் அறிவின் மிக்காராய்த் தலைவியர்க்கு வேண்டும் பணிகளை விரைந்து செய்ய வல்லவராதலின் அவர்களையே தூதாக இராமன் வரவைப் பார்த்து வர விட்டார்கள் என்க. விரைந்து காணும் ஆசையால் தூதரை ஓடவிடுதல் இயல்புதானே! கள்-தேன். கோதை-மாலை. காரிகையர்-பெண்டிர். விடுவாருமாகி நண்ண என்க. ஆகிஎன்ற

வினையெச்சம் சொல்லெச்சமாக வருவிக்கப்படும். ஆழிப்பைவிரி நாகப் பள்ளி கொள் பரன் என மாறிக் கூட்டுக. இனி பள்ளி கொள்ள ஆழியினையும் பைவிரி நாகத்தினையுமுடையவனாகிய பரன் எனக் கிடந்தாங்கே வைத்துப் பொருள் கூறலும் ஆம்.(39)

## இராமன் புறப்பாடு
### வேறு

1009 அரக்கர்கள் குலத்தினை யறுத்த வடல்வீரன்
நெருக்கினி னடப்பரி தெமக்கென நினைத்துச்
செருப்புரி யெதிர்ப்படை படச்சினவு வாளால்
முருக்கிய கடற்படையை முற்செல வுரைத்தான்.

**அரக்கர்கள் குலத்தினை அறுத்த அடல்வீரன்**
**'நெருக்கினில் நடப்பு அரிது' எமக்கு என நினைத்துச்**
**செருப்புரி எதிர்ப்படை படச்சினவு வாளால்**
**முருக்கிய கடற்படையை முற்செல உரைத்தான்.**

பொ: அரக்கர்கள் குலத்தினை வேரறுத்த வலிமை மிக்க வீரனாகிய இராமன், 'சனநெருக்கத்தில் நடத்தல் எமக்கு அரிது' என்று நினைத்துப் போர்புரிகின்ற பகைப்படை அழிந்துபடச் சினமிக்க வாளால் கொன்ற கடல் போன்ற படையை முன்னே வழியுண்டாக்கிச் செல்லுமாறு சொன்னான்.

கு: 'குலத்தினை அறுத்த' என்றமையால் குலத்தினை வேரறுத்த என்பது புலனாகும். எமக்கு நெருக்கினில் நடப்பரிது என மாற்றினும் அமையும். செரு - போர். எதிர்ப்படை பட வாளால் முருக்கிய படை என இயையும். முருக்குதல் - கொல்லுதல். எதிர்ப்படை என்றது பகைவர் சேனையை; 'சினவு வாள்' என்று வாளுக்கும் சினமிருப்பதுபோல் கூறியது, உடையான் சினத்தை உடைமை மேல் வைத்துக் கூறிய உபசாரம். 'கடற்படை' என்றது, உவமைத் தொகை. கடல் போன்ற பெருஞ்சேனை என்றவாறு. சனநெருக்கத்தை நீக்கித் தனக்கு வழிவிட வேண்டிக் கடற்படையை முன்செலச் சொன்னான் என்றவாறு. (40)

1010 குன்றனைய தேர்புரவி கும்பியொடு காவல்
வென்றிபுனை வீரர்நெடு வீதிதொறும் விம்மிப்
பின்றுமென முன்பிலவர் பேரவழி காணார்
நின்றபடி யேயவர்க ணின்றனர் நெருக்கால்.

குன்று அனைய தேர் புரவி கும்பியொடு காவல்
வென்றி புனை வீரர் நெடு வீதிதொறும் விம்மிப்
பின்றும் என முன்பு இலவர் பேரவழி காணார்
நின்றபடியே அவர்கள் நின்றனர் நெருக்கால்.

பொ: மலைபோன்ற தேர், குதிரை, யானை, சேனைக்குக் காவலாய் நின்று வெற்றி சூடுகின்ற காலாள் வீரர்கள் ஆகிய நாற்படையோரும் வீதிதோறும் முற்பட்டுச் சென்று. 'பின் வாங்குவார்' என்ற பழிச்சொல்லை முன்பு என்றும் பெறாதவர்கள் அடிபெயர்த்து வைக்கவும் வழிகாணாதவராய் நெருக்க மிகுதியால் நின்றபடியே நின்றார்கள்.

கு: கும்பி-யானை. வீரர் என்றது காலாட் படையினரை. தேர், குதிரை, யானை, காலாள் என்ற நாற்படையையும், கூறியவாறு. செய்யுளாதலின் முறைமாறிக் கூறியவாறு. யானை, தேர், குதிரை, காலாள் என்பதே முறை. விம்முதல் என்றது, முற்பட்டுச் செல்லுதலை உணர்த்தியது. பின்றுமென முன்பு இலவர் என்றது, பின்றும் எனச் சொல்லப்படும் பழியை முன்பு இல்லாதவர் என்ற கருத்தினது. எனப்படும் பழியை என இசையெச்சமாக வருவித்துரைக்க. முன்பு எக்காலத்தும் எப்போரிலும் பின்வாங்காதவர்கள் இன்று இந்த நெருக்கத்தைக் கடக்கவியலாமல் பின்வாங்கினர் என நெருக்கத்தின் மிகுதி புலப்படுத்தியவாறு. இலவராகிய அவர்கள் என இயையும். (41)

1011 ஒன்றிய பெரும்படை கருங்கட லுடைந்த
தென்று சொல லாகும்வகை வாயிலுறு மேகிந்
துன்றி யெழு தூளிபட லந்திசையை மூடத்
தென்றிசையின் மேலினிது சென்றது பரந்தே.

ஒன்றிய பெரும்படை கருங்டல் உடைந்தது
என்றுசொலல் ஆகும்வகை வாயில்தொறும் ஏகித்
துன்றி எழுதூளி படலம் திசையை மூடத்
தெண்திசையின்மேல் இனிது சென்றது பரந்தே.

பொ: ஒன்றுபட்டுச் சென்ற பெரியசேனையானது, கரியகடல் உடைந்தது என்று சொல்லும்வகையில் நான்காகப் பிரிந்து நான்கு வாயில்கள்தோறும் சென்று அவற்றின் பெயர்ச்சியால் நெருங்கி எழுகின்ற துகளின் திரள் திசைகளை மூடத் தென்திசை வழியாக இனிது பரவிச் சென்றது.

கு: நால்வகைச் சேனையும் ஒன்றாய்க் கலந்த படை என்பார் ஒன்றிய பெரும்படை யென்றார். ஒன்றாக நெருங்கியிருந்த படை சன நெருக்கை தவிர்க்க முடியாமையால் நான்காகப் பிரிந்த நிலைக்கு விளக்கமாகவே 'கருங்கடல் உடைந்தது என்று சொல என்றார். துன்றுதல்-நெருங்குதல். தூளிபடலம் என்றது, படை செல்லும்போது எழுந்த துகளின் திரட்சியை. அது அவர்கள் செல்லும் திசையினை மூடிக் கொள்ளுமாறு தென்திசை வழியே படைபரவிச் சென்றது என்க. சனங்கள் செல்லும் வழியில் சேனை செல்லாது அவ்வழிக்கு வேறாகத் தென் திசை வழியே சென்றது என்றவாறு. தென்திசைவழியில் சனநெருக்கம் இன்மையின் இனிதாகப் பரந்து செல்லலாயிற்றுச் சேனை என்க. (42)

## தேர்ப் படை

1012 ஓய்வில் விசை யோடுகட லோடிடு கலம்போல்
மேயமதி வெண்குடை நுரைச்சுழிகள் பாய,
பாய்திரை யுடைப்படர் படைக்கடலி னுள்ளே
போயின விசும்புறு பெருங்கொடிய பொற்றேர்.

ஓய்வுஇல் விசையோடு கடல்ஓடிடு கலம்போல்
மேயமதி வெண்குடை நுரைச்சுழிகள் பாய,
பாய்திரை யுடைப் படர்படைக்கடலின் உள்ளே
போயின விசும்புஉறு பெருங்கொடிய பொன்தேர்.

பொ: விண்ணில் பொருந்திய முழுமதிபோன்ற வெண்மையான குடைகளாகிய நுரையோடு கூடிய நீர்ச்சுழிகள் பரவிச் செல்லா நிற்க, பாய்ந்து செல்கின்ற குதிரையாகிய அலைகளையுடைய பரந்த சேனையாகிய கடலின் உள்ளே விண்ணளாவிய பெரிய கொடிகளையுடைய பொன்னால் செய்யப்பட்ட தேர்கள், ஒய்வு இல்லாத வேகத்தோடு கடலில் ஓடுகின்ற கப்பலைப்போல் போயின.

கு: வெண்குடையாகிய நுரைச்சுழிகளையும் பாய்கின்ற குதிரையாகிய திரைகளையும் உடைய படையாகிய கடல் என்க. இது சிறப்பு உருவக அணி. கடலோடிடு கலம்போல் பெற்றேர், படைக் கடலினுள்ளே போயின என இயையும். இது உருவக அணியை அங்கமாகக் கொண்டு வந்த உவமையணி. கடலையும் கப்பலையும் சேனைக்கும் தேர்க்கும் இரட்டையுவமையாக்கியவாறு. படையைக் கடலாக உருவகம் செய்தமைக்கேற்ப, நுரைச்சுழிகளாக வெண்குடைகளையும் அலைகளாகக் குதிரைகளையும் உருவகஞ் செய்துள்ளமை காணலாம். பாய் திரை என்பது கரைநோக்கிப் பாய்ந்து செல்லும் அலைகளையும் தரையில் பாய்ந்தோடும் குதிரைகளையும் இரட்டுற மொழிதலாக உணர்த்துகின்றது. திரை என்பது குதிரை என்பதன் முதற் குறையாகக் கொள்க. (4)

## யானைப் படை

1013 வெம்பிய மனத்தனல் விழித்துணை யுகக்கார்
அம்புத நிறத்தன முழக்கன வசைக்கும்
கம்பமுறழ் கைக்கறை யடிப்பிறை மருப்பின்
கும்பிக ளிருட்டுவ டெனக்கடிது போன.

வெம்பிய மனத்துஅனல் விழித்துணை உகக், கார்
அம்புத நிறத்தன, முழக்கன, அசைக்கும்
கம்பம் உறழ் கை, கறைஅடிப் பிறைமருப்பின்
கும்பிகள் இருட்டுவடு எனக் கடிது போன.

பொ- சினம்கொண்ட மனத்துள் எழுந்த கனல் இருவிழிகளிலும் வெளிப்பட்டுச் சிந்த, கார்காலத்து மேகம் போன்ற நிறத்தையும் முழக்கத்தையும் உடையனவாய், அசைக்கின்ற கம்பத்தைப் போன்ற துதிக்கையினையும் உரல்போன்ற அடியினையும் பிறைச்சந்திரன் போன்ற கொம்பினையும் உடைய யானைகள் இருள்மலைபோல விரைந்து சென்றன.

கு: வெம்பிய மனம் என்றது, சினங்கொண்ட மனத்தை. மனத்திலிருந்து எழுந்த சினக்கனல் இருவிழிகளின் வழியாக வெளிப்பட்டன என்பார், 'மனத்தனல் விழித்துணையுக' என்றார். கார் அம்புதம் என்றது, கார்காலத்து மேகத்தை. கார்காலத்து மேகம் போன்ற கரிய நிறத்தினையும் மேகம் இடிப்பது போன்ற முழக்கத்தையும் உடைய கும்பிகள் என்க. கம்பமுறழ்கை, அசைக்கும் கை எனத் தனித்தனி இயையும். கும்பிகள்-யானைகள். கறை-உரல். கறையடி என்றது, உரல்போன்ற அடியினை. பிறை மருப்பு என்றது, பிறைச் சந்திரனைப்போன்ற வெண்மையான கொம்புகளை. இருட்டுவடு-இருள்மலை. இதுஇல்பொருள் உவமை. (44)

## குதிரைச்சேனை

1014 கலின்கலி னெனுங்கவின் விளங்குகன கத்தார்
பொலன்கொள்புனை பூண்கள்புரை தீர்குரவ
னேவல்
விலங்குத லிலாதவரின் மேல்வருத நாதன்
புலன் செய்வழி யாகவழி போம்பரிகள் போன.

கலின் கலின் எனும் கவின் விளங்கு கனகத்தார்
பொலன் கொள்புனைபூண்கள் புரைதீர் குரவன் ஏவல்
விலங்குதல் இலாதவரின் மேல்வரு தம் நாதன்
புலன்செய்வழியாக வழிபோம் பரிகள்போன.

பொ: குற்றம் நீங்கிய ஆசிரியரின் ஏவலை விலக்காது ஏற்றுக் கொண்டு செய்கின்ற மாணவரைப் போலத் தம் தலைவன் குறிப்பால் புலப்படுத்தும் வழியில் நெறியே செல்கின்றனவும்;

கலின்கலின் என்று ஒலிக்கின்ற அழகுவிளங்குகின்ற பொன் மயமான கிண்கிணி மாலையையும் பொன்கொண்டிழைத்த அணிகலன்களையும் அணிந்தனவுமான குதிரைகள் சென்றன.

கு: கலின் கலின் என்றது, ஒலிக்குறிப்பை உணர்த்திய இடைச்சொற்கள். கவின் - அழகு. தார் - கிண்கிணி மாலை. அது பொன்னால் செய்யப்பட்டது ஆகலின் 'கனகத்தார்' என்றார். தாரும் பூண்களும் புனைந்த பரிகள் எனப் பரிகட்கு அடையாக்குக. பூண்கள் புனை பரிகள் என இயையும். குதிரைகள், தம் மேலாளின் குறிப்பறிந்து செல்லும் இயல்பின என்பதற்கு உவமையாக, ஆசிரியரின் ஏவலிலிருந்து விலங்காது ஒழுகும் மாணுக்கர்களை உவமை கூறியிருப்பது சாலச்சிறப்புடையதாகும். புரை-குற்றம். குரவன் - ஆசிரியன். குரவன் ஏவல் விலங்குதலாவது, ஏவலைச் செய்யாமை. தம் நாதன், என்றது, குதிரையின் மேல் ஏறிநடாத்தும் குதிரைவீரனை. புலன் செய்வழி என்றது குறிப்பால் அறிவித்த நெறியினை. மேலாளின் குறிப்பறிந்து நடக்கும் பண்புடைய குதிரைகள் என்றவாறு. நாதன் புலன் செய்வழியாக வழிபோம்பரிகள், கனகத்தார், பூண்கள் புனை குதிரைகள் எனத் தனித்தனி இயையும். (45)

## படைத்தலைவர் செல்லுதல்

1015 எடுத்த தழை சத்திர மிடைத்த மடையாளக்
கொடித்திகழ் தரக்கொலை யயிற்கொலைஞர்
சுற்றக்,
கடற்படை செருப்புரி களத்தவிய வொன்னார்
படச்சிலை வளைத்தவர் படைத்தலைவர் போனார்.

எடுத்ததழை சத்திரம் மிடைத் தம் அடையாளக்
கொடித் திகழ்தரக் கொலை அயில் கொலைஞர் சுற்ற,
கடற்படை செருப்புரி களத்து அவிய ஒன்னார்
படச், சிலைவளைத்தவர் படைத்தலைவர் போனார்.

பொ: ஏவலர் எடுத்துவரும் பீலிக்குடையும் வெண்குடையும் நெருங்கிவரத் தமது அடையாளமாகிய கொடிகள் விளக்கம் பெற்று வரவும், கொலை செய்தற்குரிய வேலையேந்திய கொலைக் காரராகிய வீரர்கள் தம்மைச் சுற்றி வரவும், கடல் போன்ற பெரிய சேனை, போர் புரிகின்ற களத்தில் இறந்தொழியவும், பகைவர்கள் இறந்துபடவும் தம் கோதண்டத்தை வளைத்தவராகிய இராமபிரானுடைய படைத்தலைவர்கள் போனார்கள்.

கு: தேர்ப்படையும் யானைப்படையும் குதிரைப்படையும் சென்ற தன்மையை முன்னே யுணர்த்தி இங்குக் காலாட் படையாகிய சேனைத்தலைவர் சென்றமை கூறியவாறு. படைத் தலைவர் போகும்போது பீலிக்குடையும் வெண்குடையும் நெருங்கத் தம் அடையாளம் எழுதிய கொடிகள் முன்னே செல்ல, கொலை வேல் ஏந்திய கொல்லும் இயல்புள்ள வீரர்கள் சூழ்ந்துவர, படைத்தலைவர்கள் போனார் என்றவாறு. தழை, சத்திரம்; மிடை கொடி என இயையும். கொடிநிகழ்தர, கொலைஞர் சுற்ற படைத்தலைவர் போனார் என்க. செரு—போர். செருப்புரிகளத்து கடற்படை அவியவும் ஒன்னார் படவும் சிலைவளைத்தவர் என்றது, இராமபிரானை. இராமனுடைய படைத்தலைவர் போனார் என்க. கடற்படை என்றது இராவணனின் ஆயிர வெள்ள அரக்கர் சேனையை. ஒன்னார் என்றது, இராவணன் கும்பகன்னன் இந்திர சித்து போன்றோரை. (46)

## மந்திரிகள்

1016 இறந்தகரு மங்கொடு வருங்கரும மெண்ணிச்
சிறந்தவர சன்கரும நாடியது செய்வோர்
அறந்தழுவு நெஞ்சின ரசஞ்சலர் பிழைச்சொல்
மறந்துமொழி யாதவர்கண் மந்திரிகள் போனார்.

இறந்த கருமம் கொடு வரும் கருமம் எண்ணிச்
சிறந்த அரசன் கருமம்நாடி, அது செய்வோர்;
அறந்தழுவு நெஞ்சினர் அசஞ்சலர், —பிழைச்சொல்
மறந்தும் மொழியாதவர்கள் மந்திரிகள்-போனார்.

பொ: சென்றகாலத்து நிகழ்ந்த செயல்களை மனத்திற் கொண்டு எதிர்காலத்துச் செயல்முறைகளை எண்ணிப் பார்த்து இறந்தவனான அரசனது காரியங்களை ஆராய்ந்து செய்து முடிப்பவர்களும் தருமத்தைத் தழுவிநடக்கும் நெஞ்சினை யுடையவர்களும், சஞ்சலப்படாத நெஞ்சினையுடையவர்களும், குற்றமான பொய், குறளை, முதலிய தவறான சொற்களை மறந்தும் பேசாதவர்களும் ஆகிய மந்திரிகள் போனார்கள்.

கு: மந்திரிகளின் இயல்பு புலப்படுத்தியவாறு. இறந்த கருமம் என்றது, இறந்த காலத்து நிகழ்ந்துள்ள காரியங்களை. வருங்கருமம் என்றது, எதிர்காலத்து வர இருக்கின்ற காரியங்களை. சிறந்த அரசனது நிகழ்காலத்துச் செயலைச் செய்ய முற்படும் போது இறந்த காலத்து நிகழ்ச்சிகளை மனதிற்கொண்டு வருங் காலத்தில் என்ன நிகழும் என்பதையும் எண்ணிப் பார்த்து ஆராய்ந்து ஏற்ற செயலைச் செய்பவர்கள் மந்திரிகள் என்றவாறு. எச்செயலையும் அறத்தின் அடிப்படையில் செய்பவர் என்பார், 'அறந்தழுவு நெஞ்சினர்' என்றார். அசஞ்சலர்-சஞ்சலம் இல்லாதவர். சஞ்சலம்-துன்பம். இனி, யாராலும் அசைக்க முடியாத மனவலி படைத்தவர் எனலும் ஆம். பிழைச்சொல் என்றது, அறத்திற்கு மாறான பொய், குறளை, கடுஞ்சொல் போன்றவற்றை. "தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச் சொல்லலும் வல்ல தமைச்சு" (குறள் 634) என்பது இச்செய்யு ளோடு ஒப்பு நோக்கத்தகும். (47)

## வேள்வி காண ஆடவர் செல்லுதல்

1017 பூசுகமழ் சாந்தினர் புனைந்த திகழ் பூணார்
மாசற விளங்குமணி யாரமணி மார்பர்
தேசுடைய வில்லிதிரு வேள்வியது காணும்
ஆசையின ராய்விரைவி னாடவர் நடந்தார்.

பூசுகமழ் சாந்தினர், புனைந்ததிகழ் பூணார்,
மாசு அற விளங்கும் மணியாரம் அணி மார்பர்,
தேசு உடைய வில்லி திருவேள்வியது காணும்
ஆசையினராய் விரைவின் ஆடவர் நடந்தார்.

பொ: மார்பில் பூசப்பட்ட மணம்கமழ்கின்ற சந்தனக் குழம்பையுடையவர்களாய், மேனியில் அணிந்துகொண்ட ஒளி திகழும் அணிகலன்களையுடையவர்களாய், குற்றமற்று விளங்கும் மணி ஆரம் அணிந்த மார்பினையுடையவர்களாய் ஆடவர்கள், அழகுடைய இராமன் செய்கின்ற அசுவமேத வேள்வியைக் காணும் ஆசையுடையவர்களாய் விரைவாக நடந்தார்கள்.

கு: புனைந்தபூண், திகழ்பூண் எனத் தனித்தனி இயையும். ஆடவர், சாந்தினராய் பூணராய் மார்பராய் ஆசையினராய் விரைவின் நடந்தார் என்க. தேசு-அழகு. வில்லி என்றது, வில்லையுடைய இராமனை. இராமன் பேரழகன். ஆகலின், 'தேசுடைய வில்லி' எனச் சிறப்பித்தார். இராமனழகு விஞ்சித் தோன்றுவது அவன் வில்பிடித்த நிலையில்தான் என்பது புலப்பட இராமனை வில்லி என்ற பெயரால் இங்குக் கூறினர். வேள்வியது என்புழி 'அது' பகுதிப் பொருள் விகுதி. ஆசையினராய் என்பதிலுள்ள ஆய்விகுதியைச் சாந்தினர் பூணர் மார்பர் என்பவற்றோடும் கூட்டுக. (48)

## வேள்வி காணப் பெண்டிர் போதல்

1018 கஞ்சமலர் விஞ்சுகவி னஞ்சிய முகத்தோர்
கொஞ்சுகிளி மென்சொலியர் கொங்கைகள் சுமந்தே
வஞ்சிபுரை நுண்ணிடை வருந்தவழி காணு
மஞ்சர்கண் மனந்தொடர மங்கையர்கள் போனார்.

கஞ்சமலர் விஞ்சுகவின் அஞ்சியமுகத்தோர்
கொஞ்சுகிளி மென்சொலியர் கொங்கைகள் சுமந்தே
வஞ்சிபுரை நுண்ணிடை வருந்தவழி காணு
மஞ்சர்கள் மனம் தொடர மங்கையர்கள் போனார்.

பொ: தாமரை மலரின் மிகுதியான அழகும் அஞ்சுதற்குக் காரணமான முகத்தையுடையவர்களும் கொஞ்சிப் பேசுகின்ற கிளியினைப் போலப் பேசுகின்ற மென்மையான சொல்லை

யுடையவர்களுமாகிய மங்கையர்கள், வஞ்சிக்கொடிபோன்ற நுண்ணிய இடை வருந்த கொங்கைகளைச் சுமந்து கொண்டு வேள்விக்குச் செல்லும் வழியைக் கண்டு கொண்டு, மைந்தர்கள் மனம் தம்மைப் பின்தொடருமாறு போனார்கள்.

கு: மங்கையர் செந்தாமரை மலரினும் அழகுமிக்க முகத்தினர் என்பார், 'கஞ்சமலர் விஞ்சுகவின் அஞ்சிய முகத்தோர்' என்றார். வேள்வி காணப்போகும் ஆர்வத்தால் அவர் தம் முகம் அவ்வளவு அழகுடன் மலர்ந்திருந்தது என்றவாறு. அவர்கள் பேசிக்கொண்டு செல்லும் போது கேட்டால் கொஞ்சுகிளியின் பேச்சுப்போலவே தோன்றிற்று என்பார், 'கொஞ்சுகிளிமென் சொலியர்' என்றார். இடைவருந்தக் கொங்கைகள் சுமந்தே என இயையும். சுமந்து என்றமையால் கொங்கைகளின் பாரம்பெரிது என்பது புலப்படுத்தியவாறு. வழிகாணு என்புழிக் காணு என்பது செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். மங்கையர்கள் வழிகண்டு போனார் என இயையும். இனி, காணு என்பதை ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சமாக்கி, மஞ்சர்கள் மனம் வழிகாணாது தம்மையே தொடர்ந்துவர மங்கையர்கள் போனார் என இயைத்துக் கூறலும் ஒன்று. மங்கையரின் அழகில் ஈடுபட்டு மஞ்சர்கள் மனம் வழியையும் காணாது தொடர்வதாயிற்று. மைந்தர் என்பது எதுகை நோக்கி மஞ்சர் எனப் போலியாய் வந்தது. வழிகாணு மஞ்சர்கள் என ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாக்கி வழிகாணாத மஞ்சர்கள் தம்மைக்கண்டு மனம் தொடரப்போனார் எனலும் ஆம். (48)

1019 தங்கள்விழி யஞ்சியுழை தன்னினமொ டோடப்
பைங்கிளிசொ லஞ்சியின மோடவை பறப்ப
அங்கண்மயில் சாயல்தனை யஞ்சியக லச்சீர்
பொங்கு புணர் பூண்முலையி னார்கள்சிலர்
போனார்.

தங்கள் விழி அஞ்சி உழை தன்னினமொடு ஓடப்,
பைங்கிளி சொல் அஞ்சி இனமோடு அவை பறப்ப,
அங்கண் மயில் சாயல்தனை அஞ்சி அகலச் சீர்
பொங்கு புணர் பூண் முலையினார்கள் சிலர் போனார்.

பொ: சிறப்பு மிக்க நெருங்கிய ஆபரணம் அணிந்த முலையினை யுடைய பெண்டிர் சிலர், தங்கள் விழியைக் கண்டு மான் (தன்கண்கள் இணையாகாது என்று) அஞ்சித் தன்னினத்தோடு ஓடவும், பைங்கிளி, தம்சொல்லைக் கேட்டு (த் தன்சொல் இணையாகாது என்று அஞ்சி) தன் இனத்தோடு சேர்ந்து பறந்து போகவும், அழகிய பீலிக்கண்களையுடைய மயில், தம்சாயலைக் கண்டு அஞ்சிக் கானகத்திற்குச் செல்லவும் போனார்கள்.

கு: பெண்டிர் தம் விழிக்கு உவமையாகக் கூறப்படும் சிறப் புடையது மான்விழி; அவர்தம் சொல்லிற்கு உவமையாகச் சொல்லப்படுவது கிளிமொழி; அவர்தம் சாயலுக்கு உவமை யாகச் சொல்லும் சிறப்புடையது மயில்; இவை மூன்றும் இப் பெண்டிரின் விழிக்கும் மொழிக்கும் சாயலுக்கும் தோற்றுஓடு மாறு பெண்டிர் சிலர் போனார் எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறியவாறு. பொங்குதல்-மிகுதல். புணர்தல் என்றது மார்பிடங் கொண்டு ஒன்றோடொன்று நெருங்கியிருத்தல். பூண்-அணிகலன். சீர்பொங்குமுலை, புணர்முலை, பூண்முலை எனத்தனித்தனி இயையும். ஓடப், பறப்பப், அகலப், போனார் என வினை முடிவு செய்க. "மாயிரும்பீலி மணிநிற மஞ்ஞை நின் சாயற் கிடைந்து தண்கானடையவும்" (சிலப். மனையறம் படுத்த 53,54) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். (50)

## ஆடுவோர்

1020 மத்தள முடுக்கைதம ருங்குவர வானத்
துத்தமை யுருப்பசியு முட்குமுரு வந்தோர்
சித்திர மணிச்சிவிகை யோரார சனைத்த
மத்திர விழிக்கொலை செய்தாடுமவர் போனார்.

மத்தளம் உடுக்கை தம் மருங்குவர, வானத்து
உத்தமை உருப்பசியும் உட்கும் உருவத்தோர்
சித்திர மணிச்சிவிகையோர் அரசரைத் தம்
அத்திர விழிக்கொலை செய்து ஆடும் அவர் போனார்.

பொ: மத்தளம், உடுக்கை எனும் வாத்தியங்கள் தம் பக்கத்தே முழங்கிக் கொண்டு வர, வானுலகத்தில் உள்ள சிறப்பு மிக்க உருப்பசியும் அஞ்சுதற்குக் காரணமான பேரழகைக் கொண்ட உருவத்தையுடையவர்களும் அழகிய மணிகள் பதிக்கப் பெற்றுள்ள சிவிகையையுடையவர்களுமாய் அரசர்களைத் தம்முடைய அம்பு போன்ற விழியின் நோக்கால் கொலைசெய்து ஆடுகின்ற நாடக மகளிரும் போனார்கள்.

கு: வேள்விகாணச் செல்கின்ற நாடக மகளிர் சிலப்பதிகாரத்தில் வரும் மாதவியைப் போலச் சிவிகையில் ஏறிச்செல்கின்றார்கள் என்பது கருத்து. நாடக மகளிர் என்பதற் கேற்ப மத்தளம் உடுக்கை போன்ற வாத்தியங்களைத் தம் பக்கத்தே வரச்செய்து செல்கின்றார்கள் என்க. வானத்து உத்தமை என்றது வானுலகத்தில் சிறந்த அழகியாயிருப்பவள் என்றவாறு. ஊர்வசி அரம்பை மாதரில் ஒருத்தி. இவளையே வானத்து உத்தமை உருப்பசி என்கின்றார். உத்தமமானவள் உத்தமை எனப்பட்டாள். உத்தமி என இகர ஈற்றில் வருவது போல் இங்கு ஐகார ஈறு வந்தது. அத்திரம்-அம்பு. அத்திர விழி உவமைத்தொகை. விழிக்கொலை செய்தலாவது பார்வையால் கொல்வதுபோல் நோக்குவது. கொல்லுதல் ஈண்டுவருத்துதலை உணர்த்தியது. 'கொல்லச்சுரக்குமாங்கீழ் என்புழிப்போல. (குறள்-)

(51)

## பாடுவோர்

1021 மண்ணணின்மறு வற்றொளிர்
மணிச்சிவிகை மீதே
நுண்ணிசையி லேமன நுழைந்திசையி னன்னூல
நண்ணினவர் தும்புருவு நாரதனு நாணப்
பண்ணிசை கலந்தவழி பாடுபவர் போனார்.

மண்ணில் மறுவு அற்று ஒளிர் மணிச்சிவிகை மீதே
நுண் இசையிலே மனம் நுழைந்து இசையின் நன்னூல்
நண்ணினவர், தும்புருவும் நாரதனும் நாணப்
பண் இசைகலந்த வழிபாடும் அவர் போனூர்.

பொ: மண்ணுலகத்துக் குற்றமற்று விளங்குகின்ற மணிகள் பதித்த பல்லக்கின் மீது, நுட்பமான இசையிலே மனம்புகுந்து இசையின் தன்மையை விளக்கும் நல்ல இசை நூலைத் தெளிந்தவர்களும் இசையில் வல்ல தும்புருவும் நாரதனும் நாணுமாறு பண்ணும் இசையும் கலந்த நெறியில் பாடுகின்றவர்களும் ஆகிய பாடல் வல்லோர் சென்றூர்கள்.

கு: சிவிகை-பல்லக்கு. இசையில் நன்னூல் நண்ணினவர் என்றது, இசை நூல்களைக் கற்றுத் துறைபோயவர்களை. மணிச் சிவிகை மீது போனூர் என்றியையும். மனம் நுழைதலாவது விரும்பிப் புகுதல். இசையின நன்னூல் நண்ணினவர்களாகிய தும்புருவும் நாரதரும் என இயைத்துக் கூறலுமாம். பண், இராகம். இசை என்றது, இசைப்பாடலை. பருந்தும் நிழலும் போலப் பண்ணும்பாடலும் கலந்து இசைத்தவழி இசையின்பம் பெருகும் என்பது தெளிவு. (52)

## பூசுரர் போதல்

1022 குண்டிகையர் குந்துநடை யோர்கள்
குடை யோர்கள்
தண்டினர் தரித்தகுடு மித்தலையர் சாலப்
பெண்டுக ணடக்கைபிர மாதமென வஞ்சிப்
புண்டரிக வண்ணலன பூசுரர்கள் போனூர்.

குண்டிகையர் குந்துநடை யோர்கள் குடையோர்கள்
தண்டினர் தரித்தகுடு மித்தலையர் சாலப்
பெண்டுகள் நடக்கைபிர மாதம் என அஞ்சிப்
புண்டரிக அண்ணல் அன பூசுரர்கள் போனூர்.

பொ: தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனைப் போன்ற பிராமணர்கள் - கரகம் தூக்கிய கையினராய்க் குந்தி நடக்கும் குறுநடையுடையவர்களாய்க் குடையைப் பிடித்த கையினராய் முக்கோலாகிய தண்டினையுடையவராய்க் குடுமிதரித்த தலையினை யுடையவர்களாய்ப் புறப்பட்டுப், பெண்டுகள் நடக்கும் நடையைக் கண்டு, 'இவர்கள் நடைமிகவும் பிரமாதம்' என்று சொல்லிக் கொண்டு அஞ்சி ஒதுங்கிப் போனார்கள்.

கு: குண்டிகை-கரகம்; கமண்டலம். தண்டு என்றது, முக் கோலினை. "நூலே கரகம் முக்கோல் மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரிய" (தொல். மரபு-71) என்றது காண்க. "தண் டொடு பிடித்த தாழ்கமண்டலத்துப் படிவ வுண்டிப் பார்ப்பன மகனே" (குறுந்தொகை-156) என்புழிப் பார்ப்பன மகனுக்குத் தண்டும் கமண்டலமும் சொல்லப்பட்டிருத்தல் காணலாம். குந்து நடையோர்கள் என்றது, பார்ப்பார்க்கு ஏறு போன்ற பீடு நடையின்றிக் குந்தி நடக்கும் இயல்புடைமை விளக்கியவாறு. தன்மை யென்னும் மெய்ப்பாட்டை விளக்க வந்த பேராசிரியர் (மெய்ப்பாட்டியல்-12) தன்மை யென்பது சாதித்தன்மை; அவை யாவன:- 'பார்ப்பாராயின் குந்தி மிதித்துக் குறுநடை கொண்டு வந்து தோன்றலும்" என விளக்கியுள்ளமை இங்கு நினையலாம். பார்ப்பார்க்குச் சிறப்படையாளம் தலையில் குடுமி வைத்திருத்தலே ஆதலின், "தரித்த குடுமித்தலையர்" என்றார். "நம்மூர்ப் பார்ப்பனக் குறுமகப் போலத் தாமுங் குடுமித்தலைய மன்ற, நெடுமலை நாடனூர்த்த மாவே" (ஐங்குறுநூறு-202) என்றது காண்க. அன்னநடை நடந்து செல்லும் பெண்டிர் நடையைக் கண்டு வியந்து "பெண்டுகள் நடக்கை பிரமாதம்" என்று சொல்லிக் கொண்டு அவர்களோடு நடந்து செல்ல அஞ்சி ஒதுங்கிப் போயினர் என்க. (53)

## சோதிடர் போதல்

1023 மூலமென லாயவொரு மூன்றுதொகை யாலே
காலமொடு கோணிலை யறிந்துகடி தாகிச்
சால்புடைய சாயைசல சாதனம தாகக்
கோலியறி சோதிடர்கள் கூடியவர் போனார்.

மூலம் எனல் ஆயஒரு மூன்று தொகை யாலே
காலமொடு கோள்நிலை அறிந்து கடிது ஆவிச்
சால்புடைய சாயை சல சாதனமது ஆகக்
கோலி அறி சோதிடர்கள் கூடியவர் போனர்.

பொ: உலக நிகழ்ச்சிகளுக்கெல்லாம் மூலம் எனத் தக்கு தாய் இறப்பு நிகழ்வு எதிர்வு என மூன்று வகையால் சொல்லப் படுகின்ற காலத்தினையும் நவகோள்களின் நிலைகளையும் நன்கறிந் திருப்பதோடு, விரைந்து உயர்வாகிய நிழலையும் நீரையும் துணை யெனக் கொண்டு பகலினும் இரவினும் தம் முயற்சியால் அளந்து நாழிகையை அறிகின்ற சோதிடர்கள் பலர் ஒன்று கூடியவர்களாய்ப் போனார்கள்.

கு:- மூலமெனலாய வொரு காலம்-மூன்று தொகையாலே (சொல்லப்படும்) காலம் எனத்தனித்தனி இயையும். 'மறுவில் செய்தி மூவகைக்காலமும், நெறியினாற்றிய அறிவன் தேயமும்'' தொல் பொருள் 74) என்பது காணலாம். "அறிவன் என்றது கணியனை. மூவகைக் காலமும் நெறியினால் ஆற்றுதலாவது பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும் மின்னும் ஊர்கோளும் தூமமும் மீன்வீழ்வும் கோள்நிலையும் மழைநிலையும் பிறவும் பார்த்துப் பயன் சாதல்'' என்ற இளம் பூரணர் உரையும் காணலாம். கோள்நிலை என்றது விண்ணில் இயங்கும் நவ கோள்களின் நிலைகளை. விண்ணின் இயங்கும் நவகோள்களின் சார்பால் மக்கள் வாழ்க்கை வேறு படுவதை நனகுணர்ந்து கூறும் திறமையினர் சோதிடர் என்ற வாறு. மேலும் நாழிகை இதுவெனப் பகலினும் இரவினும் விரைந்து சொல்லுதற்கேற்ற பயிற்சியுடையவரும் ஆவர். பகலில் நாழிகையறிவதற்குத் தன்னிழலையே வரைந்து அளந்து கொண்டு சொல்ல வல்லவர். இரவில் தண்ணீரில் சிறுதுளையுள்ள வட்டிலைமிதக்கச் செய்து அதுநிறைந்து நீரில் அமிழும் காலத்தை ஒரு நாழிகையாக அளவிட்டுக் கூறுபவர் நாழிகைக் கணக்கர் எனவும் சொல்லப்படுவர் சிறப்புடைய நிழலும் நீரும் துணையாகக் கொண்டு நாழிகைகூறும் சிறப்புடையவர் என்பார், 'சால்புடைய சாயை சலசாதனமாதாகக் கோலி அறி சோதிடர்கள்' என்றார். சாதனம் - துணை, அது பகுதிப் பொருள் விகுதி.

## வீணைவித்தகரும் அட்டமாசித்தி வல்லோரும் போதல்

1024 இணைக்கருவி வித்தக ரிசைத்தவழி நான்கும்
குணக்கிரியை யெட்டுமறி கோதறு குணத்தோர்
அணுத்தொகை மலைச்செய்த்ச லத்தையணு
வாக்கும்
கணக்கர்கண் மணிச்சிவிகை யிற்கடிது போனார்.

இணைக்கருவி வித்தகர் இசைத்த வழி நான்கும்
குணக்கிரியை எட்டும்அறி கோதுஅறு குணத்தோர்,
அணுத்தொகை மலைச்செய்து அசலத்தை அணுவாக்கும்
கணக்கர்கள் மணிச்சிவிகையில் கடிது போனார்.

பொ: ஒன்றோடொன்று இசைந்து ஒலிக்கின்ற இசைக் கருவிகளில் வல்லவர்கள் சொன்ன இயக்க வழிகள் நான்கினையும் குணக்கிரியைகள் எட்டினையும் நன்கறிந்த குற்றமற்ற குணத்தோராகிய வீணைவித்தகர்களும், அணுக்கூட்டங்களை மலைகளாகச் செய்து மலையை அணுவாக்குகின்ற சித்து நூல் வல்லவர்களும் மணிகள் பதித்த பல்லக்குகளில் வேள்விகாண விரைந்து சென்றார்கள்.

கு: இணைக்கருவி வித்தகர் என்றது பலவும் இசைந்து ஒலிக்கும் வீணையை இயக்க வல்ல வீணைவித்தகரை. வித்தகர்-சதுரப்பாடு உடையவர்கள்; திறல் மிக்கவர். அவர் இசைத்த வழி நான்காவன: முதல்நடை, வாரம், கூடை, திரள் என்பன. குணக்கிரியை எட்டாவன:- எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்பன. இவை வாய்ப்பாட்டுக்குரிய குணக்கிரியைகள். இனி, யாழ்க்குரிய குணக்கிரியைகள் எட்டு உண்டு. வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை, என்பன அவை. 'இசையோர் வகுத்த எட்டு வகையின் இசைக்கரணம்' என்பர் இளங்கோவடிகள். (சிலப். கானல்வரி 12-15) இனி இசை யெழுப்பும் கிரியைகள் எட்டு உண்டு. அவை:- பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ் குறும்போக்கு என்பர். (சிலப். கானல்வரி 5-7) 'எண்வகையால் இசையெழீஇ' என்றதால் இவை யாழில் இசையெழுப்புங்கால்

மேற்கொள்ளப்படும் கிரியைகள் எனலாம். அணுவை மலையாகச் செய்வது மகிமா; மலையை அணுவாகச் செய்வது லகிமா. இவை அட்டமாசித்திகளில் இருவகை. (55)

## ஊனரும் கூனரும் விரைந்து போதல்

1025 ஊனவுடல் கொண்டவர்க ளோடுவது கண்டே
தேனனைய வின்சொன்மட மங்கையர் சிரிப்ப
ஆனைபரி தேர்வரி லகப்படுது மென்னாக்
கூனரு மருங்குறள ருங்கடிது போனார்.

ஊனஉடல் கொண்டவர்கள் ஓடுவது கண்டே
தேன்அனைய இன்சொல் மடமங்கையர் சிரிப்ப,
ஆனைபரி தேர்வரில் அகப்படுதும் என்னாக்
கூனரும் அருங்குறளரும் கடிது போனார்.

பொ: கைகால் முதலியன ஊனமுற்ற உடம்பையுடையவர்கள் (தங்கள் நிலைக்கு ஏலாத வகையில்) ஓடுவதைக் கண்டு தேன்போன்ற இனிய சொல்லையுடைய இளையமங்கையர்கள் சிரிக்கவும், ஆனையும், குதிரையும், தேரும் வந்தால் நாம் அவற்றிடையே அகப்பட்டுக் கொள்வோம் என்று கூனர்களும் காண்டற்கரிய குள்ளர்களும் விரைந்து போனார்கள்.

கு: ஊனவுடல் என்றது, கைகால் முதலிய உறுப்புக்கள் குறைந்த உடம்பையுடையவர்களை. ஊனவுடல் கொண்டவர்கள் ஓடுவது உறுப்புக்குறை விசேடமாக இருத்தலின் மடமங்கையர் சிரிக்கலாயினர். ஊனமுற்றவர் ஓடுவதைக் கண்டும் பெண்டிர் சிரிப்பதைக் கண்டும் கூனரும் குறளரும் கடிதாகச் செல்வதற்குக் காரணம் ஆனைபரிதேர்வரில் அவற்றிடையே அகப்பட்டு இறந்துபடுவோம் என்ற அச்சமே என்பது காட்டி நாணினும் உயிர் சிறந்ததாகக் கொள்ளும் அவர்தம் சிறுமையைப் புலப்படுத்தியவாறு. ஊனவுடல் கொண்டவர்களும் கூனரும் குறளரும் விரைந்து சென்றனர் என்றவாறு. இனி, ஊனவுடல் கொண்டவர் என்றது கூனரையும் குறளரையுமே

எனக் கொண்டு அவர்கள் மங்கையர் சிரிப்பவும் ஆனை பரி தேர்வரில் அகப்படுவோம் என்று அச்சத்தால் நகைக்கு நாணுது கடிது போனுர் எனக் கூறலும் ஆம். குறளர் என்றது இரண்டடி உயரமுள்ள குள்ளர்களை. (56)

## பண்டங்கள் சுமந்த பண்டிகள் செல்வது

1026 மண்டல் மதிர்ந்திட வழங்குவழி யிற்கண்
நுண்டுகள் படச்சிகரி நூறுபட வெண்ணும்
எண்டிசைக ளுங்கடக டென்னுமொலி யெய்தப்
பண்டமதை பெய்தவுயர் பண்டிகள் பரந்த.

மண்தலம் அதிர்ந்திட வழங்குவழியில் கண்
நுண்துகள் படச் சிகரி நூறுபட எண்ணும்
எண்திசைகளும் கடகட என்னும் ஒலி எய்தப்
பண்டமதைப் பெய்த உயர் பண்டிகள் பரந்த.

பொ: பல்வகைப் பண்டங்களைப் பெய்த வண்டிகள் மண்ணிடம் அதிர்ந்திடவும், செல்லும் வழியில் பார்ப்போர் கண்களில் நுண்ணியதுகள் படவும் மலைகள் எல்லாம் துகள் ஆகவும் எண்ணப்படுகின்ற எண்டிசைகளிலும் கடகட என்கின்ற ஒலிபோய் எட்டவும் பரவிச் சென்றன.

கு: பண்டங்கள் நிறைந்த வண்டிகள் வேள்விச் சாலைக்குச் செல்லும்போது மண்தலம் அதிர்ந்தன; இயங்குவழியில் உள்ளோர் கண்களில் வண்டிகள் செல்வதால் எழுந்த நுண்ணிய துகள் பட்டன; மலைகள் துகளாயின; கடகட என்னும் ஒலி எண்திசையிறுவரை சென்று ஒலித்தன என்க. பண்டமதை என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. கடகட என்பது வண்டி செல்லும் ஒலிக்குறிப்பு. கடகட என்புழி அகரம் தொகுத்தல் விகாரம் பெற்று கடகடென்னுமொலி என்ருயிற்று. பண்டிகள் அதிர்ந்திட, துகள்பட, நூறுபட, ஒலியெய்த, பரந்த என வினைமுடிவுசெய்க. பரத்தலாவது பரவலாகச் செல்லுதல். (57)

## பப்பரவர் போதல்

1027 கரிக்கொடு திரட்டிய தெனக்கரிய மெய்யர்
பெருந்துயரு தட்டையறர் விட்டபெரு வாயர்
சுருக்கமில் சரக்கைமலை யிற்பெரிது துற்றுப்
பரித்தவலை சிக்கமொடு பப்பரவர் போனார்.

கரிக்கொடு திரட்டியது எனக் கரிய மெய்யர்;
பெருந்துயர் உதட்டை அறவிட்ட பெருவாயர்;
சுருக்கம்இல் சரக்கை மலையின்பெரிது துற்றுப்
பரித்த வலை சிக்கமொடு பப்பரவர் போனார்.

பொ: கரியைக் கொண்டே திரட்டிய உருவம் என்று சொல்லுமாறு கருமைமிக்க உடம்பையுடையவர். பெரியதாய் உயர்ந்த உதட்டினை முழுதும் தொங்கவிட்ட பெரிய வாயினை யுடையவர்கள்; சுருக்கமில்லாமல் மிகுதியாகவுள்ள உணவுப் பொருள்களை மலைபோலப் பெரிதும் செறித்துத் தாங்கிய வளைந்த சிக்கத்தோடு பப்பரதேயத்தவர்கள் போனார்கள்.

கு: கரி என்றது, எரிந்த விறகின் எச்சமாய் மீண்டும் பயன்படுத்தத்தக்க எரிபொருளை. கரியமேனியை விளக்கத் தற்குறிப் பேற்றமாகக் 'கரிக்கொடுதிரட்டிய தெனக்கரிய மெய்யர்' என்றார். பப்பர தேயத்தவரின் இயல்பு புலப்படுத்து வாராய்ப் பெருத்துயர்ந்த உதட்டையும் பெரு வாயையுங் கூறினார். சிக்கம் என்றது, தோளில் மாட்டிக்கொள்ளுதற்கு வசதியாகச் செய்த வலைப்பை. இந்த வலைப்பையில் உணவுப் பொருள் நிறைந்த பாத்திரத்தை வைத்துச் செல்லுதல் உண்டு. சரக்கு என்றது உணவுப் பொருளை. சுருக்கமில் என்பதோடு அமையாது, 'மலையின் பெரிது துற்று' என்றது. அவர் சுமந்து செல்லும் உணவுப் பண்டங்களின் மிகுதியைப் புலப்படுத்த வேண்டியே. பரித்த-சுமந்த. வளைசிக்கம் என்றது சிக்கத்தின் வடிவமைப்புக் கூறியவாறு. பப்பரமொழி என்பது பதினெண் மொழியில் ஒன்று. பப்பரதேயம் என்றது ஐம்பத்தாறு

தேயங்களில் ஒன்று. அந்நாட்டு மக்கள் பிறர் கையில் உண்ணாத நோன்பினர் போலும்; தாம் போகுமிடத்திற்கு உணவு கொண்டு செல்லுதலின். (58)

## தேர்மேலேறி மகளிர் போதல்

1028 நன்றென விளங்கிட நடந்துசெலு மம்பொற்
குன்றின்மிசை யேறுசில கோலமயில் போலப்
பொன்றிகழ் மணிப்புரவி பூண்ட புனை
தேர்மேல்
மன்றல்கமழ் வார்குழலி னார்கள்சிலர் போனார்.

நன்று என விளங்கிட நடந்து செலும் அம்பொன்
குன்றின்மிசை ஏறுசில கோல மயில் போலப்
பொன்றிகழ் மணிப்புரவி பூண்ட புனை தேர்மேல்
மன்றல்கமழ் வார்குழலினார்கள் சிலர் போனார்.

பொ: நன்று என்று வியக்குமாறு யார்க்கும் விளங்கிட நடந்து செல்கின்ற அழகிய பொற்குன்றின்மேல் ஏறியுள்ள சில அழகிய மயில்களைப்போல, மணிமாலையையுடைய குதிரைகள் பூண்ட பொன்திறம் விளங்குமாறு செய்யப்பெற்ற தேர்மேல் மணம் கமழ்கின்ற நீண்ட கூந்தலையுடைய பெண்டிர் சிலர் போனார்கள்.

கு: ஓடுகின்ற பெற்றோர்க்குப் பொற்குன்றினை உவமை கூறும் புலவர் 'நடந்து செலும் அம்பொற்குன்று' என்று இல்பொருளை யுவமையாக்கினார். நடந்து செல்லுதல் குன்றிற்கு இல்லை. ஓடுந்தேராகிய பொருளுக்கு ஏற்ப உவமைக்கும் நடக்கும் தொழிலையேற்றுக் கூறினர். மணிப்புரவி பூண்டதேர், பொன்றிகழ் தேர் எனத் தனித்தனி இயையும். தேர்க்கு நடந்து செலும் பொற்குன்றும் வார்குழலினார்க்குக் கோலமயிலும் உவமைகள். நீண்ட கூந்தலையுடைய மகளிர்க்குத் தோகைமயிலை உவமை கூறியுள்ளது பொருத்தமிக்கதாகும். மன்றல்-மணம். கமழ் வார்குழல் என்றது, கூந்தற்கு இயற்கை மணம் உண்டு என்பதைப் புலப்படுத்தியவாறு. தேர்மேல் செல்லுதற்குரிய

தகுதிமிக்க அரச குடும்பத்து மகளிர்போலும் இவர்கள். நின்று பலகாலம் கழித்த குன்றுகள் சிந்தித்து இனி நடப்பதே நல்லது என்று விளங்கிட நடந்து செல்லும் குன்றின்மிசை எனக் கூறலும்ஆம். (59)

## பிடியின் மேல் பெண்டிர் செல்லுதல்

1029 மேகநிற வண்ணல்பெரு வேள்வியது காணும்
ஓகைதமை யுந்தவணி பூணொளி பரக்க
வேகமொடு போகுமுகின் மின்னின மெனக்கைந்
நாகவெரின் மீதுசில நாரியர்கள் போனார்.

**மேகநிற அண்ணல் பெருவேள்வியது காணும்
ஓகைதமை உந்த அணிபூண் ஒளிபரக்க
வேகமொடு போகும் முகில் மின்னினம் எனக்கைந்
நாகவெரின் மீது சில நாரியர்கள் போனார்.**

பொ: மேகத்தின் நிறத்தையுடைய அண்ணல் இராமன் செய்யும் பெரிய வேள்வியைக் காணப் போகும் மகிழ்ச்சிதமைத் தூண்டத் தாம்அணிந்துள்ள ஆபரணங்களின் ஒளி சுற்றிலும் டரவ, வேகத்தோடு செல்லுகின்ற மேகத்தில் உள்ள மின்னல் என்னும்படி கையையுடைய யானையின் முதுகின் மீது அமர்ந்து சில பெண்டிர்கள் போனார்கள்.

கு: யானை மீது செல்லும்பெண்டிரின் தோற்றம் வேகமொடு போகும் மேகத்தில் உள்ள மின்னலைப் போன்றது என்றவாறு. மேகநிற அண்ணல் என்றது இராமனை. பெருவேள்வி என்றது அசுவமேதத்தை. ஓகை-மகிழ்ச்சி. காணும ஓகை என்றது காணப் போகும் ஆர்வம். அது அவர்களை விரைந்து செல்லத் தூண்டு கின்றது. அத்தூண்டுதலால் விரைந்து செல்லும் யானைமேல் அமர்ந்து செல்லுகின்றார்கள். நாரியர்கள்-பெண்டிர். அவர்கள் அணிந்த ஆபரணங்களின் ஒளியும் அவர்தம் இடையும் மின்னல் என்பதற்குத்துணை நின்றன. வேகமொடு போகும் யானைக்கு வேகமொடு செல்லும் முகிலும் யானைமேல் செல்லும் மின்னிடை மகளிர்க்கு மின்னலும் உவமையாயின. கைந்நாகம் என்றது

யானையை. பெண்டிர் ஏறிச் செல்லுதற்குரிய பெண் யானையையே இங்குக் கொள்க. வெரிந்-முதுகு. (60)

## குதிரைமீது செல்லும் கொவ்வை வாயர்

1030 தாவிநிரை யேவரு தடந்திரை விளங்கும்
துாவியிள வன்னவின மென்றுவமை சொல்லக்
கூவுகுயின் மென்சொலணி கோவைநிகர்
வாயார்
வாவுபரி மீதுதிகழ் மாதர்சிலர் போனார்.

தாவிநிரையே வரு தடந்திரை விளங்கும்
தூவி இள அன்ன இனம் என்று உவமை சொல்லக்,
கூவுகுயில் மென்சொல் அணிகோவை நிகர் வாயார்
வாவு பரி மீது திகழ் மாதர் சிலர் போனார்.

பொ: வரிசை வரிசையாகத் தாவி வருகின்ற பெரிய அலைகளின்மேல் விளங்குகின்ற தூவியையுடைய இளமையான அன்னங்களின் இனம் போன்றனர் என்று உவமை கூறும்படி, கூவுகின்ற குயிலின் குரல்போன்ற மெல்லிய இனிய சொல்லினை யும் அழகிய கொவ்வைக் கனியைப்போன்ற வாயினையுமுடைய விளக்கமுள்ள மகளிர் சிலர் தாண்டித் தாண்டிச் செல்கின்ற குதிரைகள் மீது போனார்.

கு: குதிரைகளுக்கு அலைகளும், குதிரைமேற் செல்லும் பெண்டுகட்கு அன்னங்களும் உவமை. குதிரைகளுக்கு அலைகளை உவமை சொல்லுதல் மரபு. கோவை என்றது, கொவ்வைக் கனியை. வாய் என்றது இங்கு உதட்டினை. தூவி-அன்னத்தின் சிறகு. அன்னம் நடையால் பெண்கட்கு உவமையாகும். (61)

## சிவிகையில் செல்லும் சேயிழையார்

1301 மூடுசிவி கைச்செலு மொருத்திமுக முன்பே
வாடைக துவித்திரை யெடுப்பமழை மஞ்சின்
மாடுற விளங்குமதி யொத்தவெழின் மஞ்சு
கூடுமதி யொத்தது குலைந்துதிரை வீழ.

மூடுசிவிகைச் செலும் ஒருத்தி முகம் முன்பே
வாடை கதுவித் திரை எடுப்ப மழைமஞ்சின்
மாடுஉற விளங்குமதி ஒத்த; எழில் மஞ்சு
கூடுமதி ஒத்தது குலைந்து திரை வீழ.

பொ: திரையால் மூடப்பட்டுள்ள பல்லக்கில் செல்லுகின்ற ஒருத்தியின் முகம் முன்பு வாடைகை் காற்றுநெருங்கித் திரையினை எடுத்தலால் மழைபொழியும் மேகத்தின் பக்கத்தில் பொருந்தி விளங்கும் சந்திரனை ஒத்தது; பின்பு வாடைக்காற்று எடுத்த திரை நிலை குலைந்து வீழ்தலால் அழகிய மேகத்தைச்சேர்ந்துள்ள சந்திரனை ஒத்தது.

கு: திரை மேகம் போன்றது; மாதர் முகம் சந்திரனைப் போன்றது; பல்லக்கில் மறைத்துள்ள திரையை வாடைக்காற்றுச் சிறிது நீக்கியபோது திரையருகே முகம் தெரிதலின் மேகத்தின் அருகேயுள்ள சந்திரனை ஒத்தது எனவும், திரை மீண்டும் முகத்தினை மறைத்த போது மேகத்தால் மறைக்கப்பட்ட சந்திரனைப்போன்றது எனவும் வேறுபடுத்தி விளக்கியவாறு. மஞ்சு-மேகம். மாடு-பக்கம். குலைந்து என்றது வாடை எடுத்த நிலை குலைந்து என்றவாறு. (62)

## குமரர்க்கும் கன்னியர்க்கும் போர்

1032 ஒன்றுகரு மங்கடையி லொன்றொழிய
வொன்றோ
வென்றிதிகழ் வில்லிபெரு வேள்வியெழில்
காணச்
சென்றகும ரர்க்குமணி தேமொழியி னார்க்கும்
பின்றுத லிலாவகை விளைந்தது
பெரும்போர்.

ஒன்றுகருமம் கடையில் ஒன்று ஒழிய ஒன்றோ?
வென்றிதிகழ் வில்லி பெருவேள்வி எழில்காணச்
சென்ற குமரர்க்கும் அணிதேமொழியினார்க்கும்
பின்றுதல் இலாவகை விளைந்தது பெரும்போர்.

பொ: ஒன்றுபட்டதாய ஒரு செயல் கடைசியில் ஒன்றொழிய ஒன்றாய்விடுமோ? ஏனெனின் வெற்றி விளங்கும் வில்லையுடைய இராமனது பெரியவேள்வியின் எழிலைக் காணச் சென்ற குமாரர்க்கும் அணிகலன் அணிந்த தேன்போன்ற மொழிபேசும் கன்னியர்க்கும் பின் வாங்குதல் இலாதவகையில் பெரும்போர் விளைந்தது.

கு: வேள்விகாணச் சென்றவர்களாகிய குமாரர்களும் கன்னியரும் ஒருவரையொருவர் கண்டு பார்வையால் போர் செய்தனர் என்றவாறு. ஒன்று கருமம் என்றது வேள்வி காணுதலாகிய ஒன்றுபட்ட செயல். கன்னியரும் குமரரும் செல்வது வேள்வி கண்டலாகிய ஒரு கருமத்திற்காகவே. ஆனால் இடையில் அவ்விருதிறத்தாரும் தாம் வந்த கருமத்தை மறந்து கண்களால் பெரும்போர் விளைத்தனர். இதுவே கடையில் ஒன்றொழிய ஒன்றாயது என்க. "ஒன்று கருமங்கடையில் ஒன்றொழிய வொன்றோ" என்றது, வேற்றுப்பொருள் வைப்பணி. காணச் சென்றோர் பெரும் போர் விளைத்தல் பொருந்தும் போலும் என்னும் கருத்தை நிறுவ வந்தது. (63)

1933 வென்றவர்க ளோடுவர்கள் வேறொரு நிலத்தே
என்றுகொள லாமெழில்கொ ளேழையர்க
ணம்பால்
சென்றுபகை வென்றதிற லாடவர்க ளேவுண்
டொன்றுமறி யாதுவழி நின்றன ருளைந்தே.

வென்றவர்கள் ஓடுவர்கள் வேறு ஒரு நிலத்தே
என்று கொளல் ஆம்; எழில் கொள் ஏழையர்கண் அம்பால்
சென்றுபகை வென்றதிறல் ஆடவர்கள் ஏவுண்டு
ஒன்றும் அறியாது வழி நின்றனர் உளைந்தே.

பொ: போர்க்களம் சென்று பகைவர்களை வென்ற திறமை மிக்க ஆண்மக்கள் எழில் மிக்க பெண்டிரின் கண்ணாகிய அம்பினால் ஏவுண்டு ஒன்றும் அறியாமல் வழியில் வருந்தி நின்றார்கள்; (கண்ணம்பினை ஏவினவர்களாகிய பெண்டிர் நில்லாமல் வேள்வி காண ஓடுகின்றார்கள்). இந்த நிகழ்ச்சியைப் பார்க்கும் போது வென்றவர்கள் ஓடுவார்கள் (போர்க்களம் அல்லாத) வேறு ஒரு நிலத்தில் என்று கொள்ளலாம்.

கு: வேறு ஒரு நிலம் என்றது, போர்க்களம் அல்லாத வேறு ஒரு நிலம் என்றவாறு. வென்றவர்கள் வீரத்தோடு நிற்றலும் தோற்றவர்கள் ஓடுதலும் போர்க்களத்துக்காணப்படும் நியதி. ஆனால், வேள்வி காணச் செல்லும் வழியில் கண்ணம்பால் ஆடவரை வென்ற பெண்டிர் ஓடுகின்றனர். கண்ணம்பால் ஏவப்பட்டுத் தோற்ற ஆடவர்கள் ஒன்றுமறியாது வருந்தி வழியில் நிற்கின்றனர். இந்த நிகழ்ச்சியைப் பார்க்கும்போது 'வேறு ஒரு நிலத்தே வென்றவர்கள் ஓடுவார்கள் என்று கொள்ளலாம்' என்றது, வேற்றுப் பொருள் வைப்பணி ஆகும் 'ஆடவர்கள் ஏவுண்டு நின்றனர்' எனவே கண்ணம்பை ஏவினவர்கள் நில்லாது ஓடினர் என்பது அருத்தாபத்தியால் பெறப்படும். அருத்தாபத்தி யால் பெறப்பட்ட கருத்தையே கொண்டு இங்கு "வென்றவர்கள் ஓடுவார்கள்" என்று கூறினார் ஆசிரியர் என்க. (64)

1034 கஞ்சமல ராளனைய காமினிகள் கண்ணால்
நெஞ்சுபறி யுண்டுசில வீரர்நெறி காணார்
அஞ்சரமு மஞ்சொல்மட மாதர்விழி யென்னும்
வெஞ்சரமு நெஞ்சுற வுளைந்தனர்கள்
வீரர்.

கஞ்சமலராள் அனைய காமினிகள் கண்ணால்
நெஞ்சு பறியுண்டு சில வீரர்நெறி காணார்;
அஞ்சரமும் அம்சொல் மடமாதர் விழிஎன்னும்
வெஞ்சரமும் நெஞ்சுஉற உளைந்தனர்கள் வீரர்.

பொ: செந்தாமரைமலரில் இருக்கும் திருமகள் போன்ற பெண்டிரின் கண்ணினால் நெஞ்சு பறிக்கப்பட்டுச் சில வீரர் வழிகாணாராயினர்; வீரர் சிலர் மன்மதனுடைய அழகிய மலரம்பு களும் அழகிய சொல்லையுடைய இளமங்கையர்தம் கண்ணென் கின்ற கொடிய அம்பும் நெஞ்சின்கண் பாய்தலால் வருந்தினார்கள்.

கு: கஞ்சமலர்-தாமரைமலர். காமினி-பெண். நெஞ்சு பறியுண்டு-மனம் கவரப்பட்டு. அஞ்சரம் என்றது மன்மதனது மலரம்பினை. மாதர் விழியென்னும் வெஞ்சரம் பாய்கின்றபோதே மன்மதன் சரமும் பாய்ந்தன; அவ்விருவகைச் சரங்களாலும் வீரர்கள் வருந்தினார்கள் என்றவாறு. இச்செய்யுளால் மாதர் கண்களால் வருந்தும் ஆண்மக்கள் நிலையைப் புலப்படுத்தியவாறு உளைதல்-வருந்துதல். மலரம்பு ஆதலின் அம்சரம் எனவும் அவற்றினும் கண் கொடிதாதல்பற்றி வெஞ்சரம் எனவும் கூறினார். (65)

## படைத்தலைவர்கள் நைமிசாரணியம் அணுகுதல்

1035 தூமதி முகத்தியர்கண் ணாலிடர்கள் பட்டுப்
போமதி பலத்தொடு படைத்தலைவர்
போயநற்
கோமதி நதிக்கரை யினைக்குறுக விப்பால்
மாமதிகொ டெட்டரிய மாயனிது
செய்தான்.

தூமதி முகத்தியர் கண்ணுல் இடர்கள் பட்டுப்
போம்அதி பலத்தொடு படைத்தலைவர் போய் நல்
கோமதி நதிக் கரையினைக்குறுக, இப்பால்
மாமதி கொடு எட்டரிய மாயன்இது செய்தான்.

பொ: தூய சந்திரனைப் போன்ற முகத்தையுடைய பெண்டிரின் கண்ணுல் துன்பங்கள் பலவுற்றும் அத்துன்பத்தைக் கடந்து போகின்ற மிக்க வலிமையோடு சேனைத்தலைவர் சென்று நல்ல கோமதி நதியின் கரையினை நெருங்காநிற்க, இவ்விடத்தில் சிறந்த அறிவைக் கொண்டும் எட்டுதற்கு இயலாத கருநிறமுடைய இராமன் இதனைச் செய்தான்.

கு: இடர்கள் பட்டுப்போம் அதிபலம் என்றது, துன்பங்களைக் கடந்து போதற்குரிய பெரிய வலிமையை. படைத்தலைவர்கள் பெண்களின் கண்களால் இடர்பல வுற்ருரேனும் மயங்கி நில்லாது, அவ்விடரைக் கடக்கும் பெரியவலிமையோடு சென்று கோமதி நதிக்கரையை அணுகினர் என்க. 'இப்பால்' என்றது, சேனைத் தலைவர்களின் செயலை விவரித்து விட்டு அரண்மனையில் இராமன் செய்யும் செயலைப் பற்றிக் கூறுகின்றமை புலப்படுத்த வேண்டி. இப்பால்-அரண்மனையாகிய இவ்விடத்து. மாமதி-பேரறிவு. ஆன்மாவின் பேரறிவால் அணுகுதற்கு அரியவன் இராமன் என்று அவன் பரநிலையை நினைந்து கூறியவாறு. மாயன்-கரிய நிறமுடையவன். மாயச் செயல்களில் வல்லவன் என்று இராமனைக் கூறுவது பொருந்துமேற் கொள்க. (66)

## இராமன் தன்னை அலங்கரித்துக் கொள்ளுதல்
## வேறு

1036 செந்நிற நளினச் சேவடி யிரண்டுஞ்
செறிகழல் செறிந்திடச் சேர்த்திப்
பொன்னிற வாடை பொலிவுறச் சாத்திப்
புனைமணிக் கச்சரை பொருத்தி

மின்னிற வுடைவாள் கச்சொடு விசித்து
விளங்குசீ ருதரபந் தனத்துக்
கன்னிறச் சோதி கதிரவன் சோதி
காட்டிடக் கவின்பெறக் கட்டி.

செந்நிற நளினச் சேவடி இரண்டும் செறிகழல் செறிந்திடச் சேர்த்திப்,
பொன்னிற ஆடை பொலிவுறச் சாத்திப் புனேமணிக் கச்சு அரை பொருத்தி,
மின்னிற உடைவாள் கச்சொடு விசித்து விளங்குசீர் உதர பந்தனத்துக்
கல்நிறச் சோதி கதிரவன் சோதி காட்டிடக் கவின்பெறக் கட்டி.

பொ: (இராமன் தன்) செந்தாமரை மலர் போன்ற சிவந்த பாதங்கள் இரண்டிலும் வீரம் செறிந்த வீரக்கழல் நெருங்குமாறு சேர்த்துக்கட்டி, பொன்னிறமுடைய பொன்னுடை பொலிவு பெறுமாறு தன்னுடம்பில் சார்த்திக் கொண்டு, மணிகள் பதித்துப் புனேந்த கச்சினே அரையில் பொருந்தக் கட்டிக் கொண்டு, மின்னின் நிறத்தினேயுடைய உடைவாளேக் கச்சோடு சேர்த்துக் கட்டிக் கொண்டு, விளக்கமுடைய சிறந்த உதரபந்தனத்தில் பதித்துள்ள வயிரம் முதலிய கற்களின் நிறமிக்க ஒளி, சூரியனின் சோதியைக் காட்டுமாறு அழகுபொருந்த வயிற்றின்மேல் கட்டிக் கொண்டு.

கு: குளகம். 69ஆம் செய்யுளில் அரியணே நின்றும் இழிந்து கடந்தான். என்று முடியும். சேர்த்தி, சாத்தி, பொருத்தி, விசித்து, கட்டி என இயையும். செந்நிற நளினம் என்றது, செந்தாமரை மலரை. இராமனது மேனியின் தொடர்பால் பொன்னுடை பொலிவு பெறுமாறு சாத்திக் கொண்டு என்க. விசித்து இழுத்துக் கட்டி. உதரம்-வயிறு. உதரபந்தனம் என்றது, கச்சுக்கு மேல் வயிற்றின்மேல் அணிந்து கொள்ளும் ஆடை விசேடம். உதரபந் தனத்தில் வயிரம் முதலிய கற்கள் பதிக்கப் பெற்றுள்ளன. அக்கற் களின் ஒளி, சூரியனின் ஒளியைக் காட்டும்படி கட்டிக் கொண்டான் இராமன் என்க; என்றது, அக்கற்களின் சோதிக்கும் சூரியன்

சோதிக்கும் வேறு பாடில்லையாதலின் சூரியன் இல்லாத இரவிலும் உதரபந்தனத்துப் பதித்த கல்லின் சோதியைக் கண்டவர்கள் சூரியனது சோதியென்றே யெண்ணுவர் என அக்கூற்களின் ஒளிச் சிறப்புக் கூறுயவாறு. மேல் மாயன் இது செய்தான் என்று தொடங்கினமையால் இச் செய்யுட்கு எழுவாய் மாயன் என்பதே எனக் கொள்ளலாம். (67)

1037 அஞ்சன வரைபோ லழகிய மார்பத்
தாரமும் பதக்கமு மணிந்து
மஞ்சணி வாகு வலயம தணிந்து
மாமணிக் கடகமுஞ் சாத்திக்
கஞ்சநன் மலர்போற் கைவிர லாழி
கடைச்செறி கவினுறச் சாத்தி
வஞ்சிபோ லிடை யார் மாலுறக் கோலக்
கழுத்தினின் மணிவடஞ் சாத்தி.

அஞ்சன வரைபோல் அழகிய மார்பத்து ஆரமும் பதக்கமும் அணிந்து,
மஞ்சு அணி வாகு வலயமது அணிந்து மாமணிக் கடகமும் சாத்திக்
கஞ்சநன் மலர்போல் கைவிரல் ஆழி கடைச்செறி கவின் உறச் சாத்தி
வஞ்சிபோல் இடையார் மால்உறக் கோலக் கழுத்தினில் மணி வடம் சாத்தி.

பொ: அஞ்சனத்தாலியன்ற மலையைப்போல அழகமைந்த விரிந்த மார்பகத்தில் முத்தாரத்தையும் பதக்கத்தையும் சேர்த்து அணிந்து கொண்டு, வலிமை பொருந்தியுள்ள தோள்களில் வாகுவலயம் அணிந்துகொண்டு, முன்கையில் சிறந்த மணிகள் பதித்த கடகத்தையும் அணிந்துகொண்டு, தாமரை மலர்போல் விளங்கும் முன்கையில் உள்ள விரல்களில் மோதிரங்களையும் அவற்றின்பின் அணிதற்குரிய கடைச்செறியும் அழகாக அணிந்து கொண்டு, வஞ்சிக்கொடி போன்ற இடையையுடைய மகளிர் காமுறும்படி கழுத்தினில் மணிவடத்தை அணிந்துகொண்டு.

கு: அஞ்சனம்-மை. அஞ்சனவரைபோல் என்றது இல் பொருளுவமை. ஆரமும் பதக்கமும் அணிந்து என்றமையால், பதக்கம் ஆரத்தோடு இணைத்திருந்தமை யறியலாம். மைந்து என்பது எதுகை நோக்கி மஞ்சு எனப்போலியாய் வந்தது. மைந்து-வலிமை. வாகு-தோள். வலயம் என்றது தோளில் அணியத்தக்க வாகுவலயம் என்னும் அணியை. கடகம் என்பது முன் கையில் அணிவது. கஞ்சம் - தாமரை. விரல்ஆழி என்றது கைவிரலில் அணியும் மோதிரத்தை. கடைச் செறி என்பது, மோதிரம் நழுவி வீழாதிருக்க மோதிரத்திற்குப்பின் அணியும் ஒருவகையணி. மார்பிலணிந்த ஆரமும் பதக்கமும் அல்லாது, கழுத்தில் இறுக்கமாக அணிந்த மணிவடமும் கூறப்பட்டுள்ளது. மால்-காமமயக்கம். இராமன் கழுத்தில் அணிந்த மணிவடத்தைப் பார்த்தபெண்டிர் மாலுறுவிர் என்று அம்மணிவடத்தின் சிறப்புப் புலப்படுத்தியவாறு. சாத்தி - அணிந்து. (68)

## தோடும் முடியும் சாத்துதல்

1038 செந்துவர் வாயுந் தாமரைக் கண்ணும்
புருவமு நெற்றியுந் திகழும்
சுந்தர வதனந் துலங்கிட விலங்குஞ்
சுடர்மணித் தோடுகள் சாத்தி
இந்திர நீலச் கற்றையை விழுங்கி
யிரவிமண் டிலங்கரு வரைமேல்
வந்துதோன் றியது போன்றிடத் திகழும்
வளரொளி மணிமுடி சாத்தி.

செந்துவர் வாயும் தாமரைக் கண்ணும் புருவமும் நெற்றியும் திகழும்
சுந்தர வதனம் துலங்கிட இலங்கும் சுடர்மணித் தோடுகள் சாத்தி,
இந்திர நீலக் கற்றையை விழுங்கி இரவிமண்டலம் கருவரைமேல்
வந்து தோன்றியது போன்றிடத் திகழும் வளர்ஒளி மணிமுடி சாத்தி.

பொ: சிவந்த பவழம் போன்ற வாயும் தாமரை மலர் போன்ற கண்ணும் புருவமும் நெற்றியும் விளங்குகின்ற அழகிய முகம் விளக்கம் பெறுமாறு விளங்குகின்ற சுடர்வீசும் மணிகள் பதித்த தோடுகளைக் காதுகளில் சாத்திக் கொண்டு, இந்திர நீல மணிபோல இருண்டு தோன்றும் குடுமிக்கற்றையை விழுங்கி விட்டுச் சூரிய மண்டலம் கரிய மலைமேல் வந்து தோன்றியது என்னுமாறு விளங்குகின்ற மிக்க ஒளியுள்ள மணிகள் பதித்த முடியினைத் தலையில் சாத்திக்கொண்டு.

கு: துவர்-பவழம். வதனம்-முகம் என்பது வாயும் கண்ணும் புருவமும் நெற்றியும் கொண்டு விளங்குவது என விளக்கம் தந்தவாறு. இயல்பாகவே சுந்தரமாக உள்ள முகம் மேலும் விளக்கம் பெறுமாறு இலங்கும் சுடர்மணித் தோடுகளைச் சாத்திக் கொண்டான் இராமன் என்க. இலங்குதல்-விளங்குதல். தோடு என்பது காதில் அணியும் சிறந்த அணி. இது பெண்டிர்க்கே யன்றி ஆடவர்க்கும் உரிய அணியாகும். இந்திரநீலக் கற்றை என்றது, இந்திர நீல மணி போன்ற குடுமிக்கற்றையை. 'இந்திர நீல மொத்திருண்ட குஞ்சியும்' (பால மிதிலைக்காட்சிப்) என்றது நினைக. தலையில் முடியணியும்போது மயிர் முடி மறையும் ஆதலின் அவ்வாறு மறைகின்ற முடியே குஞ்சிக்கற்றையை விழுங்கியதாகத் தற்குறிப்பேற்றமாகக் கூறினர். உவமையாக வரும் சூரியனுக்கும் இருள்கற்றையை விழுங்குதல் உண்டு. 'பாயிருள் பருகி' (பெரும் பாணாற்றுப்படை) என்றது காணலாம் இரவி-சூரியன். கருவரை-கரியமலை. இராமன் தலைமேல் முடியணிந்துள்ள காட்சி உதயமலைமேல் சூரியன் வந்து உதித்ததைப் போன்றது என்றவாறு. (69)

## இராமன் கோபுர வாயிலைக்கடத்தல்

1039 திருமணி மார்பன் றன்றிரு நெற்றித்
திகழ்தரு நாமமுஞ் சாத்தி
எரிமணிச் சோதி யரியணை நின்று
மிழிந்திளை யோர்கள்கை கொடுப்ப

வருமணி யாரத் தவனியாள் மன்ன
ரருள்வழி புகுந்து போவார்கள்
குருமணி மகுட கோடிக டேய்க்குங்
கோபுர வாயிலைக் கடந்தான்.

திருமணி மார்பன் தன்திரு நெற்றித் திகழ்தரு நாமமும் சாத்தி,
எரிமணிச் சோதி அரியணை நின்றும் இழிந்து இளையோர்கள் கைகொடுப்ப,
அருமணி ஆரத்து அவனி ஆள் மன்னர் அருள்வழி புகுந்து போவார்கள்
குருமணி மகுட கோடிகள் தேய்க்கும் கோபுர வாயிலைக் கடந்தான்.

பொ: திருமகள் வீற்றிருக்கின்ற அழகிய மார்பினையுடைய இராமன் தனது சிறந்த நெற்றியில் விளங்குகின்ற திருமண் ஆகிய நாமத்தையும் சாத்திக் கொண்டு, எரிபோன்று ஒளிவீசுகின்ற மணிகள் பதித்த சோதிமயமான சிங்காசனத்திலிருந்து இறங்கித் தம்பியர் கைகொடுப்ப, அரிய மணியாரத்தினையுடையனும் இவ்வுலகை ஆள்கின்ற மன்னவர்கள், இராமனது அருளின் குறிப்பறிந்து புகுந்து பின்பு பேசுவார்தம் நிறமிக்க மணி மகுட கோடிகளைத் தேய்க்கின்ற கோபுரத்தின் வாயிலைக் கடந்தான்.

கு: படைத்தலைவர்கள் புறப்பட்டுக் கோமதிநதிக் கரையையடைந்தபோது, இராமன் அரண்மனைக் கோபுரவாயிலைக் கடந்தான் என்றவாறு. இதனால் இராமனது பெரும் படையின் அளவு புலப்படுத்தியவாறு. பாலகாண்ட எழுச்சிப் படலத்தும் தயரதன் அயோத்தியில் புறப்படுதற்குமுன் அவன் சேனையும் மக்களும் மிதிலை அடைந்ததாகக் கூறியிருத்தல் காணொப். நெற்றித் திகழ்தரு நாமம் என்றது, நெற்றியில் மேல்நோக்கிய நிலையில் இருபுறமும் வெள்ளைத் திருமண்ணையும் நடுவில் குங்குமத்தையும் சாத்துதலாகிய வைணவர்தம் அடையாளமாகும். பெரியவர்கள் புறப்படும்போது அடுத்த நிலையில் உள்ளோர் கைகொடுத்து அழைத்துச் செல்லுதல் மரபு. இதனைச் சமயச் சார்பான மடங்களில் இன்றுங் காணலாம். மன்னர் என்றது ஐம்பத்தாறுதேயத்து மன்னர்களை. அருள்வழி

புகுதலாவது, இராமன் உத்தரவு பெற்றுப் புகுதல். கோபுர வாயிலில் மன்னர்கள் புகும்போதும் திரும்பிப் போகும்போதும் முடிதரையில் படுமாறு இராமனைத் திசைநோக்கி வணங்குவார்கள் ஆதலின், கோபுரவாயிலில் மன்னர்களின் மகுடகோடிகளைத் தேய்ப்பதாகக் கூறினர். கோடிக் கணக்கான மணிமகுடங்கள் இவ்வாறு தரையில் பட்டுப்பட்டுத் தேய்வதற்கு இடமான கோபுரவாயில் என்க. மகுடகோடி-மகுடவரிசை எனலும் ஆம். (70)

## இராமன் புறப்பாட்டில் வாத்திய ஒலிகள்

1040 மத்தள மிடக்கை பேரியொண் படகம்
வளையொலி கொம்பொலி காளம்
எத்திசை தோறு மூதொலி தாளத்
தெழுமொலி துடியொலி யெங்கும்
வித்தகர் பாடும் பாட்டொலி யாழின்
விளையொலி சச்சரி தாளம்
ஒத்தொலி யெல்லா மோரொலி யாகி
யுவாக்கடல் கிளர்ந்தென வோங்க.

**மத்தளம் இடக்கை பேரி ஒண் படகம் வளைஒலி கொம்புஒலி காளம் எத்திசை தோறும் ஊதுஒலி தாளத்து எழும் ஒலி துடி ஒலி எங்கும் வித்தகர் பாடும் பாட்டொலி யாழின் விளைஒலி சச்சரி தாளம் ஒத்தொலி எல்லாம் ஓரொலி யாகி உவாக்கடல் கிளர்ந்தென ஓங்க.**

பொ: மத்தளம், தம்பட்டை, பேரி, சிறந்த இரணபேரி சங்கு இவற்றின் ஒலியும் ஊதுகொம்பின் ஒலியும் திசைகள் தோறும் காளம் ஊதுகின்ற ஒலியும் தாளத்தால் எழுகின்ற ஒலியும் உடுக்கையடித்தலால் உளதாகும் ஒலியும் எவ்விடத்தும் இசைவல்லோர் பாடுகின்ற பாட்டுக்களின் ஒலியு , யாழில் எழுகின்ற ஒலியும், சச்சரிதாளம், ஒத்து இவற்றின் ஒலியும் எல்லாம் சேர்ந்து ஒரே ஒலியாகி நிறைமதி கண்ட கடல் ஒலி கிளர்ந்து எழுவது போல மிக்கு ஒலித்தன.

கு: இடக்கை-தம்பட்டை. படகம்-இரணபேரி. கொம்பு என்றது ஊதுகொம்பினை. காளம் என்பது சின்னம். எத்திசை-எல்லாத்திசை. திசைதோறும் காளம் ஊது ஒலி என இயையும். துடி-உடுக்கை. சச்சரிதாளம் என்றது பெரியதாளத்தை. ஒத்து என்றது, இசைப்பாடல்களுக்கு அடிப்படையாக அமைந்த ஓரொலி. இதனை ஒத்தூதுதல் என்பர். வேறுபட்ட பல ஒலிகள் ஒன்றுசேரும்போது வேறுபாடு தோன்றாமல் பேரொலி ஆகக் கேட்பது இயல்பு. உவாக் கடல் என்றது, பூரணச் சந்திரனைக் கடலை. முழுமதி நாளன்று கடல் பொங்கியெழுந்து பேரொலி செய்தல் இயல்பு. இராமனைக் கண்டவுடன் வாத்திய ஒலிகள் பல ஒலித்தமைக்கு உவமையாக முழுமதி கண்ட கடல் ஒலியைக் கூறியவாறு. (71)

## இராமன் தேரேறுதல்

1041 மங்கையர் வாழ்த்த மாகத ரேத்த
மறையவ ராசிகள் கூறப்
பொங்கிய கடலிற் புடைபரந்திரைத்துப்
பொன்னகர்ச் சனம்புடை சுற்றப்
பங்கமில் வீரன் பங்கயக் கண்ணாற்
பார்த்தபார்த் திடமெலாம் சனங்கள்
செங்கரங் கூப்பத் தேவர்க ளுவப்ப
வேறினான் செழுமணித் திண்டேர்.

**மங்கையர் வாழ்த்த, மாகதர் ஏத்த, மறையவர் ஆசிகள் கூறப்,**
**பொங்கிய கடலில் புடைபரந்து இரைத்துப் பொன்னகர்ச் சனம் புடை சுற்றப்**
**பங்கம்இல் வீரன் பங்கயக் கண்ணால் பார்த்த பார்த்த இடம் எலாம் சனங்கள்**
**செங்கரம் கூப்பத் தேவர்கள் உவப்ப, ஏறினான் செழுமணித் திண்தேர்.**

பொ: மங்கையர் எல்லாம் வாழ்த்தவும், இருந்து ஏத்துவோர் ஆகிய மாகதர்கள் துதிபாடவும், வேதியர்கள் ஆசிகள் சொல்லவும், [illegible] த்து வாழ்கின்ற

மக்கள் பொங்கிய கடலைப்போலப் பக்கமெலாம் பரவி ஆரவாரம் செய்துகொண்டு பக்கத்தே சுற்றிக் கொள்ளவும் குறைவிலாத வீரனாகிய இராமன் தன் தாமரை மலர்போன்ற கண்ணால் பார்த்த பார்த்த இடம் எல்லாம் சனங்கள் தம் சிவந்த கைகளைக் குவித்து வணங்கவும் தேவர்கள் மகிழவும், இராமன் செழுமையான மணிகளையுடைய திண்ணிய தேரில் ஏறினான்.

கு: மக்கள் திரள் கடலைப்போல இராமன் தேரைச் சுற்றிக் கொண்டது என்பார், 'பொங்கிய கடலிற் புடைபரந்திரைத்துப் பொன்னகர்ச்சனம்புடை சுற்ற' என்றார். வீரன் வாழ்த்த, ஏத்த, கூற, சுற்ற, கூப்ப, உவப்ப திண்டேர் ஏறினான் என்க. பார்த்த இடம் என்பது பார்த்திடம் என அகரம் தொகுத்தல் விகாரம் பெற்றது. பங்கம்-குறைவு. சனம், சனங்கள் என்பன வடமொழித் திரிபு. இராமன் பார்வை படுமிடங்களில் எல்லாம் மக்கள் அவனைக் கரம் கூப்பி வணங்கினார்கள் என்க. (72)

## சின்னங்களின் ஒலிப்பொருள்

1042 கம்புவைத் தரித்த கையிற்
காார்முகந் தரித்தான் வந்தான்
அம்புயக் கண்ணன் வந்தா
னன்பருக் கன்பன் வந்தான்
தம்பியர்க் கினியன் வந்தான்
றசரத ராமன் வந்தான்
உம்பருக் கமிழ்த முன்னா
ளுதவிய வொருவன் வந்தான்.

கம்புவைத் தரித்த கையில் கார்முகம் தரித்தான் வந்தான்!
அம்புயக் கண்ணன் வந்தான்! அன்பருக்கு அன்பன் வந்தான்!
தம்பியர்க்கு இனியன் வந்தான் தசரதராமன் வந்தான்!
உம்பருக்கு அமிழ்தம் முன்னாள் உதவிய ஒருவன் வந்தான்.

பொ: பாற்கடலில் சங்கினைத் தாங்கியிருந்த கையில் (இராமனாகப்பிறந்து) வில்லைத் தரித்தவன் வந்தான்! தாமரைக கண்ணன் வந்தான்! அன்பர்கட்கு அன்புசெய்கின்றவன் வந்தான்!

தம்பியர்க்கு இனியவன் வந்தான்! தசரதகுமாரன் வந்தான்! முன்னாளில் தேவர் கட்கு அமிழ்தம் கடைந்து உதவிய ஒப்பற்றவன் வந்தான்.

கு: கம்பு-சங்கு. திருமாலாயிருந்தபோது சங்கினை இடது கையில் தாங்கியிருந்தவன், இராமனாகப் பிறந்து அந்த இடது கையில் வில்லைத் தாங்கினவன் என்க. தரித்தல்-தாங்குதல். அன்பு செய்வோரிடத்து அன்பு செய்கின்றவன் என்றது, பக்தவத்சலன் என்றவாறு. தம்பியரிடத்து மாறுபட்டிருப்பதே உலகர் இயல்பு. ஆனால் இராமன் தம்பியர் யாவர்க்கும் இனியவனாகவே யிருந்தான் என அவன் பண்புச் சிறப்பைப் புலப்படுத்தியவாறு. பரசுராமனை விலக்க வேண்டித் தசரதராமன் என்று தந்தைபெயரோடு இணைத்துக்கூறியவாறு. உம்பருக்கு அமிழ்த முதவிய ஒருவன் என்றது, திருப்பாற்கடலைத் தானே முன்னின்று கடைந்து அமிழ்தம் தேவர்க்குக் கொடுத்த நிகழ்ச்சியை நினைப்பித்தவாறு. இப்போதும் அசுவமேதம் புரிந்து உலகிற்கு நன்மை பயக்கின்றான் என்பது குறிப்பு. கார்முகந் தரித்தான், அம்புபக்கண்ணன், அன்பருக்கன்பன், தம்பியர்க்கினியன், தசரதராமன், ஒருவன் என்பன இராமன் என்ற ஒரு பொருள்மேல் வந்த பெயர்கள் வந்தான் வந்தான் எனத் தனித் தனியே வினைகொண்டன. (73)

## இராமனது வரலாறு

1043 மனுகுலம் விளங்கத் தோன்றி
வரிசிலை யினையோ னேடும்
முனியுடன் போனான் வந்தான்
முப்புர மெரித்த வில்லி
தனுவினை யிறுத்துச் சீதை
தனைக்கரம் பிடித்தான் வந்தான்
அனையவ ளுடனே மீண்டும்
அணிநக ரடைந்தான் வந்தான்.

மனுகுலம் விளங்கத் தோன்றி வரிசிலை இளையோனேடும்
முனியுடன் போனுன் வந்தான் முப்புரம் எரித்த வில்லி
தனுவினை இறுத்துச் சீதைதனைக் கரம்பிடித்தான் வந்தான்
அனையவள் உடனே மீண்டும் அணிநகர் அடைந்தான் வந்தான்.

பொ: மனுவின்குலம் விளக்கம் பெறுமாறுபிறந்து கட்டமைந்த வில்லையேந்திய இளையவன் இலக்குவனேடும் கோசிக முனிவனேடும் போனவன் வந்தான்! முப்புரங்களையும் தன் சிரிப்பினுல் எரியச் செய்த சிவபிரானது வில்லினை முரித்துவிட்டுச் சீதையை மணந்தவன் வந்தான்! அந்தச் சீதையுடனே மீண்டும் அழகிய அயோத்தி நகரினை அடைந்தவன் வந்தான்.

கு: இராமன் தோற்றத்தால் மனுவின் குலம் மேலும் விளக்கம் பெற்றது என்பது புலப்படுத்தியவாறு. வரிசிலை இளைஞன் என்றது, இலக்குவனை. முனி என்றது, கோசிக முனிவரை. வில்லி என்றது சிவன் என்ற பெயரளவாய் நின்றது. தனு-வில். சீதையை மணக்க இராமன் வளைத்து முறித்த வில் முற்காலத்து சிவன் கையிலிருந்த வில் என்பது பாலகாண்டத்துப் பரசுராமப் படலத்துக் கூறப்பட்டது. கரம்பிடித்தல் என்பது திருமணத்தினையுணர்த்தியது. மணம் கொண்ட சீதையுடன் அயோத்திக்கு வந்த செய்தியை யீற்றடி விளக்குகின்றது. இத்துணையும் பாலகாண்ட நிகழ்ச்சி கூறியவாறு. (74

---

74-அ. இச்செய்யுளுக்குப் பதிலாக 44 என்ற எண்ணுள்ள ஏட்டில் பின்வரும் பாடல் காணப்படுகின்றது.

வடம்புரி முந்நூல் மார்பன் மறைமுனி யுடனே கூடி
நடந்துபோய் மிதிலைபுக்கு நற்சிலை யிறுத்தான் வந்தான்
மடந்தையை மணமுஞ் செய்து மாடநீளயோத்தி மேவும்
தடம்பொரு சிலையான் வந்தான் தசரத ராமன் வந்தான்

1044 தாயுரை தலைமேற் கொண்டு
　　　　தையலை யுடனே கொண்டு
　　தீயவெங் கானஞ்சேர்ந்த செருவலி
　　　　வில்லி வந்தான்
　　தூயமா முனிவர் முன்னே
　　　　தோன்றிய தூயோன் வந்தான்
　　மாயமா ரீசன் மாள வரிசிலை
　　　　வளைத்தோன் வந்தான்.

தாயுரை தலைமேல் கொண்டு தையலை உடனே கொண்டு
தீயவெங்கானம் சேர்ந்த செருவலி வில்லி வந்தான்!
தூயமா முனிவர் முன்னே தோன்றிய தூயோன் வந்தான்!
மாயமாரீசன் மாள வரிசிலை வளைத்தோன் வந்தான்.

பொ: தாயாகிய கைகேயியின் சொல்லைத் தலைமேற் கொண்டு சீதையை உடன் கொண்டு கொடிய வெப்பமுடைய கானகத்தை அடைந்த போர்செய்யு வலிமை மிக்க வில்லையுடையவன் வந்தான் தூய்மையுடைய தண்டகவனத்து முனிவர்கட்கு முன்னே சென்று காட்சியளித்த தூயவன் வந்தான்! மாயம் செய்ய வல்ல மாரீசன் மாளும்படி கட்டமைந்த வில்லை வளைத்தவன் வந்தான்.

கு: தலைமேற் கொள்ளுதலாவது, மறுப்புக்கூறாது உடன்பட்டுப் போதல். செருவலி-போர் செய்யும் வலிமை. வில்லி-வில்லையுடையவன். கானம் புலி முதலிய விலங்குகளை யுடைமையாலும் முள்ளுங் கல்லும் உடைமையாலும் தீயகானமாயிற்று. அடிதாங்கு மளவன்றியனலன்ன வெம்மையுடைமையால் வெங்கானம் ஆயிற்று. கானம் சேர்ந்த செருவலி வில்லி என்பது வரையில் அயோத்தியா காண்டத்து நிகழ்ச்சி கூறியவாறு. முனிவர் முன்னே தோன்றியதும் மாரீசன் மாளச் செய்தலும் ஆரணிய காண்டத்து நிகழ்ச்சி.

(75)

1045 அனுமனை யடிமைகொண்டாங்
காயிரங் கதிரோன் மைந்தற்
கினியனாய் வாலி மாள
வெரிசாந் துரந்தான் வந்தான்
நினைவதன் முன்ன மாழி
நீரெலா நெருப்ப தாகக்
குனிசிலை வளைத்தான் வந்தான்
கோசல நாடன் வந்தான்.

அனுமனை அடிமை கொண்டு ஆங்கு ஆயிரம் கதிரோன் மைந்தற்கு
இனியனாய் வாலிமாள எரிசரம் துரந்தான் வந்தான்!
நினைவதன் முன்னம் ஆழி நீர்எலாம் நெருப்பது ஆகக்
குனிசிலை வளைத்தான் வந்தான்! கோசல நாடன் வந்தான்!

பொ: அனுமனைத்தனக்கு அடிமையாகக் கொண்டு அங்கு சூரியன் மகனாகிய சுக்கிரீவனுக்கு இனிய நண்பனும் வாலி மாளுமாறு எரிகின்ற அம்பினை விடுத்தவன் வந்தான்! நினைப்பதற்கு முன்பு கடல்நீரெலாம் நெருப்பாக வெதும்புமாறு வில்லை வளைத்தவனாகிய இராமன் வந்தான்! கோசலநாட்டிற்குரியவன் வந்தான்!

கு: ஆயிரங்கதிரோன் என்றது சூரியனை. இனியனாய் என்றது, நட்புடையவனாய் என்னும் பொருளது. இச் செய்யுளில் முதலிரண்டடிகளில் கிட்கிந்தா காண்ட நிகழ்ச்சியும் பின் இரண்டடிகளில் யுத்தகாண்ட நிகழ்ச்சியும் கூறப்பட்டன. குனிசிலை என்புழி குனி என்பது இயற்கையடை. முதலுக்கேற்ற அடையெனினும் ஒக்கும். வளைத்தான் எனப் பின்வருவது நினைக. (76)

1046 குன்றினா லாழி கட்டிக்
கொடுந்திறற் சேனை யோடும்
சென்றிராக் கதரை யெல்லாஞ்
செருக்களத் தவிய நூறித்

தன்றிற லழிந்து நின்ற
தசமுகன் தனிமை கண்டங்
கின்றுபோய் நாளை வா வென்
றியம்பிய விறைவன் வந்தான்.

குன்றினுல் ஆழிகட்டிக் கொடுந்திறல் சேனையோடும்
சென்று இராக்கதரை யெல்லாம் செருக்களத்து அவிய நூறி,
தன்திறல் அழிந்து நின்ற தசமுகன் தனிமை கண்டு அங்கு
இன்றுபோய் நாளைவா என்று இயம்பிய இறைவன் வந்தான்.

பொ: மலைகளைக் கொண்டு கடலில் அணையைக் கட்டிக் கொடுமையான திறமையையுடைய வானர சேனையோடும் அந்த அணைவழியே சென்று அரக்கரை எல்லாம் போர்க்களத்தில் இறந்துபடுமாறு அழித்துப் பின்பு தன்திறமையெல்லாம் அழிந்து சோர்ந்து நின்ற இராவணனது தனிமையைப் பார்த்து அவ்விடத்து 'இன்றுபோய் நாளைவா' என்று கருணையால் சொன்ன கடவுள் தன்மையுடையவன் வந்தான்.

கு: ஆழி-கடல். ஆழி கட்டி என்றது கடலைக் கடக்கச் சேதுபந்தனம் என்னும் அணையைக் கட்டி என்றவாறு. சேனை என்றது வானரசேனையை. செருக்களம் - போர்க்களம். அவிய-இறந்துபட. நூறி-அழித்து. தசமுகன்- பத்துமுகங்களையுடைய இராவணன். போர் செய்தற்குரிய கருவிகளின்றித் தனித்து நிற்கும் தனிமை நிலை கண்டு இரங்கி 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என்று கூறிய நிகழ்ச்சி இராமனது பெருங்கருணையைப் புலப்படுத்துதலின் அதனை இங்கு வீதந்து கூறியவாறு. "ஆளை யாவுனக்கமைந்தன மாருதம் அறைந்த பூளையாயின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு நாளைவா வென நல்கினன் கோசல நாடுடை வள்ளல்" (யுத்த. முதற்போர். 256) என்றது நினைக. தன்மனையாளைக் கவர்ந்த இராவணனது தனிமை கண்டவுடன் கொல்லுதலே இயல்பாகவும், அங்ஙனம் செய்யாது போரறம் நினைந்து - தன் வலிமையின் பெருமை நினைந்து இரக்கமிக்கு இங்ஙனம் சொன்னது கடவுட்டன்மையே என்பது புலப்படுத்த, 'இயம்பிய இறைவன்' என்றார். இறைவன்-கடவுள்.

1047 முன்னர்நாஞ் சொன்ன நாளின்
முடுகிநாஞ் செல்லோ மாயின்
வன்னியிற் பரதன் வீழு
மென்றுதன் மனத்தி லெண்ணி
அன்னவ னெரிவி ழாம
லநுமனை முன்னே யேவிப்
பொன்னக ரடைந்தான் வந்தான்
புவனமூன் றுடையான் வந்தான்.

'முன்னர்நாம் சொன்னநாளில் முடுகிநாம் செல்லோம் ஆயின்
வன்னியில் பரதன் வீழும், என்றுதன் மனத்தில் எண்ணி,
அன்னவன் எரிவிழாமல் அநுமனை முன்னே ஏவிப்,
பொன்நகர் அடைந்தான் வந்தான் புவனமூன்று உடையான் வந்தான்.

பொ: "நாம் முன்னே சொன்ன நாளில் விரைந்து செல்லா திருப்போமாயின் பரதன் நெருப்பில் விழுவான்" என்று தன் மனத்தில் எண்ணி அப்பரதன் எரியில் விழாமல் இருக்க வேண்டி முன்னே அநுமனை விரைந்து செல்ல ஏவிவிட்டுப் பின்பு (புட்பக விமானத்தில் ஏறிக்கொண்டு) அயோத்தியென்னும் பொன்னகரை அடைந்தவன் வந்தான்! புவனமூன்றையும் தனக்கு உரிமை யிடமாக உடையவன் வந்தான்.

கு: சொன்ன நாள் என்றது பதினான்கு ஆண்டு கழிந்த மறுநாளினை. வன்னி-நெருப்பு. பரதன் இராமனை முடிசூட வருக என அழைத்தபோது இராமன் உடன்படாமல் 'தாய் கூறிய பதினான்காண்டு வனத்திற்கழித்தவுடன் வருவேன்' என்று வாக்கு அளித்தான் ஆதலின் இங்கு அதனை நினைப்பித்தவாறு. பதினான் காண்டு கழிந்தும் இராமன் வரவில்லையாயின் தீயில் வீழ்ந்து இறந்து படுவதாகப் பரதன் சூளுரைத்துள்ளான் என்பது அயோத்தியா காண்டத்துக் கண்ட நிகழ்ச்சியாகும். இராவணனை வென்றவுடன் பதினான்கு ஆண்டுகள் நிறைந்தபடியால் அன்றே சேனையோடு அயோத்தியடைதல் அரிதாகலின் காற்றினும் கடிது செல்கின்ற அனுமனை அனுப்பித் தன் வரவினை முன்பு

அறிவிக்கச் செய்தான் இராமன். சொன்ன சொல் தவறாத நிலை இதனால் விளங்குதலின் இதனைச் சிறப்பு நிகழ்ச்சியாகக் குறிப்பிட்டவாறு. தெய்வ நிலையில் மூன்றுலகங் கட்கும் உரிமையுடையவன் இராமன் ஆதலின், 'புவன மூன்றுடையான்' என அவனைக் குறிப்பிட்டவாறு. (78)

1048 என்று சின் னங்க டம்மி
 லிசைந்துடன் மாறி யூதத்
தன் றுணை யிலாத வென்றித்
 தசரத ராமன் றேர்மேல்
பொன்றிகழ் மாட வீதி
 புகுந்தன னென்னக் கேட்ட
வென்றிவேற் கண்ணி னார்க
 டந்திறம் விளம்ப லுற்றேன்.

என்று சின்னங்கள் தம்மில் இசைந்துடன் மாறி ஊதத்
தன்துணை இலாத வென்றித் தசரத ராமன் தேர்மேல்
பொன்திகழ் மாடவீதி புகுந்தனன் என்னக் கேட்ட
வென்றிவேல் கண்ணினார்கள் தம்திறம் விளம்பல் உற்றேன்.

பொ: என்று பொருள்படும்படி சின்னங்கள் தம்முள் உடன் இயைந்து மாறி மாறி ஊதாநிற்க, தனக்கு நிகரில்லாத வெற்றியினையுடைய தசரதராமன் தேர்மேல் ஏறிக்கொண்டு பொன்னால் இழைத்த மாடங்களையுடைய வீதியில் புகுந்து விட்டான் என்று கேள்விப்பட்ட வெற்றியுடைய வேலைப்போன்ற கண்ணினையுடைய பெண்டிர் திறத்தைச் சொல்லத் தொடங்குகின்றேன்.

கு: சின்னங்கள் என்பன ஊதுகருவிகள். இவை அரசன் வெற்றியைப் புலப்படுத்தும் வகையில் ஊதப்படும். வெற்றியில் இராமனுக்கு நிகர் வேறு யாரும் இல்லை என்பார், 'தன் துணையிலாத வென்றித்தசரத இராமன்' என்றார். மாடங்கள் எல்லாம் பொன் கொண்டிழைத்தன என்பார், 'பொன்திகழ் மாடவீதி' என்றார். மாடங்கள் நிறைந்த வீதி என்றவாறு, ஆடவரினும் பெண்டிரே கோலம் கண்டு மகிழ்வதில் தனிச்

சிறப்புடையவர் ஆதலின் அவர்திறம் விளம்புகின்றார் என்க இராமன் எழிலைக் காண வருகின்றவர்கள் ஆதலின் காண்டற் கேற்ற கண்ணினுற் சிறப்பித்தும், 'வென்றிவேற் கண்ணினார்கள்' என்றார். விளம்பல் உற்றேன் என்றது, இறந்த காலமாயினும் நிகழ்காலமாகப் பொருள் செய்வது காலவழுவமைதியாகும். (79)

## இராமன் வரவுணர்ந்த பெண்டிர்நிலை

1049 இந்திர சாலமொக்கு மிடையினு
பெய்தப் பெற்றோர்க்
கிந்திர போகமொக்கு மெழின்முலைத்
தடந்தே ரல்குல்
இந்திர கோப மொக்கு
மிதழினு ரெதிர்ப் பட்டோருக்
கிந்திர சாப மொக்கு
மிருகுழை யெறியுங் கண்ணார்.

இந்திர சாலம் ஒக்கும் இடையினர் எய்தப் பெற்றோர்க்கு
இந்திர போகம் ஒக்கும் எழில் முலைத் தடந்தேர் அல்குல்
இந்திர கோபம் ஒக்கும் இதழினர் எதிர்ப்பட்டோருக்கு
இந்திர சாபம் ஒக்கும் இருகுழை எறியும் கண்ணர்.

பொ: இந்திரசாலம் போன்று பொய்யோ என ஐயுறுதற்குரிய இடையினையுடையவர்கள் - தம்மை அடையப் பெற்ற ஆடவர்க்கு இந்திரபோகம் போன்ற பெரும் போகத்தைத் தருகின்ற அழகிய முலைகளையும் பெரிய தேர் போன்ற அல்குலையுமுடையவர்கள்- தம்பலப் பூச்சி போன்ற வாயிதழையுடையவர்கள்- எதிர்ப்பட்டவர்கட்கு இந்திரவில் போன்று தோன்றும் இருகுழைகளையும் தாக்கும் கண்ணினையுடையவர்கள்.

கு: குளகம். மங்கையர் மறுகின் மொய்த்தார் என வருஞ்செய்யுளில் முடியும். மேலுள்ள நகில்களைத் தாங்குதற்கு உரிய இடையில்லாதிருப்பது இந்திரசாலம் இல்லாதது உளது போலத் தோன்றுதலின் இந்திரசாலம் ஒக்கும் இடையினர் என்றார். இடையின் நுண்மையை ... நவிற்சியாகக்

கூறியவாறு. எய்தப் பெற்றேர் என்றது ஆடவரை. மங்கையரின் கொங்கைகளாலும் பேரல்குலாலும் ஆடவர் பெறும் இன்பம் இந்திரபோகத்தையொத்தது என்றவாறு. இந்திரகோபம்-தம்பலப்பூச்சி. இது கார்காலத்தில் தோன்றித் தரையில் ஊர்ந்து செல்லும் செந்நிறப் பூச்சி. ஈயல் மூதாய் எனவும் சொல்லப்படும். புருவத்தோடு கூடி விளங்கும் கண்ணின் தோற்றம் இந்திரவில் போன்றது என்றவாறு. இந்திரசாபம் ஒக்கும் கண் என இயையும் காதளவோடும் கண்ணுதலின் 'இருகுழையெறியுங் கண்ணர் என்ருர். குழை-காதணி. கண்ணின் பார்வை அருகில் காதில் உள்ள காதணியை மோதவல்லது என்றவாறு. (80)

1050 இந்திர சாபமொக்கும் புருவத்தாரிருண்டு நெய்த்த
இந்திர நீலமொக்குங் குழலினுரெழுதவொண்ணு
இந்திர வடிவை யொக்கும் வடிவினு ரெதிரி லாற்றல்
இந்திர திருவற்காண வெழுந்தபே ருவகை மிக்கார்.

இந்திர சாபம் ஒக்கும் புருவத்தார், இருண்டு மொய்த்த
இந்திர நீலம் ஒக்கும் குழலினுர்; எழுதஒண்ணு
இந்திர வடிவை ஒக்கும் வடிவினுர், எதிரில் ஆற்றல்
இந்திர திருவற்காண எழுந்த பேர் உவகை மிக்கார்.

பொ: வானவில்லை ஒக்கும் வளைந்த புருவத்தையுடையவர்களும், இருண்டு நெய்ப்புடைய இந்திர நீலமணியை ஒக்கும் கூந்தலையுடையவர்களும், ஓவியத்திலும் எழுத ஒண்ணுத திருமகள் வடிவினையுடையவர்களும் எதிர்ப்பார் இல்லாத பேராற்றலையுடைய இந்திரனைப் போன்ற செல்வத்தையுடைய இராமனைக் காண உள்ளத்தே எழுந்த மகிழ்ச்சி மிக்கவர் ஆனுர்.

கு: இந்திரசாபம்-வானவில். இந்திர நீலம் என்பது நவமணிகளுள் ஒன்று. இருண்டு இருத்தலோடு நெய்ப்புத் தன்மையும் வாய்ந்த இந்திர நீலமணி இல்லையாதலின் கூந்தலுக்கு

உவமையாகல் வேண்டி இல்பொருள் உவமையாகக் கூறியவாறு. குழல்-கூந்தல். இந்திரை-திருமகள். எதுகை நோக்கி இந்திரவடிவு என வந்தது. இந்திர திருவன் என்றது இராமனை. இந்திரனைப் போன்ற பெருஞ் செல்வமுடையவன் என்க. இந்திரன் சங்க நிதி, பதும நிதி, காமதேனு, கற்பகமரம், சிந்தாமணி போன்ற செல்வங்களை விண்ணுலகில் பெற்றுள்ளான். மண்ணுலகில் அவனைப் போலச் செல்வம் படைத்தவன் இராமன் என்றவாறு. (81)

## மாதர் மறுகில் மொய்த்தல்

1051 சிலம்புகள் சிலம்பச் செம்பொற்
சீறடி சிவப்பக் காஞ்சி
குலைந்திட மருங்கு னோவக்
குவிமுலை யசையக் கூந்தல்
அலைந்திட வலம்பு சோதி
யணிகளோ டணிக டம்மில்
மலைந்திட வருந்தி யோடி
மங்கையர் மறுகின் மொய்த்தார்.

**சிலம்புகள் சிலம்பச் செம்பொன் சீறடி சிவப்பக் காஞ்சி
குலைந்திட மருங்குல்நோவக் குவிமுலை அசையக் கூந்தல்
அலைந்திட அலம்பு சோதி அணிகளோடு அணிகள் தம்மில்
மலைந்திட வருந்தி ஓடி மங்கையர் மறுகின் மொய்த்தார்.**

பொ: சிலம்புகள் ஒலிக்கவும். சிவந்த அழகிய சிறிய பாதங்கள் சிவக்கவும் இடையில்அணிந்த காஞ்சி என்னும் அணி நிலைகுலைய வும் இடை வருந்தவும் குவிந்த முலைகள் அசையவும் கூந்தல் அலையவும் அசைகின்ற ஒளியுடைய ஆபரணங்களோடு ஆபரணங் கள் தம்மில் மோதிக் கொள்ளவும் முயன்று ஓடிச் சென்று மங்கையர்கள் இராமன் வரப்போகும் தெருவில் மொய்த்துக் கொண்டார்கள்.

கு: சிலம்புதல்-ஒந்தல். பொன்-அழகு; பொன் நிறமுடைய எனலும் ஆம். காஞ்சி என்பது பெண்டிர் இடையில் துகிற் புறத்து அணிகின்ற எண்கோவைமணி. மங்கையர் சிலம்ப, சிவப்ப, குலைந்திட, நோவ, அசைய, அலைந்திட, மலைந்திட, வருந்தி ஓடி மொய்த்தார் என வினைமுடிவு செய்க. ஓடுதலாகிய தொழிலின் கண் நிகழும் பலவகைத் தன்மைகளையும் எடுத்துக் கூறினமையின் இச்செய்யுள் தொழிற்றன்மையணி என்க. தம் இயல்புக்கு ஒவ்வாத வேகத்தில் ஓடினார்கள் என்பார், வருந்தி ஓடி என்றார். வருந்துதல் இங்கு முயலுதலையுணர்த்தியது. மறுகு-தெரு. இராமனழகினைக் காணும் ஆர்வம் ஏனைப் பருவத்து மாதரினும் மங்கைப் பருவத்தார்க்கே மிக்கிருப்பது இயல்பாகலின் அவர்களையே சிறப்பாகக் கூறினர். மொய்த்தல் என்பது தேனின்கண் ஈக்கள் மொய்த்தல்போல நெருங்கி நிற்றல். (82)

## மகளிர் இராமனைக் காணுதல்

1052 பேதைய ராதியாகப் பேரிளம் பெண்ணீ ருக
மாதர்கண் மாடந்தோறும் வாயில்க டோறு
மாட
வீதிக டோறும் வீதிவேதிகை தோறும் விம்மிக்
காதலா னதுமிக் கோங்கக் கண்ணனைத்
தெரியக் கண்டார்.

**பேதையர் ஆதி ஆக, பேரிளம் பெண் ஈருக**
**மாதர்கள் மாடந் தோறும் வாயில்கள் தோறும் மாட**
**வீதிகள் தோறும் வீதிவேதிகை தோறும் விம்மிக்**
**காதலானது மிக்கு ஓங்கக் கண்ணனைத் தெரியக் கண்டார்.**

பொ: பேதைப் பருவத்தார் முதலாகப் பேரிளம் பெண்டிர் ஈருக உள்ள எழுபருவத்து மாதர்களும் மாடங்கள் தோறும் வாயில்கள் தோறும் மடங்களையுடைய வீதிகள் தோறும் வீதியைச் சார்ந்துள்ள திண்ணைகள் தோறும் உளம்பூரித்துக் காதல் மிகப்பெருக இராமனைக் கண்களால்தெரியக் கண்டார்கள்.

கு: பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்பன பெண்டிரின் ஏழு பருவங்களாகும். எழுபருவ மாதரும் இராமனைக் காணும் காதலால் கிடைத்த கிடைத்தஇடங்களில் நின்று கண்டார்கள் என்பார், மாடந்தோறும் வாயில்கள் தோறும் வீதிகள் தோறும் வேதிகை தோறும் விம்மிநின்று தெரியக் கண்டார் என்றார். தோறும் என்னும்- இடைச்சொல் தன்னை ஏற்ற பெயர்ப்பொருளைப் பன்மையாக்கும் இயல்பினது. எனவே பல மாடங்களிலும் பலவாயில்களிலும் பலவீதிகளிலும் பலவேதிகைகளிலும் நின்று கண்டார்கள் என்பது பெறப்படும். மகளிர் கூட்டம் பெரிதாகலின் அவர்கள் நிற்கும் இடங்களும் பற்பலவாயின. விம்முதல் - உளம் பூரித்தல். கண்ணன் என்றது இங்கு இராமனை. தெரியக் காணுதல் என்பது நன்கு விளங்கக் கண்டார்கள் என்ற கருத்தினது. அகக் கண்ணால் காண வேண்டியவனைப் புறக் கண்ணினும் கண்டார்கள் என்றவாறு. மாதர்களின் ஆசை மிகுதியைப் புலப்படுத்த வேண்டிக் 'காதலானது மிக்கோங்க' என்றார். (83)

## மாதர் பேச்சு

1053 வண்ணமா முகிலோ மையோ
மரகத வடிவோ வள்ளல்
ஒண்ணிற மிவையொன்றாக வுருக்கிய
வுருவோ வென்பார்
கண்ணிணை செவ்வாய் பாதங்
கைத்தலங் கமல மென்பார்
புண்ணியஞ் செய்தா ரிந்தப்
புறக்கொடை தொழுவா ரென்பார்,

வண்ண மாமுகிலோ மையோ மரகத வடிவோ வள்ளல்
ஒண்நிறம்? இவை ஒன்றாக உருக்கியஉருவோ? என்பார்;
கண்இணை செவ்வாய் பாதம் கைத்தலம் கமலம் என்பார்;
புண்ணியம் செய்தார் இந்தப் புறக்கொடை தொழுவார் என்பா .

பொ: வள்ளலாகிய இராமனுடைய ஒளிவாய்ந்த நிறம் அழகிய கரிய மேகமோ? அல்லது மைதானோ? அல்லது மரகத மணியின் வடிவமோ? அல்லது இம்மூன்றையும் ஒன்றாகச் சேர்த்து உருக்கிய உருவமோ? என்று சொல்வார்கள். அவன் இருகண்களும் சிவந்த வாயும் பாதங்களும் கைகளும் தாமரை மலர்கள் என்று சொல்வார்கள். இந்தமுது கைத்தொழுபவர்கள் புண்ணியம் செய்தவராவர் என்று சொல்வார்கள்.

கு: இராமனது நிறத்தையும் கண்வாய் பாதம் கை என்ற உறுப்புக்களையும் புறமுதுகினையும் பார்த்து மகிழ்ந்தவர்கள் சொல்லியவற்றை இங்குத் தொகுத்துக் கூறியவாறு. வண்ணம்—அழகு. மா-கருமை. "மையோ மரகதமோ மறிகடலோ மழை முகிலோ, ஐயோவிவன் வடிவென்பதோரழியா வழகுடையான்" (அயோத்தியா-கங்கைப்.1) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். வள்ளல் என்றது இராமனை. இராமனது கண்ணும் வாயும் பாதமும் கையும் சிவந்திருத்தலின் தாமரை மலர் போன்றன என்பார், "கண்ணிணை செவ்வாய் பாதம் கைத்தலம் கமலம் என்பார்" என்றார்.

"கண்ணும், திருவடியும் கையும் திருவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே"
(சிலப் - ஆய்ச்சியர் குரவை)

என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். புறக் கொடை என்றது முதுகினை. பகைவரும் பார்த்தற்கு அரிய முதுகினைப் பார்ப்பது புண்ணியப் பயனே என்பார், 'புண்ணியம் செய்தார் இந்தப் புறக்கொடை தொழுவார்' என்றார். "அழிகுநர் புறக்கொடை அயில்வாளோச்சா கழிதறுகண்மை" என்பது புறப்பொருள் வெண்பாமாலைக்கொளு (வஞ்சித்திணை-55). இதனால் இராமனது பின்னழகைப் பார்த்து மக்கள் தொழுதனர் என்பது புலப்படும். (84)

1054 கள்ளவெம் மனக்கைகேசி கண்களா
லிவனைக் கண்டும்
முள்ளழற் கானம் போக
முயல்வதே முன்னா ளென்பார்
ஒள்ளழற் றூய கற்பா
லுயர்ந்தகோ சலையென் பாளிப்
பிள்ளையைப் பெறுதற் கென்ன
பெருந்தவஞ் செய்தா ளென்பார்.

'கள்ள வெம்மனக் கைகேசி கண்களால் இவனைக் கண்டும்
முள் அழல் கானம்போக முயல்வதே முன்நாள்' என்பார்;
ஒள் அழல் தூய கற்பால் உயர்ந்த கோசலை என்பாள் இப்
பிள்ளையைப் பெறுதற்கு என்ன பெருந்தவம் செய்தாள் என்பார்.

பொ: கள்ளமும் கொடுமையும் நிறைந்த மனத்தையுடைய கைகேசி என்பவள், இப்பேரழகுடைய இராமனைத் தன் கண்களால் கண்டும் முட்களையுடையதாய் அழல் போல் காய்கின்ற காட்டிற்குப் போக்க முயல்வதா! என்று கழிந்ததற்கிரங்குவார்கள். ஒள்ளிய நெருப்பு போன்ற தூய்மையான கற்பினால் உயர்ந்த கோசலை என்பவள் இந்த இராமனாகிய பிள்ளையைப் பெறுதற்கு என்ன பெரியதவத்தைச் செய்தாளோ! என்று சொல்லுவார்கள்.

கு: தாயர் இருவர்க்கும் பழியும் புகழும் புலப்பட இராமனைச் சிறப்பித்தவாறு. கைகேசி இராமனை வளர்த்த தாய். கூனியின் சொல்லால் கள்ள வெம்மனத்தாயினாள். என்ன கொடுமையிருந்தாலும் இராமனைக் கண்களால் கண்டும் அருள் உள்ளம் தோன்றாமல் அவனை முள்ளும் வெப்பமும் நிறைந்த காட்டிற்கு அனுப்ப எப்படி மனம் வந்தது என்ற குறிப்பால் "முள்ளழற் கானம் போக முயல்வதே முன்னாள்" என்று சொல்லுவாராயினர். போகச் செய்ய என ஒருசொல்வருவிக்க. அந்த முயற்சி தோன்றவே இயலாது என்பது கருத்து. இதனால் இராமனது பேரழகைக் கண்டவர்கள் கொடுமைநீங்கி அருளுடையராவர் என்றவாறு. ஒள்ளழல் தூய கற்பு என்றது நெருப்புப் போன்ற தூய கற்பு என்றவாறு. நெருப்பை யாரும் நெருங்க [illegible]தவாறு போலப்

பிறர் நெருங்க வியலாத தூய கற்பினள் கோசலை என்றவாறு. கோசலையின் உயர்வுக்குக் காரணம் கூறுவாராய்த் "தூய கற்பாலுயர்ந்த கோசலை" என்றார், இராமனைப் பெறுதற்கு அத்தகைய தூய கற்பும் காரணமே எனினும் அதனோடு முன்னர்ப் பெருந்தவமும் செய்திராவிட்டால் இராமனுக்குத் தாயாகும் பாக்கியம் கிடைக்காது என்பார் 'என்ன பெருந்தவம் செய்தாள்' என்பார் ஆயினர். (85)

1955 சிறந்தசீர் முகமுங் கண்ணும்
புருவமுஞ் செய்ய வாயும்
நிறைந்தபூண் மார்பு மெங்க
ணெஞ்சுவிட் டகலா தென்பார்.
அறம்புரி மனத்த ளாகி
யருந்தவஞ் செய்து பெண்ணாய்ப்
பிறந்துவந்தி வனைப் பெற்றும்
பெற்றிலள் சீதை யென்பார்.

'சிறந்தசீர் முகமும் கண்ணும் புருவமும் செய்ய வாயும் நிறைந்த பூண்மார்பும் எங்கள் நெஞ்சுவிட்டு அகலாது' என்பார்; 'அறம்புரி மனத்தள் ஆகி அருந்தவம் செய்து பெண்ணாய்ப் பிறந்துவந்து இவனைப் பெற்றும் பெற்றிலள் சீதை' என்பார்.

பொ: 'மிகப் பெருஞ்சிறப்புடைய முகமும் அம்முகத்தில் அமைந்த கண்ணும் புருவமும் சிவந்த வாயும் நிறைந்த அணி கலன்களையணிந்துள்ள மார்பும் எங்கள் நெஞ்சினை விட்டு எஞ் ஞான்றும் அகலாது' என்று மகளிர் சிலர் சொல்லுவார்கள். இன்னும் சிலர், தருமத்தை விரும்பும் மனத்தையுடையளாகி அரிய தவத்தைச் செய்து பூமியில் பெண்ணாய்ப் பிறந்து வந்து இவ்விராமனைக் கணவனாகப் பெற்றிருந்தும் இறுதிவரை உடன் வாழும்பேறு பெற்றாளில்லையே சீதை என்று சொல்லுவார்கள்.

வி: இராமனுடைய முகம் முதலிய அழகுறுப்புகளில் ஈடு பாடு கொண்ட மகளிர், 'முகமும் கண்ணும் புருவமும் செய்ய வாயும் நிறைந்த பூண் மார்பும் எங்கள் நெஞ்சு விட்டகலாது'

என்கின்றனர். ஒருமுறை பார்த்த அளவிலே இராமன் முகம் முதலியன பார்ப்பவர் நெஞ்சில் பதிந்துவிடும் என்பது விளக்கிய வாறு. அறம் என்றது இல்லறத்தை. பூமியில் பெண்ணுகப் பிறத்தல் அரிது. அதற்கு மேலும் அறம்புரி மனத்தளாகிப் பிறத்தல் அரிது. இராமன் மனைவியாக வேண்டித் தவஞ்செய்து பெண்ணுய்ப் பிறந்து வைத்தும் இறுதிவரையில் இராமனேடு வாழ்க்கை நடத்த இயலாமல் இடையில் பூமியில் மறைந்து விட்டாள் என்பது குறிப்பால் புலப்படுத்தியவாறு. (86)

1056 பங்கயக் கண்ணுல் பற்றிப்
பார்த்தன னம்மை யென்பார்
அங்கவை பொதுநோக் காகு
மவனியில் வந்து தோன்றும்
செங்கயற் கருங்கட் செவ்வாய்ச்
சீதையைப் பார்த்த கண்ணுல்
நங்களைப் பார்க்கு மோதான்
ஞாலநா யகனின் றென்பார்.

பங்கயக் கண்ணுல் பற்றிப் பார்த்தனன் நம்மை என்பார்;
அங்கு அவை பொது நோக்கு ஆகும்; அவனியில் வந்து தோன்றும்
செங்கயல் கருங்கண் செவ்வாய்ச் சீதையைப் பார்த்த கண்ணுல்
நங்களைப் பார்க்குமோதான் ஞாலநாயகன் இன்று என்பார்.

பொ: 'தாமரை மலர் போன்ற கண்களால் நம்மை ஊன்றிப் பார்த்தனன்' என்று சிலர் சொல்கின்ருர்கள். அவர் சொல்லைக் கேட்ட சிலர், அங்கு அவன் பார்த்த பார்வை பொதுநோக்கு ஆகும்; பூமியில் வந்து தோன்றிய செங்கயல்போன்ற கரிய கண்ணினையும் சிவந்த வாயினையுமுடைய சீதையைப் பார்த்த கண்ணுல் பூமிக்குத் தலைவனுகிய இராமன் இன்று நம்மைப் பார்க்குமோதான்! என்பார்கள்.

கு: பற்றிப் பார்த்தல் என்டது ஊன்றி நோக்குதலை யுணர்த்தியது. சிறப்புப் பார்வையால் நம்மைப் பார்த்தான்

என்று மகிழ்ச்சியோடு சிலர் சொல்ல, அச்சொல்லைக் கேட்டவர்கள் அச் சொல்லை உடன்படாதவராய் அவன் பார்வை பொது நோக்கு ஆகும். ஞாலத்திற்கு நாயகனுகிய இராமன் பேரழகுடைய சீதையைப் பார்த்த கண்ணால் நம்மைப் போன்ற சாதாரண மகளிரை விரும்பிப் பார்ப்பானே? பாரான் என்றனர். ஞாலநாயகன் என்ற தகுதியும் எழில்மிகு சீதையைப் பார்த்த கண்ணும் சிறப்பு நோக்கிற்கு இயைவனவல்ல என்றவாறு. கருங்கட் செவ்வாய் என்றது முரண்தொடை. சீதையைப் பார்த்த கண்கள் இவ்வுலகில் வேறொரு பெண்ணை விரும்பிப் பார்க்காது என்றவாறு. இவ்வாறே இராமன் அழகைக் கண்ட சீதையின் கண்களுக்கு மன்மதன் போன்றோரும் நாயெனத் தகுவர் என்பதை இராவணன் கூறுகின்றான். "போயினித் தெரிவ தென்னே பொறையினுலுலகம் போலும், வேயெனத் தகைய தோளியிராகவன் மேனி நோக்கித், தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால், நாயெனத் தகுதுமன்றே காமனு நாமுமெல்லாம்" (யுத்த - கும்பகருணன்வதைப் - 30) என்றது காண்க. (87)

1057 கயனெடுங் கண்ணா ரிவ்வா
றுரைத்திடச் சிலவர் காதல்
மயலுறக் கண்ணன் றன்மேல்
வைத்தகண் வாங்க மாட்டார்
துயருறு மனத்த ராகி
வளைகலை சோரத் தங்கள்
செயலறச் சேட்டை யற்றுச்
சித்திர மென்ன நின்றார்.

சயல்நெடுங் கண்ணார் இவ்வாறு உரைத்திடச் சிலவர் காதல் மயல் உறக் கண்ணன் தன்மேல் வைத்தகண் வாங்க மாட்டார் துயர்உறு மனத்தர் ஆகி வளை, கலை சோரத் தங்கள் செயல்அறச் சேட்டை அற்றுச் சித்திரம் என்ன நின்றார்.

பொ: கயல்மீன் போன்ற நீண்ட கண்ணையுடைய பெண்டிர் இவ்வாறு சொல்லா நிற்க, சிலர் காதலாகிய மயக்கம் பொருந்த இராமன் மேல் வைத்த கண்ணைவாங்க மாட்டாதவராய்த் துயர் மிக்க மனத்தையுடையராய்த் தம் கைவ்வளையும் ஆடையும் சோர்ந்துவிழத் தங்கள் செயல் அறுதலால் இயக்கம் அற்றுச் சித்திரம் போன்று நின்றார்கள்.

கு: பெண்டிர் சிலர் இராமனழகைப் புகழ்வதில் ஈடுபாடு கொண்டார்கள். சிலர் அவன்மேல் காதல் கொண்டு எழுதுசித்திரம் போல் அசையவற்று நின்றார்கள் என்றவாறு. காதல் மயல் என்றது காதலாகிய மயக்க உணர்வினை. இனி, காதலாலாகிய மயக்கம் என்று மூன்றனுருபு விரிப்பினும் அமையும். இராமனது மேனியைக் கண்ட கண்கள் பிறிது பொருளைப் பார்க்குமாறு வாங்க இயலாது சித்திரப் பாவை போல் அசைவற்று நின்றனர் என்றவாறு. வளை, கலை என்றது உம்மைத்தொகை. சோர்தலாவது நின்ற விடத்தில் நில்லாது நிலமிசை சரிந்துவீழ்தல் சேட்டை-இயக்கம், இயக்கம் இல்லாமையால் சித்திரப்பாவை போன்றனர் என்றவாறு. தம் செயலறுதால் சேட்டை அற்றுச் சித்திரம் என்ன நின்றார் என்க. (88)

1058 கொங்கணை குழலோர் மங்கை
கொண்டலைக் கண்டாள் காமன்
வெங்கணை நிறத்திற் பாய
மென்மயில் போல வீழ்ந்தாள்
அங்கணை புடையோர் தாங்கி
யரிதினிற் கொடுபோய் மாடப்
பொங்கணை கிடத்திச் சீதப்
புனன் முகந் தெளித்துந்தேருள்.

கொங்குஅணை குழல் ஓர் மங்கை கொண்டலைக் கண்டாள்; காமன்
வெங்கணை நிறத்தில் பாய மென்மயில் போல வீழ்ந்தாள்;
அங்கு அணைபுடையோர் தாங்கி அரிதினில் கொடுபோய் மாடப்
பொங்குஅணை கிடத்திச் சீதப் புனல் முகம் தெளித்தும் தேருள்.

பொ: மகரந்தம் சேர்ந்த கூந்தலையுடைய ஒரு மங்கைப் பருவத்து நங்கை கொண்டல் நிறத்தவனாகிய இராமனைக் கண்டாள்; கண்ட அளவில் மன்மதனுடைய கொடிய மலர் அம்பு மார்பில் பாயவே மெல்லிய மயிலைப்போலத் தரையில் வீழ்ந்தாள். அங்கு வந்த தோழியர் அவளைக் கைகளில் தாங்கிக் கொண்டு அரிதிற் கொண்டு சென்று மேன் மாடத்துள்ள உயர்ந்த பஞ்சணையில் கிடக்கச் செய்து குளிர்ந்த நீரை முகத்தில் தெளித்தும் தெளிவு பெறாமல் கிடந்தாள்.

கு: இராமனைக் கண்ட அளவில் காதல் கொண்ட மங்கையின் நிலை கூறியவாறு. கொங்கு-பூந்தாது-மகரந்தம். மலர்களின் சார்பால் கூந்தலில் கொங்கு அணைந்தது. கொண்டல் என்றது உவமையாகுபெயராய் கொண்டல் போன்ற இராமனையுணர்த்தியது. நிறம் என்றது மார்பினை. மன்மதன் மலர்க்கணையால் மயங்கி வீழ்ந்த மங்கைக்கு அம்பு பட்டமயில் வீழ்தல் உவமையாயது. அங்கு அணைந்த புடையோர் என்றது தோழியரை. தாங்குதல் கைகளால் நங்கையைத் தாங்கிச் செல்லுதல். மயங்கிய மங்கையைக் கைகளால் தாங்கிக் கொண்டு மாடத்திற்குச் செல்லுதல் தோழியராகிய பெண்டிர்க்கு அரிதாகத் தோன்றிற்று என்பார், 'அரிதினிற் கொடுபோய்' என்றார். பொங்கு அணை என்றது. உயர்ந்த பஞ்சணையை. மயக்கமுற்றோர்க்குக் குளிர்ந்த புனலை முகத்தில் தெளித்தால் மயக்கம் நீங்குதல் இயல்பு. இவள் மயக்கம் பெரிதாகலின் 'தெளித்தும் தேறாள்' என்றார், உம்மை உயர்வு சிறப்பு. (89)

1059 கனக்கரு நிறத்தி னானென்
கண்வழி யதனால் வந்தென்
மனத்திடை புகுந்தான் வந்த
வழியவன் போகிற் பின்னை
எனக்கவன் பிடிகொ டானென்
றிமைக்கத வடைத்தோ ரேழை
நினைத்தது முடித்தே னென்னா
நெடுநிலை மாடம் புக்காள்.

கனக்கரு நிறத்தினன் என்கண்வழி அதனுல் வந்துஎன்
மனத்திடை புகுந்தான்; வந்தவழி அவன் போகின் பின்னை
எனக்கு அவன் பிடிகொடான் என்று இமைக்கதவு அடைத்தோர்
ஏழை
நினைத்தது முடித்தேன் என்னு நெடுநிலை மாடம் புக்காள்.

பொ: மேகம் போன்ற கரிய நிறத்தினையுடைய இராமன் என் கண்வழியால் வந்து எனது மனத்தில் புகுந்துகொண்டான்; புகுந்த அவன் வந்த வழியே போவானுயின் பின்பு எனக்கு அவன் பிடிபடமாட்டான்; என்று கருதி தன் இமையாகிய கதவை அடைத்துக் கொண்டு ஒருபெண் 'நினைத்ததைமுடித்து விட்டேன்' என்றுநெடிய நிலைகளையுடைய மாடத்தில் புகுந்தாள்.

கு: கனம்-மேகம். கண்ணுகிய வழியால் வந்து மனத்தில் புகுந்தவன் அந்தக்கண் வழியே போய்விடுவானுயின் பின்பு அவன் பிடிபடமாட்டான். எனவே தானே வந்து புகுந்தவன் போகாதபடி இமையாகிய கதவினை அடைத்துக் கொண்டு தன் நெடுநிலை மாடத்தை அடைந்தாள் ஒருத்தி என்றவாறு. இமைக்கதவு உருவகம். இமையாகிய கதவு என்க. இராமன் கண்வழியாக நுழைந்தவுடனே கண்களை மூடிக்கொண்டு குருடர்போலத் தடவிக் கொண்டு நெடுநிலை மாடம் புகுந்தாள் என்க. எண்ணியது முடித்து மாடத்தில் புகுந்து விட்டமையால் 'நினைத்தது முடித்தேன்' என்று அந்நங்கை மகிழ்ந்து கூறியவாறு. கண்வழி புகுந்த இராமன் கண்களை மூடிக்கொண்டால் 'போக வழியின்றித் தன் மனத்தகத்தே தங்கி விடுவான் எனக் காமமயக்கத்தால் நினைந்தாள் என்க. "மைக்கருங் கூந்தல் செவ்வாய் வாணுதல் ஒருத்தியுள்ளம், நெக்கென வுருகுகின்ற ணெஞ்சிடை வஞ்சன் வந்து, புக்கனன் போகாவண்ணம் கண்ணெனும் புலங்கொள் வாயில், சிக்கென வடைத்தேன் தோழி சேருது மேனியென்ருள்" (பால. உலாவியல்-14) என்பது இங்கு ஒப்பு நோக்குதற்குரியது. (90)

1060 பேதையங் கொருத்தி தன்கை
பெய்வளை கழல நின்ருள்
காதலாற் றெழுதே னென்கை
யணிவளை கொண்டா னென்கண்

ஈதவன் கருணை யான்சென்
றிரந்திடத் தாரா னேலென்
வாய்தலி லவனே வந்தால்
வளைக்குநான் வளைப்பே னென்றாள்.

பேதை அங்கு ஒருத்தி தன்கை பெய்வளை சுழல நின்றாள்,
காதலால் தொழுதேன் என்கை அணிவளை கொண்டான்;
ஈது அவன் கருணை, யான் சென்று இரந்திடத் தாரானேல் என்
வாய்தலின் அவனே வந்தால் வளைக்கு நான் வளைப்பேன் என்றாள்

பொ: அங்கு இராமனைக் கண்டு காதல் கொண்டு தன்கையில் பெய்திருந்த வளைகள் கழல நின்றவளாகிய பேதை ஒருத்தி, 'காதலால் வந்து தொழுதேன் என்கையில் அணிந்த வளைகளைக் கொண்டான்; என்னிடத்து அவன் வைத்துள்ள கருணை இதுவாகும்; யான் அவனிடம் சென்று இரந்து கேட்பவும் வளைகளைத் தாரானாயின் என் வீட்டு வாயில் அவனே வருவான்; வந்தால் என் வளைகளுக்காக நான் அவனை வளைத்துக் கொள்வேன் என்று கூறினாள்.

கு: நின்றாளாகிய பேதை என இயையும். இராமனைக் கண்டு காதலால் உடம்பு இளைத்தவளின்கையில் அணிந்த வளைகள் தாமே கழன்று வீழ்ந்தன. இது தன் பேதைமையால் நிகழ்ந்திருக்கவும் இராமன்மேல் பழியைச் சுமத்தி "என்கையணிவளை கொண்டான் என்கண் ஈதவன் கருணை" என்று கூறுகின்றாள். மேலும் அவ்வளையைத் தருமாறு அவனை இரந்து கேட்கப் போவதாகவும் அவன் தரவில்லையானால் இங்கு அவனை விடுத்துத் தன் வாயிலில் அவன் வரும்போது வளைகளுக்காக அவனை வளைத்துக் கொள்வதாகவும் சொல்கின்றாள். இவ்வளவும் பேதைமையால் தோன்றிய சொற்களேயாம். இந்நிலைமை விளங்கவே 'பேதைஅங்கொருத்தி' எனத் தொடக்கத்திலேயே சொல்லி வைத்துள்ளார் ஆசிரியர். 'வளைக்கு நான் வளைப்பேன்' என்புழி மடக்கு எனும் சொல்லணி அமைந்திருத்தல் காணலாம். (91)

1061 புனமயிற் சாயற் பைம்பொற்
பூண்முலை யொருத்தி யந்தச்
சனமுடைத் தெருவை விட்டுத்
தசரத ராமனென்றன்
மனதிடைத் தனியே வந்து
புகுந்துநா னுறங்கும் போழ்து
கனவிடைத் தோன்று மேலான்
கருத்தினை முடிப்பெ னென்றாள்.

புனமயில் சாயல் பைம்பொன் பூண்முலை ஒருத்தி அந்தச் சனமுடைத் தெருவை விட்டுத் தசரத ராமன் என்தன் மனதிடைத் தனியே வந்து புகுந்து நான் உறங்கும் போழ்து கனவிடைத் தோன்றுமேல் நான் கருத்தினை முடிப்பேன் என்றாள்.

பொ: தினைப்புனத்தில் உள்ள மயில் போன்ற சாயலினையும் பசுமையான பொன்னாலியன்ற அணிகலனை யணிந்த மார்பினையும் உடைய ஒருத்தி அந்தச் சனங்கள் நெருங்கியுள்ள தெருவை விடுத்துத் தனியே நின்று, "தசரத ராமன் என் மனத்திடை தனியே வந்து புகுந்து நான் உறங்கும்போது கனவினில் தோன்றுவானானால் அப்போது நான் என் கருத்தினை முடித்துக் கொள்வேன்" என்று கூறினாள்.

கு: புனம்-காடு எனலும் ஆம். மயிற் சாயலையும் பூண்முலையையுமுடைய ஒருத்தி என்க. மயிலின் சாயல்போன்ற சாயல் என உவமைத் தொகையாக்குக. சனங்கள் நெருங்கி யுள்ளமையால் அந்த நெருக்கமிக்க தெருவினை விடுத்துத் தனியே நின்று இங்ஙனம் கூறினாள். இவள் தெருவினை விடுத்துத் தனியே நின்றால் இராமனும் தனியே வந்து தன் நெஞ்சிடைப் புகுவான் என்றும் பின்பு கனவிடைத் தோன்றுவான் என்றும் அவ்வாறு தோன்றுவானேல் அவனைத் தழுவுதலாகிய தன்கருத்தினை முடித்துக் கொள்ளலாம் என்றும் கூறினாள். காதலர்கள் துஞ்சுங் கால் தோண்மேலாகுதல் இயல்பாகலின் இங்ஙனம் கூறினாள். கருத்தினை முடித்தலாவது அவனைத் தழுவி யின்புறுதலேயாம். "துஞ்சுங்கால் தோண்மேலராகி விழிக்குங்கால் நெஞ்சத்த ராவர்

விரைந்து" (குறள் 1215) என்ற குறள் கருத்து இதில் ஒருவாறு அமைந்திருத்தல் காணலாம். தெருவில் பொதுவகையால் காண்பதைவிடத் தன்வீட்டில் சிறப்பு வகையானும் கண்டு இன்புறலாம் என்பது கருத்து. (92)

1062 இவ்வண்ண மடவா ரெல்லா
மினவளை கலைகள் சோரச்
செயவண்ண மறியார் தங்கள்
சிந்தைமா லாகி நிற்ப
மய்வண்ண முகிறோய் மாட
வளநகர் வாயி னீங்கி
உய்வண்ண முலகை யெல்லா
முண்டுமி ழொருவன் போனான்.

இவ்வண்ணம் மடவார் எல்லாம் இனவளை கலைகள் சோரச்
செய்வண்ணம் அறியார் தங்கள் சிந்தை மாலாகி நிற்ப,
மய்வண்ண முகில்தோய் மாட வளநகர் வாயில் நீங்கி
உய்வண்ணம் உலகை எல்லாம் உண்டு உமிழ் ஒருவன் போனான்.

பொ: உலகம் எல்லாவற்றையும் உண்டு மீள உமிழ்ந்த ஒருவனாகிய இராமன், இவ்வாறு மகளிர் எல்லாம் இனமான வளைகளும் ஆடைகளும் சோர்ந்துவீழச் செய்யும் திறம் அறியாதவர்களாய்த் தமது மனம் காதல் மயக்கம் உடையதாகி நிற்ப, மை போன்ற வண்ணத்தினையுடைய மேகங்கள் (மலையென்று மயங்கித்) தவழ்தற்கு இடமான மாடங்களை யுடைய வளமான அயோத்தி நகரின் வாயிலை விட்டுநீங்கி, உயிர்கள் உய்யும் வண்ணம் போனான்.

கு: இராமன் திருமாலின் அவதாரமாதலின் உலகை யெல்லம் உண்டு உமிழ் ஒருவன் என அவனைக் குறிப்பிட்டார். வளைகள்கழன்று வீழ, ஆடை அவிழ்ந்து வீழத் தங்கள் சிந்தை மாலாகி நிற்ப என்க. நிறப் பண்பு புலப்பட, 'மய்வண்ண முகில்' என்றார். முகில் தோய்தலாவது மாடங்களை மலையென மருண்டு அவற்றின்மேல் தவழ்தல். உண்டுமிழ் ஒருவன் வாயில் நீங்கிப் போனான் என இயையும். உய்வண்ணம் போனான் என இயைக்க.

இனி, 'உய்வண்ணம் உலகையெல்லாம் உண்டு' எனக் கிடந்தாங்கே கொண்டு பொருள் கூறலும் ஆம். உலகங்கள் திருமாலின் வயிற்றில் தங்குவதால் உய்தி யெய்தும் வண்ணம் உண்டு என்க. மேற்கூறிய பொருளுக்கு உயிர்கள் தன்னைத் தெருவில் எளிதாகப் பார்த்து உய்தி எய்தும் வண்ணம் போனான் என்று விளக்கம் கூறுக. (93)

## இராமன் கோமதி நதியை யடைதல்

1963 ஆனைதேர் புரவி காலா
ளடியிட விடம்பெ றாத
சேனைமா கடல்தற் சூழச்
சிறந்தவர் மருங்கு செல்ல
வானமு மண்ணு மெல்லாம்
வளர்துகள் கதுவ மன்னர்
கோனகர் நாதன் சென்று
கோமதி நதியை யுற்றான்.

**ஆனைதேர் புரவி காலாள் அடிஇட இடம் பெறாத**
**சேனைமா கடல் தற்சூழச் சிறந்தவர் மருங்கு செல்ல,**
**வானமும் மண்ணும் எல்லாம் வளர்துகள் கதுவ மன்னர்**
**கோன்நகர் நாதன் சென்று கோமதி நதியை உற்றான்.**

பொ: யானை தேர் குதிரை காலாள் அடிவைக்கவும், இடம் பெறாத பெருஞ்சேனையாகிய கடல் தன்னைச் சூழ்ந்து வரவும் சிறந்தவர்களாகிய தம்பியர் மந்திரிமார் போன்றோர் தன் பக்கத்தில் செல்லவும், சேனை செல்வதால் எழுகின்ற துகள் வானமும் மண்ணுலகமும் பரவவும் அரசர்க்கு அரசனும் அயோத்தி நகர்க்குத் தலைவனுமான இராமன், புறப்பட்டுச் சென்று கோமதிநதியை அடைந்தான்.

கு: சேனை பெரிதாகலின் சேனையில் உள்ள ஆனைமுதலியன அடிவைக்கவும் இடம் இல்லையாயது. சேனைமாகடல் என்பது உருவகம். சிறந்தவர் என்றது, தம்பியர் மூவரையும் அமைச்சர் புரோகிதர் போன்றோரையும் ஆம். மருங்கு - பக்கம். வளர்துகள்

என்றது சேனையின் இயக்கத்தால் எழுகின்ற துகளை. கதுவுதல்- இடமாகப் பற்றிப் பரவுதல். மன்னர்கோன் நகர்நாதன் என இருவகையாகக் கூறியவாறு. சக்கரவர்த்தியும் அயோத்தி நகர்க்குத் தலைவனுமான இராமன் என்றவாறு. நைமிசாரணியம் கோமதி நதிக்கரையில் உள்ள தாகலின் அசுவமேதயாகம் செய் தற்குரிய இடமான நைமிசாரண்யம் உற்றான் என்பார், கோமதி நதியையுற்றான் என்றார். இது விட்டு விடாத இலக்கணை. (94)

## இராமன் யாகசாலையில் அமர்தல்
## வேறு

1064 நாயகன் யாக சாலையி னழகு
நானில மன்னவர் முதலோர்
ஆயவர்க் கெல்லா மமைந்ததோ ரிடமு
மவரவர்க் கிட்ட காவணமும்
வாயிலு மறுகு மன்றமுங் கண்டு மகிழ்ந்தொளி
திகழு மால் வரையை
யேயுமண் டபத்தி னிளையவர் சூழ
வினிதிருந் தருளிய காலை.

நாயகன் யாக சாலையின் அழகும் நானில மன்னவர் முதலோர்
ஆயவர்க்கு எல்லாம் அமைந்ததோர் இடமும் அவரவர்க்கு இட்ட காவணமும்
வாயிலும் மறுகும் மன்றமும் கண்டு மகிழ்ந்து ஒளிதிகழும் மால்வரையை
ஏயும் மண்டபத்தின் இளையவர் சூழ இனிது இருந்து அருளிய காலை.

பொ: நாயகனாகிய இராமன் யாகசாலையின் அழகையும் உலகில் உள்ள மன்னவர் முதலியோர்க்காக அமைத்த இடங்களையும் அவரவர்க்கு உரியதாக இட்ட பந்தல்களையும் வாயில்களையும் தெருக்களையும் மன்றங்களையும் கண்டு மனமகிழ்ந்து ஒளிவிளங்கும் பெரிய மலையை ஒக்கும் மண்டபத்தில் இளையவர் களாகிய தம்பிமார் சூழ இனிதாக இருந்தருளியபோது.

கு: குளகம். அசுவமேத வேள்விக்காகப் புதிதின் அமைத்த நகரத்தின் பகுதிகளை யெல்லாம் பார்த்து மகிழ்ந்த இராமன், தனக்கென அமைத்த மலைபோன்ற பெரிய மண்டபத்தில் தன் தம்பியர்களோடு தங்கியருளினன் என்றவாறு. நானில மன்னர் என்றது, உலகில் உள்ள அரசர்களை. அரசர்களெல்லாம் வேள்வி காண வந்துள்ளார்கள். அவரவர் தகுதிக்கேற்பத் தங்கும் இடங்களும் முன்றிலில் பந்தர்களும் அமைத்திருந்தார்கள் என்றவாறு. காவணம்-பந்தல். மறுகு-தெரு. இராமன் தங்குதற் குரிய மண்டபத்தின் சிறப்புப்புலப்பட, ஒளிதிகழும் மால்வரை யையேயும் மண்டபம்' என்றார். (95)

### மன்னர்கள் வருகை

1065 காரை நெருங்கு கொடையங்கர்
வங்கர் கலிங்கர் காம்போசர்
வீர ராய பாஞ்சாலர் விராட
ரிலாடர் விறல் மிக்க
சூர ராய மகதேசர் தோலா
வென்றி யாதவர்கள்
சேர சோழ பாண்டியர்கள்
சிந்து மன்னர் திரிகத்தர்.

**காரை நெருங்கு கொடை அங்கர், வங்கர், கலிங்கர், காம்போசர்**
**வீரர்ஆய பாஞ்சாலர் விராடர் இலாடர் விறல் மிக்க**
**சூரர்ஆய மகதேசர் தோலாவென்றி யாதவர்கள்**
**சேர சோழ பாண்டியர்கள் சிந்து மன்னர் திரிகத்தர்.**

பொ: மேகத்தை ஒத்து வாரி வழங்குகின்ற கொடைத் தன்மையையுடைய அங்கதேசத்தவர்களும் வங்கதேசத்தவர்களும் கலிங்க தேசத்தவர்களும் காம்போச நாட்டவர்களும் வீரர்களாக உள்ள பாஞ்சாலர்களும் விராட தேசத்தவர்களும் இலாட தேசத்தவர்களும் வெற்றி மிக்க சூரராக விளங்கும் மகத தேயத் தவர்களும் யார்க்கும் தோல்வியடையாத வெற்றியையுடைய யாதவ நாட்டவர்களும் சேர சோழ பாண்டியர்களும் சிந்து தேயத்தவர்களும் திரிகத்த தேயத்தவர்களும்.

கு: குளகம். நெருங்கு என்பதை இங்கு உவம உருபாகக் கொள்க. அங்கம், வங்கம் கலிங்கம் காம்போசம், பாஞ்சாலம், விராடம், இலாடம், மகதம் சேர சோழ பாண்டி சிந்து திரிகத்தம் என்பன தேயங்களின் பெயர்கள். இவற்ருேடு சேர்த்து எண்ணினமையால் யாதவம் என ஒரு தேயம் இருந்ததாகக் கொள்ளவேண்டியுளது. யதுகுலத்திற்குரியது யாதவ தேயம். சேர, சோழ பாண்டியர்கள் என்றது பல் பெயரும்மைத் தொகை. (96)

1066 காது வைவேற் காம்பீரர்
கங்கர் கொங்கர் கருநாடர்
சேது மன்னர் குருமன்னர்
சிங்க ளேச ரவந்தீகர்
சோதி மணிமா முடிச்சனகர்
துருக்கர் துளுவ வெனவிவர்கள்
ஆதி யாய முடிமன்ன
ரளவில் சேனை பொடும்வந்தார்.

காது வைவேல்காம்பீரர் கங்கர் கொங்கர் கருநாடர்
சேது மன்னர் குருமன்னர் சிங்க ளேசர் அவந்தீகர்
சோதி மணிமா முடிச்சனகர் துருக்கர் துளுவர் என இவர்கள்
ஆதி ஆய முடிமன்னர் அளவுஇல் சேனைபொடும் வந்தார்.

பொ: கொல்லுகின்ற கூரிய வேலினையுடைய காம்பீர தேயத்தவர், கங்க தேயத்தவர், கொங்கு நாட்டவர், கன்னட தேயத்தவர், சேது நாட்டரசர். குரு நாட்டு மன்னர், சிங்கள நாட்டரசர், அவந்தி தேயத்தவர், ஒளிமிக்க மணிகள் பதித்த சிறந்த முடியணிந்த சனகர், துருக்கதேயத்தவர், துளுவநாட்டவர் எனப்படும் இவர்கள் முதலாய முடியணிந்த மன்னர்கள் தத்தமக்குரிய அளவில்லாத சேனையோடு வந்து சேர்ந்தனர்.

கு: காதுதல்-கொல்லுதல். வை-கூர்மை. கங்கநாடு, கொங்கு நாடு, சேதுநாடு என்பன தமிழ்நாட்டைச் சேர்ந்துள்ள சிறுநாடுகள். சீதையின் தந்தையெனும் சிறப்புத் தோன்ற

'சோதிமணி மாமுடிச்சனகர்' என்றார். சிங்களதேயம் என்பது இலங்கையை. (97)

## விடணன் வருகை

1067 தன்னில் வலியோ ரிலாவனல
னனில னரன்சீர்ச் சம்பாதி
என்னு மமைச்சர் புடைசூழ
வெதிரி லாத சேனையொடும்
மின்னு மணிமா முடிச்சோதி
வெய்யோ னுதய வெயில்விரிப்ப
மன்ன னிராமன் பெருவேள்வி
காண வலிவீ டணன்வந்தான்.

தன்னில் வலியோர்இலா அனலன் அனிலன் அரன்சீர்ச் சம்பாதி
என்னும் அமைச்சர் புடைசூழ எதிர்இலாத சேனையொடும்
மின்னும் மணிமா முடிச்சோதி வெய்யோன் உதய வெயில் விரிப்ப
மன்னன் இராமன் பெருவேள்வி காண வலிவீடணன் வந்தான்

பொ: தன்னைக்காட்டிலும் வலிமையுடையோர் இல்லாத (யாரினும் வலிய) அனலன், அனிலன், அரன், சிறப்பினையுடைய சம்பாதி என்னும் அமைச்சர் நால்வரும் பக்கத்தில் சூழ்ந்துவர, எதிர்ப்பாரில்லாத சேனையொடும் மின்னுகின்ற மணிகள் பதித்த பெரிய முடியின்ஒளி, சூரியன் உதய காலத்துப் போன்று வெயிலை விரிக்க, மன்னவனாகிய இராமன் செய்யும் பெரிய அசுவமேத வேள்வியைக் காண வலிமைமிக்க வீடணன் வந்தான்.

கு: அனலன், அனிலன், அரன், சம்பாதி என்ற நால்வரும் வீடணனுடைய அமைச்சர்கள். வலிவீடணன் அமைச்சர்சூழ சேனையொடும் முடிச்சோதி வெயில்விரிப்ப இராமனது பெரு வேள்வி காணவந்தான் என இயையும். வீடணன் அணிந்துள்ள முடியின் சோதி சூரியன் உதயகாலத்து வெயிலை ஒத்து வெயில் வீச என்றது, முடிச்சோதிக்கு நிகர் உதயசூரியனது வெயிலே என்னும் கருத்தினது. (98)

## வானரர் வருகை

1068 சங்கன் குமுதன் சதவலிபோர்த் தாரன்
சாம்பன் சரபன் போர்ப்
பங்க மிலாத வங்கதன்றான்
பனசன் கவாக்கன் பகருலகில்
எங்கும் வலியே றியநீலனிடபன்
கவய னெறி கடலைத்
துங்க வணைசெய் தவன்
மயிந்தன் சுசூரன் றுன்மருடணன்.

சங்கன் குமுதன் சதவலி போர்த்தாரன் சாம்பன் சரபன் போர்ப்
பங்கம் இலாத அங்கதன்தான் பனசன் கவாக்கன் பகர்உலகில்
எங்கும் வலி ஏறியநீலன் இடபன் கவயன் எறிகடலைத்
துங்க அணை செய்தவன், மயிந்தன் சுசூரன் துன்மருடணன்.

பொ: சங்கன் குமுதன் சதவலி போர்த்திறன் வாய்ந்த தாரன், சரபன் போரில் குறைவில்லாத அங்கதன், பனசன், கவாக்கன் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற இவ்வுலகில் எவ்விடத்தும் வலியால் உயர்ந்த நீலன், இடபன் கவயன், அலையெறியும் கடலுக்கு வலிய சேதுபந்தனம் என்ற அணையைச் செய்தவனாகிய நளன், மயிந்தன் சுசூரன் துன்மருடணன்.

கு: இப்பாடலில் பெரும்பாலும் அடைமொழி யின்றி வானரர்களின் பெயர்கள் குறிக்கப் பெற்றன. 'போர்த்தாரன், போர்ப் பங்கமிலாத அங்கதன், பகருலகில் எங்கும் வலியேறிய நீலன், எறிகடலைத் துங்க அணைசெய்தோன், என்ற நான்கு பெயர்கள்தாம் அடையோடு சொல்லப்பட்டன. துங்கம்-வலிமை. தூய்மை. எறிகடலை என்புழி, இரண்டனுருபு நான்காவதன் பொருளில் வந்தது. எறிகடற்குத் 'துங்க அணை செய்தவன்' என்க.

(99)

## சுக்கிரீவன் வருகை

1069 ஊழி நெருப்புங் காற்றும்போ
லுடன்று பொருகே சரியாதி
பாழி மிக்க படைத்தலைவர்
பக்கஞ் சேவித் துடன்போத
ஏழுபத்தின் பெருவெள்ள மென்னுந்
தகைவா னரசேனை
சூழவென்றி யனுமனுடன் சுக்கி
ரீவன் றோன்றினன்.

ஊழி நெருப்பும் காற்றும்போல் உடன்றுபொரு கேசரி ஆதி
பாழி மிக்க படைத்தலைவர் பக்கம் சேவித்து உடன்போத,
ஏழு பத்தின் பெருவெள்ளம் என்னும் தகைவானர சேனை
சூழவென்றி அனுமனுடன் சுக்கிரீவன் தோன்றினன்.

பொ: கடையூழியில் உலகையழிக்கத். தோன்றும் நெருப்பும் காற்றும்போல மாறுபட்டுப் போர் செய்கின்ற கேசரி முதலிய வலிமை மிக்க சேனைத்தலைவர்கள் பக்கத்திலே வணங்கிச் சேவை செய்து கொண்டு உடன்வர, எழுபது வெள்ளம் என்னும் பெருமையையுடைய வானரசேனை தன்னைச் சூழ்ந்துவர வெற்றி யுடைய அனுமானோடு சுக்கிரீவன் வந்து தோன்றினன்.

கு: ஊழி இறுதியில் நெருப்பும் காற்றும பேராற்றலோடு தாக்கி உலகையழிப்பதுண்டு. கேசரி என்ற வானரப்படைத் தலைவன் அந்த நெருப்பும் காற்றும் போல மாறுபட்டுப் போர் செய்யும் இயல்பினன் என்றவாறு. பாழி-வலிமை. சேவித்தல்-வணக்கத்துடன் வேண்டும் பணி செய்தல் தகை-பெருமை. சுக்கிரீவன் படைத்தலைவர் சேவித்து உடன் போத வானர சேனை சூழ, அனுமனுடன் தோன்றினன் என இயையும். இராமனுக்கு வெற்றி தந்நதோடு சுக்கிரீவன் ஆட்சிக்கும் வெற்றித்தருபவன் அனுமனே ஆதலின் ''வென்றியனுமனுடன் சுக்கிரீவன் தோன்றினன்'' என்றார். இதனால் அனுமனுடைய சிறப்புப் புலப்படும்.
(100)

## முனிவர்கள் வருகை

1070 ஆசை யற்ற தூநெஞ்சத்
தாங்கீ ராவத் திரிமாயைக்
காசை யற்ற ஞானக்கட்
காசி பன்கோ சிகன்விதனப்
பாச மற்ற சமதக்கினி
பாத்து வாசன் கோதமன்பூ
நேச மற்றோர் மற்றோரு
ணெடிய தவத்துச் சாபாலி.

ஆசை அற்ற தூநெஞ்சத்து ஆங்கீரா அத்திரி மாயைக்
காசை அற்ற ஞானக்கண் காசிபன் கோசிகன் விதனப்
பாசம் அற்ற சமதக்கினி பரத்துவாசன் கோதமன் பூ
நேசம் அற்றோர் மற்றோருள்நெடிய தவத்துச் சாபாலி.

பொ: உலக ஆசைகள் இல்லாத தூய நெஞ்சினை யுடைய அங்கிரா, அத்திரி மாயையாகிய குற்றம் அற்றவரும் ஞானக் கண்ணையுடையவரும ஆகிய காசிபன், கோசிகன் (பரத்தையர், கள், சூது என்ற) குற்றங்களில் பாசம் கொள்ளாத சமதக்கினி, பரத்துவாசன், கௌதமன் பூவுலகில் நேசம் கொள்ளாதவர் களாகிய மற்றவர்களில் சிறந்த தவத்தினையுடைய சாபாலி.

கு: அங்கிரா, அத்திரி, காசிபன், கோசிகன், சமதக்கினி, பரத்துவாசன், கோதமன், சாபாலி என்ற முனிவர்கள், 'வேள்வி காண எழுந்தார்' எனப்பின் 102 ஆவது செய்யுளில் முடியும். மாயைக்காசையற்ற என்றது, மாயையாகிய குற்றத்தில் மயங் காத என்னும் பொருளது. காசு-குற்றம். காசிபர் மாயையாகிய குற்றத்தில் மயங்காதவர் ஞானக்கண் பெற்றவர் என்றவாறு' விதனப் பாசம் என்றது பரத்தையர், கள், சூது, என்ற பொருள் களில் பாசம் கொள்ளாதவர். சமதக்கினி என்றவாறு. விதனம்-குற்றமானவை. பூநேசம் என்றது பூவுலகப் பொருள்களில் நேயம் வையாது பூரணப்பொருளில் நேசம் வைப்பவர் என்னும் கருத் தினது. மற்ற முனிவரினும் தவத்தின் ஆற்றல் மிகப் பெற்றவர்

சாபால முனிவர் என்றவாறு. அற்றேராகிய மற்றேருள் என்க. குளகம். (101)

1071 காயங் குறிய நெடுந்தவத்தோன்
கண்ணு வன்றௌ மியன்கனலின்
தூய ஞய புலத்தியன்ருன்
சுவத்தி தவத்தைத் துரந்தழிக்கும்
தீய புலன்க ளைந்தடக்கித்
தெளிந்த ஞானப் பிருகுமுதல்
ஆய மாயப் பிறப்பறுத்தோ
ரகண்ட வேதங்கரை கண்டோர்.

காயம் குறியநெடுங் தவத்தோன் கண்ணுவன் தௌமியன் கனலில்
தூயன் ஆய புலந்தியன்தான் சுவத்தி தவத்தைத் துரந்து அழிக்கும்
தீய புலன்கள் ஐந்து அடக்கித் தெளிந்த ஞானப் பிருகுமுதல்
ஆய மாயப் பிறப்பு அறுத்தோர் அகண்ட வேதம் கரைகண்டோர்.

பொ: உடம்பால் குறியனுய்த் தவத்தால் நெடியனுய அகத்தியன், கண்ணுவன், தௌமியன், நெருப்பினும் தூய்மை மிக்கவனுகிய புலத்தியன், சுவத்தி, தவத்தினைத் துரத்தி அழிக்கின்ற தீயபுலன்கள் ஐந்தினையும் அடக்கித் தெளிவுபெற்ற ஞானத்தினையுடைய பிருகு முனி முதலாக மாயப் பிறவியை அறுத்தவர்களும் விரிவான வேதத்தைப் படித்து அதன் எல்லையைக் கண்டவர்களும்.

கு: காயங்குறியன் அகத்தியன் என்பது யாரும் அறிந்தது. புலத்தியன் ஒழுக்கத் தூய்மையைப் புலப்படுத்த வேண்டிக் கனலின் தூயனுய புலத்தியன் என்ருர். தவஞ்செய்ய முயலுவோரை ஐம்புலன்கள் உலகியலில் ஈடுபடுத்துவது ஆதலின் 'தவத்தைத் துரந்தழிக்கும் தீயபுலன்கள்' என்ருர். புலன்கள் ஐந்து என்றது மெய்வாய் கண் மூக்குச் செவி என்ற ஞானேந்திரியங்களை. இவ்வைந்தும் தம் புலன்களாய சுவை யொளி யூருேசை நாற்றம் என்ற ஐந்தின் மேல் விரும்பிச் செல்வது.

அவற்றைச்செல்லாமல் அடக்கித் தெளிந்த ஞானத்தைப் பெற்றவர் பிருகு முனிவர் என்க. பிருகு முதலானோர் மாயப் பிறவியை இனி வாராமல் தடுத்தவரும் வேதம் கரை கண்டோரு மாவார் என்க. அகண்ட வேதம் என்றது, கண்டம் செய்யப் படாத வேதத்தினை. அதன் கரையைக் காணுதல் என்பது முழு வதும் அறிதலை. (102)

1072 கய்யிற் றிகழும் பவித்திரத்தர்
காதிற் றூங்குங் குண்டலத்தர்
மெய்யிற் றிகழ்ந்து தோன்றொளியர்
விளங்கு மரையில் மரவுரியர்
பொய்யிற் புராளா நாவினர் நற்
பொருளிற் செல்லும் தியானத்தர்
எய்விற் கரத்தோன் பெருவேள்வி
காண வெழுந்த வுவகையினோர்.

கய்யில் திகழும் பவித்திரத்தர்; காதில் தூங்கும் குண்டலத்தர்;
மெய்யில் திகழ்ந்துதோன்று ஒளியர்; விளங்கும் அரையில்
மரஉரியர்;
பொய்யில் புரளா நாவினர்; நற்பொருளில் செல்லும் தியானத்தர்
எய்வில் கரத்தோன் பெருவேள்வி காண எழுந்த உவகையினோர்.

பொ: கையில் விளங்குகின்ற பவித்திரத்தை யுடையவர்களும் காதில் தொங்குகின்ற குண்டலத்தையுடையவர்களும் உடம்பில் விளங்கித் தோன்றும் ஒளியினையுடையவர்களும் அரையில் விளங்கும் மரவுரியையுடையவர்களும் பொய்பேசுவதற்காகப் புரளாத நாக்கினையுடையவர்களும் கடவுளாகிய நல்ல பொருளில் சென்றும் பதியும் தியானத்தையுடையவர்களும் அம்பு எய்யும் வில்லினைத் தாங்கிய கையினனாகிய இராமன் செய்யும் பெரிய வேள்வியைக் காண்பதற்கு எழுந்த மகிழ்ச்சியை யுடைய வர்களும்.

கு: கை என்பது எதுகைநோக்கிக் கய் எனப் போலியாய் வந்தது. பவித்திரம் தருப்பையாற் செய்த விரலணி. தூங்குதல்- தொங்குதல். தவத்தின் தூய்மையால் மேனி ஒளி வீசுதல் உண்டு.

ஆதலின் 'மெய்யிற்றிகழ்ந்து தோன்றுளியர்' என்றார். அரை-இடை. மரவுரி என்றது மரத்தின் பட்டையால் செய்த ஆடை. எய்வில், என்பது அம்பு எய்தற் குரிய வில்லினை. மெய்பேசும் நாக்குப் பொய்யில் எக்காலத்தும் புரண்டு பேசாது என்பார், 'பொய்யில் புரளா நாவினர்' என்றார். நற்பொருள் என்றது மெய்ப்பொருளாகிய கடவுளை. மெய்ப்பொருளை இடைவிடாது தியானிப்பவர் என்பார் 'நற்பொருளிற் செல்லும் தியானத்தர்' என்றார். குளகம். வரும் செய்யுளில் முடியும். (103)

1073 சின்னூல் வழியா மறுசமயச்
சிலுகில் வீழா துலகுய்யத்
தொன்னூ லன்ன மாயுரைத்த
தூயோற் காண வச்சுருதி
நன்னூ லெல்லா முருக்கொண்டு
நடந்து செல்லுமாபோல
முன்னூ றிகழுந் திருமார்பர்
முனிவர் வேள்வி வனம்புகுந்தார்.

சில்நூல் வழியாம் அறுசமயச் சிலுகில் வீழாது உலகு உய்யத்
தொல்நூல் அன்னமாய் உரைத்த தூயோற் காண அச்சுருதி
நன்னூல் எல்லாம் உருக்கொண்டு நடந்து செல்லுமா போல
முன்னூல் திகழும் திருமார்பர்முனிவர் வேள்வி வனம் புகுந்தார்.

பொ: சிறுமையுடைய நூலின் வழிக்கூறுகின்ற ஆறு சமயம் என்கின்ற தவறான நெறியில் வீழாமல் உலகம் உய்யும் வண்ணம் பழமையான வேதநூலை அன்னமாயிருந்து சொன்ன தூயோனாகிய இராமனைக் காண, அந்த வேதமாகிய நல்ல நூல் எல்லாம் மனித உருவங்கொண்டு நடந்துசெல்லுமாறுபோல ஒன்பது கொண்ட மூன்றுபுரியாகிய பூணூல் விளங்கும் அழகிய மார்பையுடைய முனிவர்கள் வேள்வி செய்யும் வனமாகிய நைமிசாரணியத்துள் புகுந்தார்.

கு: வேதம் கரைகண்டோரும் எழுந்தவுவகையினரும் முன்னூல்திகழும் மார்பரும் ஆகிய முனிவர் வேள்வி வனம்புகுந்தார். என மூன்று செய்யுளையும் சேர்த்து முடிக்க. சின்னூல் என்றது

சிறுமையுடைய நூல். இனி, சிலவாகிய புதிய நூல்கள் எனினும் அமையும். சிலுகு-தவறுனது; முரணுனது எனலும் ஆம். தொன்னூல் என்றது வேதத்தை. திருமால் அன்னமாயிருந்து வேதங்களைச் சொன்னுர் என்பர். "அன்னமாய் அருமறைகள் அறைந்தோய் நீ" (ஆரணிய-விராதன் வதை: 60) என்பது காண்க. மக்கள் புதுநூல்கள் சில கூறுகின்ற அறுசமயமாகிய தவறுன நெறியில் சென்று நரகத்தில் வீழாதபடி திருமால் அன்னத்தின் வடிவு கொண்டு பழைய வேதங்களைப் புதுப்பித்தார் என்றவாறு. அன்னமாயுரைத்த தூயோன் என்றது இராமனை. முனிவர்கள் வேதங்களே மானிட உருவுகொண்டு வந்தாற் போன்றவர் என அவர்தம் வேதப்பயிற்சியைச் சிறப்பித்தவாறு முந்நூல் என்பது எதுகை நோக்கி முன்னூல் என்றுயிற்று. முந்நூல் - மூன்றுபுரியுள்ள பூணூல். வேள்வி வனம் என்றது நைமிசாரணியத்தை. (104)

## காடு நாடாயது

1074 தேடு தனம்பூ ணுடைமுத
லடங்கக் கொண்டு சேனையொடும்
கூடி யடங்க வருதலினு லந்தக்
குலமன் னவர் வாழும்
நாடு காடாய் நலமிக்க நைமி
சார ணிய மென்னும்
காடு நாடா யினதென்றுற்
சனத்தை யாரே கணக்கிடுவார்.

தேடுதனம் பூண் ஆடை முதல் அடங்கக் கொண்டு சேனையொடும்
கூடி அடங்க வருதலினுல் அந்தக் குலமன்னவர் வாழும்
நாடுகாடாய் நலம் மிக்க நைமிசாரணியம் என்னும்
காடுநாடாயினது என்றுல், சனத்தை யாரே கணக்கிடுவார்?

பொ: ஒவ்வொருவரும் ஈட்டிய செல்வம் அணிகலன்கள் ஆடை முதலிய எல்லாவற்றையும் உடன்கொண்டு சேனையொடும் சேர்ந்து நாட்டிலிருந்த எல்லோரும் வருதலினுல் அந்தச்

சூரிய குலமன்னவர் வாழ்கின்ற நாடு காடாகி, நன்மைமிக்க நைமிசாரணியம் என்கின்ற காடு நாடாயினது என்றால் அங்கு வந்து திரண்ட சனத்திரளை யார் கணக்கிட வல்லவர்கள்?

கு: தேடுதனம் என்றது, ஒவ்வொருவரும் முயன்று ஈட்டிய செல்வத்தை. அடங்கக்கொண்டு என்றது, முழுவதையும் உடன் எடுத்துக் கொண்டு என்றவாறு. நாட்டில் யாரும் இல்லாது எல்லோரும் வேள்வி காண நைமிசாரணியத்திற்கு வருதலால் என்பார் சேனையொடும் கூடி அடங்க வருதலினால் என்றார். நாட்டில் இருக்க வேண்டிய செல்வம் அணிவகைகளும் ஆடைகளும் முதலியன எல்லாமும் உடன்கொண்டு மக்களும் சேனையும் நைமிசாரணியத்திற்கு வந்ததனால் கோசல நாடு காடாயது. நாட்டிலிருக்க வேண்டிய எல்லாமும் நிரம்பப் பெற்றதால் அக் காடு நாடாகியது என்றவாறு. நாட்டில் உள்ள அத்துணை மக்களும் அங்குத் திரண்டிருந்தனர் எனப் பிண்டமாகக் கூறுதலின்றிக் கணக்கிட்டுச் சொல்ல யாராலும் இயலாது என்பார், 'சனத்தை யாரே கணக்கிடுவார்!' என்றார். சனம் வடசொல் திரிபு; மக்கள் என்பது பொருள். (105)

1075 தொக்க முனிவ ரானோரைத் தொழுது
தன்னைத் தொழுதோர்க்குத்
தக்க வுபசா ரஞ்சொல்லித் தழுவித்
தழுவிக் கொள்வோரை
மிக்க வுவகை யொடுந் தழுவி வேந்த
ரொடுமா முனிவரொடும்
ஒக்க விருந்து வில்லியவற் குவகை
சொல்லி யுவந்திருப்ப.

தொக்க முனிவர் ஆனோரைத் தொழுது, தன்னைத் தொழுதோர்க்குத்
தக்க உபசாரம் சொல்லித் தழுவித் தழுவிக் கொள்வோரை
மிக்க உவகையொடும் தழுவி, வேந்தரொடும் மாமுனிவரொடும்
ஒக்க இருந்து வில்லி அவற்கு உவகை சொல்லி உவந்து இருப்ப.

பொ: ஒருங்கே வந்து கூடியுள்ள முனிவர்களை வணங்கிப் பின்பு தன்னைத் தொழுதவர்கட்குத் தகுந்த உபசாரமொழிகளைச் சொல்லித் தழுவிக் கொண்டும், தன்னைத் தழுவிக் கொள்ளு வோரை மிக்க மகிழ்ச்சியோடும் தழுவிக் கொண்டும், வேந்தர் களோடும் முனிவர்களோடும் ஒருங்கே கூடியிருந்து இராமன் அவர்கட்கெல்லாம் மகிழ்ச்சி சொல்லிக் கொண்டும் மகிழ்ந்திருக்க,

கு: குளகம். வேந்தரினும் முனிவர்கள் உயர்ந்தோராதலின் மக்கள் முனிவர்களை முன்பு தொழலானார்கள். இராமன், தன்னைத் தொழுதவர்களை உபசாரமொழிகளைச் சொல்லித் தழுவியும் ஒத்த நிலையினராய்த் தொழுதலின்றித் தழுவிக் கொள்பவர்களைத் தானும் மகிழ்ச்சியொடும் தழுவிக் கொண்டும், சிறந்த வேந்த ரோடும் முனிவரோடும் ஒக்க இருந்து மகிழ்ச்சி மொழிபேசியும் தன் பேரன்பை மூவகையால் புலப்படுத்தினான் என்றவாறு. வில்லி என்றது, வில்லையுடைய இராமனை. (106)

## மன்னர்க்கும் பிறர்க்கும் தக்க இடம் அளித்தல்

1076 படிமன் னிய சீராமன்றாள் பணிந்தங்
கிருந்த பரிதி மணி
முடிமன் னவர்க்கு விடை கொடுப்ப
முன்னஞ் சமைந்த வீடத்தவர்கள்
விடும்வண் ணஞ்செய் தெல்லோர்க்கும்
வேறுவேறு சமைப்பித்த
கடிமன் னியசீ ரிடந்தோறுங் களிக்க
விடுவித் தானிளையோன்.

படி மன்னிய சீர்இராமன் தாள் பணிந்து அங்கு இருந்த பரிதிமணி முடி மன்னவர்க்கு விடை கொடுப்ப முன்னம் சமைந்த இடத் துஅவர்கள் விடும் வண்ணம் செய்து எல்லோர்க்கும் வேறுவேறு சமைப்பித்த கடிமன்னிய சீர்இடந் தோறும் களிக்க விடுவித்தான் இளை யோன்.

பொ: உலகத்தில் நிலைபெற்ற சிறப்பினையுடைய இராமனுடைய பாதங்களைப் பணிந்து அங்குத் தங்கியிருந்த சூரியனைப் போன்ற ஒளியுடைய மணிகள் பதித்த முடியையுடைய மன்னர்க்கு இராமன் விடை கொடுத்து அனுப்ப, இலக்குவன், முன்னமே அவர்கட்காக அமைக்கப்பெற்ற சிறந்த இடத்திற்கு அவர்களைத் தங்க விடும் வண்ணம் செய்துவிட்டு, அம்மன்னரோடு வந்த எல்லோர்க்கும் வேறுவேறாக செய்வித்திருந்த புதுமைநிலை பெற்ற சிறந்த இடங்கள்தோறும் அவர்கள் களிப்புக் கொள்ளுமாறு விடச் செய்தான்.

கு: படி-பூமி. இராமன் சீர் பூமி உள்ள அளவும் நிலைபெறத் தக்கது என்பார், "படிமன்னிய சீர் இராமன்" என்றார். மன்னர் தம் முடிமணியின் சிறப்புப் புலப்படுத்த வேண்டிப் 'பரிதி மணி முடி' என்றார். பரிதி மணி என்பதற்குச் 'சூரியகாந்தக் கல்' என்று பொருள்கூறலும் ஆம். முடிமன்னர்க்கென்று சிறப்புடன் மாடங்கள் அமைக்கப் பெற்றிருந்தன. ஆதலின் முன்னம் சமைந்த விடத்து அவர்களை விடும்வண்ணம் செய்தான் இளையோன். எல்லோர்க்கும் என்றது மன்னவரோடு வந்த பிறர் எல்லோர்க்கும் என்றவாறு. கடிமன்னியசீர் என்புழிக் கடி என்பது புதுமையை யுணர்த்தியது. தமக்கென்று கொடுத்த இடங்களின் சிறப்பு நோக்கி அவர்கள் உள்ளம் களித்தன என்பார், 'களிக்க விடுவித்தான்' என்றார். விடுவித்தான் என்பது பிறவினை. விடும் வண்ணம் செய்து என்பதும் பிறரைக் கொண்டு செய்து என்பதே கருத்தாகலின் பிறவினையாதல் காணலாம். (107)

## சனங்கள் உண்டுகளித்தல்

1077 மூட்டு முத்தீ யந்தணர்கண்
முதலா நீசர் கடையாக
ஈட்டுந் தனமார் பெருவேள்விக்
கிளையோன் சமைப்பித் திடுமமுதம்
காட்டு மடிசி றம்முடைய
காதன் மடவா ரன்பினெடும்
ஊட்ட வுண்ணு மாபோல
வுண்டு களித்தா ருறுசனங்கள்.

மூட்டும் முத்தீ அந்தணர்கள் முதலா நீசர் கடையாக
ஈட்டும் தனம்ஆர் பெருவேள்விக்கு இளையோன் சமைப்பித்திடும்
அமுதம்
காட்டும் அடிசில் தம்முடைய காதல் மடவார் அன்பினொடும்
ஊட்ட உண்ணுமாபோல உண்டு களித்தார் உறுசனங்கள்.

பொ: ஆகவனியம் காருக பத்தியம் தென்திசையங்கி என்
கின்ற மூன்று தீயையும் வேள்வி குண்டத்தில் மூட்டுகின்ற
அந்தணர்கள் முதலாக நீசர் இறுதியாக வந்து உள்ள மக்களுக்கு
எல்லாம், முயன்று ஈட்டுகின்ற செல்வம் நிறைந்துள்ள பெரிய
வேள்வியின் பொருட்டு இளையோனாகிய இலக்குவன் சமைக்கச்
செய்கின்ற அமுதத்தின் சுவையைக் காட்டுகின்ற உணவினைத்,
தம்முடைய காதல் மனைவி அன்பினோடும் ஊட்ட உண்ணுமாறு
போல உண்டுகளித்தார்கள்.

கு: மூத்தி மூட்டும் அந்தணர் என மாறுக. அந்தணர்
முதலாக நீசர் வரையில் உள்ள எல்லா சாதி மக்களும் உண்டு
களித்தார்கள் என்றவாறு. நீசர் கடையாக உறுசனங்கள் உண்டு
களித்தார் என இயையும். பெருவேள்வியின் பொருட்டு
இலக்குவன் சமைப்பித்திடும் அடிசில்-அமுதம் காட்டும் அடிசில்
எனத் தனித்தனி கூட்டுக. அடிசில் உண்டு களித்தார் என்க.
உறுசனங்கள் அடிசிலை உண்பதற்கு உவமை கூறுவாராய் "தம்மு
டைய காதல் மடவார் அன்பினொடும் ஊட்டஉண்ணுமாபோல"
என்றார். அமுதம் காட்டும் அடிசில் என்பது தேவர் அமுதின்
சுவையைப் புலப்படுத்துகின்ற அடிசில் என்றவாறு. இதனால்
அடிசிலின் சுவை மிகுதியைப் புலப்படுத்தியவாறு. சமைப்பித்திடும்
அடிசில் என்புழிச் சமைப்பித்தல், பிறவினை. இலக்குவன்
சமைத்தற்கு ஏவல் கருத்தாவாக இருந்தான் என்றவாறு.
உயர்ந்தோர் என்ற வேறுபாடின்றி எல்லோரும் உயர்ந்த உணவை
உண்டு களித்தார்கள் என்றவாறு. (108)

1078 வாட்ட மில்லா வரையொருமா
மந்த ரத்தை மத்தாக
நாட்டி வெய்ய வாசுகியா
மாநா கத்தை நாணுகப்

பூட்டி யாழி கடைந்தமிழ்தம்
புகழ வானோ ரானோரை
ஊட்டி னாற்கிவ் வுலகுள்ளோர்க்
கடிசி லூட்ட லொருபொருளோ.

வாட்டம் இல்லா வரை ஒருமா மந்தரத்தை மத்து ஆக
நாட்டி, வெய்ய வாசுகியாம் மா நாகத்தை நாண் ஆக,
பூட்டி ஆழி கடைந்து அமிழ்தம் புகழ வானோர் ஆனோரை
ஊட்டினாற்கு இவ்வுலகுள்ளோர்க்கு அடிசில் ஊட்டல் ஒரு
பொருளோ?

பொ: எக்காலத்தும் வாட்டமே இல்லாத மலையாகிய பெரிய மந்தர மலையை மத்தாக நட்டுக் கொடிய வாசுகியாகிய பெரிய பாம்பினைக் கடையும் கயிறாகப் பூட்டித் திருப்பாற் கடலைக் கடைந்து, அமிழ்தம் எடுத்து, மூவுலகும் புகழுமாறு தேவர்கட்கு ஊட்டிய திருமாலின் அவதாரமாகிய இராமனுக்கு, இந்த உலகில் உள்ள மக்களுக்கு உணவு ஊட்டுதல் ஒருபொருளாமோ? ஆகாது காண்!

கு: வெயிலாலும் மழையாலும் மற்றைப் பொருள்கள் வாடி நிலைவேறுபடும் அன்றே, மந்தரமலை அப்படியெக் காலத்தும் வாடுவதில்லை என்பார், 'வாட்டமில்லா வரை ஒருமா மந்தரத்தை'யென்றார். மந்தர மலையை மத்தாக நட்டு வாசுகியைக் கடை கயிறாகக் கொண்டு பாற்கடலைக் கடைதலும் அமிழ்தம் எடுத்தலும் உயர்ந்தோராகிய தேவர்கட்கு அதனை ஊட்டுதலும் எவராலும் செய்ய வியலாத செயல். அப்பெரிய செயலையே செய்து முடித்த இராமனுக்கு இவ்வுலகில் உள்ள மக்களுக்கு உணவு ஊட்டல் அருமையாகாது என்பார், 'அடிசிலூட்டல் ஒரு பொருளோ?' என்றார். வானோர்க்கு ஊட்டுதல் எப்படி அரிய செயலாகும் எனின் அசுரரும் கடையுந் தொழிலைச் செய்திருக்கவும் அவரைச் சூழ்ச்சியால் விலக்கி விட்டுத் தேவர்க்கு மட்டும் அமுதளித்தது அருஞ்செயலே யாகும் என்க. மலையும் பாம்பும் கடலுங்கொண்டு அரிதின் முயலவேண்டாது மடையர் களைக் கொண்டு எளிதில் சமைக்கும் தகையது அடிசிலாதல்

காணலாம். ஊட்டுதல்—உண்பித்தல்' இது கைமுதிக நியாயம் என்பர். (109)

## உண்ட மக்கள் பேச்சு
## வேறு

1079 பாலொடு தயிரு நெய்யும்
பலசுவைக் கறியுஞ்சோறும்
சாலைக டோறு முண்ட சனமெலாந்
தருக்கி மிக்குக்
கோலநீள் வில்லி கோதில் குணங்களை
யெடுத்துக் கூறி
வேலைசூ ழுலகி லிந்த
வேள்விபோற் காணேமென்றார்.

பாலொடு தயிரும் நெய்யும் பலசுவைக் கறியும் சோறும்
சாலைகள் தோறும் உண்ட சனம் எலாம் தருக்கி மிக்குக்
கோலநீள் வில்லி கோதுஇல் குணங்களை எடுத்துக் கூறி
வேலைசூழ் உலகில் இந்த வேள்விபோல் காணேம் என்றார்.

பொ: அன்னம் அளிக்கும் அன்னசாலைகள் தோறும் பாலும் தயிரும் நெய்யும் பலசுவையுடைய கறிகளும் சோறும் உண்ட மக்கள் எல்லாம், தருக்கினவர்களாய் மகிழ்ச்சி மிக்கு அழகிய நீண்ட வில்லையுடைய இராமனுடைய குற்றமற்ற குணங்களையே எடுத்துச் சொல்லிக் கடல் சூழ்ந்த இவ்வுலகில் இந்த வேள்வி போன்ற வேள்வியை எங்கும் என்றும் கண்டிலேம் என்று சொன்னார்கள்.

கு: பாலாகவும் அருந்தினமை புலப்படப் பாலொடு என ஒடுக்கொடுத்துப் பிரித்துக் கூறியவாறு. தயிரும் நெய்யும் கறியும் சோற்றுடன் சேர்த்து உண்ணத்தக்கவை. சுவை ஆறேயாயினும் செய்யும் அட்டில் தொழில்வன்மையால் ஒவ்வொன்றும் பல வகைப்படுதலின் பலசுவைக் கறியும் என்றார். சாலைகள் என்றது அன்னசாலைகளை. மக்கள் தொகைக்கேற்பப் பல அன்ன சாலைகளை

அமைத்திருந்தனர் என்றவாறு. தோறும் என்னும் இடைச்சொல் தன்னையேற்ற பெயர்ப் பொருளைப் பன்மையாக்கும் தன்மையது. இராமன் இட்ட அன்னத்தைச் சாலவுண்டு உணவின் சிறப்பால் தருக்குவாராயினர். அந்தத் தருக்கினுல் களிப்பு மிக்கு உணவிட்ட இராமன் குணங்களையே பேசுவாராயினர். இதற்குமுன் அசுவமேதத்தைச் செய்தார் உளரேனும் இவ்வளவு சிறப்பாகச் செய்திலர் ஆதலின், 'இந்த வேள்வி போற் காணேம்' என்பாராயினர் என்க. (110)

## மன்னர்க்கு இராமன் கொடை

1030 அரசருக் கமலன் பொன்னு
மாடையும் பூணு நல்கி
இரவிசேய் தனக்குஞ் சேய்க்கு
மிலங்கைமன் னவற்கு மன்று
பருதிமேற் பாய்ந்தோ னுக்கும்
படைத்தலை வருக்கும் பைம்பொற்
குருமணிப் பூணும் பொன்னும்
மாடையுங்குகற்கு மீந்தான்.

அரசருக்கு அமலன் பொன்னும் ஆடையும் பூணும் நல்கி இரவிசேய் தனக்கும் சேய்க்கும் இலங்கை மன்னவற்கும் அன்று பருதிமேல் பாய்ந்தோனுக்கும் படைத்தலைவருக்கும் பைம்பொன் குருமணிப் பூணும் பொன்னும் ஆடையும் குகற்கும் ஈந்தான்.

பொ: அமலனாகிய இராமன் அரசருக்கெல்லாம் பொன்னையும் ஆடையையும் ஆபரணங்களையும் கொடுத்து விட்டு, சூரியன் மகனாகிய சுக்கிரீவனுக்கும் அவன் மகன் அங்கதனுக்கும் இலங்கை மன்னவனாகிய வீடணனுக்கும் பிறந்த அன்றே சூரியன் மேல் பாய்ந்த அனுமனுக்கும் குகனுக்கும் சேனைத் தலைவர்கட்கும் பசுமையான பொன்னாலியன்ற நிறம் பொருந்திய மணிகள் பதித்த ஆபரணங்களையும் பொற்காசுகளையும் ஆடைகளையும் கொடுத்தான்.

கு: அமலன்-மலமாகிய அழுக்கு அற்றவன் இராமன். பருதி-சூரியன். பொன் என்றது பொற்காசுகளை. குகற்கும் என்பதைப் படைத்தலைவருக்கு முன் கூட்டியுரைக்கப்பட்டது. இராமனுக்குத் தம்பி முறையினனாகலின் அன்று என்றது, பிறந்த நாளினை-முன்னர்ப் பொதுவகையான் அரசர்கட்குக் கொடுத்தமை கூறிச் சிறப்பு வகையான் தன்னோடு நெருங்கிய தொடர்புடையவர்கட்குக் கொடுத்ததைப் பின்னர்க் கூறினர். (111)

## வறியவர்க்கு ஈதல்

1081 வறியவர் வேண்டிற் றெல்லாம்
வழங்குவன் வள்ளலென்றுங்
கெறிபறை யறைத லோடு
மிரவல ராஞே ரெல்லாம்
பறையறை யோசை கேட்டுப்
பழுமரந் தன்னில் வீழும்
பறவையின் மதுவீழ் தேனிற்
பலசனம் வந்து மொய்த்தார்.

வறியவர் வேண்டிற்று எல்லாம் வழங்குவன் வள்ளல் என்றுங்கு
எறிபறை அறைதலோடும் இரவலர் ஆனோர் எல்லாம்
பறை அறை ஓசைகேட்டுப் பழுமரம் தன்னில் வீழும்
பறவையின், மதுவீழ் தேனின் பலசனம் வந்து மொய்த்தார்.

பொ: 'பொருளற்ற வறியவர்கள் விரும்பிய எல்லாவற்றையும் இராமனாகிய வள்ளல் வழங்குவான்' என்று குறுந்தடி கொண்டு அடித்தற்குரிய பறையை அறைந்து சொல்லிய அளவில் இரவலர்கள் எல்லோரும் பறையறையும் ஓசையைக் கேட்டுவிட்டுப் பழுத்த மரத்தில் வந்து வீழும் பறவைகளைப் போலவும் தேனில் வந்து வீழ்கின்ற வண்டுகளைப் போலவும் இரவலராகிய மக்கள் பலர் வந்து மொய்த்துக் கொண்டார்கள்.

கு: பலசனம் என்றது, இரவலராகிய பல சனத்தையே யாம். குறுந்தடி கொண்டு அடித்தற்குரிய பறையை எரிபறை என்றார்.

பழுமரம்-பழுத்தமரம். பறவையின் என்புழி இன் உவமைப் பொருளது. தேனின் என்புழியும் அன்னதே. தேன் என்றது ஒருவகை வண்டிற்குப் பெயர். மொய்த்தல் என்பது இடமின்றி நெருங்கி நிற்றலே. வள்ளல் இராமன் பழுமரம் போன்று தேன் போன்று இருந்தான். அவன் பாற் பயன்பெற இரவலராகிய சனங்கள் அவன்பால் வந்து மொய்த்துக் கொண்டார்கள் என்க. (112)

1082 பொன்னைவேண் டினர்க்குப் பொன்னும்
பூமிவேண் டினர்க்குப் பூமி
பன்மணி வேண்டி னோர்க்கு
மணிகளும் பலவு மற்றும்
இன்னது வேண்டு மென்றாங்
கிரவல ராளுே ரெல்லாம்
சொன்னசொன் னவற்றை யெல்லாம்
தூமணி வண்ண னீந்தான்.

பொன்னை வேண்டினர்க்குப் பொன்னும் பூமி வேண்டினர்க்குப் பூமி
பல்மணி வேண்டினோர்க்கு மணிகளும் பலவும் மற்றும்
இன்னது வேண்டும் என்று ஆங்கு இரவலர் ஆனோர் எல்லாம்
சொன்ன சொன்னவற்றை எல்லாம் தூமணி வண்ணன் ஈந்தான்

பொ: பொன்னை விரும்பிக் கேட்டவர்க்குப் பொற்காசுகளையும் பூமி வேண்டினர்க்குப் பூமியையும் பலவகை மணிகளை விரும்பிக் கேட்டவர்க்கு மணிகள் பலவற்றையும் மேலும் இன்னது வேண்டும் என்று இரவலர்கள் சொன்னவற்றைச் சொன்ன படியே எல்லாவற்றையும் தூய மணிவண்ணனாகிய இராமன் கொடுத்தான்.

கு: வேண்டுவார் வேண்டுவனவற்றை யெல்லாம் இராமன் கொடுத்தான் என்பதே கருத்து. சொன்ன சொன்னவற்றை என்ற அடுக்குப் பன்மைக்கண் வந்தது. இரவலர்களுள் ஒவ்வொருவரும் வேண்டியதை வேண்டியாங்குக் கொடுத்தான்

இராமன் என்றவாறு. தூமணி வண்ணன் என்றது இராமனை. தூய நீலமணி போன்ற மேனியையுடைய இராமன் என்றவாறு. ஈந்தான் என்றசொல் இழிந்தோராகிய இரவலர்க்கு உயர்ந்தோனாகிய இராமன் ஈந்ததை உணர்த்தற்குரிய மரபுச் சொல்லாகும். (113)

## ஒரு முனிவன் வேண்டுகோள்

### வேறு

1083 ஆசை யற்றிடு தூயவ னனசன னாகி
நேச மற்றுயர் மேனிய னீரிடை மூழ்கிப்
பாசி பற்றிய நிறத்தினன் பல்லுயிர்க் காகக்
கூசி யெய்த்தடி யிடாதறக் குந்திய நடையான்.

ஆசை அற்றிடு தூயவன் அனசனன் ஆகி,
நேசம் அற்று உயர்மேனியன் நீரிடை மூழ்கி,
பாசி பற்றிய நிறத்தினன் பல்உயிர்க்கு ஆகக்,
கூசி எய்த்து அடி இடாது அறக்குந்திய நடையான்.

பொ: உலக ஆசைகள் ஏதும் இல்லாத தூயவன் ஒருவன் உண்ணாத நோன்பினனாகி, யாரிடமும் நேசம் இல்லாமல் உயர்ந்த மேனியை யுடையவனாய், நீரில் மூழ்கிப் பாசி படிந்த நிறத்தினையுடையவனாய்க் கண்ணில் காணப்படாத பல உயிர்கட்காக இரக்கங் கொண்டு அவற்றை மிதித்திடுவோமோ என்று கூசி இளைத்து அடியை விரைந்து வையாமல் குந்தி குந்தி நடக்கின்ற நடையையுடைவனாய்.

கு: அனசனன்-சோறு உண்ணாத விரதத்தை யுடையவன் மனைவி மக்கள் யாரும் இல்லாமையாலே யாரிடமும் நேசம் கொள்ளாதவன் என்பார், 'நேசமற்றுயர் மேனியன்' என்றார். பாசிபடிந்த நீர் நிலையில் பலமுறை மூழ்கியதால் அவன் மேனி பாசி பற்றிய மேனியாயது என்க. தரையில் அடிவைக்கும்போது தம் அடிக்கீழ் அகப்பட்டு எத்தனை நுண்ணுடம்புள்ள உயிர்கள் மாய்ந்திடுமோ என்று அஞ்சி அஞ்சிச் சரியாக அடிவைத்து நடக்காமல் குந்தி நடக்கின்ற நடையினன் என்றவாறு. குளகம். அன்ன மாமுனி என வருஞ் செய்யுளில் தொடரும். (114)

1081 அன்ன மாமுனி யண் ணலே
யடைந்தவ னறைவான்
பொன்னும் பூமியும் பொருள்களு
மெனக்கென்கொல் புகலாய்
உன்னை வேண்டுவ துண்டெனக்
குடுக்கலா குவதோர்
மன்னர் மன்னனே மரவுரி
வழங் கென வுரைத்தான்.

**அன்ன மாமுனி, அண்ணலே அடைந்தவன் அறைவான்:-**
**'பொன்னும் பூமியும் பொருள்களும் எனக்குஎன்கொல் புகலாய்!**
**உன்னை வேண்டுவது உண்டு; 'எனக்கு உடுக்கலாவது ஓர்**
**மன்னர் மன்னனே! மரஉரி வழங்கு' என உரைத்தான்.**

பொ: அத்தகைய சிறந்த முனிவன் அண்ணல் இராமனை அடைந்தவனுய்ச் சொல்வான்:- "மன்னர் மன்னனே! பொன்னும் பூமியும் மற்றுள்ள பொருள்களும் முற்றும் துறந்த எனக்கு என்ன பயன் உடையன? சொல்வாயாக! (அவற்றுல் யாதும் பயனில்லே. எனவே) உன்னை வேண்டுவது ஒன்று உண்டு. எனக்கு உடுத்துக் கொள்ளக் கூடிய ஒரு மரவுரியை வழங்கு வாயாக' எனச் சொன்னுன்.

கு: அண்ணல்-பெருமையுடையவன். அடைந்தவனுய் அறைவான் என முற்றெச்சமாக்கி முடிக்க. எனக்கு என்றது முற்றும் துறந்த எனக்கு என்னும் கருத்தினது. பொன்னும் பூமியும் மற்றைய பொருள்களும் இல்லறத்தாரர்ய்ப் பற்றுக் கொண்டவர்க்கே பயன்படுவன என்பான், 'பொன்னும் பூமியும் பொருள்களும் எனக்கென்?' என்றுன். எனக்கு உடுக்கலாவதோர் மரவுரி என இயையும். வழங்கு என்பது கொடு என்னும் பொருளது. (115)

1085 கடுத்த தீவினை கடிந்தவன்
கழறிடக் கேட்டுத்
தடுக்க வொண்கலா வுவகையன்
றசரத ராமன்
உடுக்க லாவன மரவுரி
யொருசக டுருட்டி
எடுத்து விட்டவற் கினிதுரைத்
திராகவ னிருப்ப.

கடுத்த தீவினை கடிந்தவன் கழறிடக் கேட்டுத்,
தடுக்க ஒண்கலா உவகையன் தசரத ராமன்
உடுக்கலாவன மரஉரி ஒசகடு உருட்டி
எடுத்து விட்டு அவற்கு இனிது உரைத்துஇராகவன் இருப்ப.

பொ: கடுமையான தீவினைகளை நீக்கினவனாகிய அம் முனிவன் சொல்லக் கேட்டுத் தசரதராமன், தடுக்கவொண்ணாத பெரு மகிழ்ச்சியுடையவனாய் உடுத்துக் கொள்ளக்கூடிய மரவுரி ஒரு வண்டி நிறையப் பெய்து உருட்டிக் கொணர்ந்து நிறுத்தச் செய்து எடுத்து அம்முனிவனுக்குக் கொடுத்துவிட்டு இனிய சொற்களைச் சொல்லிவிட்டு இராகவன் அமர்ந்திருப்ப.

கு: குளகம். கடுத்தல்-கடுமையாதல். கழறுதல்-சொல்லுதல். உவகை-மகிழ்ச்சி; தடுக்க இயலாத உவகை என்றது பெருமகிழ்ச்சியை. மேல் தசரதராமன் என்ற பெயர் வந்திருக்கவும் இராகவன் என்ற பெயர் மீளவும் வந்துளது கூறியது கூறல் அன்று சுட்டின் பொருளது. அல்லது தசரதராமனாகிய இராகவன் என இயைத்துக் கூறலும் ஆம். மரவுரி ஒன்றுகேட்ட முனிவனுக்கு வண்டி நிறைய ஏற்றி வந்த மரவுரிகளைக் கொடுத்தான் என்றது இராமனது கொடை மிகுதியை யுணர்த்தியவாறு. சகடு-வண்டி. உருட்டி என்றது மரவுரி நிறைந்த வண்டியை ஓட்டிவரச் செய்து என்னும் பொருளது. எடுத்து விடுதல் என்றது, எடுத்துக் கொடுத்து என்னும் பொருளது. (116)

## கமண்டலம் கொடுத்தல்

1086 ஓது வேதமோ ருருவுகொண்
டனவெனு மொருவன்
பூத மைந்தொடு பொருந்திய
வுயிரெலாந் தம்மில்
பேத மின்றியே கண்டிடும்
பெருந்தவ முனிவன்
கோதி னீதியான் கொடுத்தன
கொள்கலான் கூறும்.

ஓதுவேதம் ஓர் உருவுகொண்டன எனும் ஒருவன்
பூதம் ஐந்தொடு பொருந்திய உயிர் எலாம் தம்மில்
பேதம் இன்றியே கண்டிடும் பெருந்தவ முனிவன்
கோது இல் நீதியான் கொடுத்தன கொள்கலான் கூறும்.

பொ: ஓதுதற்குரிய வேதங்களே ஒரு வடிவு கொண்டன என்று சொல்லுதற்குரிய புலமை வாய்ந்த ஒருவன்- ஐம்பூதங்களோடு இயைபு கொண்டுள்ள உடம்பொடு கூடிய உயிர்கள் எல்லாவற்றையும் தமக்குள் வேறுபாடு இல்லாதனவாகக் காண்கின்ற பெரிய தவமுனிவன், குற்றமற்ற நீதியை மேற் கொண்டவனாகிய இராமன் இயல்பாகக் கொடுக்கின்ற பொன் முதலியனவற்றை ஏற்றுக் கொள்ளாமல் சொல்லுகின்றான்.

கு: வேதம் கரை கண்டவன் என்னும் கருத்தால் 'வேதமோர் உருவுகொண்டன எனும் ஒருவன்' என்றார். உலகப் பொருள்கள் யாவும் ஐம்பூதங்களின் பரிணாமமேயாதலின் அவற்றுள் வேறுபாடு காணாது ஒருதன்மையவாகக் காண்கின்றவன் என்றவாறு. உயிர் என்றது உடம்போடு கூடிய உயிரினை. தனித்த உயிர்க்குப் பூதங்களோடு தொடர்பின்மை தெளிவு. பேதம்- வேறுபாடு. கோதில் நீதியான் என்றது இராமனை. அவன் கொடுத்தன இவையெனக் கூறாவிடினும் பொன்னும் அணியும் ஆடையும் என்றுகொள்ளலாம். என்னை மற்றவர்க்கு இவற்றை கொடுத்தமை முன்கூறப் பட்டிருத்தலான் என்க. (117)

1087 நெய்க்கும் பூவைவீ நிறத்தினேய்
நீயெனைக் கொள்கென்
றுய்க்கும் பல்பெருந் தனத்தினு
லொருபய னில்லை
வய்க்கும் போதுரு ளாதது
வலியதூக் கினதாக்
கய்க்கு நொய்யதோர் கமண்டலம்
வேண்டுமென் றுரைத்தான்,

"நெய்க்கும் பூவைவீ நிறத்தினேய் நீ எனைக் கொள்கென்று
உய்க்கும் பல்பெருந் தனத்தினுல் ஒருபயன் இல்லை
வய்க்கும்போது உருளாதது, வலிய தூக்கினதாக்
கய்க்கு நொய்யது ஓர் கமண்டலம் வேண்டும்" என்று உரைத்தான்.

பொ: நெய்ப்புத்தன்மை பெற்றுள்ள காயாம்பூ போன்ற நிறத்தினை உடைய இராம! நீ என்னை ஏற்றுக் கொள்க என்று கொடுக்கின்ற பல பெரிய செல்வத்தினுல் எனக்கு ஒரு பயனும் இல்லை. தரையில் வைக்கும்போது உருளாததும் வலிமையான தூக்கினையுடையதும் கைக்குக் கனமில்லாமல் இருப்பதும் ஆன ஒருகமண்டலம் வேண்டும் என்று சொன்னேன்.

கு: பூவை-காயாம்பூ. காசாம்பூ என்பர் இக்காலத்து. உய்த்தல்-செலுத்துதல்; இங்குக் கொடுத்தலை உணர்த்தியது. ஓடும் பொன்னும் ஒப்பவே நோக்கும் துறவுள்ளம் உடைய வராதலின் "பெருந்தனத்தினுல் ஒரு பயனில்லை" என்ருர். வய்க்கும் கய்க்கும் என்பன எதுகை நோக்கிப் போலியாக வந்தன. நொய்யது என்பது கனமில்லாதது என்றவாறு. கமண்டலம் என்பது, முனிவர்கள் தண்ணீர் சேமித்து வைக்கும் ஒருவகைப் பாத்திரம். இது கையில் தூக்கிச் செல்லுதற்குரிய வளையம் கொண்டதாக இருக்கும். பொன்னில் பொருளில் பற்றில்லாத இம் முனிவர்க்கு இந்தக் கமண்டலத்தின் தேவை இருந்தது; காரணம் உயிர் வாழ்க்கைக்குரிய நீர் சேமித்து வைக்கும் பாத்திரமாக இருத்தலின் என்க. (118)

1088 பொருந்து மாமணி புனைந்துசெம்
பொன்னினாற் சமைத்துத்
திருந்து பேரெழிற் கமண்டலஞ்
சீதரன் கொடுப்ப
அருந்த வன்பெரி தகமகிழ்ந்
தவனொடு மினிதா
இருந்த வேலையி னிருந்தவ
னொருவனீ தியம்பும்.

பொருந்தும் மாமணி புனைந்துசெம் பொன்னினால் சமைத்துத்
திருந்து பேர்எழில் கமண்டலம் சீதரன் கொடுப்ப,
அருந்தவன் பெரிது அகம் மகிழ்ந்து அவனொடும் இனிதா
இருந்த வேலையின் இருந்தவன் ஒருவன் ஈது இயம்பும்.

பொ: பொருத்தமான சிறந்த மணிகளைக் கொண்டு அலங்கரித்துச் செம்பொன்னினால் செய்து, திருத்தமான பேரழகையுடைய கமண்டலத்தை இராமன் கொடுப்ப, பெரிதும் மனமகிழ்ந்தவனாகிய அருந்தவ முனிவனொடும் இனிதாக உரையாடிக் கொண்டு இருந்த அமையத்தில் பெரிய தவமுனிவன் வந்து இதைச் சொல்லுவான்.

கு: கமண்டலம் பொன்னாற் செய்யும்போது அதில் சிறந்த மணிகளைப் பொருந்துமிடங்களில் பதித்துச் சிறப்பாகச் செய்யப்பட்டது என்பார், "பொருந்து மாமணி புனைந்து செம் பொன்னினாற் சமைத்துத் திருந்து பேரெழிற் கமண்டலம்" என்றார். சீதரன் என்றது திருமாலின் அமிசமாக வந்துள்ள இராமனை. தான் கருதிய கமண்டலத்தினும் சிறப்பாக அமைந்துள்ளது இராமன் கொடுத்த கமண்டலம் ஆதலின், அருந்தவன் பெரிதும் அகமகிழ்ந்தான் என்க. பெரிதக மகிழ்ந்த அருந்தவனொடு என மாற்றிப் பொருள் கொள்க. (119)

## பொன் அம்மனைக்காய் கொடை

1089 பன்னு சீர்த்தியாய் பாரியைத்
தானதி பாலை
சொன்ன வார்த்தையொன் றுண்டது
சொல்லுவென் கேட்டி
மன்னர் மன்னனை வள்ளலை
யிராமனைக் கண்டால்
பொன்னி னம்மனை வேண்டுதி
யெனக்கெனப் புகன்றாள்.

"பன்னு சீர்த்தியாய்! பாரியைத் தானதி பாலை
சொன்ன வார்த்தை ஒன்று உண்டு அது சொல்லுவென் கேட்டி!
மன்னர் மன்னனை-வள்ளலை - இராமனைக் கண்டால்
பொன்னின் அம்மனை வேண்டுதி எனக்கு" எனப் புகன்றாள்.

பொ: பலவாறு சொல்லப்படுகின்ற மிக்கபுகழையுடைய வனே! என் மனைவி மிகவும் இளையவள்; அவள் சொன்ன வார்த்தை ஒன்று உண்டு. அதுவென்னவென்றால் சொல்கின்றேன் கேள். மன்னர் மன்னனும் வள்ளலும் ஆக உள்ள இராமனைக் கண்டால் பொன்னாலியன்ற அம்மனைக் காய் வேண்டும் எனக்கு என்றுகேள்; எனச் சொன்னாள்.

கு: பன்னுதல்-பலகால் சொல்லுதல். அதிபாலை-மிகவும் இளையவள். மன்னர் மன்னனை-வள்ளலை-இராமனை என்பன ஒரு பொருட் பல்பெயர். பொன்னால் அம்மனை கொடுத்தற்குரிய செல்வமுடையவன் என்பாள், 'மன்னர் மன்னன்' என்றும் கொடுத்தற்குரிய உள்ளமுடையவன் என்பாள், வள்ளல் என்றும் எல்லோர்க்கும் இனிது செய்கின்றவன் என்பாள் இராமன் என்றும் கூறினாள். (120)

1090 சோதி மாமணி துன்றலிற்
சுடர்விடு தொழில
வேத பாரகன் வியந்திட
வாங்கவன் விரும்பும்
மாத ராளிரு கைதொறு
மாறியா டிடவன்
றாதி நாயக னம்மனை
வேண்டுவ வளித்தான்.

சோதி மாமணி துன்றலின் சுடர்விடு தொழில
வேத பாரகன் வியந்திட ஆங்கு அவன் விரும்பும்
மாதராள் இருகை தொறும் மாறி ஆடிட அன்று
ஆதிநாயகன் அம்மனை வேண்டுவ அளித்தான்.

பொ: வேதம் கரைகண்ட அந்தணன் வியப்புறுமாறு அங்கு அவன் விரும்பும் மனைவி இருகைகளிலும் மாறி மாறி ஆடுதற்கு, ஒளிமிக்க சிறந்த மணிகள் நெருங்கப் பதிக்கப் பெற்றிருத்தலால் சுடர்வீசுகின்ற வேலைப்பாடுடைய அம்மனைக் காய்களை அன்று ஆதிநாயகனாகிய இராமன் அவன் விரும்பிய அளவு மிகுதியாகக் கொடுத்தான்.

கு: துன்றுதல்-நெருங்குதல். வேதபாரகன்–வேதங்களைப் படித்துக் கரை கண்டவன். தொழில அம்மனை என இயையும். தொழில குறிப்புப் பெயரெச்சம். வியந்திட, ஆடிடச் சுடர்விடு தொழில அம்மனை ஆதிநாயகன் வேண்டுவ கொடுத்தான் எனக் கொண்டு கூட்டுக. அம்மனையென்றது அம்மனைக்காயினை. ஆதி நாயகன் என்றது, இராமனை. இருகை என்பதற்கு இரண்டு பக்கமும் என்று பொருள் கொண்டு, தன்பக்கம் எதிர்பக்கம் ஆகிய இருபக்கத்திலுள்ளோரும் மாறி' மாறி ஆடிட எனக்கூற லும் ஆம். அம்மனை ஆடுதல் என்பது பெண்டிர் இருவர் எதிர் எதிர் அமர்ந்து ஆடுதல் என்பது இங்கு நினைதல் தகும். (121)

## தன் மனைவிக்கு அஞ்சிய வேதியன்

1091 மருடனைப் பெற்ற மாதராள்
சீறிய பொழுது
கருடனைக் கண்ட பாம்புபோற்
கலங்குவோ னவடன்
அருடனைப் பெற்ற போதற
வாழ்ந்துவீற் றிருப்போன்
குருட னொப்பவக் கொடியவள்
படுகுழி வீழ்ந்தோன்.

மருள்தனைப் பெற்ற மாதராள் சீறிய பொழுது
கருடனைக் கண்ட பாம்புபோல் கலங்குவோன் அவள்தன்
அருள்தனைப் பெற்றபோது அறவாழ்ந்து வீற்றிருப்போன்
குருடன் ஒப்ப அக்கொடியவள் படுகுழி வீழ்ந்தோன்.

பொ: (கணவனுக்கு அடங்கி நடக்க வேண்டும் என்கின்ற தெளிவு இல்லாமல் கணவனை அடக்கி ஆள வேண்டும் என்ற) மருட்சியையுடைய மனைவியாகிய பெண்டு கோபித்த பொழுது கருடனைக் கண்ட பாம்பினைப் போலக் கலங்குகின்றவனும் அவளுடைய அருளைப் பெற்ற போது முழுமையாக வாழ்ந்து கொண்டு வீற்றிருப்பவனும் குருடனைப் போல அந்தக் கொடியவள் என்கின்ற படுகுழியில் வீழ்ந்தவனும்.

கு: மருள்-மயக்க அறிவு. நெறியல்லா நெறியில் செல்கின்றவள் ஆதலின் அவளை மருடனைப் பெற்ற மாதராள்' என்று கூறினர். கருடனைக் கண்ட பாம்பு பயந்து ஒடுங்குவது போல இவன், மனைவி சீறியபொழுது கலங்கி ஒடுங்குவான் என்றவாறு. தன் பணிவுடைமையால் அவளுடைய அருளைப் பெற்ற போழ்து கலக்கமின்றி இன்பமான முழுவாழ்வு வாழ்கின்றவன் என்பார், 'அவடன் அருடனைப் பெற்ற போது அறவாழ்ந்து வீற்றிருப் போன்' என்றார். படுகுழியறியாது அதில் வீழ்ந்து அழிகின்ற நிலை குருடனுக்கு ஏற்படும். அந்தக் குருடனைப் போல நெறியும்

நெறியல்லதும் தெரியாது இவன் தன் மனைவியாகிய படுகுழியில் வீழ்கின்றவன் என்றவாறு. குளகம். வருஞ்செய்யுளில் முடியும். (122)

1092 தீதென் றுள்ளன வெவற்றினுஞ்
சிந்தைசெல் லாதோன்
சாது வேதியன் றன்மனை
புகுந்துதான் கொண்ட
மாத ராடனை வல்விரைந்
தெய்தியான் மாதே
ஏது வேண்டுவெ னிராமனை
யெனவவ ளியம்பும்.

தீது என்று உள்ளன எவற்றினும் சிந்தை செல்லாதோன்
சாது வேதியன் தன்மனை புகுந்து தான்கொண்ட
மாதராள்தனை வல்விரைந்து எய்தி, 'யான் மாதே!
ஏது வேண்டுவென் இராமனை' என அவள் இயம்பும்.

பொ: தீமையானது என்றிருக்கும் எவற்றினும் சிந்தையைச் செலுத்தாத சாதுவாகவுள்ளவனுமாகிய வேதியன் ஒருவன், தன் மனையில் புகுந்து தான் மனைவியாகக் கொண்ட மாதினை மிக விரைந்து அடைந்து, மாதே! யான் இராமனைக் கண்டு எதனைக் கேட்பது என்று வினவ, அவள் சொல்வாள்.

கு: தீமையே செய்தறியாது பழகியவன் என்பார், 'தீது என்று உள்ளன எவற்றினும் சிந்தை செல்லாதோன்' என்றார். தன் விருப்பம் போலச் செய்தற்குரிய ஆடவனுயிருந்தும் தான் மனைவியாகக் கொண்ட பெண்ணிடம் யோசனை கேட்கின்றனே என்ற இழிவுக் குறிப்புத் தோன்றத் 'தான் கொண்ட மாதராள் தனை' என்றார். மாதே! யான் இராமனை ஏதுவேண்டுவென் எனக் கொண்டு கூட்டுக. (123)

1093 நெஞ்சிற் றூயனு நிறைகுணத்
திராமனைக் கண்டால்
அஞ்சிப் பல்லிளித் தசடனு
யகலநில் லாதை
பஞ்சிற் பாழ்த்த நம் மிடிசொலிப்
பலவும் வேண்டாதை
கஞ்சிக் குக்கலப் பயறுவேண்
டுதிகடி தென்றாள்.

நெஞ்சில் தூயனும் நிறை குணத்து இராமனைக் கண்டால்
அஞ்சிப் பல் இளித்து அசடனாய் அகல நில்லாதை;
பஞ்சில் பாழ்த்தநம் மிடிசொலிப் பலவும் வேண்டாதை;
கஞ்சிக்குக் கலப்பயறு வேண்டுதி கடிது என்றாள்.

பொ: மனத்தில் தூய்மையுடையவனும் நிறைந்த குணத்தை யுடையவனுமாகிய இராமனைக் கண்டால் அஞ்சிப் பல்லை இளித்துக் கொண்டு அசடனைப் போலத் தொலைவில் நிற்காதே; காற்றில் அகப்பட்ட பஞ்சினும் பாழ்பட்டிருக்கின்ற நமது வறுமையைச் சொல்லிப் பலவற்றை வேண்டாதே; தாமதிக்காமல், கஞ்சிக்குக் கலப்பயறு வேண்டுவாயாக! என்று சொன்னாள்.

கு: தன்கணவனிடம் தன் தலைமை தோன்றக் கூறுகின்ற பார்ப்பனியின் பேச்சுப் பாணியில் நில்லாதை, வேண்டாதை என ஐகார ஈறாகக் கூறியுள்ளார். பல்லிளித்தல் என்பது பல்லெலாந் தெரியக்காட்டும் இரவலர் இயல்பினைக் குறிப்பிட்டவாறு. அசடன்- சோம்பேறி. அகலநிற்றலாவது அணுகி நில்லாது தொலைவில் நிற்றல். காற்றில் அகப்பட்ட பஞ்சினைக் காட்டிலும் அலைக் கழிக்கப்படுகின்ற வறுமை என்பார், 'பஞ்சிற் பாழ்த்த நம்மிடி' என்றார். இன், உறழ்ச்சிப் பொருளது. பலவும் வேண்டினால் ஒன்றும் கிடைக்காதோ என்ற அச்சத்தால் 'பலவும் வேண்டாமல் கஞ்சிக்குக் கலப்பயறு வேண்டுதி' என்று உறுதியாகக் கூறினாள். கேட்பதிலும் தாமதம் கூடாது என்ற கருத்தால் 'கடிது' என்றும் கூறினாள்.

(124)

1094 என்று கூறலு மிராமனை
வேதிய னெய்தி
நின்ற போதவன் வறுமையை
நிமலனு நினைந்து
குன்று போற்றனங் கோனிரை
கொடுத்திட விவையான்
ஒன்றும் வேண்டலேன் காரணங்
கேளென வுரைக்கும்.

என்று கூறலும் இராமனை வேதியன் எய்தி
நின்ற போது, அவன் வறுமையை நிமலனும் நினைந்து,
குன்றுபோல் தனம் கோனிரை கொடுத்திட இவை யான்
ஒன்றும் வேண்டலேன், காரணம் கேள் என உரைக்கும்.

பொ: என்று தன் மனைவி சொன்னஅளவில் அந்த வேதியன் இராமனை அடைந்து நெருங்கி நின்றபோது, அவன் வறுமையை நிமலனாகிய இராமன் நினைந்து குன்று போன்ற தனக்குவியலையும் ஆன் நிரையையும் கொடுத்திட (அவற்றைக் கொள்ளாமல்) 'யான் இவை ஒன்றும் விரும்பவில்லை; அதற்குக் காரணம் கேள்' என்று சொல்லுகின்றான்.

கு: எய்திநிற்றல் - நெருங்கி நிற்றல். இதுவும் மனைவியின் சட்டளை. 'அகல நில்லாதை' என்றது காண்க. நிமலன் என்றது இராமனை. இரப்பவன் நிலைமையை நினைந்து அவன் கேளாமலே தனமும் நிரையும் மிகுதியாகக் கொடுத்தான் இராமன். ஆனால், அந்த அந்தணனே 'இவையான் ஒன்றும்வேண்டலேன்' என்று கூறி மறுத்துவிட்டான். அதற்குக் காரணமும் சொல்கின்றான் என்றவாறு. கோனிரை-பசுக்கூட்டம். கோனகரச் சாரியைப் பெற்றுக்கோன் ஆயிற்று. குளகம். (125)

1095 மாரி தட்டறப்பெற்றும் பெறுவன்
பயிரென வென்
பாரி கஞ்சிக்குப் பயறு
வேண்டினள் கலமொழிய

வீரர் வீரனே வேறொரு
　　பொருளை வேண்டுவனேல்
சேர லாளவ ளென்றொடுஞ்
　　சீறுமென் றுரைப்ப.

'மாரி தட்டுஅறப் பெற்றும்பெருவன் பயிர்என என்
பாரி, கஞ்சிக்குப் பயறு வேண்டினள் கலம் ஒழிய
வீரர் வீரனே! வேறு ஒரு பொருளை வேண்டுவனேல்
சேரலாள் அவள் என்னோடும் சீறும்' என்று உரைப்ப.

பொ: 'வீரர்க்குள் வீரனே! மழையைத் தட்டுப்பாடு இல்லா மல் பெற்றும் வேண்டிய நீரைப் பெறாத வன்னிலமாகிய மேட்டு நிலத்துப் பயிர்போல என் மனைவி, (வேண்டிய பொருளை யெல்லாம் வாரிக் கொடுக்கும் வள்ளலாகிய நின்னைப் பெற்று வைத்தும் பெரும்பொருளை வேண்டாது) கஞ்சிக்குக் கலப் பயறு வேண்டினாள்; கலப் பயறு ஒழிய வேறு ஒரு பொருளை யான் வேண்டுவேனாயின் அவள் என்னொடும் சேரமாட்டாள்; மேலும் என்னைக் கண்டு சீறுவாள்' என்று சொல்ல,

கு: இராவணன் மூவுலகாண்ட பெருவீரன். அவனைக் கொன்ற இராமன் வீரர் வீரனாகின்றான். வன்பயிர் என்றது மேட்டு நிலமாகிய வன்னிலத்துப் பயிரை. மேட்டு நிலத்தில் நீர் நில்லாது பள்ளம் கண்டு ஓடிவிடும் ஆகலின் மாரிதட்டறப் பெற்றும் தனக்கு வேண்டிய நீரைப் பெறாது வன்னிலத்துப் பயிர் வாடும். மாரி போன்று வாரிக் கொடுக்கின்ற வள்ளலைப் பெற்றிருந்தும் வேண்டிய பொருளை யீண்டப் பெறாது கலப் பயறு மட்டுமே வேண்டிய மனைவி வன்பயிர்போன்றவள் என்றவாறு. (126)

1076 அவாவில் வேதிய னசத்தவள்
　　கூறிய வதனைச்
சுவாவி யாமறை யாதுசொல்
　　லினனிவ னென்று

தவாநெ டுங்கொடைத் தசரத
ராமனும் மகிழ்ந்து
சவாச னங்களுந் தானுமே
மகிழ்ந்துகொண் டாடி.

அவாஇல் வேதியன் அகத்தவள் கூறிய அதனைச்
சுவாவியா மறையாது சொல்லினன் இவண் என்று
தவாநெடுங் கொடைத் தசரத ராமன் உள்மகிழ்ந்து
சவா சனங்களும் தானுமே மகிழ்ந்து கொண்டாடி.

பொ: தனக்கு என ஒரு ஆசைஇல்லாத வேதியன், தன் மனைவி சொல்லியதை இயல்பாக மறைக்காமல் இங்குச் சொன்னான் என்றுதப்பாத பெரிய கொடையாளனாகிய தசரதராமன் உள்ளத்தே மகிழ்ந்து பின்பு சபையில் உள்ள சனங்களும் தானுமாய் மகிழ்ந்து பாராட்டி.

கு: அகத்தவள் என்றது, மனைவியை. சுவாவியா-சுபாவமாக-இயல்பாக. இவண்-இவ்விடந்து. தவா-தப்பாத. நெடுங்கொடை, என்றது பெருங்கொடையை. தசரதராமன் என்பது பெயர். கொடை இராமனுக்கு அடை. வேதியன் கூறிய சொல்லைக்கேட்ட இராமன் முன்பு தன்னுள் மகிழ்ந்தான் என்றும் பின்பு அவையில் உள்ளோர்களோடு கலந்து மகிழ்ந்து கொண்டாடினான் என்றும் கொள்க. சபையில் உள்ள மக்கள் என்ற பொருளில் 'சவாசனங்கள்' என்றார் வடசொற்றொடர். சுவாவியா என்பதும் வட சொல் (127)

1097 காயும் வெவ்வினைக் கலைவலோன்
மனையினுள் கஞ்சிக்
காய நெல்லுநா றுயிரக்
கலம்பெற வருளித்
தூய நற்பய றத்தொகை
கொடுத்திடச் சொல்லி
நாயகன் றிகழ் நற்றவற்
களித்திடுங் காலை.

காயும் வெவ்வினைக் கலைவலோன் மனையினாள் கஞ்சிக்கு
ஆய நெல்லு நூறுயிரக்கலம் பெற அருளித்
தூய நற்பயறு அத்தொகை கொடுத்திடச் சொல்லி
நாயகன் திகழ் நற்றவற்கு அளித்திடும் காலை.

பொ: கொடிய வினைகளை வெறுத்து விடுத்தவனும் கலைகளில் வல்லவனும் ஆகிய வேதியனுக்கு மனைவி கஞ்சிக்கு வேண்டிய நெல் நூறு ஆயிரம் கலம் பெறுமாறு கொடுத்துத் தூய்மையான நல்ல பயறும் ஆயிரம் கலம் கொடுந்திடச் சொல்லி உலக நாயகனாகிய இராமன் விளக்கமுடைய நல்ல தவமுடைய வேதியனுக்கு அருள்செய்யும் காலத்து.

கு: வெவ்வினை காயும் கலைவலோன் என இயையும். காயும் என்றது, வெறுத்து விடுவதை யுணர்த்தியது. வினைகளை வென்றவன் என்பது கருத்து. 'மனையினாள் பெற அருளி' என இயையும். கஞ்சிக்குப் பயறு மட்டும் போதாது என்ற கருத்தால் நூறுயிரம் கல நெல்லும் அந்த அளவு பயறும் கொடுத்திடச் சொல்லி அருளினான் இராமன். திகழ்நற்றவன் என்றது, அந்த மனைவிக்கு அஞ்சும் வேதியனையே. அவன் தவம் விளக்கமுடைய நல்ல தவம் என்றவாறு. மனையினாள் பெறுமாறு நெல்லு நூறுயிரக் கலமும் பயறு அத்தொகையும் கொடுத்திடச் சொல்லி நாயகன் நற்றவற்கு அளித்திடல் என்றது மனைவி பெறுமாறு வேதியனிடம் அளித்தான் இராமன் என்றவாறு. (128)

1098 இஞ்சை பொய்முதல் கடிந்தவோ
ரிருபிறப் பாளன்
மஞ்சை விஞ்சிய நிறத்தினேய்
மாகதி தனக்கு
நஞ்ச மாகிய பொருளிலோர்
நசையிலை யெனக்குப்
பஞ்ச கவ்வியங் கொள்ளவோர்
பசுவரு ளென்றான்.

இம்சை பொய் முதல் கடிந்தஓர் இருபிறப்பாளன்
மஞ்சை விஞ்சிய நிறத்தினேய்! மாகதி தனக்கு
நஞ்ச மாகிய பொருளில் ஓர் நசை இலை எனக்குப்
பஞ்சகவ்வியம் கொள்ள ஓர் பசு அருள் என்ருன்.

பொ: கொலை, பொய் முதலிய ஐம்பெரும் பாவங்களை நீக்கிய ஒரு பார்ப்பனன்: "மேகத்தைவென்ற திறத்தினையுடையவனே! பெரிய கதிக்குப் பகையாய் நஞ்சுபோன்ற பொருளில் ஒருவிருப்பம் இல்லை; எனக்குப் பஞ்சகவ்வியம் கொள்ள ஓர் பசு அருள்க" என்று கூறி இராமனை வேண்டுகின்ருன்.

கு: இம்சை - கொலை. பொய்முதல் என்றமையால் காமம், கள், சூது என்பன கொள்ளப்படும். உபநயனம் ஆதற்கு முன் சூத்திரனுக இருந்து ஆன பின்பு அந்தணனுகின்ருன் ஆதலின் அந்தணன் இருபிறப்பாளன் எனப்பட்டான். மஞ்சு-மேகம். விஞ்சுதல்-மிகுதல்; வெல்லுதல். பொருளில் பற்றுள்ளவர்கள், முத்தியடையார். உயிர்க்குப் பகை நஞ்சாதல் போல முத்திக்குப் பகை பொருள் ஆசை ஆதலின் 'மாகதி தனக்கு நஞ்சமாகிய பொருள்' என்ருர். நசை- விருப்பம். ஓர்நசை என்றது, சிறு விருப்பமும் என்றவாறு. எனக்குப் பொருள் வேண்டாம் என மறுத்தவாறு. பஞ்சகவ்வியம் என்றது ஆனிடைத்தோன்றும் பால், தயிர் நெய், கோமயம், கோசலம் என்ற ஐந்தினை. வாலாமை நீங்குதற்கு இவ்வைந்தினை அருந்துதல் உண்டு. கடவுட் பூசைக்கு இவ்வைந்தும் வேண்டுதலின் அதன் பொருட்டு ஒரு பசு வேண்டும் என்ருன். அருள் என்றது கொடு என்னும் பொருளது. (129)

## வேறு

1099 வேதநா யகனிவ் வாறு
வேண்டினேர் வேண்டிற் றெல்லாம்
மாதனஞ் சுரபி பூமி
மணிமுதல் வழங்கா நின்று

போதுபோக் கிடுநாட் போயோ
ராண்டினிற் புரவி மீட்டுக்
காதுவேற் காவலாளர் காட்டிய
நாளில் வந்தார்.

வேதநாயகன், இவ்வாறு வேண்டினோர் வேண்டிற்று எல்லாம்
மாதனம் சுரபி பூமி மணி முதல் வழங்கா நின்று,
போது போக்கிடுநாள் போய் ஓர் ஆண்டினில் புரவி மீட்டுக்
காதுவேல் காவலாளர் காட்டிய நாளில் வந்தார்.

பொ: வேதங்கட்குத் தலைவனாகிய இராமன், இவ்வாறு பெரிய செல்வம், பசு, பூமி, மணி முதலாக வேண்டினோர் வேண்டியவற்றையெல்லாம் வழங்கிக்கொண்டு பொழுதினைப் போக்கும் நாளில் கொல்லும் வேலினைத் தாங்கியுள்ள காவலாளர்கள் குதிரைக்குப்பின்பு போய் ஓர் ஆண்டினில் குதிரையை மீட்டுக்கொண்டு குறிப்பிட்ட நாளில் வந்து சேர்ந்தார்கள்.

கு: வேதநாயகன் என்றது வேதங்களால் புகழ்ந்து பேசப் படும் தலைவனாகிய இராமனை. 'வேண்டிற்றெல்லாம் வழங்கா நின்று' என இயையும். காவலாளர்போய் ஓராண்டினில் புரவி மீட்டுக் காட்டிய நாளில் வந்தார் என்க. காட்டிய நாள் என்றது இராமன் குறிப்பிட்ட நாளினை. போயோர் என ஒருசொல்லாக்கி வினைப்பெயராகக் கொள்ளினும் அமையும். காதுதல்-கொல்லுதல். வேலுக்கு அடை. குதிரைக்குப் பின் சென்ற காவலர்கள் ஓராண்டில் குறிப்பிட்ட நாளில் வந்து சேர்ந்தனர் என்றவாறு.
(130)

---

ஆழ்வார் திருநகரிப் பதிப்பில் பின்வரும் செய்யுள் இரண்டு காணப்படுகின்றன.

130 அ. தழைவனத்திடைப் பரிதனைத் தளைத்துமெம்
முழையிடைப் போர் செய்வீ ருரைமின்யாரென
மழைதரு சோலைவான் மீகி மாமுனி
விழைதரு சீடர்யாம் வேந்தர் மைந்தர்கள்.

130 ஆ. வேந்தர்தம் மைந்தர்க ளென விளம்பலும்
காந்தியே பொருதனர் கவன மாவுடன்
போந்தவ ரினைஒனைப் புகுந்து பற்றலும்
நீந்தொணு வுதிரமாய் நிலையழிந்தவே.

இ. முன்னவன் அடர்த்து மோகரித்து வாளிகள்
இன்னன வென்ளுெ தெங்கு மேவியப்
பின்னவன் தனையுமீட் டன்ன பீடுடை
மன்னவர் எதிர்ந்திட மடிய நூறினுன்.

ஈ. வாயுவும் பின்செல வந்த தூதுவர்
போயதும் பொருதறும் புகலக் கேட்டபின்
தூயதன் மனத்திடை தொனிந்தி ராமனும்
நேயமாம் படை யெலாம் நிறைய ஏவினுன்.

உ. ஏவினர் செல்லவான் மீகி யின்னருள்
மேவுமா ணுக்கரும் வில்லின் கல்வியால்
தூவிய கணைகளால் சோர்ந்து வீழ்ந்தனர்
மாவினை யறுத்தவான் மீகி வந்தனன்.

ஊ. போர்செய்த புதல்வரை யுரப்பி யேபுகன்
ருர்செய்வா ரிப்படி யருளிலீர் கொலோ
கார்நிறத் தாமரைக்கண் ணன் சேனையை
யேர்பெற மந்திரித் தெழுப்பி னுனரோ.

வேறு

எ. மாய்ந்தன சேனை யெல்லாம் வளம்பெற எழுப்பி மாவும்
ஈந்துநீர் போமி னென்ன விருந்தவன் றன்னைப் போற்றிக்
காந்துவேல் காவலாளர் 'கவனமா முன்னதாக
ஏய்ந்த நாளளவின் வந்தேயிராமனைத் தொழுதிருந்தார்.

## தீர்த்தநீர் கொணர்தல்

1100 பதியில்வாழ் பசுக்க ளோடு
பழுவத்துப் பசுக்கள் வேத
விதிமுறை யும்பர் பாரில்
விளங்குசீர்க் கங்கை யாதி
நதிகளிற் றீர்த்த நீரு
நாற்பெருங் கடலி னீரும்
கதுமெனக் கொண்டு வந்தார்
கால்கடி யோர்க ளெல்லாம்.

பதியில் வாழ் பசுக்களோடு பழுவத்துப் பசுக்கள் வேத
விதிமுறை உம்பர் பாரில் விளங்குசீர்க் கங்கை ஆதி
நதிகளில் தீர்த்த நீரும் நாற்பெருங் கடலின் நீரும்
கதும் எனக் கொண்டுவந்தார் கால்கடியோர்கள் எல்லாம்.

பொ: நகரத்தில் வாழ்கின்ற பசுக்களோடு காட்டில் வாழ்கின்ற பசுக்களையும், வேத விதிப்படி விண்ணிலும் மண்ணிலும் விளங்குகின்ற சிறப்பினையுடைய கங்கை முதலிய நதிகளின் தீர்த்த நீரையும், நான்கு பெருங்கடலின் நீரையும் காலால் விரைந்து செல்லும் திறமையுடையவர்கள் எல்லாம் விரைவாகக் கொண்டு வந்தார்கள்.

கு: பழுவம்-காடு. வேதத்தில் விதித்துள்ள விதிப்படி பசுக்களையும் நதி நீரையும் கடல்நீரையும் விரைந்து நடக்கும் இயல்பினர் கொண்டு வந்து சேர்த்தனர் என்பது கருத்து. கங்கை இமயத்தின் உச்சியிலிருந்து புறப்பட்டு மண்மிசைச் செல்லும் இயல்பினதாகலின் 'உம்பர் பாரில் விளங்குசீர்க் கங்கை' என்றார் கதுமென என்பது விரைவுக் குறிப்புணர்த்தும் இடைச்சொல். கால்கடியோர் என்றது கால்கொண்டு விரைந்து நடப்பவர்களை.

(131)

131ஆவது செய்யுளுக்குப்பின் 26, 29, 66 என்ற எண் உள்ள ஏடுகளில் பின்வரும் மிகைப்பாடல்கள் ஐந்து காணப்படுகின்றன.

131. அ. மூவரும் போற்றுங் கற்பின் முதல்விபோன் முன் செய் செம்பொன்
பாவையைத் தனக்குத் தூய பாரியாய்ச் சங்கற்பித்துப்
பூவய னனைய தன்மை புரோகிதன் சடங்கு காட்ட
தூவருந் தவர்களோடும் தொடங்கினன் வேள்வி யண்ணல்.

ஆ. வசையறு செஞ்சொற்சீ ராமாயணம் கேட்க மண்ணிற்
பசையறு நெஞ்சினேடும் பரகதியெய்தச் செய்தோர்
தசரதன் தனயன் வேள்வி கண்டிடத் தாழ்ந்த நெஞ்சன்
குசலவ னேடும் வந்தான் கோதறு குணவான் மீகி.

இ. கோதில் மா தவத்தோன் பின்போங் குமரரைக் குறுக வந்து
மாதரும் மைந்தரானேர் யாவரும் மகிழு நெஞ்சர்
காதலா லவரை நோக்கிக் கருமுகில் வண்ணத் திந்த
தீதறு தவவேடத்தோர் யாவரோவெனச்சிந்திப்பார்.

ஈ. வித்தக முனிவன் பின்போம் மைந்தர்கள் தவ வேடத்துக்
கத்திரரிவர்க ளென்பார் காணுதுங் கடைக்கா லென்பார்
கைத்தலந் தூயபாதம் கண்ணிணைகமல மென்பார்
இத்தலத் திவரைப் போல வெழிலுளோர் இல்லை யென்பார்.

உ. உத்தம குணத்துச் சீதை யுருத்திரி கருவோ டுமபோய்
புத்திர ரிருவர்ப் பெற்ருள் என வெழு புதல்வர் தம்மை
தத்துவ மாக வேண்டும் தசரத ராமன் றன்னை
வைத்துவாங் கினவா ெறுக்கும் மைந்தர்கள் வடிவிங் கென்பார்.

## வேள்வித்தூண்கள் முதலியன

1102 ஏதமி லிலக்கணத்த எழுமூன்று
சாணீ ளத்த
பாதிரி யூப மாறும்
காசிலாப் பலாச மாறும்
வேதியர் விதியிற் சொன்ன
வில்லுவ யூபமாறும்
தீதறு தேவதாரம் இரண்டு
தற்கோல மொன்றாறு.

ஏதம்இல் இலக்கணத்த எழுமூன்று சாண் நீளத்த
பாதிரி யூபம் ஆறும் காசுஇலாப் பலாசம்ஆறும்
வேதியர் விதியிற் சொன்ன வில்லுவ யூபம் ஆறும்
தீது அறு தேவ தாரம் இரண்டு, தற்கோலம் ஒன்று.

பொ: வேதம் வல்லோல் வேதவிதிப்படி சொன்ன குற்ற மில்லாத இலக்கணத்தையுடைய இருபத்தொரு சாண் நீளத்தினையுடைய பாதிரி மரத்தினால் செய்த வேள்வித் தூண் ஆறும் குற்றமற்ற முருக்கமரத்தினால் செய்த வேள்வித்தூண் ஆறும் வில்வமரத்தால் செய்த வேள்வித்தூண் ஆறும் தீமையில்லாத தேவதாருவினால் செய்த வேள்வித்தூண் இரண்டும் தற்கோலம் என்னும் செடியினால் செய்த வேள்வித் தூண் ஒன்றும்.

கு: குளகம். ஏதம், காசு, தீது என்பன குற்றம் என்ற ஒரு பொருள் குறித்து வந்தன. யூபம்-வேள்வித்தூண். பாதிரி, முருக்கு, வில்வம், தேவதாரம், தக்கோலம் என்கின்ற ஐவகைத் தாவரங்களாலியன்ற வேள்வித் தூண்கள் இருபத்தொன்று என்றவாறு. தற்கோலம் என்பது ஒருவகை வாசனையுள்ள செடி.
(132)

## யாகபாத்திரங்கள் வருதல்

1102 ஆகமூ வேழு யூபம்
அமைந்தன வரணி சூர்ப்பம்
சோகஞ் சோமியஞ் சுருக்குச்
சுருவஞ்சீர் திகழு மான்றோல்
ஓகையாற் கைவல்
லோர்செய்யூகலமுதல வாக
யாகபாத் திரங்கள் வந்த
பணித்தநன் முகுர்த்த மெய்த.

ஆகமூவேழு யூபம் அமைந்தன அரணி சூர்ப்பம்
சோகம் சோமியம் சுருக்குச் சுருவம்சீர் திகழும் மான்தோல்
ஓகையால் கைவல் லோர்செய் ஊகலம் முதல ஆக
யாக பாத்திரங்கள் வந்த பணித்த நன்முகுர்த்தம் எய்த.

பொ: ஆக இருபத்தொரு வேள்வித்தூண்கள் அமைந்தன: தீக்கடைகோல், முறம், கடுரோகிணி என்னும் பூண்டு, சோமரசம் வைக்கும் பாத்திரம், துடுப்பு, அகப்பை, சிறப்புடன் விளங்கும் மான்தோல், மகிழ்ச்சியோடு கைவினை வல்லோர் செய்த உரல் முதலவான வேள்விக்குரிய பாத்திரங்கள், குறிப்பிட்ட நல்ல முகூர்த்தம் வந்தவுடன் வந்தன.

கு: மேலைச் செய்யுளில் கூறிய பாநிரித்தூண் முதலிய இருபத்தொறு வேள்வித் தூண்களை இங்கு அனுவதித்தவாறு. அரணி-தீக்கடைகோல். சூர்ப்பம்-முறம். சோகம் - கருரோகிணி என்னும் ஒருவகைப்பூண்டு. சோமியம்-சோமபானம் வைக்கும் பாத்திரம். சுருக்கு-நுடுப்பு. சுருவம்-அகப்பை. ஓகை-மகிழ்ச்சி ஆல், ஒடுப்பொருளது. ஊகலம் என்பது உலூகலம் என்பதன் திரிபு. உரல் என்னும் பொருளது. நன்முகூர்த்தம் எய்த வந்த என இயையும். வந்த என்பது அகரவீற்றுப் பலவின் வினைமுற்று.
(133

## சீதை வடிவில் பொற்பாவை செய்தல்
### வேறு

1103 இன்னிசை யிராகவற் கியாக சாலையுள்
பன்னியாங் கின்மையிற் படருழந்தபின்
மின்னிய நுண்ணிடை மிதிலை வல்லியாய்
பொன்னியல் பாவையும் புனைந்து சேர்த்தினர்.

இன் இசை இராகவற்கு யாக சாலையுள்
பன்னி ஆங்கு இன்மையின் படர் உழந்தபின்
மின்னியல் நுண்இடை மிதிலை வல்லியாய்
பொன்இயல் பாவையும் புனைந்து சேர்த்தினர்.

பொ: இனிய புகழையுடைய இராமபிரானுக்கு வேள்விச் சாலையில் மனைவி இல்லாமையால் என் செய்வது எனத் துன்பமுற்ற பின்பு (ஒரு முடிவுக்கு வந்து) மின்னலைப் போன்ற தன்மையை யுடைய இடையினளாகிய மிதிலைவந்த சீதையாகப் பொன்னால் இயன்ற பாவையையும் செய்து வேள்விச் சாலையில் சேர்த்தார்கள்.

கு: சீதை வனத்தில் வான்மீகியின் ஆசிரமத்தில் இருப்பதால் அசுவமேதம் செய்கின்ற யாகசாலையில் இல்லை என்பது தெளிவு; யாகபத்தினி இன்றி யாகம் செய்யலாகாதே என்ற எண்ணத்தால் வருந்திய அந்தணர்கள் பின்பு தெளிந்து அந்தச் சீதையின் வடிவினைப் பொன்னால் செய்து வைத்தனர் என்றவாறு. படர்-துன்பம். மிதிலைவல்லி-மிதிலையிற் பிறந்தகொடிபோன்ற சீதை. (134)

## வேள்வித்தூண் நடுதல்
### வேறு

1104 மாதிர நான்கினுள் வழங்கு வான்புகை
மீதெழுந் தண்டகோ ளகையின் வீங்குற
வேதிய ரருமறை வேத நூலினில்
ஓதிய தருவினால் யூப நாட்டினார்.

மாதிரம் நான்கினுள் வழங்கு வான்புகை,
மீது எழுந்து அண்ட கோளகையின் வீங்குற,
வேதியர் அருமறை வேத நூலினில்
ஓதிய தருவினுல் யூபம் நாட்டினுர்.

பொ: திசைகள் நான்கினுள்ளே இயங்கிக் கொண்டிருந்த வேள்விப்புகை மேலே எழுந்து அண்டத்தின் முகடுவரையில் சென்று பெருகாநிற்க, வேதியர்கள் அரிய மந்திரங்களையுடைய வேதத்தில் வேள்விக்குரியதாகச் சொல்லியுள்ள மரத்தினுல் வேள்வித் தூணினை நட்டார்கள்.

கு: மாதிரம்-திசை. நான்கு திசைகளுக்குள் இயங்கிச் சூழ்ந்துகொண்டிருந்த வேள்விப்புகை பின்பு மேலே எழுந்து அண்ட கோளத்தின் முகடு வரையில் உயர்ந்து பெருகியது என்றவாறு. மறை என்றது மந்திரங்களை. வெளிப்படக் கூறப்படாததாய்க் குருவின் மூலம் செவி வாயாகக் கேட்டுப் பிறர்க்குக் கேளாமல் உள்ளத்தால் உச்சரிக்க வேண்டிய அருமைப்பாடு உடைமை பற்றி அருமறை எனப்பட்டது. அசுவமேத வேள்விக்கு உரியதாக வேதத்தில் சொல்லப்பட்ட மரத்தினுல் வேள்வித் தூணை செய்து நட்டார்கள் என்றவாறு. யூபம்-வேள்வித்தூண். முன்பு சொன்ன இருபத்தொரு வகையான வேள்வித்தூண்களை நட்டனர் என்றவாறு. "யூபம் நட்ட வியன்களம் பலகொல்" (புற நா.15) என்பது இங்கு நினையலாம். வீங்குற யூப நாட்டினுர் என்றது, செயவெனெச்சம் காரண காரியத் தொடர்பின்றி முடிந்தவினை எனலாம் (135)

## குதிரைகளுக்குப் பொன்னல் குளம்பு கட்டுதல்

1105 எழுகதி ரவன்பரி யென்ன வெண்ணிரு
செழுபரி கொணர்ந்தபின் றேவர் யாவரும்
தொழுபரி சுலகெலாஞ் சுருங்க வோடிடக்
கொழுக னகத்தினுற் குளம்பு கட்டினுர்.

எழுகதிரவன் பரி என்ன எண்ணிரு
செழுபரி கொணர்ந்தபின் தேவர் யாவரும்
தொழுபரிசு உலகு எலாம் சுருங்க ஓடிடக்
கொழு கனகத்தினுல் குளம்பு கட்டினுர்.

**பொ:** கீழ்த்திசையில் எழுகின்ற சூரியனுடைய குதிரைகள் இவை என்னுமாறு பதினறு செழுமையான குதிரைகளைக் கொணர்ந்தபின்பு தேவர்கள் யாவரும் தொழும் படியாக உலகு முழுமையும் இடத்தால் சுருங்கும்படி அவை ஓடுதற்கு உதவியாகத் திரண்ட பொற்பூணினல் குளம்பு கட்டினர்கள்.

கு: வேள்விக்கு வந்த குதிரையின் தோற்றம் சூரியன் குதிரை போன்றிருந்தது என்பார், 'எழுகதிரவன் பரி என்ன எண்ணிரு செழுபரி'' என்ருர். நெடுந்தொலைவுள்ள உலகங்களின் பரப்புக் குதிரைகளின் வேகத்தால் சுருங்கித் தோன்றியது என்றவாறு. உலகம் சிறிது ஆநமாறு விரைந்து ஓடிச் சுற்றுகின்ற குதிரையைக் கண்ட தேவர்கள் அஞ்சித் தொழுவார்கள் என்பார், ''தேவர் யாவரும் தொழுபரிசு உலகெலாஞ் சுருங்க ஓட'' என்ருர். பதினறு குதிரைகளுக்கும் குளம்புகளில் பொன்பூண் கட்டினர்கள் என்றவாறு. (136)

## முனிவர் ஓமம் பண்ணுதல்

1106 நீடிய பதினறு முனிவர் நீள்கடல்
கோடிய வுலகெலாங் குறையக் கூர்மறை
பாடிய பதினறு பவனப் பச்சைமா
ஓடிய வடிதொறு மோமம் பண்ணினர்.

நீடிய பதினறு முனிவர் நீள்கடல்
கோடிய உலகுஎலாம் குறையக் கூர்மறை
பாடிய பதினறு பவனப் பச்சைமா
ஓடிய அடிதொறும் ஓமம் பண்ணினர்.

பொ: புகழால் நெடியராகிய பதினறு முனிவர்கள், நீண்ட கடலால் சூழப் பெற்ற உலகமெலாம் அளவால் குறுகித் தோன்ற; நுண்ணிய வேதங்கள் சொன்ன இலக்கணத்தையுடைய பதினறு காற்றுப் போன்ற வேகத்தையுடைய பச்சைக் குதிரைகள் ஓடுமாறு, அவற்றின் பாதங்கள் தோறும் ஓமங்களைச் செய்தார்கள்.

கு: உலகெலாங்குறைய ஓடிய ஓமம் பண்ணினர் என இயையும். ஓடிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். உலகமெலாம் குதிரைகளின் ஓட்டத்தால் பரப்புக் குறைந்து தோன்றுமாறு அக்குதிரைகளின் பாதங்களில் ஓமம் பண்ணினர்கள் என்க. பவனம் பச்சை மா என்றது, காற்றுப் போன்ற வேகத்தையுடைய பச்சைக் குதிரைகளை. பவனம்-காற்று. கோடிய-சூழ்ந்த. சூர்மறை-நுண்ணிய வேதம். பதினறு முனிவர்களும் பதினறு குதிரைகளின் பாதங்களில் ஓமம் பண்ணி அவற்றிற்கு விரைந்து ஓடும் ஆற்றலைக் கொடுத்தார்கள் என்றவாறு. (137)

## உலகைச் சுற்றி வந்த குதிரைகளை வேள்வித்தூணில் கட்டுதல்

1108 நலங்கிளர் புவியெலா நடவி மீண்டபின்
உலங்கிளர் தோளினு னுவப்ப யூபத்தில்
வலங்கிளர் மரகத நிறத்த வாமணி
இலங்குளைப் பரியெலாம் யாப்பு றுத்தினர்.

நலம் கிளர் புவிஎலாம் நடவி மீண்டபின்
உலம் கிளர் தோளினன் உவப்ப யூபத்தில்
வலங்கிளர் மரகத நிறத்த வாம் அணி
இலங்கு உளைப் பரிஎலாம் யாப்பு உறுத்தினர்

பொ: நன்மை விளங்குகின்ற பூமி முழுமையும் நடக்கச் செய்து மீண்டபின்பு, திரண்ட கல்போன்று வளர்ந்த தோளினையுடைய இராமன் மகிழ, வலிமை விளங்குகின்ற மரகதம்போன்ற பச்சை நிறத்தையுடையவாகிய அழகுவிளங்கும் பிடரியினையுடைய குதிரைகள் எல்லாவற்றையும் வேள்வித் தூண்களில் கட்டினர்கள்.

கு: நடவி-நடத்தி. உலம்-திரண்ட கல். தோளினன் என்றது இராமனை. பரியெலாம் யூபத்தில் யாப்புறுத்தினர் என இயையும். உளை-பிடரிமயிர். யாப்புறுத்தல்-கட்டுதல். (138)

## மந்திரம் சொல்லிக் குதிரைகளை அறுத்தல்

1108 வரிந்தபைங் கழலினுன் மகிழ மாதவர்
தெரிந்த மந் திரத்தினைச் செவியிற் செப்பிநின்
றரிந்தன ரரிதலா லவனி சேப்புறச்
சொரிந்தன திசையெலாந் துனைந்த சோரியே.

வரிந்த பைங்கழலினுன் மகிழ மாதவர்
தெரிந்த மந்திரத்தினைச் செவியில் செப்பி நின்று
அரிந்தனர் அரிதலால் அவனி சேப்புறச்
சொரிந்தன திசைஎலாம் துனைந்த சோரியே.

பொ: காலிற் கட்டிய பசுமையான வீரக்கழலினையுடைய இராமன் மகிழுமாறு, பெரிய தவமுனிவர்கள் தாங்கள் தெரிந்து வைத்துள்ள மந்திரத்தினை அக்குதிரைகளின் செவியில் சொல்லி நின்று அவற்றை அரிந்தார்கள்; அவ்வாறு அரிதலால் பூமி செந்நிறம் அடையுமாறு அக்குதிரைகள் திசையெலாம் விரைந்து பரவும் இரத்தத்தைச் சொரிந்தன.

கு: வரிதல்-கட்டுதல். கழலினுன் என்றது இராமனை. மாதவர் குதிரைகளின் காதுகளில் மந்திரங்களைச் சொல்லி அவற்றை அரிந்தார்கள். அரிதலால் குதிரைகள் திசைகள் எல்லாம் விரைந்து பரவும் இரத்தத்தைச் சொரிந்தன என்க. அவனி-பூமி. சேப்புற-சிவக்க. துனைதல்-விரைதல். விரைந்து பரவும் பெருங்குருதியைச் சொரிந்தன என்க. (139)

## குதிரைத் தசையை வேள்வியில் ஆகுதி பண்ணுதல்

1109 பருத்தடி தசையரிந் திட்டுப் பைம்புகைக்
குருத்தழல் கொழுந்துவிட் டெரியக் கோதிலாக்
கருத்துடை மறையவர் கனிந்த காதலால்
அருத்தின ராவுதி யமரர் தம்மையே.

பருத்தடிதனை அரிந்திட்டுப் பைம்பு கைக்
குருத்தழல் கொழுந்துவிட்டு எரியக் கோதுஇலாக்
கருத்துடை மறையவர் கனிந்த காதலால்
அருத்தினர் ஆவுதி அமரர் தம்மையே.

பொ: குதிரைகளின் தசையை அரிந்து பசுமையான புகையை யுடைய நிறமிக்க வேள்வித்தழல் கொழுந்துவிட்டு எரியா நிற்க, குற்றமற்ற கருத்தினையுடைய வேதியர்கள் முதிர்ந்த அன்பினால் தேவர்களுக்கு அந்த வேள்வித் தீயில் ஆகுதி பண்ணி அருந்தினார்கள்.

கு: தடி-தசை. குரு-நிறம். கோது இலாக் கருத்துடை மறையவர் என்றது, குதிரையை அரிந்ததைக் கொலையாகக் கருதாது தெய்வ வழிபாடாகக் கருதுபவர் என்னும் கருத்தினது. கனிதல், முதிர்தலையுணர்த்தியது. அமரர் தம்மை ஆவுதி அருந்தினர் என இயையும். (140)

## இராமன் வேள்வியைத் தொடங்குதல்
### வேறு

1110 தேவர்கள் செல்லல் தீர்த்த
விராமன்முன் செய்த செம்பொற்
பாவையைத் தனக்குத் தூய
பாரியாச் சங்கற் பித்துப்
பூவய னனைய தன்மைப்
புரோகிதன் சடங்கு காட்டத்
தூவருந் தவர்க ளோடுந்
தொடங்கினான் வேள்வி தன்னை.

தேவர்கள் செல்லல் தீர்த்த இராமன், முன் செய்த செம்பொன்
பாவையைத் தனக்குத் தூய பாரியாச் சங்கற்பித்து,
பூஅயன் அனைய தன்மைப் புரோகிதன் சடங்கு காட்ட,
தூவரும் தவர்களோடும் தொடங்கினான் வேள்வி தன்னை.

பொ: தேவர்களது துன்பத்தைத் தீர்த்த இராமன், முன்பு செய்த செம்பொன்னாலாகிய பாவையைத் தனக்குரிய பாரியாகச் சங்கற்பம் செய்துகொண்டு, மலர்மேல் உறையும் பிரமனைப் போன்ற புரோகிதன், செய்ய வேண்டிய சடங்குகளைக் காட்ட, தூய்மை பொருந்திய தவ முனிவர்களோடும் வேள்வியைத் தொடங்கினான்.

கு: செல்லல்-துன்பம். தேவர்கள் செல்லல் என்பது, இராவணன் முதலிய அரக்கரால் தேவர்கட்கு நேர்ந்த துன்பங்களை. சீதை வடிவாகச் செய்த பொற்பாவையைத் தன் மனைவியாகவே பாவித்துக் கொண்டு அப்பாவையின் பக்கத்திலிருந்து புரோகிதன் காட்டிய நெறியில் வேள்வியை இராமன் தொடங்கினான் என்றவாறு. இராமன், பாவையைப் பாரியாகச் சங்கற்பித்துப் புரோகிதன் சடங்குகாட்டத் தவர்களோடும் வேள்வி தன்னைத் தொடங்கினான் என இயையும். தூவரும்-தூய்மை பொருந்திய. தூ அருந்தவர் எனப் பிரித்தலும் ஆம். (141)

## வான்மீகி குசலவரை அழைத்தல்

1111 இசைபுனை யிராகவ னினைய வேள்விகள்
நசையுற வேட்குறு நாளி னான்மறை
வசையறு மதுரவான் மீகி மன்னிய
குசலவர் வருகெனக் குறித்துக் கூவினான்.

**இசைபுனை இராகவன் இனைய வேள்விகள்**
**நசைஉற வேட்குறும் நாளின் நால்மறை**
**வசைஅறு மதுர வான்மீகி மன்னிய**
**குசலவர் வருகெனக் குறித்துக் கூவினான்.**

பொ: புகழைச் சூடிய இராமன் இத்தகைய வேள்விகளை விருப்பமுற வேட்கும் நாளில், நான்கு வேதங்களையும் உணர்ந்து பழியற்ற இனிய வாழ்வினையுடைய வான்மீகி, தன் ஆசிரமத்தில் நிலைபெற்ற 'குசலவர் வருக' எனக் குறிப்பிட்டு அழைத்தான்.

கு: இசை-புகழ். நசை-விருப்பம். வான்மீகி நான்கு மறைகளையுணர்ந்தவர்; பழியில்லாதவர்; இனிமையான வாழ்வினர்; என்பார், 'நான்மறை வசையறு மதுரவான் மீகி' என்றார். கூவுதல்-அழைத்தல். வான்மீகி குசலவரைக் கூவினன் என்றவாறு. (142)

## குசலவர்கள் வான்மீகியை வணங்கி நிற்றல்

1112 சுந்தரத் திருநிறத் தூய வெண்ணகைச்
சிந்துரப் பவளவாய்ச் சிவந்த வாள்விழிக்
கொந்தணி குழற்குச லவர்கள் கோதிலார்
வந்தனர் முனிவனை வணங்கி மன்னினார்.

**சுந்தரத் திருநிறத் தூய வெள்நகைச்**
**சிந்துரப் பவளவாய்ச் சிவந்த வாள்விழிக்**
**கொந்து அணி குழல் குசலவர்கள் கோதுஇலார்**
**வந்தனர்; முனிவனை வணங்கி மன்னினர்.**

**பொ:** அழகினையுடைய கரிய நிறத்தினையும் வெண்மையான பற்களையும் சிவந்த பழம்போன்ற வாயினையும், சிவந்த ஒளி மிக்க கண்களையும் கொத்தாக அழகுடன் விளங்கும் சிகையினையும் உடைய குசலவர்கள் ஆகிய குற்றமற்றவர்கள் வந்து வான்மீகியை வணங்கி நின்றனர்.

கு: இருநிறம் என்றது கருநிறத்தை. இருமை-கருமை கருநிறத்தில் மிக்க அழகு உண்டு என்பது புலப்படச் 'சுந்தரத்து இருநிறம்' என்றார். சிந்துரப் பவளவாய் என்றது, செம்பவளம் போன்ற வாயினை. குசலவர்களின் வடிவமைப்பினைப் புலப்படுத்துகின்றார் ஆகலின் அவர்தம் நிறம் பல்வாய் விழி, சிகை என்பவற்றின் இயல்பினை எடுத்துக் கூறினர். இராமன் கருமுகில் வண்ணன் ஆகலின் அவன் மக்களாகிய குசலவர்கள் அவனைப் போலவே கரிய நிறத்தராதல் இயல்பேயாம். கொந்து - கொத்து. குழல் என்றது குடுமியை குசலவர்களாகிய கோதிலார் என இருபெயரொட்டு ஆக்குக. முனிவன் என்றது வான்மீகியை. (143)

## வான்மீகி இராமகாதையை அசுவமேதயாகத்திற்கு வந்துள்ள அரசர்கள் அவையில் சென்று பாடுமாறு குசலவர்க்குக் கூறுதல்.

1113 இடநறு முனிவர னிகலி ராகவன்
அடல்புனைந் தேத்திய வளவி லாதமா
வடமொழிக்காப்பிய மதுர வின்னிசை
படரறு மரசவை பகர்திர் போயென்றான்.

இடர்அறு முனிவரன் 'இகல் இராகவன்
அடல் புனைந்து ஏத்திய அளவிலாத மா
வடமொழிக் காப்பிய மதுர இன் இசை,
படர் அறும் அரசவை பகர்திர் போய்' என்றான்.

பொ: துன்பம் சிறிதும் இல்லாத வான்மீக முனிவன் (குசலவரை நோக்கி) 'வலிமையுடைய இராகவனது வெற்றியைப் புனைந்து போற்றிய அளவில்லாத பெருமையையுடைய வடமொழிக் காப்பியமாகிய மதுரமான இன்னிசைப்பாடலைத் துன்பம் இல்லாத அரசர்கள் கூடியுள்ள அவையில் சென்று சொல்லுங்கள்' என்று கூறினன்.

கு: தவப் பயிற்சியால் நெஞ்சில் சிறிதும் துன்பம் இல்லாதவர் வான் மீகி ஆதலின் 'இடரறுமுனிவரன்' என்றார். 'இடும்பை யாவது மறியாஇயல்பினர்' (திருமுருகாற்றுப்படை) என முனிவர் இயல்பினை எடுத்தியம்பியிருத்தல் காண்க. இகல்-வலிமை. அடல்-வெற்றி. இராகவன் அடல்புனைந்தேத்திய வடமொழிக் காப்பியம் என்றது, வட மொழியில் வான்மீகி கூறிய வான்மீக ராமாயணத்தை. மதுரம்-இனிமை. வான்மீக இராமாயணச் சுலோகங்கள் இசைவிரவிப் பாடத்தக்கதாக அமைந்திருந்தமையின் மதுர இன்னிசை எனச் சிறப்பித்தவாறு. படர்-துன்ப நினைவுகள். துன்ப நினைவுகளே இல்லாமல் இன்ப நினைவில் மகிழ்ந்துள்ள அரசர்கள் அவையில் பாடினால் அவர்கள் மகிழ்ந்து கேட்பார்கள் ஆதலின் 'அரசவை போய் பகர்திர்' என்றான். (144)

## அந்தணர் அவையிலும் பாடுக என்றல்

1114 சந்தணி யிருபுயச் சனகர் கோன்மகள்
மைந்தரென் றறிவுரு வகைம றைந்துநீர்
அந்தண ரிருந்துழி யரசர் சேர்ந்துழிப்
பைந்துவர் வாயினீர் பகர்தி ரென்றனன்.

சந்து அணி இருபுயச் சனகர் கோன்மகள்
மைந்தர் என்று அறிவுருவகை மறைந்து நீர்
அந்தணர் இருந்துழி அரசர் சேர்ந்துழிப்
பைந்துவர் வாயினீர் பகர்திர் என்றனன்.

பொ: சந்தனம் அணிந்த இரண்டு தோள்களையுடைய சனகர் கோனின் மகளாகிய சீதையின் மைந்தர்கள் என்று யாரும் அறிந்து கொள்ளாதபடி மறைந்து, அந்தணர்கள் இருந்த இடங்களிலும் அரசர்கள் சேர்ந்துள்ள இடங்களிலும் இளமையான சிவந்த வாயினையுடையராகிய நீவிர் சென்று சொல்லுங்கள் என்ருன்.

கு: சந்து-சந்தனம். முனிவர் சிறுவராகவே நடந்து கொள்ள வேண்டும் என்பார், 'சனகர் கோன்மகள் மைந்தரென்றறிவுரு வகை மறைந்து' எனருர். சீதையின் மக்கள் என்பதை எவ்வகை யானும் புலப்படுத்தல் கூடாது என்றவாறு. பைந்துவர் வாயினீர் என்புழிப் பசுமை இளமையையுணர்த்தியது. துவர் வாய்-சிவந்த வாய். வாயினீர் நீர் பகர்திர் என இயையும். (14:)

## குசலவர்கள் யாழினைக் கைக் கொள்ளுதல்
## வேறு

1115 உழையிளி விளரி தாரங்
குரல்சிளை துத்த மென்னும்
பழையன விசைக ளேழும்
பான்மையிற் றெரியப் பண்ணுள்

இழுமென விசைக்குங் கோல்க
ளேழவை திவவுக் கட்டி
மழவிடை யனையநீரார் மாடக
யாழ்கைக் கொண்டார்.

உழைஇளி விளரிதாரம் குரல்கிளை துத்தம் என்னும்
பழயன இசைகள் ஏழும் பான்மையின் தெரியப் பண்ணுள்
இழும்என இசைக்கும் கோல்கள் ஏழ்அவை திவவுக்கட்டி
மழவிடை அனைய நீரார் மாடக யாழ் கைக்கொண்டார்.

பொ: இளமையான விடையைப் போன்றவர்களாகிய குசலவர்கள், உழையும் இளியும் விளரியும் தாரமும் குரலும் கைக்கிளையும் துத்தமும் என்கின்ற பழமையான இசைக்கூறுகள் ஏழும் முறைமையால் தெரியும்படி பண்ணினுள் இழுமென்ற ஓசையோடு இசைக்கின்ற நரம்புகள் ஏழினையும் வார்க்கட்டால் கட்டி முறுக்காணியையுடைய யாழினைக் கையில் தாங்கிக் கொண்டார்கள்.

கு: அடைமொழியின்றி ஏழு இசைக்கூறுகளையும் முதலடியில் மொழிந்துள்ள திறம் காண்க. உழை முதலிய ஏழும் பண்டே உள்ளவை யென்பார் 'பழையன இசைகள் ஏழும்' என்றார். இவை, சட்டம், இடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதம் எனவும் வழங்கப்படும். கோல்கள் என்றது யாழ் நரம்புகளை. திவய என்பது, யாழ் நரம்புகளை வலிபெறக் கட்டும் வார்க்கட்டு. மாடகம்-வீணை முறுக்காணி. இராமாயண சுலோகங்களை இசையுடன் பாடுபவர்களாதலின் யாழினைக் கையில் கொண்டுசென்றார்கள். (146)

### குசலவர்கள் முனிவர் கோலங் கொள்ளல்

1116 கனிதரு பவளச் செவ்வாயக்
காமனுஞ் சாமன் றனும்
முனிவர்தம் வடிவங்கொண்ட
முறைமைய தாகுமென்னப்

பனிமலர் வேணி சாத்திப்
பருவரை யருவி போல
இனியவெண் புரிநூன் மார்பி
லிலங்கிட வலங்க ரித்தார்.

கனிதரு பவளச் செவ்வாய்க் காமனும் சாமன்தானும்
முனிவர்தம் வடிவம்கொண்ட முறைமையது ஆகும் என்னப்
பனிமலர் வேணி சாத்திப் பருவரை அருவி போல
இனிய வெண்புரிநூல் மார்பில் இலங்கிட அலங்கரித்தார்.

பொ: முதிர்ந்த பவளம் போன்ற சிவந்த வாயினையுடைய காமனும் அவன்தம்பி சாமனும் முனிவர்வேடம் கொண்ட முறைமைபோலும் என்று கண்டவர் சொல்லுமாறு குளிர்ந்த மலர்களைச் சடைமுடியில் சாத்திக் கொண்டு, பெரிய மலையிலிருந்து வீழும் அருவி போல இனிய வெண்மையான பூணூல் மார்பில் விளங்க அணிந்து கொண்டு தம்மை அலங்கரித்துக் கொண்டார்கள்.

கு: கனிதல்-முதிர்தல். இனிக் கொவ்வைக் கனியின் தன்மை பொருந்திய எனப் பொருள் கூறலும் ஆம். காமனுக்கு இளவல் சாமன். இவனும் அழகுக்கு எடுத்துக்காட்டு ஆதற்குரியனே. "காமர் நடக்கு நடை காண் கவர்கணைச், சாமனர் தம்முன் செலவு காண்க" (கலி. 94) என்பதும் "மாமனும் மருகனும் போலு மன்பின, காமனுஞ் சாமனும் கலந்த காட்சிய" (சீவக.43) என்பதும் இங்கு நினையத்தகும். வேணி என்றது முடியாகக் கட்டிய சடையினை. கரியமேனியில் வெள்ளைப் பூணூல் விளங்குவது பருவரையில் ஒழுகும் அருவி போன்றது என்றவாறு. இலங்குதல்-விளங்குதல். ஒத்த வடிவும் ஒத்த வயதும் உடைய குசலவர்கள் முனிவர்போல வேடங் கொண்ட காட்சி, காமனும் சாமனும் முனிவர் வேடம் கொண்டதுபோல விளங்கிற்று என்க. எனவே, உறவும் வடிவும் வயதும் பற்றிக் காமனும் சாமனும் குசலவர்க்கு உவமையாயினர் என்பது புலனாகும். (147)

## குசலவர்கள் அசுவமேத யாகத்திற்குப் பாலைவன வழியே செல்லுதல்

1117 முனிவனை வணங்கி நீங்கி
முழுமலர்ப் பன்னசாலைச்
சனகியை விடைகொண் டிப்பாற்
றருமிசை வருடை பாயும்
பனிமலர்ச் சோலை நீங்கிப்
பலவரி யுழுவைக் காகக்
கனைகுர லுழைகண் டுஞ்சாக்
கல்லத ரத்தஞ் சேர்ந்தார்.

**முனிவனை வணங்கி நீங்கி, முழுமலர்ப் பன்னசாலைச்
சனகியை விடை கொண்டு இப்பால், தருமிசை வருடை பாயும்
பனிமலர்ச் சோலை நீங்கிப் பலவரி உழுவைக் காகக்
கனைகுரல் உழைகள் துஞ்சாக் கல்லதர் அத்தம் சேர்ந்தார்.**

பொ: வான்மீக முனிவனை வணங்கிக் கொண்டு, அவ்விடத்தினின்றும் நீங்கி, முழுதும் மலர்களால் மூடப்பட்டுள்ள பன்னசாலையில் இருக்கும் சீதையிடத்து வணங்கி விடைபெற்றுக் கொண்டு, இப்பால், மரங்களின் மேல் எண்கால் வருடையாகிய மலை ஆடுகள் பாய்கின்ற குளிர்ந்த மலர்ச் சோலையைவிட்டு நீங்கி, பலவரிகளையுடைய புலிக்காக அஞ்சி, ஒலிக்கின்ற குரலையுடைய மான்கள் தூங்காமலிருக்கின்ற கற்கள் நிறைந்த வழியினையுடைய பாலைவனத்தைச் சேர்ந்தார்கள்.

கு: பன்னசாலை என்றது, தழைகளால் வேய்ந்த குடிலை. அந்தக் குடிலுக்கு மேல் மலர்க்கொடிகள் படர்ந்து மூடிக் கொண்டிருப்பதால் 'முழுமலர்ப் பன்னசாலை' எனப்பட்டது. சானகியை என்புழி இரண்டனுருபு ஏழாம் வேற்றுமைப் பொருளது. வருடை என்பது மலையாட்டினை. இதற்கு முதுகின் மேலும் நான்கு கால்கள் இருத்தலின் எண்கால் வருடை என்று சொல்லப்படுவதுண்டு. "மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள், வரைவாழ்வருடைய வன்றலைமாத்தகர்"

(மலைபடுகடாம் 502-503) என்றது காணலாம். வான்மீகியின் தவக்குடில் இருந்த இடம் வருடைகள் பகையின்றி மரங்களின் மேல் பாய்ந்து விளையாடத் தக்கதாக இருந்தது என்பதும், குசலவர்கள் போகும் வழியில் மான்கள் புலிக்காக அஞ்சி நடுங்கித் துஞ்சாமல் இருக்கின்றன என்பதும் கூறிக்குசலவர் இருந்த இடத்தின் இனிமையும் போகுமிடத்தின் இன்னுமையும் புலப்படுத்தியுள்ளமை காணலாம். அதர்-வழி. அத்தம்-பாலைவனம்.

(148)

## குசலவர்கள் கங்கையை யடைதல்

1118 கானவ ரம்பை மாய்க்குங்
கல்லத ரழுவ நீங்கி
வானவ ரம்பை மாதர்
மணிபயில் குறங்கு போல
வானவ ரம்பை நீத்து
மலரய னுலகு சேரும்
கானவ ரம்பை சூழும்
கடிமணற் கங்கை சேர்ந்தார்.

கானவர் அம்பை மாய்க்கும் கல்லதர் அழுவம் நீங்கி,
வான அரம்பை மாதர் மணிபயில் குறங்கு போல,
வான வரம்பை நீத்து மலர் அயன் உலகு சேரும்
கான அரம்பை சூழும் கடிமணல் கங்கை சேர்ந்தார்.

பொ: வேட்டுவர்கள் வழிச்செல்வோர் மேல் எய்வதற்காகத் தம் அம்புகளைத் தீட்டுகின்ற கற்கள் நிறைந்த வழியினையுடைய காட்டினைக் கடந்து, விண்ணுலகத்துள்ள அரம்பை மாதரின் மணிமேகலை பொருந்திய துடையைப் போல - வான எல்லையைக் கடந்து மலர்மேலுள்ள பிரமனது உலகத்தைச் சேர்ந்து உயர்ந்துள்ள வாழைக் காடு சூழ்ந்துள்ள விளக்கமுடைய மணல் நிறைந்த கங்கையாற்றைச் சேர்ந்தார்கள்.

கு: வாழைக்காடு சூழ்ந்துள்ள கங்கையாற்றைக் குசலவர்கள் சேர்ந்தார்கள். என்பது கருத்து. கானவர்கள் அம்பை மாய்த்தல் என்றது அம்பு திட்டுதலே. அழுவம்-காடு. நடந்து கழித்தகாட்டின் கடுமையையும் அவர்கள் போய்ச் சேர்ந்த கங்கையாற்றுச் சூழலின் இனிமையையும் புலப்படுத்தியவாறு. கங்கைக் கரையில் உள்ள வாழைகள், வான அரம்பை மாதர்களின் துடை போன்ற அழகினவாய் வான எல்லையைக் கடந்து சென்று பிரமனுலகம் வரையில் உயர்ந்திருக்கின்றன என உயர்வு நவிற்சியணி பற்றிக் கூறியவாறு. அரம்பை மாதர் குறங்குபோல அரம்பை சூழும் என்றது, பொருளே உவமஞ் செய்து கூறியது. வாழை போன்ற துடை என்ற பழைய மரபை மாற்றி, அரம்பை மாதர் குறங்குபோல அரம்பை சூழும் என்றது விபரீத உவமை என்பர். தண்டியலங் காரத்துக் காண்க. மணிபயில் குறங்கு என்புழி மணி என்றது மணிமேகலையை. மேகலை துடையில் தாழ அணிவது என்பது நினைக. குறங்கு-துடை. வாழையின் செழுமையும் வனப்பும் புலப்பட அரம்பை மாதர் குறங்கினை உவமை கூறினர். நீத்துச் சேரும் அரம்பை சூழும் கங்கை என இயையும். கான அரம்பை என்பதை அரம்பைக் கானம் என மாற்றுக. அரம்பைக் கானம்-வாழைக் காடு. பனிமலையிலிருந்து வருதலின் கங்கை மணல் விளக்கமுடையதாயிற்று. கடி - விளக்கம் இனி. மண முடைய மணல் எனக் கூறலும் ஆம். (149)

## குசலவர்கள் வேள்விச் சாலையை அடைதல்

1119 பூத்தமென் கமல மீது
பொரியெரிப் பெய்த போலக்
காய்த்தரு பூகப் பாளை
கதுமென வுதிருங் கங்கை
ஆர்த்தன ரேறி யாங்க
ணருமறை முனிவர் சூழ
வேத்தவை யிருந்த கோல
வியலெரி வேள்வி சேர்ந்தார்.

பூத்தமென் கமலமீது பொரிஎரிப் பெய்தபோல,
காய்த்தரு பூகப்பாளை கதும்என உதிருமகங்கை
ஆர்த்தனர் ஏறி, ஆங்கண் அருமறை முனிவர் சூழ,
வேத்துஅவை இருந்த கோலவியல் எரிவேள்வி சேர்ந்தார்.

பொ: மலர்ந்திருக்கின்ற மெல்லிய தாமரைப் பூமீது, பொரியை ஓமத்தீயில் பெய்ததைப் போல, பழுக்காயைத் தருகின்ற கமுகின் பாளையில் உள்ள மொட்டுகள் துடும் என உதிர்தற்கிடமான கங்கையாற்றை மகிழ்ச்சியாரவாரத்தோடு கடந்து கரையேறி அடுத்துள்ள அவ்விடத்தில் அரிய வேதம் வல்ல முனிவர்கள் சூழ, அரசர் கூட்டம் இருந்த அழகிய விரிந்த எரியையுடைய வேள்விச் சாலையை அடைந்தார்கள்.

கு: இச்செய்யுளில் சேர்ந்தார் என்ற பயனிலைக்குக் குசலவர்கள் தோன்ரு எழுவாய். வேள்விச் சாலைக்குச் செல்கின்ற குசலவர்கள் அங்குச் செல்வதற்கு முன்னே அவ்வேள்விக் காட்சியைச் கங்கைக் கரையில் காண்கின்ருர்கள் என்பார், ‘பொரி எரிபெய்த போலக் கமலமீது பூகப் பாளைக்கது மெனவுதிரும் கங்கை’ என்ருர். பூத்த மென் கமல மலர் எரிபோன்றது; பூகப்பாளை அம்மலரில் உதிர்வது எரியில் பொரி சொரிவது போன்றது என்க. கங்கைக் கரையோரத்தில் கமலம் மலர்ந்துள்ளது; கரையில் உள்ள கமுகப் பாளையிலிருந்து மொட்டுகள் அம்மலரில் உதிர்கின்றன என்க. காய்த்தரு-பழுக்காயைத் தருகின்ற. பூகம்-கமுகு. கங்கை ஆர்த்தனர் ஏறி என்றது, கங்கையாற்றில் ஓடத்தில் வந்த மகிழ்ச்சியால் ஆரவாரித்துக் கொண்டு கரை யேறினுர்கள் குசலவர்கள் என்றவாறு. வேந்து அவை வேத்தவை என வல்லொற்றுயிற்று. கோல எரி, வியல் எரி எனத் தனித்தனி இயையும். வேள்விக்குண்டங்களின் வடிவமைப்பிற்கேற்ப வேள்வித்தீ அழகுடன் விளங்குகின்றது ஆதலின் ‘கோல எரி’ என்ருர். வியல் எரி என்றது, விரிந்த இடத்தில் எரியும் பெருமையுடைய எரி என்றவாறு, (150)

## மிகைப் பாடல்கள்

பூத்தமென் கமலமீது என்ற பாடலுக்குப் பின் பல ஏடுகளிலும் அச்சுப் புத்தகங்களிலும் பின்வரும் இரு பாடல்கள் உள்ளன.

150-அ. வித்தக முனிவன் பின்போ மைந்தர்கள் முனிவேடத்துக்
கத்திர ரிவர்க ளென்பார் காணுதுங் கடைக்கா லென்பார்
கைத்தலந் தூய பாதங் கண்ணிணைக் கமல மென்பார்
இத்தலத் திவரைப் போல வெழிலுளோ ரில்லை யென்பார்.

150-ஆ. கோடகங் கொண்ட கேள்விக் கோல்களோ ரேழுங் கோத்த
மாடக யாழை யின்றி வரிசிலை யுளதே யாயின்
பாடக மலர்த்தா ளன்னை பணிமொழி பழுது போசிக்
காடக மகிழ்ந்து மீண்ட கண்ணனே போல்வ ரென்றார்.

இவ்விரு பாடல்களின் கருத்தை நோக்கின் பின்வரும் கதை நிகழ்ச்சிக்கு மாறுபட்டதாகவுள்ளது. வான்மீக முனிவனோடு குசலவர்கள் போக வில்லை. வான்மீகியை வணங்கி விடை பெற்றுக் கொண்டே குசலவர் யாகசாலைக்குச் சென்றதாகவே முன்னர் வந்துளது. குசலவரின் இராமாயணப் பாடல்களை இராமன் கேட்டபின்பு அவர்களைக் காட்டிற்கு அனுப்பிவிட்டு வான்மீகியையும் சீதையையும் அழைத்து வருமாறு செய்கின்றான் என்றே கதைப் போக்குள்ளது. இங்கு 'வித்தக முனிவன் பின் போம் மைந்தர்கள்' என்பது பொருந்தாது. பிற்காலத்துப் பாடிச்சேர்த்த இடைச்செருகலாகவே யிருக்க வேண்டும். மேலும் வேள்வி சேர்ந்தார் என்று 150ஆம் செய்யுள் முடிந்துளது. வேள்வி சேர்ந்தவர்கள் யாது செய்தார்கள் என்பதையே அடுத்த செய்யுள் சொல்ல வேண்டும். அவ்வாறு இயைபுபட விருப்பது 'வெம்பரி வேள்வியிலிருந்த வேந்தரும்' என்று தொடங்கும் பாடலே என்பதும் இங்கு நினைதல் வேண்டும். எனவே இவற்றைத் தனியே மிகைப் பாடல்களாக்கிக் கொண்டோம்.

## குசலவர்கள் யாகசாலையில் இராமன் வரலாற்றுப் பாடலைப் பாடுவது

1120 வெம்பரி வேள்வியி லிருந்த வேந்தரும்
உம்பரு முனிவரு முளம கிழ்ந்திட
இம்பரி னிராகவ னிசைகொ ளின்னிசை
தும்பு நாரதர் தொலையப் பாடினர்.

வெம் பரிவேள்வியில் இருந்த வேந்தரும்
உம் ரும் முனிவரும் உளம் மகிழ்ந்திட,
இம்பரின் இராகவன் இசைகொள் இன்னிசை
தும்புரு நாரதர் தொலையப் பாடினர்.

பொ: விரும்பத்தக்க அசுவமேத யாகத்தில் இருந்த வேந்தர்களும் தேவர்களும் முனிவர்களும் கேட்டு உள்ளம் மகிழ்ந்திட, இவ்வுலகத்தில் இராகவனுடைய புகழைக் கொண்டுள்ள இனிய இசைப்பாடலை இசையில் வல்லராய தும்புருவும் நாரதரும் கூடத் தோற்குமாறு பாடினர்கள்.

கு: வெம்மை-விருப்பம். இனி வேள்வி நெருப்புமூட்டிச் செய்யப்படுவது ஆகலின் வெப்பம் உடைய வேள்வி எனப்பட்டது எனக் கூறலும் ஆம். உம்பர்-வேள்வியில் அவியுண்ண வந்த தேவர்கள் 'இராகவனிசை கொள்இன்னிசை' என்றது, இராமனுடைய புகழைக் கொண்டு அமைந்த இசைப் பாடல்களை. இசைப்பாடல்களைப் பாடுவதில் தலைமை யுற்றவர்கள் தும்புருநாரதர் ஆதலின் அவரும் தோல்வியுறுமாறு குசலவர்கள் சிறக்கப் பாடினர்கள் என்றவாறு. (151)

---

சிலசுவடிகளில் பின்வரும் 5 மிகைப்பாடல்கள் காணப்படுகின்றன:

151-அ. இவ்வகை சனங்கள் கூற யாகசாலையைவந் தெய்தும்
ஐவகைப் புலன்கள் வென்றோன் அடியிணை வணங்கும் அண்ணல்
செய்வகை பூசை செய்து சிறந்தவின் மொழிகள் செப்பி
எவ்வகை யானும் வேறொன்று இல்லையே யுனக்கீங் கென்றான்.

ஆ. பின்னுமீ துரைக்கு முங்கள் பெருந்தவம் இடையூ றின்றி
செந்நெறி செல்லாநின்ற தேயென முனிவன் செப்பும்
நின்னை மன் னுகப் பெற்ற நீணில வுயிர்க ளெல்லாம்
இன்னல் கெட் டிருப்ப தானல் எங்களுக் கிடையூ
றுண்டோ.

இ. என்றுமா முனிவன் கூறி ராமனை யாசி கூறி
தன்றுணை யடிகள்பேணும் சாத்திர ரோடும்போக
அன்றவர்க் கரிசி முற்கம் பால்தயிர் நெய்பால் பெய்த
ஒன்றலா சகடம் மொய்ப்ப வுவந்தவை முனிகைக்
கொண்டான்.

ஈ. கோடுத லில்லா வாய்மை குசலவர் தம்மை நோக்கி
கூடிய சனங்கள் பாலும் குவலய மன்னர் பாலும்
தேடிய தனமாம் சீரா மாயணம் சிலையோன் பாலும்
பாடுமி னென்று விட்டான் பரம்பொருள் தன்னுட்
கொண்டான்.

உ. தூவணத் துகில்சொல் குற்ற தோகையர் மைந்தர் துன்னும்
ஆவணந் தோறும் பொன்னின் அடிமுடி மன்னர் துன்னும்
காவணந் தோறும் சீரார் கவலைகள் தோறும் மைந்தர்
பாவணச் செஞ்சொல் சீரா மாயணம் பாடுங்காலை,

ஊ. மூட்டிய செந்தீயோமம் முடித்தன னிருந்தானென்று
கேட்டவன் கேட்குங் காலம் இதுவெனச் சாலை சார்ந்து
வாட்டமில் செஞ்சொற் சீரா மாயணம் மாறி மாறி
பாட்டியங் கூட்டி மைந்தர் பாடினர் பலரும் சுற்ற.

எ. அன்னவர் பாடுந் தெய்வ கானமா மமிர்த வெள்ளம்
தன்னிரு செவியால் மாந்தித் தடுப்பரு முவகை பொங்க
மன்னவ ரோடுங் கூடி யிருந்துதன் மைந்தர் பாடும்
இன்னிசை கேட்பான் வேண்டி யிராகவ னினைய செய்தான்.

ஏ. அருமறை முனிவர் தம் மோடளவறு கான நூலின்
பரிசறிந் தாடுவார்கள் பாடுவார் மூட்டுக் காரர்
விரிபெருங் கலைவல்லோர்கள் வியந்தனம் மிக்கோ ரெல்லாம்
வருகவென் றுரைப்ப வன்னுர் வந்தன ரடங்க வெல்லாம்.

ஐ. முன்னை முப் பத்துமூவர் முதலினோர் முனிவர் சூழப்
பொன்னகர்க் கிறைவனுய புரந்தா னிருந்தானென்ன
பன்னவ ராதியாய மாசனம் வந்து சூழத்
தன்னெதி ரிலாதவீரர் தலைவன்வீற் றிருந்த காலை.

ஒ. நீடிய தவத்துமைந்தர் வருகென வந்து நிற்ப
ஓடிய வும்பர் வாழ உயர்வலி யரக்கர் மாய
கோடிய வரிவி லண்ணல் குமரரைக் குளிர நோக்கிப்
பாடுக வென்னச் சீரா மாயணம் பாடலுற்றுர்.

ஓ. மண்ணுல கத்தி லுள்ள மாகதர் கேட்டார் தானத்
தெண்ணரும் வருணி கொண்டாங் கெழில்கொ ளாளத்தி வைத்துக்
கண்ணிணை யாடா கண்டம் கண்ணிணைப் புருவமேறுப்
பண்ணிசை கலந்த வண்ணம் பாடினுர் பலரும் சுற்ற.

ஔ. கூடுமாவியுமெனப் பதத்தோ டோசை கூடிட
நீடு மன்னர் நின்ற நின்றிடந் தோறும் புகழ்ந்திட
வாடுவார்கள் தாளநூ லறிந்துளார்க ளாமெனப்
பாடுவார் புகழ்ந்திடப் பழிப்பில் மைந்தர் பாடினுர்.

க. மானமா வராக நெஞ்சழிந்துவாடி யோடிய
மானமா வராக மாளி வாரணம் மனஞ்செல
கானமான சங்கிடந்து கவ்வு புட்கள் சோர்தர
கானமானுகஞ் செலக் கவின்கொள் மைந்தர் பாடினுர்.

கா. வீரர் வீரனிருஞ்சபை விருத்தரும் புகழ்ந்திடச்
சாரமான கீதநூல் தரித்துணர்ந்த தன்மையோர்
சோர மூவ ராதி தேவர் பாடுவார்கள் தும்புரு
நாரதாதி யாயுளோர்கள் நாண மைந்தர் பாடினுர்.

கி. சந்தமைந்தர் விரிஞ்ச ராதி சருக்கமாக நாடொறும்
இந்த வண்ணம் வந்துபாட வேறுசிரி ராகவன்
மைந்த ரென்னு மாறறிந்து மன்னன் நெஞ்சழிந்திடத்,
தந்தமுள் ளழிந்துமா சனங்க ளாவி வாடினர்.

கீ. பாவியர்க்கு நண்ணரும் பதத்தை மைந்தர் பாடிடும்
காவியத் திலேதன்மைந்தர் ஆதல்கண்டு காதலால்
ஆவிபற்றி யிர்தரு மலக்கணெய்தி யாறிடாது
ஓய்வில்வா சருத்தன்மெய் நணைப்ப வுள்ளம் வாடினன்.

கு: துன்னுதிரைமாக் கடல்கலங்கித் தெளிந்த தென்னத்
துயராலே
மன்னன் கலங்கித் தெளிந்தவர்க்கு வரம்பிலாத நவமணியும்
பொன்னும் பூவும் புனைதுகிலுங் கொடுபபக் கொள்ளார்
தவம்பூண்டோர்க்
கென்ன பலனுண்டிவையிற்று லேதும்வேண்டே மெனவுரைத்
தார்.

## குசலவர் இசையைக்கேட்டு அவையோர் வியத்தல்

1121 ஓதநீர் வண்ணன் வேள்வி
காணிய வுவந்து வந்த
மாதவர் மன்ன ராதி
மாசன மைந்தர் பாடும்
தீதறு தெய்வ கானஞ்
செவிமடுத் தினிதின் மாந்தி
யீதுநா மிதற்கு முன்பு
கேட்டறி யாத தென்றார்.

ஓதநீர் வண்ணன் வேள்வி காணியஉவந்து வந்த
மாதவர் மன்னர் ஆதி மாசனம், மைந்தர் பாடும்
தீது அறுதெய்வ கானம் செவிமடுத்து இனிதின் மாந்தி,
'ஈதுநாம் இதற்கு முன்பு கேட்டு அறியாதது' என்றார்.

பொ: கடல் வண்ணனாகிய இராமனது அசுவமேத யாகத்தைக் காணுதற்கு மகிழ்ச்சி கொண்டுவந்த மாதவர், அரசர் முதலிய பெருமக்கள் கூட்டம் குசலவர்களாகிய மைந்தர்கள் பாடுகின்ற குற்றமற்ற தெய்வ கானத்தைச் செவியில் கேட்டு இனிதாகப்பருகி, 'இந்த இசை நாம் இதற்கு முன்பு கேட்டறியாதது' என்று வியந்து கூறினார்கள்.

கு: ஓதநீர் என்றது, கடல்நீரை. ஓதம்-அலை. அலையையுடைய நீர் கடல் என்றவாறு. மாசனம் என்றது பெருமக்கள் கூட்டத்தை. தெய்வத்தன்மை வாய்ந்த இசை தெய்வகானம் எனப்பட்டது. மாந்துதல், செவிவழிப் பருகுதல். (152)

## குசலவர் பாடல் கேட்டோர் இராமனுக்குச் சொல்லுதல்

1122 மாடக யாழிடத் தேந்து மைந்தரால்
பாடிய வின்னிசைப் பனுவ றஞ்செவி
ஊடுற நிறைதலா லுருகு சிந்தையோ
டேடலர் தாரினாற் கெடுத்துக் கூறினார்.

மாடக யாழ் இடத்து ஏந்தும் மைந்தரால்
பாடிய இன்னிசைப் பனுவல் தஞ்செவி
ஊடு உற நிறைதலால், உருகு சிந்தையோடு
ஏடுஅலர் தாரினாற்கு எடுத்துக் கூறினர்.

பொ: முறுக்காணியையுடைய யாழினை இடக்கையில் ஏந்திக் கொண்டுள்ள குசலவர் என்ற பெயருடைய மைந்தரால் பாடப்பட்ட இனிய இசைப்பாடல்கள் தம் செவியுள் பொருந்த நிறைதலால் உருகுகின்ற சிந்தனையோடு (சென்று சிலர்) இதழ்கள் அவிழ்ந்த மலர்மாலை அணிந்த இராமனுக்கு எடுத்துச் சொன்னார்கள்.

கு: மாடகம் - முறுக்காணி. யாழ் நரம்புகளை வலிக்கவும் தளர்த்தவும் உதவுவது. ஏடு-இதழ். ஏடலர் தாரினான் என்றது இராமனை. (153)

## இராமன் ஏவலின்படி குசலவரை அழைக்க வாயிற் காவலர் செல்லுதல்

1123 அனையவர்த் தருகென வமல னேவலும்
புனை துகிற் போர்வையர் புலிக்கண் பார்வையர்
இனநரை முடியின ரிடிக்குஞ் சொல்லினர்
துனைமல ரடியினர் தொழுது போயினர்.

அனையவர்த் தருகென அமலன் ஏவலும்
புனைதுகில் போர்வையர் புலிக்கண் பார்வையர்
இனநரை முடியினர் இடிக்கும் சொல்லினர்
துனைமலர் அடியினர் தொழுது போயினர்.

பொ: அமுத இசைபாடும் அம்மைந்தர்களை அழைத்து வருக என்று இராமன் ஏவுதலும் புனைந்த துகிலாகிய போர்வையுடையவர்களும் புலிக்கண் போன்ற பார்வையுடையவர்களும் இனமான நரைத்த முடியினை யுடையவர்களும் இடிஇடித்தாற் போன்ற சொல்லினை யுடையவர்களும் விரைந்து செல்லும் மலரடிகளை யுடையவர்களும் ஆகிய தூதுவர், வணங்கிச் சென்றனர்.

கு: அமலன் - மலவழுக்கு நீங்கிய திருமாலின் அமிசமான இராமன். தூதுவரைப் பார்த்து 'அந்த இசைபாடுபவரைக் கொணர்க' என்றவுடன் அத்தூதுவர் வணங்கிப் புறப்பட்டனர் என்க. உடம்பைத் துகில் போர்வையால் மூடிக் கொண்டிருத்தலின் 'புனைதுகிற் போர்வையர்' என்றார். முதுமையர் என்பார், 'இனநரை முடியினர்' என்றார். நரைமுடி என்பது வெளுத்த முடியை. துனைதல்-விரைதல். (154)

## வாயிற்காவலர் சொல்லக் குசலவர் அரசவை புகுதல்

1124 ஆயசீ ரிராகவ னருளிப் பாடென
வாயில்காப் பாளனும் மகிழ்ந்து கூறலும்
ஏயெனு மாத்திரை யிளைய மைந்தரும்
போயின ரரசவை புகுந்து மேயினர்.

ஆயசீர் இராகவன் அருளிப்பாடு என,
வாயில்காப்பாளன் உள்மகிழ்ந்து கூறலும்
ஏஎனும் மாத்திரை இளைய மைந்தரும்
போயினர் அரசவை புகுந்து மேயினர்.

பொ: உளதாகிய சிறப்பினையுடைய இராமனது அருளிப்பாடு இது என்று வாயில் காப்பவன் மனமகிழ்ந்து சொல்லுதலும் ஏ என்று சொல்லும் அளவில் இளமையுடைய குசலவர்களும் போய் அரசவைபுகுந்து நின்றார்கள்.

கு: அருளிப்பாடு என்பது அருளோடுங் கூடிய கட்டளை என்னும் கருத்தினது. ஏ எனும் மாத்திரை என்பது. ஏ என்னும் எழுத்தைச் சொல்லும் கால அளவைக்குள் என்னும் பொருளது. இளைய மைந்தர் என்றது இளமையுடைய குசலவர்களை. போயினர் என்பது முற்றெச்சம்; போய் என்பதே பொருள். (155)

## குசலவர்கள் காப்பிய இன்னிசை பாடத் தொடங்குதல்

1125 குரன்முதலெழுவகை நரம்பும் கூடிய
விரல் கவர்ந் தெடுத்துளர் வேதச் சீறியாழ்
கரமிசை வாங்கினர் கவின்கொள் காப்பிய
உரைபயி லின்னிசை யுரைப்ப தாயினர்.

குரல்முதல் எழுவகை நரம்பும் கூடிய
விரல்கவர்ந்து எடுத்து உளர் வேதச் சீறியாழ்
கரமிசை வாங்கினர் கவின்கொள் காப்பிய
உரைபயில் இன்இசை உரைப்பதாயினர்.

பொ: குரல்முதல் தாரம் ஈறாக உள்ள எழுவகையான நரம்பும் குறைவின்றிக் கூடியுள்ளதும் விரலால் விரும்பி எடுத்துத் தடவக் கூடியதும், வேதம் பாடுதற்கு உரியதும் ஆகிய சிறிய யாழினைக் கையில் வாங்கிக் கொண்டு அழகு கொண்ட இராமாயணம் என்னும் காவியமாகிய புகழ் பொருந்திய இனிய இசைப் பாடலை இசைக்கத் தொடங்கினார்கள் குசலவர்கள்.

கு: எழுவகை நரம்புகளாவன: குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பவை. நரம்பும் என்புழி உம்மை முற்றும்மை. கூடிய சிறியாழ், உளர்சிறியாழ், வேதச்சிறியாழ் எனத் தனித்தனி இயையும். சிறியாழ் என்றது செங்கோட்டியாழினை. இதற்குரிய நரம்பு ஏழு. பேரியாழிற்கு இருபத்தொரு நரம்பு; மகரயாழிற்குப் பத்தொன்பது நரம்பு; சகோடயாழிற்குப் பதினுலு நரம்பு. செங்கோட்டியாழிற்கு ஏழு நரம்பு. ‘பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன் சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினர் - தார்பொலிந்து,

மன்னுந் திருமார்ப வன்கூடற் கோமானே
பின்னு முளவே பிற''

‘ஒன்று மிருபது மொன்பதும் பத்துடனே நின்ற பதினுன்கும் பின்னேழும் குன்ருத

நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே
மேல்வகை நூலோர் விதி''

எனவரும் சிலப்பதிகார அரங்கேற்றுக் காதையில் 26 ஆவது அடிக்கு உரையில் அடியார்க்கு நல்லார் காட்டிய விளக்கத்தால் இவற்றை அறியலாம். தோளில் தொங்கவிட்டிருந்த யாழினைக் கையில் வாங்கினர் என்க. வாங்கினராய் உரைப்பதாயினுர் என முற்றெச்சமாக்கி முடிக்க. கவின் கொள் காப்பியம் என்றது அழகுடைய வான்மீகியின் இராமகாதையை. (156)

## வான்மீகி சொன்ன வண்ணமே சொல்வோம் எனக் குசலவர் சொல்லித் தொடங்குதல்

1126 நகவன் மாசிற கரிந்தவ
ருன்மறைக் கிழவன்
அகவன் மாயையென் றறநெறி
நால்வருக் களித்தோன்

உகவன் மாய்த்தவ ருணர்வரு
மறையை வான்மீகி
பகவன் மாதவன் பணித்தன
வண்ணமே பகர்வாம்.

நகவல் மாசிறகு அரிந்தவன்; நான்மறைக் கிழவன்,
அகவல் மாயை என்று அறநெறி நால்வருக்கு அளித்தோன்,
உகவல் மாய்த்தவர் உணர்வரும் மறையை வான்மீகி
பகவன்-மாதவன் -பணித்தன வண்ணமே பகர்வாம்.

பொ: மலைகளின் வலிய பெரிய சிறகுகளை அரிந்தவனாகிய இந்திரனும், நான்கு வேதங்களையும் அருளியவனாகிய பிரமனும், காணப்படும் இவ்வுலகத்தைப் பொய்யென்று சொல்லற்க என்றுகூறி அவர்கள் மேற்கொள்ளத்தக்க சித்தாந்த அறநெறியைச் சனகாதி நால்வர்க்கும் உபதேசித்தருளிய சிவனும், உலக விருப்பங்களை ஒழித்தவர்களாகிய முனிவர்களும் இதுகாறும் உணர்ந்திராத இராம காதையாகிய நூலினை-வான்மீகி பகவான் பெருந்தவ முனிவன் சொன்ன வண்ணமே சொல்லுவோமாக.

கு: நகம்-மலை. வல் மா சிறகு என்க. இந்திரனும் பிரமனும் சிவனும் முனிவரும் உணர்ந்திராத வான்மீகியின் இராமாயணத்தை அம்முனிவர் சொன்னபடியே சொல்வோம் எனக் குசலவர்கள் சொல்லித் தொடங்குகின்றார்கள் என்றவாறு. அகவல் என்பது அகவிச் சொல்லுதல்-எடுத்துச் சொல்லுதல் என்னும் பொருளுடையது; இங்கு எதிர்மறைச் சொல்லாய் 'எடுத்துச் சொல்லாதே' என்னும் பொருள் தந்தது. உலகினைப் பொய்யென்று சிலர் சொல்வது போலச் சொல்லாதீர்கள் என்றவாறு. அறநெறி என்றது, உலகம் உயிர் கடவுள் என்ற மூன்றும் நித்தியம் என்பதும் மும்மலமும் நீக்கி உயிர் இறைவனைச் சார்வதே முத்தி என்பதும் ஆகிய நெறிகளை. நால்வர் என்றது, சனகன், சனந்தனன், சனற்குமாரன் சனந்தனன் என்ற நால்வரை. இவர்கள் நான்மறையினையும் ஆகமங்களையும் உணர்ந்தோராயினும் மெய்ப்பொருள் பற்றிய தெளிவினைப் பெறுதற்குச் சிவன்பால் வந்து பணிந்து வேண்டினராகச் சிவபிரான் கல்லாலின் கீழிருந்து சின்முத்திரையால் சொல்லாமற் சொல்லித் தெளிவித்தான் என்றவாறு. அந்நால்வரும் உலகத்தைப் பொய்யென்று சொல்லிக் கொண்டி

ருந்தவர்கள். சிவபிரான் அவர் கருத்தை மாற்ற வேண்டி, 'மாயையென்றகவல்' என்று ஆணையால் தெளிவுபடுத்தியவாறு. வான்மீகி செய்த இராமகாதையை மறை யென்றது அக்கதையின் பெருமை கருதியேயாம். பணித்தன - சொல்லியவற்றை. இனிக் கட்டளையிட்ட என்று பொருள் கூறலும் ஆம். உகவல் - விரும்புதல். உகவல் மாய்த்தவர் என்றது, உலக விருப்பத்தை விட்டதவமுனிவர்களை. (157)

## விசுவச் சேனர் வணக்கம்

1127 ஞான நாயக னுன்மறை
நாயக னளினத்
தேன நாயகன் றிருப்பத
நதிபொதி செனியன்
ஆன நாயக னம்பிகைக்
கருடிருக் கதைக்கோர்
சேனை நாயக னடியிணை
சிறந்தநற் றுணையே.

ஞானநாயகன் நான்மறை நாயகன் நளினத்
தேன நாயகன் திருப்பத நதிபொதி செனியன்
ஆன நாயகன் அம்பிகைக்கு அருள்திருக்கதைக்கு ஓர்
சேனை நாயகன் அடிஇணை சிறந்த நல் துணையே.

பொ: ஞானவடிவான தலைவனும் நான்கு வேதங்களால் சொல்லப்படும் தலைவனும் தாமரை மலரில் தங்கும் தேன் போன்ற திருமகளையுடைய தலைவனும் ஆகிய திருமாலின் திருவடியில் தோன்றிய கங்கையைப் பொதிந்து கொண்ட தலையையுடையவனாகிய சிவபிரான், அம்பிகைக்குக் கூறியருளிய இராமாயணம் என்னும் திருக்கதையைச் சொல்லுதற்கு ஒப்பற்ற விசுவச்சேனரின் திருவடிகள் இரண்டும் சிறந்த நல்ல துணையாகும்.

கு: திருமால் என்ற ஒரு பொருள்மேல் வந்த பல்பெயராக, ஞானநாயகன் நான்மறை நாயகன் நளினத் தேன நாயகன் என்ற மூன்றும் அமைந்துள்ளன. தேன என்றது தேன் போன்ற திருமகளை. தேன என்புழி அகரம் குறிப்புப் பெயரெச்ச விகுதி உடைமைப் பொருளில் வந்தது. நளினத்தேனை யுடைய நாயகன் என்றவாறு. நளினம் - தாமரை. தாமரை மலரில் வீற்றிருக்கும் தேன் போன்ற திருமகளை இங்கு நளினத்தேன் எனச் சிறப்பித்த வாறு. இனி இம்முப்பெயர்களும் திருமாலின் பரத்துவம் வியூகம் அந்தர் யாமித்துவம் என்ற மூன்று நிலைகளைக் குறித்தனவாகக் கொண்டு நளினத்தேன நாயகன் என்பதற்கு உயிர்களின் இதயத் தாமரையில் தேனைப் போன்று அந்தர் யாமியாய் விளங்குபவன் என்றும் பொருள் கொள்ளலாம். ஞானநாயகன் என்பது பரத்துவம். நான்மறை நாயகன் என்பது வியூகம் எனக் கொள்க. திருமால் விக்கிரமனாய் உலகளந்த போது விண்ணுலகை யளக்கச் சென்ற திருவடி பிரமனுலகையும் கடந்து சென்ற போது, பிரமன் தன் கமண்டலத்து இருந்த நீரைக் கொண்டு அந்தத் திருவடிக்குத் திருமஞ்சனம் செய்தானாக, அந்தத் திருவடியில் ஒழுகிய நீரே ஆகாய கங்கையாயாயிற்று என்றும் அந்தக் கங்கை நீரையே சிவன் தன்சடையில் தாங்கிக் கொண்டான் என்றும் கூறுவர். சென்னியன் என்பது இடைக் குறையாய்ச். செனியன் என வந்தது. இராமகாதையின் சிறப்புப் புலப்பட சிவன் அம்பிகைக்கு அருள் திருக்கதை என்றார். (158)

## தயரதன் நாடும் மனைவியரும்

1128 நாடு கோசல நாடுமாநதிபுனற் சரயு
ஆடு திண்கொடி யயோத்திமா
நகரதற் கிறைவன்
தேடு வண்புகழ்த் தசரதன்
றேவியர் முதன்மை
சூடு கோசலை கைகேசி
சுமித்திரை யென்பார்.

நாடு கோசல நாடு; நதிபுனல் சரயு
ஆடு திண்கொடி அயோத்திமா நகரத்திற்கு இறைவன்
தேடு வண்புகழ் தசரதன் தேவியர் முதன்மை
சூடு கோசலை கைகேசி சுமித்திரை என்பார்.

பொ: (இக்கதைக்குரிய) நாடு கோசல நாடாகும்; ஆறு நீர் அருத சரயு ஆகும்; அசைந்து ஆடுகின்ற திண்ணிய கொடிகளை யுடைய அயோத்தியே மாநகர மாகும். அந்நகர்க்கு அரசன் யாவரும்தேடுதற்குரிய வண்மையாலாய புகழையுடைய தசரதன் ஆவன். அவன் பட்டத்துத் தேவியர் முதன்மை பெற்ற கோசலை, கைகேசி, சுமித்திரை என்று சொல்லுவார்கள்.

கு: இறைவன் என்றது அரசர். இச் செய்யுளில் நாடும் ஆறும நகரமும் அரசனும் பட்டத்துத் தேவியரும் கூறப் பட்டிருத்தல் காணலாம். புகழ் பலவற்றுள் வண்மையால் புகழே ஒருவர் தேடுதற்குரிய புகழ் ஆதலின் தேடுவண்புகழ் என்றார். (159)

## குசலவர் கூறும் இராமாயணத்தில் இராமன் முதலிய நால்வரின் பிறப்பு

1129 மற்றுந் தேவிய ரறுபதி
னுயிர மடவார்
சொற்ற மன்னவன் சுடர்க்கனல்
வேள்வியைத் தொடங்கிப்
பெற்ற மைந்தர்கள் பிறங்குவே
லிராகவன் பரதன்
எற்றுநீள் புயத் திலக்குவன்
சத்துருக் கினனே.

மற்றும் தேவியர் அறுபதினுயிர மடவார்
சொற்ற மன்னவன் சுடர்க்கனல் வேள்வியைத் தொடங்கி
பெற்ற மைந்தர்கள் பிறங்குவேல் இராகவன் பரதன்
எற்றும்நீள் புயத்து இலக்குவன் சத்துருக்கினனே.

பொ: மற்றுமுள்ள அறுபதினுயிர மடவாரையும் உடையவன் எனச் சொல்லப் பெற்ற மன்னவனுகிய தயரதன், ஒளிவாய்ந்த கனல் மூட்டிச் செய்யத்தகும் புத்திரகாமேட்டி என்னும் வேள்வியைத் தொடங்கிச் செய்து, பெற்ற மைந்தர்கள் — விளக்கமுடைய வேல்தாங்கிய இராமன், பரதன், பகைவர்களை மோதியழிக்கின்ற நீண்ட புயத்தினையுடைய இலக்குவன், சத்துருக்கினன் என்ற நால்வர் ஆவர்.

கு: கோசலை, கைகேசி, சுமித்திரை என்பார் மூவரும் பட்டத்து அரசியர் என்பதும் அறுபதினுயிரவர் அவ்வுரிமை யில்லாத மனைவியர் என்பதும் புலப்பட 'மற்றுந் தேவியர் அறுபதினுயிர மடவார்' என்ருர். சுடர்க்கனல் வேள்வி என்றது, கனல் மூட்டிச் செய்யப்படும் 'புத்திரகாமேட்டி' என்னும் வேள்வியை. தொடங்கி என்றது, தொடங்கி முடித்து என்னும் பொருளது. வேல் என்பது வில் முதலிய படைகளையும் தழுவும் பொதுப் பெயராய் நின்றது. பிறங்குவேல்-விளக்கமுடையவேல். பரதன் தவத்திற்கே சிறப்புரிமை யுடையவனுதலின் அவனுக்குப் படையேதும் கூறப்படவில்லை. எற்றுதல்-மோதுதல். இந்திர சித்தினைக் கொல்லுதற்கேற்ற வலிமையுடைய நெடிய புயங்களை யுடையவன் இலக்குவன் என்றவாறு. சத்துருக்கினன் என்றது, பகைவர்களைக் கொல்லும் இயல்பினன் என்னும் பொருளது. இப்பெயர் சத்துருக்கனன் என்றும் வரும். அறுபதினுயிரத்து மூவர் மனைவியர் இருந்தும் புதல்வர் பிறந்திலராதலின் புத்திர காமேட்டி செய்ய நேர்ந்தது என்ற கருத்துப் புலப்படத் தேவியர் 'அறுபதினுபிரமடவார் சொற்ற மன்னவன்' என்ருர். (160)

## கோசிகன் வேள்விகாக்க இராமனை வேண்டத் தயரதன் மறுத்தல்

1130 அன்ன மன்னவ னரியணை
மீதுவீற் றிருந்தான்
இன்ன மாநிலம் படைப்பனென்
றவனியல் வேள்விக்

குன்னன் மைந்தரி லிராமனைத்
 தருதியென் றுரைத்தான்
மன்னர் மன்னவன் மறுத்தனன்
 வசிட்டனீ துரைத்தான்.

அன்ன மன்னவன் அரியணை மீது வீற்றிருந்தான்;
இன்ன மாநிலம் படைப்பன் என்றவன் இயல் வேள்விக்கு
உன் நன்மைந்தரில் இராமனைத் தருதி என்று உரைத்தான்;
மன்னர் மன்னவன் மறுத்தனன்; வசிட்டன் ஈது உரைத்தான்.

பொ: அந்தத் தயரத மன்னன் சிங்காசனத்தில் வீற்றிருந்தானாக, அப்பொழுது 'இந்த உலகத்தை யான் படைப்பேன்' என்று கூறிய கோசிகன் வந்து, 'யான் இயற்றுகின்ற வேள்வியை காப்பதற்கு உன்னுடைய நல்ல மைந்தர் நால்வரில் இராமனைத் தருவாயாக' என்று சொன்னாக, தயரதச் சக்கரவர்த்தி கொடுக்க மறுத்தான்; அப்போது அருகிலிருந்த வசிட்டன் இதனைச் சொன்னான்.

கு: விசுவாமித்திரனின் தவ ஆற்றல் புலப்பட வேண்டி 'இன்ன மாநிலம் படைப்பனென்றவன், என்று சிறப்பித்தவாறு. அவன் வேண்டுகோளை மறுத்தல் கூடாது என்னும் கருத்தும் புலப்படும். வேள்வி காத்தற்கு என வருவிக்க. மன்னர் மன்னவன் என்ற பெருமிதத்தால் மறுத்தான் என்பார், 'மன்னர் மன்னவன் மறுத்தான்' என்றார். (161)

## இராம இலக்குவரோடு கோசிகன் காடு புகுதல்

1131 மறுத்தி யன்றென வுரைத்தலு
 மன்னர்கோன் முனியைப்
பொறுத்தி யென்றவன் பொன்னடி
 சென்னியிற் புனையா
உறுத்தி மைந்தரை யளித்தலு
 முவந்துமா முனியும்

கறுத்த செம்மலுந் தமபியுங்
காடு சென்றடைந்தார்.

'மறுத்தியன்று' என உரைத்தலும் மன்னர்கோள், முனியைப்
'பொறுத்தி' என்று அவன் பொன்னடி சென்னியில் புனையா
உறுத்தி, மைந்தரை அளித்தலும், உவந்து மாமுனியும்
கறுத்த செம்மலும் தம்பியும் காடு சென்று அடைந்தார்.

பொ : 'மறுத்துச் சொல்லாதே' என வசிட்டன் சொல்லு தலும், தயரதச் சக்கரவர்த்தி கோசிக முனிவனைப் பார்த்துப் 'பொறுத்துக் கொள்க' என்று கூறி அவன் சிறந்த திருவடிகளைத் தலையுற வணங்கித் தன் மைந்தரைக் கொடுத்தலும் மகிழ்ந்து பெரிய முனிவனும் கரியசெம்மலாகிய இராமனும் அவன் தம்பி இலக்குவனும் காட்டிற்குச் சென்று சேர்ந்தார்கள்.

கு : மறுக்காதே என்னும் பொருள்பட 'மறுத்தியன்று' என வசிட்டன் கூறினன். உறுத்தி என்றது, உறச் செய்து என்னும் பொருளது. புனையா-புனைந்து; செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். உவத்தல் மாமுனிக்கு மட்டுமன்றி இராம இலக்குவர்க்கும் உளதாயிற்று என்பார், உவந்து மாமுனியும் கறுத்த செம்மலும் தம்பியும் காடு சென்றடைந்தார். என்றார். இராமஇலக்குவரோடு செல்வதில் கோசிகனுக்கு மகிழ்ச்சி. கோசிக முனியோடு காட்டிற்குப் போவதில் இராம இலக்குவர்க்கு மகிழ்ச்சி என்க. சென்றடைந்தார் என்றது, தேர் முதலிய ஊர்திகளில் செல்லாது நடந்து சென்று அடைந்தார் என்னும் கருத்தினது. (162)

## தாடகை வதம்

1132 காமன் மாறுபட் டுலந்ததோர்
காடுகண் டேகித்
தாம வார்குழற் றாடகை
படச்சரந் தூண்டி

ஏம மாகிய படைக்கலம்
யாவையு மெய்தி
ஓம மாவலி யுறைந்ததோ
ருறையுள் செல் றுறைந்தார்.

காமன் மாறுபட்டு உலந்ததோர் காடுகண்டு ஏகித்
தாம வார்குழல் தாடகை படச்சரம் தூண்டி
ஏம மாகிய படைக்கலம் யாவையும் எய்தி
ஓம் மாவலி உறைந்தது ஓர் உறையுள் சென்று உறைந்தார்.

பொ : மன்மதன் யோகத்திருந்த சிவனோடு மாறுபட்டு மலர்க்கணை தொடுத்து அப்பெருமானின் கண்ணழலால் அழிந்த இடமாகிய ஒரு காட்டைக் கண்டு சென்று மாலையணிந்த நீண்ட கூந்தலையுடைய தாடகை இறந்துபடுமாறு அம்பினை விட்டுப் பின்பு கோசிகனிடம் பாதுகாப்பாகவுள்ள படைக்கலங்கள் எல்லாவற்றையும் பெற்று பின்பு பரிவேள்வி செய்த மாவலி என்பவன் தங்கியிருந்ததோர் இடத்தில் சென்று தங்கினர்கள்.

கு : உலத்தல் - அழிதல்; இறத்தல் உலந்ததோர்காடு ...ன்றது காமனுச் சிரமத்தை. சரம்-அம்பு; தூண்டுதல் - எய்தல். ...மம்-பாதுகாப்பு படைக்கலம்-ஆயுதம். பரிவேள்வி செய்த மாவலி ...ன்பார் 'ஓமமாவலி' என்ருர். ஓமம் என்றது இங்கு அசுவமேதத்... ...த. உறையுள் என்றது. மாவலி வேள்வி செய்த இடத்தை (163)

## வேள்வியில் அரக்கர் வந்து ஆர்த்தல்

...33 வெவ்வி டத்தினில் வீரரைக்
காக்கென விடுத்தே
அல்வி டத்துமா முனிவனும்
வேள்வியை யமைக்க
எவ்வி டத்தினு மரக்கர்வந்
திடியென வார்த்தார்
லவ்வி டச்சரா மாரியால்
வானத்தை மறைத்தார்.

வெவ்விடத்தினில் வீரரைக் காக்கென விடுத்தே
அவ்விடத்து மாமுனிவனும் வேள்வியை அமைக்க
எவ்விடத்தினும் அரக்கர் வந்து இடி என ஆர்த்தார்;
வவ்விடச் சர மாரியால் வானத்தை மறைத்தார்.

பொ : விரும்பத்தக்க அவ்விடத்தில் இராம இலக்குவராகிய வீரரை "வேள்வியைக் காப்பீராக" என்று ஏவிவிட்டு அவ்விடத்தில் சிறந்தவனாகிய விசுவாமித்திரனும் தான் கருதிய வேள்வியைச் செய்ய, எல்லாவிடங்களிலும் இருந்த அரக்கர்களெல்லாம் வந்து சூழ்ந்துகொண்டு இடிபோல அரவாரம் செய்து அவ் வேள்வி பொருள்களைக் கவர அம்பு மழையால் விண்ணினை மறைத்துவிட்டார்கள்.

கு : வெவ்விடம்-விரும்பத்தக்க இடம். மாவலி வேள்வி செய்த இடமாதலின் அவ்விடம் வெவ்விடம் எனப்பட்டது. 'வெம்மை வேண்டல்' என்றது காண்க. இனி கொடிய நஞ்சினும் கடியராகிய வீரரை என உறழ்ச்சிப் பொருள் கொண்டு கூறலும் ஆம். அமைக்க என்றது, வேள்வியைத் தொடங்க என்னும் பொருளது. ஆர்த்தார் என்றது முற்றெச்சம். ஆர்த்தாராய் சரமாரியால் வானத்தை மறைத்தார் என இயையும். (164)

### சுவாகு மாரீசரொடு போர்

1134 கண்ட வீரனு மரக்கரைக்
கடிந்துதா டகையாட்
சண்ட வேகத்த டனையரி
லொருவனைச் சரத்தால்
துண்ட மாக்கிமற் றொருவனைக்
கடல்புகத் துரந்தான்
மண்டு வேள்வி செய் முனிவனு
மதுகண்டு மகிழ்ந்தான்.

கண்ட வீரனும் அரக்கரைக் கடிந்து, தாடகையாம்
சண்ட வேகத்தள் தனையரில் ஒருவனைச் சரத்தால்
துண்டம் ஆக்கி மற்றொருவனைக் கடல்புகத் துரந்தான்;
மண்டு வேள்வி செய் முனிவனும் அதுகண்டு மகிழ்ந்தான்.

பொ : அரக்கர்களின் செயலைக் கண்ட இராமனும் அவ் அரக்கர்களை வேள்விக்கண் வராதபடி துரத்திவிட்டுத் தாடகை என்கின்ற கடிய வேகத்தையுடையாளின் புதல்வர்களில் சுவாகு என்ற ஒருவனை அம்பினால் அவனுடம்பு துண்டமாகுமாறு செய்து மாரீசனாகிய மற்றொருவனைக் கடலில் புகுமாறு துரத்தினான். எரிகின்ற வேள்வியைச் செய்கின்ற முனிவனும் அவ்வீரத்தைக் கண்டு மகிழ்ந்தான்.

கு : அம்புமழை சொரிந்து ஆரவாரித்த அரக்கர்களை நெருங்காதபடி துரத்தினான் இராமன் என்றவாறு. கடிந்து என்றது இராமன் தன்னம்புகளை விட்டுத் துரத்தி என்றவாறு. சண்டம்-கடுமை. சுவாகு, மாரீசன் என்ற இருவர் தாடகையின் புதல்வர்கள்; அவர்களில் சுவாகு என்னும் ஒருவனை அம்பினால் கொன்று விட்டு மற்றொருவனாகிய மாரீசனைக் கடல்புக்-கொளிக்குமாறு துரத்தினான் என்க. மண்டுதல்-எரிதல். இது தெலுங்குச் சொல். 'மண்டுமெரியுள் மரந்தடிந்திட்டற்று' (புறப். வெண்பாமாலை) என்பது இங்கு நினையலாம் விசுவாமித்திர முனிவன் இராமன் எளிதாக அரக்கர்களை வென்ற வீரச் செயலைக் கண்டு மகிழ்ந்தான் என்றவாறு. முனிவன் தசரதன் பால் கூறியபடி இராமன் அரக்கரை வென்றான் என்பது அவன் மகிழ்ச்சிக்குக் காரணமாகும். (165)

## அகலிகை சாபம் நீக்கிவிட்டு மிதிலையை அடைதல்

1135 கண்ட மாமறை முனிவனுந்
தம்பியுந் தானும்
கண்டல் சூழ்கரைக் கங்கையுங்
கானமுங் கடந்து

பண்டை மாநிற மகலிகை
பெறப்பணித் தருளி
விண்டொ டும்மதின் மிதிலைமா
நகரின்மே வினரால்.

கண்ட மாமறை முனிவனும் தம்பியும் தானும்
கண்டல் சூழ்கரைக் கங்கையும் கானமும் கடந்து
பண்டை மாநிறம் அகலிகை பெறப் பணித்தருளி
விண்தொடும் மதில் மிதிலை மாநகரில் மேவினரால்.

பொ: சிறந்த வேதங்களைத் தெளிவாகக் கண்ட முனிவனும் இலக்குவனும் இராமனும் கண்டல்கள் சூழ்ந்து வளர்ந்திருக்கும் கரையினையுடைய கங்கையையும் கானகத்தையும் கடந்து சென்று தன் பாதத்துகளால்அகலிகை பண்டைய மாநிற உருவினைப் பெறுமாறு செய்தருளி, விண்ணளாவிய மதில் சூழ்ந்த மிதிலை மாநகரத்தில் புகுந்தார்கள்.

கு: மாமறை கண்ட முனிவனும் என இயையும். தம்பியும்- தம்பி இலக்குவனும். தானும் என்றது இராமனை. கண்டல்என்றது நெய்தல் நிலத்தில் வளரும் ஒருவகைத் தாவரம். கங்கைக் கரையில் கண்டல்கள் வளர்ந்திருந்தன என்றவாறு. அகலிகை பண்டை மாநிறம் பெறப் பணித்தருளி என இயையும். இராமன் திருவடித் துகள்பட்டவுடன் அகலிகை பண்டையுருப்பெற்றாள் என்பதையே இராமன் செயலாகக் கூறியவாறு. (166)

## கோசிகன் சனகனைக் கண்டு இராமனை அறிமுகம் செய்தல்

*1136* சனகர் கோனைவந் தனுகலுந்
தழல்புரி வேள்வி
முனிவ விங்கிவ ராரெனக்
கருளென மொழிந்தான்

விளையம் வேறிலை விறல்புனை
தசரத னென்பான்
தனையர் மற்றுநின் றநுவலி
காண்குறச் சமைந்தார்.

சனகர்கோனை வந்து அணுகலும் "தழல்புரி வேள்வி
முனிவ! இங்கு இவர் ஆர்? எனக்கு அருள்" என, மொழிந்தான்;
விளையம் வேறு இலை; விறல்புனை தசரதன் என்பான்
தனையர்; மற்றுநின் தநுவலி காண்குறச் சமைந்தார்.

பொ: சனகமன்னனைச் சென்று அணுகுதலும் நெருப்பைக் கொண்டு செய்த வேள்வியையுடைய முனிவனே! இங்கு நிற்கும் இவ்விருவரும் யாவர்? என எனக்குச் சொல்லியருள்க என்று வேண்டிக் கொண்டான்; வேறு வஞ்சகம் இல்லை; வெற்றிமாலை சூடிய தயரதன் என்பவனது புதல்வர்கள்; மேலும் நின் வில்லின் வலிமையைக் காணவும் தகுதியுடையவர்கள்.

கு: அண்மைக் காலத்து வேள்வி முடித்துக் கோசிகன் வந்துள்ளான் என்பதைச் சனகன் அறிந்தவனுதலின் 'தழல்புரி வேள்வி முனிவ' என விளித்தான். அருள் என்பது சொல்லியருள் என்னும் கருத்தினது. பெரியோர் பார் பேசுமுறைமை புலப்படுத்தியவாறு. தன் முன்பு அரச குமாரர்கள் வந்து நிற்பது என்ன வஞ்சனை கருதியோ என்ற ஐயம் அந்தச் சனகனுக்கு இருத்தல் இயல்பு ஆதலின் அதைப் போக்குதற்கு 'வேறு விளையம் இலை' எனக் கோசிகன் கூறலானுன். விறல்-வெற்றி. புனை என்ற விளையால் வெற்றி மாலை புனைந்த தசரதன் எனப் பொருள் கொள்ளநேர்ந்தது. தசரதன் வெற்றி மாலை புனைந்தவன். எனவே அவன் தனையரும் விறல்புனையத்தக்கவர்களே என்பது புலப்படுத்தியவாறு. 'மகனறிவு தந்தையறிவு' என்பது இங்கு நினையத்தகும். சமைந்தார் என்றது தகுதியுடையவர் என்னும் கருத்தினது. (167)

## இராமன் வில்லை வளைத்தல்
### வேறு

1137 இந்திர வில்லென யாரு மியம்ப
வந்த நெடுஞ்சிலை வள்ளல் வளைத்தான்
அந்தர வானி லரம்பைய ரார்த்தார்
தந்தை யுகந்திடச் சார்ந்திடு மென்றே.

இந்திர வில்என யாரும் இயம்ப
வந்த நெடுஞ்சிலை வள்ளல் வளைத்தான்;
அந்தர வானில் அரம்பையர் ஆர்த்தார்;
தந்தை உகந்திடச் சார்ந்திடும் என்றே.

பொ: வானவில்தான் இது என்று யாவரும் வியந்து சொல்லுமாறு வந்த நீண்ட வில்லினை வள்ளலாகிய இராமன் வளைத்தான்; விண்ணில் உள்ள அரம்பையர்கள் எல்லாம் அதனை அறிந்து ஆரவாரித்தார்கள்; 'இவன் தந்தையாகிய தயரதன் நாம் மகிழ்ந்திட வருவான்' என்று எண்ணி.

கு: சனகன் வில்லுக்குத் தோற்றத்தால், அளவால் உவமையாகத் தக்கது வானவில்லே என்பது புலப்பட 'இந்திர வில்லென யாரும்இயம்ப' என்றார். அகலிகையின் சாபம் நீக்கி அவளை இல்வாழ்க்கைப் படுத்திய இராமன் செயலை நினைந்து அவனை வள்ளல் என்றார். இனி இவ்வில்லை வளைப்போர் யாருமில்லை. சீதைக்கு மணமும் இல்லை என்று உலகவர் கருதிய கருத்திற்கு மாறாக, இராமன் வில்லைவளைத்துச் சீதைக்கு வாழ்வளிப்பவன் என்ற கருத்தால் 'வள்ளல்' என அவனைப் புகழ்ந்தார் எனலும் ஆம். இராமன் வில்லை வளைத்த செய்திஅறிந்தால் அவன் தந்தை இங்கு வருவான் என்று தூதுவரை அனுப்பிய செய்தி வரும் செய்யுளில் கூறப்படும். என்று என்ற எச்சம் வரும் செய்யுளில் ஏவ என்ற வினைகொண்டு முடியும். குளகம். (168)

## தயரதன் ஓலைகண்டு மிதிலையடைதல்

1138 சனக னலந்திகழ் தசரத னுக்கோர்
துனியறு மோலையைத் தூதொடு மேவத்
தனைய ரொடுங்கிளர் தவமுனி யோடும்
வினையம் வலான் மதின் மிதிலை யடைந்தான்.

சனகன் நலம் திகழ் தசரதனுக்கு ஓர்
துனி அறும் ஓலையைத் தூதொடும் ஏவ,–
தனைய ரொடும் கிளர் தவமுனியோடும்
வினையம் வலான் மதில் மிதிலை அடைந்தான்.

பொ: சனகன், நலமுடன் விளங்குகின்ற தயரதனுக்கு ஒரு வெறுப்பில்லாத (மகிழ்ச்சியான) ஓலையைத் தூதுவனோடும் கொடுத்தனுப்ப, அவ்வோலையைக் கண்டவுடன் வினைசெயல் வல்லவனாகிய தயரதன் தன் புதல்வர் பரத சத்துருக்கனரோடும் தவமுனிவனாகிய வசிட்டனோடும் மதில் சூழ்ந்த மிதிலை நகரை அடைந்தான்.

கு: ஓலை கொடுப்பவனும் தூதுவன் என்ற பெயர்க்குரியவனே ஆதலின் 'ஓலையைத் தூதொடும் ஏவ' என்றார். ஓலையைத் தூதுவன் கையில் கொடுத்தனுப்பினான் என்பதே கருத்து. துனி-வெறுப்பு. மணவோலையாதல் தோன்றத் 'துனியறு மோலை' என்றார். தயரதனை வினையவலான் என்றது, மற்றைப் புதல்வர் மணமும் முடிக்கும் கருத்தினனாதல் நினைந்து போலும். (169)

## சீதையின் திருமணம்

1139 தெள்ளமிழ் தம்புரை சீதையை யன்பால்
வள்ள லிராமன் மகிழ்ந்து மணந்தான்
முள்ளில வெயிறிதழ் மூவரையும் போர்
வெஃளிலை வேலவர் மூவரும் வேட்டார்.

தெள் அமிழ்தம் புரை சீதையை அன்பால்
வள்ளல் இராமன் மகிழ்ந்து மணந்தான்;
முள் இலவு எயிறு இதழ் மூவரையும் போர்
வெள்இலை வேலவர் மூவரும் வேட்டார்.

பொ: தெளிவான அமிழ்தத்தை ஒத்த சீதையை வள்ளலாகிய இராமன் அன்பால் மகிழ்ந்து மணந்து கொண்டான். முள்ளினையும் இலவம்பூவினையும்போன்ற பல்லினையும் வாயிதழினையும் கொண்ட ஊர்மிளை, மாண்டவி, சுருதகீர்த்தி என்ற மூவரையும் போர்க்குரிய வெள்ளிலைபோன்ற வேலினையுடைய இலக்குவன், பரதன், சத்துருக்கன் என்று மூவரும் முறையே மணந்து கொண்டனர்.

கு: சீதையின் இன்னலத்திற்குத் தெள்ளமிழ்தம் சுவையால் உவமையாயிற்று. "அலையிடைப் பிறவா அமிழ்தென்கோயான்" (சிலப். 2.78 என்றதும் "உவரிவாயன்றிப் பாற்கட லுதவிய அமுதே" (அயோத்தியா சித்திரகூடம் 5) என்றதும் காண்க. முள் இலவு எயிறிதழ் என்பதனை முள் எயிறு, இலவு இதழ் என நிரனிறைப் பொருள் கோளாகக் கொள்க. இலவு என்றது முதலாகு பெயராய்இலவம் பூவினை உணர்த்தியது. சீதையை வளர்த்த பின்பு சனகனுக்குப் பிறந்த பெண் ஊர்மிளை. இவளை இலக்குவன் மணந்தான். சனகன் தம்பி குசத்துவசன் என்பான் புதல்வியர் இருவர். அவரில் மாண்டவியைப் பரதனும் சுருத கீர்த்தியைச் சத்துருக்கனும் மணந்தனர். வெள்ளிலை-வெற்றிலை. வெற்றிலை வடிவால் வேலுக்கு உவமையாயிற்று. இனி வெள் என்பதனை வேலுக்கு அடையாக்கி இலைவடிவான வெள்வேல் எனக்கூறலும் பொருந்தும். இதனல், கடிமாபப் படலநிகழ்ச்சி கூறப்பட்டது. (170)

## பரசிராமனை வென்று அயோத்தியை அடைதல்

1140 அந்நகர் தன்னை யகன்றன ரிப்பால
மன்னுமழுப்படை யான்சிலை வாங்கா
வன்ன வனைத்தவ மார விடுத்தே
பொன்னணி மாட அயோத்தி புகுந்தார்.

அந்நகர் தன்னை அகன்றனர் இப்பால்,
மன்னு மழுப்படையான் சிலை வாங்கா,
அன்னவனைத் தவம் ஆர விடுத்தே
பொன்னணி மாட அயோத்தி புகுந்தார்.

பொ: அந்த மிதிலை நகரை விடுத்து இப்பக்கம் அகன்றவராய் நிலைபெற்ற மழுவாயுதத்தையுடைய பரசிராமன் வில்லை வளைத்து அவனைத் தவம் செய்யவிடுத்துப் பொன்னால் அணி செய்யப் பெற்ற மாடங்களையுடைய அயோத்தி நகரில் புகுந்தார்கள்.

கு: அந்நகர் என்றது மிதிலையை. 'இப்பால்' என்றது, பின்பு நிகழ்ந்த நிகழ்ச்சிகளுக்குத் தோற்றுவாய் செய்தவாறு. மழுப்படையான் - பரசிராமன். வாங்குதல்-வளைத்தல். வாங்கா என்பது செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இதனால் பரசிராமப்படல நிகழ்ச்சி கூறப்பட்டது. (171)

## தயரதன் இராமனுக்கு முடிசூட்டச் சொல்லுதல்

1141 அரியணை மீதி லிருந்தர சாளும்
வரிகழல் மன்னன் வசிட்டனை நோக்கா
உரிய தவம்புரி வேனென் மகற்கே
விரிகதிர் மோலி மிலைச்சுமி னென்றான்.

அரிஅணை மீதில் இருந்து அரசு ஆளும்
வரிகழல் மன்னன், வசிட்டனை நோக்கா,
''உரிய தவம்புரிவேன்; என்மகற்கே
விரிகதிர் மோலி மிலைச்சுமின்.'' என்றான்.

பொ: சிங்கம் சுமந்த ஆசனத்திருந்து அரசு ஆள்கின்ற, வீரக்கழல் கட்டியுள்ள தயரத மன்னன் வசிட்டனைப் பார்த்து, "எனக்கு உரிய தவத்தைச் செய்யப் போகின்றேன்; என் மகன் இராமனுக்கே விரிகின்ற ஒளிக்கதிர்களையுடைய முடியைச் சூட்டுமின்" என்று கூறினன்.

கு: வரிதல்-கட்டுதல். வீரக்கழலினைக் கட்டியுள்ள மன்னன் என்க. நோக்கா-நோக்கி. செய்யா வென்னும வாய்பாட்டு வினையெச்சம். 'உரியதவம்' என்றது, முதுமையில் செய்தற்குரிய தவம் என்றவாறு. என் மகற்கே என்புழி ஏகாரம் பிரிநிலைப் பொருளது. மகன் என்றது இங்கு இராமனையே. மிலைச்சுதல்-சூட்டுதல். வசிட்டன் முதலான அமைச்சர்கள் எல்லாம் சேர்ந்து செய்யவேண்டிய செயலாதலின் 'மிலைச்சுமின்' எனப் பன்மை யேவலாகக் கூறினன். மந்திரப் படலம் இச்செய்யுளால் குறிக்கப் பட்டது. (172)

## கைகேசி பரதனுக்கு அரசு கொடுக்கச் சொல்லுதல்

1142 அன்னது கூனி யறிந்தனள் சொல்லக்
கன்னன் மொழிக் குயில் கைகெசி கேட்டே
மன்னவ நீமு னளித்தவ ரத்தால்
என்மக னுக்கர சீந்தரு ளென்றாள்.

அன்னது கூனி அறிந்தனள் சொல்லக்,
கன்னல் மொழிக் குயில் கைகெசி கேட்டே,
'மன்னவ! நீமுன் அளித்த வரத்தால்
என்மகனுக்கு அரசு ஈந்தருள்' என்றாள்.

பொ: இராமனுக்கு முடிசூட்டப் போவதாகிய அதனைக் கூனி அறிந்து சொல்லக் கரும்பு போன்ற சொல்லினையுடைய குயிலைப்போன்ற கைகேசி கேட்டு, (தயரதனைப் பார்த்து) 'மன்னவ! நீ முன் எனக்கு அளித்த வரத்தினல் என் மகன் பரதனுக்கு அரசு தந்தருள்க' என்று சொன்னாள்.

கு: கைகேசி என்பது ஓசை நோக்கி 'கைகெசி' எனக் குறுகியது. கன்னல்-கரும்பு. கன்னல், குயில் மொழிக் கைகேசி என இயைத்துக் கரும்பு போன்றும் குயில் போன்றும் பேசுகின்ற கைகேசி எனப் பொருள் கூறலும் ஆம். முன் அளித்த வரம் என்றது, சம்பரனது போரில் கைகேசி செய்த உதவிக்காகப் பாராட்டிக் கொடுத்த வரத்தை. என் மகன் என்றது பரதனை. இச்செய்யுளால் மந்தரைசூழ்ச்சியும் கைகேசி சூழ்வினையும் குறிப்பிட்டவாறு. (173)

## கைகேசி இராமனைக் காட்டிற்கு அனுப்புதல்

1143 வடிவுடை மன்னன் மயங்கினன் வ்ழ்ந்தான்
இடுகழல் வீப விராக வின்றே
நெடிபடு கானக நீபுகு கென்றே
கொடியவள் சீரை கொடுத்தன ளன்றே.

வடிவுடை மன்னன் மயங்கினன் வீழ்ந்தான்;
இடுசழல்வீர! இராகவ! இன்றே
நெடிபடு கானகம் நீபுகு கென்றே
கொடியவள் சீரை கொடுத்தனள் அன்றே.

பொ: (கைகேயியின் சொல்லைக்கேட்டு) அழகுடைய தயரத மன்னன் மயங்கி வீழ்ந்தான்; கொடியவளாகிய கைகேசி (இராமனை வரவழைத்து) 'வீரக்கழல் கட்டிய வீரனே! இராம! நீ இப் பொழுதே சிள்வீடு ஒலிக்கின்ற காட்டிற்குப் போவாயாக' என்று கூறி மரவுரியைக் கொடுத்தாள்.

கு: வீர இராகவ என்பதற்கு வீரத்தை யுடைய இராகவ என்றும் பொருள் கூறலும் ஆம். நின் வீரம் புலப்படுதற்குக் காட்டிற் குப்போதலே தக்கது என்னும் குறிப்பு இங்கு உண்டு. நெடிபடுதல் என்பது சிள்வீடு என்னும் ஒருவகை உயிரினம் ஒலித்தல் என்றவாறு. 'நெடிபடு கானத்து நீள்வேல் மறவர்' (புற. வெ. 1-2) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். புகுக என்றே என்புழி அகரம் தொகுத்தல் விகாரம் பெற்றது. அன்று, ஏ அசைநிலை. இச்செய்யுளால் கைகேசி சூழ்வினைப்படலம் கூறப்பட்டது. (174)

## இராமன் சீதையோடும் இலக்குவனோடும் அயோத்தியை விடுத்துக் கங்கைக் கரையை அடைதல்

1144 மலர்க்குழ லாளொடும் வார்சிலை வண்கை
இலக்குவ னோடு மிரகாவ னன்றே
அலக்க ணுறும லயோத்தி கடந்தே
நலக்குறு கங்கை நறுங்கரை நண்ணி

**மலர்க்குழலா ளொடும் வார்சிலை வண்கை**
**இலக்குவனோடும் இராகவன் அன்றே**
**அலக்கண் உறுமல் அயோத்தி கடந்தே**
**நலக்குறு கங்கை நறுங்கரை நண்ணி.**

பொ : மலர் சூடிய கூந்தலையுடையவளாகிய சீதையோடும் நீண்ட வில்லினையேந்திய வளமிக்க கையையுடைய இலக்குவனோடும் இராமன் அப்பொழுதே, துன்பமுறுமல் அயோத்தியை விடுத்து நீங்கி, நல்லனவெல்லாம் நெருங்குதற்குக் காரணமான கங்கையின் நறுமணமுடைய கரையை நெருங்கி.

கு : குளகம். நெடுவில்லை யேந்திய வளமான கை இலக்குவன் கை என்பார், 'வார்சிலை வண்கை இலக்குவன் என்றுர். தன்பசி நோக்காது தமையன் பசிக்குணவளிக்கும் வண்மையுடைய கை எனினும் ஒக்கும். அன்றே கடந்து நண்ணி என இயைக்க. அலக்கண்-துன்பம். அரசு பெருது காடுபுக நேர்ந்தமைக்கு வருத்தமுறுமல் என்றதனுல் அன்றலர்ந்த தாமரை மலர்போல் முகம் மலர்ந்து சென்றுன் இராமன் என்பதும் புலப்படுத்தியவாறு. இதனுல் நகர் நீங்கு படலம் குறிப்பிட்டவாறு. (175)

## சித்திரகூடம் அடைதல்

1145 அங்க ணிருங்குக னம்பி விடப்போய்க்
கங்கை கடந்துறு கங்குலி னங்கோர்
கங்கையின் மாமுனி சாலையி னண்ணிக்
கொங்கலர் சித்திர கூட மடைந்தார்.

அங்கண் இருங்குகன் அம்பி விடப் போய்க்,
கங்கை கடந்து உறுகங்குலின் அங்கு ஓர்
சங்கை இல் மாமுனி சாலையில் நண்ணிக்,
கொங்கு அலர் சித்திரகூடம் அடைந்தார்.

பொ : அந்தக் கங்கைக் கரையில் பெருமையுடைய குகன் என்பவன் ஓடம் விடச் சென்று கங்கையைக் கடந்து அன்று உற்ற இரவில் அங்குள்ள ஒரு ஐயத்தினிங்கிய சிறந்த முனிவனாகிய பரத்துவாசனுடைய தவச்சாலையை அடைந்து தங்கித் தேனோடு கூடிய மலர்களையுடைய சித்திர கூட மலையை அடைந்தார்கள்.

கு : இருங்குகன் என்றது பெருமையுடைய குகனை. இருமை-பெருமை. அம்பி ஓடம். கங்கையைக் கடந்து சென்றபின் வந்த இரவில் என்பார், 'கடந்து உறுகங்குலின்' என்றார். சங்கை-ஐயம் பரத்துவாச முனிவர் ஐயத்தினிங்கித்தெளிந்த மெய்ப்பொருள் காட்சியர் என்பார், 'சங்கையில் மாமுனி' என்றார். கொங்கலர் சித்திர கூடம் என்றது அம்மலையின் பலர்வளச் சிறப்புப் புலப்படுத்தியவாறு. இதனால் கங்கைப் படலம், வனம்புகுபடலம் சித்திரகூடப் படலம் குறிப்பிடப்பட்டன. (116)

## இராமன் காடுபுக்கது கேட்டுத் தயரதன் உயிர்நீத்த செய்தியறிந்து பரதன் வருதல்

1446 சித்திர கூட மடைந்திடு செய்தி
அத்த னறிந்தன ஞருயிர் விட்டான்
வித்தக மாமுனி மெய்ப்பர தற்கே
உய்த்தன னோலை யுணர்ந்தனன் வந்தான்.

சித்திர கூடம் அடைந்திடு செய்தி
அத்தன் அறிந்தனன் ஆருயிர் விட்டான்;
வித்தக மாமுனி மெய்ப்பரதற்கே
உய்த்தனன் ஓலை உணர்ந்தனன் வந்தான்.

பொ: இராமன் வனம்புக்குச் சித்திரகூடம் அடைந்திட்ட செய்தியைத் தயரதனுகிய தந்தை யறிந்து அரிதாகிய உயிரை விடுத்தான்; பின்பு திறமை மிக்க வசிட்ட மாமுனி உண்மை-யுள்ள பரதனுக்கு ஓலை அனுப்பினுன்; அதை உணர்ந்து பரதன் அயோத்திக்கு வந்தடைந்தான்.

கு: அத்தன் - தந்தை; இங்குத் தயரதனுகிய தந்தை என்க. வித்தகம் - சதுரப்பாடுள - திறமை. மாமுனி என்றது சிறப்புடைய வசிட்ட முனிவனை. ஓலை உய்த்தனனுகப் பரதன் உணர்ந்து வந்தான் என்க. உணர்ந்தனன் என்றது முற்றெச்சம். (177)

**பரதன் தாயைப் பழித்தலும் வசிட்டன் தேற்றுதலும்**

1147 மன்ன னுக்கு மகனுக்கு முற்றவா
றன்னை கூற வறிந்து மநிந் தளர்ந்
தென்ன பாவிசெய் தாயென் றிரங்கினுன்
தன்னை மாமுனி தானவந்து தேற்றினுன்.

**மன்னனுக்கும் மகனுக்கும் உற்றவாறு**
**அன்னை கூற அறிந்து மனம் தளர்ந்து**
**'என்ன பாவி செய்தாய்' என்று இரங்கினுன்**
**தன்னை மாமுனி தான் வந்து தேற்றினுன்.**

பொ: தயரதனுக்கும் இராமனுக்கும் நேர்ந்த வானமுறு-தலும் வனமுறுதலும் ஆயவற்றைத்தாய் கைகேயி சொல்ல, பரதன் அறிந்து மனம் தள்ர்ந்து, 'பாவி என் செய்தாய், என்று இரங்கிப் பழித்துக் கூறினவன் தன்னை வசிட்ட மாமுனி வந்து தேறுதல் கூறினுன்.

கு: உற்றவாறு என்றது, நேர்ந்த நிகழ்ச்சிகளை. இராமனுக்கு முடிசூட்டத் தயரதன் நினைத்ததும் கைகேசி பரதனுக்கு முடிசூட்ட வேண்டும் என்றதும் இராமனைக் காடு புகுத்தியதும் அதுகேட்டுத் தயரதன் உயிர் விடுத்ததும் முதலியவற்றைக் குறிப்பிட்டவாறு. 'என்ன செய்தாய் பாவி' என்று மாற்றுக. இதனுல் பள்ளிபடைப் படலநிகழ்ச்சியில் ஒருபகுதி கூறியதாகச் சொள்ளலாம். (178)

## பரதன் தந்தையின் ஈமக்கடன் கழித்து இராமனைத் தருவன எனல்

1148 இன்ன தந்தைக்கிங் கீமக் கடன்செய்த
பின்னை மாமுடி சூடெனப் பேசிடப்
பன்னு மாலைப் பரத னிராகவன்
தன்னை நாளைத் தருவெனென் றோதியே

இன்ன தந்தைக்கு இங்கு ஈமக் கடன் செய்த
பின்னை, மாமுடி சூடு எனப் பேசிட,
பன்னும் மாலைப் பரதன் இராகவன்
தன்னை நாளைத் தருவென் என்று ஓதியே.

பொ : இத்தகைய தந்தை தயரதனுக்கு இங்கு ஈமக்கடன் செய்து முடித்த பின்னர் (வசிட்டன் முதலியோர்) 'நீ சிறந்த மணிமுடியினைச் சூடுக' என்று வேண்டிக் கொள்ள. சிறப்பித்துச் சொல்லப்படும் மாலை யணிந்த பரதன், இராமனை நாளையே சென்று அழைத்து வருவேன் என்று சொல்லி.

கு : ஈமக்கடன் என்றது, இறுதிச் சடங்கினை. முடிசூடெனப் பேசியவர்கள் வசிட்டன் முதலிய சான்றோர்கள் என்க. முடிசூட உடன்படாமையை-இராகவன் தன்னை நாளைத் தருவென் என்றதனால் புலப்படுத்தினன் எனக்கொள்க. ஓதி என்ற எச்சம் வருஞ்செய்யுளில் தரித்து என்ற வினையோடு முடியும். குளகம்(179)

## பரதன் மரவுரி தரித்துத் தாயரொடும் மன்னரொடும் போய்ச் சித்திரகூடமடைதல்

1149 சடையும் வற்கலை யுந்தரித் தாங்கிரு
புடையுந் தாயரு மன்னரும போதர
இடைய கங்கைக் குகனொடு மேறிப்போய்க்
கொடிகொள் சித்திர கூடஞ்சென் றெய்தினான்.

சடையும் வற்கலையும் தரித்து ஆங்குஇரு
புடையும் தாயரும் மன்னரும் போதர,
இடைய கங்கைக் குகனொடும் ஏறிப்போய்க்
கொடிகொள் சித்திர கூடம் சென்றுஎய்தினர்.

பொ: பரதன் சடையும் மரவுரியும் தரித்துக் கொண்டு அங்கு இருபுறத்தும் தாயரும் அரசரும் வர, நடுவிலுள்ள கங்கைநதியைக் குகனோடும் ஓடத்தில் ஏறிச்சென்று பலவகை-யான கொடிகள் படர்ந்திருக்கின்ற சித்திரகூடம் என்ற மலையைப் போய் அடைந்தார்கள்.

கு: சடையால் செயற்கையால் செய்து கொள்வதாகலின் தரித்து என்ற வினையாற் கூறினர். வற்கலை-மரவுரி. புடை-பக்கம். தாயர் என்றது கோசலை, கைகேசி, சுமித்திரை, ஆய மூவரை. மன்னர் என்றமையால் மக்களும் சேனையும் அடங்கும். ஏறிப்-போய் என்ற வினையால் குகன் கொடுவந்த ஓடத்தில் ஏறிக் கங்கையைக் கடர்துபோய் என்பது புலப்படுத்தியவாறு. இடைய கங்கை என்புழி அகரம் குறிப்புப் பெயரெச்ச விகுதி. கொடிகள் என்றது தாவரமாகிய கொடிகளை. இச் செய்யுளில் ஆறுசெல் படலமும் குகப்படலமும் குறிப்பிட்டவாறு. (180)

## பரதன் இராமனைக் கண்டு தந்தையிறந்ததைச் சொல்ல அவன் கையினால் கடன் கழித்தல்

1150 வைய மாளுடை யானை வணங்கிப் பின்
ஐயன் வான மடைந்தது கூறிட
ஐய கோவென் றரற்றி யிராகவன்
கையி னலக் கட ன்கழித் தானரோ.

வையம் ஆளுடையானை வணங்கிப் பின்
ஐயன் வானம் அடைந்தது கூறிட,
'ஐயகோ' என்று அரற்றி இராகவன்
கையினல் அக்கடன் கழித்தான் அரோ.

பொ: இந்த உலகத்தை ஆளுதற்குரிய இராமனைக் கண்டு வணங்கிப் பின்பு தந்தை வானுலகம் அடைந்ததைச் சொல்ல, இராமன், 'ஐயகோ' என்று அரற்றி அழுது பின்பு தன் கையினால் தந்தைக்கு நீர்க்கடன் செய்து முடித்தான்.

கு: வையமாளுதற்குரியவன் தானலன் இராமனே என்பது புலப்படுத்தியவாறு. ஐயன் என்றது தந்தை தயரதனை. சித்திர கூடம் அடைந்த பரதன் அங்கு இராமனைக் கண்டு வணங்கி ஐயன் வானடைந்ததைக் கூறினான் என்க. அக்கடன் என்றது வழிவழி வந்த நீர்க்கடனை. உலகறிசுட்டு. கழித்தல் என்றது, செய்து முடித்தலை. அரற்றுதல்-வாய்விட்டுக் கதறுதல். (181)

## பரதன் பாதுகை பெற்றுப் போதல்

1151 ஆதி மாமுடி சூடென் றடிதொழப்
போதி யேழிரண் டாண்டு பொறுத்தியென்
றேத மின்றி யிராகவன் கூறலும்
பாது கங்கொ டவனும் படர்ந்தனன்.

ஆதி மாமுடி சூடு என்று அடிதொழப்
'போதி ஏழிரண்டு ஆண்டு பொறுத்தி' என்று
ஏதம் இன்றி இராகவன் கூறலும்
பாதுகம் கொடு அவனும் படர்ந்தனன்.

பொ: தொன்றுதொட்டு வருகின்ற மாமுடியைச் சூடுக என்று பரதன் இராமனுடைய திருவடியைத் தொழாநிற்க, இராமன், 'பதினான்காண்டு பொறுப்பாயாக; இப்போது நாடு காக்கப் போவாயாக' என்று குற்றம் இல்லாமல் சொல்லுதலும் பரதனும் அவ்விராமனுடைய பாதுகையைப் பெற்றுக் கொண்டு போனான்.

கு: ஆதி என்றது வழிவழியாக வந்தமையைப் புலப்படுத்திய வாறு. இனி இராமனை நோக்கி 'ஆதியங்கடவுளாகிய நீ மாமுடி சூடு' என்று கூறியதாகக் கொள்ளலும் ஆம். யான் முடிசூடப் பதினான்காண்டு பொறுத்தி போதி என்றதாகக்

கொள்க. போதி என்பது இகரவீற்று ஏவல்; போவாயாக என்பது பொருள். ஏதம் - குற்ற . தந்தையின் கட்டளையாகத் தாய் கூறியது பதினான்காண்டு வனத்தில் வாழுமாறு ஆதலின் அந்தப் பதினான்காண்டு கழியுங்காறும் பரதன் பொறுத்திருந் தால் அவன் வேண்டுகோளின்படி முடிசூடலாம் என்பது குற்ற மில்லாத கொள்கையாதல் காணலாம். பாதுகம் - பாதுகை; திருவடிநிலை. படர்தல் - போதல். இதனால் திருவடிசூட்டுப் படலம் குறிப்பிட்டவாறு (182)

## இராமன் பஞ்சவடி யடைதல்

1152 விடங்கொள் வேற்கை விராதனை வீட்டிப்
போய்த்
தடங்கொள் வீடு சரபங்க னுக்களித்
தடங்க வாவ மகத்தியன் றந்தபின்
இடங்கொள் பஞ்ச வடியிற்சென் றெய்தினான்

விடம்கொள் வேற்கை விராதனை வீட்டிப்போய்த்,
தடங்கொள் வீடு சரபங்கனுக்கு அளித்து
அடங்க ஆவம் அகத்தியன் தந்தபின்
இடங்கொள் பஞ்ச வடியில் சென்று எய்தினான்.

பொ: நஞ்சுபூசிய வேலைத் தாங்கிய கையினனாகிய விராதனை வதைத்துச் சென்று, சரபங்கனுக்குப் பெருமை கொண்ட வீட்டு லகத்தைக் கொடுத்துப் பின்பு அம்பறாத்தூணியில் நிறையுமாறு தெய்விகக் கணைகளை அகத்திய முனிவன் தந்தபின் விரிவான இடத்தைக் கொண்டுள்ள பஞ்சவடி என்ற இடத்தைச் சென்ற டைந்தான்.

கு: மேலைச் செய்யுளில் வந்த இராகவன் என்ற எழு வாயே இச்செய்யுட்கும் எழுவாயாகும். பகைவர் மார்பிற் பட்டவுடன் கொல்ல வேண்டி வேலில் நஞ்சுபூசுதல் உண்டு ஆதலின் 'விடங்கொள்வேல்' என்றார். வீட்டி - வதைத்து. தட என்ற உரிச்சொல் பெருமையென்னும் பண்பினையுணர்த்தும். தடங்கொள்வீடு-பெருமையைக் கொண்டுள்ள முத்தி.சரபங்கனுக்கு

தடங்கொள் வீடு அளித்து என மாற்றி இயைக்க. ஆவம்-அம்பறாத் தூணி; அம்புப் புட்டில். 'ஆவம் அடங்க அகத்தியன் தந்தபின்' என இயையும். ஆவம் அடங்குதலாவது அகத்தியன் தந்த அம்புகளால் நிறைதல். பஞ்சவடி-ஐந்து ஆலமரங்கள் நெருங்கியுள்ள இடம். இச்செய்யுளில் ஆரணிய காண்டத்து விராதன் வதைப் படலம், சரபங்கன் பிறப்பு நீங்கு படலம், அகத்தியப் படலம், என்ற மூன்று படல நிகழ்ச்சிகள் குறிப்பிட்டுள்ளமை காணலாம். (183)

## சூர்ப்பணகை மூக்கறு படலமும் கரனிடம் சொல்லுதலும்

1153 மங்கை சூர்ப்ப நகைப்பெயர் மாதராள்
கொங்கை நாசி குழையொ டரிந்தபின்
அங்கை யாற்றன் வயிறலைத் தாவெனக்
கங்குல் வாழ்க்கைக் கரனுக் குரை செய்தாள்.

மங்கை சூர்ப்ப நகைப் பெயர் மாதராள்
கொங்கை நாசி குழையொடு அரிந்தபின்
அங்கையால் தன் வயிறு அலைத்து ஆ எனக்
கங்குல் வாழ்க்கைக் கரனுக்கு உரைசெய்தாள்.

பொ: மங்கையாக வந்த சூர்ப்பணகை என்ற பெயரினையுடைய பெண்டின் முலையும் மூக்கும் குழையணிந்த காதும் இலக்குவன் அரிந்த பின்பு அவள், தன் அகங்கையால் தன் வயிற்றினைப் பிசைந்து ஆ வென்று கதறி அழுதுகொண்டு இரவில் இயங்கி வாழும் வாழ்க்கையினையுடைய கரனுக்குச் சொன்னாள்.

கு: சூர்ப்பணகை முதிர்ந்த பருவத்தளேனும் தன்னை மங்கைப் பருவமுடையவள் போல உருவமாற்றி வந்தாளாதலின் 'மங்கை சூர்ப்பனகை' என்று சிறப்பித்தார். நாசி-மூக்கு. குழை என்றது ஆகுபெயராய்க் குழையணியும் காதினையுணர்த்தியது. அலைத்தல்-வருந்துதல்; வயிற்றைக் கையால் பிசைதல். கரன் இரவில் இயங்கி உயிர்களைக் கொன்று தின்னும் வாழ்க்கையனாதலின் கங்குல் வாழ்க்கையாகச் சொல்லியவாறு. நிகிசரன் என்றவாறு. (184)

## கரன் தூடணர் வதை

1154 கரனுந் தூடண னுங்கலி னப்பரித்
திரிசி ராவுஞ் சினப்படை யீட்டமும்
வரனி ராமன்கை மாண்டதெ லாங்கடி
துரைசெய் தாள்சென் றிராவணற் கோடியே.

கரனும் தூடணனும் கலினப் பரித்
திரிசி ராவும் சினப்படை ஈட்டமும்
வரன் இராமன்கை மாண்டது எலாம்கடிது
உரைசெய்தாள் சென்று இராவணற்கு ஓடியே.

பொ: கரனும் தூடணனும் கடிவாளத்தோடு கூடிய குதிரைப்படையையுடைய திரிசிரனும் அவர்களின் கோபமிக்க சேனைத்திரளும் மேன்மையுடையவனாகிய இராமன் கையில் மாண்ட நிகழ்ச்சி எல்லாவற்றையும் சூர்ப்பணகை ஓடிச்சென்று இராவணனுக்கு விரைந்து சொன்னாள்.

கு: சூர்ப்பநகைப்பெயராள் என முன்னைச் செய்யுளில் வந்த பெயரே இச் செய்யுளில் உரைசெய்தாள் என்பதற்கும் எழுவாயாகும். இராமன் கை மாண்ட தெலாம் சூர்ப்பணகை ஓடிச்சென்று இராவணனுக்குக் கடிது உரை செய்தாள் என இயையும். கலினம்-கடிவாளம். மூன்று தலைகளையுடையவனாதலின் திரிசிரா எனப்பெயர் பெற்றான். வரன்–மேலானவன். இனி வரத்தைக் கொடுக்கவல்ல தெய்வத்தன்மையுடையவன் எனலும் ஆம். ஓடிச் சென்ற சூர்ப்பணகை இராவணற்கு சொல்லுங்-காலும் விரைவு புலப்படுத்திச் சொன்னாள் ஆதலின் 'கடிதுரை செய்தாள்' என்றார். கரன் இராவணனின் சிற்றன்னை கும்பீ-நசியின் மகன். தூடணனும் திரிசிராவும் அவன் சேனைத்தலை-வர்கள். (185)

## சூர்ப்பணகையால் சீதையின் அழகையறிந்த இராவணன் மாரீசனிடம் சென்று சொல்லுதல்

1155 சீதை மற்றவன் றேவியைக் கொண்டியான்
போத லுற்றுழிப் புக்கதி தென்றலும்
காத லுற்றவட் காண்குறு மாசையான்
மாது லற்கொரு மாற்றஞ் சென் றோதினன்.

சீதை மற்றவன் தேவியைக் கொண்டு யான்
போதல் உற்றுழிப் புக்கது இது என்றலும்
காதல் உற்று அவட் காண்குறும் ஆசையான்
மாதுலற்கு ஒரு மாற்றம் சென்று ஓதினன்.

பொ: 'மற்றொருவன் தேவியாகிய சீதையை யான் நினக்காகக் கொண்டு போகத் தொடங்கிய பொழுது மூக்கு முதலியன அறுபட்ட இந்நிகழ்ச்சி நிகழ்ந்தது' என்று சூர்ப்பணகை சொன்ன அளவில் இராவணன், காதல் கொண்டு அச்சீதையைக் காணும் ஆசையுடையவனாய் அதன் பொருட்டுச் சென்று மாமன் மாரீசனுக்கு ஒரு சொல் சொன்னான்.

கு: தங்கையின் மூக்கு அறுபட்டதையும் கரன் முதலியோர் மடிந்ததையும் மறந்து சீதையைக் காணும் ஆசை மிக்கவனாய் அதன் பொருட்டு மாரீசனிடம் போய் ஒரு சொல் சொன்னான் என்க. இது என்ற சுட்டுச் சூர்ப்பணகை தன் மூக்கு முதலியவற்றின் நிலையைச் சுட்டியவாறு. ஆசையான் என்றது, ஆசைமிக்கவுடைய இராவணனை; வினைப்பெயர். மாதுலன்-மாமன். ஒரு மாற்றம் என்றது சீதை விரும்பும்படி பொன் மானுருவாக அவள் முன் செல்லுக என்னும் சொல்லை. மற்றவன் தேவி சீதையை என மாற்றிக் கூட்டுக. (186)

## மாரீசன் பொன்மானாகச் சீதைமுன் செல்லுதல்

1156 மறுத்து ணர்த்திட மாமன்மா ரீசனும்
வெறுத்து ரைத்தனன் வெஞ்சொ லிராவணன்
பொறுத்தி நீயெனப் பொன்னிற நவ்வியாய்
நிறுத்த சீதை நிலைபிற்சென் றெய்தினான்.

மறுத்து உணர்த்திட மாமன் மாரீசனும்
வெறுத்து உரைத்தனன் வெஞ்சொல் இராவணன்;
பொறுத்தி நீ எனப் பொன்நிற நவ்வியாய்
நிறுத்த சீதை நிலையில் சென்று எய்தினான்.

பொ: மாமனாகிய மாரீசனும் இராவணன் சொல்லை மறுத்துச் சொல்லுதலும், இராவணன் வெறுத்துக் கடுஞ்சொற்களைச் சொன்னான்; அதுகேட்டு அஞ்சிய மாரீசன் 'நீ பொறுப்பாயாக' எனப் பணிமொழி கூறிவிட்டுப் பொன்மயமான இளமானாகத் தன்னை உருமாற்றி நிறுத்துதற்குச் சீதை தங்கியிருந்த பன்னசாலையின் பக்கத்தில் சென்று அடைந்தான்.

கு: மாமன் மாரீசனும் மறுத்துரைத்திட என மாற்றுக. இராவணன் வஞ்சனைகளுக்கு உடன்படுகின்ற மாமனாகிய மாரீசனும் என்று பொருள்படுவதால் உம்மை இழிவு சிறப்புப் பொருளது. இராவணன் வெறுத்து வெஞ்சொல் உரைத்தனன் என இயையும். வெஞ்சொலாவது, 'நின்னை வடிவாளால் ஒறுப்பேன்' என்பது. மாரீசன் பொன் மானாய்த் தன்னை நிறுத்துதற்காகச் சீதை நிலையில் சென்று அடைந்தான் என்க. நிலை-தங்கியுள்ள இடம். (187)

## மாரீசனாகிய மாயமான் இராமன் அம்பால் வீழ்தல்

1157 கண்டு சீதை கவர்ந்தது தாவென
அண்டர் கோனு மதன்பின்ன ரேகியே
கொண்ட மாயை யறிந்து கொலை செய்தான்.
ஒண்டொ டீஇயினை யோயென் றுலந்ததே.

கண்டு சீதை கவர்ந்து அது தா என,
அண்டர் கோனும் அதன் பின்னர் ஏகியே,
கொண்ட மாயைஅறிந்து கொலே செய்தான்;
ஒண்தொடிஇ! இளேயோய்! என்று உலந்ததே.

பொ: சீதை அப்பொன் மானேக்கண்டு 'அதனேப் பிடித்துத் தருக' என்று வேண்ட, இராமனும் அம் மாயமான் பின் சென்று, அம்மான் அரக்கன் கொண்ட மாயை வடிவு என்பதை அறிந்து அதனேக் கொன்முன்; அம்மாய மானும் சீதா! இலக்குவா! என்று அரற்றி வீழ்ந்து இறந்தது.

கு: சீதை கண்டு அது கவர்ந்து தா என இயைக்க. இராமனது முன்னேய தெய்வ நிலேயை நினேந்து 'அண்டர்கோன்' எனப்பட்டான். தேவர் தலேவன் என்பது பொருள். அப்பொன் மான் ஒருவன் கொண்ட மாயையுருவே என்பதை அறிந்த இராமன் அதனேக் கொன்முன் என்க. மாயை யுருவென அறிந்து என வேண்டுஞ் சொல் வருவிக்க. ஒண் டொடீஇ என்றது, ஒளி வாய்ந்த வளேயையுடைய சீதை என்னும் பொருளிலும் 'இளே யோய்' என்றது இலக்குவன் என்ற பொருளிலும் வந்தது. மான் இறந்து வீழுங்கால் சீதே இலக்குவா எனச் சொல்லிக் கொண்டு வீழ்ந்தது. பன்னகசாலேயில் உள்ள சீதையும் இலக்குவனும் அவ்வொலி இராமனுடையது என மயங்கவும் இலக்குவனேப் பிரிக்கவும் ஆம். உலத்தல்-இறத்தல். (188)

## இராவணன் தவவேடங் தாங்கி அங்குப் புகுதல்

1158 அன்ன மன்னவ ளவவுரை கேட்டலும்
தன்ன நாயகன் றம்பியை யேவிஞள்
பன்ன சாலேயிற் பார்ப்பன வேடமாய்
இன்னல் செய்ய விராவண னெய்திஞன்.

அன்னம் அன்னவள் அவ்வுரை கேட்டலும்
தன்ன நாயகன் தம்பியை ஏவிஞள்;
பன்ன சாலேயில் பார்ப்பன வேடமாய்
இன்னல் செய்ய இராவணன் எய்திஞன்.

பொ: (நீர்நீக்கிப் பாலுண்ணும்) அன்னம் போன்றவளாகிய சீதை, சீதா! இலக்குவா! என்ற அந்தச் சொல்லைக் கேட்டவுடன் (மயங்கி) தன்னுடைய கணவனின் தம்பியாகிய இலக்குவனைக் கண்டுவர அனுப்பினாள். (இலக்குவன்சென்றவுடன்) இராவணன் சிதைக்குத் துன்பம் செய்தற்காகத் தவவேடந்தாங்கிப் பன்னசு-சாலைக்கு வந்தான்.

கு: நீர் நீக்கிப் பாலையேயுண்ணும் அன்னம் போன்ற சீதை அவசரத்தில் மாரீசன் கூறிய பொய்யொலியை மெய்யொலி யென்று மயங்கி இலக்குவனை அனுப்பினாள்; என்ற குறிப்பு "அன்னமன்னவள்" என்ற உவமையால் புலப்படுத்தியவாறு. தன்ன நாயகன் - தன்னுடைய நாயகன். ஆறனுருபாகிய அகரம் இங்கு உயர்திணை ஒருமைக்கண் வந்தது வழுவமைதியாகக் கொள்ளலாம். பன்னசாலை-தழையால் வேய்ந்த குடில். பார்ப்பன வேடம் என்றது இங்குத் தவவேடத்தை. இன்னல்-துன்பம். இராமனை விட்டுப் பிரித்தலையே இங்கு இன்னல் எனக் குறிப்பிட்டவாறு. (189)

## இராவணன் சீதையைக்கவர்ந்து இலங்கையடைதல்

1159 மான மீது மடந்தையைக் கொண்டனன்
போன போது புகுந்த சடாயுவை
ஈன மாக்கித் தானேறிய தேர்விடா
மீனவேலை யிலங்கையை மேவினன்.

மானம் மீது மடந்தையைக் கொண்டனன்
போனபோது, புகுந்த சடாயுவை
ஈனம்ஆக்கித் தான் ஏறிய தேர்விடா
மீனவேலை இலங்கையை மேவினன்.

பொ: இராவணன் விமானத்தின் மீது சீதையை வைத்துக் கொண்டு போன போது இடையில் புகுந்து தடுத்துப் போர் செய்த சடாயுவை இறகிழந்த ஈனமுடைய வனாக்கி விட்டுத் தான் முன்பு ஏறியிருந்த தேரைச் செலுத்திக் கொண்டு மீன்களை யுடைய கடலால் சூழப்பட்ட இலங்கையை எய்தினன்.

கு: மானம்-விமானம். முதற்குறை. மடந்தை என்றது சீதையை. கொண்டனன் என்பது முற்றெச்சம். சீதையின் அழுகுரல் கேட்டுத் தடுத்த சடாயுவை என்பார், 'புகுந்த சடாயுவை' என்றார். ஈனம் ஆக்குதல் என்றது சிறகு இல்லாத குறையுடையவனாக்கியதை. ஈனம்-குறைவு. விடா-விட்டு. செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (190)

## இராம இலக்குவர் சடாயு வீழ்ந்து கிடத்தலைக் காண்டல்

1160 மன்னி ராகவன் றம்பியை வந்தவா
றென்னே யென்ன வியன்ற துரைசெய்தான்
பன்ன சாலையிற் பாவையை நாடிப்போய்
முன்னர் வீழ்ந்த சடாயுவை முன்னினர்.

மன் இராகவன் தம்பியை வந்தவாறு
என்னை? என்ன, இயன்றது உரை செய்தான்;
பன்னசாலையில் பாவையை நாடிப்போய்
முன்னர் வீழ்ந்த சடாயுவை முன்னினர்.

பொ: நிலைபேறுடைய இராகவன், தம்பி இலக்குவனைக் கண்டு, வந்த காரணம் என்னை? என்று கேட்க, நிகழ்ந்ததைச் சொன்னான் இலக்குவன். பின்னர் விரைந்து சென்று பன்னசாலையில் உள்ள சீதைக்கு என்ன நேர்ந்ததோ என்று நாடிச் சென்று, வழியில் தம் முன்பு விழ்ந்து கிடந்த சடாயுவைக் கண்டார்கள்.

கு: மாரீசன் செய்த வினையால் இராமனுக்குத் தான் மரணம் நேர்ந்ததோ எனச் சீதை ஐயுற்று அனுப்பினாள் ஆதலின் இங்குக் கண்ணுற்க் காணும் இராமனை 'மன்னிராகவன்' என்றார். மன்-நிலைபேறு. அரசன் எனலும் ஆம். இயன்றது-நிகழ்ந்தது. தனியே பன்ன சாலையில் இருந்த பாவை போல்வாளுக்கு ஏதோ தீங்கு நேர்ந்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தால் அவளையே நாடிச் சென்றார்கள். முன்னர் என்றது தம் முன்பு என்றவாறு. முன்னினர் என்றது கண்டார் என்றது; கண்டார் என்னும் பொருளது. (191)

## இராம இலக்குவர் சவரியின் குடிலை யடைதல்

1161 இறந்தவெரு வைக்கரசை யீமவெரி யேற்றி
முறஞ்செவி யயோமுகியை மூக்கினை யரிந்து
மறந்தருக வந்தனையும் வானினிடை வைத்திட்
டறந்திகழ் தருஞ்சவரி யாச்சிரம முற்றார்.

இறந்த எருவைக்கு அரசை ஈமஎரி ஏற்றி,
முறஞ்செவி அயோமுகியை மூக்கினை அரிந்து,
மறந்தரு கவந்தனையும் வானினிடை வைத்திட்டு
அறம் திகழ்தரும் சவரி ஆச்சிரமம் உற்றார்.

பொ: உயிர்நீங்கிய கழுகின் வேந்தனாகிய சடாயுவை ஈம எரியில் ஏற்றி இறுதிக் கடன் கழித்துவிட்டு முறம் போன்ற காதுகளையுடைய அயோமுகி என்னும் அரக்கியை மூக்கு அரிந்து, வீரம் பொருந்திய கவந்தனையும் கொன்று விண்ணுலகத்திற்கு அனுப்பி விட்டு, தருமநெறியில் விளங்குகின்ற சவரி என்பாளின் தவக்குடிலை அடைந்தார்கள்.

கு: எருவை - கழுகு. ஏற்றி, அரிந்து, வைத்திட்டு ஆச்சிரமம் உற்றார் என வினைமுடிபு செய்க. முறஞ்செவி என்பது உவமைத் தொகை. அயோமுகியின் காதுகள் முறம் போன்று இருக்கும் என அவள் அழகின்மையைப் புலப்படுத்தியவாறு. மூக்கொடு முலையும் காதும் அரிந்தமையும் கொள்க. கவந்தனது வீரம் புலப்பட மறந்தரு கவந்தன் என்றார். கவந்தனையும் வானினிடை வைத்திட்டு என்றது, கொன்று என்னும் பொருளதேயாம். எனினும் அவன் இராமன் கைப்பட்டமையால் சாபத்தாலாய அரக்கவுரு நீங்கிப் பழைய அமர உருப்பெற்றான் ஆதல் நினைந்து. வானினிடை வைத்து என்பது பொருத்தமாதல் காணலாம். கவந்தன் என்றது தலையுடம்பினுள் அழுந்தப் பெற்று வயிறே வாயாக அமைந்த கோரவடிவமுடைய அரக்கனை. சபரி என்பது சவரி எனத் திரிந்தது. இச் செய்யுளால் சடாயு உயிர்நீத்த படலம், அயோமுகிப் படலம், கவந்தப் படலம், சவரி பிறப்பு நீங்கு படலத்தின் ஒருபகுதி குறிப்பிட்டவாறு. (191)

## இராமன் சுக்கிரீவனோடு நட்பு செய்தல்

1162 மக்க சவரிக்கினிய வீடருளிவிட்டுப்
பக்கமது மிக்கமலர்ப் பம்பையது கண்ணுற்
றக்கண மகன்ற நுமனுமென வுரைப்பச்
சுக்கிரி பனைத்துணை யெனத்
தொடர்வு கொண்டான்.

மிக்க சவரிக்கு இனிய வீடு அருளிவிட்டுப்
பக்கமது மிக்கமலர்ப் பம்பையது கண்ணுற்று,
அக்கணம் அகன்று அனுமன் ஆம் என உரைப்பச்,
சுக்கிரிபனைத் துணையெனத் தொடர்பு கொண்டான்.

பொ: ஞானத்தால் மிக்க சவரி என்பவளுக்கு இனிதாகிய முத்தியை அருளிச் செய்துவிட்டுப் பின்பு அக்குடிலுக்கு அருகேயுள்ள தேன்மிக்க மலர்களையுடைய பம்பை நதியைக் கண்டு, அக்கணத்தில் அவ்விடத்தை அகன்று அனுமனைக் கண்டு அவன் ஆகும் என்று உடன்பட்டுச் சொல்லச் சுக்கிரீவனை நண்பனாகத் தொடர்பு கொண்டான்.

கு: பக்கத்தே யுள்ள பம்பை என்க. கண்ணுறுதல்-மனங்கலந்து காணுதல். அனுமன் ஆம் என உரைப்ப என்றது, சுக்கிரீவன் நட்பு உமக்கு ஏற்றதாகும் என அனுமன் உரைப்ப என்னும் கருத்தினது. தொடர்பு கொள்ளுதல்-நட்புக் கொள்ளுதல். (193)

## வாலிவதை

1163 மந்தர மெனத்திகழ் மராமரம தெய்தே
துந்துபி களேபர மதைச்சுவ டுறுத்தி
இந்திரன் மகற் கியம லோகமருளித்தன்
அந்தமுடை வாளவன் மகன்பெற வளித்தான்.

மந்தரம் எனத்திகழ் மராமரமது எய்தே,
துந்துபி களேபரம் அதைச் சுவடு உறுத்தி,
இந்திரன் மகற்கு இயம லோகம் அருளித் தன்
அந்தமுடை வாள் அவன் மகன்பெற அளித்தான்.

பொ: மந்தரமலைபோல விளங்குகின்ற மராமரங்கள் ஏழினையும் அம்பினால் எய்து துளைத்து, துந்துபி என்னும் அரக்கனது உடம்பெலும்பைத் தன் காலடியால் இடறிச் சுவடு பொருந்தச் செய்து, இந்திரன் மகனாகிய வாலிக்கு எமலோகத்தைக் கொடுத்துப் பின்பு தனது அழகிய உடைவாளை அவ்வாலியின் மகன் அங்கதன் பெறுமாறு கொடுத்தான்.

கு: எய்து, சுவடுறுத்தி, இயமலோக மருளி, வாள்அவன் மகன்பெற அளித்தான் என இயையும். மராமரத்தின் பெருவடி புலப்பட 'மந்தரமனத்திகழ் மராமரம்' என்றார். மராமரம்- வெண்கடம்பு மரம். சுக்கிரீவன் குறிப்பிட்ட ஏழு மராமரங்களையும் ஒரே அம்பால் ஒரே காலத்துத் துளைபடச் செய்த வீரச் செயலைக் குறிப்பிட்டவாறு. வாலியால் கொல்லப்பட்ட துந்துபி என்பானது எலும்புக் கூட்டினை இராமன் கால் விரலால் இடறித் தொலைவில் வீசியவீரச் செயலையே சுவடு உறுத்தியதாகக் கூறியவாறு. களேபரம்-பிணம். இங்கு பிணத்தின் எலும்புக் கூட்டினையுணர்த்தி யது. இந்த எலும்புக் கூட்டினை இலக்குவன் கால்விரலால் இடறி விண்ணில் எறிந்தான் எனத் துந்துபிப் படலத்தில் கூறப்படினும் இராமன் ஏவுதல் கருத்தாவாகலின் அவன் வினையாகக் கூறியவாறு. மேலும் வான்மீகத்தில் இராமனே தன்கால் விரலால் தூக்கி எறிந்ததாக வுள்ளது. இச்செய்யுளில் மராமரப் படலம், துந்துபிப் படலம், வாலிவதைப் படலம் என்ற மூன்று படலங்கள் அடக்கிக் கூறப்பட்டுள்ளன. அந்தம்–அழகு. இனி அந்தத்தைச் செய்கின்ற உடைவாள் எனலும் ஆம். (194)

## சுக்கிரீவனுக்கு முடிசூட்டிவிட்டுக் கார்காலம் கழித்து வருக எனல்

1164 சுக்கிரீ பனுக்குரிய தொன்முடி கவித்தே
மிக்கதிறல் வானரர்கள் மேவ வருவித்தே
கக்குமுகில் மிக்க மழைக் காலம தகன்றால்
இக்கண்வரு வாயென விராகவன் விடுத்தான்.

சுக்கிரீபனுக்கு உரிய தொன்முடி கவித்தே
மிக்க திறல் வானரர்கள் மேவ வருவித்தே
கக்குமுகில் மிக்கமழைக் காலமது அகன்றால்
இக்கண்வரு வாயென இராகவன் விடுத்தான்.

பொ: வாலிக்குப் பின் சுக்கிரீவனுக்கு உரிமையுடைய பழமையான அரச முடியைச் சூட்டிவிட்டுத் திறமை மிக்க வானரர்கள் அவனோடு பொருந்தி வாழுமாறு வரச்செய்துவிடுத்து, மேகங்கள் பொழிகின்ற மிக்க மழையினையுடைய கார்காலம் கழிந்தால் என்னிடம் வருவாயாக என இராமன் கட்டளையிட்டு விட்டு அவ்விடத்தைவிட்டுச் சென்றான்.

கு: தொன்முடி என்றது, வழிவழியாக வானர மன்னர் சூடிக்கொள்ளும் பழைமையான முடியை. வாலி சூடியிருந்த முடி, அவனுக்குப்பின் அவன் தம்பி சுக்கிரீவனுக்கு உரிமையுள்ளது என்பது புலப்படுத்த, 'சுக்கிரீவனுக்குரிய தொன்முடி' என்றார். முகில்கக்கும் மிக்கமழைக்காலம் என்க. கக்குதல் இங்குப் பொழிதலையுணர்த்தியது. இக்கண் என்றது தன்கண் என்னும் பொருளது. விடுத்தான் என்றது அவ்விடத்தை விட்டுச் சென்றான் என்னும் பொருளது. (195)

## சுக்கிரீவனிடம் இலக்குவனை அனுப்புதல்

1165 சுந்தரனு மத்துணை துயர்க்கடலு ளாழ்ந்தான்
இந்திரன் மகற்குரிய தெய்தின னிருந்தான்
வந்தில னருக்கனமகன் மாரிகழி வுற்றும்
தந்தலை யெனக்கடிது தம்பியை விடுத்தான்.

சுந்தரனு மத்துணை துயர்க்கடலு ளாழ்ந்தான்;
இந்திரன் மகற்கு உரியது எய்தினன் இருந்தான்;
வந்திலன் அருக்கன்மகன் மாரி கழிவுற்றும்
தந்தனை எனக்கடிது தம்பியை விடுத்தான்.

பொ: சூரியன் மகனாகிய சுக்கிரீவன் மாரிக்காலம் கழிந்த பின்னரும் வந்திலன், (என்பதையுணர்ந்த) இராமனும் அவ்வளவு பெரிய துன்பக் கடலுள் அழுந்தினன். (பின்பு தம்பியை அழைத்து) இந்திரன் மகனாகிய வாலிக்குரியதாகிய மரணதண்டனையை எய்த வேண்டிக் காலம் தாழ்ந்து இருந்தான் போலும் சுக்கிரீவன்; அவனைக் கொணர்க என்று தம்பி இலக்குவனை விரைவாக விடுத்தான்.

கு: அருக்கன் மகன் மாரிகழிவுற்றும் வந்திலன் என இயையும். சுந்தரன் என்றது இராமனை. மாரி கழிவுற்றும் வந்திலனாகலின் துயர்க்கடலுள் ஆழ்ந்தான் என்க. இந்திரன் மகற்குரியது என்றது, வாலிக்கு உரியதாகிய மரணத்தை. எய்தினன் என்றது எதிர்காலம் இறந்தகாலமாகக் கூறப்பட்டது; கால வழுவமைதி. எய்த இருந்தான் என்பதே பொருள். தந்தனை என்றது விரைவு பற்றி வந்த காலவழுவமைதி; தருக என்பதே பொருள். விடுத்தான் என்றது, அனுப்பினான் என்னும் கருத்தினது. (196)

## இலக்குவன் அழைப்பையேற்றுவந்த வானரரைச் சீதையை நாட விடுதல்

1166 மற்றவ னழைத்தருள மாருதியு மேனைக்
கொற்றவனும் வந்தன ரிராமனடி கூடி
எற்றது செயக்கடவ தென்றன ரிருந்தார்
முற்றிழையை நாடவிடு
மென்றிறை மொழிந்தான்.

மற்று அவன் அழைத்தருள, மாருதியும் ஏனைக்
கொற்றவனும் வந்தனர் இராமன் அடிகூடி,
எற்றது செயக்கடவது என்றனர் இருந்தார்;
முற்றிழையை நாடவிடும் என்று இறை மொழிந்தான்.

பொ: இராமனால் விடுக்கப்பட்ட இலக்குவன் சென்று அழைக்க, அனுமனும் மற்றைக் கவிச்சரசனாகிய சுக்கிரீவனும் வந்து 'இராமன் திருவடி வணங்கி நும்பணி எதுவோ அது செய்யக் கடவது என்று பணிந்தமொழியினராய் இருந்தார் களாக, இராமன் சீதையைத் தேட இவர்களை விடுக என்று சொன்னான்.

கு: அவன் என்றது இலக்குவனை. மற்று, அசைநிலை. கொற்றவன் என்றது வானர மன்னவனாகிய சுக்கிரீவனை. எற்று, நும்பணி எத்தன்மையது. இனி ஏற்றது என்பது குறுகி நின்றதாகக் கொண்டு ஏற்ற செய்கை செய்யக் கடவதாகும் எனப் பொருள் கூறலும் ஆம். முற்றிழை என்றது, சீதையை. அன்மொழித் தொகை. இறை என்றது இராமனை. நாடவிடும் என்றது, உம்மீற்றுஏவல். புதியன புகுதல். (197)

## அனுமனோடு சென்ற இரண்டு வெள்ளம் வானரங்களும் ஒருபிலம் புகுந்து பெயர்தல்

1167 அன்றனும னங்கத னறிந்தருள்செய் சாம்பன்
என்றவர்க டம்முட னிரண்டுகவி வெள்ளம்
சென்றனர்க டென்றிசையி னிற்கடிது சில்லோர்
பொன்றலில் பிலத்திடைபுகுந்தனர் பெயர்ந்
தார்.

அன்றுஅனுமன் அங்கத னறிந்துஅருள் செய்சாம்பன்
என்றவர்கள் தம்முடன் இரண்டுகவி வெள்ளம்
சென்றனர்கள் தென்திசையினில் கடிது, சில்லோர்
பொன்றலில் பிலத்திடை புகுந்தனர் பெயர்ந்தார்.

பொ: அன்று அநுமன் அங்கதன் எல்லாவற்றையும் அறிந்துள்ள சாம்பன் என்பவர்கள் தம்மோடு இரண்டு வெள்ளம் வானரர்கள் தென்திசையில் சென்றார்கள். சிலர் அழிவு இல்லாத பிலத்தில் புகுந்து மீண்டார்கள்.

கு: சாம்பன் வயது முதிர்ச்சியால் மற்றையவரினும் எல்லாம் அறிந்தவன் ஆதலின், 'அறிந்தருள்செய் சாம்பன்' என்றார். கவி-குரங்கு. எழுபது வெள்ளம் வானர சேனையில் இரண்டு வெள்ளம் வானரர் சீதையைத் தேடிக் கொண்டு தென் - திசையில் சென்றார்கள். அவருள் சிலர் ஒரு பிலத்தில் புகுந்து பின் திரும்பினர். பொன்றுதல்-அழிவு. கடிது-விரைவு. (198)

## வானரர் மகேந்தரம் அடைதல்
## வேறு

1168 குன்றமு நதிகளுங் குழைந்த கானமும்
தென்றிசை யெங்கணுந் தேடிக் காண்கிலர்
இன்றுயிர் விடுவதே நன்றென் றியாவரும்
மன்றல்சூழ் மகேந்திர வரையை மேவினர்.

குன்றமும் நதிகளும் குழைந்த கானமும்
தென்திசை எங்கணும் தேடிக் காண்கிலர்
'இன்று உயிர் விடுவதே நன்று' என்று யாவரும்
மன்றல் சூழ் மகேந்திர வரையை மேவினர்.

பொ: மலைகளும் ஆறுகளும் தழைத்த காடும் ஆகவுள்ள தென்திசை எவ்விடத்தும் தேடியும் சீதையைக் காண்கிலராய் 'இன்றைக்கு உயிர்விடுவதே நன்று' என்று கருதி யாவரும் மணம் சூழ்ந்த மகேந்திரமலையை அடைந்தார்கள்.

கு: குழை-தழை. குழைத்தல் தழைத்தல். காண்கிலராய் மேவினர் என முற்றெச்சமாக்கி முடிக்க. மன்றல்-மணம். சீதையைக் காணப் பெறாத வருத்தத்தால் 'உயிர்விடுவதே நன்று' என்ற முடிவுக்கு வந்தனர் என்க. (199)

## சீதை இலங்கையில் இருப்பதாகச் சாம்பன் சொல்ல, அனுமன் கடலைத் தாண்டி இலங்கை புகுதல்

1169 இறைவியாண் டிருந்தவா றெருவை வேந்தனும்
முறைமையால் வந்தவன் மொழியக் கேட்டபின்
அறைகழ லனுமனு மரக்கி வாய்பிளந்
தெறிகடல் கடந்துபோ யிலங்கை யெய்தினன்.

இறைவி ஆண்டு இருந்தவாறு எருவை வேந்தனும்
முறைமையால் வந்தவன் மொழியக் கேட்டபின்
அறைகழல் அனுமனும் அரக்கி வாய்பிளந்து
எறிகடல் கடந்துபோய் இலங்கை எய்தினன்.

பொ: சீதை அவ்விலங்கையில் இருந்ததைக் கழுகின் வேந்தனாகிய சாம்பனும் முறைமையால் வந்து சொல்லக் கேட்டதனால் ஒலிக்கின்ற வீரக்கழலினையுடைய அனுமனும் அங்காரதாரை என்ற அரக்கியின் வாயைப் பிளந்துகொண்டு வெளிவந்து அலைவீசும் கடலைக் கடந்துபோய் இலங்கை புகுந்தான்.

கு: இறைவி-தலைவி; சீதை. எருவை- கழுகு. எருவை வேந்தன் என்றது சாம்பனை. முறைமையால் வந்தவன் என்றது, சூரியனால் சிறகிழந்த சாம்பன் வானரங்கள் இராம இராம எனத் தோத்திரம் பண்ணினமை கேட்டு இறகு முளைக்கப் பெற்றவனாய் அருகில்வந்த நிகழ்ச்சியைப் புலப்படுத்தியவாறு. அரக்கி என்றது விண்ணளவு விரிய வாயைத் திறந்து கொண்டு அனுமனை விழுங்கிய அங்காரதாரையை. அவள் திறந்தவாயில் நுழைந்து அனுமன் பேருருவெடுத்து அவள் வாயைக் கிழித்துக் கொண்டு வெளிவந்த செய்தியை 'அரக்கி வாய்பிளந்து' என்று சுருக்கிக் கூறியவாறு. (200)

## அனுமன் அசோக வனத்தில் சீதையைக்கண்டு ஆழி காட்டியது

1170 எரிவிழி யிலங்கைமா தேவி தான்கெடக்
கருநிற வரக்கர்தங் கனக மாளிகைத்
தெரிவையை யெங்கணுந் தேடிக் காண்கிலான்
அரிமலர்ச் சோலைகண் டாழி காட்டினன்.

எரிவிழி இலங்கைமாதேவி தான்கெடக்
கருநிற அரக்கர்தம் கனக மாளிகைத்
தெரிவையை எங்கணும் தேடிக் காண்கிலான்
அரிமலர்ச் சோலைகண்டுஆழி காட்டினன்.

பொ: நெருப்புப்போலச் சிவந்து விழிக்கின்ற விழியினையுடைய இலங்கைமாதேவி அழியச் செய்து இலங்கையுள் புகுந்து கரிய நிறத்தினையுடைய அரக்கர்தம் பொன்னிற் புனைந்த மாளிகைகள் எவ்விடத்தும் சீதையைத் தேடிக் காணுதவனுகிய அனுமன், வண்டுகள் மொய்க்கின்ற மலர்கள் நிறைந்த சோலையில் கண்டு இராமனது மோதிரத்தை அடையாளமாகக் காட்டினன்.

கு: இலங்கை மாதேவி என்றது, இலங்கை மாநகரின் காவல் தெய்வம். மதுரபதி தெய்வம் சிலப்பதிகாரத்தில் சொல்லப்படுவது இங்கு நினையலாம். அரக்கர் நிறம் கரியதேயாயினும் அவர் வாழும் மாளிகைகள் பொன்னிறமானவை என அம்மாளிகையின் சிறப்புணர்த்தி, அப்பொன்னிற மாளிகையில் காணப்படாத பொன்னிறச் சீதை எளிய சோலையில் காணப்பட்டாள் என்பது புலப்படுத்தியவாறு. தெரிவை என்பது இங்குப் பருவம் குறியாது பெண்டு என்னும் துணையாய் நின்றது. அரி - வண்டு. மலர்ச் சோலை என்றது, அசோகவனத்தை. அனுமன் இராமனிடம் அடையாளமாக வாங்கி வந்த பொன்னாழியைச் சீதை இராம தூதன் எனத் தன்னை நம்புமாறு காட்டினமை யுணர்த்தியவாறு. இச்செய்யுளால் ஊர்தேடு படலம், காட்சிப்படலம், என்பவை சுருக்கிச் சொல்லப்பட்டன. (201)

## அனுமன் சூடாமணி பெற்றுக் கொண்டு பொழிலை யழித்தல்

1171 மானவ னறிந்தருண் மதுர மாமணி
சானகி யளித்தனள் விடையுந் தந்தனள்
யானிவண் வந்துவீ ணேக றீதெனாப்
போனமா மாருதி பொழிலை வாட்டினான்.

மானவன் அறிந்தருள் மதுர மாமணி
சானகி அளித்தனள்; விடையும் தந்தனள்;
யான் இவண்வந்து வீணேகல் தீது எனாப்
போன மாமாருதி பொழிலை வாட்டினான்.

பொ: பெருமைக்குணமுள்ள இராமன் அறிந்து வைத்துள்ள இனிதாகிச் சிறந்த சூடாமணியை அடையாளமாக அனுமன்பால் சானகி கொடுத்து விடையும் கொடுத்தாள்; விடை பெற்றுப் போன சிறந்த அனுமன், 'யான் இங்கு வந்து என் ஆற்றலைக் காட்டாது வீணே திரும்பிப் போதல் தீயதாகும்' என்று அங்குள்ள மலர்ப் பொழிலை அழித்தான்.

கு: மானவன் என்றது, பெருமைக்குணம் உள்ள இராமனை. அனுமன் சீதையைக் கண்டதற்கு அடையாளமாகக் கொடுக்கப் படும் பொருள் இராமனால் நன்கு கண்டறிந்த பொருளாக இருக்க வேண்டும் ஆதலின் 'மானவன் அறிந்தருள் மதுரமாமணி' என்றார். மாமணி என்றது சூடாமணியை. சூடாமணியின் அழகினிமையும் சிறப்பும் இராமன் உள்ளத்தைக் கவர்ந்தவை என்றவாறு. வீண் - பயனின்மை. பகைவர் நாட்டிற்கு வந்தும் தன் வலிமைச் சிறப்பைக் காட்டாது போனால் பயனில்லை என்பது மட்டுமன்றித் தீதும் ஆகும் என்றவாறு. விடைபெற்றுப் போன மாமாருதி என்க. இராமனால் அனுப்பப்பட்ட அனுமன் வெலற்கரிய வலிமையுடையவன் என்பதைப் பொழிலிறுத்த மையால் புலப்படுத்தியவாறு. (202)

## பொழிலறுத்த அனுமன் இராவணன் சேனையை எதிர்த்து நிற்றல்

1172 காட்டொரு வானரங் கடிகொள் காவினை
வீட்டிய தென்றுகா வலர்வி ளம்பலும்
கேட்டனன் றசமுகன் கிளர்ந்த சேனையை
மூட்டின னதனெதி ரனுமன் முன்னினான்.

காட்டு ஒரு வானரம் கடிகொள் காவினை
வீட்டியது என்று காவலர் விளம்பலும்,
கேட்டனன் தசமுகன் கிளர்ந்த சேனையை
மூட்டினன் அதன் எதிர் அனுமன் முன்னினான்.

பொ: 'காட்டில் திரிகின்ற ஒரு குரங்கு காவல் பொருந்திய நம் பொழிலினை அழித்தது' என்று காவலர்கள் வந்து சொல்லுதலும், இராவணன் கேட்டான்; போரில் கிளர்ச்சி கொண்ட தன் சேனையைக் கோபம் மூட்டி அனுப்பினான்; அச்சேனையின் எதிரில் அனுமன் முற்பட்டுச் சென்றான்.

கு: கடி-காவல்; மணம் எனலும் ஆம். வீட்டுதல்-வீழ்த்துதல்; அழித்தல். மூட்டுதல்-கோபம் மூளச் செய்தல். முன்னினான்-போர் செய்ய முற்பட்டான். (203)

## அனுமன், அக்கனை, சம்புமாலியை, பஞ்சசேனாபதியரைக் கொல்லுதல்

1173 தொக்கரக் கரைத்துரந்து தோரணத்தி
ருந்துபோய்
அக்கனைத்த ரைப்படுத்தரை த்திரத்த மிக்கெழத்
துக்கசம்பு மாலியைத் தரைப்படுத்தி வெற்றிசேர்
பக்கநின்ற பஞ்சசேனை மன்னரைப்ப டுத்தினான்.

தொக்கரக்கரைத் துரந்து, தோரணத்திருந்து போய்
அக்கனைத் தரைப்படுத்து அரைத்து இரத்தமிக்கு எழ,
தக்க சம்புமாலியைத் தரைப்படுத்தி, வெற்றிசேர்
பக்கநின்ற பஞ்சசேனை மன்னரைப் படுத்தினுன்.

பொ: தன்னைக் கொல்லும் பொருட்டுச் சேர்ந்துவந்து அரக்கர்களைத் துரத்திவிட்டுத் தோரண கப்பத்தில் இருந்து சென்று அக்கன் என்பவனைத் தரையில் வீழச்செய்து இரத்தம் மிக்கு எழுமாறு தரையில் வைத்து அரைத்து போர்த்தகுதியை யுடைய சம்புமாலியைத் தரையில் வீழ்த்திக் கொன்று, வெற்றி பொருந்தியவராய்ப் பக்கத்தில் நின்ற பஞ்ச சேனுதிபதியரைக் கொன்று குவித்தான்.

கு: தொக்க அரக்கரை என்பதில் அகரம் தொகுத்தல். அக்கன் என்பவன் இந்திரசித்தின் தம்பி. இரத்தம் மிக்கு எழ அரைத்து என இயையும். சேனைமன்னர் என்றது, சேனுதிபதி யரை. படுத்தினுன்-கொன்றுன். (204)

## அனுமனை இந்திரசித்து நாகபாசத்தால் கட்டிக் கொணர்ந்து இராவணனுக்குக் காட்டுதல்

1174 மேகநாதன் வந்தெதிர்த்து வேதநான்முகன்றரும்
நாகபாசம் வீசிஞான நாதனைக்கொ
ணர்ந்துபின்
ஓகைவாளி ராவணற்கு ரைத்தலும்மு ருத்தெழா
ஏக வாலி னங்கியிட்டெ ரித்தியென்றியம்பினுன்.

மேகநாதன் வந்து எதிர்த்து வேத நான்முகன் தரும்
நாகபாசம் வீசி ஞானநாதனைக் கொணர்ந்து, பின்
ஓகை, வாள் இராவணற்கு உரைத்தலும், உருத்து எழா
'ஏக வாலின் அங்கி இட்டு எரித்தி' என்று இயம்பினுன்.

பொ: இந்திரசித்து எதிர்த்து வந்து, வேதம் உணர்ந்த-பிரமன் தந்த நாகபாசத்தை வீசிக்கட்டி, ஞானநாதனுகிய அனுமனைக் கொணர்ந்து பின்பு தன் மகிழ்ச்சியை வாளேந்திய

இராவணனுக்குச் சொல்லுதலும், அவன் கோபித்து, எழுந்து ஓடிப்போகுமாறு அந்தக் குரங்கின் ஒருவாலில் நெருப்பு இட்டு எரிப்பாயாக என்று சொன்னான்.

கு: பிரமனை நோக்கி இந்திரசித்துச் செய்த தவத்திற்குப் பயனாக நாகபாசம் கொடுத்தான் என்பது புலப்பட 'நான் முகன் தரும் நாகபாசம்' என்றார். ஞானநாயகன் என்றது அனுமனை. ஓகை - உவகை. வாள்இராவணன் என்றது, சிவன்கொடுத்த வாளையுடையவன் என்பது புலப்படுத்த வேண்டி. உருத்தல்-கோபித்தல். ஏக, எரித்தி என இயையும். இச்செய்யுளால் பாசப்படலம், பிணிவீட்டுப்படலம், இலங்கை யெரியூட்டுப் படலம் குறிப்பிட்டவாறு. (205)

## அனுமன் தன் வாலில் வைத்த தீயினால் இலங்கையை எரித்து இராமனை எய்துதல்

**1175** வாலின்வைத்த தீயைமாட மாளிகைக்கண்
வைத்தபின்
சாலவந்து சீதையைப்பணிந்துசாக ரந்தனைக்
காலினேகி வந்துதங்க விக்குலத்து வீரராம்
வேலைசூழ வேலிராமன் விட்டசோலை கிட்டினான்.

வாலின்வைத்த தீயை மாட மாளிகைக்கண் வைத்தபின்
சாலவந்து சீதையைப் பணிந்து, சாகரந்தனைக்
காலின்ஏகி வந்து, தம் கவிக்குலத்து வீரராம்
வேலைசூழ, வேல்இராமன் விட்ட சோலை கிட்டினான்.

பொ: (இராவணன் கட்டளைப்படி இந்திரசித்து) தன் வாலில் வைத்த நெருப்பை இலங்கையில் உள்ள மாடங்களிலும் மாளிகைகளிலும் வைத்தபின்பு, மனநிறைவு கொள்ளுமாறு வந்து சீதையைப் பணிந்து விடை கொண்டு, கடலினைக் காற்றினைப்போலக் கடந்து தம் வானரக் குலத்து வீரராகிய கடல் தன்னைச் சுற்றிவர, வந்து வேல்தாங்கிய இராமன் தங்கியிருந்த சோலையை நெருங்கினான்.

கு: சால-நிறைவுகொள்ள. சீதை அஞ்சிக் கலங்காது நிறைவு கொள்ள என்றவாறு. சாகரம்-கடல். சூழ வந்து கிட்டினன் என இயையும். விட்டசோலை - தங்கியிருந்த சோலை. கவிக்குலத்து வீரராம் வேலை என்பது உருவகம். வேலை-கடல். விட்ட-தங்கிய. இதனால் திருவடிதொழுத படலம் குறிப்பிட்டவாறு. (206)

## சீதை தந்த சூடாமணி பெற்ற இராமன் வானர சேனையோடு தென்கடல் அடைதல்

1176 மன்றலோதி தந்தகோல மணியை நல்கி மாருதி
நின்றுவாச கங்கள்கூற நீடுவேலி ராமனும்
என்றின்மைந்த விப்பதாதி யெழுகவென்றெ
ழுந்தபின்
தென்றிசைக் கருங்கடற்றி ரைப்புறத்து
மேவினர்

மன்றல் ஓதி தந்த கோல மணியை நல்கி மாருதி
நின்று வாசகங்கள் கூற நீடுவேல் இராமனும்
என்றின் மைந்த இப்பதாதி எழுகஎன்று எழுந்தபின்
தென்திசைக் கருங்கடல் திரைப்புறத்து மேவினர்.

பொ: மணம்பொருந்திய கூந்தலையுடைய சீதை, அடையாளமாகத் தந்த அழகிய சூடாமணியைக் கொடுத்து நின்று அனுமன் சீதைசொன்ன சொற்களைச்சொல்ல, நெடிய வேலினையுடைய இராமனும் (சுக்கிரீவனைப் பார்த்து) சூரியன் மகனே! இந்த வானர சேனை எழுவதாக என்று கூறியவுடன் அச்சேனை எழுந்த பின்பு சென்று தென் திசைக்கடலின் அலைவீசும் கரையில் போய்த் தங்கினர்கள்.

கு: இயற்கைமணம் வீசும் கூந்தலையுடையவள் சீதை என்பார், 'மன்றலோதி' என அவளைக் குறிப்பிட்டார். கோலமணி என்றது சூளாமணியை. வாசகங்கள் என்றது சீதைசொன்ன செய்திகளை. என்று-சூரியன். பதாதி என்றது இங்குச்சேனை என்னும் பொருளில் வந்தது. திரைப்புறம் என்றது அலைமோதும் கடற்கரையை. சேனையுடன் எழுந்து சென்று திரைப்புறத்து மேவினர் என்க. (207)

## தீப்பட்ட இலங்கையை மயன்பண்டுபோல் செய்தல்

1177 கடற்கரை யிறுத்தனன் கவியின் சேனையோ
டடற்படை யிராகவ னரக்க னேவலால்
மடற்கம லத்தயன் மயனுந் தானுமாய்ப்
படைத்தன னிலங்கையைப் பண்டு போலவே.

கடற்கரை இறுத்தனன் கவியின் சேனையோடு
அடல்படை இராகவன்; அரக்கன் ஏவலால்
மடல் கமலத்து அயன் மயனும் தானுமாய்ப்
படைத்தனன் இலங்கையைப் பண்டுபோலவே.

பொ: வலிமையான சேனையை யுடைய இராமன் குரங்குச் சேனையோடு கடற்கரையில் தங்கினான்; இராவணனது கட்டளை யால் இதழ்களையுடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் மயனும் தானுமாய்ச் சேர்ந்து இலங்கையைப் பண்டு போலவே படைத்தான்.

கு: அடல்-வலிமை. இறுத்தல்-தங்குதல். கவியின் சேனை-வானர சேனை. மடல்-பூவிதழ். அயன் இலங்கையைப் பண்டு போலப் படைத்தனன் என இயையும். "பூவருமயனொடும் புகுந்து பொன்னகர், மூவகையுலகினு மழகு முற்றுற, ஏவின வியற்றினன் கணத்திலென்பரால், தேவருமருள் கொளத் தெய்வத்தச்சனே (யுத்த—இராவணன் மந்திரப்-1) என்றது காணலாம். இதில் மயனுக்கே முதன்மை கொடுத்துள்ளார் கம்பர்; ஒட்டக்கூத்தர் அயனுக்கே முதன்மை கொடுத்துள்ளார். அயன் ஏவியபடி மயன் செய்தான் எனக் கொள்ளலாம். (208)

## புதுக்கிய இலங்கை கண்டு அரக்கர் ஆர்த்தல்

1178 மேலுயர் மண்டபத் திருந்து வெய்யவன்
தோலியல் குரங்கிவ்வூர்ச் சுட்ட தாவென
மாலிய வான்முத லரக்கர் வல்லென
ஓலுயர் கடலென வுளையக் கூவினார்.

மேலுயர் மண்டபத்து இருந்து வெய்யவன்
தோல்இயல் குரங்கு இவ்வூர்ச் சுட்டதா? என
மாலியவான் முதல் அரக்கர் வல்லென
ஓல் உயர் கடல்என உளையக் கூவினர்.

பொ: மாலியவான் முதலிய அரக்கர்கள் மேல் மாடியில் உயர்ந்த மண்டபத்தில் அமர்ந்து இருந்து, இவ்வூரைக் கொடிய வலிய தோலின் இயல்பையுடைய குரங்கு சுட்டதா? என்று விரைந்து ஓசையால் உயர்ந்த கடலைப்போல, பிறவுயிர்கள் வருந்துமாறு கூவி ஆரவாரித்தார்கள்.

கு: எரிந்த இலங்கையை மயன் புதுக்கியுள்ள அருமையை வியந்து மாலியவான் முதலிய அரக்கர்கள் கூவி ஆரவாரித்தனர் என்க. 'குரங்கிவ்வூர்ச் சுட்டதா'? என்ற வினா, சுட்ட ஊராகவே தெரிந்திலது என்னும் கருத்தினது. வெய்ய குரங்கு, வன்குரங்கு, தோலியல் குரங்கு எனத் தனித்தனி இயையும். தோல்போல் வற்றியுள்ள குரங்கு என்க. சுட்டதா என்பதில் உள்ள வினா ஆகாரம், சுடவில்லை என்னும் எதிர்மறைப் பொருளை யுணர்த்-திபது. ஓல்-ஒலி. அரக்கரின் ஆரவாரத்தால் பிற உயிர்களெல்-லாம் அஞ்சின என்னும் கருத்தால் உளையக் கூவினர் என்றார். வல்லென-விரைவாக. (209)

## தன்வலி பேசிய இராவணனுக்கு வீடணன் கூறத் தொடங்குதல்

11/9 மைந்த னிந்திர சித்து வலியினைத்
தந்தை தன்னொடு கூறத் தடுத்தெதிர்
தந்த போதுவர் தங்கட் கயில்படு
வெந்த புண்ணென வீடணன் கூறுவான்.

மைந்தன் இந்திர சித்து வலியினைத்
தந்தை தன்னொடு கூறத் தடுத்து எதிர்
தந்த போது அவர் தங்கட்கு அயில்படு
வெந்த புண்என வீடணன் கூறுவான்.

பொ: (இராவணன்) மைந்தனாகிய இந்திரசித்து, தனது வலிமையைத் தன் தந்தையோடு கூறிக் கொண்டிருந்தபோது, வீடணன் அவனைத் தடுத்துப் பேசியதால் பின்பு இராவணன் எதிர்மொழி தந்தபோது வேல்பட்ட வெந்த புண்போல வருந்தி வீடணன் அவர்கட்குக் கூறுவானானான்.

கு: தடுத்து என்றது, தடுத்தலால் என்று பொருள்பட்டுக் காரணத்தின் கண் வந்த வினையெச்சமாயிற்று. எதிர் தந்தபோது என்றது, இராவணன் எதிர்த்துக்கூறியபோது என்றவாறு. இராவணன் எதிர்தந்ததை இராவணன் மந்திரப் படலத்தில் காணலாம். "ஊனவில்லிறுத் தோட்டை மாரமத்துளம்போட்டிக், கூனி சூழ்ச்சியால் அரசிழந் துயர் வனங்குறுகி, யானிழைத்திட இல்விழந் தின்னுயிர் சுமக்கும், மானுடன் வலிநீயலால் ஆருளர் மதித்தார்" (இராவணன் மந்திரப்-109) என்பது காணலாம். (210)

## வீடணன் கூறியது

1180 இரணிய னென்பவன் யாவர் தம்மினும்
முரணிய னவனிவன் முனிய மாய்ந்தனன்
அரணிய நெஞ்சின னவன்றன் தேவியாம்
தரணியீன் றாயைவிட் டருள றக்கதால்.

இரணியன் என்பவன் யாவர் தம்மினும்
முரணியன்; அவன் இவன் முனிய மாய்ந்தனன்;
அரணிய நெஞ்சினன் அவன்தன் தேவியாம்
தரணிஈன் தாயைவிட்ட ருளல் தக்கதால்.

பொ: இரணியன் என்பவன் யாவரினும்முரண்பட்டவனாக இருந்தான். அந்த இரணியன் இந்த இராமனது அமிசமாகிய நரசிங்கம் கோபித்துப் பிளக்க மாண்டு போனான். எவ்வுயிர்க்கும் அரண் செய்யத்தக்க நெஞ்சினன் ஆகிய அந்த இராமன் தேவியாகிய, பூமிபெற்ற தாய்போன்றவளாகிய சீதையை-விடுதல் தக்கதாகும்.

கு: இராமனும் நரசிங்கமும் திருமாலின் அமிசமேயாதலின் நரசிங்கம்முனிய மாய்ந்தனன் என்றது. இவன் முனிய மாய்ந்-தனன் என இராமனைச் சுட்டிச் கூறினன். நல்லவர்கட்குப் பாது காப்பாக இருப்பவன் இராமன் என்னும் கருத்தால் 'அரணிய நெஞ்சினன்' என்றார். அரண்-பாதுகாப்பு. நெஞ்சினனாகிய அவன் என்க. தேவியாம் தாயை-தரணி ஈன்தாயை எனத் தனித்தனி இயையும். சீதை, சனகன் வேள்விக்காக உழுத நிலத்திலிருந்து தோன்றினமை முன்னரே அறியப் பெற்றது. அண்ணனிடம் பேசும் கண்ணியம் புலப்பட விடல் என்றது, 'விட்டருளல்' என்றான் வீடணன். (211)

## இராவணன் சீற வீடணன் இராமனை அடைக்கலம் அடைதல்

1131 என்றலு மிராவண னெரியுஞ் சிந்தையான்
நின்றனை யேனினை யடுவ லிங்கெனத்
தன்றுணை நால்வருந் தானும் வீடணன்
வென்றிகொ ளிராகவன் சரண மேவினான்.

என்றலும், இராவணன் எரியும் சிந்தையான்
'நின்றனையேல் நினை அடுவல் ஈங்கு' எனத்
தன்துணை நால்வரும் தானும் வீடணன்
வென்றிகொள் இராகவன் சரணம் மேவினான்.

பொ: என்று வீடணன் கூறுதலும், இராவணன் எரிகின்ற நெஞ்சினனாய் நோக்கி 'இனி' இங்கு நின்றாய் ஆயின் நினைக் கொன்று விடுவேன் என்று வெகுண்டுகூற, வீடணன் தனக்குத் துணைவராக உள்ள நால்வரும் தானும் ஆய் வெற்றி கொள்ளும் இயல்பினனாகிய இராமன் திருவடிகளில் அடைக்கலம் புகுந்தனர்.

கு: அடுவல்-கொல்லுவேன்; தன்மையொருமை வினைமுற்று. தன்துணை நால்வ ராவார்:- அனலன், அனிலன், அரன், சம்பாதி என்பார். வென்றிகொள் இராகவன் என்றது இராவணனை வெற்றி கொள்ளற்குரியவன் என்பது புலப்படுத்தியவாறு. சரணம் மேவினான் என்றது, சரணடைந்தான் என்னும் பொருளும் புலப்படுத்தியவாறு. (212)

## இராவணன் வலிமை பற்றி வீடணன் இராமனுக்குக் கூறுதல்

1182 கடலுடை யிலங்கையி னரணுங் காவலன்
உடையநீள் வரங்களு மைந்த ரூற்றமும்
படையின தூட்டமும் பகர்தி நீயென
அடையவா ளிராமனுக் கரக்கன் கூறினன்.

கடலுடை இலங்கையின் அரணும் காவலன்
உடையநீள் வரங்களும் மைந்தர் ஊற்றமும்
படையினது ஊட்டமும் பகர்தி நீயென
அடையவாள் இராமனுக்கு அரக்கன் கூறினன்.

பொ: 'கடல்சூழப் பெற்றிருக்கின்ற இலங்கையின் அரண வலிமையும் அவ்விலங்கைக்குக் காவலனாகிய இராவணன் பெற்றுள்ள நீண்ட வரங்களும், அவன் மைந்தர்களின் வலிமையும், நால்வகைப்படையின் பெருக்கமும் நீ சொல்வாயாக' என்று சொன்ன வாள் ஏந்திய இராமனுக்கு வீடணன் எல்லாவற்றையும் கூறினன்.

கு: நீள்வரங்கள் என்றது பெரிய வரங்களை. ஊற்றம்-வலிமை. ஊட்டம்-பெருக்கம். படை என்பதற்கு ஆயுதங்கள் எனப் பொருள்கூறலும் ஆம். 'பகர்தி நீ' என்றது, இராவணன் இளவல் என்ற உரிமையுடைமையால் எல்லாவற்றையும் விளக்கிச் சொல்லுதற்கு உரிய அறிவுடையவன் நீயே என்பதும் புலப்பட நின்றது. அரக்கன் என்றது, வீடணனை. அரக்கன் வாள் இராமனுக்கு அடையக் கூறினன் என இயையும். அடைய - முழுவதும். பகர்தல் - சொல்லுதல். (213)

## இராமன் கோபங் கண்டு வருணன் அடைக்கல மடைதல

1183 வேண்டினன் ஒருவழி வேலை வேந்தனை
ஈண்டிய விலங்கைக்கன் றெய்த லின்மையால்
தூண்டினன் சுடுசரம் வருணன் றோன்றிவந்
தாண்டகை யிராகவ னடியின் வீழ்ந்தனன்.

வேண்டினன் ஒருவழி வேலை வேந்தனை
ஈண்டிய இலங்கைக்கு அன்று எய்தல் இன்மையால்
தூண்டினன் சுடுசரம், வருணன் தோன்றி வந்து
ஆண்தகை இராகவன் அடியின் வீழ்ந்தனன்.

பொ: எல்லா வளங்களும் நெருங்கியுள்ள இலங்கைக்குக், கடலரசனாகிய வருணனை ஒருவழி வேண்டினான் இராமன்; வருணன் வாராமையால் அவன் மேல் சுடுகின்ற அம்பினை விடுத்தான்; பின்பு வருணன் வந்து தோன்றி ஆண் தன்மையனாகிய இராமனுடைய திருவடியில் வீழ்ந்து வணங்கினான்.

கு: ஈண்டிய இலங்கைக்கு வேலை வேந்தனை ஒருவழி வேண்டினன்; அன்று எய்தல் இன்மையால் சுடுசரம் தூண்டினன் வருணன் தோன்றி வந்து அடியின் வீழ்ந்தனன் என இயையும். அடியில் வந்து வீழ்ந்தது அடைக்கலம் என்னும் குறிப்பினது. (214)

## சேதுகட்டி இராமன் சேனை இலங்கைக் குன்றில் தங்கியதும் இராவணன் ஒற்றர் வருதல்

1184 ஆனபேர் வேலையை யடைத்த பின்புயர்
மானவர் தலைவனும் வான ரேசனும்
கோனக ரின்புறக் குன்றி றுத்தபின்
ஊனமி லிராவண னொற்றர் மேவினர்.

ஆனபேர் வேலையை அடைத்த பின்பு, உயர்
மானவர் தலைவனும் வானரேசனும்
கோனகர் இன்புறக் குன்று இறுத்தபின்
ஊனம் இல் இராவணன் ஒற்றர் மேவினர்.

பொ: இலங்கைக்குச் செல்ல இடையூறான பெரிய கடலை மலைகளைக் கொண்டு அடைத்துச் சேது அணைகட்டிய பின்பு, உயர்ந்த பெரியோர்கட்குத் தலைவனாகிய இராமனும் வானர சேனைக்குத் தலைவனான சுக்கிரீவனும் அரச நகரமாகிய இலங்கை துன்பம் நீங்கி இன்புற வேண்டி அங்குள்ள சுவேல மலை என்ற குன்றில் தங்கிய பின்பு ஊனம் இல்லாதிருக்கின்ற இராவண னுடைய ஒற்றர்கள் அங்கு மாறுவேடத்துடன் வந்தார்கள்.

கு: ஆனபேர் வேலை என்றது, இலங்கைக்குச் செல்லவியலாமல் இடையூறான பெருங்கடலை என்னும் பொருளது. இனி அந்தப் பெரிய கடலை எனச் சுட்டுப் பொருளதாக்கினும் அமையும். மானவர் - பெரியோர்கள்; மானிடர் எனப் பொதுவகையாற் கொள்ளலும் ஆம். வானரேசன் - சுக்கிரிவன். இராவணன் அரசாளுதற்குரிய இலங்கை நகரைக் கோனகர் என்றார். இராமன் வருகையால் இலங்கை நல்லாட்சி பெற்று இன்புறப் போகின்றது ஆகலின், 'கோனகர் இன்புறக் குன்று இறுத்தபின்' என்றார். கற்புடையாரைக் கலங்க வைத்த பாவத்தால் வரற்குரிய ஊனம் ஏதும் இல்லாத இராவணன் என்க. இதனால், அவனுக்கு உறவேண்டிய ஊனம் அவன் தவத்தால் தடைபட்டுளது என்பது புலப்படுத்தியவாறு. (215)

## வந்த ஒற்றரை இராமன் தன் பெருமை புலப்பட விடுதல்

1185 பற்றினர் சாரண சுகரைப் பன்முறை
சொற்றனர் கண்டவத் தூய மானவன்
விற்றொழில் வீடணற் கரசு விட்டதும்
கொற்றவற் குரைக்கெனக் கூறிப் போக்கினான்.

பற்றினர் சாரண சுகரைப் பன்முறை
சொற்றனர் கண்ட அத்தூய மானவன்
வில்தொழில் வீடணற்கு அரசு விட்டதும்
கொற்றவற்கு உரை எனக் கூறிப் போக்கினன்.

பொ: சுக சாரணர்களாகிய ஒற்றரை வானவர் பற்றிக் கொணர்ந்து பலமுறை அவ்வொற்றரின் செயலைப் பற்றிச் சொன்னார்களாக. அவ்வொற்றரைக் கண்ட அந்தத் தூயவனாகிய இராமன், 'வில் தொழில் வல்ல வீடணற்கு இலங்கையை ஆளும் அரசாட்சியைக் கொடுத்த செய்தியையும் வெற்றியையுடைய இராவணனுக்குச் சொல்லுக!' என்று சொல்லி அவர்களைப் போகச் செய்தான்.

கு: ஒற்றர்களின் பெயர் சுகன் சாரணன் என்பனவாகும். அவர்கள் வானர வேடத்துடன் வானர சேனையில் கலந்து மந்தணங்களை அறிகின்றபோது வானரர் கண்டு அவர்களைப் பற்றிக் கொணர்ந்து இராமன் முன் நிறுத்தி அவர்தம் கள்ளச் செயலைப் பற்றிப் பன்முறை சொன்னார்களாக. இராமன் அவர்களைக் கண்டும் தீங்கொன்றும் புரியாது, 'இலங்கையரசை வீடணற்குக் கொடுத்தாயிற்று' என்ற செய்தியை இராவண னுக்குச் சொல்லிடப் போகவிடுத்தான் என்றவாறு. அந்த ஒற்றர்கள் வானரசேனையில் கண்டவற்றோடு அரசு விட்டதும் கொற்றவற்கு உரை எனப் பொருள் படுதலின் உம்மை இறந்த தழீஇயது. (216)

1186 சேது பந்தமும் வீடணன் செய்தியும்
தூது சென்றவர் சொல்லத் தசமுகன்
ஓதும் வெவ்வுரை யோதின னப்பொழு
தேதமின் றி யெழுந்த திரவியே.

சேது பந்தமும் வீடணன் செய்தியும்
தூது சென்றவர் சொல்லத் தசமுகன்
ஓதும் வெவ் உரை ஓதினன் அப்பொழுது
ஏதம் இன்றி எழுந்தது இரவியே.

பொ: ஒற்றராகச் சென்ற சுக சாரணர், கடலில் சேது அணை கட்டியதையும் வீடணன் இலங்கைக்கு அரசாக முடிசூட்டப் பட்டதையும் இராவணனுக்குச் சொல்ல, அவன் என்றும் சொல்லுகின்ற கொடிய சொற்களைச் சொன்னான்; அப்பொழுது சூரியன் குற்றம் ஏதும் இல்லையாக உதித்தான்.

கு: தூது என்றது, இங்கு ஒற்றனையே. சேதுபந்தம்-சேது அணை. வெய்ய சொற்களைச் சொல்லுதல் இராவணனுக்கு எப் பொழுதும் இயல்பு என்பது போதர 'ஓதும் வெவ்வுரை ஓதினான்' என்றார். இரவி ஏதம் இன்றி எழுந்தது என இயையும். (217)

## சுக்கிரீவன் இராவணனது முடிபறித்தது

1187 இலங்கை வேந்தனு மிராமனு
மெறிபடை காண்பான்
இலங்கை மாளிகைத் தலையினு
மலையினு மேற
இலங்கை யான்மணி முடிபறித்
திரவிசே யகன்றான்
இலங்கை வேந்தனு மிராமனு
மிருக்கைசென் றடைந்தார்.

இலங்கை வேந்தனும் இராமனும் எறிபடை காண்பான்
இலங்கை மாளிகைத் தலையினும் மலையினும் ஏற,
இலங்கையான் மணிமுடி பறித்து இரவிசேய் அகன்றான்;
இலங்கைவேந்தனும் இராமனும் இருக்கை சென்று அடைந்தார்.

பொ: இலங்கைக்கு அரசனாகிய இராவணனும் இராமனும் இருதிறத்தும் உள்ள பகைவரை எறிகின்ற சேனையின் அளவைக் காண்பதற்காக முறையே இலங்கையில் உள்ள மாளிகையுச்சி யினும் மலைமுகட்டினும் ஏற, அப்பொழுது இலங்கையானாகிய இராவணனது மணிகள் பதித்த முடியை சூரியன் மகனாகிய சுக்கிரீவன் பறித்துக் கொண்டு சென்றான்; பின்பு இராவணனும் இராமனும் தத்தம் இருப்பிடம் சென்று சேர்ந்தார்கள்.

கு: இலங்கை வேந்தன் மாளிகைத் தலையினும் இராமன் மலையினும் ஏற என நிரல் நிறையாகக் கொள்க. இரவிசேய்- சுக்கிரீவன். (218)

## அங்கதன் தூது

1188 நாலு வாயிலு நரரும்வா
னரருமே நண்ணி
ஓல வேலையி னுருத்தன
ரெனச்சில ருரைத்தார்
ஆல காலவே லரக்கனும்
படைவகுத் தமைத்தான்
வேலி ராகவ னங்கதற்
றூதென விட்டான்.

நாலு வாயிலும் நரரும் வானரருமே நண்ணி
ஓல வேலையின் உருத்தனர் எனச்சிலர் உரைத்தார்
ஆலகாலவேல் அரக்கனும் படைவகுத்து அமைத்தான்;
வேல் இராகவன் அங்கதன் தூதுஎன விட்டான்.

பொ: இலங்கையின் நான்கு வாயில்களிலும் மனிதர்களும் வானரர்களுமே நெருங்கி வந்து ஒலிமிக்க கடலைப்போல ஆரவாரித்துக் கோபத்தைக் காட்டினுர்கள்; என்று சிலர் சொன்னுர்கள் இராவணனுக்கு; ஆலகாலம் போன்ற கொடுமை யுடைய வேலைத்தாங்கிய இராவணனும் தன் படையை அணிவகுத்துப் போர்க்கு ஆயத்தம் ஆனுன்; வேலினைத் தாங்கிய இராமன் இராவணனிடம் அங்கதனைத் தூது ஆக விடுத்தான்.

கு: நரர் என்றது இராம இலக்குவரை. அரக்கத்தூதுவர் கூற்று இது. இதுகாறும் தேவரும் முற்றுகையிடாத இலங்கையில் எளிய மனிதரும் குரங்குகளும் வந்து புகுந்து ஆரவாரிக்கின்றன என்றவாறு. ஓலவேலை - ஒலிமிக்க கடல். உருத்தல் - கோபித்தல். இலங்கையில்புகுந்த பின்பு இராவணனுக்குத் தூது மூலமாக அறிவு புகட்டிச் சீதையை விடச் செய்யலாம் என்ற எண்ணத்தால் அங்கதனைத் தூது போக்கினுன் என்க. ஆலகால வேல் என்றது

உவமைத்தொகை. ஆலகாலம் - பெருநஞ்சு. இனி, பெருநஞ்சு பூசிய வேல் எனலும் ஆம். (219)

## அங்கதன் தூதினை ஏலாமையால் போர்க்கு எழுதல்

1189 சீதை யென்னுமத் திருவைவிட்
டுன்சிரம் பெறுகென்
றோதி விட்டன னிராமனென்
றங்கத னுரைத்தான்
போதி போதியென் றிராவணன்
புகறலு மிராமன்
பாத பங்கயம் பணிந்தன
னெழுந்தது பதாதி.

'சீதை என்னும் அத்திருவை விட்டு உன்சிரம் பெறுகென்று
ஓதி விட்டனன் இராமன்' என்று அங்கதன் உரைத்தான்;
போதி! போதி! என்று இராவணன் புகறலும் இராமன்
பாத பங்கயம் பணிந்தனன்; எழுந்தது பதாதி.

பொ: அங்கதன் இராவணனிடம் சென்று 'சீதை என்கின்ற அந்தத் திருவினை விடுத்து உனது தலையை வீழ்ந்து விடாமல் காப்பாற்றிக் கொள்க என்று சொல்லிவிட்டான் இராமன்' என்று சொன்னான். இராவணன் அதுகேட்டுக் கோபித்துப் போ! போ! என்று சொல்லிய அளவில் அங்கதன் இராமனுடைய திருவடித் தாமரைகளைப் பணிந்து இராவணனது முடிவைத் தெரிவித்தானாக, வானர சேனை போர்க்கு எழுந்தது.

கு: சீதையை விடாயேல் உன்சிரம் இழப்பாய் என்ற கருத்துப் புலப்படவே, "சீதையென்னு மத்திருவை விட்டு உன் சிரம் பெறுதி" என்று சொல்லித் தன்னைத் தூதுவிட்டதாக அங்கதன் கூறினான். இராவணன் அதனை ஏற்றுக் கொள்ளாமல் 'போதி! போதி!' என்றமையால் அவன் சிரம் இழத்தலையே விரும்பினான் என்பது புலப்படும். பணிந்தனன் என்பது, பணிந்து இராவணன் சீதையைவிட விரும்பாமையைப் புகன்றான் என்னும் கருத்தினது. பதாதி என்பது காலாட்படை முதலாய நால்வகைப்

படை என்னும் பொருளது. ஆயின் இங்கு வானர சேனையில் நால்வகைப் படையின் பதாதி என்பது சேனை என்றும் பொருள தாயது. பாதபங்கயம் என்றது, பாதமாகிய தாமரைமலர்கள் என்று உருவகமாக்குக. (220)

## அரக்கரும் வானரரும் பொருதல்

1190 அரக்க ரைம்பது வெள்ளமு
மணியொடு முடையக்
குரக்கு வேந்தனு மனுமனு முதலினர்
குறைத்தார்
அரக்க னவ்வுரை கேட்டுவந்
தடர்த்தலு மனுமன்
குரக்கு வேந்தன்மற் றவரவன்
சரம்படக் குலைந்தார்.

அரக்கர் ஐம்பது வெள்ளமும் அணியொடும் உடையக்
குரக்கு வேந்தனும் அனுமனும் முதலினர் குறைத்தார்;
அரக்கன் அவ்வுரை கேட்டுவந்து அடர்த்தலும் அனுமன்
குரக்கு வேந்தன் மற்றவர் அவன் சரம்படக் குலைந்தார்.

பொ:அரக்கர்களின் ஐம்பது வெள்ளம் சேனையும் அணிவகுப் பொடும் உடைந்து ஓடுமாறு வானர வேந்தனாகிய சுக்கிரீவனும் அனுமனும் முதலிய வானர வீரர்கள் போர்செய்து அழித்தார்கள்; இராவணன் அந்தச் சொல்லைக் கேட்டு வந்துபோர் செய்தலும் அனுமன் சுக்கிரீவன் மற்ற வானரர்கள் எல்லாம் அவ்விராவணனது அம்பு பட்டமையால் அணிவகுப்புக் கலைந்தார்கள்.

கு: அணியென்றது அணிவகுப்பினை. உடைதல் அணிவகுப்புக் கலைதல். தோற்று ஓடலும் ஆம். குறைத்தல் என்பது இங்கு அழித்தலை யுணர்த்தியது. அடர்த்தல்-போர் செய்து நெருக்குதல். குலைதல், அணிவகுப்புக் கலைதல்; நடுங்குதலும் ஆம். (221)

## இலக்குவனை இராவணன் எடுக்க வரும்போது அனுமன் எடுத்துச் செல்லுதல்

1191 இளைய வீரனு மிராவண
னீரைந்து தலையும்
உளைய வெய்தன னுடம்பிடி
யவனுரத் துய்த்தே
வளையும் வாளெயிற் றிராவணன்
வவ்வுவான் செல்ல
யெடுத்துக் கொண் டகன்றான்.

இளைய வீரனும் இராவணன் ஈரைந்து தலையும்
உளைய எய்தனன்; உடம்பிடி அவன் உரத்து உய்த்தே
வளையும் வாள்எயிற்று இராவணன் வவ்வுவான் செல்ல,
இளைய வீரனை மாருதி எடுத்துக் கொண்டு அகன்றான்.

பொ: இலக்குவனாகிய வீரனும் இராவணனுடைய பத்துத் தலைகளும் வருந்துமாறு அம்புகளை எய்தான். வளைந்த கூரிய கோரப் பல்லையுடைய இராவணனும் தன்கைவ்வேலினை அவ்விலக்குவனது மார்பில் விடுத்து அவன் சோர்ந்து வீழ்ந்தவுடன் அவனைக் கவர்ந்துபோக எண்ணி நெருங்க, அதனை அறிந்த அனுமன் இலக்குவனை எடுத்துக்கொண்டு அவ்விடத்தை விடுத்து நீங்கினான்.

கு: உளைதல் - வருந்துதல். உடம்பிடி - கைவ்வேல். உரம் - மார்பு. உய்த்தல் இங்கு எறிதலை உணர்த்தியது. வளையும் வாளெயிறு கூறியது அரக்கர்க்கு அடையாளம் ஆதல்நோக்கி. வவ்வுதல் - கவர்தல். இராவணன் தன் பத்துத் தலைகளும் வருந்துமாறு அம்பு எய்த இலக்குவன் மார்பில் தன் கைவ்வேலினை எறிந்து அவன் சோர்ந்து வீழ்ந்தவுடன் அவனைக் கவர்ந்துபோக நெருங்கி, அவன் கருத்தறிந்த அனுமன் இலக்குவனை எடுத்துக் கொண்டு போனான் என்க. (222)

## இராவணன் மெலிவு கண்டு இராமன் நாளை வா எனல்

1192 ஆளி யாயிரம் பூண்டதே
ரரக்கன்வந் தடர்த்தான்
காளை மாருதி தோளின்மே
லிராமனுங் கலந்தான்
மூளும் வார்சிலை பத்துடன்
முடிபத்து மொழிந்து
நாளை வாபொர வென்றன
னகர் சென்று புக்கான்.

ஆளி ஆயிரம் பூண்ட தேர் அரக்கன்வந்து அடர்த்தான்;
காளை மாருதி தோளின்மேல் இராமனும் கலந்தான்;
மூளும் வார்சிலை பத்துடன் முடிபத்தும் ஒழித்து
'நாளை வா பொர' என்றனன்; நகர் சென்று புக்கான்.

பொ: ஆயிரம் யாளிகள் பூட்டப் பெற்ற தேரின்மேல், இராவணன் வந்து போர் தொடங்கினன். இராமனும் காளைப் பருவத்தவனாகிய அனுமனது தோள்மேல் அமர்ந்து போரில் கலந்து கொண்டான். போர் செய்ய மூள்கின்ற நீண்ட வில் பத்துடன் முடிகள் பத்தினையும், ஒழித்துவிட்டுத் தனித்து நிற்கின்ற இராவணனைப் பார்த்துப் 'போர் செய்தற்கு நாளை வா' என்று இராமன் கூறினன். இராவணன் இலங்கை நகரில் சென்று புகுந்தான்.

கு: ஆளி என்பது சிங்கம் போன்ற உடலமைப்பும் யானை போன்ற துதிக்கையுமுடைய ஒருவிலங்கு; சிங்கம் எனலும் ஆம். இருபது கைகளையுடைய இராவணன் இடக்கைகள் பத்தினும் பத்து வில்களை வளைத்து வலக்கைபத்தால் அம்புகளை விடுத்துப் போர் செய்தமை புலப்பட 'வார்சிலை பத்துடன்' என்றார், பத்துத்தலைகளிலும் அணிந்திருந்த முடிகள் பத்தினையும் பத்து வில்களையும் இராமன் தன் அம்பால் வீழ்த்தினன் என்க. பகைவன் ஆயுதம் இல்லாது சோர்ந்திருக்கும் நிலையில் அவனைக் கொல்லலாகாது என்ற ... இராமன்,

'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என்று கூறினான் என்க. அவ்வுரையின்படி இராவணன் இலங்கை புகுந்தான் என்றவாறு. (223)

1193 மூலத் தானையைத் தருகெனத்
தூதரை முடுக்கிக்
கோலப் பள்ளியிற் குறுகலுங்
குரவன்வந் தணுகிச்
சாலச் சாம்பினை முனமே
சாற்றினே னென்றான்
மாலைத் திண்புய மகோதரன்
மறுத்திது சொன்னான்.

மூலத் தானையைத் தருகெனத் தூதரை முடுக்கிக்
கோலப் பள்ளியில் குறுகலும் குரவன் வந்து அணுகிச்
சாலச் சாம்பினை முன்னரே சாற்றினன் என்றான்;
மாலைத் திண்புய மகோதரன் மறுத்துஇது சொன்னான்.

பொ: மூலபலப்படையைக் கொணர்க என்று தூதுவரை விரைய அனுப்பிவிட்டு அழகிய படுக்கையில் சென்று படுக்கவும் அவன் பாட்டனாகிய மாலியவான் நெருங்கிவந்து மிகவும் போரில் வாடிவிட்டாய்; முன்னமே இந்தநிலை நேரும் என்பதைச் சொன்னேன் என்று கூறினான்; மாலையணிந்த திண்ணிய தோள் லையுடைய மகோதரன் அப்போது வந்து மாலியவான் சொன்னதை மறுத்து இதனைச் சொன்னான்.

கு: மூலத்தானை என்றது, மூலபலப் படையை. முடுக்கி என்றது, விரைய அனுப்புதலை யுணர்த்தியது. குரவன் என்றது; இராவணனது பாட்டனாகிய மாலியவானை. சாம்புதல், வாடுதல்; சோர்தல். மாலியவான் முன்னமே சொன்னது சீதையை விடுத்தல் நல்லது என்பது. இது சொன்னான் என்றது, கும்பகன்னனைப் போர்க்கு ஏவுக என்றது. (224)

## கும்பகன்னனை வரவழைத்தல்

1194 கும்ப கன்னனை யழைக்கெனத்
தூதருங் கொணர்ந்தார்
எம்பி போரினை யியற்றுதி
மணிசரோ டென்றான்
வெம்பு போர்க்களம் புகுந்தனன்
வினவின னிராமன்
தம்பி நானிவற் றருகென்றான்
றசமுகற் கிளையான்.

கும்பகன்னனை அழைக்கெனத் தூதரும் கொணர்ந்தார்;
'எம்பி! போரினை இயற்றுதி மணிசரோடு' என்றான்.
வெம்பு போர்க்களம் புகுந்தனன்; வினவினன் இராமன்;
'தம்பி! நான் இவன் தருகு' என்றான், தசமுகற்கு இளையான்.

பொ: கும்பகன்னனை அழைக்க என்று மகோதரன் கருத்தின் படி இராவணன் சொல்ல, தூதுவரும் அக்கும்பகன்னனைக் கொண்டு வந்தார்கள். இராவணன் கும்பகன்னனை நோக்கி, 'என் தம்பி! அந்த மனிதர்களோடு போர் செய்வாயாக' என்று ஏவினான்; கும்பகன்னன் அவ்வாறே கண்டோருள்ளம் வெதும்பு தற்குக் காரணமான, போர்க்களத்தில் புகுந்தான். அக்கும்பகன்னனை கண்டதும் இராமன், 'இவன் யார்?' என்று வினவினான்; இராவணனுக்குத் தம்பியாகிய வீடணன், 'இக் கும்பகன்னன் இராவணன் தம்பி; நான் இவனைத் தங்கள்பால் அழைத்து வருகின்றேன்' என்றான்.

கு: எம்பி-என்தம்பி. மணிசரோடு போரினை இயற்றுதி என இயையும். வெம்புதல் என்றது, போர்க்களத்தைக் கண்டோர் மனம் வெதும்பும் நிலையையுணர்த்தியவாறு. தசமுகற்கு இளையான் என்றது வீடணனை. தம்பி என்றது, இராவணன் தம்பி கும்பகன்னன் என்றவாறு. இவன் தருகு-இவனை அழைத்து வருவேன்; தருகு, தன்மையொருமை வினைமுற்று; தருவேன் என்பது பொருள். (225)

## கும்பகன்னன் வதை

1195 வியந்து வீடண னழைத்தலும்
வெய்யவன் மறுத்து
வயந்த னைப் பிசைந் தருக்கன்மா
மகனைக்கொண் டகன்றான்.
இயைந்த நாசி கொண் டிரவிசே
யகன்றன் னிராமன்
உயர்ந்தொ ரம்பினு லவன்றலை
யுவரியி லிட்டான்.

வியந்து விடணன் அழைத்தலும் வெய்யவன் மறுத்து
வயந்தனைப் பிசைந்து அருக்கன்மா மகனைக் கொண்டு அகன்றான்;
இயைந்த நாசி கொண்டு இரவிசேய் அகன்றனன்; இராமன்
உயர்ந்து ஓர் அம்பினுல் அவன்தலை உவரியில் இட்டான்.

பொ: (இராமனைச் சார்வதால் வரும் நலன்களை) வியந்து கூறி விடணன் கும்பகன்னனை அழைத்தலும் அந்தக் கொடியவன் மறுத்துக் கூறிவிட்டு வசந்தன் என்பவனைக் கையால் பிசைந்து கொன்றுவிட்டுச் சூரியன் மகனுகிய சுக்கிரீவனைத் தூக்கிக் கொண்டு போய்விட்டான்; பின்பு சுக்கிரிவன் உணர்வு வரப் பெற்றுக் கும்பகன்னனது முகத்தோடு இயைபுடைய மூக்கினைக் கவ்விக் கொண்டு போனுன். பின்பு இராமன் உயர்ந்த ஓர் அம்பினுல் அந்தக் கும்பகன்னன் தலையையறுத்துக் கடலில் போட்டான்.

கு: வெய்யவன் என்றது கும்பகன்னனை. வயந்தன் என்பவன் வானரரில் ஒருவீரன். அருக்கன் மாமகன்-சூரியனுடைய சிறந்த புதல்வனுகிய சுக்கிரீவன். கும்பகன்னன் முகத்தோடு இயைபுடைய மூக்கினைக் கடித்துக் கவர்ந்து கொண்டு சென்றான் சுக்கிரீவன். உவரி-கடல். கும்பகன்னன் வேண்டுகோளின்படி மூக்கில்லாத அவன் தலையை யாரும் பாராமல் கடலில் கிடத்திஞன் என்க. (226)

## மாயா சனகன்

1196 அப்பு றத்தினின் மருத்தனைச்
சனகர்கோ ளாக்கிக்
குப்பு றுத்தினன் மகோதரன்
சீதையுங் குலைந்தாள்
எப்பு றத்தினு மிராவணன்
செவியெலாங் கேட்க
இப்பு றத்தினின் றார்த்ததங்
கிராகவன் சேனை.

அப்புறத்தினில் மருத்தனைச் சனகர்கோன் ஆக்கி,
குப்புறுத்தினன் மகோதரன் சீதையும் குலைந்தாள்;
எப்புறத்தினும் இராவணன் செவிஎலாம் கேட்க,
இப்புறத்தின் நின்று ஆர்த்தது அங்கு இராகவன் சேனை.

பொ: போர்க்களத்தின் அப்புறத்தில் மகோதரன், மருத்தன் என்பவனைச் சனகனாக்கி வஞ்சகச் செயலைச் செய்தான்; அது கண்டு சீதையும் நடுங்கினாள்; எவ்விடத்திலும் இராவணன் இருபது செவிகளும் கேட்க இப்புறத்துப் போர்க்களத்திலிருந்து இராமனது சேனை ஆரவாரித்தது.

கு: போர்க்களத்தின் நிகழ்ச்சியைக் கூறிக் கொண்டிருப்பதால் மகோதரன் சீதையிடம் மருத்தனைச் சனகனாக்கி வஞ்சித்த செயலை அப்புறத்தினில் நிகழ்ந்ததாகக் கூறினார். கு-வஞ்சனை. குப்புறத்தல் என்றது, வஞ்சகம் செய்தலை. குலைதல்-நடுங்குதல். இப்புறம் என்றது போர்க்களத்தை. சீதையை நடுங்கச் செய்த தீவினையின் பயன்போல வானர சேனையின் ஆரவாரம் இராவணன் செவிகள் எல்லாம் கேட்க எவ்விடத்தும் ஆரவாரித்தது. கும்பகன்னன் இறந்தமைக்காக வானரசேனை மகிழ்ந்து ஆரவாரித்தது. (227)

## அதிகாயன் போர்

## வேறு

1197 கும்ப கன்னன் குறைந்தமை கூறினர்
தம்பியோவென் றரற்றித் தசமுகன்
அம்பொற் றேரதி காயனை யேவினன்
எம்பி ராற்கிளை யோனெதிர் தாக்கினன்.

கும்பகன்னன் குறைந்தமை கூறினர்;
தம்பியோ! என்று அரற்றித் தசமுகன்,
அம்பொன் தேர் அதிகாயனை ஏவினன்;
எம்பிராற்கு இளையோன் எதிர் தாக்கினன்.

பொ: (வானர சேனையின் ஆரவாரத்திற்குக் காரணம்) கும்பகன்னன் இறந்தமையே என்பதைத் தூதுவர் சொன்னராக; இராவணன், 'தம்பியோ! என்று அழைத்து அழுதரற்றிவிட்டு அழகிய பொன்னாலியன்ற தேரினையுடைய அதிகாயனைப் போர்க்கு ஏவினன்: அதிகாயனுக்கு எதிராக எம்பிரானாகிய இராமனுக்கு இளையோனாகிய இலக்குவன் சென்று தாக்கினன்.

கு: குறைதல் என்றது இங்கு இறந்ததை. இறந்தவரை அழைத்து அரற்றுதல் இயல்பாதலின் கும்பகன்னனைத் தம்பியோ என்று அழைத்து அரற்றினன் இராவணன். எம்பிரான் என்றது, இராமனை. நூலாசிரியர் கூற்று. அதிகாயன் இராவணனது இளைய மகன். (228)

## இலக்குவன் அதிகாயனை வதைத்தல்

1198 எதிரெதிர் தாக்கின விரண்டு சேனையும்
கதுமென விராகவற் கிளைய காவலன்
அதிர்கழல் புனையதி காயன் றன்னையோர்
சதுமுகன் சரத்தினாற் றலையைத் தள்ளினன்.

எதிர்எதிர் தாக்கின இரண்டு சேனையும்
கதும் என இராகவற்கு இளைய காவலன்,
அதிர்கழல் புனை அதிகாயன் தன்னை ஓர்
சதுமுகன் சரத்தினால் தலையைத் தள்ளினான்.

பொ: அரக்கர் சேனையும் வானர சேனையும் எதிர் எதிர் நின்று தாக்கின; திடும் என இலக்குவன் அதிர்க்கின்ற வீரக்கழல் அணிந்த அதிகாயன் தலையை ஒரு பிரமன் அம்பினால் தரையில் தள்ளினான்.

கு: கதும் என்பது, விரைவுக்குறிப்புணர்த்தும் சொல். இராகவற்கு இளைய காவலன் என்றது, இலக்குவனை. அதிகாயன் தன்னை தலையை என்று இரண்டனுருபு ஈரிடத்தும் வந்தன; பசுவைப் பாலைக் கறந்தான் என்புழிப்போல. தள்ளினான் என்பது கொய்தான் என்னும் பொருளது. (2?9)

## அதிகாயன் பட்டதை இராவணனுக்குச் சொல்லுதல்

1199 குரக்கு வேந்தர்கள் குன்றுகொண் டேவலும்
அரக்கன் மைந்த னனைவரு மாண்டனர்
பரக்க வன்கொலைப் பாடுகண் டார்சிலர்
இரக்க மெய்தி யிராவணற் கோதினார்.

குரக்கு வேந்தர்கள் குன்று கொண்டு ஏவலும்
அரக்கன் மைந்தன் அனைவரும் மாண்டனர்;
பரக்கவன் கொலைப்பாடு கண்டார் சிலர்,
இரக்கம் எய்தி இராவணற்கு ஓதினார்.

பொ: வானரத் தலைவர்கள் குன்றினை எடுத்து வீசுதலும் அரக்கன் மகனாகிய அதிகாயனோடு அவனுடன் வந்தோர் அனைவரும் இறந்தார்கள்; பரவலான வலிய கொலைப் பாட்டைக் கண்ட சிலர் இரக்கம் அடைந்து இராவணனுக்குச் சொன்னார்கள்.

கு: அரக்கன் மைந்தனொடு என ஒரு சொல் விரிக்க. பரவலாகப் பலர் கொலைப் பட்ட நிகழ்ச்சியையே பரக்கவன் கொலைப்பாடு

என்றார். ஒருகாலத்து ஓரிடத்தில் பலர் ஒருங்கே கொலைப்பட்ட நிகழ்ச்சி கண்டோர்க்கு உள்ள நெகிழ்ச்சியை-இரக்கவுணர்ச்சியை யுண்டாக்கியது என்க. (230)

## இந்திரசித்தின் போர்

1200 அரக்க னவ்வுரை கேட்டலு மங்ஙனே
இரக்க முற்றிந் திரசித்தை யேவினான்
குரக்கு வேலையைக் கொன்றனன் கொன்றபின்
தரைக்கு நாயகன் றம்பியை யெய்தினான்.

அரக்கன் அவ்வுரை கேட்டலும் அங்ஙனே
இரக்கம் உற்று இந்திரசித்தை ஏவினான்;
குரக்கு வேலையைக் கொன்றனன்; கொன்றபின்
தரைக்கு நாயகன் தம்பியை எய்தினான்.

பொ: இராவணன் அச்சொல்லைக் கேட்டவுடன் அவ்விடத்து இரக்கம் கொண்டு இந்திர சித்தினை அனுப்பினான். இந்திரசித்து வானர சேனையாகிய கடலைக் கொன்று குவித்தான்; கொன்ற பின்பு, இராமன் தம்பி-இலக்குவனை நெருங்கினான்.

கு: குரக்கு வேலை என்றது, வானரசேனையாகிய கடலை. தரைக்கு நாயகன் என்றது, இராமனை. இந்திரசித்து வானர சேனையைக் கொன்று குவித்து விட்டு இலக்குவனோடு போர் செய்ய அவனை அணுகினான் என்க. (231)

## இந்திரசித்து இலக்குவனொடு பொருது விட்டு விண்ணில் மறைதல்

1201 ஏர முங்க விலக்குவன் மேனிமேல்
கூர முங்க நெடுஞ்சரங் கூட்டினான்
தேர ழிந்து தசமுகன் திண்மகன்
போர ழிந்து விசும்பிடைப் போயினான்.

ஏர் அழுங்க இலக்குவன் மேனிமேல்
கூர் அழுங்க நெடுஞ்சரம் கூட்டினன்;
தேர்அழிந்து தசமுகன் திணமகன்
போர் அழிந்து விசும்பிடைப் போயினன்.

பொ: அழகு கெடுமாறு இலக்குவனுடைய மேனிமேல் கூர்மை மடியுமாறு நெடிய அம்புகளை எய்தான்; பின்பு, இராவணனுடைய திண்ணிய புதல்வன் இந்திரசித்து, தன் தேர் அழியப் பெற்றுப் போர்க்குத் தோற்று விண்ணிடை மறைந்தான்.

கு: ஏர்-அழகு. அழுங்குதல்-கெடுதல். இலக்குவன் மேனி வன்மையால் அதன்மீதுபட்ட அம்புகள் கூர்மழுங்குவன ஆயின. இந்திரசித்தின்தேர் அழிந்துவிடவே வேறுதேர் இன்றி விண்ணில் சென்று மறைந்தான் என்க. (232)

## நாகபாசத்தால் இலக்குவன் முதலியோரைக் கட்டுதல்

1202 இடந்தரு மிராகவற் கிளவ லைக்கவித்
தடம்புனை யெழுபது வெள்ளத் தானையை
அடங்கலு மரக்கன்மா மதலை யல்லிடை
விடந்தரு நாகபா சத்தின் வீக்கினன்.

இடம் தரும் இராகவற்கு இளவலைக் கவித்
தடம்புனை எழுபது வெள்ளத் தானையை-
அடங்கலும் அரக்கன் மாமதலை அல்லிடை
விடம் தரு நாக பாசத்தின் வீக்கினன்.

பொ: பெருமை பொருந்திய இராகவனுக்கு இளையவனாகிய இலக்குவனை - போர்க்களமாகிய இடத்தை அலங்கரித்துக் கொண்டிருந்த எழுபது வெள்ளம் வானர சேனையை-முழுவதையும் இந்திரசித்து இரவில் நஞ்சு தருகின்ற நாகபாசத்தால் கட்டி விட்டான்.

கு: இடம்-பெருமை. கவித்தானை என இயையும். தடம் என்றது போர்க்களமாகிய இடத்தை. வானர சேனையிருந்தது

போர்க்களத்திற்கு அலங்காரமாக இருந்தது என்பார், 'தடம்புனை எழுபது வெள்ளக் கவித்தாலை' என்றார். அடங்கலும் என்றது எஞ்சாமைப் பொருளது. வீக்குதல்-கட்டுதல். (233)

## நாகபாசத்தைக் கலுழன் வந்து அழித்தல்

1203 போயின னரக்கனும் புரண்டு வானரர்
கூயின ரிராகவற் கனலன் கூறிட
மேயினன் வருந்தினன் விகங்க ராசனும்
பாயின னுரகனைப் படுத்திப் போயினான்.

போயினன் அரக்கனும் புரண்டு வானரர்
கூயினர்; இராகவற்கு அனலன் கூறிட,
மேயினன் வருந்தினன் விகங்க ராசனும்
பாயினன் உரகனைப் படுத்திப் போயினான்.

பொ: (நாகபாசத்தால் வானரரைக் கட்டியபின்) இந்திரசித்துப் போயினான்; நாகபாசத்தால் கட்டுண்ட வானரர் தரையில் புரண்டு கூவினார்கள்; அவர் படுந்துயரை அனலன் இராமனுக்குச் சொல்ல, அவ்விராமன் அங்குச் சென்றான்; பார்த்து வருந்தினான்; அதனை அறிந்த பறவை அரசனாகிய கருடனும் தன் சிறகுகளைப் பரப்பிக் கொண்டு போர்க்களத்திற்கு வந்தான்; நாகபாசத்தை அழித்துவிட்டுப் போயினான்.

கு: விகங்கம்-பறவை. விகங்கராசன் என்றது கருடனை. பாயினன் என்றது சிறகுகளைப் பரப்பிக் கொண்டு போர்க்களத்தில் பறந்தமை புலப்படுத்தியவாறு. உரகன் என்றது இந்திரசித்து எய்து கட்டிய நாகபாசத்தை. படுத்தல் என்றது, அழித்தலை. (234)

## அரக்கர் படையை வானரப்படைக் கொல்லுதல்

1204 சென்றுதூ துவர்சொலத் தெசமு கத்தவன்
தன்றகு பெரும்படைத் தலைவற் கூயினான்.
நின்றிலர் சென்றனர் நிசிதர் தங்களைக்
கொன்றனர் வானரத் தலைவர் குன்றினால்.

சென்று தூதுவர் சொலத் தெசமுகத்தவன்
தன்தகு பெரும்படைத் தலைவற் கூயினன்;
நின்றிலர் சென்றனர்; நிசிதர் தங்களைக்
கொன்றனர் வானரத் தலைவர் குன்றினால்.

பொ: (கருடன் வந்து நாகபாசத்தை அழித்த செய்தியைத்) தூதுவர் சென்று சொல்ல இராவணன் தனது தகுதி மிக்க பெரும்படையின் தலைவர்களை அழைத்தான்; இராவணன் குறிப்பறிந்து அங்கு நில்லாமல் போர்க்களத்திற்குச் சென்றனர்; அவ்வாறு சென்ற இராக்கதர்களை வானரத்தலைவர்கள் குன்றுகளைக் கொண்டு எறிந்து கொன்றார்கள்.

கு: தசமுகன் என்பது, மோனை நோக்கித் தெசமுகன் எனத் திரிந்தது. இராவணன் கூவியதையறிந்து அவன் குறிப்புணர்ந்து அங்கு நில்லாது போர்க்களத்திற்குச் சென்றார்கள்; சென்ற அரக்கரைக் குன்றுகளைப் போட்டுக் கொன்றனர் வானரர்கள் என்க.
(235)

1205 உரையது கேட்டு மைந்தற்
குரைத்தலு மரக்கர் கோமான்
கரன்மகன் மகரக் கண்ணன்
செல்கெனக் காற்றி னம்பும்
வருணன்ற னம்புங் கூட்டி
மாயையா விட்டான் மாயன்
பொருசர மொன்றாற் சென்னி
போக்கினான் மாயை யோடும்.

உரையது கேட்டு மைந்தற்கு உரைத்தலு மரக்கர் கோமான்
கரன்மகன் மகரக் கண்ணன் செல்கெனக் காற்றி னம்பும்
வருணன்ற னம்புங் கூட்டி மாயையா விட்டான்மாயன்
பொருசர மொன்றாற் சென்னி போக்கினான் மாயையோடும்.

பொ: (சென்ற அரக்கர் தலைவர்கள் போரில் இறந்தார்கள் என்ற) சொல்லைக்கேட்டு வலிமைமிக்க இராவணனுக்குச் சொல்லு தலும், அவ்விராவணன் சரனுக்கு மகனாகிய மகரக்கண்ணன் போர்க்குச் செல்வானாக என்று ஏவ, அம்மகரக் கண்ணன் வாயுவின் அம்பும் வருணாத்திரமும் சேர்த்து மாயையாக விட்டான்; இராமன் போர் செய்யும் திறமிக்க ஓர் அம்பினால் அந்த மகரக் கண்ணனது மாயையோடு அவன் தலையைப் போக்கினான்.

கு: மைந்தன் என்றது இங்கு வலிமை மிக்க இராவணனை. உரைத்தவர் தூதுவர் என்க. காற்றின் அம்பு என்றது, வாயு வாத்திரத்தை. காற்றும் மழையும் கலந்து அடிபபதுபோலக் காற்றின் அம்பையும் வருணன் அம்பையும் மகரக் கண்ணன் மாயையால் விட்டதால் போர்க்களம் எங்கும் மழையும் காற்றும சேர்ந்து வீசியது. இராமன், இது மகரக் கண்ணனது மாயை என்பது உணர்ந்து அவன் மாயையும் சிரத்தையும் போக்குதற் குரிய ஒப்பற்ற ஓரம்பினை விடுத்தான் என்றவாறு. மாயன் என்றது திருமாலின் அவதாரமாகிய இராமனை. (236)

## இந்திரசித்து இலக்குவனோடு பொருதல்

1206 இற்றன ரரக்கர் தானை
யிருபது வெள்ளத் தோடும்
செற்றவா ளரக்கன் கேட்டான்
மைந்தனைச் சேறி யென்றான்
மற்றவன் றேரிலேறி வானரப்
படையைச் சீறி
எற்றுவ னினியென் றெண்ணி
யிலக்குவன் றன்னோ டேற்றான்.

இற்றனர் - அரக்கர்தானை இருபது வெள்ளத் தோடும்
செற்ற வாள் அரக்கன் கேட்டான்; மைந்தனைச் சேறி! என்றான்;
மற்றவன் தேரில் ஏறி வானரப் படையைச் சீறி
'எற்றுவன் இனி' என்று எண்ணி இலக்குவன் தன்னோடு ஏற்றான்.

பொ: இருபது வெள்ளம் சேனையொடும் அரக்கர் தலைவர்கள் அழிந்தார்கள், என்பதைப் பகைகொண்ட கொடிய அரக்கனாகிய இராவணன் கேள்விப்பட்டான்; உடனே தன் மைந்தன் இந்திர சித்தினைப் போர்க்குப் போகுமாறு ஏவினான்; இந்திரசித்துத் தன் தேரில் ஏறிக் கொண்டு இனி வானரசேனையைக் கோபித்துத் தாக்குவேன்; என்று எண்ணி இலக்குவனோடு போர் ஏற்றுக் கொண்டான்.

கு: இருபது வெள்ளத் தானையோடு அரக்கர் இற்றனர் என இயையும். வாள் அரக்கன் என்பதற்குச் சிவன் தந்த வாளை யேந்திய இராவணன் எனவும் பொருள் கூறலாம். சேறி-செல்லுதி. இலக்குவனோடு போரேற்றுக் கொண்டால் வானரப் படையைத் தாக்குவது தானே அமையும் என்க. (237)

## இலக்குவன் இந்திரசித்தின்மேல் பிரமாத்திரம் விட எண்ணுதல்

1207 அறுபது வெள்ளத்தானை யாயிரந் தேரினோடும்
வெறுவது செய்யக் கண்டு
மயன்படை விடுவே னென்னும்
உறுவலி யரக்கன் வானத்
தொளிந்ததை யோரான் தம்பி
எறிபடை பூசை செய்வா
னெழுந்தன னிராம னிப்பால்.

அறுபது வெள்ளத்தானை ஆயிரம் தேரினோடும்
வெறுவது செய்யக் கண்டும் அயன்படை விடுவேன் என்னும்
உறுவலி அரக்கன் வானத்து ஒளிந்ததை ஓரான் தம்பி
எறிபடை பூசை செய்வான் எழுந்தனன் இராமன் இப்பால்.

பொ: அறுபது வெள்ளம் அரக்கர் சேனை யோடும் ஆயிரம் தேரினோடும் சேர்ந்து வந்து யாரும் அஞ்சத் தக்கபடி போர் செய்யக் கண்டும் அவன்மேல் பிரமாத்திரத்தை விடுவேன்

என்கின்ற தம்பி இலக்குவன், மிக்க வலிமையுடைய இந்திரசித்து வானத்தில் ஒளிந்துகொண்டதை உணராத வனுனன்; பகைவர்மேல் எறியத்தக்க படைக்கலன்களுக்குப் பூசைசெய்வதற்காகப் புறப்பட்டான்.

கு: வெருவுவது எனற்பாலது எதுகை நோக்கி வெறுவது என மருவியது; அச்சங்கொள்ளத்தக்க செயல் என்பது பொருள். அயன்படை விடுவேன் என்னும் தம்பி அரக்கன் வானத்து ஒளிந்ததை ஓரான் ஆனன் என ஆக்கச் சொல் வருவித்து முடிக்க. இலக்குவன் பிரமாத்திரம் எய்யும் குறிப்பினை நன்கு உணர்ந்த இந்திரசித்து திடும் என வானத்தில் எழுந்து மறைந்துகொண்டான். அதனை இலக்குவன் அறியாதவன் ஆனன் என்க. அந்த நேரத்தில் இராமனும் ஆயுதங்களுக்குப் பூசனை செய்யத் தனியிடத்திற்குச் செல்ல எழுந்தான் என்க. (238)

## மகோதரனின் போர்

1208 உரைத்தன னிராவணி யிராவணற்
குற்றவா றெல்லாம்
வரைப்புய மகோதரன் வருகவென்
றேவினன் வலத்தால்
குரைத் தெழும் வானரக்
குழுவைவென் றிலக்குவன் சரத்தால்
பொருக்கென வெழுந்தன னந்தர
விசும்பிடைப் போனுன்.

உரைத்தனன் இராவணி இராவணற்கு உற்றவாறு எல்லாம்;
வரைப்புய மகோதரன் வருகஎன்று ஏவினன்; வலத்தால்
குரைத்துஎழும் வானரக் குழுவை வென்று இலக்குவன் சரத்தால்
பொருக்கென எழுந்தனன் அந்தர விசும்பிடைப் போனுன்.

பொ: இந்திரசித்து (விண்ணில் மறைந்து இலங்கைக்குச் சென்று) இராவணனுக்குப் போர்க்களத்தில் நிகழ்ந்த எல்லாவற்றையும் சொன்னுன்; அது கேட்ட இராவணன் மலைபோன்ற

தோள்களையுடைய மகோதரனை வருக என்றுஅழைத்து அவனைப் போர் செய்யுமாறு ஏவினான்; அம் மகோதரன் தன் வலிமையால் ஆரவாரித்து எழுகின்ற வானரக் கூட்டத்தையெல்லாம் வென்று பின்பு இலக்குவன் எய்த அம்பினால் அஞ்சி விரைந்து எழுந்து விண்ணிடத்துப் போனான்.

கு: இராவணி-இந்திரசித்து. இராவணனுக்கு மகன் என்னும் பொருளில் வந்த தத்திதாந்தப் பெயர். இராவணி இராவணற்கு உற்றவாறெலாம் உரைத்தனன் என இயையும். மகோதரனை வரவழைத்துப் போர்க்களத்துப் போர் செய்ய அனுப்பினான் என்க. இந்திரசித்து விண்ணிடை மறைந்ததை மறக்குமாறு வானர சேனையோடு மகோதரன் போர் செய்து வானரங்களையெல்லாம் கொன்று வெற்றியுற்றான். இலக்குவன் அம்புக்கு இலக்காவோம் என்ற எண்ணத்தால் மகோதரன் விண்ணிடைப் போனான் என்க. குரைத்தல்-ஆரவாரித்தல். அந்தர விசும்பு என்பது ஒருபொருட் பன்மொழி; விண் என்பதே பொருள். பொருக்கு என்பது விரைவுக்குறிப்புணர்த்தும் உரிச்சொல். (239)

## இந்திரசித்து பிரமாத்திரத்தை இலக்குவன்மேல் விடுதல்

1209 முட்டினன் மகோதரன் முனிவரு மமரருமாகச்
சிட்டனீ தென்னைகொ லென்றுளந்
திகைத்தன னின்றான்
விட்டன னயன்படை யிராவணி
யிலக்குவன் மீதே
பட்டனன் பட்டவா றிராவணற்
குவகையிற் பகர்ந்தான்.

**முட்டினன் மகோதரன் முனிவரும் அமரரும் ஆகச்**
**சிட்டன் 'ஈது என்னைகொல்?' என்று உளம் திகைத்தனன் நின்றான்;**
**விட்டனன் அயன்படை இராவணி, இலக்குவன் மீதே**
**பட்டனன் பட்டவாறு இராவணற்கு உவகையின் பகர்ந்தான்.**

போ: மகோதரன், (அரக்கர்களையெல்லாம்) முனிவர்களும் தேவர்களுமாக மாயையால் செய்துகொண்டு போரில் எதிர்ந் தான்; சிறந்தவனாகிய இலக்குவன் அவர்களைக் கண்டு, 'இவர்கள் நம்மோடு பகைக்கக் காரணம் என்னை கொல்?' என்று மனம் திகைத்து நின்றான்; (அந்தச் சமயம் பார்த்து) இந்திரசித்து இலக்குவன்மீது பிரமாத்திரத்தை விட்டான்; இலக்குவன் இறந்துபட்டான்; அவன் பட்டதை இராவணனுக்கு இந்திரசித்து மகிழ்ச்சியோடு சொன்னான்.

கு: முட்டுதல்-எதிர்தல். அரக்கர்களை முனிவரும் தேவருமாக மாயையால் செய்துகொண்டு மகோதரன் முட்டினன் என்க. இட்டன்-சிறந்தவனாகிய இலக்குவன் முனிவர்கட்கும் தேவர்கட்கும் உதவிசெய்ய அரக்கரோடு நடக்கும் போரில் அம் முனிவரும் தேவரும் அரக்கர்க்குத் துணையாகச் சேர்ந்து எதிர்த்தல் இலக்குவனுக்கு வியப்பைத் தருதலின் 'ஈதென்னை கொல் என்று உளம் திகைத்தான்' என்க. திகைத்து நின்ற அமையம் பார்த்து இலக்குவன்மீது அயன்படையை விடுத்துக் கொன்றான். இந்திர சித்து. இராவணனுக்கு தன் வெற்றியை மகிழ்ச்சியொடு சொன்னான் என்க. (240)

## அனுமன் கொணர்ந்த மருந்து மலையால் இலக்குவன் முதலியோர் உய்தல்

1210 ஏய்ந்தெழி லிராகவ னிலக்குவன்
பாடுகண் டேங்கிச்
சாய்ந்தனன் சாம்புவன் மாருதி
தருதியா லென்னப்
பாய்ந்தனன் மருந்துகொண் டமரிடை
யயனது படையால்
ஓய்ந்த யாவரு முயிர்த்தனர்
தூதர்போ யுரைத்தார்.

ஏய்ந்தெழில் இராகவன் இலக்குவன் பாடுகண்டு ஏங்கிச்
சாய்ந்தனன்; சாம்புவன் மாருதி! தருதியால் என்னப்,
பாய்ந்தனன், மருந்துகொண்டு; அமரிடை அயனது படையால்
ஓய்ந்த யாவரும் உயிர்த்தனர்; தூதர்போய் உரைத்தார்.

பொ: இயல்பாகப் பொருந்திய பேரெழிலையுடைய இராமன் இலக்குவன் இறந்துபட்டது கண்டு வருந்தித் தரையில் வீழ்ந்தான்; சாம்புவன் அனுமனைப் பார்த்து 'மாருதி! மருந்தினைத் தருவாயாக' என்று ஏவ, அனுமன் அவன் சொன்ன நெறியில் சென்று மருந்தினை மலையோடு எடுத்துக் கொண்டு பாய்ந்து வந்தான்; போர்க்களத்தில் பிரமாத்திரத்தினால் உயிர்நீங்கிய எல்லோரும் உயிர் பெற்று எழுந்தனர். பிரமாத்திரத்தால் இறந்தவர் யாவரும் உயிர்பெற்ற செய்தியை இராவணனுக்குத் தூதர் போய்ச் சொன்னார்கள்.

கு: ஏய்ந்த எழில் எனற்பாலது அகரம் தொக்கு 'ஏய்ந்தெழில்' எனவாயது. பாடு-இறப்பு. ஏங்குதல் - வருந்துதல். மேருமலைக்கு அப்பால் உள்ள மருத்து மலையில் உள்ள மருந்தினைக் கொணர்க என்பதே சாம்புவன் கட்டளை; சுருக்கம் ஆதலின் இங்ஙனம் தொகுத்துக் கூறியவாறு. ஓய்தல் - இறத்தல். உயிர்த்தல் - உயிர்பெறல். இராவணனுக்கு உரைத்தார் எனச் சொல்லெச்சமாகக் கொண்டு உரைக்க. (241)

## மாயா சீதை காட்டி இந்திரசித்து நிகும்பலை புகுதல்

1211 யாவ திங்குநாஞ் செய்வதென்
றியம்பலு மைந்தன்
ஆவ துண்டென வரக்கனு
மதுசெயென் றடைந்தான்
தேவி சீதையாச் சமைத்தபின்
னனுமன் முன் சிதைத்துப்
போவ னனயோத் தியிலென
நிகும்பலை புக்கான்.

யாவது இங்கு நாம் செய்வது? என்று இயம்பவும் மைந்தன்,
ஆவது உண்டு என அரக்கனும் அது செய் என்று அடைந்தான்:
தேவி சீதையாச் சமைத்தபின் அனுமன் முன் சிதைத்துப்
'போவன் நான் அயோத்தியில்' என, நிகும்பலை புக்கான்.

பொ: (இராவணன்) இவ்விடத்தில் நாம் செய்வது யாது? என்று துன்புற்றுச் சொல்லுதலும், அவன் மைந்தனாகிய இந்திர-சித்து, 'நாம் செய்வது உண்டு' என்றுதன் கருத்தினைக் கூற, இராவணனும் 'அதைச்செய்க' என்று சொல்லி அமைதியடைந் தான்: பின்பு தேவியாகிய சீதையாக ஓரரக்கனை உருமாற்றிச் செய்து கொண்டு மருத்து மலையை வைத்துவிட்டு மீள்கின்ற அனுமன் முன்பு அந்த மாயச் சீதையை வெட்டிவிட்டு நான் அயோத்திக்குப் போவேன் (அவர்களையும் கொல்ல) என்று போக்குக் காட்டிவிட்டு நிகும்பலையில் வேள்வி செய்யப் புகுந்தான்.

கு: தேவியாகிய சீதை என்க. இந்திரசித்து தன் மாயையால் ஓரரக்கனைச் சீதையாகச் செய்துகொண்டு மீள்கின்ற அனுமன் முன் வந்து அம் மாயச்சீதையைக் கொன்று விட்டு அயோத்திக்குப் போவதாகச் சொல்லி நிகும்பலையில் வேள்வி செய்ய புகுந்தான் என்றவாறு. (242)

1212 ஆய வாறெலா மனுமன் வந்
திராகவற் கறைய
மாயையே யென வீடணன்
வலிக்கின்ற தென்றான்
ஏய காரியஞ் செய்திரென்
றெழுந்தன னெம்மான்
போயோர் மாயையால் வீடண
னிலங்கையிற் புக்கான்.

ஆயவாறு எலாம் அனுமன் வந்து இராகவற்கு அறைய,
மாயையே என வீடணன் வலிக்கின்றது என்றான்;
ஏய காரியம் செய்திர் என்று எழுந்தனன் எம்மான்;
போய் ஓர் மாயையால் வீடணன் இலங்கையில் புக்கான்.

பொ: நிகழ்ந்தவற்றையெல்லாம் அனுமன் வந்து இராமனுக்குச் சொல்ல, வீடணன், இது மாயையே என என் மனம் துணிகின்றது என்றான்; வீடணன் ஏவியதைச் செய்யுங்கள் என்று இராமன் அமைதிபெற்று எழுந்தான்; வீடணன் ஓர் மாயையால் வண்டாக உருமாறி இலங்கையில் புகுந்தான்.

கு: ஆயவாறு - நிகழ்ந்தவாறு. வலிக்கின்றது என்றது, துணிகின்றது என்னெஞ்சம் என்றவாறு. எம்மான் என்றது இராமனை. வீடணன் மாயைகள் தெரிந்தவனாகலின் அவன் ஏவியதைச் செய்வதே நன்மை தரும் என்ற எண்ணத்தால் 'ஏய காரியம் செய்திர்' என்று எழுந்தான் இராமன். ஓர் மாயையால் என்றது, வண்டாக வீடணன் தன்னை உருமாற்றிக் கொண்டதை. (243)

## இலக்குவன் நிகும்பலையையழித்து இந்திரசித்தோடு பொருதல்

1213 ஆன மாயைகண் டறிந்துவந்
தரக்கர்கோ னுரைப்ப
வான ரேசனு மிளவலும் வடதரு நீழல்
சேனை சூழ்தர நிகும்பலை
வேள்வியைச் சிதைத்தே
போன போதெதி ரிந்திர
சித்தமர் புரிந்தான்.

**ஆன மாயை கண்டு அறிந்து வந்து அரக்கர்கோன் உரைப்ப**
**வான ரேசனும் இளவலும் வடதரு நீழல்**
**சேனை சூழ்தர நிகும்பலை வேள்வியைச் சிதைத்தே**
**போனபோது எதிர் இந்திரசித்து அமர் புரிந்தான்.**

பொ: சீதையைக் கொன்றதும் அயோத்திக்குப் போனதும் ஆய நிகழ்ச்சிகள் மாயையே யென்பதனைச் சீதையை அசோக வனத்தில் கண்டமையால் நிகும்பலை வேள்வியால் அறிந்து வந்து வீடணன் சொல்ல, அனுமன் முதலான வானரர்களும்

இலக்குவனும் ஆலமரநிழலில் அரக்கர் சேனை சூழ்ந்திருக்கச் செய்யும் நிகும்பலை வேள்வியைச் சிதைத்துப் போனபோது இந்திரசித்து எதிர்நின்று போர் செய்தான்.

கு: ஆன என்றது, சீதையைக் கொன்றதும் அயோத்திக்குப் போனதும் ஆன நிகழ்ச்சிகளை. கண்டு என்றது அசோக வனத்தில் சீதையை உயிரோடிருக்கக் கண்டதையும் இந்திரசித்து நிகும்பலையில் வேள்வி செய்யக் கண்டதையும் குறித்தவாறு. வானரேசன் என்றது, இங்கு அனுமனை. வடதரு-ஆலமரம். நிகும்பலை என்பது ஆலமரச் செறிவினை. அங்குச்செய்யும் வேள்வி நிகும்பலை வேள்வி எனப்பட்டது. (244)

## இலக்குவன் இந்திரசித்தின் தலையைக் கொய்தல்

1214 கறுத்தி ராவணி விடுங்கணை
யெலாம்விடு கணையால்
இறுத்தொ ரம்பினாற் கையுடன்
வில்விழ வெய்தான்
குறித்தொர் சூலத்தா லிலக்குவ
னுயிர்கொளக் கொதித்தான்
அறுத்தொ ரம்பினா லவன்றலை
கொண்டன னகன்றான்.

கறுத்து இராவணி விடுங்கணையெலாம் விடுகணையால்
இறுத்து ஓர் அம்பினால் கையுடன் வில்விழ எய்தான்;
குறித்து ஓர் சூலத்தால் இலக்குவன் உயிர்கொளக் கொதித்தான்;
அறுத்து ஓர் அம்பினால் அவன்தலை கொண்டனன் அகன்றான்.

பொ: இந்திரசித்து கோபித்துவிடும் அம்புகளையெல்லாம் இலக்குவன் தான் விடும் அம்புகளால் சிதைத்து விட்டு, ஓர் அம்பினால் இந்திரசித்தின் கையுடன் அக்கையிலிருந்த வில்லும் விழுமாறு எய்தான்; இந்திரசித்து தான் குறித்த சூலத்தினால் இலக்குவனது உயிரைக் கொள்ளக் கொதித்து விட்டான்; அதற்குள் ஓர் அம்பினால் அவ்விந்திரசித்தின் தலையையறுத்துக் கைக்கொண்டு அவ்விடத்தைவிட்டுப் போனான் இலக்குவன்.

கு: கறுத்தல்-கோபித்தல். இறுத்தல்-அழித்தல். இராமனுக்குக் காட்ட வேண்டி அறுத்த இந்திரசித்தின் தலையைக் கைக்கொண்டு அகன்றான் இலக்குவன் என்க. ஓர் அம்பினால் இந்திரசித்தின் கையும் வில்லும் விழவும் மற்றோர் அம்பினால் தலைவிழவும் எய்தான் என்க. (245)

## இராவணன் சோகமும் மூல பலம் வருகையும்

1215 அடுத்து ரைத்தனர் தூதுவ
ரரக்கர்கோன் களம்புக்
கெடுத்தி ரங்கினன் மதலைதன்
றலையிலா யாக்கை
படுத்த னன்றயி லத்திடை
மூலமாப் படையும்
அடுத்து வந்தடி பணிந்தன
ராயிர வெள்ளம்.

அடுத்து உரைத்தனர் தூதுவர் அரக்கர்கோன் களம் புக்கு
எடுத்து இரங்கினன், மதலைதன் தலையிலா யாக்கை;
படுத்தனன் தயிலத்திடை; மூலமாப்படையும்
அடுத்து வந்து அடி பணிந்தனர் ஆயிர வெள்ளம்.

பொ: இந்திரசித்தின் இறப்பினைப் பற்றித் தூதுவர் அடுத்து வந்து சொன்னார்கள்; கேட்ட இராவணன் போர்க்களம் புகுந்து மகனுடைய தலையிலாத உடம்பினை எடுத்து வைத்துக் கொண்டு அழுதான்; பின்பு அவ்வுடம்பைத் தயிலத்தில் இட்டான். இராவணன் ஏவியபடி மூல பலப் படை ஆயிரவெள்ளமும் நெருங்கி வந்து அடிபணிந்தனர்.

கு: இரங்குதல்-அழுதல். உயிர்நீங்கிய உடம்பு கெடாமலிருக்கத் தயிலத்தில் இடுவது வழக்கம். தயிலமாட்டுப்படலம் இங்கு நினையத்தகும். மதலைதன் தலையிலாயாக்கை யெடுத்திரங்கினன் என இயையும். மூலமாப்படை ஆயிரவெள்ளமும் என இயையும். உம்மை பிரித்துக் காட்டப்பட்டது. ஆயிரவெள்ளம் அடிபணிந்தனர் என்பது திணைவழுவமைதியாகக் கொள்க. (246)

## மூலத்தானை கண்டு வானர சேனை இரிந்தோடுதல்

1216 மூலத் தானையை யிராமன்மேல் முடுக்கித்தான் குரக்குக்
கூலத் தானைமேற் சென்றன னிராவணக் கொடியோன்
மூலத் தானைசென் றிராமனை முடுக்கலுங் குரக்குக்
கூலத் தானைபோ யிரிந்தது குரைகடற் கப்பால்.

மூலத்தானையை இராமன்மேல் முடுக்கித் தான் குரக்குக்
கூலத்தானைமேல் சென்றனன், இராவணக் கொடியோன்;
மூலத்தானை சென்று இராமனை முடுக்கலும் குரக்குக்
கூலத்தானை போய் இரிந்தது குரைகடற்கு அப்பால்.

பொ: மூலபலப்படையை இராமன்மேல் செல்லுமாறு முடுக்கிவிட்டு, இராவணனாகிய கொடியோன், தான் வானரங்களாகிய வாலையுடைய சேனைமேல் சென்றான்; மூலச்சேனை சென்று இராமனை நெருக்கி விரைந்து போர் செய்தலும், வாலினையுடைய குரங்குச் சேனை போய் ஒலிக்கின்ற கடலுக்கு அப்பால் இரிந்து ஓடியது.

கு: இராவணக் கொடியோன் என நூலாசிரியர் பழிக்கின்றார். அவன் கொடுமை நினைந்து, இராமன்மேல் மூலத்தானையை முடுக்கிவிட்டுத் தான் குரக்குக் கூலத்தானை மேற் சென்றனன் என்க. கூலம் - வால். இராமனை முடுக்குதலாவது போர் செய்ய விரைவுப் படுத்தல். அச்சத்தின் மிகுதியால் வானர சேனை கடலுக்கு அப்பால் இரிந்தோடியது. இரிதல் - தோற்றோடுதல். (247)

## மூலப்படையை இராமன் ஏழரை நாழிகையில் அழித்தல்

1217 வேர்த்தி ரிந்தன கவியெலா
மங்கதன் மீட்டான்
காத்தி நீயெனத் தம்பியைக்
காவலா விடுத்தே
ஆர்த்த வெம்படை யாயிர
வெள்ளமு மடியக்
கோத்த வம்பினு லேழரை
நாழிகை குறைத்தான்

வேர்த்து இரிந்தன கவி எலாம் அங்கதன் மீட்டான்;
காத்திநீ எனத் தம்பியைக் காவலா விடுத்தே
ஆர்த்த வெம்படை ஆயிர வெள்ளமும் மடியக்
கோத்த அம்பினுல் ஏழரைநாழிகை குறைத்தான்.

பொ: மூலப்படையைக் கண்ட அச்சத்தால் வேர்த்து ஓடிய வானரங்களை யெல்லாம் அங்கதன் ஓடாமல் மீட்டான்; இராமன், 'வானரப் படையை நீ காப்பாயாக' என்று தம்பி இலக்குவனைக் காவலாக விடுத்துவிட்டு, ஆரவாரித்த ஆயிர வெள்ளம் கொடிய சேனையும் மடியுமாறு வில்லில் கோத்து விட்ட அம்பினுல் ஏழரை நாழிகை நேரத்தில் அழித்தான்.

கு: காத்திநீ என்பது இகரவீற்று ஏவல். ஆயிர வெள்ள வெம்படையும் என இயையும். அம்பினுல் ஏழரை நாழிகையில் குறைத்தான் என்க. குறைத்தல் - அழித்தல்.

1218 அத்த லைச்சிலை யிளவலோ
டரக்கர்கோ னடர்த்தான்
வித்தி னன்சரம் பலப்பல
விளவலும் விட்டான்

எத்தி னன்னெடு மோகமாப்
படைதொடுத் தெய்தான்
அத்த னச்சர மாழியான்
சரத்தினு லறுத்தான்.

அத்தலைச் சிலை இளவலோடு அரக்கர்கோன் அடர்த்தான்
வித்தினன் சரம் பலப்பல; இளவலும் விட்டான்;
எத்தினன் நெடுமோகமாப் படை தொடுத்து எய்தான்;
அத்தன் அச்சரம் ஆழியான் சரத்தினுல் அறுத்தான்.

பொ: அவ்விடத்தில் வில்லேந்திய இளவல் இலக்குவனோடு இராவணன் நெருங்கிப் போர் செய்தான்; இராவணன் அம்புகள் பலப்பலவாக இலக்குவன் உடம்பில் அழுத்தினன்; இலக்குவனும் அவ்வாறே இராவணன்மேல் பலப்பல அம்புகளை விட்டான்; வஞ்சகனுகிய இராவணன் நெடிய மோகனுத்திரத்தை வில்லில் தொடுத்து விடுத்தான்; இலக்குவன் அந்த மோகனுத்திரத்தை நாராயணன் கணையால் அழித்தான்.

கு: தலை - இடம். வித்துதல் என்பது, நிலத்தில் விதைகளை அழுத்துவதுபோல உடம்பில் பல அம்புகளை அழுத்து தலையுணர்த்தியது. எத்தினன் என்றது வஞ்சகனுகிய இராவணனை. எத்து - வஞ்சகம். அத்தன் என்றது இங்கு இலக்குவனை யுணர்த்தியது. (249)

## இராவணன் வேலினை ஏற்ற இலக்குவன் மருத்து மலையால் உய்தல்

1219 அறிந்து கூறினன் வீடண னுமென வயில்வேல்
எறிந்த னன்னவன் மேனியி லிக்குவ னேற்றுன்
பிறிந்து போயின னிராவணன் மாருதி
பெயர்த்தும்
செறிந்த மாமருந் தழைத்தலி னுயிர்பெற்றுன்
சேயோன்.

அறிந்து கூறினன் வீடணனும் என அயில்வேல்
எறிந்தனன் அவன் மேனியில்; இலக்குவன் ஏற்ருன்;
பிறிந்து போயினன் இராவணன்; மாருதி பெயர்த்தும்
செறிந்த மாமருந்து அழைத்தலின் உயிர் பெற்ருன் சேயோன்.

பொ: மோகனுத்திற்கு மாருக நாராணுத்திரத்தை விடுமாறு அறிந்து கூறினவன் வீடணனே ஆவன் என்பது உணர்ந்து கூரிய வேலினை அவ்வீடணன் மேனிமேல் எறிந்தான்; அவ்வேலினை இலக்குவன் மார்பில் ஏற்றுக் கொண்டான்; பின்பு இராவணன் அவ்விடத்தை விடுத்துப் பிரிந்துபோனுன்; அனுமன் மீண்டும் ஆற்றல் சிறந்த மருந்தினைக் கொணர்தலின் இலக்குவன் உயிர் பெற்று எழுந்தான்.

கு: இலக்குவனேடு வீடணனும் இருந்தானுகலின் இராவணன் விட்ட மோகனக் கணைக்கு நாராயணன் கணை விடுதலே தக்கது என்று கூறினவன் வீடணனே. ஆகலின் அவ்வீடணன் மேல் தன் வேலினை விடுத்தான் இராவணன் என்க. வீடணன்மேல் வரும் வேலினை இலக்குவன் இடை நுழைந்து தன் மார்பகத்தில் ஏற்று உயிர் துறந்தான். அனுமன் மீண்டும் கொணர்ந்த மருத்து மலையால் போனவுயிர் மீண்டது இலக்குவனுக்கு. சேயோன் என்றது, இலக்குவனை. இராமனுக்குச் சேய்போன்றவன் என்ற கருத்தால் அப்பெயரால் கூறினுர் போலும். (250)

## இலக்குவன் இராமனைக் கூடுதலும் இராவணன் களம் புகுதலும்

1220 சென்றுகூடின னிராமனைத்
தெசமுகத் தவனும்
வென்றி மூலமாத் தானைக்கு
விருந்திட வமைந்தான்
பொன்றி னுரவ னென்பது
தூதுவர் புகலக்
கன்றி னுன்களம் புக்கனன்
கவியெலா மவிய.

சென்று கூடினன் இராமனைத் தெசமுகத்தவனும்
வென்றி மூலமாத் தானைக்கு விருந்திட அமைந்தான்;
பொன்றினூர் அவர் என்பது தூதுவர் புகலக்,
கன்றினன் களம் புக்கனன் கவியெலாம் அவிய.

பொ: இலக்குவன் உயிர்பெற்று எழுந்து இராமனைச் சென்று சேர்ந்தான்; இராவணனும் வெற்றி பெற்று வரும் மூலப்படைக்கு விருந்திட ஏற்பாடு செய்யலானான். தூதுவர் வந்து அவர்கள் இறந்தார்கள் என்பதைச் சொல்லக் கோபம் கொண்ட இராவணன், போர்க்களத்தில் உள்ள வானரங்கள் எல்லாம் அழியுமாறு புகுந்தான்.

கு: மூலபலப்படை வெற்றி பெற்றுவரும் என்ற துணிவு கொண்ட இராவணன் அவர்களுக்கு விருந்தளிக்க ஏற்பாடு செய்யலானான். அவர்கள் அனைவரும் இராமன் அம்பால் இறந்தமை தூதுவர் சொல்லக் கேட்டவுடன் இராவணன் வெகுண்டு போர்க்களம் புகுந்தான் என்க. கவி-குரங்கு. போர்க்களம் புகுந்த இராவணன் வானரப்படையை யழிப்பது உறுதியாதலின் 'கவியெலாம் அவியப் புக்கனன்' என்றார். (251)

## மகோதரன் வீழ்ச்சி

1221 பூதல மளித்தோன் கூறப்
புரந்தரன் கொடுத்த திண்டேர்
மாதலி கொணர வேறி
மகிழ்ந்தன னிராமனென்று
காதின வரக்கர் சேனை
கவிப்பெருஞ் சேனையோடு
மோதரன் றன்னை யாவி
குறைத்தனன் பகழி யொன்றால்.

'பூதலம் அளித்தோன் கூறப் புரந்தரன் கொடுத்த திண்தேர்
மாதலி கொணர ஏறி மகிழ்ந்தனன் இராமன்' என்று
காதின அரக்கர் சேனை கவிப்பெரும் சேனையோடும்
மோதரன் தன்னை ஆவி குறைத்தனன் பகழி ஒன்றால்.

பொ: 'பூவுலகத்தைப் படைத்த பிரமன் சொல்ல இந்திரன் கொடுத்தனுப்பிய திண்ணிய தேரை மாதலி என்ற இந்தரன் பாகன் கொணர அதன்மேல் ஏறிக்கொண்டு மகிழ்ந்தனன் இராமன்' என்று உணர்ந்து அரக்கர் சேனை வானர சேனையோடு போர் செய்தது; மகோதரன் என்பவனை இராமன் அம்பு ஒன்றினால் உயிபொன்றச் செய்தான்.

கு: காதுதல்-போர் செய்தல். மகோதரன் என்ற சொல்லின் மருவாக 'மோதரன்' வந்துளது. ஆவிகுறைத்தல் என்பது உயிரைப் போக்குதல் என்னும் பொருளது. குறைத்தற்கு எழுவாய் இராமன். (252)

## இராவணன் வதை

1222 அந்தரத் தரக்கன் போக
வமலன்றே ரணுக விட்டான்
மந்திர மாயை யெய்தான்
ஞானத்தான் வள்ளல் மாய்த்தான்
உந்தின சூல மொன்றை
யுகுத்தன னுங்காரத்தால்
கந்தரத் தலைகள்பத்துங் கரங்களுங்
கணையாற் கொய்தான்.

அந்தரத்து அரக்கன் போக அமலன் தேர் அணுகவிட்டான்;
மந்திர மாயை எய்தான்; ஞானத்தால் வள்ளல் மாய்த்தான்;
உந்தின சூலம் ஒன்றை உகுத்தனன் உங்காரத்தால்
கந்தரத் தலைகள்பத்தும் கரங்களும் கணையால் கொய்தான்.

பொ: இராவணன் விண்ணில் போக இராமன் தன் தேரினை அவன் போன வழியில் நெருங்குமாறுவிட்டான்; இராவணன், மந்திரத்தால் மாயைப் பகழியை எய்தான்; வள்ளலாகிய இராமன் ஞானக்கணையால் அம்மாயாத்திரத்தை மாய்த்துவிட்டான்; இராவணன் செலுத்திய சூலத்தினை இராமன்

உங்காரத்தால் சிந்தச் செய்தான்; பின்பு கழுத்தில் மேலுள்ள தலைகள் பத்தினையும் கைகள் இருபதினையும் ஒருகணையால் கொய்து தள்ளினான்.

கு: பூமியில் போர்க்களத்தில் சென்று கொண்டிருந்த தேரினை இராவணன் விண்ணில் செலுத்தினானாக, இராமனும் தன்தேரினை விண்ணிற் செலுத்தி நெருங்கினான் என்க. அமலன் என்றது தூயவனாகிய இராமனை. மாயை என்றது மாயை எனும்அம்பினை. உந்துதல்-செலுத்துதல். உங்காரத்தால் என்றது கணையொன்றும் எய்யாமல் உம் என்று அச்சுறுத்தும் ஒலியினாலேயே இராவணன் எய்த சூலத்தை அழித்தான் என்றவாறு. 'வெகுளிப் பேருங்காரத்தானுக்கது பன்னூறுதிராகி' (இராவணன் வதைப். 132) என்றது காண்க. உகுத்தல்-தரையில் சிந்தச் செய்தல். கந்தரம்-கழுத்து. (253)

1223 கிளைத்தன சிரமுந் தோளுங்
கேடிலா னெய்ய வெய்ய
விளைத்ததோர் வரமுண்டென்றே
விரிஞ்சன்மாப் படையை விட்டான்
உளைத்தவன் றலத்து வீழ்ந்தா
னுடன்பிறப் பென்னு மன்பால்
இளைத்துவந் தடியில் வீழ்ந்தா
னிராவணற் கிளைய காளை.

கிளைத்தன சிரமும் தோளும் கேடு இலான் எய்ய எய்ய;
விளைத்தது ஓர் வரம் உண்டு என்று விரிஞ்சன் மாப்படையை விட்டான்;
உளைத்து அவன் தலத்து வீழ்ந்தான் உடன் பிறப்பு என்னும் அன்பால்
இளைத்து வந்து அடியில் வீழ்ந்தான், இராவணற்கு இளைய காளை

பொ: கேடு இல்லாதவனாகிய இராமன் அம்புகளைத் தொடுத்து விட விட, இராவணன் தலைகளும் தோள்களும் கிளைத்துக் கொண்டேயிருந்தன; இந்த அற்புதத்தை விளைத்தற்குக்

காரணமானதொருவரம் உண்டு என்று உணர்ந்து இராமன் பிரமாத்திரத்தை விட்டான். இராவணன் வருந்தித் தரையில் வீழ்ந்தான்; இராவணனுக்கு இளைய காளையாகிய வீடணன் உடன் பிறப்பு என்னும் பாசத்தால் வருந்தி இளைத்து வந்து இராமன் திருவடியில் வீழ்ந்து வணங்கினன்.

கு: தலைகளையும் கைகளையும் அம்புகளால் கொய்யக் கொய்ய மீண்டும் முளைத்துக் கொண்டேயிருந்தன; அந்நிலையைக் கண்ட இராமன் வரங்கட்கு அப்பாற் பட்டதாகிய பிரமாத் திரத்தை விடுத்து அவன் தலைகளையும் கைகளையும் கொய்யவே வருந்தித் தரையில் இறந்து வீழ்ந்தான். இராவணனோடு பகைத்து வந்து ராமனோடு கூடிய வீடணனுக்கு அண்ணன் இறந்தபோது உடன்பிறப்புப் பாசத்தால் வருந்திவந்து இராமலடியில் வீழ்ந்தான் என்றவாறு. (254)

## இராவணனுக்கு வீடணன் ஈமக்கடன் செய்தலும் சீதைபால் அனுமனை அனுப்புதலும்

1224 மயன்மகள் வந்து மாய்ந்தாள்
வருகென நிருதர் கூவிப்
புயவலி யிராம வேந்தைப்
போற்றுதி ரெனவி ராமன்
இயமலி யீமஞ் சேர்த்தி
யென்றலு மரக்கன் சேர்த்தான்
செயமலி யனுமன் றன்னைச்
சீதைபாற் சேறி யென்றான்.

மயன்மகள் வந்து மாய்ந்தாள்; வருகென நிருதர் கூவிப் புயவலி இராம வேந்தைப் போற்றுதிர் என இராமன் இயம்மலி ஈமம் சேர்த்தி! என்றலும் அரக்கன் சேர்த்தான்; செயம்மலி அனுமன் தன்னைச் சீதைபால் சேறி என்றான்.

பொ: மயன் மகளாகிய மண்டோதரி வந்து கணவன் உடம்பைத்தழுவி உயிர் நீத்தாள்; உயிருடன் உள்ள அரக்கர்கள் வருக என்று ஒருவர் ஒருவரை அழைத்துக்கொண்டு தோள் வலியையுடைய இராமனாகிய வேந்தனைப் போற்றுங்கள் என்று சொல்ல. இராமன் இராவணன், மண்டோதரி இவர்கள் உடம்பைச் சாப்பறை மிக்க ஈமத்தில் சேர்த்து ஈமக்கடன் செய்க என்று வீடணனை நோக்கிக் கூறுதலும் அவன் அவ்வாறே சேர்த்து ஈமக்கடன் முடித்தான். பின்பு வெற்றி நிறைந்த அனுமனை நோக்கிச் 'சீதையிடம் சென்று சொல்லுக' என்று இராமன் கட்டளையிட்டான்.

கு: மயன் மகள் என்றது இராவணன் மனைவியாகிய மண்டோதரியை மாய்ந்தாள் என்றது கணவனது உடம்பைத் தழுவிக் கொண்டு உயிர்விட்டாள் என்றவாறு. இராவணனோடு இறந்துபடாது இருந்த இராக்கதர்களைக் கூவி இராமனிடம் அடைக்கலம் புகுந்து போற்றுங்கள் என்று அறிவுரை கூறியவாறு. இயம் என்றது சாப்பறையை. அரக்கன் என்றது வீடணனை. சேர்த்தான் என்றது ஈமக்கடன் செய்து முடித்தான் என்றவாறு. அனுமனைச் சீதைபால் சேறி என்றது சீதைபால் சென்று இராமன் வெற்றியைக் கூறி அழைத்து வருக என்னும் கருத்தினது. (255)

1225 சென்றன னனுமனோடு
வீடணன் சீதை தன்பால்
நின்றவ ணிசழ்ந்த வாறு
நிரப்பிமஞ் சனநீ பாட்டி

---

256-அ. இச்செய்யுளுக்குப்பின் பின்வரும் செய்யுள் சில சுவடிகளில் காணப்படுகின்றது.

தந்தையும் வந்து சார்ந்து தளர்விலா வரமு மீயக், கொந்தலர்
குழலியோடு விமானமே குறுகச் செல்ல,
சிந்தினன் வசந்தனென்ற வாசகம் செவிபுகாமுன்
அந்தக புரத்தையம்பால் நிறைத்தனன் அவனும்
வந்தான்.

ஒன்றிய கலன்கள் பூட்டி
யுய்த்தன னிராம னேக்கி
நன்றுநின் செய்தி யென்ன
நடுங்கின ளெரிபுக் குய்ந்தாள்.

சென்றனன் அனுமனேடு வீடணன் சீதைதன்பால்,
நின்று அவண் நிகழ்ந்தவாறு நிரப்பி மஞ்சனநீர் ஆட்டி,
ஒன்றிய கலன்கள் பூட்டி, உய்த்தனன் இராமன் நோக்கி
'நன்று நின்செய்தி' என்ன, நடுங்கினள் எரிபுக்கு உய்ந்தாள்.

பொ: அனுமனேடு வீடணனும சீதைதன்னிடம் சென்றான்; அச்சீதை முன் நின்று அவ்விடத்து நிகழ்ந்தவற்றையெல்லாம் சொல்லிவிட்டுச் சீதைக்கு மஞ்சன நீர் ஆட்டிப் பொருத்தமான அணிகலன்களைப்பூட்டி இராமனிடம் அனுப்பினன்; அணிகலன் அணிந்து நின்ற சீதையை இராமன் பார்த்து 'நின் செய்தி நன்று' என்று முனிந்து கூற, சீதை நடுங்கி எரிபுகுந்து தன் கற்பினை நிறுவி உய்தி பெற்ருள்.

கு: அனுமனையே இராமன் சீதைபால் ஏவினன் ஆயினும் வீடணனும் அவனுடன்சென்று சீதைக்கு இராவணன் மாய்ந்ததையும் இராமனது வெற்றிச் செயலையும் குறைவறக் கூறினன் என்பார், 'அவண் நிகழ்ந்தவாறு நிரப்பி' என்ருர். இராமன் சீதையின் சோகத்தன்மையைக் காண விழைந்தான். ஆனல் வீடணன் சொல்லியபடி மஞ்சன நீராடி அணிகலன்கள் அணிந்து வந்து நின்ற சீதையின் அழகுத்தோற்றம் இராமனுக்குக் கோபத்தைத் தூண்டிவிட்டது. எனவே 'நின் செய்தி நன்று' என்று முனிந்து கூறினன் என்க. அதுகேட்ட சீதை நடுநடுங்கி இராமன் கட்டளைப்படி தீயில் புகுந்து தன்கற்புடைமை காட்டி யுய்தியுற்ருள் என்றவாறு. (256)

## பரத்துவாசன் குடிலில் விமானம் இறங்குதல்

1226 ஏறிட விமானந் தன்னில்
யாவரு மிறைவி தானும்
மாறின வசந்தன் சேனை
நின்றது மலரவன்பால்

கூறின னனுமன் வாங்கிக்
கொண்டபின் குரிசிருனும்
ஆறிய பரத்துவாச
னணிமலர்ச் சோலே புக்கான்.

ஏறிட விமானம் தன்னில் யாவரும் இறைவி தானும்
மாறின வசந்தன் சேனை நின்றது மலர அன்பால்
கூறினன் அனுமன் வாங்கிக் கொண்டபின் குரிசில் தானும்
ஆறிய பரத்துவாசன் அணி மலர்ச்சோலே புக்கான்.

பொ: புட்பகவிமானத்தில் சீதையாகிய தலைவியும் வானர சேனையிலுள்ள யாவரும் ஏற மாறி நின்ற வசந்தனது சேனை நின்றது; அப்பொழுது அந்தச்சேனை முகமலர்ச்சி கொள்ளுமாறு அனுமன் அன்பால்பேசி அவர்களையும் ஏற்றிக் கொண்டபின் இராமனும் சினம் ஆறிய பரத்துவாசனது அழகிய மலர்ச் சோலையில் புகுந்தான்.

கு: குரிசில் என்றது உபகாரியாகிய இராமனை. ஆறிய என்பது தவமுதிர்ச்சியால் சினம் ஆறிய என்னும் பொருளது. (257)

---

சிலவற்றில் காணப்படும் மிகைப்பாடல்கள்:

257 - அ. கூடு மாவியு மெனப் பதந்தோ டிசை கூடிட
நீடு மன்னர் நின்ற நின்றிடந் தொறும் புகழ்ந்திட
ஆடுவார் கானநூ லறிந்துளோர்க ளாமெனப்
பாடுவார் புகழ்ந்திடப் படிப்பின் மைந்தர் பாடினர்.

ஆ. மானமா வராகநெஞ் சழிந்து வாடியோவிய
மானமா. வராக மாளி வாரண மனஞ்செலக்
கானமா வசங்கடந்து கவ்வுபுறகள் சோர்தரக்
கனயா வசஞ் செலக் கவின்கொள் மைந்தர்பாடினர்

## அனுமன் மீண்டபின் யாவரும் அயோத்தி அடைதல்

1227 வரதனு மனுமன்றன்னை வரன்முறை
யேவ லோடும்
பரதனை யெரிபு காமற்
பண்ணினன் மீண்ட பின்னர்
எரிமணி விமானத் தேறி யாவரு
மிளைய கோவும்
அரிமலர்க் குழலி னளு
மிராமனு மயோத்தி சேர்ந்தார்.

வரதனும் அனுமன் தன்னை வரன்முறை ஏவலோடும்
பரதனை எரிபுகாமல் பண்ணினன் மீண்ட பின்னர்
எரிமணி விமானத்து ஏறி யாவரும் இளைய கோவும்
அரிமலர்க் குழலினளும் இராமனும் அயோத்தி சேர்ந்தார்

பொ: வரத்தைத் தருபவனாகிய இராமனும் அனுமனை வரன்முறைப்படி அயோத்திக்குத் தூதாக ஏவுதலும் அவ்வனுமன் பரதனை எரியில் புகாதபடி செய்து மீண்ட பின்பு நெருப்புப் போன்ற மணிகள் பதித்த விமானத்தில் ஏறிக் கொண்டு இலக்குவனும் வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலினையுடைய சீதையும் இராமனும் மற்றுள்ள யாவரும் அயோத்தியை அடைந்தார்கள்.

---

258.அ. மண்ணுல கத்திலுள்ள மாகதர் கேட்டார் கானத்
தெண்ணரும் வசனி கொண்டாங் கெழில்கொள்
தாளத்தில் வைத்து
கண்ணிணை யாடா கண்டங் கம்பியா புருவமேருப்
பண்ணிசை கலந்தவண்ணம் பாடினர் பலரும் சுற்ற.

கு: பதினன்கு ஆண்டுகள் கழிந்தவுடன் இராமன் அயோத்திக்கு வரவில்லையானல் பரதன் தீயில் வீழ்ந்திறப்பதாக முன்பு சொல்லியிருந்தானுகலின், பரத்துவாசர் குடிலில் தங்க விரும்பிய இராமன் பதினன்காம் ஆண்டின் இறுதிநாளில் தன்வரவைப் பரதனுக்குத் தெரிவிக்க அனுமனை விடுத்தான். அவன் சென்று இராமன் வரவு கூறிப் பரதனை எரிபுகாமல் தடுத்து மீண்டான் என்க. புட்பகவிமானத்தில் பதித்துள்ள மணிகளின் ஒளி மிகுதியைப்புலப்படுத்த 'எரிமணி விமானம்' என்றார். அரிமலர்-வண்டுகள் மொய்க்கும் மலர். (258)

இச்செய்யுளோடு குசலவர்கள் பாடிய இராமாயணம் முடிகின்றது.

## குசலவர் பாடிய இராமாயணத்தை இராமன் கேட்டு மகிழ்ந்து கூறுதல்

### வேறு

1228 பொன்னியல் சீதைதன் புதல்வர் பாடிய
இன்னிசை மருவிய வியல்கொள் காப்பியம்
தன்னிசை யாதலாற் றரள வெண்குடை
மன்னவன் மைந்தரை மகிழ்ந்து கூறுவான்.

**பொன்னியல் சீதைதன் புதல்வர் பாடிய**
**இன்னிசை மருவிய இயல்கொள காப்பியம்**
**தன் இசை ஆதலால் தரள வெண்குடை**
**மன்னவன், மைந்தரை மகிழ்ந்து கூறுவான்.**

---

76ல் பின்வரும் மிகைப்பாடல் இச்செய்யுளின் பின் உளது.

259-அ. துன்னுதிரைமா கடல்கலங்கித் தெளிந்த தென்னத் துயராலே
மன்னன் கலங்கித் தெளிந்தவர்க்கு வரம்பிலாத மாவணியும்
பொன்னும் பூவும் புனைதுகிலும் கொடுக்கக் கொள்ளார் தவம்பூண்டார்க்கு
என்னபல முண் டிவையிற்றால் ஏதும்வேண்டா என வுரைத்தார்.

பொ: பொன்னிறம் பொருந்திய சீதையின் புதல்வர்களாகிய குசலவர்கள் பாடிய இனிய இசையோடு பொருந்திய இலக்கியத் தன்மையைக் கொண்டுள்ள காவியம், தனது புகழ் பாடும் காப்பியம் ஆக இருத்தலால் முத்துக்கள் வைத்துத் தைக்கப் பட்ட வெண்குடை நீழலில் உள்ள இராமனாகிய மன்னவன், குசலவர்களாகிய மைந்தரைக் கண்டு மகிழ்ந்து கூறுவானானான்.

கு: சீதை தன் புதல்வர் என்றது, குசலவர்களை. இயல் என்றது இலக்கியத்தை. இன்னிசையோடு பொருந்திப் பாடக் கூடிய இலக்கியத்தன்மை கொண்டுள்ள காப்பியம் என்க. தன் இசை என்றது, இராமனுடைய புகழ்பாடும் இலக்கியத்தை என்ற வாறு. இராமாயணமாகிய தன் இசையைப் பாடக்கேட்ட இராமன் மகிழ்தல் இயல்பே. வெண்குடை மன்னவன் என்றது இராமனை. தன்மைந்தர் என்பதை இன்னும் தெளிவாக அறிந்திலனாதலின் மைந்தரை என்றது இளைஞர்களை என்னும் பொருளில் வந்ததாகக் கொள்ளலாம். (259)

## இராமன், காப்பியம் செய்தார் யார்? நீவிர் யார் எனல்

1229 வயம்புனை யிராகவன் மைந்தர் தம்மையம்
புயந்திகழ் விழிமலர் புனைந்து நோக்கியிப்
பயன்கெழு காப்பியப் பனுவ லின்னிசை
இயம்பின ரியாவர் நீர் யாவ ரென்றனன்.

வயம்புனை இராகவன் மைந்தர் தம்மை, அம்
புயம்திகழ் விழிமலர் புனைந்து நோக்கி இப்
பயன்கெழு காப்பியப் பனுவல் இன்இசை
இயம்பினர் யாவர்? நீவிர் யாவர்? என்றனன்.

பொ: வெற்றிமாலை புனைந்த இராமன், (காப்பியம் பாடிய) இளைஞர்களைத் தாமரை மலர்போல் விளங்குகின்ற கண்மலர் சார்த்தி நோக்கி, இந்தப் பயன் பொருந்திய காப்பியமாகிய நூலை இனிய இசையோடு சொன்னவர்கள் யாவர்? அந்த இசையோடு பாடிக் காட்டிய நீவிர் யாவர்? என்று வினவினான்.

கு: வயம்-வெற்றி. புனே என்ற வினைக்கு ஏற்ப வெற்றி மாலை என உருவகமாக்குக. அம்புயம் திகழ் விழி மலர் என்றது, இராமனுடைய தாமரை மலர்போல் விளங்குகின்ற கண் மலர்களை. பிறிதொன்றையும் நோக்காது அம்மைந்தர்பால் கண்களைச் சார்த்தி நோக்கினன் என்பார், 'விழிமலர் புனைந்து நோக்கி' என்றார். அம்மைந்தர்க்குத் தாமரை மலர் புனைந்தது போலத் தன் விழிமலரைப் புனைந்து நோக்கினன் என்க. இளைஞர்களாகிய இவர்கள் இந்தக் காப்பியத்தைச் செய்திருக்கவியலாது என்பது தெளிந்து காப்பியப் பனுவல் இன்னிசை இயம்பினர் யாவர்? என வினவினன். நீர் யாவர் என்றது, அந்தக் காப்பியப் பனுவல்களை. இன்னிசையோடு பாடிக் காட்டிய அவ்விளைஞர்களை யறிய அவாவிய அறியான் வினவாகும். (260)

## குசலவர்கள் கூறிய விடை

1230 நும்பெரும் புகழினை நுனித்துக் கூறினோன்
வம்புயர் கங்கைவான் மீகி யம்முனி
தம்பமென் றவனுரை தலையிற் கொண்டுளோம்
எம்பெயர் குசலவ ரென்று கூறினார்.

**நும்பெரும் புகழினை நுனித்துக் கூறினோன்**
**வம்பு உயர் கங்கை வான்மீகி; அம்முனி**
**தம்பம் என்று அவனுரை தலையில் கொண்டுளோம்**
**எம்பெயர் குசலவர் என்று கூறினார்.**

பொ: நுமது பெரிய புகழினை நுட்பமாகக் கூறியவன், மணம் மிக்கு வீசும் உயர்ந்த கங்கையின் கரையில் தவமிருக்கும் வான்மீகி; அந்த முனிவன் எம்வாழ்விற்குப் பற்றுக்கோடு என்றுஎண்ணி அவனுடைய உரையாகிய இக்காப்பியத்தைத் தலைமேற் கொண்டு தொழுது கற்றுள்ளோம்; எம் பெயர் குசலவர் என்று சொன்னார்கள்.

கு: நுனித்தல் - நுட்பமாகக் கூறுதல். வம்பு – வாசனை; கொன்றை யீர்த்தொழுகலால் கங்கைக்கு வாசனையுண்டாயது. தம்பம்-பற்றுக்கோடு. அவனுரை யென்றது, வான்மீகியின் இராமாயணத்தை. தலைமேற்கொண்டு போற்றிப் பாடுகின்றோம்

என்பார், 'தலையிற் கொண்டுளோம்' என்றார். குசன் லவன் என்ற பெயர்கள் இணைந்து குசலவர் என உம்மைத் தொகையாய் நின்றன. (261)

## குசலவர்க்குப் பதினெண் கோடி பொன் கொடுக்கச் சொல்லுதல்

1231 நீடிய தன்னுரு நிகர்க்கு மோரிரண்
டாடியிற் பாவைய ஞருக் கங்ஙனே
பாடிய பனுவலாற் பத்தின் மேலுமெண்
கோடிசெம் பசும்பொனே கொடுமி னென்றனன்.

நீடிய தன் உரு நிகர்க்கும் ஓர் இரண்டு
ஆடியிற் பாவையனாருக்கு அங்ஙனே
பாடிய பனுவலால் பத்தின்மேலும் எண்
கோடி செம்பசும்பொனே கொடுமின் என்றனன்.

பொ: நெடிதாக இருக்கின்ற தன் உருவை நிகர்க்கும் கண்ணாடியில் தோன்றும் இரு பாவை போன்றவர்களாகிய குசலவர்க்கு அவ்விடத்தே அவர்கள் பாடிய பாடல் காரணமாகப் பதினெட்டுக் கோடி பசும் பொற்காசுகளைக்கொடுமின் என்று கூறினான்.

கு: இராமன் நெடியோன் என்பது புலப்பட 'நீடியதன்னுரு' என்றார். இளைஞர்களாகிய குசலவர் வடிவத்தால் சிறியர், இராமனையே ஒத்த எழில் மிகுவடிவத்தினர் என்பார், 'தன்னுரு நிகர்க்கும் ஓரிரண்டு ஆடியிற் பாவை அன்னார்க்கு' என்றார். சிறிய கண்ணாடியில் நெடிய உருவமும் சிறிதாய்த் தோன்றுதல் இயல்பாதலின் அந்த ஆடியிற் பாவையை உவமை கூறினர். ஆயின் கண்ணாடியில் ஓருருவம் ஓருருவமாகத் தோன்றுமேயன்றி இரண்டுருவமாகத் தோன்றுவதில்லை; இருவராய்த் தோன்றும் குசலவர்க்கு ஓரிரண்டு ஆடியில் பாவையனார் என்று இல்பொருள் உவமையாகக் கூறினர். அவர்கள் பாடிய பாடல்களின் சிறப்புக் கருதிப் பதினெண்கோடி செம்பசும்பொன் கொடுமின் என இராமன் ஏவினான் என்க. பனுவல்–பாட்டு. (261)

## குசலவர் உடைமையின் இன்மை நன்றெனல்

1232 மன்னவர் வலிதின் வௌவா
வளமனைக் கள்ளர் கொள்ளா
இன்னுயிர்க் கிறுதி செய்யா
விழந்தபி னிரங்கல் வேண்டா
துன்னிய துயிலை யோட்டா
தோகையர் காதல் கூட்டா
உன்னிய பொருள தீட்ட
முடைமையி னின்மை நன்றால்.

மன்னவர் வலிதின் வௌவா, வளமனைக் கள்ளர் கொள்ளா,
இன் உயிர்க்கு இறுதிசெய்யா, இழந்தபின் இரங்கல் வேண்டா,
துன்னிய துயிலை ஓட்டா, தோகையர் காதல் கூட்டா
உன்னிய பொருளது ஈட்டம் உடைமையின் இன்மை நன்றால்.

பொ: அரசர்களால் வலிதின் கவரப்பட மாட்டாது; வளமனையில் வந்து கள்வரால் கவர்ந்து கொள்ளப்படமாட்டாது; இனிய உயிர்க்கு இறுதியைச் செய்யாது; இழந்தபின்பு இரங்க வேண்டுவதில்லை; நெருங்குகின்ற தூக்கத்தை ஓட்டாது; மயில் போன்ற சாயலையுடைய பெண்டிர் மேல் காதலை வளர்க்காது; ஆதலால், நீங்கள் கொடுக்கக் கருதிய பொருளின் திரளை உடையராயிருந்தலைக் காட்டிலும் இல்லாமையே நல்லது.

கு: பொருளுடைமையால் வரும் தீமைகளைத் தாராமையால் வறுமையே நல்லது என்றவாறு. பொருளிருந்தால் மன்னவர் வலிதின் கவர்தலும் திருடர் திருடுதலும் இனிய உயிர்க்கே இறுதி நேருதலும், இழந்தபின் இரங்குதலும், துயிலை விடுத்துக் காவல் செய்தலும், தோகையர்மேல் காதலை வளர்த்தலும் நிகழும்; பொருள் இல்லாதிருந்தால் இத்தீமைகள் நிகழா என்றவாறு. பொருளதீட்டம்-பொருட்குவை. வௌவா, கொள்ளா, என்பன செயப்பாட்டு வினைப் பொருளன. எதிர்மறை வினைமுற்றுப் பன்மை விகுதியாகிய ஆகாரங்கள் ஆறும் ஒருமைப் பொருளையுணர்த்தின. (262)

## இராமன் பொருளின் சிறப்பைச் சொல்லிக். கொள்க எனல்

1233 பூரியர் தமைவேந் தாக்கிப்
புவிபுரப் பிக்குந் துய்க்கும்
சீரிய வுண்டி சேர்க்குந் தேவர் தம்
முலகு போக்கும்
காரிய மனைத்துங் கூட்டுங்
கருதலர் தம்மை வாட்டும்
கூரிய திதன்மே லில்லை
கொழும்பொனீர் கொண்மி னென்றான்.

பூரியர் தமைவேந்து ஆக்கிப் புவிபுரப்பிக்கும்; துய்க்கும்
சீரிய உண்டி சேர்க்கும்; தேவர்தம் உலகு போக்கும்;
காரியம் அனைத்தும் கூட்டும் கருதலர் தம்மை வாட்டும்
கூரியது இதன்மேல் இல்லை; கொழும்பொன் நீர் கொண்மின்
என்றான்.

பொ: அற்பர்களையும் வேந்தர் ஆக்கிப் பூமி முழுமையையும் ஆட்சி செய்யச் செய்யும்; அனுபவித்து உண்பதற்குரிய சிறப்பான உணவைக் கொடுக்கும்; தேவர் உலகத்தில் தங்குமாறு போகச் செய்யும்; நினைத்த காரியம் அனைத்தையும் கைகூடச் செய்யும்; பகைவரை வாட்டுகின்ற கூர்மையான ஆயுதம் இந்தப் பொருளுக்கு மேல் ஒன்றும் இல்லை; ஆகையால் செழுமையான பொன்னை நீவிர் ஏற்றுக் கொள்ளுங்கள் என இராமன் கூறினான்.

கு: பூரியர்-கீழ்மக்கள். கீழ்மக்களும் பொருள் உடையராயின் வேந்தராய்ப் புவி முழுவதும் ஆள்வர் என்றவாறு. கொழும் பொன், பூரியர்தமை வேந்தாக்கிப் புவிபுரப்பிக்கும், உண்டி சேர்க்கும், தேவர்தம் உலகு போக்கும், காரியம் அனைத்தும் கூட்டும் கருதலர் தம்மை வாட்டும் கூரியது இதன்மேல் இல்லை; ஆதலின், நீர் கொண்மின் என வினை முடிவு செய்க. பொருள் சேர்ந்தால் கீழ்மக்களும் வேந்தராய் உலகாளுவர். சிறந்த

உண்டி நுகர்வர்; மறுபிறவியில் தேவருலகடைவர்; காரியம் அனைத்தும் கைகூடப் பெறுவர். பகைவரை வெல்வர் என்றவாறு. கருதலர்-பகைவர். 'கருதலர் தம்மை வாட்டும் கூரியது இதன்மேல் இல்லை' என்பது "செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும் எஃகதனிற் கூரியதில்" (திருக்குறள்-759) என்ற குறளைப் பின்பற்றி வந்தது எனலாம். பூரியர் தமை வேந்தாக்கிப் புவிபுரப்பிக்கும் என்பது "பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்ல தில்லை பொருள்" என்ற குறளை நினைப்பித்தல் காணலாம். (264)

## குசலவர் அதற்கு விடை பகர்தல்

1234 மூலமுஞ் சாகந் தானும்
பலங்களு முவந்து கொள்ளும்
மாலைய முனிவ ரோடவ்
வனத்துறை வோம தானுல்
காலைநீ ரருளு கின்ற
காஞ்சனங் காஞ்சி ரங்காய்
போலுமீ தெங்கட் கென்று
புகன்றனர் புதல்வர் தாமே.

மூலமும் சாகம் தானும் பலங்களும் உவந்து கொள்ளும்
மாலைய முனிவரோடு அவ்வனத்து உறைவோமது ஆனுல்
காலைநீர் அருளுகின்ற காஞ்சனம் காஞ்சிரங்காய்
போலும் ஈது எங்கட்கு என்று புகன்றனர் புதல்வர் தாமே.

---

265 - அ. சில ஏடுகளில் கீழ்வரும் மிகைப்பாடல் காணப்படுகின்றது.

துன்னு திரைமாக் கடல்கலங்கித் தெளிந்த தென்னத் துயர்தீர்ந்து
மன்னன் கலங்கித் தெளிந்தவர்க்கு வரம்பிலாத நவமணியும்
பொன்னும் பூணும் புனைதுகிலுங் கொடுப்பக் கொள்ளார் தவம்பூண்டோர்க்
கென்ன பயனுண் டிவையிற்றா லெதுவும் வேண்டா எமக் கென்றார்.

பொ: 'கிழங்கும் சருகும் பழங்களும் மகிழ்ந்து உட்கொள்ளும் தன்மையையுடைய முனிவர்களோடு அந்தக் காட்டில் தங்கியுள்ள எம்மிடத்தது ஆனல், காலையில் நீங்கள் அருளிச் கொடுக்கின்ற பொற்காசுகள் எட்டிக்காய் போலுமது எங்கட்கு' என்று புதல்வர் தாம் சொன்னார்கள்.

கு: மூலம் - கிழங்கு சாகம் - சருகு. பலம - பழம். மாலைய முனிவர் - தன்மையுடைய முனிவர். நீர் அருளுகின்ற காஞ்சனம் வனத்துறைவோமது ஆனல், எங்கட்குக் காஞ்சிரங்காய் போலுமது என இயையும். காஞ்சனம் - பொற்காசு. காஞ்சிரங் காய் - எட்டிக்காய். உண்பார்க்கு அமிழ்தாய நெல்லிக்கனி போன்றவற்றை விடுத்துக் காஞ்சிரங்காய் போன்ற காஞ்சனத்தை விரும்போம் என்றவாறு. புதல்வர் தாம் புகன்றனர் என்க. (265)

## குசலவர் பாடுதும் நாளையென்று சொல்லிப் போதல்

1235 குருதிவேற் றானைவேந்தன் குசலவர்
தம்மை நோக்கி
வருந்திரோ வெம்பா லின்னு
மைந்தர்நீ ரென்று கூறப்
பருதிவேற் றடக்கை வேந்தே
பாடுது நாளை வந்தென்

---

266-அ. சில சுவடிகளில் பின்வரும் பாடல்கள் இதற்குப்பின் உளது.

தூதர் தம்மை வரக்கூவி யவர்க்குத் தூயோனிவை யுரைக்கும்
கோதில் குணத்து வான்மீகி தனக்கு நான்கூறின னெனக்கூறும்
சீதையெனக்குந் தேவர்க்குந் தெளிந்த மேற்சுதையாயிருக்கும்
ஓதுமுலகோர் பழிக்கஞ்சியவளைத் துரந்தோமென வுரைமின்.

ஆ) வேலைசூழ்ந்த வுலகத்துள் மேவுசனங்கள் வேள்விலே கோவி
முன்னே யானழைப்பக் கூடியிருந்தோர் கோதற்ற

சீலமேவு சான கிதன் திருந்து கற்பு மிவர்காண - ஞால
மெல்லாம் கண்டு தான் தெளிந்து சொன்ன தென் றுரைமின்.

றரிமலர்த் தாரி ஞனை
யகன்றுமா மைந்தர் போனார்.

குருதிவேல் தானை வேந்தன் குசவலர் தம்மை நோக்கி
வருதிரோ எம்பால் இன்னும் மைந்தர்நீர் என்று கூறப்
பருதிவேல் தடக்கை வேந்தே பாடுதும் நாளை வந்து என்று
அரிமலர்த் தாரினானை அகன்று மாமைந்தர் போனார்.

பொ: இரத்தக்கறை படிந்துள்ள வேற்படை தாங்கிய சேனையுயைடைய வேந்தனாகிய இராமன், குசலவர்களைப் பார்த்து, 'மைந்தர்களாகிய நீவிர் எம்மிடம் இன்னும் ஒருமுறை வருவீர்களோ' என்று கேட்க, சிறப்பு மிக்க குசலவர்களாகிய அம்மைந்தர்கள், 'சூரியனைப் போன்ற ஒளியையுடைய வேலைத் தாங்கிய பெரிய கையினையுடைய வேந்தே! நாளைக்கு வந்து பாடுகின்றோம்' என்று சொல்லிவிட்டு, வண்டுகள் மொய்க்கின்ற மாலையையணிந்த இராமனை விடுத்து நீங்கிப் போனார்கள்.

கு: குருதிவேல் என்றது, பலபகைவர்கள் மார்பில் நுழைந்து பழகிய வேல் என அதன் சிறப்புப் புலப்படுத்தியவாறு. மைந்தர் என்று இராமன் கூறியது, தன் புதல்வர்கள் போன்றே தோன்றுதலின் இருபொருளும் படக் கூறியதாகும். மைந்தர் வலிமையுடையினேர்; புதல்வர் என இருபொருள் உணர்த்தும். மைந்தர்நீர் இன்னும் எம்பால் வருதிரோ என மாற்றுக. பருதி-சூரியன். ஒளிமிக்கவேல் என்பார் பருதிவேல் என்றார். அரி-வண்டு. மாமைந்தர் - சிறந்த மைந்தர். நாளைவந்து பாடுதும் என்று மைந்தர் போனார் என இயையும். (265)

## இராமன் குசலவரைத் தழுவுதல்

1236 பண்ணிய பனுவ லின்சொற்
குசலவர் பாடு கின்ற
இன்னிசை கேட்டு நாளு
மியல்புளி பொருநா ளந்துப்

பொன்னியற் சனகி பெற்ற
புதல்வரென் றறிந்து வாங்கித்
தன்னிகர் புதல்வர் தம்மைத்
தழுவி னெழுவுத் தோளான்.

பன்னிய பனுவல் இன்சொல் குசலவர் பாடுகின்ற
இன்னிசை கேட்டு நாளும் இயல்புளி ஒருநாள் அந்தப்
பொன்இயல் சனகி பெற்ற புதல்வர் என்று அறிந்து வாங்கித்
தன்நிகர் புதல்வர் தம்மைத் தழுவினன் எழுவுத் தோளான்.

பொ: பலரும் சிறப்பித்துச் சொன்ன பாடலாகிய இனிய சொற்களையுடைய குசலவர் பாடுகின்ற இனிய இசையை நாள் தொறும் கேட்டு இயல்பினல் ஒருநாள் அந்தத் திருமகளின் இயல்பினளான சானகி பெற்ற புதல்வர்தாம் என்று அறிந்து கொண்டு, தன்னையே ஒத்துள்ள அப் புதல்வர் தம்மைக் கையால் வளைத்துக் கொண்டு தழுவினன் தூண் போன்ற தோள்களையுடையவனாகிய இராமன்.

கு: எழுவுத் தோளான் தழுவினன் என இயையும். தோளான் என்றது இராமனை. நாளும் கேட்டு என்க. இயல்புளி என்றது, இயல்பினல் என்னும் பொருளது. பொன்- இலக்குமி. பொன்னியற்சனகி என்றது திருமகளின் தன்மை நிறைந்த சீதை என்றவாறு. வாங்குதல் என்றது கையினல் அப்புதல்வர்களை வளைத்துக் கொள்ளுதலை. தந்தையும் மகனும் வடிவால் ஒத்திருத்தல் உலகியலில் காணும் உண்மை. குசலவர் பாடிய இன்னிசையைக் கேட்டுக் கேட்டுப் பழகிவரும் நாளில் ஒருநாள் இயல்பாகவே இவர்கள் சீதை வயிற்றில் பிறந்த தன் புதல்வர்

---

267-அ. சில சுவடிகளில் பின்வரும் செய்யுள் காணப்படுகின்றது.

என்று தூதர்க் குரைப்பவவ ரேகிமுனிக் கவ்வா றுரைப்ப
நன்று ஞாலத்தவர்காண நாளைக் காலை யழைத்ததக் கால்
கன்று மனத்துச் சானகி தன் கற்புக் காட்டக் கடவளென
வென்றி வீரர்க் கத்தூதர் விமலன் உரைத்த வாவிளம்ப.

என்பதை யுணர்ந்தான் இராமன் என்க. அறிந்து பாசத்தால் தோள்களாரத் தழுவிக் கொண்டான். தூண் போன்ற தோள்களைப் பெற்ற பயன் துய்த்தது அன்றுதான் என்ற குறிப்புத் தோன்ற எழுவுத் தோளான் தழுவினன் என்றார். (267)

## இராமன் சீதையின் கற்பை யுலகறியச் செய்ய நினைத்தல்

1237 மருந்தெனத் திகழு மின்சொன்
மைதிலி கற்புக் கந்த
அருந்ததி கற்பு நாணு
மாதலை யறிவ னேனும்
இருந்தழ லதனின் மூழ்கி
யிலங்கையி லமரர் காணப்
புரிந்தது புரியுங் காணப்
புரிவிப்பெ னின்னு மென்ன.

மருந்து எனத் திகழும் இன்சொல் மைதிலி கற்புக்கு அந்த
அருந்ததி கற்பும் நாணும் ஆதலை அறிவனேனும்
இருந்தழல் அதனின் மூழ்கி இலங்கையில் அமரர் காணப்
புரிந்தது புரியுங்காணப் புரிவிப்பென் இன்னும் என்ன.

பொ: அமிழ்தம் என்னும்படி சுவைமிக்கு விளங்குகின்ற இனிய சொல்லினையுடைய சீதையின் கற்புக்கு விண்ணில் உள்ள அந்த அருந்ததியின் கற்பும் நாணும் என்பதை யான் அறிவேன் ஆயினும் பெரிய தீயில் மூழ்கி இலங்கையில் அன்று தேவர்கள் காணுமாறு செய்ததை அயோத்தியாபுரியும் காணுமாறு செய்விப்பேன் இன்னும் என்று கருதி.

கு: மருந்து-தேவர் அமிழ்தம். மைதிலி என்றது சீதையை. சேய்மைச்சுட்டால் அந்த அருந்ததி என்றது விண்ணில் உள்ளமை பற்றியாகும். நாணுமாதலை என்பது நாணுவதை என்னும் கருத்தினது. அமரர் காணத் தழலின் மூழ்கிப் புரிந்தது என்றது தேவர் காணத் தழலின் மூழ்கியும் தழலால் எரிக்கப்படாது தழல் சீதையின் கற்புக் கனலால் வெதும்பிய நிகழ்ச்சியை.

மீண்டும் அயோத்தியிலுள்ளோர் காணுமாறு சீதையை எரியில் மூழ்கச் செய்வேன் என இராமன் கருதி என்றவாறு. சீதையின் கற்பை இராமன் நன்கறிந்தவனே ஆயினும் அவள் கற்பின் பெருமையை அயோத்தியா புரியில் உள்ளவர்களும் காணச் செய்வதில் இராமன் விருப்பமுடையவனாக இருந்தான் என்க. புரி- அயோத்தியாபுரி. 'புரிந்தது புரியுங் காணப் புரிவிப்-பேன்' என்புழி வந்த சொல்லே மும்முறை வந்து மடக்கு என்னும் சொல்லணி யாய் அமைந்திருத்தலைக் காணலாம். "சில மின்னதென் றருந்ததிக் கருளிய திருவே" (அயோத்தியா-சித்திர. 16) என்று இராமன் கூறியுள்ளதால், 'மைதிலி கற்புக்கந்த அருந்ததி கற்பு நாணுமாதலை யறிவனேனும்' என இங்குக் கூறியது பொருத்தமாதல் அறியலாம். மைதிலி மிதிலையிற் பிறந்தவள் என்ற காரணம் பற்றிய தத்திதாந்தப்பெயர். (268)

## குசலவரை வான்மீகிபால் அனுப்புதல்

1238 அன்ன தன்மைக் குசலவரை
யருளி னோக்கி யருமறைகள்
பன்னு தவத்து வான்மீகி
தன்பாற் போமி னெனப் பகர்ந்து
மன்னர் முதலா மாசனத்தை
விடுத்துப் போக்கி வளரொளியால்
மின்னு முகில்போற் றிருமேனி
வீரன் பின்னு மிதுசெய்தான்.

அன்ன தன்மைக் குசலவரை அருளின் நோக்கி, அருமறைகள் பன்னு தவத்து வான்மீகி தன்பாற் போமின் எனப் பகர்ந்து மன்னர் முதலாம் மாசனத்தை விடுத்துப் போக்கி, வளர்ஒளியால் மின்னும் முகில்போல் திருமேனி வீரன் பின்னும் இதுசெய்தான்.

பொ: திருவுள்ளத்தில் நினைந்த அன்ன தன்மையால் குசலவர்களை அருளினோடு பார்த்து, 'அரிய வேதங்கள் கூறும் தவத்தினையுடைய வான்மீகியின் பால் செல்லுங்கள்' எனச் சொல்லிவிட்டு, மன்னவர் முதலாக உள்ள மகா சனங்களை விடை கொடுத்துப் போகச் செய்து விட்டு, வளருகின்ற ஒளி

யுடைமையால் மின்னுகின்ற கருமுகில்போன்ற திருமேனியை யுடைய இராமனாகிய வீரன் இக் காரியத்தைச் செய்தான்.

கு: அன்னதன்மை என்ற சுட்டு இராமன் திருவுள்ளத்தில் நினைந்த தன்மையைச் சுட்டிநின்றது. அன்னதன்மையால் என மூன்றுவது விரிக்க. அன்னதன்மையால் நோக்கிப் பகர்ந்து விடுத்துப் போக்கி வீரன் இது செய்தான் என இயையும். இராமன் திருமேனி ஒளிவீசும கருநிறமாகலின் அதற்கேற்ப 'வளரொளியால் மின்னும் முகில்போல் திருமேனிவீரன்' என்று சிறப்பித்தார். செய்தது வருஞ் செய்யுளில் காணலாம். (269)

## வான்மீகி முனிவர் சீதையொடு வருவாராக எனத் தூதரை ஏவி இராமன் அரண்மனை புகுதல்

1239 வேதியர் வேந்தர்க் கெல்லாம்
விடைகொடுத் தருளி நின்ற
காதலர் தம்மைப் புல்லிக்
கதுமென வெழுந்து காதல்
மாதுமை திலிதனோடு வரமுனி
வருக வென்று
தூதரை யேவிப், பைம்பொற்
சுடர்மணிக் கோயில் புக்கான்.

**வேதியர் வேந்தர்க்கு எல்லாம் விடை கொடுத்தருளி, நின்ற**
**காதலர் தம்மைப் புல்லிக் கதுமென எழுந்து, 'காதல்**
**மாது மைதிலிதனோடு வரமுனி வருக' என்று**
**தூதரை ஏவி, பைம்பொன் சுடர் மணிக் கோயில் புக்கான்.**

பொ: வேதியர், வேந்தர், முதலியோர்க்கு எல்லாம் விடை கொடுத்தருளிவிட்டு, 'அங்கு நின்றிருந்தவர்களாகிய மைந்தர்கள் குசலவர்களைத் தழுவிக் கொண்டு, விரைவாக எழுந்து, காதல் மிக்க சீதையோடு மேன்மை தங்கிய வான்மீகி முனிவர் வருவாராக' என்று அவர்களை யழைக்கத் தூதரை ஏவிவிட்டுப் பசுமையான பொன்னாலியன்ற ஒளிமணிகள் பதித்த அரண்மனையுள் புகுந்தான்.

கு: நின்ற காதலர் என்றது குசலவர்களை. அவர்கள் சீதை பெற்ற மக்கள் என்பதை நன்குணர்ந்தவனாதலின் அவர்களை அன்பினால் தழுவிக் கொண்டான் என்க. காதலர்-புதல்வர். கதும் என்றது விரைவுக் குறிப்புணர்த்தும் சொல். வரமுனி என்றது மேன்மையுடைய வான்மீகி முனிவரை. வரந்தருமுனி எனப் பொருள் கூறலும் ஆம். வரமுனி வருக என்றது, அவரை அழைத்து வருக என்னும் குறிப்பினது. கோயில்-அரண்மனை. (270)

## சூரியன் மறைதல்

1240 இருநில முழுதுங் காண
வெரியிடை மூழ்கவின்னும்
வருகென மடந்தை தன்னை
மன்னவ னருளி விட்டான்
வெருவுறு தழலி னாங்கண்
வீழ்குறும் வண்ணங் காணா
தருளுடை யாரி னோடி
யருக்கனு மத்தஞ் சார்ந்தான்.

இருநிலம் முழுதும் காண எரியிடை மூழ்க இன்னும்
வருகென மடந்தை தன்னை மன்னவன் அருளி விட்டான்:
வெருவுறு தழலின் ஆங்கண் வீழ்குறும் வண்ணம் காணாது
அருளுடையாரின் ஓடி அருக்கனும் அத்தம் சார்ந்தான்.

பொ: பெரிய பூமியிலுள்ளோர் முழுவதும் காணுமாறு இன்னுமொருமுறை கனலில் மூழ்குதற்காகச் சீதையை வருக என்று இராமன் தூதுவரிடம் சொல்லிவிட்டான்; யாரும் அஞ்சத்தக்க நெருப்பில் அவ்விடத்து வீழும் தன்மையைக் காணாமல் அருளுடையவர்களைப்போலச் சூரியனும் ஓடிச் சென்று அத்தமனகிரியை அடைந்தான்.

கு: இயல்பாக அத்தமனகிரியைச் சாரும் சூரியன், சீதை தழலில் மூழ்குவதைக் காணாது ஓடும் அருளுடையாரைப்போல விரைந்தோடி அத்தமனம் அடைந்ததாகக் கூறியது தற்குறிப் பேற்ற அணியாகும். இன்னும் எரியிடை மூழ்க என மாற்றுக. இலங்கையில் மூழ்கிக் காட்டியதேயன்றி அயோத்தியில் இன்னும் ஒருமுறை மூழ்க என்றவாறு. அருளுடையோர் ஒரு பெண் தீயில் மூழ்குவதைக் காணக் கூசி அங்கு நில்லாது செல்வது போலச் சூரியன் சீதை எரியில் மூழ்குவதைக் காணக் கூசி விரைந்தோடி மலையில் மறைந்தான் என்க. அருக்கன் - சூரியன். அத்தம்-அந்தமன கிரி. (271)

## மாலை வருணனை

1241 வகைமிகு மன்ன னெண்ண
மறிந்தபின் வல்லி யெல்லாம்
முகைமுக மவிழ்ந்து கண்ணீர்
சொரிந்தன முளரி யோடும்
தொகைமிகு மரமுர் புள்ளு
மொடுங்கின தொலலை வேலைச்
செகதல மென்னு மங்கை
திகழ்முகஞ் சிவந்த தன்றே.

வகைமிகும் மன்னன் எண்ணம் அறிந்தபின் வல்லி எல்லாம்
முகைமுகம் அவிழ்ந்து கண்ணீர் சொரிந்தன முளரி யோடும்
தொகைமிகு மரமும் புள்ளும் ஒடுங்கின தொல்லை வேலைச்
செகதலம் என்னும் மங்கை திகழ்முகம் சிவந்தது அன்றே.

பொ: எல்லாவகையான சிறப்புகளாலும் மிக்குள்ள மன்னவனாகிய இராமனது எண்ணத்தை அறிந்த பின்பு, கொடிகளெல்லாம் அரும்புகளாகிய முகம் அவிழப் பெற்றுக் கண்ணீரைச் சொரிந்தன. தாமரையோடு எண்ணிக்கையில் மிக்குள்ள மரமும் பறவையும் ஒடுங்கின. பழைமையான கடலால் சூழப்பட்ட இவ்வுலகம் என்கின்ற மங்கையின் விளக்கமுள்ள முகம் சிவந்தது.

கு: படைவகை, சேனைவகை, உணவுவகை, பொருள்வகை, கொடைவகை எனப் பல திறப்படும் வகைகளில் மிக்குள்ள மன்னவன் என்பார், 'வகைமிகு மன்னர்' என்றார். அவன் எண்ணமாவது சீதையை மீண்டும் எரிபுகச் செய்து அவள் கற்பை உலகறியச் செய்தல் வேண்டும் என்ற எண்ணத்தை. வல்லி- கொடி. கொடி பெண்டிர்க்கு உவமையாகும் தொடர்புடைமையின் சீதையின் நிலை நினைந்து அரும்புகளாகிய முகம் அவிழப் பெற்றுக் கண்ணீர் சொரியலாயின என்றவாறு, முகம் அவிழ்தல் என்பது. துன்பத்தால் முகக்கட்டுத் தளர்தலை யுணர்த்தியது. கள் நீர் எனப் பிரிந்து தேனையுணர்த்துஞ் சொல் பிரியாது நின்ற நிலையில் அழுகையில் தோன்றும் கண்ணீரையுணர்த்தும். வல்லி, முல்லைக்கொடி போன்றவை. முளரி-தாமரை. தாமரை ஒடுங்கு- தலாவது, மலர்ச்சியின்றிக் குவிதல். மரம் ஒடுங்குதலாவது, விரிந்து நின்ற இலைகள் மூடிக் கொள்ளுதல். வாகை மரம் போன்ற வற்றைக் காணலாம். புள்-பறவை. அவை ஒடுங்குதலாவது போக்கு வரவு புரியாது கூட்டினுள் ஒடுங்குதல். இவை யாவும் சீதைக்கு வரப் போகும் துன்பம் நோக்கி நிகழ்ந்தனவாகக் கூறியவாறு. முகம் சிவத்தலும் துன்பத்தால் நிகழ்வது. திகழ் முகஞ்சிவந்தது என்றது செவ்வானத்தால் மேற்றிசை சிவந்து காணப்படுதலை. (272)

## உலகில் இருள் சூழ்தல்

### வேறு

1242 துண்ணெ னும்படி துன்னிமுன் றோன்றிடு
கண்ணி ழந்தவாக் கண்டவக் காரிருள்
எண்ணி கழ்ந்த திகாந்தமு மெங்கணும்
விண்ணு மண்ணும் விழுங்கின போன்றவே

துண் எனும்படி துன்னிமுன் தோன்றிடு
கண்இழந்தவாக் கண்ட அக் கார்இருள்
எண் நிகழ்ந்த திகாந்தமும் எங்கணும்
விண்ணும் மண்ணும் விழுங்கின போன்றவே.

பொ: யாரும் திடுக்கிடும்படி நெருங்கிவந்து, முன்பு தோன்றிக் கொண்டிருந்த கண்களை இழந்தவாறு போல ஒளிமழுங்கச் செய்த அந்தக் கரிய இருளால் எட்டு என்ற எண்ணிக்கை பொருந்திய திசைகளின் இறுதியும் விண்ணும் மண்ணும் எல்லா விடங்களும் விழுங்கப் பட்டன போலத் தோன்றின.

கு: துண் என்பது திடுக்கிடுதலையுணர்த்தியது. முன்பு ஒளி யுள்ளபோது ஒளியுடையதாய்ப் பொருள்களை நன்கு கண்டு கொண்டிருந்த கண்களை இப்போது இழந்தவாறுபோல ஒளி மழுங்கச் செய்தது கரிய இருள் என்க. எண்திசைகளின் முடிவிடங்களும் ஆகாயமும் மண்ணும் மற்ற எல்லா விடங்களும் அக்காரிருளால் விழுங்கப்பட்டன போல இருள்சூழ்ந்து காணப் பட்டன என்க. எங்கும் இருளான பொருளே தோன்றிற்று. பிறிதொன்றும் தோன்றவில்லை என்றவாறு. விழுங்கின,போன்றன என்றது தற்குறிப்பேற்றவுவமை. கண்ட - செய்த. திகாந்தம்- திசைகளின் முடிவிடம். (273

## திங்களின் உதயம்

1243 தூப மென்குழற் றோகையர் தம்முடன்
தாப மேலிடக் காமுகர் மேற்செல்வான்
கோப மென்பதென் முன்னர்க் கொளுத்திய
தீப மென்ன வெழுந்தது திங்களே.

தூப மென் குழல் தோகையர் தம்முடன்
தாப மேலிடக் காமுகர் மேற் செல்வான்
கோபம் என்பது என்? முன்னர்க் கொளுத்திய
தீபம் என்ன எழுந்தது திங்களே.

பொ: புகைபோன்ற மெல்லிய கூந்தலையுடைய மயில்போன்ற மங்கையருடன் சேர விரகதாபம் பெருகுமாறு காமுகர் மேல் செல்லும் பொருட்டுக் கோபம் காரணமாகத் திங்கள் எழுந்தது என்று சொல்வது எதற்கு? சூரியன் மறைந்த பின்பு முன்னர்க் கொளுத்திய விளக்கு என்னும்படி திங்கள் எழுந்தது.

கு: தூபம்-புகை. கருமையாலும் குழைவாலும் புகை மகளிர் கூந்தலுக்கு உவமையாயிற்று. தோகையர் என்றது மயில் போன்ற மகளிரை. தம்முடன் சேர என ஒருசொல் சொல் லெச்சமாக வருவிக்கப்பட்டது. தாபம் என்பது பிரிந்த காதலர்க்குச் சந்திரனின் நிலவால் வரும் ஆசைநோய். சந்திரனுக்குக் காமுகர்மேல் எழுந்த கோபத்தால்தான் அது எழுந்தது என்று சொல்வது, எதற்கு? என்றது, அதுவும் ஒரு காரணமே என்பது பட வந்தது. முன்னர் என்றது உலகவர் விளக்குக் கொளுத்துவதற்கு முன்பு என்னும் பொருளது. கொளுத்திய தீபமென்ன எழுந்தது என்பது தற்குறிப்பேற்ற அணி. திங்கள்-சந்திரன். (274)

## குமுதம் குவிய தாமரை மலர்தல்
## வேறு

1244 கொங்கவிழ் குமுதமுங் கூடி வாடிய
மங்கையர் நயனமுங் குவிந்த வாரணம்
சங்கொடு வலம்புரி தமர வண்டுசூழ்
பங்கயம் பலவும்வாய்ப் படமலர்ந்ததே.

கொங்கு அவிழ் குமுதமும் கூடி வாடிய
மங்கையர் நயனமும் குவிந்த; வாரணம்
சங்கொடு வலம்புரி தமர வண்டு சூழ்
பங்கயம் பலவும் வாய்ப்பட மலர்ந்ததே.

பொ: தேனோடு மலர்ந்த குமுத மலரும் கணவர்களோடு கூடியதனால் வாடியுள்ள மங்கையர் கண்களும் குவிந்தன; கோழி, சங்கு, வலம்புரிச் சங்கு, ஒலியுடைய வண்டுகள் சூழ்ந்த தாமரைகள் பலவும் வாய்திறந்து மலர்ந்தன.

கு: சந்திரன் மறைந்த விடியலில் அச்சந்திரனைக் கண்டு மலர்ந்த குமுதம் குவிதல் இயல்பு. கணவரொடு கூடித்தளர்ந்த மங்கையர் விடியலில் உறங்குதல் இயல்பாதலின், அவர்கண் மலர்களும் குவிந்தன என்பார். குமுதமும் கூடிவாடிய மங்கையர் நயனமும் குவிந்த என்றார்; சூரியனைக் கண்டு மலரும் இயல்புள்ள தாமரைகள் விடியலில் வாய்திறந்து மலரத் தொடங்கின என்பார், 'வண்டுசூழ் பங்கயம் பலவும் வாய்ப்பட மலர்ந்ததே' என்றார். தமரம்-ஒலி. தாமரை தங்கியுள்ள இடம் நீர் நிலையாதலின் நீர்க் கோழியும் சங்கும் வலம்புரிச் சங்கும் வண்டும் சூழ் பங்கயம் என்றார். தமர என்னும் அடையை வண்டுகட்கே யுரித்தாக்காமல், வாரணம் முதலிய மூன்றற்கும் இயைத்துக் கூறலும் ஆம். (275)

## சூரியன் தோன்றுதல்

1245 தகைமிகு முலகினிற் சார்ந்து ளோர்வயின்
மிகு கொடை யவர்புகழ் விளங்கு மாறுபோல்
வகைமிகு பெரும்புகழ் வான மீமிசை
அகன்மதி யொளிகெட வருக்கன் றோன்றினான்

தகை மிகும் உலகினில் சார்ந்துளோர் வயின்
மிகு கொடையவர் புகழ் விளங்கு மாறுபோல்
வகைமிகு பெரும்புகழ் வானமீமிசை
அகல் மதி ஒளி கெட, அருக்கன் தோன்றினான்.

பொ: பெருமைமிக்க இவ்வுலகில் உள்ளோர் இடத்து மிகுதியாகக் கொடுக்கின்ற குணமுடையவர்களின் புகழ் சிறந்து தோன்றுதல் போல பலவகையாக மிக்குள்ள பெரியபுகழ் விளங்கும் சூரியன், 'விண்ணின்மேல் விரிந்த சந்திரனின் ஒளி' கெடுமாறு தோன்றினன்.

கு: தகை-பெருமை. உலகினிற் சார்ந்துளோர் என்றது இவ்வுலகில் வாழ்கின்ற மக்களை. உலக மக்களிடத்து வள்ளல்களின் பெரும்புகழ் மிக்குத் தோன்றுவதுபோல விண்ணில் விரிந்த சந்திரனின் ஒளி கெடுமாறு வகைமிகு பெரும் புகழ் அருக்கன் தோன்றினன் எனக் கொண்டு கூட்டுக. அகல் மதி என்பதற்கு வானமீமிசையினின்றும் அகன்று செல்லும் மதி எனப் பொருள் கூறலும் ஆம். அகல் மதி ஒளிகெட அருக்கன் தோன்றினன் என்ற உவமேயத்திற்கு ஏற்ப உவமையிலும் அறிவாலும் செல்வத்தாலும் பெற்ற புகழினையுடைய மக்களின் புகழ் தாழ்ச்சியுறக் கொடையவர் புகழே மிக்குத் தோன்றுதல் போல என விரித்தும் கூறலாம். (276)

## இராமன் காலையில் மாதவர்க்குத் தானமளித்தல்

1246 காலையின் கடன்பல கழித்துக் காவலன்
மாலைவந் தடியிணை வணங்கிமாதவர்
சாலமா நிதிபெற வளித்த தண்புனல்
வேலைவா யெதிர்வுற விரைந்த மீன்களே.

காலையின் கடன்பல கழித்துக் காவலன்
மாலைவந்து அடியிணை வணங்கி மாதவர்
சாலமா நிதிபெற அளித்த தண்புனல்
வேலைவாய் எதிர்வுற விரைந்த மீன்களே.

பொ: உலக காவலனாகிய இராமன் காலைக் கண் செய்த நாளிய கடன்கள் பலவற்றையும கழித்துவிட்டு வந்து, அரண்மனைக் கோயிலில் உள்ள திருமாலைக் கண்டு அவன் திருவடிகளை வணங்கி விட்டு, மாதவத்தோர் மிகப்பெரிய நிதியைப் பெறுமாறு அளித்த பொழுது வார்ந்த தாரைநீர் கடலை எதிர்நோக்கிச் செல்ல, அப்போது கடலில் உள்ள மீன்கள் தானப்புனல் வழியே விரைந்து வந்தன.

கு: காலையின் கடன் என்றது, மலசலம் கழித்தலும் பல் துலக்கலும் நீரில் மூழ்குதலும் போன்றவற்றை. மால் என்றது இட்சுவாகு சக்கரவர்த்தி பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி மலரயனைவழிபட்டுக் கொணர்ந்த பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடராகிய அணியரங்க நாதனையே. இப்பெருமான் ஆயிரபௌலியான் எனவும் பேசப்படுகின்றான். 'ஏனைநீதியினையவும் வையகப், போனகற்கு விளம்பிப் புலன் கொளீஇ ஆவன் றொரு மாயிர மௌலியான், தான நண்ணினன் தத்துவ நண்ணினான்'' (அயோத்தி-மந்தரை சூழ்ச்சி 22) என்றது காணலாம். அளித்த தண்புனல் என்றது, அளித்தபோது தாரை வார்த்த தண்புனலை. இது தானப் புனல் எனவும் படும். தாரை வார்த்த நீர் கடலிடைக் கலந்தது என்றமையால் தானம் பெற்றோர் மிகுதியுணர்த்தியவாறு. புதுநீர் கடலிடைக் கலக்கும்போது கடலிலுள்ள மீன்கள் எதிர்நோக்கி ஏறிவருதல் இயல்பு. (277)

## இராமன் சிங்காசனத் தேறுதல்

1247 நலந்திக ழுலகொரு நான்கின்மேவிய
வலந்திகழ் மன்பதை மருங்கு சூழ்தரத்
துலங்கிய நவமணிச் சுடர்கொ ளாடகம்
இலங்குசிங் காதனத் திராம னேறினான்.

நலம் திகழ் உலகு ஒரு நான்கின் மேவிய
வலம் திகழ் மன்பதை மருங்கு சூழ்தர,
துலங்கிய நவமணிச் சுடர்கொள் ஆடகம்
இலங்குசிங் காதனத்து இராமன் ஏறினான்.

பொ: நன்மைகள் எல்லாம் விளங்குகின்ற முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்கின்ற நான்கு நிலங்களிலும் பொருந்திய வலிமைமிக்கு விளங்கும் மக்கள் கூட்டம் பக்கத்தில் சூழ்ந்துவர, ஒளியோடு விளங்கும் நவமணிகளைப் பதித்த சுடர்மிகு ஆடகப் பொன்னால் செய்யப்பட்டு விளங்கும் சிங்கம் சுமந்த இருக்கையில் இராமன் ஏறி அமர்ந்தான்.

கு: உலகொரு நான்கு என்றது நானிலத்தை. தொல்காப்பியர் இவற்றை "மாயோன் மேய காடுறையுலகமும், சேயோன் மேய மைவரையுலகமும், வேந்தன் மேயதீம்புனலுலகமும், வருணன் மேய பெருமணலுலகமும் முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (தொல். பொருள். அகத்திணை-5) என்ற நூற்பாவில் உலகம் எனக் குறியிட்டு ஆளுதலின் இவ்வாசிரியரும் அவரைப் பின்பற்றி 'நலந்திகழுலகொரு நான்கு' என்றார். நலம் திகழ்தலாவது, அவ்வந்நிலத்துக்குரிய கருப்பொருள்களால் சிறப்புறுதல். மன்பதை-மக்கட்தொகை. நான்கு நில மக்களுக்குள் உயர்வு தாழ்வு கருதாது எல்லோரையும் ஒப்பக் கருதினான் இராமன் என்பது புலப்பட "உலகொரு நான்கின் மேவிய வலந்திகழ் மன்பதை மருங்கு சூழ்தர" என்றார். துலங்குதல் ஒளி விளங்குதல். இலங்குதலும் அப்பொருளதே, நவமணிகளாவன:- கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வைடூரியம் என்பன. ஆடகடம் என்பது நால்வகைப் பொன்னில் ஒருவகைப்பொன். சிங்காதனம் என்றது, சிங்கங்கள் சுமந்திருப்பதுபோல அமைந்த இருக்கையை. ஏறினான் என்றது, ஏறி அமர்ந்தான் என்னும் பொருளது. (278)

## உலகமக்களோடு ஒக்க இருந்த இராமன் வான்மீகி காணுதல்

### வேறு

1248 அறைவே தங்கட் கறிவரியோன்
னற்றை வைகல் கழிந்த தற்பின்
மறையோர் மன்னர் வைசியர்சூத்
திரர்களாதி மண்ணுலகின்
உறைமா சனத்தை யொழியாம
லொக்கக் கூடிக் கலந்திருப்ப
நிறைஞா னத்து வான்மீகி நீள
நோக்கி யிது செய்தான்.

அறை வேதங்கட்கு அறிவரியோன் அற்றை வைகல் கழிந்த தற்பின்
மறையோர் மன்னர் வைசியர் சூத்திரர்கள் ஆதி மண் உலகின்
உறை மாசனத்தை ஒழியாமல் ஒக்கக் கூடிக் கலந்து இருப்ப,
நிறை ஞானத்து வான்மீகி நீள நோக்கி இது செய்தான்.

பொ: (எழுதாக்கிளவியாய்)ஓதுதற்குரிய வேதங்கட்கும் அறிதற்கு அரியோனாகிய திருமாலின் அவதாரமான இராமன் அன்றைய நாள் கழிந்த பின்பு, வேதியர், மன்னர், வைசியர், சூத்திரர்கள் முதலாக மண்ணுலகத்தில் வாழ்கின்ற மகாசனங்களை ஒருவரும் ஒழியாமல் ஒருங்கே கூடிக் கலந்திருப்ப, நிறைந்த ஞானத்தையுடைய வான்மீகி சிந்தனையோடு நெடிது நோக்கியிருந்து இதனைச் செய்தான்.

கு: அறைவேதம் என்றது, சொல்லுதற்கே உரியதாய் எழுதப்படாத வேதம் என்ற கருத்துப் புலப்படவேண்டி. வேதங்கட்கு அறிவரியோன் என்றது, வேதங்களாலும் முழுதும் அறிந்து சொல்லுதற்கு அரியவனாக விளங்கியவன் என்றவாறு. அற்றை வைகல்-அன்றைய நாள். நால்வகை வருணத்தோரைக் கூறிய பின் ஆதி என்றமையால் அனுலோமர், பிரதிலோமர், சங்கரர் என்ற கலப்பினத்தையும் கொள்க. மாசனம் என்றது மகா சனத்தை. தான் அரசன் அவர்கள் குடிமக்கள் என்ற வேறுபாடின்றி

ஒக்கக்கூடிக் கலந்திருந்தான் இராமன் என அவன் பொதுமைச் சிறப்பைப் புலப்படுத்தியவாறு. நீள நோக்குதல் என்றது சிந்தனையோடு நெடுநேரம் நோக்குதலை. செய்தது சீதையை அழைத்துக் கொண்டு இராமன் அவைக்கு வருதல். (279)

## வான்மீகி சீதையோடு இராமன் சபையில் புகுதல்

1249 ஈனப் பழிக்குத் தானிறைஞ்சி யிளையோன்
றன்னைப் பிரிந்த தற்பின்
மானக் கூர்வே னிறத்தூன்ற
வைக றோறுந் தளர்வாளை
கானிற் றெய்வங் கண்டிரங்கக்
கண்க ளாறுய்ச் சொரிவாளை
ஞானத் தவத்தோன் பின்கொண்டு
நாதன் சவையினுட்பு குந்தான்.

ஈனப் பழிக்குத் தான் இறை இளையோன் தன்னைப் பிரிந்ததற்பின் மானக் கூர்வேல் நிறத்து ஊன்ற வைகல் தோறும் தளர்வாளை கானில் தெய்வம் கண்டு இரங்கக் கண்கள் ஆறுய்ச் சொரிவாளை ஞானத் தவத்தோன் பின்கொண்டு நாதன் சவையினுள் புகுந்தான்.

போ: மிகத் தாழ்வான பழிச் சொல்லுக்காக இளையோன் தலைகுனிந்து தன்னைக் காட்டில் விட்டுப் பிரிந்த பின்பு, மானமாகிய கூரியவேல் மார்பகத்தில் அழுந்த நாள்தோறும் மனம் தளர்கின்றவளை-காட்டில் உள்ள தெய்வம் கண்டு இரங்குமாறு கண்கள் ஆறுபோலும்படி கண்ணீர் சொரிகின்ற சீதையை-ஞான மிக்க தவத்தோனாகிய வான்மீகி, பின்வர அழைத்துக் கொண்டு அயோத்தி வேந்தனாகிய இராமன் சபையில் நுழைந்தான்.

கு: ஈனப்பழி என்றது, இராவணனுக்குரிய இலங்கையில் பத்துமாதம் சிறையிருந்தவளை மீட்டும் அரசியாக்கியது பொருந்தாதென்று குடிமக்களில் சிலர் பேசிக்கொண்டிருந்த பழிச் சொல்லினை. ஈனம்-தாழ்வானது. சீதையின் கற்பில் ஐயப்படும் தாழ்வான பழிச் சொல்லுக்காக இராமன் சீதையைக் காட்டில்

விட்டு வருமாறு சொல்ல அவன் சொல்லை நிறைவேற்றிய இலக்குவன் அப்பழிச் சொல்லுக்காகத் தலைகுனிந்து பிரிந்து சென்றான் என்றவாறு. இறைஞ்சுதல்-தலைகுனிதல். மானவுணர்ச்சியை இங்குக் கூரிய வேலாக உருவகம் செய்தவாறு. ஊன்றுதல்-அழுந்துதல். தன்கற்பினை எரிபுகுந்து நிறுவிக் காட்டிய சீதை மீண்டும் ஈனப்-பழிச்சொல்லைக் கேட்டபொழுது, மார்பில் வேல் பாய்ந்தாற் போன்ற பெருந்துயரை அடைந்தாள் என்பது அவ்வுருவகத்தால் புலப்படுத்தியவாறு. கண்ணீர் ஆறு போலப் பெருக அழுது கொண்டிருந்த சீதையை வான்மீகி இராமன் அவைக்குள் அழைத்து வந்தார் என்க. (280)

## சீதையைக்கண்டு மக்கள் பேசுவது

1250 எண்ணா திவளைத் துறந்தனனிவ்
விறைவ னென்பா ரிறைவியைத்தம்
கண்ணாற் கண்டா ரெல்லாருங்
கண்கள் புதைப்பார் கையாரப்
பெண்ணா ரித் துயருற்றா
ரில்லை யென்று பெரியோராம்
மண்ணோ ரிவ்வா றுரைசெய்ய
வந்து சீதை யிது செய்தாள்.

**எண்ணாது இவளைத் துறந்தனன் இவ் இறைவன் என்பார், இறைவியைத்தம்**
**கண்ணால் கண்டார் எல்லாரும் கண்கள் புதைப்பார் கை ஆரப்,**
**பெண் ஆனார் இத்துயர் உற்றார் இல்லை என்று பெரியோராம்**
**மண்ணோர் இவ்வாறு உரை செய்ய வந்து சீதை இது செய்தாள்.**

பொ: இந்த அரசன், கற்பின் திண்மையை நினையாது இச் சீதையைத் துறந்துவிட்டானே! என்று இரக்கவுணர்வுடன் சிலர் பேசுவார்கள்; அரசியாகிய சீதையைத் தமது கண்ணால் கண்டவர் எல்லோரும் தம்கண்களைத் தம்கையார மூடிக் கொள்வார்கள்; 'பெண்ணாகப் பிறந்தவர்கள் இதுவரையில் இந்தத் துயரை அடைந்தவர்களில்லை' என்று பெரியோராகிய மண்ணுலகத்தவர் இவ்வாறு பேசிட வந்து சீதை இதனைச் செய்தாள்.

கு: எண்ணுதல்-நினைதல். இவ்விறைவன் என்றது இராமனை. இதுகாறும் கணவனைப் பிரிந்திருந்து காட்டில் தவக்குடிலில் வாழ்ந்திருந்து கண்ணீர் பெருக வாடிய முகத்துடன் வருகின்ற சீதையைப் பார்த்த பெண்டிர் அத்துயரைத் தாங்கமுடியாமையால் தம் கண்களைத் தம் கையால் மூடிக் கொண்டார்கள் என்க. இதுகாறும் எந்தப் பெண்டும் இத்தகைய துயரை அடைந்ததில்லை என்று அனுபவமுள்ள பெரும்பெண்டிர் கூறினர். இவ்வண்ணம் மண்ணவர் பற்பல சொல்ல வந்த சீதை என்க. அவள் செய்தது வரும் செய்யுளில் காணலாம். (281)

## சீதை யழுதுகொண்டு நிற்கும் நிலை

1251 விடுத்த பைங் கூந்தல்தன்
பாத மேவிட
உடுத்த வெண் டுகிலின
ளொசிந்த மேனியள்
எடுத்த வெம் பசலையா
ளேங்கு முள்ளத்தள்
அடுத்த வெந் துன்பத்த
ளழுது நின்றனள்.

விடுத்த பைங் கூந்தல்தன் பாதம் மேவிட
உடுத்த வெண் துகிலினள்- ஒசிந்த மேனியள்-
எடுத்த வெம்பசலையள்- ஏங்கும் உள்ளத்தள்
அடுத்த வெநதுன்பத்தள்- அழுது நின்றனள்.

---

282-அ. வசையறு செஞ்சொற் சீராமாயணம் கேட்க மண்ணிற்,
பசையறு நெஞ்சினேடும் பரிகதியெய்தச் செய்த
தசரதன் தனயன் வேள்வி கண்டிடத் தாழ்ந்த நெஞ்சன்,
குசலவரோடும் வந்தான் கோதறு குணவான் மீகி.

பொ: முடிக்காமல் பின்புறம் விடுத்த பசுமையான கூந்தல் தன் பாதத்தைப் பொருந்த உடுத்துக் கொண்டுள்ள வெண்மையான ஆடையையுடையவளாய் நாணத்தால் வளைந்த மேனியையுடையவளாய் – கையால் எடுப்பதற்குரியதாய் விருப்பத்தால் வரும் பசலையையுடையவளாய் - இராமனைக் காண ஏங்குகின்ற மனத்தை உடையவளாய் – தன்னை அடுத்துள்ள கொடிய துன்பத்தையுடையவளாய் அழுது கொண்டு நின்றாள்.

கு: கூந்தலின் நீளம் புலப்படக் 'கூந்தல் தன் பாதம் மேவிட' என்றார். பின்னுமலும் முடிக்காமலும் அவிழ்த்துவிட்ட கூந்தல் என்பார், 'விடுத்தபைங்கூந்தல்' என்றார். கணவனைப் பிரிந்துளோர் கூந்தலை அலங்கரித்தலும் வண்ணச் சீலையுடுத்தலும் மரபன்று ஆதலின் விடுத்தபைங்கூந்தலும் உடுத்தவெண்துகிலும் கூறினார். ஒசிதல்-ஒடிந்தாற்போல உடம்பு வளைதலையுணர்த்தியது. வெம்பசலை என்றது விருப்பத்தால் தோன்றும் பசலையை. அப்பசலை கையில் எடுத்துக் கொள்ளத்தக்கதாக மிக்கிருந்தது என்பார், 'எடுத்த வெம்பசலையள்' என்றார். "புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேனவ்வளவில் அள்ளிக் கொள்வற்றே பசப்பு" (திருக்குறள் 1187) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். கையால் எடுத்தற்கு உரியதாம்படி மிக்க வெம்பசலை என்க. கணவன் வெறுத்ததால் அடுத்த கொடிய துன்பம் என்க. (282)

---

282-ஆ. கோதில் மாதவத்தோன் பின்போம் குமரரைக் குறுக வந்து
மாதரும் மைந்த ரானோர் யாவரு மகிழு நெஞ்சர்
காதலா லவரை நோக்கிக் கருமுகில் வண்ணன் தீர்ந்த
தீதறு தவவேடத்தோர் யாவரோ வெனச் சிந்திப்பார்.

வித்தகன் முனிவன் பின்போம் மைந்தர்கள் முனிவேடத்துக்
கத்தர்க ளல்லரென்பார் காண்குதும் கடைக்காலென்பார்
கைத்தலந் துய்ய பாதம் கண்ணிணை கமல மென்பார்
இத்தலத் திவரைப் போல எழிலுளோ ரில்லை யென்பார்.

## இராமன் வான்மீகியை வணங்குதல்

1252 விரிகதி ரவனொளி விளங்க வீசிய
எரிமணிப் பூணினு னிராகவ னெதிர்
மருவுவன் மீகத்தின் வந்து தோன்றிய
அருமறை முனிவனை யடிவ ணங்கினுன்.

விரிகதிரவன் ஒளி விளங்க வீசிய
எரிமணிப் பூணினுன் இராகவன் எதிர்
மருவு வன்மீகத்தின் வந்து தோன்றிய
அருமறை முனிவனை அடிவணங்கினுன்.

---

283-அ. உத்தம குணத்துச் சீதை உருத்தரி கருவோடும்போய்ப்
புத்திர ரிருவர்ப் பெற்று ளென வெழு புலவ ரந்தத்
தத்துவ மாகவேண்டும் தசரத ராமன் தன்னை
வைத்துவாங் கினவா றெக்க மைந்தர்கள் வடிவிங்
கென்பார்.

ஆ. வானவர் துரந்தீக மறிகட லிலங்கை செற்ற
ஈனமில்வீர மைந்த ரென்னும திவர்கள் தங்கள்
மேனியே விளம்பி நிற்கும் வேறெரு சான்றும் வேண்டா
மானவன் தன்னை நோக்கி யையுற வாகி நிற்பார்.

இ. பெற்றவள் சனகன் பாவை பிதாவிவர்க் கிராமனென்றுள்
மற்றவர் வடிவை நம்மால் புகலலு மாமோ வென்பார்
இற்றைநா ளளவுஞ் செல்வ ரிவர்களை யழைத்துக்
காணுக்
கொற்றவன் கொடிய னென்பார் கொடுவினைப் பயனீ
தென்பார்.

ஈ. இவ்வகை சனங்கள் கூற யாகசாலையைவந் தெய்தும்,
ஐவகைப் புலன்கள் வென்றோனடியினை வணங்கியண்ணல்
செவ்வகைப் பூசைசெய்து சிறந்தன மொழிகள் செப்பி,
எவ்வகையாலும் வேறென் றில்லையே யுமக்கிங் கென்றுர்.

பொ: விரிகின்ற ஒளிக்கதிர்களையுடைய சூரியன் ஒளி தன்பால் விளங்குமாறு ஒளிவீசிய நெருப்புப் போன்ற மணிகள் பதித்த அணிகலன்களையணிந்த இராமன், தன்னெதிரில் வந்தடைந்த புற்றில் வந்து தோன்றிய - அரிய வேதங்களை யுணர்ந்த வான்மீகி முனிவனை அடிவணங்கினன்.

கு: கதிரவன் ஒளிபோன்று ஒளிவீசுகின்ற பூண் என்றவாறு. இனி, 'கதிரவனொளி விளங்க வீசிய எரிமணி' என்பதற்கு இராமன் அணிந்திருக்கும் பூணின் ஒளியால் விரிகதிரவனொளி விளக்கம் பெற்றது' என்றும் பொருள் கொள்ளலாம். எதிர்மருவு முனிவனை என இயையும். வன்மீகத்தின் வந்து தோன்றிய முனிவனை; அருமறை முனிவனை எனத் தனித்தனி இயையும். அடிவணங்கினன் என்றது, முனிவன் திருவடியில் இராமன் வீழ்ந்து வணங்கினன் என்றவாறு.

(283)

## சீதை நிலத்தை நோக்கி நிற்றல்

1253 வணங்கிய முனியைமுன் வைத்துத் தானுமோர்
இணங்கிய வாசனத் தினிதி ருந்தபின்
உணங்கிய முகத்தின ளொன்று நோக்கிலள்
நுணங்கிய பூமியை நோக்கி நின்றனள்.

வணங்கி அம்முனியை முன்வைத்துத் தானும் ஓர்
இணங்கிய ஆசனத்து இனிது இருந்தபின்
உணங்கிய முகத்தினள் ஒன்றும் நோக்கிலள்
நுணங்கிய பூமியை நோக்கி நின்றனள்.

பொ: இராமன் அவ்வாறு அடிவணங்கி அம் முனிவனை முன்புள்ள சிறந்த ஆசனத்தில் இருக்கச் செய்துவிட்டுத் தானும் ஒரு பொருந்திய ஆசனத்தில் இனிதாக இருந்த பின்பு, சீதை உலர்ந்து வாடிய முகத்தினையுடையவளாய் வேறொன்றையும் நோக்கிலளாய் நுண்ணிய மண்ணணுக்கள் செறிந்த பூமியையே நோக்கி நின்றாள்.

கு: அம்முனியை எனல் வேண்டும் மகரம் தொகுத்தல் விகாரத்தால் தொக்கது. தானும் என்றது இராமனை. இணங்குதல்-பொருத்தமாதல். உணங்குதல்-உலர்தல். துன்பத்தால் முகம் உலர்ந்து வாடியிருந்தது என்க. இராமனையும் விரும்பிநோக்கு வில்லை என்பார், 'ஒன்றும் நோக்கிலள்' என்றார். நுணங்கிய பூமி என்றது, நுண்ணிய மண் அணுக்களின் செறிவே பூமி என்பதைப் புலப்படுத்தி நின்றது. 'மண்டிணிந்த நிலனும்' (புறநா. 2) என்றது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (284)

## சீதையின் கற்பினை யானறிவேன் என வான்மீகி கூறுதல்

1254 காதலி கற்புகா சினியின் மீதலால்
மீதல மிசையருந் ததியு மேத்துவ
தாதலை யநகனே யறிவல் யானெனக்
கோதிலா வருமறை முனிவன் கூறினான்

'காதலி கற்பு காசினியின் மீது அலால்
மீதல மிசை அருந்ததியும் ஏத்துவது
ஆதலை அநகனே! அறிவல் யான்' எனக்
கோது இலா அருமறை முனிவன் கூறினான்.

பொ: 'பாவம் இல்லாத இராம! நின் காதலியின் கற்பு பூமியின் மீதேயன்றி விண்ணின் மிசையுள்ள அருந்ததியும் ஏத்தக்கது ஆதலை (உடனிருந்து நெடுநாள் பழகிய) யான் அறிவேன்' என்று குற்றமற்ற அரிய வேதங்களையுணர்ந்த வான்மீக முனிவன் சொன்னான்.

கு: அநகன்-பாவம் செய்யாதவன். இராமனை இவ்வாறு விளித்தலால் அவன் மனைவியாகிய சீதையும் பாவம் அற்றவள் ஆதலைக் குறிப்பினால் புலப்படுத்தியவாறு. காசினி-பூமி. காசிபர் மகள் ஆதல் பற்றிப் பூமிக்கு அப்பெயர் வந்தது. மண்மிசை யாரும் போற்றுவதேயன்றி விண்மிசை அருந்ததி என்னும் கற்புத் தெய்வமும் போற்றுதற்குரிய கற்புடையாள் சீதை என்பதைப் பல்லாண்டுஉடனிருந்து பழகிய யான்அறிவேன் என்று

வான்மீக முனிவர் கூறியவாறு. அவர் சொல் நம்பத்தக்கது என்பது புலப்படுத்த வேண்டிக் கோதிலா முனிவன் எனச் சிறப்பித்தார். (285)

1255 அன்னது வாய்மையென் றோதிக் கங்கைபோல்
மன்னிய குலத்தொரு மாசு கூறுவோர்
துன்னிய நரகிடைத் துய்ப்ப ராலென
இன்னது மீளவு மிசைத்தி ருந்தனன்.

அன்னது வாய்மை என்று ஓதிக் கங்கைபோல்
மன்னிய குலத்து ஒரு மாசு கூறுவோர்
துன்னிய நரகிடைத் துய்ப்பரால் என
இன்னது மீளவும் இசைத்து இருந்தனன்.

பொ: யான் கூறிய அது சத்தியம் என்று சொல்லிவிட்டுக் கங்கைபோல் தூய்மையானதாக நிலைபெற்ற சனகன் குலத்தில் ஒரு மாசு கற்பித்துக் கூறுகின்றவர்கள் நெருங்கிய நரகத்தில் வீழ்ந்து துன்பம் அனுபவிப்பார்கள் என இதனை மீளவும் சொல்லி அமர்ந்தான்.

கு: தூய்மைக்குக் கங்கையைக் கூறுவது மரபு. கங்கைபோல் மன்னிய குலம் என்றது சனகன் குலத்தை. துய்ப்பர் என்றது நரகத்துன்பத்தை அனுபவிப்பார் என்றபடி. (286)

## இராமன் கூறியது

1256 முனிவநீ யருளிய மொழியை வானவர்
அனைவரும் யானுமுன் னறிவ மாயினும்
கனைகட லுலகுளோர் காண்டல் வேண்டுமென்
றினையன விராகவ னெடுத்தி யம்பினான்.

முனிவ! நீ அருளிய மொழியை வானவர்
அனைவரும் யானும் முன் அறிவம்; ஆயினும்,
கனைகடல் உலகு உளோர் காண்டல் வேண்டும் என்று
இனையன இராகவன் எடுத்து இயம்பினான்.

பொ: முனிவ! நீ சொல்லி அருளிய சொல்லை அமரர் அனைவரும் யானும் முன்பே அறிவோம்; ஆயினும், ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்ட உலகில் உள்ளவர்களும் அவள் கற்பின் சிறப்பைக் காண வேண்டும் என்று இத்தன்மையான சொற்களை இராமன் எடுத்துச் சொன்னான்.

கு: இலங்கையில் எரியில் மூழ்கிச் சீதை தன் கற்பினை நிறுவிய நிகழ்ச்சியைத் தேவரும் யானும் அறிவோம். இங்குள்ள மண்ணுலக மக்களும் காண்டல் வேண்டும் என்று மீண்டும் அதனை விரும்புவதாக இராமன் சொன்னான். (287)

## இராமன் அவையில் கூறியதைக்கேட்ட சீதையின் நிலை

1257 நாட்டிய வுலகொரு நான்கு மோர்வயின்
ஈட்டிய வவைநடு விசைத்த வம்மொழி
வாட்டடங் கயல்விழி மடந்தை மைதிலி
கேட்டன ணினைதொறுங் கிழியுஞ் சிந்தையாள்.

நாட்டிய உலகு ஒரு நான்கும் ஓர்வயின்
ஈட்டிய அவைநடு இசைத்த அம்மொழி
வாள்தடங் கயல் விழி மடந்தை மைதிலி
கேட்டனள் நினைதொறும் கிழியும் சிந்தையாள்.

பொ: பெரியோர்கள் நிலைநாட்டிக்கூறிய நான்கு நிலத்துள்ளவரும் ஓரிடத்து நெருங்கியுள்ள சபையின் நடுவில் இராமன் சொல்லிய அச்சொல்லை வாள்போன்று கூரிய பெரியகயல் போன்ற பிறழ்ச்சியினையும் கொண்ட விழியினை யுடைய மடந்தைப் பருவத்தளாகிய சீதை கேட்டாள்; அச்சொல்லை நினைக்குந் தொறும் கிழிகின்ற நெஞ்சினையுடையவள் ஆனாள்.

கு: தொல்காப்பியர் முதலிய தொல்லாணை நல்லாசிரியர்கள் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என நாட்டிய உலகு ஒரு நான்கு என்க என்றது நானிலத்து மக்களை. ஈண்டிய எனற்பாலது எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. நினைதொறும் கிழியும் சிந்தையள் ஆனாள் என ஆக்கம் கொடுத்து முடிக்க. (288)

## சீதையின் எண்ணங்கள்

1258 ஒன்றிய கேண்மையா னுவந்த போதினும்
கன்றிய போதினுங் கலந்த போதினும்
நன்றென நிலைகெடா நலங்கொள் கற்பினை
இன்றொரு பொருளினா லியம்பற் பாற்றதோ.

ஒன்றிய கேண்மையான் உவந்த போதினும்,
கன்றிய போதினும், கலந்த போதினும்,
நன்று என நிலைகெடா நலம் கொள் கற்பினை
இன்று ஒரு பொருளினல் இயம்பற் பாற்றதோ?

பொ: உயிரோடு ஒன்றிய கேண்மையை யுடைய நாயகன் தன்னை மகிழ்ந்து பாராட்டிய காலத்தும் சினந்து இகழ்ந்த காலத்தும் தன்னைக் கலந்தின்புற்ற காலத்தும் எல்லாம் நல்லதே எனத் தன் நிலை கெடாமல் நன்மையையே கைக்கொள்கின்ற கற்பினை இன்று ஒருபொருளினல் சொல்லும் தரத்ததோ? அன்று.

கு: ஒன்றிய கேண்மை யென்றது, ஒருங்கிய இரண்டுடற்குயி ரொன்றுதல் கன்றுதல் - கோபித்தல். கணவன் செய்ததனை நன்றெனக் கொள்கின்ற கற்பு; நிலைகெடா கற்பு என்க. கணவன் வேறுபாடு கண்டு தானும் வேறுபடாது ஒரு நிலையாக நின்று கணவன் செய்தனவெல்லாம் நன்றெனக் கொள்கின்ற கற்பு என்றவாறு. பல்லாண்டுகள் நிலைகெடாமல் ஒழுகிய கற்பினை இன்றைக்கு ஒரு பொருளினல் இயம்பத்தக்கதன்று என்க. (289)

1259 பூதல மிசையருந் ததியும் போற்றிய
தா தலை யறிந்திருந் தவனி மீமிசைத்
தீதிலென் கற்பினைத் திகழ்ந்துமேவிய
காதலன் றீதெனிற் கரியுண் டாகுமோ?

பூதல மிசை அருந்ததியும் போற்றியது
ஆதலை அறிந்திருந்து அவனி மீமிசைத்
தீதுஇல் என் கற்பினைத் திகழ்ந்து மேவிய
காதலன் தீது எனில் கரி உண்டாகுமோ?

பொ: மண்ணுலகிற்கு மேல் உள்ள விண்ணில் விளங்கும் அருந்ததியும் போற்றிப் புகழ்ந்தது ஆதலே அறிந்திருந்தும் இப் பூமியின்மேல் குற்றம் அற்ற எனது கற்பினை விளக்கம் பெற்று என்னுடன் கலந்து பழகிய காதலனுகிய இராமனே தீயது என்று சொல்லுவான் ஆயின் வேறு சான்றும் இவ்வுலகில் உண்டாகு மோ? ஆகாதுகாண்.

கு: மிசை என்றது விண்ணினை. நிலமிசை என்பதற்குப் பரிமேலழகர் எழுதிய உரையை இங்கு நினைவுகூரலாம். அருந்த தியும் என்புழி உம்மை உயர்வு சிறப்புப் பொருளது· அறிந் திருந்தும் என்புழி உம்மைவிகாரத்தால் தொக்கது. அவனி மீமிசை-பூமிமேல். திருமணத்தில் பல்லோர் அறிய மணந்து கலந்து பல்லாண்டு பழகிய கணவன் என்பார் 'திகழ்ந்து மேவிய காதலன்' என்ருர். தீதில்லாத என் கற்பினை அவனே தீதுடையதாகச் சொன்னபின் என் கற்பிற்குச் சான்று கூறுவார் பிறர் இலர் என்றவாறு. 'சீலமின்ன தென்றருந்ததிக் கருளிய திருவே' (ஆரணிய-சித்திரகூடப்படலம்). என்பது இங்கு நினைக.
(290)

1260 மறுத்தினி யுரைப்பதென் வாயின் வைத்தநஞ்
சிறக்கிடி னலதுயிர்க் கிறுதி செய்யுமோ
அறக்கொடும் பழியுரைத் தருள்வ ராயினுர்
பிறர்க்கெனே நெஞ்சினைப் பிளந்து காட்டுகேன்.

**மறுத்து இனி உரைப்பது என்? வாயில்வைத்த நஞ்சு**
**இறக்கிடின் அலது உயிர்க்கு இறுதி செய்யுமோ?**
**அறக் கொடும் பழிஉரைத்தருள் வராயினுர்;**
**பிறர்க்கு என் நேர்ம் நெஞ்சினைப் பிளந்து காட்டுகேன்.**

பொ: 'இராமன் கருத்தை மறுத்து இனிச்சொல்வது எதற்கு? வாயில் வைத்த நஞ்சு வாய்க்குள் இறக்கினுல் அன்றி உயிர்க்கு மரணத்தை உண்டாக்குமோ? ஆக்காது காண்; அறவும் கொடி யதாகிய பழியைச் சொல்வராயினர் மக்கள்; அவர் சொல்லைக் கேட்டு நோகின்ற எனது நெஞ்சினைப் பிறர்க்குப்பிளந்து காட்டு கின்றேன்' (எனச் சில முதிர்கின்றபோது)

கு: கிண்ணத்தில் உள்ள நஞ்சினை வாயருகே வைத்த அளவில் உயிரைக் கொல்லாது; வாயில் அதனை ஊற்றினால் தான் கொல்லும். அதுபோலப் பிறர் சொல்லும் பழிச்சொல் லிற்குரிய கொடுமை என்பாலிருந்தாலன்றி அச் சொல் எனக்குத் தீமை புரியாது என்றவாறு. இது பிறிது மொழிதல் என்னும் அணியின்பாற்படும். அற என்பது முழுவதும் என்ற பொருளது. பிறர் கூறும் பழிக்குரிய காரணம் என்னெஞ்சிலும் இல்லை என்பது புலப்படுத்த அதனைப் பிளந்து காட்டிவிடுகின்றேன் எனச் சீதை சினந்து கூறியவாறு. "என்னெஞ்சந் திறப்போர் நிற்காண்குவரே" (புறநா. 175) என்பது இங்கு நினையத்தகும். (271)

## வான்மீகியின் கமண்டல நீரைப் பருகிச் சீதை சொல்லியது

1261 தேங்கமழ் குழலியை முனிவன் சீறலென்
றாங்கவ னுரைப்படி யையந் தீர்கெனத்
தாங்கிய கமண்டலத் தண்ணெ னீரினை
வாங்கியா சமித்திவை வழங்கி னாளரோ.

தேங்கமழ் குழலியை முனிவன் சீறல் என்று
ஆங்கு அவன் உரைப்படி ஐயம் தீர்கென,
தாங்கிய கமண்டலத் தண் என் நீரினை
வாங்கி ஆசமித்து இவை வழங்கினாளரோ.

பொ: 'தேன்கமழ்கின்ற கூந்தலையுடைய சீதையைப் பார்த்து வான்மீகி முனிவன் 'சீறாதே' என்று கூறிவிட்டு 'அந்த இராமன் சொற்படி ஐயத்தைத் தீர்ப்பாயாக' என்று சொல்லாநிற்க, அவன் கையில் தாங்கியுள்ள கமண்டலத்திலிருந்த குளிர்ந்த நீரினைச் சீதை வாங்கிப் பருகிவிட்டு இவற்றைக் கூறினாள்.

கு: சீறல்-சீறாதே. 'மகனெனல்' என்புழிப்போல அல்லீற்று எதிர்மறை முற்று. என்று என என்பன இரண்டும் அடுக்கி வந்தன. சீறாதே என்று சொல்லிவிட்டு, அவன் உரைப்படி ஐயம் தீர்க எனச் சொன்னாக என விரித்துரைக்க. ஆசமித்து

அருந்தி. ஆசமனம் - என்ற பெயர்ச்சொல்லின் அடியாகப் பிறந்த வினையெச்சம். வழங்குதல் என்றது சொல்லுதலை. (292)

## சீதை இராமன் தாள் வணங்கிச் சொல்லியது

1262 தன்கணவன் செய்கொடுமை யினைத்தானுட்
கொள்ளாச்சா னகிதான்
என்கணவன் செய்தனவெல் லாமிதமா
மெனக்கென் றேநினைந்த
பின்கணவன் றனுடல்கண் டுபெரிதாற்
றுதுபோய் வீழ்ந்து
புன்கணவன் றன்பொறைதீர்த் தான்பொற்றாள்
வணங்கிப்பு விக்குரைப்பாள்.

தன்கணவன் செய்கொடுமையினைத் தான் உள்கொளளாச்
சானகிதான்
என்கணவன் செய்தன எல்லாம் இதமாம் எனக்கு என்றே
நினைந்த
பின் கணவன்தன் உடல்கண்டு பெரிது ஆற்றாது போய் வீழ்ந்து
புன்கணவன் தன்பொறைதீர்த்தான் பொற்றாள் வணங்கிப்
புவிக்கு உரைப்பாள்.

பொ: தன்னுடைய கணவன் செய்த கொடுமையினைத் தான் தன் உள்ளத்தில் கொள்ளாத சீதை தான், 'என்னுடைய கணவன் என்னிடத்துச் செய்தன எல்லாம் எனக்கு இதயானதேயாகும். என்றே நினைந்தபின், கணவனது உடலைக் கண்டு மிகவும் ஆற்றாதுபோய் வீழ்ந்து, துன்பம் உற்றவனைத் தன்பாரத்தைத் தீர்த்தவனாகிய இராமனுடைய பொனபோன்ற அரிதாகிய பாதங்களை வணங்கிப் பூதேவிக்குச் சொல்லுவாளானாள்.

கு: கணவன் செய்கொடுமையை மனத்துக் கொள்ளாதவள் சீதையாதலின் அவன் செய்தன எல்லாம் எனக்கு இதம் ஆகும் என்று நினைப்பாள் ஆயினள். இதம்-இனியது. இன்னாதன வற்றையும் இனிதெனக் கொள்ளும் பண்பு சீதைக்கு வந்து விட்டமையால் கணவன் ... ஆற்றாமை

மிக்கு வீழ்வாள் ஆனாள் என்க. புன்கண்-துன்பம். புன்கணவன்-துன்பம் உற்றவன்; துன்பம் உற்றவனாய்த் தன் பாரத்தை நீக்கிக் கொண்டவன் (இராமன்) என முற்றெச்சமாக்கி முடிக்க. சீதையைத் தன்பால் வைத்துக் காப்பாற்றுவதைத்தன் பாரமாக ஏற்றுக் கொள்ளாமல் நீக்கிவிட்டவன் இராமன் என்பது புலப்படுத்தியவாறு. பொறை-பாரம். பொறைதீர்த்தான் என்பது சீதையைக் காப்பாற்றும் பாரத்தை ஏற்றுக் கொள்ளாமல் கானகத்தில் விட்டவன் என்னும் கருத்தினது. அவன் நடைத்த வழியும் தான் போகாது நின்று அவன் பொன்னடியை வணங்கி விட்டுத் தன்னைப் பெற்ற தாயாகிய மண்மகளை நோக்கிக் கூறுவாளானாள். (293)

## சீதை மண்மகளை நோக்கித் தனக்கு இடந்தருக எனல்

1263 வினைப்பாசத் தையறுத்த முனிவேள்வி
காத்துமி திலைபுகுந்
தெனக்காவீ சன்வில்லி றுத்தன்றெனைக்
கைப்பிடித்த வெழிலாரும்
புனக்காயாம் பூநிறத்தா னையன்றி
மற்றோர்பூ மனையான்
மனத்தாலவாக் கானினையே னேலவழிதா
வெனக்குமண் மகளே.

வினைப்பாசத்தை அறுத்த முனிவேள்வி காத்து மிதிலை புகுந்து
எனக்கா ஈசன் வில் இறுத்து அன்று எனைக்கைப்பிடித்த
எழிலாரும்
புனக்காயாம் பூநிறத்தானை அன்றி மற்றோர் பூமனையான்
மனத்தால் வாக்கால் நினையேனேல் 'வழிதா எனக்கு' மண்மகளே.

பொ: இருவினையாகிய பாசத்தை அறுத்தெறிந்து தவ முனிவனாய் விளங்கிய விசுவாமித்திரனுடைய வேள்வியை அரக்கர்களால் தீங்கு நிகழாதவாறு காத்து விட்டு மிதிலையில் புகுந்து என்னை மணப்பதற்காகச் சிவதனுசினை ஒடித்து அன்றைக்கு எனது கையைப் பற்றி மணந்துகொண்ட அழகு நிறைந்த காட்டில்உள்ள காசம்பூப்போன்ற நிறத்தையுடையவனை

அல்லாது மற்றொரு மன்னனை யான் மனத்தாலும் வாக்கினாலும் நினையாதவளாய்ச் சொல்லாதவளாய் இருப்பேனேயானால் நிலமகளே! எனக்கு ஒடுங்க இடங்கொடுப்பாயாக!

கு: முனி என்றது, விசுவாமித்திரனை. வினைப்பாசம்- இருவினையாகிய பாசம். 'இருவினைப்பாசமும் மலக் கலார்த்தலின்' (பெரிய திருநாவுக்கரசு புராணம்) என்பது இங்கு ஒப்பு நோக்கலாம். வேள்வி காத்தல் ஆவது, தாடகையாலும் அவள் மக்களாலும் செய்யப்பட்ட இடையூறுகளால் வேள்வி தடையுறா வண்ணம் அவர்களைக் கொன்றும் ஓட்டியும் காத்தல். எனக்காக என்னும் ஈறு தொக்கது. இறுத்தல்-ஒடித்தல். காயா என்னும் செடி. தோன்றும் இடம் தோன்ற புனக்காயாம்பூ என்றார். பூமன்-அரசன். நினைத்தற்கு வினைமுதல் மனம். வாக்கால் என்பதற்கு வினைகூறாரேனும் சொல்லாதவளாய் என்ற வினை வருவிக்கப்பட்டது. (294)

1264 வருந்தியே பயந்தநீ மற்றென் கற்புமவ்
வருந்ததி கற்புமொன் றுன தென்றிடின்
பெருந்துதி மாநிலம் பிளத்தி யென்றனள்
இருந்துதி யமரரு மேத்துங் கற்பினாள்.

வருந்தியே பயந்த நீ மற்று என் கற்பும் அவ்
அருந்ததி கற்பும் ஒன்றுனது என்றிடின்
பெருந்துதி மாநிலம் பிளத்தி என்றனள்-
இருந்துதி அமரரும் ஏத்தும் கற்பினாள்.

பொ: பெரிய போற்றுதலுக்குரிய தேவர்களும் துதிக்கும் கற்பினையுடையவளாகிய சீதை (நிலமகளை நோக்கி) 'பெரியதுதி பாடுதற்குரிய சிறந்த நிலமகளே! என்னை வருந்திப் பெற்ற நீ என்னுடைய கற்பும் விண்ணில் உள்ள அந்த அருந்ததியின் கற்பும் ஒரு தன்மையது என்றால் எனக்கு இடங்கொடுத்துப் பிளப்பாயாக' என்று கூறினாள்.

கு: மகப்பெறுவார் பத்துத் திங்கள் சுமந்து வருந்திப் பெறுதல் இயல்பாதலின் அவ்வியல்பு புலப்பட நிலமகளும் தன்னை வருந்திப் பெற்றதாகக் கூறினாள். கற்புடைய மங்கையர்க்

கெல்லாம் எடுத்துக் காட்டாக விளங்குபவள் அருந்ததி. அந்த அருந்ததியின் கற்பும் தன்கற்பும் ஒரு தன்மையது என்பதைத், தெய்வத்தன்மையுடைய பூதேவி அறிவாள் ஆதலின், அவ்வாறிருந்தால் எனக்கு இடம் கொடுக்கப் பிளப்பாயாக என்று சீதை வேண்டுவாளாயினள். அமரரும் என்றது உம்மை உயர்வு சிறப்பது. கற்பினள், மாநிலம்! ஒன்றுன தென்றிடின் பிளத்தி என இயையும். பெருந்துதிக்குரிய மாநிலம், இருந்துதிக்குரிய அமரர் என்க. (295)

## பூதேவி தோன்றுதல்

1265 பலதலை மாசுணப் பள்ளி மேவிய
நிலைபெறு கற்பினு ணிதிகொண் மேனியாள்
மலைமுலை யாகத்தாண் மாரிக் கூந்தலாள்
அலைகட லாடையா ளவனி தோன்றினுள்.

பலதலை மாசுணப் பள்ளி மேவிய
நிலைபெறு கற்பினள் - நிதிகொள் மேனியாள்
மலைமுலை ஆகத்தாள்-மாரிக் கூந்தலாள்
அலைகடல் ஆடையாள் அவனி தோன்றினுள்.

பொ: ஆதிசேடனின் ஆயிரந்தலைகளாகிய பள்ளியில் தங்கியுள்ள நிலைபெற்ற கற்பினையுடையவளும், நிதிகளையெல்லாம் தன்பால் கொண்டுள்ள மேனியையுடையவளும், மலைகளாகிய முலைகள் தங்கிய மார்பினையுடையவளும் மேகமாகிய கூந்தலையுடையவளும் அலைகளையுடைய கடலாகிய ஆடையை யுடையவளும் ஆகிய பூமிதேவி சீதைமுன் தோன்றினுள்.

கு: மாசுணம் என்றது இங்கு ஆதிசேடனுகிய பாம்பினை. பூமி ஆதிசேடனுல் தாங்கப்படுகின்றது, என்ற புராண மரபு கருதிப் பூமியை, 'மாசுணப் பள்ளி மேவிய நிலைபெறு கற்பினள்' என்றுர். பூமிக்குப் பள்ளியாதற்குரியது தலையே யாயினும் முதலுக்கும் சினைக்கும் உள்ள ஒற்றுமை கருதி மாசுணப்பள்ளி மேவியதாகக் கூறினர். 'மாசுணப் பல தலைப் பள்ளி' என மாற்றிக் கூறுக.

மாசுணப்பள்ளியிலன்றி வேறிடத்தில் மேவாமை கற்பாதல் காணலாம். ஆயிரந்தலைகளையே பலதலை என்றார். பெண்மேனியில் அணிகலன்களை யணிதல் உண்டு ஆதலின் இங்குப் பூதேவி பலவகையான நிதிகளாகிய அணிகளைக் கொண்ட மேனியள் என்றார். தரைமேல் தோன்றும் மலைகளையே முலைகளாகக் கொண்ட மார்பகத்தையுடையவள் என்றவாறு. மாரி என்றது, மேகத்தை. மேகமாகிய கூந்தலையுடையவள் என்க. கடலைப் பூமிக்கு ஆடையாகக் கூறுதல் மரபு. இவை யாவும் உருவகங்கள். அவனி என்றது பூதேவியை. (296)

## வந்த பூமிதேவி பூமியைப் பிளந்துகொண்டு சீதையுடன் மறைதல்

1266 சேணுலா வியதல மடந்தை சீதைதன்
பூணுலா வியபுயம் பொருந்தப் புல்லுறீஇ
வாணிலா வியகதிர் வழங்கல் செல்க லாக்
கீணிலைப் படலமுங் கிழியப் போயினாள்.

சேண்நிலாவிய தலமடந்தை, சீதைதன்
பூண்உலாவிய புயம் பொருந்தப் புல்லுறீஇ,
வாள்நிலாவிய கதிர் வழங்கல் செல்கலாக்
கீண் நிலைப் படலமும் கிழியப் போயினாள்.

பொ: விண்ணில் இயங்கிய பூமியின் அதிதேவதையாகிய பெண், சீதையின் அணிகலன்கள் உலாவுகின்ற தோள்களை அழுந்தத் தழுவிக் கொண்டு, ஒளிபொருந்திய சூரியனின் கதிர்கள் நுழைய இயலாததாய்க்கீழே நிலைத்துள்ள தரைமறைப்பும் கிழியு மாறு செய்து உள்ளே சென்று மறைந்தாள்.

கு: உழுபடைச்சாலில் தோன்றிய சீதை பூமியில் தோன்றின வளாகக் கருதப்படுதலின் சீதையின் தாய் பூமியே யாதல் தெளிவு. தலமடந்தை என்றது, பூமியின் அதிதேவதையாகிய பூதேவியை. சீதை அழைத்தபோது விண்ணில் இயங்கி வந்தமை புலப்பட, 'சேணிலாவிய நில மடந்தை'. என்றார். கழுத்தில் அணியும் அணிகலன்களைத் தோளில் அணிந்ததாகக் கூறலும் உண்டு. ஆதலின், 'பூணுலாவியபுயம்' என்றார். பொருந்தப் புல்லுதவாவது

அழுந்த அணைத்துக் கொள்ளுதல். சீதைவேறு தான்வேறு என்பதின்றிப் பூதேவி சீதையைத் தன்னேடு ஒன்று படும்படி அணைத்துக் கொண்டு பூமியைக் கிழித்துக் கொண்டு நுழைந்தாள் என்றவாறு. (297)

## சீதையைக் காணுது இராமன் கூறுதல்

1267 தீதல தென்வயிற் றிகழ்ந்த திங்ஙனே
ஆதலி தென்கொலென் றைய மெய்திடாக்
காதலி போனதோர் வழியுங் காண்கிலான்
பூதல மடந்தையைப் புலந்து சீறினன்.

தீது அலது என்வயின் திகழ்ந்தது; இங்ஙனே
ஆதல்இது என்கொல் என்று ஐயம் எய்திடாக்
காதலி போனதோர் வழியும் காண்கிலான்
பூதல மடந்தையைப் புலந்து சீறினன்

பொ: என்னிடத்துத் தீமையில்லாத நன்மையே இதுகாறும் விளங்கியிருக்கின்றது; அங்ஙனமாகவும் சீதைமறைந்ததாகிய இது நிகழ்தல் என்ன காரணத்தால் என்று ஐயம் எய்திக் காதலியாகிய சீதை போனதொரு வழியையும் காணுதவனுய் அவளை மறைத்துக் கொண்ட பூமிதேவியை வெறுத்து அவள்மேல் சீற்றம் கொண்டான்.

ரு: தீமைசெய்தோர்க்குத் தீமையுண்டாதலும் நன்மை செய்தோர்க்கு நன்மை யுண்டாதலும் முறையாகும். அம்முறைக்கு மாருகத் தீது அல்லாத நன்மையே விளக்கம் பெற்றுள்ள என்னிடத்து இவ்வாறு காதலி தரைக்குள் மறைந்துபோன தீய நிகழ்ச்சி நிகழ்ந்தது எங்ஙனம் என்று இராமன் ஐயம் எய்திச் சீதை போன வழியையும் காணுதவனுய் அவளைத் தன்னெடு சேர்த்துக் கொண்டு மறைந்த பூமிதேவியின் மேல் வெறுப்புக் கொண்டு சீறினன் என்க. சீதையொடு பூமிதேவி பூமியில் மறைந்ததும் அவர் சென்ற வழியும் மறைந்தது என்றவாறு. புலத்தல்- வெறுத்தல். பூதல மடந்தையும் திருமாலுக்கு மனைவியாதலின் திருமாலின் அமிசமாகிய இராமனுக்குப் பூதலமடந்தை மேல்

புலத்தல் உண்டாயிற்று. நீதலது என்றது நன்மையை. இது ஆதல் என்சொல் என இயையும். இது என்றது, சீதை, மறைந்ததாகிய இது என்றவாறு. (298)

## இராமன் கோபச் சொற்கள்

1268 முனிவனோ ரங்கையின் முகந்து கொண்டவக்
கனைகடல் புடைத்திடக் கிடந்த காசினி
பனிமதி வேணியான் பாவம் போக்கிய
புனிதனோ ரடிக்கிடம் போந்த தில்லையால்.

முனிவன் ஓர் அங்கையின் முகந்து கொண்ட அக்
கனைகடல் புடைத்திடக் கிடந்த காசினி,
பனிமதி வேணியான் பாவம் போக்கிய
புனிதன் ஓரடிக்கு இடம் போந்தது இல்லையால்

பொ: அகத்தியமுனிவன் ஓர் உள்ளங்கையில் முகந்துகொண்ட அந்த ஒலிக்கின்ற கடல் அலைகளால் மோதிடக் கிடந்த பூமியானது, குளிர்ந்த பிறைச்சந்திரனை அணிந்த சடையையுடைய சிவபிரானது பாவத்தைப் போக்கிய தூயவனாகிய திருமாலின் ஓர் அடிக்கு இடம் போதியதாக இல்லாமல் குறைந்திருந்தது.

கு: இராமன் கோபத்தால் பூமியின் சிறுமையை விளக்குகின்றான். கடலால் அலைக்கப்படுகின்றது பூமி; அந்தக் கடல் ஒரு முனிவன் தன் உள்ளங்கையில் முகந்து கொள்ளும் அளவிற்குச் சிறுமையுடைய கடல் நீரால் அலைப்புண்கின்ற அளவிற்குச் சிறுமையுடையது பூமி. மேலும், திருமால் திருவிக்கிரமனாய் மூவுலகும் ஈரடியால் அளந்தபோது ஓரடி வைத்தற்கும் இடம் போதாத சிறுமையும் அதற்குண்டு. இத்தகைய சிறுமையுடைய பூமி அச்சம் இன்றிச் சீதையைத் தழுவிக் கொண்டு பூமிக்குள் மறைதல் பொருந்தாச் செயல் என்றவாறு. வேணியான் என்றது சிவபிரானை. அவன் பிரமனது தலையைக் கிள்ளிய ஞான்று தலை கையில் ஒட்டிக்கொண்டதாக அதற்குத் திருமால் தன் நெற்றியைக் கீறிக் குருதியை அந்தப் பிரம கபாலத்தில் சொரிய சிவன் கையிலிருந்து பிரமகபாலம் விட்டு நீங்கியது; அக்கொலைப் பாவமும் நீங்கியது. ... குறளனாய்ச்

சென்று மூன்றடிமண் கேட்டுப் பெற்றுத் திரிவிக்கிரமனாய் வளர்ந்து அளந்தபோது அவன் ஓரடியளவிற்குப் போதாது ஆயிற்றுப் பூமி என அதன் சிறுமை புலப்படுத்தியவாறு. (299)

## மேலும் பூமியின் சிறுமை புகல்வது

1269 குயிற்றிடப் புனைந்த நன் மவுலிக் கோளராத்
துயிற்றிடக் கிடந்ததுஞ் சூகரத்தினார்
எயிற்றிடைக் கிடந்தது மெங்க ணாயகன்
வயிற்றிடைக் கிடந்தது மறந்த தென்கொலோ.

**குயிற்றிடப் புனைந்த நன் மவுலிக் கோள் அராத்**
**துயிற்றிடக் கிடந்ததும், சூகரத்தினார்**
**எயிற்றிடைக் கிடந்ததும் எங்கள் நாயகன்**
**வயிற்றிடைக் கிடந்ததும் மறந்தது என் கொலோ?**

பொ: பொன்னும் மணியும் கொண்டு கம்மியன் செய்திடப் புனைந்துகொண்ட நல்ல முடிகளையுடைய வலிய ஆதிசேடன் என்னும் பாம்பு, தன் முடிகளின்மேல் தங்கச் செய்திட அந்த ஆயிரம் பணாமுடிகளின் மேல் (பூமி) கிடந்ததும், அது பிரளய வெள்ளத்தில் ஆழ்ந்து போன போது வராக மூர்த்தி தன் எயிற்றினால் எடுத்தபோது அந்த எயிற்றின்மேல் கிடந்ததும், எங்கள் நாயகனாகிய திருமாலின் வயிற்றில் ஊழியிறுதியில் கிடந்ததும் ஆகிய நிகழ்ச்சிகளை (இப்பூதேவி) மறந்துவிட்டது என்னையோ?

கு: குயிற்றுதல்-செய்தல். வினைமுதல் வருவிக்கப்பட்டது. ஆதிசேடன் என்னும் பாம்பிற்கு ஆயிரம் தலைகள் உண்டு என்பதும் அந்த ஆயிரந்தலைகள்மேலும் முடிபுனைந்திருத்தல் உண்டு என்பதும் புராணமரபு. மவுலி - முடி. கோள் - வலிமை. அரா என்றது, இங்கு ஆதிசேடன் என்னும் பாம்பினை. துயிற்றுதல் என்பது நன்கு தங்கச் செய்தல் என்னும் பொருளது. சூகரம்-பன்றி. வராக அவதாரத்தைக் குறித்தது. எயிறு என்றது கோரைப்பல்லினை. எங்கணாயகன் எனத் திருமாலை இராமன் கூறியது மானுட வேடத்திற்கு ஏற்றவாறு கூறியதாகும். உலகம் எல்லாவற்றையும் திருமால் தன்வயிற்றிடை அடக்கிக் கொண்டு பிரளய வெள்ளத்தில் ஆலிலைமேல் பள்ளி கொண்டிருப்பான்

என்பது புராண மரபு. பாம்பின் முடிமேல் கிடப்பதும் பன்றியின் எயிற்றிடைக் கிடப்பதும் பிரளய வெள்ளத்தில் திருமாலின் வயிற்றிடைக் கிடப்பதும் பூமிக்குப் பெருமை தருவனவல்ல வாகவும் தன்சிறுமையை நினையாது என்னிடம் சீதையை மறைத்தது எந்தச் செருக்கினால் என்பது இராமன் உட்கோள். (300)

## சீதையை மறைத்தது கடலிடைத் திடரோ என்றது

1270 கடற்றிரைத் துரப்பவுங் காண்கி லாமையின்
றடநெடுஞ் சிலைவளைத் தம்பு நான்விடப்
படரெரி கொளுத்திய பௌவந் தன்னிலோர்
திடர்கொலோ மறைத்தது சீதை தன்னையே.

கடல் திரைந்து உரப்பவும் காண்கிலாமையின்
தட நெடும் சிலை வளைத்து அம்பு நான் விடப்
படர் எரி கொளுத்திய பௌவம் தன்னில் ஓர்
திடர் கொலோ மறைத்தது சீதை தன்னையே.

பொ: கடல்பேர் அலைகளை வீசும்படி செய்து அதட்டவும் வருணனைக் காண்டல் இயலாமையால் பெரிய நெடிய என் வில்லை வளைத்து அம்பினை யான் விடுதலால் படர்கின்ற தீ கொளுத்திய கடலில் ஓர் திடலா சீதையை மறைத்தது?

கு: வருணனை வழி வேண்டுபடலத்தின் நிகழ்ச்சியை இராமன் இங்கு நினைவுகூர்ந்து சொன்னது. இராமன் உரத்தகுரலால் உரப்பியபோது கடல் பேரலைகளைக் கொண்டு வீசியது என்பார், 'கடல் திரைத்து உரப்பவும்' என்றார். திரைத்து, பிறவினை; திரைக்கச் செய்து என்பது பொருள். இனி, 'திரைக்க' எனச் செயவெனெச்சமாக்கிப் பொருள் கூறலுமாம். வருணன் வரக் காண்கிலாமையால் என வருவிக்க. காண்கிலாமையின் அம்பு நான்விட என இயையும். அங்கியங் கணையால் படர்கின்ற எரி கொளுத்திய கடல் என்றது, முன்னரே தன்னால் அம்பு எய்யப் பட்ட எளிமையுடைய கடல் என்று இகழ்ச்சிக் குறிப்பாற் கூறியவாறு. பூமியின் அமைப்பைப் பார்க்கும்போது அது கடலில்

ஒருதிடல் என்று சொல்லத்தக்க சிறுமையுடையது என்றவாறு. அந்தச் சிறிய திடலா சீதையை மறைத்தது என வியந்து வின வியவாறு. திடர்-திடல். (301)

## பூமியைப் புணரியில் அழுத்திடாமைக்குக் காரணம் கூறியது

1271 பூதலந் தன்னையிப் புணரி சேறெழப்
பாதலத் தழுந்திட மிதிப்பென் பாவியென்
காதலி தனைமிக வருந்துங் காண்குறும்
ஆதலி னுலதற் கென்று மாற்றலேன்.

பூதலம் தன்னை இப்புணரி சேறு எழப்
பாதலத்து அழுந்திட மிதிப்பென்; பாவி என்
காதலிதனை மிக வருத்தம் காண்குறும்
ஆதலினால் அதற்கு என்றும் ஆற்றலேன்.

பொ: பூமியை இந்தக்கடல் சேறு எழுமாறு பாதலத்தில் அழுந்திடக் காலால் மிதித்திடுவேன்; ஆனால் அச்செயல் பாவி யேனாகிய என் காதலி சீதையைப் பெரிதும் வருத்தம் செய்யும் ஆதலால், அவ்வருத்தத்தையான் என்றும் செய்யமாட்டேன்.

கு: புணரி-கடல்; அலைகள் ஒன்றன் பின் ஒன்றாகப்புணர்ந்து இயங்குதற்கு இடமாதலின் கடல், புணரி எனக் காரணப் பெய ரால் வழங்கப்படும். மண்துகளால் இயன்ற பூமியைக் கடலிடை யழுத்தின் அக்கடலே சேறாக மாறிவிடும் என்பது புலப்படுத்திய வாறு. பூமியைக் கடலிடையழுந்துமாறு மிதிக்கும் ஆற்றலிருந் தும் அச்செயல் சீதைக்கு வருத்தம் செய்யுமே என்ற இரக்க நெஞ்சத்தால் அதனை என்றுமே செய்தலாற்றேன் எனத் தன் காதற் பண்பை இராமன் புலப்படுத்தியவாறு. (302)

## புவியினைத் துணிக்க எண்ணிய இராமன் முன்பு பிரமன் தோன்றுதல்

1272 இன்னன வுரைத்துரைத் திகலி ராகவன்
துன்னிய புவியினைத் துணிப்பெ னென்றுழிப்
பொன்னிகர் சததளப் பூந்தண் கோயிலில்
மன்னிய பிதாமகன் வந்து தோன்றியே.

இன்னன உரைத்து உரைத்து இகல் இராகவன்
துன்னிய புவியினைத் துணிப்பென் என்றுழிப்
பொன் நிகர் சததளப் பூந்தண் கோயிலில்
மன்னிய பிதாமகன் வந்து தோன்றியே.

பொ: மாறுபாட்டினையுடைய இராமன், இவை போன்ற சொற்களைப் பன்முறை சொல்லிச் சீதைக்கு இடங்கொடுத்து விட்டுப்பின் நெருங்கிக் காணப்படும் பூமியைத் துண்டாக்குவேன் என்று சொல்லும்போதில் பொன்னை நிகர்த்த அழகினையுடைய நூற்றிதழ்க் கமலமாகிய பொலிவுமிக்க குளிர்ந்த கோயிலில் நிலை பெறத் தங்கியுள்ள பிரமன் வந்து, அவ் இராமன் முன்பு தோன்றி,

கு: இகல்-மாறுபாடு; பூதேவியின் செயலோடு மாறுபட்ட கருத்துடைய இராமன் என்றவாறு. உரைத்துரைத்து என்ற அடுக்குப் பன்மை புலப்பட வந்தது. துன்னுதல்-நெருங்குதல். சீதை நுழைதற்கு இடங்கொடுத்து விரிந்த பூமி பின்பு சுவடு தெரியாமல் நெருங்கியிருத்தல் புலப்பட 'துன்னியபுவி' என்றார். துணித்தல் - துண்டாக வெட்டுதல். சததளம் - நூறு இதழ், அருமையால் பொன்னையொத்த பூங் கோயில் என்றவாறு, நூற்றிதழ்க் கமலப் பூவாகிய குளிர்ந்த கோயிலில் என்க. மன்னுதல்-நிலைத்திருத்தல். பிதாமகன்–பிரமன். தோன்றி என்ற வினையெச்சம் வருஞ் செய்யுளில் முடியும். குளகம். (303)

## பிரமன் இராமனைச் சிறப்பித்தல்

1273 வானில மாருதம் வன்னி நீரெனும்
போனகம் விரும்பியோ ராலின் பொற்றளிர்
மேனலத் தறிதுயின் மேவி மேலைநாள்
கானிலத் துலமொரு மூன்றுங் கண்டுளாய்.

வானிலம் மாருதம் வன்னி நீர் எனும்
போனகம் விரும்பி ஓர் ஆலின் பொன் தளிர்
மேல் நலத்து அறிதுயில் மேவி மேலை நாள்
கால் நிலத்து உகலம் ஒரு மூன்றும் கண்டுளாய்.

பொ: ஆகாயம் நிலம் காற்று நெருப்பு நீர் என்கின்ற ஐம்பூதங்களாலாய உலகம் என்கின்ற போனகத்தை விரும்பி உண்டு விட்டு ஓர் ஆலமரத்தின் பொன்னிறத் தளிரின்மேல் நன்மையுடைய அறிதுயிலைப் பொருந்தியிருந்து பின்பு முன்னாளில் நின் திருவடியிலிருந்து உலகம் ஒருமூன்றையும் படைத்தவனே!

கு: பிரளயத்தில் திருமால் உலகையுண்டு வயிற்றிடைக் கொண்டு ஆலிலைமேல் கிடந்து உறங்கிப் பிரளயத்திற்குப்பின் தானே மூவுலகையும் உண்டாக்குவான் என்ற புராண மரபைப் புலப்படுத்தியவாறு. உலகம் என்றது, ஐம்பூதங்களின் கலப்பே ஆதல் புலப்பட 'வானில மாருதம் வன்னி நீரெனும் போனகம் விரும்பி' என்றார். 'நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்துங் கலந்த மயக்கம் உலகமாதலின்' (தொல். பொருள். மரபு-90) என்ற தொல்காப்பியர் கருத்தைத் தழுவி இப்பகுதி அமைந்திருத்தல் காணலாம். திருமால் மூவுலகையும் உண்டாக்கினார் என்பதை உபசாரமாக அவன் திருவடியிலிருந்து மூவுலகையும் உண்டாக்கினான் என்று கூறினார். "நீலமேனி வாலிழைபாகத் தொருவன் இருதாணிழற் கீழ் மூவகையுலகமும் முகிழ்த்தன முறையே" (ஐங்குறு - நூறு கடவுள் வாழ்த்து) என்புழி இருதாணிழற் கீழ் மூவகையுலகமும் தோன்றியதாகக் கூறி யிருத்தல் காணலாம். விண்ணும் மண்ணும் பாதலமும் மூவுலகம் எனப்படும். அறிதுயில் என்றது உலக நிகழ்ச்சிகளை யறிந்து கொண்டே உறங்குவது போலக் கிடத்தல். (304)

1274 ஒப்பரு நிலைமையா யுனக்கு நான் சில
செப்புவ தூளததுு சிறிது கேண்மதி
மெய்ப்பொரு ளாய்மிக விருண்ட வானகத்
தப்புற மாயுளே யடங்கு நின்னுரு.

ஒப்பு அரும் நிலைமையாய் உனக்கு நான்சில
செப்புவது உளது; அது சிறிது கேள் மதி!
மெய்ப் பொருளாய், மிக இருண்ட வானகத்து
அப்புறமாய் உளே அடங்கும் நின் உரு.

பொ: ஒப்பற்ற உயர்நிலையுடையவனே! உனக்கு நான் சில சொல்ல வெண்டியது உளது; அதனைச் சிறிது கேட்பாயாக! நினது உருவம், மெய்ப்பொருளாகியும் மிக இருண்டு தோன்றுகின்ற வானகத்திற்கு அப்புறமாகியும் அவ்வானத்துள்ளே அடங்கியும் நிற்கும்.

கு: நின்னுரு மெய்ப்பொருளாய் வானகத்தப்புறமாய் உளே அடங்கும் என இயையும். பிரமன் இராமனை ஒப்பரு நிலைமையாய் என விளித்துக் கூறியது, இராமனுக்கு உவமையாவார் யாரும் இலராதல் புலப்பட 'ஒப்பரு நிலைமையாய்' என்றார். இராமன் பெருமையும் தன் சிறுமையும் புலப்பட உனக்கு நான்சில செப்புவது உளது எனவும் 'அது சிறிது கேண்மதி' எனவும் வேண்டிக் கொண்டு தொடங்கியவாறு. செப்புவது-சொல்லுவது. இராமன் உரு தெய்வநிலையில் மெய்ப்பொருளாகவும் வானகத்தப் புறமாகவும் இருப்பதோடு இவ்வுலகத்துள்ளேயும் அடங்கிநிற்கும் என்று விளக்கியவாறு. ஐம்பூதங்களில் வானமாகிய பூதம் மிக இருண்டு தோன்றும் இயல்பு புலப்பட மிக இருண்ட வானகத்து எனச் சிறப்பித்தார். வானகத்து அப்புறம் என்றது ஆகாயத்திற்கு மேற்பட்ட விண்டுவினுலகத்தை. மெய்ப்பொருளாய் என்றது உருவின்றி நிற்கும் பரநிலையை. வானகத்து அப்புறமாய் என்றது எல்லா தத்துவங்களையும் கடந்து நிற்கும் நிலையை யுணர்த்தியது. உள்ளே அடங்கும் என்றது வான் முதலிய பூதங்களின் உள்ளேயும் வியாபித்து நிற்கும் நிலையையுணர்த்தியவாறு. (305)

1275 மின்னுளே பிறந் தொளிர் மேக மாமென
நின்னுளே பிறந்தொளிர் நிலையில் யோனிகள்
உன்னுளே பிறந்திறந் தொளிப்ப தல்லதிங்
கென்னிலே பிறப்பிறப் பென்ன லாகுமோ.

மின் உளே பிறந்து ஒளிர் மேகம் ஆம் என,
நின் உளே பிறந்து ஒளிர் நிலையில் யோனிகள்
உன் உளே பிறந்து இறந்து ஒளிப்பது அல்லது இங்கு
என்னிலே பிறப்பு இறப்பு என்னல் ஆகுமோ?

பொ: மின் உள்ளே பிறந்து ஒளிர்தற்கு இடமாகிய மேகத்தைப்போல விளங்குகின்ற நின்னுள்ளே பிறந்து விளங்குகின்ற நிலையில்லாத உடம்புடன் கூடிய உயிர்கள் எங்கும் நிறைந்த உன்னுள்ளே பிறந்து இறந்து ஒடுங்குவதல்லது. இங்கு என்னாலே பிறத்தலும் இறத்தலும் செய்கின்றன என்னல் பொருந்துமோ? பொருந்தாது காண்.

கு: மேகவண்ணனாகிய திருமாலின் வயிற்றிலே உடம்போடு கூடிய உயிர்கள் பிறந்திறந்து ஒளிப்பதற்கு உவமையாக மின் உள்ளே பிறத்தற்கு இடமாகிய மேகத்தைக் கூறியவாறு. மேகத்தில் மின்பிறத்தலும் மறைதலும் போன்று திருமாலின் வயிற்றில் உயிர்கள் பிறந்திறந்து ஒளிக்கின்றன என்றவாறு. ஒளிர் மேகம், ஒளிர்தற்கு இடமான மேகம் என விரியும். யோனிகள்-பிறவிகள். இங்கு உடம்போடு கூடிய பல உயிர்களை யுணர்த்தியது. உயிர்களின் பிறப்பிறப்புகளுக்குத் திருமால் காரணமாதலன்றிப் பிரமன் காரணமாகான் என்பது தெளிவித்தவாறு. திருமாலின் அவதாரமாக வந்த இராமனைத் திருமாலாகவே நினைந்து 'உன்னுளே பிறந்திறந்து ஒளிப்பதல்லது இங்கு என்னிலே பிறப்பு இறப்பு என்னலாகுமோ? எனப் பிரமன் கூறியவாறு. (306)

1276 முந்தைநாட் புலத்திய முனிவன் மைந்தனார்
தந்திடுந் தசமுகன் றன்னைக் கொல்வதற்
கந்தநா ளமரர்வந் திரந்த தாலிவண்
வந்துமா னுடவர்தம் வடிவிற் றோன்றினாய்.

முந்தைநாள் புலத்திய முனிவன் மைந்தனார்
தந்திடும் தசமுகன் தன்னைக் கொல்வதற்கு
அந்தநாள் அமரர்வந்து இரந்ததால் இவண்
வந்து மானுடவர்தம் வடிவில் தோன்றினாய்.

பொ: முன்னைய நாளில் புலத்திய முனிவன் மைந்தனாராகிய விச்சிரவசு பெற்ற இராவணனைக் கொல்வதற்காக அந்நாளில் தேவர்கள் வந்து இரந்து வேண்டியதால் இந்த மண்ணுலகில் வந்து மானிடர் வடிவத்தில் தோன்றினாய்.

கு: புலத்திய முனிவன் மைந்தனார் என்றது விச்சிரவசுவினை. தசமுகன்-பத்து முகங்களையுடைய இராவணன். (307)

1277 ஆதிநீ யுலகெலா மளித்துக் காக்குறும்
போதுநின் னுந்தியிற் பூத்த தாமரைத்
தாதிய றமனியத் தனிப்பொ ருட்டினின்
மீதுநின் றுலகெலாம் விரிந்த தல்லவோ.

ஆதி நீ, உலகு எலாம் அளித்துக் காக்குறும்
போது, நின் உந்தியில் பூத்த தாமரைத்
தாது இயல் தமனியத் தனிப் பொருட்டினின்
மீது நின்று உலகெலாம் விரிந்தது அல்லவோ?

பொ:- ஆதியங்கடவுளாகிய நீ உலகம் முழுவதையும் படைத்துக் காக்கத் தொடங்கும் போது நினது கொப்பூழில் பூத்த தாமரையின் மகரந்தம் பொருந்திய பொன் மயமான ஒப்பற்ற கொட்டையின் மீது நின்று உலகம் முழுவதும் விரிந்தது அன்றோ?

கு: பிரமன் உலகத்தைப் படைத்தான் என்பதை மறுத்து திருமாலின் உந்தியில் பூத்த தாமரைக் கொட்டையின்மீது நின்று உலகெலாம் தானே விரிந்தன என்பது விளக்கியவாறு. இங்குப் பிரமன் தற்பெருமை கொள்ளாது படைத்தல் தொழிலும் திருமாலின் திருவருளால் நிகழ்வதே என்பது புலப்படுத்தியவாறு. (308)

1278 ஆத லாலுனக் கன்று வந்தவிப்
பூத லத்திடைப் புக்க மங்கை நின்
காதன் மங்கையா லவளைக் காண்பதுன்
தீதி லாநிலத் தென்று செப்பினான்.

ஆதலால் உனக்கு அன்று வந்த இப்
பூதலத்திடைப் புக்க மங்கை நின்
காதல் மங்கையால் அவளைக் காண்பது உன்
தீது இலா நிலத்து என்று செப்பினன்.

பொ: ஆதலால் உன்கண் அன்று தோன்றிய இந்தப் பூமியிடத்துப் புகுந்த மங்கை, நினது காதலுக்கு உரிய சீதை என்னும் மங்கையே ஆவள்; ஆயினும் அவளை இனி நீ காண்பது உனது தீமை நிகழாத வைகுந்தமாகிய இடத்தில்தான் என்று சொன்னான் (பிரமன்).

கு: பூமியை நின்னில் வேறாக நினைந்து நீ சினக்கின்றாய். அந்தப்பூமி உன்னிடத்து அந்தத் தொடக்க நாளிலே வந்ததுதான். அப்பூமியில் புகுந்த சீதையும் நின்காதலிதான்; அவளை இனிக் காண்பது வைகுந்தத்தில்தான்; எனவே அது பற்றிச்சினங்

---

309—அ. பின்வருஞ் செய்யுள் பலசுவடிகளில் இல்லை; இயைபுடையதாகவுமில்லை. பொருட் செறிவுமில்லை. மிகைப் பாடலாகச் சேர்க்கப்பட்டது.

ஆதலாலுனக் கறிவு மன்னினால்
தீதனன்றனைச் செய்கொணாததற்
கேதுவாலிவை யியன்றதேயென
வேதநான்முகன் விரித்துக் கூறினன்.

கொள்வது பொருந்தாது எனப் பிரமன் இராமனுக்குக் கூறியவாறு. உனக்கு என்புழிகு என்னும் நான்கனுருபு "கிளையரி நாணற்கிழங்கு மணற்கின்ற முளை" என்புழிப் போலக் கண்ணுரு பின் பொருளது. உருபு மயக்கம். அன்று என்றது படைப்புக் காலத்தை. ஆல்-அசை. தீதிலா நிலம் என்றது, வைகுந்தத்தை. அங்கு நன்மையே நிகழ்வதல்லது தீது நிகழாது என்பது புலப்படுத்தியவாறு. (309)

## இராமன் சினம் தணிதல்

1273 அங்கண் வானகத் தமல னாமெனப்
பங்க யாசனப் பரனு ரைத்தலும்
துங்க வார்சிலைத் துணை நெடும் புயச்
செங்கண் வீரன்வெஞ் சினமொ ரீஇயினன்.

அங்கண் வானகத்து அமலன் ஆம் எனப்
பங்கயாசனப் பரன் உரைத்தலும்
துங்க வார்சிலைத் துணை நெடும்புயச்
செங்கண் வீரன் வெஞ்சினம் ஒரீஇயினன்.

பொ: 'அழகியஇடத்தையுடைய வைகுந்தத்தில் வீற்றிருக்கும் நாராயணனே நீ ஆவாய்' என்று தாமரைத் தவிசிலிருக்கும் பிரமன் சொல்லுதலும், வலிமைமிக்க நீண்ட வில்லையும் ஒப்புடைய நெடிய தோள்களையும் சிவந்த கண்களையுமுடைய வீரனாகிய இராமன் பூமியின்மேல் கொண்ட கொடிய கோபம் நீங்கினன்.

கு: நீ வைகுந்தத்தில் வீற்றிருக்கும் திருமாலே எனவும் பூமி உன் உந்தித் தாமரையிலிருந்து தோன்றியதே எனவும் பிரமன் கூறியவுடன் இராமன் தன் தெய்வ நிலையையுணர்ந்து பூமி தேவியின்மேல் கொண்ட கோபம் நீங்கப் பெற்றான் என்றவாறு. தோள்கள் இரண்டும் ஒன்றனுக்கு ஒன்று உவமையாகத்தக்கன என்பார் 'துணை நெடும்புயம்' என்றார். ஒரீஇயினன் - நீங்கினன். (310)

## இராமன் குசலவரோடு வேள்விச்சாலை புகுதல்

1280 கதலி சூழ்பொழிற் கங்கை நாடனும்
மிதிலை மெல்லியல் பயந்த மென்னகைக்
குதலை மென்மொழிக் குசல வப்பெயர்ப்
புதல்வ ரைத்தழீஇ வேள்வி புக்கனன்.

கதலி சூழ்பொழிற் கங்கை நாடனும்
மிதிலை மெல்லியல் பயந்த மெல்நகைக்
குதலை மென் மொழிக் குசலவப் பெயர்ப்
புதல்வரைத் தழீஇ வேள்வி புக்கனன்.

பொ: வாழைகள் சூழ்ந்த பொழில்களையுடைய கங்கை பாயும் நாட்டையுடைய இராமனும், மிதிலையில் பிறந்தமெல்லியலாகிய சீதை பெற்ற மென்மையான புன்சிரிப்பினையும் குதலையாகிய மெல்லிய சொல்லினையும் உடைய குசலவர் என்ற பெயரையுடைய தன் புதல்வரைத் தழுவிக் கொண்டு இராமன் வேள்விச்சாலைக்குள் புகுந்தான்.

கு: கதலி-வாழை. கங்கையின் வளம் புலப்பட வேண்டிக் கதலிசூழ் பொழிலைக் கூறினர். சீதையைக் காண இயலவில்லை யாயினும் அவள் பெற்ற குசலவர்களைக் கண்டு தழுவிக் கொண்டு ஆறுதல் கொண்டான் இராமன் என்றவாறு. மெல்நகை-என்றது புன்னகையை. (311)

## இராமன் பரிமகம் நூறு செய்து முடித்தல்

1281 அம்பு யத்தட லரிவை யைப்புனை
அம்பு யத்தில்வைத் தருளு மொய்ம்பினன்
வெம்ப ரித்தொகை வேத வேள்வியோர்
ஐம்ப திற்றிரண் டவைமு டித்தனன்.

அம்புயத்து அடல் அரிவையைப் புனே
அம்புயத்தில் வைத்து அருளும் மொய்ம்பினுன்,
வெம்பரித் தொகை வேத வேள்வி ஓர்
ஐம்பதிற்று இரண்டு அவை முடித்தனன்.

பொ: அழகிய தாமரையில் வீற்றிருக்கிற வீரத்திருவினை அலங்கரிக்கப் பெற்றதன் அழகிய தோளில் வைத்தருள்கின்ற வலிமையுடையவனுகிய இராமன், விரும்பத் தக்க குதிரைக் கூட்டத்தைக் கொண்டு வேத விதிப்படி செய்யும் அசுவமேதயாகம் ஒரு நூறினைச் செய்து முடித்தான்.

கு: அம்புயத்தடலரிவை என்றது வீரத் திருவினை. பகையரசரை வென்று வீரத்தோடு அரசு செய்யும் அரசர்களின் தோள்களில் வீரலட்சுமி இருக்கின்ருள் என்பது மரபு. இராமன் இராவணன் முதலிய அரக்கரை வென்றும் அயோத்தியிலிருந்து புவியிலுள்ள அரசர்களெல்லாம் தன்னடி பணிய வைத்தும் அரசு செய்கின்ற இராமன் தோள்களில் வீரத்திரு வீற்றிருக்கின்ருள் என்பது உண்மையேயாதல் அறியலாம். முதலிரண்டடி யமகம். மொய்ம்பினுன் என்றது, புவியரசர்களையெல்லாம் பணிவித்த வலிமை மிக்க இராமன் என்பது புலப்படுத்தியவாறு. வெம்பரி-விரும்பத்தக்க குதிரை. ஒவ்வொரு யாகத்திலும் ஒரு குதிரையைக் கொடுக்க வேண்டியிருத்தலின் வெம்பரித்தொகை என்றார். தொகை-கூட்டம். ஓர் ஐம்பதிற்றிரண்டு என்றது நூறினை.ஐம்பது இரண்டு நூருதல் தெளிவு. பதிற்று என்புழி இற்றுச் சாரியை. 'பதிற்றுப்பத்து' என்புழிப்போல. (312)

## இராமன் வேள்விமுடிந்தபின் யானைமீதேறி அயோத்தி அடைதல்

1282 சேட ஞயிரஞ் சிரம சைந்திடக்
கோடு லாமதிக் குழவி யன்ன கோட்
டோடை யானையி னும்ப ரேறியே
ஆடன் மாவினு னயோத்தி மேவினுன்.

சேடன் ஆயிரம் சிரம் அசைந்திடக்
கோடு உலாம் மதிக்குழவி அன்ன கோட்டு
ஓடை யானையின் உம்பர் ஏறியே
ஆடல் மாவினன், அயோத்தி மேவினன்.

பொ: ஆதிசேடன்ஆயிரம் தலைகளும் பாரம் தாங்கமாட்டாது அசைந்திடுமாறு, இரு முனைகள் பொருந்திய பிறைச்சந்திரனை ஒத்த கொம்பினையுடையதாய் முகபட்டம் அணிந்த யானையின் மீது ஏறிக் கொண்டு ஆடல் செய்து கொண்டு செல்லும் குதிரைப் படையினையுடைய இராமன் அயோத்தி சேர்ந்தான்.

கு: இராமன் நைமிசாரணியத்திலிருந்து கொண்டு அசுவமேத வேள்வி நூறு முடித்தபின் யானைமீது ஏறிக் கொண்டு அயோத்தியை அடைந்தான் என்றவாறு. இராமன் சேனையோடு புறப்பட்டு அயோத்திக்குச் சென்றபோது நால் வகைச் சேனையின் பெருக்கத்தால் பாரம் பெருகிட ஆதிசேடன் ஆயிரம் தலைகளும் நடுங்கின என்றவாறு. கோடு-முனை. கோடுலா மதிக் குழவி என்றது பிறைச் சந்திரனை. பிறைமதிக்கு இருபுறமும் முனையிருத்தல் தெளிவு. ஓடை-முகபட்டம். யானையின் உம்பர்-யானையின்மேல். ஆடல்மா என்றது குதிரையை. அது ஆடுகின்ற மகளிர் சதிமிதித்து நடித்தல்போலத் தாளவொற்றுக்கு ஏற்பத் தரையில் கால் பதித்து ஓடுதல் பற்றி அப்பெயர் பெறுகின்றது. (313)

## இராமன் வெண்குடைக்கீழ் இனிதுவைகுதல்

1283 தன்கு டைக்கிடைத் தலமொ ரேழையும்
பொன்பெய் மாரியான் பொதுவ றப்புரந்
தன்பர் சூழவா ளரசர் போற்ற நீ
டின்ப மேநுகர்ந் தினிது வைகினன்.

தன் குடைக்கு இடைத் தலம் ஓர் ஏழையும்
பொன் பெய் மாரியான் பொது அறப் புரந்து,
அன்பர் சூழ வாள் அரசர் போற்ற நீடு
இன்பமே நுகர்ந்து இனிது வைகினன்.

பொ: நீரேயன்றிப் பொன்னையே பெய்கின்ற மாரியை யுடையவனாகிய இராமன், தன் குடைக்குக் கீழ் ஏழுலகங்களையும் பிறர்க்கும் பொது என்ற பேச்சுக்கு இடமின்றித் தனக்கேயுரிமை யுடையதாகக் கொண்டு காப்பாற்றித் தன்பால் அன்புடையார் தன்னைச் சூழ்ந்திருக்கவும் வாள் ஏந்திய அரசர்கள் பணிந்து போற்றவும் நீண்ட இன்பத்தையே அனுபவித்து இனிதாகத் தங்கியிருந்தான்.

கு: இடை என்றது, இங்குக் கீழ் என்னும் பொருளில் வந்தது. குடைக்கீழ் என்க. தலம் ஓர் ஏழ் என்றது மேல் ஏழுலகங்களை. இனி, ஏழு ஆகப் பிரிந்த நாடுகளை எனப்பொருள் கூறலும் ஆம். இராமன் ஆட்சியின் மாட்சியால் மேகம் பொன்னையே பெய்தது என்பார், 'பொன் பெய் மாரியான்' என்றார். ஏழு மேகங்களில் பொன் முதலிய உலோகங்களைப் பெய்யும் மேகமும் உண்டு; அது புட்கலாவர்த்தம் என்னும் பெயருடையது. சம்வர்த்தம் முத்து முதலிய நவமணிகளைச் சொரிவது. ஆவர்த்தம் நீரைச் சொரிவது. சங்காரித்தம், பூ முதலியவற்றைப் பெய்வது. துரோணம் மண் முதலியவற்றைப் பெய்வது. காளமுகி கல் முதலியவற்றைப் பெய்வது. நீல வருணம் தீ முதலியவற்றைப் பெய்வது என்பர். இன்பமே என்புழி ஏகாரம் பிரிநிலைப் பொருளது. துன்பத்தைப் பிரித்தது. (314)

அசுவமேத யாகப் படலம் முற்றிற்று.

# 16. கந்திருவர் வதைப்படலம்

## முன்னுரை

### படலப் பொருள் சுருக்கம்

இராமபிரான் ஏவியபடி பரதனும் அவன் மக்களும் சென்று கந்திருவரை வதைத்த நிகழ்ச்சி இப்படலத்தில் கூறப்படுவதால் இது கந்திருவர் வதைப்படலம் எனப் பெயர் பெறுகின்றது.

அசுவமேத யாகம் நூறு செய்தபின் இராமபிரான் அயோத்தியில் தங்கிப் பல ஆண்டுகள் ஆட்சி செய்த பின்பு, இராமனை மகனாகப் பெற்ற கோசலை இவ்வுலக வாழ்வினை நீத்து விண்ணுலகு செல்கின்றாள். தாய் உயிர் நீத்த செய்தி அறிந்தவுடன், இராமபிரான் சென்று தாயின் பாதங்களில் வீழ்ந்து அழுகின்றான். பின்பு கோசலையின் பல சிறப்புகளைச் சொல்லிப் புலம்புகின்றான் மகளிர் குழலோசை போன்ற குரலோடு அழுது மாழ்குகின்றார்கள். கோசலையினுடம்பை விமானத்தில் ஏற்றுகின்றார்கள். சுடுகாட்டிற்குச் சென்று அகில்கட்டைகளையும் சந்தனக் கட்டைகளையும் அடுக்கிச் சடங்குகள் முடித்தபின்பு முரசு முதலிய வாத்தியங்கள் ஒலிக்க கோசலையின் உடம்பை ஈமப்பள்ளியில் ஏற்றிஎரி மூட்டி முடிந்தபின்பு இராமன், முதியோர் சொல்லிய படி எள்ளும் தண்ணீரும் இறைத்துக் குற்றமற்ற நல்ல பிண்டமுங் கொடுத்துப் பின்பு அந்தணர்களுக்குப் பூமியும் பசும் பொன் அணிகலன்களும் கொடுக்கின்றான்.

மேலும் சில நாள் கழிந்த பின்பு கைகேசியும் சுமித்திரையும் ஒருவர்பின் ஒருவராக இவ்வுலக வாழ்வை விடுகின்றார்கள். அவ்விருவர்க்கும் விதி முறைப்படி இராமன் இறுதிக் கடன்களைச் செய்து நீரில் மூழ்கித் தானம் பல செய்கின்றான். அசுவமேத யாகங்காண முன்பு வந்திருந்து தம் தாயரின் இறுதிச்சடங்கில் கலந்து கொண்ட சுக்கிரீவன் அங்கதன் அனுமான் போன்ற வானரர்க்கும் வீடணனுக்கும் மதுகை நகர்க்கு அரசனாகிய சத்துருக்கனுக்கும் தத்தம் ஊர்கட்குச் செல்ல விடை கொடுத்து அனுப்பி விட்டு ஒளிமிக்க சிங்காசனத்தில் வீற்றிருக்கின்றான் இராம பிரான்.

அப்போது பரதனுடைய மாமனாகிய கேகயனது குல குருவாகிய கார்க்கியன் என்கின்ற முனிவர் இராமனது அரசவையில் புகுகின்றார். புகுந்த முனிவரின் திருவடிகளை வணங்கி வந்த காரணம் வினவுகின்றான் இராமன். அவ்வினாவிற்கு விடையாகக் கார்க்கிய முனிவர் கூறுகின்றார்- 'வலிமை மிக்க கந்திருவர்கள் உன் மாமன் உதாசித்தினைப் போரில் தோல்வியுறச் செய்து அவனது வளநாட்டை வவ்விக் கொண்டார்கள். அக்கந்திருவரை வாளால் எறிந்து தொலைத்துவிட்டு அந்த வளநாட்டை நீ ஆளுதல் இயல்பு தானே' என்பது அம்முனிவரின் கருத்துரையாகும்.

அதுகேட்ட இராமபிரான், பரதன் புதல்வர்களாகிய தக்கன் புட்கரன் என்ற இருவர்க்கும் சிந்து நாட்டு அரசர்களாக முடிபுனையச் செய்து விட்டுப் பரதனை நோக்கிக் "கந்திருவரைப் போரில் வென்று சிந்து நாட்டை உன் ஆட்சிக்கு உட்பட்டதாக்கிப் பின்பு நின்மக்களிருவர்க்கும் அந்நாட்டினைப் பகிர்ந்து கொடுத்துவிட்டு நீ தனியே வருக இங்கு" எனக் கூறி அவர்களை முறைப்படி அனுப்புகின்றான்.

பரதனோடு யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை என்ற நாற்படைகளும் உடன் செல்லப் பரதனும் அவன் புதல்வர்களும் தேரிலேறி அயோத்தி நகரின் வாயிலை விடுத்து விரைந்து சென்று சிந்து நாட்டில் தங்குகின்றார்கள். அவர்கள் தங்கியதை கந்திருவர் கேள்விப்பட்டு வெகுண்டு சிரிக்கின்றார்கள். 'பரதனையும் அவன் மக்களையும் புறங்காட்டச் செய்துவிட்டு அவர்களை வரச் செய்த உதாசித்து என்பவனையும் ஓடச் செய்வோம் இது சத்தியம்' என வஞ்சினம் கூறுகின்றனர். சேனையை நோக்கிப் போர்க்கு எழுமின்! என்று அவர்கள் சொன்னவுடன் போர்க்கு நால்வகைப் படையும் விரைகின்றன. அப்போது கந்திருவர்க்குத் துன்னியத்தங்கள் தோன்றுகின்றன. திசைகள் அதிர்ந்தன. இரவில் வானவில் தோன்றியது. பகலிலே விண்மீன்கள் உதிர்கின்றன. ஆகாயமாகிய கூடம் உடைந்து உதிர்கின்றது. கோட்டான் பாடுகின்றது. இவ்வாறு நிகழா நிற்கவும் கந்திருவ வேந்தர் ஆரவாரிக்கும் சேனையோடு போர்க்களம் புகுகின்றனர்.

பரதன் படையும் சந்திருவர் படையும் தம்முள் போர் செய்கின்றன. காலாளும் காலாளும் போர் செய்கின்றனர். குதிரைப் படையுடன் குதிரைப் படையும் தேர்ப்படையோடு தேர்ப்படையும் யானைப்படையோடு யானைப்படையும் போர் செய்கின்றன. இருதிறத்தும் இறந்து படுகின்றனர் வீரர்கள். தலையிழந்த கவந்தங்கள் பல கைகளைத் தூக்கி ஆடுகின்றன.

கந்திருவவேந்தர் பரதன் தேர்மேல் அம்புகளை விடுகின்றனர். பூமிபாரம் தீர்க்கவந்த பரதன் அவர்கள் போர் தொடங்கியதைப் பார்க்கின்றான். அவர்களைப் பார்த்து 'கந்திருவர்களே! போங்கள். நீங்கள் உயிர் பெற்றுச் சென்றால் உழுதும் உண்ணலாம்' என்று எள்ளிச் சிரிக்கின்றான் பரதன். அதைக் கேட்ட கந்திருவர் பரதனை நோக்கி 'ஏதும் அறியாத அரசனே, உன்னை உன்சேனையுடன் ஓடிடுமாறு ஓரம்பினையெய்து துரத்துவேன். ஆனால் யான் அதை விரும்பவில்லை' என்கின்றார்கள்.

பரதன் தன்வில்லை வளைத்துச் சுடுகின்ற பல அம்புகளை விடுகின்றான். பரதன் அம்பு பட்டுக் கந்திருவர் சேனை படும்பாடு சொல்லிலடங்காது. கந்திருவரும் அதுசண்டு வில்லை வளைத்து அம்புகளை விடுகின்றனர். பரதன் சேனையில் பலர் இறக்கின்றனர் கவந்தங்கள் பல ஆடுகின்றன கார்கால மேகம் போலப் பரதன் அம்புகளை விடுதலால் கந்திருவர் சேனை அஞ்சி மலைக் குகைகளில் புகுகின்றன. வில்வீரத்தில் சிறந்த மூன்று கோடி கந்திருவர்கள் இறந்து படுகின்றனர். இறந்து பட்ட குதிரைகளுக்கும் யானைகளுக்கும் கணக்கேயில்லை. போர்க்களம் முழுவதும் கொடிய கழுகுகளும். பேய்களும் பருந்துகளும் ஆக நிறைந்திருந்தன.

கந்திருவர் மாய்ந்தமையால் பரதன் தன் தாமரை மலர் போன்ற கைகளினால் தன் மைந்தர் புட்கரன், தக்கன் என்ற இருவர்க்கும் வாகைமாலை சூட்டினான். பின்பு சிந்து நாட்டை இரண்டாகப் பிரித்துப் புட்கரனுக்கும் தக்கனுக்கும் தனித்தனி யுரிமை ஆக்கினான். அவ்விருவர் ஆட்சிக்கும் மக்கள் ஆட்பட்டு இருக்குமாறு பரதன் சிலதிங்கள் காறும் அங்குத்தங்கியிருந்தான். பின்பு தன் மக்களை நன்கு ஆட்சி செய்யுமாறு செய்துவிட்டு அயோத்திக்கு வந்து இராமன் திருவடிகளில் வணங்கி அங்கு

நிகழ்ந்ததைத் தெரிவித்துக் கொள்கின்றான் என்பது இப் படலத்துக் கூறப்படும் கதையாகும்.

## வான்மீகத்தோடு ஒட்டக் கூத்தர் வேறுபடும் இடங்கள்

(1) **வான்மீகத்தில்:** கார்க்கிய முனிவர் கேகய நாட்டு மன்னர் உதாசித்துவினால் அனுப்பப்பட்டு இராமரிடம் வந்த போது அம்முனிவரிடம் உதாசித்து இராமருக்குப் பரிசாக ஆயிரம் குதிரைகளையும் மிக உயர்ந்த கம்பளங்களையும் வினோதமான உடைகளையும் அற்புதமான ஆபரணங்களையும் கொடுத்தனுப் பினார் என்று கூறப்பட்டுளது.

**ஒட்டக்கூத்தர்:** இந்தப் பரிசுகளைப் பற்றி யாதும் கூற வில்லை. உயர்வற உயர்ந்த இராமனுக்குப் பரிசுப்பொருள்களை உதாசித்து அனுப்பினார் என்பது ஒட்டக்கூத்தர் கருத்துக்குப் பொருத்தமாக இல்லை போலும். மேலும் கார்க்கிய முனிவர் வருகின்றார் என்பதைக் கேள்விப்பட்ட இராமன் தன் தம்பி மார்களோடு இரண்டுமைல் தொலைவு எதிர்கொண்டு சென்று அழைத்து வந்ததாக வான்மீகம் கூறவும் ஒட்டக்கூத்தர் அந்த எதிர் கோளைப் பற்றிக் கூறவேயில்லை.

(2) **வான்மீகத்தில்:** மாமனாகிய உதாசித்து என்ன காரியம் சொல்லி அனுப்பினார் என்று இராமன் கேட்ட போது கார்க்கிய முனிவர், 'சிந்து நதியின் இருகரைகளுக்கு அருகே கந்தருவர்களைக் குடிகளாய்க் கொண்ட காந்தாரதேயம் இருக்கிறது. அது பெருவளமுடைய புண்ணிய தேசம். அத் தேசத்தை மூன்று கோடி கந்தருவர்கள் வலிமையுடன் ஆண்டு வருகின்றார்கள். அவர்களை வென்று அந்தக் காந்தருவ நகரத்தை உமது ஆட்சிக்குக் கீழ் கொண்டு வரவேண்டும், அதற்குத் தாங்கள் உடன் படவேண்டும் என்பது உதாசித்தின் விருப்பம் எனத் தெரிவித்ததாகவும் இராமன் உடன்பட்டதாகவும் உள்ளது.

**ஒட்டக் கூத்தர்:** புதியதாக ஒருகருத்தைப் புகுத்தியிருக் கின்றார். கார்க்கிய முனிவர், உதாசித்தின் வளநாட்டைக் கந்தருவர் போரில் அவ் உதாசித்தினை வென்று கவர்ந்து கொண்ட தாகவும் அதனைப் போரில் கந்தருவரை வென்று மீட்டுத்தருதல் இராமன் கடமை யென்று கூறியதாகவும் கூறியுள்ளார்.

வான்மீகத்தில் கூறியுள்ள கருத்தே பொருத்தமாகத் தோன்றுகின்றது, கேகயநாட்டை ஆள்கின்ற உதாசித்துக்கு அந்தச் சிந்து நதிக்கரையில் அமைந்துள்ள வளமிக்க கந்தருவ தேசத்தைத் தன்னாட்டோடு சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றும் அதை ஆள்கின்ற கந்தருவரைப் போரில் தோல்வியுறச் செய்ய வேண்டும் என்றும் விருப்பம் எழுதல் இயல்பேயாகும். அவ் விருப்பத்தையே தன் குல குருவாகிய கார்க்கேய முனிவரிடம் இராமனுக்குச் சொல்லி அனுப்பினான் என வான்மீகம் கூறவும் ஒட்டக்கூத்தர் புதுக்கருத்தொன்றை நடுவே நுழைத்திருக்கின்றார். அவர் அவ்வாறு நுழைத்ததற்கும் ஒரு காரணம் கூறலாம்.

கேகயத்தரசனாகிய உதாசித்துக்கு ஒரு தீங்கும் செய்யாத காந்தருவரை அழித்து அவர் வளநாட்டைக் கைப்பற்றுக என இராமனுக்குக் கூறுவது அவ்வளவு பொருத்தமாக இராது என்று கருதி, அந்தக்கந்தருவர் தன் கேகய நாட்டையும் போரில் வென்று கைப்பற்றினார்கள் எனவும் வலிமை மிக்க அந்த காந்தருவரை வென்று கேகயநாட்டையும் அவர்க்குரிய கந்தருவதேயத்தையும் கைப்பற்றி நின்னாட்சிக்குள்ளாக்குக எனவும், உதாசித்துக் கூறியிருப்பதாக மாற்றி அமைத்திருக்கலாம் என அமைதி கூறலாம்.

பரதனுக்கு மாமனாகிய உதாசித்தின் கேகய நாட்டிற்கு அருகில் இருக்கும் கந்தருவதேயத்தை அவ்வுதாசித்தின் உறவுள்ள பரதன் மக்கள் ஆள்வதே பொருத்த முடையது ஆதலின் பரதன் மக்களையே அந்நாட்டின் அரசர்களாக முடி சூட்டிவிடுகின்றான் இராமன் என்னலாம்.

3. **வான்மீகத்தில்:** உதாசித்து, தன் சேனையோடு பரதனோடு சேர்ந்து கொண்டு கந்தருவரோடு போர்புரிந்ததாக வான்மீகத்தில் உள்ளது.

**ஒட்டக்கூத்தர்:** உதாசித்து, பரதனோடு சேர்ந்து கொண்டதாகச் சொல்லவில்லை. பரதனும் அவன் மக்களுமே கந்தருவரை வென்றதாகக் கூறியுள்ளார்.

4. வான்மீகத்தில்: பரதன் தன் புதல்வர்களிருவரோடு அயோத்தியிலிருந்து புறப்பட்டுக் கேகய நாட்டிற்குச் செல்ல பதினைந்து நாட்கள் ஆயின என்றும், கந்தருவரை வென்று காந்தாரத்தைக் கைப்பற்றிய பின் பரதன் ஐந்து ஆண்டுகள் வரையில் தம்புதல்வர்கட்குத் துணையாய் அடிப்பட இருந்து பின்பு அயோத்திக்கு வந்ததாகவும் உள்ளது.

ஒட்டக்கூத்தர்: இந்தக் காலவரையறை ஒன்றையும் குறிக்க வில்லை. இவ்வளவே வேறுபாடு. மற்றெல்லாம் ஒத்திருக்கின்றன.

## படலப் பொருட் சிறப்பு

கந்திருவர் வதைப்படலம் தொடங்கும் போதே இராம னுடைய தாய்மார்களில் கோசலை முன்னும் கைகேயி, சுமித்திரை என்ற இருவரும் பின்னுமாக இவ்வுலக வாழ்வை நீத்துவிடு கின்றார்கள். தன்னையீன்ற தாயின் மரணத்தைக் கண்டு மனம் பொறாமல் இராமன் புலம்புவது கன்னெஞ்சையும் கரையச் செய்யும் தன்மையதாகவுள்ளது.

'கொந்தார் சோலைக் கோசல நாடன் குல மங்காய்!
சந்தார் மார்பத் தசரதனின் பத்தகை வல்லி!
அந்தோ வந்தோ ஐயனை நாடி யடியேனும்
வந்தேன் வந்தே னென்று தளர்ந்தே மாழ்குற்றான். (4)

என்பது அவ்விராமன் புலம்பலில் ஒருசெய்யுளாகும். இங்குக் கூறியதற்கேற்ப அடுத்த படலத்தில் அனைவரும் இவ்வுலக வாழ்வை நீத்து விண்ணுலகு சென்ற நிகழ்ச்சி கூறப்படுகின்றது காணலாம்.

கந்திருவரொடு போர்செய்யச் செல்லும் பரதனோடு செல்லும் நால்வகைப் படைகளைப் பற்றிக் கூறுகின்றார். முதலில் யானைகளைப் பற்றிக் கூறுகின்ற இயல்புகள் நம்முள்ளத்தில் எழுதுவது போல அழகுறத் தெளிவாகக் கூறியுள்ளார்.

நிழலொடு மலைவன நீள் கரத்தன
அழலுறு விழியன வசலம் போல்வன
தழைசெவி யுடையன சமரந்தீர்ப்பன
மழையென அதிர்வன மதுகை வாரணம்.

என்பது காணலாம். எளிமையான நடையில் யானையினை ஓவியமாக எழுதிக் காட்டுகின்றார் புலவர். போர்க்குச் செல்லும் கோபமிக்க யானை தன்னிழலையே மற்றொரு யானையாகக்கருதிக் கொண்டு அந்நிழலொடு போர் செய்கின்றது என்பதால் யானையின் கோபமும் மதமயக்கமும் தெளியச் செய்கின்றார். போர்க்குப் பகையானைகளை எதிர்நோக்கும் நிலையில் யானைதன் துதிக்கையை முன்னே நீட்டிக் கொண்டே செல்லும் இயல்பைப் புலப்படுத்த 'நீள்கரத்தன' என்கின்றார். போர் செய்யும் சினம் கண்ணில் தெரியுமாறு நெருப்புப் பொறியரக்கச் செல்கின்ற யானையின் இயல்பு புலப்பட 'அழலுறு விழியன' என்கின்றார். யானையின் கம்பீரமான தோற்றம் கண்டே பகையானைகள் ஓடுதற்குரிய மலைபோன்ற பெருந்தோற்ற முடையதாதல் புலப்பட 'அகலம் போல்வன' என்கின்றார். போர்க்குச் செல்லுங்கால் மகிழ்ச்சி மிகுதியால் தம்பெரிய காதுகளை அசைத்துக் கொண்டு செல்லும் இயல்பு புலப்பட 'தழை செவியுடையன' என்கின்றார். இத்தகைய யானைகள் போர்க்குப் புறப்படு மாயின் அங்குள்ள பகையை யழித்துப் போரினை முடித்தே திரும்புதற்குரிய அவ்வியானைகளின் மனவுறுதி புலப்பட, 'சமரந் தீர்ப்பன' என்கின்றார். போகும்போதே பகையானைகளை அச்சுறுத்தும் பிளிறல் ஒலியோடு செல்லும் தன்மை புலப்பட 'மழையென அதிர்வன' என்கின்றார். மேகம் இடிப்பது போல முழங்குவன என்க. வலிமையான யானைச் சேனைகளின் இயல்பு இங்ஙனம் பேசப்படுகின்றன. இவ்வாறே பரதனுடன் செல்லும் தேர், குதிரை, காலாள் ஆகிய மூவகைப் படைகளையும் விரிவாக அறிமுகப்படுத்துகின்றார் புலவர்.

## உயர்வு நவிற்சி அணி

பரதனொடு செல்லும் படையின் சிறப்பைப் புலப்படுத்த ஒரு சூழ்ச்சி செய்கின்றார் புலவர். நால்வகைப் படையும் செல்லும் போது எழும் தூளியினால் ஆகாயகங்கை வற்றிவிட்டது. அத்தூளியினால் செல்லும் வழி புலப்படாமல். சூரியனது தேரில் பூட்டிய குதிரைகளும் செல்லாமல் நின்றுவிட்டன என்றால் அந்தத் தூளியினால் மண்ணுலகத்தில் உள்ள கடலலைகள் சுவறின என்பது சொல்ல வேண்டுமோ? என நுட்பமாக விளக்குகின்றார். பரதனது

படைப்பரப்பால் மண்ணுலகக் கடலும் வரண்டன. விண்ணிலுள்ள கங்கையும் வரண்டது; துகள் மூடிக் கொண்டமையால் சூரியன் குதிரைகளும் செல்லவியலாது நின்றுவிட்டன என்பது உயர்வு நவிற்சியாதல் தெளியலாம். அக்கருத்துடைய செய்யுள்:-

பரதன தெழும்படைப் பரப்பினுலிந்தத்
தரை திரை சுவறின சாற்ற வேண்டுமோ?
சுரநதி சுவறின தூளியான் மறைந்து
இரவித னெழுபரி யியங்கிற் றில்லையால். (29)

என்பதாகும்.

## உவமையணி

கந்திருவர் பரதனை நோக்கி, 'மன்னவ! நின் மைந்தர் எம் அம்பினால் ஒருங்கே இறத்தல் திடம்' என்று வஞ்சினம் கூற அது கேட்ட பரதன்,

வெங்கண்மத கரிநிரைகள் மிக்கவுள வேனும்
சிங்கவிளங் குருளையொடு சென்று செருச் செயுமோ?
இங்கிவர்களிளையரென இகழல் என

மறுத்துக் கூறுகின்றான். இங்கு மதயானைகள் பல இருந்தாலும் ஒரு சிங்கக் குட்டியொடு போர்செய்து வெல்ல இயலுமா? அது போல என்மைந்தர் இளையராக இருக்கின்றனர் என்று இகழ்ந்து கூறுதீர்கள், நீங்கள் பலர் கூடினும் என்மைந்தர்களை வெல்ல இயலாது என்ற கருத்துப் புலப்படுதல் காணலாம். கந்தருவர் யானைக் கூட்டம் போன்றவர்கள் என்பதும் புட்கரனும் தக்கனும் சிங்கக் குட்டிகள் போன்றவர்கள் என்பதும் புலப்படுத்தியிருத்தல் காணலாம்.

## சொற்பின் வருநிலையணி

ஆடின என்ற ஒருசொல் எட்டு இடங்களில் வருமாறு அமைத்ததோடு போரின் விரைவும் ஓசையும் கூடப் புலப்படும் படி செய்யுள் செய்துள்ளார் ஒட்டக்கூத்தர்.

பாருடின கழுகாடின படர் சோரியின் திரைப்பே
ராருடின வலகைக்குலம் அடர்காகமுங் கழுகும்
மாருடினர்; வேருடினர் மகிழ்ந்தாடினர் மறவோர்;
நீருடின திசையெங்கணும் நிமிர்ந்தாடின கவந்தம்.

(கந்திருவர் விட்ட அம்பினுல் பெருஞ்சேனே இறந்தமையால்) தசை உண்ணுதற்குப் பருந்துகள் பறந்துவந்து தசையுண்டு ஆடின; கழுகுகள் நிணமுண்டு ஆடின; தரையில் பரவிச் செல்கின்ற இரத்தத்தின் அலேகளோடு கூடிய பெரிய ஆற்றில் பேய்க்கூட்டம் திளேத்து ஆடின; நெருங்கிய காகங்களும் கழுகுகளும் தமக்குள் மாறுபட்டு அந்த ஆற்றில் ஆடின; வீரர்கள் வேறுவேருக நின்று போராடியவர்கள் வெற்றிகண்ட பின்பு ஒன்று சேர்ந்து மகிழ்ந்து ஆடினுர்கள். புழுதிபரவியிருந்த திசையெங்கும் தலேயிழந்த கவந்தங்கள் நிமிர்ந்து ஆடின; என்பது பொருள். இப்பாடலின் சொல்லமைப்பும் ஒலியமைப்பும் போரினே நம்முன் காட்டுவது போல அமைந்திருத்தல் காணலாம்.

---

# 16. கந்திருவர் வதைப்படலம்

## கோசலையின் மறைவு

1284 இன்னதன்மையா லினிய வையகம்
பன்னி யாளுநாட் பல கழிந்த பின்
கன்னன் மென்மொழிக் கவிர்கொள் செய்யவாய்
அன்னை கோசலைக் கந்த முற்றதால்.

இன்னதன்மையால் இனிய வையகம்
பன்னி ஆளும்நாள் பல கழிந்தபின்
கன்னல் மென்மொழிக் கவிர்கொள் செய்யவாய்
அன்னை கோசலைக்கு அந்தம் உற்றதால்.

பொ: இப்படிப்பட்ட தன்மையோடு இனிய இவ்வுலகத்தைத் துன்பமில்லாதிருக்கும்படி ஆராய்ந்து ஆளுகின்ற நாள்கள் பல கழிந்தபிறகு, கரும்பு போன்று இனிக்கும் மெல்லிய சொல்லினையும் முருக்கம்பூப் போன்ற தன்மைகொண்ட சிவந்த வாயினையும் உடைய அன்னையாகிய கோசலைக்கு வாழ்நாள் முடிவுற்றது.

கு: கோசலை இவ்வுலக வாழ்வை நீத்தாள் என்றவாறு. பன்னுதல்-ஆராய்தல்; மக்களுக்குத் தீங்கு வாரா வழியினை ஆராய்ந்து அவ்வழியில் இராமன் ஆட்சி செய்தான் என்றவாறு. இராமன் அனைத்துயிர்க்கும் உயிர் போன்றவன் ஆதலின் அவன் அன்னை அனைவர்க்கும் அன்னைபோல்வாள் என்ற கருத்தால் 'அன்னை கோசலை' என்றார். அந்தம்-இறுதி; மரணம். தயரதன் மனைவியர் மூவரில் கோசலை மூத்தவள் ஆதலின் அவள் முன்னதாக அந்தம் உற்றாள் எனக. ஆல், அசை. (1)

## இராமன் கோசலையின் திருவடியில் அழுது வீழ்தல்

1285 பொன்னின் வையமும் புரவி யீட்டமும்
மன்னு வேழமு மறவர் வெள்ளமும்
துன்ன மன்னவர் தொழுப தாம்புயன்
அன்னை தாளின்மே லழுது வீழ்ந்தனன்.

பொன்னின் வையமும் புரவி ஈட்டமும்
மன்னு வேழமும் மறவர் வெள்ளமும்
துன்ன மன்னவர் தொழு பதாம்புயன்
அன்னை தாளின்மேல் அழுது வீழ்ந்தனன்.

பொ: பொன்னால் செய்யப்பட்ட தேர்ப்படையும் குதிரைப் படையும் நிலை பெற்ற யானைப்படையும் காலாள்படையும் நெருங்க மன்னவர்கள் வந்து தொழுதற்குரிய திருவடித் தாமரைகளையுடைய இராமன் அன்னை கோசலையின் திருவடி மேல் அழுதுகொண்டு வீழ்ந்தான்.

கு: மன்னர்கள் எல்லாம் நால்வகைப் படையோடு வந்து வணங்குதற்குரிய திருவடிகளையுடைய இராமன், தன்னையீன்ற அன்னையின் திருவடியின்மேல் வீழ்ந்தான் என இராமன் தாய் மேல் கொண்ட அன்பினைப் புலப்படுத்தியவாறு. (2)

## இராமன் அரற்றுதல்

1286 கொன்னேர் வைவேற் கோசல
மன்னன் குலமங்காய்
அன்னே யன்னே யத்தனு
முன்னே யகல்வுற்றான்
இன்னே நீயு மென்னையு நீத்தா
யெனின் யானும்
பின்னே வந்தேன் வந்தே
னென்றே பேதுற்றான்.

'கொன்நேர் வைவேல் கோசல மன்னன் குலமங்காய்!
அன்னே! அன்னே! அத்தனும் முன்னே அகல்வுற்றான்:
இன்னே நீயும் என்னையும் நீத்தாய் எனின் யானும்
பின்னே வந்தேன் வந்தேன் என்றே பேதுற்றான்.

பொ: பெருமையும் நேர்மையும் உடைய கூரிய வேலையுடைய கோசல நாட்டு மன்னவன் குலத்தில் தோன்றிய நங்கையே! என் தாயே! என் தாயே! தந்தையும் முன்பே உலகவாழ்வை நீங்கிச் சென்றான்! இப்பொழுதே நீயும் என்னைப் பிரிந்து

சென்றால் யானும் உன்பின்னே வந்து விட்டேன்; வந்துவிட்டேன்; என்று சொல்லித் துன்புற்றான்.

கு: கொன்-பெருமை. மங்கை என்றது பருவம் குறியாது பெண்டு என்னும் பொருளில் வந்தது. அத்தன்-தந்தை. இன்னே-இப்பொழுதே. நீயும் என்புழி உம்மை. தந்தையேயன்றி நீயும் பிரிந்தாயெனின் என்று பொருள் தருவதால் இறந்தது தழீஇய எச்சவும்மை. என்னையும் என்புழி உம்மை அசைநிலை வந்தேன் என்றது, காலவழுவமைதியாகக் கொள்க. எதிர்காலம் இறந்த காலமாக வந்தது. வந்தேன்! வந்தேன்! என்ற அடுக்கு விரைவு குறித்து வந்தது. பேதுறல் என்பது வருந்துதல் என்னும் பொருளது. இன்னே என்றது, தான் வாழும் நாள்காறும் இராமல் இப்பொழுதே நீங்கினால் என்னும் பொருளது. (3)

1287 கொந்தார் சோலைக் கோசல நாடன்
குலமங்காய்
சந்தார் மார்பத் தசரதனின்பத் தகைவல்லி
அந்தோ வந்தோ வையனை நாடி யடியேனும்
வந்தேன் வந்தே னென்றுத ளர்ந்தே
மாழ்குற்றான் .

கொந்தார் சோலைக் கோசல நாடன் குலமங்காய்
சந்தார் மார்பத் தசரதன் இன்பத் தகைவல்லி!
அந்தோ! அந்தோ! ஐயனை நாடி அடியேனும்
வந்தேன்! வந்தேன்! என்று தளர்ந்தே மாழ்குற்றான்.

பொ: பூங்கொத்துக்கள் நிறைந்த சோலை சூழ்ந்த கோசல நாட்டு மன்னனது குலத்துப் பிறந்த நங்கையே! சந்தனம் நிறைந்த மார்பினையுடைய தசரதன் இன்பத்திற்குத் துணையாயிருந்த அழகிய கொடி போன்றவளே! ஐயோ! ஐயோ! என் தந்தையைக்காண விரும்பி அடியேனும் வந்தேன்! வந்தேன்! என்று சொல்லித் தளர்ச்சியுற்று மனம் வருந்தினான்.

கு: கொந்து-மலர்க்கொத்து. சந்து சந்தனம். மார்பில் சந்தனம் பூசிக் கொள்ளுதலாகிய மரபு புலப்படச் 'சந்தார் மார்பத் தசரதன்' என்றான். [illegible] இரங்கற் குறிப்

புணர்த்தும் இடைச்சொல். ஐயன்-தந்தை. நாடுதல்-காண விரும்புதல். வந்தேன் வந்தேன் என்பன எதிர்காலம் இறந்த காலமாய் வந்த வழுவமைதி. அடுக்கு விரைவு குறித்தது. ஐயனை நாடியே நீ செல்கின்றாய் என்னும் குறிப்புப் புலப்பட ஐயனை நாடி அடியேனும் வந்தேன் என இறந்தது தழீஇய எச்ச உம்மையாற்கூறியவாறு. (4)

1288 பொன்னே முத்தே பூதல மேழும் புகழ்மேவும்
தன்னே ரில்லாத் தசரதன் மார்பம் தனி யாள்
வாய்
அன்னே அன்னே யென்றிரு கண்ணீ ரறவாரா
என்னே யென்னே யென்றிளை யோரு மிட
ருற்றார்.

பொன்னே! முத்தே! பூதலம் ஏழும் புகழ்மேவும்
தன் நேர் இல்லாத் தசரதன் மார்பம் தனி ஆள்வாய்!
அன்னே! அன்னே! என்று இருகண்ணீர் அறவார,
என்னே! என்னே! என்று இளையோரும் இடர்உற்றார்.

பொ: பெறற்கருமையால் பொன் போன்றவளே! குடிப் பிறப்பால் வலம் புரி முத்துப் போன்றவளே! பூமியின் எழுவகைப் பிரிவுகளிலும் புகழ் பரப்பிய தனக்கு நிகரில்லாத தசரதன் மார் பகத்தைத் தனியுரிமையோடு ஆட்சி செய்தவளே! அன்னையே அன்னையே! என்று அழுது இருகண்களிலும் உள்ள நீர் முழு வதையும் (இராமன்) ஒழுக்காநிற்க, 'என்னே இது! என்னே இது' என்று துன்பத்தால் செய்வ தறியாது இளையவர்களாகிய பரதன் இலக்குவன், சத்துருக்கன் ஆகியோரும் அழுதார்கள்.

கு: முதல் மூன்றடிகளிலும் இராமனது அழுகையைப் புலப் படுத்தியவாறு. புகழ் மேவும் தசரதன் என இயையும். பூதலம் ஏழும் என்றது பூமியில் உள்ள எழுவகையான பகுதிகளை. அன்னே என்றது, அன்னை என்பதன் விளியேற்ற விகாரம். தொடர்ந்து அழுதமையால் கண்ணில் உள்ள நீர் முழுவதையும் ஒழுக்கினான் என்றவாறு. வார-ஒழுக்கிட. துடும் என தாய் கோசலை உயிர்நீத்தமையின் என்னே என்னே என்று துன்பத்தில் வியந்து கூறியவாறு. கோசலை தயரதனுடைய முதல் மனைவி

யாதலின் அவன் மார்பத்தைத் தனியே யாளும் உரிமை பெற்றிருந்தாள் என்றவாறு. (5)

## மகளிரழுகை

1289 அழலிடை மிதிப்பபோ லடிநி லத்துரு
இழையணி முலைத்தடத் தெற்றி யெற்றியே
குழலென விழைந்துநைந் தேங்கிக் கோதிலா
மழலையஞ் சொல்லினார் மாழ்கி வாடினார்.

அழலிடை மிதிப்ப போல் அடிநிலத்து உரு
இழை அணி முலைத்தடத்து எற்றி எற்றியே
குழல்என இழைந்து நைந்து ஏங்கிக் கோதுஇலா
மழலை அம் சொல்லினார் மாழ்கி வாடினார்.

பொ: நெருப்பின் நடுவே மிதிப்பவர் போலத் தம் பாதங்கள் நிலத்தில் படாமல் பெயர்த்துப் பெயர்த்துவைத்து, அணிகலன்களை அணிந்த மார்பின்மேல் அடித்துக் கொண்டு அடித்துக்கொண்டு குழலின் ஓசைபோலக் குரலோசை நுணுகப் பெற்று வருந்தி ஏங்கிக் குற்றமற்ற மழலையாகிய அழகிய சொல்லினையுடைய மகளிர் மனம் வருந்தி முகம் வாடினார்கள்.

கு: மகளிர் துன்பத்தால் ஓரிடத்து நில்லாது பாதங்களைப் பெயர்த்து வைத்துக் கொண்டு மார்பில் அடித்துக் கொண்டு அழுவதைப்பார்ப்பவர்கள் அவர்கள் நெருப்பிடை மிதிக்கின்றார்களோ என எண்ணுவர் என்றபடி. அழலிடை மிதிப்பர்போல் என்றது' தற்குறிப்பேற்றவணி. உரு என்பது ஈறுகெட்ட எதிர் மறை வினையெச்சம். உரு எற்றி என இயையும். எற்றி எற்றி என்ற அடுக்குப் பன்மையுணர்த்த வந்தது. பன்முறை மார்பில் அடித்துக் கொண்டார்கள். என்றவாறு புல்லாங் குழலின் ஓசை போல மகளிரின் அழுகைக்குரல் நுணுகி ஒலித்தது என்றவாறு. இழைதல்-நுணுகுதல். மழலையஞ் சொல்லினார் என்றது மகளிரை. மழலை என்பது எழுத்துநிரம்பாத குதலைச்சொல். கோசலையின் மரணத்தையறிந்த அரச குடும்பத்து மகளிர் அழுத நிலையை உணர்த்தியவாறு. (6)

## கோசலையின் உடம்பை மகளிர் விமானத்து ஏற்றுதல்

1290 கரத்தணி சிரத்தினர் கலுழ்ந்த கண்ணினர்
இரைத்தெழு பலசன மிரங்கிப் பின்செல
அரத்தமென் கரத்திய ரஞ்சொல் வஞ்சியர்
விரைக்கருங் குழலியை விமானத் தேற்றினர்.

**கரத்துஅணி சிரத்தினர் கலுழ்ந்த கண்ணினர்**
**இரைத்துஎழு பலசனம் இரங்கிப் பின்செல**
**அரத்தமென் கரத்தியர் அஞ்சொல் வஞ்சியர்**
**விரைக்கருங் குழலியை விமானத்து ஏற்றினர்.**

பொ: குவிந்த கைகளால் அணி செய்யப்பட்ட சிரத்தினை யுடையவராய்க் கலங்கிய கண்களையுடையவர்களாய் அரற்றிக் கொண்டு எழுகின்ற பல சனங்கள் அழுது பின்னே செல்லச் சிவந்த மெல்லிய கைகளையுடைய அழகிய சொல்லைச் சொல்கின்ற வஞ்சிக் கொடிபோன்ற பெண்டிர் மணமுடைய கரிய கூந்தலை யுடைய கோசலையை விமானத்தில் ஏற்றினர்கள்.

கு: சிரமேல் கரம் குவித்துக் கொண்டு என்பார், கரத்தணி சிரத்தினர் என்றார். கலுழ்தல்-கலங்குதல். அரண்மனையிலிருந்த கோசலையின் உடம்பைத் தூக்கி மகளிர் விமானத்தில் ஏற்றுங்கால் நிகழ்ந்தது கூறியவாறு. இரைத்தல் என்றது துன்ப ஆரவாரத்தை அரத்தம்-சிவப்பு. கோசலையின் உடம்பை மென்மையாக எடுத்து வைக்கத்தக்க கைகள் என்பது புலப்பட 'அரத்த மென்கரத்தியர்' எனவும் அஞ்சொல் வஞ்சியர் எனவும் கூறியவாறு. கோசலை உயர்குலத்துப் பெண்டு ஆகலின் அவள் கூந்தலுக்கு மணமுண்மை தோன்ற 'விரைக்கருங்குழலி' என்றார். கருங்குழலி என்றது இராமனைப் பெற்ற பெருமையால் நரையின்றிருந்தது என்னலாம். விமானத்தேற்றிய பின்பு விமானத்தை ஆடவர் ஈமத்திற்கு எடுத்துச் சென்றனர் என்பதை உய்த்துணர வைத்தவாறு. (7)

குறிப்பு: இச்செய்யுள் அச்சுப் புத்தகங்களில் எட்டாஞ் செய்யுளாக மாறியுள்ளது: மகளிர் செயல்கள் ஒருங்கு கூறப்படுதலே பொருத்தம் என மாற்றப்பட்டது.

## சந்தனம் அகில் இவற்றால் பள்ளி செய்தல்

1291 செழுந்தடங் காரகில் சிறந்த சந்துடன்
அழுந்திட விடமிக வடுக்கி யாடவர்
முழங்குசங் கொலியெழ முரசு பேரிகை
தழங்கிடச் சடங்குகள் சமைத்த பின்னரே.

செழுந்தடங்கார் அகில் சிறந்த சந்துடன்
அழுந்திட இடம்மிக அடுக்கி, ஆடவர்
முழங்கு சங்கு ஒலி எழ, முரசு, பேரிகை
தழங்கிடச் சடங்குகள் சமைத்த பின்னரே.

போ: செழுமையான பெரிய கரிய அகில் கட்டைகளைச் சிறந்த சந்தனக் கட்டைகளோடு அழுத்தமாகவும் இடம் விரிந்திடவும் அடுக்கி, ஆண்கள் முழக்குகின்ற சங்கின் ஒலி எழவும் முரசும் பேரிகையும் ஒலிக்கவும் இறுதிச் சடங்குகள் செய்து முடித்தபின்பு.

கு: அகிலும் சந்தனமுமாகிய உயர்ந்த விறகுகளை இடம்பட அடுக்கிச் சடங்குகளை முடித்தபின்பு என்றவாறு. குளகம். வருஞ் செய்யுளில் முடியும். கோசலையின் உடம்பையேற்றுதற்குரிய ஈமப் பள்ளியின் இயல்பு விளக்கியவாறு. இறுதிச் சடங்கு நிகழ்கின்ற போது சங்கும் முரசும் பேரியும் முழங்கின என்க. முழங்குதல் தழங்குதல் இரண்டும் ஒருபொருட் சொற்கள். (8)

## கோசலையின் உடம்பை ஈமப்பள்ளியில் சேர்த்தல்

1292 இடரினை யுழந்துழந் தேங்கிக் கண்ணினீர்
அடலமர் மார்பகத் தருவி போலுகக்
கடனவை கழிந்தபின் காத லன்னையைப்
படரெரி மயானவெம் பள்ளி சேர்த்தினர்.

இடரினை உழந்து உழந்து ஏங்கிக், கண்ணின்நீர்
அடல்அமர் மார்பகத்து அருவி போல் உகக்
கடனவை கழிந்தபின் காதல் அன்னையைப்
படர்எரி மயான வெம்பள்ளி சேர்த்தினர்.

பொ: துன்பத்தில் வருந்தி வருந்தி ஏங்கிக் கண்ணிலிருந்து வரும் கண்ணீர் வலிமை பொருந்திய மார்பகத்தில் அருவிபோல ஒழுகாநிற்க, இராமன் செய்ய வேண்டிய கடன்களைக் கழித்தபின்பு, அவன் அன்பு மிக்க அன்னை கோசலையைப் படர்கின்ற எரியினையுடைய மயானத்தில் அமைந்த வெப்பமிக்க ஈமப்பள்ளியில் சேர்த்தார்கள்.

கு: படரெரி மயான வெம்பள்ளி சேர்த்தினர் என்றமையால் சிறுவிறகால் தீமூட்டினமை புலப்படுத்தியவாறு. அன்னை பிரிந்த அளப்பரும் பெருந்துயரால் இராமன் அழுதபோது அவன் கண்ணீர் மார்பில் அருவிபோல் ஒழுகியது என்க. உழத்தல், ஏங்குதல் என்பன துன்பத்தின் நிலை பலவற்றைப் புலப்படுத்தியவாறு. ஈமத்தே ஏற்றுதற்கு முன்பு செய்ய வேண்டியகடன்களை இராமன் செய்து முடித்தபின் மக்கள் கோசலையின் உடம்பை ஈமப்பள்ளியில் சேர்த்தார்கள் என்க. (9)

## இராமன் தென்புலக் கடன் கழித்துத்தானம் வழங்குதல்

1293 சேதனர் புகறரத் திலம் பெய் வார்புனல்
கோதினன் பிண்டமுங் கொடுத்துச் செங்கை
யால்
பூதனம் கோதனம் பொன்செய் பல்கலன்
மாதன மறையவர் பெற வழங்கினான்.

சேதனர் புகல்தரத் திலம்பெய் வார்புனல்
கோது இல் நன்பிண்டமும் கொடுத்துச் செங்கையால்
பூதனம் கோதனம் பொன்செய் பல்கலன்
மாதனம் மறையவர் பெற வழங்கினான்.

பொ: இராமன் மூதறிஞர் சொன்னபடி எள்ளும் தண்ணீரும் இறைத்துக் குற்றம் அற்ற நல்ல பிண்டத்தையும் கொடுத்துச் சிவந்த கையினால் பூமியாகிய செல்வம், பசுவாகிய செல்வம் பொன்னால் செய்த பலவகை அணிகலன்கள், பெருஞ்செல்வம் இவற்றை வேதியர்கள் பெற்றுக் கொள்ளும்படி கொடுத்தான்.

கு: சேதனர்-அறிவில் முதிர்ந்தோர். இறந்தோர்க்குச் செய்ய வேண்டிய கடன்கள் இவையென மூதறிஞர்கள் சொல்ல அச் சொல்லின் படி இராமன் எள்ளும் தண்ணீரும் விடுத்துப் பிண்டம் கொடுத்து இறுதிக் கடனைச் செய்து முடித்தான் எனவும் பின்பு அந்தணர்கட்கும் பூதானம் கோதானம் மாதானம் வழங்கினான் எனவும் கொள்க. பூதனம்- பூமியாகிய செல்வம். கோதனம்- பசுவாகிய செல்வம்; மாதனம்-பெருஞ்செல்வம். இனி, பூதானம் கோதானம் என்பனவே குறுக்கல் விகாரம் பெற்றுப் பூதனம் கோதனம் என ஆயின எனலும் ஆம். பொன்செய்பல்கலன் வழங்கினான் என்றது சொர்ண தானத்தை. (10)

## கைகேசியும் சுமத்திரையும் இறத்தல்

1294 இன்னநாள் சிலகழிந் திருந்த காலையில்
கன்னல்செய் மொழியள்கை கயன் மடந்தையும்
துன்னியு குழற்சுமித் திரையு மென்னுமிவ்
வன்னைய ரிருவரு மந்த மெய்தினர்.

இன்னநாள் சிலகழிந்து இருந்த காலையில்
கன்னல் செய் மொழியாள் கைகயன் மடந்தையும்
துன்னிய குழல் சுமித்திரையும் என்னும் இவ்
அன்னையர் இருவரும் அந்தம் எய்தினர்.

பொ: இத்தகைய நாட்கள் சில கழிந்து இருந்தபோது கரும்பு போன்று இனிமையைச் செய்கின்ற சொல்லினளாகிய கைகேசியும் நெருங்கிய கூந்தலினையுடைய சுமித்திரையும் என் கின்ற இந்தத் தாயர் இருவரும் இறுதியுற்றார்கள்.

கு: கன்னல் செய் மொழி என்றது கரும்புபோன்று இனி மையைச் செய்கின்ற சொல் என்றவாறு. கைகயன் மடந்தை- கைகேசி. அந்தம்-இறுதி. மரணம் மூப்பு முறையால் அன்னையர் மூவரும் மரணமுற்றனர் என்க. இராமன் ஆட்சியில் மூத்தோர் இருக்க இளையோர் இறவார் என்பது நினைக. (11)

## சிற்றன்னையர் இருவர்க்கும் இறுதிக்கடன் செய்தல்

1295 மடங்கல்போன் மொய்ம்பினுன் வரிசை
யின்வழா
தடங்கலும் விதிமுறை யமைத்து மாரிபோல்
கடன்களு மறையவர் களிக்க நல்கியே
தடம்புனல் படிந்துநற் ருனஞ் செய்தனன்.

மடங்கல் போல் மொய்ம்பினுன் வரி சையின்வழாது
அடங்கலும் விதிமுறை அமைத்து மாரிபோல்
கடன்களும் மறையவர் களிக்க நல்கியே
தடம்புனல் படிந்து நல் தானம் செய்தனன்.

பொ: எமனைப் போன்ற வலிமையுடையவனுகிய இராமன், தன் சிற்றன்னையர் இருவர்க்கும் வழிவழி வந்த வரிசையினின்றும் வழுவாது எல்லாச் சடங்குகளையும் வேதவிதிப்படி செய்து வேதியர் களிக்கும்படி கடன்களைச் செய்து விட்டு மேகம் போல வழங்கிப் பின்பு பெரிய நீர்நிலையில் மூழ்கிப் பின்பு செய்ய வேண்டிய தானங்களையும் செய்தான்.

கு: மடங்கல்-எமன். ஆற்றல் மிகுதிக்கு எமனை உவமை கூறுதல் மரபு. "கூற்றொத்தீயே மாற்றருஞ் சீற்றம்" (புறநா.) என்றது காணலாம். இப்பாடல் பல ஏடுகளில் இல்லை. நல் தானம் என்றது பூதானம் கோதானம் முதலியவற்றை. (12)

## இராமன், அசுவமேத யாகங்காண வந்தவர்க்கு விடை கொடுத்து இருத்தல்

### வேறு

1296 தானை மன்னர் தொழுகழற்காற்
சத்துருக்கன் தனக்கு மியல்
வான ரர்க்கு மன்னனுக்கு
மகனுக் கும்மம் மாருதிக்கும்

மீன மமருங் கடலிலங்கை
வீடணற்கும் விடையருளி
ஏனை மன்னர் புடைசூழ
விலங்குமொளியா சனத்திருந்தான்.

தானை மன்னர் தொழுகழல்கால் சத்துருக்கன் தனக்கும் இயல்
வானரர்க்கும் மன்னனுக்கும் மகனுக்கும் அம்மாருதிக்கும்
மீனம் அமரும் கடல் இலங்கை வீடணற்கும் விடையருளி,
ஏனை மன்னர் புடைசூழ இலங்கும் ஒளி ஆசனத்து இருந்தான்.

பொ: நால்வகைச் சேனைகளையுடைய மன்னவர்கள் எல்லாம் தொழுகின்ற கழலையணிந்த காலினையுடைய சத்துருக்கனுக்கும் இயல்பிற் சிறந்த வானரர்கட்கும் வானர மன்னனாகிய சுக்கிரீவனுக்கும் அவன் மகன் அங்கதனுக்கும் அந்த அனுமானுக்கும் மீன்கள் பொருந்திய கடலால் சூழப்பட்ட இலங்கை மன்னனாகிய வீடணனுக்கும் விடை கொடுத்துவிட்டு மற்றை மன்னர்கள் பக்கத்தில் சூழ்ந்திருக்க விளங்குகின்ற ஒளியையுடைய சிங்காசனத்தில் இராமன் வீற்றிருந்தான்.

கு: சத்துருக்கன் மதுகைநகர்க்கு அரசனாய் ஆட்சி செய்பவனாதலின் அவனுக்கும் இராமன் விடைகொடுத்து அனுப்ப வேண்டியவனானான். அம்மாருதி என்ற சுட்டு உலகறி சுட்டு. அசுவமேத யாகம் காண வந்த இவர்கள் இதுகாறும் இராமனுடன் தங்கியிருந்தார்களாதலின் அன்னையர் மூவர் இறுதிச் சடங்கு முடிந்தவுடன் தத்தம் ஊர்க்குச் செல்ல விடைகொடுத்தான் இராமன் என்க. (13)

## கைகேயன் குரு காசிபன் அவை புகுதல்

1297 மொய்காமர் விழியார்த முலைமுகடு பொரு
தடந்தோட்
கொய்கேச வரிமுரருர்க் கொடைப்பரதன்
றிருமாமன்

கய்கேயன் குலக்குருவாங் கலைமறைதேர்
கார்க்கியனும்
பொய்கேத மில்லாத புகழ் முனிவ னவை
புகுந்தான்.

மொய்காமர் விழியார்தம் முலைமுகடு பொருதடந்தோள்
கொய்கேச அரிமுரல்தார்க் கொடைப் பரதன் திருமாமன்
கய்கேயன் குலக்குருவாம் கலைமறைதேர் கார்க்கியனும்
பொய்கேதம் இல்லாத புகழ்முனிவன் அவை புகுந்தான்.

பொ: நெருங்கிய விருப்பத்தை விளக்கும் விழியினையுடைய பெண்டிர்தம் முலை முகட்டோடு பொருகின்ற பெரியதோள்களையும் அழகாகக் கத்தரிக்கப்பட்ட தலைமயிரினையும் வண்டுகள் ஒலிக்கின்ற மாலையினையும் கொடைத்தன்மையும் உடைய பரதன் தன் திருமாமனாகிய கைகேயன் தன் குலக்குருவாம் கலைகளிலும் வேதங்களிலும் தேர்ச்சி பெற்றுள்ள கார்க்கியன் என்கின்ற பொய்யும் வழுவும் இல்லாத புகழ்மிக்க முனிவன் இராமனது அரசவையில் புகுந்தான்.

கு: மொய்-நெருக்கம். இங்கு மிகுதியையுணர்த்தியது. காமர்-விருப்பம்; அழகு எனலும் ஆம். போர் செய்யும் பகைவரே இன்மையால் மங்கையர்தம் கொங்கை முனைகளோடு போர் செய்கின்ற தடந்தோளினனாகப் பரதனைக் கூறினர். தோளினையும் கொய்கேசத்தினையும் அரிமுரலும் தாரினையும் கொடையினையும் உடைய பரதன் என்க. அழகாகக் கத்தரிக்கப் பெற்ற தலை மயிரினையுடைய பரதன் என்பார், 'கொய்கேச.. பரதன்' என்றார். அரி-வண்டு. கொடை என்றது வேண்டுவார்க்கு வேண்டுவன அளிக்கும் வள்ளல்தன்மையை. பரதன் திருமாமன் கய்கேயன் என்றது, உதாசித்தினை. எதுகை நோக்கி கை, கய் ஆயிற்று. கலை மறை என்றது உம்மைத்தொகை. கலைகளையும் மறைகளையும் என்க. கேதம்-குற்றம். "கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை" (திருவாசகம்-கண்ட பத்து) என்புழியும் அச்சொல் இப்பொருட்டாதல் காணலாம். (14)

## முனிவன் வந்த காரணம் வினவல்

1298 பூரணமா யகம்புறமும் புளகிப்பப் புனைதுளப
நாரணன்றன் றிருநாம நவின்றொருகான்
மறவாத
ஆரணமா மறையோனை யடிவணங்கி நீர்வந்த
காரணமே துரையென்று கதிர்வடிவே
லவனுரைத்தான்.

பூரணமாய் அகம்புறமும் புளகிப்பப் புனைதுளப
நாரணன்தன் திருநாமம் நவின்று ஒருகால் மறவாத
ஆரணமா மறையோனை அடிவணங்கி, 'நீர்வந்த
காரணம் ஏது? உரை' என்று கதிர்வடிவேலன் உரைத்தான்.

பொ: அகத்தோடு புறமாகிய உடம்பும் பூரணமாய்ப் புளகாங்கிதம் கொள்ளுமாறு துளபமாலை புனைந்த நாராயணனுடைய திருப்பெயரை நாவிற்சொல்லி ஒருகாலும் மறவாதிருக்கும் வேதங்களையுணர்ந்த சிறந்த வேதியனாகிய கார்க்கிய முனிவனை அடிக்கண் வணங்கி, 'நீர் வந்த காரணம் ஏது?' என்று ஒளியுடைய கூர்மையான வேலையுடைய இராமன் வினவினான்.

கு: பூரணம்-நிறைவு. அகம்-மனம். புறம் என்றது புற உடம்பினை. நாரணனது திருநாமமாகிய எட்டெழுத்து மந்திரத்தை நாவினால் நவிலுங்கால் கார்க்கிய முனிவருக்கு மனமும் உடம்பும் நிறைவாய் மகிழ்ச்சியினால் புளகாங்கிதம் அடையும் என்றவாறு. புளகித்தல்-மயிர்கூச்செறிதல். அகமும் புறமும் பூரணமாய்ப் புளகிப்ப நவின்று என இயையும். துளபம் புனை நாரணன் என மாற்றி இயைக்க. நவிலுதல்-சொல்லுதல். நாரணன்றன் றிருநாமம் என்றது, 'ஓம் நமோ நாராயணாய' என்பது. நாவினால் நாமத்தை நவிலுதலும் உள்ளத்தால் அவன் உருவை மறவாமையும் உடையவர் கார்க்கிய முனிவர் என்றவாறு. அடிக்கண் வணங்கி என ஏழாவது விரிக்க. இராமனுக்குக் கோதண்டமேயன்றி வேலும் உண்டு என்பதை இதனால் உணர்த்தியவாறு.

## முனிவன் வந்த காரணம் சொல்லுதல்

1299 போது புனை கமழ்தாராய் புகழ்புனைகாந்
திருவர்களுன்
மாதுலனை யமர்தொலைத்து வவ்வினரால் வள
நாட்டை
ஏதியினு லவரையெறிந் தினிதாள்கை யியல்
பென்று
ஓதுமறை முறைதெரிந்த வுயர்முனியு முரை
செய்தான்.

போதுபுனை கமழ்தாராய்! புகழ்புனை காந்திருவர்கள் உன்
மாதுலனை அமர்தொலைத்து வவ்வினரால் வளநாட்டை;
ஏதியினுல் அவரை எறிந்து இனிது ஆள்கை இயல்பு என்று
ஓதுமறை முறைதெரிந்த உயர்முனியும் உரை செய்தான்.

பொ: போதுகளால் புனையப் பெற்றுக் கமழ்கின்ற மாலையையணிந்த இராமா! வலிமைமிகுதியால் புகழ்மாலை புனைந்துள்ள காந்திருவர்கள் உன் மாமன் உதாசித்தினைப் போரில் தோற்கச் செய்து அவனது வளநாட்டை வவ்விக் கொண்டார்கள்; அக்காந்திருவரை வாளால் எறிந்து தொலைத்து விட்டு அந்த வளநாட்டை நீ ஆளுதல் இயல்புதானே! என்று ஓதுதற்குரிய வேதங்களில் கூறும் முறைகளைத் தெரிந்த கார்க்கிய முனியும் சொன்னன்.

கு: போது, மலர்தற்கு முந்தி சிறிது விரிந்த நிலையில் இருப்பது. போதாக இருக்கும் நிலையிலே கொய்து புனைந்தமையால் மார்பில் அணிந்தவுடன் நன்கு மலர்ந்து கமழும் மாலை என்க. புகழ்புனை காந்திருவர் என்றது, வீரப்புகழ் புனைந்த காந்திருவரை. மாதுலன்-மாமன். வளநாட்டை வவ்வினர் என இயையும். மறைமுறை என்றது வேதங்களில் கூறிய முறைகளை. ஆள்கை-ஆளுதல். மாமன் நாட்டைக் கவர்ந்த காந்திருவரை வாளால் கொன்று அவர் கவர்ந்த நாட்டை ஆளுதல் கொடுமையன்று, முறையேயாகும் என்பார், 'இனிதாள்கை இயல்பென்னு' என்றார். (16)

## பரதனையும் மக்களையும் கந்திருவ நாட்டை வென்றடிப் படுத்த விடுத்தல்

1300 தக்கனுடன் புட்கரனைத் தடமகுடம் புனைவித்துத்
திக்குநிகழ் காந்தவரைத் திறன் முருக்கிச்
சிந்துநா
டொக்கவுட னடிப்படுத்தி யொருதனிநீ வருக
வெனு
மக்களுடன் பரதனையும் வரன்முறையே செல
விடுத்தான்.

தக்கனுடன் புட்கரனைத் தடமகுடம் புனைவித்துத்
'திக்குநிகழ் காந்தவரைத் திறன்முருக்கிச் சிந்துநாடு
ஒக்கஉடன் அடிப்படுத்தி ஒருதனிநீ வருக' எனு,
மக்களுடன் பரதனையும் வரன்முறையே செலவிடுத்தான்.

பொ: (கார்க்கிய முனிவர் சொன்னவுடன் இராமன்) தக்கன் புட்கடன் என்போரைப் பெரிய முடிபுனையச் செய்துவிட்டு, (பரதனை நோக்கி) 'திக்கின் எல்லைவரையில் செல்கின்ற புகழை யுடைய கந்திருவரைத் திறமை கெடுத்து, உன்னால் சிதறுண்ட கந்தருவ நாட்டை ஒருசேர உன் ஆட்சிக்கு உட்படுத்திவிட்டு, பின்பு நின்மக்கள் இருவர்க்கும் அந்நாட்டைப் பகிர்ந்து கொடுத்து விட்டு, 'நீ ஒரு தனியே வருக' என்று சொல்லி மக்களுடன் பரதனை முறைப்படி செல்லுமாறு விடுத்தான்.

கு: இலங்கையை வெல்வதற்கு முன்பே அதனை வீடணனுக்குக் கொடுத்து முடிசூட்டியது போலக் கந்திருவ நாட்டினை வெல் வதற்கு முன்பே பரதன் மக்களாகிய தக்கனையும் புட்கரனையும் அந்நாட்டுக்கு அரசர்களாக முடிபுனைவித்தான் இராமன் என்க. கந்திருவ நாட்டை இரண்டாகப் பிரித்து இருவர்க்கும் கொடுத் தான் என்க. கந்திருவரை என்பது 'காந்தவரை' என மருவியது. திறன் முருக்குதல் திறமையை அழித்தல். சிந்தும் நாடு என்றது பரதனால் சிந்தப்பட்ட கந்திருவநாட்டை. முதலில் பரதனே அரசனாக அடிப்படுத்த வேண்டும்; பின்பு இருபுதல்வர்க்கும் பகிர்ந்து கொடுத்துவிட்டுப் பரதன் தனியாக வரவேண்டும்

என்பது இராமன் கட்டளை. பரதன் மக்கள் ஆட்சி புரிந்து கொண்டு கந்திருவநாட்டில் வாழவேண்டும் என்பது உட்கோள். வரன்முறை என்றது பரதன் முன்னும் அவன் மக்கள் பின்னும் செல்லுதல். (17)

## யானைப்படையின் சிறப்பு
### வேறு

1301 குறைமதி யனையவெண் கோட்டுக் கோலமா
நிறைமதி புரைவன திலக நெற்றிய
சிறைமது கரங்களுந் தேனி னீட்டமு
மறைதரு மும்மதத் தருவி வாரணம்.

குறைமதி அனைய வெண் கோட்டுக் கோலமா,
நிறைமதி புரைவன திலக நெற்றிய,
சிறைமது கரங்களும் தேனின் ஈட்டமும்
அறைதரு மும்மதத்து அருவி வாரணம்.

பொ: சிறகுகளோடுங்கூடிய வண்டுகளும் தேனீக்களின் கூட்டமும் ஒலிக்கின்ற மூன்று மதங்களாகிய அருவியினையுடைய யானைகள்; கலைகள் குறைந்த பிறைச்சந்திரனை ஒத்த வெண்மையான கொம்புகளையும் அழகிய பெரிய பூரணச்சந்திரனைப் போன்றதிலகமணிந்த நெற்றியையும் உடையனவாய் விளங்கின.

கு: பரதனோடு சென்ற நால்வகைப் படையுள் யானைப்படையைப் பற்றி இரு செய்யுளில் கூறுகின்றார். யானையின் நெற்றியில் வெண்ணீற்றால் திலகமிடுதல் மரபு. அதனையே 'கோலமா நிறைமதி புரைவன திலகம்' என்றார். நெற்றிய என்பது அகர வீற்றுக் குறிபபு வினை முற்று. நெற்றியையுடையவாயின என்க. மதுகரம் என்றது மதுவினைச் செய்வது என்ற காரணம் பற்றி வண்டுக்குப் பெயராயது. தேன் என்பது ஒருவகை வண்டு; அது தேனீ என்வும் சொல்லப்படும். அறைதல் - ஒலித்தல். மும்மதமாவன:- கன்னமதம், கபோலமதம் பீசமதம் என்பன. மும்மதத்தருவி என்புழி அத்துத் தவிர்வழிச்சாரியை. மும்மதங்களாகிய அருவியை யுடைய வாரணம் என்றவாறு. வாரணம்-யானை. (18)

1302 நிழலொடு மலைவன நீள்க ரத்தன
அழலுறு விழியன வசலம் போல்வன
தழைசெவி யுடையன சாம ரத்தன
மழையென வதிர்வன மதுகை வாரணம்.

நிழலொடு மலைவன; நீள்கரத்தன;
அழல்உறு விழியன; அசலம் போல்வன;
தழைசெவி உடையன; சாம ரத்தன;
மழைஎன அதிர்வன மதுகை வாரணம்.

பொ: வலிமை மிக்க யானைகள் தம்நிழலை நோக்கி அதனை வேற்று யானை என்று கருதி அதனோடு கோபித்துப் போர் செய்யும் இயல்புடையன; நீண்ட துதிக்கையையுடையன; கோபத்தால் நெருப்புப் பொறி பறக்கும் விழிகளையுடையன; மலைபோன்ற பெரிய தோற்றத்தையுடையன. பெரிதாகத் தழைத்துள்ள காதுகளை யுடையன. அந்தக் காதுகளைச் சாமரம் போல அசைக்கும் தன்மையுடையன; இடிக்கும் மேகம்போலப் பிளிறும் தன்மையுடையன.

கு: யானையின் இயல்பினையெல்லாம் இச் செய்யுளில் எடுத்துக்கூறுகின்றார். மதுகை வாரணம் மலைவனகரத்தன விழியன போல்வன உடையன சாமரத்தன அதிர்வன என இயையும். யானை மதத்தால் சுதம் சிறந்தபோது தம் நிழலைக் கண்டு கோபிக்கும் இயல்பினது. தரையில் படும்படி நீண்ட துதிக்கையுடைமை உத்தம யானைகட்கு இலக்கணம். காரண மின்றிக் கண்சிவத்தல் யானைக்குண்டு. ஏழுமுழம் உயர்ந்துள்ள கரிய பெரிய தோற்றத்தால் மலையென மதிக்கத்தக்க வடிவ முடைமை யானைக்கு உண்டு. அசலம்-மலை. முறம்போலப் பெரிதாகத் தழைத்துள்ள காதுகள் ஓயாமல் சாமரம் வீசுவது போல அசைக்கும் இயல்பு யானைக்குண்மை புலப்படுத்தியவாறு. சாமரத்தன என்பது, சாமரம் போன்று அசைக்கும் தன்மையன எனப் பொருள் கொள்ள வேண்டும். சாமரம்-கவரி. மழை என்றது இடிக்கும் மேகத்தை. மதுகை - வலிமை. (19)

## தேர்களின் சிறப்பு

1303 சூட்டிய மணியன துலங்கு செவ்வரக்
கூட்டிய வுருளைய வொளிகொள் பொன்னினால்
கோட்டிய கொடிஞ்சிய குதிரை நான்குடன்
பூட்டிய செழுமணிப் பொலன்கொ டேர்பல.

சூட்டிய மணியன; துலங்கு செவ் அரக்கு
ஊட்டிய உருளைய; ஒளி கொள் பொன்னினால்
கோட்டிய கொடிஞ்சிய குதிரை நான்குடன்
பூட்டிய செழுமணிப் பொலன் கொள் தேர்பல.

பொ: கட்டிய மணிகளையுடையவும் விளங்குகின்ற செவ்வரக்கு ஊட்டிய சக்கரங்களை உடையனவும் ஒளியுடைய பொன்னினால் வளைத்துச் செய்யப்பட்ட கொடிஞ்சியையுடையனவும் குதிரைகள் நான்கினை ஒருங்கே பூட்டியுள்ளனவுமான செழுமையான மணிகள் பதித்த பொன்னிறங்கொண்ட தேர்கள் பலவாகும்.

கு: சூட்டிய மணி என்றது, ஒலிக்கின்ற மணிகளை. செழுமணி என்றது ஒளிமணியை. தேர்ச்சக்கரங்கள் செவ்வரக்குப் பூசப் பட்டுச் செந்நிறத்தவாக இருந்தன. போர்க்குப் போகும் தன்மை புலப்படுத்தியவாறு. உருளை-சக்கரம். கொடிஞ்சி என்பது, தேர்த்தட்டின் எதிரில் தாமரை மொட்டின் வடிவாகச் செய்து வைத்த கைப்பிடி என்னலாம். செல்வச் சிறப்புத் தோன்ற அக்கொடிஞ்சி பொன்னால் செய்யப்பட்டது என்க. (20)

## குதிரைகளின் வருணனை

1304 நிறப்பல மணியெனு நிறங்க ளெண்ணில
உறப்பெரும் புவிபொரு தெண்ண வும்பரில்
பறப்பன போல்வன பதுமத் தெண்ணன
பிறப்பன பெருங்கடல் பெரிய திக்கன.

நிறம்பல மணி எனும் நிறங்கள் எண்இல;
உறப்பெரும்புவி பொறுது என்ன; உம்பரில்
பறப்பன போல்வன; பதுமத்து எண்ணன;
பிறப்பன பெருங்கடல் பெரிய திக்கன.

பொ: (குதிரைகள்) பலநிறமுடைய மணிகள் என்னும்படி எண்ணிக்கையில்லாத நிறங்களையுடையனவும், தம் கால்கள் பதிந்தால் பெரிய பூமி அந்தச் சுமையைத் தாங்காது என்று கருதி மண்ணைவிட்டு விண்ணில் பறப்பன போல்வனவும், பதுமம் என்ற பேரெண் அளவினவும், பெரிய கடலில் பிறந்த பிறப்பினையுடையனவும், பெரிய திசையாகிய வடக்கிலிருந்து வந்தனவும்.

கு: குளகம். இச்செய்யுளில் குதிரைகளின் நிறங்களையும் அவை விண்ணில் பறப்பன போலத் தாவிச் செல்லும் நடையினையும் அவற்றின் பெரிய எண்ணிக்கையையும் அவற்றின் பிறப்பையும் அவை வந்த இடத்தையும் விவரித்தவாறு. பலநிறமணி என மாறுக. குதிரைகளின் எண்ணற்ற நிறங்களைக் கண்டோர் இவை பல நிற மணிகளைப் போன்றன என்று சொல்லத்தக்கவை என்பார், 'நிறம்பல மணியெனும் நிறங்கள் எண்ணில' என்றார். குதிரைகள் மண்ணில் கால் தோயாது பறப்பனபோலத் தாவிச் செல்லுதற்குக் காரணம் தற்குறிப்பேற்றமாகக் கற்பித்து 'உறப் பெரும் புவிபொறுது என்ன உம்பரில் பறப்பன போல்வன' என்றார். உற-தம்காற் குளம்புகள் தரையில் பதிந்தால். பதுமம் ஆம்பல் வெள்ளம் என்பன எண்ணுப் பெயர்கள். தாமரை என்பதன் பரியாய பெயர் பதுமம் எனக் கொள்க. பெருங்கடல் பிறப்பன என்றது, கடல் கடந்த நாடுகளிலிருந்து நீரின் வந்த நிமிர் பரிப்புரவிகளையே எனக் கொள்ளலாம். பெரியதிக்கு என்றது வடதிசையை. ஆகுபெயரால் அத்திசையிலுள்ள நாடுகளையுணர்த்தின என்க. (21)

1305 நிலத்தடி யிடப்பெரு தென்று நீண்டவான்
தலத்திடை மிதிப்பபோற் றுவுங் கோளன
வலத்தினு மிடத்தினும் வரவுங் கொட்பன
குலத்தினுக் கிசைந்தன குரகதங்களே.

நிலத்து அடி இடப்பெறுது என்று நீண்டவான்
தலத்திடை மிதிப்பபோல் தாவும் கோளன;
வலத்தினும் இடத்தினும் வரவும் கொட்பன;
குலத்தினுக்கு இசைந்தன குரகதங்களே.

பொ: தாம் பிறந்த குலத்திற்கேற்புடைய குதிரைகள், நிலத்தில் தம்பாதங்களை இடப்படாது என்று எண்ணி, உயர்ந்த விண்தலத்தில் மிதித்துச் செல்வன போலப் பூமியில் அடிபடாது தாவிச்செல்லும் கொள்கையுடையனவும், வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் சுழன்று கொண்டே வருகின்ற சுழற்சியை யுடையனவும் ஆக விளங்கின.

கு: குதிரைகள் நிலத்தில் கால்பதியாது விண்ணில் தாவிச் செல்லுதற்குத் தற்குறிப் பேற்றமாகக் காரணம் கூறியவாறு. நிலத்தடியிடப் பெறுது என்ற விரதம் பூண்டு விண்ணிடை மிதித்துச் செல்வதுபோன்றன என்பது கவி தான் கருதியதை இயல்பான நிகழ்ச்சிக்கு ஏற்றிக் கூறியதாதல் காணலாம். குதிரை வலமாகவும் இடமாகவும் சுழன்றுகொண்டு செல்வதை வாளி வேகம் என்பர். "கொட்புறு கலினப் பாய்மா ருலான்மகள் முடுக்கிவிட்ட மட்கலத்திகிரிபோல வாளியின் வருவ" (பால-மிதிலைக்காட்சி-13) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். மண்ணில் அடியிடாது விண்ணில் தாவிச் செல்வனவும் வாளிவேகத்தால் செல்வனவும் ஆய இருதிறத்தன என்றவாறு. குரகதங்கள் தாவுங் கோளனவும் கொட்பனவும் ஆயின என இயையும். (22)

1306 ஓதந்துப் பிறந்தன வுலூகத் தாயின
வேதத்துப் பிறந்தன வெள்ளை வானிறம்
பாதத்து முகத்தினும் பயின்ற பான்மைய
வாதத்திற் கடியன வாசி யிட்டமே.

ஓதத்துப் பிறந்தன உலூகத் தாயின;
வேதத்துப் பிறந்தன, வெள்ளை வான்நிறம்
பாதத்தும் முகத்தினும் பயின்ற பான்மைய;
வாதத்தின் கடியன - வாசி ஈட்டமே.

பொ: குதிரையின் கூட்டம் கடல் அலையில் பிறந்தவையும், உலூகம் என்ற வகையிற் சேர்ந்த பெட்டைக் குதிரையைத் தாயாகக் கொண்டவையும், வேதஒலி கேட்டுக் கொண்டே பிறந்தவையும் வெள்ளையான வாலின் நிறம் நான்கு பாதத்தி லும் முகத்திலும் பொருந்திய தன்மையுடையவையும், காற்றி லும் கடிய வேகத்தையுடையவையும் ஆக விளங்கியது.

கு: ஓதம்-கடல்அலை. உலூகம் என்பது குதிரை வகையில் முதன்மையானது. அவ்வினத்துப் பெட்டைக் குதிரையைத் தாயாகக் கொண்டவையெனவே உலூகவகைக் குதிரை என் பது புலப்படும். வேதத்துப் பிறந்தன என்றது. வேதியர்கள் வேதம் ஓதும்போது அவ்வொலியைக் கேட்டுக் கொண்டே பிறந்த பெருமையுடைய குதிரைகள் என்றவாறு. வால் வெளுத் திருப்பது போலவே நான்கு பாதங்களிலும் முகத்திலும் வெண்மை நிறம் அமைந்த குதிரைகள் பஞ்ச கல்யாணிக் குதிரை எனப்படும். வாதம்-காற்று. குதிரையின் வேகத்திற்குக் காற்றினை உவமை கூறுதல் மரபு. "வான் வழங்கியற்கை வளிபூட்டினையோ" (அகநானூறு) என்றது காண்க. வாசி-குதிரை. ஈட்டம்-கூட்டம். இம் மூன்று செய்யுட்களால் குதிரைப்படையின் சிறப்பைக் கூறியவாறு.
(23)

## காலாட் படையின் இயல்பு

1307 சூர்முகத் தனலுமிழ் தோம ரத்தினர்
கூர்முகப் பகழியர் கொதித்த நெஞ்சினர்
கார்முகக் கரத்தினர் கழலர் கல்லெனத்
தார்முகத் தெழுமவர் தறுகண் வீரரே.

சூர்முகத்து அனல் உமிழ் தோமரத்தினர்;
கூர்முகர் பகழியர், கொதித்த நெஞ்சினர்;
கார்முகக் கரத்தினர், கழலர், கல்எனத்
தார்முகத்து எழுமவர் தறுகண் வீரரே.

பொ: அஞ்சாமையுடைய காலாள் வீரர்கள் - அஞ்சத்தக்க முனையில் நெருப்பை உமிழ்கின்ற இருப்புலக்கையை யேந்தியவர்

களும், கூரிய முனையையுடைய அம்புகளைத் தாங்கியவர்களும் கோதிப்படைந்த நெஞ்சினை யுடையவர்களும் வில்லையேந்திய கையினையுடையவர்களும் காலில் கழலணிந்தவர்களும் ஆகிக் கல் என்ற ஆரவாரத்தோடு தூசிப் படையின் முகப்பிற்குச் செல்ல எழுகின்ற இயல்பினர் ஆவர்.

கு: சூர்-அச்சம். முகம் என்றது இருப்புலக்கையின் முனையை. தோமரம் தாங்கிய வீரர் தம் கண்கள் அனல் கக்குவது போல அந்தத் தோமரமும் கனல் கக்குதலாகக் கூறுவது உண்டு தோமரம்-இருப்புலக்கை. பகழி - அம்பு. கார்முகம் - வில். கழல் என்பது, வீரர்கள் காலில் வீரத்திற்கு அறிகுறியாக அணியும் ஒரு வகை அணி. கல் என்பது ஒலிக்குறிப்பு. தார்முகம் என்றது, தூசிப்படையின் முன்னிடத்தை. வீரர்கள் தோமரம் தாங்கிய வர்களும் பகழி தாங்கியவர்களும் வில்லேந்தியவர்களும் பகையை நினைந்து கோபத்தால் கொதிக்கும் நெஞ்சினையுடையவர்களும் வீரக்கழல் அணிந்தவர்களும் ஆகிப் போர்முனைக்கு எழுகின்ற இயல்பினராயிருந்தனர் என்க. (24)

## பரதன் தேரில் ஏறுதல்

1308 இனையன கரிபரி யிரதம் வாளரி
அனையவ ரந்நக ரகன்ற முன்செலப்
பனிமதி வெண்குடைப் பரதன் றானுமோர்
இனமிகு கதிர்மணித் தேரி லேறினான்.

இனையன கரிபரி இரதம் வாள்அரி
அனையவர் அந்நகர் அகன்று முன்செல,
பனிமதி வெண்குடைப் பரதன் தானும் ஓர்
இனம்மிகு கதிர்மணித் தேரில் ஏறினன்.

பொ: இத்தன்மையனவாகிய யானையும் குதிரையும் தேரும் கொடிய சிங்கம் போன்ற காலாள் வீரரும் அந்த அயோத்தி நகரைவிட்டு நீங்கி முன்னே செல்லாநிற்க, குளிர்ந்த சந்திரனைப் போன்ற வெண்மையான குடையையுடைய பரதனும், மணிகள் இனத்தில் மிக்கு விளங்குகின்ற ஒளியையுடைய மணிகள் பதித்த ஒரு தேரில் ஏறினான்.

கு: கரி இரதம் பரி என்று எண்ணியவர் இங்குக் கரிபரி யிரதம் என மாற்றிக் கூறினர் ஓசைநயம் நோக்கி என்க. வாளரி-கொடிய சிங்கம். காலாள் வீரர்க்குச் சிங்கம் உவமையாயது. பரதன் புறப்படுதற்கு முன்னரே அவன் நால்வகைப் படையும் அயோத்தி நகரை விட்டுப் புறப்பட்டுவிட்டன என்பார், 'பரதன் தானுமோர் ... தேரில் ஏறினன்' என்றார். இனமிகு கதிர்மணி என்றது அத்தேரில் பதிந்த மணிகளின் சிறப்பைப் புலப்படுத்தியவாறு மணி இனத்தில் மிக்குத் தோன்றும் ஒளி மணிகள் பதித்த தேரில் பரதன் ஏறினன் என அத்தேரின் செல்வச் சிறப்பை விளக்கியவாறு. (15)

## பரதன் புதல்வர்கள் தேர் ஏறுதல்

1309 அந்தரம் அதிர்வுற வார்க்கு மார்ப்பொலி
இந்திரன் றிசைமுத லெட்டுங் கிட்டிடத்
தந்திரத் தலைவருந் தழுவிச் சூழ்வர
மைந்தரு மணியணி வைய மேறினர்.

அந்தரம் அதிர்வுற ஆர்க்கும் ஆர்ப்பு ஒலி
இந்திரன் திசைமுதல் எட்டும் கிட்டிடத்
தந்திரத் தலைவரும் தழுவிச் சூழ்வர
மைந்தரும் மணி அணி வையம் ஏறினர்.

பொ: விண்ணுலகம் அதிர்ச்சியடையுமாறு சேனை ஆரவாரிக்கும் ஒலி இந்திரனுக்குரிய கிழக்கு முதலிய எட்டுத் திசைகளிலும் கிட்டுமாறு சேனைத் தலைவர்களும் நெருங்கிச் சூழ்ந்து வரப் பரதன் மைந்தர்களாகிய தட்சன் புட்கலன் என்ற இரவரும் மணிகளால் அணி செய்யப்பெற்ற தேரில் ஏறினார்கள்.

கு: சேனையின் ஆரவாரம் மேலுள்ள விண்ணுலகம் அதிர்ச்சியுறச் செய்தது என்பார் அந்தரம் அதிர்வுற ஆர்க்கும் ஆர்ப்பொலி என்றார். இந்திரன் திசை என்றது கீழ்த்திசையை. கீழ்த்திசைக் காவலன் இந்திரன் ஆகலின் அப்பெயராற் கூறினர். நேர்த்திசை நான்கும் கோணத்திசை நான்கும் சேரத் திசையெட்டாயின. சேனையின் ஆரவாரம் அந்தரத்தோடு புவியில் எண்டிசையிலும் பரவியது என்றவாறு. தந்திரம்-சேனை. மைந்தர் என்றது, பரதனுடைய மக்களாகிய தட்சன் புட்கலன் என்ற இருவரை.

மைந்தரும் என்றது பரதனேயன்றி அவன்மைந்தரும் எனப் பொருள்படுதலின், உம்மை இறந்தது தழீ இயஎச்சவும்மை. மணி அணி வையம் என்றது நவமணிகள் பதித்த தேரினை. ஒலிக்கின்ற மணிகள் கட்டிய தேர் எனலும் ஆம். (26)

## அயோத்தி வாயிலை விட்டுச் சேனை செல்லும் தோற்றம்

1310 அமிழ்தினை நிகர்தரு மயோத்தி மாநகர்
இமிழிசை வாயில்விட் டேகு மப்படை
கமழ்தரு துழாய்மதுக் கண்ணி யானுகர்ந்
துமிழ்தரு முலகினை யொத்த தாமரோ.

அமிழ்தினை நிகர்தரும் அயோத்தி மாநகர்
இமிழ் இசை வாயில் விட்டு ஏகும் அப்படை
கமழ்தரு துழாய் மதுக்கண்ணியான் நுகர்ந்து
உமிழ்தரும் உலகினை ஒத்தது ஆம் அரோ.

பொ: தன்கண் வாழ்வோர்க்குச் சுவை மிகத் தருவதால் அமிழ்தினை ஒத்ததாகிய அயோத்தி மாநகரின் ஒலிக்கின்ற ஓசை ஒழியாத கோபுரவாயிலை விட்டுச் செல்கின்ற அந்த நால்வகைப் படையின் தோற்றம், வாசனை கமழ்கின்ற துளசியினாலியன்ற தேன் ஒழுகும் மாலையையுடைய திருமால் பிரளய காலத்தில் உண்டு பின் உமிழ்கின்ற உலகத்தை ஒத்தது ஆகும்.

கு: அயோத்தி நகரம் திருமாலைப் போன்றது. கோபுர-வாயில் திருமாலின் வாயைப் போன்றது. அந்த வாயிலிலிருந்து புறப்பட்டுச் செல்கின்ற நால்வகைப் படையின் தோற்றம், அத்திருமால் முன்பு உண்டு உமிழ்கின்ற உலகத்தைப் போன்றது என்றவாறு. இதனால் நால்வகைப் படையும் புறப்பட்டுச் செல்லும் காட்சி உலகமே புறப்பட்டுப் போவது போன்றது என்பது புலப் படுத்தியவாறு. போக்கு வரவு புரிவோரின் ஒலியும் வாக்கியங் களின் ஒலியும் நிறைந்திருத்தலின் இமிழிசை வாயில் என்றார். இமிழ்தல் - ஒலித்தல். அப்படை உமிழ்தரும் உலகினை ஒத்தது என இயையும். துழாய்க்கண்ணி திருமாலுக்கு அடையாள மாலை ஆதலின் துழாய்மதுக் கண்ணியான் என அவனுக்குப் பெயர் குறித்தவாறு. (27)

## சேனையில் ஒலிகள்

1311 முரசொலி கிளையொலி முழங்கு வாழ்த்தொலி
புரசணி யானையின் புனைந்த பேரொலி
அரசொலி நெடும்பரி யமைந்த தேரொலி
பரசொலி சங்கொலி பரந்த தெங்குமே.

முரசுஒலி கிளைஒலி முழங்கு வாழ்த்துஒலி
புரசணி யானையின் புனைந்த பேர்ஒலி
அரசுஒலி நெடும்பரி அமைந்த தேர்ஒலி
பரசுஒலி சங்குஒலி பரந்தது எங்குமே.

பொ: முரசு என்னும் வாத்தியத்தின் ஒலியும் அதன் இனமாகவுள்ள ஊதுகொம்பு சல்லரி முதலியவற்றின் ஒலியும் அந்தணர்கள் முழங்குகின்ற வாழ்த்தின் ஒலியும் கழுத்திடு கயிற்றினையுடைய யானையின் பிளிறலாகிய பெரிய ஒலியும் அரசர்களின் ஆரவாரமாகிய ஒலியும் நெடிய குதிரைகள் பூட்டப் பட்டு அமைந்த தேரின் ஒலியும் மக்களின் துதிபாடல் ஒலியும் சங்கின் ஒலியும் எங்கும் பரவியது.

கு: கிளை என்றது இங்கு முரசுக்கு இனமான வாக்கியங்களைக் குறித்து நின்றது. புரசை-யானை கழுத்திடு கயிறு. புரசணி என்பது மரூஉவாகக் கொள்க. அரசு ஒலி என்றது, அரசர்களின் ஆர-வாரத்தை. பரசுதல்-துதிபாடுதல். ஒலிகள் பலவகையாகக் கூறப்-பட்டாலும் ஒலி என்ற ஒருமை கருதி எங்குமே பரந்தது என ஒருமையால் முடித்தார். (28)

## பரதன் படைப் பரப்பால் தரைநதியும் சுரநதியும் சுவறல்

1312 பரதனதெழும்படைப் பரப்பி னலிந்தத்
தரைநதி சுவறின சாற்றல் வேண்டுமோ
சுரநதி சுவறின தூளி யான் மறைந்
திரவித னெழுபரி யியங்கிற் றில்லையால்.

பரதனது எழும்படைப் பரப்பினுல் இந்தத்
தரைநதி சுவறின சாற்றல் வேண்டுமோ?
சுரநதி சுவறின தூளியால் மறைந்து
இரவிதன் எழுபரி இயங்கிற் றில்லையால்.

பொ: பரதனுடைய எழுகின்ற சேனைப் பரப்பினுல் இந்தத் தரையில் உள்ள நதிகள் சுவறிவிட்டன என்பதைச் சொல்ல வேண்டுமோ? ஏனெனில், சேனை செல்லுங்கால் எழும் துகள்களால் மறைக்கப் பெற்று ஆகாயத்தில் உள்ள தெய்வகங்கையே சுவறி விட்டதே! மேலும் சூரியனுடைய தேரில் பூட்டிய ஏழு குதிரைகள் இந்தத்துகளால் இயங்காமல் நின்றுவிட்டன.

கு: பரதனது படை, எழும்படி எனத் தனித்தனி இயையும். ஆகாய கங்கையே சேனை செல்லுங்கால் எழுந்த துகள்களால் மறைந்து சுவறியது என்ருல் இந்தத் தரையில் உள்ள நதிகள் சுவறின என்பது சொல்ல வேண்டுமோ? என்றவாறு. இது போன்றவற்றைத் தண்டாபூபிக நியாயம் என்பர். சுரநதி என்றது ஆகாயகங்கையை. தரைநதிகள் சுவறியது, படைகளின் பரப்பு செல்லுகையால் ஆகும். சுரநதி சுவறியது படைகள் செல்லுங்கால் எழுந்த துகளால் ஆகும். (29)

## யானைப்படையின் செலவு

1313 பாகைவென் றடர்வன பருமருப்பின
மோகவெங் கரிசொரி மும்மதத்தினுல்
ஓகைவெம் புனல்பரந் தோட நீடிய
வாகைவெம் பாலையு மருத மானதே.

பாகை வென்று அடர்வன, பருமருப்பின,
மோக வெங்கரி சொரி மும்மதத்தினுல்
ஓகை வெம்புனல் பரந்து ஓட நீடிய
வாகை வெம்பாலையும் மருதம் ஆனதே.

பொ: யானைப்பாகனையும் வெல்ல நெருங்குவனவும் பருத்த கொம்பினையுடையனவும் ஆன மதமயக்கத்தையுடைய கொடிய யானைச் சேனை சொரிகின்ற மூன்று மதங்களினுல் மகிழ்ச்சி

தரத்தக்க, விரும்பத்தக்க நீர்பரந்து ஓடவே, நீண்ட வாகை மரங்கள் நெருங்கியுள்ள வெப்பம் மிக்க பாலை நிலமும் மருதம் போலத் தண்மையுடையதாயிற்று.

கு: யானைச்சேனையின் மதநீர்ப் பெருக்கால் வெப்பமிக்க பாலை மருதம்போலத் தண்ணிது ஆயது என்றவாறு. பாகு-யானைப் பாகன். வென்று என்பது செயவெனெச்சம் செய்து என எச்ச மாகத் திரிந்து நின்றது எனக் கொள்க. வெல்ல அடர்வன என்க. அடர்தல்-நெருங்குதல். மோகம் என்றது மதமயக்கத்தை. மும் மதம் என்றது, கன்னமதம், கபோல மதம் பீசமதம் என்பன வற்றை. ஓகை-மகிழ்ச்சி. வெம்புனல் என்றது விரும்பத்தக்க நீரை. பாலை நிலத்து விரும்பத்தக்கது நீர்தானே! ஓட-ஓடுதலால். நீடிய வாகை என்று வாகைக்கு அடையாக்குக. வெம்பாலை-வெப்பமிக்க பாலை. வெம்பாலையும் என்புழி உம்மை உயர்வு சிறப்புமமை. வெம்பாலை என்றதற்கேற்ப தண்ணிய மருதம் என அடை வருவித்துக் கொள்க. (30)

## பரதன் நானிலமுங் கடந்து சிந்து நாட்டை யடைதல்

1314 எரிதவழ் பாலையு மிருங்கு றிஞ்சியும்
அரிதவழ் முல்லையு மயங்கொ ணெய்தலும்
ஒருதனி கழிந்தபி னோடை யானையான்
மருதமாஞ் சிந்துநா டதனின் மன்னினான்.

எரிதவழ் பாலையும் இருங் குறிஞ்சியும்
அரிதவழ் முல்லையும் அயம்கொள் நெய்தலும்
ஒருதனி கழிந்தபின் ஓடை யானையான்
மருதமாம் சிந்துநாடு அதனில் மன்னினான்.

பொ: நெருப்புத் தவழ்வது போன்ற வெப்பம் மிக்க பாலை நிலத்தையும் பெரிய குறிஞ்சி நிலத்தையும் திருமால் தங்கியுள்ள முல்லைநிலத்தையும் நீரைமிகுதியாகக் கொண்டுள்ள நெய்தல் நிலத்தையும் ஒருசேரக் கடந்து சென்றபின் முப்பட்டத்தையுடைய யானைச்சேனையையுடைய பரதன் மருத நிலங்கள் நிறைந்துள்ள சிந்து நாட்டை அடைந்து தங்கினான்.

கு: பாலை, குறிஞ்சி, முல்லை நெய்தல் என்கின்ற நான்கு நிலங்களையும் கடந்து பரதன் சிந்து நாட்டையடைந்து தங்கினன் என்றவாறு. பாலை நிலத்தின் வெப்பம் புலப்பட 'எரிதவழ் பாலை' எனச் சிறப்பித்தார். இருங்குறிஞ்சி என்றது, பெரிய மலைகள் செறிந்த நாட்டினை. குறிஞ்சிக்குக் கருப்பொருளாகிய குறிஞ்சிச் செடியைக் குறித்ததாகக் கொள்ளின் இருங்குறிஞ்சி-கருங்குறிஞ்சி எனப் பொருள்படும். 'கருங்குறிஞ்சிப்பூ' (கு ந். 3) என்றது காண்க. பாலை, குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் என்ற ஐந்திணைப்பெயர்கள் அவ்வந்நிலத்துப் பூக்களால் பெயர்பெற்றன என்பர். அரி-திருமால். முல்லைக்குத் தெய்வம் திருமாலாதலின் 'அரிதவழ் முல்லை' என அடைகொடுத்துச் சிறப்பித்தார். 'மாயோன் மேய காடுறையுலகமும்' (தொல். பொருள். 5) என்றது நோக்குக. இனித் திருமால் கண்ணனாகிக் குழவிப் பருவத்தில் முல்லை நிலத்திலுள்ள ஆயர் பாடியில் தவழ்ந்து விளையாடிய நிலையை நினைந்து 'அரிதவழ் முல்லை' என்றார் என்றலும் ஆம். இனி, அரி என்றது பரல் கற்களையெனக் கொண்டு பரற்கற்கள் தவழ்கின்ற முல்லை நிலம் எனலும் ஆம். அயம்-நீர் 'அயவெள்ளாம்பல்' (குறுந். 293) என்பது காண்க. ஓடை யானைமுகத்து அணியும் பட்டம். மருதநிலம் நிறைந்த சிந்துநாடு என்பார் மருதமாம் சிந்துநாடு என்றார். பாலைக்கு நிலமில்லையெனினும் குறிஞ்சியும் முல்லையும் வேனிலில் பாலையாகும் என்பராகலின் பாலைநிலமும் இங்குக் கூறப்பட்டது என்க. (31)

## பரதன் சிந்துநாட்டில் படையோடு தங்கியதைக் கந்திருவர் கேள்விப்படுதல்

1315 வந்துபரா தன்றனது மைந்தருட னேயும்
சிந்துவள நாட்டினிடை விட்ட செயலெல்லாம்
புந்தியுரு கச்செவி புகப்படு கதத்தால்
கந்திருவர் கேட்டனர் கடுத்தவத னத்தார்.

வந்துபரதன் தனது மைந்தருடன் ஏயும்
சிந்துவள நாட்டினிடை விட்ட செயல் எல்லாம்
புந்திஉருகச் செவிபுகப் படுகதத்தால்
கந்திருவர் கேட்டனர் கடுத்த வதனத்தார்.

பொ: பரதன் தன் மைந்தரொடு வந்து வளம் பொருந்திய சிந்துநாட்டில் சேனையோடு தங்கிய செயல் எல்லாம் செவியில் புகக் கந்திருவர் மிக்க கோபத்தால் கடுகடுத்த முகத்தினராய்ப் புந்தி உருகக் கேட்டனர்.

கு: பரதன் வந்து விட்ட செயல் எனவும், விட்ட செய லெல்லாம் செவிபுக, கந்திருவர் படுகதத்தால் கடுத்த வதனத் தாராய்ப் புந்தியுருகக் கேட்டனர் எனவும் இயையும். புந்தியுருகு தல் துன்பத்தால் நிகழ்ந்தது. வளம் ஏயும் சிந்து நாட்டிடை என்க. கடுத்தவதனத்திற்குக் காரணம் படுகதம் என்பார் படுகதத்தால் கடுத்தவதனத்தார் என்றார். வதனத்தாராய்க் கேட்டனர் என முற்றெச்சமாக்கி முடிக்க. கதம்-கோபம். விட்ட என்பது, சேனையோடுதங்கிய என்னும் பொருளது. (32)

## கந்திருவரின் வெகுளிச் சிரிப்பு

1316 கரித்தெழு சினத்தினர் கரத்தொடு கரத்தைப்
பொருத்திவட வெற்பன புயத்திடை புடைத்தே
முரிந்தபுரு வத்தினர் முருக்க நயனத்தூ
டெரிப்பொறி தெறித்திட விடித்து நகை
செய்தார்.

கரித்துஎழு சினத்தினர், கரத்தொடு கரத்தைப்
பொருந்தி வடவெற்பு எனப் புயத்திடை புடைத்தே
முரிந்த புருவத்தினர் முருக்க நயனத்தூடு
எரிப்பொறி தெறித்திட இடித்து நகைசெய்தார்.

பொ: முக முதலியவற்றைக் கருகச் செய்து எழுகின்ற சினத்தையுடையாராய்க் கையோடு கையைப் பொருத்தி, வட மேரு மலைபோன்ற பருத்த புயங்களில் தட்டி, வளைந்த புருவத்தை யுடையராய்ப் பகைவரை யழிக்குமாறு கண்களினூடே தீப் பொறிகள் தெறித்திட இடியொலிபோல் முழங்கிச் சிரித்தார்கள்.

கு: கரித்தல்-பிறவினை; முகம் முதலியவற்றைக் கருகச் செய்து கொண்டு எழுகின்ற சினம் என்க. 'கரத்தொடு கருத்தைப் புயத்திடை பொருத்திப் புடைத்து' என இயைத்து வலக்கரத் தால் இடத்தோளையும் இடக்கரத்தால் வலத்தோளையும்

பொருத்திப்புடைத்து எனக் கூறுக. முரித்தல்-வளைத்தல். கோபத்தில் புருவம் மிக வளைதல் இயல்பு. நகை என்றது இங்கு வெகுளியால் வரும் வீரச்சிரிப்பினை. முருக்குதல்-அழித்தல். (33)

## கந்திருவரின் வஞ்சினம்

1317 பன்னிய புகழ்ப்பர தனைப்பட முருக்கி
மன்னியதன் மைந்தரையும் வாளுடை வலத்தால்
வென்னிட முடுக்கியிவர் தம்மைவர விட்டோன்
தன்னுடன் மலைப்பமிது வேசரத மென்றார்.

பன்னிய புகழ்ப் பரதனைப் பட முருக்கி,
மன்னிய தன்மைந்தரையும் வாளுடை வலத்தால்
வென்னிட முடுக்கி, இவர்தம்மை வரவிட்டோன்
தன்னுடன் மலைப்பம்; இதுவே சரதம் என்றார்.

பொ: "உலகத்தாரால் சொல்லப்பட்ட புகழினையுடைய பரதனைப் படுமாறு அழித்துவிட்டு, நிலைபெற்றுள்ள பரதன் தன் புதல்வர்களையும் நம் வாளின் வலிமையால் புறமுதுகு காட்டி ஓடுமாறு முடுக்கிவிட்டு இப் பரதனையும் அவன் மைந்தரையும் விடுத்த கேகயநாட்டு அரசனாகிய உதாசித்து என்பானோடு போர் செய்வோம்; இதுவே சத்தியம்" என்று கூறினார்கள்.

கு: பன்னுதல்-சொல்லுதல். பன்னுதற்கு எழுவாய் வருவிக்கப்பட்டது. மன்னிய-நிலைபெற்ற. பரதன் மைந்தர் இருவரும் இளையர் ஆதலின் அவரைக் கொல்லுதல் அறனன்று என்ற கருத்தால் 'வென்னிடமுருக்கி' என்றார். எதுகை நோக்கி வெந், வென் எனத்திரிந்து நின்றது. வெந்நிடுதல் - புறங்காட்டித் தோற்றோடல். முடுக்குதல்-ஓடச்செய்தல்; பிறவினை. இவர்தம்மை வரவிட்டோன் கந்திருவர்நாட்டுக்கு அருகேயுள்ள கேகய நாட்டரசனே என்பது தெரிந்துளார் ஆகலின் அந்த உதாசித்தினோடும் மலைப்பம் என்று கூறுவாராயினர். வரவிட்டோன் இராமன் எனல் பொருந்தாது; இராமனிடம் தூதனுப்பித் தூண்டினோன் உதாசித்தேயாதல் தெளிவு. மலைப்பம், தன்மைப்

பன்மை வினைமுற்று; போர்செய்வோம் என்பது பொருள். சரதம்-சத்தியம்; உண்மை. (34)

## சேனை போர்க்கு எழுதல்

1318 செழுமின்மணி யோடைய திசைக்கரிக ளோடும்
குழுமின குலக்கிரிகள் குலைதர நலஞ்சேர்
கெழுமின நெடுந்திசைகள் கிழிப்பட வுரப்பா
எழுமினென லுங்கடி தெழுந்தது பதாதி.

செழுமின்மணி ஓடைய திசைக்கரிக ளோடும்
குழுமின குலக்கிரிகள் குலைதர நலம் சேர்
கெழுமின நெடுந்திசைகள் கிழிப்பட உரப்பா
எழுமின்! எனலும் கடிது எழுந்தது பதாதி.

பொ: செழுமையானதாய் மின்னுகின்ற மணிகள் பதித்த முகபட்டத்தையுடைய திக்கு யானைகளோடும் நாற்றிசையிலும் கூடியுள்ள சிறந்த மலைகள் நடுக்கமுறவும் எல்லா நலங்களும் திரண்டு பொருந்தியுள்ள நெடிய திசைகள் கிழிபடவும் கந்திருவர் பேரொலியோடு கொக்கரித்து 'எழுமின்' என்று சொல்லுதலும் காலாட்படை முதலிய சேனை விரைந்து எழுந்தது.

கு: யானை முகபட்டத்தில் பதித்த மணிகளின் சிறப்புப் புலப்பட, 'செழுமின்மணி ஓடை' என்றார். செழுமையும் மின்னுதலும் மணிக்கு அடைமொழி. கந்திருவரின் ஆரவாரக் கடுமை புலப்படத் திசைக்கரிகள் குலக்கிரிகள் குலைதலும் நெடுந்திசைகள் கிழிபடுதலும் கூறப்பட்டன. உரப்புதல்-ஆரவாரித்தல்; அதட்டுதல். உரப்பி 'எழுமின்' என்றது கந்திருவரின் கட்டளை. பதாதி-சேனை. குலைதல்-நடுங்குதல். நலம்சேர்ந்து கெழுமின திசைகள் என்க.
(35)

## சேனை நகர்ப்புறத்தில் வருதல்

1319 முடுகிய தானை நான்கு
முகிலென முழங்கி யார்க்க
கடுகிய சேனை காவற்
காவலர் கவசம் வீக்கித்

சுடுபடை தெரிந்து வானச்
சுடர்மணித் தேரி னேறிப்
பொடிகட லேழும் போர்ப்பப்
பொன்னகர்ப் புறத்திற் போந்தார்.

முடுகிய தானை நான்கும் முகில்என முழங்கி ஆர்க்க,
கடுகிய சேனை காவல் காவலர் கவசம் வீக்கிச்
சுடுபடை தெரிந்து வானச் சுடர்மணித் தேர் ஒன்று ஏறிப்
பொடிகடல் ஏழும் போர்ப்பப் பொன்னகர்ப் புறத்தில் போந்தார்.

பொ: விரைந்து எழுந்த நால்வகைச் சேனையும் மேகம் இடிப்பது போல முழக்கம் செய்து ஆரவாரிக்க, மிக விரைந்து சென்ற சேனையின் காவலை மேற்கொண்டுள்ள சேனதிபதியர் கவசத்தை மார்பில் கட்டிக்கொண்டு, பகைவரைச் சுடுகின்ற ஆயுதங்களைத் தேர்ந்து எடுத்துக்கொண்டு, ஒளிவாய்ந்த மணிகள் பதித்த தேரில் ஏறிக் கொண்டு, தேர் செல்வதால் எழுகின்ற துகள் ஏழுகடலையும் மூடிக் கொள்ளுமாறு அழகிய நகரத்தின் புறத்தில் வந்து புறப்பட்டார்கள்.

கு: முடுகுதல்,கடுகுதல் இரண்டும் விரைந்த பொருளன. நான்கு சேனையும் என மாற்றி இயைக்க. முகில் இடிப்பது போல முழங்கி என்றவாறு. சேனை காவற்காவலர் என்றது சேனதி பதியரை. வீக்குதல்-கட்டுதல். தெரிந்து என்றது, ஆராய்ந்து எடுத்துக் கொண்டு என்னும் பொருளது. சுடுபடை, வினைத் தொகை; பகைவரைச் சுடுகின்றபடை என்க. 'பொடி' என்றது, தேர் ஓடுவதால் எழுகின்ற துகளினை. 'தேரோடத்துகள் கெழுமி' (பட்டினப்பாலை) என்பது நினைக பொடி போர்த்தலாவது கடல் நீர் தெரியாவண்ணம் துகள் மூடிக்கொள்ளுதல். இதனல் துகளின் மிகுதிபுலப்படுத்தியவாறு. பொன்னகர்-அழகியநகரம்.
(36)

## துன்னிமித்தங்கள் தோன்றுதல்

1320 அதிர்ந்திடுந் திசைக ணான்கு
மல்லிடை வில்லுக் காட்டும்
உதிர்ந்திடும் பகலே யும்ப
ருடுவெலா மிரவி தன்னோ
டெதிர்ந்திடுந திசைக ளெட்டு
மெழும்புகை காய கூட
முதிர்ந்திடுங் கூகை பாடு
முதியதுன் னிமித்தங் கண்டார்.

'அதிர்ந்திடும் திசைகள் நான்கும்; அல்லிடை வில்லுக் காட்டும்;
உதிர்ந்திடும் பகலே உம்பர் உடுவெலாம் இரவி தன்னோடு
எதிர்ந்திடும் திசைகள் எட்டும் எழும்புகை; காயகூடம்
உதிர்ந்திடும்; கூகைபாடும்; முதிய துன்னிமித்தம் கண்டார்.

பொ: நான்கு திசைகளும் அதிர்ந்திடும் இரவில் வானவில் தோன்றும்; பகற்காலத்தே விண்ணில் உள்ள நட்சத்திரங்கள் எல்லாம் சூரியனோடு தரையில் உதிர்ந்திடும்; எட்டுத்திசைகளிலும் எழுகின்ற புகை எதிர்ந்து தோன்றும்; ஆகாயமாகிய கூடம் உடைந்து உதிர்ந்திடும்; கோட்டான் குழறும்; இத்தகைய' முதிர்ந்த துன்னிமித்தங்களைக் கந்திருவர் கண்டார்.

கு: திசைகள் நான்கும் அதிர்ந்திடும் என்றது நிலநடுக்கத்தை; வானவில் பகற் காலத்தில் தோன்றுவதே இயல்பு; இப்போது அது துன்னிமித்தமாக இரவில் காட்சியளித்தது என்க. உடு - நட்சத்திரம். பகற் காலத்தே நட்சத்திரங்கள் தோன்றா. ஆனால் இப்போது துன்னிமித்தமாகப் பகற்காலத்தே சூரியனோடு தரையில் உதிர்கின்றன. எட்டுத்திசையிலும் நெருப்பின்றியே புகைகின்ற புகை எதிரெதிரே தோன்றும். காயம்-என்றது ஆகாயத்தை; அது கூடம்போன்று தோன்றுதலின் காயகூடம் என உருவகம் செய்தவாறு. விண் உடைந்து தரையில் உதிர்ந்திடும் என்க. கூகை-கோட்டான். அது பாடுதலாவது அழிவையுணர்த்திக் கூவும் என்றவாறு. முதிய துன்னிமித்தம் என்றது, பெரிதாய

கெட்ட சகுனங்கள் என்றவாறு. கண்டார் என்பதற்குக் கந்திருவர் தோன்றா எழுவாய். (37)

## சேனையில் எழும் ஒலிகளோடு போர்க்களம் சார்தல்

1321 அல்லொலிக் கடல்க ணான்கி
னார்ப்பொலி யன்ன வீரர்
சொல்லொலி துவன்றி யார்க்குந்
தூரியத் தொலிகைம் மாவின்
வல்லொலி காகளத்தின் வயங்கொலி
மதுகை வீரர்
வில்லொலி மயங்க வந்து வேந்தர்
வெங் களத்த ரானார்.

அல்லொலிக் கடல்கள் நான்கின் ஆர்ப்பு ஒலி அன்ன வீரர்
சொல் ஒலி, துவன்றி ஆர்க்கும் தூரியத்து ஒலி; கைம்மாவின்
வல் ஒலி; காகளத்தின் வயங்குஒலி மதுகைவீரர்
வில்ஒலி மயங்க வந்து வேந்தர் வெங்களத்தர் ஆனார்.

பொ: இரவில் மிகுதியாக ஒலிக்கின்ற இயல்பினையுடைய நான்கு கடல்களின் ஆர்க்கின்ற ஒலிபோன்ற வீரரின் சொல் ஒலியும், நெருங்கி ஆரவாரிக்கின்ற வாத்தியங்களின் ஒலியும், துதிக்கையையுடைய யானையின் பிளிறலாகிய வலிய ஒலியும், எக்காளத்தின் விளக்கமான ஒலியும், வலிய வீரர்களின் வில் நாண் ஒலியும் கலந்தொலிக்க வந்து, கந்திருவ வேந்தர் போர்க் களத்தில் வந்து சேர்ந்தார்கள்.

கு: வீரரின் சொல் ஒலிக்கு நான்கு கடல்களின் ஆர்ப்பு ஒலி உவமை. அல்லொலிக் கடல்கள் என்றது, இரவில் மிக்கொலிக்கும் கடலுக்கு இயற்கையடை. தூரியம்-வாத்தியம். கைம்மா-யானை. காகளம்-எக்காளம் என்னும் ஊதுகொம்பு. வயங்கொலி - விளக்கமான ஒலி. வில்லொலி என்றது, வீரர்கள் வில்லை வளைத்து நாணினை அதிரச் செய்து எழுப்புகின்ற ஒலியை. மதுகை-வலிமை. மயங்குதல்-கலத்தல். வேந்தர் என்றது கந்திருவ வேந்தரை. களத்தர் ஆனார் என்றது போர்க்களத்தின் கண் வந்துசேர்ந்தார் என்னும் பொருளது. (38)

## நால்வகைச் சேனையும் தம்முள் பொருதல்

1322 தூக்கிய மதத்த வாய
தோலொடு தோல்க டாமும்
நூக்கிய புரவித் திண்டேர்
நுவல்பரி தன்னி னேடும்
வீக்கிய கழற்கால் வீரர்
வெஞ்சின வீரரோடும்
தாக்கின விரண்டு சேனை
சரமழை மயங்கின் றன்றே.

தூக்கிய மதத்த ஆய தோலொடு தோல்கள் தாமும்,
நூக்கிய புரவித் திண்டேர் நுவல்பரி தன்னினேடும்,
வீக்கிய கழற்கால் வீரர் வெஞ்சின வீரரோடும்,
தாக்கின இரண்டு சேனை; சரமழை மயங்கிற்று அன்றே.

பொ: பெருக்கெடுத்த மதத்தினை யுடைய வான யானைகளோடு யானைகளும், செலுத்துதற்குரிய குதிரைகள் பூட்டிய திண்ணிய தேர்களோடு தேர்களும் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற குதிரைகளோடு குதிரைகளும் கழல்கட்டிய காலினை யுடைய வீரர்கள் வீரரோடும் ஆக இரண்டு சேனையும் தாக்கின; அம்பு மழை எங்கும் கலந்து நின்றது.

கு: தூக்குதல்-பெருக்கெடுத்தல். தோல்-யானை. தோலோடு தோல்கள், வீரர் வீரரோடும் என முன்னும் பின்னும் வந்தமையால் இடைநின்ற தேரும் பரியும் அவ்வாறே தேர், தேர்தன்னினேடும் நுவல்பரி பரிதன்னேடும் எனப் பிரித்துக் கூட்டுக. இதனை யோக விபாகம் எனும் நூற்புணர்ப்பு என்பர். நூக்குதல்-செலுத்துதல். வீக்குதல்-கட்டுதல். வீரர் வீரரொடும் ஆக இரண்டு சேனையும் தாக்கின என வேண்டுஞ்சொல் வருவித்து முடிக்க. சரமழை-அம்புமாரி; இது உருவகம். மயங்குதல்-கலத்தல். தாக்கின என்பதற்கு எழுவாய் இரண்டு சேனை என்பது. (39)

## குதிரை வீரர் போர்

1323 வேலினைச் சிலவர் வாங்கி
விடுதலுஞ் சிலவர் வில்லால்
கோலினை வாங்கிக் கொன்று
குறைப்பர்தங் குதிரை மீதே
கோலினை விடுவர் விட்ட
கோலினாற் றுரகந் தன்னை
வாலினைப் பற்றி யெற்றி
மண்ணின்மேன் மலைதல் செய்வார்.

வேலினைச் சிலவர் வாங்கி விடுதலும் சிலவர் வில்லால்
கோலினை வாங்கிக் கொன்று குறைப்பர் தம்குதிரை மீதே
கோலினை விடுவர் விட்ட கோலினால் துரகம் தன்னை
வாலினைப் பற்றி எற்றி மண்ணின் மேல் மலைதல் செய்வார்.

பொ: சேனைவீரரில் சிலர், வேலினை வாங்கி விடுதலும் சிலர் வில்லை வளைத்து அம்பினை வாங்கி விடுத்துப் பகைவரைக் கொன்று குறைப்பார்கள்; சிலர்தம் குதிரைமீது இருந்து கொண்டு பகைவர் குதிரைமீது சம்மட்டியை விடுவார்கள்; விட்ட சம்மட்டியினால் அந்தக் குதிரையை வாலின்கண் பற்றித் தரையில் மோதிப் போர் செய்வார்கள்.

கு: கோல்-அம்பு; குதிரைச்சம்மட்டி. துரகம்-குதிரை. வாலினைப் பற்றி-வாலின்கண் பற்றி. 'முதலையையுறிற் சினையைக் கண்ணுறும்' என்ற நன்னூல் நூற்பாவின்படி முதலிலும் சினையிலும் இரண்டனுருபு வந்தமையால் இங்ஙனம் கண்ணுருபு விரித்தல் விதி. எற்றுதல் - மோதுதல். மண்ணின்மேல் எற்றி மலைதல் செய்வார் எனக் கொண்டு கூட்டுக. மலைதல்-போர் செய்தல். (40)

## காலாள் போர்

1324 இருவர் சென் றொருவர் தம்மே
லிகல்செய்வ ரிகல்வா ளோச்சி
ஒருவரோ டொருவர் தாக்கி
யுருக்குவ ருதிர வாரி

சொரிவர்முன் றோளு மார்புந்
துளைப்பர்போர் விளைப்ப ரோடி
வெருவுற விழித்து நோக்கி
வெங்கணை மாரி பெய்வர்.

இருவர் சென்று ஒருவர்தம்மேல் இகல் செய்வர்; இகல்வாள் ஓச்சி
ஒருவரோடு ஒருவர் தாக்கி உருக்குவர், உதிர வாரி
சொரிவர்; முன்தோளும் மார்பும் துளைப்பர், போர்விளைப்பர்; ஓடி
வெருவுற விழித்து நோக்கி வெங்கணை மாரி பெய்வார்.

பொ: இருவர் சென்று ஒருவர்மேல் வலிய வாளினைச் செலுத்திப் போர் செய்வார்கள்; ஒருவரோடு ஒருவர் தாக்கி உடம்பினை நெருக்கி உருக்கி இரத்தவெள்ளம் சொரிய நிற்பர்; சிலர் முன் தோளினையும் மார்பினையும் அம்பினால் துளைப்பார்கள்; போரினைச் சிலர் விளைப்பார்கள்; சிலர் ஓடிச் சென்று பகைவர் அஞ்சுமாறு கண்களைப் பெரியதாக விழித்து நோக்கிக் கொடிய அம்பு மழையைச் சொரிவார்கள்.

கு: இகல்-போர், வலிமை. உருக்குதலாவது தாக்கியதால் உடம்பு நுணுகுமாறு செய்தல். வாரி-வெள்ளம்; கடல் எனலும் ஆம். தோளின் பின்புறத்தை விளக்கவேண்டி 'முன்தோள்' என்றார். துளைப்பர் என்றமையால் துளைத்தற்குரிய அம்பு வருவிக்கப்பட்டது. விளைத்தலாவது பெருகச் செய்தல். வெருவரல் - அஞ்சுதல். அம்பு மாரியை விலக்கக் கணைமாரி என்றவாறு. மழை சொரிவது போல அம்புகளை மிகுதியாகச் சொரிதல். (41)

### கவந்தம் ஆடுதல்

பய்யெடுத் தநந்த னேத்தும் பங்கயத்தனைய
செங்கண்
1325 மய்யெடுத் தனைய மேனிமானவன் வகுத்த சேனை
நெய்யெடுத் திலங்கு பாண நெருங்கலின்
ஞெகிழிபோலக்
கய்யெடுத் தநந்த கோடி கவந்தநின் றுடிற்
றன்றே.

பய் எடுத்து அநந்தன் ஏத்தும் பங்கயத்து அனைய செங்கண்
மய் எடுத்தனைய மேனி மானவன் வகுத்த சேனை
நெய் எடுத்து இலங்கு பாணம் நெருங்கலின் ஞெகிழிபோலக்
கய் எடுத்து அநந்தகோடி கவந்தம் நின்று ஆடிற்று அன்றே.

பொ: அனந்தன் படம் எடுத்துத் துதித்தற்குரியவனுகிய, தாமரை மலர் போன்ற சிவந்த கண்ணிணையும் மையே உருவெடுத்தாற் போன்ற மேனியையும் உடைய பரதன் அணி வகுத்தனுப்பிய சேனை விடுத்த நெய் பூசப் பெற்று விளங்குகின்ற அம்புகள் கொள்ளிக் கட்டைபோல நெருங்குதலால் (தலைதுணிக்கப் பெற்று) அளவில்லாத கவந்தங்கள் கைகளைத் தூக்கி ஆடின.

கு: நெய் என்ற சொல்லின் எதுகை நோக்கிப் பை, மை, கை என்ற ஓரெழுத்து மொழிகள் பய், மய், கய், என வந்தன. பரதனுடைய குணங்களைக் கண்டு ஆயிரம் தலைகளையுடைய அனந்தன் மகிழ்ச்சியினுல் படமெடுத்து இரண்டாயிரம் நாக்கினுலும் துதிபாடுதல் செய்வான் என்றவாறு. இராமனைப் போலவே பரதனும் செந்தாமரை மலர் போன்ற கண்ணும் மைவண்ணமும் உடையவன் ஆதலின் 'பங்கயத்தனைய செங்கண் மய்யெடுத்தனைய மேனியானவன்' என்ருர். வகுத்தசேனை என்றது அணி வகுப்பு செய்தனுப்பிய சேனை என்றவாறு. அம்புகளில் விடநெய் பூசுதல் உண்டாதலின் 'நெய்யெடுத்திலங்கு பாணம்' என்ருர். பாணம் ஞெகிழிபோல நெருங்கலின் எனமாறிக் கூட்டுக. ஞெகிழி-கொள்ளிக்கட்டை. கவந்தம்-தலையில்லா உடம்பு. ஆடுங்கால் கைகளை உயர்த்தியாடும் இயல்பு புலப்படக் 'கய்யெடுத்தாடிற்றன்றே' என்ருர். கவந்தம் கய்யெடுத்தாடிற்று என இயையும். அனந்தனது பூமி பாரத்தைக் குறைக்கப் பரதன் வந்துள்ளானுதலின் 'அனந்தனேத்தும் ... மானவன்' என்ருர். (42)

## கந்திருவ வேந்தர் பரதன் தேர்மேல் அம்பு விடுதல்

1326 காந்தவர் சேனை யெல்லாங்
களத்திடை மடியக் கண்டு
வேந்தருஞ் சிலைகோல் வாங்கி
விரைபரித் தேர்மேல் விட்டார்

நாந்தக வுழவன் பின்னே
னவமணிக் கழற்கால் வீரன்
பாந்தளின் பாரந் தீர்ப்பான்
பரதனு மதனைக் கண்டான்.

காந்தவர் சேனை எல்லாம் களத்திடை மடியக் கண்டு
வேந்தரும் சிலைகோல் வாங்கி விரைபரித்தேர் மேல் விட்டார்;
நாந்தக உழவன் பின்னோன் நவமணிக் கழற்கால் வீரன்
பாந்தளின் பாரம் தீர்ப்பான் பரதனும் அதனைக் கண்டான்.

பொ: கந்திருவர் சேனை எல்லாம் போர்க்களத்தில் மடிவதைப் பார்த்துக் கந்திருவ வேந்தரும், வில்லை வளைத்து அம்பினை, விரைந்து செல்லும் குதிரைபூட்டப்பெற்ற தேர்மேல் விடுத்தார்கள்; வாளேருழவனுகிய இராமனுக்குப் பின்னேனும் நவமணிகள் பதித்த கழல்கட்டிய காலினையுடைய வீரனும் ஆதிசேடனுகிய பாம்பின் பாரம் தீர்ப்பவனும் ஆகிய பரதனும் அதனைப் பார்த்தான்.

கு: காந்தவர் என்றது கந்திருவரை. வேந்தர் என்றதும் அக்கந்திருவர் வேந்தரையே. சிலை வாங்கிக் கோல் தேர்மேல் விட்டார் என மாறிக் கூட்டுக. வாங்குதல்-வளைத்தல். இனிச் சிலையில் விடுதற்குரிய கோலைக் கையில் எடுத்துத் தேர்மேல் விட்டார் எனக் கிடந்தாங்கே பொருள்கூறினும் அமையும். நாந்தகம்-வாள். நாந்தகவுழவன் என்றது இராமனை. பின்னேனும் வீரனும் பாரம் தீர்ப்பானுமாகிய பரதனும் என இயையும். கந்திருவர் தம் கொடுஞ்செயலால் பூமிக்குப் பாரமாக இருத்தலின் அவரை அழிக்க என்று கொண்ட பரதனை 'பாந்தளின் பாரம் தீர்ப்பான்' எனச் சிறப்பித்தார். பாந்தாள் என்றது பூமியைச் சுமந்து கொண்டிருக்கும் ஆதிசேடனுகிய பாம்பினை. ஆதிசேடன் பூமியைச் சுமப்பதாகக் கூறுவது புராண மரபு.

(43)

## பரதன் சொல்லைக்கேட்டுக் கந்திருவர் நகைத்தல்
## வேறு

1321 தந்திரமுங் கரிபரியுந் தாமமணித் தேருமிக
அந்தரமுற் றழிந்தசெய லறிந்திருந்து மகலகிலீர்
உய்ந்துநீ ருயிர்பெறிலிங் குழுதிருந்து
(முண்ணலாம்
கந்திருவர் போமினெனக் கனைத்துரு மினகைத்
தனரால்

தந்திரமும் கரிபரியும் தாமணித் தேரும் மிக
அந்தரம் உற்று அழிந்த செயல் அறிந்திருந்தும் அகலகிலீர்!
உய்ந்துநீர் உயிர்பெறில் இங்கு உழுதிருந்தும் உண்ணலாம்;
கந்திருவர்; 'போமின்' எனக் கனைத்து உருமின் நகைத்தனரால்.

பொ: 'கந்திருவர்களே! காலாட்படையும் யானையும் குதிரையும் மாலைகள் தொங்க விடப் பெற்ற, மணிகள் கட்டிய, தேரும் பெரிதும் முடிவுற்று அழிந்த செயலை அறிந்திருந்தும் அகலா திருக்கின்றீர்! நீர் உயிர் பெற்று உய்ந்தால் இவ்வுலகத்தில் உழுதொழில் செய்தும் உண்டு வாழலாம்; ஆதலால் போமின்கள்' என்று பரதன் அருளால் கூறக் கந்திருவர் கனைத்து இடியொலி செய்வதுபோல நகைத்தார்கள்.

கு: தந்திரம் என்றது காலாள் சேனையை. தாமம்-மாலை. இனி ஒளி எனப் பொருள் கொண்டு 'ஒளிமணி பதித்த தேரும்' என உரைப்பினும் அமையும். அந்தரம்-முடிவு. 'உய்ந்துநீர் உயிர்பெறில்' என்பதனை நீர் உயிர் பெற்று உய்ந்தால் என வேண்டும் செய்கை செய்து முடிக்க. உணவுதானே இவ்வுடம் பிற்குத் தேவை; அதை உழவுத் தொழிலாலும் பெறலாமே எனப் பரதன் அருள் நெஞ்சத்தால் கூறினனாகக் கந்திருவர் அது கேட்டு எள்ளி நகைத்தனர் என்றவாறு. உரும்-இடி. (44)

## கந்திருவரின் வீரமொழி

1328 உன்னையுயர் தானை யுடனோட வொர்சரத்தால்
வெஃனிட முருக்க வரிதலல வதுவேண்டேம்
என்னவுரை செய்தனைகொ லேதுமறி யாத
மன்னவநின் மைந்தருடன் மறிதருக வென்றார்.

உன்னை உயர்தானையுடன் ஓடஓர் சரத்தால்
வென்னிட முருக்க அரிது அல்ல அது வேண்டேம்;
என்ன உரை செய்தனைகொல் ஏதும் அறியாத
மன்னவ! நின்மைந்தருடன் மறிதருக என்றார்.

பொ: 'ஏதொன்றும் அறியாத மன்னவனே! என்ன சொன்னாய்? உன்னுடைய உயர்ந்த சேனையெல்லாம் ஒருங்கே ஓடுமாறு ஓர் அம்பினால் உன்னைப் புறங்காட்டி ஓடச் செய்யவோ அல்லது அழிக்கவோ எமக்கு அரிய செயல் அல்ல; ஆனால் அதனை நாங்கள் விரும்பவில்லை; நின்மைந்தரோடு நீயும் திரும்பிச் செல்க' எனக் கந்திருவர் கூறினர்.

கு: மேலைச் செய்யுளில் பரதன் கந்திருவரைப் பார்த்துப் 'போமின்' 'எனக் கூறினமைக்கு எதிராக கந்திருவரும் பரதனை நோக்கிக் கூறியவாறு. 'மறிதருக' என்றது திரும்பச் செல்க என்னும் பொருளது. தம்மைப் பார்த்து 'உழுதிருந்தும் உண்ணலாம் போமின்' என்ற பரதன் சொல்லைப் பொறுது 'என்ன உரை செய்தனைகொல்' என்று கந்திருவர் சினந்து கூறுவாராயினர். 'வெந்' என்பது எதுகை நோக்கி 'வென்' என ஆயது. 'ஓர் சரத்தால் உன்னை வென்னிட முருக்க அரிதல்ல' என இயையும். வெந்நிடச் செய்ய என்னும் பொருளில் வென்னிட என்றார். முருக்குதல்-அழித்தல். இனி வெந்நிடுமாறு முருக்க அரிதல்ல எனலும் ஆம். மறிதருக-திரும்பிப் போக. (45)

## பரதன் வில்வளைத்து அம்பு விடுதல்

1329 வெங்கண்மத கரிநிரைகண் மிக்கவுள வேனும்
சிங்கவிளங் குருளையொடு சென்றுசெருச்
செயுமோ
இங்கிவர்க ளிளையரென விகழலென வுரையாத்
துங்கநெடுஞ் சிலைவளைத்துச் சுடுசரங்க
டுரந்தான்.

வெங்கண் மதகரிநிரைகள் மிக்க உளவேனும்
சிங்க இளங்குருளையொடு சென்று செருச் செயுமோ?
இங்கு இவர்கள் இளையர் என இகழல் என உரையாத்
துங்க நெடுஞ் சிலைவளைத்துச் சுடுசரங்கள் துரந்தான்.

பொ: சினத்தால் வெப்பமுற்ற கண்களையுடைய மதயானைகளின் கூட்டம் மிகுதியாக இருந்தாலும் அவை சிங்கத்தின் இளைய குட்டியோடு சென்று போர் செய்யுமோ? செய்யா; அதுபோல இங்குள்ள இவர்கள் இளையவர்கள் என்று எண்ணி இகழ்தல் வேண்டா. இவர்களோடு நும்மால் போர்செய்ய வியலாது எனச் சொல்லிக் கொண்டு வலிய நெடிய தன் வில்லை வளைத்துச் சுடுகின்ற அம்புகளைத் தொடுத்து விடுத்தான்.

கு: கரிநிரைகள் என்றது, யானைக் கூட்டங்களை. யானைகள் மிகுதியாகச் சேர்ந்திருந்தாலும் ஒருசிங்கக் குருளையோடு போர் செய்யத் துணியா; அதுபோல இவர்கள் இளையர்கள் எனக் கருதி இகழ்தல்வேண்டா; இவர்களோடு போர் செய்யும் ஆற்றல் நுமக்கில்லை; என எடுத்துக் காட்டுவமையாக்கி வருவித்து முடிக்க. இகழல் என்றதன் குறிப்பு இவர்களை நும்மால் வெல்ல இயலாது என்பதே ஆதலின் இங்ஙனம் வருவித்தல் வேண்டும். இகழல் என்பது அல்லீற்று எதிர்மறை வினைமுற்று; 'மகனெனல்' என்புழிப்போல. துங்கம்-வலிமை. நெருப்புப் போலச் சுடுகின்ற அம்பு ஆதலின் சுடுசரம் என்றார். துரத்தல்-செலுத்துதல். (46)

## பரதன் அம்பினுல் பகைவர்தம் நால்வகைச் சேனை பட்டபாடு

### வேறு

1330 கரியற்றன கொடியற்றன ககனத்துறு கவனப்
பரியற்றன பணையற்றன படையற்றன விடையே
வரியற்றன சிலையற்றன மறமற்றன வயவோர்
கிரியற்றன வெனவற்றன கிளர்பொற்கொடி
யணிதேர்.

கரிஅற்றன கொடிஅற்றன ககனத்து உறுகவனப்
பரி அற்றன பணைஅற்றன படைஅற்றன இடையே
வரி அற்றன சிலை அற்றன மறம் அற்றன வயவோர்
கிரி அற்றன என அற்றன கிளர் பொற்கொடி அணிதேர்.

பொ: கந்திருவர் படையின் யானைகள் அற்றன, யானைமேல் கட்டிய கொடிகள் அற்றன; விண்ணில் பாய்ந்து செல்கின்ற வேகத்தையுடைய குதிரைகள் அற்று வீழ்ந்தன; முரசுகள் இழிந்தன; குதிரை வீரர்களின் கையிலிருந்த வாள் முதலிய படைகள் முறிந்தன. அவற்றின் நடுவே வீரர்களின் வில்லில் கட்டியிருந்த வில்நாண் அற்றன, வில் முறிந்தன; வீரர்களின் வீரமும் அழிந்தன. மலைகள் அற்றுவீழ்ந்தன எனும்படி உயர்ந்த அழகிய கொடிகள் கட்டிய அழகியதேர்கள் அற்று வீழ்ந்தன.

கு: இச்செய்யுளில் அற்றன என்ற சொல் பன்முறை வரத் தொடுத்தமையால் இது சொற்பின்வருநிலையணி எனப்படும். பொருளும் ஒன்ருக வருதலின் சொற்பொருட் பின்வரு நிலையணி எனலாம். கவனம்-வேகம். தரையில் கால் பாவாது விண்ணில் பாய்ந்துசெல்லும் குதிரையின் இயல்பு புலப்படக் 'ககனத்துறு கவனப்பரி' என்ருர். பணை-முரசு. படை என்றது வாள் வேல் முதலிய ஆயுதங்களை. வரி என்பது கட்டு என்னும் பொருளது; அது ஆகு பெயராய் வில்லில் கட்டியுள்ள நாணினை புணர்த்தியது. சிலை-வில். மறம்-வீரம். வீரர்களின் வீரம் அழிந்தது என்பார் 'மறமற்றன' என்ருர். "வீரமும் களத்தேபோட்டு வெறுங்கையோ டிலங்கைபுக்கான்" (கம்ப... ...) இங்கு

நினையலாம். வயவோர்-வீரர். வயவோர் வரி அற்றன, சிலையற்றன என மாறிக்கூட்டுக. கிரி அற்றன எனக் கொடியணி தேர் அற்றன என இயையும். இச்செய்யுளில் முதலடியில் யானை, இரண்டாமடியில் குதிரை, மூன்றாமடியில் காலாள், நான்காமடியில் தேர் என இவற்றை முறைப்படுத்திக்கூறியவாறு. (47)

## கந்திருவர் போர் செய்தல்

1331 பொருதந்திர விதமாயுள புணரிப்படை வீரர்
ஒருகந்திரி விதமாயுக வுயர்வெங்கணை விடலால்
மிருகந்திரி கிரிபோலுயர் மிகுதேரதன் மிசையே
வருகந்திரு வரும்வார்சிலை வளைத்தார்செரு
விளைத்தார்.

பொருதந்திர விதமாய்உள புணரிப்படை வீரர்
ஒருகந்திரி விதமாய் உக உயர் வெங்கணை விடலால்
மிருகம்திரி கிரிபோல் உயர்மிகுதேர் அதன் மிசையே
வருகந்திரு வரும் வார்சிலைவளைத்தார் செரு விளைத்தார்.

பொ: போர்செய்தற்குரிய தந்திரங்களில் வல்லார் ஆதலின் அந்தத் தந்திரமயமாக விளங்குகின்ற கடல் போன்ற பேரளவினையுடைய போர்வீரர்கள் ஒருயுகம் முடிந்து வேறுபடுகின்ற உகாந்த காலத்தில் எல்லாம் அழியும் தன்மைபோல் ஒருசேர அழியுமாறு உயர்ந்த கொடிய அம்பினைப் பரதன் விடுதலால், விலங்குகள் திரிகின்ற மலைபோல் உயர்ந்த பெரிய தேரின்மேல் வந்த கந்திருவரும் நீண்ட வில்லை வளைத்தவர்களாய்ப் போர் செய்தார்கள்.

கு: தந்திரம்–உபாயம். இனிப் பொருதந்திரம் என்பது போர்த்தொழிலைக் கற்பிக்கும் நூல் எனப் பொருள் கொள்ளலும் ஆம். அந்தப் போர் நூல் தேர்ச்சியால் அந்த நூல் வடிவேயெனத் தக்காராயுள்ளவர்கள் என்பார், 'பொருதந்திர விதமாயுள வீரர்' என்றார் என்க. ஒருகம் என்பது எதுகை நோக்கி ஒருகம் எனக் குறுக்கல் விகாரம் பெற்றது. ஒருகம் திரிவிதம் என்பது உகாந்த காலத்தில் ஏற்படும் அழிவினை உணர்த்தியது. வீரர்கள் எல்லாம் உகாந்த காலத்தில் அழிவதுபோல் அழியப் பரதன் அம்பினை

விடுதலால் கந்திருவரும் வில்வளைத்துப் போர் செய்தார்கள் என்றவாறு. மலைபோன்ற உயர்ந்த தேர் என்பார், 'கிரிபோல் உயர் மிகுதேர்' என்றார். (48)

## போர்க்களத்தில் கவந்தம் ஆடுதல்

1332 பாரூடின கழுகாடின படர்சோரியின் றிரைப்பே
ராரூடின வலகைக்குல மடர்காகமுங் கழுகும்
மாரூடின வேறூடினர் மகிழ்ந்தாடினர் மறவோர்
நீரூடின திசையெங்கணு நிமிர்ந்தாடின
கவந்தம்.

பாறு ஆடின கழுகு ஆடின படர்சோரியின் திரைப்போர்
ஆறு ஆடின அலகைக்குலம் அடர்காகமும் கழுகும்
மாறு ஆடின வேறு ஆடினர் மகிழ்ந்து ஆடினர் மறவோர்
நீறுஆடின திசை எங்கணும் நிமிர்ந்து ஆடின கவந்தம்.

பொ: (கந்திருவர் விட்ட அம்பினால் பெருஞ்சேனை இறந்தமையால்) தசையுண்ணுதற்குப் பருந்துகள் பறந்துவந்து தசையுண்டு ஆடின; கழுகுகள் நிணமுண்டு ஆடின; தரையில் பரவிச் செல்கின்ற இரத்தத்தின் அலைகளோடு கூடிய பெரிய ஆற்றில் பேய்க் கூட்டம் இளைத்து ஆடின. நெருங்கிய காகங்களும் கழுகுகளும் தமக்குள் மாறுபட்டு அந்த ஆற்றில் ஆடின. வீரர்கள் முன்பு வேறுபட்டு போர் ஆடியவர்கள் வெற்றி கண்ட பின்பு ஒன்று சேர்ந்து மகிழ்ந்து ஆடினார்கள். புழுதி பரவியிருந்த திசை எவ்விடத்தும் கவந்தங்கள் நிமிர்ந்து ஆடின.

கு: பாறு-பருந்து. சோரி-இரத்தம். குருதியின் பெருக்கைப் புலப்படுத்தச் சோரியின் திரைப்பேர் ஆறு ஆடின என்றார். இச் செய்யுளில் ஆடின என்ற சொல் பன்முறை வரத் தொகுத்தமையால் இது சொற்பின் வருநிலையணியாகும். அலகை-பேய். திரைப்பேராறு அலகைக்குலம் ஆடின என இயையும். பேய்கள் நிணமுண்ட மகிழ்ச்சியில் இரத்த வெள்ளத்தில் நீந்தித் திளைத்தாடின. மக்கள் நீராடி உண்பார்கள்; பேய்கள் நிணமுண்டுபின் ஆறாடின என்க. பேய்கள் ஆடுகின்ற ஆற்றில் காகமும் கழுகும் அப்பேயோடு மாறுபட்டு ஆடின என்றவாறு.

வேறுவேறாகப் போர் ஆடிய மறவர் பின்பு மகிழ்ந்து ஒன்றுபட்டு ஆடினர் என்க. சேனையின் செலவால் எழுந்த புழுதி திசை எங்கணும் நிறைந்திருந்தன என்பார்'நீறாடின திசை' என்றார்.(49)

## பரதன் அம்பால் நிகழ்ந்த அழிவு

1333 உரமதுடைய வுயர் தலைகள் புயமதற
வுரியவலிய தனுவளையவே
சரமதெதிர வவர் தலைக டவிடுபடு
தொகுதியென முடிகடறியவாள்
கரமொடிற வுலவைகழல விகடதட
கருணிகதற வெயிறுக மிகும்
புரவிகழ றுணிய விரதவுரு ணெரிகொள்
பொடிசெய்திடு மிவனெய்சரமே.

உரமது உடைய உயர்தலைகள் புயமதுஅற உரியவலிய தனு வளையவே

சரமது எதிர அவர்தலைகள் தவிடுபடு தொகுதிஎன முடிகள் தறியவாள்

கரமொடுஇற உலவைகழல விகடதட கருணிகதற எயிறுஉக மிகும்

புரவி கழல் துணிய இரத உருள் நெரிகொள் பொடி செய்திடும் இவன் எய்சரமே.

பொ: (பரதன் எனும்) இவன் எய்த அம்பு:- பகைவர்தம் மார்பு உடையவும் உயர்ந்த தலைகள் தோள்கள் அற்று வீழவும், போர்க்குரிய வலிமையான வில் வளையச் செய்துகொண்டு அம்பேட்டு எதிர்த்துவரும் அப்பகைவர் தலைகள் எல்லாம் தவிடு பொடியாகப் படுகின்ற தானியத் தொகுதி போன்றனவாகவும் அவர்கள் முடிகள் அறுபட்டுச் சிதறுண்ணவும், வாள் தன்னைப் பற்றிய கையோடு இற்றுவீழவும், கொம்பு கழன்றுவிழச் சிறந்த மதம் ஒழுகுகின்ற சுவட்டினையுடைய பெண் யானைகள் கதறி அழவும் பற்கள் உடைந்து சிந்தவும் வேகத்தில் மிக்கதாகிய குதிரையின் கால்கள் துணிபடவும் தேரின் சக்கரங்களை நெரிதல் கொண்ட பொடியாகச் செய்திடும்.

கு: இச்செய்யுளில் முதலிரண்டடிகளில் காலாட்படையின் அழிவும் மூன்றாமடியில் யானைப் படையின் அழிவும் நான்காமடியில் குதிரைப்படை தேர்ப்படையென்ற இரண்டனழிவும்

கூறியவாறு. உரம்-மார்பு. உலவை-கொம்பு. விகடதட-சிறப்பான மதம் ஒழுகும் சுவடு. கருணி-பெண் யானை. இவன் என்றது பரதனை. இவன் எய்கரம் உரமது உடைய, புயமது அற, முடிகள் தறிய, வாள் கரமொடுஇற, உலவை கழல, கருணி கதற, எயிறுக, கழல்துணிய, இரதஉருள் நெரி கொள்பொடி செய்திடும் என முடியும். (50)

1334 இருவரொரு வழியினிகழ விவர் முடுகி
யிகல்செய்பவர் தமது மறம்விடார்
ஒருவரொரு வழியினுரறு முருமினென
வுரறுகுர லினர்களுலகெலாம்
பருவ மழை முகில்கள் பொழிவ
தெனநெடிய பரதன்விடு பகழிமழையினால்
வருவன்வருவ னவன்வருவ னெனவெருவி
மலைமுழையி னுழைவரால்.

இருவரொடு வழியின்நிகழ இவர்முடுகி இகல்செய்பவர் தமது மறம் விடார்;
ஒருவர் ஒரு வழியின் உரறும் உருமின்என உரறு குரலினர்கள், உலகெலாம்
பருவ மழைமுகில்கள் பொழிவது என நெடிய பரதன் விடு பகழி மழையினால்
வருவன் வருவன் அவன் வருவன் என வெருவி மலைமுழையின் நுழைவரால்.

**பொ:** ஒருவழியில் இருவர் நடக்க இவர் தமது வீரத்தை விடாதவராய்ப் போர் செய்யும் இயல்பினர் ஆதலின் அவ்வாறு சேர்ந்து செல்லாமல் ஒருவழியின் ஒருவராய் ஒலிக்கின்ற இடியினைப் போல ஒலிக்கின்ற அழுகைக் குரலினையுடையராய் உலகெலாம் கார்ப்பருவத்து மழை முகில்கள் மழைபொழிவது போலப் பரதன் விடுகின்ற நெடிய அம்புமழையினால் அவன்வருவன் வருவன் வருவன் என்று பயந்து மலைக்குகைகளில் நுழைவார்கள்.

கு: இவர் முடுகி இகல் செய்பவர் என்றது பரதன் சேனை வீரர்களை. ஒருவழியில் இருவர் சென்றால் அவரைப் பின்பற்றி விரைந்து சென்று வீரமவிடாது போர் செய்கின்ற இயல்பினர் பரதன் சேனையில் உள்ளவர்கள் ஆதலின், அவ்வாறு சேர்ந்து செல்லாமல் கந்திருவர் சேனையில் உள்ளார் ஒருவர் சென்ற வழியில் ஒருவர் ஒருவழியில் அழுகைக் குரலோடு செல்பவராய்ப் பரதன் விடும் அம்புமழையினால் வெருவி மலைக் குகைகளில் நுழைவார்கள் என்றவாறு. இதனால் பகைவரின் நடுக்கம் புலப்படுத்தியவாறு. (51)

1335 மதுரகளப தனமகளிர் மகிணர்படர்
மருவுமுட றழுவியிடை விடார்
உதிரநதி யிடையினொழுகி யுயிரொழிவ
ருரகபண நெளிய வுடுவும்வெங்
கதிருமதியு முகவதிரு மதகரட
கரியுமிரு கனகவிரதமும்
குதிரையணியி னொடுதுணிவ வொருவனொரு
கொடியபகழி விடுகளமெலாம்.

மதுரகளபதன மகளிர் மகிணர்படர் மருவும் உடல் தழுவி, இடை விடார்
உதிரநதியிடையின் ஒழுகி உயிர் ஒழிவர்; உரகபண நெளிய, உடுவும்வெம்
கதிரும் மதியும் உக, அதிரும் மத கரட கரியும் மிருகனக இரதமும்
குதிரை அணியி னொடு துணிவ ஒருவன் ஒரு கொடிய பகழி விடுகளம் எலாம்.

பொ: பரதனாகிய ஒருவன் ஓர் அம்பினை விட்ட போர்க்களம் முழுதும் இனிமையான கலவைச்சந்தனம் அணிந்த கொங்கையை உடைய பெண்டிர் தம் கணவருடைய துன்பம் பொருந்திய உடம்பைத் தழுவிக் கொண்டு விடாதவர்களாய் இரத்த வெள்ளத்தினோடு கலந்துசென்று உயிர் ஒழிவார்கள்; பூமியைத் தாங்கும் ஆதிசேடனுடைய தலை நெளியவும், விண்மீன்களும்

வெப்பமுடைய சூரியனும் சந்திரனும் சிதறிவீழவும் அதிர்கின்ற மதம் ஒழுகும் சுவட்டினையுடைய யானையும் பெருமை மிக்க பொன்னால் இயன்ற தேரும் குதிரைச் சேனையோடு அறுபட்டு வீழ்வன ஆயின.

கு: பரதனாகிய ஒருவன் ஒருகணையினைவிடப் பெற்ற போர்க் களம் முழுவதும் மகளிர் மகிணர் உடல் தழுவி விடாராய் உதிர நதியோடு ஒழுகி உயிர் ஒழிவர்; கரியும் இரதமும் குதிரை அணியினோடு துணிவன ஆயின என ஆக்கம் வருவித்து முடிக்க. களபம்-கலவைச் சாந்து. மகிழ்நர் என்பது மகிணர் என மருவியது. உரகபணம் நெளியவும் உடுவும் வெங்கதிரும் மதியும் உக அதிரும் கரி என யானைக்கு அடை. மத கரடம்-மதநீர் ஒழுகும் சுவடு. குதிரையணி என்றது, குதிரைச்சேனையை. துணிவ என்பது வகரவீற்றுப் பலவின் பால் வினைமுற்று. படர் மருவும் உடல் என்றது ஆயுதங்களால் புண்பட்டுத் துன்புற்ற உடம்பாகும்.

(52)

## படுகளத்தின் இயல்பு
### வேறு

1336 முரித ருஞ்சிலை மூன்று கோடி கந்
திருவர் பட்ட வச்செங் களத்தினில்
பரிகள் பட்டவும் பகழி பட்டவெங்
கரிகள் பட்டவும் கணங்கொன் றில்லையால்.

**முரி தருஞ் சிலை மூன்று கோடி கந்**
**திருவர் பட்ட அச் செங்களத்தினில்**
**பரிகள் பட்டவும் பகழி பட்ட வெங்**
**கரிகள் பட்டவும் கணக்கு ஒன்று இல்லை யால்.**

பொ: வளைந்த வில்லையுடைய மூன்று கோடி கந்திருவர்கள் இறந்துபட்ட அந்தக் குருதியால் சிவந்த போர்க்களத்தில் இறந்து பட்ட குதிரைகளுக்கும், அம்பு பட்டு இறந்து பட்டனவாகிய யானைகளுக்கும் ஒருகணக்கு இல்லை.

கு: முரிதல்-வளைதல். வில்லுக்கு அடை. கந்திருவரின் தொகை மூன்று கோடி என்பார், மூன்று கோடி கந்திருவர் என்றார். செங்கணம் என்றது, இரத்தவெள்ளத்நால் சிவந்த களம் எனக் காரணப் பெயராதல் புலப்படுத்த வேண்டி. பட்ட பரிகளும் பட்ட வெங்கரிகளும் என மாற்றி முடிக்க. பகுதி பட்டமையால் பட்டவெங்கரிகளும் என்க. கணக்கு-அளவு. ஆல்-அசைநிலை. மூன்றுகோடி கந்திருவர் பட்ட போர்க்களத்தில் இறந்துபட்ட குதிரைகளுக்கும் யானைகளுக்கும் அளவில்லை என்றவாறு. கந்திருவர் மூன்று கோடி என்ற கணக்குப்போலக் குதிரைகட்கும் யானைகட்கும் கணக்குச் சொல்ல வியலாது என்றவாறு. (53)

1337 ஓரி டங்களு மொழிவு ருதுவெம்
பேரி டங்கரின் பிணையல் காதுடைக்
காரி டங்கொள்வெங் கழுகு மோரியும்
பாரி டங்களும் பருந்து மானவால்.

ஓர்இடங்களும் ஒழிவு உருது வெம்
பேர்இடங்கரின் பிணையல் காதுடைக்
கார் இடங்கொள் வெங்கழுகும் ஓரியும்
பாரிடங்களும் பருந்தும் ஆனவால்.

பொ: ஒரு சிறிது இடமும் வறிதாக ஒழியாமல் கொடிய பெரிய முதலைகளின் வரிசைகளும், காதினையுடைய கருநிறங் கொண்ட கொடிய கழுகுகளும் பேய்களும் பருந்துகளும் ஆக நிறைந்திருந்தன.

கு: ஓர் இடங்களும் என்பது ஒருமைப்பன்மை மயக்கம். எல்லா இடங்களிலும் என்பார், 'ஓரிடங்களும் ஒழிவுருது' என்றார் போர்க்களம் முழுமையும் முதலைகளின் வரிசையும் கழுகுகளும் நாகளும் பேய்களும் பருந்துகளுமாக நிறைந்திருந்தன என்றவாறு. இடங்கர்-முதலை. இது அகழியில் இருப்பது. பிணந்தின்னும் ஆசையால் முதலையினமும் அங்கு வந்து கிடந்தன என்க. பெரிய கழுகுகள் கருநிறமும் சிவந்தகாதும் உடையனவாக இருக்கும். அவற்றையே 'காதுடைக்கார் இடங்கொள் வெங்கழுகு' என்றார். கார்-கருமை. ஓரி-நரி. பாரிடம்-பூதம்; இங்குப் பேயினை

யுணர்த்தியது. இச்செய்யுள் திரிபு என்னும் சொல்லணி; முதல் எழுத்து நீங்கலாக ஒருசீர் முழுதும் எழுத்து ஒற்றுமையுடையவா தல் காண்க.

## பரதன் தன் மக்களுக்கு வாகை சூட்டுதல்

1338 அந்த ரத்தின்மீ தாடு காகவெம்
பந்த ரிற்கொடைப் பரத னங்ஙனே
கந்த மிக்க பைங் கமலக் கைபினல்
மைந்தர் தம்மையே வாகை சூட்டினன்.

அந்தரத்தின் மீது ஆடு காக வெம்
பந்தரில் கொடைப் பரதன் அங்ஙனே
கந்த மிக்க பைங்கமலக் கையினல்
மைந்தர் தம்மையே வாகை சூட்டினன்.

பொ: விண்ணின்மீது நிணமுண்டு ஆடுகின்ற காகங்களாகிய விரும்பத்தக்க பந்தர் நிழலில் வள்ளல் தன்மையுடைய பரதன் அப்பொழுதே மணமிக்க பசுமையான தாமரை மலர்போன்ற தன் கையினல் தன் மைந்தர் புட்கரன் தக்கன் என்பார்க்கு வாகை மாலையைச் சூட்டினன்.

கு: போர்க்களத்தில் நிணமுண்ணவந்த காகங்கள் விண்ணில் நெருங்கிப் பறப்பது பந்தர் வேய்ந்தாற்போல இருத்தலின் அதனைக் 'காகவெம் பந்தர்' என்ருர். வாகைமாலை சூட்டுதற்குப் பந்தல் போடும் முயற்சிசெய்யாமலேயே இயல்பாக அமைந்த காகப் பந்தரில் பரதன் தன் மக்களுக்கு அப்போதே வெற்றி மாலையைச் சூட்டிவிட்டான் என்றவாறு. பரதன் தான் பெற்ற வெற்றியைத் தன் மக்களுக்கு உரிமையாக்கிய கொடைக்குணம் உடைமை பற்றிக் கொடைப்பரதன் எனச் சிறப்பித்தார். கந்தம்-மணம்; கமலத்திற்கு அடை. தான் சூட்டிக் கொள்ளாமல் மைந்தர் தம்மையே சூட்டினன் எனப் பிரிநிலை ஏகாரம் பொருந்தக் கூறினர். மைந்தர் தமக்கு என்ற நான்கனுருபு உருபு மயக்கமாக 'மைந்தர்தம்மை' எனவந்தது. வாகை என்பது வென்ருேர் சூடும் வாகைப் பூவினலாய மாலை. சூட்டினன், பிறவினை.

## சிந்துவில் இரண்டு நகரம் செய்தல்

1339 தாது சேர்மலர்த் தாம வண்டு சூழ்
சீத மென்புனற் சிந்து நாட்டினில்
ஆதி வானவ னளகை போலவே
ஏத மில்புர மிரண்டி யற்றினான்.

**தாது சேர் மலர்த்தாம வண்டு சூழ்**
**சீத மென் புனல் சிந்து நாட்டினில்,**
**ஆதிவானவன் அளகை போலவே**
**ஏதம் இல் புரம் இரண்டு இயற்றினான்.**

பொ: மகரந்தம் பொருந்திய மலரில் ஒளியுடைய வண்டுகள் சூழ்கின்ற குளிர்ந்த மென்மையான நீர்வளம் மிக்க சிந்து நாட்டில் வடதிசைக்குத் தலைவனாகிய குபேரனது அளகாபுரி போலக் குற்றமற்ற நகர்கள் இரண்டினைச் செய்தான்.

கு: மலர்களின் செறிவும் அம்மலர்களில் வண்டுகள் மொய்த்தலும் குளிர்ந்த நீர் வளத் தாலியன்றதாகலின் சிந்து நாட்டிற்கு இவற்றை அடையாகக் கூறினார். ஆதிவானவன் என்றது அளகைக்கு முதல் தலைவனாகிய குபேரனை. அளகாபுரி செல்வத்தால் சிறந்தது; அதுபோலவே சிந்துநாட்டின் புரங்கள் இரண்டும் செல்வ வளத்தால் சிறக்குமாறு பரதன் செய்தான் என்றவாறு. தாது-மகரந்தம். தாமம்-ஒளி. இனித் தாமம் ஒழுங்கு எனப் பொருள் கொண்டு அதற்கேற்பக் கூறலும் ஆம். சீதம்-குளிர்ச்சி. புரம் இரண்டு என்றது பரதன் புதல்வர் இருவர்க்கும் தனித்தனி உரிமைசெய்தற்காக அமைத்த இருநகரங்களை. ஏதம்-குற்றம். எல்லாக் குற்றமும் நீங்குமாறு விழிப்புடன் செய்யப்பட்ட இருநகரம் என்க. (56)

## இருநகரங்களையும் புட்கரற்கும் தக்கனுக்கும் கொடுத்தல் வேறு

1340 திக்குநிகழ் புகழ்ப் பரதன்
நீதிலவாந் தினம்வாரம்
மிக்கமறை முறைமையினல்
வேதியரோ டினிதாய் து
புக்க மிகைப் புட்கரற்குப்
புட்கரமா நகர்போர்வில்
தக்கனுக்குத் தக்கசிலை
நகரிவர்க்குத் தான்கொடுத்தான்.

திக்குநிகழ் புகழ்ப்பரதன், தீது இலவாம் தினம் வாரம்
மிக்க மறை முறைமையினல் வேதியரோடு இனிது ஆய்ந்து,
புக்க மிகைப் புட்கரற்குப் புட்கரமா நகர் போர்வில்
தக்கனுக்குத் தக்க சிலை நகர் இவர்க்குத் தான்கொடுத்தான்.

பொ: திசையெட்டினும் பரவிய புகழையுடைய பரதன், தீமையில்லாத தினம் வாரம் இவை எனச் சிறந்த வேத முறையால் வேதமுணர்ந்த அந்தணரோடு ஆராய்ந்து, அந்த இனிய நாளில் (கருவில் முன்னே) புகுந்து தோன்றிய பெரியவனுகிய புட்கரன் என்பவனுக்குப் புட்கரம் என்கின்ற நகரும் போர் செய்யும் வில்லினையுடைய தக்கன் என்பவனுக்குத் தக்கசிலை நகரும் உரிமையாகும் என இவர்கள் இருவர்க்கும் தானே பகுத்துக் கொடுத்தான்.

கு: இருவர்க்கும் இருநகரங்களைப் பகுத்துப் பெயர்சூட்டி உரிமையாக்கினன் பரதன் என்க. நாளும் கோளும் நன்னிலையில் இருக்கும் போது இருவர்க்கும் உரிமை செய்தல் முறையாகலின் வேதமுணர்ந்த வேதியரைக் கண்டு நாளும் கோளும் ஆராய்ந்து இவர்க்குக் கொடுத்தான் என்க. தன் புதல்வர்களின் பெயரோடு தொடர்புடைய பெயரையே அவ்விரு நகர்க்கும் பெயராக வைத்தான் எனபது புட்கரம், தக்கசிலை என்ற பெயர்களால் அறியலாம்.

## அடிப்பட இருத்தல்

1341 மானவனத் திருமகர்க்கு மதியனைய வெண்
குடைக்கீழ்ச்
சோனைமுகில் சுரந்தோங்குந் தொகுபுனலால்
வயல்விளையும்
ஆனபுகழ்ச் சிந்துநா டடிப்படுத்தி யெடுத்தங்ஙன்
ஏனை மன்னர் தொழுதிறைஞ்ச வெதிரறவீற்
றினிதிருந்தான்.

மானவன் அத் திருமகர்க்கு மதிஅனைய வெண்குடைக்கீழ்ச்
சோனைமுகில் சுரந்து ஓங்கும் தொகுபுனலால் வயல்விளையும்
ஆனபுகழ்ச் சிந்துநாடு அடிப்படுத்தி எடுத்து அங்ஙன்
ஏனைமன்னர் தொழுது இறைஞ்ச எதிர்அற வீற்று இனிதிருந்தான்.

பொ: பெருமையுடையவனாகிய பரதன் அந்தச் சிறந்த மைந்தர் இருவர்க்கும் சந்திரனைப் போன்ற வெண்கொற்றக் குடையின்கீழ், விடாமழைபொழியும் மேகம் மழை சுரத்தலால் பெருகிவரும் திரண்ட வெள்ளநீரினால் வயல் விளைகின்ற பெரும் புகழை யுடைய சிந்துநாட்டினை அடிப்பட்டு ஒழுகச் செய்து வளர்த்து அங்குப்பிற மன்னர்கள் எல்லாம் கைதொழுது வணங்கி நிற்கப் பகைமையில்லாதபடி இனிது வீற்றிருந்தான்.

கு: மானவன், அத்திருமகர்க்கு வெண்குடைக்கீழ்ச் சிந்து நாடு அடிப்படுத்தி, மன்னர் இறைஞ்ச, எதிர் அற இனிது வீற்றிருந்தான் என இயையும். திருமகர்க்கு என்றது, செல்வ மிக்க தன் மைந்தர் இருவர்க்கும் என்னும் கருத்தினது. சோனைமுகில்-விடாது பொழியும் மேகம். அடிப்படுத்தல் என்பது புதிய அரசர்களாய தன் மைந்தர்களுக்குச் சிந்துநாடு அடங்கி நடக்கு-மாறு செய்தல். எடுத்து-வளர்ச்சியுறச் செய்து. 'ஏனைமனர்' என்ற பாடம் இருப்பின் யாப்பமைதி சிறக்கும். (58)

## பரதன் தன் மக்களை மன்னராக்கி அயோத்தி மீளுதல்

1342 விம்பமதி வெண்குடைக்கீழ் விரையளியி னிசை
யகலா
வம்பலர்தார் மைந்தருக்கு வளநாடு வளம்
படுத்திக்
கம்பமத கரிபரிதேர் காலாளு மிகவருளி
அம்பொனெடு மணிமுடியா னயோத்திமா
நகரடைந்தான்.

விம்பமதி வெண்குடைக்கீழ் விரைஅளியின் இசை அகலா
வம்பலர்தார் மைந்தருக்கு வளநாடு வளம்படுத்திக்
கம்பமத கரிபரிதேர் காலாளும் மிக அருளி
அம்பொன்நெடு மணிமுடியான் அயோத்திமா நகர்
அடைந்தான்.

பொ: வட்டமான சந்திரனைப் போன்ற வெண்மையான குடையின்கீழ், வாசனையை விரும்புகின்ற வண்டுகளின் இசை அகலாமல் இருக்கின்ற வாசனையோடு மலர்கின்ற மலர் மாலையையுடைய தன் மைந்தர்கட்கு, உரிமையான வளநாடுகளை வளம் பெறச் செய்து, அசைந்து ஆடும் இயல்புடைய மதயானைகள், குதிரைகள், தேர்கள், காலாட்கள் என்கின்ற நால்வகைப் படையினையும் மிகுதியாகக் கொடுத்துவிட்டு அழகிய பொன்னுலியன்ற நீண்ட மணிகள் பதித்த முடியையுடையவனாகிய பரதன் அயேத்திமா நகரத்தை அடைந்தான்.

கு: அம்பொன்முடி, நெடுமுடி, மணிமுடி எனத்தனித்தனி இயையும். மணிமுடியான் என்றது பரதனை. மணிமுடியான் மைந்தருக்கு நாடு வளப்படுத்தி, அருளி அயோத்தி மாநகர் அடைந்தான் என இயையும். குடைக்கீழுள்ள வம்பலர்தார் மைந்தருக்கு என்க. மலர்மாலையின் சிறப்புப் புலப்பட 'விரையளியின் இசையகலா வம்பு அலர் தார்' என்றார். வம்பு-வாசனை. மைந்தரணிந்த மாலையில் வண்டு பாடும் இசை எப்போதும் இருக்கும் என்றவாறு. கம்பம்-அசைவு. ஆடியல்யானை என்பதற்கேற்பக் கம்பமதகரி என்றார். கரி பரி தேர் காலாளும் என்புழிச்

செவ்வெண்ணீற்றில் எச்ச உம்மை வந்தது. "அடகு புலால் பாடு பாணிதமும் உண்குறன் கடல் போலுங்கவ்வியவன்" என்புழிப் போல. (59)

## பரதன் இராமன் திருவடியைப் பணிதல்

1343 பனிமதியே நிகர்வதனப் பங்கயமென்
திருவனையார்
கனகமணி புனைகாம்பிற் கவரிகொடு பணிமாறத்
தினகரன்போ லொளிவீசுஞ் செழுமணியா
சனத்தின்மிசை
இனிதிருந்த கனைகழற்கா லிராகவனை யடி
பணிந்தான்.

பனிமதியே நிகர்வதனப் பங்கயமென் திருவனையார்
கனகமணி புனைகாம்பிற் கவரிகொடு பணிமாறத்
தினகரன்போல் ஒளிவீசும் செழுமணி ஆசனத்தின் மிசை
இனிது இருந்த கனைகழல் கால் இராகவனை அடிபணிந்தான்.

பொ: குளிர்ந்த சந்திரனையே ஒத்த முகத்தினையுடையராய்த் தாமரைமலரில் வீற்றிருக்கின்ற மெல்லிய திருமகளை ஒத்த பணிப்பெண்டிர், பொன்னும் மணியும் கொண்டு செய்யப்பட்ட காம்பினையுடைய வெண்கவரி கொண்டு வீசா நிற்க, சூரியன் போல் ஒளி வீசுகின்ற செழுமையான மணிகள் பதித்துள்ள சிங்காசனத்தின்மேல் இனிதாக வீற்றிருந்த ஒலிக்கின்ற வீரக் கழலினை யணிந்த காலினையுடைய இராமனைத் திருவடிக்கண் பணிந்தான் பரதன்.

கு: பணிந்தான் என்பதற்கு எழுவாய் முன்னைச் செய்யுளில் வந்துள்ள மணிமுடியான் என்பதேயாம். இராமனுக்குக் கவரி வீசும் பணி வாய்த்தமை நினைந்து மகிழ்கின்ற முகத்தினர் ஆதலின், அவர் முகத்திற்குக் குளிர்ந்த சந்திரனை அன்றிப் பிறிதொரு பொருள் உவமமாகாது என்ற கருத்தால் பனிமதியே நிகர் வதனம் எனப் பிரிநிலை ஏகாரம் கொடுத்துக் கூறினர். பணிமாற-வீச. தினகரன்-சூரியன். சிங்காசனத்தில் பதித்துள்ள

செழுமணிகட்கு உவமை தினகரன். பகையும் பூசலும் இன்மை புலப்பட 'இனிதிருந்த' என்றார். அடியின்கண் பணிந்தான் ஏழாவது விரிக்க. (60)

## பரதன் கந்திருவரை வென்றுஅவர் நாட்டைத்தன் மைந்தர்க்குக் கொடுத்ததை இராமனுக்குக் கூறியது

1344 காரிருண்ட தெனுநிறத்துக்கந்திருவர் கடற்சேனை
போருடைந்து புறங்காட்டப் பொருதவரைத்
தொலைத்ததுவும்
வாரிருந்த கனைகழற்கான் மைந்தருக்கு வள
நகரம்
ஓரிரண்டு வகுத்ததுவு முரைத்தன னவ்
விரைத்தாரான்.

கார்இருண்டது எனும் நிறத்துக் கந்திருவர் கடற்சேனை
போர் உடைந்து புறம் காட்டப் பொருது அவரைத் தொலைத்ததுவும்
வார் இருந்த கனைகழற்கால் மைந்தருக்கு வளநகரம்
ஓர் இரண்டு வகுத்ததுவும் உரைத்தனன் அவ் விரைத்தாரான்.

பொ: வாசனையுள்ள மாலையை அணிந்த பரதன் கரிய மேகம் இருண்டது எனத் தக்க அழுத்தமான கரியநிறத்தையுடைய கந்திருவரின் கடல் போன்ற சேனை போரில் தோற்றுப் புறமுதுகு காட்டும்படி போர்செய்து அவர்களை அழித்ததையும், நீண்டிருந்த ஒலிக்கின்ற கழலணிந்த காலினையுடைய தன்மைந்தருக்கு அக் கந்திருவரின் வளநகரத்தை இரண்டாகப் பகுத்துக் கொடுத்ததையும் சொன்னான்.

கு: விரைத்தாரோன். அவரைத் தொலைத்ததுவும் இரண்டு வகுத்ததுவும் உரைத்தனன் என இயையும். இயல்பாகவே இருண்டுள்ள மேகம் மேலும் இருண்டது என்னும்படி மிகக் கறுத்த நிறத்தினர் கந்திருவர் என்பது புலப்படுத்தியவாறு. அவரை என்றது கந்திருவரை. தொலைத்தல்-அழித்தல். கழலுக்கு நீட்சியும் ஒலியும் பொருந்தியிருந்தமை புலப்படுத்தியவாறு.

உடைதல்-தோற்றல். மைந்தர் என்றது பரதன் மக்களாகிய புட்கரன், தக்கன் என்பவரை. வளநகரம் இரண்டு வகுத்தது என்றது, சிந்துநாட்டைப் புட்கரம் தக்கசிலே என இருபகுதியாகப் பகுத்து அவ்விருவருக்கும் தனித்தனியே உரிமை செய்ததை-யுணர்த்தியவாறு. (61)

---

கந்திருவர் வதைப்படலம் முற்றிற்று.

# 17. சந்திரகேது நகர்ப்படலம்

## முன்னுரை

சந்திரகேது என்ற பெயருடைய இலக்குவன் மகனுக்குரிய நகரைப் பற்றிக் கூறுவதால் இது சந்திரகேது நகர்ப்படலம் எனப்பெயர் பெறுகின்றது. பரதன், தன் மைந்தர் - புட்கரன், தக்கன் என்பார்க்கு காந்தார தேயத்தைப் பகிர்ந்து கொடுத்து அரசர்களாக்கிய செய்தியை இராமனிடம் வணங்கிக் கூறக் கேட்டு இராமன் மன மகிழ்ந்து, பரதனைப் பார்த்து இந்திரசித்தினை வென்ற இலக்குவனுடைய மைந்தர்க்கும் அரசாளுதற்குரிய வளநாட்டை வகுத்துச் சொல்லுக என்று கூறிச் 'சந்திர காந்தம் என்னும் பெயரால் ஒரு வளநாட்டை அமைக்க' என்கின்றான். பரதன் அவ்வாறே செய்வதாகக் கூறி வணங்கிவிட்டு நகரில் முரசறையச் செய்கின்றான்.

இலக்குவன் மைந்தர்களான அங்கதன், சந்திரகேது என்ற இருவர்க்கும் பரதன் அயோத்தியிலிருந்தே மணிமுடி சூட்டுகின்றான். பின்பு இராமன், இலக்குவனை நோக்கி, நால்வகைப் படைகளோடும் அங்கதன் என்ற மைந்தனோடும் மேலைத் திசை நோக்கிச் செல்லுமாறு பணிக்கின்றான். அவ்வாறே இலக்குவன் சேனையுடன் அங்கதனோடு மேலைத்திசை நோக்கிச் சென்று காரகாபதி என்னும் நகரைப் புதுவதாக அமைக்கின்றான். நீண்ட தெருக்களும் குறுந்தெருக்களும் கடைத்தெருவும் கூல வீதியும் முச்சந்தியும் சதுக்கமும் சூரியனைத் தொடுவது போன்ற மதிலும் ஆழ்ந்த அகழியும் மாளிகைகளும் சூளிகைகளும் அழகுற அமைக்கின்றான். யானைகள் தங்குதற்குறிய யானைக் கூடங்கள் ஒரு பக்கம், குதிரைகள் கட்டுமிடமாகிய குதிரைப் பந்திகள் ஒரு பக்கம், தேர்கள் தங்கியுள்ள தேர் வீதிகள் ஒரு பக்கம், வில் வீரர்கள் தங்குமிடம் ஒரு பக்கம் அழகுற அமைத்து காண்போர் உள்ளங்களைக் கவருமாறு அமைவுறச் செய்கின்றான். பொன்மயமான பெரிய காரகாபதி என்ற இந்த நகரத்திற்கு உவமை யாவது போகச் சிறப்பால் நாகர்கள் வாழ்கின்ற அழகிய நகரமே? பருத்தமணிகள் மிகுந்திருப்பதால் ஆதித்தர் பன்னிரு

வரும் வாழ்கின்ற நகரமோ? அல்லது, ஞானிகள் நிறைந்துள்ளமையால் சித்தர்கள் நகரந்தானோ? புகழ்மிக்குடைமையால் இந்திர புரியோ? செல்வச்சிறப்பால் அளகாபுரியோ? என ஐயுறுமாறு சிறந்து விளங்குகின்றது.

விண்ணுலகத்திலுள்ள மங்கையரின் கழுத்துப் போலக் கமுக மரங்களின் வரிசைகள் நெருங்கி வளர்ந்துள்ளன காருகாபதநகரம். நவ மணிகளின் ஒளி பெரிதும் கலந்து ஒளி வீசுவதால் பகல் என்ற ஒருதன்மையோ, அல்லது இரவு என்கின்ற ஒரு தன்மையோ இல்லாததாக இருந்தது. பிரமன், உலக முழுவதையும் ஓரிடத்தில் சேர்த்து அடைத்து வைத்தாற்போன்ற இந்த அழகிய காருகாபதத்தில் மங்கையர்தம் முகம் எனக்கருதிச் சந்திரன் மேலுள்ள களங்கத்தைத் துடைப்பது போன்று, துணியினால் ஆகிய கொடிகள் சந்திரனைச் சார்ந்து அசைந்தாடுகின்றன. தெருக்களில் முத்துக்கள் ஒளி வீசிக் கொண்டு கிடக்கின்ற தோற்றத்தைப் பார்த்தால் சந்திரனும் விண்மீன்களும் விண்ணிலிருந்து தவறி மண்ணில் வீழ்ந்து கிடப்பது போன்று உள்ளன.

இத்தகைய சிறப்பினையுடைய காரகாபதி நகர்க்கு அங்கதன் என்கின்ற தன் மகனை அரசன் ஆக்கிவிட்டு அங்கிருந்து அவன் அரசு செய்யத் துணையாகப் பொன்னும் தேரும் குதிரையும் யானையும் வேல் முதலிய ஆயுதங்கள் தாங்கியுள்ள காலாள் வீரரும் ஆகிய நால்வகைப் படைகளையும் அளித்து விட்டு அங்கு நின்றும் திரும்பி அயோத்தி வந்து அடைகின்றான் இலக்குவன்.

அயோத்தியில் சிங்காசனத்தில் வீற்றிருக்கும் இராமபிரானை வணங்கி, அங்கதனுக்குக் காரகாபதியை அமைத்துக் கொடுத்து, அதற்கு அரசனாக்கி வந்த நிகழ்ச்சியை இலக்குவன் கூறுகின்றான்.

அதுகேட்டு மகிழ்ந்த இராமன், பரதனை நோக்கி, சந்திர காந்தம் என்னும் நாட்டிற்குச் சந்திரகேதுவை அரசனாக்கி இருக்கச் செய்து வருவாயாக என்று கூறுகின்றான். அவ்விராமனுடைய கட்டளையைத் தலைமேற்கொண்ட பரதன் நால்வகைச் சேனையோடு சிறந்த மணிகள் பதித்த தேரில் ஏறிக் கொண்டு வாத்தியங்கள் ஒலிக்கச் சந்திரகேது என்னும் இலக்குவன்

மகனேடு அயோத்தியை விடுத்துச் சந்திரகாந்த நாட்டினை அடைந்து தங்குகின்றுன்.

பின்பு சந்திரகாந்த நகரைப் புதுக்கி அழகு செய்து அமைக்கின்றுன். இலக்குவன் புதல்வன் சந்திரகேதுவை அந்தச் சந்திர காந்த நகர்க்கு அரசனுக முடிசூட்டி இருக்கச் செய்து விட்டு, நால்வகைச் சேனைகளையும் அவனுக்குத் துணையாக விடுத்துக் குதிரையின் மேல் ஏறிக் கொண்டு பரதன் அயோத்திக்கு வந்து இராமனுடைய திருவடிகளில் வணங்கிச் சந்திரகாந்தத்திற்குச் சந்திரகேதுவினை அரசனுக்கி வந்த நிகழ்ச்சியைச் சொல்கின்றுன். இராமன் மகிழ்ந்து அங்கு வந்திருந்த மன்னர்கட்கெல்லாம் விடை கொடுத்து அனுப்பிவிட்டு அரண்மனையை அடைகின்றுன். தன் ஆட்சியின் சிறப்பால் மானும் புலியும் ஒரு துறையில் பகையின்றி நீருண்ணும் அற்புதம் ஏற்படுகின்றது கண்டு மகிழ்ச்சியோடு வாழ்கின்றுன் இராமன்.

அவ்வாறு இருக்கும் நிலையில் பிரமன் ஏவலின் படி எமன், முனிவன் வேடத்தில் வருகின்றுன். அரண்மனைக் காவலராகிய மிலேச்சர்களை அழைக்கின்றுன். இராமனுக்கு ஒரு முனிவன் வந்துளான் உம்மைக்காண எனச் சொல்லுமாறு பணிக்கின்றுன். அவ்வாறே காவலர் இராமனிடம் சென்று 'ஒருமுனிவன் அரண்மனை வாயிலில் தங்களைக் காண நிற்கின்றுன்' என வணங்கிச் சொல்கின்றனர். உடனே இராமன், 'அம் முனிவரை வரச் சொல்லுங்கள்' என்கின்றுன். முனிவன் வேடந்தாங்கிய எமனது வரவை கண்ட இராமன் நீயார்? எனவினவுகின்றுன்.

அவ்வாறு வினவிய இராமனை எமன் துணிந்து நோக்கிப் 'பிரமன் ஏவியதைச் சொல்கின்றவன்' என்று தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டு 'உனக்குச் சொல்ல வேண்டியது ஒன்றுளது. நாம் இங்கு ஒருங்கேயிருப்பதை வந்து யாரும் காணலாகாது. யாராவது வந்து காண்பாராயின் அவரைக் கொல்க' என்கின்றுன் எமன். அதனை அறிந்த இராமன் அவ்வாறே செய்வதாக இயைந்து வரம் கொடுத்து இலக்குவனை அழைத்து 'யாராயிருந்தாலும் இங்கு உள்ளே வாராதபடி நீ காவல் செய்க' எனப்பணிக்கின்றுன். அவ்வாறு இலக்குவனைக் காவல் செய்யுமாறு ஏவியபின் எமனை நோக்கி 'இனி நீ சொல்வதைச் சொல்லலாம்' என்கின்றுன்.

உடனே முனிவர் வேடத்தில் வந்துள்ள தான் எமன் என்பதைப்புலப்படுத்துகின்றான். பிரமன் உன் உந்திக்கமலத்தில் உதித்தவனாவன். அவனே இந்த ஏழுலகையும் படைத்தவனாவன். அந்தப் பிரமனே உனக்குச் சொல்லுமாறு என்பால் சொன்னதைக் கூறுகின்றேன். மனம் அமைந்துக் கேட்பாயாக. "மூவரில் ஒருவன் என எண்ணப்படும் என்றாலும் தேவர்கள் கூட்டத்தாலும் அளந்து காண்டற்கு அரியவனாகிய சிவன் தங்கியுள்ள வெள்ளிமலையை அள்ளி எடுத்த ஒப்பற்ற பெரிய வலிமையுடையவனும் ஒளிவாய்ந்த சூரியனும் சந்திரனும் மேலே இயங்கப் பெறாததும் ஒளிமிக்க மதிலால் சூழப் பெற்றதும் ஆகிய இலங்கையில் வாழும் அரக்கர்கட்குத் தலைவனுமாகிய இராவணன், வலிமையுடைய மானிடராலன்றி அழியாத ஒப்பற்ற ஆயுளையுடையவன். சிவபிரானிடம் அழகிய ஒளிமிக்க வாளினைப் பெற்றவன். இராவணன் என்னும் தன் பெயர் நான்கு திசையிலும் பரவுமாறு செய்த வீரச் செயலையுடையவன்.

அத்தகைய இராவணனுடைய உயிரைக் கொல்லக் கருதியே பாற்கடலையும் பாம்பணையினையும் விடுத்துச் சூரியன் மரபில் வந்து நீ பிறந்தாய். நினைத்தபடியே இராவணனைக் கொன்றொழித்தாய். நின் அவதாரத்தின் நோக்கத்தை முடித்துப்பின் உண்மையான வைகுந்தத்தை நீ அடையவேண்டும்' என்பதே பிரமன் கூறியது எனச் சொல்லிக் கொண்டிருக்கின்றபொழுது அத்திரியின் புதல்வனாகிய துருவாச முனிவன் அரண்மனைக்கு வருகின்றார். இலக்குவன் வில்லேந்திய கையோடு வாயிலைக் காத்து நிற்பதைக் காண்கின்றான். அவனை விளித்து இராமனிடத்தில் உறுதியானதொரு சொல்லை உரைக்க வேண்டியுள்ளது. ஆதலால், 'துருவாச முனிவன் உன் புறங்கடையில் இருக்கின்றான் என்பதை அவனுக்குச் சொல்லுக' என்று முனிவன் மொழிகின்றான்.

இலக்குவன் அதைக்கேட்டு முனிவரைப் பார்த்து' வேதங்களையுணர்ந்த முனிவரே! நீ சொன்னபடியே நீ வேண்டியதை யான் செய்து முடிப்பேன்! வேண்டியது என்ன? என்பதை எனக்குச் சொல்லுக' என்று வணங்கிக் கூறுகின்றான். இலக்குவனது சொல்லைக் கேட்ட முனிவன் கோபங்கொண்டு 'நின் தமையனாகிய இராமனுக்கு என் வருகையைச் சொல்லவில்லை என்றால் உங்களுடைய பழைய குலம் இன்றே அழிந்து மாண்டுபோவ

தாகிய கொடிய சாபத்தைக் கொடுத்து விடுவேன்' என்று சொல்கின்றான். வேதமுணர்ந்த துருவாச முனிவன் இவ்வாறு கூறியவுடன் திடுக்கிட்ட நெஞ்சினனாய் துன்பத்தோடு எண்ணிப் பார்த்து, 'இத்தகைய சாபம் கொடுத்தால் இது இராமனுக்கும் ஆகுமே' என்று இலக்குவன் அஞ்சி நடுங்குகின்றான்.

பின்பு தனக்கு வரும் மரணத்தைப் பற்றி எண்ணாமல் தான் பிறந்த குலத்திற்கு வரும் தீங்கினையே எண்ணித்துணிகின்றான். புல்நுனியில் உள்ள பனி நீரும் மேகத்திலுள்ள மின்னும் மழை நீரில் எழுகின்ற மொக்குளும் போல நிலையாத இந்த உடம்பு களின் இயல்பை எண்ணிக் கொண்டு தன் இறப்பைப் பொருட் படுத்தாமல் இராமனும் எமனும் தனித்துப் பேசிக் கொண்டுள்ள இடத்திற்குச் செல்கின்றான். பிரமன் சொன்ன காரியத்தைச் சொல்லிக் கொண்டிருக்கும் கூற்றுவன் சொற்களைக் கேட்டுக் கொண்டிருந்த இராமனுடைய திருவடிகளை வணங்கி அத்திரி முனிவரின் மகன் துருவாச முனிவன் நின் வாயிலில் நின்னைக் காணக்காத்திருக்கின்றான் எனக் கூறுகின்றான்.

உடனே இராமன், 'கருமையான கொம்புகளையும் கனலைக் கக்குகின்ற கண்களையுமுடைய எருமைக் கடாவினை வாகனமாகக் கொண்டு மகிழ்ந்து ஊர்கின்ற எமனை அனுப்பிவிட்டு வருகின்றேன்' என்று இலக்குவனுக்குச் சொல்லிவிட்டு எமனை நோக்கிப் 'பிரமன் கூறியபடி வருகின்றேன்' என்ற உடன் பாடான ஒரு சொற்றொடரைச் சொல்லி அந்த எமனை அனுப்பி விடுகின்றான் இராமன். பின்பு, தன்மரணத்தைப் பொருட்படுத் தாது எமனோடு பேசும் போது நெருங்கி வந்து சொன்ன இலக்குவனோடு வந்து, துருவாச முனிவனின் தாள்களைப் பணிந்து 'நான்கு வேதங்களும் உருவு கொண்டு வந்தது போல நீர் என் பால் வந்தது என்ன காரணம் பற்றியோ?' என வினவுகின்றான் இராமன்.

துருவாச முனிவன் கூறுகின்றான்: "நீ முன்னோர் முறைப்படி முடிசூடிய அந்த நாள் தொடங்கி ஓராயிரம் ஆண்டிற்கு ஒரு முறை நின்பால் வந்து உணவு உண்ணும் முறையினை மேற் கொண்டுள்ளேன். இந்த நாள் அந்த நாள் ஆகும்" என்கின்றான். உடனே இராமன் பணியாளரிடம், "உலகப்புகழ் பெற்றவர்களும் மன்னர்களுக்குப் பொருத்தமான உணவு சமைக்கின்றவர்களும்

ஆகிய அந்தணர்களை அழையுங்கள்'' என்று சொல்கின்றான். உடனே தூதுவர்கள் மகிழ்ந்து ஓடித்தேடி அழைக்க மடைத் தொழில் வல்லோர் வருகின்றனர்.

## சமையல் செய்தல்

அவர்களிடம் இராமன் 'துருவாச முனிவர் எம்மிடம் வந்தது உம்முடைய அட்டில் தொழில் வன்மையைக் காண்பதற் காகவே ஆகும்; ஆதலின் முனிவர் விரும்பும் மெல்லிய உண வைச் சிறப்புடன் சமைத்திடுக' என்று கூறுகின்றான். அதற்கு உடன்பட்ட அந்தணர் பொன்னாலும் வெள்ளியாலும் செய்த குடங்களில் தண்ணீர் கொண்டு வந்து பொற்சாடிகளில் நிரப்பித் தூய துணியால் மூடிவிட்டு, மடைப்பள்ளியைத் தூய்மை செய்து விட்டுச் சந்தனக் குழம்பையும் அகிற்குழம்பை யும் சேர்த்து மெழுகி அடுப்பில் விறகு வைத்து நெருப்பை மூட்டுகின்றனர்.

நொய்யும் நுறுங்கும் களைந்த புழுகு சம்பா அரிசியை உலை யில் இட்ட நூற்றுப்பத்தாயிரம் பானைகளைப் பொன் துடுப்பினால் துழாவி நல்ல பதத்தில் பொருந்தக் கஞ்சியை வடித்துப் பின் நிறுத்தி இறக்குகின்றனர்.

தம் கைத் திறமையால் செய்யப்படுகின்ற கறிவகைகளின் மணம் படிந்து கமழ்கின்ற உடம்பினையுடைய சமையல் தொழிலோர் புத்துருக்கு நெய்யில் வெந்தனவும் தாளித வகைகளில் சிறப்பாகப் பொருந்துவனவுமாகிய செழுமையான கறிகளை யாரும் வியக்கும் வகையில் அறுசுவையுடையவாகச் சமைக்கின்றார்கள். முறுகக் காய்ச்சிய பசு நெய்யில் முக்கனியும் பாலும் சர்க்கரையும் சேர்த்துக் கலந்து இனிய சுவைக்கூட்டு அடைகின்றார்கள்.

சோறு முதலியவற்றைச் சமைத்தவர்கள் தாம் செய்தமைத்த உணவு வகைகளை இராமனுக்குக் காட்டுகின்றனர். உணவு வகைகள் நன்கு அமைந்துள்ளதை உணர்ந்த இராமன், வேதங் களில் வல்ல துருவாச முனிவனை அழைத்து 'சுவையாகப் பண்ணிய போனகம் உண்க' என வேண்டுகின்றான். துருவாச முனிவன் கைகால் கழுவிய பின்பு அவர்க்கு தரையில் ஆசனம் இட்டு,

உண்கலன் வைக்கு மிடத்தில் தண்ணீரைக் கொண்டு தெளித்து விட்டுப், பொன்னுலியன்ற பெரிய உண்கலம் வைத்து, அதில் பழங்களோடு பொருந்திய உணவைப் படைத்து விட்டு மேலும் பரிமாற அங்குக் காத்திருந்தனர் சமையல்காரர்கள்.

முனிவன் ஆசனத்து அமர்ந்து, உரிய மந்திரம் ஓதிக்கையில் கொண்ட நீரைக் கொண்டு உண்கலத்தை வலமாகச் சுற்றிச் சொரிந்து பின், கையிலிருந்த நீரினைப் பருகிவிட்டு அன்பினுல் பஞ்சப்பிரம மந்திரம் ஓதி ஐந்து கவளங்களைப் பஞ்சப்பிராணனுக்கும் ஆகுதி கொடுக்கும் முறையில் அர்ப்பணித்துப் போனகம் அருந்தினுன். பலாப்பழம், மாம்பழம் பாலின் ஏடு,தேன் இவற்றோடு மலைபோன்ற வெண்மையான சோற்றைக் கலந்து விலாப் பக்கங்களின் மெலிவு நீங்கவும் வயிறு வீங்கவும் மிகுதியாக உண்டான். உண்ட பின்பு உள்ளங்கையில் கொண்ட நீரை அருந்திய பின்பு முடி மன்னர்தம் கையால் கொடுத்த பொன் குவளையில் இருந்த கங்கை நீரைக் கொண்டு தன் சிவந்த கையைக் கழுவுகின்றுன்.

## முனிவன் அட்டில் தொழிலோரைப் பாராட்டுதல்

நாவில் அறு சுவையும் விஞ்சித்தோன்றச் சர்க்கரை கலந்த பாலையுடைய உணவினை உண்டு பயின்ற முனிவன், 'இத்தகைய சுவைமிக்க அடிசில் ஆக்கிய சமையல்காரரை யான் எங்கும் கண்டிலேன்' எனச் சமையல்காரர் தலைவனை நன்கு மதித்துப் பேசிப் பாராட்டுகின்றுன். பின்பு இராமன், உடனிருந்து முனிவரை உபசரித்த மன்னரைப் பற்றி அறிமுகப் படுத்தும் முறையில், இவர் மன்னவர்; இவர் மரபும் உறவும் இவை என்று ஒவ்வொருவரையும் பற்றி எடுத்துச் சொல்கின்றுன். முனிவன் அந்த மன்னரைப் பார்க்க வாய்த்தமைக்கு மனமகிழ்ந்து அவர்களிடம் விடை பெற்று நீங்கித் தான்விரும்பிய திசையில் போகின்றுன்.

பின்பு இராமன், எமனுக்கு முன்பு தான் சொன்ன சொல்லின் படி எமனேடு பேசும் போது வந்த இலக்குவன் மரண தண்டனைக்கு உரியனுக நேர்ந்ததை நினைந்து கண்ணீர் விட்டு அழுது துன்பக்கடலில் மூழ்குகின்றுன். அப்போது இலக்குவன் வந்து இராமனை நோக்கி, 'என் மரணம் உன்னை வாய்மை தவருதவனுக ஆக்குதலாலும் முன்பு கைகேயிக்கு வரங்கொடுத்து

விட்டுப் பின்பு அவ்வரத்தை உயிர் கொடுத்தும் நிறைவேற்றிய தயரதன் புதல்வர் நீர் ஆகலானும் எமனுக்குக் கொடுத்த வரத்தின் படி நீ எனக்கு மரணதண்டனை கொடுத்தால் என் உயிர் நீங்குமே என நினைந்து இரங்கல் வேண்டா' என்று கூறிக் கொண்டு இராமன் திருவடிகளில் வீழ்ந்து வணங்குகின்றான்.

இலக்குவன் காரணங்காட்டிக் கூறிய சொல்லைக் கேட்டபின் இராமன் தன் இருகண்களிலும் நீர் அருவி போல ஒழுகி மார்பையடைய நிலைபெற்ற நிழல் என்னும்படி கலந்திருந்து பிரியாத இலக்குவன் பிரிவுக்கு அஞ்சித் துன்புறுகின்றான். இந்தநிலையில் தனக்கு ஆலோசனைகூற வசிட்ட முனிவரைத் தூதுவர் மூலம் வரவழைக்கின்றான்; இராமன், வசிட்ட முனிவரையும் அவையோரையும் நோக்கி எமனாகிய முனிவன் தன்னோடு பேசிக் கொண்டிருக்கும் போது நடுவே யாரும் வருதலாகாது, வந்தால் வந்தவர்க்குக் கொலைத்தண்டனை கொடுக்க வேண்டும் எனத் தன்னை வரம் வேண்டிப்பெற்ற தன்மையும் துருவாச முனிவன் கோபத்தோடு ஏவியதால் இலக்குவன் தன் மரணத்தையும் பொருட்படுத்தாமல் தன்னிடம் வந்து அம் முனிவர் வருகையைச் சொன்ன தன்மையும் சொல்கின்றான்.

இராமன் சொன்னதைக் கேட்ட வசிட்டன் பழைய வரலாற்றினை நினைந்து சொல்லுகின்றான். 'இராம! உன் தந்தை தசரதன் தன்னிடம் வந்த துருவாச முனிவனை முறைப்படி வணங்கி, வயது முதிர்வால் யான் இளைத்துப் போனேன். புதல்வரைப் பெறுதவனாக இருக்கின்றேன்; என்செய்வது?' என்று வினவினான். அவன் வினவியதற்கு விடையாக 'பெரிய அசுவமேத யாகம் செய்தால் மைந்தர் நால்வரைப் பெறுவாய்; அவர்களில் ஒருவன் உயிர்பிரியும் காலத்துக் குற்றமற்ற மற்றை மூவரும் மடிவர் என்று கூறியதை யானும் அறிவேன்!' என்று வசிட்டன் கூறிவிட்டு, விதியை வெல்வது அரிது; இலக்குவன் இறப்புப்பற்றி இரங்கல் வேண்டா, என்று வேண்டிக் கொள்கின்றான்.

வசிட்டன் கூறியதை உடனிருந்து கேட்ட இலக்குவன் இராமனை நோக்கி, 'வசிட்டன் சொன்னதைக் கேட்டாயன்றோ?

இனி, எனக்கு விடைகொடுப்பாயாக' என்று இராமனை வணங்குகின்றான். அப்போது இராமன் தம்பிதன் பிரிவு என்கின்ற வேல் தன்மார்பினைப் பிளத்தலால் தன்தாமரை மலர் போன்ற கண்களிலிருந்து நீர் அருவிபோல் ஒழுக, வினையின் விளைவினை எண்ணி ஒருசொல்லும் சொல்லாமல் உணர்வும் உயிர்ப்பும் இல்லாமல் பித்தன் போல இருக்கிறான். அவன் நிலையைக் கண்ட இலக்குவன் விரைந்தெழுந்து அண்ணனுடைய திருவடிகளை வணங்கி வாழ்த்தி விட்டு அயோத்திநகரைவிட்டு அகன்று போகின்றான்.

இராமனைப் பிரியாது காட்டில் காத்துவந்த இலக்குவன், அவ்விராமனை விட்டுப் பிரியும்போது உடம்பை விட்டுப் பிரியும் உயிர் துன்புறுவது போலத் துன்புறுகின்றான் இராமன். கைகேசி சொல்லத் தான் காட்டுக்குப் பிரிந்து போகின்றபோது தயரதன் வருந்தியது போல வருந்துகின்றான். இலக்குவன் போவதைக் கண்ட மக்கள் மனம் வருந்திப்பலப்பல பேசுகின்றார்கள். 'இலக்குவன் காலம் கழிந்துவிட்டதோ? எம்முள்ளம் நடுங்குகின்றது. தம்பியை யின்றி இராமன் உயிர்தரித்திருப்பானோ?' என்கின்றனர். இவ்வாறு பலர் பலவாறு பேசாநிற்க இலக்குவன் சிறப்புமிக்க சரயுநதியை அடைகின்றான். இராமன் மரண தண்டனையைத்தனக்குக் கொடுக்காமையால் அவன் பிறவிக்குக் கொடுத்த வரம் தவறாதிருக்க அந்தச் சரயுநதியில் மூழ்குகின்றான். பின்பு அந்த நதிக்கரையில் யோகத்தில் அமர்ந்து உயிர்விட இனிதாக இருக்கின்றான். அப்போது இந்திரன் பொன் விமானத்தில் ஏறி, இலக்குவன் எதிரில்வருகின்றான். தன்னைப் போரில் வென்ற இந்திரசித்தினைக் கொன்ற பெருவீரனாகிய இலக்குவனைத் தன் விமானத்தில் ஏற்றிக்கொண்டு போகின்றான். இவ்வுலகிலுள்ளோர் அவனுக்காகப்புலம்பா நிற்க அவன் வைகுண்டம் போய்ப்புகுகின்றான்.

இங்கு இராமன், எந்த நாளிலும் தன்பால் தவறு செய்யாத இலக்குவனாகிய தம்பியை நினைந்து வருந்துகின்ற துயரத்திற்கு இருப்பிடமாகி உள்ளுக்குள்ளே மெலிகின்றான். நெடுங்காலம் வரையில் என்னை அருகிருந்து காப்பாற்றின நீ இப்போது என்னைக் கைவிட்டுச்சென்றாயோ? என்று புலம்புகின்றான். அவன்

செயற்கருஞ் செயல்களையெல்லாம் எடுத்துச் சொல்லி அரற்றுகின்றான். இராமன் அழுதரற்றுவதை அறிந்து உலகத்துயிர்களெல்லாம் அழுகின்றன.

இலக்குவனைப்பிரிந்த துன்பம் தாங்காமல் பரதனை அழைத்து 'யானும் இலக்குவன் போன வழியில் செல்கின்றேன். நீ அரசனாய் முடிசூட்டிக் கொள்' என்று சொல்கின்றான் இராமன். பரதன் தலைமேல் கரங்குவிந்து வேந்தனாகிய உனக்கே இவ்வுலகம் காத்தல் கடனாகும் என்று கூறிக்கொண்டு அவன் திருவடியில் இறந்தவனைப் போல் வீழ்கின்றான். பின்பு சொல்கின்றான்:- 'எம்தலைவனே! நின்னடித்தொண்டு செய்தற்குரிய என்னை அரசுமுடி சூடுக என்று உள்ளத்தில் மாசு இல்லாமல் சொல்லிய கொடிய சொல், நம் தந்தையாரிடத்தில் கைகேசி கொண்ட வரத்தைக் காட்டிலும் கொடியது. அண்ணலாகிய நீ ஆள்கின்ற இந்த நாட்டினை என்னை ஆளுமாறு கொடுப்பது, தெய்வத்தன்மை பொருந்திய ஆதிசேடன் என்னும் நாகம் சுமக்கின்ற இந்தப் பூமியை மண்ணுளிப்பாம்பு சுமப்பதாக எனக் கொடுத்தலினும் மாட்சிமையுடையதோ? செந்நெல் அரிசியை மத்தங்காய்ப் புல்லரிசி ஒக்குமானால்-அம்மிக்கல் மலையை ஒக்குமானால்-மின் மினிப்பூச்சி சூரியனை ஒக்குமானால் - யானும் உம்மை ஒத்து உலகை ஆள்வேன்! உலகிற்கு ஆதிகாரணமானவனே! நின் ஆண்மைத் தொழில் பொருந்தப் பெற்றவர்களே நீதியால் உலகை ஆளவல்லவர்; ஆதலான் வள்ளல் தன்மையுடைய நின் மக்கள், குசலவர்க்கு முடிசூட்டுவாயாக' என்று பரதன் கூறுகின்றான்.

பரதன் சொன்ன பணிமொழி கேட்ட இராமனும் மகிழ்ந்து குசலவர்கட்குக் காப்புநாண் அணிவிக்கின்றான். பின்பு குசாபதி என்னும் நகரில் குசனை மன்னனாக்குகின்றான். உத்தர கோசலம் என்கின்ற ஒளிவாய்ந்த நாட்டில் மணிகள் பதித்த மாளிகைகள் நிரம்பியுள்ள சிராபதி என்னும் ஒருநகரத்தைச் செய்கின்றான். அந்நகரத்தை ஆளுமாறு லவன் என்னும் புதல்வனுக்கு முடிசூட்டுகின்றான். முடி சூட்டுவிழாக்கள் முடிந்த பின்பு இலக்குவன் சென்ற வழியில் யானும் சென்றடைவேன்என்பதைச் சத்துருக்கனுக்குச் சொல்லுங்கள் எனத் தூதுவர்களை அனுப்புகின்றான்.

காற்றினும் விரைந்து சென்ற தூதுவர் மதுகை நகரில் உள்ள சத்துருக்கனுக்கு இராமன் எண்ணத்தைச் சொன்னவுடன் நெஞ்சம் கிழிந்தது; கண்கள் ஆறுய்ப் பெருகின. உடம்பெல்லாம் நடுங்கின. தோள்கள் மெலிந்தன. தன் மக்களைப்பார்த்து யான் இராமன் அடிதொழுது உய்யச் செல்கின்றேன்; என்று கூறி மதுபுரத்தின் மன்னனாக சுபாகுவையும் விதிகை என்னும் நகர்க்கு மன்னனாகச் சத்துருக் காதியையும் முடிசூட்டுகின்றான் பின்பு மதுகை நகரை விடுத்து விரைந்து அயோத்திநகர்க்கண் வந்தடைகின்றான் சத்துருக்கன். இராமனை வணங்கித் தன் மக்களிருவர்க்கும் மதுகைநகரையும் வைதிசம் என்னும் நகரையும் அளித்து அரசர்களாக்கிய செய்தியைச் சொல்கின்றான்.

சத்துருக்கன் சொன்னது கேட்ட இராமன் கண்ணீர் விட்டு இலக்குவன் சென்ற நெறியில்தான் செல்ல விரும்பியதைச் சொல்கின்றான். இராமன் நினைவினை நெஞ்ச ஒற்றுமையாலறிந்த வீடணனும் வந்து சேர்கின்றான். வாயுவின் புதல்வனாகிய அனுமனும் உள்ளத்தால் உணர்ந்து வந்து தோன்றுகின்றான். கரடிகட்கு அரசனாகிய சாம்புவனும் வந்து சேர்கின்றான் கடலில் சேதுபந்தனங்கட்டிய நளனும் துமிந்தனும் நீலனும் மயிந்தனும் வந்து சேர்கின்றனர். தேவர்களின் அமிசமான எல்லா வானரங்களும் வந்து சேர்கின்றனர். மற்ற மக்கள் திரளும் வந்து அடைகின்றது. தன்னை வணங்கிய எல்லோர்க்கும் இலக்குவன் சென்ற வழியில் போவதே முடிபு என்று விளங்கக் கூறுகின்றான் இராமன்.

வேல்தாங்கிய வீடணனைப் பார்த்துப் பொன் மிகுதியாகப் பொருந்திய இலங்கை மாநகர்க்குப் போய்ப் பூவுலகில் மக்கள் தொகுதி உள்ளளவும் நீ ஆட்சி செய்து கொண்டு வாழ்வாயாக என வாழ்த்தி அவனை அனுப்புகின்றான்.

வீடணனுக்கு நேர்ந்தது தனக்கும் நேருமோ என்ற அச்சத்தால் சுக்கிரீவன், முதலிலேயே தன் அரசினை அங்கதனுக்குக் கொடுத்துவந்ததை வணங்கித் தெரிவிக்கின்றான். சுக்கிரீவனை இராமன் தன்னோடு வருதலை மறுக்கவில்லை. பின்பு அனுமனை மகிழ்ந்து நோக்கி 'முன்பு சொன்னதை நீயறிவாய்; உலகில் மேலும் வாழவேண்டும் என்ற கருத்தும் உனக்கு உண்டு; நீ

இவ்வுலகில் இருப்பாயாக! இது என் ஆணை' எனக்கூறி அனுப்புகின்றான்.

இராமன் விலக்கவும் நிற்காமல் அயோத்தி நகர மாந்தரும் மாதரும் அந்தணரும் உடன் செல்லத் துணிந்து நின்றனர். எல்லோரும் இராமனோடு அயோத்தி நகரின் வாயிலை விடுத்துப் புறப்பட்டுச் செல்கின்றனர். இராமனிடத்தில் வைத்த பேரன்பால் உலகத் தொடர்பை அறுத்துக் கொண்டு அவன் பின்பு சென்ற மக்கள், நகரத்தில் இல்லாமையால் அயோத்தி மாநகர் அகத்திய முனிவர் உண்டு விட்டமையால் நீரற்றுப் போன – வரிகளையுடைய மணலே நிறைந்த-கடலைப் போன்று காணப்படுகின்றது.

இராமனைப் பின்பற்றிச் சென்றவர்கள் எல்லாம் சரயுநதி நீரில் கால் பதியச் செல்லும் போது பிரமன் பற்பல வானவூர்திகளோடு சரயுவுக்கு அணிமைத்தான. வானத்து உச்சியில் தோன்றுகின்றான். இராமனை நோக்கி மெய்யனே! விண்ணவர்க்கு ஐயனே! நினது பழைய தெய்வவுடம்போடு வைகுந்தத்திற்கு எழுந்தருள வேண்டும் என்று பணிந்து வேண்டிக் கொள்கின்றான். பிரமன் வேண்டு கோளின்படி சரயுநதியில் இறங்கியதும் தம்பிமாரோடு மூன்றுருவமாக இருந்தநிலைமாறி ஒருருவமாக ஆயது. வானர வீரர்கள் எல்லாம் தேவர்கள் உருவமாக மாறிச் செல்கின்றனர். தன்னைப்பிரியாமல் உடன் வந்த அயோத்தி நகர மக்களுக்கு விண்ணில் ஒருநகரம் அமைத்துக் கொடுக்குமாறு பிரமனுக்குக் கட்டளையிடுகின்றார் திருமால். அவர் கட்டளையின்படி பிரமன் அயோத்தி நகரமக்கள் தங்குதற்கு ஏற்ற விளக்கமிக்க சந்தானம் என்னும் பெரிய பதியை அமைத்துக் கொடுக்கின்றான். திருமாலின்அருள் நோக்கால் அயோத்தி நகர மக்கள் எல்லாம் அமரர்களாகிச் சந்தானம் என்னும் நகரை அடைந்து இனிதாக வாழ்கின்றனர். மனிதவடிவிலிருந்த திருமால் பழைய தெய்வ வடிவோடு கருடன் தோள்மேல் ஏறிக் கொண்டு இந்திரன் துதிக்கவும் உருத்திரன் புகழவும் வானவர்கள் வாழ்த்தவும் வைகுந்தம் சேர்கின்றான் என்பது சந்திரகாந்தப் படலத்தில் கூறப்படும் வரலாறாகும்.

வாழ்க இராமகாதை!

## ஒட்டக்கூத்தர் வான்மீகத்தோடு வேறுபடும் இடங்கள்

1. **வான்மீகத்தில்:-** இராமன் இலக்குவனைப் பார்த்து நின் புதல்வர்களாகிய அங்கதனும் சந்திரகேதுவும் அறத்தினை நன்கறிந்தவர்கள்; அரசாளுதலில் நாம் நம்பத்தக்க ஆற்றல் பெற்றவர்கள். அவ்விருவர்க்கும் ஏற்ற இனிய தேயங்களை ஆராய்ந்து சொல்லுங்கள் எனத்தம்பியரைக் கேட்ட போது பரதன் எழுந்து, காருகபதம் (காரகாபதி) என்னும் நகரும் சந்திர காந்தம் என்னும் நகரும் அவ்விருவர்க்கும் ஏற்றனவாகலாம் எனச் சொல்கின்றான். அப்போது பரதன் சொல்லியதே பொருத்தமென இராமன் ஏற்றுக் கொண்டு அவ்விருதேயங்களை யும் தனக்குரிமையாக்கிக் கொண்டு பின்பு இலக்குவன் மக்களி ருவர்க்கும் கொடுத்ததாக உள்ளது.

**ஒட்டக்கூத்தர்:-** இத்தகைய விளக்கங்களைச் சொல்ல வில்லை. அங்கதனையும் சந்திரகேதுவையும் இராமன் புகழ்ந்து கூறியதையும் சொல்லவில்லை. காரகாபதியின் செல்வச் சிறப் பையும் எழிலையும் பற்றி விவரித்துள்ளார்.

2. **வான்மீகத்தில்:-** இராமன் ஆணையின்படி அங்கதீயம் என்னும் ஒருநகரம் நிருமிக்கப்பட்டு இலக்குவன் மகன் அங்க தனுக்கு உரியதாக்கப்பட்டது என்றும் மல்லபூமி எனும் தேசத்தில் தேவநகரம் போன்ற சந்திர காந்தம் என்னும் அழகு மிக்க நகரம் நியமிக்கப்பட்டு சந்திரகேதுவுக்கு உரிமையாக்கப் பட்டது என்றும் அயோத்தியிலேயே இராமன், பரதன், இலக்குவன் ஆகிய மூவரும் இருந்து அங்கதனுக்கும் சந்திரகேதுவுக்கும் மேற் கூறிய நகரங்களின் அரசர்களாக முடி சூட்டினர்கள் என்றும் சொல்லப்பட்டுளது.

**ஒட்டக்கூத்தர்:-** இந்நிகழ்ச்சியைச் சிறிது மாற்றிச் சொல்கின்றார். சந்திரகாந்தம் என்னும் பெயரால் ஒருவளநாட்டை அமைத்து இலக்குவன் மைந்தனுக்கு முடி சூட்டுக என இராமன் கூறியதாகச் சொல்கின்றார். பரதன் முரசறைவித்து அயோத்தியில் அவ்விருவர்க்கும் முடிசூட்டியதாகக் கூறியுள்ளார்.

3. **வான்மீகத்தில்:-** காருகபதம் (காரசாபதி) என்கிற தேயத்திற்கு அங்கதனை அரசனுக்கிவர இலக்குவனே உடன் சென்றான் என்றும ஓராண்டு உடனிருந்து விட்டு மீண்டு அயோத்தி வந்தடைந்தான் என்றும் உள்ளது. இலக்குவன் இளைய மகனாகிய சந்திரகேதுவுக்குத் துணையாகப் பரதன் சென்று சந்திர காந்தத்திற்கு அவனை அரசனாக்கி ஓராண்டு உடனிருந்து பின்பு அயோத்திக்கு வந்து இராமனை வணங்கியுடனிருந்ததாக உள்ளது.

**ஒட்டக்கூத்தர்:-** இந்தக் கால வரையறையைக் கூறவில்லை. மேலும் காராபதத்தை இலக்குவனும் சந்திர காந்தத்தைப் பரதனும் புதுக்கியதாகக் கூறியுள்ளார்.

இராமன் ஆணையால் செய்ததென்று வான்மீகி கூறியதன் கருத்தையுணர்ந்து ஒட்டக்கூத்தர் இவ்வாறு பரதனும் இலக்கு வனும் நகர்களைப் புதுக்கிச் செய்ததாகக் கூறினரோ என எண்ண வேண்டியுளது.

4. **வான்மீகத்தில்:—** பிரமன் ஏவலின்படி முனிவர் வேடத்தில் வந்த மறலி இலக்குவனிடம், பிரமன் ஏவலால் தான் இராமனைப் பார்த்துச் சொல்ல வந்திருப்பதாகக் கூறினான் என உள்ளது. ஆனால் ஒட்டக்கூத்தர் வாயிற்காவலராகிய மிலேச் சரிடம் எமன் இதைக் கூறியதாகக் கூறியுள்ளார். அரண்மனை வாயிற்காவலன் செய்ய வேண்டிய செயலை இலக்குவன் செய்த தாகக் கூறுதல் பொருத்தமாக இல்லை என ஒட்டக் கூத்தர் மாற்றிக் கூறினர் போலும்.

5. **வான்மீகத்தில்:—** எமனிடத்தில் பிரமன் சொல்லிய தாக எமன் கூறியுள்ளதில், "பதினோராயிரம் ஆண்டு இராமன் இப்புவியில் வசிப்பதற்கெனக் காலஎல்லை வரையறை செய்யப் பட்டிருந்தது. அந்தக்கால எல்லை முடிவுற்றது. மேலும் இந்தப் பூமியில் மக்களை நேரில் அரசாளத் திருவுள்ளமிருப்பின் தங்கி யிருக்கலாம். அல்லது உம்முடைய தேவலோகத்திற்குத் தலைமை யரக இருக்கத்திருவுள்ளங் கொண்டால் தேவர்கள் மகாவிட்டுணு வால் பாதுகாக்கப் படுபவர்களாய் மனக்கவலை யற்றிருப்பார்கள்" என்று கூறியுள்ளதாக உள்ளது. இத்தகைய காலவரையறையும்

இராமனுக்கு முதன்மை கொடுக்கும் பிரமன் பணி மொழியும் ஒட்டக்கூத்தர் கூறவில்லை.

6. **வான்மீகத்தில்:—** துருவாச முனிவரின் கோபத்தைக் கண்டு அஞ்சி விரைந்து வந்து இராமனைப் பணிந்து துருவாச முனிவர் வந்திருப்பதை இலக்குவன் சொன்னவுடனே காலருத்தர மூர்த்தியை அனுப்பிவிட்டு சடக்கென ஓடிவந்து துருவாச முனிவனைக்கண்டு வணங்கிக் கட்டளை யாது? என வினவியபோது துருவாச முனிவர், ''ஆயிரம் ஆண்டுகளாக யான் செய்து வந்த தவம் இப்பொழுதுதான் முடிந்தது. உண்ணாது ஆயிரம் ஆண்டுகளாகத்தவஞ் செய்த யான் தேவரீருக்குப்பாகஞ் செய்யப் பட்டிருக்கும் உண்டியினை உண்ண விரும்புகின்றேன்'' என்கின்றார். இராமன் முனிவரின் அந்தக் கட்டளையை யேற்றுக் கொண்டு உள்ளம் குளிர்ந்து அவர் விரும்பியவாறே தனக்கெனச் சமைத்த உணவினை அளித்தான். அமிர்தம் போலிருந்த அந்த அன்னத்தை அருந்தி விட்டு 'இராமா! இப்பொழுது திருப்தி கொண்டேன்' என்று கூறிப்புகழ்ந்து விட்டுத் தம் தவக்குடிலுக்கு எழுந்தருளினார் என்றுள்ளது.

**ஒட்டக்கூத்தர்:—** இராமனும் எமனும் பேசிக்கொண்டிருந்த இடத்திற்குச் சென்று இலக்குவன் துருவாச முனிவரின் வருகையைக் கூறியபோது 'எருமை வாகனத்தையூர்தியாகக் கொண்ட எமனை அனுப்பிவிட்டு வருகின்றேன்' என அவனுக்குச் சொல்லிவிட்டு ஒரு சொல்லால் மறலிக்கு முடிவுசொல்லி அனுப்பியதாகக் கூறியுள்ளார். இராமனுக்கும் எமனுக்கும் நிகழ்ந்த உரையாடல் முடிந்த நிலையில் இலக்குவன் போனதாக வான்மீகம் கூறவும் இவர், இலக்குவன் வந்த பின்னரே இராமன் 'பிரமன் கட்டளைப்படி வருகின்றேன்' என்ற கருத்தினைக் கூறி எமனை அனுப்பிவிட்டு இலக்குவனோடு துருவாசமுனிவரை வணங்கி அம்முனிவர் வந்த காரியம் யாதுஎன வினவியதாகக் கூறியுள்ளார்.

மேலும், ஒட்டக்கூத்தர் இங்குப் புதுவதாக ஒரு விரிந்த கருத்தை நுழைத்துள்ளார்.

துருவாச முனிவர் கூறியதாகச் சொல்லும் புதிய கருத்து:- "நீ அரசாளத் தொடங்கிய நாள்தொட்டு ஆயிரம் ஆண்டுகட்கு ஒருமுறை வந்து நின் மனையில் விருந்துண்ணும் பழக்கமுடையேன். இன்று அந்தநாள்" என்று முனிவர் கூறியதாகவும் உடனே இராமன் அரசர்கட்குச் சமைக்கும் அந்தணர்களை அழைத்து நூற்றுப்பத்தாயிரம் (லட்சத்துப் பதினாயிரம்) பானைகளில் புழுகு சம்பா அரிசியை உலையில் இட்டுச் சமைத்து அதற்கேற்ற கறிவகைகளைச் சமைத்துப் போடுமாறு கட்டளையிட அவ்வாறே செய்தபின் முனிவரை அழைத்து உண்ணுமாறு செய்ய, முனிவர் விலாப்புடைக்க உண்டு மகிழ்ந்து சமையல் செய்தவர்களைப் பாராட்டிவிட்டு இராமனிடம் விடைபெற்றுச் சென்றதாகவும் கூறுகின்றார்.

வான்மீகத்தில் சொல்லப்படாத இந்தக்கருத்துகளை ஒட்டக்கூத்தர் தாமே கற்பனை செய்து கூறியுள்ளார். உண்ணாது ஆயிரம் ஆண்டுகள் தவஞ்செய்த முனிவர், இராமனுக்குச் சமைத்திருந்த உணவை விரும்பிக் கேட்பதும் அவ்வாறே இராமன் தனக்குரிய உணவை முனிவர்க்குப் போடுமாறு சொல்லுவதும் அந்த அமிழ்தனைய உணவை உண்டு முனிவர் மனநிறைவு கொண்டு மகிழ்ந்து போதலும் இயல்பாகத் தோன்றுகின்றது.

இராமன் ஆட்சி தொடங்கிய காலம்தொட்டு ஆயிரம் ஆண்டுக்கு ஒருமுறை இராமன் மனையில் உண்ணும் வழக்கம் இருப்பதாக முனிவர் கூறுவதும் அம்முனிவர் ஒருவர்க்காக இலட்சத்துப் பதினாயிரம் பானைச்சோற்றைச் சமைத்துப் போட்டார்கள் என்று கூறுவதும் அவ்வளவு சோற்றையும் அவ்வொரு முனிவர் உண்டு சென்றார் என்பதும் இயல்புக்கு ஒத்ததாக இல்லை. இராமன் ஆட்சி செய்த காலம் பதினோராயிரம் ஆண்டு என்கின்றது வான்மீகம். ஆயிரம் ஆண்டிற்குப் பத்தாயிரம் பானைகள் என்ற கணக்கில் பதினோர் ஆயிரம் ஆண்டிற்கு நூற்றுப் பத்தாயிரம் பானைகளில் சோறு சமைத்ததாக ஒட்டக்கூத்தர் கூறியுள்ளார் போலும். துருவாச முனிவர் ஒருவர்க்காக இவ்வளவு சோறு சமைத்துப் படைத்தார்கள் என்பது ஒட்டக்கூத்தரின் மிகப்பெரிய உயர்வு நவிற்சியே யாகும்.

பரியோடு வந்த முனிவர்க்கு உடனே பசிதீர்க்கும் முறையில் உணவு அளிப்பதே பொருத்தமாகும். அம்முறையில் வான்மீகி கூறியிருப்பதே பொருத்தமாகவும் இயல்பாகவும் காணப்படுகின்றது.

## படலப் பொருட் சிறப்பு

சந்திர கேது நகர்ப்படலத்தில் இலக்குவன் தன்புதல்வன் அங்கதனோடு காரகாபதி என்கின்ற நகரத்திற்குச் செல்லும் பொழுது உடன் சென்ற நால்வகைப்படைகளையும் பற்றி மிகச் சிறப்பாகக்கூறுகின்றார் ஒட்டக்கூத்தர். அவற்றுள் யானைப் படையின் இயல்பைக் கூறும் பொழுது எண்ணலங்காரம் என்னும் அணி அமையக் கூறுகின்ற பகுதி நினைக்கத்தகும் சிறப்புடையது.

ஐங்கொலைய, ஆறணைய அதிமதத்த, அனல் உமிழும்
பைங்கண்ண, ஏழ்உறுப்பும் படி தோயும் பான்மையன;
வெங்கத எண்திசைக்கரியோடு இகல்விளைப்பது ஒன்பது எனத்
தங்குமணி ஓடையன தடக்கை மதத்தனிக்கரிகள். (5)

என்ற செய்யுளைக் காண்க. ஐங்கொலைய, ஆறு, ஏழ்உறுப்பு எண்திசைக் கரிகள், ஒன்பது எனத்தங்குமணி என ஐந்து முதல் ஒன்பது வரையுள்ள எண்கள் முறையாக அமையப் பாடியுள்ள அருமை என்றென்றும் நினைக்கத்தக்க பெருமையுடையதாகும். ஆறு என்பது சிலேடைவகையால் நதியையும் ஆறு என்ற எண்ணையும் குறித்ததாகக் கொள்ளவேண்டும்.

## திருக்குறள் கருத்தை எடுத்தாளுதல்

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர் நிற்கும்
ஆற்றலதுவே படை. (765)

என்ற திருக்குறள் படையின் மாட்சிமையைச் சிறப்பித்துக் கூறுகின்றது. யாவர்க்கும் இறுதியைச் செய்கின்ற கூற்றுவனே கோபித்துப் போர்க்கு வந்தாலும் தம் வலிமையோடு கூடி நின்று அக்கூற்றுவனை எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையதே சேனை என்னும் பெருமைக்குரியதாகும் என்பது பொருள்.

இந்தக் குறள் கருத்தை ஒட்டக்கூத்தர்

உருத்து நெடுங் கதிர்வேல் கொண்டுரங்கிழிப்ப தல்லாது
மருத்து வரினுங் கூடி வெந்காட்டி மீளாதார்
எதிர்த்து வருங் கழல் வீரரிரிய நிலைக் கிரியெறியும்
மருத்து வினை நிகராகும் வயவீரர் கணக்கிலராால். (9)

என்ற செய்யுளில் அழகுற அமைத்துக் காட்டுகின்றார். மருத்து என்றது கூற்றுவனை. கூற்றுவன் மாறுபட்டுப் போர்க்கு வந்தாலும் அவனோடு கூடிக் கோபித்து நெடிய ஒளிவீசும் வேலைக்கொண்டு அவனுடைய மார்பைக் கிழிப்பதல்லது புறங்காட்டி ஓடிடாதவரும் தம்மை எதிர்த்து வருகின்ற வீரக் கழலணிந்த வீரர்கள் புறங் காட்டி ஓடுமாறு செய்கின்ற வலிய வீரர்கள் கணக்கிலார் என இலக்குவனோடு சென்ற காலாள் வீரரைப்பற்றிக் குறிப்பிடுகின்றார்.

திருவள்ளுவர் சொல்லிய இலக்கணத்திற்கும் மேலாக ஒட்டக்கூத்தர் வீரர்க்கு ஓர் இலக்கணம் கூறியுள்ளார். கூற்றுவன் வரினும் எதிர் நிற்கும் ஆற்றலுடையவர்களே படைவீரர்கள் என்பதுவே திருவள்ளுவர் கூறுவது. ஆனால் ஒட்டக்கூத்தர், வெந்காட்டி மீளாமையும் எதிர்த்து வரும் வீரரிரியத் தாக்குவதில் மேருமலையைத்தாக்கும் வாயுதேவனைப் போன்றவர்கள் வயவீரர் என்கின்றார்.

இதனால் ஒட்டக்கூத்தர் சொல்கின்ற வீரர்கள், கூற்றுவரினும் மனம்பொருந்தி எதிர்நிற்பதோடு அன்றி அந்தக் கூற்றுவனின் மார்பை வேலால் கிழிக்கத்தக்க ஆற்றல் படைத்தவர்கள்; மேருமலையைத்தாக்கி மூன்று சிகரங்களை வீழ்த்திய வாயு தேவனைப் போல எதிர்த்து வந்த வீரர்களைத் தாக்கி ஓடச் செய்யும் திறம் பெற்றவர்கள் என விளக்கியுள்ளார்.

திருவள்ளுவர் கருத்தை எடுத்தாண்டதோடு வேறு புதுக் கருத்தையும் சேர்த்துச் சொல்லும் திறம் ஒட்டக்கூத்தர்க்கு இருந்ததை இங்கு அறியலாம். உயர்வு நவிற்சியாக அமைந்தாலும் வள்ளுவர் கருதியதற்கும் மேலாகக் கற்பனைசெய்துள்ளார் என்பதை இங்குக்காணலாம்.

இனி, இராமனை அழைக்க எமன் வந்துளான் என்பதைக் கூற வந்த ஒட்டக்கூத்தர் உலகவர்க்குச் சொல்லும் அறிவுரை சாலச் சிறந்ததாக உள்ளது. யாவர்க்கும் மேலவனாகிய திருமாலின் அவதாரமாக வந்தவன் இராமன்; அவனுக்கும் எமன் வருகின்றான் என்றால் மற்றவர்கள் நிலை யாதாகும். எமன் வருவது உறுதியன்றோ? எனவே, எமன் நம் வாழ் நாள்மேல் வராதபடி செய்யத்தக்க சிறந்த தவத்தைச் செய்யுங்கள் என்பது அவர் அறிவுரை.

'பாருடை மன்னனைப் படர்ந்து பையென
ஏருடை மறலிவந் தெய்திற் றுதலால்
நீருடை யுலகினில் நிகழ்ந்து ளோர்க்கெலாம்
சேருமென் றறிந்துமா தவங்கள் செய்மினே'. (34)

என்பது அச்செய்யுள். "கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலி ளுற்றல் தலைப்பட்டவர்க்கு" (269) என்ற குறளால் தவத்தால் எமனைக் கடக்கலாம் என்பது புலப்படுதலின் எமனிடம் தப்பித்துக் கொள்ளத்தவஞ் செய்யுமாறு மக்களுக்குக் கூறியுள்ளார்.

எமன் தவமுனிவர் வடிவத்தில் வந்து இராமன் உயிரைக் கவர எண்ணுகின்றான். அவன் வேடத்திற்கும் செயலுக்கும் முரண்பாடு காணப்படுகின்றது. கொல்லாமைக் குரிய தவ முனிவர் வேடத்தில் வந்து கொல்லுந்தொழிலைச் செய்ய இருக்கும் கூற்றுவனைப் பற்றிக் கூறும்போது

வள்ளலைப் பின்னரும் மறலி மாதவர்
கொள்ளுருக் கொண்டுயிர் கோடன் மேவலால்
ஒள்ளிய வுலகினில் உருவுகண்டபின்
எள்ளலிர் பிறரை நீ யாவரேனுமால்.

என்று நமக்கு அறிவுரை கூறுகின்றார். உருவம் கொல்லாமைக்கு உரியதாகச் செயல் கொல்லுதலாக எமன்பால் அமைதலின், 'உருவு கண்டபின் எள்ளலிர் பிறரை நீர்' என்கின்றார். இங்கு 'உருவுகண்டெள்ளாமை வேண்டும்' என்ற (667) திருக்குறள் பகுதியை நினைப்பிக்கும் அழகிய முறையைக் காணலாம்.

இராமனிடம் எமன் கேட்டுக் கொண்ட வரத்தின்படி நடுவே புகுந்த இலக்குவன் மரணதண்டனையைப் பெறவேண்டும். அந்த மரணத்தைப் பற்றி அஞ்சாத இலக்குவன் நினைக்கின்றான்.

'புன்னுனிப்பனி நீரும் பொழிமழை
மின்னும் அம்மழை மேவிய மொக்குளும்
அன்ன இன்ன நிலையில் யாக்கைகள்
என்ன எண்ணி இளவலும் ஏகினன்.' (53)

என்கின்றார் ஒட்டக்கூத்தர். மக்களுடம்பு நிலையாதது என்பதற்கு, புல்நுனிப் பனிநீரும் மேகத்தில் தோன்றும் மின்னும் மழைநீரில் தோன்றும் மொக்குளும என்ற மூன்று உவமைகளைக் கூறியுள்ளான் இலக்குவன். இந்த மூன்றும் போல மக்கள் யாக்கை சிறிதுநேரமே நிற்க வல்லது. இவ்வாறு நிலையில்லாத உடம்பிற்காக வருந்துவதுஎதற்கு? என்ற கருத்தில்தான் இலக்குவன் கூறியுள்ளான். மரணம் நெருங்கும்போது யாரும் நினைவில் கொள்ளத்தக்க கருத்து நிறைந்ததாக இச்செய்யுள் அமைந்துளது காணலாம். மண்ணிலும் விண்ணிலும் நீரிலுமாக மூன்று உவமைகளை யாக்கை நிலையாமைக்கு எடுத்துக் காட்டியிருப்பது உளங்கொளத்தக்க உயர்வுடையதாக விளங்குகின்றது.

இராமனும் இலக்குவனும் பிரியாத அன்பு நிறைந்தவராகப் பல்லாண்டு பழகியவர் ஆதலின் இலக்குவன் இறப்பை நினைந்து இராமன் கண்ணீர்வாரப் பெரிதும் புலம்பிச் சோர்கின்றான். மனிதஉடம்பை நீத்துத் தெய்வ வடிவு எய்தும் போது மகிழ வேண்டிய இராமன் தான் கொண்ட வேடத்திற்கேற்பத்தம்பி இலக்குவனுடைய பிரிவாற்றாது புலம்புவதாக ஒட்டக்கூத்தர் அமைத்துள்ளார். வான்மீகியும் இங்ஙனமே கூறியுள்ளார்.

அறியாமையில் மயங்கிநிற்கும் பொது மக்கள் போலவே பேரறிவுள்ள இராமனும் இலக்குவனுக்காகப் பெரிதும் வருந்தி உலகியலை எடுத்துக்காட்டியுள்ளான் என்றே கொள்ளவேண்டும்.

## இராமன் இலக்குவன் மைந்தர்க்கும் வளநாட்டு வகுத் துரைக்க எனப் பரதனிடம் சொல்லுதல்

1345 அந்தவுரை கேட்டுமகிழ்ந் தடற்பரதன் முக நோக்கித்
தந்திரமுங் கரிபரியுந் தரைப்படவென் றொருகணை யால்
இந்திரனை யமர்தொலைத்த இராவணிதன் சிரம் அறுத்தான்
மைந்தருக்கும் வளநாடு வகுத்துரைத்தி யென வுரைத்தான்.

அந்தஉரை கேட்டு மகிழ்ந்து அடல்பரதன் முகம் நோக்கித்
தந்திரமும் கரிபரியும் தரைப்பட வென்று ஒருகணையால்
இந்திரனை அமர்தொலைத்த இராவணிதன் சிரம் அறுத்தான்
மைந்தருக்கும் வளநாடு வகுத்துஉரைத்தி என உரைத்தான்.

பொ: (பரதன் சொன்ன) அந்தச் சொல்லைக் கேட்டு மகிழ்ந்து, வலிமை மிக்க பரதனது முகத்தை நோக்கி, காலாட்படையும் யானைப்படையும் குதிரைப்படையும் தரையின்கண் அழிந்து படுமாறு வென்று ஓர் அம்பினால், இந்திரனைப் போரில் வென்ற இந்திரசித்தின் தலையை அறுத்த இலக்குவனுடைய மைந்தருக்கும் ஆளுதற்கு உரிய வளநாட்டை வகுத்துச் சொல்லுக எனச் சொன்னான்.

கு: பரதன் தன்மைந்தர்க்கு ஆட்சிக்குரிய வளநாட்டைப் பகிர்ந்து கொடுத்து வந்த செய்தியைக் கேள்விப்பட்ட இராமன், அந்தப் பரதனோடு ஒருவயிற்றிற் பிறந்த இலக்குவன் மைந்தருக் கும் உரிய வளநாட்டினை வகுத்துச் சொல்லுக எனக் கட்டளை யிடுவானானான். ஒருகணையால் இராவணிதன் சிரம் அறுத்தான் என இயையும். இந்திரனை அமர் தொலைத்த இராவணி என்றது இந்திரசித்து என்ற பெயர்க்காரணத்தைப் புலப்படுத்தியவாறு

காணலாம். இராவணன் மகன் இராவணி. இதனைத் தத்தி தாந்தம் என்பர். தந்திரம்-சேனை. இங்குக் காலாட்படையைக் குறித்தது. இலக்குவன் மைந்தர் அங்கதன் சந்திரகேது என்பார் ஆவர். (1)

## இராமன் பரதனை நோக்கி அங்கதனுக்கும் சந்திர கேதுவுக்கும் முடிசூடுக எனல்

1346 கந்தமிகு நறுந்தெரியற் கனைகழலங் கதனுமிகற்
சந்திரகே துவுமென்னும் சமரமிகு தனியாண்மை
இந்திரனை யமர்தொலைத்தோ னிகல்தொலைத்த
விலக்குவன்றன்
மைந்தரவ ரிருவருக்கும் மணிமகுடம் புனை
யென்றான்

கந்தம்மிகு நறும்தெரியல் கனைகழல் அங்கதனும் இகல்
சந்திரகேதுவும் என்னும் சமரமிகு தனி ஆண்மை
இந்திரனை அமர்தொலைத்தோன் இகல்தொலைத்த இலக்குவன்தன்
மைந்தர் அவர் இருவருக்கும் மணிமகுடம் புனை என்றான்.

பொ: மணமிக்க நல்ல மாலையினையும், ஒலிக்கின்ற வீரக் கழலினையும் உடைய அங்கதனும் வலிமையுடைய சந்திரகேதுவும் என்கின்ற, போரில் மிக்குத்தோன்றுகின்ற ஒப்பற்ற ஆண்மையினை யுடைய இந்திரனைப் போரில் தோல்வியுறச் செய்தோனாகிய இந்திரசித்தின் வலிமையை அழித்த இலக்குவன் தன் மைந்தராகிய அவர் இருவருக்கும், 'மணிகள் பதித்த முடியினைச் சூட்டுக' என்று கட்டளையிட்டான் இராமன்.

கு: இலக்குவனுக்கு மூத்தவன் பரதன் ஆதலின் இலக்குவன் மக்களுக்கு அப்பரதனே முடிசூட்டுதற்குரிய தகுதியுடையவன் என்ற கருத்தால் இராமன் அவனுக்குக் கட்டளையிட்டான். அங்கதனும் சந்திரகேதுவும் என்னும் இலக்குவன்தன் மைந்தரவர் இருவருக்கும் என இயையும். சமரமிகு தனி ஆண்மை, இந்திரனை யமர் தொலைத்தோன், இகல் தொலைத்த என்பன இலக்குவனுக்கு அடையாக வந்தவை. இந்திரன் சமரமிகும் தனியாண்மை

புடையவன். அவ்விந்திரனை அமர் தொலைத்தோன் இந்திரசித்து; அவன் இகல் தொலைத்த இலக்குவன் என்க. இதனால் இலக்குவனின் வீரம் புலப்படுத்தியவாறு. இராமன் என்பது தோன்றா எழுவாய். (3)

## அங்கதனோடு இலக்குவனையும் உடன் அனுப்புதல்

1347 மறங்காலுங் கரிபரிதேர் வயவீர ரெனுநான்கு
கறங்காழிப் படையேவிக் கழல்புனையங் கதனைக்
கொண்
டிறங்காத சிலையேந்தி யீரேழாண் டிடைபிரியா
துறங்காத வில்லியையு முடன்போகென் றுரை
செய்தான்.

மறம்காலும் கரிபரிதேர் வயவீரர் எனும்நான்கு
கறங்கு ஆழிப் படைஏவிக் கழல்புனை அங்கதனைக் கொண்டு
இறங்காத சிலை ஏந்தி ஈர்ஏழாண்டு இடைபிரியாது
உறங்காத வில்லியையும் உடன்போகென்று உரைசெய்தான்.

பொ: வீரத்தை வெளிப்படுத்துகின்ற யானை குதிரை தேர் வலிமையுள்ள காலாள்வீரர் என்று சொல்லப்படுகின்ற நான்கு வகையான ஒலிக்கின்ற கடல்போன்ற சேனையை உடன்போகுமாறு ஏவிவிட்டு நாணேற்றி இறங்காத வில்லை ஏந்திக்கொண்டு பதினான்கு ஆண்டுகள் நடுவே பிரியாமல் உறங்காதிருந்த வில்லியாகியஇலக்குவனையும் வீரக்கழல் புனைந்த அங்கதனைக் கொண்டு உடன் ஏகுக என்று சொன்னான்.

கு: மறம்-வீரம். தேரில் உள்ளார்க்கன்றித் தேர்க்கு மறம் இன்மையின் யானைமறம் குதிரைமறம் என்ற இரண்டையே கூறினர் தொல்காப்பியர். மறங்காலும்கரி மறங்காலும்பரி என இயையும். கறங்குதல்-ஒலித்தல். ஆழிப்படை என்றது, கடல் போன்ற பரப்பினையுடைய படையை. கழல்புனை அங்கதன் எனவே அவன் வீரம் உடைமை புலப்படுத்தியவாறு. சிலையேந்தி பிரியாது உறங்காத வில்லி என இயையும். இறங்காத சிலை என்றது நாணேற்றியே இருக்கும் வில்லினை. எப்போதும் ஏற்றிய

நாளோடு திகழ்கின்ற வில்லை ஏந்தியிருந்தது தமயனுக்கு எந்த நேரத்தினும் இடையூறுவாராமல் காப்பாற்றும் குறிப்பினலாகும். ஆழிப்படையேவி, வில்லியையும் அங்கதனைக்கொண்டு உடன்போ கென்றுரை செய்தான் என இயையும். (4)

## யானைச்சேனையின் இயல்பு

1348 ஐங்கொலைய வாறனைய வதிமதத்த வனலுமிழும்
பைங்கண்ண வேழுறுப்பும் படிதோயும் பான்
மையன
வெங்கதவெண் திசைக்கரியோ டிகல்விளைப்ப
வொன்பதெனத்
தங்குமணி யோடையன தடக்கைமதத் தனிக்
கரிகள்.

ஐங்கொலைய ஆறு அனைய அதிமதத்த, அனல்உமிழும்
பைங்கண்ண, ஏழ்உறுப்பும் படிதோயும் பான்மைஎன
வெம்கத எண்திசைக்கரியோடும் இகல்விளைப்ப ஒன்பதுஎனத்
தங்குமணி ஓடையன, தடக்கைமதத் தனிக்கரிகள்.

பொ: இலக்குவனோடு சென்ற சேனையில் உள்ள பெரிய துதிக்கையினையும் மதத்தினையும் உடைய ஒப்பற்ற யானைகள், நான்கு கால்கள் துதிக்கை ஆகிய ஐந்துறுப்புகளால் ஐவகையாகக் கொலைசெய்யும் தன்மையுடையவை. ஆறுபோன்ற மிக்க மதத்தையுடையவை. நெருப்பை உமிழ்கின்ற பசுமையான கண்ணையுடையவை. நான்கு காலும் துதிக்கையும், வாலும் பீசமும் ஆகிய ஏழு உறுப்புக்களும் பூமியில் தோயும் தன்மையுடையவை. கொடிய கோபத்தையுடைய எட்டுத்திசையிலும் காவல் செய்கின்ற யானைகளோடு போர் செய்தற்குரிய இயல்புடையவை. நவமணிகள் பதித்த முகப்பட்டத்தையுடையவையாக விளங்கின.

கு: யானைப்படையின் சிறப்புக் கூறியவாறு. ஐங்கொலைய- ஐந்துறுப்புக்களால் கொலைசெய்யும் தன்மையுடையன. ஐந்து ஆறு ஏழு எட்டு ஒன்பது என்ற எண்கள் அமைந்திருத்தலின்

இச்செய்யுள் எண்ணலங்காரம் என்னலாம். ஆறு என்பது சொல்லளவில் எண்ணைக் குறித்ததாகக் கொள்க. படி-பூமி. ஏழுறுப்பும் நிலத்தில் தோய வளர்ச்சி பெற்ற யானைகளே உத்தம இலக்கணமுடைய யானைகள் என்ப.

கரிகள்-கொலைய, மதத்த, கண்ண, பான்மையன, இகல் விளைப்ப, ஓடையன என இயையும். அகரம் பலவின்பால் குறிப்பு வினைமுற்று விகுதிகள். ஒன்பதெனத் தங்கு மணி என்றது' ஒன்பது என்ற எண்ணிக்கை கொண்டு உலகில் தங்கியுள்ள நவ மணிகளை. (5)

1349 நிழல்செறுவ தழைசெவிய நிலந்தோயு நீள்
கரத்த
சுழல்விழிய சூர்ப்பேயுந் தொகைப்பருந்தும்
பின்செல்லும்
அழல்விழிய வதிமதத்த வயின்மருப்ப வடல்வீரக்
கழல் சுளிவ, புகர் முகத்த கடகரிகள் பலகோடி.

நிழல்செறுவ தழைசெவிய, நிலம்தோயும் நீள்கரத்த
சுழல்விழிய சூர்ப்பேயும் தொகைப்பருந்தும் பின்செல்லும்
அழல்விழிய, அதிமதத்த அயில்மருப்ப அடல்வீரக்
கழல்சுளிவ, புகர்முகத்த கடகரிகள் பலகோடி.

பொ: தம்நிழலையே கண்டு பகைப்பன, தழைத்த (முறம் போன்ற) செவிகளையுடையன, நிலத்தில் தோயும்படி நீண்ட துதிக்கையுடையன, சுழல்கின்ற விழியையுடையன, அச்சுறுத்தும் பேயும் கூட்டமான பருந்தும் பின்செல்லும்படி நெருப்புப் பொறி பறக்கும் விழியையுடையன. அதிகமான மதத்தையுடையன, கூரிய கொம்புகளையுடையன, வலிமை வாய்ந்த வீரர்களின் வீரக்கழலைக்கண்டு பொருது கோபிப்பன, புள்ளிகள் பொருந்திய முகத்தையுடையனவுமாகிய மதயானைகள் பலகோடி (அச்சேனை யில் சென்றன).

கு: யானைகள் மதத்தால் கதம் சிறந்த நிலையில் 'தன்நிழலையே வேற்று யானையாக எண்ணிப்போர் செய்யும் என்க. யானைக்குத்

துதிக்கை நீண்டிருத்தல் உத்தம இலக்கணம் ஆகும். மக்களுள் முழந்தாளளவு நீண்டகையுடையாரைச் சிறந்தோர் எனச் செப்புதல் இங்கு நினைதற்குரியது. யானையின் கதமிக்க செலவைக் கண்ட பேயும் பருந்தும் போர்நிகழும் என எதிர்பார்த்து அவ் யானையின் பின் சென்றன என்றவாறு. சுழலுகின்ற விழியினை யுடையதாய்க் கண்டாரை அச்சுறுத்தும் பேயின் இயல்பு புலப் படுத்தியவாறு. சூர்-அச்சம். சுழல் விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின் (திருமுருகாற்றுப்படை) என்பது இங்கு ஒப்புநோக்கத் தகும். பின் செல்லும் சுழல்விழிய என்புழி செல்லும் என்னும் பெயரெச்சம், பின்செல்லுதற்குக் காரணமான அழல்விழி எனப் பொருள்படுதலால் காரணப்பெயர் கொண்டுமுடிந்ததாகக் கொள்க. தன்னைக் கண்டு அஞ்ச வேண்டிய வீரர்கள் வீரக்கழலை அணிவது கண்டு பொருது வெறுத்துக் கோபிக்கும் இயல் புடையது யானை என்றவாறு. சுனிதல்-கோபித்தல். புகர்-யானை முகத்தில் உள்ள புள்ளிகள். நிழல்செறுவ, செவிய, கரத்த விழிய, மதத்த, மருப்ப, கழல்சுளிவ, முகத்த கடகரிகள் என இயையும். (6)

## குதிரைப்படை

1350 இயவனத்திற் பிறந்தனபே ரிளங்கிளியி னிறத்
தனவும்
மயினிறத்த வளைநிறத்த மணிநிறத்த மறை
நிறத்த
பயினிறத்த கட்டலகத்தும் பலதேசத் தும்பிறந்த
குயினிறத்த கொய்யுளைய குரகதங்கள் பல
கோடி.

இயவனத்திற் பிறந்தன பேர்இளங்கிளியின் நிறத்தனவும்
மயில்நிறத்த வளைநிறத்த மணிநிறத்த மறைநிறத்த
பயின்நிறத்த, கடல்அகத்தும் பலதேசத்தும் பிறந்த
குயின்நிறத்த கொய்உளைய குரகதங்கள் பலகோடி.

பொ: யவனதேயத்தில் பிறந்தனவாய்ப்பெரிய இளங்கிளியின் நிறைத்தையுடையனவும், மயிலைப்போன்ற நிறத்தைஉடையனவும்

சங்கு போன்ற வெண்ணிறத்தையுடையனவும், நீலமணி போன்ற நீலநிறத்தையுடையனவும், தாமரை மலர் போன்ற நிறத்தையுடையனவும் அரக்கு நிறம்போன்ற நிறத்தையுடையன வும், கடலிலும் பலவகையான தேயத்திலும் பிறந்தனவும், மேகம் போன்ற நிறத்தையுடையனவும் ஆகிய கத்திரிகையால் கொய்தற் குரிய பிடரிமயிரினையுடைய குதிரைகள் பலகோடி (அச்சேனையில் சென்றன).

கு: குதிரைகளின் பிறப்பிடங்களும் நிறங்களும் இச்செய்யுளில் கூறப்படுகின்றன. யவனம் என்பது இங்கு இயவனம் என இகரம் பெற்று வந்தது, இயமன் என்புழிப்போல. யவன தேயத்திற் பிறந்த குதிரைகள் சிறப்புடையவை என்பர். கிளி போன்ற பச்சை நிறக் குதிரைகளையே 'பேரிளங்கிளியின் நிறத்தனவும்' என்றார். மயில் நிறம் என்றது பச்சை நிறத்தில் ஒருநிறத்தை யுணர்த்தியவாறு. வளை-சங்கு. வெள்ளைக்குதிரையை உணர்த்த 'வளைநிறத்த' என்றார். மணிநிறம் என்றது நீலமணியின் நிறத்தை. மரை என்பது முதற்குறிப்பாகத் தாமரையை உணர்த்தியது. செந்நிறத்தில் ஒருவகையைக் குறிப்பிட்டவாறு. பயின்-அரக்கு. அரக்கு நிறக்குதிரைகளையுணர்த்தியபடி. கடலிலும் யவனம் அல்லாத பிற பல தேயத்திலும் பிறந்த குதிரைகளைக் குறிப்பிட்ட வாறு. குயின்-மேகம். மேகவண்ணத்துக் குதிரைகளையுணர்த்திய வாறு. நிறத்த என்றாற் போன்ற சொற்கள் அன்சாரியையின்றி வந்த அகரவீற்றுப் பெயரெச்சம். குயில் என்று பிரித்துக் குயில் போன்ற நிறமுடைய குதிரையை யுணர்த்தியதாகவும் கொள்ளலாம். உளை-பிடரிமயிர். அது கத்திரிகைகொண்டு கொய்யக் கொய்ய வளரும் தன்மையது. குரகதம்-குதிரை. (7)

---

மிகைப்பாடல் 23, 43, 44, 60, 76

யவனத்தில் பிறந்தனபே ரிளங்கிளியி னிறத்தவிந்திர
பவனத்திற் பறப்பனபோல் பலதலைய பனிப்பிடரிப்
புவனத்திற் குரம்பையா புட்குரல புனைமணிய
கபனத்த வெண்கவரிக் கற்றையின வெண்கலிமா.

## தேர்ப்படை

1351 கோகனக முகையனைய கொழுங்கனகக்
கொடிஞ்சியன
பாகனக மகிழவயப் பரிபூணும் பான்மையன
நாகனகங் குழையமிசை நடந்தோடுந் தடங்
காலி
மாகனக நெடுந்துவச மணித்திண்டேர்
சதகோடி.

கோகனக முகை அனைய கொழுங்கனகக் கொடிஞ்சியன
பாகன் அகமகிழவபப் பரிபூணும் பான்மையன
நாகன் அகம் குழைய மிசை நடந்து ஓடும் தடங்கால
மாகனக நெடுந்துவச மணித்திண்தேர் சதகோடி.

பொ: தாமரை மொட்டுப்போன்ற செழுமையான பொன்னால் இயன்ற கொடிஞ்சியை உடையனவும், தேர்ப்பாகன் மனம் மகிழுமாறு வெற்றிவாய்ந்த குதிரைகள் பூட்டப் பெறும் தன்மையுடையனவும், ஆதிசேடன் என்னும் நாகம் பாரம் தாங்காமல் வருந்துமாறு தரைக்குமேல் நடந்து ஓடுகின்ற பெரிய சக்கரங்களையுடையனவும், ஆகாயத்தில் நடுவிடம் வரையில் உயர்ந்துள்ள கொடிகள் கட்டப்பெற்றவும் மணிகளையுடையவும் ஆகிய திண்ணிய தேர்கள் நூறுகோடி (அச்சேனையில் சென்றன).

கு: இச்செய்யுளில் அடிதோறும் முதல் எழுத்து ஒழிந்த முதற்சீர் முழுவதும் ஒத்த எழுத்தினவாய் வந்தமையால் இது திரிபு என்னும் சொல்லணி ஆகும். 'கொடிஞ்சி' என்பது தேர்த்-தட்டின் முன்பு தாமரைமொட்டு வடிவமாகச் செய்தமைத்த ஒருறுப்பு. தேரில் உள்ள வீரன் பற்றிக் கொள்ளுதற்கேற்ற முறையில் அமைவது. நாகம் மாகம் என்பன இறுதிப்போலியாய் நாகன் மாகன் என னகரம்பெற்று வந்தன. மாகம்-ஆகாயம். விண்ணை முட்டும் உயர்ந்த கொடிகள் கட்டப்பட்டதேர் என்றவாறு. அகம்-இடம். கொடிஞ்சியன, பான்மையன. தடங்கால மணித்திண்தேர் என இயையும். கால் என்பது தேர்ச்சக்கரத்தை. சதம்—நூறு. (8)

## காலாள் வீரர்

1352 உருத்து நெடுங் கதிர்வேல்கொண் டுரங்கிழிப்ப
தல்லாது
மிருத்துவரி னுங்கூடி வெந்காட்டி மீளாதார்
எருத்துருவெங் கழல்வீர ரிரியநிலைக் கிரியெறியும்
மருத்துவமனை நிகராகும் வயவீரர் கணக்கிலரால்.

உருத்துநெடுங் கதிர்வேல் கொண்டு உரம்கிழிப்பது அல்லது
மிருத்துவரினும் கூடிவெங் காட்டி மீளாதார்
எருத்துஉரு வெங்கழல்வீரர் இரிய நிலைக்கிரி எறியும்
மருத்துவமனை நிகர்ஆகும் வயவீரர் கணக்கிலரால்.

பொ: கூற்றுவன் எதிர்த்துவரினும் எதிர்நின்று கோபித்து நெடிய ஒளிவாய்ந்த வேலினைக் கொண்டு, அவன் மார்பினைக் கிழிப்பதல்லது, முதுகுகாட்டிப் போர்க் களத்தில் நின்றும் மீண்டு வாராத இயல்பினை உடையவர்கள், காளைபோன்ற உருவத்தினை யுடைய கொடிய கழலினை அணிந்த வீரர்கள் இரிந்து ஓடுமாறு நிலத்துள்ள மலைகளைப் பறித்து எறிகின்ற காற்றுக் கட.வுள் போலும் வலியவீரர்கள் கணக்கற்றவராவர்.

கு: 'கூற்றுடன்றுமேல் வரினுங் கூடி எதிர்நிற்கும் ஆற்றலதுவே படை' (திருக்குறள் 765) என்ற குறளைத் தழுவியது இச்செய்யுள். மிருத்து-கூற்றுவன். 'மிருத்துவரினும் கூடி உருத்து உரங்கிழிப்பது அல்லது வெந்காட்டி மீளாதார்' என மாற்றி இயைக்க. எருத்து-காளை எருது. எருத்துப்போன்ற வீரர் என்க வெங்கழல்-கொடிய வீரக்கழல். வெம்மை-விருப்பம் எனக் கொண்டு விரும்பத்தக்க கழல் எனக் கூறலும் ஆம். இரிதல்-புறங்காட்டி ஓடுதல். மருத்துவன்-வாயுதேவன். மேருமலையின் சிகரங்களை முரித்து எறிந்த இயல்பினன் வாயுதேவன் ஆகலின் வயவீரர்க்கு அந்த வாயுதேவனை உவமை கூறினர். இரியச் செய்கின்செய்ற வய வீரர் என ஒருசொல் வருவித்து முடிக்க. வய - வலி. (9)

## இலக்குவன் மைந்தருடன் சென்று காரகாபதி அமைத்தல்

1353 புனைமணிய வியமார்ப்பப் புரிவளைகண்
மிகமுழங்க
இனையபரித் தானையுட னிகல்வடிவே
லிலக்குவனும்,
துணைபரித்திண் டேரேறிச் சுடரியங்குங் குட
திசைமேல்
கனைகழற்கான் மைந்தருடன் கமழ் காரா
வதமடைந்தான்.

புனைமணிய இயம்ஆர்ப்பப் புரிவளைகள் மிகமுழங்க
இனையபரித் தானையுடன் இகல்வடிவேல் இலக்குவனும்
துணைபரித் திண்தேர் ஏறிச் சுடர்இயங்கு குடதிசைமேல்
கனைகழல் கால்மைந்தருடன் கமழ் காரா வதம் அடைந்தான்.

பொ: அலங்கரிக்கப்பெற்ற மணிகள் பதித்த வாத்தியங்கள் ஆரவாரிக்கவும் சங்குகள் முழங்கவும், இத்தன்மையான குதிரைகளோடு கூடிய சேனையுடன், வலிமையுடைய கூரிய வேலினை-யுடைய இலக்குவனும், விரைந்துசெல்லும் குதிரைகள் பூட்டப்-பெற்ற திண்ணிய தேரில் ஏறிக்கொண்டு சூரியன் செல்கின்ற மேற்குத்திசைமேல், ஒலிக்கின்ற கழலினை அணிந்த காலினையுடைய மைந்தர்களோடு, மணம் கமழ்கின்ற காராவதம் என்னும் நகரை அடைந்தான்.

கு: செல்வச் சிறப்புத்தோன்ற வாத்தியங்களிலும் நவமணிகள் பதிக்கப்பெற்றிருக்கும் ஆதலின், 'புனைமணிய, இயம் ஆர்ப்ப' என்றார். புரிவளை—சுரிமுகச்சங்கு. இகல்-வலிமை. இலக்குவன் மைந்தருடன் தேரில் புறப்படும்போது வாத்தியங்களும் சங்குகளும் முழங்கின என்றவாறு. துணைபரி-விரைந்து செல்லும் குதிரை. 'சுடரியங்கு குடதிசை' என்றது சூரியன் மறையும் மேற்குத் திசையை. காராவதம் என்பது நகரத்தின்பெயர். (10)

## காராவதத்தைத் தலைநகராகக் கொள்ளுதல்

1354 மதிவ லாருடன் னயனுடை மறைமுறை நெறியே
திதியும் வாரமுந் தினமுமென் றின்னன தெரிந்து
கதிநெ டும்புனற் காரகா பதியினை யமைத்தான்
துதிமி குந்தெழு வாகையின் றொடைபுனை
தோளான்.

மதிவலாருடன் அயனுடை மறைமுறை நெறியே
திதியும் வாரமும் தினமும் என்று இன்னன தெரிந்து
கதிநெடும்புனல் காரகா பதியினை அமைத்தான்
துதிமிகுந்து எழு வாகையின் தொடைபுனை தோளான்.

பொ: புகழ் மிக்கெழுதற்குக் காரணமான வாகைமாலை புனைந்த தோளையுடைய இலக்குவன்-அறிவு மிக்காரோடு பிரமன் செய்த வேதம் கூறிய முறையான நெறிப்படியே திதி வாரம் நாள் என்ற இவற்றை ஆராய்ந்து விரைந்து செல்கின்ற நெடிய நீர்வளமுடைய காராவதம் என்னும் நகரை இராச்சியம் செய்யும் தலைநகராக அமைத்தான்.

கு: காராவதம் என்ற நகரையே அரசு வீற்றிருத்தற்குரிய தலைநகராக இலக்குவன் அமைத்தான் என்றவாறு. 'மறைமுறை நெறி' என்ற பாடத்தையே ஏடு பெயர்த்து எழுதினோர் 'மறைமுனி நெறியே' எனத் தவறாக எழுதியிருத்தல் வேண்டும். அயனுடைய மறை எனமுன் வந்துள்ளமையால் 'முனி' என்ற சொல் இங்குப் பொருத்தம் இல்லாமை தெளியலாம். தினம் என்பது நாள் என்று பொருள்பட்டு அது நட்சத்திரத்தைக் குறித்ததாகக் கொள்க. திதி என்றது பிரதமை முதலிய திதிகளை. வாரம் என்றது ஞாயிறு திங்கள் போன்ற வாரங்களை. கதி–வேகம். காருபதம், காருவதம், காரகா பதி என்பன ஒருபெயரின் திரிபுகளே. காருபதம் என்னும் நகரினையடைந்த இலக்குவன் அங்கு மாறுபட்ட பகைவரை வென்று வாகைசூடினான் என்பது "போதர துதி மிகுந்தெழு வாகையின் தொடைபுனை தோளான்" என்றார். (11)

## நகரத்தின் அமைப்பு

1355 நெடுந்தெருக்களு நியமமு நீளுறு மறுகும்
தடங்கொள் கூலமுஞ் சந்தியுஞ் சதுக்கமுந்
தவனன்
இடஞ்சுடர்த்தொடுமிஞ்சியு மஞ்சுவந்து றங்கும்
தொடுங் கிடங்குமேற் சூளிகை வாயிலும்
தொகுத்தான்.

நெடுந் தெருக்களும் நியமமும் நீளுறு மறுகும்
தடங்கொள் கூலமும் சந்தியும் சதுக்கமும் தவனன்
இடஞ்சுடர்த்தொடும் இஞ்சியும் மஞ்சுவந்து உறங்கும்
தொடும் கிடங்கும் மேல்சூளிகை வாயிலும் தொகுத்தான்.

பொ: நீண்ட தெருக்களும் கடைத்தெருவும் நீண்டுபோகின்ற குறுந்தெருக்களும் பெருமைகொண்ட கூலவீதியும் முச்சந்தியும் நான்கு தெருக்கள் கூடும் சதுக்கமும் சூரியனிடத்தில் அவன் சுடரைத் தொடுவதுபோன்று உயர்ந்துள்ள மதிலும், மேகங்கள் கடலெனக் கருதிவந்து உறங்கிக் கிடக்கின்றதும் மக்களால் தோண்டப்பட்டதும் ஆகிய அகழியும், மாடங்களின் மேலுள்ள சூளிகை என்கின்ற அறைகளின் வாயிலையும் தொகுத்துச் செய்தான்.

கு: நியமம்-கடைத்தெரு. மறுகு என்பது இங்குக் குறுந் தெருக்களையுணர்த்தியது. நெடுந்தெரு என முன் வந்தமையின் இவ்வாறு பொருள் கொள்ளலாயிற்று. கூலம்-நவதானியங்கள். இங்கு அச்சொல் ஆகுபெயராய்க் கூலங்குவித்த கூலவீதியை யுணர்த்தியது. மூன்று தெருக்கள் கூடியுள்ள இடம சந்தி எனவும் நாற்றெருக் கூடியுள்ள இடம் சதுக்கம் எனவும் பெயர் பெறும். "சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங்கடம்பும்" (திருமுருகாற்றுப்படை) தவனன்-சூரியன். இஞ்சி-மதில். சூரியனைத் தொடுமாறு அமைத்த மதில் என்றவாறு. தவனனாகிய சுடர் இடஞ்சுடர் எனத் தனித் தனி இயையும். மஞ்சு-வெண்மேகம். நீர்முகக்கக்கடலெனக் கருதி வந்து படிந்த மஞ்சு, வந்த பணியை மறந்து உறங்குதற்கிடமான கிடங்கு என்றவாறு. ... தொடும் கிடங்கு எனத்

தனித்தனி இயையும். சூளிகை என்பது மாளிகையின்மேல் உள்ள அறை. தொகுத்தான் என்பது எல்லாவற்றையும் ஒருசேரப் புதுவதாக அமைத்தான் என்னும் கருத்தினது. (12)

## நாற்படைக்குரிய வீதிகள்

1356 கரிகள் நீடிய கதிர்மணிக் கூடங்க ளொருபால்
பரிகள டங்கிய பருமணிப் பந்திக ளொருபால்
விரிநெ டுங்கொடித் தேரணி வீதிக ளொருபால்
வரிகொள் வெஞ்சிலை வயவர்கள் மறுகவை
ளொருபால்.

கரிகள் நீடிய கதிர்மணிக் கூடங்கள் ஒருபால்
பரிகள் தங்கிய பருமணிப் பந்திகள் ஒருபால்
விரி நெடுங்கொடித் தேர்அணி வீதிகள் ஒருபால்
வரிகொள் வெஞ்சிலை வயவர்கள் மறுகு அவை ஒருபால்.

பொ: யானைகள் நீடித்துத் தங்குதற்குரிய ஒளிர்மணிகள் பதித்த கூடங்கள் ஒருபக்கம், குதிரைகள் தங்கியுள்ள குதிரைப் பந்திகள் ஒருபக்சம், விரிந்த நெடிய கொடிகள் கட்டியுள்ள தேர்களின் வரிசை தங்கியுள்ள வீதிகள் ஒரு பக்கம், கட்டமைந்த கொடிய வில்லையேந்திய வீரர்கள் தங்கியுள்ள வீதிகள் ஒருபக்கம் (ஆக அந்நகரத்தில் அமைந்திருந்தன).

கு: யானைகட்டும் இடம் கூடம் எனவும் குதிரை கட்டும் இடம் பந்தி எனவும் பெயர் பெறும். இச்செய்யுளில் நான்கடிகளில் கரியும் பரியும் தேரும் காலாளும் தங்கும் இடங்களைப் புலப்படுத்தியவாறு. வரி-கட்டு. வயவர்கள்-வீரர்கள். மறுகு-தெரு. அவை என்பது பகுதிப் பொருள் விகுதி. (13)

## காராபதநகரின் பெருமை

1357 பனகர் வாழ்திரு நகரமோ
பருமணி யதனுல்
தினக ராதிபர் நகரமோ
சித்தர்க ணகரோ
அனக விந்திர னகரமோ
வளகையோ யாதோ
கனக மாநகர்க் குவமையோ
கணிப்பதற் கரிதால்.

பனகர் வாழ் திருநகரமோ? பருமணி அதனுல்
தினகராதிபர் நகரமோ? சித்தர்கள் நகரோ?
அனக இந்திரன் நகரமோ? அளகையோ? யாதோ?
கனகமாநகர்க்கு உவமையோ கணிப்பதற்கு அரிதால்.

பொ: பொன்மயமான பெரிய காராபதம் என்ற இந்த நகரத்திற்கு உவமையாவது-போகச் சிறப்பால் நாகர்கள் வாழ் கின்ற அழகிய நகரமோ? அல்லது பருத்த மணிகள் மிக்கிருப் பதால் தினத்தைச் செய்கின்ற ஆதித்தர் பன்னிருவர் வாழ்கின்ற நகரமோ? அல்லது (ஞானிகள் நிறைந்துள்ளமையால்) சித்தர்கள் நகரந்தானே? அல்லது புகழ்மிக்கு உடைமையால் பாவம் செய்யாத இந்திரபுரியோ? அல்லது செல்வச் சிறப்பால் குபேர னுடைய அளகாபுரியோ? வேறு எந்நகரமோ? ஐயோ கருதுதற்கு அரிதாக உள்ளது.

கு: 'பருமணியால் தினகராதிபர் நகரமோ?' என்றது ஏது உவமையணி. இச் செய்யுள்முழுவதும் ஐயவணி ஒன்றற்கு ஏதுக் கூறினமையால் ஏனையவற்றிற்கும் ஏது வருவிக்கப்பட்டன. பன்னகர் என்பது இடைக்குறையாய்ப் பனகர் என வந்தது. நாகர் என்பது பொருள். போகச் சிறப்பால் நாகர் உலகமோ என்க. இந்திரன் நகரம் என்றது இந்திரபுரியாகிய அமராவதியை. உவமை, நகரமோ—அளகையோ? யாதோ? கணிப்பதற்கு

அரிது என இயைக்க. ஓ என்பது வியப்புப் பொருளது. "நாக நீணகரோடு நாகநாடதனொடு போகநீள்] புகழ் மன்னும் புகார் நகர்" (சிலப்.1. 21,22) என்பது இங்கு ஒப்பு நோக்கத்தகும். (14)

## இரவு பகல் இல்லாமை

1358 ககன மங்கையர் கழுத்தெனக்
கமுகின நெருங்கும்
வகைநெ டும்புனல் வளநகர்
வருபவர்க் கெல்லாம்
நகல ருஞ்செழு நவமணி
யொளிநனி மயங்கிப்
பகலு மேனைய விரவுமென்
றொருபரி சிலதால்.

ககன மங்கையர் கழுத்து எனக் கமுகுஇனம் நெருங்கும்
வகைநெடும்புனல் வளநகர் வருபவர்க்கு எல்லாம்
நகல்அரும் செழும்நவமணி ஒளிநனி மயங்கிப்
பகலும் ஏனைய இரவும் என்று ஒரு பரிசு இலதால்.

பொ: விண்ணுலகத்துள்ள மங்கையரின் கழுத்துப்போலக் கமுக மரங்களின் வரிசைகள் நெருங்கி வளர்ந்துள்ள வகைவகையாக வகுக்கப்படுகின்ற நெடிய நீர் வளத்தினையுடைய அந்தக் காருபதநகர்க்கு வருகின்றவர்கட்கு எல்லாம் இகழ்ந்து சிரிப்பதற்கு இடமில்லாத செழுமையான நவமணிகளின் ஒளி பெரிதும் வந்து ஒளிர்தலால் பகலும் இரவும் என்கின்ற ஒருதன்மை எப்போதும் இல்லாததாகத் தோன்றும்.

கு: கமுகு பெண்டிரின் கழுத்துக்கு உவமையாகக் கூறப்படுவது. விண்ணுலகுவரையில் வளர்ந்துள்ள கமுகு ஆதலின் அது விண்ணக மங்கையர் கழுத்து எங்கும் நெருங்கியுள்ளதாகக் கூறினர். கமுகினம் நெருங்கும் வளநகர், வகைநெடும்புனல் வளநகர் எனத்தனித்தனி இயையும். கமுகுக்கு நீர்வளமும் காரணம் என்பது புலப்பட 'நெடும்புனல் வளநகர்' என்றார். ஏரி என்றும், குளம் என்றும், கயம் என்றும், ஓடை யென்றும், கேணி

என்றும் பலவகையாகக் கூறப்படுதல் நோக்கி 'வகை நெடும்புனல்' என்றார். நெடும்புனல் என்றது ஆறாக நெடிது ஓடுகின்ற புனல் எனவும், குளம் முதலிய நீர் நிலைகளில் ஆழமாக இருக்கும் புனல் எனவும் இருபொருள்படும். அங்கு வசிப்பவர்க்கு வேறுபாடு தெரியாமையின் வருபவர்க்கெல்லாம் பகல், இரவு என்று பகுத்துக்காணும் ஒருதன்மை இல்லை என்றார். நகல் என்பது இகழ்தல் என்னும் கருத்தினது. செம்மணிகளின் ஒளியால் இரவு பகலாகி நீலமணி ஒளியால் பகல் இரவாகித் தோன்றுதலின் பகல் இரவுகள் பகுத்துணரவியலாது என்றவாறு. (15)

## நகரத்துக் கொடிகள் சந்திரனைச் சார்ந்து ஆடும் தோற்றம்

1359 படைத்த மாமுனி பாரெலா மொருவழிப் படுத்தி
அடைத்த தொக்கு மிவ்வணி நகர ரமியத் தணைந்த
மடக்கண் மங்கையர் முகமென மதியின்மேல் மறுவைத்
துடைப்ப போன்றன துகிலணி தொகுமணித் துவசம்.

படைத்த மாமுனி பார்எலாம் ஒருவழிப் படுத்தி
அடைத்தது ஒக்கும் இவ் அணிநகர் அரமியத்து அணைந்த
மடக்கண் மங்கையர் முகம் என மதியின்மேல் மறுவைத்
துடைப்ப போன்றன துகில்அணி தொகுமணித் துவசம்.

பொ: இவ்வுலகைப்படைத்த பிரமன் உலகம் முழுவதையும் ஓரிடத்தில் சேர்த்து வைத்ததை ஒக்கும், இந்த அழகிய நகரின் மேல்மாடத்தில் வந்து அடைந்த, இளமையான கண்ணையுடைய மங்கையர்தம் முகம் எனக் கருதிச் சந்திரன்மேல் உள்ள களங்கத்தைத் துடைப்பது போலத் தோன்றின துணியாலியன்றதும் மணிகள் பதிக்கப் பெற்றதும் ஆகிய கொடிகள் சந்திரனைச் சார்ந்து அசைந்தாடும் தோற்றம்.

கு: உலகில் உள்ள எல்லாப் பொருளும் இந்நகரின் கண் உள்ளன என்பார், 'பாரெலாம் ஒருவழிப்படுத்தி அடைத்தது ஒக்கும் இவ்வணிநகர்' என்றார். மாடங்களில் கட்டியுள்ள கொடிகள் சந்திரனைச் சார்ந்து அசைந்து ஆடும் தோற்றம், அந்தச் சந்திரனை மங்கையர் முகம் எனக் கருதி அதில் இருக்கும் மறுவைத் துணியினால் துடைப்பது போன்றது என்பது தற்குறிப்பேற்ற உவமையணியாகும். அரமியம்-மேல்மாடத்துள்ள நிலாமுற்றம். முகம் எனக்கருதி என ஒருசொல் வருவிக்க. மறு- களங்கம். முகத்தில் உள்ள மறுவினைத் துணியினால் துடைத்து நீக்குவது போலக் கொடிகள் சந்திரனிடத்துள்ள களங்கத்தைத் துடைப்பது போலத் தோன்றின என்க. மடக்கண்-இளமையான கண். உடம்பின் இளமை கண்வழியாகத் தெளிவாகத் தோன்றலின் அங்ஙனம் அடை கொடுத்தார்.

## வீதிகளில் முத்தும் மணியும் சிதறிக் கிடத்தல்

1360 மதுர மென்மொழி மடந்தையர் வடம்பரிந்
திட்ட
கதிர்கொ ணித்திலப் பன்மணி யெங்கணுங்
கலந்தே
உதிர்த லாலும்ப ரிழுக்கிவீழ்ந் தொளிக்கதிர்
சிதறி
மதியு மீன்களுங் கிடந்தவா போன்றுள மறுகே.

மதுர மென்மொழி மடந்தையர் வடம்பரிந்திட்ட
கதிர்கொள் நித்திலப் பன்மணி எங்கணும் கலந்தே
உதிர்தலால் உம்பர் இழுக்கி வீழ்ந்து ஒளிக்கதிர் சிதறி
மதியும் மீன்களும் கிடந்தவா போன்றுஉள மறுகே.

பொ: மதுரமான மெல்லிய மொழியைப் பேசுகின்ற பெண்டிர் (தம்கொழுநரொடு ஊடிக்கொண்டு) மார்பில் அணிந்த முத்துவடத்தை (க் கையால் இழுத்து) அறுத்திட்டமையால் ஒளியுடைய முத்துக்களாகிய பலமணிகள் தெருக்களின் எவ்விடத்தும் கலந்து உதிர்ந்து கிடந்தன. அத்தோற்றம் சந்திரனும் விண்

மீன்களும் விண்ணிலிருந்து தவறிவீழ்ந்து ஒளிக்கதிர்களைச் சிதறிக் கொண்டு கிடந்தவாறு போன்று உள்ளன.

கு: மதுரம்-இனிமை. மடந்தையர் வடம் பரிதற்குக் காரணம் ஊடல் என்பது உய்த்துணர்தற்குரியது முத்துவடத்தை அறுத்த போது சில முத்துக்கள் தனித்தனியாகச் சிதறி உதிர்ந்து ஓடின எனவும், வடத்தின் ஒருபகுதி சிதறாமல் அப்படியே கிடந்தது எனவும் கொள்க. சிதறி உதிர்ந்த மணிகள் விண்மீன்கள் போலவும் உதிராத முத்துவடத்தின் பகுதி சந்திரனைப் போலவும் இருந்தன என்றவாறு. 'உம்பர் இழுக்கி வீழ்தல்' சந்திரனுக்கும் விண்மீன்களுக்கும் உரிய செயலாகத் தற்குறிப்பேற்றமாகச் சொல்லப்பட்டது. இது தற்குறிப்பேற்ற உவமையணி. மறுகு-தெரு 'வடம்பரிந்திட்ட பன்மணி எங்கணுங் கலந்தே உதிர்தலால் மதியும் மீன்களும் உம்பரிழுக்கி வீழ்ந்து ஒளிக்கதிர் சிதறிக் கிடந்தவாறு போன்று உள' என இயையும். (17)

## அங்கதனுக்குக் காரகாபதநகரை அளித்துவிட்டு இலக்குவன் அயோத்தியை அடைதல்

1361 அன்ன மாநக ரங்கதற் கருளியாங் கவற்குப்
பொன்னும் வையமும் புரவியுங் கரிகளும் புகர்வேல்
இன்ன வீரரு மளித்துமீண் டிராகவற் றெழுவான்
பொன்னின் மாமதி லயோத்திமா நகர்சென்று புக்கான்.

அன்ன மாநகர் அங்கதற்கு அருளி ஆங்கு அவற்குப்
பொன்னும் வையமும் புரவியும் கரிகளும் புகர்வேல்
இன்ன வீரரும் அளித்து மீண்டு இராகவற் றெழுவான்
பொன்னின் மாமதில் அயோத்திமா நகர்சென்று புக்கான்.

பொ: அத்தகைய பெருமையுடைய காரகாபதம் என்னும் சிறந்த நகரத்தைத் தன் மகன் அங்கதனுக்கு உரியதாக்கிக்

கொடுத்துவிட்டு அவ்விடத்து அந்த அங்கதன் அரசு செய்யத் துணையாக அவனுக்கு வேண்டிய பொன்னும், தேரும், குதிரையும்' யானையும் ஒளிமிக்க வேல் முதலிய ஆயுதங்களைத் தாங்கிய காலாள் வீரரும் ஆகிய நால்வகைப் படையும் அளித்துவிட்டு அங்கு நின்றும் மீண்டு இராமனைத் தொழும்பொருட்டுப் பொன்னொலியன்ற பெரியமதில் சூழ்ந்த அயோத்திமாநகர்க்குச் சென்று புகுந்தான்.

கு: அன்னமாநகர் என்றது மேற்கூறிய சிறப்புக்களையுடைய காரகாபதம் என்னும் நகரை. அங்கதன் என்றது இலக்குவன் மகனை. மற்றொரு மகன் சந்திரகாந்தன். வையம்-தேர். பொன்னும் நால்வகைப் படையும் தன் மகனுக்கு அளித்துவிட்டு இலக்குவன் அயோத்தி புகுந்தான். அவ்வாறு புகுந்தது இராமனைத் தொழும் பொருட்டேயன்றித் தன் வாழ்வு கருதியன்று என்பார், 'இராகவற் றொழுவான்' என்றார். புகர்-ஒளி. வேல் இன்ன வீரர் என்றது வேல் முதலிய படைகளையுடைய காலாள் வீரரை. (18)

## இலக்குவன் இராமனை வணங்கி அங்கதனுக்கு நால் வகைச்சேனை கொடுத்து அரசனுக்கி வந்ததை உரைத்தல்

1362 தடங்கண் மங்கையர் தமனியச்
சாமர மியக்க
மடங்க லாசனத் திருந்திடு
மிராமனை வணங்கிக்
கிடங்கு சூழ்நக ரியற்றியக்
கிளர்முடி மதலைக்
குடன்கொள் சேனைநான் குடன்கொடுத்
ததுவெலா முரைத்தான்.

தடங்கண் மங்கையர் தமனியச் சாமரம் இயக்க
மடங்கல் ஆசனத்து இருந்திடும் இராமனை வணங்கிக்
கிடங்கு சூழ் நகர் இயற்றி அக்கிளர்முடி மதலைக்கு
உடன்கொள் சேனை நான்கு உடன் கொடுத்தது எலாம்
உரைத்தான்.

பொ: பெரிய கண்களையுடைய மங்கையர்கள் பொற்பூண் அமைந்த வெண் சாமரையை வீச, சிங்காசனத்தில் அமர்ந்துள்ள இராமனை இலக்குவன் வணங்கி, அகழியால் சூழப்பெற்ற காரகாபதம் என்னும் நகரத்தைச் செய்து அந்த நகரத்திற்கு உரியவனாக முடிசூட்டி மணிமுடியணிந்த அங்கதன் என்னும் தன் மகனுக்குப் பாதுகாப்பாக உடன் கொள்ளுதற்குரிய நால்வகைச் சேனையையும் ஒருங்கே கொடுத்தது முதலிய எல்லாச் செய்திகளையும் சொன்னான்.

கு: சாமரை இரட்டியவர்கள் மங்கைப் பருவத்து நங்கையரே என்பது புலப்படுத்த வேண்டித் 'தடங்கண் மங்கையர்' என்றார். தமனியம்-பொன். 'தமனியச் சாமரம்' என்றது பொன்னாலியன்ற காம்பும் பூணும் உடைய வெண்சாமரையை. மடங்கல்-சிங்கம். மடங்கலாசனம் என்றது சிங்கம் சுமந்தாற் போன்று அமைந்த இருக்கையை. இலக்குவன் சென்று வணங்குங்கால் இராமன் இருந்த இருப்பினைப் புலப்படுத்தியவாறு. கிடங்கு-அகழி. நகர் என்றது காரகாபதம் என்னும் நகரை. கிளர் முடி மதலை என்றது முன்னமே பரதனால் முடிசூட்டப் பெற்ற அங்கதனை. அரசாள்வோர் உடன் கொள்ளுதற்குரியது நால்வகைச் சேனையே என்பதைப் புலப்படுத்த, 'உடன் கொள் சேனை' என்றார். (19)

## சந்திரகேதுவைச் சந்திரகாந்தம் என்னும் நகர்க்கு அரசனுக்கு எனப் பரதனுக்குச் சொல்லுதல்

1363 அன்ன தம்பியோ டகமகிழ்ந்
தினிதிருந் தொருநாள்
பன்னு செஞ்சிலை யிராகவன்
பனிக்குடைப் பரதன்

தன்னைச் சந்திர கேதுவைச்
சந்திர காந்தம்
என்னு நாட்டிடை யிருத்திநீ
வருதியென் றுரைத்தான்.

அன்ன தம்பியோடு அகம் மகிழ்ந்து இனிது இருந்து ஒருநாள்
பன்னு செஞ்சிலை இராகவன் பனிக்குடைப் பரதன்
தன்னைச் சந்திர கேதுவைச் சந்திர காந்தம்
என்னும் நாட்டிடை இருத்தி நீ வருதி என்று உரைத்தான்.

பொ: அத்தன்மையான தம்பி இலக்குவனோடு மனம் மகிழ்ந்து இனிமையாக இருந்து கொண்டு ஒருநாள் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற செம்மையான வில்லையுடைய இராமன், குளிர்ந்த குடையைப் பிடிக்கின்ற பரதனைப் பார்த்து 'நீ சந்திரகேது என்னும் பெயருடைய இலக்குவன் மகனைச் சந்திரகாந்தம் என்கின்ற நாட்டிற்கு அரசனாக இருக்கச் செய்து வருவாயாக' என்று சொன்னான்.

கு: அன்னதம்பி என்றது இலக்குவனை. செஞ்சிலை என்றது வடிவத்தால் வளைந்ததாயினும் வினையால் நேர்மையான வில் என்பது புலப்படுத்த வந்தது. குடைப்பரதன் என்றது இராமனுக்குக் குடைகவிக்கும் பரதன் என்னும் கருத்தினது. பரதன் வெண்குடைகவிக்க என்பதை நினைப்பித்தவாறு. 'சந்திர காந்தம் என்னும் நாட்டிடையிருத்தி நீ' என்றது அந்நாட்டிற்கு அரசனாக இருக்கச் செய்து என்னும் பொருளது. (20)

## பரதன், சந்திரகேதுவோடு அயோத்தியினின்று புறப்படுதல்

1364 ஆனை தேர்பரி யடற்படைத் தலைவரென்
றறைந்த
சேனை நான்குட னெடுமணித் தேர்தெரிந்
தேறிச்
சோனை மாமுகி லாமெனத் தூரியந் துவைப்ப
ஆன மைந்தனோ டயோத்திமா நகரிகந்
தகன்றான்.

ஆனைதேர்பரி அடல்படைத் தலைவர் என்று அறைந்த
சேனை நான்குடன் நெடுமணித் தேர்தெரிந்து ஏறிச்
சோனைமாமுகில் ஆமெனத் துரியம் துவைப்ப
ஆனமைந்தனோடு அயோத்திமா நகரிகந்து அகன்றான்.

பொ: யானையும், தேரும், குதிரையும், வலிமையுள் காலாட் படைத்தலைவரும் எனச் சொல்லப்பட்ட சேனைகள் நான்கோடு சேர்ந்து கொண்டு நெடிய மணிகட்டிய நல்ல தேரினைத் தேர்ந்து எடுத்து அதில் ஏறிக்கொண்டு விடாமழை பொழியும் கரிய மேகம்போல வாத்தியங்கள் ஒலிக்க, அங்கூச் சந்திரகேது என்னும் மகனோடு அயோத்தியைப் பிரிந்து சென்றான்.

கு: போர்க்கு ஏற்ற வலிமையுள்ள தேர்தானா? என்பதை ஆராய்ந்து தெளிந்து பரதன் அத்தகையை தேரில் ஏறினான் என்றவாறு. சேனைநான்குடன் அகன்றான் என இயையும். 'சோனை மாமுகில்' என்றது விடாமழைபெய்யும் மேகத்தை. அந்தச் சோனை மேகத்தின் இடியொலிபோல வாத்தியங்கள் ஒலிக்க என்றவாறு. துரியம்—வாத்தியம். துவைத்தல்-ஒலித்தல். 'ஆன மைந்தன், என்றது, அம்மைந்தன் என்று அப்பொருளில் வந்தது. ஆன், சுட்டிடைச்சொல். இகத்தல்-கடத்தல். (21)

## படைகளின் செலவால் வழிபட்டபாடு

1365 பாழி வெண்கொடிப் பருமணிக் கொடுஞ்சிய நெடுந்தேர்
ஆழி யானெரிந் ததுவரைக் குலமெலா மடையப்
பூழி யாயின புரவியின் விலாழியிற் புகர்வெம்
சூழி யானைமும் மதத்தினிற் றுகளடங் கியதால்.

பாழிவெண்கொடிப் பருமணிக் கொடுஞ்சிய நெடுந்தேர்
ஆழியான் நெரித்தது வரைக்குலம் எலாம் அடைய
பூழிஆயின புரவியின், விலாழியிற் புகர்வெம்
சூழியானை மும்மதத்தினின் துகள் அடங்கியதால்.

பொ: வலிமையுடையதும், வெண்மையான கொடிகளையும், பருத்தமணிகள் பதித்த கொடுஞ்சியினை உடையதும் ஆகிய நெடியதேர்கள், தம் சக்கரங்களால் வழியிலுள்ள மலைக் கூட்டத்தையெல்லாம் நெரித்து விட்டன. குதிரைகளின் செலவால் வழிமுழுமையும் புழுதியாயின. அக்குதிரைகளின் வாயிலிருந்து வரும் நுரையாலும், புள்ளிகளையுடையதும், கோப வெம்மையையுடையதும், முகப்பட்டத்தையுடையதுமாகிய யானைகளின் மும்மதத்தினாலும், முன்னைப் புழுதித்துகள் அடங்கியது.

கு: தேரும், குதிரையும், யானையும் முறையே செல்லும்போது வழியில் ஏற்பட்ட பாறுதலைக் குறிப்பிட்டவாறு. பாழி-வலிமை. தேர்களில் வெள்ளைக்கொடிகள் கட்டப்பட்டிருந்தன. தேர்த் தட்டின் முன்பு கைப்பிடியாகத் தாமரை மொட்டுப்போன்று செய்தமைத்த உறுப்பு 'கொடுஞ்சி' எனப்படும். அது செல்வச் சிறப்பிற்கு ஏற்பப் பருத்தமணிகள் பதித்துச் செய்யப்படுவதுண்டு. 'பாழிநெடுந்தேர்' என இயையும். கொடி நெடுந்தேர், கொடுஞ்சிய நெடுந்தேர், எனத் தனித்தனி இயையும். அகரம் குறிப்புப் பெயரெச்சவிகுதி உடைமைப் பொருளில் வந்தது. தேர்களின் சக்கரங்களால் நெரிந்த மலைகள், குதிரைகளின் காற்குளம்புகளால் புழுதியாயின எனவும், அப்புழுதித்துகள் அக்குதிரைகளின் விலாழி நீராலும், யானைகளின் மும்மத நீராலும் அடங்கியது எனவும் கொள்க. 'புரவிபின்' என்பது முன்னும் பின்னும் சென்றியைந்து இடைநிலை விளக்காய் நின்றது. 'புரவியின் பூழியாயினம்', 'புரவியின் விலாழியின்', என இயைந்து பொருள் தந்தவாறு காண்க. (22)

## நால்வகைப் படையின் ஒலியால் கடல்ஒலி அடங்குதல்

1366 கான்குலாவிய கனவரை நெரிதரக் கழனி
மீன்குலாவிய தரைநெடுந் துகளெழ விரைதேர்
வான்குலாநதி சுவறிட வழங்குவெம் படையாம்
நான்கினோதையா னரலைவா யொலியடங்
கினதால்.

கான்குலாவிய கனவரை நெரிதரக் கழனி
மீன்குலாவிய தரைநெடுந் துகள்எழ, விரைதேர்
வான்குலாம்நதி சுவறிட, வழங்கும்வெம் படையாம்
நான்கின் ஓதையால் நரலைவாய் ஒலி அடங்கினதால்.

பொ: காடு சூழ்ந்துள்ள பெரிய மலைகள் நெரிவும் கழனியாகிய மீன்கள் விளங்குகின்ற சேற்று நிலம் நெடிய துகளாய், எழவும் விரைகின்ற தேர் முதலியவாய சிறப்புப் பொருந்திய நதிகளின் நீர் சுவறிப் போகவும், இயங்குகின்ற கொடிய படையாகிய நால்கின் ஒலியால் கடலின் ஒலி சிறிதாய் அடங்கியது.

கு: நால்வகைப் படையின் செலவால் நிகழ்ந்த வேறுபாடு புலப்படுத்தியவாறு. காடும் மலையும் நெரியவும்., மருதநிலம் துகளாய் எழவும், விரைந்து செல்லும் தேர் முதலியவாய்ச் சிறப்புப் பொருந்திய ஆறுகள் வற்றிட, இயங்குகின்ற நால்வகைப் படையின் ஒலியால் கடல் ஒலி அடங்கியது என்க. நரலை-கடல். நதி சுவறிட வழங்குதல் நாற் படைக்கும் பொதுவான செயல். 'கனவரை நெரிதலும் கழனிதுகள் எழுதலும்' தேரினால் நிகழ்ந்தது. (23)

## சந்திரகாந்த நாட்டில் போய்த் தங்குதல்

1367 பாலை மாநிலங் கடந்துவெங் குறிஞ்சியிற் படர்ந்து
சால முல்லையு நெய்தலுங் கடந்துபோய்த் தமர
மாலை வண்டினம் முரல்வன மருதமென் பணை சூழ்
ஏலவார்பொழிற் சந்திர காந்தநாட் டிறுத் தான்.

பாலை மாநிலம் கடந்து வெம் குறிஞ்சியில் படர்ந்து
சால முல்லையும் நெய்தலும் கடந்துபோய்த் தமர
மாலை வண்டினம் முரல்வன மருதம்என் பணைசூழ்
ஏலவெண் பொழில் சந்திர காந்தநாட்டு இறுத்தான்.

பொ: பாலைநிலமாகிய பெரிய வெம்மையுடைய நிலத்தைக் கடந்து விரும்பத்தக்க குறிஞ்சியாகிய மலைநிலத்தில் நடந்து சென்று முல்லைநிலத்தையும் நெய்தல் நிலத்தையும் மிகுதியாக நடந்து கடந்துபோய் ஒலிக்கின்ற வரிசையான வண்டின்கூட்டம் முரலுகின்ற மருதம் என்கின்ற மென்னிலமாகிய வயல்கள் சூழ்ந்துள்ளதும் நெடிய சோலைகளையுடையதும் ஆகிய சந்திர காந்தம் என்ற நாட்டில் போய்ப் பொருத்தமாகத் தங்கினான்

கு: ஐந்திணைகளையும் கடந்து பரதன் படை சந்திரகாந்தம் போய் அடைந்தமை புலப்படுத்தியவாறு. பாலை என்கின்ற வெம்மை மிக்க நிலம் நெடுந்தொலைவு பரவியிருந்தமை புலப்படப் 'பாலைமாநிலம்' என்றார். 'வெம்குறிஞ்சி' என்றது விரும்பத்தக்க குறிஞ்சி என்றவாறு. மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி எனப்படும். 'சேயோன் மேய மைவரையுலகமும்' எனத் தொல் காப்பியர் கூறுவது காணலாம். முல்லை என்பது காடும் காடு சார்ந்த இடமும் ஆம். நெய்தல் என்பது கடலும் கடல் சார்ந்த இடமும் ஆம். சாலக் கடந்து என இயையும். இருநிலங்களைக் கடந்தமை கூறவேண்டிச் 'சாலக் கடந்து' என்றார் என்க. தமரம் ஒலி. மாலை-வரிசை. முரலுதல்-ஒலித்தல். மருத நிலத்துத் தாமரை முதலிய மலர்கள் மிகுதியாக இருத்தலின் 'வண்டின முரல்வன மருதம்' என்றார். பணை-வயல். இறுத்தான்-தங்கினான். ஏல இறுத்தான் என இயையும். (24)

## பரதன் சந்திரகாந்த நகரைப் புதுக்கி அமைத்தல்

1368 செம்பொற் கோபுர வாயிலிற்
செழுமணி நீலத்
தம்பத் திற்குளிர் தரளவெண்
சாளர முகப்பின்

விம்பக் கோமள வெயின்மணி
மாளிகை விதான
அம்பொற் சந்திர காந்தமென்
றணிநக ரமைத்தான்.

செம்பொன் கோபுர வாயிலின், செழுமணி நீலத்
தம்பத்தின் குளிர்தரள வெண்சாளர முகப்பின்
விம்பக் கோமளவெயில் மணி மாளிகை விதான
அம்பொன் சந்திர காந்தம் என்று அணிநகர் அமைத்தான்.

பொ: செம்பொன்னால் இயன்ற கோபுர வாயிலினையும் செழுமையான மணிகள் பதித்த நீலநிறத் தூண்களையும், குளிர்ந்த முத்துச் சரங்களால் அலங்கரிக்கப்பெற்றமையால் வெண்ணிறத்தோடு விளங்கும் சன்னல்களின் முகப்புக்களையும் தெய்வ வடிவங்களையுடைய அழகிய வெயில் வீசுகின்ற மணிகள் பதித்த மாளிகைகளையும் விதானம் எனப்படும் மேற்கட்டிகளையும் உடைய அழகிய பொன்மயமான சந்திரகாந்தம் என்கின்ற பெயரையுடைய அழகிய நகரைப் புதுக்கி அமைத்தான்.

கு: சந்திரகாந்த நகரைப் பரதன் புதுக்கி அமைத்தவாற்றை விளக்கியவாறு. வாயின் தம்பத்தின் முகப்பின் மாளிகை என மாளிகைக்கு அடையாக்குக. இன்சாரியை நிற்க இரண்டனுருபுகள் மறைந்து நின்றன. தம்பம்-தூண். விம்பம்-வடிவம். சாளரம்-சன்னல். சன்னலின் அழகு புலப்பட முத்துமாலைகளைத் தொங்கவிட்டிருந்தார்கள் என்றவாறு.

**சந்திரகாந்த நகரில் சந்திரகேதுவை அரசனாக்கிவிட்டு மீண்டு பரதன் இராமனைத் தொழுதல்**

**வேறு**

1369 சந்திர கேதுவைத் தானை நான்குடன்
இந்திர னென்னமா நகரி ருத்தியே
பந்திவெம் பரியினிற் பரதன் மீண்டுவந்
தந்தமி லிராகவ னடியி றைஞ்சினான்.

சந்திர கேதுவைத் தானை நான்குடன்
இந்திரன் என்ன மாநகர் இருத்தியே
பந்தி வெம்பரியினில் பரதன் மீண்டு வந்து
அந்தம்இல் இராகவன் அடி இறைஞ்சினான்.

பொ: இலக்குவன் மகனாகிய சந்திரகேது என்பவனை நால்வகைச் சேனையுடன் அந்தச் சந்திரகாந்த நகர்க்கு மன்னன் என முடிசூட்டி இருக்கச் செய்துவிட்டு, குதிரைப் பந்தியிலுள்ள விரும்பத்தக்க குதிரையின் மேலேறிக் கொணடு, பரதன் திரும்பி அயோத்திக்கு வந்து, இறுதி இல்லாதவனாகிய இராமனுடைய திருவடிகளில் வணங்கினான்.

கு: இந்திரன்-மன்னன். பந்தி-குதிரைகள் கட்டுமிடம். குதிரைப்பந்தியில் இருந்த குதிரைகளுள் விரும்பத்தக்க ஒரு குதிரை மேல் ஏறிக் கொண்டு மீண்டு, அயோத்தியில் இராமனை வணங்கினான். அந்தம்-இறுதி. அவன் தெய்வநிலை நினைந்து 'அந்தமில்' என்றார். இராகவன் சொன்ன பணியை நிறைவேற்றினமை புலப்பட அவன் திருவடியில் வணங்கினான் என்க. (26)

## பரதன் தன்னொடு மன்னர்கட்கெல்லாம் விடைகொடுத்து இராமன் அரண்மனைக்குச் செல்லுதல்

1370 இயன்றவா றியம்பின னிருந்த காலையில்
பயின்றவேன் மன்னர்க்குப் பரதன் றன்னுடன்
வயின்றொறும் விடைகொடுத் தருளி மாமலை
குயின்றபொன் மணிமதிற் கோயி லெய்தினான்.

இயன்றவாறு இயம்பினன் இருந்த காலையில்
பயின்றவேல் மன்னர்க்குப் பரதன் தன்னுடன்
வயின்தொறும் விடைகொடுத்தருளி மாமலை
குயின்றபொன் மணிமதிற் கோயில் எய்தினான்.

பொ: சந்திரகாந்தத்து நிகழ்ந்ததைச் சொல்லிக் கொண்டு இருந்தபோது பரதனோடிருந்து போர் செய்து பயின்ற வேலைத் தாங்கிய அரசர்கட்கு அவர் அவர் இடங்கட்குச் செல்ல விடை

கொடுத்து அனுப்பிவிட்டுப் பெரிய மலைபோல் விளங்குமாறு செய்த, பொன்னாலும் மணியாலும் செய்த, மதிலோடுங்கூடிய அரண்மனையை அடைந்தான்.

கு: 'இயன்றவாறு' என்றது, சந்திரகாந்தத்துச் சந்திரகேதுவை மன்னனாக சிவந்த நிகழ்ச்சியை. பரதன் தன்னுடன் இருந்து என ஒருசொல் வருவிக்க. வயின்-இடம். 'மாமலை போன்று குயின்ற கோயில்' என இயையும். கோயில் என்றது, அரண்மனையை. (27)

## மானும் புலியும் ஒருதுறையில் நீருண்ண இராமன் ஆட்சி செய்தமை

1371 கனைகட லுலகெலாங் கலைகடம்மொடு
துனைபரி வல்லியந் துவன்றி நீருண
இனையநா ளாண்டர சியற்றி யெல்லுமிழ்
வனைகழ லிராகவன் மகிழ்ந் திருந்துழி.

கனைகடல் உலகு எலாம் கலைகள் தம்மொடு
துனைபரி வல்லியம் துவன்றி நீர்உண
இனைய நாள் ஆண்டு அரசு இயற்றி எல் உமிழ்
வனைகழல் இராகவன் மகிழ்ந்து இருந்துழி.

பொ: ஒலிக்கின்ற கடலால் சூழப்பட்ட உலகு எல்லாவற்றையும், மான்களோடு விரைந்த செலவினையுடைய புலிகள் ஒருதுறையில் நெருங்கியிருந்து நீரை உண்ணுமாறு, இவ்வளவு நாட்களும் ஆட்சி செய்து கொண்டு, அரசு செலுத்திக் கொண்டு, ஒளிவீசுகின்றதாய்ப் புனைந்த கழலினை அணிந்த இராமன் மகிழ்ந்து இருந்தபொழுது.

கு: கனைத்தல்-ஒலித்தல். கலைகள் என்றது, மான்களை. வல்லியம்-புலி. மானைக்கண்டுழி விரைந்து சென்று கொல்லும் அதன் இயல்பு புலப்பட 'துனைபரி வல்லியம்' என்றார். விரைகின்ற நடையினையுடைய புலி என்க. துவன்றி - நெருங்கி என்றது, ஒருதுறையில் பகைமை விடுத்து நெருங்கியிருந்து என்றவாறு. எல்-ஒளி. வனைதல் - புனைதல். இராமன், தன்னாட்சியில் விலங்கு

ரஜும் பகையின்றியிருத்தலைக் கண்டு மகிழ்ந்திருந்தான் என்றவாறு. (28)

## எமன் முனிவன் உருவத்தில் வருதல்

1372 தென்றிசைக் கடவுளுந் தேவ ரேவலால்
அன்றுதன் னுருவொழித் தயோத்தி மாநகர்க்
குன்றுநின் றனையதோர் கோயில் வாயிலில்
ஒன்றிய முனிவர னுருவங் கொண்டுளான்.

தென்திசைக் கடவுளும் தேவர் ஏவலால்
அன்றுதன் உருவு ஒழித்து அயோத்தி மாநகர்க்
குன்று நின்றனையதோர் கோயில் வாயிலில்
ஒன்றிய முனிவரன் உருவம் கொண்டுளான்.

பொ: தென்திசைக்குக் கடவுளாகிய எமனும், தேவர்களின் ஏவுதலால் அன்றைக்குத் தனது உருவத்தை நீக்கிவிட்டு, அயோத்தி மாநகரத்தில் மலைநின்றாற்போன்று உயர்ந்து நிற்கின்ற அரண்மனை வாயிலில், பொருத்தமான முனிவனது வடிவத்தைக் கொண்டு நிற்பான்.

கு: எமன் இராமனுடைய அரண்மனை வாயிலில் முனிவன் உருவம் கொண்டு நின்றான் என்றவாறு. இராமன் பூமிக்கு வந்த காரியம் முடிந்தது ஆதலின், தேவர்கள் எமனுக்கு அதனை நினைப்பித்து விரைவில் வைகுந்தம் வர ஏற்பாடு செய்தனர் என்க. தன்னுருவு ஒழித்து முனிவரன் உருவம் கொண்டுளான் என்க. (29)

## முனிவனுருவத்தில் வந்த எமன் வாயிற் காவலரை அழைத்தல்

1373 தடங்கைவேத் திரத்தினர் தழைத்த தாடியர்
அடங்குறு திடியென வார்க்குஞ் சொல்லினர்
மடங்கலை யனையவர் வரிந்த கச்சையர்
படம்புகு மிலேச்சரைப் பரிந்து கூவினான்.

தடம் கை வேத்திரத்தினர், தழைத்த தாடியர்
அடங்குறுது இடியென ஆர்க்கும் சொல்லினர்
மடங்கலே அனையவர் வரிந்த கச்சையர்
படம்புகு மிலேச்சரைப் பரிந்து கூவினன்.

பொ: பெரிய கையில் பிடித்த பிரம்பினை யுடையவர்களும், வளர்ந்த தாடியையுடையவர்களும், அடங்காமலும் இடிமுழக்கம் போல ஆரவாரிக்கும் சொல்லினையுடையவர்களும், சிங்கத்தைப் போன்ற தோற்றத்தையுடையவர்களும், இடையில் கட்டிய கச்சினையுடையவர்களும், சட்டையணிந்துள்ளவர்களும் ஆகிய மிலேச்சர்களாகிய காவலரை அன்புடன் அழைத்தான்.

கு: 'மிலேச்சர்' என்றது வாயிற்காவலரை. பிற நாட்டிலிருந்து வந்து பிற மொழி பேசுபவரைக் காவலராக அமைப்பது மரபு. வேத்திரம்-பிரம்பு. மடங்கல்-சிங்கம். வரிந்த-கட்டிய. 'படம்' என்றது, சட்டையை. அதன் வன்மை புலப்பட அதில் புகுதல் கூறினர். 'குப்பாயம் புக்கு மாக்கொளு என்றவழி' என்ற உரையாசிரியர் எடுத்துக்காட்டால் இதனை உணரலாம். (30)

## முனிவன் வந்துளான் என மன்னனுக்குச் சொல்க எனல்

1374 மறங்கிளர் கனல்விழி வாயில் காவலர்
இறங்கினர் தொழுதபி னிலங்கு நூலினன்
முறஞ் செவி யானையாய் முனிவன் வந்துநின்
புறங்கடை யானெனப் புகறிர் போயென்றான்.

மறம்கிளர் கனல் விழி வாயில் காவலர்
இறங்கினர் தொழுதபின் இலங்கு நூலினன்
முறஞ்செவி யானையாய் முனிவன் வந்து நின்
புறங்கடையான் எனப் புகறிர்போய் என்றான்.

பொ: வீரம் விளங்குகின்ற கனல் கக்கும் விழியினையுடைய வாயில் காவலர்கள், தலைவணங்கினராய்த் தொழுத பின்பு, விளங்குகின்ற முந்நூலினையுடைய முனிவன் (அவர்களை நோக்கி) நீங்கள் போய் (மன்னனைப் பார்த்து), 'முறம் போன்ற காதுகளை யுடைய யானைச்சேனையையுடையவனே! ஒரு முனிவன் வந்து நின்

வாயிற்புறத்தானாக இருக்கின்றான் எனச் சொல்லுங்கள் என்று சொன்னான்.

கு: காவற்காரரின் கண்களைப் பார்க்கும் போதே வீரம் புலப்படுதலின் 'மறங்கிளர்' எனவும், அவை சினத்தால் கனல் கக்குதலின் 'கனல்விழி' என்றும் கூறினர். 'இறங்குதல்' என்றது தலைவணங்குதலை. 'இலங்கு நூலினன்' என்றது, முந்நூலணிந்த முனிவனை. யானையின் செவிகள் பெரியவாதலின் முறத்தை அவற்றிற்கு உவமை கூறுதலுண்டு. புறங்கடை என்றது வாயிலை. புகறிர்-புகல்திர். போய்ப்புகறிர் என இயையும். (31)

## காவலர் இராமனிடம் சென்று சொல்லுதல்

1375 போயின காவலர் போற்றி மன்னவ
மேயின துறவி னோர் வேத மாமுனி
கோயிலின் மணிமதிட் கொடிகள்கோபுர
வாயினின் றனனென வணங்கிச் கூறினர்.

போயின காவலர் போற்றி மன்னவ
மேயின துறவின்ஓர் வேத மாமுனி
கோயிலின் மணி மதில் கொடிகள் கோபுர
வாயில் நின்றனன் என வணங்கிக் கூறினர்.

பொ: போன காவலர்கள் (இராமனைப் பார்த்து) மன்னனே! வணக்கம். துறவு மேற்கொண்டுள்ள ஒரு வேதம் உணர்ந்த சிறந்த முனிவன் நம் அரண்மனையில் உள்மணிகள் பதித்த மதிலைச்சார்ந்துள்ள கொடிகள் கட்டப்பெற்ற கோபுர வாயிலில் நின்றனன் என்று வணங்கிச் சொன்னார்கள்.

கு: போற்றி-வணக்கம். 'துறவின்மேயின ஓர் வேத மாமுனி' என இயையும். வாயிலின் இயல்பு வேண்டி, 'மணிமதிக் கொடிகள் கோபுர வாயில்' என்றார். மன்னவன்பால் பேசத் தொடங்கும்போதும் முழக்கும் போதும் போற்றி சொல்லுதலும் வணங்குதலும் மரபு. (32)

## இராமன் முனிவரைக் கொணர்க எனல்

1376 கடாசலக் களிற்றணிக் காவல் வேந்தனும்
விடாவருண் முனிவன்மேல் வைத்து மேதினி
அடாநெறி யவுணரை யறுப்ப தாதலால்
தடாதிரிங் கவன்றனைத் தருதி ராலென்றான்.

கடாசலக் களிற்றன் இக்காவல் வேந்தனும்
விடாஅருள் முனிவன்மேல்வைத்து, மேதினி
அடாநெறி அவுணரை அறுப்பது ஆதலால்
தடாதிர், இங்கு அவன்றனைத் தருதிரால் என்றான்.

பொ: மதம்சொரிகின்ற மலைபோன்ற களிற்றியானைகளையுடைய இராமனாகிய உலகைக் காவல் செய்கின்ற வேந்தனும், 'முனிவன்மேல் நீங்காத அருளை வைத்து, (நாம் அவதரித்தது) உலகில் அடாதவழியில்செல்லும் அரக்கர்களை அழிப்பதேயாதலின், (நாம் வந்த காரியம் முடிவுற்றது; நம்மை அழைத்துச் செல்ல உருமாறி வந்திருக்கின்ற) அம் முனிவனைத் தடுக்காதீர்கள்; 'இங்கு அழைத்து வாருங்கள்' என்றான்.

கு: கடாசலம்-மதம் சொரியும் மலை. இல்பொருளுவமம் இராமன் தனக்குள் சிந்தித்ததை யுணர்த்துவாராய், 'மேதினி அடாநெறி அவுணரை அறுப்பது ஆதலால் தடாதிர்' என்றார். 'நாம் இங்கு அவதரித்தது அடாநெறி அவுணரை அறுப்பது ஆதலால் வந்த காரியம் முடிந்தவுடன் எமன் நம்மை அழைக்க வந்தது முறையே' என இராமன் தன் ஞானக் கண்ணால் உணர்ந்து 'இங்கு அவன்றனைத் தருதிர்' என்று கூறினான். கண்ணால் உணர்ந்து இங்கு அவன்றனைத் தருதிர்; என்று கூறினான், என வேண்டுஞ்சொல் வருவித்து முடிக்க. ஆல்-அசை. (33)

---

மிகைப்பாடல்

33—அ. வரமுனி வருகென மன்னன் கூறலும்
உரைதரு மறையவ னெசிந்த நோக்கினன்
கரமலி குடையினன் கரகமேந்தினன்
முரிதரு நடையினன் முனிவன் மேவினான்.

## கவியின் கூற்று

1377 பாருடை மன்னனைப் படர்ந்து பையென
ஏருடை மறலிவந் தெய்திற் றுதலால்
நீருடை யுலகினி னிகழ்ந்து ளோர்க்கெலாம்
சேருமென் றறிந்துமா தவங்கள் செய்ம்மினே.

பார்உடை மன்னனைப் படர்ந்து பைஎன
ஏர்உடை மறலிவந்து எய்திற்று ஆதலால்
நீர்உடை உலகினில் நிகழ்ந்துளோர்க்கு எலாம்
சேரும் என்று அறிந்து மாதவங்கள் செய்ம்மினே.

பொ: பூவுலகைத் தனக்குச் சொந்தமாகக் கொண்டிருந்த மன்னனாகிய இராமனை நினைந்து மெல்ல அழகுடைய எமன் வந்து அடைந்தனன் ஆதலின், கடல்நீரால் சூழப்பெற்ற உலகத்தில் வாழ்வோர்க்கு எல்லாம் அந்த எமன் வந்து சேர்வான் என்பதனை அறிந்து பெரியதவங்களைச் செய்யுங்கள்.

கு: திருமாலின் அவதாரமாக வந்து உலகங் காக்கும் இராமனுக்கே எமன் வருவது தப்பவில்லையென்றால், மற்றை உலகவர்க்கு அவன் வருதலும், உயிரைக் கவர்தலும் தப்பாது ஆதலின், அதனை அறிந்து எமன் செய்யும் துன்பம் நீங்க வேண்டுமாயின், 'மாதவங்களைச் செய்யுங்கள்' என உலகவர்க்குப் புலவர் உபதேசம் செய்தவாறு. மறலி என்பதை அஃறிணைப் பெயராக வைத்துப்பேசியது ஆதலின், 'எய்திற்று' என அஃறிணை முடிபு கொடுத்தார். ஓர் என்பதற்கு உழவு செய்யும் எருமை எனக் கொண்டு எருமை வாகனத்தையுடைய எமன் என்றலும் ஆம். (34)

## இதுவுமது

1378 வள்ளலைச் சூலவேல் மறலி மாதவர்
கொள்ளுருக் கொண்டுயிர் கோடன் மேவலால்
ஒள்ளிய வுலகினி லுருவு கண்டபின்
எள்ளலிர் பிறரைநீர் யாவரேனுமால்.

வள்ளலைச் சூலவேல் மறலி மாதவர்
கொள்ளுருக் கொண்டு உயிர் கோடல் மேவலால்
ஒள்ளிய உலகினில் உருவு கண்டபின்
எள்ளலிர் பிறரைநீர் யாவ ரேனுமால்.

பொ: பகைவரிடத்தும் அன்பு காட்டி இன்றுபோய்ப்போர்க்கு நாளைவா என்று மொழிந்த வள்ளலாகிய இராமபிரானைச் சூலவேல் தாங்கிய எமன், பெருந்தவம் உடையவர் கொள்ளுதற்குரிய முனிவர் வேடம் கொண்டு, அவன் உயிர் கொள்ளுதற்கு வந்துவிட்டதால், ஒளிமிக்க இவ்வுலகத்தில் உருவத்தை மட்டும் கண்டதும் நீர் எத்தகையரேனும் பிறரை அற்பம் என இகழ்ந்து நினையாதீர்கள்.

கு: "உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க் கச்சாணி யன்னாருடைத்து" என்ற திருக்குறள் கருத்தைத் தழுவிக் கூறியது இச்செய்யுள். எமன் உயிர்கவர்தற்குரிய நிலையன் அல்லன் இராமன் என்பார், 'வள்ளலைச் சூலவேல் மறலி மாதவர் கொள்ளுருக் கொண்டு உயிர் கோடல் மேவலால்' என்றார். தவமறைந்து அல்லவை செய்யும் குற்றமுடையவன் மறலி என்பது புலப்படுத்தியவாறு. 'ஒள்ளிய உலகம்' என்பதற்கு, அறிவொளியை யுடைய உலகத்து எனக் கூறலும் ஆம். தீங்கு புரியாத முனிவர் உருத்தாங்கி வந்து எமன் இராமனது உயிரைப் பிரிக்கும் கொலைச் செயலைச்செய்ய எண்ணியதால் யாரையும் உருவத்தைக் கண்டு அற்பமென இகழாமல் செயலைக் கண்டபின்னரே முடிவு செய்தல் வேண்டும் என்பது விளக்கியவாறு. (35)

## முனிவனை இராமன் யாரைநீ என வினவல்

1379 ஓரில்வே றுவமையொன் றில்லை யுன்னையிவ்
ஆருநீ ருலகிற்கண் டறிந்த தில்லையால்
பாரையே றுறத்தரும் பதுமத் தோனலை
யாரைநீ யுரையென விராமன் பேசினான்.

ஓரில் வேறுஉவமை ஒன்று இல்லை; உன்னைஇவ்
ஆருநீர் உலகிற்கண்டு அறிந்தது இல்லையால்
பாரை ஏர் உறத்தரும் பதுமத்தோன் அலை
யாரைநீ உரை என இராமன் பேசினான்.

பொ : 'ஆராய்ந்து பார்க்குமிடத்து உனக்கு வேறு ஒன்று உவமையாவது இல்லை. இந்த நிறைந்த நீரையுடைய கடல் சூழ்ந்த உலகினில் உன்னைக் கண்டு அறிந்ததும் இல்லை. இவ்வுலகை அழகுறப் படைத்துத் தந்த தாமரைமலரில் தங்கியுள்ள பிரமனும் அல்லை; நீ யார்? சொல்' என இராமன் சொன்னான்.

கு: ஓர்தல்—ஆராய்தல். வந்த முனிவனுக்கு அம் முனிவனே உவமையாவதன்றிப் பிறிதொருவமை கூறவியலாது என்பார், 'வேறுவமை ஒன்று இல்லை' என்றார். 'ஆருநீர்' என்றது, நிறைந்த நீரையுடைய கடலை. இவ்வுலகத்தில் இத்தகைய ஒருவரை இதுகாறும் கண்டதும் இல்லை; பிரமன் என்றாலோ நான்கு தலைகள் இல்லாமையால் அவனுமில்லை; பின்பு நீ தான் யார்? என வினவியவாறு. யாரை என்புழி ஐகாரம். 'சாரியை வண்டறைக் கொன்றையான் முன் வந்து நீ யாரை யென்றான்' (பரஞ். திருவிளையாடல்; விறகு விற்ற படலம்). (36)

## பிரமன் சொல்லியவாறு செய்வேன் என முனிவன் கூறுதல்

1380 தூயவ னிராமனைத் துணிந்து நோக்கியம்
மாயவா னுருவுடை மறலி யாமுனி
சேயவா மதுமலர்த் திசைமு கத்திஞேன்
ஏயவா செய்வனென் றெடுத்துக் கூறினான்.

தூயவன் இராமனைத் துணிந்து நோக்கி அம்
மாயவா னுருவுடை மறலியாம் முனி
சேயவா மதுமலர்த் திசைமுகத்தினேன்
ஏயவா செய்வனென்று எடுத்துக் கூறினான்.

பொ : தூயவனுகிய இராமனைத் துணிவுடன் பார்த்து, அந்தப் பொய்யான உயர்ந்த முனி உருவத்தைத் தரித்து வந்துள்ள எமனுகிய முனிவன், 'செம்மை நிறமுடைய தேனைக் கொண்டுள்ள தாமரை மலரின்கண் உள்ள நான்முகன் ஏவியபடி செய்வேன்' என்று குரலை உயர்த்திச் சொன்னுன்.

கு : இதுகாறும் இராமனை அவ்வாறு துணிந்து பார்த்துப் பேசியவர்களில்லை. ஆதலின், 'துணிந்து நோக்கி' என்ருர். எமன் தாங்கியுள்ள உருவம் மாய உருவம் ஆதல் புலப்படவும், அவ்வுருவின் உயர்ச்சி புலப்படவும் 'மாயவான் உருவுடை மறலி' என்ருர். சேயவா மது எனத் தேனுக்கு அடையாக்குக. திசை முகத்திறேன் - பிரமன். நான்முகன் என்றவாறு. தானே தலைவனுய் நினைந்து செய்யும் செயலன்று என்பான், 'திசை முகத்திறேன் ஏயவா செய்வன்' என்ருன். எமன், பிரமன் ஏவலால் இராமனை அழைக்க வந்தான் என்பது புலப்படும். 'எடுத்துக் கூறினுன்' என்பது, குரலை உயர்த்திச் சொன்னுன் என்னும் பொருளது. (37)

## எமன் கூறுவது

1381 உரைப்பதொன் றுளதுனக் கொருங்கு
யாமிவண்
இருப்பது காண்பவர் யாவ ராயினும்
குரைத் தருங் கழலினுய் கோறி யென்று தேன்
இரைத் தபைந் துளவினுற் கெடுத்துக் கூறினுன்.

உரைப்பது ஒன்று உளது உனக்கு ஒருங்கு யாம்இவண்
இருப்பது காண்பவர் யாவ ராயினும்
குரைத்தருங் கழலினுய் கோறி என்று தேன்
இரைத்த பைந்துளவினுற்கு எடுத்துக் கூறினுன்.

பொ: (எமன்) 'உனக்குச் சொல்ல வேண்டியது ஒன்று உளது. நாம்இங்கு ஒருங்கே இருப்பதை வந்து காண்பவர் யாவராயினும் ஒலிக்கின்ற வீரக்கழலினையுடையவனே! அவரைக் கொல்க!' என்று வண்டுகள் ஒலிக்கின்ற பசுமையான துளபமாலை அணிந்த இராமனுக்கு எடுத்துச் சொன்னுன்.

கு: குரை—ஒலி. 'ஒலிக்கின்ற வீரக் கழலினை அணிந்தவனே!' என்ற விளி இராமனது வீரச் செயலைக் குறிப்பிட்டபடி. கோறி-கொல்லுதி. 'நாம் இருவரும் தனித்துப் பேசிக் கொண்டிருப்பதை யாரும் காணக்கூடாது. அப்படி யாரேனும் கண்டுவிட்டால் அவர்கள் யாவரராக இருந்தாலும் அவர்க்குக் கொலைத் தண்டம் கொடுக்க வேண்டும்' என எமன் உறுதியாகக் கூறினான். தேன் என்பது ஒருவகை வண்டிற்குப் பெயர். (38)

## இலக்குவனை வாயில் காக்கச் செய்தல்

1382 இனையமா முனியுரைக் கிசைந் திலக்குவன்
தனைமுக நோக்கியே தாரி ராகவன்
எனையவ ராயினு மெய்து றுவகை
கனைமணி வாயிலைக் காத்தி யாலென்றான்.

இனைய மாமுனி உரைக்கு இசைந்து இலக்குவன்
தனைமுகம் நோக்கியே தார் இராகவன்
எனையவர் ஆயினும் எய்துறுவகை
கனைமணி வாயிலைக் காத்தியால் என்றான்.

பொ: மாலையணிந்த இராமன் இத்தகைய உள்ளமுடைய முனிவனது சொல்லுக்கு இசைந்து, இலக்குவனது முகத்தைப் பார்த்து, 'எத்தகைய உயர்ந்தோராயினும் இந்த இடத்திற்கு வராதபடி மணிகள் நெருங்கப் பதித்த வாயிலைக் காத்துக் கொண்டிருப்பாயாக' என்று கூறினான்.

கு: முனிவனாக வந்துள்ள எமனது உள்ளத்தியல்பை விளக்க வேண்டி, 'இனைய மாமுனி யுரைக்கு' என்றார். இலக்குவனது முகத்தைப் பார்த்து என உருபு மயக்கமாக்குக. இனி இலக்குவன் தனை முகத்தின்கண் என ஏழனுருபு விரித்தலும் ஆம். காத்தி, ஏவல் வினைமுற்று. (39)

## இலக்குவனை வாயிலில் காவலனாக்கி இராமன் முனிவனை மொழிக எனல்

1383 இளவலைக் காவலி னேவி யேடலர்
தளையவிழ் மதுமலர்த் தாரி ராகவன்
உளமகிழ்ந் தருளிநீ யுரைத்தி யாலெனக்
கொளைமறை முனிவனைக் குறித்து நோக்கினான்.

இளவலைக் காவலின் ஏவி ஏடு அலர்
தளை அவிழ் மதுமலர்த் தார் இராகவன்
உளமகிழ்ந்து அருளி நீ உரைத்தியால் எனக்
கொளைமறை முனிவனைக் குறித்து நோக்கினான்.

பொ: இளவல் இலக்குவனை வாயிற் காவல் செய்யுமாறு ஏவிவிட்டு, இதழ்கள் அலர்ந்து கட்டவிழ்ந்த தேனையுடைய மலர்மாலை யணிந்த இராமன் மனமகிழ்ந்தருளி 'நீ சொல்வாயாக' என, இசையொடு கூடிய வேதம் வல்ல முனிவன் வேடம்பூண்ட எமனைக் குறித்துப் பார்த்தான்.

கு: ஏடவிழ்மலர், தளைஅவிழ்மலர், மதுமலர் எனத் தனித் தனி அடையாக்குக. ஏடு–இதழ். தளை-கட்டு. கொளை-இசை. மறைக்கு அடை. முனிவன் வேடத்திற்கேற்ப மறை கூறினார். 'உரைத்தி, என வாயால் கூறியதோடு பார்வையாலும் அப் பொருள்பட நோக்கினான் என்க. (40)

## முனிவன் தான் எமன் என்பதைப் புலப்படுத்துதல்

1384 மந்திர முதுமொழி மறைவ லாளனும்
கொந்தலர் தாரவர்க் குறித்து நோக்கிநின்
றந்தமில் வுலகினுக் களப்ப தாயுள
வெந்திறற் கூற்றென விளங்கக் கூறினான்.

மந்திர முதுமொழி மறைவலாளனும்
கொந்தலர் தாரவர்க் குறித்துநோக்கி நின்று
அந்தம் இவ்வுலகினுக்கு அளப்பநாய் உள
வெந்திறல் கூற்றுஎன விளங்கக் கூறினன்.

பொ: மந்திரங்களாகிய முதுமொழிகளையுடைய வேதத்தில் வல்லவனாகிய முனிவனும், கொத்துக் கொத்தாக மலர்ந்த மாலையை அணிந்த இராமனைக் குறித்து நோக்கி நின்று, அந்தம்-இறப்பு, இந்த உலகத்தோர்க்கு எப்போதுவரும் என்பதை இராமனுக்கு விளங்குமாறு கூறினன்.

கு: எமன் முனிவன் வேடத்தில் வந்துள்ளமையால் அவ் வேடத்திற்கேற்ப 'மந்திர முதுமொழி மறைவலாளனும்' என்றார். மந்திரமாகிய முதுமொழி என இருபெயரொட்டாக்குக. 'கொந்நலர் தார்' என்றது கொத்துக் கொத்தாக மலர்கின்ற துளபமாலையை. அந்தம்-இறுதி. எமன் உலகில் உள்ள மக்கள் ஒவ்வொருவரின் ஆயுளையும் எண்ணிப் பார்த்து உயிர் கவர்கின்ற வன் என்பதை 'சாற்று நாளற்ற தெண்ணித் தருமம் பார்த்து ஏற்றும் விண்' (தாடகைவதைப்) என முன் விளக்கப்பட்டிருத் தலால் அறியலாம். இவ்வுலகினுக்கு அந்தம் அளப்பவன். எனவே, இவ்வுலகிற் பிறந்துள்ள இராமனுக்குரிய ஆயுளை அளந்து பார்ப் பதற்கு உரியவனும் தானே என்பது புலப்படுத்தியவாறு. (41)

## எமன் கூறியது

1385 அந்தத் திசைநான் முகனை யடைவே
பந்தப் பழநான் மறைபா டினனுன்
உந்திக் கமலத் திடையுற் பவனாய்
வந்திப் புவியே ழும்வகுத் தனனால்.

அந்தத் திசைநான் முகனைய் அடைவே
பந்தப் பழநால் மறை பாடினன் உன்
உந்திக் கமலத்து இடை உற்பவனாய்
வந்து இப்புவி ஏழும் வகுத்தனனால்.

பொ: அந்தத் திசைகள் நான்குக்குப் பொருந்த நான்கு முகம் உடையவனாய் முறையாகச் சீரோடு சீர் இறையுங்கால் அமையும். பந்தத்தையுடைய நான்கு வேதங்களையும் பாடினவனாகிய பிரமன், உனது உந்தித் தாமரையிற் பிறந்து வந்து இந்த உலகு ஏழினையும் படைத்தான்.

கு: இராமனது முன்னைய தெய்வ நிலையை நினைந்து 'உன் உந்திக் கமலத்திடை உற்பவனாய்' என்றார். புவியின் நான்கு திசைகளையும் பார்த்தற்கேற்பப் பிரமன் நான்கு முகங்களை யுடையனாகத் தோன்றினன் என்றவாறு. அந்தத் திசை என்புழிச் சுட்டு உலகறிசுட்டு. பந்தம் என்றது வேதப்பாடல்களில் சீரோடு சீர் சேரும் இடத்தில் அமையும் தளையினை. நான்மறையின் தொன்மை புலப்படப் 'பழநான்மறை' என்றார். உற்பவனாய்—பிறந்தவனாய். புவியேழு என்றது ஏழுலகங்களை. வகுத்தல்—படைத்தல். (42)

1386 அன்னா னுரைசெய் ததமைந் தனைகேள்
என்னா லுமெதிர்ந் திமையோர் கள்கணம்
தன்னா லுமளப்பரி தாய்வரன்
மன்னா கமெடுத் ததோர்மா வலியான்.

அன்னான் உரைசெய்தது அமைந்தனைகேள்
என்னாலும் எதிர்ந்து இமையோர்கள் கணம்
தன்னாலும் அளப்பு அரிதாய அரன்
மன் ஆகம் எடுத்தது ஓர் மாவலியான்.

பொ: அத்தகைய பிரமன் உனக்குச் சொல்லுமாறு சொன்னது ஆதலால் மனம் அமைந்து கேட்பாயாக. 'மூவரில் ஒருவன் என எண்ணப்படும் என்னாலும்' தேவர்களின் கூட்டம் தன்னாலும், எதிர்ப்பட்டும் அளந்து காண்டற்கு உரியவனாகிய சிவனே நிலை பேறுடைய உடம்பை எடுத்தாற்போன்ற ஒப்பற்ற பெரிய வலிமையுடையவன்'.

கு: பிரமன் கூறியதையே எமன் இங்குக் கொண்டு கூறுகின்றான் ஆதலின் 'என்னாலும்' என்றது, பிரமன் தன்னைக் கூறிக் கொண்டதாகக் கொள்வதே பொருத்தம் உள்ளது ஆகும்.

சிவபிரானின் ஒளிப்பிழம்பின் அடிமுடி காணவேண்டி முயன்று அளப்பரியவன் அவன் என்பதைத் தெளிந்தவன் பிரமனே ஆதலின், 'என்னுலும் எதிர்ந்திமையோர்கள் கணம் தன்னுலும் அளப்பரிதாயவன்', எனத் தன் அனுபவத்தைச் சொல்லுதற் குரியவன் அவனே ஆதல் தெளிவு. யாராலும் அளத்தற்கரிய சிவனே ஓர் வடிவெடுத்தாற் போன்ற பெரிய வலிமையுடையவன் இராவணன் என்றது, தற்குறிப்பேற்ற உவமை. மன்-நிலைபேறு. ஆகம்-உடம்பு. (43)

1387 வில்லார் கதிர்வெண் மதிமீ துசெலா
எல்லார் மதில்சூ ழுமிலங் கையர்கோன்
மல்லார் புய மா வலிமா னவரின்
அல்லா துலையா ததொரா யுளினுன்.

வில்லார் கதிர்வெண் மதிமீது செலா
எல்லார் மதில்சூழும் இலங்கையர் கோன்
மல்லார் புயமாவலி மானவரின்
அல்லாது உலையாதது ஓர் ஆயுளினுன்.

பொ: ஒளிவாய்ந்த சூரியனும் சந்திரனும் மேலே இயங்கப் பெறுததும் ஒளிமிக்க மதியால் சூழப்பெற்றதும் ஆகிய இலங்கையில் வாழும் அரக்கர்க்குத் தலைவனுகிய இராவணன், மல் தொழிலில் பயின்ற தோள்களையுடைய மிக்க வலிமையுடைய மானிடரால் அல்லது அழியாததாகிய ஒப்பற்ற ஆயுளை யுடையவன்.

கு: வில்-ஒளி. கதிர் என்றது சூரியனை. எல்-ஒளி. பொன்னி னும் மணியினும் புனைந்த மதிலாதனின் 'எல்லார் மதில்' எனச் சிறப்பித்தார். இருசுடரும் மீது செலாக் குறையை இலங்கை மதிலே நிறைசெய்யும் என்பது குறிப்பு. இலங்கைமீது சூரியன் செல்லான் என்பதை "முன்னம் யாவரும் இராவணன் முனியுமென்றெண்ணிப் பொன்னின் மாநகர்மீச் செலான் கதி ரெனப் புகல்வார்" (சுந்தர. ஊர்தேடு—21) என்ற செய்யுளால் அறியலாம். 'மாவலி மானவரின் அல்லாது உலையாததோர் ஆயுளினுன்' என்றது, இராவணனை. இராவணன் தவம் செய்து

வரம் பெற்ற போது மானிடரால் தனக்கு மரணம் வரலாகாது என வரம் வேண்டிலன். ஆதலின் அம்மனிதரால் உலையும் ஆயுளையுடையவன் என்பது அருத்தாபத்தியால் பெறப்படும். 'ஏறிய நெடுந்தவ மிழைத்த வெல்லைநாள், ஆறியபெருங்குணத் தறி வஞ்ஜையால், கூறிய மனிதர்பால் கொற்றம் கொள்ளலை, வேறினியவர் வயின் வென்றி யாவதோ?'(யுத்த-இராவணன் மந்திரப்-78) என வீடணன் கூறியது இங்கு நினையலாம். உலைதல்-ஒழிதல். (44)

1388 தாமந் திகழ்சென் சடையோ னிடையே
வாமஞ் சுடர்வா ளதுபெற் றனனால்
ஏமந் திகழ்கின் றவிரா வணனும்
நாமந் திசைநாலு நடந் துடையான்.

தாமம் திகழ் செஞ்சடை யோனிடையே
வாமம் சுடர்வாளது பெற்றனன் ஆல்
ஏமம் திகழ்கின்ற இராவணனும்
நாமம் திசைநாலும் நடந்துடையான்.

பொ: கொன்றை மாலை விளங்குகின்ற சிவந்த சடையையுடைய சிவபிரானிடம் அழகும் ஒளியுடைய வாளினைப் பெற்றனன்; மேலும் இன்பம் விளங்குகின்ற இராவணன் என்னும் தன் பெயர் நான்கு திசையிலும் பரவுமாறு செய்த வீரச் செயலுடையவன்.

கு: தாமம்-மாலை. இங்கும் கொன்றை மாலையை உணர்த்தியது. 'செஞ்சடையோன்' என்றது, சிவபிராமனை. ஏமம்-இன்பம். கைலை-மலை எடுத்த ஞான்று மலையின் கீழ் அகப்பட்டு வருந்தியவன். சாமகீதம் பாடினனாக இறைவன் மகிழ்ந்து, சந்திரகாசம் என்னும் வாளைக் கொடுத்தான் என்பது வரையெடுத்த படலத்துக் கண்டது. 'எவ்வகைப்படையும் வெல்லும் சந்திரவாளுமீந்தான்" (வரையெடுத்தபடலம்-75) என்றது காணலாம். (45)

1389 அன்ற னுயிர்கொள் வதமைந் தயில்வேல்
மன்ன கதிரோன் வருமா மரபில்
பன்ன கணையோ டுபயோ ததியும்
பின்ன கவிகந் துபிறந் தனையால்.

அன்றன் உயிர்கொள்வது அமைந்து அயில்வேல்
மன்ன, கதிரோன் வரும் மாமரபில்
பன்னகணையோடு பயோததியும்
பின்ஆக இகந்து பிறந்தனையால்.

பொ: 'கூரிய வேலையுடைய அரசனே! அந்த இராவணனது உயிர்கொள்வதற்கு ஆக மனம் அமைந்து சூரியன் முதலாக வரும் சிறந்த சூரிய குலத்தில் பாம்பணையோடு பாற்கடலும் பின்தங்கி நிற்க அந்தப்பாற்கடலைக் கடந்து வந்து பிறந்தாய்.'

கு: 'கொள்வது அமைந்து மாமரபில் பிறந்தனை' என இயையும். 'பன்னக அணை' எனவரற்பாலது. பன்னக அணை என எதுகைநோக்கி நீட்டல் விகாரம் பெற்றது. இனிப் பல் நாக அணை எனப் பிரித்து, பல்லையுடைய நாக அணை எனப் பொருள் கூறலும் ஆம். பயோததி - பயஉத்தி என்பதன் திரிபு. இது குணசந்தி எனப்படும். பாம்பணையும் பாற்கடலும் விடுத்து என்பார் 'பின்னக இகந்து' என்றார். இகத்தல்-கடத்தல். (46)

1390 அவ்வா றுமுடித் தனையா தலினின்
மெய்வா னுலகெய் துதல்வேண் டுமென
இவ்வா றுரைசெய தனனிங் கிதுவே
செய்வா யெனநின் றுரைசெய் தலுமே.

அவ்வாறு முடித்தனை ஆதலின், நின்
மெய்வான் உலகு எய்துதல் வேண்டும் என
இவ்வாறு உரை செய்தனன் இங்கு இதுவே
செய்வாய் என நின்று உரை செய்தலுமே.

பொ: 'அவ்வாறே நினைத்ததை முடித்து விட்டாய் ஆதலால், இனி நின் உண்மையான இடமாகிய வைகுந்தத்தைச் சேர வேண்டும் என்று இவ்வாறு சொன்னன் பிரமன். ஆதலின்,

இவ்விடத்து இதனையே செய்வாயாக' என்று எமன் நின்று சொல்லுதலும்.

கு: அடுத்த செய்யுளில் முடியும். குளகம். 'இராவணனை உயிர்கொள்ள விரும்பிய அவ்வாறே செய்துமுடித்தாய் ஆதலின், வந்த காரியம் முடிவுபெற்றது. இனி நின் உன்ரமையான வைகுந்தம் என்ற விண்ணுலகத்திற்கு வந்து சேரவேண்டும் என்று இவ்வாறு பிரமன் உரைசெய்தனன், என எழுவாய் வருவித்துரைக்க. 'இதுவே செய்வாய்' என்றது, எமனுடைய கூற்று. (47)

## துருவாச முனி வருதல்
## வேறு

1391 இலங்குமலர்ப் பசுந்தண்டா ரிராகவன்ற
னெழுபரித்தேர்
வலங்கிளர்செங் கனகமதில் மாளிகையின்
மணிவாயில்
அலங்கியசெங் கனல்வேள்வி யத்திரிதன்
திருப்புதல்வன்
துலங்கியநூற் றுருவாச னெனுமுனிவன்
றோன்றினனால்,

இலங்குமலர்ப் பசுந்தண்தார் இராகவன்தன் எழுபரித்தேர்
வலம்கிளர் செங்கனக மதில் மாளிகையின் மணிவாயில்
அலங்கிய செங்கனல்வேள்வி அத்திரிதன் திருப்புதல்வன்
துலங்கிய நூல்துருவாசன் எனுமுனிவன் தோன்றினனால்.

பொ: விளங்குகின்ற மலர்களாலாகிய பசுமையான குளிர்ந்த மாலை அணிந்த, இராமனுடைய ஏழு குதிரைகள் பூட்டப் பெற்ற தேர், வலிமையோடு விளங்கிக் கொண்டுள்ள பொன்னா லியன்ற மதிலால் சூழப்பட்ட மாளிகையினது, மணிகள் பதித்த கதவினையுடைய வாயிலின்கண் அசைகின்ற இயல்பினையுடைய, சிவந்த கனலில் செய்த வேள்விகளையுடைய அத்திரி முனிவரின்

திருப்புதல்வனாகிய விளக்கமான நூலறிவுடைய துருவாசன் என்கின்ற முனிவன் வந்து தோன்றினான்.

கு: அன்றலர்ந்த மலர்களால் இயன்ற மாலை ஆதலின், 'பசுந்தண்டார்' எனப்பட்டது. சூரிய குலத்தில் தோன்றிய இராமனும், சூரியனைப் போலவே ஏழுகுதிரைகள் பூட்டிய தேரையுடையவனாக இருந்தான் எனக் கொள்க. இராமன் மாளிகைக்கு முன்பு ஏழுபரி பூட்டிய தேர் வலிமை தோன்ற நின்றது எனக் கொள்க. எரிகின்ற கனலின் இயல்பு புலப்பட 'அலங்கிய செங்கனல்' என்றார். வேள்விகளைச் செய்த அத்திரி என்க. துருவாச முனிவன் இராமன் மாளிகை வாயிலில் வந்து தோன்றினான் என்றவாறு. துலங்கியநூல் என்பதற்கு விளக்கமுடைய முந்நூல் எனப் பொருள் கூறலும் ஒன்று. (48)

## துருவாசர் இலக்குவனை விளித்துக் கூறியது

1392 ஏற்றரிய சிலைத்தடக்கை யிலக்குவவே லிராகவன்பால்
ஊற்றமுள தொருமாற்ற முரைப்பதுள தாதலினால்
போற்றரிய வரமுனிநின் புறங்கடையி னானென்று
சாற்றுகைநின் கடனென்னச் சதுமறையோ னுரைசெய்தான்.

ஏற்றரிய சிலைத்தடக்கை இலக்குவ வேல் இராகவன்பால்
ஊற்றம் உளது ஒரு மாற்றம் உரைப்பது உளது ஆதலினால்
போற்றரிய வரமுனி நின்புறங் கடையினான் என்று
சாற்றுகை நின் கடன் என்னச் சதுமறையோன் உரைசெய்தான்.

பொ: 'நாணேற்றியுள்ள வெல்லுதற்கு அரிய வில்லை ஏந்திய பெரிய கையையுடைய இலக்குவ! வேலேந்திய இராமனிடத்தில் உறுதியானதொரு சொல் உரைக்க வேண்டியுளது. ஆதலால்,

போற்றுதற்கரிய மேன்மையுடைய முனிவன் நின் வாயிற் புறத்தான் என்று சொல்லுதல் நினது கடன்' என்று நான்கு வேதங்களையும் உணர்ந்த முனிவன் சொன்னான்.

கு: 'சதுமறையோன்' என்றது, நான்கு வேதங்களையுமுணர்ந்த துருவாசமுனிவரை. தன் வரவை இராமனுக்கு உணர்த்த வேண்டும் என்பது துருவாசரின் வேண்டுகோள். ஏற்று சிலை, அரிய சிலை எனத்தனித்தனி இயையும். எப்போதும் நாணேற்றியேயிருக்கும் வில், கிடைத்தற்கரிய வில் என்க. இனி, பிறரால் நாணேற்றி வளைத்தற்கரிய வில் எனப் பொருள் கூறலும் ஆம். ஊற்றம்-உறுதி. மாற்றம்-சொல். தன்னைப் பற்றி முன் அறியாதோரிடத்தில் தன்னைப் புகழ்தலும் தகும் ஆதலின் 'போற்றரிய வரமுனி' எனத் தன்னைப் புகழ்ந்து கூறினான் துருவாச முனிவன். புறங்கடை என்றது, வீட்டிற்கு முன்னுள்ள புறவாயிலை. இலக்குவன் வாயில் காப்போனாக அமைந்துள்ளமையால் 'வரமுனி நின் புறங்கடையினான் என்று சாற்றுகை நின் கடன்' என முனிவர் கூறினார். புறங்கடையில் நிற்றற்குரியரல்லர் என்பது புலப்பட 'வரமுனி' என்ற சொல் அமைந்துள்ளமை காணலாம். (49)

## இலக்குவன் கூறியது

1393 வேனிரைத்த தெனவிளங்கும் வெண்பூவார் வியன்கரும்பிற்
றேனிரைக்கும் பொழிற் கங்கைத் திருநாடன் றிருத்தம்பி
பானிரைத்த வெண்புரிநூற் பழமறையோய் குறையாமல்
யானுரைத்த படிமுடிப்பெ னியம்புதியென் றிறைஞ்சினான்.

வேல்நிரைத்த என விளங்கும் வெண்பூவா வியன்கரும்பின்
தேன்இரைக்கும் பொழில் கங்கைத் திருநாடன் திருத்தம்பி
பால்நிரைத்த வெண்புரிநூல் பழமறையோய், குறையாமல்
யான் உரைத்தபடி முடிப்பேன், இயம்புதி என்று இறைஞ்சினான்.

பொ: வேற்படைகளை வரிசையாக வைத்தாற்போன்று விளங்குகின்ற வெண்மையான பூக்கள் நிறைந்துள்ள பெரிய கரும்புகளையும், தேன்வண்டுகள் ஒலிக்கின்ற பொழிலினையும் உடைய கங்கையாறு பாய்கின்ற திருநாட்டினையுடைய இராமனுடைய திருத்தம்பியாகிய இலக்குவன், (முனிவரை நோக்கி,) 'பாலினை வரிசையுற வார்த்தாற்போன்ற வெண்மை யான ஒன்பது கொண்ட மூன்று புரியாகிய பூணூலையுடைய பழைய வேதங்களை யுணர்ந்த முனிவரே! நீவிர் உரைத்தபடியே குறையாமல் யான் முடிப்பேன்; வேண்டுவது சொல்லுக' என வணங்கினன்.

கு: கரும்பின் பூக்கள், வேல்களை வரிசைப்பட வைத்தாற் போன்ற தோற்றமுடையனவாதலின் இங்ஙனம் உவமை கூறினர். 'கரும்பின் வேல்போல் வெண்முகை பிரிய' (நற்றிணை-366) என்பது இங்கு ஒப்புநோக்கத்தகும். தேன் என்பது ஒரு வகை வண்டுக்குப் பெயர். கரும்பின் திருநாடு, தேனிரைக்கும் பொழில் திருநாடு, கங்கைத் திருநாடு, எனத் தனித்தனி இயையும். 'திருநாடன்' என்றது, கோசலநாட்டையுடைய இராமனை. நாட்டின் வளங்கூறி நாட்டின் தலைவன் செங்கோன்மையைப் புலப்படுத்தியவாறு. (50)

## துருவாச முனிவரின் கோபம்
### வேறு

1394 முனிவ னெஞ்சின் முனிந்துநின் முன்னவர்க்
கினைய வென்வர வின்றியம் பாயெனின்
துனைய புங்கடந் தொல்குல மாள்வதோர்
அனைய சாப மளிப்பெனென் றோதினன்.

முனிவன் நெஞ்சின் முனிந்து நின்முன்னவர்க்கு
இனைய என்வரவு இன்று இயம்பாய் எனின்
துனைய உங்கள்தம் தொல்குலம் மாள்வதோர்
அனைய சாபம் அளிப்பென் என்று ஓதினன்.

பொ: இலக்குவனது சொல்லைக்கேட்ட துருவாச முனிவன், நெஞ்சில் கோபங்கொண்டு, 'நின்முன்னவனாகிய இராமனுக்கு இத்தகைய எனது வருகையை இப்போது நீ சொல்லாய் எனின், விரைந்து உங்களுடைய பழமையான குலம் மாள்வதாகிய அத்தகைய பெரிய சாபத்தை அளித்துவிடுவேன்' என்று சொன்னான்.

கு: 'முன்னவன்' என்றது, அண்ணனாகிய இராமனை. துனைய-விரைய. மனுமுதலாக வந்த பழைமை புலப்படத் 'தொல்குலம்' என்றான். அத்தகைய பெரிய சாபம் என்க. (51)

## அதுகேட்டு இலக்குவன் நடுங்குதல்

1395 வண்ண நான்மறை மாமுனி கூறலும்
துண்ணெ னெஞ்சின னாகித் துணிவுடன்
எண்ணி யின்ன திராமற்கு மாகுமென்
றண்ணல் வேலவ னஞ்சி நடுங்கினான்.

வண்ணநான் மறை மாமுனி கூறலும்
துண்என் நெஞ்சினனாகித் துணிவுடன்
எண்ணி இன்னது இராமற்கும் ஆகும் என்று
அண்ணல் வேலவன் அஞ்சி நடுங்கினான்.

பொ: சந்தங்களையுடைய, நான்கு வேதங்களிலும் வல்ல பெரிய முனிவன் அவ்வாறு கூறுதலும், பெருமை வாய்ந்த வேலினையுடைய இலக்குவன், திடுக்கிட்ட நெஞ்சினையுடையனாகித் துன்பத்துடன் எண்ணிப் பார்த்து, இச்சாபம் இராமனுக்கும் ஆகுமே என்று அஞ்சி நடுங்கினான்.

கு: வண்ணம்-சந்தம். வேதத்தில் சந்தங்கள் பல இருத்தலின் 'வண்ண நான்மறை' என்றார். துனிவு—துன்பம். இன்னது என்றது, இந்த சாபத்தை. அண்ணல்வேலவன் என்றது, 'தீயாரை மட்டும் ஒறுக்கும்வேல்' என்பது புலப்பட நின்றது. துருவாச முனிவரை அது கொண்டு ஏதும்செய்யாமையும் நினைக. (52)

## இலக்குவன் எண்ணிய நிலையாமை

1396 புன்னு னைப்பனி நீரும் பொழிமழை
மின்னு மம்மழை மேவிய மொக்குளும்
அன்ன வின்ன நிலையில யாக்கைகள்
என்ன வெண்ணி யிளவலு மேகினன்.

புல்நுனைப் பனிநீரும் பொழிமழை
மின்னும் அம்மழை மேவிய மொக்குளும்
அன்ன இன்ன நிலைஇல யாக்கைகள்
என்ன எண்ணி, இளவலும் ஏகினன்.

பொ: புல்லின் நுனியில் தேங்கி நிற்கும் பனிநீரும், மழை பொழிகின்ற மேகத்தில் உள்ள மின்னலும், அந்த மழையால் உளதாகிய நீரில் எழுகின்ற மொக்குளும் போன்றன இந்த நிலையிலாத உடம்புகள் என்று எண்ணி இலக்குவனும் சென்றான்.

கு: துருவாச முனிவனால் அச்சுறுத்தப் பெற்ற இலக்குவன் யாக்கைகளின் நிலையாமையை எண்ணி வருந்திக்கொண்டு இராமன்பால் சென்றான் என்க. புல்லின்நுனியில் உள்ள பனி நீர், சூரியனைக் கண்டவுடன் இல்லையாகும். மேகத்தில் தோன்றும் மின்னல், சிறிது நேரத்தில் மறையும் இயல்பினது. மழையால் நீரில் உண்டாகும் மொக்குள், விரைவாக உடைந்து மறைந்து விடும். இம்மூன்றும் யாக்கை நிலையின்மையை யுணர்த்த வந்த உவமைகள். (53)

## துருவாசன் வரவை இராமனுக்குச் சொல்லுதல்

1397 பொறைமலி யத்திரி புதல்வன் போதமா
மறைமுனி வந்துநின் வாயிலோனெனக்
குறைமலி கூற்றுவன் மாற்றம் கொள்ளுறும்
இறைவனை யடிதொழு திளவல் கூறினன்.

பொறைமலி அத்திரி புதல்வன் போதமா
மறைமுனி வந்து நின் வாயிலோன் எனக்
குறைமலி கூற்றுவன் மாற்றம் கொள்ளுறும்
இறைவனை அடிதொழுது இளவல் கூறினான்.

பொ: 'பொறுமை நிறைந்த அத்திரி முனிவன் புதல்வனாகிய ஞானத்தில் சிறந்த துருவாசன் என்கின்ற வேதம் வல்ல முனிவன், நின் வாயில் வந்துள்ளான்' என்று, பிரமன் சொன்ன காரியம் நிரம்பக் கொண்டுள்ள கூற்றுவனது சொற்களைக் கேட்டுக் கொண்டிருக்கும் இராமனை அடிவணங்கி, இலக்குவன் சொன்னான்.

கு: 'பொறைமலி அத்திரி' எனச் சிறப்பித்தது, அவன் புதல்வனுக்கு அந்தப் பொறுமை இன்மையைப் புலப்படுத்த வேண்டி. போதம்-ஞானம். குறை-காரியம். பிரமன் கூறிய காரியங்களை, நிரம்பப் பெற்றிருப்பவன் கூற்றுவன் ஆதலின், அவனைக் 'குறைமலி கூற்றுவன்' எனச் சிறப்பித்தார். 'மாற்றம் கொள்ளுறும்' என்றது, எமன் கூறும் சொற்களைக் கேட்டுக் கொண்டிருக்கும் என்னும் பொருளது. இறைவன் என்றது, இங்கு இராமனை. இலக்குவனுக்கு இறைவன் இராமனே ஆதல் புலப் படுத்தியவாறு. இனி இறைவன் என்றது, அரசனை எனக் கொள்ளலும் ஒன்று. (54)

## இராமன் சொல்லியது

1398 கருமைக் கோட்டுக் கனலுமிழ் கண்ணுடை
எருமைப் போத்தை யினிதுவந் தேறிய
அருமைக்கூற்றை யகற்றி வருதுமென்
ஒருமைக் கூற்றி னுரைத்தனன் போக்கினான்.

கருமைக் கோட்டுக் கனல் உமிழ் கண்ணுடை
எருமைப் போத்தை இனிது உவந்து ஏறிய
அருமைக் கூற்றை அகற்றி வருதும் என்று
ஒருமைக் கூற்றின் உரைத்தனன் போக்கினான்.

பொ: "கருமையான கொம்பினையும், கனலைக்கக்குகின்ற கண்ணையுமுடைய எருமைப் போத்தினை (வாகனமாகக் கொண்டு) இனிதாக மகிழ்ந்து ஏறிய கடத்தற்கரிய யமனைப் போக்கிவிட்டு வருவேன்" என்று இலக்குவனுக்குச் சொல்லிவிட்டு, உடன்பாடான சொல்லைச் சொல்லி, எமனை அனுப்பினான் இராமன்.

கு: எருமையூர்தி எமனுக்கு உரியது ஆதலின், அதன் கொம்புகளையும், கண்களையும் கூறி அதன் கொலைவன்மையும், கோபத்தின் மிகுதியையும் புலப்படுத்தியவாறு. 'போத்து' என்பது, எருமையில் ஆணினைக் குறிக்கும் சொல். பார்ப்போர் அஞ்சத்தக்க கொம்புகளையும், கண்களையும் உடைய எருமையையே எமன் இனிதாக மகிழ்ந்து ஏறுகின்றான், என அவனுக்குப் பொருத்தமான ஊர்தி என்பது புலப்படுத்தியவாறு. 'அருமை' என்றது, யாராலும் தப்புதற்கருமை புலப்படுத்தி நின்றது. 'ஒருமைக்கூற்று' என்றது, 'பிரமன் கூறியபடி புறப்படுகின்றேன்' என்ற உடன்பாடான சொல்லினை. (55)

## இராமன் வந்து துருவாசரை வணங்கி வந்த காரணத்தை வினவுதல்

1399 துன்னிச் சொன்ன துணையுடன் வந்தபின்
மன்னு மாமறை யத்திரி மாமகன்
தன்ன தாளை யிறைஞ்சிச் சதுமறை
என்ன வந்ததையென்னையென் றோதினான்.

துன்னிச் சொன்ன துணையுடன் வந்தபின்
மன்னு மாமறை அத்திரி மாமகன்
தன்னதாளை இறைஞ்சி சதுமறை
என்ன வந்ததை என்னை, என்று ஓதினான்.

பொ: (இராமன்தான் மறலியோடு உரையாடிக் கொண்டிருந்த இடத்திற்கு) நெருங்கிச் சென்று சொன்ன இலக்குவனாகிய துணையுடன் வந்தபின்பு, நிலைபேறுடைய சிறந்த வேதங்களையுணர்ந்த அத்திரி முனிவரின் சிறந்த மகனாகிய துருவாசன்தன் திருவடிகளை வணங்கி, 'நான்கு வேதங்களைப்போன்று என்பால் வந்தது எதன்பொருட்டு?' என்று வினவினான்.

கு: இராமன் மறலியோடு பேசிக் கொண்டுள்ள இடம் யாரும் நெருங்க அஞ்சுகின்ற இடமாதலின் 'துன்னிச் சொன்ன துணையுடன்' என்றார். அவ்விருவரும் பேசும்போது இடையில் வந்தவர்கள் கொலைத் தண்டத்திற்குரியவர் என எமன் கூறியிருந்தான். 'குரைத்தருங்கழலினாய் கோறி' (38) என முன் கூறியுள்ளது காணலாம். வேதங்களின் வடிவமே எனச் சொல்லத்-தக்கபடி வேதஞானம் போதம் பெற்றவனாதலின் 'சதுமறை என்ன வந்ததை' எனக் கூறினான் இராமன். வந்ததை என்பதில் ஐ சாரியை. (56)

## துருவாசன் சொல்லுதல்

1400 முந்தையோர் முறை யேமுடி சூடிய
அந்த நாடொட் டோராயிர மாண்டிற்கு
வந்தோர் நாளுன் வயினயின் றேருவம்
இந்த நாளந்த நாளென் றியம்பினான்.

முந்தையோர் முறையே முடிசூடிய
அந்தநாள் தொட்டு ஓர் ஆயிரம் ஆண்டிற்கு
வந்து ஓர்நாள் உன்வயின் அயின்று ஏருவம்
இந்தநாள் அந்தநாள் என்று இயம்பினான்.

பொ: 'உன் குலத்து முன்னோர் செய்து வந்த முறைப்படியே' நீ முடிசூட்டிக் கொண்ட அந்த நாள் தொடங்கி ஓராயிரம் ஆண்டிற்கு ஓர் நாள் வந்து, உன் மாளிகையில் உணவு அருந்திச் செல்லும் இயல்பினேம். இந்தநாள்தான் அந்த ஆயிரம் ஆண்டிற்கு ஒருமுறை வரும்நாள் ஆகும்' என்று கூறினான்.

கு: 'முந்தையோர்' என்றது, இராமனது குல முதலோர்களை. இராமன் முடிசூடிய நாளிலிருந்து ஆயிரம் ஆண்டுக்கு ஒருமுறை இராமன் திருமாளிகையில் வந்து துருவாசர் உண்ணும் வழக்கம் உடையவர் என்பதும், அந்த முறைப்படி துருவாசர் வந்த இந்தநாள் ஆயிரம் ஆண்டிற்கு ஒருமுறை வரும் நாள் என்பதும் கூறியவாறு. இராமன் பதினோராயிரம் ஆண்டு அரசு புரிந்தான் என்று வான்மீகம் கூறும். இம்முறையால் நோக்கின் துருவாசரின்

பதிஞேராவது உணவுநாள் இது என்று கொள்ள இடமுண்டு. (57)

## அட்டில் தொழில்செய்யும் மடையர்களை இராமன் அழைப்பித்தல்

1401 நாலிரு திக்கும் நடக்கும் நலத்தார்
வாலுவர் நூலணி மார்பினர் மன்னர்
சாலு மனத்தொடு சாயையன்ஞரை
ஏல அழைத்திடு மென்றுரை செய்தான்.

நால் இருதிக்கும் நடக்கும் நலத்தார்
வாலுவர் நூல்அணி மார்பினர் மன்னர்
சாலும் மனத்து ஒரு சாயை அன்ஞரை
ஏல அழைத்திடும் என்று உரை செய்தான்.

பொ: எட்டுத்திக்கிலும் பரவும் நலமிக்கவரும், முந்நூலணிந்த மார்பினையுடையவரும், மன்னர்களுக்குப் பொருத்தமான உயர்ந்த மனத்தோடு அவர்தம் நிழல்போன்று பிரியாதிருப் பவரும் ஆகிய சமையல்காரரைப் பொருந்த அழையுங்கள் என்று இராமன் சொன்ஞன்.

கு: அட்டில் தொழிலின் சிறப்பால் எண்டிசையிலும் பரவிய புகழினர் என்பார், 'நாலிருதிக்கும் நடக்கும் நலத்தார்' என்ருர். வாலுவர்-சமையல் தொழில் செய்பவர். இவர் அந்தண வருணத் தவர் என்பது புலப்பட வேண்டி 'நூலணி மார்பினர்' என்ருர். இக்காலத்தும் அந்தண வருணத்தவரே சமையல் செய்யும் திறமிக்கவராக இருத்தல் காணலாம். மன்னவர்க்குச் சமையல் செய்பவர், நல்ல மனமுடையவராய்ப் பிரியாதிருக்கும் இயல் பினராதலின் 'மன்னர் சாலும் மனத்தொடு சாயையன்ஞரை' என்ருர். சாலுதல்-பொருந்துதல். மன்னவர் மனம் விரும்பும் உணவுகளைச் சமைப்பவர் என்றவாறு. சாயை-நிழல். 'அழைத்திடு மின்' என்பது அழைத்திடும் என மருவிற்று. ஏல என்பது தூதுவனை அழைத்த விளி எனலும் ஆம். ஏட என்பது பொருள். (58)

## தூதுவர் விரைதல்

1402 மாட மதிற்கதிர் மாளிகை வாயில்
நீடலர் மன்னவ னெஞ்சின விரைந்தே
ஆடை தயங்க வலந்தலை வுற்றே
ஓடி யழைத்தனர் தூத ருவந்தே.

மாட மதில் கதிர் மாளிகை வாயில்
நீடலர் மன்னவன் நெஞ்சின் விரைந்தே
ஆடை தயங்க அலந்தலைவுற்றே
ஓடி அழைத்தனர் தூதர் உவந்தே.

பொ: மாடங்கள் நெருங்கியுள்ளதும் மதிலால் சூழப்பட்டதும் ஆகிய இராமனது மாளிகைவாயிலில் (இராமனது ஏவலை யறிந்தவுடன்), நீடித்திராமல், அந்தமன்னவனாகிய இராமனது மனத்தைப்போல விரைந்து இடையிலணிந்த ஆடை காற்றில் அசைந்து விளக்கமுற, துன்புற்று ஓடித் தூதுவர் மகிழ்ந்து சமையல்காரரை அழைத்தனர்.

கு: கதிர்மாளிகை என்றது, மணிகள் பதித்துக் கட்டப் பட்டமையால், கதிர் வீசுகின்ற ஒளிவளர்மாளிகையினை ,மாளிகை வாயிலில் சென்றவர்கள் மன்னவன் கட்டளையை யறிந்தவுடன், சிறிதுபோதும் நில்லாமல் இராமனது மனம்போல விரைந்து ஓடினர் என்றவாறு. துருவாச முனிவர்க்கு உணவூட்ட வேண்டுமே என்று இராமன் உள்ளம் எவ்வளவு விரையுமோ அவ்வளவு விரைவாகத் தூதுவர் சென்றனர் என்றவாறு. 'தூதர் மாளிகை வாயில் நீடலராய்நெஞ்சின் விரைந்து தயங்க அலந்தலைவுற்று ஓடி உவந்து அழைத்தனர்' என இயையும். அலந்தலை-துன்பம்.
(59)

## மடையர் வந்து புகுதல்

1403 தொடையணி மன்னவன் றூதரை யேவக்
கடல்புரை நேசர் கணத்திடை யேகா
அடைவுற வோடி யவண்டர வல்லே
மடைதொடு வாரவண் வந்து புகுந்தார்.

தொடையணி மன்னவன் தூதரை ஏவக்
கடல்புரை நேசர் கணத்திடை ஏகா
அடைவு உற ஓடி அவண்தர வல்லே
மடைதொடுவார் அவண் வந்து புகுந்தார்.

பொ: மாலையணிந்த மன்னவனாகிய இராமன் தூதுவர்களை அனுப்ப, கடல் போன்று விரிந்த அன்பினையுடைய அத்தூதுவர் கணப்பொழுதில் ஏசி, முறையாக ஓடி அவ்விடத்திற்குக் கொணர மடைத்தொழில் செய்வோர் அங்குவந்து புகுந்தார்கள்.

கு: கடல்போன்று விரிந்த அன்புடையவரைக் 'கடல்புரை நேசர்' என்றார்; என்றது தூதுவரை. அவண் என்றது அயோத்தி நகரை. 'மடைதொடுவார்' என்றது. வாலுவரை. 'வல்லே அவண் வந்து புகுந்தார்' என இயையும். 'ஓடியழைத்தனர் தூதர்' என முன்கூறியதையே அனுவாதமுகத்தால் இங்கும் கூறியவாறு. அவண் தரல் தூதுவர் வினை. அவண் வந்து புகுதல் மடைதொடு-வார் செயல். (60)

## வாலுவரைப் போனகம் அமைக்க ஏவுதல்

1404 மாமுனி யெம்வயின் வந்ததை யன்றல்
காமுறு மும்மது கைத்தொழில் காண்பான்
ஆமிவன் வந்தத மைத்திடு மின்னே
பூமலி வெய்திய போனக மென்றான்.

மாமுனி எம்வயின் வந்ததை மன்றல்
காமுறும் உம்மது கைத்தொழில் காண்பான்
ஆம் இவன் வந்தது அமைத்திடும் இன்னே
பூமலிவு எய்திய போனகம் என்றான்.

பொ: "துருவாசர் என்னும் சிறந்த முனிவர் எம்மிடத்திற்கு வந்தது மணத்தால் விரும்பத்தக்க உம்முடைய சமையல் கைத் தொழிலைக் காண்பதற்காகவே ஆம். இம் முனிவர் வந்ததற்குக் காரணமாயிருந்த பூப்போன்ற மென்மை நிரம்பிய போனகத்தை

கு: மாமுனி என்றது துருவாசரை. வந்ததை என்புழி ஐ சாரியை. மன்றல்-வாசனை. காமுறுநல்-விரும்புதல். சமையல் செய்த உணவுப் பொருள்களில் வாசனை எல்லோரையும் விரும்பச் செய்யும் என்றவாறு. உம்மது என்புழி மகரம் விரித்தல் விகாரம். கைத்தொழில் என்றது, அட்டில் தொழிலே. காண்பான் ஆம் என்க. 'இவன் வந்ததற்குக் காரணமாயிருந்த போனகம் இன்னே அமைத்திடும்' என்றான் என இயையும். வந்தது என்பது காரணத்தை யுணர்த்தி நின்றது. போனகத்தின் சிறப்புப் புலப்படுத்த, 'பூமலிவு எய்திய போனகம்' என்றான். பூவின் மென்மையும் மணமும் அமைந்த சாப்பாடு என்றவாறு. அமைத்திடும் என்புழிச் செய்யும் என் முற்று முன்னிலைக்கண் வந்தது. பிற்கால வழக்கு. (61

## உணவு சமைப்பது

1045 பொன்னும் வெள்ளியு மல்லது போக்கியே
மன்னும் மாசு துடைத் துமணிக்குடம்
தன்னி னன்புனல் கொண்டுபொற் சாடிகள்
துன்ன வெங்கணுந் தூசிட்டு மூடினார்.

பொன்னும் வெள்ளியும் அல்லது போக்கியே
மன்னும் மாசு துடைத்து மணிக்குடம்
தன்னில் நன்புனல் கொண்டு பொற்சாடிகள்
துன்ன எங்கணும் தூசு இட்டு மூடினார்.

பொ: பொன்னாலும் வெள்ளியாலும் ஆன குடங்கள் அல்லாத பித்தளைக்குடங்கள் போன்றவற்றைப் போக்கிவிட்டுப் பொற்குடங்களிலும் வெள்ளிக் குடங்களிலும் நிலை பெற்றுள்ள மாசினைத் துடைத்து விட்டு.மணிகள் பதித்துள்ள அக்குடங்களில் நல்ல நீர் முகந்து கொண்டு வந்து பொன்னாலியன்ற பெரிய சாடிகளில் நிரப்பி நெருங்க வைத்துப் பின் எவ்விடத்தும், தூசுவிழாமல் ஆடையிட்டு மூடினார்.

கு: உயர்ந்தனவாகக் கருதப்படும் பொற்குடமும் வெள்ளிக் குடமுமே ஆளப்பட்டன என்பார், 'பொன்னும் வெள்ளியும்

அல்லது போக்கியே' என்றார். இச்செய்யுளால் நீர் முகத்தற்குரிய பாத்திரங்களைத் தேய்த்துத் தூய்மை செய்து நீர் நிலையில் சென்று நல்லநீர் முகந்து கொண்டு வந்து நிலையாக நெருங்க வைத்துள்ள பொன்னாலியன்ற பெரிய சாடிகளில் ஊற்றி நிரப்பி ஆடையால் மூடிவைத்தமை கூறினார். மாசு-அழுக்கு. நல்புனல் என்றது, சமையலுக்குரிய இனிய நீரினை. பொற்சாடிகள்என்றது, பொன்னாலான பெரிய பாத்திரங்களை. தூசு-ஆடை. பாத்திரங்-களில் ஊற்றிவைத்த தண்ணீரில் தூசு படாமலிருக்கத் தூய ஆடையால் மூடிவைப்பது வழக்கம். (62)

## அடுப்பில் எரி மூட்டுதல்

1046 வந்து நோக்கி மடைப்பள்ளி தன்னிடை
வெந்த வெண்பலி நீக்கி விரைமலி
சந்த னத்தொடு தண்ணகிற் கூட்டுறீஇ
இந்த னத்தி லெரியிடை மாட்டினார்.

வந்து நோக்கி மடைப்பள்ளி தன்னிடை
வெந்த வெண்பலி நீக்கி விரைமலி
சந்தனத்தொடு தண்அகில் கூட்டு உறீஇ
இந்தனத்தில் எரிஇடை மாட்டினார்.

பொ: சமைக்கும் இடத்திற்கு வந்து அவ்விடத்தினை நன்கு பார்த்து, மடைப் பள்ளியில் முன்பு வெந்த வெண்மையான சாம்பரை நீக்கிவிட்டு வாசனை நிரம்பிய சந்தனக் கட்டையோடு குளிர்ந்த அகிற்கட்டையைச் சேர்த்துவைத்து அவ்விறகில் எரியை மூட்டினார்கள் (வாலுவர்).

கு: வெண்பலி என்றது சாம்பலை. அடுப்பு மூட்டுகின்றவர்கள் முன்பு அடுப்பிலிருந்த சாம்பலை நீக்கித் தூய்மைசெய்தல் முறையாதல் காணலாம். விரை-வாசனை. மணம் நிறைந்த விறகு சந்தனமும், அகிலும் ஆகலின் அவ்விரண்டினையும் கூட்டாக அடுப்பில் வைத்தனர் என்க. இந்தனம்-விறகு மாட்டுதல்-மூட்டுதல்- பற்றவைத்தல். (63)

## சோறு சமைத்தல்

1407 பொடித்த போக்கிப் புழுகுசம பாமணி
படித்த நூற்றுப்பத்தா யிரப் பத்திபொற்
றுடுப்பிற் கொண்டு துழாவிப் பதத்துற
வடித்துக் கூட்டி வகையி லிறக்கினர்.

பொடித்த போக்கிப் புழுகுசம்பா மணி
படித்த நூற்றுப்பத்து ஆயிரப் பத்திபொன்
துடுப்பின் கொண்டு துழாவிப் பதத்து உற
வடித்துக் கூட்டி வகையில் இறக்கினர்.

பொ: பொடியாக உள்ள நொய்யும் நுறுங்கும் களைந்து போக்கி விட்டுப் புழுகு சம்பா அரிசியை உலையில் படியவைத்த நூற்றுப்பத்தாயிரம் வரிசைப்பானைகளில் பொன்னாலான துடுப்பினைக் கொண்டு துழாவி நல்ல பதத்தில் பொருந்தக் கஞ்சியை வடித்து நிமிர்த்து நல்லவகையில் இறக்கினர்கள்.

கு: 'பொடித்த' என்பது வினையாலணையும் பெயராய் நொய்யையும் நுறுங்கையும் உணர்த்தின. மணி என்பது அரிசியை. படித்த-உலையில் படியச் செய்த. பத்தி என்பது, வரிசையான பானைகளை. சோறு வேகும்போது துழாவுதற்குரியது துடுப்பு. சோறு நல்ல பதத்தில் இருக்கும்போது வடித்துப் பின் பானையை நிமிர்த்தி அசைத்தலையே இங்குக் 'கூட்டி' என்றார். அடுப்பிலிருந்து நல்லவகையில் இறக்கினர் என்க. (64)

## இதுவுமது

1408 கவைப்புறு கொடுங்குரற் கனகச் சாலிநெல்
உவப்புறு கனகமா வுரலி டைக்கொளீஇ
நிவப்புறு முலக்கையா னெடிது வல்லவர்
அவைப்புறு மரிசியா லடிசி லாக்கினர்.

கவைப்புறு கொடுங்குரல கனகச் சாலிநெல்
உவப்புறு கனகமா உரலிடைக் கொளீஇ
நிவப்புறும் உலக்கையால் நெடிது வல்லவர்
அவைப்புறும் அரிசியால்அடிசில் ஆக்கினார்.

பொ: பலவாகக் கிளைத்துள்ள வளைந்த கதிரில் விளைந்த பொன்னிறமுடைய சம்பா நெல்லினை, எல்லோரும் மகிழத்தக்க பொன்னாலியன்ற உரலில் இட்டு, உயரமான உலக்கையினால் நெடிது நேரம் வரையில், வல்மையுடைய ஆடவர்கள் குத்தின அரிசியால் சோறு ஆக்கினார்கள்.

கு: முன்னைச் செய்யுளில் புழுகுசம்பா அரிசிச்சோறு சமைத்தமை கூறி, இச்செய்யுளில் கனகச் சாலிஅரிசியால் சோறாக்கினமை கூறினார். கவைத்தல்-பல கிளையாகக் கிளைத்திருத்தல். குரல்-கதிர். கதிர் முதிர்ந்த வழி வளைதல் இயல்பாதலின் 'கொடுங்குரல்' என்றார். 'கனகச்சாலி' என்றது, பொன்னிறமான சம்பா நெல்லினை. அரசரின் செல்வமுடைமை தோன்ற, நெல்லைப் பொன்உரலில் இட்டுக் குற்றுவோர் வல்லவராய் நெடிது குற்றினர் என்றது, அரிசியை மட்டை சிறிதுமின்றி வெளுப்பாகத் தீட்டினர் என்பது புலப்படுத்த வேண்டி. அவைத்தல்-குற்றுதல். அடிசிலாக்குதல் சோறு ஆக்குதல். உயர்ந்தஅரிசியான புழுகுசம்பாவும் கனகச்-சம்பாவும் தனித்தனியே துருவாசருக்காகச் சமைக்கப்பட்டன என்று கொள்ளலாம். (65)

---

29, 66ல் மிகைப்பாடல் 65-அ.

அறிஞர் கூறும் அரிசன மையவி
கரியரைத்துக் கரியன கஞ்சுக
முரியணையப் பிடி மும்மத யானையால்
நறுநெய் குய்யடைத்தார்க ணலத்தால்

என்ற பாடல் உள்ளது.

## அறுசுவைக் கறி சமைத்தல்

1409 கைவ்வ கைப்படு கின்றக மழ்ச்சியர்
மெய்வ கைப்படு நெய்யிடை வெந்தன
குய்வகைப்படு கின்ற கொழுங்கறி
ஐவ கைப்பட றுசுவை யாக்கினர்.

கைவ் வகைப்படுகின்ற கமழ்ச்சியர்
மெய்வகைப்படு நெய்யிடை வெந்தன
குய்வகைப் படுகின்ற கொழுங்கறி
ஐவ கைப்பட அறுசுவை ஆக்கினர்.

பொ: தம்கைகளின் திறத்தால் செய்யப் படுவதாகலின் கறிவகைகளின் மணம்படிந்து கமழ்கின்ற உடம்பினையுடைய சமையல் தொழிலோர், உண்மையானப் பொருந்திய புத்துருக்கு நெய்யில் வெந்தனவும், தாளிதவகைகளில் சிறப்பாகப் பொருந்துவனவுமாகிய, செழுமையான கறிகளை வியக்கும் வகையில் அறுசுவையுடையவாகச் சமைத்தார்கள்.

கு: கமழ்ச்சியர்–மணம் கமழும் உடம்பினையுடைய சமையல் தொழிலோர். கமழ்ச்சியர் ஆக்கினர் என இயையும். 'மெய் வகைப்படும் நெய்' என்றது, ஆவினது புத்துருக்கு நெய்யினை. வெந்தனவும், குய்வகைப்படுகின்றனவுமாகிய கொழுங்கறி என இயையும். குய்·தாளிதம். 'கொழுங்கறி' என்றது, செழுமையான புதிய காய்கறிகளை. ஐ·வியப்ப. ஐவகைப்படி என்றது, வியக்கும் வகை பொருந்துகின்ற என்றவாறு. அறுசுவை என்றது–உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, தித்திப்பு, புளிப்பு, துவர்ப்பு என்பவை. அறுசுவைக் கறிகளையுண்டவர்கள் இத்தகைய சுவையுண்டதே யில்லை என வியந்து மகிழ்வார்கள் என்றவாறு. (66)

## முக்கனிக் கலவை

1410 அறுசு வைக்கறி யாக்கிய தற்பினே
செறியுந் தாளிதஞ் செய்துவைத் தானெயும்
முறுகக் காய்ச்சி முதிர்வுறு முக்கனி
குறுகு பால்கன்ன லானவுங் கூட்டினர்.

அறுசுவைக் கறி ஆக்கியதற்பினே
செறியும் தாளிதம் செய்துவைத்து ஆன்நெயும்
முறுகக் காய்ச்சி முதிர்வுறு முக்கனி
குறுகு பால்கன்னல் ஆனவும் கூட்டினர்.

பொ: அறுசுவை அமைந்த கறிவகைகளை ஆக்கியதற்குப்பின், கடுகு சீரகம் முதலியன நெருங்கியுள்ள தாளிதம் செய்து வைத்து விட்டு, பசுவின் நெய்யையும், வெண்ணெயில் உள்ள நீர்ப் பொருள் வற்றுமாறு முறுகக் காய்ச்சி, அதனோடு சுவைமுதிர்ந்த வாழை, மா, பலா, என்ற முக்கனிகளோடு சேர்ந்த பால் சர்க்கரை ஆனவற்றையும் சேர்த்து மிக்க சுவைப்பொருளாகக் கூட்டினார்கள்.

கு: இச்செய்யுளில் முதலிரண்டடிகளும் அனுவாதமாகக் கொள்ளவேண்டும். மேலைச் செய்யுளில் கூறப்பட்டிருத்தலின், 'முறுகக் காய்ச்சுதலாவது' நீர்ப்பொருள் இல்லாமல் வற்ற நன்கு காய்ச்சுதல். முறுகக் காய்ச்சிய நெய்யில் முக்கனியும், பாலும், சர்க்கரையும் கலந்து இனிய சுவைக்கூட்டு அமைத்தனர் என்றவாறு. (67)

## இராமன் துருவாசரை உண்ண அழைத்தல்

1411 அன்னவை சமைத்தவ ரமைந்த காட்டலும்
மன்னிய முதுமொழி மறைவல் லாளனைப்
பன்னிய போனகம் பற்றென் றோதினன்
இன்னிசை யரியெழுந் திரைக்குந் தாரினான்.

அன்னவை சமைத்தவர் அமைந்த காட்டலும்
மன்னிய முதுமொழி மறை வல்லாளனைப்
பன்னிய போனகம் பற்று என்று ஓதினன்
இன்இசை அரி எழுந்து இரைக்கும் தாரினான்.

பொ: சோறுகறி முதலியவற்றைச் சமைத்தவர்கள், சமைத்து அமைந்த உணவு வகைகளை இராமனுக்குக் காட்டுதலும், நிலை பெற்ற முதுமொழியாகிய வேதங்களில் வல்லவனாகிய துருவாச முனிவனைப் பார்த்து, 'சுவையாகப் பண்ணிய போனகம் உண்க'

என்று இனிய இசைபாடும் வண்டுகள் தேனுண்டு எழுந்து ஆரவாரிக்கும் மாலையணிந்தவனாகிய இராமன் சொன்னான்.

கு: 'அமைந்த' என்றது, நன்கு அமைந்தனவாகிய உணவுப் பொருள்களை. வினையாலணையும் பெயர். எல்லா நூற்கும் முன்னே தோன்றியதாகலின் வேதம் 'முதுமொழி' எனப்படும். 'முதுமொழி மறை' என்றது, இருபெயரொட்டு. 'மறைவல்லாளன்' என்றது, துருவாச முனிவனை. பன்னுதல்-செய்தல். 'போனகம்பற்று' என்றது போனகம்உணர்க என்னும் கருத்தினது. தாரினான் ஓதினான் என இயையும். இராமன், தன் மார்பிலணிந்த மாலையும் வண்டுகளுக்குத் தேனைக்கொடுத்து மகிழ்ந்து ஆரவாரிக்கச் செய்யும் என்றது. (68)

## முனிவர்க்குப் போனகம் படைத்தல்

1412 நிலமிசை யாசன மிட்டு நீர்கொடு
தலமிசை தெளித்தொரு தமனி யப்பெருங்
கலமிசை மாமுனி கைக ழீஇய பின்
பலமுறை போனகம்படைத்து மேவினார்.

நிலமிசை ஆசனம்இட்டு, நீர்கொடு
தலமிசை தெளித்து, ஒரு தமனியப் பெருங்
கலமிசை மாமுனி கைகழீஇய பின்
பல முறை போனகம் படைத்து மேவினர்.

பொ: சிறந்த துருவாச முனிவர் கைகழுவிய பின்பு, அவர்க்கு நிலத்தின்மேல் ஆசனம் இட்டு, உண்கலம் வைக்கும் இடத்தில் தண்ணீரைக் கொண்டு தெளித்துவிட்டுப் பொன்னாலியன்ற பெரிய உண்கலத்தை வைத்து, அதில் பழங்களோடு பொருந்திய உணவைப் படைத்துவிட்டு மேலும் பரிமாற அங்குக் காத்திருந்தனர் அட்டில் தொழிலோர்.

கு: 'மாமுனி கைகழீஇயபின் இட்டு, தெளித்துக் கலமிசை போனகம்படைத்து மேவினர்' என முடியும். உண்கலம் வைக்கும் இடத்தில் நீர் தெளித்துத் தூய்மை செய்தல் மரபு. உயர்ந்தோர்க்கு விருந்திடுங்கால் மன்னர்தம் பெருமைபுலப்படப்

பொற்கலத்தில் உணவு பரிமாறுதல் உண்டு. பலம்-பழம். உணவு படைத்தவர்கள், மீண்டும் தேவையறிந்து பரிமாற வேண்டி அவ்விடத்தே காத்திருந்தார் என்பார், 'படைத்து மேவினர்' என்ருர். (69)

## முனிவர் அமுது செய்தல்

1413 மெய்யுறு மந்திர விதியி ஞன்மிக
மய்யறு புனலிஞல் வலம்வளை இயபின்
கய்யுறு புனலது குடித்துக் காதலால்
அய்வகை மந்திரத் தமுத ருந்திஞன்.

மெய்யுறு மந்திரம் விதியிஞல் மிக
மய் அறு புனலிஞல் வலம் வளை இயபின்
கய்உறு புனலது குடித்துக் காதலால்
அய்வகை மந்திரத்து அமுது அருந்திஞன்.

பொ: உண்மையாகப் பொருந்திய மந்திரவிதியால், மிகவும் குற்றமற்ற உண்கலத்தை வலமாகச் சுற்றியபின், எஞ்சிக் கையிலிருந்த நீரினைக் குடித்துவிட்டு, அன்பிஞல் பஞ்சப் பிராண மந்திரம் ஓதி, ஐந்து கவளத்தைப் பஞ்சப் பிராணனுக்கும் ஆகுதி கொடுக்கும் முறையில் போனகம் அருந்திஞன்.

கு: 'வலம் வளைத்தலாவது' கையில் கொண்டநீரை உண் கலத்தை வலமாகச் சுற்றிச் சொரிதல். 'ஐவகை மந்திரம்' என்றது பஞ்சப்பிராணனுக்கு ஆகுதி கொடுக்குங்கால் ஓதும் ஐந்து மந்திரங்களை. பிராணன், அபானன், வியானன், சமானன் என்ற ஐந்தும் பஞ்சப் பிராணன் எனப்படும். ஓம்பிராணுய சுவாக என்ருற்போன்று ஐந்து பிராணங்களுக்கும் ஓதி, ஐந்து பிடி அருந்துதலையே, பஞ்சப் பிராண ஆகுதி என்ப. இவ்வாறு மந்திரம் ஓதி, அருந்திய ஐந்துகவளத்தை, 'அமுது' எனச் சிறப் பித்து அருந்தினன் எனவும், பின்பு உண்ட பெருஞ்சோற்றை மாந்திஞன் எனவும் கூறிய சொல்நயம் ஓர்க. (70)

1414 பலாக்கனி மாங்கனி பாலி னேடுதேன்
நிலாப்பயில் கிரிநிகர் நிறைவெண் சோறணைஇ
உலாப்பயில் கொழுங்கன லோம மாமுனி
விலாப்புடை முசிப்பற வீங்க மாந்தினுன்.

பலாக்கனி மாங்கனி பாலின்ஏடு தேன்
நிலாப் பயில் கிரிநிகர் நிறைவெண் சோறு அணைஇ
உலாப்பயில் கொழுங்கனல் ஓம மாமுனி
விலாப்புடை முசிப்பு அற வீங்க மாந்தினுன்.

பொ: பலாப்பழம், மாம்பழம், பாலின்ஏடு, தேன் இவற்றோடு நிலவுபொருந்திய மலையை ஒத்த நிறைந்த வெண்மையான சோற்றைக் கலந்து, யாக குண்டத்திலிருந்து எழுந்து, வலமாக உலவுகின்ற செழுமையான வேள்வித் தீயில் அவி கொடுக்கின்ற, சிறந்த துருவாச முனி விலாப்பக்கங்களின் மெலிவு நீங்கவும் வயிறு வீங்கவும் மிகுதியாக உண்டான்.

கு: பொற்கலத்திட்ட வெண்சோற்றின் திரளுக்கு உவமையாக வேண்டி, நிலாப்பயில் கிரியைக் கூறினுர். நிலவு மிகுதியாகப் பொழிவதால், மலை வெள்ளிமலைபோலக் காட்சியளிக்கும். 'ஈறிலான் கைலையை யெய்ந்த குன்றெலாம்'(கம்ப. பால.) என்பது இங்கு நினையலாம். 'உலாப்பயில் கொழுங்கனல்' என்றது, யாக குண்டத்திலிருந்து மேலே எழுந்து, வலமாக உலவுகின்ற தீயினை. துருவாசமுனி நாள்தொறும் வேள்வித்தீயில் அவி கொடுத்து வழிபடும் இயல்பையுணர்த்தியதோடு இங்கு வயிற்றுத்தீ தணிய அமுதருந்திய இயல்பையும் குறிப்பால் உணர்த்தியவாறு. முசிப்பு-மெலிவு. பசியினுல் விலா மெலிவுற்றிருக்குமன்றே அம்மெலிவு நீங்கி, வயிறு வீங்க மிகுதியாக உண்டான் முனிவன் என்றவாறு. மாந்துதல்-நிறைய உண்ணுதல். (71)

## உண்டபின் கைகழுவுதல்

1415 அங்கைநீ ரயின்றபி னார ணத்திஞேன்
துங்கமா மணிமுடித் தூய மன்னவர்
செங்கையா லாடகச் சிரகத் தேந்திய
கங்கைநீர் கொண்டு செங்கைக ழீஇயினன்.

அங்கைநீர் அயின்றபின் ஆரணத்திஞேன்
துங்கமா மணிமுடித் தூய மன்னவர்
செங்கையால் ஆடகச் சிரகத்து ஏந்திய
கங்கைநீர் கொண்டு செங்கை கழீஇயினன்.

பொ: உண்டபின்பு, உள்ளங்கையில் கொண்ட நீரை அருந்தியபின்பு, வேதமுணர்ந்த துருவாச முனிவன், உயர்ந்த சிறந்த மணிகள் பதித்த முடியை அணிந்த மன்னவர் தம் சிவந்த கையால், பொற்குவளையில் ஏந்திய கங்கைநீரைக் கொண்டு தன் சிவந்தகையைக் கழுவினன்.

கு: அங்கை-உள்ளங்கை. உண்ட பின்பு உள்ளங்கையில் கொண்ட நீரைப் பருகுவது முறை. 'ஆரணத்திஞேன்' என்றது, வேதமுணர்ந்த துருவாச முனிவனை. துங்கம்-உயர்வு. மன்னவர் என்றது, இராமனையும் தம்பியரையும் குறிக்கும். ஆடகச் சிரகம் என்றது, பொன்ஞலியன்ற பாத்திரத்தை. (72)

## வாலுவர் தலைவனை முனிவர் பாராட்டுதல்

1416 தாலுவி லறுசுவை தழைப்பச் சர்க்கரைப்
பாலுடை யடிசிலின் பயின்ற பான்மையின்
நாலிரு திசையினு நான்கண் டிலனென
வாலுவர் தலைவனை மதித்துக் கூறினன்.

தாலுவில் அறுசுவை தழைப்பச் சர்க்கரைப்
பாலுடை அடிசிலின் பயின்ற பான்மையின்,
நாலிருதிசையினும் நான்கண்டிலன் என,
வாலுவர் தலைவனை மதித்துக் கூறினன்.

பொ: நாவில் அறுசுவைத்தன்மை மிக்குத் தோன்ற, சர்க்கரைப் பாலையுடைய உணவினை உண்டு, பயின்ற முறைமையுடைய முனிவன், 'இத்தகைய சுவைமிக்க அடிசில் ஆக்கிய வாலுவனை யான் எட்டுத் திசையிலும் கண்டிலேன்' எனச் சமையற்காரர் தலைவனை, நன்கு மதித்துப்பேசிப் பாராட்டினான்.

கு: தால்-நாக்கு. உணவருந்திய முனிவனுக்கு உணவின் அறுசுவையும், நாக்கில் விஞ்சித் தோன்ற அந்த அடிசிலை ஆக்கிய வாலுவர் தலைவனை நன்கு மதித்து இவ்வாலுவனைப் போன்றவனை எட்டுத்திசையிலும் நான் கண்டதில்லை எனப் பாராட்டினான் துருவாச முனிவன் என்க. இதனால் சுவைமிகச் சமைத்தவரைப் பாராட்டுதல் வேண்டும் என்ற மரபையும் புலப்படுத்தியவாறு. (73)

## உண்ட துருவாசர் இருப்பிடம் செல்லுதல்

1417 மன்னவ ரிவரவர் மரபுங் கேண்மையும்
இன்னதென் றிராகவ னெடுத்துக் கூறலும்
அன்னது கேட்டபி னகமகிழ்ந் தொரீஇ
முன்னிய திசையிடை முனியும் போயினான்.

மன்னவர் இவர், இவர் மரபும் கேண்மையும்
இன்னது என்று இராகவன் எடுத்துக் கூறலும்
அன்னது கேட்டபின் அகமகிழ்ந்து ஒரீஇ
முன்னிய திசையிடை முனியும் போயினான்.

பொ: 'இவர் மன்னவர், இவர் மரபும் உறவும் இவை' என்று இராமன் ஒவ்வொருவரையும் பற்றி அறிமுகம் செய்யும் முறையில் எடுத்துச் சொல்லுதலும், இராமன் கூறியதைக் கேட்ட பின்பு அம்மன்னர்களைப் பார்க்க வாய்த்தமைக்கு மனமகிழ்ந்து அங்கு நின்றும் நீங்கித்தான் கருதிய வழியில் துருவாசமுனியும் போயினான்.

கு: முன்னுதல்-கருதுதல். எண்டிசையில் தான் செல்லக் கருதிய திசையில் முனிவன் போனான் என்றவாறு. ஒரீஇ-நீங்கி.

கேண்மை-உறவு. அறிமுகம் செய்யுங்கால் ஒருவர் குல மரபும் உறவும் கூறியே அறிமுகம் செய்யவேண்டும் என்ற மரபும் இங்குப் புலப்படுத்தியவாறு. (74)

## இலக்குவன் பிரிய நேர்ந்ததை நினைந்து இராமன் இடரின் மூழ்குதல்

1418 வளைந்தபூண் மறலிதன் வார்த்தை யெண்ணியும்
துணிந்ததன் பின்னவன் பிரிவு சூழ்ந்ததை
நினைந்துத னிருகணீர் நிலந னைத்திட
இனைந்தினைந் திராகவ னிடரின் மூழ்கினான்.

வளைந்தபூண் மறலிதன் வார்த்தை எண்ணியும்
துணிந்த தன் பின்னவன் பிரிவு சூழ்ந்ததை
நினைந்து தன் இருகண்நீர் நிலம் நனைந்திட
இனைந்து இனைந்து இராகவன் இடரின் மூழ்கினான்.

பொ: தொழில்நுட்பம் பலவற்றோடு வளையப்பெற்ற, அணிகலனை அணிந்த எமனுடைய வார்த்தையை நினைவில் கொண்டிருந்தும், (அதுபற்றிக் கல்லாது முனிவன் வரவை எனக்கு உணர்த்த வேண்டி) விரைந்துவந்த இலக்குவன் இவ்வுலகினின்றும் பிரிதலை எண்ணித் துணிந்ததை நினைந்து, இராமன் தன் இருகண்களிலும் சொரியும்நீர் நிலத்தை நனைத்திடுமாறு வருந்தி வருந்தித் துன்பக் கடலில் மூழ்கினான்.

கு: 'மறலி தன் வார்த்தை' என்றது, 'உரைப்பதொன்றுளதுனக் கொருங்கியாமிவண், இருப்பது காண்பவர் யாவராயினும் குரைத்தருங்கழலினாய் கோறி யென்றுதேன் இரைத்த பைந்துளவினாற் கெடுத்துக் கூறினான்' (38) என முன் இப்படலத்து வந்துள்ள செய்யுளாலறியலாம். மறலியும், இராமனும் பேசிக் கொண்டிருக்கும்போது, பார்ப்பவர் யாவராயினும் கொல்லப் படுபவர் என்ற மறலியின் வார்த்தையை எண்ணத்தில் கொண்டிருந்தும், இலக்குவன் அதைப் பொருட்படுத்தாது துருவாசன் சினந்து கூறிய, 'நின் முன்னவர்க்கினைய வென்வரவியம் பாயெனின், துணையவுங்கடந் தொல்குலமாள்வதோர்

அனைய காமம் அளிப்பென்' என்ற சாபச் சொல்லுக்கு அஞ்சித் தன் தொல்குலம் மாள்வதிலும், தான்மட்டும் மாள்வது நல்லது என்று இலக்குவன் பெரும்பிரிவுக்கு ஆயத்தமானான் என்பது புலப்படுத்த, 'துணைந்ததன் பின்னவன் பிரிவு சூழ்ந்ததை' என்றான். தன்குல முழுதும் காக்க வேண்டித் தன்னுயிர் விடும் இலக்குவனது தியாக உணர்வு எண்ணியே இராமன் இடரில் மூழ்குவானானான். மூழ்கினான் என்ற வினைக்கேற்ப இடரைக் கடலாக உருவகப் படுத்தி உரைக்கப்பட்டது. இது குறிப்புருவகப். (75)

## எனக்காக இரங்கல் வேண்டாவென இலக்குவன் இராமனை வணங்குதல்

1419 கருங்குழற் கேகயன் மகட்குக் காவலன்
வரங்கொடுத் தின்னுயிர் மறலிக் கீந்தபின்
இரங்கனீ யென்வயி னென்றி லக்குவன்
அரங்கொல்வே லிராகவ னடிவ ணங்கினான்.

கருங்குழல் கேகயன் மகட்குக் காவலன்
வரங்கொடுத்து இன்உயிர் மறலிக்கு ஈந்தபின்
இரங்கல் நீ என்வயின் என்று இலக்குவன்
அரம்கொல்வேல் இராகவன் அடிவணங்கினான்.

பொ: 'கரிய கூந்தலையுடைய கைகேசிக்கு அரசனாகிய தயரதன் வரம்கொடுத்து விட்டு, அதுகாரணமாகத் தன் இன்னுயிரை எமனுக்குச் கொடுத்த பின்பு, நீ என்னிடத்து இரக்கம் கொள்ளா தே' என்று சொல்லி இலக்குவன் அரத்தால் அராவப்பட்ட வேலையுடைய இராமன் திருவடிகளை வணங்கினான்.

கு: 'கேகயன் மகள்' என்றது, கைகேசி என்னும் பொருளது கருங்குழல் கூறியது, கைகேசியின் இளமையைக் குறித்து நின்றது. அவள் இளமை காரணமாகவே தயரதன் அவளிடம் பெருங்காதல் காட்ட நேர்ந்தது என்ற குறிப்பும் கொள்க. காவலன் என்றது, அரசன் என்னும் பொருளது. தயரதன் கைகேசிக்கு வரம் கொடுத்து, அவ்வரத்தால் நின்னைப்பிரிய நேர்ந்தபோது நின் பிரிவாற்றாது தன் இனிய உயிரை எமனுக்குக் கொடுத்தான்

அது அரிய செயல். அதைக் கண்டிருந்த நீ என்பிரிவுக்கு இரங்குதல் வேண்டா, என இராமன் திருவடிகளில் வணங்கிக்கேட்டுக் கொண்டான். தயரதன் செய்த தியாகத்தினும் தன் செயல் பெரியதன்று என்ற கருத்தால் இங்ஙனம் கூறினான். அரத்தால் அராவப் பட்டவேல் என்பார், 'அரங்கொல் வேல்' என்றார். தண்டிப்பதற்குரிய கருவியும், தகுதியும் உடையவன் இராமன் என்பதைக் குறிப்பிட்டவாறு. வாய்மையும்,மரபுங்காக்க மன்னுயிர் துறந்தவன் தயரதன். அவன் மக்களாகிய நாமும் வாய்மையும் மரபும் காத்தல் கடனன்றே என்பது கருத்து. (76

## மறலிக்கு ஈந்த வரத்தை நிறைவேற்றுக எனல்

1420 உன்னை வாய்மொழி காத்தலா லுலகத்தி லுளதூங்
கன்னை வாய்வரங் கொடுத்தன னுதவலா லிரங்கல்
என்னை நீமற லிக்கரு ளென விசை வரங்கள்
தன்னையேயரு டருதியால் விடையெனத் தளர்ந்தான்.

உன்னை வாய்மொழி காத்தலால் உலகத்தில் உளது ஊங்கு
அன்னை வாய்வரம் கொடுத்தனன் உதவலால் இரங்கல்
என்னைநீமறலிக்கு அருள் என இசை வரங்கள்
தன்னையே அருள் தருதியால்விடை எனத் தளர்ந்தான்.

பொ: 'உன்னை உலகத்தில் நிலைபெற்றுள்ள வாய் மொழியிலிருந்து தவறாதவனாகக் காப்பாற்றுதலாலும், முன்பு தாய் கைகேசியிடம் வரம் கொடுத்தவனாகிய தசரதன் பெற்ற பிள்ளை ஆதலாலும், நீ இரக்கம் கொள்ளலாகாது. என்னை நீ எமனுக்குக்கொடுப்பதென இசைந்த வரங்கள் தம்மையே அருளுக. விடை தருவாயாக!' எனச் சொல்லித் தளர்வெய்தினான்.

கு: 'உலகத்திலுளது ஆகிய வாய்மொழி' என இயையும். என்னை மறலிக்குக் கொடுப்பது ஆகிய செயல், உன்னை வாய்மொழி தவறாதவனாக ஆக்குவதாலும் முன்னம் அன்னையிடம் வரம் கொடுத்த தயரதன் பெற்ற மகன்நீ ஆதலாலும் எனக்காக

இரங்குதல் கூடாது எனக் காரணங்காட்டிக் கூறியவாறு. ஊங்கு-முன்பு. அன்னைக்கு வரங்கொடுத்து அதனை மாற்றாமல் காத்த தயரதன்போலவே நீயும் மறலிக்குக் கொடுத்த வரத்தைத் தவறாமல் காப்பாற்றுதல் வேண்டும் என்பது கருத்து. வரங்கள் தன்னையே என்பது ஒருமைப்பன்மை மயக்கம். (77)

## இலக்குவன் பிரிவுக்கு இராமன் இரங்குதல்

1421 அன்னது கேட்டபி னருவி யாமெனத்
தன்னிரு தடங்கணீர் தாழ்ந்து மார்புற
மன்னிய நிழலென மணந்து நீங்குறாப்
பின்னவன் பிரிவினுக் கஞ்சிப் பேதுற்றான்.

அன்னது கேட்டபின் அருவி ஆம் எனத்
தன் இருதடங்கண்நீர் தாழ்ந்து மார்புஉற
மன்னிய நிழல் என மணந்து நீங்குறாப்
பின்னவன் பிரிவினுக்கு அஞ்சிப் பேதுற்றான்.

பொ: இலக்குவன் காரணங்காட்டிக் கூறிய சொல்லைக் கேட்டபின், தன் இருகண்களிலும் நீர் அருவிபோல ஒழுகி மார்பையடைய, நிலைபெற்ற நிழல் என்னும்படி கலந்திருந்து நீங்காத, பின்பிறந்த இலக்குவன் பிரிவுக்கு அஞ்சித் துன்புற்றான்.

கு: 'கணீர் அருவியாமெனத் தாழ்ந்து' என இயையும். மன்னிய - நிலைபெற்ற. மணந்து - கலந்து. பேதுறுதல்-செய்வதறியாது வருந்துதல். (78)

## வசிட்ட முனிவரை வரவழைத்தல்

1422 வளநகர் மாந்தரை வசிட்டன் றன்னுடன்
தளமலர்த் தாரினீர் தருதி ராலென
அளியின மெழுந்தெழுந் தார்க்கு மாமதுத்
துளவணி மார்பினான் றூது போக்கினான்.

வளநகர் மாந்தரை வசிட்டன் தன்னுடன்
தளமலர்த் தாரினீர் தருதிரால் என
அளிஇனம் எழுந்து எழுந்து ஆர்க்கும் மாமதுத்
துளவணி மார்பினன் தூது போக்கினன்.

பொ: 'இதழ்கள் நிறைந்த மலர்மாலை யணிந்தவர்களே! நம் வளநகரத்துப் பெருமக்களையும் வசிட்ட முனிவரையும் அழைத்து வாருங்கள்' என்று வண்டுகள் கூட்டம் கூட்டமாக எழுந்து, எழுந்து ஆரவாரிக்கும் நிறைந்த தேனினையுடைய துளப மாலையை அணிந்த மார்பினையுடைய இராமன் தூதுவரைப் போகச் செய்தான்.

கு: 'வசிட்டன் தன்னுடன் வளநகர் மாந்தரைத் தருதிர்' என இயையும். தளம்-இதழ். தூதுவர் மாலையணிந்திருந்தனர் என்பது புலப்படத் 'தளமலர்த்தாரினீர்' என்றான். அளியினம்-வண்டின் கூட்டம். எழுந்தெழுந்து ஆர்த்தது, துளபத்தில் உள்ள தேன்மிகுதியை உண்டு களித்தமையால் நிகழ்ந்தது. துளவு-துளசி.
(79)

## வசிட்டரும் நகர மாந்தரும் அரசவையில் அமர்தல்

1423 போனபின் றூதுவர் புகன்ற வாய்மொழி
ஆனது கேட்டபின் னரசற் கண்ணு றீஇ
மானகர் மாந்தரும் வசிட்டன் றன்னுடன்
ஏனையர் யாவரு மிருந்த வேலையில்.

போனபின் தூதுவர் புகன்ற வாய்மொழி
ஆனது கேட்டபின் அரசன் கண் உறீஇ
மானகர் மாந்தரும் வசிட்டன் தன்னுடன்
ஏனையர் யாவரும் இருந்த வேலையில்.

பொ: போனபின்பு, தூதுவர் சொன்ன வார்த்தையைக் கேட்ட பின், அயோத்தி நகரப் பெருமக்களும் வசிட்ட முனிவரோடு மற்றையோர் யாவரும் அரசனாகிய இராமனைக் கண்டு ஆசனங்களில் அமர்ந்த பொழுது.

கு: குளகம். மேலைச் செய்யுளில் முடியும். 'தூதுவர் போனபின்' என மாற்றினும் அமையும். 'வசிட்டன் தன்னு'—ன் மாநகர் மாந்தரும் ஏனையர் யாவரும் அரசற்கண்ணுறீஇ இருந்த வேலையில்' என இயையும். அரசற்கண்ணுறீஇ - அரசனைக் கண்டு. 'மாநகர்' எனற்பாலது, எதுகைநோக்கி 'மாலகர்' என மாறிவந்தது. கண்ணுறீஇ - கண்ணுற்று. கணணுறுதல்-பார்த்தால். வேலை-அமையம். (80)

## இராமன் இருந்த பேரவையை நோக்கிச் சொல்லுதல் வேறு

1424 இருந்தபே ரவையை நோக்கி
யிவர்சடை முனிவன் றன்னை
வரந்தரு கென்றவாறு மத்திரி
மைந்த னேவத்
தருந்தரு வனைய தம்பி
தன்னுழை வந்தவாறும்
அரம்புனைந் திலங்குவைவே லடல்
புனையிராமன் சொன்னான்.

இருந்த பேரவையை நோக்கி, இவர்சடை முனிவன் தன்னை
வரந்தரு கென்ற வாறும் அத்திரி மைந்தன் ஏவத்
தருந்தரு அனைய தம்பி தன்உழை வந்தவாறும்
அரம்புனைந்து இலங்கு வைவேல் அடல்புனை இராமன் சொன்னான்.

பொ: தன்முன் அமர்ந்திருந்த பேரவையைப் பார்த்து வளர்ந்த சடையையுடைய மறலியாகிய முனிவன், தன்னைப் பார்த்து வரம்தருக என்றுகேட்ட தன்மையும், அத்திரி முனிவன் மைந்தனாகிய துருவாச முனிவன் ஏவியதால், தரும் இயல்புடைய கற்பகத்தருவினைப் போன்ற தம்பி இலக்குவன், தன்னிடத்தில் வந்த தன்மையையும் அரத்தால் அழகு செய்யப்பட்டு விளங்குகின்ற கூரிய வேலினையுடைய வலிமைமிக்க இராமன் சொன்னான்.

கு: இராமன் அவையோரை நோக்கி, மறலியாகிய முனிவன் வந்து தன்னைவரங் கேட்டதையும், துருவாசமுனி ஏவ இலக்குவன்

அங்கு வந்ததையும் கூறினுன், என்பது கருத்து. 'இவர் சடை முனிவன்' என்றது, முனிவர் வேடத்தில் வந்த எமனை. அவன் 'கேட்ட வரம் 'நாமிருவரும் பேசும்போது யாரும் வரலாகாது மீறிவந்து பார்ப்பவரைக் கொல்ல வேண்டும்' என்பது. இலக்குவனது வள்ளன்மை புலப்பட வேண்டி, 'தரும் தருவனைய தம்பி' என்று சிறப்பித்தவாறு. கேட்டதைத் தரும் கற்பகத் தருப் போன்றவன் இலக்குவன் என்க. மறலியின் கருத்துத் தெரிந்தும் அவன் கருத்துக்கு முரணுக இடையில் நுழைந்தது அந்த வள்ளல் தன்மையால்தான் என்பது புலப்படுத்தியவாறு. தான் மாயினும் தன் குலம் வாழ்தல் வேண்டும் என்ற கொள்கையினுல் ஆதல் காணலாம். (31)

## வசிட்டன் பழைய வரலாறு ஒன்று கூறுதல்

1425 மத்தக யானை யானை
வசிட்டனு நோக்கி யுந்தை
தத்துறு புரவித் திண்டேர்த்
தசரதன் றன்பால் வந்த
அத்திரி புதல்வன் றன்னை
வரன்முறை யடிவணங்கி
எய்த்தனன் புதல்வ ரில்லே
னென்னைகொல் செய்வதென்ருன்.

**மத்தக யானை யானை வசிட்டனும் நோக்கி, உந்தை**
**தத்துறு புரவித் திண்தேர் தசரதன் தன்பால் வந்த**
**அத்திரி புதல்வன்தன்னை வரன்முறை அடிவணங்கி**
**எய்த்தனன் புதல்வர் இல்லேன், என்னைகொல் செய்வது என்ருன்**

பொ : மத்தகத்தோடுகூடிய யானைச்சேனையையுடைய இராமனை, வசிட்டனும் பார்த்து, 'உன் தந்தையாகிய தாவிச் செல்கின்ற குதிரைகள் பூட்டிய தேரினை யுடைய தசரதன் தன்னிடம் வந்த அத்திரி முனிவன் மகனுகிய துருவாச முனிவனை முறைப்படி அடி வணங்கி, வயது முதிர்ச்சியால் இளைத்துப்

போனேன், இதுகாறும் புதல்வரைப் பெருதவனுக இருக்கிறேன் என்செய்வது?' என்று வினவினுன்.

கு: முனிவராதலின், பிள்ளைப்பேற்றிற்குத் தக்க வழி சொல்வார் என்ற எண்ணத்தால், அத்திரி முனிவரைக் கண்டு, 'புதல்வரில்லேன் என்னைகொல் செய்வது' என்று வினவினுன். 'யானை யானை' என்பதற்கு, யானை போன்றவனை எனப்பொருள் கூறலும் ஆம். 'இருகை வேழத்திராகவன்' எனப் பாயிரத்துக் கூறுதலும் காண்க. இதுபோழ்து இன்னது செய்வதென் றறியாது மயங்கியுள்ள இராமனுக்கு மதமயக்கமுடைய யானை உவமையாதல் பொருத்தமுடையதே ஆம். தந்துதல் - தாவிச் செல்லுதல். தசரதன் என்ற பெயர்க்கேற்பத் 'திண்டேர்' அடையாகக் கூறப்பெற்றது. அத்திரிபுதல்வன்-துருவாசன். 'வரன்முறை' என்றது, பண்டுதொட்டுப் பழகிவரும் முறையை. எய்த்தல்-இளைத்தல். எய்த்தனன் என்ற குறிப்பால் அறுபதினுயிரம் கண்டு புதல்வரின்றி வாழ்ந்து இளைத்தமை புலப்படுத்தியவாறு. கொல்-அசைநிலை. (82)

1426 உறுபரி வேள்வி வேட்பி
னுரனுடை மைந்தர் நால்வர்ப்
பெறுகுவை யொருவன் றன்ன
தாருயிர் பிரியுங் காலே
மறுவறு மூவர் தாமு மடிகுவர்
மன்ன வென்ற
தறிகுவன் யானு மென்றே
யருமறை யாளன் சொன்னுன்.

உறுபரிவேள்வி வேட்பின் உரன்உடை மைந்தர் நால்வர்ப்
பெறுகுவை; ஒருவன் தன்னது ஆருயிர் பிரியுங் காலே
மறுவறு மூவர்தாமும் மடிகுவர் மன்ன என்றது
அறிகுவன் யானும் என்றே அருமறை யாளன் சொன்னுன்.

பொ: 'பெரிய அசுவமேத யாகம் செய்தால் வலிமையுடைய மைந்தர் நால்வரைப் பெறுவாய். அவர்களில் ஒருவன் அரிய உயிர் பிரியும் காலத்துக் குற்றம் அற்ற மற்றை மூவரும் மடிகுவர்,

அரசே! என்று கூறியதை யானும் அறிவேன்' என்று அரிய வேதங்களையுணர்ந்த வசிட்டன் சொன்னான்.

கு: உறு என்ற உரிச்சொல் பெருமையுணர்த்தியது. உரன்-வலிமை தன்னது என்புழி கைனகரம் விரித்தல் விகாரம். நால்வர்ப் பெறுகுவை என்புழி இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலின் இயல்பின் விகாரம் பெற்றது. அன்று துருவாசர் கூறியதை யானும் அறிவேன் என வசிட்டன் கூறியவாறு. (83)

## வசிட்டன் தன் கருத்துரைத்தல்

1427 ஆதலால் விதியை வெல்வ
தரிதுநீ யருணப் பைம்பூண்
ஏதிவாழ் கடகச் செங்கை
யிலக்குவற் கிரங்கல் வேண்டா
தாதவி ழலங்கற் பைந்தார்த்
தமனியத்தரளப் பைம்பூண்
மாதிவெம் புரவித் திண்டேர்
மன்னவென் றின்ன சொன்னான்.

ஆதலால் விதியை வெல்வது அரிதுநீ அருணப் பைம்பூண்
ஏதிவாழ் கடகச் செங்கை இலக்குவற்கு இரங்கல் வேண்டா
தாது அவிழ் அலங்கல் பைந்தார் தமனியத் தரளப் பைம்பூண்
மாதிவெம் புரவித் திண்தேர் மன்ன என்று இன்ன சொன்னான்.

பொ: மகரந்தத்தோடு மலர்ந்துள்ள அசைகின்ற பசுமையான மாலையினையும், பொன்னாலியன்ற முத்துகள் பதித்த பசுமையான ஆபரணத்தையும், வட்டமாகச் செல்கின்ற கதியினையுடைய குதிரைகள் பூட்டிய தேரினையுமுடைய அரசே! முன்னமே அமைந்திருக்கும் விதியை வெல்வது அரிது. ஆதலால், செந்நிறமான பசும்பொன் ஆபரணத்தையும், வாள் வாழ்கின்ற, கடகம் அணிந்த, சிவந்த கையையுடைய இலக்குவனுக்காக நீ இரங்குதல் வேண்டா என்று இத்தகைய சொற்களைச் சொன்னான்.

கு. 'பைந்தார் பைம்பூண் புரவித் திண்தேர் மன்ன'. விதியை வெல்வது அரிது ஆதலால் நீ இலக்குவற்கு இரங்கல் வேண்டா என்று இன்ன சொன்னான் என இயையும். 'மாதி' என்பது, குதிரைச் செலவில் ஒருவகை. அது வட்டமாகச் செல்லுவது, அருணம்-சிவப்பு. ஏதி-வாள். தாது-மகரந்தம். (84)

## இலக்குவன் விடைதருக என இராமனடியில் வீழ்தல்

1428 நங்குலக் குரவ னான நான்மறை முனிவன் சொன்ன
திங்குநீ கேட்டி யன்றே யினிவிடை தருதி யென்னா
மங்கைத னுருவ மாக வார்சிலை மீது சென்ற
பங்கய மென்னச் சேந்த பதயுக மீது வீழ்ந்தான்.

நம்குலக் குரவன் ஆன நான்மறை முனிவன் சொன்னது
இங்குநீ கேட்டி அன்றே இனி விடை தருதி என்னா
மங்கைதன் உருவம் ஆக வார்சிலை மீது சென்ற
பங்கயம் என்னச்சேந்த பதயுகம்மீது வீழ்ந்தான்.

பொ: நமது குலக்குருவாகிய நான்கு வேதங்களை உணர்ந்த வசிட்ட முனிவன் சொன்னதை இங்கு நீ கேட்டாய் அன்றோ. இனிமேல் விடைகொடுப்பாயாக! என்று அகலிகை என்னும் மங்கையின் உருவம் ஆகுமாறு நீண்ட கல்லின்மேல் சென்ற தாமரை மலரினைப்போலச் சிவந்த இருதிருவடிகளின்மேல் வீழ்ந்து வணங்கினான்.

கு: குரவன்-குரு. இராமனுடைய திருவடிச்சிறப்புப் புலப் படுத்த வேண்டி மங்கைதன் உருவமாக, 'வார்சிலைமீது சென்ற... பதயுகம்' என்றார். சாபத்தால் கல்லான அகலிகையை மீண்டும் பெண்ணாகச் செய்த திருவடி ஆதலின், இலக்குவனுக்கும் பழைய தெய்வநிலையைத் தரத் தகுதியுடையதே என்ற குறிப்பும் இங்குக் காணலாம். பங்கயத்தின் வண்ணமான சிவப்பு நிறமுடைய பதயுகம் என்க. பதயுகம்-இரு திருவடிகள். வீழ்ந்தான் என்பது,

இலக்குவனது ஆற்ருமை புலப்படுத்தி நின்றது. வணங்கினுன் என்பதே பொருள். (85)

## இலக்குவன் பிரிவை எண்ணி இராமன் உன்மத்தனுதல்

1429 தன்மத்தின் கண்ண தான
தம்பிதன் பிரிவெ னெஃகம்
மன்மத்தை யீர்த லாலே
மலர்க்கணீ ரருவி சோரக்
கன்மத்தின் விளைவை யெண்ணிக்
கட்டுரை யொன்றுங்கூருன்
உன்மத்த ஞயி ருந்தா னுணர்வுட
னுயிர்ப்பு மில்லான்.

தன்மத்தின் கண்ணது ஆன தம்பிதன் பிரிவுஎன் எஃகம்
மன்மத்தை ஈர்தலாலே மலர்க்கண்நீர் அருவி சோரக்
கன்மத்தின் விளைவை எண்ணிக் கட்டுரை ஒன்றும் கூருன்
உன்மத்தனுய் இருந்தான் உணர்வுடன் உயிர்ப்பும் இல்லான்.

பொ: தருமத்தின் கண்போன்றவனுன தம்பி இலக்குவனின் பிரிவு என்கின்ற வேல், தன் மார்பைப் பிளத்தலால் தன் தாமரை மலர்போன்ற கண்களில் நீர் அருவி போல ஒழுக, வினையின் விளைவினை எண்ணி, எண்ணி இராமன் ஒரு சொல்லும் சொல்லாதவனுய் உணர்வும் உயிர்ப்பும் இல்லாதவனுய்ப் பித்தன்போல இருந்தான்.

கு: தர்மம், மர்மம், கர்மம் என்ற வடசொற்கள் தன்மம், மன்மம், கன்மம் எனத் தமிழ் நடைபெற்று வந்தன. கண்ணது என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. ஆன, ஆய், என்ற ஆக்கச் சொற்கள் உவம உருபின் பொருளில் வந்தன. 'ஆள்வாரிலி மாடா வேனே' (திருவாசகம்- ) என்புழிப் போல. மன்மம்-மார்பு. உன்மத்தன்–பித்தன். இல்லானுய் இருந்தேன், என இயையும். 'பிரிவு என் எஃகம்' என்பது, உருவகம். இலக்குவன், தன்னேடு வாராமல் முன்புபோக நேர்ந்ததின் விளைவு என்பது இராமன் கருத்து. (86)

## இலக்குவன் இராமனை வணங்கிவிட்டுப் பிரிந்துபோதல்

1430 செதுமொழி வினைஞர் செய்த
சித்திரப் பாவை போல
எதிர்மொழி யொன்றுங் கூறு
திராகவ னிருத்த லோடும்
கதுமென வெழுந்து முன்னோன்
கழலிணை தொழுது வாழ்த்தி
அதுவிடை யென்று நில்லா
தணிநக ரகன்று போனான்.

செதுமொழி வினைஞர் செய்த சித்திரப் பாவைபோல
எதிர்மொழி ஒன்றும் கூறாது இராகவன் இருத்தலோடும்
கதும்என எழுந்து முன்னோன் கழல்இணை தொழுது வாழ்த்தி
அதுவிடை என்று நில்லாது அணிநகர் அகன்று போனான்.

பொ: பொல்லாமொழி பேசுகின்ற கைவினைஞர் செய்த சித்திரப்பாவை போல, எதிர்மொழி ஒன்றும் பேசாமல் இராமன் இருக்கவும், இலக்குவன் விரைவாக எழுந்து, அண்ணனுடைய திருவடிகளைத் தொழுது வாழ்த்திவிட்டுப் பேசாதநிலையே விடை கொடுத்ததாகும் என்று கருதி, அங்கு நில்லாது அழகிய அயோத்தி நகரை விட்டு அகன்று போனான்.

கு: செதுமொழி - பொல்லாதசொல். வினைஞர் என்றது, இங்கு ஓவிய வினைஞரை. ஒன்றும் பேசாதநிலைக்குச் சித்திரப் பாவையை உவமை கூறுவதுண்டு. 'சித்திரப்பாவை அத்தக வடங்கி' (நன்னூல்- ) என்பது காணலாம். கதுமென என்றது, விரைவுக்குறிப்புணர்த்தும் சொல். அதுவிடை என்புழி அது என்றது. ஒன்றும் கூறாதிருந்த நிலையை. அணிநகர் என்றது, அயோத்தியை. இராமன் பிரிவுத்துன்பத்தால் பேசாதிருந்த நிலையில் இலக்குவன் அவனடி தொழுது வாழ்த்திவிட்டுப் புறப்பட்டுப்போனான் என்க. (87)

1431 தேன்பிரி யாதகானிற் சிலைகொடு காத்த
பின்னோன்
ஊன்பிரி கின்றகாலத் துயிரினை யொத்தான்
முன்னோன்
கான்பிரி கல்லாவோதிக் கைகயன் மடந்தை
கூறந்
தான்பிரிகின்ற நாளிற் றந்தைதன் றகைய
னானான்.

தேன்பிரியாத கானில் சிலைகொடு காத்த பின்னோன்
ஊன்பிரிகின்ற காலத்து உயிரினை ஒத்தான்; முன்னோன்
கான்பிரி கல்லா ஓதிக் கைகயன் மடந்தை கூறத்
தான் பிரிகின்ற நாளில் தந்தைதன் தகையன் ஆனான்.

பொ: தேன்வண்டுகள் பிரியாது வாழ்கின்ற காட்டில், கையில் வில்லை வைத்துக் கொண்டு, இராமனைக் காத்துவந்த இலக்குவன் (இராமனைவிட்டுப் பிரியும்போது) உடம்பை விட்டுப் பிரியும்பொழுது உயிர் துயருறுவதை ஒத்துத் துயருற்றான். வாசனை நீங்காத கூந்தலையுடைய கைகேசி சொல்லத், தான் காட்டுக்குப் பிரிந்து போகின்ற பொழுது தந்தை தயரதன் வருந்தியதுபோல வருந்தினான்.

கு: ஒருவரைவிட்டு ஒருவர் பிரியுங்காலத்து இலக்குவனும் வருந்தினான். இராமனும் வருந்தினான். அந்த வருத்தம் எவ்வளவு பெரிது என்பதை உவமை முகத்தான் விளக்கியவாறு. தேன் என்பது ஒருவகை வண்டு. காட்டுக்கு அடை. காட்டில் இராமனுக்கு என்ன நேருமோ என்ற அச்சத்தால் நாணேற்றிய வில்லோடு காத்திருந்த இலக்குவன், நாட்டில் அவனைக்காவாது விட்டுப் பிரிகின்றான். அவ்வாறுபிரியும்போது இலக்குவன் உள்ளம், உடம்பினைப் பிரியாதிருந்த உயிர் அவ்வுடம்பினைப் பிரியும்போது, வருந்துவது போலப் பெரிதும் வருந்தினான் என்றவாறு. ஊன் என்றது உடம்பினை. கான்-வாசனை. ஓதி-கூந்தல். இலக்குவன் பிரிய நின்ற இராமன், வருத்தம் எத்தகையது எனின், கைகேசியின் கட்டளைப்படி தான் காட்டிற்குப் புறப்பட்டபோது

தன்னைப் பிரிய தயரதன் பட்ட துன்பத்தைத்தான் பட்டான் என்றவாறு. (88)

## இலக்குவன் போதலைக் கண்டு கண்டார் கூறுவது

1432 நம்புநான் மறைவல் லோர்க்கு
நல்கிய வரநன் றென்பார்
உம்பரார் சொன்ன வார்த்தை
யொழிவ ரோவுலகத் தென்பார்
கம்பியா நின்ற துள்ளங்
கழிந்ததோ காலமென்பார்
தம்பியா ரின்றி யாவி
தரிக்குமோ தலைமய னென்பார்.

நம்பும் நால்மறைவல்லோர்க்கு நல்கிய வரம் நன்று என்பார்;
உம்பரார் சொன்ன வார்த்தை ஒழிவரோ உலகத்து என்பார்;
கம்பியா நின்றது உள்ளம் கழிந்ததோ காலம் என்பார்;
தம்பியார் இன்றி ஆவி தரிக்குமோ தலைமயன் என்பார்.

பொ: நம்புதற்குரிய நான்மறைவல்லோனுக்குக் கொடுத்த வரம் நல்லது என்று (குறிப்பு மொழியால்) சொல்லி இகழ்வார். தேவர்கள் சொன்ன சொல்லைத் தவறி நடப்பார்களோ இவ்வுலகத்தில் என்று சொல்வார்கள்; (இலக்குவன் பிரிந்து போதலைக் கண்ட) உள்ளம் நடுங்குகின்றது; இவர் ஆயுட் காலம் முடிந்து விட்டதோ என்று சொல்வார்கள்; தன்தம்பி இலக்குவன் இல்லாமல் தலைமயனாகிய இராமன் உயிர் தரித்திருப்பானோ என்று சொல்வார்கள்.

கு: 'மறைவல்லோர்' என்றது, முனிவர் வேடத்தில் வந்த மறலியை. அவர்க்கு நல்கிய வரமாவது, இராமனும் மறலியும் பேசிக்கொண்டிருக்கும்போது நடுவே வருவோர் யாவராயினும் அவரைக் கொல்லுதல் வேண்டும் என்ற வரம். 'உம்பரார்' என்றது, மறலியை. அவர் சொல் தவறாது நடப்பதே உலகத்து இயல்பு என்பது புலப்பட 'உம்பரார் சொன்ன வார்த்தை யொழிவரோ உலகத்து' என்றார். 'உள்ளம் கம்பியா நின்றது' என இயையும்

கம்பித்தல்–நடுங்கல். காலம் என்றது, ஆயுட்காலத்தை. இலக்குவன் முகத்தைப் பார்க்கும்போது இக்குறிப்பு தோன்றுகின்றது என்றவாறு. 'தம்பியார்' உயர்ந்ததன் பலர் பாலாயிற்று. தம்பியைப் பிரிந்து இராமன் உயிர் தரித்திரான் என்பது கருத்து (89)

1433 வலத்தியன் மன்னர்க் கெல்லாம்
வரங்கொடுத் தாவி நீத்தல்
குலத்தியல் பன்றே யென்பார்
கொள்ளுமோ கூற்ற மென்பார்
அலக்கணுற் றிடாது வாழ்வோ
டமையுமோ வயோத்தி யென்பார்
இலக்குவ னாவி நீங்கி
னிருக்குமோ விராம னென்பார்.

வலத்தியல் மன்னர்க்கு எல்லாம் வரம்கொடுத்து ஆவிநீத்தல்
குலத்தியல்பு அன்றே என்பார், கொள்ளுமோ கூற்றம் என்பார்;
அலக்கண் உற்றிடாது வாழ்வோடு அமையுமோ அயோத்தி என்பார்;
இலக்குவன் ஆவி நீங்கின் இருக்குமோ இராமன் என்பார்.

பொ: வலிமைபொருந்திய அரசர்க்கெல்லாம் வரத்தை முன்னே கொடுத்து விட்டு அவ்வரம் காரணமாக உயிர்விடுதல் என்பது சூரியகுலத்து இயல்பல்லவோ? என்பார்கள்; அறத்தின் வடிவான இலக்குவனைக் கூற்றுவன் கொள்வானோ? என்று சொல்வார்கள்; இலக்குவனை யிழந்த அயோத்தி நகரம் துன்புறாது வாழ்வோடு அமையுமோ? என்பார்கள்; இலக்குவனது உயிர் நீங்கினுல் இராமன் பின்பு உயிர்வாழ்ந்திருப்பானே? என்று சொல்வார்கள்.

கு: தசரதன் கைகேசிக்கு வரங்கொடுத்து ஆவிநீத்ததும், பின்பு இராமன் மறலிக்கு வரம்கொடுத்து இலக்குவன் உயிர் நீங்கலுற்றதும் நினைந்து, 'குலத்தியல்பு அன்றே' என்று கூறினர். இலக்குவன் பிரிவால் அயோத்தி நகரம் நல்வாழ்வோடு அமையாது 'அலக்கணுற்றிடும்' என்பது ஊரவர் எண்ணம். இராமன்

இலக்குவனைப் பிரிந்து இருக்கமாட்டான் என்ற நினைவினால் 'இருக்குமோ இராமன்?' என்று வினவினர். (90)

## இலக்குவன் சரயு நதியைச் சேர்தல்

1434 இன்னநன் னகரத் துள்ளோர்
நினைந்திளைந் தேங்கி மாழ்க
நன்னகர் வாயி னீங்கி
நவமணி கொழித்து முத்தம்
பொன்னொடு வரன்றி யெங்கும்
புனல்பரந் துலகம் போற்றும்
தன்னிகர் நதியொன் றில்லாச்
சரயுப்பே ராறு சேர்ந்தான்.

இன்னநல் நகரத்து உள்ளோர் நினைந்து இனைந்து ஏங்கி மாழ்க நல்நகர் வாயில் நீங்கி நவமணி கொழித்து, முத்தம் பொன்னொடு வரன்றி எங்கும் புனல் பரந்து உலகம் போற்றும் தன்னிகர் நதிஒன்று இல்லாச் சரயுப்பேர் ஆறு சேர்ந்தான்.

பொ: அயோத்தியென்னும் நல்ல நகரத்துள்ளவர்கள் இன்னவாறு கூறிப் பல நினைந்து வருந்தி, ஏங்கி மனம் மாழ்கா நிற்க, அந்த நல்ல நகரின் வாயிலைவிட்டு நீங்கி, நவமணிகளைக் கொழித்து, முத்தும் பொன்னும் வாரிக்கொண்டு, எங்கும் நீர் பாவி (யூட்டுதலால்), உலகம் போற்றுகின்ற தனக்கு நிகரான நதியொன்றுஇல்லாத (தனித் தன்மை வாய்ந்த) சரயு என்னும் பெரிய ஆற்றினைச் சேர்ந்தான் இலக்குவன்.

கு: இனைதல், ஏங்குதல், மாழ்குதல் என்பன வருத்தத்தின் பலநிலைகளை யுணர்த்துவன. இனைதல்-பொதுவாக வருந்துதல். ஏங்குதல்-இனி என்று காணப் போகின்றோம் என்று ஏங்குதல். மாழ்குதல்-சோர்ந்து போகுதல். 'உலகத்துள்ளோர் மாழ்க, வாயில் நீங்கிச் சரயுப் பேராறு சேர்ந்தான்' என இயையும். சரயு நதியின் வளம் புலப்படுத்த 'நவமணி கொழித்தலும் முத்தம் பொன்னொடு ஒதுக்குதலும்' என்று கூறினர். 'புனல் பரந்து ஊட்டுதலால் உலகம் போற்றும்' என ஒருசொல் வருவிக்க.

உலகம் போற்றும் சரயு என்க. தன்னிகரில்லா இராமன் ஆட்சியிலிருக்கும் சரயுநதியும், தன்னிகரில்லாத தாயிற்று என்க. (91)

## இலக்குவன் சரயுநதியில் மூழ்குதல்
### வேறு

1435 ஆசின்மணி மதில்சூழு மயோத்திநக ருறைகின்ற
மாசனங்க டுயர்மூழ்க மடந்தையர்செங் கனன் மூழ்கப்
பாசநடு வினினில்லாப் பரதன் விழிப் புனன் மூழ்கத்
தாசரதி யிடர்மூழ்கச் சரயுநதி மூழ்கினனால்.

ஆசு இல் மணி மதில்சூழும் அயோத்திநகர் உறைகின்ற;
மாசனங்கள் துயர்மூழ்க மடந்தையர்செங் கனல்மூழ்க;
பாசநடுவினில் நில்லாப் பரதன் விழிப் புனல் மூழ்க;
தாசரதி இடர் மூழ்க, சரயுநதி மூழ்கினனால்.

பொ: குற்றமற்ற மணிகள் பதித்த மதிலால் சூழப்பட்ட, அயோத்தி நகரத்தில் வாழ்கின்ற பெருமக்களெல்லாம் துயர்க் கடலில் மூழ்கவும்; பெண்டிரெல்லாம் துயர் பொறுது சிவந்த நெருப்பில் மூழ்கவும்; தவநிலையில் பழகினமையால் பாசவுணர்வின் நடுவில் நில்லாத பரதன் கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கவும்; இராமன் இடர்க்கடலில் மூழ்கவும்; இலக்குவன் சரயுநதியில் மூழ்கினன்.

கு: 'மூழ்க' என்ற சொல்லே பலமுறை வரத் தொடுத்த தனால், இச்செய்யுள் சொற்பின் வருநிலையணி ஆகும். செல்வச் சிறப்புத் தோன்ற குற்றமற்ற நல்ல மணிகளைப் பதித்துச் செய்த மதில் அயோத்திநகரைச் சூழ்ந்திருந்தது என்றவாறு மாசனங்கள் என்றது நகரப் பெருமக்களை. இலக்குவன் பிரிந்த துயர் பொறுது மடந்தையர்கள் கனலில் மூழ்கி உயிர்நீத்தார்கள் என்க. காந்தி மகான் இறந்தபோது அப்பெருந்துயர் பொறுது பலர் இறந்தது

கண்டுளோம். பாசம் என்பது, உறவினர்மேல்வைத்த பற்றுள்ளத்தினை. பரதன் மனம் எப்போதும் பாசத்தால் பற்றப்பட்டதில்லை என்பார், 'பாசநடுவினில் நில்லாப் பரதன்' என்றார். பாசமில்லாத பரதனும் விழிப்புனலில் மூழ்கி வருத்தமுற, இலக்குவன் சரயுப் புனலில் மூழ்கினன் என்றவாறு. (92)

## மூழ்கிக் கரையேறுதல்

1436 சூகரத்தி னெடுங்கோ ட்டாற் றுளைப்புண்ட
துயர்நீங்கச்
சீகரத்த வுலகாண்ட திறல்வெய்யோன் றிருத்
தம்பி
மோகரித்த முதுபிணிநோய் முதலாய பெரும்
பிறவிச்
சாகரத்தின் கரையேறத் தடங்கரையி
லேறினனால்.

சூகரத்தின் நெடுங்கோட்டால் துளைப்பு உண்ட துயர்நீங்கச்,
சீகரத்த உலகு ஆண்ட திறல்வெய்யோன் திருத்தம்பி,
மோகரித்த முதுபிணி, நோய் முதலாய பெரும்பிறவிச்
சாகரத்தின் கரை ஏறத் தடங்கரையில் ஏறினனால்.

பொ: ஆதிவராகத்தின் நீண்ட கொம்பினால் துளைக்கப்பட்ட பூமியின் துயர் நீங்குமாறு, கடலலைகளால் மோதப்பட்ட அந்தப் பூமி ஆண்ட திறமையை விரும்புகின்ற இராமனுடைய திருத்தம்பியாகிய இலக்குவன், ஆக்கிரமித்துள்ள முதுமையாகிய பிணியும், நோயும் முதலியவற்றினை யுடைய பெரிய பிறவியென்னும் கடலின் கரை ஏறுதற்காகச் சரயுநதியின் பெரிய கரையில் ஏறினான்.

கு: சூகரம்-பன்றி. இரணியாக்கதன் பூமியைச் சுருட்டிக் கடலில் போட்டபோது, திருமால் வராக அவதாரம் எடுத்துச் சென்று, அந்தப் பூமியைத் தன் கொம்பினால் தூக்கிக் கொணர்ந்து பண்டுபோல் இருக்கச் செய்தார் என்பது கதை.

பூமியைப் பன்றி தூக்கியபோது அந்தக் கொம்பினுல் பூமி துளையுண்டு வருந்தியது எனவும், அவ்வருத்தம் தீரத் திருமால் இராமனுய் அவதரித்து, இந்தப் பூமியை ஆண்டான் எனவும், அத்தகைய திறலோன் தம்பி இலக்குவன், சரயுவில் மூழ்கிக் கரையேறினுன் என்க. பிரளய' வெள்ளத்தில் கிடந்த பூமியை மீட்டு வந்த திருமாலின் அமிசமாகிய இராமன் தம்பியும், சரயுவில் மூழ்கிக் கரையேறினுன் என இயைபு காட்டியவாறு. (93)

## இலக்குவன் யோகத்தில் இருத்தல்

1437 அறுபகையை விளைக்கின்ற வைம்புலனு மகத் தடக்கி
உறுவனவொன் பதுவாயு வுயர்வாயு வுள்ளடக்கி
மறுவறுசங் கினந்தவழும் வாலுகத்த தடங்கரை மேல்
எறிகதிர்வே லிலக்குவனு மியோகத்தங் கினி திருந்தான்.

அறுபகையை விளைக்கின்ற ஐம்புலனும் அகத்து அடக்கி,
உறுவன ஒன்பது வாயு உயர்வாயு உள அடக்கி,
மறுஅறு சங்கினம் தவழும் வாலுகத்த தடங்கரைமேல்
எறிகதிர்வேல் இலக்குவனும் இயோகத்து அங்கு இனிது இருந்தான்.

பொ: காமம் முதலிய அறுவகைப் பகையை உண்டாக்குகின்ற ஐந்து புலன்களையும் அவ்விடத்தே அடக்கிக் கொண்டு, உடம்பில் பொருந்தியுள ஒன்பது வாயுவினையும், உயர்ந்த வாயுவாகிய பிராண வாயுவினையும் உள்ளே அடக்கிக் கொண்டு, குற்றம் அற்ற சங்கு இனங்கள் தவழ்கின்ற மணல் பரப்பினையுடைய, பெரிய கரைமேல் பகைவர் மேல் எறிதற்கு உரிய, ஒளிவாய்ந்த வேலினை யுடைய இலக்குவனும் யோகத்தில் இனிதாக அமர்ந்தான்.

கு: ஐம்புல ஆசையே உயிரைக் காமக், குரோத, லோப, மோக, மத, மாச்சரியம் என்கின்ற அறுவகைக் குற்றங்களையும் தூண்டு கின்றமை தோன்ற, 'அறுபகையை விளைக்கின்ற ஐம்புலனும்'

என்றார். தசவாயுக்களில் உயர்ந்த வாயு என்றது, பிராண வாயுவினை. தசவாயுக்கள்-அபானன், உதானன், கிரிகரன், கூர்மன், சமானன், தனஞ்சயன், தேவதத்தன், நாகன், பிராணன், வியானன், என்பன. சரயுநதிக்கரையில் பரவியுள்ள மணற் பரப்பில் சங்குகள் தவழும் வளமிக்கது. வாலுகம்-மணல்பரப்பு. 'மறுவறுசங்கு' என்றது, சங்கின் தூய்மையினை உணர்த்தியவாறு. போர் செய்தற்குரிய இலக்குவன், யோகத்தில் அமர்தல் முரணைத் தோன்றுமன்றே. அந்த முரண் புலப்படவே இழிவு சிறப்பும்மை கொடுத்து 'எறிகதிர்வேல் இலக்குவனும்' என்றார். (94)

## இந்திரன் விமானத்தில் வருதல்

1438 போதிலங்கு மாயிரஞ்செம் புண்டரிகம் பூத்ததொரு
தாதிலிங்குங் கருவரைபோற் றமனியப்பூணிமையவர்கோன்
மூதிலங்கை தீமூள முனிந்தோன்றன் பின்னோன்முன்
மீதிலங்கு செழுங்கனக விமானத்தின் மேல்வந்தான்.

போதுஇலங்கும் ஆயிரம் செம்புண்டரிகம் பூத்ததுஒரு
தாதுஇலங்கும் கருவரைபோல் தமனியப்பூண் இமையவர்கோன்
மூதுஇலங்கை தீமூள முனிந்தோன்தன் பின்னோன்முன்
மீதுஇலங்கு செழுங்கனக விமானத்தின் மேல்வந்தான்.

பொ: போதாக விளங்குகின்ற ஆயிரம் செந்தாமரைகள் பூத்ததாகிய, ஒரு தாது விளங்கும் கரிய மலைபோல்-பழமையான இலங்கையில் தீ மூளுமாறு கோபித்த, இராமனுடைய தம்பிக்கு முன்பாக மேலே விளங்குகின்ற செழுமையானபொன் விமானத்தின்மேல் வந்தான்.

கு: மலர்வதற்கு முன்புள்ள நிலை 'போது' எனப்படும். மலர்ந்த நிலையில் பூ எனப்படும். "காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந்நோய்" என்றது காண்க. கருநிறத்தவனாகிய

இந்திரன் ஆயிரங்கண்களும் விளங்க வந்த தோற்றம், ஒரு கரிய மலை ஆயிரம் தாமரை மலர்களைப் பூத்துக் கொண்டு வந்தது போலத் தோன்றிற்று என்பது இல்பொருளுவமை. இலங்கை அனுமனால் பற்றி எரிந்தது ஏவுதல் கருத்தா இராமன் ஆதலின் மூதிலங்கை தீமூள முனிந்தோன் என அவனைக் குறிப்பிட்டவாறு' தமனியப் பூண் இமையவர்கோன், பின்னேன் முன் கனக விமானத்தின்மேல் வந்தான் என இயையும். (95)

## இந்திரன் இலக்குவனை விமானத்தில் அழைத்துப் போதல்

1439 தன்னை யமர்தொலைத்த தாரரக்கன் றன் மகனைப்
பின்னை யமர்வென்ற பெரியோனைப் பேசரிய
மன்னிய மெய்யாக்கை யுடனே மகிழ்ந்தேத்திப்
பொன்னின் விமான மிசை கொண்டு
போயினான்.

தன்னை அமர்தொலைத்த தார் அரக்கன் தன்மகனைப்,
பின்னை அமர்வென்ற பெரியோனைப் பேசரிய,
மன்னிய மெய்யாக்கை யுடனே மகிழ்ந்து ஏத்திப்
பொன்னின் விமானமிசைகொண்டு போயினான்.

பொ: தன்னைப் போரில் வென்ற இந்திரசித்தினைப் பின்பு போரில் தொலைத்த, பெரியோனாகிய இலக்குவனைச் சொல்லற்கரிதாய் நிலைபெற்ற உண்மையுடம்போடு, மகிழ்ந்து போற்றிப் பொன் விமானத்தின்மேல் ஏற்றிக் கொண்டு போயினான் இந்திரன்.

கு: இந்திரன் தன்னை போரில் தோல்வியுறச்செய்து, 'இந்திர சித்து' எனப் பெயர் பெற்ற இராவணன் மகனைப் பின்பு நடந்த போரில் 'போர் தொலைத்தவன் இலக்குவன்' ஆகலின், அவனைப் 'பெரியோன்' எனப் புகழ்ந்தவாறு. இந்திரன் என்ற எழுவாய் முன்னைச் செய்யுளிலிருந்து வருவிக்கப்படும். 'தார்அரக்கன்' என்றது, மாலையணிந்த இராவணனை. தன் பகைவன் இந்திர சித்தனைக் கொன்ற இலக்குவன் பெருமை கருதி வந்து, இலக்குவனை விமானத்தில் ஏற்றிச் சென்றான் என்க. (96)

## இலக்குவன் வைகுண்டம் சேர்தல்

1440 மீனோத வேலை புடைசூழ் வியனுலகில்
ஏனோர் புலம்ப விகல்வே லிலக்குவனும
ஊனோ டவற்று ளுலையா வுடம்பெய்தி
வானோர் புடைசூழ வைகுண்டம் போய்ப்புக்
கான்.

மீன்ஓத வேலை புடைசூழ் வியன் உலகில்
ஏனோர் புலம்ப இகல்வேல் இலக்குவனும்
ஊனோட அற்றுள் உலையா உடம்பு எய்தி
வானோர் புடைசூழ வைகுண்டம் போய்ப் புக்கான்.

பொ: மீன்கள் நிறைந்த அலைகளையுடைய, கடல்புடை சூழ்ந்த, விரிந்த உலகத்தில் உள்ள ஏனோர் எல்லாம் புலம்பா நிற்க; வலிய வேலை யேந்திய இலக்குவனும் ஊனுடம்பு நீங்கியில்லை யாக, என்றும் உள்ளதாகிய அழியாத தெய்வ உடம்பை அடைந்து, தேவர்கள் பக்கத்தில் சூழ்ந்து வர, வைகுண்டம் போய்ப் புகுந்தான்.

கு: ஓதம்-அலை. நீர் எனலும் ஆம். புலம்புதல் இங்கு அழுதல் என்னும் பொருளது. வைகுண்டம் என்னும் உயர்ந்த உலகம் புகும்போது பழைய உடம்பு மாறித் தெய்வ உடம்பு வந்தது என்பார். "ஊனோட அற்று, உள்உலையா உடம்பு எய்தி" என்றார். உள் உலையா உடம்பு என்பது, உள் உடம்பு, உலையா உடம்பு எனத்தவித்தனி இயையும். என்றும் உள்ளதாகிய அழியாத தெய்வ உடம்பு என்றவாறு. தெய்வ உடம்பு எய்திய இலக்குவன் வைகுண்டம் புகும்போது, தேவர்கள் தம் நன்றியுடைமை தோன்ற பக்கத்தில் சூழ்ந்து வந்தனர் என்க. (91)

## இலக்குவன் பிரிவால் இராமன் பிரிதல் கவிக்கூற்று

1441 அப்பா லியன்ற ததுநிற்க வங்ஙனே
இப்பா லியன்ற தியம்புவெனு லெந்நாளும்
தப்பாத தம்பி தனைநினைந்து சாய்துயர்க்கு
வைப்பாகி யுள்ளே மெலிந்தான் மறவேலான்

அப்பால் இயன்றது அதுநிற்க அங்ஙனே
இப்பால் இயன்ற இயம்புவெனல் எந்நாளும்
தப்பாத தம்பி தனைநினைந்து சாய்துயர்க்கு
வைப்பாகி உள்ளே மெலிந்தான் மறவேலான்.

பொ: அப்புறம் நிகழ்ந்தது ஆகிய அது அவ்வாறே நிற்பதாக; இப்பக்கத்தில் நிகழ்ந்ததைச் சொல்லுவேன். வீர வேலையுடைய வனுகிய இராமன், எந்த நாளிலும் தன்பால் தவறு செய்யாத இலக்குவனும் தம்பியை நினைந்து, மெலிகின்ற துயரத்திற்கு இருப்பிடமாகி உள்ளுக்குள்ளே மெலிந்தான்.

கு: உத்தரகாண்டம் இயற்றிய ஒட்டக்கூத்தரே இங்கு 'இப்பால் இயன்றது இயம்புவென்' என்று சொல்லுகின்றார் இலக்குவன் எந்தநாளிலும் தன்னிடத்துத் தவறு செய்யாமல் வாழ்ந்தவன் என்பதை இராமனே பாராட்டி, அவனை நினைந்து, நினைந்து உடம்பும், உள்ளமும் மெலிகின்றான் என்றவாறு. சாய் துயர்-உடம்பு மெலிகின்ற துயர். மறம்-வீரமா மறவேலானுக இருந்தும் இங்ஙனம் உடம்பும் உள்ளமும் மெலிவினுன். என்றவாறு.

(98)

## இலக்குவனை நினைந்து இராமன் புலம்புதல்

1442 பார்த்தா னிளையோனைக் காணுன் பதைத்

துள்ளம்

வேர்த்தான் றிருமேனி யெல்லாமெலி வுற்றுன்
காத்தாய் நெடுங்காலங் கைவிட்டா

யோவென்னுப்

பூத்தா மரைக்கண் புனலாய்ப் புலம்பினுன்.

பார்த்தான் இளையோனைக் காணுன் பதைத்து உள்ளம்
வேர்த்தான் திருமேனி எல்லாம் மெலிவுற்றுன்
காத்தாய் நெடுங்காலம், கைவிட்டாயோ? என்னுப்
பூத்தாமரைக்கண் புனலாய்ப் புலம்பினுன்.

பொ: இலக்குவன் திரும்பி வருவான் எனப் பொறுத்திருந்து பார்த்தான்; அவ்விளையோனைக் காணாமல் உள்ளம் பதைத்து வேர்த்தான். திருமேனி முழுமையும் மெலிவுற்றான். நெடுங்காலம் வரையில் என்னை அருகிருந்து காப்பாற்றினாய், இப்போது கைவிட்டுச் சென்றாயோ என்று தாமரைப்பூப் போன்ற கண் நீராய்ச் சொரியுமாறு புலம்பினான்.

கு: வேர்த்தல்-உடம்பு வெப்பத்தால் வேர்வை கொள்ளுதல். புனலாய்ப் புலம்புதலாவது கண் நீராய்ச்சொரிய அழுதல். இராமன் பண்டைத் தெய்வநிலை உணர்ந்திருந்தும் கொண்ட மானிட வேடத்திற்கு ஏற்ப இங்ஙனம் துன்புறுவதாகக் கொள்க. (99)

## இராமன் இலக்குவனை எதிர்பெய்து அரற்றல்

1443 ஆற்றுவனோ வேந்தே யவயம் புகுந்தானைக்
கூற்றுவனேர் வந்து குறுகா வகைகாத்து
மாற்றவனேர் விட்ட வடிவேல் வரைமார்பில்
ஏற்றவனே யெம்பீ யிலக்குவனே யென்
செய்கேன்.

ஆற்றுவனோ வேந்தே! அவயம் புகுந்தானைக்
கூற்றுவன்நேர் வந்து குறுகாவகை காத்து,
மாற்றவன்நேர் விட்ட வடிவேல் வரைமார்பின்
ஏற்றவனே எம்பி இலக்குவனே என்செய்கேன்?

பொ: என் இளவரசே! நின்னைப்பிரிந்து இங்கு ஆற்றியிருப்பேனோ? நம்மிடம் அபயம் எனப் புகுந்த வீடணனை, எமன் நேர் வந்து நெருங்காதபடி, அவனை மறைத்து நின்று, காத்து இராவணனாகிய பகைவன் நேரே விட்ட கூரிய வேலினை, நின் மலைபோன்ற மார்பில் ஏற்றுக்கொண்ட பெருமையுடையவனே! என் தம்பீ! இலக்குவனே! யான் இனி என் செய்வேன்.

கு: இலக்குவன் இராமனுக்குப்பின் வேந்தன் ஆதற்கு உரிமையுடையவன் ஆதலின், அவனை 'வேந்தே' என விளித்தான். இனி, அன்பினால் அங்ஙனம் விளித்ததாகவும் கொள்ளலாம். 'அவயம்

புகுந்தான் என்றது வீடணனை. வீடணன்மேல் இராவணன் விட்ட வேல், வீடணன் மார்பில் படாவண்ணம், அவனுக்கு முன்னின்று தன்மார்பில் தாங்கி, இலக்குவன் உயிர்நீத்த செய்தி யுத்த காண்டத்து வேலேற்ற படலத்தில் காணலாம். பிறகு, அனுமன் கொணர்ந்த மருத்து மலையினால் உயிர் பெற்றான். இலக்குவனுடைய உயர்ந்த பண்புகளை நினைந்து இராமன் புலம்பியவாறு. தன்னுயிரைக் கொடுத்து அபயம் புகுந்தானைக் காப்பாற்றியது செயற்கருஞ் செயல் ஆதல் காணலாம். (100)

## இராமன் அழுதல்

1444 என்செய்வே னென்றென் றிவையிவையே நின்ற
ரற்றிப்
பொன்செய் மணிமார்பன் பொருப்பின் மழை
யென்ன
மின்செய் யருவி விழவே யழுதனனால்
தன்செய்ய தாளிணையே தந்தருளுந் தன்மை
யான்.

என்செய்வேன் என்று என்று இவை இவையே நின்று அரற்றிப்,
பொன்செய் மணிமார்பின் பொருப்பின் மழை என்ன,
மின்செய் அருவி விழவே அழுதனனால்
தன்செய்ய தாளிணையே தந்து அருளும் தன்மையான்.

பொ: 'தன்னடியவர்க்குத்தன் சிவந்த திருவடிகளைத் தந்தருளும் பெருந்தன்மையனாகிய இராமன், 'என்ன செய்வேன்' என்று இவைபோன்றவற்றை சொல்லி நின்று அரற்றிக் கொண்டு, பொன்னால் செய்த மணிமாலையினை அணிந்த மார்பில், மலையில் பெய்த மழையால் அருவி வீழ்தல்போல, ஒளிசெய்கின்ற கண்ணீர் அருவியாக விழ அழுதான்.

கு: தந்தருளுந்தன்மையான் மார்பில்மழையென்னக் கண்ணீர் அருவியாக விழ அழுதனன் என இயையும். தன்னடியவர்க்குத் தன் தாளினைத் தந்தருளும் தன் பெரு நிலையை மறந்து, தம்பிமேல் வைத்த அன்பினால் அரற்றி அழுதான் இது என்னே, என வியந்தவாறு. (101)

## இராமன் அழ உலகமெலாம் அழுதல்

1445 வண்ண வரையழுத மால்நாக முமழுத
விண்ணுந் திசையும் வியன்ஞால முமழுத
எண்ணி நினைவுற் றினைந்தினைந் திங்ஙனே
அண்ண லழுதா னழாத தொன்றங் கில்லையால்.

வண்ண வரை அழுத, மால்நாகமும் அழுத
விண்ணும் திசையும் வியன்ஞாலமும் அழுத,
எண்ணி நினைவுற்று இனைந்து இனைந்து இங்ஙனே
அண்ணல் அழுதான், அழாதது ஒன்று அங்கு இல்லையால்.

பொ: நீலவண்ணமுடைய திசைக்கிரிகள் அழுதன; மத மயக்கமுடைய திசை யானைகளும் அழுதன; திசைகளும், விண்ணும் விரிந்த பூமியும் அழுதன, இலக்குவன் பிரிவை எண்ணி நினைவுகூர்ந்து, வருந்தி, வருந்தி இவ்வாறு அண்ணலாகிய இராமன் அழுதான். அவன் அழுவது கண்டு அழாதது ஒன்றும் அவ் விடத்தில் இல்லை.

கு: அண்ணல் அழுதான். அது கண்டு வரையழுதன; நாகம் அழுதன; திசையும், விண்ணும், ஞாலமும் அழுதன; அங்கு அழாதது ஒன்றும் இல்லை என இயையும். வரை என்றது, திசைக்கிரிகளை. மால் நாகம் என்றது, திசையானைகளை. அழுத என்பது, அன் சாரியை பெறாது வந்த அகர வீற்று பலவின்பால் வினைமுற்று. அழுதன என்பதே பொருள். பழைய நினைவுகள் மனத்தில் தோன்றுந் தோறும் அழுகை பொங்கி வருதல் இயல்பு என்பது விளக்கியவாறு. இனைந்து இனைந்து என்ற அடுக்கு பன்முறை வருந்தியதை உணர்த்தியது. அழுதனவற்றைத் தனித்தனியே கூறப்புகின் விரியும் என்றஞ்சி அழாதது ஒன்று அங்கில்லை எனத் தொகுத்துக் கூறியவாறு. எல்லாம் அழுதன என்பதே கருத்து. (102)

## பரதனை முடிசூடிக் கொள்க எனல்

1446. இன்னுயிரே போனு லிருக்குமோ பொய்யாக்கை
பின்னவன் பேர்ந்தநெறி யானும் பெயர்குவனுல்
துன்னு மணிமுடி சூடுவாய் நீயென்ன
பன்னு மதுகைப் பரதனையே நோக்கினுன்.

இன்உயிரே போனுல் இருக்குமோ பொய் யாக்கை
பின்னவன் பேர்ந்தநெறி யானும் பெயர்குவனுல்
துன்னு மணிமுடி சூடுவாய் நீ என்ன
பன்னு மதுகைப் பரதனையே நோக்கினுன்.

பொ: "இனிய உயிர் போனபின்பு பொய்யான உடம்பு இருக்குமோ? இராதன்றே? அதுபோல என், உயிர்போன்ற தம்பி சென்றபின் உடம்பு போன்ற யான் இருக்கமாட்டேன்; அவன் போன வழியில் யானும் போவேன். நெருங்கிய மணிகள் பதித்த முடியை நீ சூடிக் கொள்வாயாக" என்று சிறப்பித்துச் சொல்லப் படும் வலிமையையுடைய பரதனையே நோக்கினுன் இராமன்.

கு: முதலடி பிறிது மொழிதல் அணி. 'இலக்குவன் போன பின்பு யான் இரேன்' என்பது, உவமேயமாய் வருவித்துரைக்கப்பட்டது. 'பின்னவன் பேர்ந்த நெறி' என்றது, சரயுநதியில் மூழ்கிப் பின் யோகத்திருந்து விண்ணுலகு செல்லுதல். 'மணிதுன்னுமுடி' என மாறிக் கூறலும் ஆம். மதுகை-வலிமை. பன்னுதல்-சிறப்பித்துச் சொல்லுதல். (103)

## பரதன் இராமன் திருவடிகளில் இறந்தவன் போல் வீழ்தல்

1447 நோக்கப் பரத னெறிலிற் கரஞ் சிரத்தின்
மேக்கிற் குவிக்க விரைத்தார் முடிவேந்தன்
காக்கப் புவன முனக்கே கடனென்னு
ஏக்குற் றடியி னிறந்தா னென விழுந்தான்.

நோக்கப் பரதன் நொறிலின் கரம் சிரத்தின்
மேக்கின் குவிக்க விரைத்தார் முடிவேந்தன்
காக்கப் புவனம் உனக்கே கடன் என்று
ஏக்குற்று அடியின் இறந்தான் என விழுந்தான்.

பொ: இராமன், இவ்வாறு சொல்லித் தன்னை நோக்கப், பரதன் விரைந்து கைகள் தலையின் மேல் குவிய, 'மணமாலையினையும், முடியையும் உடைய வேந்தனாகிய உனக்கே உலகம் காத்தல் கடனாகும்' என்று ஏக்கமுற்று இராமன் திருவடியில் இறந்தவனைப் போல் விழுந்தான்.

கு: நொறில்-விரைவு. சிரத்தின் மேக்கு-தலையின்மேல். 'முடிவேந்தனாகிய உனக்கே புவனம் காக்கக் கடன் என' இயையும். ஏக்குறல்-ஏக்கம் கொள்ளுதல். இனி என்று காண்போமோ இராமனை என்று ஏக்கமுறுதல். (104)

## பரதன் நொந்து கூறல்
## வேறு

1448 நாத வென்னை நளிர்முடி சூடென
ஏத முள்ளறக் கூறிய வெம்மொழி
தாதை தன்னைத் தடங்கை கயன்பெற்ற
கோதை கொண்ட வரத்திற் கொடியதால்

நாத! என்னை நளிர்முடி சூடுஎன
ஏதம் உள்அறக் கூறிய வெம்மொழி
தாதை தன்னைத் தடங்கைகயன் பெற்ற
கோதை கொண்ட வரத்தின் கொடியதால்.

---

சில ஏடுகளில் இப்பாடலுக்குப் பதிலாகப் பின்வரும் பாடல் காணப்படுகிறது.

104-அ

பைப்பயில் பார்ப்புரப் பாயாகப் பரதனீ
துப்புயர் தோளாய் சுடர்மகுடஞ் சூடுகென்னச்
செப்பிய வச்சொல் செவிசுடுதலால் விரைந்து
மைப்புய லன்னான் மலரடி மேற்பணிந்தான்.

பொ: 'எம் தலைவனே! நின்னடித் தொண்டு செய்தற்குரிய என்னை, 'பெரிய அரச முடியைச் சூடுக' என்று உள்ளத்தில் வஞ்சம் இல்லாமல் சொல்லிய கொடிய சொல், நம் தந்தையிடத்தில் பெரிய கைகயன் பெற்ற கைகேசி கொண்ட வரத்தைக் காட்டி-லும் கொடியது.'

கு: வேந்தன் ஆதற்குத் தக்கவன் நீயே என்று புலப்பட இராமனை 'நாதா' என்று விளித்தான். 'என்னை' என்றது, 'நின் திருவடிப்பணிக்குரிய என்னை' என்றவாறு 'கைகேசி உள்ளத்தில் வஞ்சம் வைத்து வரங்கொண்டாள். நீ உள்ளத்தில் ஏதம் ஏதும் இல்-லாமல் முடிசூடு' என்ற கொடிய சொல் உள்ளத்தில் வஞ்சனை கொண்டு கேகயன் மகள் கொண்ட வரத்தினும் கொடியது என்றவாறு. 'கோதை' என்பது, ஆகுபெயராய்ப் பெண் என்ற பொருளில் வந்தது. வரத்தின் என்புழி இன் உவழ்ச்சிப் பொருளது. 'திருவடிப் பணிக்கே உரிய என்னை முடிசூடுக என்றது, என் உள்ளத்திற்குப் பொருந்தாமையால் வெம்மொழியாகவும் கைகேயி கொண்ட வரத்தினும் கொடியதாகவும் தோன்றுகின்றது' என்றவாறு. (105)

1449 அண்ண னீபுரந் தாள்கின்ற வையகம்
எண்ணி யென்வயி னீந்தது தெய்வதம்
நண்ணு நாகஞ் சுமக்குமிந் நானில
மண்ணி னாகஞ் சுமக்கெனின் மாண்டதோ.

அண்ணல் நீபுரந்து ஆள்கின்ற வையகம்
எண்ணி என்வயின் ஈந்தது, தெய்வதம்
நண்ணும் நாகம் சுமக்கும் இந்நானிலம்
மண்ணின் நாகம் சுமக்கெனின் மாண்டதோ?

பொ: "பெருமையுடைய நீ, உயிர்களைக் காப்பாற்றி, ஆள்கின்ற நாட்டினைச் சிந்தனை செய்து என்னிடத்து ஆளக்கொடுத்தது, தெய்வத்தன்மை பொருந்திய ஆதிசேடன் என்னும் நாகம் சுமக்-கின்ற இந்த நானிலத்தை மண்ணுலகத்துள்ள சாதாரண பாம்பு சுமப்பதாக என்று கொடுத்தால் அது மாட்சியுடையதாகுமோ?"

கு: "நீ வையகம் ஆள்வது தெய்வதம் நண்ணும் ஆதிசேடன் பூமியைக்காக்கின்றது போன்றது. நீ ஆளும் வையகத்தை என்னிடம் கொடுப்பது, மண்ணிலுள்ள சாதாரண பாம்பினிடம் பூமியைச் சுமக்குமாறு சொல்வது போலும். அது மாட்சிமையுடையதாகாது என்பது பரதன் கருத்து. 'மாண்டதோ' என்பதில் உள்ளவினு ஓகாரம் மாண்டதன்று என் எதிர்மறைப் பொருள் தந்துநின்றது. 'சுமக்க எனின்' என்பதில் அகரம் தொக்குச் சுமக்கெனின் என ஆயது. இதனுல் பரதன் தன்னைத் தாழ்த்தியும், இராமனை உயர்த்தியும் கூறிப் பூமி ஆள மறுத்தவாறு. (106

1400 இம்மி செந்நெலி னுக்கிணை யாகுமேல்
அம்மி மற்றை யருவரை யொக்குமேல்
மிம்மி னிச்சுடர் வெங்கதி ரொக்குமேல்
உம்மை யொத்துல காளுவ னுண்மையால்.

இம்மி செங்நெலினுக்கு இணையாகுமேல்-
அம்மி மற்றை அருவரை ஒக்குமேல்-
மிம்மினிச் சுடர் வெங்கதிர் ஒக்குமேல்-
உம்மை ஒத்து உலகு ஆளுவன் உண்மையால்.

பொ: மத்தங்காய்ப்புல்லரிசி, செந்நெல் அரிசியை ஒக்குமானுல்- அம்மிக்கல், மற்றுள்ள மலைகளோடு ஒப்பாகுமானுல்-மின்மினிப் பூச்சியின் ஒளி வெப்பமிக்க சூரியனை ஒக்குமானுல்- உம்மை ஒத்து யானும் உலகை ஆள்வேன்; இது உண்மையாகும்.

கு: பரதன், தன்னுல் இராமனைப்போல அரசாள இயலாது என்பதை, மூன்று உவமைகள் கூறி விளக்கியவாறு. இம்மி என்பது மத்தங்காய்ப்புல்லரிசியை. இதனைச் சிற்றளவைக்கு எடுத்துக் காட்டாகக் கூறுவர். தினையைப் போல. செந்நெல் அரிசிக்கு மத்தங்காய்ப் புல்லரிசி ஈடாகாது. 'நெல்லொக்கும்புல் லென்றுலும் நேருரைத்தாகவற்றே" (ஆரணிய காண்டப் படலம்) இங்கு நினைத்தற்குரியது. கல்வகையாக இருப்பினும் அம்மி, மலையோடு ஒப்பாவதில்லை. மின்மினி என்பது, எதுகை நோக்கி 'மிம்மினி' என மருவியது. மின்மினிப் பூச்சியின் ஒளி, சூரிய ஒளியை ஒவ்வாது என்பது வெளிப்படை. உவமையாகாது தாழ்வுறத்தக்க மூன்றும் உவமையாகுமானுல், யானும் உம்மையொத்து உலகத்தை

ஆளுவேன் எனப் பரதன் இராமனை நோக்கிக் கூறினன். அவை மூன்றும் ஒப்பாகப்போவதில்லை. எனவே, யானும் உம்மைப் போல அரசாள மாட்டேன் என்பது புலப்படுத்தியவாறு. இராமனுக்குப் பரதன் ஈடாகான் என்பதை விளக்க மூன்றுவமைகள் கூறியது பல்பொருள் உவமையணி. (107)

## குசலவர்க்கு முடி சூட்டுக எனல்

1481 ஆதி நின்னுடை யாண்டொழின் மேயினர்
நீதி வைய நிகழ்த்திட வல்லரால்
கோதில் வண்மைக் குசலவர் தம்மையே
சோதி மாமுடி சூட்டென் றியம்பினன்.

ஆதி நின்னுடை ஆண்தொழில் மேயினர்
நீதி வையம் நிகழ்த்திட வல்லரால்
கோதுஇல் வண்மைக் குசலவர் தம்மையே
சோதி மாமுடி சூட்டு என்று இயம்பினன்.

பொ: "உலகிற்கு ஆதிகாரணமானவனே! நின்னுடைய ஆண்மைத் தொழில் பொருந்தப் பெற்றவரே, நீதியால் உலகை ஆளவல்லவர் ஆவர். ஆதலால், குற்றம் அற்ற வள்ளல் தன்மையுடைய குசலவர்க்கு ஒளிவாய்ந்த சிறந்த முடியைச் சூட்டுவாயாக" என்று பரதன் கூறினன்.

கு: இராமனை 'ஆதி' என விளித்தது, பழைய தெய்வ நிலையை நினைந்து. இராமன் ஆண்மை, குசலவர்பால் பொருந்திபிருத்தலின் அவர்களையே மன்னராக்குக என்று தன் கருத்தைப்பரதன் கூறினன். (108)

## இராமன் குசலவர்க்குக் காப்பு நாண் அணிதல்

1482 இன்ன கூறி யிளவ லிறைஞ்சலும்
மன்னர் கோனு மனமகிழ்ந் தவ்வயின்
கொன்ன வின்ற கொலைவேற் குசலவர்க்
கன்ன நாளி லணிந்தனன காப்புநாண்.

இன்னகூறி இளவல் இறைஞ்சலும்,
மன்னர் கோனும் மனமகிழ்ந்து அவ்வயின்
கொல்நவின்ற கொலைவேல் குசலவர்க்கு
அன்னநாளில் அணிந்தனன் காப்புநாண்.

பொ: இத்தகையவற்றைச் சொல்லி, இளையவனாகிய பரதன் தன்னை வணங்குதலும், மன்னர்க்கு மன்னனாகிய இராமனும் உளம் மகிழ்ந்து, அவ்விடத்தே கொல்லன் செய்த கொலை செய்யத்தக்க வேற்படையையுடைய குசலவர்கட்கு அந்நாளில் காப்புநாண் அணிந்தான்.

கு: 'மன்னர்கோன்' என்றது, இராமனை. பரதன் கூறியதே பொருத்தமாகத் தோன்றுதலின்; இராமன் போலப் பரதனும் முதுமையுடையவனே ஆதலின், தனக்கு அரசு வேண்டாவென மறுத்ததோடு இளமையும் வீரமும் உடைய குசலவர்க்கு முடி சூட்டுதலே தக்கது என்றவாறு. கொல்-கொல்லன். 'நவிலுதல்' என்றது, செய்தலையுணர்த்தியவாறு. 'காப்புநாண்' என்றது, முடி சூட்டிற்கு முன்பு நிகழ்த்துவது ஒரு சிறப்பு. கையில் காப்புக் கட்டுதல் உண்டு. (109)

## குசலவர் முடிசூட்டு விழா

1403 புரைசெய் மாமதப் போதக மீமிசை
அரைச ரீண்டினர ரந்தணர் சூழ்ந்தனர்
முரைச திர்ந்தன சங்க முழங்கின
விரைசெய் பூங்குழ லார்விளக் கேந்தினர்.

புரைசெய் மாமதப் போதக மீமிசை
அரைசர் ஈண்டினர்; அந்தணர் சூழ்ந்தனர்;
முரைசு அதிர்ந்தன; சங்கம் முழங்கின;
விரைசெய் பூங்குழலார் விளக்கு ஏந்தினர்.

பொ: கழுத்திடு கயிறினையும், பெரிய மதத்தினையும் உடைய யானையின்மேல் ஊர்ந்து வந்து அரசர்கள் நெருங்கினர்கள்! அந்தணர்கள் வந்து சூழ்ந்துகொண்டனர்; முரசுகள் ஒலித்தன; சங்குகள் முழங்கின; வாசனை வீசுகின்ற மலர்சூடிய கூந்தலையுடைய பெண்டிர் விளக்கினை ஏந்தி நின்றனர்.

கு: நான்காம் அடியில் வந்த விரைசெய் என்ற தொடரை நோக்கி மேல் மூன்றடியிலும் ஐகாரம் போலியாய் வந்தன; எதுகை நயங்கருதி. புரசை, அரசர், முரசு என்பனவே உண்மை வடிவம். புரசை என்பது 'புரசெய்' என வந்தது. அதிர்தல்-முழங்குதல். முடிசூட்டு விழாவிற்கு அரசர்களும் அந்தணர்களும் வந்தார்கள் என்பார், 'ஈண்டினர்' எனவும் 'சூழ்ந்தனர்' எனவும் வேறுபடுத்திக் கூறியது. அந்தணர்கள் மந்திரம் ஓதுதற்கு உரியராதலின், அவர்கள்முன்பு சூழ்ந்து கொண்டனர் எனவும் அரசர்கள் காண வந்தவர்கள் ஆதலின் அவர்கட்குப் பின்னால் நெருங்கி நின்றார்கள் எனவும், புலப்பட வேண்டி என்க. மங்கல நிகழ்ச்சியாதலின், மனைக்கு விளக்காகிய மடவார் இருள்நீக்கி ஒளியாக்கும் விளக்கினையேந்தி நின்றனர் என்க. (110)

## குசலவர்க்குக்கங்கைநீர் அபிடேகம் செய்தல்

1454 அண்ணல் யானையி னாடகப் பொற்குடம்
எண்ணி நூற்றெட்டுக் கங்கையி னீர்கொண்டே
மண்ணி னாசை தவிர்ந்தவன் மைந்தரைப்
பண்ணி னானபி டேகம் பரிந்தரோ

அண்ணல் யானையின் ஆடகப் பொன் குடம்
எண்ணி நூற்றெட்டுக் கங்கையின் நீர்கொண்டே,
மண்ணின் ஆசை தவிர்ந்தவன் மைந்தரைப்
பண்ணினான் அபிடேகம் பரிந்தரோ.

பொ: பெருமையுடைய யானையின்மேல், ஆடகம் என்னும் பொன்னால் செய்யப்பட்ட குடம் நூற்றெட்டினில் எண்ணிக் கொணர்ந்த கங்கைநீரைக் கொண்டு, மண்ணில் ஆசையில்லாதவனாகிய இராமன், தன் மைந்தர் குசலவர்கட்கு அன்போடு அபிடேகம் பண்ணினான்.

கு: நால்வகைப் 'பொன்னில்' ஆடகம், என்பது ஒருவகைப் பொன். ஆடகப் பொன்னால் இயன்ற நூற்றெட்டுக் குடங்களில் கங்கைநீரை முகந்து யானைகளின் மேல் ஏற்றிக் கொணர்ந்தனர் அந்தணர் எனவும், அந்த நூற்றெட்டுக் குடங்களில் வந்த கங்கைநீரையும் இராமன் தன் மைந்தர்கட்கு அபிடேகம்

பண்ணினன் எனவும் கொள்க. மண்ணாசை தவிர்ந்தவன் இராமன் ஆகலின் மண்ணாளுமாறு தன் மக்களுக்கு அபிடேகம் செய்தான் என்க. பரிந்து-அன்புகொண்டு. அரோ-அசை. (111)

## குசலவர்க்கு முடிசூட்டுதல்

1485 நாடி மாமறை கூறிய நாளினில்
ஆடகத்த வரியணை மீதிரீஇ
ஓடை யானையி னொண்கரஞ் சென்னிமேல்
சூட, மைந்தரை மாமுடி சூட்டினான்.

நாடி மாமறை கூறிய நாளினில்
ஆடகத்த அரிஅணை மீது இரீஇ
ஓடை யானையின் ஒண்கரம் சென்னிமேல்
சூட, மைந்தரை மாமுடி சூட்டினான்.

பொ: ஆராய்ந்து பார்த்துச் சிறந்த சோதிட நூல் கூறிய நல்ல நாளினில், ஆடகப் பொன்னால் இயன்ற சிங்காசனத்தில் இருக்கச் செய்து, முகபட்டம் அணிந்த பட்டத்து யானையின் ஒளி வாய்ந்த கரத்தை மைந்தரின் சென்னிமேல் சூடச் செய்து, பின் சிறந்த மணிமுடியை அவர்கட்குச் சூட்டினான்.

கு: 'மாமறை' என்றது, இங்கு சோதிட நூலினை. தன் மைந்தரை பொன்னாலியன்ற சிங்காசனத்தில் இருக்கச்செய்தலும், அவர்கள் தலைமேல் பட்டத்து யானை துதிக்கையை வைக்கச் செய்தலும் மரபு. யானை துதிக்கையைத் தலைமேல் வைப்பதைப் புனிதமாகக் கருதுவது இக்காலத்தும் உண்டு. இராமனுக்கு முடிசூட்டத் தயரதன் இன்மையால் 'வசிட்டனே புனைந்தான் மவுலி' என்றார். இங்கு இராமன் இருப்பதால் தான்சூடியிருந்த முடியைத்தானே தன் மக்களுக்குச் சூட்டினான் என்க. இருவர்க்கும் சூட்ட வேண்டியிருத்தலின் முன்பிருந்த முடிபோன்று புதிதாகச் செய்து சூட்டினான் என உய்த்துணர்ந்து கொள்ள வேண்டும். (112)

## குசாபதி என்ற நகரை உண்டாக்குதல்
## வேறு

1486 பாசிலை யேய்ந்த பருஉக்குலை வாழை
காசறு மாதர் கவானென நீடிய
கோசல நாட்டிற் குசாபதி யென்றோர்
மாசறு நீண்மதின் மாநகர் செய்தான்.

பாசிலை ஏய்ந்த பருஉக்குலை வாழை
காசுஅறு மாதர் கவான் என நீடிய
கோசல நாட்டில் குசாபதி என்று ஓர்
மாசுஅறு நீள்மதில் மாநகர் செய்தான்.

பொ: பசுமையான இலைகள் பொருந்திய, பருத்த குலையை உடைய வாழை, குற்றம் அற்ற மாதரின் தொடை என்று சொல்லுமாறு, நீண்டுள்ள கோசல நாட்டில் 'குசாபதி' என்று ஒரு குற்றமற்ற நீண்ட மதிலையுடைய பெரிய நகரைச் செய்தான் இராமன்.

கு: 'வாழை நீடிய கோசல நாட்டில்' என்ற அடைச்சிறப்பால், கோசல நாட்டை ஆள்கின்ற அரசர் குடியும் வாழையடி வாழையாய் இடையறவு படாது அரசு செய்யும் இயல்பினது என்ற கருத்தினைப் புலப்படுத்தியவாறு. 'வாழை மாதர் கவான் என நீடிய' என்பது பொருளேயுவமஞ் செய்தனர் மொழியினும் மருளறு சிறப்பின் அஃதுவமமாகும் (தொல். உவமஇயல்) என்ற விதியால் அமைந்தது. வாழை போன்ற தொடை என்னும் மரபினை மாற்றித் தொடைபோன்ற வாழை என பண்டை மரபுக்கு மாறாக வந்தமையின், இது விபரீத உவமை ஆகும் என்பர் தண்டியலங்காரமுடையார். குசனுக்குத் தலைநகரம் வேண்டும் ஆதலின், 'குசாபதி' என்று புதுநகர் உண்டாக்க வேண்டிற்று. (113)

## குசாபதி என்னும் நகரில் குசனை மன்னனாக்குதல்

1487 ஒத்தன நால்வகை யுள்ள தோர் தானை
அத்தகு செல்வமொ டமைவர நல்கிக்
கொத்தலர் தார்புனை குசனையம் மாநகர்
வைத்தனன் மாமுடி மன்னவர் கோமான்.

ஒத்தன நால்வகை உள்ளதோர் தானை,
அத்தகு செல்வமொடு அமைவர நல்கிக்,
கொத்தலர் தார்புனை குசனை அம்மாநகர்
வைத்தனன் மாமுடி மன்னவர் கோமான்.

பொ: ஒத்தனவாகிய எண்ணிக்கையுடைய யானை, தேர், குதிரை, காலாள் என்ற நால்வகையினையுடைய ஒப்பற்ற சேனையை, அந்நிலைக்குத்தக்க செல்வத்தோடு அமையும் படி கொடுத்து, கொத்துக் கொத்தாக அலர்ந்த மலர்மாலை அணிந்த 'குசன்' என்பவனை அந்தக் குசாபதி நகரின்கண் இருக்கச் செய் தான், சிறந்த முடியணிந்த அரசர்க்கு அரசனாகிய இராமன்.

கு: 'மன்னவர் கோமான் தானை செல்வமோடு நல்கிக் குசனை அம்மாநகர் வைத்தனன்' என இயையும். மாமுடிக்கோமான்-மன்னவர்கோமான் எனத் தனித்தனிக் கூட்டுக. (114)

## சிராபதி நகரை லவனுக்காக அமைத்தல்

14[illegible]8 உத்தர கோசலவொள்ளிய நாட்டில்
சித்திர மாய சிராபதி யென்றோர்
பத்தித ரும்பரு மாமணி யாலுயர்
மத்தக மாநகர் மாளிகை செய்தான்.

உத்தர கோசல ஒள்ளிய நாட்டில்
சித்திர மாய சிராபதி என்று ஓர்
பத்தி தரும்பரு மாமணியால் உயர்
மத்தக மாநகர் மாளிகை செய்தான்.

பொ: உத்தரகோசலம் என்கின்ற ஒளிவாய்ந்த நாட்டில் அழகியதாகிய 'சிராபதி' என்று ஒப்பற்ற பற்றினைத் தருகின்ற, பருத்த மணிகளைக் கொண்டு செய்ததால் உயர்ந்து காணப்படும் மாளிகைகளையுடைய உயர்ந்த ஒரு நகரத்தைச் செய்தான் இராமன்.

கு: 'மாளிகை மாநகர்' என மாற்றுக. சிராபதி நகர் உத்தர கோசலத்தில் செய்தான். ஆகவே, குசாபதி நகரம்

தென்கோசலத்தில் அமைந்தது என்பது அருத்தா பத்தியால் விளங்கும். சித்திரம்-அழகு. பத்தி-பற்று. ஓர் மாநகர் என இயையும். மத்தகம்-உயர்வு. (115)

## லவனைச் சிராபதி நகரில் அரசனாக இருத்துதல்

1459 தன்னுடை நால்வகை யாகிய தானை
மன்னிய செல்வமு மாண்புற நல்கிப்
பொன்னி னியன்ற புரிசையிலங்கும்
அன்னகர் தன்னில் லவனையும் வைத்தான்.

தன்னுடை நால்வகை யாகிய தானை
மன்னிய செல்வமும் மாண்புற நல்கிப்
பொன்னின் இயன்ற புரிசை இலங்கும்
அன்னகர் தன்னில் லவனையும் வைத்தான்.

பொ: இராமன் தன்னுடைய யானை, தேர், குதிரை, காலாள் என்ற நால்வகையாகிய சேனையோடு நிலைபெற்ற செல்வத்தையும் மாட்சிமை பொருந்தக் கொடுத்துப், பொன்னால் செய்யப்பட்ட மதில் சூழ்ந்த அந்த நகரில் 'லவன்' என்ற தன் மகனையும் அரசாள வைத்தான்.

கு: 'அந்நகர்' என்பது, எதுகைநோக்கி அன்னகர் என வந்தது. கோசல நாட்டை இரண்டாகப் பிரித்துத் தென்கோசலத்தில், குசாபதியில குசனையும், வடகோசலத்தில், சிராபதி நகரில் லவனையும் ஆட்சி செய்யுமாறு வைத்தான் என்றவாறு. (116)

## சத்துருக்கனுக்குத் தூது அனுப்புதல்

1460 இத்திறங் கழித்தபி னிலக்குவன் சென்ற
அத்திற மியானுஞ்சென் றடைவ னுலெனச்
சத்துருக் கற்குநீர் சாற்று மென்றுதேன்
துய்த்தபைந் தாரினன் றூது போக்கினன்.

இத்திறம் கழித்தபின் இலக்குவன் சென்ற
அத்திறம் யானும் சென்று அடைவனுல் எனச்
சத்துருக் கற்குநீர் சாற்றும் என்று தேன்
துய்த்தபைந் தாரினுன் தூது போக்கினுன்.

பொ: இத்தன்மையான முடிசூட்டு விழாக்களைச் செய்து முடித்தபின்பு, 'இலக்குவன் சென்ற அந்த வழியில் யானும் சென்று அடைவேன் என்று (என் தம்பி) சத்துருக்கனுக்கு நீர் சொல்லுங்கள்' என்று, தேன்வண்டுகள் துய்த்துவிட்ட பசுமையான மாலையணிந்த இராமன் தூதுவரை அனுப்பினுன்.

கு: சத்துருக்கன் மதுகை நகரத்திற்கு அரசனுக அங்குத் தங்கி இருத்தலின், அவனுக்குத் தன் முடிவு தெரிவிக்கத் தூதுவரைப் போக்கினுன் இராமன் என்க. (117)

## தூதுவர் சத்துருக்கன் தங்கியுள்ள மதுகை மாநகர்க்குச் சென்று செய்தி கூறுதல்

1461 மதுகைமா நகரிடைப் புகுந்து மன்னவன்
அதிர்கழல் வணங்கிநின் றயோத்தி மாநகர்ப்
புதுவது நிகழ்ந்ததும் புகன்ற வார்த்தையும்
கதுமென வுரைத்தனர் காலின் காட்சியார்.

மதுகை மாநகரிடைப் புகுந்து மன்னவன்
அதிர்கழல் வணங்கிநின்று அயோத்தி மாநகர்ப்
புதுவது நிகழ்ந்ததும் புகன்ற வார்த்தையும்
கதுமென உரைத்தனர் காலின் காட்சியார்.

பொ: காற்றுப்போன்ற தூதுவர்கள் மதுகை நகரில் புகுந்து, அந்நகர்க்கு மன்னனுகிய சத்துருக்கனது ஒலிக்கின்ற கழலணிந்த இருவடிகளை வணங்கி நின்று, அயோத்தி நகரில் புதுவதாகிய நிகழ்ச்சி நிகழ்ந்ததும், இராமன் சொன்ன வார்த்தையும் விரைந்து சொன்னுர்கள்.

கு: காலின் காட்சியார் - விரைந்து செல்வதில் காற்றினைப் போன்ற வீரர்களாகிய தூதுவர்கள். மன்னன் என்றது, மதுகை

மாநகர்க்கு மன்னவனாகிய சத்துருக்கனை. 'அயோத்தி நகர்ப் புதுவது நிகழ்ந்தது' என்றது, மறலி பிரமன் ஏவலால் வந்ததும், துருவாசர் வரவும, இலக்குவன் விண்ணுலகம் புக நேர்ந்ததும் போன்றனவற்றை. 'கதுமென' என்றது, விரைவுக் குறிப் புணர்த்தும் சொல். (118)

## தூதுவர் சொல்லைக்கேட்ட சத்துருக்கன் நிலை

1452 ஓட்டர்வந் துரைத்தன ருரைத்த வாறெலாம்
கேட்டனன் செவிசுடக் கிழிந்த நெஞ்சமும்
நாட்டமும் புனலுக நடுங்கி மெய்யெலாம்
தோட்டடங் களுமிக மெலிந்து சோர்ந்தவே.

ஓட்டர்வந்து உரைத்தனர் உரைத்தவாறு எலாம்
கேட்டனன் செவிசுடக் கிழிந்த நெஞ்சமும்
நாட்டமும் புனல்உக, நடுங்கிமெய் எலாம்
தோள்தடங்களும் மிக மெலிந்து சோர்ந்தவே.

பொ: ஓடும் இயல்பினராகிய தூதுவர் இவ்வாறு உரைத் தனர். அவர்கள் உரைத்த தன்மை எல்லாவற்றையும் செவி சுடக் கேட்டனன்; நெஞ்சமும் கிழிந்தது; கண்களும் நீர் சொரிய உடம்பெல்லாம் நடுங்கித்தோள் இடங்களும் மிகவும் மெலிந்து சோர்ந்தன.

கு: காற்றுப்போல விரைந்து ஓடிச் செய்தியறிவிக்கும் இயல் பினர் தூதுவர் ஆதலின், அத்தூதுவர்க்கு 'ஓட்டர்' என்றே பெயர் கொடுத்தார். 'செவிசுடக் கேட்டனன்' என மாறிக் கூட்டுக. 'கிழிந்தது' என்பது, கிழிந்த என ஓசைநோக்கிக் குறைந்தது. தோள் தடங்கள்-தோளாகிய இடங்கள். துன்பம் உற்றபோது தோள்கள் மெலிதலும் சோர்தலும் இயல்பு. (119)

## சத்துருக்கன் தன்மக்களிருவர்க்கும் மகுடம் சூட்டுதல்

1463 தன்னிகர் பிறிதிலாத் தாரி ராகவன்
பொன்னடி தொழுதுயப் போவ னினி
இன்னக ராண்டினி திருத்திர் நீரெனு
மன்னவன் மைந்தரை மகுடஞ் சூட்டினான்.

தன்னிகர் பிறிது இலாத் தார் இராகவன்
பொன்அடி தொழுது உயப் போவன் நான், இனி
இன்னகர் ஆண்டு இனிது இருத்திர் நீர் எனு,
மன்னவன் மைந்தரை மகுடம் சூட்டினான்.

பொ : மதுகை மாநகர்க்கு மன்னவனாகிய சத்துருக்கன், (தன்மக்களை நோக்கி) 'நான் தனக்கு நிகராக வேறு ஒன்றும் இல்லாதவனாகிய, மாலையணிந்த இராமனுடைய அழகிய திருவடிகளைத் தொழுது உய்திபெறப் போகின்றேன்; இனி, நீர் இந்த மதுகை நகரை ஆண்டு கொண்டு இனிதாக இருப்பீர்களாக' என்று சொல்லித் தன்மைந்தர்க்கு மகுடம் சூட்டினான்.

கு: சத்துருக்கன் புதல்வர் சுபாகு, சத்ருகாதி என இருவர். சுபாகுவை 'மதுபுரி' (மதுரா) நகரிலும் சத்ருகாதியை 'வைதிசம்' என்கின்ற நகரிலும் இருந்து அரசாளச் செய்துவிட்டு, அயோத்திக்குப் புறப்பட்டதாக வான்மீகம் கூறும். இந்நகர் என்பது, எதுகை நோக்கி 'இன்னகர்' என வந்தது. இந்நகர் எனச்சுட்டியது மதுகை நகரை. (120)

## மக்களிருவரையும் இருவேறு நகரங்களில் தங்கச் செய்தல்

1464 மதிதொடு மாளிகை மதுபு ரந்தனில்
விதிமுறை சுபாகுவீற் றிருக்கச் செய்தபின்
விதிகைக்குச் சத்துருக் காதி வேந்தனை
அதிபதி யாக்கினு னம்பொற் றூரினான்.

மதிதொடும் மாளிகை மதுபுரம் தனில்
விதிமுறை சுபாகு வீற்றிருக்கச் செய்தபின்,
விதிகைக்குச் சத்துருக்காதி வேந்தனை
அதிபதி ஆக்கினன் அம்பொன் தாரினன்.

பொ: அழகிய பொன்மாலை அணிந்த சத்துருக்கன் சந்திரனைத் தொடுமாறு உயர்ந்துள்ள மாளிகைகளையுடைய மதுபுரத்தில், 'சுபாகு' என்னும் தன் முதல் மகனை விதிமுறையில் வீற்றிருக்கச் செய்தபின்பு, 'சத்துருக்காதி' என்ற தன்மகனை விதிகை என்னும் நகர்க்கு அதிபதி ஆக ஆக்கினன்.

கு: சத்துருக்கன் மக்களிருவரில் 'சுபாகு' என்பவனை மதுபுரத்திலும், 'சத்துருக்காதி' என்பவனை விதிசையிலும் அரசனாக இருந்து ஆட்சி செய்யுமாறு பணித்தான் என்க. 'அம்பொன் தாரினன்' என்றது, அழகிய பொன்மாலை அணிந்த சத்துருக்கனை. வைதிசம் என வான்மீகத்தில் சொல்லப்படும் நகரப்பெயர் இங்கு விதிகை என்று காணப்படுகிறது. (121)

## சத்துருக்கன் அயோத்தி அடைதல்

1465 பாடகச் சீறடி பவளச் செய்யவாய்ச்
சூடக மடந்தைய ரினைந்து சோர்வுற
மாடமா மாளிகை மதுகை பிற்பட
ஆடக மதிலணி யயோத்தி மேவினன்.

பாடகச் சீறடி பவளச் செய்ய வாய்ச்
சூடக மடந்தையர் இனைந்து சோர்வுற
மாடமா மாளிகை மதுகை பிற்பட
ஆடக மதில் அணி அயோத்தி மேவினன்.

பொ : பாடகம் என்னும் காலணியை அணிந்த சிறிய அடியினையும், பவழம் போன்று சிவந்த வாயினையும் உடைய வளையல் அணிந்த பெண்டிர் வருந்திச் சோர்வு அடைய, மாடங்களோடும் கூடிய மாளிகைகள் நிறைந்த மதுகை என்னும்

நகரம் பிற்படுமாறு சென்று, பொன்னுலியன்ற மதில் சூழ்ந்த அயோத்தி நகரை அடைந்தான் சத்துருக்கன்.

கு: 'பாடகம்' என்பது, மகளிர் காலில் அணியும் ஒருவகை அணி. மகளிர்க்கு அடி சிறுத்திருத்தல் அழகு என்பர் அழநூலோர். சூடகம் - வளை. தமக்கு நல்லரசனுக வாய்த்த சத்துருக்கன் செல்லும் போது அந்நாட்டு மகளிர் வருந்திச் சோர்வுற்றார்கள். காரணம், மடவார் கற்புக்குக் காவலனுக இருந்த சத்துருக்கன் போகின்ருன் என்ற வருத்தமே ஆம். மாடம்-மாளிகையின் மேல் உள்ள மாடம். மேல்மாடம். (122)

## அயோத்தி அடைந்த சத்துருக்கன் இராமனை வணங்கித் தன்மைந்தர்க்கு அரசளித்ததைக் கூறுதல்

1466 மன்னனை யிணையடி வணங்கி மைந்தர்க்குப்
பொன்முடி கவித்ததும் புரவி யானைதேர்
இன்னவை கொடுத்தது மிலங்கு மாமதில்
அந்நக ரளித்தது மமையக் கூறினுன்.

மன்னனை இணையடி வணங்கி, மைந்தர்க்குப்
பொன்முடி கவித்ததும் புரவி யானை தேர்
இன்னவை கொடுத்ததும் இலங்கு மாமதில்
அந்நகர் அளித்ததும் அமையக் கூறினுன்.

பொ: இராமனுகிய மன்னனைக் கண்டு, அவன் திருவடிகளை வணங்கிப் பின்பு தன்மைந்தர்கள் ஆகிய சுபாகு, சத்துருக்காதி என்ற இருவர்க்கும் பொன்முடி சூட்டியதையும் குதிரை, யானை, தேர், காலாள் என்ற இத்தன்மையன சேனைகளைக் கொடுத்ததும், விளக்கமுடைய சிறந்த மதிலால் சூழப்பெற்ற மதுகைநகர், வைதிசம் என்கின்ற நகர்களை அளித்ததும் ஆகியவற்றைப் பொருத்தமாகச் சொன்னுன்.

கு: மூவகைச் சேனையைக் கூறிக் காலாட்படையை இனம் பற்றிக் கொள்ளவைத்தார். 'அந்நகர்' என்றது, முன்கூறிய மதுகை. மாமதில் அந்நகர்' என்றது மதுகை வைதிசம் என்ற நகர்களை. (123)

## இராமன் இலக்குவன் சென்ற நெறியில் செல்ல விரும்புதல்

1467 அன்னது கேட்டபி னருவிக் கண்ணினன்
தன்னிகர் பிறரிலாத் தாரி ராகவன்
முன்னைநாட் பெயர்ந்துமொய்ம் பிளவல் போகிய
நன்னெறி செல்லுமா நாடுங் காலையே.

அன்னது கேட்டபின் அருவிக் கண்ணினன்
தன்நிகர் பிறர் இலாத் தார் இராகவன்,
முன்னைநாள் பெயர்ந்து மொய்ம்பு இளவல் போகிய
நன்னெறி செல்லுமா நாடுங் காலையே.

பொ: சத்துருக்கன் சொன்னதைக் கேட்ட பிறகு, தனக்கு நிகரானவர் பிறர் இல்லாத மாலை அணிந்த இராமன், அழுகையினால் அருவி போன்று நீரொழுகும் கண்ணினையுடையவனாய், முன்னைய நாளில் வலிமையுள்ள இளவல் இலக்குவன் பெயர்ந்து போகிய நல்ல நெறியில் செல்லுமாறு ஆராயுங்காலத்தில்,

கு: குளகம். 'இராகவன் அருவிக் கண்ணினனாய் இளவல் போகிய நன்னெறி செல்லுமா நாடுங்காலை வந்தனன் வீடணன்' என வருஞ் செய்யுளில் முடியும். மொய்ம்பு-வலிமை. நாடுதல்-ஆராய்தல். விரும்புதலும் ஆம். 'இளவல் போகிய நன்னெறி' என்றது, சரயுவில் மூழ்கி யோகநெறியில் உயிர்ப்பு அடங்குதல். (124)

## வீடணன் வருதல்

1468 சந்திர னிகரெனத் தரள வெண்குடை
சுந்தர மீமிசை யழகெ றித்திடக்
கந்தடு கரடவெங் கவள யானைமேல்
வந்தனன் வீடண னென்னும் வாய்மையான்.

சந்திரன் நிகர் எனத் தரள வெண்குடை
சுந்தர மீமிசை அழகு எறித்திடக்
கந்து அடு கரட வெங்கவள யானைமேல்
வந்தனன் வீடணன் என்னும் வாய்மையான்.

பொ: விண்ணில் ஒளிவீசுகின்ற சந்திரன் போன்று முத்துக்கள் கோத்த வெண்குடை விண்ணில் அழகோடு ஒளிவீசா நிற்க. கட்டுத்தறியை முறிக்கின்றதும்; மதச் சுவட்டினையுடையதும்; இனவெம்மையுடையதும்; கவளங் கொள்வதுமாகிய யானையின் மேல் வீடணன் என்னும் வாய்மையாளன் இராமனிடம் வந்தனன்.

கு: முத்தவெண்குடையதாதலின், விண்ணில் செல்லும் சந்திரன்போல ஒளிவீசுவதாகக் கூறினார். சுந்தரம்-விண். மீமிசை என்பது, ஒருபொருட் பன்மொழி. இவ்வாறு வருவனவற்றை மீமிசை என இச்சொல்லால் பெயர் கொடுத்தல் தமிழ் மரபு. கந்து-கட்டுத்தறி. வலிமைமிகுதியினால் தன்னைக் கட்டியிருக்கும் கட்டுத் தறியினையும் முறிக்கவல்லது யானை. கரடம்-மதம் ஒழுகிய சுவடு. யானைக்கு அடையாக, கந்தடு, கரட, வெம், கவள என்ற நான்கும் வந்தன. வாய்மை பேசுகின்ற இயல்பு மிக்கவன் வீடணன் ஆதலின், 'வாய்மையான்' எனச் சிறப்பித்தார். வாய்மையான் வந்தனன் என்க. (125)

## அனுமன் வரவு

1469 கருத்துவந் தெழுகதிர்க் கடவு டன்னையோர்
பருத்தசெங் கனியெனப் பாய்ந்த பான்மையான்
உருத்துவந் துலகெலா மொருங்கு காதுமா
மருத்துவின் மைந்தனும் வந்து தோன்றினான்.

கருத்துஉவந்து எழுகதிர்க் கடவுள் தன்னை ஓர்
பருத்த செங்கனி எனப் பாய்ந்த பான்மையான்
உருத்துவந்து உலகு எலாம் ஒருங்கு காதுமா
மருத்துவின் மைந்தனும் வந்து தோன்றினான்.

பொ: கிழ்த்திசையில் எழுகின்ற சூரியனை, ஒரு பருத்த சிவந்த பழம் என்று கருத்தில் மகிழ்ந்து, அச்சூரியன்மேல் பாயும் தன்மையுடையவனும், கோபித்து வந்து உலகம் முழுவதையும் ஒருசேர அழிக்கின்ற சிறந்த வாயுதேவனின் மைந்தனும் ஆகிய அனுமன் இராமனிடம் தோன்றினான்.

கு: அனுமன் பிறந்தவுடன் தன் அன்னை அஞ்சனாதேவியைப் பார்த்துத் தனக்கு உணவு எது? என்று கேட்டபோது சிவந்த பழம் எல்லாம் உனக்கு உணவுதான் என்று சொல்லிவிட்டுப் பழங்கொணரக் காட்டிற்குள் சென்றாளாக; கீழ்த்திசையில் சிவந்த வடிவாக எழுகின்ற சூரியனைக் கண்ட அனுமன், இதுதான் கனி யென்று கருதி அச்சூரியனைப் பாய்ந்து பற்றினான் என்பது, அனுமப் படலத்தில் கூறப்பட்டுள்ளது. உருத்தல் கோபித்தல் ஒருங்கு காதுதல் வாயுதேவனுக்கு அடை. 'மாமருந்து' என்றது, வாயுதேவனை. தந்தையின் வலிமை கூறவே மாருதியின் வலிமையும் புலப்படுத்தியதாயிற்று. காதுதல்-அழித்தல். (12ு)

## சாம்பவான் வருதல்

1470 ஆற்றிய வுலகெலா மடியி ரண்டினால்
மாற்றிய வமலனை வலங்கொண் டங்ஙனே
காற்றியல் கடுமையிற் கனகவெற் பறை
சாற்றிய வெண்கினற் றலைவன் சார்ந்தனன்.

ஆற்றிய உலகு எலாம் அடி இரண்டினால்
மாற்றிய அமலனை வலங்கொண்டு அங்ஙனே
காற்றியல் கடுமையில் கனக வெற்பு அறை
சாற்றிய எண்கின் நல்தலைவன் சார்ந்தனன்.

பொ: மாவலி அரசு செய்து கொண்டிருந்த உலகம் எல்லாவற்றையும், வாமனனாகச் சென்று, அவன்பால் இரந்து பெற்று, இரண்டு அடியினால் விண்ணுலகையும், மண்ணுலகையும், பாதாளத்தையும் அளந்து தன்னாட்சிக்கு உரியதாக மாற்றிய அனுமனாகிய திருமாலை வலம் செய்து வணங்கிவிட்டு அப்படியே, காற்றின் இயல்பான கடிய வேகத்தோடு பொன்மலையாகிய மேருவில் மோதுண்ணுமாறு எண்டிசையினும் சென்று பறை சாற்றிய கரடிகளுக்கு நல்ல தலைவனாகிய சாம்பவான் இராமனை வந்து சார்ந்தான்.

கு: 'ஆற்றிய உலகெலாம்' என்றது, மாவலியால் ஆட்சி செய்யப் பெற்ற உலகெலாம் என்னும் பொருளது. 'அடியிரண்டினால் மாற்றியது' என்பது, மாவலியால் திருமால் குறளனாய்ச்

சென்று மூன்றடி மண் இரந்து பெற்றும், பின்பு வளர்ந்து மூவுலகும் ஈரடியால் அளந்து தன்னாட்சிக்கு மாற்றிக் கொண்டதையுணர்த்தியவாறு. 'மூவுலகு மீரடியான் முறை நிரம்பாவகை முடியத்தாவிய சேவடி' (சிலப். ஆய்ச்சியர் குரவை) எனக் கூறியுள்ளதும் காணலாம். மாவலி ஆட்சி மாறித் திருமால் ஆட்சி வந்தது என்பதைச் 'சாம்பவான் எண்டிசையிலும் விரைந்து சென்று பறைசாற்றியபோது மேருமலை இடித்ததால் முழந்தாள் வலிமையற்றான்' என்பதைக் கிட்கிந்தா காண்டம் மயேந்திரப் படலத்தால் அறியலாம். 'வேதமனைத்துந் தேர்தர வெட்டா வொரு மெய்யன்பதல முற்று மோரடிவைத்துப் பொலிபோதில், மாதிர மெட்டு சூழ்பறை வைத்தே வரமேரு மோதவிளைத்தே தாளுலைவுற்றேன் விறல்லெய்யீர்' (மயேந்திரப்-5) என்பது காணலாம்.

(127)

## நளன் வருதல்

1471 வரைபல வலிமிக வாங்கி வானரர்
சிரமிசை கொண்டனர் செல்லச் செல்லவோர்
கரமிசைக் கொண்டொரு கணத்தில் மோதிடு
நரலையை யணைசெய்த நளன்வந் தெய்தினான்.

வரைபல வலிமிக வாங்கி வானரர்
சிரமிசை கொண்டனர்; செல்லச் செல்லவோர்
கரமிசைக் கொண்டு ஒரு கணத்தில் மோதிடு
நரலையை அணைசெய்த நளன்வந்து எய்தினான்.

பொ: வானரர்கள் மலைகள் பலவற்றைத் தம் வலிமை மிகுதிபடப் பறித்துத் தலைமேற் கொண்டனராய்த் தன் பால் வரவர, அவர்கள் கொணர்ந்த மலைகளையெல்லாம் ஒரு கண நேரத்தில் தன் ஒருகையில் வாங்கிக் கொண்டு, அலைமோதுகின்ற கடலில் அணைகட்டிய 'நளன்' என்னும் வானரன் வந்து இராமனை அடைந்தான்.

கு: நளன் என்பவன், அலைமோதும் கடலில் நின்று வானர சேனை கொணர்ந்த மலைகளையெல்லாம் ஒருகரத்தில், ஒருகண

நேரத்தில் வாங்கித் திறமையுடன் கடலில் அணைகட்டிய திறமை யாளன் என்பதும், அவன் இராமன் வைகுண்டம் செல்லுதல் அறிந்து வந்து சேர்ந்தான் என்பதும் கூறியவாறு. நரலை-கடல். அலைமோதும் கடலில் நின்று அணைகட்டிய அருமை புலப்பட, 'மோதிடு நரலையை அணைசெய்த' என்றார். (128)

## துமிந்தன் வருதல்

1472 கோல்பிடித் தெய்துசெங் குருதி யாறெழ
வேல்பிடித் தெறிதரு மரக்கர் வெள்ளத்தை
வால்பிடித் தெற்றிட வந்த மாமதத்
தோல்பிடித் தெற்றிய துமிந்தன் றோன்றினான்.

கோல்பிடித்து எய்து செங்குருதி ஆறுஎழ
வேல்பிடித்து எறிதரும் அரக்கர் வெள்ளத்தை
வால்பிடித்து எற்றிட வந்த மாமதத்
தோல்பிடித்து எற்றிய துமிந்தன் தோன்றினான்.

பொ: அம்பினைப் பிடித்து, வில்லில் வைத்து எய்து, சிவந்த சினத்த ஆறு உண்டாகவும், வேலைப்பிடித்து மீண்டும் வீசுகின்ற அரக்கர்தம் சேனை வெள்ளத்தை-வானர சேனையின் வாலைப் பிடித்துக் கொண்டு, தரையில் மோதிட வந்த பெரிய மதத்தினை யுடைய யானையைப் பிடித்து, மோதி அழித்த, துமிந்தன் என்னும் வானர வீரன் வந்து தோன்றினான்.

கு: அரக்கர் வெள்ளத்தைத் தோல்பிடித்து எற்றிய துமிந்தன் என இயையும். கோல்-அம்பு. அரக்கரின் கொடுமை புலப்பட வேண்டி, கோல் பிடித்து எய்ததோடு அமையாது, வேல்பிடித்தும் எழுந்தமை கூறினர். வானர சேனையின் வாலைப்பிடித்துத் தூக்கித் தரையில் எற்றலாம் என எண்ணிவந்த யானையைப் பிடித்துத் துமிந்தன், அரக்கர் வெள்ளத்தை எற்றினான் என்றவாறு. எற்றுதல்-மோதுதல். தோல்-யானை. அரக்கரின் யானையைப் பிடித்து அரக்கரை மோதியதால் அரக்கரும் யானையும் மாய்ந்தன என்க. (129)

## நீலன் வருகை

1473 மருப்பினு லிருகரியுடனு மற்றுள
பொருப்பெலாம் பொரிந்திடப் புணரி வற்றிட
உருப்பினு லுலகெலா முலைய வோங்கிய
நெருப்பின்மா மகனிக னீலன் மேவினுன்.

மருப்பின் நால் இருகரியுடனும் மற்றுள
பொருப்பு எலாம் பொரிந்திடப் புனரி வற்றிட
உருப்பினுல் உலகு எல்லாம் உலைய ஓங்கிய
நெருப்பின் மாமகன் இகல்நீலன் மேவினுன்.

பொ: கொம்புகளையுடைய எண்திசை யானைகளோடும், மற்றுள்ள திசைவரைஎல்லாம் பொரிந்திடவும், கடல் வற்றவும், வெப்பத்தினுல் உலகம் எலாம் வருந்தவும், ஓங்கியவனுகிய அக்கினி தேவனின் சிறந்த மகனுகிய நீலன் வந்து சேர்ந்தான்.

கு: ஊழியிறுதியில் நெருப்பினுல் அழியும் நிலையை விளக்கி, அக்கினி தேவனின் திறலைப் புலப்படுத்தியவாறு. 'நாலிருகரி' என்றது, எட்டுத்திக்கு யானைகளை. யானைபோலத் திசைகாக்கும் தன்மையுடைய மலைகளை 'மற்றுள பொருப்பெலாம்' என்முர். பொரிதலாவது மலைகள் தீயினுல் வெந்து பொரிப் பொரியாகச் சிதறுதல் திசையானைக்குப் பொரிதல் இன்று அவை வெந்து, உருத்தெரியாது குழம்பிப் போகும் தன்மையது. இந்த வேறுபாடு புலப்படவே, நாலிருகரியுடனும் என ஒருவன் பொருள்பட வந்த உடன் என்னும் சொல்லுருபு கொடுத்துப் பிரித்தவாறு. உருப்பு-வெப்பம். உலைதல்-அழிதல். நெருப்பு எரியுங்கால் மேலோங்கி எரியும் தன்மை புலப்பட 'ஓங்கிய நெருப்பு' என்முர். தந்தையின் பெருமை கூறி மகன் நீலன் பெருமையும் புலபபடுத்தியவாறு. இகல்-மாறுபாடு, வலிமை. (130)

## மயிந்தன் வருதல்

1474 குரங்கொடு பொரவெளி தென்று கொண்டுதஞ்
சரங்கொடு பொரவரு மரக்கர் தானையைக்
கரங்கொடு மலைகொடு கதிர்வெண் பற்கொடு
மரங்கொடுஞ் சாடிய மயிந்தன் றோன்றினான்.

குரங்கொடு பொர எளிது என்று கொண்டு தம்
சரம்கொடு பொரவரும் அரக்கர் தானையைக்
கரம்கொடு மலைகொடு கதிர்வெண் பல்கொடு
மரம்கொடும் சாடிய மயிந்தன் தோன்றினான்.

பொ :குரங்குகளோடு போர்செய்தல் எளிது என்று நினைத்துக் கொண்டு தம் அம்புகளைக் கொண்டு போர் செய்ய வருகின்ற அரக்கர் சேனையைத் தன் கைகளைக் கொண்டும், கையில் பெயர்ந்த மலைகளைக் கொண்டும்; ஒளிவீசும் வெள்ளிய பற்களைக் கொண்டும்; பறிந்த மரங்களைக் கொண்டும் தாக்கியழித்த மயிந்தன் என்ற வானரத் தலைவன் வந்து தோன்றினான்.

கு: தம் கையில் உள்ள அம்புகளால் குரங்குகளை வெல்லுதல் எளிது எனத் தோற்றத்தைக் கொண்டு, எள்ளிவந்த அரக்கர் சேனையை மயிந்தன், வேறு போர்க் கருவியின்றித் தன் கையும், பல்லும், மலையும், மரமுமே கொண்டு அழித்தவன் மயிந்தன். அத்தகைய வீரனும் வந்து சேர்ந்தான் என்றவாறு. தானையைச் சாடிய மயிந்தன் என்க. சாடுதல்-தாக்கியழித்தல். மரங்கொடும் என்புழிச் செவ்வெணீற்றில் எச்ச உம்மை

---

இச்செய்யுளையடுத்துப் பின்வரும் செய்யுள் சில சுவடிகளில் காணப்படுகின்றது.

131 - அ. நீலனுங் குமுதனு நிசாச ரர்க்கெலாங்
காலனென் றமரெலாங் கடக்கு மாற்றலாற்
றூலமெண் ணியபடைத் தலைவர் யாவரு
மூலமா கியமுழு முதலை முற்றினர்.

வந்துளது. அது எண்பெயர் தொறும் சேர்ந்து பொருள் தரும். (131)

## தேவர்களின் அமிசமான எல்லா வானரங்களும் வந்து சேர்தல்

1475 தட்பறத் தயரத ராம னாகவ
வைப்புறு புவியில்வா னரங்க ளாமெனச்
செப்பிய தேவர்க ளியாருஞ் சேரவே
வொப்புர வந்துவந் தொருங்கு கூடினார்.

தப்பு அறத் தயரத ராமன் ஆக அ
வைப்புறு புவியில் வானரங்களாம் எனச்
செப்பிய தேவர்கள் யாரும் சேரவே
ஒப்புர வந்து உவந்து ஒருங்கு கூடினார்.

பொ: திருமால், குற்றம் இல்லாமல் தயரதராமன் ஆகப் பிறக்க, உயிர்கள் நெருங்கியுள்ள பூமியில் வானரங்கள் எனச் சொல்லப்பட்டு வந்த தேவர்கள் எல்லாம் ஒருங்கு சேர, உலக நடை நோக்கத்தோடு வந்து, மகிழ்ந்து ஒன்று சேர்ந்தார்கள்.

கு: அவைப்புறல்-நெருங்குதல். முப்பத்து, முக்கோடித் தேவர்களும் வானரங்களாக இராமனுக்குத் துணை செய்ய வந்தார்கள் என்பது, திருவவதாரப் படலத்துக் கூறப்பட்டது. தேவர்களின் அமிசமான அந்த வானரங்கள் எல்லாம் உலக நடை நோக்கி வந்து, மகிழ்ந்து ஒருங்கே சேர்ந்தார்கள். இராமனோடு இவ்வுலகில் அவனுக்கு உதவியாகப் பிறந்த வானரங்கள் எல்லாம் ஒருங்கே வந்து சேர்ந்தார்கள் என்றவாறு. ஒப்புர - உலக நடை பொருந்த. ஒப்புரவு என்ற திருக்குறள் அதிகாரத்தில் பரிமேலழகர், ஒப்புரவு என்பது, உலகநடையறிந்து செய்தல் எனப் பொருள் கூறுவர். திருமால் இராமனாகப் பிறக்கும்போது பிறந்த வானரங்கள் எல்லாம் அவன் தன்னடிச் சோதிக்குப் புறப்படும்போது தவறாது வந்து சேர்ந்தார்கள் என்றவாறு. (132)

## இராமன் இலக்குவன் பின் போவதே என உறுதி கூறல்

1476 ஏனைய சனங்களு மெய்திற் றுதலாற்
போனவன் றன்பினே போவதே யெனு
வானமர் மலரடி வணங்கினுர்க்கெலாந்
தேனமர் தெரியலான் றெரியக் கூறினுன்.

ஏனைய சனங்களும் எய்திற்று ஆதலால்,
போனவன்தன் பினே போவதே எனு
வான்அமர் மலர்அடி வணங்கினுர்க்கு எலாம்
தேன்அமர் தெரியலான் தெரியக் கூறினுன்.

பொ: மற்ற மக்கள் திரளும் வந்து அடைந்தன ஆதலால், மண்ணுலகை விட்டுப் போன இலக்குவன் பின்னே, அவனைப் போலவே போவதே முடிபு என்று, தன் பெருமை பொருந்திய மலர்போன்ற பாதங்களை வணங்கினவர்கட்கு எல்லாம், தேன் பொருந்திய துளப மாலை அணிந்த இராமன் விளங்கக் கூறினுன்.

கு: 'சனங்கள்' என்றது, இங்கு மக்கள் கூட்டத்தை. 'எய்திற்று' என்ற வினையொடு முடிதற்கு ஏற்றது மக்கள் கூட்டம் என்ற அஃறிணைச் சொல்லேயாதல் தெளிவு. தெரியலான் போனவன் தன் பின்னே போவதே என மலரடி வணங்கினுர்க்கெலாம் தெரியக் கூறினுன் என இயையும். 'வான்' என்பது, இங்கு மேன்மை,பெருமை என்ற பொருளில் வந்தது. எல்லோரும் வந்து கூடினுர் ஆதலின், அவர்கட்குத் தன் உறுதியான முடிவைத் தெளிவாகக் கூறினுன் என்க. (133)

---

133 - அ. இச்செய்யுளின் பின் பின்வரும் மிகைப்பாடல் காணப் படுகின்றது.

பொருதியாற் பொருமவர் போகிப் போனிடத்
திருதியா தெமக்கெனு மாக்கர் சேனையை
பருதியா மென விழி சிவந்து பற்கொடு
குருதி யாறுகப்போடு குமுதன் னெய்தினுன்.

## வீடணனைத் தன்னொடு வாராமல் இருக்கச் செய்தல்

1477 மின்பயில் தடக்கைவேல் வீட ணன்றனைப்
பொன்பயி னகர்வயிற் போதி பூதல
மன்பதை யளவுநீ வாழ்தி யாலென
வன்புட னாணையா னகல நீக்கினான்.

மின்பயில் தடக்கைவேல் வீடணன் தனைப்
பொன்பயில் நகர்வயின் போதி பூதல
மன்பதை அளவுநீ வாழ்தியால் என
அன்புடன் ஆணையான் அகல நீக்கினான்.

பொ: ஆணைமேற் கொண்டிருந்த இராமன், பெரிய கையில் மின்னொளி வீசும் வேலை தாங்கிய வீடணனைப பார்த்து, 'பொன் மிகுதியாகப் பொருந்திய இலங்கை மாநகரிடத்துப் போவாயாக. பூவுலகில் மக்கள் தொகுதி உள்ள அளவும் நீ அங்கு வாழ்வாயாக' என்று அன்போடும் (தன்னொடு தொடராமல்) அகலு மாறு நீக்கினான்.

கு: 'மின்பயில்வேல், தடக்கைவேல்' எனத் தனித்தனி இயையும். செல்வத்தால் குறைவிலாமை புலப்பட, இலங்கையைப் 'பொன்பயில் நகர்' என்றார். சிரஞ்சீவியாக வாழ்க என்பார் 'பூதல மன்பதையளவு நீ வாழ்தியால்' என்றார். 'ஆணையான்' என்றது, இராமனை. இராமல் என்பது, தோன்றா எழுவாயாகக் கொண்டு அன்புடன் ஆணையால் நீக்கினான் என இயைத்துக் கூறலும் ஆம். மறுக்கவியலாமல் ஆணையான் நீக்கினான் என்ற வாறு. (134)

## சுக்கிரீவன் அங்கதனுக்கு மகுடம் சூட்டி வந்தமை கூறியது

1478 அன்னது கேட்டபி னருக்கன் மாமகன்
றன்னையும் விடுப்பது தகுமென் றஞ்சியே
மன்னுமங் கதனையா மகுடஞ் சூட்டிவைத்
தின்னணம் வந்தன னென்றி றைஞ்சினான்.

அன்னது கேட்டபின் அருக்கன் மாமகன்
தன்னையும் விடுப்பது தகும் என்று அஞ்சியே
மன்னும் அங்கதனை மாமகுடம் சூட்டிவைத்து
இன்னணம் வந்தனன் என்று இறைஞ்சினன்.

பொ: வீடணனுக்குச் சொன்ன அவ்வார்த்தையைக் கேட்ட பின்பு, சூரியன் மகனாகிய சுக்கிரீவன், (வீடணனை இங்கு இருக்கு மாறுவிட்டதுபோலத்) தன்னையும் விடுக்கக் கூடும் என்று அஞ்சி, 'என்னோடு நிலைபெற்றிருந்த அங்கதனை முடிசூட்டி வைத்துவிட்டு இங்கு வந்தேன்' என்று வணங்கினன்.

கு: 'தன்னையும்' என்புழி உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. வீடணனையே அன்றித் தன்னையும் விடுப்பது தகும் என்று பொருள் படுதல் காணலாம். 'மன்னுமங்கதன், இளவரசனாகத்தன்னோடு பொருந்தியிருந்த அங்கதன் என்க. அங்கதனுக்கு முடிசூட்டிவிட்டு வந்தமையால் மீண்டும் ஆட்சி செய்க எனக் கூற வாய்ப்பின்மை தெரியலாம். (13:)

## சுக்கிரீவன் இராமனைப் பின்பற்றிச் செல்வது பற்றிக் கூறுதல்

1479 ஏந்துவேலி னிராமனோ டிரவி தன்மகன்
சேர்ந்துழிச் சேர்வது தெளிந்து செப்பினன்
ஆய்ந்தவ ராயினோ ரகில மூன்றினும்
வாய்ந்த செய்ந்நன்றிதா மறக்க வல்லரோ.

ஏந்துவேல் இராமனோடு இரவி தன்மகன்
சேர்ந்துழிச் சேர்வது தெளிந்து செப்பினன்
ஆய்ந்தவர் ஆயினோர் அகில மூன்றினும்
வாய்ந்த செய்ந்நன்றிதாம் மறக்கவல்லரோ?

பொ: சூரியன் மகன் சுக்கிரீவன்-இலக்குவன் சேர்ந்த இடத்திற்கு இராமன் செல்லப்போவதைத் தானே தெளிந்து, வேலேந்திய இராமனோடு சொன்னான். 'ஆராய்ச்சி மிக்கவர் உலகம் மூன்றினும் தமக்கு வாய்த்த செய்ந்நன்றியைத் தாம் மறக்க வல்லரோ?' (மறவாமையினால்தான் சுக்கிரீவன் உள்ளத்திற்கு இராமன் செல்வது புலனாயிற்று)

கு: பின்னிரண்டடி, வேற்றுப் பொருள் வைப்பணி. ஆய்ந் தவர் செய்ந்நன்றி மறக்கவல்லரோ, என்ற பொதுக் கருத்தைச் சுக்கிரீவன், இராமன் சேர்ந்துழிச் சேர்வது ஆகிய நிகழ்ச்சியை. யாரும் தனக்குத் தெரிவிக்காமலே தெளிந்து கூறிய செய்தியைக் கொண்டு நிறுவியவாறு. சுக்கிரீவன், செய்ந்நன்றி மறவாதவன் ஆதலின், இராமன் தனக்குச் செய்த நன்றியை நினைந்து ஒடும் மனத்தனாய் வாழ்ந்தவன். எனவே, தன்னோடு நட்புக் கொண்ட இராமன், மண்ணுலக வாழ்வை நீத்துத் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளப் போவதை நெஞ்சத்தாலுணர்ந்து தானும் இராமனோடு செல்ல வந்துளான். இந்நிகழ்ச்சி கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்து உயிர்துறக்க எண்ணி அமர்ந்தபோது, அதனை உணர்ந்து பிசிராந்தையார் பாண்டிய நாட்டிலிருந்து வந்து, தானும் உயிர்விடக் கலந்துகொண்ட நிகழ்ச்சியை ஒத்ததாகும். (136)

## அனுமனை இராமன் இவ்வுலகில் இருக்கச் சொல்லியது

1480 மருத்துவின் மைந்தனை மகிழ்ந்து நோக்கிமுன்
புரைத்தது முணர்தியா லுலகில் வாழ்வதுன்
கருத்துமுண் டாதலால் கனகத் தோளினாய்
இருத்திநம் மாணையென் றிராமன் போக்கினான்

மருத்துவின் மைந்தனை மகிழ்ந்து நோக்கி முன்பு
உரைத்ததும் உணர்தியால் உலகில் வாழ்வதுஉன்
கருத்தும் உண்டு ஆதலால் கனகத் தோளினாய்
இருத்தி, நம் ஆணை என்று இராமன் போக்கினான்.

பொ: வாயுவின் மகனாகிய அனுமனை மகிழ்ச்சியோடு பார்த்து, 'முன்பு சொன்னதையும் நீ உணர்ந்திருக்கின்றாய்; உலகத்தில் சிரஞ்சீவியாக வாழ்வது உன்கருத்தாகவும் உள்ளது; ஆதலால் பொன்னிறம் அமைந்த தோளினையுடையவனே! நீ என்னோடு வராமல் இங்கு இருப்பாயாக! இது நம் ஆணை' என்றுகூறி இராமன் அனுமனைப் போகச் செய்தான்.

கு: மருத்து-வாயுதேவன். முன்பு உரைத்தது என்றது, அனுமன் மருத்துமலை கொணர்ந்து, இலக்குவன் முதலிய அனைவரையும் உயிர்பெறச் செய்தபோது இராமன் மகிழ்ந்து, 'இன்று வீகலா தெவருமெம்முடன் நின்றுவாழுமா நெடிதுநல்கினாய், ஒன்று மின்னல்நோய் உறுகிலாதுநீ என்றும் வாழ்தியால் இது என் ஏவலால்' (யுத்த. மருத்துமலைப். 113) என்றது, நினைப்பித்தவாறு. 137)

## இராமனோடு தொடர்ந்து சென்றவர்கள் சுக்கிரீவன் முதலியோர்

1481 கனைகதிர் மைந்தனுங் கரடி வேந்தனும்
குனிவுறு குமுதனுங் கொலை மயிந்தனும்
துனைதரு துமிந்தனு நளனுஞ் சூர்விழி
இனைபொரு நீலனு மினைய வீரரும்

கனைகதிர் மைந்தனும் கரடி வேந்தனும்,
குனிவுறு குமுதனும், கொலை மயிந்தனும்,
துனைதரு துமிந்தனும், நளனும், சூர்விழி
இனைபொரு நீலனும், இனைய வீரரும்

பொ: நெருங்கிய ஒளிக்கதிர்களையுடைய சூரியன் மகனாகிய சுக்கிரீவனும், கரடிகளுக்கு வேந்தனாகிய சாம்பவானும், வளைந்த தோற்றத்தையுடைய குமுதனும், கொலைசெய்வதில் வல்லவனாகிய மயிந்தனும் விரைந்து செல்லத்தக்க துமிந்தனும், நளனும் அச்சுறுத்தும் விழியினையுடையவனாய், ஒத்தவர்களோடு மட்டும் போர் புரிகின்ற நீலனும் இத்தன்மையான பிற வீரர்களும்.

கு: கனை-நெருக்கம். துனைதல்-விரைந்து செல்லுதல். சூர்விழி-அச்சுறுத்தும் விழி. நீலனுடைய விழிகள், கண்டாரை அச்சுறுத்தும் அமைப்புடையவை என்றவாறு. இணைபொரு-ஒத்த வலிமையுடையவரோடு போர் செய்யும் இயல்பு- எதுகை நோக்கி 'இனைபொரு' என வந்தது. மேல்வரும் மூன்றுஞ் செய்யுளில், 'அகன்றுபோயினர்' என்ற வினையோடு முடியும். குளகம். (138)

## இதுவுமது

1482 வீரன தாணையான விலக்க நிற்கலார்
தோரண மாநகர்த் தொக்க மாந்தரும்
காரிகை யார்களும் கடவுண் மாமறை
ஆரண நான்குடை யந்த ணாளரும்

வீரனது ஆணையான் விலக்க நிற்கலார்
தோரண மாநகர்த் தொக்க மாந்தரும்
காரிகையார்களும் கடவுள் மாமறை
ஆரணம் நான்கு உடை அந்தணாளரும்.

பொ: வீரனாகிய இராமனுடைய கட்டளையினால் விலக்கவும் நிற்காதவராய்த், தோரணம் கட்டிய அயோத்திமாநகரில் வந்து கூடிய ஆண்மக்களும் பெண்டிரும் தெய்வத்தன்மை வாய்ந்த, சிறந்த மறை நூலாகிய வேதங்கள் நான்கினையும் அறிந்த அந்தணாளர்களும்

கு: 'வீரன்' என்றது, இராமனை. 'இராமன் கட்டளை' என்று சொல்லி நிறுத்தவும் நில்லாமல் வந்து கூடியுள்ள ஆண்மக்கள் என்க. இதனால் மாந்தரின் ஆர்வம் புலப்படுத்தியவாறு. மாமறை ஆகிய ஆரணம் என இருபெயரொட்டாக்குக. மாந்தரும் காரிகையார்களும், அந்தணாளரும் போயினர் என வரும் செய்யுளில் முடியும். குளகம். (139)

## இதுவுமது

1483 பின்னிய காதலிற் பிரித லாற்றலர்
மன்னிய தாள்வயின் வதிந்த வேட்கையால்
தொன்னகர் பாழ்படத் துனைந்து சூழ்வர
அன்னகர் வாயில்விட் டகன்றுபோயினர்.

140-அ. மிகைப்பாடல்
செவ்வியோன் மைந்தரைச் செல்வ மேவவவைத்து
அவ்வயிர் குகனும்வந் தடியிறைஞ்சினன்
மைவரைத் தோளனீ வருகவென்று நற
கொவ்வையங் கனியிதழ்க்கொண்டல் கூறினன்.

பின்னிய காதலில் பிரிதல் ஆற்றலர்
மன்னிய தாள்வயின் வதிந்த வேட்கையால்
தொன்னகர் பாழ்படத் துனைந்து சூழ்வர
அன்னகர் வாயில்விட்டு அகன்றுபோயினர்.

பொ: பிரிக்க முடியாமல் பின்னிக் கொண்டிருந்த காதலினால் பிரிய முடியாதவராய், நிலைபெற்ற இராமனுடைய தாள்நிழலில் அதுகாறும் தங்கியிருந்தமையால் உளதாகிய வேட்கையால், தம் பழைமையான நகரம் பாழ்படுமாறு விட்டு, விரைந்து சூழ்ந்துவர, அந்த நகரத்தின் வாயிலை விடுத்து நீங்கிப் போனார்கள்.

கு: 'கதிர் மைந்தனும், கரடி வேந்தனும், குமுதனும், மயிந்தனும், துமிந்தனும், நீலனும், ஏனைவீரரும் மாநகர் தொக்க, மாக்களும், காரிகையாரும், அந்தணாளரும், பிரிதலாற்றலர் தாள்வயின் வதிந்த வேட்கையால் துனைந்து சூழ்வர, அந்நகர் வாயில்விட்டுப் போயினார்' என இயைந்து முடிக்க. அரசன், குடிமக்கள் என்று பழகிய காதலால், இராமனைப் பிரிதல் ஆற்றாதவராய் அவன் தாணிழலில் இதுகாறும் தங்கியிருந்தமை யால் உளதாகிய வேட்கையால், 'சூழ்வரல் போயினார்' என்க. எதுகைநோக்கி அந்நகர் எனற் பாலது அன்னகர் எனப் போலியாய் வந்தது. (140)

## மக்களைப் பிரிந்த அயோத்திநகர் அகத்தியன் உண்ட கடல் போன்றது எனல்

1454 உற்றதங் காதலா லுலகந் தன்னொடன்
பற்றவர் பிரிந்தநா ளயோத்தி மாநகர்
முற்றிய தமிழ்முனி முகப்ப முன்னைநாள்
வற்றிய வரிமணல் வாரி போன்றதே.

---

141-அ. மிகைப் பாடல்

ஒட்டியாங் குறைபவர் ஒழிந்த பின்னைநாள்
மட்டவிழ் சுதைபயில்மாட மாளிகை
நெட்டிடை யாறுயிர் நீத்து மாநிலத்து
இட்டன கிடந்தபொய் யாக்கை போன்றதே.

உற்றதம் காதலால் உலகம் தன்னெடன்பு
அறறவர் பிரிந்தநாள் அயோத்தி மாநகர்
முற்றிய தமிழ்முனி முகப்ப முன்னைநாள்
வற்றிய வரிமணல் வாரி போன்றதே.

பொ: இராமனிடத்தில் பொருந்திய தமது பேரன்பால் உலகத்தோடு அன்பு அற்ற நகர மக்கள் பிரிந்த நாளில், அயோத்தி மாநகர்-ஞானமுதிர்ச்சியுடைய தமிழ் முனிவராகிய அகத்திய முனிவர், முன்னாளில் கையில் முகந்து உண்டு விட்டமையால் நீர் வற்றிப் போன வரிகளையுடைய மணலே நிறைந்த கடலைப் போன்று காணப்பட்டது.

கு: இராமன் மேல் வைத்த காதல் உலகத்தோடு இருந்த அன்பினை அறச்செய்துவிட்டது மக்களுக்கு; ஆதலால், உலகத்தைத் துறந்து இராமனோடு விண்ணுலகம் அடைய விரும்பி, அயோத்தி விட்டுப் புறப்பட்டார்கள் என்க. கடலுக்குள் நீர் நிறைந்திருப்பது போல் அயோத்தியில் முன்பு மக்கள் நிறைந்திருந்தார்கள்; இப்போது இராமனைப் பின்பற்றி எல்லா மக்களும் பிரிந்து விட்டமையால், (கடலில் ஒளிந்திருந்த விருத்தராசுரனை இந்திரனுக்குக்காட்ட வேண்டி) அகத்தியமுனிவர் கடனீரை முழுவதும் குடித்தபோது வெறும் மணல் மயமாகத் தோன்றிய கடலைப்போல் மக்களே இல்லாத அயோத்திமாநகர் வெறிச் செனத் தோன்றியது என்பது, உவமையணி. (141)

## பிரமன் விண்ணில் தோன்றுதல்

1485 தடமலி சரயுததண் துறையிற் றாழ்புனல்
அடியுறச் செலவுழி யலரி னான் முகன்
இடமமிகு கணக்கிலா வின்ப வூர்திகள்
உடன் நணி வானகத்து உச்சி தோன்றினான்.

தடமலி சரயுத் தண்துறையில் தாழ்புனல்
அடிஉறச் செல்வுழி, அலரின் நான்முகன்
இடம்மிகு கணக்குஇலா இன்ப ஊர்திகள்
உடன் நணி வானகத்து உச்சி தோன்றினான்.

பொ: பெருமை நிறைந்த சரயுநதியின் குளிர்ந்த துறையில், தாழ்ந்து செல்லும் நீரில், மக்கள் தம் பாதங்கள் பொருந்துமாறு இறங்கிச் செல்லும்போது, தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமன், அமர்தற்குரிய இடம் மிக்கனவும், எண்ணிக்கையில்லாதனவும் ஆகிய இன்பமயமான வானவூர்திகளோடு, தரைக்கு அணித்தாக வானத்தின் உச்சியில் தோன்றினான்.

கு: தட–பெருமை. மக்கள் சரயு நதியின் துறையில் தாழ்ந்து செல்கின்ற நீரில், தம பாதம் பொருந்தச் செல்லும் வானத்தில் பிரமன் வானவூர்திகளோடு காட்சியளித்தான் என்றவாறு. 'இடமிகு ஊர்திகள், கணக்கிலா ஊர்திகள்' எனத் தனித்தனி இயையும். இன்பமாகப் பயணம் செய்தற்குரிய ஊர்திகள் உடன் தோன்றினன் என்க. ஒவ்வொரு வூர்தியும் ஏறியமர்தற்குரிய விசாலமான இடத்தையுடையதாக இருந்தது. ஊர்திகளின் பன்மையால் கணக்கு எடுக்க இயலாதனவாக இருந்தன என்க. 'நணிவானகம்' என்றது, தரைக்கு நணித்தாக உள்ள ஆகாயத்தினை. சரயு நதியில் உள்ளவர்கள் பார்க்குமாறு பிரமன் ஊர்திகளுடன் வந்து தோன்றினன் என்க. (142)

## பிரமன் இராமனை வேண்டுதல்

1486 மெய்யனே துய்யனே விளங்கும் விண்ணுளோர்க்
கய்யனே யமலனே யருண வாழிவாழ்
கய்யனே நின்பழங் கடவுட் காயமோ
டெய்தனீ வேண்டுமென் றிறைஞ்சி யேத்தினான்.

மெய்யனே துய்யனே விளங்கும் விண்ணுளோர்க்கு
அய்யனே அமலனே அருண ஆழி வாழ்
கய்யனே நின்பழங் கடவுள் காயமோடு
எய்தல்நீ வேண்டும் என்று இறைஞ்சி ஏத்தினான்.

பொ: "மெய்ப்பொருளாக இருப்பவனே! தூய்மையானவனே! விளக்கமுடைய விண்ணுலகத்தில் உள்ளவர்கட்குத் தலைவனே மலமற்றவனே! சிவந்த சக்கரப்படைவாழ்கின்ற கையையுடையவனே! நின் பழைய தெய்வ உடம்போடு வருதல் வேண்டும்" என்று வணங்கித் துதித்தான்.

கு: விண்ணின் உச்சியில் தோன்றியதாக முன்னைச் செய்யுளில் கூறப்பட்ட பிரமன் இராமனை விளித்து இவ்வாறு வேண்டிக் கொண்டான் என்க. 'ஏத்தினான்' என்ற வினைக்கு எழுவாய் முன்னைச் செய்யுளில் வந்த நான்முகனே. துய்யன்–தூய்மை யுடையவன். அய்யன்-தலைவன். மண்ணுலகத்தில் இதுகாறும் வாழ்ந்திருந்த மானுட யாக்கையோடு வாராமல் பழைய தெய்வ யாக்கையோடு வரவேண்டும் என்பது பிரமனது வேண்டு கோளாகும். இறைஞ்சுதல்–வணங்குதல். ஏத்துதல்-துதித்தல். ஐயன், கையன், என்பன எதுகை நோக்கிய போலியாக வந்தன. இங்கு வந்துள்ள விளிகள் யாவும் உரியவாக அமைந்துள்ளமை காணலாம். இராமனுக்குப் பிறந்த நிலையில் ஆழிவாழ்கையனுதல் இல்லை என்பது தெளிவு. கோதண்டம் வாழ்கின்ற கையன்தானே இராமன். (143)

## இராமன் மானுட யாக்கை நீத்து விண் புகுதல்

1487 துன்னிய வானவர் துயர நீக்குவான்
மன்னிய வுலகினிற் பிறந்த யாக்கையைத்
தன்னிக ரிலாதவச் சரயு நீத்துத்தன்
பின்னவர் தம்முடன் பெயர்ந்து போயினான்.

துன்னிய வானவர் துயரம் நீக்குவான்
மன்னிய உலகினில் பிறந்த யாக்கையைத்
தன்னிகர் இலாத அச்சரயு நீத்துத்தன்
பின்னவர் தம்முடன் பெயர்ந்து போயினான்.

பொ: தன்பால் நெருங்கிவந்து, தேவர்கள் சொல்லிக்கொண்ட துயரத்தை நீக்கும் பொருட்டு நிலைபெற்ற இம்மண்ணுலகத்தில் பிறந்த மானுட உடம்பினை, தனக்கு நிகரிலாத பெருமையை யுடைய சரயு நதியில் மூழ்கி நீக்கிவிட்டு, தன் தம்பிமார் பரதன், சத்துருக்கர் தம்மொடு, இவ்வுலகை விட்டு நீங்கி விண்ணு லகுக்குப் போயினான்.

கு: தேவர்கள் வந்து முறையிட்டது கேட்டு, இராவணாதி களால் வந்த துயரம் நீக்கும் பொருட்டு, திருமால் மண்ணுலகில்

பிறந்த மானுட உடம்பை சரயு நதியில் மூழ்கியவுடன் நீக்கி விட்டு, தெய்வவுடம்போடு விண் புக்கான் என்றவாறு. மன்னிய-நிலை பெற்ற. உலகம் அழியும் தன்மையது ஆயினும் நீண்டகாலம் நிலைபெற்றிருத்தல் பற்றி 'மன்னிய உலகு' என்றார். சரயு, மக்களுக்குப் பயன்படும் தன்மையில் நிகரற்றது என அந்நதியின் பெருமை புலப்படுத்தியவாறு. பின்னவர் என்றது, பரத சத்துருக்கனரை. (144)

## நான்கு வேதங்களும் ஓரந்தணர் வடிவங்கொண்டு செல்லுதல்

1488 ஏதமில் சரயுமா நதியிழிந்த பின்
காதுவேற் றயரதன் காவல்கொண்டிடும்
ஆதிவா னவர்பயி லரிய நான்மறை
ஓதுநா லுருவுமோ ருருவ மாயதே.

ஏதம் இல் சரயுமா நதி இழிந்தபின்
காதுவேல் தயரதன் காவல் கொண்டிடும்
ஆதி வானவர் பயிலரியநால்மறை
ஓதுநால் உருவும் ஓர் உருவம் ஆயதே.

பொ: குற்றமில்லாத சரயு நதியில் இராமன் முதலியோர் இறங்கிய பின்பு, கொல்லும் தொழிலையுடைய, வேலைத்தாங்கிய தயரதன் காவல் கொண்டுள்ள விண்ணுலகத்தில் வாழ்கின்ற ஆதிதேவர்கள், கற்கவியலாத நான்கு வேதங்களில் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற நான்கு உருவங்களும் ஓர் அந்தணர் உருவம் ஆகிச் சென்றது.

கு: தயரதன் இவ்வுலகில் சக்கரவர்த்தியாயிருந்து இராமனை மகனாகப் பெற்ற புண்ணியத்தால், இறந்தபின் அத்தேவர்கள் வாழ்கின்ற உலகிற்குக் காவலனாய் ஆண்டு கொண்டிருந்தான் என்பது இதனால் புலனாகின்றது. மக்களாயிருந்து செய்த புண்ணியப் பெருக்கினால் தேவராவாரை விளக்க, ஆதிவானவர் என்றார். இவ்வுலகத்தார்க்கு உரிய வேதங்கள் நான்கும் ஆதி தேவர்கள் அறியாராதலின் 'ஆதிவானவர் பயிலரிய நான்மறை,

எனச் சிறப்பித்தார். நான்கு வேதங்களும் நான்கு உருவங்களோடு இங்கு இருந்தவை, இப்போது ஓர் அந்தணர் வடிவு கொண்டு இராமன் பின் சென்றது என்றவாறு. (145)

## வானரர் வானவராதல்

1489 தழுவிய செழுமணிச் சரயுப் பூந்துறை
முழுமெயும் பனிவர மூழ்கி மொய்த்தபின்
விழுமிய வானர வீரர் யாவரும்
பழையதங் கடவுளர் படிவ மெய்தினர்.

தழுவிய செழுமணிச் சரயுப் பூந்துறை
முழுமெயும் பனிவர மூழ்கி மொய்த்தபின்,
விழுமிய வானர வீரர் யாவரும்
பழையதம் கடவுளர் படிவம் எய்தினர்.

பொ: செழுமையான மணிகளைக் கொண்டுள்ள சரயுநதியின் பொலிவு மிக்க துறையில் சிறந்த, வானர வீரர்கள் யாவரும் தம் முழுவுடம்பும் குளிர்ச்சி பெற மூழ்கி மொய்த்துக் கொண்டபிறகு, பழைய தம் தேவர் வடிவம் அடைந்தார்கள்.

கு: 'செழுமணி தழுவிய சரயு' என மாறுக. பூந்துறை- பொலிவுமிக்க துறை. மலர்கள் மலிந்த துறையெனலும் ஆம். சரயும் பூந்துறையில் வானரவீரர் மூழ்கி மொய்த்தபின், கடவுளர் படிவம் எய்தினர் என இயையும். வானவர்கள் முன்பு 'இராமன் அவதரித்தபோது வானரங்களாய் வந்து தோன்றினவர்கள் ஆதலின், இராமன் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளியபோது அவ்வானரர்கள் வானவராய்ப் பழைய படிவத்தில் சென்றார்கள் என்க. (146)

## வணங்கிய பிரமனிடம் அயோத்தி நகர் மக்களுக்கு விண்ணில் புதிய நகரம் அமைத்துத் தருக எனல்

1480 வணங்கிய மலரயன் றன்னை நோக்கிமால்
அணங்கிய கொடிமதி லயோத்தி மாநகர்
கணங்கொடு வருபவ ரியார்க்குங் காதலால்
இணங்கிய பதியமைத் திடுதி யென்றனன்.

வணங்கிய மலர்அயன் தன்னை நோக்கி மால்
அணங்கிய கொடிமதில் அயோத்தி மாநகர்
கணங்கொடு வருபவர் யார்க்கும் காதலால்
இணங்கிய பதிஅமைத்திடுதி என்றனன்.

பொ: முன்பு கூறியபடி, தன்னை வணங்கிநின்ற தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனைப் பார்த்து திருமால், 'பகைவர்களை வருத்திய கொடிகள் கட்டியுள்ள மதில் சூழ்ந்த அயோத்தி மாநகரிலிருந்து கூட்டம் கொணடுவருகின்றவர் எல்லோர்க்கும், அன்பால் பொருத்தமான நகர் ஒன்றை விண்ணில் அமைத்துத் தருவாயாக' என்றுகூறினான்.

கு: 142 ஆம் செய்யுளில் 'இறைஞ்சி ஏத்தினான்' என்று கூறியுள்ளது நோக்கி 'வணங்கிய மலரயன்' என இங்குக் குறிப்பிட்டவாறு. பிரமன் கூறிய வண்ணம் இராமனும் தம்பியரும் வானரரும் தெய்வ வடிவம் கொண்டமை கூறி அயோத்தி நகர் மக்கள் பிரியா அன்பினராய் உடன் வருதலின் 'அவர்க்கும் புதியதோர் தெய்வநகர் அமைத்துத்தருக' எனப் பிரமனை நோக்கித் திருமால் கூறியவாறு. திருமால் இராமனாக நின்ற மானுடயாக்கை நீத்தலின், இங்கு இராமன் என்னாது மால் என்ற பெயரால் கூறினார். பகைவரால் வென்று கைப்பற்ற இயலாதபடி திண்மையும், அகலமும், உயரமும் மதிற் பொறிகளும் உடைமையால் 'அணங்கியமதில்' என்றார். அணங்குதல்-வருத்துதல் யுத்தமில்லாதது என்று பொருள்படும் அயோத்தி என்ற பெயரே இம்மதிலால் உண்டாயதே என்னலாம். (147)

## பிரமன் அயோத்திநகரவர்க்குச் சந்தானம் என்னும் நகரை அமைத்துக் கொடுத்தல்

### வேறு

1491 நிறங்கிளர் கரிய மேனி நேமியா னருளக் கேட்டுக்
கறங்கரி முரலுஞ் செய்ய கமலமா மலரின் மேலான்
அறங்கிளர் கருணை யுள்ளத் தயோத்திவாழ் பவர்க்கு எல்லாம்
பிறங்கு சந்தான மென்னும் பெரும்பதி யமைவித்தானால்.

நிறம்கிளர் கரிய மேனி நேமியான் அருளக் கேட்டுக்
கறங்கு அரி முரலும் செய்ய கமலமா மலரின் மேலான்
அறம்கிளர் கருணை உள்ளத்து அயோத்திவாழ்பவர்க்கு எல்லாம்
பிறங்கு சந்தானம் என்னும் பெரும்பதி அமைவித்தானால்.

பொ: கரிய நிறம் விளங்கும் மேனியையுடையவனும், சக்கரப் படையுடையவனும் ஆகிய திருமால் சொல்லியருளக் கேட்டுச், சுழலுகின்ற வண்டுகள் ஒலிக்கின்ற சிவந்த தாமரை மலரின்மேல் வீற்றிருப்பவனாகிய பிரமன், அறமே விஞ்சித் தோன்றுகின்ற அருள் உள்ளத்தையுடைய அயோத்தி நகரில் வாழ்ந்தோரான வர்க்கு எல்லாம் விளக்கமுடைய சந்தானம் என்கின்ற பெயரையுடைய பெரிய நகரை விண்ணில் அமைத்தான்.

கு: 'கரிய நிறங்கிளர் மேனி' என இயையும். ஒளிமிக்க கரிய நிறம் ஆதலில், 'நிறங்கிளர் மேனி' என்றார். நேமியான் சக்கரப்படையையுடைய திருமால். அரி வண்டு. கறங்குதல்-சுழலுதல். முரலுதல்-ஒலித்தல். அயோத்தி வாழ்பவர்கள் எல்லாம் அறமே விஞ்சிய அருள் உள்ளம் உடையவர்கள் ஆதலின், அவர்கள் தங்கியிருக்கத் தனியே ஓர் நகரம் அமைத்தல் பொருத்தமே என்பது புலப்படுத்த, 'அறங்கிளர் கருணையுள்ளத்தயோத்தி வாழ்பவர்' என்றார். பிறங்குதல்-ஒளிமிக்கு விளங்குதல்.

## அயோத்திநகர மக்கள் அமரராய்ச் சந்தான நகர் சேர்தல்

1402 அமலனுங் கமைத்த பின்ன ரயோத்திமா நகரத்
துள்ளார்
திமிலநீர்ச் சரயு வென்னுந் திருநதி யதனின்
மூழ்கி
இமையவர் வடிவ மெய்தி யெண்ணிலா
தியங்குஞ் செய்ய
தமனிய விமான மேறித் தடங்கொள்
சந்தானஞ் சார்ந்தார்.

அமலன் ஆங்கு அமைத்த பின்னர் அயோத்திமா நகரத்து
உள்ளார்
திமல நீர்ச் சரயு என்னும் திருநதி அதனில் மூழ்கி
இமையவர் வடிவம் எய்தி எண்ணிலாது இயங்கும் செய்ய
தமனிய விமானம் ஏறித் தடங்கொள் சந்தானம் சார்ந்தார்.

பொ: அமலனாகிய திருமால் ஆங்குச் சந்தானம் என்னும் நகரைப் பிரமனால் செய்தமைத்த பிறகு, அயோத்திமா நகரத்தில் உள்ளவர்கள். பேரொலியையுடைய நீர் நிறைந்த சரயு என்னும் திருநதியில் மூழ்கித் தேவர்களின் வடிவு பெற்று எண்ணிக்கையற்று விண்ணில் இயங்கிக் கொண்டிருக்கின்ற சிவந்த பொன் விமானத்தில் ஏறி இடம் மிகக் கொண்ட சந்தானம் என்னும் நகரை அடைந்தார்கள்.

கு: சந்தான நகர்க்கு ஏவுதல் கருத்தா திருமால் ஆதலின், 'அமலன் ஆங்கு அமைத்த பின்னர்' என்றார். அமலன் என்றது திருமாலையே. இயற்றுதல் கருத்தா பிரமன். திமிலம்- பேரொலி சரயுவில் மூழ்கின உடனே பழைய மானுட உடம்பு நீங்கித் தேவவடிவம் எய்தினர் அயோத்திநகர மக்கள் என்க. மேலும் பிரமனோடு வந்த பொன்விமானங்களில் ஏறிச் சந்தான நகர் எய்தினர் என்க "நான்முகன் இடன்மிகு கணக்கிலாவிம்ப ஊர்திகள் உடன் அணி வானகத்துச்சி தோன்றினன்" (142) என மேற்கூறியுள்ளது காண்க. (14)

## இராமன் வைகுந்தம் சேர்தல்

1493 ஆழியான் கருடன் றோண்மே
லயன்மறை கொண்டு வாழ்த்த
சூழியா னையின்மீ தேறி
யிந்திரன் றுதிசெய் தேத்தப்
பூழிவாழ் மேனி யானும்
புகழ்ந்திடக் கணங்கள் போற்ற
வாழிவா னவர்கள் கூற
மருவிவை குந்துஞ் சேர்ந்தான்.

ஆழியான் கருடன் தோள்மேல் அயன் மறைகொண்டு வாழ்த்த
சூழி யானையின் மீது ஏறி இந்திரன் துதிசெய்து ஏத்த
பூழிவாழ் மேனியானும் புகழ்ந்திடக் கணங்கள் போற்ற
வாழி வானவர்கள் கூற மருவி வைகுந்தம் சேர்ந்தான்.

பொ: சக்கரப்படையுடைய திருமால் கருடனுடைய தோள் மேல், பிரமன் வேதமந்தரங் கொண்டு வாழ்த்தவும், முகபடாம் அணிந்த யானையின்மேல் ஏறி, இந்திரன் துதிசெய்து வணங்கவும், திருநீறு வாழ்கின்ற மேனியினையுடைய உருத்திரனும் புகழவும், பதினொரு தேவ கணங்கள் போற்றவும், 'வாழி வாழி' எனத் தேவர்கள் சொல்லவும் ஏறி அமர்ந்து வைகுந்தத்தை அடைந்தான்.

கு: வாழ்த்த, ஏத்த, புகழ்ந்திட, போற்ற, கூற ஆழியான் கருடன் தோள் மேல் மருவி வைகுந்தம் சேர்ந்தான் என இயையும். 'பூழி' என்றது, திருநீற்றினை. திருநீறு பூசிய மேனியை

---

149 - அ. மிகைப்பாடல்

சஞ்சல மிலாத நெஞ்சன் தசரத ராம னென்னும்
அஞ்சன மேனி யான்றன் அருங்கதை அன்பிற் கேட்டேன்
பஞ்சமா பாதகற்கும் பற்றறும் பாவமெல்லாம்
விஞ்சிய கதையை நல்கும் விதிப்பது விதியு மன்றே.

யுடைய உருத்திரனைப் 'பூழிவாழ் மேனியான்' என்றார். கணங்கள் என்றது, பதினெட்டு வகையான தேவ கணங்களை. வானவர்கள் கூறி வாழ்த்த என்பார், 'வாழி கூற' என்றார் (150)

## வாழ்த்துச் செய்யுள்

1464 கலைமறை முனிவர் வாழ்த்தக்
காரிகை யார்தங் கற்பு
நிலைபெற மன்னர் செங்கோ
னீணிலந் தன்னில வாழ்க
அலைகட லிலங்கை மூதூ
ரரக்கர்வே ரறுத்தவைவேற்
சிலைதொடு வில்லி காதைச்
செந்தமிழ் வாழ்க வன்றே

கலைமறை முனிவர் வாழ்த்தக் காரிகையார்தம் கற்பு
நிலைபெற மன்னர் செங்கோல் நீள்நிலம் தன்னில் வாழ்க
அலைகடல் இலங்கை மூதூர் அரக்கர்வேர் அறுத்தவைவேல்
சிலைதொடு வில்லி காதைச் செந்தமிழ் வாழ்க அன்றே.

பொ: கலைகளிலும், வேதங்களிலும் வல்லவராகிய முனிவர் வாழ்த்தா நிற்கப், பெண்டிர் தம் கற்பு நிலைபெறுமாறு மன்னர் தம் செங்கோல் நீள்நிலத்து வாழ்வதாக! அலைவீசுகின்ற கடல் நடுவேயுள்ள இலங்கையென்னும் பழைய ஊரில் உள்ள அரக்கர்களை, வேரோடு அழித்த கூரிய வேலினையும், வில்லினையும் கையில் கொண்டுள்ள இராமனுடைய கதையாகிய இராமாயணம் கூறும் செந்தமிழ் வாழ்க.

கு: ஆறுகலைகளிலும், நான்கு வேதங்களிலும் வல்ல முனிவர் என்பார் 'கலைமறை முனிவர்' என்றார். மன்னர் செங்கோல், முனிவர் வாழ்த்தவும், காரிகையார் கற்பு நிலை பெறவும் நீணிலத்து வாழ்க, என்றவாறு. மாதவர் நோன்பும் மடவார் கற்பும், காவலன் காவல் இன்று எனின் இன்றும் ஆதலின் அரசன் காவலால் முனிவர்கள் அமைதியுற்று வாழ்த்தவும், பெண்டிர் கற்பு இடையூறின்றி நிலைபெறவும்

அரசன் செங்கோல் துணையாய் நிவ்று வாழ்க, என்றவாறு. வீடணனும் அரக்கனே ஆயினும் இராமனுக்குத் துணையாய் நின்று அரக்கர் பிறப்பு அறுத்தானுகலின் அவனும் அவன் ஆட்சிக்கு உட்பட்ட அரக்கர்களும் இரக்கமுள்ளவர்களாய் மாறினர். எனவே 'அரக்கர் வேரறுத்தான் இராமன்' என்பதில் குறையில்லை. வில்லி என்றது இராமனை. அவன் காதை யென்றது, உத்தரகாண்டத்தோடு முடியும் இராமாயணத்தை. (151)

## நூற்பயன்

1495 இனையநற் காதை முற்று
மெழுதினோர் வியந்தோர் கற்றோர்
அனையது தன்னைச் சொல்வோர்க்
கரும்பொருள் கொடுத்துக்கேட்போர்
கனைகடற் புடவி மீதே
காவலர்க் கரசாய் வாழ்ந்து
வினையமதறுத்து மேலாம் விண்ணவன்
பதத்தைச் சேர்வார்.

இனைய நல் காதை முற்றும் எழுதினோர் வியந்தோர் கற்றோர்
அனையது தன்னைச் சொல்வோர்க்கு அரும்பொருள் கொடுத்துக் கேட்போர்
கனைகடல் புடவி மீதேகாவலர்க்கு அரசு ஆய் வாழ்ந்து
வினையமது அறுத்து மேலாம் விண்ணவன் பதத்தைச் சார்வார்.

பொ: இத்தன்மையான நல்ல கதை முழுவதையும் எழுதினோரும், எழுதியதைக்கண்டு வியந்து பாராட்டினவர்களும், அந்தக் கதையைக் கற்றவர்களும், அந்தக் கதையைச் சொல்பவர்கட்கு அரிபொருளைக் கொடுத்துக் கேட்பவர்களும், ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த பூமிமேல் அரசர்கட்கு அரசாக-சக்கரவர்த்தியாக வாழ்ந்து இருவினைகளையும் அறுத்து எல்லார்க்கும் மேலாய் விளங்கும் திருமாலின் வைகுந்தத்தைச் சேர்வார்கள்.

கு: இராம காதையின் சிறப்பு என்னவெனில் அதை எழுதினவர், வியந்தவர், கற்றவர், அக்கதையைச் சொல்வோர்க்குப் பொருள் கொடுத்துக் கேட்போர் ஆகிய நால்வகையோரும் இவ்வுலகத்துச் சக்கரவர்த்தியாய் வாழ்ந்து, இறுதியில் வைகுந்தம் பெறுவர். அத்தகைய சிறப்பு இக்காதைக்கு உண்டு என்றவாறு. விண்ணவன் என்றது, திருமாலை. அவன் பதம் வைகுந்தம். (152)

சந்திரகேது நகர்ப்படலம் முற்றிற்று.

உத்தர காண்டம் முற்றிற்று.

## மிகைப்பாடல்கள்

150 - அ. மறையவர் வாழிவேத மனுநெறி வாழி நன்னூல்
முறைசெயு மரசர் தங்கள் மும்மழை வாழியெம்மை
இறையவனி ராமன் வாழி யிக்கதை கேட்போர் வாழி
அறைகழ லனுமன் வாழி யரும்புகழ்ச் சடையன் வாழி.

150 - ஆ. எறிகடல் ஞாலந்தன்னி லின்றமிழ்ப் புலவோர்க் கெல்லாம்
முறுவலுக் குரியவாக முயன்றனன் முயன்ற வென்சொல்
சிறுமையை நோக்கார் தங்கள்பெருமையே சிந்தை செய்யும்
அறிவுடை யவர்கட் கெல்லாம் அடைக்கல மாகவாழி.

150 - இ. இப்பெரு நன்னூல் தன்னை யியல்புடன் விரித்து ரைத்தோர்க்
கெப்பொருள் தனையுமீந்தவ் இனிய ராயவரைப் போற்றித்
தப்புத லின்றிக் கேட்போர் தனியரச செய்திப் பின்னை
ஒப்பிலா மாயன் வாழு முயர்முத்தி யாள்வார் தாமே.

150 - ஈ. ஆதிமால் வரத்தினு லயோத்தி வந்து
தீதுசேர் இராவணன் சிரங்கள் சிந்திப்பின்
நீதியால் நிலமுழு தாண்ட நீள்பரஞ்
சோதிபான் கதைசொல்வார் சுரர்களாவரே.

150 - உ. இத்தல மெண்ணி ராமவ தாரமே
பத்தி செய்து பரிவுடன் கேட்பரேல்
புத்திரர்த் தரும் புண்ணிய முந்தரும்
எத்தலத்து மவன்பத மெய்துமே.

66ல் 141, 145க்குப் பதிலாகக் கீழ்வரும் பாடல்கள் உள்ளன.

1. சேர்ந்தபின் விரசை யென்றும் திருந்திய நதியில் மூழ்கிச்
சார்ந்தவர்க் கெல்லாம் மாயோன் றன்னுரு வகைத்து நிற்ப
மாந்தளிர் மேனியங்கை மடந்தையர் தீபதூபம்
பூந்துணர் மாலை யாடை புனையிழை கொண்டு மொய்த்தார்.

2. முத்தர்க ளெதிரே வந்து மொய்மலர் மாரி தூவ
சித்தர்கள் நெருங்கி யெங்கும் நிரைவிளக் கேந்தி நிற்ப
அத்தனுண் டிருந்த தெய்வ வணிமணி மண்டபத்தே
இத்தனை பேருஞ்சென் றங் கிணையடி தொழுது வீழ்ந்தார்.

3. வீழ்ந்தவர் தம்மைப்பார்த்து விமலனும் விரைவிற் பற்றிப்
போழ்ந்தளிர் என்ற னெஞ்சிற் பொம்மனீரென்று போற்றி
வாழ்ந்தனன் யானே யென்ன மலர்க்கணீருடுத்துப் பின்னும்
தாழ்ந்தனன் தடக்கையாரத் தழுவினன் திருவாழ் மார்பன்.

4. விட்டுவிட் டணைத்து மோந்து மேவித்தன் னடியில் வைக்க
மட்டவிழ் கமல மாது மண்மக ளாய மாது
மிட்டிடை நீளமாது மாருகணீர் ததும்ப நோக்கி
எட்டணைப் பொழுதும் நீங்கா திருந்தனர் இன்பத் துள்ளே.

5. ஆழியா னடிய ரோடு மளவிலானந்த மெய்திப்
பாழிமா மணியாற் செய்த பைம்பொன்மண் டபத்தை நீங்கி

வாழிமா சாமகீதம் மறைகளா யிரங்கள் பாடி
ஊழியா யிரங்கள்கோடி யொருகண மென்று
வாழ்ந்தார்.

6. இப்பெருங் கதையை நாளும் இயல்புடன் உரைத்தார்க்
கன்பாய்
எப்பெரும் பொருளு மீந்தங் கிமையவர் அவரைப்
போற்றித்
தப்புத லின்றி கேட்போர் தாமர சாண்டு பின்னும்
ஒப்பிலா மாயன் வாழும் உயர்பதம் அடைப ரன்றே.

7. வாழிமா வேத நன்னூல் மழைவளம் மன்னர் செங்கோல்
வாழிவாழ் சடையோன் வெண்ணெய் மரபுளோர்
தாங்கள் வாழி
வாழிமா னிராம காதை கேட்பவர் மைந்தர் வாழி
வாழிமா வாழ மைந்தன் மகிதல முழுதும் வாழி.

---

# ஒப்பு நோக்கப்பெற்ற சுவடிகளும், அச்சுப் பிரதிகளும் அவற்றின் குறியீடுகளும்

| குறியீடு | சுவடி பெற்ற இடம் | சுவடி எண் | குறிப்பு |
|---|---|---|---|
| 23 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | T.R.D L. 1050 | |
| 25 | தெய்வசிகாமணி கவுண்டர் ஈரோடு | | |
| 26 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 27 | |
| 29 | ” | 41 | |
| 43 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | T.R.D.L. 1147 | |
| 44 | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் | 1148 | |
| 46 | பூமகள் விலாசப் பதிப்பு 1928 | | |
| 54 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 37 | |
| 60 | ” | 673 | |
| 63 | ” | 32 | |
| 65 | தெய்வசிகாமணி கவுண்டர் ஈரோடு | | |
| 66 | ஸ்ரீ வேங்கடேசுவரர் கீழ்த் திசைக் கல்லூரி, திருப்பதி | 6583 | |
| 71 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 31 | |
| 75 | அச்சுப்புத்தகம் மூலம் | | |
| 76 | ஆழ்வார் திருநகரி பெரியன் பதிப்பு மூலம் | | |

குறிப்பு: இப்பதிப்பில் மூலத்தில் எடுத்துக்கொண்ட பாடங்கள், செய்யுட்களின் தொடரெண் முறைப்படி அடிமுறையாகவும் சீர் முறையாகவும் தடித்த முதலெழுத்தோடு முன்னே காட்டப் பெற்றுள்ளன. அவற்றோடு வேறுபட்ட பாடங்கள் அவற்றின்பின் முறையே சேர்க்கப்பட்டுள்ளன.

# 7 - ஆவது உத்தரகாண்டம்

## பாட வேறுபாடு

### சீதை வனம்புகு படலம்

1

I திங்கறு; 46
திங்குறு; 44.
சேடனின்; 46—
சேடானன்; 63,76.
சிரத்தின்; 46—
சிரத்துப்; 23
சிரத்திற்; 63,71,74,76.

II எனத்தான் போற்றி; 46—
எனத்தான் போற்ற; 60,71,76.
எனத்தான்பெற்ற; 65
எனத்தாற் போற்ற; 26,43,44,66,74.
எனத்தற் போற்றி; 23.
அவனி; 46—
அவனிப்; 23,43,44,71, 74.

III வீரனுச்சிச்; 46—
சிகரத் தோளான்; 26,29,60,66,76.
சந்தியின்; 46—
சந்திய; 26,66

2

I கனமிடை; 46
கனமுடை; 65
கனகமிடை; 76.
ஓங்கிப்; 46—
ஓக்கிப்; 26.

II பூணினையான்; 46 —
பூணினைய்யான்; 76.

III உரைத்த; 46—
உரைத்தல்; 29,65.
தசரதர்; 46—
தயரதர்; 29,65.

IV படுதல்; 46—
படுகை; 26,29,43,44,60, 63,66,71,76.

3

I ஆயவன் பொன்ற; 46—
ஆயவன் பொன்றும்; 65.
ஆயவன் போல; 26.
ஆயவன்தன்பால்; 60, 66,76.
ஆயவன் தனக்கு; 74.
நின்றுலாவது; 46—
நின்றுலாவன; 23,26, 29,43,60,63,65,66,71, 74,76.
நன்றுலாவது; 44.

II பொன்றவேயென்; 46—
பொன்றவெய்யோன்; 26,66.
பொன்றவேயுன்; 60,74, 76.

திருமென்று; 46—
திருமென்றத்; 23,26,29, 43,60,63,66,74,76·
திருமென்ன; 44.
திருமென்ற; 65.

III எனக்கு; 46—
தனக்கு; 74.
சொன்னதே; 46—
சொன்னது; 26,66

முடிந்ததின்று; 46—
முடிந்ததென்று; 23,43, 63.
முவந்ததின்று; 29.

IV வருகிறேன்; 46—
வருகின்றேன்; 23,26,43, 44,60,63,65,66,71,74,76
புவனநாத; 46—
புவனநாதா; 26,29 60, 63,65,66,71,74,76.

4

I என்றது; 46—
என்றலும்; 71.
என்றிது; 60,76,
வியந்து; 46—
இயைந்து; 74.
உகந்து; 44.

II வியந்துகந்த; 46—
இசைந்துகந்த; 60, 66, 76.
இசைந்துசந்த; 26.
விரைந்துகந்த; 43.

III விடுத்தலோடும்; 46—
விடுதலோடும்; 76.

IV சிந்தையென்ன; 46—
சிந்தைசெல்ல; 60, 76.
செறிந்ததன்றே; 74.

5

I கண்ட; 46—
கேட்ட; 63, 71.
பரதன்; 46—
பாகன்; 26.

II தொழுதிவை; 46—
தொழுவண்; 63
தூயோய்; 46—
தூயோன்; 65.

III காக்கும்; 46—
காக்க; 23, 26, 29, 43, 44, 60, 63, 65, 66, 71, 74, 76,
இறைவனீ; 46—
இறைவநீ; 23, 43, 76.
இசைந்த; 46—
இயைந்த; 60, 74.

IV எண்ணில்; 46—
கூற; 44.
வரம்பிலை; 46—
வரம்பில்லை; 74.
கூறி; 46—
கூறும்; 23, 26, 29, 43, 44, 60, 63, 65. 66, 71, 74, 76.

6

I வாளரியால்யானைச்; 46—
வாளரியால்யானை; 66, 76.

வாளரியாலானைச்; 26.
நாற்காலில்வாழும்; 23.
நாற்காலிலாமை; 29.
நாற்கரியிலாமை; 65.
நாற்குயிரிலாமை; 44
நாற்கிழியூறில்லை; 74
அந்திரங்-களாற்சா
வில்லையார்க்க மரிலாமை
யாலே; 63, 71.

II சத்துருவில்லை; 46—
சத்துருவாய; 29, 43,
44, 63, 65, 71, 74.
வேங்கையாவொடு; 46,
வேங்கையரவொடு; 23,
65.
வேங்கைதயாவொடு;
26, 29, 63, 66, 71, 74.

III மித்திரம்; 46—
பத்திரம்; 29.
வீவோரில்லை; 46—
வீய்வாரில்லை; 23, 43.
வீவாரில்லை; 74, 75.

IV புத்திரர்; 46—
புத்திர; 75.
காண்பார்; 46—
காண்போர்; 23.
புவனத்தெங்கும்; 46—
புவனமெங்கும்; 23.

7

I நோயுறு; 46—
நோயுறுது; 23,26,29,43,
44,60,63,65, 74, 76.

மூத்தோருக்குக்; 46—
மூத்தோருக்கும்; 66.
அறமூத்தோர்க்கும்; 23,
26, 29, 43, 44,
63, 71, 74,
அறமூத்தோர்க்குக்; 60,
65, 76.

II கணவனையிழப்
போரில்லை; 46—
காசினியதனின்மீது;
29

III வாயுவும்; 46—
ஆயுவும்; 23, 43.
இன்பமாகவந்து; 46—
இன்பமாகிவந்து; 63,
71.
அசையாநிற்கும்; 46—
இசையாநிற்கும்; 29.

IV ஆண்மகப்பெறுகின்றார்
கள்; 46—
அவர்கற் பேபெறு
நின்றார்கள்; 71.
ஆண்மகப்பெறுநின்றார்
காண்; 44.
ஆண்மகப்பெறுநின்றார்
கள்; 65.
ஆணையேபெறுகின்றார்
கள்; 26,63,66.
ஆணையேபெறநின்றார்
கள்; 23,43
ஆணையேபெறுநின்றார்
கள்; 60,76.
ஆனையேபெறுகின்றார்
கள்; 74.

7(a)

I வாரிப்; 66—
வாரி; 76.

II பொங்கு; 65—
பொங்கி; 26,60, 76.

IV தங்கியே; 66—
தங்கிய; 60,76.

8

I மங்கை; 46—
மடந்தை; 65.

II எண்ணிடும்; 46—
எண்ணிய; 26,66.
எண்ணம்; 46—
கருமம்; 29.
செய்திக்; 46—
செய்க; 63,71.
செய்து; 65.

III காப்பான்; 46—
காப்பர்; 66.
காக்க; 65.
கட்டுரைப்பர்; 46—
கட்டுரைப்பன்; 65.
கட்டுரைப்பார்; 44.

IV கேட்ட ாங்கு; 46—
கேட்டங்கு; 60,76.
கேட்டு; 65.
இருந்தகாலை; 46—
இருந்தவேலை; 23,26,
29,43,44,60,66,76.

9

I சரிந்த; 46—
சரிந்து; 23,26,29,43,44,
65,66,71,76.

II சிந்தையனுய்ப் போகப்;
46—
சிந்தையனுய்ப் போக;
76.
சிந்தையனுய்ப் பொங்
கப்; 65.
சிந்தையனுயந்தப்;
63, 71.

III காலமாகிப்; 46—
காலமாகி; 66,76.
பிரிவிலோர்க்கு; 46—
பிரிவிலார்க்கு; 66.
அமிழ்தமாகி; 46—
அமுதமாகி; 66,75,76.

IV விரிந்தவெண்ணிலவை;
46—
விரிந்தவெண்கதிரை;
26.
விரிந்ததண்ணிலவை;
29,65.
விரிந்தவெங்கதிரை; 66.

10

I கொல்வான்பேரவோர்;
46—
கொல்வான்போல
வோர்; 23,43,44.
வழியிலா; 46—
வழியில்லா; 66.
பிழையிலா; 23,43.

II வலையினுல்; 46—
வலையினை; 23,26,29,43,
44,60,63,65,66,71,74,76.
வீசி; 46—
வீச; 26,63,71.

வீசும்; 65.
வெண்கதிர்த்திங்களை;
46—
வெங்கதிர்த்திங்களை;
23,26,44,71,74,76.

III புரிந்துவெங்; 46—
புரிந்தவெங்; 26,60,66,
76.
புரிந்துறுங்; 29.
கொலைசெய்தென்ற
ளுய்; 46—
கொலைசெய்தென்றலை;
23,43.
பூங்கணை; 46—
போர்மத; 74.
வேடன்வாயம்பு; 46—
வேடன்னல்லம்பு; 74.

IV தெரிந்தவன்; 46—
தெரிந்தனன்; 23, 26,
29, 43, 60, 63,
66, 71, 74, 76.
அன்றிற்பெடையினை;
46—
அன்றிற்பெடைதனை;
29.
திசையொடும்; 46—
திசைதொறும்; 23, 29,
43, 60, 63, 65,
66, 71, 74, 76.
கூப்பிடச்செய்து; 46—
கூப்பிடச்செய்தான்;
74.

11

I நிகழுங்காலையில்; 46—
நிகழும் வேலையில்; 26,
66

II அழுந்திப்; 46—
அழுந்தி; 76.
அழுந்தப்; 71.

III நுகருநாள்வந்து; 46—
நுகர்ந்தொருநாளாய்ப்;
63.

12

I விலையினவாகிக்; 46—
விலையினதாகிக்; 44.
கவினுறத்; 46—
கவினுகத்; 44.
தழைத்த; 46—
தழைத்துப்; 65.
தழைப்ப; 60, 74.
தழைப்பப்; 76.

II பான்மைபோல்; 46—
பான்மைய; 23, 43, 44,
60, 63, 71, 74, 76.
பான்மையப்; 26, 29,
65 66.
பாதவமெல்லாம்; 46—
ஆதவமெல்லாம்; 44.

III பொழிந்தன; 46—
பொழிந்ததே; 26, 66.
பொழிந்ததேன்; 23, 29,
43, 44, 60, 63
65, 71, 74, 75.
போர்த்தன; 46—
போர்த்தென; 63, 71.
கோங்கும்; 46—
கோங்கு; 63, 71.
கோங்கம்; 23, 26, 29

43, 44, 60. 65, 74, 76

IV செழும்படாம்; 46—
செழும்படம்; 29.
சிவந்தபோர்த்தன;
46—
போர்த்துச்சிவந்தன;
43, 44.

13

I புன்னைகள்; 45—
புன்குகள்; 23, 26, 29,
43, 44, 60, 63, 74, 76.
புனுகுகள்; 66.

பொரிமலர்பூத்த; 46—
பொரிமலர்சொரிந்த;
26, 66.

வெண்பொரிசொரிந்த;
73, 43.
வெண்பொரிபொழிந்த;
44.

II நெடும்பகற்பிரிந்து; 46—
நெடும்பகல்மறைந்து;65
நாடொறுநினைந்து; 44.
நாடொறுநினைந்த; 46—
நாடொறுநினைந்து; 23,
26, 29, 43, 60, 65, 76.
நாடொறும்பிரிந்து; 74.
நாயகர்தாம்வர; 44.
நாயகர்தாம்; 46—
நாயகர்தம்; 65, 66.
மகிழ்ந்து; 44.

III மன்னவரோடுகூடின;
46—
மன்னவரோடுகூடியின்;
65, 76.

அன்னவருடனே
கூடியின்; 44.
அன்னவரோடுகூடியின்;
60, 71, 74.
அன்னவவரோடுகூடின;
26, 43.

அமிழ்தினை; 46—
அமுதினை; 66, 75, 76.

அருந்துமாபோலப்; 46.
அருந்துமாப்போலப்;
29, 44, 74.
அருந்தினர்போலப்;
23, 43.
அருந்துவர்போலப்;
63, 71.
அமுதுண்பாரது போல்;
65.

IV பன்மலர்தொறுமங்
குறைந்து; 46-
பன்மலர்தோறுங்
குடைந்து; 23, 26, 29,
43, 60, 63, 65, 66, 71, 74
76.
பன்மலர்தோறும்
பயின்று; 44.

14

I அமிழ்தில்; 46.
அமுதில்; 66, 75, 76.
பொழிலிடை; 46-
பொழிலினை; 23, 29, 43
44, 65.
அடைந்தார்; 46-
அடைந்து; 54, 74.
[illegible]; 44.

II சாதிபூஞ் சண்பகந் தாழை; 46-
சாதியுமாதவிதாழை; 44.
சண்பகஞ் சாதிபூந் தாழை; 71.
சந்தனஞ்சாதிபூந் தாழை; 23, 24, 43, 60. 65, 66, 74, 76.
சந்தனஞ்சாதிப்பூந் தாழை; 29.

III எண்ணருங்குருந்து;46.
எண்ணருங்குரவம்; 23, 43-
எண்ணருங்குரவு; 29,71.
எண்ணருங்குருகு; 44, 60. 65, 74.
எண்ணலங்குருகு; 26,66
எழின்மரம்; 46-
எழிலிளம்; 74.
இடைநெருங்கியதை; 46-
மாமிடைநெருங்கி; 71.

IV இழிந்ததொத்துளதை; 46-
இழிந்ததொத் துளதே; 29, 71.
இறந்ததொத்துளதே; 65.

15

I தாவுமேழ் புரவி; 46-
தாவுமேழ் புரவித்; 26
தாவுபொற்புரவி; 29.
தாவுவெம்புரவித்; 60, 66, 76.
தாவுவெம்புரவி; 63, 65, 71, 74.

பூணுமோராழித் தேரவன்; 46-
தரணிதன் றுயம் சார் வரும்; 26, 60, 66.
தரணிதன்மேகம் சார் வரும்; 29.
தரணிகள்கருமம்சார் வரும்; 63.
தரணிகள் தருமம் சார் வரும்; 71.
தரணிதன்தாபம் சார் வரும்; 76.
தரணிபன்றனும் சார் வரும்; 65.
சார்வருமதனைக்; 46-
சார்வருமிதனைக்; 43, 44
சத்தசாகரத்தை; 63,71
தண்ணிழலினதைக் 26, 29, 60, 66.
தண்ணிழலினத்தைக்; 76-
தண்ணிழல் வனத்தில் 65.

II கண்களுக்கஞ்சி; 46 —
கண்களுக்கஞ்ச; 65.

III செழுந்துறை; 46—
செந்துறை; 44.
நீராடும்; 46—
நீரோடும்; 29.

IV விளங்குமணியுறை: 4.

விளங்குமணியுறு; 65.
விளங்குமணியறை;
23, 24, 29, 43, 44, 60,
66, 71 76.

மண்டபத்தினதை; 46
மண்டபமதனை; 23,
43, 74.

16

I இளமரக்காவின்; 46-
எழில் மரக்காவின்; 54
வியன்மலர்க்காவின்; 65

II மலர்க்கணுேக்கி; 46
மலர்க்கணிநோக்கி; 63,
71.

வனப்பெலாமனமுறக்
கண்டு; 46-
மனமகிழ்ந்ததன்வனப்
பெல்லாம்; 23, 29, 43
60.

மகிழ்ந்தனன்வனப்
பெலாமன்ன; 63, 71.
மகிழ்ந்தவ்வனப்
பெலாம்; 66.
மகிழ்ந்தவ்வனப்
பெல்லாம்; 26, 65.
மகிழ்ந்தனவனப்
பெல்லாம்; 44, 76.

III அன்னமென்னடை
நான்; 46-
அன்னமென்னடை
யாய்; 26.
அன்னமென்னடை
யாம்; 66.
மெல்னடைநூலால்;
63.
மென்னடைநூல்
போல்; 71.

IV கலந்தநன்மொழியாய்;
46-
கலந்தனமொழியாய்;
44.
கலந்ததூய்மொழி
யாய்; 23, 26, 29, 43,
60, 65, 66, 71, 76.
காட்டினனெல்லாம்;
46-
காட்டினனன்றே; 60,
63, 71, 76.

17

I நின்னடைக்கஞ்சி; 46—
நின்னிடைக்கஞ்சி; 43
வெள்கித்; 46-
வெட்கித்; 26, 63, 66
71.

II துன்னிடைமலர்பூஞ்
சோலையின்; 46-
துன்னிடைமலர்பூஞ்
சூழலின்; 44.
துன்னிடைமலர்ப்பைஞ்
சூழலின்; 26, 29.
துன்னுடைமலர்ப்பூஞ்
சூழலின்; 43.

துன்னடைமலர்ப்பூஞ்
சூழலின்; 60, 76
துன்னடை மலர்பஞ்
சூழலின்; 71.
துன்னிழல் மலர்ப்பைஞ்
சூழலின்; 66.

III தன்னடைகெட்டேம்;
46—
தன்னடைகெட்டே; 54,
75.
தன்னடையேகெட்டு;
76
தன்னடையேகொண்டு:
26, 66.
தன்னிடையேகெட்டு;
23, 43, 44, 63, 71.
மின்னிடையே கேட்டு;
29.
இனியுயிர் தாங்கோம்;
46—
இனியுயிர் தாங்கேம்; 29,
63, 71.
முழுகுவபோல; 46—
மூழ்குவபோல; 26, 29
60, 65, 71.
மூழ்குவர்போல; 23, 43.

IV விரிமலரசோகின்; 46—
விரிமலர்சேக்கை; 65.
விரியலரசோகின்; 44.

18

I இனிதுண்டிலாத
போதவரோடு; 46—
இனிதுண்டிலாதவ
ரோடும்; 66.
இனிதுண்டுறுதபோதவ
ரோடு; 5.
உண்டில்லாதபோதவ
ரோடு; 74, 76.
உருமிடந்தேடும்; 46—
அவரிடந்தேடும்; 65.

II உயர்தருமலர்மது; 46—
உயர்தருமதுமலர்: 44,
65.
உயர்மரமலர்மது; 63.

III மெள்ளவம்மரம்பூ; 46—
வெள்ளையம்மரம்பூ; 23,
43.
பூமரந்தேடிக்; 46—
பூமரந்தேடும; 44, 54.

IV கமழ்குழலணங்கே; 46—
கமழ்குழலாளே; 26, 29,
63, 66, 71, 74, 75.
போவன; 46—
பேர்வன; 26, 65.

19

I விட்டதிவிருபன்; 46—
விட்டதிலிருப்பான்; 23.
விட்டதிலிருப்பாள்; 43.
விட்டதிருபன்; 44, 54.
விட்டதிருபத்தன்; 65.
விட்டதிவிருந்தன்; 66.

அருநிதியுடையனே
வலுக்கும; 46—
அருநிதியுடையனே
லுவக்கும்; 23, 26, 29,
43, 60, 63, 71, 75, 76.
அருநிதியுடைய
னென்றுவக்கும்; 44.

II மங்கைமார்; 46—
மங்கையர்; 26, 29, 44,
63, 65, 71, 76.
வாழை; 46—
வளைதன; 71.
தன் மருங்குவந்துற;
46—
தன்மருங்குல்வந்திட;
63.
இலையில்மறுங்குற; 65
இல் னிழல்வந்துற; 44
மருங்குவட்டிட; 71
மரகதமாகிப்; 46—
மரதகமாகிப்; 17.

III பூவைவீ பொருந்தப்;
46—
பூவைமீப்பொருந்தப்;
44.
பூவையைப்பொருந்தப்;
65.

IV பங்கயமடுப்பச்; 46—
பங்கயமெடுப்பச்; 65.
செம்மணி; 46—
செழுமணி; 44.

20

I பொகுகயல்; 46—
போருகயல்; 54, 63,66.
பொய்த்தவவேடத்தில்;
46—
டொய்த்தவ
வேடத்தைப்; 74.
பொய்த்தவவேடத்து;
60, 74.
பொய்த்தவன்வேடத்
தில்; 71.
மறைந்து; 46—
மறந்து; 44.
பூண்டு; 74.

II செய்பவரென்னத்; 46—
செய்பவர்போல; 74.
முடிப்பவரென்னத்; 63,
71

III கோத்தித்; 46—
குத்தித்; 43,44,76.
உபாயமீதெண்ணிக்;
46—
உபாய மீதென்று; 26
43,44,60,65,66,71,76
உபாய மீதென்னக்; 74
உபாயமேதென்று; 63.

IV மெய்சலியாது; 46—
மெய்சலியாமல்; 74.
உடலசையாமல்; 44.

21

I அடிமலரரம்பை; 46—
அடிமலர்க்கதலி; 29,43,
60,63,74.76.
அடிமலர்கதலி; 23,26,
66,71.

அடிமலர்வாழை; 75
அரவுமின்னிடையணிய
மைத்தோள்; 46—
அரவுமின்னேரிடையமை
தோள்; 60,76.
அரவுமின்னேரிடைய
மைத்தோள்; 74
அரவுமின்னிடையணிக்
கழைத்தோள்; 75.
அரவிடையணிமுலை
யமைதோள்; 26,29,65,
71.
அரவிடையணிமுலைய
மைத்தோள்; 63.
அரவிடையிளமுலை
வரைதோள்; 23.
அரவிடைமின்முலை
வரைதோள்; 43.
ஆயிடையணிமுலை
யமைத்தோள்; 66.

II இடைநிரைதரளப்; 46-
இடைகழைதரளப்; 23,
43.
இடைநகைதரளப்; 74,
76.
இடைநிரைத்தரளப்;
26.

III செய்ய; 46—
செய்த; 65.
சிறந்த; 29.
மங்கையன்னளே; 46—
மங்கையாமாதே; 23,43
மங்கையரன்ன; 75.
செங்கமலம்; 46—
தேங்கமலம்; 26,65.

IV உலைக்கரி; 46—
உலைக்கனல்; 23,43.
மூடுங்கனலினை; 46—
மூடுங்கரிகளை; 23,43.
மூடுகனலிடை; 26.
மூடுகனலினை; 66.
மூட்டுகனலினை; 75.
நிகர்ப்பன; 46—
நிகர்ப்பது; 26,29,75.

22

I வேறுவேருகிய; 46—
வேறுவேருக்கிய; 65.

II காட்டச்; 46—
காட்டிச்; 23,26,43,44,
60,63,65,66,71,74,76.

III மண்டபத்துப்; 46—
மண்டபத்தில்; 74,75.

23

I பூமகளோடும்; 46—
பூமகளோடு; 76
நடுவண்; 46—
நடுவுள்; 26,44,60,66,76

II பன்னக; 46—
துன்னற; 44.
இருந்த; 46—
இருக்கும்; 26,29,43,44,
60,63,65,66,71,74,76.

III மின்னெடும்; 46—
மின்னெடு; 23,65,76.

IV சென்னிற; 46—
செந்நிற; 75.

24

I கண்டனர்; 46—

கண்டவர்; 63,65,71.

தாளவாத்தியங்கள்;
46—

தாளவாச்சியங்கள்; 23,
43,44,66,71.

II தய்வரும்வண்ண; 46—

தைவரும்வண்ண; 75,
76.

தைவருவண்ண; 65,66

தைவருவிதமும்; 63,71.

மூவகைச்சதியும்; 46—

மூவகைக்கதியும்; 23,43
44,60,65,66,76.

முளகத்தகால்கதியும்;
63,71.

தப்பறத்; 46—

கவின்பெறத்; 63,71.

III கய்வழி; 46—

கைவழி; 75,76.

கலந்திடக்; 46—

கலந்திடை; 54.

IV சேயிழையார்; 46—

சேயிழைமார்; 26.

25

I இசைக்காரணமுடைப்;
46—

இசைத்தாரண
முடைப்; 26,66.

இசைக்காரணமுறைப்;
65.

பண்ணுக்கிசைந்தன
தாளவாத்தியங்கள்.

பண்ணுக்கிசைந்த
கானத்திரள்
கொள்ள; 60.

பண்ணுக்கிசைந்த
கானத்திரள்
கொள்ளத்; 76

பண்ணுக்கிசைந்தவர்
வாழ்த்தியே }தாளம்;
65.

பண்ணுக்கிசைந்த
வாளத்திகொடாளம்;
23,29,43,44,66,71.

II தழுவிட; 46—

தழுவிடை; 29,66,71,
76.

தழுவிய; 23,43.

உருகத்; 46—

உருக்கித்; 44.

தாளத்தின்; 46—

தகத்தக; 26.

வழியுருவெடுத்து; 46—

விளைசந்ததாளத்தின்;
26.

III விழிபுருவந்தோள்; 46—

விழியுருவெடுத்தோர்;
26.

சலித்து; 46—

கலித்து; 76.

IV வயங்கியம்; 46

வயங்கிய; 23,26,43,60
63,66,71,76.

வங்கியம்; 44.

வாங்கிய; 65.
மயங்கிட; 46—
மழுங்கிட; 26, 65, 66,,
71.
வழங்கிட; 23, 29. 43.
மாதவர்பாட; 46.
மாகதரேத்த; 23, 26
43, 66.
மாதகர்பாட; 44,60,63
65,71,76.

26

II மாதொடும்; 46—
மாநெடும்; 44.
வானெடும்; 71.

III நீர்விளையாட்டில்: 46—
நீர்விளையாடி; 66.
பரிந்துபின்; 46—
பரிந்துமின்; 44,60.
படிந்துபின்; 23,26,29
43, 60, 63, 65, 71, 74
படிந்துமின்; 66.
அமுதினிதுண்டு; 46—
அமுதமுமுண்டு; 44.

IV நன்னுதலாரும்; 46—
நன்னுதலாளும்; 23,
60,66,74,76.
நாடொறுமாடுறு
நாளில்; 46—
நாடொறுமினிதுறு
நாளில்; 29.
நாடொறுமறுவிடும்
நாளில்; 74.
நாடொறும்களித்
திருந்தனனே; 63, 71.
நாடொறும்விளையாடு
நாளில்; 26, 60, 66, 76.

27

I பசலைபூத்தன; 46—
பசலைபூத்தது; 60,74,
75.
வெளுத்தனமெல்லியல்
46—
வெளுத்தது மெல்லியல
வள்; 60.
வெளுத்ததுமெல்லியல்;
23, 44,54,60,65,71,74,
75,76.
வெளுத்துமெல்லியாள்;
29,63,71.
வெளுத்துமெல்லியல
வள்; 26.

I சரிந்தன; 46—
சரிந்தது; 60
கர்ப்பந்தரித்தது; 46—
கர்ப்பந்தரித்தன; 44,
65, 71.
கெர்ப்பந்தரித்தது; 66,
65.
கெர்ப்பந்தரித்தன; 63,
கெற்பம்தரித்தது; 75,
76,

III மொழிவனபோல; 46—
மொழிவனகபோலம்;
75.
மொழிவதுபோல; 60,
74,76.

முலைகள்பால்பாய; 46—
இடைதடித்திட்டு; 74
அவைமுகங்கறுத்தன
வாக; 46—
அம்முகங்கறுத்தன
போத; 44.
அவைமுசங்கறுத்தன
போல; 23, 26, 29, 43,
63, 65, 66, 71.
அவைமுகங்கறுத்தது
போல; 60, 76.

IV எழுதருஞ்சிதைக்கு;
46—
எழுதருசிதைக்கு; 60,
74, 76.
ஒளிதருசிதைக்கு; 65.
இவ்வகையாய; 46—
இவையிவைவகையா;
29.
இவையிவையாய; 44
65.
பலவுமுண்டாக; 46—
பலவுமுண்டாய; 44, 63,
71, 74.
பலவுமுண்டான; 23,
26, 29, 43, 60, 65, 66,
76.

28

அன்னவள்கர்ப்ப; 46—
அன்னவள்கெர்ப்ப; 56,
அன்னவள்கெர்ப்ப; 79
76.

நோக்கியவ்வழியே;
46—
நோக்கியவ்விராமன்;
63, 71.
நோக்கியவ்வழி; 66.
நோக்கியவவனி; 23,
26, 29, 43, 54, 60, 65,
74, 76.
நோக்கியேயவனி; 44.

II மன்னவனிராமன்; 46—
பின்னையுமவ்வகைச்; 63.
பின்னையுமறையும்; 71.
மங்கையைநோக்கி;
46—
சுவையிற்பெருசுவை;
63.
அறுவகைச் சுவையில்;
71.
மனத்திடைவேண்டிநீ;
46—
மனத்திடைவேண்டி
யே; 63.
பெருசுவைவேண்டிநீ;
71.

III இயம்பநாணினள்; 46—
இயம்பினனவள்; 44.
சிரிப்ப; 46—
இருப்ப; 23, 43.
நகைப்ப; 26, 29, 44, 65
இராகவன்; 46—
ராகவன்; 44, 63, 71.

IV இருப்பதிகென்று; 46—

இருப்பனுனென்று; 44.
தூய்மொழி; 46—
தூமொழி; 76.

29

I தவத்தோர்; 46—
தவத்தோய்; 60, 74, 76.
தீர்த்தத் துறையிடைச்; 46—
தெய்வத்துறையிடைக்; 26, 43, 60, 66, 71, 76.
தெய்வத்துறைதனில்; 74.
குளித்தந்திதொழு வோர்; 46—
குளித்தருள்போகிப்; 75.

II புனைந்தவற்கலை; 46—
புரிந்தசடையினர்; 23, 26, 29, 43, 44, 60, 63, 65, 66, 74, 76.
புரிந்தசடையினை; 71.
புரிந்தசெஞ்சடையர்; 46—
புரிந்தவற்கலையர்; 71.
புனைந்தவற்கலையர்; 26, 29, 44, 60. 63, 65, 66, 76.
புனையும்வற்கலையர்; 23, 43, 74,

III ஆச்சிரமத்தை; 46—
ஆசிராமத்தை; 44.
அடைந்தவர்க்கு; 46—
அடைந்தவர்; 23, 43, 60, 65, 71, 74, 76.

IV தங்குறவேண்டி; 46—
தங்குதல்வேண்டி; 60, 74, 76.
தங்கலும்வேண்டி; 75.
தங்கிடவேண்டி; 23. 26 29, 43, 44, 63, 65, 66, 71.
இருப்பெனென் றுரைக் கத்; 46—
இருப்பெனென் றுரைப் பத்; 23, 26, 29, 43, 63, 65, 66, 71.
இருப்பன்யானென்ன; 44.
இருப்பதென்றுரைப் பத்; 74, 76.
இருப்பதென்றுரைக் கும்; 60.
தசரதராமன்; 46—
தயரதராமன்; 23, 43, 65.
ஈதுரைத்தான்; 46—
ஈதுரைப்பான்; 23, 26, 29, 43, 60, 65. 66, 76.
ஈதுரைக்கும்; 74.

30

I நற்றவத்தோர்கள்; 46—
நற்றவத்தோர்தம்; 63, 71.

II நீள்குழலாளைக் கோயிலில்; 46—
நீள்முழலாளைக் கோயிலின்; 66, 77.

